கழகவெளியீடு: ௬௮௨

மெய்கண்டதேவ நாயனார்

# சிவஞான போதமும்

மாதவச் சிவஞான முனிவர்

# சிற்றுரையும்



சித்தாந்த பண்டிதர், கழகப்புலவர்,

திரு. ப. இராமநாதபிள்ளை அவர்கள்

எழுதிய

விளக்கமும்



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

சித்தாந்தம் என்பது செம்பொருட்டுணிவு. 'சிறப்பென்னும் செம்பொருள் காண்பது அறிவு' எனத் திருவள்ளுவ நாயனாரும், 'செம்பொருட்டுணிவே சீருடைக் கழலே செல்வமே சிவபெருமானே' என ஆளுடைய அடிகளாகிய திருவாதவூர் முனிவரனாரும், 'சிவனெனும் நாமம் தனக்கே உடையசெம் மேனிஎம்மான்' என ஆளுடைய அரசராகிய திருநாவுக்கரசனாரும் அருளிய திருமொழிகளாலும் செம்பொருட்டுணிவே சித்தாந்தம் என்பது பெறப்படும். சிவத்தைத் தன்னகத்துக் கொண்டது சைவம். சைவம் தூய தமிழ்ச் சொல், பித்தையுடையது பைத்தியம் என்பது போன்று.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார் சிவபெருமானை 'வேந்தன்' என்னும் சொல்லால் விளக்கியருளினர். சங்ககால நல்லிசைப் புலவர்கள் 'முனிவர் முக்கட்செல்வா,' 'ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன்,' 'ஆலமர் கடவுள்,' 'மழுவாழ் நெடியோன்,' 'ஆலமர் செல்வன்,' 'காரியுண்டிக் கடவுள்,' 'நிலவுக் கதிர் முடித்த நீளிருஞ் சென்னி, உலகுபொதி யுருவத் துயர்ந்தோன்' 'பிறவா யாக்கைப் பெரியோன்,' 'நுதல்விழி நாட்டத் திறையோன்,' 'பாண்டரங்கன் என்னும் திருப்பெயர்களால் சிவபெருமானையே விழுமிய முழுமுதலாகச் சுட்டியருளினர். உலகியல் வழக்கிலும் 'சிவனே என்றிருக்கின்றேன்' என்னும முதுமொழியும் வழங்கக் காண்கின்றோம். அவன் திரு அடையாளமாக 'மருப்புப் பூண' 'ஆனேற்றவிாபூண்' என்னும் அணிகளைச் செந்நெறிச் செல்வமக்கட்கு அணிவித்து அன்பும் இன்பும் ஒருங்கு பூணடுள்ளனர்.

சிவபெருமான் கூத்தப்பெருமானாய்க், 'குவளைக் கண்ணி கூறனாய்' (13) உலகியல் வீட்டியல் ஒருங்கு நிகழ்த்தி உய்வித்தருளுகின்றனன். அம்முறையில் 'ஆதியகவன்,' 'நீலமேனி வாலிழை பாகத் தொருவன்' என வாய்மொழிந்தருளினர். இவற்றான் செந்தமிழ் நாட்டுச் சீரிய முழுமுதல்வன் சிவன் என்பது துணிபு. அம்முதல்வனையும், அவன் திருவருள் ஆணைவழிச் செய்தருளும் ஐம்பெரும் தொழில்களையும், அவற்றால் ஆம் பயன் எய்தும் அளவில் ஆவிகளையும், எய்தற்கிடையூறும் மலமறைப்பு மருள்வினைகளையும், அவ்விடையூற்றினீங்கி உய்தற்கு வாயிலாம் நானெறி ஐம்மறையினையும், உய்ந்தார்க்குண்டாம் ஒப்பில் பெரும் பேற்றினையும் அழிவில் வழியளவையான் அறுதியிட்டு உறுதிபெறக் கூறியருளுவது மெய்கண்டான் தமிழாகிய சிவஞானபோதம். அஃது இருபாலாக வகுக்கப்பெற்று நாற்பது வரிகளைக்கொண்ட பன்னிரண்டு நூற்பாக்களையும், அவற்றை வகைப்படுத்தருளிய முப்பத்தொன்பது கூறுகளையும்

விளக்கியருளும் எண்பத்திரண்டு வெண்பாக்களையும் (அ) கொண்டு திகழ் கின்றது.

இந்நூல் தமிழ்ப்பொதுமறையாம் திருக்குறள் போன்று தமிழ்ப் பொருள் நூலாய்த் தமிழ்நாட்டிற்கேயன்றி அனைத்துலகிற்கும் மெய்ப் பொருள் (தத்துவம்) ஆராய்ச்சிக்குச் சிறந்த கருவூலமாய் உள்ளது. இதற்கு மாதவச் சிவஞானமுனிவரனார் அருளிச்செய்த சிற்றுரையோடு ஆங்காங்கு வேண்டிய விளக்கம் விரிந்தமுறையில் **சழகப் புலவர், திரு. ப. இராமநாத பிள்ளை**யவர்களால் எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கிறது. எடுத்துக்காட்டு வெண்பாக்கட் கியைந்த சிவஞான சித்தியார் திருப் பாட்டுக்களின் முதல்நினைப்புக்கள் அடிக்குறிப்பாகக் கொடுக்கப்பட் டுள்ளன. அவ்விளக்கத்தைத் தெளிவுபடுத்தத் திருமுறை, சித்தாந்தநூல், சங்கநூல், பிற்காலத்துச் சான்றோர் அருளிய நூல்கள் இவற்றினின்று பல மேற்கோள் திருப்பாட்டுக்கள் தரப்பட்டுள்ளன. அத்திருப்பாட்டுக்கள் அனைத்தும் இடத்துக்கு வேண்டிய வடிவத்தோடு மட்டுமமையாது முழுத் திருப்பாட்டுக்களாகத் தரப்பட்டுள்ளன அப்பாட்டுக்கள் கற்பார்க்குச் செந்நெறி மாண்பும் சித்தாந்தத் துணிபும் செவ்விதினுணர்ந்து உணர்த்தத் துணை செய்வன. அம்மட்டோ அப்பாட்டுக்களின்கண் உள்ள சிறந்த செந்தமிழ் நெறியின் திறமெலாம் எளிதினுணர வேண்டி யமைத்தமையால் அவ்வவற்றிற்குக் குறிப்புரை, உருவகம், உள்ளுறை, ஒப்பு முதலிய பலவும் இலக்கணக் குறிப்புடன் சேர்க்கப்பட்டுள்ளன. இவை அனைத்தும், ஒருங்கு கற்பார்க்குச் செம்பொருட்டுணிவைத் தனி ஒரு நூலாக ஓர்ந்து மேற்கொண்டொழுகத் துணைபுரிவனவாகும். பெரும்பான்மைச் சொற்கள் தூய தமிழ்மொழியால் அமைக்கப்பட்டுள்ளன. நுணுகி யுணர்வார்க்கு இவ்வொரு நூல் சித்தாந்தப் பெருநூலாகப் புலனுகும். விரிந்த முன்னுரை யும் நூலாசிரியர் உரையாசிரியர்களின் திருவரலாறுகளும் சேர்க்கப் பட்டுள்ளன. அருஞ்சொற் பொருளும், வினவும் இணைக்கப்பட்டுள்ளன.

இந்நூலைப் பொதுமறையாகத் தமிழ்ப்பெரு மக்களும், சிறப்பாகச் செம்பொருட்டுணிவினராம் செந்நெறிச் செல்வர்கள் இருபாலாரும் வாங்கிக் கற்று மெய்ந்நெறியுணர்ந்து தமிழ்வழி ஒழுகி விழுப்பயன் எய்த விழைகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



சித்தாந்தபண்டிதர், கழகப்புலவர்,
திரு. ப. இராமநாத பிள்ளை அவர்கள்

ஓம்
திருச்சிற்றம்பலம்

# முன்னுரை

"தென்னாடு உடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி."

## நூல்

பெறுதற்கரிய பெரும் பிறப்பு மக்கட்பிறப்பு. ஏனை ஓரறிவுமுதல் ஐயறிவுவரையுள்ள எல்லாப் பிறப்பும் மக்கட் பிறப்புக்கு வரும் படிமுறைப் பிறப்பாம். மக்கட்பிறப்பு ஒருவர் கருத்தினை மற்றொருவர் நேரில் உணரவும், காலமும் இடமும் கடந்தநிலையில் உணரவும் வாய்ப்பாகிய மொழியும் நூலும் விழி எனக் கொண்டுள்ளது. ஏனைப் பிறப்புக்கட்கு இவ் வாய்ப்பு இல்லை. கண்ணின்மையால் பார்க்கவும், காலின்மையால் நடக்கவும் இயலாமைபோன்று மொழியின்மையால் விழுமிய பெரும்பயன் எய்துதல் அமையாது. இப்பொருள் பயப்பதே வரும் திருப்பாட்டு:

> "கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
> மாடல்ல மற்றை யவை."
> —திருக்குறள், ௪00.

கல்வி - மொழியும் நூலும். மாடு - பொருள்; உலகு உடல் உறப்பு ஊண் முதலன.

அத்தகைய பேறுபெற்ற மக்களும் கல்லாது காலங் கழிப்பரேல் கண்ணிலான் பெற்றிழந்தாலொத்துத் துன்பம் உழப்பர். கல்வித்துணையின்றி ஒழுகலாறுணர்ந்து வழுவின்றி ஒழுகல் ஒண்ணாது. அவ் வொழுகலாறும் படிமுறைபோன்று நாடு மொழி ஊண் உறவு முதலிய வேற்றுமையால் வெவ்வேறாம். வெவ்வேறாயினும் நாளேற நாளேற வளர்ச்சியுற்று விழுமிய ஒழுகலாற்றைக் கெழுமும். விழுமிய ஒழுகலாறு முப்பொருள் உண்மை தேறி உலகோர் ஒப்பநடப்பது. முப்பொருள் உண்மை தேர்ந்தார் தப்புவழியிற் செல்ல எஞ்ஞான்றும ஒருப்படார். முப்பொருள், இறை உயிர் தளை. இவற்றைப் பதி பசு பாசம் என்ப. இவற்றை உணர்த்தும் நூல்கள் மறையும முறையும் என்ப. மறையை வேதம் எனவும் முறையை ஆகமம் எனவும் கூறுப. மறை பொதுவும் சிறப்பும் என இருவகைப்படும். எல்லா நெறியினரும் கூறும் நல்லன மட்டும் கிளந்தெடுத்துக் கூறுவது பொது. செந்நெறிக்குரிய சில பல விதந்து எடுத்துப் பொதுவுடன்சேர்த்துக் கூறுவது சிறப்பு. இம் முறையில் நாலடியார்போன்றது பொது. திருக்குறள் சிறப்பு.

அங்ஙனமே முறையும் இருவகைப்படும். செப்பரும் முப்பொருள் உண்மையினைப் பண்டையோர் சென்ற நெறியே விழுமிய முழுமுதல்வனைப் புகழும் முறையிற் கூறுவது பொது. அம் முதல்வனைப் பொருள் முறையிற் கூறுவது சிறப்பு. திருமுறையுள் திருமூலநாயனார் அருளிச் செய்த பத்தாம் திருமுறை நீங்கலாக ஏனைப் பதினொரு திருமுறைகளும் முனிவர் முக்கட்செல்வரை நனிமிகப் புகழும் தனிச்சிறப்பு வாய்ந்த புகழ்

நூலாகும். இவற்றுள்ளும் பன்னிரண்டாம் திருமுறை அடியவர்ப் புகழும் முடிவில் புகழ்நூலாகும். இவை பொது. பத்தாம் திருமுறை பொருள்முறையாக விழுமிய முழுமுதல்வனைப் போற்றும் பொருள் நூலாகும். இதுபோலவே மெய்கண்ட நூல்கள் பதினான்கும் பொருள் நூலாகும். இவை சிறப்பு.

## மிருதி

மறையினை உலகநூல் என்றும் முறையினை இறைவன் நூல் என்றும் கூறுப. இது மிருதிபற்றிய குறி. குறியெனினும் பெயர் எனினும் ஒன்றே. மறை, உலகியலை மிருதியாகவும் வீட்டியலைத் தொகுதியாகவும் கூறும். தொகுதி - தொகை. முறை, வீட்டியலை மிருதியாகவும் உலகியலைத் தொகுதியாகவும் கூறும். இவையே வேற்றுமை என்க.

## ஒருமொழி

செம்பொருட்டுணிவாம் செந்நெறிப் பொதுமறை திருக்குறள். அது, திரு என்னும் அடையொடு திகழ்வதாலேயே விளங்கும். சங்க மருவிய நூல்களுள் திரு என்னும் அடை சிறப்பாகத் திருக்குறளுக்கே காணப்படுகின்றது. என்னை? திருவள்ளுவர் என்னும் திருப்பெயர் முறையான் என்க. திருமுருகாற்றுப்படையும் இத்தகையதே. திருக்குறள் செந்தமிழ்ப் பொதுமறை. ஒன்றுமுதல் ஏழு திருமுறைகள் செந்தமிழ்ச் சிறப்புமறை. எட்டாந் திருமுறை தமிழ்மறை முடிபு. ஒன்பதாம் திருமுறை தமிழ்முறைத் தொடரிசைப்பா. பத்தாந் திருமுறை தமிழாகமப் பொது. மெய்கண்டான் தமிழ் தமிழாகமச் சிறப்பு. பதினோராம் திருமுறை விரவுப் புகழ்ப்பா. பன்னிரண்டாம் திருமுறை மெய்யடியார்ப் புகழ்ப்பா. இம்முறையில் ஒன்றோடொன்று இணைந்து சிறப்பன காண்க. இதன் விரிவை இந்நூல் பக்கம் ஒன்றுமுதல் ஐந்துவரையும், முந்நூற்றுப் பத்தொன்பது முதல் முந்நூற்றிருபது வரையும் காண்க. இதனாலேயே தமிழன்னை 'ஒருவாசகம் என்று உணர்' (௫ ௨ ௦) என உண்மையுணர்ந் துரைத்தார்.

## மெய்கண்டான் தமிழ்

மெய்கண்டான் தமிழ் சிவஞானபோதமாகும். இதன் சிறப்பினை இந்நூல் எட்டாம் பக்கம் காண்க. இதன்கண் பன்னிரண்டு நூற்பாக்கள் காணப்படுகின்றன. இப் பன்னிரண்டும திருமுறை பன்னிரண்டுக்கும் இலக்கணம போன்றமைந்தன. அங்ஙனம் ஆய்ந்துகொள்ளற்குத் தூண்டும் வாயிலாகவுள்ளன எட்டாம் நூற்பாவும் பன்னிரண்டாம் நூற்பாவும் என்க. எட்டாம் நூற்பா "தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்து" தல் குறிக்கின்றது. எட்டாந் திருமுறை ஆசிரியராகிய ஆளுடைய அடிகளுக்கு ஆண்டான் அவர்தம் நற்றவத்துக்கீடாகக் குருவாய் எழுந்தருளிவந்து திருப்பெருந்துறையில் குருந்தமரநீழலில் ஆட்கொண்டு திரு ஐந்தெழுத்தைச் செவியறிவுறீஇ அருளினமை இதனை மெய்ப்பிக்கின்றது. பன்னிரண்டாம் நூற்பா "அன்பரொடு மருவலும் ஆலயந் தானும் அரனெனத் தொழுதலும்" குறிக்கின்றது பன்னிரண்டாம் திருமுறைக்கண் எழுபானிருவர் மெய்யடியார் திருவரலாற்றால் திருக்கோலம், திருக்கோவில், திருமணி, திருஐந்தெழுத்து, திருவடியார் முதலியவர்களைச் சிவனெனத் தேறி வழிபட்டுய்ந்த வாய்மை பெறப்படுகின்றது. இது பன்னிரண்டாம் நூற்பாவின் மெய்ம்மையைப் புலப்படுத்துகின்றது,

இவற்றால் ஏனையவும் உய்த்துணர்ந்தாயின் ஒக்கும் என்பது நன்கு புலனாகும். அதனை விரிவஞ்சிச் செய்யுள் வடிவில் தருகின்றாம், அன்பர்கள் விரித்து விளக்குதற்குத் துணை செய்யுமாகலின். அது வருமாறு :

**பிரமன் வழிபா** டேற்றலினால் பெம்மான் யார்க்கும் முழுமுதல்வன்
தரமார் **பிறைபாம் போடு**றலால் சார்மெய்ப் புணர்ப்பாம் ஆணையொடும்
வரமற் **றருளாய் சுருங்கஎம வினைத்தோல்** எனலால் உயிருண்மை
பரவும் மெய்கண் டார்நூற்பா மூன்றும் மும்மை முறையியல்பே.

மெய்கண்டான் தமிழ் முதல்நூற்பா முழுமுதல் தன்மையினையும், இரண்டாம் நூற்பா அம்முதல் ஆணையோடும் ஆவியோடும் ஆவிகட்கு வினைக்கீடாக நல்கும் உடல் உலகு ஊண்கள்பால் ஒன்றாய் வேறாய் உடனாய்நின்று இயைந்து இயக்கும் எழின்மையினையும், மூன்றாம் நூற்பா வழியளவை எழான் அம் முதல்வனைச் சார்ந்துய்யும் உயிருண்மையினையும் முறையே உணர்த்துவன. ஆணை - திருவருள். இம் மூன்று நூற்பாவும் ஆளுடையபிள்ளையார் 'எனதுரை தனதுரையா'கென அருளிச் செய்த திருமுறை ஒன்று இரண்டு மூன்றுகட்கு இலக்கணமாம். அம் முறையினைச் சிறிது விளக்குதும்: முதல் நூற்பா பேரொடுக்கப் பெருமான் சிவனே என்பதை வலியுறுத்துகின்றது. ஆளுடைய பிள்ளையார் அருளிய திருநெறியதமிழ் முதல் திருமுறை முதல் திருப்பாட்டு "தோடுடைய செவியன்.....இவன் அன்றே," என்பதாம். இதன்கண் ஐந்தொழிற்குரிய ஆண்டான் திரு ஐந்தெழுத்தே திருப்பெயராகக்கொண்டு திகழும் அம்மையப்பராம் சிவபெருமான் என்பது பெறப்படுகின்றது. இத் திருப்பாட்டை இந்நூற் பக்கம் எழுபதிற் காண்க. அதனால் இத் திருப்பாட்டு முதல் நூற்பா இலக்கணத்துக்கு இலக்கியமாதல் காண்க. இரண்டாம் திருமுறை முதல் திருப்பாட்டு:

"செந்நெ லங்கழ னிப்பழ னத்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ழம்புரை பூந்தராய்
துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழ லீர்சொலீர்
மின்னு செஞ்சடை யிற்**பிறை பாம்புடன் வைத்ததே.**"—உ. க-க.

பிறை ஆவியைக் குறிக்கும். பாம்பு - தூமாயையைக் குறிக்கும். தூவாமாயை, மூலப்பகுதிகளும் ஒரு மாளிகையின் மேன்மாடி, கீழகம், சுற்றுக்கட்டுகள்போன்று தூமாயையின் வேறுபாடுகளே. மேன்மாடி தூமாயையாகக் கொள்க. ஆவி உலகு உடல் கலன்களொடு ஆண்டானால் வினைக்கீடாக உடங்கியைந்துற வைத்தருளிய உண்மை புலனாகின்றது. அதனால் இஃது இரண்டாம் நூற்பாவின் இலக்கியமாதல் காண்க.

மூன்றாம் திருமுறை முதல் திருப்பாட்டு:

"ஆடினாய்நறு நெய்யொடு பால்தயிர்
அந்தணர்பிரி யாதசிற் றம்பலம்
நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல் கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடினாயருளாய் **சுருங்கஎம தொல்வினையே.**" —ந. க-க.

'சுருங்க எம தொல்வினையே' என்பதனால் மூன்றாம் நூற்பாவின்கண் உணர்த்தப்படும் ஆவியின் மெய்ம்மை இலக்கியமாகும். 'எம தொல்வினை சுருங்க' என்பது ஆவிகளின் பன்மையும் வினைத்தொன்மை (எஅ, ககச) யும் விளக்குவதாகும்.

ஆற்றேன் அடியேன் என்றருளல் ஐம்பாட் டோரும் இனம்பலிக்கும்
கூற்றால் முதல்வன் முதற்றுணையாம் யார்க்குந் தெரியாத் தத்துவனால்
சாற்றும் சிவசத் தாளேனலால் சார்பாம் இரண்டல் லான்மகிலை
தோற்று நமச்சி வாயமறைத் துணையால் சிவமெய்க் குருவாமே.

ஒன்பான் முறையில் ஒளிவளரும் விளக்கே எனலால் விதிஎண்ணல்
இன்பார் நந்தி ஏழும்பர் இயைந்தொன் றுதல் தன்பாட்டு
முன்பார் புரிசை மதிமலி*யால் முன்னோன் காட்டிக் காண்டலாம்
அன்பார் அடியர் வரலாற்றல் அரனைத் தொழுகை ஆறிரண்டே.

**திருமுறை ௪ :**

"கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றின் அகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
**ஆற்றே**னடி யேனதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே." —௪. க-க.

நான்காம் நூற்பா ஆவிகள் எய்தும் இன்பத்துன்பத் துணையாம் ஐம்பாட்டினையும், எண்ணம மனம் எழுசசி இறப்பு ஆள் முதலிய கலன்களையும் குறிக்கும். இத் திருப்பாட்டின்கண் ஆற்றேன் துன்பம் என்பது நோக்கி அமைக்க. ஐம்பாடு - ஐந்தவத்தை; நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படங்கலேந்து. பக்கம் ௨௪0-க. காண்க.

**திருமுறை ரு :**

"அன்னம் பாலிக்கும் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னன் பாலிக்கு மாறுகண் டின்புற
**இன்னம் பாலிக்கு**மோஇப் பிறவியே." —ரு. க-க.

இன்னம் பாலிக்கும், இனம் பாலிக்கும் என்றாயது செய்யுள் திரிபு. இஃது ஆணடவன அருள் ஆவிகள்மாட்டு முதல்நிலையில் நிகழும் முதலுதவி கண்டின்புற்று இப்பிறவி இன்னம் கிட்டுமோ என்று கூறுகின்றது. ஐந்தாம நூற்பாவும் ஆவிகள்மாட்டு ஆண்டான் அருளும் முதலுதவி கூறுகின்றது.

**திருமுறை, சா :**

அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
**தெரியாத தத்துவனை**த் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள்தம் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெருமபற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே." —சா. க - க.

* புரிசை மதிமலி—'மதிமலிபுரிசை.'

முதல்வன் சுட்டுணர்வாலும் சிற்றுணர்வாலும் உணரப்படும் அழி பொருளாகிய உலகம் போன்றவனும் அல்லன். எவ்வாற்றானும் உணரப் படாத பொய்ப்பொருளாகிய முயற்கோடுபோன்று உணரப்படாதவனும் அல்லன். அவனருளாம் முற்றுணர்வால் உணரப்படும் தன்மையன். அதனாலேயே 'சிவசத்' என்று அழைக்கப்படுகின்றனன். சிவசத் - சிவமெய் (கூஅஅ). இவ்வுண்மை 'தெரியாத தத்துவன்' என்பதனால் விளங்குதல் காண்க. சுட்டுணர்வால் சிற்றுணர்வால் உணரவொண்ணா முதலை முற்றுணர்வால் (உஅஅ) உணரலாம்.

**திருமுறை, எ :**

" பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே." —எ. க - க.

ஏழாம் நூற்பா ஆவி உலகையும் உடையானையும் சார்ந்து இருவேறு பயனும் எய்தும். ஆனால், ஆண்டானுக்கு ஆவி அடிமையே. இதனை ஏழாந் திருமுறை 'ஆளாய்' என்னும் சொல்லால் அறிவுறுத்துகின்றது.

**திருமுறை, அ :**

" **நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க** " என்று அருளுகின்றது. முதல்வன் ஆவியை ஐம்புல வேடரின்நின்று விடுவித்து, உண்மை உணர்த்திச் செவி அறிவுறுத்திய அருமறை திரு ஐந்தெழுத்தே. அதுவே ஈண்டு உலகியல் நோக்கி 'நமச்சிவாய' என்று அருளிச்செய்யப்பெற்றது. இதனால் இரண்டும் ஒன்றுக்கு ஒன்று இலக்கண இலக்கியமாதல் காண்க.

**திருமுறை, கூ :**

" **ஒளிவளர் விளக்கே** உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே." —கூ. க - க.

ஒன்பதாம் நூற்பா 'ஞானக்கண்' என்பதன் இலக்கியமே 'ஒளி வளர்விளக்'கென்பது. திரு ஐந்தெழுத்து விதிப்படி எண்ணல் திருவருள் உணர்வால் என்க. திருவருள் உணர்வு - ஒளிவளர் விளக்கு.

**திருமுறை, க0 :**

" ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே." —க0. க.

ஒன்று - ஒப்பில் முழுமுதல். இன்னருள் இரண்டு - வனப்பும். நடப்பும். மூன்று - அன்பறிவாற்றல்; உண்மையறிவின்பம். நான்கு -

சீலம் நோன்பு செறிவு அறிவு; அறம் பொருள் இன்பம் வீடு. ஐந்து - பொறிவாயில் ஐந்து, ஐந்தொழில்; திரு ஐந்தெழுத்து. ஆறு - அறுவகை நெறி; ஆறறிவு. ஏழு - எழுவகைப் பிறப்பு. எட்டு - எட்டு வான் குணம்.

பத்தாம் நூற்பா 'நும்பின் எம்மை நுழையப்பணியே' என்பதற் கிணங்க ஆவி ஆண்டானோடு ஒற்றுமைப்பட்டு அவன் முன்னிற்கத் தாம் பின்னின்று ஒழுகுவதாகிய "ஏகனாகி இறைபணி நிற்றல்" இயம்பு கின்றது. இஃது 'எழும்பர்ச் செனறனன்' என்னும் திருமுறையால் ஆண்டான் ஆவிக்கு மேலாக முன்னிற்கின்ருன் என்பதை வலியுறுத்தி இலக்கியமாகின்றது.

**திருமுறை, கக :**

" மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆல வாயின்
**மன்னிய சிவன்யான்** மொழிதரு மாற்றம்
ரு. பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்கும் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
க0. தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள்* கொடுத்து வரவிடுப் பதுவே."

கக. திருமுக - க.

பதினோராவது நூற்பா ஆவிகள் இன்புறற்பொருட்டுப் பொருள் களைக் காட்டிக் காண்பதுபோன்று தன்னையும் **காட்டிக் காண்பன்** என் பதாம். இஃது உண்ணுமிடம் ஊண்முதல காட்டல்ஒளி போற்காட்டல், உண்ணப்பண் ணல்காண்டல் ஓர் என்பதை ஒக்கும். பதினொராம் திரு முறை மெய்யடியார்கள் பதினொருவரால் பாடியருளப்பெற்ற முப்பத் தொன்பது திருவருட் பனுவல்களை யுடையது திருத்தொண்டத் தொகைத்திருப்பாட்டுப் பதினொன்ருக அமைந்துள்ளதும் கூர்ந்துநோக்கி இன்புறற்பாலது. ஆண்டவன் மெய்யடியார்களைப் பாடச்செய்வித்தருளல் காட்டுமுதவியாகும். தானும் பாடியருளல் காணும் உதவியாகும். எனவே இஃது இலக்கியமாதல் காண்க. ஆண்டான் பாடியருளிய திருப்பாட் டோடு கூட்டின், இது நாற்பது பனுவல்களைக் கொண்டதாகும். பாணனர் செய்கையும் திருஆணைவழி நின்று வேண்டுவ கொண்டு மிச்சம் வேந்தன்பால் வைத்தல் குடி,† பூண்டவெலாம் வைத்தல் பொது என்பதற்கிணங்க வேண்டுபவே பெற்றனர். ஏனையவற் றைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தனர். இதுவே பிறன் ஆக்கம் பேணுதல். உய்த்துணரின் ஒருவன் தேட்டத்தில் பத்துக்கூறு தான் எடுத்து எஞ்சியவற்றை வேந்தன்பால் வைப்பதே குடிமை என்பது திருவள்ளுவ நாயனர் திருவுள்ளம் என்று தெற்றெனப் புலனாகும்.

---

*'பாண' கஉ. சேரமான் - ௩௬. †பதிற்றுப்பத்து எட்டாம் பத்துப் பதிகம்.

**திருமுறை, கஉ :**

" உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்." —கஉ. பாயிரம்-க.

இத்திருப்பாட்டில் அடிமுதல்வரும் உயிரெழுத்திரண்டும் அடியெலாம் வரும் உயிர்மெய் நாற்பத்தாறும், ஒற்றெழுத்துப் பதினைந்தும் ஆக அறுபத்துமூன்று. (உ0)

" எடுக்கு மாக்கதை யின்தமிழ்ச் செய்யுளா
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழுசெவி நீண்முடிக்
கடக்க னிற்றைக் கருத்து ளிருத்துவாம்."

—கஉ. பாயிரம் - ங.

செம்பொருட்டுணிவாம் செந்நெறிச்செல்வர் திருவருளால் செய்து போதரும் திருவுருவவழிபாடு நான்கு. அவை, கூத்தப்பெருமான் குவளைக் கண்ணி மூத்தபிள்ளை இளையபிள்ளை என்ப. இவை, இன்பாற்றல் ஈங்கறிவோ டன்பத்தன் அன்னை பிள்ளை, முன்பிளைய பிள்ளை வழி பாடு என்பதற்கிணங்க முறையே இன்பு ஆற்றல் அறிவு அன்பு என்னும் பண்புகளின் திருவுருவகினைவுருவக வழிபாடாகும்.

இவற்றுள் குறித்த திருப்பாட்டுக்கள் இரண்டும் அன்பறிவு வழிபாட்டினைக் குறிப்பதாகும். முதல் திருப்பாட்டில் முறையே சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நன்னெறி நான்கும் உய்த்துணரவைத்தருளப் பெற்றமை காண்க. மற்றைத் திருப்பாட்டில் மூத்த பிள்ளையார் வழிபாடும் திருத்தொண்டர் புராணத்துச் சிறப்பிக்கப்படும் மெய்யடியார்கள் எழுபத்திருவர் என்னும் தொகையும் பெறப்படுகின்றன. அடிதொறும் ஒற்றுடன் எண்ணப் பதினெட்டு எழுத்து வருதல் காண்க. யானைமுகப் பிள்ளையார் செந்தமிழ் ஓ மொழிப்பிழமபைத் திருமுகத்தாலும் சிவகுரு நாதன் ஆவிகளை ஆட்கொள்ளுங்கால் காதுகைப் பற்றிக்கா லாலிவர்தந் தின் பாக்கல், தீதில்களிற் றின்செய்கை தேர் என்பதுபோன்று காதுவழியாக திருஐந்தெழுத்தருமறை செவியறிவுறுத்துக் கைப்பற்றச்செய்து, தூக்கிய திருவடி வாயிலாம மறவா நினைவால் முற்றின்பாம் திருமுடியின்கண் மீளா ஆளாய் உறைந்து பேரின்பப் பெருவாழ்வு எய்தச் செய்தருளுகின்றனன். யானை ஏறுவார் அதன் செவியினைக் கைப்பற்றிக் கால் வழி ஏறி முடிமீதிருந்தின்புறுவர். இதுவே அறிவுக்கூத்து - ஞானநடம்.

பன்னிரண்டாம் நூற்பா 'அன்பரொடு மருவலும், திருக்கோலம் திருக்கோவில்' சிவகுரவன் சிவனடியார் முதலியவர்களைக் கண்டால் சிவனெனவே தேறிவழிபடுதலும் ஆவிகள் அருமறை பெற்றதனால் ஆம் பயன் என அறிவுறுத்துகின்றது. அவ்விலக்கண வாய்ப்பெலாம் காணப் பெறுவது திருக்குறளின் திருச்செயல் தேற்றும் சிவனடியார் திருவரலாறுகிய திருத்தொண்டர் சீர் என்னும் பெரிய புராணமேயாம்.

**திருமுறை முதல்**

மெய்கண்டான் தமிழ்நூல் புகழ்த்திருமுறை பொருட்டிருமுறைகளினின்று கடைந்தெடுத்த நெய்யின் (உ) உறுசுவை ஆகும். இந்நூற்கு

முதனூல் திருமுறைகளே. புகழ்த் திருமுறை தொகையாகவும், பொருட் டிருமுறை வகையாகவும் கொள்ளும் வாய்ப்பின. ஆளுடைய பிள்ளையார் அருளிய இந்நூல் எழுபத்துமூன்றாம் பக்கத்திற் காணப்பெறும் "ஈறாய் முதல்" என்னும் திருப்பாட்டுத்தொகையாகும். இது புகழ்த் திருமுறைக் கண் உள்ளது.

பொருட்டிருமுறையாகிய திருமூலர் தமிழின்கண் வகையாகக் கொள்ளும் வாய்மைத் திருப்பாட்டுக்கள் பல. அவற்றுள் ஒரு சிலவற்றை ஈண்டுத்தருதும்:

செப்பரும் முப்பொருள் உண்மை "பதி பசு பாசம்" (உ௬உ) எனத் தொடங்கும் திருப்பாட்டு. அதன் விரிவே மெய்கண்டான் தமிழ் முதற்நூற்பாவின் தோகை மறை வருமாறு:

"பதியது தோற்றும் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பதம் ஓதும்
நதிபொதி செஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயும் காலங்கள் கண்டுகொ ளீரே." —௧0. உ௬௯0

இரண்டாம் நூற்பா:

"பாசத்தில் இட்டது அருள்" பக்கம் ௬௬உ. காண்க.

மூன்றாம் நூற்பா:

"பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன் ஒருவண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடிற்
பசுக்கள் தலைவனைப் பற்றிவி டாவே." —௧0. உ௧௧௫.

பசுக்கள் - ஆவிகள். பலவண்ணம் - வினைக்கீடாய் வரும் பல்வகைப் பிறப்பு.

நான்காம் நூற்பா:

"பசுப்பல"—௬௧-ஆம் பக்கம் காண்க.

ஐந்தாம் நூற்பா:

"புலமைந்து புள்ளைந்து புட்சென்று மேயும்
நிலமைந்து நீரைந்து நீர்மையும் ஐந்து
குலமொன்று கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவன்
உலம்வந்து போம்வழி ஒன்பது தானே." —௧0. உ0உ௫

ஆறு ஏழு எட்டு ஒன்பான் நூற்பா:

"சத்தும் அசத்தும் சதசத்துந் தான்கண்டு
சித்தும் அசித்தும் சேர்வுறு மேலீத்த
சுத்தம் அசுத்தமுந் தோய்வுறு மேநின்று
நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே." —௧0. ௧௬உ0.

சத்தும் அசத்தும் (௬). சதசத்து (எ). சித்தும் அசித்தும் (அ). சுத்தம் அசுத்தம் (௯).

சித்தும் அசித்தும் - சிற்றுணர்வும் சுட்டுணர்வும். சுத்தம் அசுத்தம் - தூமாயை தூவாமாயை.

## பத்து, பதினொன்று, பன்னிரண்டாம் நூற்பா:

"ஊனப்பிறவி"—உஎஅ.—ஆம் பக்கம் காண்க.

தானத்துள் இட்டு (க0). தனையூட்டி (கக). ஞானத்தின் மீட்டலும் (கஉ). நாட்டலும் (ஒழிபு).

மேலும் திருவள்ளுவ நாயனார் அருளிய திருக்குறளின்கண் துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் மூன்றுமே துறவறம். துறவறம் பதின்மூன்று என வரைசெய்துள்ளது, வாய்மையன்று. இம் மூன்றும் முறையே பசு, பதி, பாசம் என்னும் குறிப்பின. தானடிமை மெய்ப்பொருளின் தாள்மறவா மையவா, தானின்மை யேதுறவாம் தான் என்பதே துறவாதலின் முறையே மூன்றதிகாரமுமே துறவென்க. திருவள்ளுவநாயனார் இயல் தொடங்குங்கால் இயலின் பெயராலேயே அவ்வியலின் முதல் அதிகாரத்தைத் துவங்கியருளுகின்றனர். இல்லற இயல் - இல்வாழ்க்கை. துறவற இயல் - துறவு. அரசியல் - இறைமாட்சி. நட்பியல் - நட்பு. குடியியல் - குடிமை முதலனவாக ஓர்ந்துகொள்க. திருவள்ளுவ நாயனாரருளிய 'மெய்யுணர்வோ'டிணைத்து ஒவ்வொரு நூற்பா விளக்கத்து இறுதியிலும் 'முதுமொழி' எனத் தலைப்பிட்டு விளக்கியிருக்கின்றமையால் திருக்குறளும் இதற்கு வகை நூலாகும். இன்னும் விரிப்பிற் பெருகும். உய்த்துணர்ந்துகொள்க.

## மெய்கண்டான் நூற்பிறிவு:

மெய்கண்டான் நூற் சிறப்பு இந்நூற் பக்கம் எட்டின்கண்ணும் இருபத்தைந்தின்கண்ணும் ஒரு சிறிது விளக்கப்பெற்றுள்ளது. இதன்கணணும் சிறிதும் விளக்குதும்: மெய்கண்டான் நூல் திருமுறை வழித் தாய தனித்தமிழ் முதல் நூலே. மெய்ந்நூல் உணர்வைச "சிறிய ஆடியிற் பெரிய மால்வரைப் பொருள் செறிந்தாங்கு, அறிவு நூல்களின் பொருளெலாம் அகப்படுத் தவற்றின், நெறியெலாம் குறிசெய் தீந்தமிழால்" விளக்கிய விழுமிய நூலாகும். இந்நூலை விரித்து விளக்கிய வழிநூல் புடை நூல்களின் திருப்பாட்டுக்கள் ஏறத்தாழ ஆயிரத்து இருநூற்றுக்கு மேலாகும். மாதவசிவஞான முனிவரனார் வகுத்தருளிய பேருரை, சிற்றுரை இரண்டும் எல்லையில்லா நற்றமிழ்க்கடலாகும். திருவாவடுதுறைத் தம்பிரான்மார்கள் அவ்வப்போது இயற்றியருளிய பண்டார நூல் செய்யுட்களும் ஆயிரத்துக்கு மேற்பட்டனவேயாம். அங்ஙன மெல்லாமிருந்தும் பின்னும் புதுநயஞ் சுரக்கும் மதிநிறை ஊற்றாகத் திகழ்கின்றது. உண்மை வேட்கைகொள் நடுநிலை திறம்பாப் பண்பினர்க்குப் பயில்தொறும் பயில்தொறும் வற்றா இன்பம் சுரப்பது. உலகப் பொதுமறையாம் திருக்குறள் போன்று உலகப்பொது மெய்ந்நூலாகத் திகழ்வது. திருக்குறள் வழி ஒழுகினார்பால் 'சிறப்பென்னும் செம்பொருளைச்' சேர்ப்பிக்கும் மெய்ந்நெறியுணர்த்தும் விழுத்தகை நூலாய் விளங்குவது. இந்நூல் செந்தமிழ்ச் செந்நெறித் திருநூலாகும். தொன்மைத் தமிழ்நெறியினை நன்மைபெற விளக்கும் நன்னூலிதுவே.

இந்நூலினைக் கற்கும் கருத்தினர் பாயிரம்போல் முன்னுரைச் சுருக்கமாகச் சில கூறுதும். இந்நூல் பொது உண்மை என இருபெரும் பிரிவினை

யுடையது. பொதுசார்பால் தோன்றுவது; நிலையில்லது. உண்மை இயல்பால் தோன்றுவது, நிலையுள்ளது. அளவை தன்மை பயிற்சி பயன் என நான்கு உட்பிரிவினையுடையது. இவற்றைப் பிரமாணம் இலக்கணம் சாதனம் பயன் எனவும் கூறுப. ஒவ்வோரியலும் மும்மூன்று நூற்பாக்களை உடையன. பன்னிரண்டு நூற்பாக்களின் உள்ளுறைகளையும் ஒரு வெண்பாவின்கண் சுருக்கிக்காட்டுதும் :

முன்னோன் வினைமுதலா ணைசெய்துணை முற்றுமுயிர்
அன்னோன் முதலுதவி யோடுண்மை—மன்னுமுயிர்
சார்பழுந்தல் மெய்யாசான் சான்றமறை தாளொடுக்கம்
ஏரூட்டல் மும்மைவழி பாடு.

முன்னோன் வினைமுதல் - முன்னோன் நிமித்தகாரணன் (௧). ஆணை செய்துணை - ஆணையும் வினையும் துணைக்காரணம் (௨). முற்றுமுயிர் - பயனெய்தும் ஆவி (௩, ௪). முதலுதவி - ஆண்டவன் நடப்பாற்றல் வழிச் செய்யும் முதலுதவி (௫). உண்மை - முதல்வன் சிவமெய் (௬). சார் பழுந்தல் - இருதிறன அறிவுள ஆவிகள் (௭). மெய்யாசான் - மெய் யுணர்வு கைவரச்செய்யும் சிவகுரு (௮). சான்றமறை - சிவயசிவ (௯). தாளொடுக்கம் - இறைபணி நிற்றல் (௧0). ஏரூட்டல் - திருவடியன்பம் சேர்ப்பித்தல் (௧௧). மும்மை வழிபாடு - அன்பு விளையுமிடத்து அறிவால் அன்பால் ஆற்றலால் செய்யும் வழிபாடு (௧௨). செய் - வினை.

**அளவை இயல் :**

உலகுயிர்மேல் வைத்து முதல்துணையாண் டானைச
சொலலுறுத்தல் ஒன்றிரண்டு மூன்று.

**முதல் நூற்பா :**

முழுமுதல்வன் இவ்வுலகிற்கு முதல். அவனே வினைமுதல். வினை முதல்—நிமித்தகாரணன்.

**கூறுகள் :**

௧. உலகிற்கு முத்தொழிலுண்மை. ௨. ஒடுக்கும் ஒரு பொருளே உலகிற்கு முதல்வன். ௩. முன்னவன் அருளால் ஆவிகள் முத்தொழில் நடத்தினும் அன்னவன் ஆகா ; முன்னவனே விழுமியமுழுமுதல்.

**இரண்டாம் நூற்பா :**

வினைமுதல்ஐந் தொழிற்குவேண் டும்துணைமு தல்வகுத்தல்
மீண்டுதோற் றும்முலகால் மிக்கு.

**கூறுகள் :**

௧. முத்திறப் புணர்ப்பாய் ஆவியொடு முதல்வன்நின்று, அத்தகு ஐந் தொழில் ஆவிப்பொருட்டு ஆற்றுவன். ௨. ஆணை துணைவினையால் வேற்றுமை ஆவிகட்கு உண்டாம். ௩. இருவினைகளுக்கு ஈடாக இறந்து அச்சு மாறிப் பிறப்பன ஆவிகள். ௪. ஆண்டான் ஆணையுடன் என்றும் பிரிப்பின்றி இயைந்து இயற்றுவன் ஐந்தொழில்.

**மூன்றும் நூற்பா :**

ஆண்டான் அருளால் ஆற்றும் ஐந்தொழிற் பயனை அழுந்தி அறிவது ஆவிகள். அழுந்தி அறிதல் - அனுபவித்தல்.

**கூறுகள் :**

க. அல்லையீதல்லை யீதென்று உரைக்கும் அறிவே ஆவி. உ. என் உடம்பு முதலவாக இசைப்பதால் ஆவி உடம்பின் வேறு. ங. தனித் தனி அறியும் ஐம்பொறிப் பயனை ஒருங்கிணைத்து ஓர்வன ஆவிகள். அதனால் ஐம்பொறியின் வேறும் ஆவி. ச. நனவினிற் கனவினை மயங்கி நாடலால் நண்ணும் நுண்ணுடற்கு வேறும் ஆவி. ரு. புலனுகர்வும் புடை. பெயர்வும் உடம்பின்கண் புகாமையினன் உயிர்மூச்சின் வேறும் ஆவி. சு. கூடும் கருவிகள் கூடாத உயிர்ப்படக்கத்து ஆவி அறியுமா றில்லை; கருவிகள்கூட்டி அறிவிப்பின் அறியும் வாய்ப்பு எய்துகின்றது. எனவே என்றும் ஒன்றுபோல் துணையின்றித் தானே அறியும் ஆண்டா னுக்கு வேறும் ஆவி. எ. ஆக்கை இயைகூட்டத்தும் ஆவிப் பேரின்மை யினல் அக் கூட்டத்தினும் வேறும் ஆவி.

**தன்மை இயல் :**

உயிர்தளை யோடிறை வன்னியல் ஓதல்
செயிர்தீர்நான் கைந்தாறும் செப்பு.

**நான்காம் நூற்பா :**

கலையால் பொதுவுணர்வும் கலனாற் சிறப்புணர்வும் ஐம்பாடும் காணும் இயல் ஆவிக்கே. அதனால் கலன்கட்கு வேறும் ஆவி.

**கூறுகள் :**

க. ஆற்றினன் யான் எனலால் அகப்புறக் கலனுக்கு வேறும் ஆவி. அகப்புறக்கலன் எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு. உ. அறிதலும் அறி வித்தலும்வல்ல ஆவிகள் புல்லு மல மறைப்பால் பொருந்தும் கலன்களை. ங. கூடும் கருவி குறைநிறைவால் ஆவிகட்கு ஐம்பாடு கூடுமால்.

**ஐந்தாம் நூற்பா :**

ஐம்பாடு எய்த அணையும் கலன்களைச் செலுத்தும் ஆணையின் முத லுதவி ஆவிக்கு இன்றியமையாதது. ஆணை - திருவருள்.

**கூறுகள்:**

க. ஆவி இயைந்தாலன்றி ஐம்பொறிகள் காணு. உ. ஆவியின் அன் பறிவு ஆற்றல்களுடன் ஆண்டானின் அன்பறிவாற்றல்கள் இயைந்தா லன்றி அவை நிகழா.

**ஆறும் நூற்பா :**

ஆவிக்கு வேறும் அழிவில்பொருள் அழிபொருள்களை வரைசெய்த லால் ஆண்டான் இயல்புரைத்தன்று. அழிவில்பொருள் - சத்து. அழி பொருள் - அசத்து.

**கூறுகள் :**

க. விளைவினில் தோன்றி வித்தினில் ஒடுங்கும் உலகுடற் சுட்டு அழிபொருள். விளைவு - காரியம். வித்து - காரணம். உ. மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன் தோற்றுவன் சிவமெய்யாத் தொக்கு. மாற்றம் - வாக்கு. கழிதல் - அகோசரம். சிவமெய் - சிவசத்து.

**பயிற்சி இயல் :**

*சிற்றுயிர்க்கு நீங்காச் சிறப்புழைப்பேழ் காண்டலெட்டு,*
*உற்றமுற்றால் ஓர்வொன் பது.*

*உழைப்பு - பயிற்சி; சாதனம். முற்று - திருவருள் உணர்வு. ஓர்வு - திருஐந்தெழுத்தாகிய '**சிவசிவ**' மறை (௩௨0) எண்ணல்.*

**ஏழாம் நூற்பா :**

*மெய்பொய்யின் சார்பினால் மேவுமால் ஈரழுந்தல்*
*துய்யவிரண் டல்லாவி தொக்கு.*
*மெய் - சத்து. பொய் - அசத்து.*

**கூறுகள் :**

*க. சிவமெய்முன் சுட்டனைத்தும் தோன்றா விளங்கி, அவனுக்கும் சுட்டின் றறி. சுட்டியறிதல் - அழுந்திஅறிதல் ; தற்பயன். சுட்டின்றி அறிதல் - அழுந்தாதறிதல்; பிறர்பயன். உ. பொறிகலனும் அழிபொருட் குப்போற்றும் உணர்வின்று. ௩. சார்பியாம் ஆவிக்குச் சாற்றுவர் ஈரிடத் தழுந்தல். சார்பி - சதசத்து.*

**எட்டாம் நூற்பா:**

*சார்பியாம் ஆவியும் நின்றநிலை நிற்கும்நிலை, ஏர்மெய்ந் நிலை எட்டிற் காண். நின்றநிலை - மருளுடன் கூடிக்களித்த நிலை. நிற்கும் நிலை-அருளுடன் கூடிக்களிக்கும் நிலை. ஏர் மெய்ந்நிலை-பொருளு டன் கூடிப்பொன்றா மகிழ்நிலை இதற்கு ஒப்பு-கடிதம். காணும்உறை யாற்களித்தல் கட்டுரை யாற்களித்தல், பேணுபொரு ளால்மகிழ்தல் பேசு. உறை - மேற்பொதிவு; உலகுடல். உரை - கடிதம்; திருமுறை ஒழுக்கம். பொருளால் - சிவமெய்யோடு. மகிழ்தல் - பேரின்புறுதல். இப்பொருளே பயக்கும் திருவள்ளுவ நாயனார் திருக்குறள் வருமாறு :*

> *"உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்*
> *கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு." —திருக்குறள், ௧௨௮௧.*

*நிலையில் இன்பம் - கள். நிலையுடை இன்பம் - காமம். கள் - உறை யும் உரையும். காமம் - பேணு பொருள்; பேரின்பம். காண - அழுந்தி அறிய; அனுபவிக்க.*

**கூறுகள் :**

*க. உரிமையுள்ளாவிக்கு நானெறியாம் நற்றவத்தான் முற்றுணர் வாம் கருவி முன்னும். உ. மெய்யுணர்வை முற்றுவிக்க மேவுவன் குருவாய் முதல்வன். ௩. நிறம் பளிங்கைக் காட்டா நீர்மைபோல் ஐம்பொறியும் உறக்காட்டா ஆவியின் உண்மை. ௪. பொறியின் வேறென்னும் மெய், சிவகுரவனுற் புலனுக நெறியின் இறைதான் நேரும் ஆவி.*

**ஒன்பதாம் நூற்பா :**

*ஆவியறிவின்கண் அருளுணர்வால் ஆண்டமுதல், மேவிவிளங்கத் தன் உண்மை மேவும். பொய் மேவாத்தன்மை எனல். கண்டமெய் அகலாமைக்குக் கணிக்க திருஐந்தெழுத்து.*

**கூறுகள் :**

க. சுட்டுசிற் றாலுணராத் தூமெய் சிவமுற்றால், உற்றுணர்தல் ஆவியுணர்வில். உ. பார்முதற் பூதம் பரனை மறைக்கும் அழிபொருள் என்று ஓரின் சிவம் தானே விளங்கும், படிகநிறம்போல். ங. முன்சார்புப் பசை ஒழிய முற்றுணர்வால் ஐந்தெழுத்தைச் '**சிவயசிவ**' என்றோதல் சீர்.

வீடுபே றாம்பயன் மேவுமுயிர் முப்பண்பும்
கூடுபுறம் பத்தொன் றிரண்டு.
திருக்கோவில் கோலம் சிவகுருவாம் மும்மை
உருவழிபா டாற்றல் ஒழிபு.

**பத்தாம் நூற்பா :**

பயனிரண்டில் முன்னதாம் பற்றல்கை கூட, நயனார் இறைபணி நண்ணும் ஆவி.

**கூறுகள் :**

க. ஆண்டான்பால் ஆவி அடங்கில் மலப்பசை அகலும்; அகலச் சிவ இன்பாம். இவையே இயைந்தொன்றுதல். உ. அன்பறிவாற் றல்கள் ஆண்டான் இயைந்தியக்கும் நிலையில் திரியாது அடங்குதலால் நேரும் இறைபணி.

**பதினோராம் நூற்பா:**

முடிவாம் சிவப்பேறு முன்னோன்தாள் தலைப்படலே.

**கூறுகள் :**

க. ஆவிப்பொருட்டால் ஆண்டானும் தன்னை மேவுவன், பாட் டுரைத்தல் போன்று. உ. அன்பால் பற்றி அறிவால் மறவாது ஆற்ற லால் தொழுதல் ஆவிக்குச் சிவப்பேறும்.

**பன்னிரண்டாம் நூற்பா :**

ஆவியின் அன்பறிவாற்றல் மூன்றும் புறத்தும் அரன்பாலே மேவும்

**கூறுகள் :**

க. திரிபுணர்வு உலகு விருப்பு வெறுப்பா மேவும் மும்மலங்களைக் களையும் அறிவே ஆவிக்கு முதன்மை. உ. ஆவியின் அன்பு அரனடியா ரோடிணங்கும். ங. ஆவியின் ஆற்றல் திருக்கோலம் திருக்கோவில் களைச் சிவனெனத்தேறி வழிபடும்.

ச. பொருட்டன்மையால் வேறும் புலமிக்கார் போற்றும் மெய்ப் பொருளை அன்புவிளையும் இடமாகிய படமாடும கோவிலும், நடமாடும் கோவிலும் (நிசக), தான்தானச் செய்த இடமாடும் கோவிலும் அன்பு ஆற்றல் அறிவு நினைவாய் வழிபடுதலே ஆவிக்குக் கடன். மெய்கண்ட நூலும் மேவும் மும்மலர்க்கு.

**தாய் மொழி**

ஒவ்வொருவர்க்கும் அவரவர்தம் தாய்மொழியே அவரவர் ஆருயிர் வளர்க்கும் வாய்மைத்தூய அமிழ்தாகும். ஏனைய மொழிகள் அதனைத் தளர்க்கும் சேய்மொழியாகும். சேய் - சேய்மை; தொலைவு. புலவரெனப் படுவார் நலமுறப் பிறமொழிகளைக் கற்று வலமுறவோராவர். கற்கப்

போய்க் குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசுவார் போன்று கடமை வழுவி அச்சேய்மொழியைச் சிறப்பென வீழ்ந்து தாய்மொழியை மறந்து தருக்குறும் சில்லோரும் புலவரெனப்படுவரே! பிறமொழியில் சிறந்த பொருள் ஏதும் இருப்பின் அப்பொருளினைக் கொண்டொழிவதன்றி அம்மொழி எழுத்தையும் சொல்லையும் அவ்வாறே கொண்டு செம்மைத் தாய்மொழியைச் சிதைப்பார், 'உறுப்பறை குடிகோள் அலை கொலை'செய்து வெறுப்புறுவாரையும் விருப்புறச்செய்யும் விழுத்தவராவர். இக்கொடுமை தாய்ச்சொல் ஒழித்தயற் சொற்கோடல் தான் பெற்ற, சேய்கொன்றயற் சேய்வளர்ப்பார் நேர் என்பதேயாம். விழுத்தவர்—குறிப்பால் இழிபு.

நம் தாய்மொழியாம் தனித்தமிழ் இனிமையும் எளிமையும், சுருக்கமும் விளக்கமும், நுட்பமும் திட்பமும், தொன்மையும் நன்மையும் மிக்க செம்மொழி. எல்லா வளமும் இயற்கையில் வாய்ந்த எழின்மொழி. எம்மொழிக்கண்ணும் இல்லாத அம்மைப் பொருளிலக்கணம் அமைந்தது. இருமொழிக்கடலும் நிலைகண்டுணர்ந்த பேருரைப் பேராசிரியராம் மாதவச் சிவஞான முனிவரனா தமிழுக்கேயுரிய அயன் மொழியாம் வடமொழிக்கில்லாத ஒப்பில் தனிப்பெரு மாண்பினை வரையறுத்தருளுகின்றனர். அது வருமாறு:

> “**தமிழ்மொழிப் புணர்ச்சிக்கட்படும் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை** முதலிய சில சொல்லிலக்கணங்களும், **உயர்திணை அஃறிணை** முதலிய சொற்பாகுபாடுகளும், **அகம் புறம்** என்னும் பொருட் பாகுபாடுகளும், **குறிஞ்சி வெட்சி** முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், **வெண்பா** முதலிய செய்யுளிலக்கணமும், இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமை... ..” (தொல்காப்பியச் சூத்திரவிருத்தி).

மேலும் தாய்மொழியினன்றிச் சேய்மொழிச் சொல்லாற் கூறின் செவ்வனம் உணர்தல் செல்லாதென்பதை நன்குணர்ந்து பெருவரவிற்றாய் வழங்குவதையும் தூய தனித்தமிழாய் ஆக்கியருளுகின்றனர். அது நம்மனோர்க்கு எல்லாச் சொற்களையும் தூய தனித்தமிழாக்கிப் பயின்றும் பயிற்றுவித்தும் பயனெய்த வழிகோலித் தந்தருளிய வாய்மை வரம்புடைத் திருஆணையாகும். அவ்வாணையைத் தலைமேற்கொண்டு அடியேனும் சிற்றறிவிற் கெட்டியவாறு சிலபல செந்தமிழாக்கிப் பொறித்துள்ளேன். எஞ்சியவற்றையும் ஆன்றோர் ஆக்கி நன்று செய்தருள வேண்டுகின்றேன்.

கற்பார் எளிதில் விளங்கிக்கொள்ளுமாறு மொத்தத்தில் நானூற்றுக்கு மேற்பட்ட வினாக்கள் சேர்த்துள்ளேன். ஆங்காங்குத் தக்க தலைப்புக்களும், விளக்கப்பொருண்மை முதலியன நினைவுகூரற்குச் செய்யுட்களும் அமைத்துள்ளேன். நூற்பாக் கருத்தினை அகரவரிசையினாக்கி ஆங்காங்கு அமைத்துள்ளேன். முனிவரனார் ஆக்கி அளித்த சொற்கள் பல ஆங்காங்குக் காணப்பெறும். அவற்றுள் இரண்டொன்று ஈண்டுக் காட்டுதும்: “அனுபவம் - அழுந்தி அறிதல். சுற்றிப்போயும் சங்கத்துறையில் வந்து கூடிய முறைமை,* மயிற்கூத்தின் முறைமை,† தன்ம முதலியவற்றிற்குப் பொருள், அறம் அறிவு வெறுப்பு செல்வம், பாவம் அறியாமை விருப்பு வறுமை‡ என மொழிபெயர்த்துக்கூறிக் கண்டுகொள்க. நாடோறும் நனவும் கனவும் உறக்கமும் பேருறக்கமும் உயிர்ப்படங்குதலும் காணப்

---

* வடநூலார்: கட்டகுடிப்பிரபாத நியாயம், † மயூரநிர்த்தன நியாயம் என்ப. ‡ தன்மம் ஞானம் வைராக்கியம் ஐசுவரியம், அதன்மம் அஞ்ஞானம் அவைராக்கியம் அனைசுவரியம் என்ப.

படுதல்". மேலும் மெய்கண்டான் நூல் தனித்தமிழ் முதல்நூலே என்பது நம் முனிவரனார் திருவுள்ளம். அதனை இந்நூல் இருநூற்றுத்தொண்ணூறாம் பக்கம் முதற் காண்க. தமிழே இறையுண்மை காட்டும் முறை எழுதும் இயற்கை இயல்புவாய்ந்தது என்பதைத் தாம் பாடியருளிய 'தெய்வச்சுருதி' என்னும் (நிகஅ) திருப்பாட்டான் உணர்த்துவது துணர்க.

மெய்கண்டதேவ நாயனார் திருவுள்ளமும் தூய தனித்தமிழே. நம்மனோர் ஆக்கிப் பயில ஆணைதந்தருளியமை உய்த்துணர்வார்க்குப் பொள்ளெனப் புலனாம். அது வருமாறு :

"அதுதான் ஞானதிரோதகமாய் **மறைத்துக்கோடு நிற்றலான்.**"

"மலத்திலக்கணம் வடமொழி வழக்குப்பற்றி ஓதுவார், ஞானதிரோதகமாய் எனவும், அதனைத் தமிழ்மொழியின் உரைத்துக்காட்டுவார், 'மறைத்துக்கொடு நிற்றலான்' எனவும் கூறினாராகலின், கூறியது கூறலன்மை யுணர்க." (ச. உ. ஏது, பேருரை.)

இதன்கண் இணைத்துள்ள அருஞ்சொற்பொருள் அகரவரிசையினைத் தொகுத்துதவிய திருவாவடுதுறைத் திருமட அருளவைப்புலவர் திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளை அவர்கட்கு என் நன்றியும் அன்பும் என்றும் உரியவாகுக.

## வேண்டுகோள்

பத்தாம் நூற்பா விளக்கத்திறுதியில் (கூ0அ) வருமாறு கருத்தும் முதுமொழியும் அமைத்துக்கொள்ள விழைகின்றேன். அதன்கண் அமைந்துள்ளன ஒன்பதாம் நூற்பாவிற் (சகூச) காணப்படுவனவே.

### கருத்து

ஒட்டிய கட்டை விட்டகல் வீடு.

### முதுமொழி

ஏற்ற இறைபணியால் இன்றும் மலமாயை
ஆற்றலறி வன்பால் அவன்பின்னே—தோற்றம்
"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு." —திருக்குறள், நடுஅ.

**பன்னிரண்டாம் நூற்பாவிற்றுரியன :**

### கருத்து

ஒளவியம் இலாஇடத்து அரன்வெளி யாமே.

### முதுமொழி

பத்தர் இணக்கம் பரன்கோலம் கோவிலால்
வித்தாகும் மும்மலமும் விட்டகலும்—சித்தருளால்
"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய்." —திருக்குறள், நகூ0.

பொதுவாகச் செந்தமிழ்ச் சான்றோரையும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களையும் பணிந்து வேண்டிக்கொள்ளுகின்றேன், இந்நூல் திருக்குறளே போன்று தனித்தமிழ் முதனூலே என்றும், செந்தமிழ்ப் பொதுநூல் என்றும், ஒப்புயர்வற்ற அருள்நூல் என்றும், வேறு எம்மொழியிலும் வாய்க்காத தனித்தமிழர் பண்பாம் வீறுபெறு எழில்நூல் என்றும் தத்தம் தூயவுள்ளத்துத் துணிந்து கைக்கொள்க என.

பெருமக்கள், ஆசிரியர், மாணவர் இருபாலாரும் கற்றும் கற்பித்தும் நற்றமிழ்த்தாய்க்கு உற்றதுசெய்து, மெய்யுணர்வின்பம் கைவரப்பெற்று வாழுமாறு வழுத்துகின்றாம்.

"யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான், யாவர்க்கும் கீழாம் அடியேனை"க்கொண்டு இத்திருத்தொண்டினை முற்றுவித்தருளினன். அவன் நற்றாளிணையை அவன் திருவருள் தலைக்கொண்டு நாளும் சேர்ந்து புரிந்துநின்று போற்றுதல் ஒன்றே அடியேன் இயற்றும் அன்பு.

மூவுயிர்கள் என்றும் முதல்வன் அடிதொழுஞ்சீர்
மேவ முதலீறாய் மெய்கண்டார்—தாவில்
அவன்அவள் அஃதென் அவைதொழும் என்றே
சிவஞான போதஞ்செய் தார்.

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக மும்துயர் தீர்கவே." —ங. ருச - க.

இதன்கண் : க. அந்தணர், உ. வானவர், ங. ஆனினம், ச. தண்புனல், ரு. வேந்தன், சு. அரன்நாமம் என விழுமிய பொருள்கள் ஆறு கூறியருளப்பெற்றுள்ளன. இவ்வாழ்த்தால் ஆம் பயன் தீயது ஆழ்ந்து, வையகமுற்றும் துயர்நீங்கிச் சிறப்பென்னும் செம்பொருள் நினைவால் நன்றாற்றி இன்புற்றுச செல்வமும் சிறப்பும் ஒருங்கெய்தி என்றும் ஒருபடித்தாய்த் தூய வாழ்வு வாழ்வதேயாம்.

"அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப."
—தொல். பொருள் - அக

அறுவகை: 'முனிவரும், பார்ப்பாரும், ஆனிரையும், மழையும், முடியுடை வேந்தரும், உலகுமாம்'.—நசசினார்க்கினியா.

"வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே." ,, சஉக

'கடவுளும், முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும், மழையும், நாடும்'.—பேராசிரியர்.

கடவுள் - அரன். முனிவர் - வானவர். நாடு - வையகம். 'வையகமும் துயர்தீர்க' என்றதனல் நாடு வாழ்த்தாயிற்று.

கடவுள் மேற்கூறிய அறுவரகத்தும் மருவிநின்று இவர்தந்தூர்ந்து (ஙஅச) வாழ்வித்தருளுகின்றனன். அக்கடவுள்பால் வேண்டப்படும் பொருள் பிறவாமை. அதுவே புரைசேர் காமம் எனப்படும். 'வேண்டத் தக்கது அறிவோய் நீ' என்பதே மெய்யடியார் மேலாம் பண்பு. வாழ்த்தப் படுவார் பண்பு வாழ்த்துவார் பாலமைதல் வாழ்த்தின் பயனும் மதி.

வாழ்விப்பார் வாழ்த்தப் படுவார்மன் வாழ்வாரால்
சூழறுவர் ஆவார் துணி.

அடியார்க்கு அடியன்,

**திருவள்ளுவரகம், ப. இராமநாதன்.**

திருச்சிற்றம்பலம்.



மாதவச் சிவஞான முனிவரர்

# சிவஞான முனிவரனார் திருவரலாறு

## நாடு

என்றுமுள தென்தமிழ் இயம்பி இசைகொள்ளும் நன்றறி வாளர் தொன்றுதொட்டு இன்றுகாறும் நின்று நிலவும் நன்மை சான்றது தென்பாண்டிநாடு, "பாண்டிநாடே பழம்பதியாக வும், தென்பாண்டிநாடே சிவலோகமாகவும்" என ஆளுடைய அடிகளால் அருளப்பெற்றதும் பாண்டிநாடே. நல்லிசைப் புலவர்கள் பல்லோர் குழீஇத் தொல்லியல் வழாமல் சொல் லியல் முத்தமிழ்ச் சங்கம் இரீஇப் பல்லூழியாக முறை முறை தமிழாய்ந்து அமிழ்தனைய பன்னூல் வெளிப்போந்ததும் பாண்டி நாடே. நுண்மாண் நுழைபுலத்தால் பழிப்பில் பல்லுரை விழுப்பமுறக் கண்டதும் பாண்டிநாடே. நாவாரப் புகழப் பெறும் கோவா ஆரமும் கோக்கும் ஆரமும் ஒருங்குவாய்ந்து உலகுக்கு அளிப்பதும் பாண்டிநாடே மன்றலம்பொதியின் தென்றல் தவழ்ந்து என்றும் எவர்க்கும் இன்பூட்டும் இயல் பார் எழிலுடையதும் பாண்டிநாடே. குன்றாப் பெருமைசேர் மன்றம் ஐந்தனுள் மூன்று திருமன்றங்களைத் தன்னகத்துக் கொண்டதும் பாண்டிநாடே. மன்றம் ஐந்தாவன: மணி, பொன், வெள்ளி, செம்பு, வான்சுதை என்பன. இவற்றிற் குரிய திருப்பதிகள் முறையே திருவாலங்காடு, திருத்தில்லை, திருக்கூடல், திருச்செப்பறை, திருக்குற்றாலம் என்ப. இவற் றுள் பாண்டிநாட்டில் திகழும் மூன்று மன்றங்களாவன: வெள்ளி, செம்பு, வான்சுதை என்க.

## பிறப்பு

இத்தகைய பாண்டிநாட்டில் "தென்றல் வந்துலவிய திருநெல்வேலி"யை ஒட்டியும் பாபவிநாசத்தை அடுத்தும் விளங் குவது விக்கிரமசிங்கபுரம். அதன்கண் விருந்து பேணும் திருந் திய வேளாண் விழுக்குடிக்கண் முன்னை முழுத்தவத்தால் தோன்றியருளியவர் நம் **மாதவச் சிவஞான முனிவரனார்**. இவர் தோன்றியருளிய காலம் இற்றைக்கு நூற்றெழுபது யாண்டு களுக்குமுன் என்ப. இவர்தம் தந்தையார் திருப்பெயர் ஆனந் தக்கூத்தர். தாயர் திருப்பெயர் மயிலம்மையார். இவர்தம் பிள்ளைத் திருப்பெயர் **முக்களாலிங்கர்**.

கல்வி

உரிய பருவத்துப் "பொருள் நீத்தங் கொளவீசிப் புலன் கொளுவ மனமுகிழ்த்த, சுருள்நீக்கி மலர்விக்கும் கலைபயிலத் தொடங்குவித்தார்" இவரும் பொருத்தமுறு சூழ்வாலும் கருத்திலுறை இறையாலும் திருத்தமுற அருத்தியொடும் வருத்தமின்றி எளிதாகக் கற்றுவருவாராயினர். இஃது "ஒருமைக்கண் தாம் கற்றகல்வி ஒருவற்கு, எழுமையும் ஏமாப் புடைத்து." என்னும் செந்தமிழ்ப் பொதுத் திருமறைத் திருமொழியை மெய்ப்பிப்பதாகும். கற்பார்க்கு வேண்டும் எல்லா நலங்களோடும் கடவுட்பற்றும், தாய்மொழியாம் செந்தமிழ்த் தனிமாண்பின்கண் திடமார் இனிப்பும் திருவருளால் கொண்டுள்ளனர். கற்பார் காதலித்தோதவேண்டிய திருப்பாட்டு வருமாறு :

"பூரி யாவரும் புண்ணியம் பொய்கெடும்
**கூரி தாய அறிவுகை கூடிடும்**
சீரி யார்பயில் சேறையுட் செந்நெறி
நாரி பாகன்தன் நாமம் நவிலவே." —டு. எஎ-க.

புண்ணியம் பூரியா வரும்—சிவத்தைப் பேணலாகிய நற்றவம் பெருகும். பொய்கெடும்—பிறப்புத்துன்பம் நீங்கும். கூரிதாய அறிவு கை கூடிடும்—நல்லொழுக்கமும் மெய்யுணர்வும் நாளும் பெருகும் கல்வி எளிதாகக் கைகூடும் சீரியார் பயில் சேறை—திருவருள் கைவந்த சான்றோராகிய மெய்யடியார்கள் வாழும் திருச்சேறை என்னும் திருவூர். செந்நெறி நாரிபாகன்—சிவனெறிக்குரிய அம்மையப்பராய் விளங்கும் ஆதிபகவன். நாமம்—திருப்பெயராகிய 'சிவயநம' (சருக) என்னும் திருவைந்தெழுத்து. நவில—இடையறாது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓத (மேலன கைகூடும்).

செல்வம்

நம் முனிவரனார் பச்சிளம் பருவத்தே அச்சமில் உளத்தொடு பயின்றது நினைவார்போன்று பள்ளியின்கண் மிக எளிதாகப் பயில்வாராயினர். வடுவில் குடிப்பிறப்பின் பண்பு வளர்ந்து, அன்பொடும் அடியார்ப்பேணல், ஆன்றோர்த் தொழுதல், விருந்து மகிழ்தல், மெய்யெலாம் வெண்ணீறணிதல், விழுத்துணைவேட்டல், இன்சொல் ஈகை, நன்றியறிதல், துன்பந் துடைத்தல் முதலிய நலமெலாம் தந்து நற்றவத்தவராக்கிற்று. நன்மதிப்பிற்குரிய படிப்பு பண்பாடு பணம் மூன்றனுள்ளும் நடுவணதாகிய பண்பாடமைய ஏனையவும் எளிதாக எய்தும் என்பது இவர்பால் விளங்கிற்று.

ஒருநாள் நம் முனிவரனார் கல்லூரியில்நின்று நல்லகம் திரும்புங்கால் சொல்லுதற்கரிய பெரும்புகழ்சேர் திருவாவடு துறைச் சீர்சால்தவத் துறவினர் பலரைத் திருவருளால் அதரிடை நேர்ந்தனர். அடிபணிந்து வணங்கினர். அகத்திற்கு விருந்தாய் அகமும் முகமும் மலர்ந்து அழைத்தனர். அத் துற வோர் குடும்பப் பண்பென்று கூடிமகிழ்ந்து உடன்வந்தனர்.

தந்தையார் தவத்தோரைநாடிப் புறத்துச்சென்றிருந்தனர். தாயார் துறவோர் தாள்பணிந்து தூமலரிட்டு வழிபட்டு முறை யாக நால்வகை யுண்டி அறுசுவையோடு உறுமொழி நவின்று திருவருளை உன்னிப் பொருவில் விருந்தோம்பினர். அதுவே நல்விருந்தாய் இல்லம் பொலிந்து எழில் திகழ்ந்தது.

அரும்பெறல் தாயார் அடியவர்கட்குத் திருவமுதளித்த பான்மை உன்னியும், அவ்வடியவர் 'நும்தாயர் திருப்பெயர் யாது?' என வினவிய வினாவின் விடையாகவும் வரும் திருவெண் பாவை நம் முனிவரனார் பாடியருளினர். அதன்கண் தாயர் திருப் பெயர், தந்தையர் திருப்பெயர், அவர்தம் திருத்தொண்டு முதலிய அனைத்தும் அருளால் அமைந்தமை நினைந்து நினைந்து பெரிதும் இன்புறற்பாலது. அது வருமாறு :

“அருந்ததிஎன் அம்மை அடியவர்கட் கென்றும்
திருந்த அமுதளிக்கும் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
மானந் தவாத மயில்.”

அருந்ததி—செந்நெறிச் செல்லும் அரிய தகுதிப்பாடு. ததி—தகுதி என்பதன் இடைக்குறை. அம்மை—கணவற்கும் மக்கட்கும் வீடுபேற்றைத் தரும் திருவருள் அழகு: அதற்குத் துணை நிற்றலால் தாயர் அம்மை எனப்பட்டனர். அம்மை— வீடுபேறு. அடியவர்—ஆண்டான் திருவடிபற்றி ஒழுகும் முடிவில் பேற்றினர். செல்வி—விருந்து பேணலால் திருந்திய உளஞ்சேர் திருவினள். விருந்து—திருந்தியவுள் ளத்தார் திருத்தவர லால்நல், விருந்தினராவர் விழைந்து என்பது. அக மகிழ—ஆண்டானும் அன்புறு கணவனும் உள்உவப்ப. தொண்டு—அடியார்ப் பேணல். மானம் — குடிப்பிறப்பின் பெருமை. தவாத—குன்றாத. மயில்—தாயாராகிய மயிலம் மையார்.

அருந்ததியை வடமீன் எனக் கொள்ளல் ஈண்டைக் கேலாது, என்னை? அருந்ததி, கணவன் அண்மையிலிருக்கும் நிலையில் பேறேபெற்றுளாள்; மயிலம்மையாரனைய தமிழகச்

செந்நெறிச் செல்லும் திருவினர் கணவரோடும் கடவுள் திருவடிப்பேறு எய்தும் கற்பின் மிக்கார் ஆதலின் என்க. இதனை. 'மானினேர் விழிமாதராய்' என வாழ்த்துப்பெற்ற அம்மையார் திருவரலாற்றுற் (டுஅஎ) காண்க.

தவம்

தந்தையார் அகத்துவந்து நிகழ்ந்தன ஓர்ந்து தவப்பயன் என அகமிக மகிழ்ந்தனர். அடியரைத் தொழுதனர். மைந்தரையும் மனைவியாரையும் வாயார வாழ்த்தினர். தந்தை திருவருளை உன்னிச் சிவனார் தாளிணை வழுத்தினர். தம் மேலைச் சார்பினால் மைந்தனார் அடியருடன் சென்று முடிவில் பேரின்பெய்தும் தவநெறிக்காளாம் குறிநின்றனர். தந்தையார்க்கு அறிவித்தனர். தந்தையார் அன்பால் வருந்தி அருளால் பொருந்தி ஒருவாறு மனம் இசைந்து அடியரொடும் செல்ல விடையளித்தனர்.

ஆவடுதுறை யடைதல்

நம் முனிவரனார் அடியரொடும்கூடி அம்மையப்பர் செம்மையொடும் விளங்கும் வழியிலுள்ள திருவூர்கள் பலவற்றையும் கண்டு மகிழ்ந்து திருக்கோவில்கள்தோறும் சென்று வழிபட்டு, ஆங்காங்குள்ள திருமடத்துறைந்து திருத்தொண்டியற்றித் திருவாவடுதுறையைச் சார்ந்தனர். சார்ந்து திருவாவடுதுறை முதற்குரவராய் விளங்கும் நமச்சிவாய அடிகளை நெஞ்சம் நினைக்க நாநவின்றேத்த, 'கைகளும் தலைமீதேறக் கண்ணிலானந்த வெள்ளம், மெய்யெலாம் பொழிய' விழுந்தெழுந்து கும்பிட்டார். 'கும்பிட்ட பயன் காண்பார்போல்' பின் சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்தபின் வேலப்ப தேசிக அடிகளை முன் வீழ்ந்து அன்பொடும் வணங்கினர். அவரும் அருளொடும் நோக்கி அருஞ்செவ்வி கண்டு திருவருள் இயைந்தியக்கித் தூண்டச் சிவதீக்கை செய்தருளினர். வற்றாப் பேரின்ப வழியாம் நற்றுறவு நல்கினர். சிவஞானச் செறிவினர் என்னும் தீக்கைத் திருப்பெயரிட்டருளினர். மெய்கண்ட நூற்களையும் பண்டார நூற்களையும் ஓதுவித்தருளினர். நம் முனிவரனார் நற்றவப் பேற்றினர்; அகத்தியர் வரத்தால் அருட் பிறப்புற்றவர் ஆதலின், நூற்கடல்களை எளிதின் உணர்ந்து 'கற்றோர் அறியா அறிவினராய்க் கற்றோர்க்குத் தாம் வரம்பாய தலைமையராய்', மெய்யுணர்வுச் செல்வராய் வீற்றிருந்தருளினர்.

சிறப்பு

'பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித, மெய்கண்டார்' மெய்ந்நெறியினைப், 'பொய்யர் பெறும்பே றத்தனை

யும் பெறுதற்குரியராய்ச் செய்வதறியாச்' சிற்றினத்தராய்த் திரியும் அல்லோர் மேற்கொண்டு மெய்யுணர்ந்து ஒழுகினுலன்றி உய்யும் நல்லோர் ஆதல் ஒண்ணுதெனத் திருவுளங்கொண்டு செந்தமிழ் உறைப்புப் பாட்டினுல் மெய்கண்டான் தமிழ்நூற்கு விழுமிய பேருரையும் கெழுமிய சிற்றுரையும் சிவஞானசித்தியார்க்குப் பொழிப்புரையும் யாவர்க்கும் கிளர்ச்சியும் இன்பும் கேண்மையும் மிக்குவிளங்கச் செய்தருளினர். அவ் வுரைகளின்கண் முனிவரனுர் கோலியமைத்தருளிய தூய தனித்தமிழ் மாண்பும், சொற்களைத் தனித்தமிழாக்கிக் கையாள ஆணைதந்து வழிகாட்டும் திறனும் உணர்தொறும் உணர்தொறும் உணர்விறந் தூற்றெடுக்கும் ஒப்பில் இன்பாய்த் திகழ்வன. பேருரை செந்தமிழ்க்கே பேரணிகலனுய்த் திகழ்வது. உரைகட்கெல்லாம் உச்சியாய் விளங்குவது. இனைத்தென வரைசெய்ய எவர்க்கும் இயலாதது. மனத்திற்கினிய மாண்பினது. வடமொழி மயக்கை மாற்றுவது. 'ஞாலம் அளந்த மேன்மைத் தெய்வத்தமிழே' தன்னிகரில்லாச் சால்புடையது எனக் காட்டுவது.

அருளிய நூற்கள்

நம் முனிவரனுர் அருளிச்செய்த ஈடும் எடுப்புமில் பெருநூல்கள், மொழிபெயர்ப்புநூல்கள், பேருரைகள் அளப்பில. அவற்றுள் வருவன ஒருசில:

க. தொல்காப்பியச் சூத்திர விருத்தி
உ. சோமேசர் முதுமொழி வெண்பா
ங. திருவேகம்பர் அந்தாதி
ச. வடதிருமுல்லைவாயில் அந்தாதி
ரு. குளத்தூர்ப் பதிற்றுப்பத் தந்தாதி
சு. கலைசைப் பதிற்றுப்பத் தந்தாதி
எ. செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்
அ. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்
கூ. கச்சி ஆனந்தருத்திரேசர் பதிகம்
க0. செப்பறை அகிலாண்டேசுவரி பதிகம்
கக. திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு
கஉ. திருத்தொண்டர் திருநாமக் கோவை
கங. பஞ்சாக்கரதேசிகர் மாலை

கச. தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழி பெயர்ப்பு

கரு. அரதத்தாசாரியர் செய்த சுலோகபஞ்சகத்தின் மொழி பெயர்ப்பு

கசு. அப்பையதீக்கையர் செய்த சிவதத்துவ விவேகமூல மொழிபெயர்ப்பு

கஎ. காஞ்சிப்புராண முதற்பாக மொழிபெயர்ப்பு

கஅ. சித்தாந்தப் பிரகாசிகை மொழிபெயர்ப்பு

கசு. கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தரவிருத்தி

உ௦. இலக்கண விளக்கச் சூறாவளி

உக. மரபட்டவணை மறுப்பின் மறுப்பு

உஉ. எடுத்து என்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம்

உங. சிவஞானசித்தியாருக்கு ஞானப்பிரகாச முனிவர் இயற்றிய சிவசமவாதவுரை மறுப்பு

பொற்கிழி

நம் முனிவரனார் ஒருஞான்று திருப்பாதிரிப்புலியூரில் சிவ வழிபாடாற்றி ஆண்டெழுந்தருளி யிருந்தபோது நல்லிசைப் புலவர் பெருமக்களும் செல்வப்பயன்சேர் புரவலத் திருவினர் களும் ஒருங்கு குழீஇ அவையமர்ந்திருந்தனர். நூறுபொன் கொண்ட பொற்கிழி ஒன்றமைத்தனர். அக்கிழியினை, 'கரை யேறவிட்ட முதல்வா வுன்னை யன்றியுமோர் கதியுண்டாமோ', என்னும் ஈற்றடியை ஈந்து பாட்டினை முற்றுவிப்பார் பெறுவ ரெனப் புகன்றனர். அந்தணச்சிறுவன் வந்து வேண்டிய வேண்டுகோட் கிணங்க முனிவரனார் பாட்டை எளிதாக அமைத்து அப் பொற்கிழியினை அவ் வந்தணனை எடுத்துக் கொள்ள அருள்புரிந்தனர். அவனும் அங்ஙனமே எடுத்து வாழ்ந்து இன்புற்றனன். அத் திருப்பாட்டு வருமாறு :

"வரையேற விட்டமுதம் சேர்தனிட அருந்தினைவல் லினமென்றாலும்
உரையேற விட்டமுத லாகுமோ எனைச்சித்தென் றுரைக்கில் என்னும்
நரையேற விட்டமுத னளவனுக் கொண்டுநறும் புலிசைமேவும்
கரையேற விட்டமுதல் வாவுன்னை அன்றியுமோர் கதியுண்டாமோ."

வரையேல் — எளியேன் நின் அடியார் கூட்டத்துக்கு ஒவ்வேன் எனினும் அடியேனை நீக்கிவிடாதே. வரைவு—நீக்கம். தவிட்டமுதம் — செஞ்சாலி அரிசித் தவிட்டாலாக்கிய திரு

வமுது. சேந்தன்—ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பா திருப்பல்லாண்டு பாடியருளிய சேந்தனார். வல்லினம்—க, ச, ட, த, ப, ற என்னும் ஆறெழுத்துக்கள். உரையே—சொல்லு. ற, இட்ட—ற, ட என்னும் ஈரெழுத்துக்களும். முதலாகுமோ - க ச த ப என்னும் நான்கெழுத்தும்போல் முதலாகுமா? (ஆகாது). எனைச்சித்தென்று—அதுபோல் எளியேனையும் நின் இனமாக அறிவுடைப் பொருள் என்று. உரைக்கில் என்னும்—உண்மை ஓராது கூறுவதால் பயனென்? நரை ஏறு—தூய வெண்மைநிறம் பொருந்திய ஆனேறு. அவிட்டம் முதல்நாளவன்—அவிட்டத்திற்கு முந்திய நாண்மீனும் திருவோணத்துக்குரியவனாகிய திருமால். கரையேற விட்டமுதல்வர்—திருநாவுக்கரசு நாயனாரைக் கன்மிதப்பாய்க் கடலிற் கரை ஏறவிட்ட சிவபெருமான்.

கேடில் விழுக்கொடை

திருவருள் துணையால் தாம் ஆக்கிய நூலுரைகளையும், புகழ்நூல் பொருள்நூல்களாகிய திருமுறை மெய்கண்ட முறைகளையும், ஏனை நல்லிசைப்புலவர் பெருமக்கள் ஆக்கியளித்த செந்தமிழ்ச் செந்நூல்களையும் பிற நூல்களையும் அருளொடும் பொருளுணர நன்மாணாக்கர் பல்லோர்க்கும் நாளும் ஓதுவித்தருளினர். அவருட் சிறந்தார் திருப்பெயர் வருமாறு:

க. திருத்தணிகை கச்சியப்ப முனிவர்
உ. மதுரகவி தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர்
௩. காஞ்சிபுரம் சிதம்பர முனிவர்
௪. இலக்கணம் சிதம்பரநாத முனிவர்
௫. காஞ்சிபுரம் முத்துக்குமாரசாமி தேசிகர்
௬. காஞ்சிபுரம் சரவண பத்தர்
௭. இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை
௮. திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார்
௯. காவாந்தண்டலம் அடைக்கலங்காத்த முதலியார்
க0. கடம்பார்கோவில் தானிகர் கலியாணசுந்தர உபாத்தியாயர்.

இறையடி எய்தல்

நம்முனிவரனார் இன்பக் கூத்தராம் அம்பலவாணர் திருவடி எய்திய திருநாள் கொல்லம் யாண்டு ௯௬0, சித்திரைத்திங்கள் ஞாயிற்றுக்கிழமை ஆயிலியத் திருநாள்.

“கலைதேர் கமச்சி வாயகுரு கருணைக் கடலிற் றிளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக் காமத் தறியை யறவீழ்த்தி
அலையும் சமயத் தருக்களைக்கீழ் அடிவேரோடும் அகழ்ந்தெறிந்திட்டு
அருளின் படாத்தை முகமேற்கொண்டு ஆதி வேதா கமங்களெனும்
தொலையா மணிகள் இருமருங்கும் தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்க மோடும் உலகமுற்றும் சுற்றும் வெற்றி வாரணமே
மலையா தருளும் முனிவர்சிகா மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான வள்ளால் வருக வருகவே.”

—திரு. போ. பாண்டித்துரைத்தேவர்.

சீரார் பாண்டி வளநாட்டில் தென்னம் பொருப்பின் பொருநைபாய்
சிறந்த விக்கி ரமசிங்க புரத்தா னந்தக கூத்தபிள்ளை
காரார் கற்பின் மயிலம்மை நயந்த தவத்தால் வருமுனிவோய்
நலமார் தமிழும் வடநூலும் நன்றாய் உணர்ந்த பெருங்கடலோய்
பேரார் தவமாச் சிவஞான முனிவர் பெரும பேருரையும்
பேணும் நாலே ழொடொரு நூல் பிறங்க அளித்தோய் வேலப்பர்
ஏரார் மரபோய் திருமுறையோ டேரேழ் பொருளால் அமுதளித்தோய்
எளியேன் முடிமேல் அடிவைத்தோய் எமமுன் வருக வருகவே.

தவமாச்—மாதவச்.

வருக தமிழின் வளமாண்பு வாய்மை தூய்மை தனிமுதன்மை
மருவ வுரைத்தோய் வடமொழிக்கண் இல்லாப் பெருமை தமிழ்க் [குண்டப்
பொருவில் புணர்ச்சி குறியீடு வினைக்கண் குறிப்பு வினைதொகையே
போற்று திணையே அகம்புறமே குறிஞ்சி வெட்சி வெண்பாவும்
தருஞ்சீர் நவின்றோய் மெய்கண்டார் சாற்றும் ஆறும் நூற்பாவே
சட்ட மாகும் வடநூற்கென் றறுதி யிட்ட தனிமுதலோய்
உருவும் திருவும் தமிழ்சிவமாய் உற்றோய் வாழ்க ஊழிஎலாம்
ஓங்கும் சைவ சித்தாந்த ஒருவ வாழ்க வாழியரோ. (உ)

திருவடி வாழ்க. தென்தமிழ் வாழ்க. சிவநெறி வாழ்க.

---

# உள்ளுறை

## ௨. இலக்கணவியல்



## ௨. சிறப்பியல்பு

### ௩. சாதனவியல்

௪. பயனியல்



ஆகச் சூத்திரம் ௧௨-க்கு அதிகரணம் ௩௧.

## குறுக்க விளக்கம்

திருமுறை பன்னிரண்டின்
விளக்கம் (ரு)

ஆளுடையபிள்ளையார் க, உ, ரு.

ஆளுடைய அரசு ச, ரு, சு.

ஆளுடையநம்பி எ.

ஆளுடைய அடிகள் அ.

| | |
|---|---|
| —க. கக - க. | —முதல் திருமுறை, பதினொராம் பதிகம்—முதற்றிருப்பாட்டு. இப்படியே மற்றவையும் கண்டுகொள்க. |
| —சித்தியார் உ. க. | —சிவஞானசித்தியார், இரண்டாம் நூற்பா - முதற்றிருப்பாட்டு. |
| ,, உ. உ - ச0. | —சிவஞானசித்தியார், இரண்டாம் அதிகரணம்—நாற்பதாம் திருப்பாட்டு. |
| சிவப். நூற்க. எ. | —சிவப்பிரகாசம், நூற்கருத்து—ஏழாம் திருப்பாட்டு. |
| ,, உ - க. | —சிவப்பிரகாசம், இரண்டாம் நூற்பா-முதல்திருப்பாட்டு. |
| (கருரு) | —இங்ஙனம் வருவது இந்நூற்பக்க எண்ணாகும். |
| —கக. திருவிடை. கரு. | —பதினொராம் திருமுறை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை — பதின்மூன்றாம் திருப்பாட்டு. இங்ஙனமே பிறவும் காண்க. |

## சூத்திர முதற்குறிப்பு அகரவரிசை

# வெண்பா முதற்குறிப்பு அகரவரிசை

---

## வெண்பாத்தொகை

| | |
|---|---|
| அவையடக்கம் | ௧ |
| முதற்சூத்திரம் | ௫ |
| இரண்டாம் சூத்திரம் | ௧௦ |
| மூன்றாம் சூத்திரம் | ௭ |
| நான்காம் மூத்திரம் | ௭ |
| ஐந்தாம் சூத்திரம் | ௪ |
| ஆறாம் சூத்திரம் | ௬ |
| ஏழாம் சூத்திரம் | ௫ |
| எட்டாம் சூத்திரம் | ௯ |
| ஒன்பதாம் சூத்திரம் | ௮ |
| பத்தாம் சூத்திரம் | ௬ |
| பதினொராம் சூத்திரம் | ௬ |
| பன்னிரண்டாம் சூத்திரம் | ௮ |
| ஆகத் திருவெண்பா | ௮௨. |

ஐயொருப தேழேழும் ஆங்கமைந்த நாலாலும்
ஐயொன்ப தோரெட்டோடு ஆறாறும்—துய்ய எட்டோடு
எண்பத்தும் ஒன்றும் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

---

# மேற்கோள் நூல்கள்

அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்
உண்மை விளக்கம்
கந்தரனுபூதி
கலித்தொகை
குமரகுருபரர் பனுவல்கள்
குறுந்தொகை
கோடிக்கவி
கொன்றைவேந்தன்
சங்கற்ப நிராகரணம்
சிவஞான சித்தியார்
சிலப்பதிகாரம்
சிவதத்துவ விவேகம்
சிவப்பிரகாசம்
சீவக சிந்தாமணி
சேக்கிழார் புராணம்
ஞானமிர்தம்
தாயுமானவர்
திருஉந்தியார்
திருக்களிற்றுப்படியார்
திருக்குறள்
திருமுருகாற்றுப்படை
திருமுறைகண்ட புராணம்
திருமுறை பன்னிரண்டு
திருவருட்பயன்
துகளறுபோதம்
தொல்காப்பியம்
நல்வழி
நாலடியார்
நான்மணிக்கடிகை
நெஞ்சுவிடுதூது
பட்டினத்துப்பிள்ளையார்
பரிபாடல்
பழமொழி
புறநானூறு
போற்றிப்பஃறொடை
வினாவெண்பா

---

# நூல் நினைப்பு

**சூத்திரத் தொகைமுதல்**

சூத்திரம்ஈ ராறினுக்குச் சூரணிமுப் பான்ஒன்பான்
ஏத்தவெண்பா எண்பான் இரண்டனைத்தும்—சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வின் ஆய்ந்துணர்ந்தோர்
வேற்றுருக்கொள் ளார்உறுவர் வீடு.

**அதிகரணத்தொகை**

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபின் இரண் டிரண்டே
மூன்றுநான் மூன்று நன்றாய் முடிந்தபின் இரண் டிரண்டே
என்றநான் கீறு தாமே இவைஈரா றிலகத் துள்ளே
என்றமுப் பானொன் பானே எனக்கரன் இரங்கி னனே.

**சூத்திரக் கருத்து**

முதற்பதி அரனே ஐந்து முன்னத்து விதமி ரண்டே
இதற்பினே அனுமா னத்தால் எண்ணிலா உயிர்கள் மூன்றே
அதற்பினே அவத்தை நான்கே அகம்அறுத் திடலே ஐந்தே
செகற்பதி பிரித்தல் ஆறே தெரிவித்தல் உயிரை ஏழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்தல் எட்டே
சிறப்புடை உபாயம் தம்மால் தெளிவித்தல் உயிரை ஒன்பான்
அறுத்திடல் மலங்கள் பத்தே அழுந்தலே சிவத்தில் ஒன்றே
திறப்பணி கொளல்இ ரண்டே சிவஞான போதம் சித்தி.

---

# சூர்ணிக் கொத்து

முதற்சூத்திரம்

க. சகம் பிறப்பு இருப்பு இறப்பாகிய முத்தொழிலையுடையது

உ. அது அரனாலே உடையது

ங. மற்றிருவரும் முத்தொழிற்படுபவர்கள்

இரண்டாம் சூத்திரம்

க. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்

உ. உயிாகளுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்

ங. உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்

ச. அரன் சருவ வியாபகன்

மூன்றாம் சூத்திரம்

க. இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு

உ. எனது உடல் என்று பொருட்பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிருண்டு

ங. ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு

ச. கனவுடலை விட்டு நனவுடலே வருகையினாலே, அக்கனவுடற்குவேறாய் உயிர் உண்டு

ரு. நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு

சு. மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு

எ. எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு

நான்காம் சூத்திரம்

க. அந்தக்கரணங்களுக்கு உயிர் உட் கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு

உ. மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை

ங. உயிர் மூன்றவத்தைப்படும்

ஐந்தாம் சூத்திரம்

க. உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்

உ. அரனாலே உயிர்களெல்லாம் அறியும்

ஆறாம் சூத்திரம்

க. உயிரறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அழியும்

உ. அப்பிரமேய மாக அறியப்பட்டவனே அரன்

ஏழாம் சூத்திரம்

க. அரன் பாசத்தை அநுபவியான்

உ. பாசம் அரனை அநுபவியாது

ங. உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்

எட்டாம் சூத்திரம்

க. உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்

உ. உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே

ங. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.

ச. உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்

ஒன்பதாம் சூத்திரம்

க. உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக்காணும்

உ. உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன்

ங. பஞ்சாக்கரசெபம் பண்ணினால், வாசனாமலம்போம்

பத்தாம் சூத்திரம்

க. அரனுடன் ஒன்றாகி நில்

உ. உன் தொழிலெல்லாம் அரன் பணி என்று கொள்

பதினோராம் சூத்திரம்

க. ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்

உ. அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கமாய்ப் போவன்

பன்னிரண்டாம் சூத்திரம்

க. மும்மலங்களையும் களைக

உ. சிவஞானிகளுடனே கூடுக

ங. சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக

ச. வழிபடாமையை ஒழிக

சூத்திரம் கஉ-க்குச் சூர்ணிக்கொத்து ஙக.

முற்றுப்பெற்றது.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞானபோதம்

## சிற்றுரையும் விளக்கமும்

### நூன்முகம்

**சித்தாந்தம்**

சித்தாந்தம் என்பது செம்பொருள் துணிபு. செம்பொருளாகிய சிவனருள் மெய்யுணர்வால் கைகூடியபேறு, சித்தாந்தம் எனப்படும். சித்தம் - கைகூடுதல். அந்தம் - முடிவு; பேறு. திருவருள் கைகூடப் பெற்றவரைச் சித்தர் என்பர். திருமூலர் மரபின் முன்பின் உள்ளார் அனைவரும் சித்தர்களே. இவர்கள் செந்தமிழ்ச் செந்நெறிச் செல்வச் சீரியராவர். இவர்களையே தாயுமானச் செல்வர் 'சித்தர் கணம்' எனப் போற்றிப் புகழ்ந்தனர்.

**திருமுறை**

செந்நெறிச் செல்வர்கள் உலகுய்யப் பாடியருளிய நூல்கள் திருமுறை என்று வழங்கப் பெறுகின்றன. முறை என்பது நூல். திரு என்பது அடை. நூல் கடவுள் நினைவோடு மக்கள் செந்நெறியில் ஒழுகிச் செல்வமும் சிறப்பும் எய்தி இன்புறத் துணை நிற்பது. செல்வம் இம்மை மறுமை வாழ்வு. சிறப்பு மாறிலாப் பேரின்பப் பெரு வாழ்வு. பேரின்பப் பெரு வாழ்வு என்பது நன்னெறி ஒழுகிய நல் உயிர்கள் முழுமுதற் கடவுளாம் சிவபெருமான் திருவடியில் இரண்டறக் கூடி என்றும் ஒன்றுபோல் இன்புற்றிருக்கும் இறைநிறை வாழ்வு.

நூல்கள் செல்வ நூல் எனவும் சிறப்பு நூல் எனவும் இரு வகைப்படும். இவற்றையே உலக நூல் எனவும் வீட்டு நூல் எனவும் கூறுவர். உலக நூல் வேதம் எனவும், வீட்டு நூல் ஆகமம் எனவும்படும். வேதம் அறிவு நூல் எனவும், ஆகமம் உணர்வு நூல் எனவும் கொள்ளப்படும். இவற்றைப் புறம் அகமெனத் தொல்காப்பியத்தின்படி கூறலாம். அறிவு நூல் ஆராயத் துணை செய்யும். உணர்வு நூல் அழுந்த (அனுபவிக்க)த் துணை செய்யும்.

அறிவு நூல் (வேதம்) என்பது பொதுவும் சிறப்பும் என இரு வகைப்படும். வேதத்தை மறை எனவும் கூறுவர்.

திருக்குறள் பொதுமறை. நால்வர் ஓதுந் தமிழ் சிறப்புமறை. இதுபோல் ஆகமமும் பொதுவும் சிறப்பும் என இருவகைப் படும். திருமூலர் தமிழ் பொது. மெய்கண்டார் தமிழ் சிறப்பு. இவையெல்லாம் முறையே ஒன்றினின்றும் ஒன்றுமிக்கவாய் விட்டு நீங்காத தொடர்புடையவாய் நின்று நிலவுகின்றன. இவ்வுண்மை,

"வேதம் பசுவதன்பால் மெய்யா கமம்நால்வர்
ஓதுந் தமிழதனின் உள்ளுறுநெய்—போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்."

**(இதன் பொருள்)** வேதம் - பாலனைய அறிவு நூல்; பசு - கறவை மாடு; அதன்பால் - அது உவந்தளிக்கும் தூய ஆன் பால்; மெய் ஆகமம் - மெய்ப்பொருள் கைவரத் துணை செய்யும் ஆகமம்; நால்வர் - செந்நெறித் தலைவர்களாகிய ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய அரசு, ஆளுடைய நம்பி, ஆளுடைய அடிகள் என்னும் நாற்பெரும் செல்வர்களும்; ஓதும் - 'அவன் அருளாலே அவன் தாள்' வணங்கும் முறைப்படி அவன் உணர்த்த உணர்ந்து ஓதியருளிய; தமிழ் - திருநெறிய தமிழாகிய ஒன்றுமுதல் எட்டுவரையுள்ள திருமுறைகள்; அதனின் - அவ்வாகமத்தின்; உள்ளுறு நெய் - பாலின் மறைந்து நின்று பின் காய்ச்சிப் பிரைகுத்திக் கடைந்துகொண்டவழி வெளிப்படும் நெய்யாகும். போதம் - மெய்யுணர்வை; மிகும் - அன்பினால் இன்பம் மிகுமாறு போல உணருந்தொறும் உணருந்தொறும் மிகச் செய்கின்ற; நெய்யின் - நால்வர் ஓதி யருளும் தமிழ்த்திருமுறையாகிய நெய்யின்; உறு சுவையாம் - மிக்க சுவையாகும்; நீள்வெண்ணெய் - செந்நெறி தழைத்துச் செம்பொருள் குழைத்து என்றும் நின்று நிலவுந் திருவெண் ணெய் நல்லூராந்திருவூரில்; மெய்கண்டான் - உலகுய்யத் திரு வுருக் கொண்டு வாழ்ந்தருளிய மெய்கண்ட நாயனார்; செய்த - அருளால் ஆக்கியருளிய; தமிழ் நூலின் - விழுமிய முழுமுதல் தமிழ் நூலின்; திறம் - வகைமை என்றவாறு.

**(இதன் கருத்து)** உலகுய்ய "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" ஆகிய முழுமுதற் சிவபெருமான் மாசு தீர்ந்த வீட்டியிராகிய (சீவன்முத்தர்) திருவள்ளுவ நாயனார், திருமூல நாயனார், நால்வர் பெருமக்கள், மெய்கண்ட நாயனார் ஆகிய எழுவர் வாயிலாகச் செய்தருளிய தமிழ் நூல்கள் இம்மைக்கும் மறுமைக்கும் அம்மைக்கும் எம்மைக்கும் துணை யாம் இனிய நூல்களாகும். இவற்றைச் சிறந்ததோர் உவமை வாயிலாகப் பெரியார் வெளியிட்டருளினர்.

உவமை பசு, பால், நெய், சுவை என்பனவாகும். இவை முறையே சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் மேனெறியாம் நானெறியாகும். இவற்றைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் கூறுவர்.

திருமுறை பன்னிரண்டு

ஆளுடைய பிள்ளையார் அருளிய திருநெறிய தமிழ் ஒன்று முதல் மூன்று முறைகள். ஆளுடைய அரசர் அருளியவை நான்கு ஐந்து ஆறு திருமுறைகள். ஆளுடைய நம்பி அருளியது ஏழாந் திருமுறை. இவ்வேழினையும் தேவாரம் எனக் கூறுவர். ஆளுடைய அடிகள் அருளிய திருவாசகம் திருக்கோவையார் ஆகிய உயிரும் (அன்பும்) உயிர்க்குயிரும் (இன்பும்) போன்றவை எட்டாந் திருமுறை. ஒன்பதாம் திருமுறை ஒன்பதின்மரால் ஓதியருளிய திருவிசைப்பா திருப்பல்லாண்டு. பத்தாந் திருமுறை திருமூல நாயனாரருளிச் செய்த தமிழாகமமாகிய திருமந்திரம். பதினோராந் திருமுறை இறைவனையுள்ளிட்டுப் பன்னிருவர் பாடியருளிய நாற்பான்பனுவல்கள் அடங்கிய பாமாலை. பன்னிரண்டாந் திருமுறை சேக்கிழார் அடிகள் அருளிய திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்).

இப்பன்னிரண்டும் இறைவன் திருப்புகழைப் பெரிதெடுத்து ஓதுவதால் புகழ் நூல்கள் எனப்படும். புகழ் நூல்களைத் தோத்திரம் எனவும் கூறுவர். "திருநாமம் அஞ்செழுத்தும் செப்பல்" வேண்டும். "தீவண்ணர் திறம் ஒருகால் பேசல்" வேண்டும். பேசும் நாளே பிறந்து பயன்பெற்ற நாளாகும்.

புகழ் நூல்களில் பேசப்படும் பொருள் உண்மைகளைத் தொகுத்துக் கூறின் மூன்றின்கண் அடங்கும். அம்மூன்றும் **இறை, உயிர், தளை** என்னும் முப்பொருள்கள் ஆகும். இம்மூன்றனையும் பதி பசு பாசம் எனப்பகர்வர். கல்வியின் உண்மைத் தன்மை ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியத்து,

"வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது."

(தொல், பொருள்-௧௮௮.)

என்னும் நூற்பாவால் விளங்கும்

(இ - ள்.) யாண்டும் - எக்காலத்தும் எவ்விடத்தும்; வேண்டிய - ஆன்றோரால் விழையத்தக்க; கல்வி - மெய்யுணர்வுக் கல்வி; மூன்று - முப்பொருள் உண்மை; (கைவரச் செய்யும் புலமையை) இறவாது - கடவாது.

பொருள் நூல்கள் பதினான்கு

திருவியலூர் உய்யவந்ததேவ நாயனார் முதல் உமாபதிசிவ நாயனார் ஈறாக அறுவர் மெய்யுணர்வுச் செல்வர்களால் அருளிச்

செய்யப்பட்டுள்ள பதினன்கும் மெய்ந் நூல்களாகும். இவற்றை மெய்கண்ட சாத்திரம் என்பர். அவை: க. திருஉந்தியார், உ. திருக்களிற்றுப்படியார், ௩. சிவஞானபோதம், ௪. சிவ ஞானசித்தியார், ரு. இருபா இருபஃது, சு. உண்மை விளக்கம், எ. சிவப்பிரகாசம், அ. திருவருட்பயன், கூ. வினு வெண்பா, க0. போற்றிப்பஃறொடை, கக. கொடிக்கவி, கஉ. நெஞ்சுவிடு தூது, க௩. உண்மைநெறி விளக்கம், க௪. சங்கற்ப நிராகரணம் என்ப. இவற்றைக் குறிக்கும் பழைய வெண்பா,

"உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்தவருட்
பண்புவினு போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் முற்று."

என்பதாகும்.

நூலாசிரியர்கள் க. திருவியலூர் - உய்யவந்ததேவ நாயனர், உ. திருக்கடவூர் - உய்யவந்ததேவ நாயனர், ௩. திருவெண்ணெய் நல்லூர் - மெய்கண்டதேவ நாயனர், ௪. திருத்துறையூர் - அருள்நந்திசிவ நாயனர், ரு. திருவதிகை - மனவாசகங் கடந்த நாயனர். சு. கொற்றவன்குடி - உமாபதிசிவ நாயனர் என்ப. இவர்களை குறிக்கும் வெண்பா வருமாறு :

உய்யவந் தாரிருவர் ஒப்பிலா மெய்கண்டார்
செய்யவருள் நந்தி திருவதிகை—வெய்ய
மனவா சகங்கடந்தார் கொற்றங் குடிவாழ்
இனஉமாப திச்சிவனர் எண்.

மெய்கண்டான் நூல் (சிவஞானபோதம்)

திருவள்ளுவ நாயனர் அருளிச் செய்த "மெய்யுணர்ந்தார்" என்னும் தலைப்புப் பொருளும் மெய்கண்டான் என்னும் பொருளும் உய்த்துணர்வார்கட்கு ஒன்றெனவே தோன்றும். "மெய்கண்டார்" என்னும் சொல்லின் உண்மைச் செம் பொருளைத் தாயுமானச் செல்வர் கூறியருளிய திருப்பாட்டு வருமாறு :

"பொய்கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ."

—உ. குருமரபின் - ௪.

உலகிலுள்ள பல்வேறு கொள்கையினரும் இறைவனுடன் இரண்டறக் கலந்து இன்புறு நிலையில் பெரிதும் மாறுபடுகின்றனர். அவர்கள் சொல் நடுநிலை ஆய்வின்முன் பொய்படு

கின்றது. ஆகவே, அவர்கள் பொய்கண்டார் எனப் புகலப்படு கின்றனர்.

நம் மெய்கண்டார் மெய்ப்புணர்ப்பு (தூயஅத்துவிதம்) நிலை விளக்கமுற அருளினர். ஆண்டவன்பாலும் ஆருயிர்களின் பாலும் அன்பு, அறிவு, ஆற்றல்கள் உள்ளன. இம்மூன்றும் தொகுக்குங்கால் அறிவு என்னும் ஒன்றில் அடங்கும். இம் மூன்றும் ஆண்டவன்பால் தாமே விளங்குவன. ஆருயிர்கட்கு ஆண்டவன் விளக்க விளங்குவன. பகலவன் கதிர்கள் தாமே விளங்குவன. ஆருயிரின் கண்கள் பகலவன் கதிர்கள் கலந்து விளக்க விளங்குவன. ஆசான் அறிவு தானே விளங்கும். மாணுக்கர் அறிவு, ஆசான் அறிவு மாணுக்கர் அறிவுடன் கலந்து விளக்க விளங்கும். இவ்விருவகை ஒப்பும் மேலதனை வலி யுறுத்தும்.

இம் மூவகையாலியலும் புணர்ப்பை—அத்துவிதத்தைக் கூறுவதே முறையெனக் கண்டு வலியுறுத்தி அறுதியிட்டுக் கூறியவர் நம் மெய்கண்ட நாயனுரொருவரேயாவர். அன்பு கலப் புத் தன்மையையும், அறிவு பொருள் தன்மையையும், ஆற்றல் உயிருக்கு உயிராய் உதவும் உடனுதல் தன்மையையும் குறிக்கும். இம்மூன்றும் ஒருங்கு சேர ஒரு காலத்து ஓரிடத் துப் பிரிப்பில் இரு பொருள் ஒற்றுமைக் கலப்பையே புணர்ப்பு அல்லது அத்துவிதம் என நம் மெய்கண்டார் அருளினர். அதனுலேயே அவர் அருளிய நூல் மெய்கண்டார் தமிழ் எனவும் அவர் மெய்கண்டார் எனவும் அழைக்கப்பட்டனர். அவர் வழி மெய்கண்ட சந்தானம் எனவும், அவர் வழி நூல்கள் மெய்கண்ட சாத்திரம் எனவும் இன்று காறும் வழங்கி வரலாயின. இதனை,

> அன்பாற் கலப்பொன்ரும் ஆரறிவால் வேறுபொருள்
> முன்பாற்ற லாலுடனும் முன்.

என்பதனுல் அறியலாம்.

### மெய்கண்டார் திரு வரலாறு

மெய்கண்டார் தோன்றியருளுதற்கு இடனுயுள்ள திருநாடு திருமுனைப்பாடி நாடு. இது, நடு நாடு எனவும் அழைக்கப் படும். தொண்டை நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் நடுவே அமைந்தமையால் நடுநாடு எனப் பெயர் பெறுவதாயிற்று. உயிர்க்கு உறுதி பயக்கும் ஒழுக்கம் நிறை சான்ருேர் தொண்டை நாட்டகத்துள்ளார். உடற்கு உறுதி பயக்கும் விளையுளைச் செய்யும் தாளாளராம் வேளாளர் சோழ நாட்டகத் துள்ளார். இவ்விரு வேறு வகையினரின் பயனும் ஒருங்குதவு

வார் வாழ்வது நடுநாடெனக் கருதலாம். இவ்வுண்மை சேக்கிழார் அடிகள் அருளிய

"மறந்தருதீ நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானல் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு."

—கஉ. திருநாவுக்கரசர், கக.

என்னுந் திருப்பாட்டால் விளங்கும்.

இந் நாட்டகத்துத் திருப்பெண்ணாகடம்* என்னும் திருவூரில், விழுமிய வேளாளர் குலத்தில் செந்நெறிச் செல்வராகிய அச்சுதகளப்பாளர் என்னும் திருவினர் மருவிய கற்புறு மனைவியாருடன் வாழ்ந்து வந்தனர். மகப்பேறு இல்லாக் குறையை நிறைவுறுத்த நினைந்தனர். தம் குல குருவாகிய திருத்துறையூர் அருணந்தி சிவனார்பால் அன்புடன் அடி பணிந்து விண்ணப்பித்தனர். அவரும் செந்நெறி முறைப்படி திருமுறைக்கண் கயிறு சார்த்திப் பார்க்கப் பணித்தனர். திருமுறையை விதிப்படி வழிபட்டுக் கயிறு சார்த்தித் தொழுதனர். ஆளுடைய பிள்ளையார் அருளிய திருவெண்காட்டுத் திருப்பதிகத்து இரண்டாம் திருப்பாட்டுக் கண்டது. அப்பாட்டு,

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினேடுள்ளநினைவு
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே."

—ஆளுடையபிள்ளையார், உ. சஅ-உ.

என்பதாம்.

கண்டதும் பெருமகிழ் பூத்தவராய்க் காதலிருவரும் திருவெண்காடு சென்று முக்குளத் திருத்தகு நீரில் ஐந்தெழுத்து ஓதி மூழ்கித் தவமிருந்தனர். திருவருளால் அம்மையார் வயிறு வாய்க்கப் பெற்று நற்பொழுதில் மகவு ஈன்றனர். அம் மகவுக்குத் திருவெண்காடர் எனத் திருப்பெயர் சூட்டினர். திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப பிள்ளை வழியாம் நன்மாமனார் திருப்பெண்ணாகடம் வந்து திருவெண்காடரைத் தமதில்லத் தழைத்து வந்து வளர்ப்பாராயினர்.

---

* இது, நடுநாட்டுத் திருவூர்கள் இருபத்திரண்டனுள் ஒன்று. **திருத்தூங்கானை மாடம்** என்னும் திருக்கோவிலையுடையது. ஆளுடைய பிள்ளையார், அரசர் திருப்பதிகங்களையுடையது. ஆளுடைய அரசர் விண்ணப்பத்தை ஏற்றுத் திருவருளினல் அரசர் வலத்திருத்தோளில் மூவிலைச்சூலமும், இடத்திருத்தோளில் ஆனேறும் பொறிப்பதற்கிடனும் பேறுபெற்றது. கலிக்கம்ப நாயனார் தோன்றியருளும் கவின்வாய்ந்தது.

வளர்ந்து இரண்டாண்டு* நிறைவுறு நிலை எய்தினர். இவர் முற்பிறவியின்கண்ணே சீலம், நோன்பு, செறிவு, அறி வென்னும் நற்றவம் கைவந்து சிவபெருமானை உள்ளவாறுணரும் மெய்யுணர்வுச் செல்வராய் விளங்கினர். மெய்யுணர்ந்தாரைச் சாமுசித்தரென்பர்.

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் செந்தமிழ் தவழும் திருக்கயிலையின் நின்று செந்தமிழ் கமழும் பொதியமலைக்குப் பரஞ்சோதி மாமுனிவர் விண்ணுருக நண்ணலுற்றனர். அவ் விடையே திருவெண்ணெய்நல்லூரில் மெய்யுணர்வுத் திருவின ராய்த் திகழும் திருவெண்காடரைக் கண்டனர். அவர்பால் ஐந்தெழுத் தருமறை பகர்ந்து மெய்கண்டார் எனும் திருப் பெயர் சூட்டி வான் வழிச் சென்றனர்.

திருவெண்ணெய்நல்லூர்ப் பொல்லாப் பிள்ளையார் வழிபாட் டோடு "சிவஞானபோதம்" என்னும் செழுந்தமிழ் முழுமுதல் நூலை அருளிச் செய்து பல நன் மாணக்கர்கட்குப் பாடம் போதித்து வருவாராயினர். இத்திருவருட் செயலைக் கேள்வி யுற்றுத் திருத்துறையூர் அருணந்திசிவனார் தம் மாணவர் பல ரோடும் திருவெண்ணெய்நல்லூர் வந்து சேர்ந்தனர். அவ்வூரி லுள்ள பல மாணவர்களும் வந்து தொழுதனர். மெய்கண்டார் மட்டும் எழுந்தருளவில்லை. மெய்கண்டார் வாராமையை உணர்ந்த அருணந்திசிவனார் தாமே மெய்கண்டார் எழுந்தருளி யிருக்கும் திரு இடம் வந்தனர். அப்பொழுது மெய்கண்டார் தம் மாணவர்கட்கு ஆணவமல உண்மையைப் பற்றிக் கூறி விளக்கிக்கொண் டிருந்தனர். அருணந்தி சிவனாரைக் கண்டு ஏதுங் கூறினார் அல்லர்.

இதனைக் கண்ட அருணந்தி சிவனார்க்கு அடங்காச் செருக்கு எழுந்தது. மெய்கண்டாரை நோக்கி "ஆணவமல வடிவம் எவ்வாறிருக்கும்," எனத் தருக்குடன் வினவினர்.

மெய்கண்ட நாயனார் அவ்வினாவுக்கு விடையாக அவ் அருணந்தி சிவத்தையே தம் அருமை விரலாற் சுட்டிக் காட்டி னர். காட்டவும் சிவாச்சாரியாரின் ஆணவ வல்லிருள் அகன் றது; அறியாமை நீங்கிற்று; மெய்யறிவு விளங்கிற்று. விளங்க வும் அருணந்தி சிவனார் மெய்கண்டார் திருவடியில் வீழ்ந்து வணங்கினர். மெய்கண்டாரும் அருமறை (உபதேசம்) அருளிச் சிவஞானபோதப் பாடமும் நவின்றருளினர்.

---

* மெய்கண்ட நாயனார் ஈராண்டில் இறையருள் மெய்யுணர்வு எய்து வதும், இருபெரும் பிரிவில் முப்பொருள் உண்மை நாட்டுவதும் முன்னே குறிக்கும் எழிற்குறியின் ஏரே "பேயடையா" என்னும் திருப் பாட்டு இரண்டாம் எண்ணுமுறைக்கண் அமைந்தது.

மெய்கண்டார்க்கு அருணந்தி சிவனுரை உள்ளிட்டு மாண வர்கள் நாற்பத்தொன்பதின்மர் என்பர். அவருள் நூலாசிரியர் களாகத் திகழ்பவர்கள் அருணந்தி சிவனுரும், மனவாசகங் கடந்தாரும் ஆவர். அருணந்தி சிவனுர் சிவஞான சித்தியாரும், இருபா இருபஃதும் என்னும் இருபெரு நூற்கள் இயற்றி யருளினர். மனவாசகங் கடந்தார் ‘உண்மை விளக்கம்’ என்னும் ஒரு பெருநூல் இயற்றியருளினர்.

மெய்கண்ட நாயனுர் கெழுமுதல் என்று சொல்லப்பெறும் நிட்டைகூடியிருந்து ஐப்பசித் திங்களில் சோதி நன்னுளில் அம்மை அப்பராம் செம்பொருளோடு இரண்டறக் கலந்து இறவா இன்பம் எய்தினர். அவருடைய திருக்கோவில்கள் தில்லையிலும் திருவெண்ணெய்நல்லூரின்கண்ணும் உள்ளன. திருவெண்ணெய்நல்லூரிலுள்ள திருக்கோவில் மெய்கண்டார் வழியாகிய திருவாவடுதுறைத் திருமடச் சார்பில் இருக்கின்றது. மெய்கண்டார் வாழ்ந்த காலம் இற்றைக்கு எழுநூற்றுமுப்பது ஆண்டுகளுக்கு முன்னென்ப.

மெய்கண்டான் நூற் சிறப்பு

உலகிலுள்ள பல்வேறு கொள்கையினரும் ஆய்ந்தோய்ந்து உண்மை காணுது அலமரும் அல்லற்காலே, மெய்கண்டார் தோன்றியருளித் திருவள்ளுவ நாயனுர் உலகியலே முப்பாலாக வகுத்து வரை செய்தது போன்று ஒப்பிலா வீட்டியலே இருபாலாக வகுத்து மிகவும் செறிவாய் அமைத்துள்ளனர். இருபால் என்பது பொது அதிகாரம் உண்மை அதிகாரம்.

வீட்டியலே ஆய வேண்டிய எத்திறப் பாகுபாட்டையும் முப்பத்தொன்பது தலைப்பின்கண் அமைத்தருளினர். இவை அதிகரணம் என வழங்கப்படுகின்றன. இவற்றை விளக்கும் வெண்பாக்கள் எண்பத்தொன்று. அவையடக்க வெண்பா ஒன்று; சூத்திரம் பன்னிரண்டு. ஆகமொத்தம் நூற்று முப்பத்துமூன்று. இந்நூற்றுமுப்பத்துமூன்றும் திருக்குறள் அதிகாரம் நூற்றுமுப்பத்துமூன்றும் எண்ணுல் ஒத்துவருவன உள்ளுற ஓர் இயைபுணர்த்தி நிற்கின்றன.

சூத்திரம் பன்னிரண்டும் நாற்பது அடிகளை யுடையன. இந்நாற்பது அடிகளும் இருநூற்றுப்பதினுறு சொற்களை யுடை யன. இச்சொற்கள் இருநூற்றுப்பதினுறும் அறுநூற்றுஇரு பத்துநான்கு எழுத்துக்களை யுடையன. இத்துணைச் சுருங்கிய வடிவில் அமைந்த நூலை யாண்டுங் காண்பது அருமை.

உ

# சிவஞானபோதம்

## சிற்றுரையும் விளக்கமும்



### பாயிரம்

*சைவாகமங்களி* னுளவாகிய நாற்பாதங்களுள்† வைத்து ஞானபாதத்‡ தோதிய பொருள்களை யாராயும் ஆராய்ச்சி இந் நூலின்க ணெடுத்துக்கொள்ளப்பட்டது. இது கேட்டலுறு வார்க்கு இதனாற்போந்த பயன் யாதோவெனவும், இது கேட் டற்குரியார் யாவரெனவும், இதனானுதலப்படும் பொருள் யாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலையானுணர்தற்பால தியாதெனவும், இதனை வழங்குதற் கிட்டபெயர் யாதெனவும், இஃதியாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூல் யாதெனவும், இந்நூல்செய்தார் யாவரெனவும், பலவாற்றானுஞ்சங்கை§ நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மன வெழுச்சி சேறற்பொருட்டு இந்நூன்முகத்துரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம்.—*

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகேண் ணிருடீர்ந்து
அருந்துயர்க் குரம்பையி னுன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே. —என வரும்.

---

* சைவாகமங்கள்—சிவாகமங்கள்; இறைவனூல். † நாற்பாதங்கள்—நான்கு படி முறைகள். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவற்றைச் சீலம், நோன்பு, செறிவு, அறிவு எனவும் வழங்குவர். ‡ ஞானபாதம்—அறிவுப்படி. § ஆசங்கை—ஐயம்,

## சிற்றுரை

(இதன் பொருள்) மலர் தலை உலகின் மா இருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண் போல் - விரிந்தவிடத்தையுடைய ஞாலத்தின்கண்ணே துன்னிய பெரிய புறவிருள் கெடும்படி பலசமயத்தாரானும் புகழப்படு கின்ற பரிதியங்கடவுள் உதயகிரியினின்றும் போந்தாலன்றிக் காட்சியெய்தமாட்டாத கண்ணொளிபோல, அருந் துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி - பொறுத்தற்கரிய துயரங் களுக்கெல்லாம் ஒரு நிலைக்களமாய்ச் சத்ததாதுக்களாற் பொத் திய குரம்பையாகிய காணப்பட்ட உடம்பானே காணப்படாத ஆன்மாவையும் பரமான்மாவையும் அனுமான வளவையான் வைத்தாராய்ந்து அவற்றது தடத்தலக்கணமெனப்படும் பொது வியல்புணர்ந்து, கண் இருள் தீர்ந்து - அவ் வுணர்ச்சி யானே கருதியுணரப்படும் அகவிருளாகிய ஆணவ மலத்தினின்று நீங்கி, ஈண்டிய பெரும் பெயர்க் கடவுளிற்கண்டு - அது நீங்கிய வழி எல்லா நூல்களுந் தன் பொருளேயாகத் திரண்டு கூடிய பெரும் பெயரெனப்படும் ஒருவார்த்தையாகிய மகாவாக்கியத்தான் எடுத் தோதப்படும் முதற்கடவுளது திருவருளானே அப்பொருள்க ளது சொரூப லக்கணமெனப்படுஞ் சிறப்பியல்பை அநுபூதியிற் கண்டுணர்ந்து, மயர்வு அற - இம்முறையானே மயக்கவாசனை யற்றுச் சிவாநுபவம் பெறுதற்பொருட்டு, நந்தி முனிகணத்து அளித்த - ஸ்ரீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமான் சனற்குமாரமுனிவன் முதலிய முனிவர்கணங்கட்கு முறை யானே அளித்தருளப்பட்ட, உயர் சிவஞானபோதம் - சரியை முதலிய மூன்று பாதப்பொருள்களை ஆராயுநூல்களின் மேற் பட்ட சிவஞானபோதமென்னும் வடநூலை, உரைத்தோன் - மொழிபெயர்த்துக்கூறி வார்த்திகமெனப்படும் பொழிப்புரை செய்தோன், பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன் - பெண்ணையாற்று நீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூ ரின் அவதரித்தருளிய சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத் திருநாமமுடையான், பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன் - பொய்ச்சமயங்களின் பொருள் இது விதுவென்று கண்டு கழிப்பித்த காரணத்தாற் பெற்ற மெய்கண்டதேவனென் னுஞ் சிறப்புத் திருநாமமுடையான், பவம் நனி வன்பகை கடந்த தவர் அடி புனைந்த தலைமையோன் - பிறவியாகிய மிக்க வலிய பகையினை வென்ற தவத்தோர் தனது திருவடியைப் புனைந்து கோடற்கேதுவாகிய தலைமைப் பாட்டினையுடையோன் என்றவாறு.

படரிற் காண்டல்செல்லுங் கண்ணெனற்பாலதனை எதிர் மறைமுகத்தாற் கூறினார், இன்றியமையாமை விளக்குதற்கு. இப்பொருள்பற்றிக் கண்மேல் வைத்துக் கூறினாரேனும், உவமேயப்பொருட்கேற்பக் காண்டல்சேறற்குப் படர்ந்த ஞாயிறு போலென்பது கருத்தாகக் கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பஞ் சவிகற்பமென்னும் இருவகைக்காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாய வாறுபோல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதியென்னும் இருவகையுணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந்நூலென்பார், தமியப் படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போனாடித் தீர்ந்து கண்டு மயர்வறவளித்த சிவஞான போதமென்றார்.

தலைமைபற்றி அருந்துயர்க்குரம்பையி னென்றாரேனும், இனம்பற்றிக் கரணம் புவனமுதலியனவும் உடன் கொள்ளப்படும்.

அருந்துயர்க்குரம்பையி னுடைப்படுவதாகிய பொதுவியல்பு முன்னூறு சூத்திரத்தானும், பெரும்பெயர்ப்பொருளிற் காணப்படுவதாகிய சிறப்பியல்பு பின்னூறு சூத்திரத்தானு மோதுப.

நாடியெனவே அநுமானவளவையானென்பதூஉம், கண்டெனவே அநுபூதியிலென்பதூஉம், தாமே போதரும்.

பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தானுணரப்படும்; சிறப்பியல்பு சாதனமுகத்தானும் பயன்முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னு நான்குதிறத்தானுணரப்படும்.

இஃதென்சொல்லியவாறோவெனின்:—இவ்விருவகை யியல்பும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது ஒரோவொன்றேபற்றி ஐக்கவாதமுதற் பல திறத்தான் வேறுபட்டுத் தம்முண்மாறுகொண்டு மயங்குவார்க்கு அங்ஙன மயங்காது அவற்றின் பொருளொருமை யுணர்த்தற்கு எழுந்தது இந்நூலென்றவாறாயிற்று. சிவஞான போதமென்பதூஉம் இக் காரணத்தாற்பெற்ற பெயரென்பது வடமொழிச் சிவஞானபோதத் *திறுதிச் சூத்திரத்தோதிய வாறுபற்றியுணர்க.

---

* வடமொழிச் சிவஞானபோதம் தமிழ்ச் சிவஞானபோதத்தின் மொழிபெயர்ப்பென்பது அறிவாற்றன் மிக்க ஆராய்ச்சி வல்லுநர் ஒப்பு நோக்கித் தக்க சான்றுகளுடன் ஐயமறத் துணிந்து வெளிப்படுத்திய மறுக்கொணா உண்மையாகும். ப - ர்.

சரியைமுதலிய மூன்றுபாதப்பொருளை ஆராயுநூல்களாவன சோமசம்புபத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமெனவே, அந்நூல்களுணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்பது பெறப்பட்டது; படவே முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை யோதி அதன்பின்னர்ச் சரியாபாத முதலியவற்றை ஆராயுநூல்களை முறையேகேட்டு அவ்வாறொழுகி மனந்தூயராய் நித்தியாநித்தியவுணர்வுதோன்றி பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவா மிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு இந்நூலுணர்த்துகவென்பது போந்ததெனக்கொள்க.

உயர் சிவஞானபோதமெனவே யாப்பும், கேட்போரும், நுதலிய பொருளும், நூற்பெயரும்; நாடித் தீர்ந்து கண்டு மயர் வறவெனவே நுதலிய பொருளின்வகையும், பயனும்; நந்தி முனிகணத் தளித்த வெனவே வழியும்; வெண்ணெச் சுவேதவனன் மெய்கண்டதேவனெனவே ஆக்கியோன் பெயரும்; தமிழ் வழங்குநிலமே இந்நூல் வழங்கு நிலமென எல்லையும் போந்தவாறுணர்க. வடநூலார் யாப்பை ஆனந்தரிய மென்றும், நுதலிய பொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. யாப்புச் சம்பந்தமென்பாருமுளர்.

## விளக்கம்

### உயிர்த்தன்மை

உயிர் சார்ந்ததன் வண்ணமாக இருக்கும். அதற்குக் கண்ணையும், பளிங்கையும், வானத்தையும், ஒப்புக்கூறுவர். கண் இருளோடுகூடி ஒளி விளங்காது நிற்கின்றது. அதுபோல், உயிரும் பழமலத்துடன் ஒட்டி அறிவு விளங்காது நிற்கின்றது. கண்ணுக்கு ஞாயிறு தோன்றி இருளை ஓட்டி ஒளியை விளங்கவைக்கின்றது. அதுபோல் இறைவன் திருவருள் உயிருக்கு மலத்தைச் சிறிது சிறிதாக நீக்கி அறிவையும் சிறிது சிறிதாக விளக்குகின்றது. அறிவைச் சிறிது சிறிதாக விளக்குங்கருவி மாயா காரிய உடம்பு.

உயிர் திருவருள் துணையால் உடம்பின் தன்மையை உற்று ஆராயும். அப்பொழுது உடம்புக்கு வேறாகிய தன்னை யுணரும். அங்ஙனம் உணரத் துணைசெய்வது மெய்கண்டதேவர் அருளிச்செய்த செந்தமிழ்ச் சிவஞானபோதம். உணரவே, ஆண்டவன் ஆசானாக எழுந்தருளிவந்து மலம் நீக்கித் தன் மலரடிக்கீழ் வைத்தருள்வன். இவற்றை விளக்குவதே இப்பாயிரம்.

மலர் - விரிதல். தலை - இடம். மா - பெரிய. இருள் - புறவிருள். துமிய - கெட. படர்தல் - தோன்றுதல்.

ஞாயிறு தோன்றினால் கண் காட்சி எய்தும். புறஇருளைப் போக்குகின்ற ஞாயிற்றை எல்லாச் சமயத்தாரும் வேற்றுமையின்றிப் புகழ்

கின்றனர். படரின் அல்லது காண்டல் செல்லாக் கண் என எதிர்மறை முகத்தாற் கூறினர், இன்றியமையாமையை விளக்குதற்கு. இன்றி - இல்லாமல். அமையாமை - முடியாமை. ஓர் அவை நிகழத் தலைவர் ஒருவர் வேண்டும். பேசுவோர் சிலர் வேண்டும். கேட்போர் பலர் வேண்டும். இவருள் கேட்போரும் பேசுவோரும் வருதல்வேண்டுமென்று உடன்பாட்டில் கூறுவதுபோல் தலைவரையும் கூறுவது பொருந்தாது. தலைவர் இல்லாமல் கூட்டமே நிகழாது. பேசுவோரும் கேட்போரும் ஒருசிலராக இருப்பினும் கூட்டம் நிகழும். ஆகவே, தலைவரை அழைக்குங்கால் வாராமல் தீராது, என்று எதிர்மறையாலேயே கூறுதல் வேண்டும்.

ஆதித்தர் (ஞாயிறு) பன்னிருவர் என வழங்கிவருகின்றனர். பரிபாடல் எட்டில் "உலகிரு ளகற்றிய பதின்மரும் இருவரும்," எனவரும் தொடரும் காண்க. ஆதித்தர் பன்னிருவர்க்கு வேறு வரலாறு கூறப்படினும் நாம் கொள்வது வான்வழி வீடு பன்னிரண்டு. ஞாயிறு ஒவ்வொரு வீட்டிலும் ஒரு திங்கள் உறையும். அதனால் பன்னிரண்டு என எண்ணப்பட்டமை என்பதே. ஞாயிறு - ஒப்பு. சிவஞானபோதம் - பொருள். ஒப்பு என்பது உவமானம். பொருள் என்பது உவமேயம். அதனால் சிவஞானபோதமும் பன்னிரண்டு சூத்திரங்களையுடையது என்பது குறிப்பால் பெறப்படும்.

## அருந்துயர்க் குரம்பையில் ஆன்மா நாடல்

உடம்பு (குரம்பை) எழுவகை முதற்பொருள்களால் ஆயது. அவை. சாரம், செந்நீர், ஊன், கொழுப்பு, எலும்பு, மூளை, வெண்ணீர் என்ப, இவற்றை முறையே இரசம், இரத்தம், மாமிசம், மேதஸ், அஸ்தி, மச்சை, சுக்கிலம் எனவும் கூறுவர்.

இவற்றால் ஆகிய உடம்பு அறிவில்லது. இவ்வுடம்போடு கூடி இன்பத்துன்பங்களை நுகர்வதற்குரிய உயிர் வேறுண்டு. ஓர் உடம்பு இன்புறுகின்றபொழுது மற்றோர் உடம்பு துன்புறுகின்றது. இதனால், உடம்புதோறும் உயிர்கள் வெவ்வேறு உண்டு. அவ்வுயிர்கள் இவ்வுடம்புகளினுள் கட்டுப்பட்டிருக்கின்றன. அதற்குக் காரணம் இவ்வுயிர்களோடு ஒட்டித் தொன்மையே ஒரு மலப்பிணிப்பு இருந்ததென்று கூறுவர்.

மலப்பிணிப்பினின்று உயிர்கள் விடுதலை எய்தவே மலப்பிணிப்பு இயல்பாகவே இல்லாத ஆண்டவன் மாயையிலிருந்து உடம்புகளைப் படைத்தளித்தனன். மாயை ஆண்டவனுக்கு வைப்பாற்றல். வைப்பாற்றல் என்றாலும் பரிக்கிரகசத்தி என்றாலும் ஒன்று. உயிர்கள் உடம்பு எய்தாது மலத்தொடுமட்டும் புல்லிக் கிடந்த நிலை **புலம்பு** எனப்படும். உடம்பு பெற்றுச் சுட்டுணர்வும் சிற்றுணர்வும் எய்திய நிலை **புணர்வு** எனப்படும். உடம்பின் உண்மையினைத் திருவருளால் உணர்ந்து ஆண்டவனை அடைந்து நிற்கும் நிலை **புரிவு** எனப்படும்.

புலம்பு, புணர்வு, புரிவு என்னும் மூன்றினையும் முறையே கேவலம், சகலம், சுத்தம் என்பர். இவற்றையே கலவாமை, கலப்பு, கழல்வு எனவும் கூறலாம். இவ்வுண்மை சிவஞானசித்தியார், நான்காம் சூத்திரம் அவத்தை இலக்கணம் ௩௭-ஆம் திருப்பாட்டாலும் அறியலாம்.

"கேவல சகல சுத்தம் என்றுமூன் றவத்தைத ஆன்மா
மேவுவன் கேவ லந்தன் உண்மைமெய் பொறிக ளெல்லாம்
காவலன் கொடுத்த போது சகலனும் மலங்க ளெல்லாம்
ஓவின போது சுத்த முடையன்உற் பவந்து டைத்தே."

உயிர்கள் நாள்தோறும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என வேறு ஐந்துநிலை எய்தும். இவற்றை முறையே, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பர். நனவு நிலையிலும் உயிர்களுக்கு நினைப்பும் மறப்பும் நிகழும்.

உயிர்களுக்கு உடம்பை அளித்து, நிலைநிறுத்தி, ஒடுக்கும் கடவுள் ஒருவன் உண்டு. உயிர்கள் உடம்பினுள் கட்டுற்று நிற்கின்றன, கிளி முதலிய புள்ளினங்கள் கூட்டினுள் கட்டுற்று நிற்பனபோன்று. ஆதலால், கடவுள்தான் உடம்பு முதலியவற்றைப் படைத்தருளல்வேண்டும். படைத்தல், காத்தல், துடைத்தல்களாகிய முத்தொழிற்கும் தலைவன் முழுமுதற் சிவனே. அயன், அரி, அரன் என்னும் மூவரும் சிவனருளைப் பெற்று ஒவ்வோர் தொழிலினைச் செய்யும் உரிமையராவர். இம் மூவரும் உயிரினத்தாராவர். இவர்களும் தோற்றம், நிலை, இறுதியை உடையவர்கள்.

ஆண்டவன் உலகினைத் தனது ஆணையின்வழித் திருவுள்ளத்தால் படைத்தருள்வன். அதனால் அவன் எவ்வகைத் திரிபும் எய்தான். திரிபு என்பது விகாரம். விகாரம் என்பது உடல் வருத்தத்தால் ஏற்படும் சோர்வு இளைப்பு முதலிய தளர்வுநிலை. ஒருவேலையைச் செய்யச் சொல்லுவார்க்கு இளைப்பு ஏதும் உண்டாகாது. அதை ஏற்றுச் செய்கின்றவர்களுக்கு இளைப்பு உண்டு. இதுபோல ஆண்டவன் திருவுள்ளம்கொள்ள உலகம் உண்டாகிவிடும். அதனால், அவனுக்கு இளைப்பில்லை. திருவுள்ளம் என்பது சங்கற்பம்.

தற்குறிப்பால் ஏவும் தலைவன் இளைப்பெய்தான்
சொற்படிசெய் வோர்க்குண் டிளைப்பு.

இதனால், ஆண்டவனும் ஒடுக்கம், ஏவல், தலைமை என மூன்று நிலை எய்துவன். இந்நிலைகள் அவன்மாட்டு ஏற்றி (உபசாரம்)ச் சொல்லப்படுவன. இந்நிலைகளை இலயம், போகம், அதிகாரம் எனவும், கூட்டல், ஊட்டல், ஆட்டல் எனவும் கூறுவர். ஆண்டவன் மாசற்றவனாயிருந்தே உயிர்களுக்குக் கருவிகள் வழி இன்பத் துன்பங்களை நுகர்விப்பன். இது, மருத்துவன் நோய் இல்லாமலிருந்தே நோயாளிக்கு மருந்து முதலியன கொடுப்பதை ஒக்கும்.

ஆண்டவன் சுட்டி அறியப்படுபவன் அல்லன். சுட்டியறியப்படும் உடல் உலகப்பொருள்கள், அறிபவனுக்கு வேறாக இருப்பன. ஆண்டவன் அறியும் உயிர்களுடன் ஒன்றாயிருப்பவன். ஆதலால், அவனைச் சுட்டி அறியமுடியாது. சுட்டி அறியப்படும் பொருள் அழிபொருள் எனப்படும். அழிபொருள் என்பது நுண்ணிய நிலையினின்று பருமையாய்த் தோன்றி மீட்டும் நுண்மை நிலையை எய்துவதாகும். நுண்மை நிலையைக் காரணம் என்பர். பருமைநிலையைக் காரியம் என்பர். ஆண்டவன் அழிபொருள் போன்று சுட்டி அறியப்படுவானும் அல்லன். பொய்ப்பொருள்போன்று அறியப்படாதவனும் அல்லன். இவற்றின் வேறாய் அவனோடு உடங்கியைந்தழுந்தி உணரப்படுபவன். பொய்ப்

பொருள் என்பது முயற்கோடு வானத்தாமரைபோல என்றும் எங்கும் இல்லாத பொருள்.

ஆண்டவன் திருவருளால் அவனுடன் புணர்ந்து உயிர்கள் வேறற நின்று அவனைக் காணும். இவ்வுண்மை உரையளவை சார்பாக வழியளவையால் உயிர்கள் அறியும். வழியளவையைக் கருதலளவை என்பர். இங்ஙனம் இறை, உயிர், தளை என்னும் முப்பொருளினியல்பை அறிவது பொது இயல்பு எனப்படும்.

அருந்துயர்க் குரம்பை என்பது தலைமைபற்றிக் கூறியதாகும். அதனால், மனமுதலிய கருவிகளும், உலகங்களும் இனம்பற்றிக் கொள்ளுதல் வேண்டும்.

## பெரும் பெயர்க்கடவுளிற் காண்டல்

உயிர் தன்னையும் தலைவனையும் உடம்பைக்கொண்டு பொதுத்தன்மையாக அறியும். அறியவே மலத்தொடர்பு நீங்கும். பெரும்பெயர்ப் பொருள் திருஐந்தெழுத்தின் பொருளேயாம். பெரும்பெயர், திருஐந்தெழுத்து. பெரும்பெயர்க் கடவுள் திருஐந்தெழுத்தால் சிறப்பிக்கப்படும் கடவுள். ஐந்தெழுத்துண்மை கிளந்தெடுத்து ஓதும் திருமுறை சார்பாக உறைத்துநின்று உயிர்கள் ஆண்டவன்பால் அழுந்தியறியும். அழுந்தியறிதல் என்பதை அனுபவித்தல் என்பர்.

இறை, உயிர், தளை என்னும மூன்றும் என்றும் உள்ள மெய்ப்பொருள்களே. இறை அழுந்தாது ஒருமிக்க அறியும். உயிர் அழுந்தி ஒன்றினையே அறியும். தளை அறிவில்லாதது. அதனால் அது எதையும் அறியாது; அழுந்தாது. உயிர் தன்னாற் பற்றப்பட்ட பொருளின்கண் அதுஅதுவாய் நின்று அழுந்தும் தன்மையது. அதுவதுவாய் அழுந்தல் பிறிதொன்றும் காணாது சார்பின் பரப்பு முழுதுமாய் உறைதல். இது, செந்நாப்புலவன் செய்யுள் இயற்றுங்கால் தன் உள்ளத்துப் பிறிதொன்றற்கும் இடங்கொடாது தான் சொல்லும் பொருளுமாக உறைத்து நிற்பதை ஒக்கும்.

உயிர் இறையாகிய உடையானையும், தளையாகிய உடைமையையும் அழுந்தியறியும். உயிரின் அறிவு உடலோடு பொருந்திச் சுட்டறிவாய் நிற்கும். யான் அறிந்தேன் என்னும் அளவில் சிற்றறிவெனப் பெயர் பெறும். இவ்விரண்டும் மலம் உள்ளவரையும் நிலவும். மலநீங்கிய வழி இவ்விருவகை யறிவும் நீங்கும். அப்பொழுது இறைவன் திருவருள் கருவியாக அவனைப்பற்றி முற்றறிவாக விளங்கும். ஆகவே உயிரின் அறிவுநிலை, சுட்டறிவு சிற்றறிவு முற்றறிவு என மூவகைப்படும்.

உயிர் இறைவனைச் சார்ந்து முற்றறிவு விளங்கிய காலத்தும் இறைவனையன்றி வேறொன்றினையும் அறியாது. அப்பொழுது இறைவனது முற்றறிவை நோக்க உயிரினது அறிவு சிற்றறிவென்றே பெறப்படும். உயிர்க்கு எந்த இடத்தும் தனக்குக் காட்டாக (வியஞ்சகம்) அறிவிக்கும் ஆண்டவன் அறிவு இன்றியமையாது வேண்டப்படும். உயிர்கள் சில வீடுபேறு எய்தின; சில எய்துகின்றன; சில எய்துவன. இவ்வகையாகக் காணப்படுவதற்குக் காரணம் பிணித்துள்ள மலவாற்றல்களின் வன்மை மென்மையால் நீங்கும் காலஎல்லையே காரணம். அதனால், உயிர்கள் பல என்பது நன்றாக விளங்கும்.

உயிர்களுள் வேற்றுமையாவது தத்தம் அறிவு பருமையும் நுண்மையுமேயாம். இவ்வறிவுகளின் வேறுபாட்டால், உயிர்கள் தகுதியுடைமையும் தகுதியின்மையும் உடையவாய்ப் பலவாகும். அவற்றிற்குப் படிமுறையான் விளக்க அறிவு விளங்கும். அவற்றிற்கு ஏற்பச் செல்வம் சிறப்பு என்னும் இரு பேறுகள் உண்டாம். செல்வம், பெத்தம் எனப்படும். சிறப்பு, வீடுபேறு எனப்படும்.

கடவுளறிவு தானே விளங்கும் உரிமையுடைய பேரறிவு. உயிர்களின் அறிவு விளக்க விளங்கும் இயல்புடைய அடிமைத்தன்மை வாய்ந்த சிற்றறிவு. கடவுள் தானே அறிந்தும் உயிர்களுக்கு அறிவித்தும் நிற்கும். ஆண்டவன் இதுகாறும் உயிர்க்கு உள்நின்று உயிர்க்குயிராய் உணர்த்தி வந்தனன். அவனே இப்பொழுது வெளிப்பட்டுக் குருவாய் எழுந்தருளினன். அருமறை (உபதேசம்) அருளினன். அருளவே, ஆண்டவன் உறவும் ஆணவப்பகையும் புலனாகும். புலனாகவே உயிர் உறவாகிய ஆண்டவனோடு கூடும். அங்ஙனம் கூடுதற்கு இறப்பில் தவம் காரணமாகும். இறப்பில் தவத்தால் மெய்யுணர்வு (சிவஞானம்) கைகூடும். மெய்யுணர்வு பற்றற்றவழி யுண்டாகும். பற்றறுதி 'சிவயநம' என்னும் திருஐந்தெழுத்து ஓதுதலால் உண்டாகும்.

உயிர் கடவுளைக்கூடிக் கடவுள் வண்ணமாய் இன்புற்றிருக்கும். இது, பளிங்கு மாணிக்கத்தைச் சார்ந்து மாணிக்க வண்ணமாய் நிற்பதையொக்கும். பளிங்கு அவ்வாறு காணப்படினும் மாணிக்கமாய் மாறிவிடாது. ஆனால், மாணிக்கத்தின் ஒளியும் நிறமும் பெற்று விளங்கும். தன்னொளி அம்மாணிக்க ஒளியுள் அடங்கிவிடும். அப்பொழுது பளிங்கு மாணிக்கத்துக்குச் சமமாய் நிற்கும். அதுபோல், உயிரும் ஆண்டவன் எண்குணங்களும் தன்கண் விளங்க ஆண்டவனைப்பற்றி நிற்கும். சார்ந்த தன் தன்மையாய் நிற்கும் உயிரின் குணம் ஆண்டவன் குணத்தினுள் அடங்கிவிடும். அடங்குதல் என்பதுபற்றிய பண்பின்வழி யொழுகுதல். இது, பிள்ளைகள் கற்பதன்முன் அறியாமை யுள்ளடங்கித் தீநெறி ஒழுகுதலும், கற்றபின் அறிவினுள்ளடங்கி நன்னெறி ஒழுகுதலுமாகிய செயலோடு ஒக்கும்.

உயிர் ஆண்டவன்பால் அயராஅன்பு செய்யச் சிவப்பேறின்பம் சிறந்து விளங்கும். அவ்வின்பத்தை உயிர்கள் இடையறாது நுகரும். அதனால், உயிர்கள் என்றும் அடிமைகளே. இவ்வுண்மைகள் எல்லாம் திருவருள் கண்ணாக மெய்யுணர்வில் (அனுபூதியில்) கண்டு சிறப்பியல் புணர்தலால் ஆகும்.

அடங்குதல் என்பது வழியொழுகுதல் என்னும் உண்மையைத் திருவள்ளுவநாயனார்,

"நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு." —திருக்குறள், எகரு

என்ற செந்தமிழ்ப் பொதுமறையின்கண் அருளிச் செய்தனர்.

சிறப்புப் பாயிரத்தின் சிறந்த உறுப்பு எட்டென்ப. அவை,

"ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே."
—தொல். சிறப்புப்பாயிர மேற்கோள்.

---

## க. மங்கல வாழ்த்து

காமிக முதலிய சைவாகமங்களுண் ஞானபாதத்தினுள தாகிய ஆசங்கை நீக்கி அவற்றின் பொருளுண்மை பொது வியல்பு சிறப்பியல்பென்று இருவேறுவகைப்படுத்துக் காட்டிப் போதித்தற்கு இரௌரவாகமத்தினெழுந்த சிவஞான போத நூலினைத் தமிழுலக முய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைப்பாவெனடுத்துக்கொண்ட வாசிரியர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந்தமக்கு இடையூறு சிறிது மணுகாமை அறிந்தாராயினும், ஆன்றோராசாரம் பாதுகாத்தற் பொருட்டும், மாணாக்கர்க் கறிவுறுத்தற்பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றார்.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

(இ - ள்.) கல்லால் நிழல் - அருள்வடிவாகிய கல்லா னிழலின்கண்ணே எழுந்தருளியிருந்து, மலைவு இல்லார் - நந்தி பெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர், அருளிய - மேன்மேற் கருணை கூர்ந்தருளுதற் பொருட்டு, பொல்லார் இணைமலர் - பொல்லாத பிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தியென்னும் இரண்டு திருவடித் தாமரைகளை, நல்லார்- கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர், புனைவரே - தம் முடைய ஞானசத்தி கிரியாசத்திகட்கு வியாபகமாகக் கொண்டு தாடலைபோல் அடங்கி நிற்பர் (எ - று).

நல்லார் புனைவரெனவே, ஏனையோர்க்கு அது கூடாதென்ற வாறாயிற்று.

மூவகை வாழ்த்துள் இது பொருளியல்புரைத்ததெனக் கொள்க.

அருளியவென்பது செய்யியவென்னும் வாய்பாட்டுவினை யெச்சம்; அது புனைவரென்னும் பிறவினை கொண்டது.

---

* இங்ஙனம் ஓர் ஆகமம் இப்பொழுது இருப்பதாக ஆகம வல்லார்க்கும் புலனாகவில்லை. ப - ர்.

இல்லார் இல்லாகச் செய்தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர்.

அருளிய பொல்லாரெனப் பெயரெச்சமுடிபாக வைத்துரைப்பினுமமையும்.

மலையில்லாரருளப் பொல்லார்தாள் புனைவரெனவே, அவ்விருவருந் தம்முள் வேற்றுமையின்மை பெற்றும். உலகத்துப் புதல்வர்கண்மாட்டுச் செய்யும் வழிபாடு தந்தையர்க்குக் கழிபேருவகை பயப்பிக்குமாகலின், அந்நயம் பற்றி அங்ஙனங் கூறியதூஉமாம்.

## விளக்கம்

**(பொழிப்புரை)** வெள்ளிமலைமேல் விளங்கும் ஆலமர நீழலில் தென்முகமாக எழுந்தருளியிருந்து, நூலுணர்வில் மலைவு ஏற்பட்ட நோன்மையோர்க்கு நுண்ணுணர்வினால் மலைவு தீர்த்தருளியவர் சிவபெருமானார். அவர் அடிமை பூண்டு ஒழுகும் நம்மனோர்க்கும் அத்திருவருளைப் புரிதற் பொருட்டு அவர்தம் அறிவின் திருவருட்கூறாய் ஆருயிரின் அறியாமையைப் போக்கத் தோன்றியருளியவர் பொல்லாப் பிள்ளையார். அவர்தம் இரண்டு திருவடிகளையும் நன்னெறிச் செல்லும் நல்லார் உயிர்த்துணையாய்த் தம் திருமுடிக்கண் சூடுவர் என்றவாறு.

நூலுணர்வு - ஆராய்ச்சியுணர்வு. நுண்ணுணர்வு - அனுபவவுணர்வு.

ஆண்டவன், அறியாமை வயப்பட்டு அல்லலுறுவாரை அறிவின் வயத்தாக்கிச் சொல்லொணு நல்லின்பம் உறச் செய்யும் வழிக்குத் திருப்புங்கால் பொல்லான் என்னும் திருப்பெயர் பெறுவன். அத்திருப்பெயர் ஈண்டுக் கூறிய 'பொல்லார்' என்னும் பெயர்க்குப் பொருந்துமேற் கொள்க. வரும் ஆளுடைய அரசின் திருப்பாட்டும் இவ்வுண்மையை வலியுறுத்தும்.

ஞமனென் பான்நர கர்க்கு நமக்கெலாம்
சிவனென் பான்செழு மான்மறிக் கையினன்
கவனஞ் செய்யுங் கனவிடை யூர்தியான்
தமரென் றாலுங் கெடுந்தடு மாற்றமே. —ரு. கூஎ - கஅ.

ஞமன் - ஈண்டுப் பொல்லான்.

### 'தாடலை போல் அடங்கிநிற்பர்'

தாள் + தலை = தாடலை. இவ்வொப்பு செந்நெறிச் செல்வர்களாகிய சித்தாந்த சைவரே கூறுவர். திருவள்ளுவ நாயனாரும்,

"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை." —திருக்குறள், கூ.

என்னுந் திருப்பாட்டில் 'தாள் தலை' என வலியுறுத்து அருளினமை காண்க.

மங்கல வாழ்த்து மூவகைப்படும். அவை வாழ்த்து, வணக்கம், பொருளியல் புரைத்தல் என்ப. வாழ்த்து, "நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க" என்பது போன்றது. வணக்கம், "மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்" என்பது போன்றது.

இவ்வாழ்த்து பொருள் இயல்பு உரைத்தல். அஃதாவது சிவஞான போத நூலின்கண் அருளிச் செய்யப்பட்ட பொருள் இயல்பெலாம் குறிப்பால் உணர்த்துதல். அது, வருமாறு:

க உ ங ச
கல் ஆல் நிழல் மலைவு
ரு சு
இல்லார் அருளிய —அருள் + இய
எ அ கூ
பொல்லார் இணை மலர்
க0 கக கஉ
நல்லார் புனைவர் ஏ.

இம் மங்கல வாழ்த்தாகிய வஞ்சித்துறை கல் என்பது முதல் ஏ என்பது இறுதியாகப் பன்னிரண்டு சொற்களால் அமையப்பெற்றுள்ளது. இது சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரம் கொண்டது என்பதைக் குறிக்கும்.

அடிதோறும் மும்மூன்று சொற்கள் காணப்படுகின்றன. இவை இயல்தோறும் மும்மூன்று சூத்திரங்கள் உள என்பதைக் குறிக்கும். நான்கு அடியும் நூல் நான்கியல்களைக் கொண்டதென்பதைக் குறிக்கும். முதல் இரண்டடியில் அருளிய என்பது ஒரு வினை முடிபு. பின் இரண்டு அடியில் புனைவர் என்பது ஒரு வினை முடிபு. இவ்விரண்டு வினைமுடிபு களும் இந்நூல் இரண்டு அதிகாரங்களை உடையது என்பதைக் குறிப்பன. ஒவ்வோர் அதிகாரமும் அவ்வாறு சூத்திரங்களைக் கொண்டன என்பதை அவ்வாறு சொற்களாலாகிய இவ்விரண்டு அடிகள் குறிப்பன.

நான்கு இயல்கள் ஆவன, பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் என்பன ஆகும். இவற்றை அளவை, தன்மை, பயிற்சி, பயன் என வழங்குப சாதனத்தைத் துணை எனவும் பயனைத் துய்ப்பு எனவும் கூறலாம்.

முதலடி இறுதியில் மலை எனவும், இரண்டாம் அடி முதலில் வில்லார் எனவும் உள்ள சொற்கள் சேர்ந்து மலைவுஇல்லார் எனக் காணப் படுகிறது. இரண்டாவது இயலின் முதற் சூத்திரத்துக் கருத்துரையில் 'இதுவுமது' என முதல் இயலின் இறுதிச் சூத்திரத்துடன் மாட்டெறியப் பட்டுள்ளது. இம்மாட்டெறிதலை இரண்டடியிலும் சேர்ந்து காணப்படும் 'மலைவில்லார்' என்பது குறிக்கும்.

முதல் அடியில் 'கல்ஆல் நிழல்' என ஆலமர் ஆசான் எழுந்தருளி யிருக்கும் இடம் குறிக்கப்படுகிறது. இது, முதலியல் அளவை இயல் என்பதைக் குறிக்கும் இரண்டாம் அடியில் 'மலைவுஇல்லார் அருளிய' எனச் செய்கை குறிக்கப்படுகிறது. இரண்டாம் இயல் இலக்கண இயல் என்பதைக் குறிக்கும்.

மூன்றாம் அடியில் 'பொல்லாஇணைமலர்' எனத் திருவடி கூறு கிறது. இது, மூன்றாவது இயல் சாதனஇயல் என்பதைக் குறிக்கும்.

நான்காம் அடியில் ‘ **நல்லார் புனைவர்** ’ எனப் பேறு குறிக்கப்படுகின்றது. இது, நான்காம் இயல் பயன்இயல் என்பதைக் குறிக்கும். இங்ஙனம் சிறந்த வுரையை மாதவச் சிவஞான முனிவரனார் அருளிச்செய்தனர். அவ்வுரை பேருரை எனவும், சிற்றுரை எனவும் இருவேறு வகைப்படும். அவற்றுள் நாம் பாடத்திற்கு மேற்கொண்டுள்ளது சிற்றுரையாகும். பேருரையைச ‘ சிவஞானபோத மாபாடியம் ’ எனக் கூறுவர்.

மேலும் சித்தாந்த சைவர்க்குச் சிறந்த கொள்கையாக மேற்கொள்வது முப்பத்தாறு மெய்கள். மெய் எனினும் தத்துவம் எனினும் ஒக்கும். இவ்வுண்மை:

“ ஆகின்ற தொண்ணூற்றோ டாறும் பொதுஎன்பர்
ஆகின்ற **ஆறு றநுஞ்சைவர் தத்துவம்**
ஆகின்ற நாலேழ்வே தாந்தி வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே.”

—௧0. திருமூலர், அ. ௭. மந்திர—௧௬.

என்று திருமூல நாயனார் அருளிய தமிழாகமத்தின்கண் காணலாம்.

மங்கலவாழ்த்துத் திருப்பாட்டில் அடிதோறும் உயிர்மெய் எழுத்துக்கள் அவ்வாறாக இருபத்துநான்கு எழுத்துக்கள் காணப்படுகின்றன. இவை, உடல்மெய் (ஆன்மதத்துவம்) இருபத்துநான்கினையும் குறிக்கின்றன.

ஒற்றெழுத்துக்களை எண்ணினால் இரண்டு, ஒன்று, இரண்டு, இரண்டு ஆக எழு ஒற்றுக்கள் காணப்படுகின்றன. இவை, உணர்வுமெய் (வித்தியாதத்துவம்) ஏழினையும் குறிப்பன. இத்திருப்பாட்டைப் புணர்வு பிரித்தலால், **ல், ர், ள், ர், ர்,** என வேறு ஐந்து ஒற்றுக்கள் காணப்படும். இவை, உணர்ந்து மெய் (சிவதத்துவம்) ஐந்தையும் குறிப்பன.

நாலா றுயிர்மெய்யு நாட்டு முடல்மெய்யாம்
மேலாமேழ் ஒற்றுணர்வு மெய்குறிக்கும்—நூலால்
புணர்வு பிரிக்கப் புலனுமொற் றைந்தும்
உணர்த்துசிவ மெய்யாம் உணர்.

இவ் வெண்பாவினால் இவற்றை நினைவு கூர்க.

இங்ஙனம் எண்ணினால் பொருளியல்பு கூறுதல் ஆசிரியர் சேக்கிழார் அடிகள் அருளிய திருத்தொண்டர் புராண முதற்றிருப்பாட்டில், உயிர், உயிர்மெய், ஒற்றெழுத்துக்களை எண்ணின் அறுபத்துமூன்றாகின்றன. அது அத்திரு வரலாற்றில் காணப்படும் தனியடியார் அறுபத்துமூவர் என்பதைக் குறிப்பதாகும். உடல்மெய் (ஆன்மதத்துவம்) இருபத்து நான்கு; பூதம் ஐந்து, பூதமுதல் ஐந்து, அறிபொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து, அகப்புறக்கலன் (அந்தக்கரணம) நான்கு, என்ப. பூதம் ஐந்து- நிலன், நீர், தீ, வளி, வெளி. பூதமுதல் (தன் மாத்திரை) ஐந்து - நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை. அறிபொறி ஐந்து - மெய், வாய், கண், மூக்கு, செவி. தொழிற்பொறி ஐந்து - வாய், கால், கை, எருவாய், கருவாய். அகப்புறக்கலன் நான்கு - மனம், அறிவு, மூனைப்பு, குணம். உணர்வு மெய் (வித்தியாதத்துவம்) ஏழு - காலம், ஊழ், கலை, நினைப்பு, விருப்பு, ஆள், மாயை. உணர்த்துமெய் (சிவதத்துவம்) ஐந்து - அத்தன், அன்னை,

அருள்நிலை, தலைமை, தூய நினைவு. (சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை)

மலைவு இல்லார், மலைவு இல்லையாகச் செய்தவர். இது பண்படியிற் பிறந்த வினைப்பெயர். இங்கே பண்பு என்பது இன்மை என்னும் சொல்லைக் குறிக்கும். இல்லையாகச் செய்தல் வினை. அது செய்தவர் என வரும்பொழுது வினைப்பெயராகும்.

சிவபெருமான், மயக்கமுற்றுத் தன்பால் அடைந்தவர்க்கு மயக்கம் நீக்கியருளினன். அப்பொழுது கொண்ட திருவுருவம் ஆலமர நீழலமர்ந் தருளிய ஆசிரிய அருட்கோலம். அடைந்தவர் நால்வர் என்பர். நால்வர் என்பது நான்கு வகையினர். அந்நான்கு வகையும் அறம், பொருள், இன்பம், வீடென்பர்.

மயக்கம் நீக்குதலென்பது முப்பொருளுண்மை கைவிரலால் தேற்றிச் சிவஞானம் விளங்கச் செய்தல். கைவிரல் ஐந்தில், பெருவிரல் இறையை யும், சுட்டுவிரல் உயிர்களையும், நடுவிரல் ஆணவத்தையும், அணிவிரல் மாயையையும், சுண்டுவிரல் கன்மத்தையும் குறிக்கும். பெருவிரலும் சுட்டுவிரலும் இணைந்து ஒன்றாய்ப் பிரிப்பின்றி நிற்கும் தூயபுணர்ப்பு (அத்துவிதம்) நிலை ஆண்டான் அடிமைத்திறத்தில் வழுவாது பேரின்பம் துய்க்கும் பெருவாழ்வு நிலையைக் குறிக்கும். ஏணடுக் குறிக்கும் ஆணவம், மாயை, கான்மியம் என்பன மும்மல காரியங்களாகும்.

> முன்னோன் பெருவிரலாம் சுட்டுயிர்நள் ஆணவமாம்
> பின்னணிமா யைவினை சுண்டு.

சுட்டு - சுட்டுவிரல். நள் நடுவிரல். அணி - அணிவிரல். சுண்டு - சிறு விரல்.

மலைவு இல்லையாகச் செய்தவர் என்னும் உண்மையை ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பாட்டால் உணர்க

> "நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
> மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
> ஆலடைந்த நீழல்மேவி யருமறை சொன்னதென்னே
> சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர மேயவனே."
>
> —க. சஅ. க.

அருளிய என்பது 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இதன் பொருள் அருளுதற்பொருட்டு அல்லது அருளுவதற்காக என்பதே. **அருளிய** என்பதற்கு வினைமுதல் (கருத்தா) சிவபெருமான். அவருடைய வினையைக்கொண்டு முடியாமல் **புனைவர்** என்னும் பிறவினை முதல்வினை கொண்டு முடிந்தது.

ஆளுடைய அரசு அருளிய திருப்பாட்டில் "உண்ணிய புகில்"

> "விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
> **உண்ணிய புகில**வை யொன்று மில்லையாம்
> பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
> நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே."
>
> —ச. கக-ரு.

என வரும் வினையெச்சத்தை யொக்கும். அவ்வாறு இல்லாமல் அருளிய பொல்லார் எனப் பெயரெச்சமாகவும் கொள்ளலாம். அப்படிக் கொண்டால்

சிவபெருமான் அருளிய பொல்லார் என முடியும். அப்பொழுது சிவ பெருமானால் பெற்றெடுக்கப்பட்ட பொல்லாப் பிள்ளையார் என முடியும்.

* 'பொல்லார்' என்னும் சொல் இயற்கையில் பொள்ளார் என்பதாம். அதற்கு உளிகொண்டு செய்யப்படாதவர் என்பது பொருள். எனவே தான்தோன்றி என்பதாம். தான்தோன்றி என்பதும் சுயம்புமூர்த்தி என்பதும் ஒன்று.

நல்லார் என்பது கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து முதிர்ந்தோர். இது திருவள்ளுவநாயனார் ஓதியருளிய,

" அறனறிந்து மூத்த அறிவுடையோர் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல் "—திருக்குறள், சசக.

என்னும் திருப்பாட்டின் பொருளதாகும்.

---

* பொல்லார், பொல்லார்க்குப் பொல்லானாய் விளங்கும் புண்ணியன்.

## உ. அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

இஃது அவையடக்கங் கூறுமுகத்தானே ஈண்டெடுத்துக் கொண்ட சித்தாந்தசைவத்தினுயர்வும் ஏனைச்சமயத்தார்கள திழிபுங் கூறுகின்றது.

(இ - ள்.) தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார் - உடைப் பொருளாகிய தம்மியல்பினை உணர்ந்து தம்மை யுடையானாகிய தலைவனையுணருஞ் சித்தாந்த சைவர்; எம்மை உடைமை எமை இகழார் - தமக்குடைப் பொருளாகிய எம்மை யுடையராகலின் எம்மைக் குற்றங்க ணீக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவதன்றி இகழ்தல் செய்யார்; ஆகலான் எம்மாற் செய்யப்படுநூலையும் அவ்வாறு கைக்கொள்வர்; தம்மை உணரார் உணரார் - அங்ஙனந் தம்மை யுணராதார் தம்மையுடையானாகிய தலைவனையு முணரார் ஆகலான்; உடங்கு இயைந்து தம்மின் புணராமை - அவர் ஒருங்கே குழீஇக்கொண்டு தம்மிற்றாமே சேராது முரணுதலால்; புறன் கேளாம் - அவர் எம்மையும் எம்மாற் செய்யப்படுநூலையும் இகழ்ந்துரைக்கும் புறமொழியை யாம் பொருளாகக் கொள்ளாம் (எ - று).

ஆகலான் எம்மாற்செய்யப்படுநூலையும் அவ்வாறு கைக்கொள்வரென்பது குறிப்பெச்சம்.

தன்னையென்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

உடைமை புணராமை என்புழி இன்னுருபு விரித்துரைக்க

தம்மையுணராரெனப் பொதுப்படக் கூறுதலானே, தாமொருபொருளுண்டென்பதே உணராத உலோகாயதரும், தம்மைக் குணிப்பொருளென்றுணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு உடைப்பொருளென்றுணராத ஏனைச்சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவித சைவரும், தம்மை உடைப்பொருளெனக்கொள்ளினும், அவருட் பாஞ்சராத்திரிகள் உடைப்பொருளாகிய தமக்கு அணுபரிமாணங் கோடலானும், உடையானுக்குப்பரிணாமங்கூறு

தலானும், உடையானல்லாதானை உடையானென மயங்கிக் கோடலானும், சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணாமங்கூறுதலானும், பிறவாற்றானும், அவருந் தம்மை உணராரேயென்பது.

புறன் புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்குமொழியும் புறங் கூற்றுமொழியுமென்பது இரட்டுறமொழிதலென்னு முத்தியாற் கொள்க. புறங்கூற்றுமொழியாவது முக்கூற்றுப் புறச்சமயங் களின் வேறான பாடாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்து கூறுமொழியென்க.

## விளக்கம்

**(பொழிப்புரை)** உயிர்கள் சிறப்பு முறையில் தம் உண்மை நிலையை உணரவேண்டும். அது, தாம் கட்டு வீடு என்னும் இரண்டிடத்தும் சிவ னுக்கு அடிமையே என்னும் மெய்யுணர்வு அம்மெய்யுணர்வு வாயிலா கத் தம்மை அடிமையாகக்கொண்டு அழிவில் பேரின்பம் அளித்தருளும் ஆண்டவன் திருஅருள் நிலையை உணர்தல் வேண்டும். அப்படியுணரும் அன்பர் மெய்யடியாராவர். அவர்கள் எம்மையும் ஆண்டவன் தொடர்பால் தம் வரிசையில் சேர்த்துப் பேணுவர். தம்மை ஒரு பொருளாக வுணராத ஏனைய கொள்கையாளர்கள் எம்மை வேறுபடுத்தி இகழ்வர். அவர்கள் தங்களுக்குள்ளேயும் ஒருவர் மற்றொருவரை இகழ்வர். ஆதலால் அவர்கள் புறங்கூறறு மொழியைப் பொருளாக யாம் மதிப்பதில்லை. மெய்யடியார் கள் எம்மைத் தங்களினத்தோடு சேர்த்துக்கொண்டமையால் எம்மை யிகழார். எம்நூலையும் போற்றுவர்.

உயிர்கள் காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுளை யுணர்த லும், அவரே நம்மை உடல் உலகுடன் கூட்டுவதாகிய படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்து வினைப்பயனைத் துய்ப்பித்துத் தம் திருவடியில் சேர்க்கின்றார் என்னும் உண்மையை உணர்தலும் உயிர்கள் உணரும் பொது முறை. இது, கல்லூரியையும் அக் கல்லூரியில் கற்பிக்கும் ஆசானையும் கற்போன் ஆசான்வழி உணர்தல் போன்றாகும். இது பொது உணர்ச்சி. சிறப்புணர்ச்சியில் ஆசான் கற்போனை மாணாக்களுகப் பதிந்து கற்பிக்குங்கால் கற்போன் தன்னை மாணவனென்றும், தன் ஆசானை சிறந்த முறையில் உரிமை ஆசான் என்றும் உணர்வதாகும். இப்படியே உயிர்களும, கடவுளிடம் தம்மை அடிமையாக ஒப்புவிக்கு முன் உணரும் உணர்ச்சி பொது. அதுவே கடவுளால் தம்மை யுணர்தல். அடிமையாக ஒப்புவித்தபின் தம்மால் கடவுளை உணர்தல். இதுவே சிறப் புணர்ச்சி. இவ் அவையடக்கத்தில் தம்மை அடிமையாக வுணரும் சிறப் புணர்ச்சியே கூறப்பட்டுள்ளது.

மேலும், பெண்கள் அறியாப் பருவத்துத் தந்தை தாயர் வழித் தம்மை உணர்கின்றார்கள். அறிந்த பருவத்துத் தம்வழிக் கணவனை உணர்கின் றார்கள். இவ்விரண்டும் முறையே பொதுவும் சிறப்பும் ஆகலாம். இவ் வுண்மை பெண்களுக்கு மணத்தின் முன் தந்தை பெயரின் தலை எழுத்தே அவர்கள் பெயரின் தலை எழுத்தாகச் சேர்த்து வழங்கிவருதலாலும், மணத்

தின்பின் கணவன் பெயரின் தலை எழுத்தே தலை எழுத்தாகச் சேர்த்து வழங்கி வருதலாலும் காணலாம். எடுத்துக்காட்டாகச் சிவன் பிள்ளையின் மகள் மங்கையர்க்கரசி என்றால் சி. மங்கையர்க்கரசி யென்று வழங்கு வோம். அவளே முருகனை மணந்தால், மு. மங்கையர்க்கரசி யென்று வழங்குவோமல்லவா?

> செல்வவுல கூட்டுங்கால் செம்பொருளும் தந்தையாம்
> நல்ல திருவடியில் நாட்டுங்கால்—வல்ல சிவன்
> காதலனும் இவ்விரண்டும் கண்ணு பொதுச்சிறப்பாம்
> ஓதுபெயர் முன்னெழுத்தால் ஓர்.

குறிப்பெச்சம் என்பது செய்யுளில் விளக்குஞ் சொல் இல்லை. ஆனாலும், செய்யுள் செய்யும் புலவன் தன் உள்ளத்தில் குறித்தவற்றை உய்த்துணர்ந்து கூறுவதற்கு இடனாயிருப்பது.

இத் திருப்பாட்டில் "ஆகலான் எம்மாற் செய்யப்படு நூலையும் அவ் வாறு கைக்கொள்வர் என்பது குறிப்பெச்சம்." இக் குறிப்பு, 'எம்மை யுடைமை எமை யிகழார்' என்னும் தொடரால் பெறப்படும். ஒருவரை இகழாதவர், அவர் செய்த நூலை இகழ்வரோ? இகழார். அதனை அறிந் துரைக்கும் துணைக்கருவி குறிப்பெச்ச மென்க.

## சித்தாந்த சைவத்திற்கு உயர்வு

உலகில் காணப்படும் பல்வேறு நெறிகளும் ஆண்டவன் அருளால் ஆன்றோர்களால் அமையப்பெற்றன. மக்களுடைய அறிவு வளர்ச்சி பற்றி அவைகள் படிமுறைபோல் அமைந்துள்ளன. சித்தாந்த சைவம் படியெல் லாம் கடந்து மாடி ஏறி அமரும் இருக்கையை ஒத்தது. படியில் அமர்ந் திருப்பார் தத்தம் படிகளே உயர்வு எனக் கூறுவர். அப்படிக் கூறுவது குற்றமாகாது. மற்றுமுள்ள படிகளை இழித்துக் கூறுவதுதான் குற்றம். ஆனால், சித்தாந்த சைவர் எவரையும் குறைகூறார். ஏனை நெறியாளர்கள் சித்தாந்த சைவரையும் குறை கூறுவர். சித்தாந்த சைவரைக் குறை கூறும் வகையில் அவர்கள் எல்லாரும் ஒன்றுகூடிக் கொள்வர். ஆனால், தங்களுக்குள் ஒருவரோடொருவர் பொறாமையும் பூசலும் கொண்டு சண்டையிடுவர். ஆகவே அவர்கள் கூறும் புறச்சமயம் பற்றிய இழி மொழிகளை யாம் பொருளாக மதிப்பதில்லை என்பது மெய்கண்ட தேவர் கருத்து. இதுவே சித்தாந்த சைவத்தின் உயர்வு. இவ்வுண்மை, அருள் நந்தி சிவனார் சிவஞான சித்தியாரில் "ஓது சமயங்கள்" எனத் தொடங் கும் திருப்பாட்டில் 'இதுவாகும் அதுவல்ல தெனும் **பிணக்கதின்றி**' என வரும் தொடரால் வலியுறுத்துவது காண்க.

திருவள்ளுவநாயனார்,

> "அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
> குற்றமே கூறி விடும்." —திருக்குறள், ௯௮0.

என அருளியதும் இக் கருத்துப்பற்றியே என்க.

'கேளாம் புறன்' என்பதன்கண் 'புறன்' என்பதை இரட்டுற மொழிந்து முக்கூற்றுப்புறச் சமயத்தாரல்லாத பாடாண வாத முதலிய அகச்சமயத்தார் சித்தாந்த சைவர் நேரில் கூறாது அவர் இல்லாத இடம் பார்த்துக் கூறும் புறங்கூற்றுமொழி எனவும் கொள்க. இது,

திருவள்ளுவநாயனுர் கூறியருளிய,

"கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்." —திருக்குறள், கஅ௪.

என்னும் திருப்பாட்டானும் உணர்க.

தம்மை யுணரார் என்று பொதுப்படக் கூறியிருப்பதைப் பகுத்தால் க. உலகாயதர், உ. புத்தர், ௩. சாங்கியர், ௪. மாயாவாதிகள், ௫. பாஞ்சராத்திரிகள், ௬. சிவாத்துவித சைவர் முதலியோரும் பிறரும் ஆவர்.

பொதுப்படக் கூறுதலென்பது, தம்மியல்பை உணரார் என்ருவது தாம் ஒரு பொருள் உண்டு என்று உணரார் என்ருவது விதந்து கூருமல் தம்மை யுணரார் எனக் கூறுவதாம்.

## க. உலகாயதர்

உலகமும் உடலும் நிலம், நீர், தீ, காற்று என்னும் நான்கு பூதக்கூட்டத்தால் உண்டாயவை. பூதங்கள் கூடியபோது அறிவு விளங்கும். பூதங்கள் பிரிந்தால் அறிவு விளங்காது. இதுவல்லாமல் உயிரும், வினையும், வினைப்பயனும், அவற்றிற்குரிய உலகங்களும் மறுபிறப்பும், கடவுளும் இவை போல்வன பிறவும் உண்டு என்பது பொய். கண்ணுக்குத் தெரியாத வானம் உண்டென்பதும் பொய் என்பர்.

## உ. புத்தர்

புத்தர் உலகம் இயற்கை. உயிர்களெனக் கடவுள் என வேறில்லை. உடலின்கண் அறிவு விளங்கும். அது ஆற்று வெள்ளம் தொடர்ந்து வருவதுபோல் அறிவும் முன்தோன்றிய அறிவு மறைய அதன் சார்பில் புத்தறிவு தோன்றும் என்பர். வினையும், பயனும், பிறப்பும் ஒப்புக் கொள்வர். எனினும் அறிவு ஒடுக்கமே வீடு என்பர்.

## ௩. சாங்கியர்

கடவுள் உண்டென்பது பொய் என்பர். உயிர் உண்டு என்று ஒப்புக் கொள்வர். கொள்ளினும், உயிருக்குச் செயலில்லை என்பர். உயிரின் முன்னிலையில் இருபத்துநான்காம் தத்துவமாகிய மூலப்பகுதியில் தோன்றும் புத்தியே செயல்படும். இவ்வுண்மை உணர்வதே வீடு என்பர்.

## ௪. மாயாவாதிகள்

கடவுள் ஒன்றே உள்ளது. உலகமும் உயிரும் உண்டென்பது பொய். அது கனவிற் காண்பது நனவிற் பொய்யாவதுபோல் பொய்யாம். இவ்வுண்மை தெரிவதே வீடு என்பர்.

## ௫. பாஞ்சராத்திரிகள்

தத்துவம் இருபத்துநான்கு. இருபத்துநான்காவதன் பெயர் குண தத்துவம் என்பது. இருபத்தைந்தாவது தத்துவம் வாசுதேவன். அவனே முழுமுதல். அவனிடத்தினின்றும் உலகைப் படைத்தற் பொருட்டு நால்வர் தோன்றினர். அந்நால்வரும் கண்ணன், அநிருத்தன், மகரத்துவசன், இரௌகிணேயன் என அழைக்கப்படுவர். இவர்களால் எல்லா உலகமும் படைக்கப்பட்டன. எல்லா உலகமும் என்பது அறி

வில்லதும் அறிவுள்ளதும் ஆகிய உலகங்கள். அறிவில்லது, கடல், மலை, நிலம் முதலியன. அறிவுள்ளது மரம், செடி, கொடி முதலாக மக்கள் ஈறாகவுள்ள உயிர்கள். இப்படிப்பட்ட இருவகையான உலகங்களெல்லாம் வாசுதேவனுடைய மாறுதலே என்பர். மாறுதல் என்பது மண் குடம் ஆவதுபோல் காரணம் காரியம் ஆவது. மாறுதலைப் பரிணமம் என்பர்.

## ௬. சிவாத்துவித சைவர்

இவர்கள் உலகிற்குப் பொருட்டுக் காரண (நிமித்த காரணம்)மாகிய முதல்வனுடைய அறிவாற்றல்களின் வேறுபாடே உலகம் என்பர். வேறு பாடு பரிணமம். அறிவில்லாத உலகம் அறிவில்லாத மாயையிலிருந்து உண்டாவதே பொருத்தம், அறிவில்லாத குடம் அறிவில்லாத மண்ணி லிருந்து உண்டாவது போல. அறிவுடைய குயவன் வினைமுதற் காரணமா யிருப்பது போல அறிவுடைய கடவுளும் வினைமுதற் காரணமாயிருப்பர். வினைமுதற் காரணம் என்றாலும், பொருட்டுக் காரணம் என்றாலும், நிமித்த காரணம் என்றாலும் ஒன்றே. சிவாத்துவித சைவா கூறும் வேறு பாடு குணகுணி வேறுபாட்டை யொத்தது.

'**தன்**' உணர்வார் என்றவிடத்துத் தன் என்பது தலைவன். இரண் டாம் வேற்றுமை உருபாகிய ஐ என்பது விரித்துத் தலைவனை என உரை செய்யப்பட்டுள்ளது.

எம்மை உடைமை என்பது எம்மை உடைமைப் பொருளாகக் கொண்டிருத்தலின் என வருகிறது. அதனால், ஏதுப்பொருள் தருகிற இன்உருபு விரித்துரைக்கப்பட்டது. இதுபோலவே தம்முட் புணராமை என்ற இடத்தும், தங்களுக்குள்ளே ஒற்றுமையில்லாமல் முரணுதலால் என்று பொருள்படுவதால் ஏதுப்பொருள் தரும் இன்உருபு விரித்துரைக் கப்பட்டது. முரணுதல் - வேற்றுமைப்பட்டுச் சண்டையிடுதல்.

---

உ

திருச்சிற்றம்பலம்

# பொதுவியல்பு

## பிரமாணவியல்

### முதற்சூத்திரம்

ஈண்டு ஆசிரியர், முதனூலிற் கூறியவாறே சிவாகமங்களி னோதப்படும் ஞானபாதப்பொருளெல்லாவற்றையும் பொது உண்மையென்று இரண்டாகத்தொகுத்து, பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியலென நால்வகைப்படுத்து, பிரமாணவியல் மூன்றுபாதத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் உலகிற்கு முதற்கடவுள் சிறப்புவகையானுண்டென்னும் ஆகமப்பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப் பிரமாணங் கூறுகின்றார்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்
தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்
அந்த மாதி யென் மனார் புலவர்.

எ - து. சூ - ம். எ - னின். சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதனுதலிற்று

இது சூத்திரக்கருத்துரைக்கின்றது.

(இ - ள்.) நிவிர்த்திகலை முதலிய பஞ்சகலைகளுட்பட்ட ஐவகைச்சங்காரத்துள் இறுதிக்கண்ணதாகிய மாசங்காரத்தைச் செய்யும் வினைமுதலாயுள்ள முதல்வனையே தனக்கு முதற்கடவுளாக வுடைத்து அவனவளது வென்று இவ்வாறு சுட்டியுணரப் படுவதாய உலகம் என வேதாகமங்களுட் கூறப்படுவதனை அநுமானவளவையாலுணர்த்துதலைக் கருதிற்று இச்சூத்திரம் (எ - று).

ஏகாரம், இயைபின்மை நீக்குதற்கும், பிறிதினியைபு நீக்குதற்கும் பொதுவாய்நின்ற பிரிநிலை.

இதன்பொழிப்பு உரைத்துக்கோள்க.

இஃது இவ்வுரைமுகத்துக் கேட்போரால் உரைவகைபற்றிச் செய்துகோடற்பாலதொன்றனை அறிவுறுத்துகின்றது.

(இ - ள்.) இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க் கண்ணழித்துரைக்கும் பொழிப்புரை பற்றி உரைத்துக் கொள்க (எ - று).

எனவே, இங்ஙனம் இருவகைப்படும் பொழிப்புரையுட் கண்ணழித்துக் கடாவிடைகளானுரைக்கும் வார்த்திகமாய பொழிப்புரைமாத்திரையே யாமீண்டுரைக்கின்றாம்; பிண்டமாகக் கொண்டுரைப்பதாய பொழிப்புரை இதுபற்றி யுணர்ந்து கோடல் எளிதாகலின், அஃதியாமுரைக்கின்றிலம் என உரை முகத்து மாணுக்கர்க்கு அறிவுறுத்தவாறாயிற்று.

இஃது, ஏனைச்சூத்திரங்களினும் உய்த்துக்கொண்டுணர்தற் பொருட்டு, முதற்கண் வைக்கப்பட்டது.

இவ்வாறு ஆசிரியர் ஆணை தந்தமையின், கண்ணழித்துரை பற்றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும். அவன் அவள் அது எனும அவை....புலவர் - அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டியுணரப்படுஞ் சொல்லும்பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி, தோற்றம் நிலை இறுதியென்னும் முத்தொழி லுடைமையால், ஒருவனாற் றோற்றப்பட்டதாய உள்பொருளே யாம். அது, தோன்றுங்கால், காணுடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும், சகசமல நீங்காமையால், அது நீங்கு தற்பொருட்டு மீளத் தோன்றுவதாம். இவ்வாறாகலின், சங்காரத் தொழிலைச்செய்யுங் கடவுளே உலகிற்கு முதற்கடவுள்; ஏனையோர் அன்னரல்லர் எனக் கூறுவர் அளவைநூலுணர்ந் தோர் (எ - று).

அவை தொகுதி; சுட்டுப்பெயரெனக்கொள்ளின், உள வெனப் பிரித்துப், பயனிலையாக்கித், தாமென்பதனை அசைநிலை யாக வைத்துரைத்து, ஆக்கச்சொல் வருவித்துக்கொள்க.

வினைமை வினையுடைமை.

தோன்றியவென்றது தோற்றியவெனப் பிறவினைவாய் பாட்டானேதலின், அதற்குரிய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. தோற்றியவென்னும் பெயரெச்சந் திதியென்னுஞ் செயப்படுபொருட்பெயர் கொண்டது. திதியா யொருவனாற் றோற்றப்பட்டதென்பார் தோற்றிய திதியென்றார். திதி யென்றது ஈண்டு உள்பொருளென்னுந் துணையாய் நின்றது.

மூவினையுடைமையால் உள்பொருளாதலும், அவ்விரண்டு முடைமையால் நிமித்தகாரணனையுடைத்தாதலுந் துணியப்படு மென்பார், மூவினைமையிற் றோற்றிய திதியென்றார்.

ஏகாரந் தேற்றம். ஒடுங்கியென்பது பெயர். உருபுகள் தொக்குநின்றன.

அந்தத்தைச் செய்யுங் கடவுளை அந்தமென்றது உபசாரம்.

காணப்பட்டவுலகாற் காணப்படாத கடவுட்குண்மைகூற வேண்டுதலின், தோற்றிய திதியேயெனவும், ஒடுங்கியுளதா மெனவும், உலகின்மேல்வைத்துக் கூறினார். கருத்துரையுட் கூறியதும் அது நோக்கி.

இச்சூத்திரத்துள் அவனவளதுவெனு மவை மூவினைமை யின் என்பது ஓரதிகரணம்; தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம் என்பது மூன்றதிகரணத்தை யுள்ளடக்கி நிற்பதோ ரதிகரணம்; அந்தமாதி யென்மனார் புலவர் என்பது ஓரதிகர ணம்; ஆக முக்கூற்றது இச்சூத்திரமென்றுணர்க. இம்மூன்றும் முறையே ஒன்றற்கொன்றேதுவும் பயனுமாய் ஒரு பொருண் மேல் வருதலின், ஒரு சூத்திரத்தாற் கூறினார். தன்னாற் கூறப் படும் பொருளும், அதன்கணையப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபும், இயைபு மென்னும் இவற்றது நிலைக்களம் ஈண்டதிகரண மெனப்படும்.

## விளக்கம்

(**பொழிப்புரை**) *அவன் அவள் அது என்னும் சொல்லும், அச் சொற்களால் பெறப்படும் பொருளும் ஆகிய இருவகை உலகங்களும் தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலுடைமையால், ஒரு முழு முதலால் தோற்றுவிக்கப்பட்ட என்றும் அழியாத உள்பொருள்களேயாம். அவை எல்லாவற்றையும் ஒடுக்கும் முழுமுதற் கடவுளின்கண்ணே ஒடுங்கும். மீளத்தோன்றுங்கால் அக்கடவுளினின்றே தோன்றும். ஆகை யால் உலகிற்கு முதற்கடவுள் பேரொடுக்கத்தைச் செய்யும் முழுமுதலே என்பர் அளவை நூலுணர்ந்தோர்.*

*சூத்திரமும், கருத்துரையும், சூத்திரப்பொருளை வகுத்துக்கூறும் மேற்கோளும், ஏதுவும், எடுத்துக்காட்டும் என்னும் ஐந்தும் ஆசிரியர்* **மெய்கண்ட நாயனாரே** *அருளிச் செய்தனர். இவ் வைந்தனுள், கருத்து ரையும், மேற்கோளும், ஏதுவும் உரைநடையாய் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டு வெண்பாவாக அமைந்துள்ளது. உரைநடையும் உரைச் செய்யுள் எனும்படி கட்டமைந்துள்ளது.*

### ஒடுக்கம்

*ஒடுக்கம் ஐவகைப்படும். ஒடுக்கம் எனினும் சங்காரம் எனினும் ஒக்கும். அவை, நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதி ஆக்கல், அப்பாலாக்கல் (அருளிலழுத்தல்) என்னும் ஐவகைத் திருவருள் ஆற்றல் களால் நிகழ்வன. இவற்றை முறையே நிவிர்த்தி, பிரதிட்டை வித்தை, சாந்தி, சாந்தியதீதை என விளம்புவர்.*

இவ்வைவகைப் பெயர்களும் ஐவகைத் திருவருளாற்றல்களால் தொழில்படும் ஐவகை மெய்கட்கும் (தத்துவம்) கூறப்படும். அம்முறையில் நீக்கற்கலையாகிய நிவிர்த்தி கலையிலடங்கிய உலகுடல்களை ஒடுக்குபவன் அயன். நிலைப்பித்தற் கலையாகிய பிரதிட்டையிலடங்கிய உலகு உடல்களை ஒடுக்குபவன் அரி. நுகர்வித்தற்கலையாகிய வித்தையிலுள்ள உலகுடல்களை ஒடுக்குபவன் அரன். அமைதிக் கலையாகிய சாந்தியிலுள்ள உலகு உடல்களை ஒடுக்குபவன் முடிவிலான். முடிவிலான் எனினும் அநந்தன் எனினும் ஒன்றே. அப்பாற் கலையாகிய சாந்தியதீதையிலுள்ள உலகுடல்களை ஒடுக்குபவன் அருளோன் அருளோன் எனினும் சதாசிவன் எனினும் ஒன்றே.

## தூமாயை ஐவர்

இங்குக் கூறப்பட்ட அயன், அரி, அரன், முடிவிலான், அருளோன் என்னும் ஐவரும் சிவபெருமான் ஆணையினால் ஒடுக்கத் தொழிலைச் செய்பவர். அதுவும் அவ்வவர்கட்கு ஏற்பட்ட எல்லைவரையுமே செய்வர். இவ்வைந்தனுள் பேரொடுக்கத்தைச் செய்யும் அருளோனைத் தூண்டித் தொழிற்படுத்தும் தலைவனாகிய பரமசிவனே முழுமுதற்கடவுள். தூண்டித் தொழிற்படுத்தல், அதிட்டித்தல்.

## தூமாயை மூவர்

இங்குக் கூறப்பட்டுள்ள அயன், அரி, அரன் என்ற மூவரும் கட்டு நீங்கி வீடுபெற்றுத் தூயமாயையில் வீற்றிருக்கும் தூயோராவர். இவர்களே கட்டுற்று முக்குணவயத்தராய் மூலப் பகுதியிலுள்ளோராய், நம் நினைவுக்குப் பெரும்பாலும் தோன்றுகின்ற படைத்தல், காத்தல், துடைத்தலாகிய முத்தொழில்களையும் இறைவன் திருவருளால் நடத்துபவராகிய அயன், அரி, அரன் என்னும் மூவரையும் தூண்டித் தொழிற்படுத்துபவர்.

## மூலப்பகுதி மூவர்

இவ் அயன், அரி, அரன் என்னும் மூவருள் அரன் இருமலம் உடையான். ஏனைய அயன் அரி என்னும் இருவரும் மும்மலம் உடையவர். இவர்களே அன்னமும் பன்றியுமாய் மேலும் கீழும் அறியாது அலுத்திளைத்தவர் என்று திருமுறையில் ஓதப்படுபவராவர். இவர்களே நான்முகனும் மாலும் என நவிலப்படுபவர். இவற்றின் உள்ளுறை யான் எனதென்னும் செருக்கால் இறைவன் திருவடியைக் காண ஒண்ணாதென்பதே.

நான்முகன் யான் என்னும் செருக்குடையவன். இதுவே கல்விச் செருக்கு. கல்விச் செருக்குடையார் அறிவை ஒருமுகப்படுத்தி உடையான் தாளில் வையார். பலமுகப்படுத்திப் பயனின்றிக்கழிவர். பலமுகப்படுத்தலே ஈண்டு நான்முகப்படுத்தல் எனக் கூறப்பட்டுள்ளது. இவ்வுண்மை நான்முகனின் ஆற்றல் நாமகள் என்பதனால் விளங்கும்.

மால் எனதென்னும் செருக்குடையவன். இதுவே செல்வச் செருக்கு. செல்வச் செருக்குடையார் அறிவைக் கீழ்ப்படுத்தி ஆற்றலை மேற்படுத்துவர். தம்பாலுள்ள உடைமைகளில் மிக்க மால் கொள்வர். பொருளைப் பெருக்கிப் புண்ணியஞ் செய்யாக் கீழ்நோக்கமே அவர்கள்பால் காணப்படும். அறிவுடையோர் அவர்களைப் புறக்கணிப்பர். அது விலங்கி

னுள் பன்றியைப் புறக்கணிப்பதோடொக்கும் மால் செல்வச் செருக்குடையான் என்பது அவன்றன் ஆற்றல் திருமகள் என வழங்கும் உண்மையால் விளங்கும்.

திருவள்ளுவ நாயனாரும்,

"யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்" —திருக்குறள், ௩௪௬.

எனச் செந்தமிழ்ப் பொதுமறைக்கண் அருளியதும் காண்க.

## தூண்டிச் செலுத்தும் முறைமை

அயன், அரி, அரன், முடிவிலான், அருளோன் ஐவருள் அருளோனாகிய சதாசிவனைச் சிவபெருமான் நேரே தூண்டிச் செலுத்துவன். அருளோன் முடிவிலானாகிய அனந்ததேவனைத் தூண்டிச் செலுத்துவன். முடிவிலான் அரனாகிய உருத்திரனைத் தூண்டிச் செலுத்துவன். அரன் அரியாகிய விட்டுணுவைத் தூண்டிச் செலுத்துவன். அரி அயனாகிய நான்முகனைத் தூண்டிச் செலுத்துவன். இம்முறைமை ஆட்சிமுறையில் துறைகள் அமைத்து மேல்கீழ்ப் பணியாளர் ஒருவரையொருவர் தூண்டித் தொழிற்படுத்தும் முறைமையோடொக்கும். தூண்டிச் செலுத்துதல், தூண்டித் தொழிற்படுத்தல், நிலைக்களமாகக்கொண்டு செலுத்துதல், வாயிலாகக்கொண்டு செலுத்தல் என்பனவற்றை அதிட்டித்தல் என்ப.

**முதலேயே** என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலை. இது இயைபின்மை நீக்குதற்கும் பிறிதினியைபு நீக்குதற்கும் பொது. இயைபின்மை நீக்குதல் இயைபில்லாதிருந்தும் உள்ளதுபோல் நீக்குதல், பிறிதினியைபு நீக்குதல் ஒருபுடை இயைபை நீக்கி முழுமையை மறைவினை வற்புறுத்தல். இவற்றிற்கு முறையே எடுத்துக்காட்டு செஞ்ஞாயிறு, வெண்டாமரை என்ப.

## "இதன் பொழிப்பு உரைத்துக்கொள்க"

இத்தொடர் ஆசிரியர் மெய்கண்டார் அருளியது. இந்நூலின்கண் மெய்கண்ட நாயனாரால் அருளிச் செய்யப்பட்டுள்ள **மேற்கோள் ஏது எடுத்துக்காட்டு** என்னும் மூன்றும் நூற்பா (சூத்திரம்)வின் உரைவகையே. அதனால், படிக்கின்றவர்கள் அவற்றின் துணைகொண்டு சொற்பொருள் விளங்குதல் எளிது. அங்ஙனம் செய்துகொள்ளுமாறு அறிவுறுத்துகின்றது இத்தொடர்.

## முன்

'முன்னர்க் கண்ணழித்துரைக்கும்' என்பதன்கண் உள்ள முன் என்பது இடம் பற்றியதாகும். இடம் பற்றியதென்பது, பின்னே சொல்லப்போவதைக் குறிக்கும். காலம் பற்றிய **முன்** என்பது முன்னே சொல்லியதைக் குறிக்கும்.

## கண்ணழித்துரை

கண்ணழித்துரை என்பது சூத்திரத்தின் சொற்களைப் பிரித்து ஒவ்வொரு முடிபும் தனித்தனி விளங்கப் பொருள் கூறுவது. இதனானே ஈண்டு அதிகரணம் கண்ணழித்துரை எனப்படும். கண் - கணு (பதம்);

சொல். அழித்தல் - பிரித்தல். வார்த்திகப் பொழிப்பு அகலவுரை. அகலவுரை என்பது, கண்ணழித்துக் கடாவிடைகளான் உரைப்பது. கடா - தடை. பிண்டப்பொழிப்பு - தொகுப்பாகச் சொல்லும் உரை. விரிவாகச் சொல்லும் உரையிலிருந்து தொகுப்பாகச் சொல்லும் உரை எளிதாக உணரலாம். கணு - கரும்பின்கணு.

"அவன் அவள் அது எனும் அவை......உளதாம்."

அவை என்பது இங்குத் தொகுதி. ஒருமை வினைகொண்டு முடியும். அவை உளது ஆம் எனவரும். அவை சுட்டுப்பெயர் எனக்கொள்ளின் பன்மை வினைகொண்டு முடியும். அப்பொழுது அவை + உள + தாம் + ஆம் எனவரும். இவற்றுள் தாம் என்பது அசைநிலை, ஆம் என்பது வருவித்த ஆக்கச் சொல்

முவினை என்று கூறாது மூவினைமையின் என்றமையால் தோற்றம் நிலை இறுதி பள்ளிக்கூடம்போல் எப்பொழுதும் நிகழ்ந்துகொண்டேயிருக்கும். இதைக்குறிக்கவே தொழில் பெயராகக் கூறாது, பண்புப் பெயராகக் கூறியருளினார்.

**தோற்றிய** என்பது பிறவினை வாய்பாடு. இது தன் வினையாயின் தோன்றிய என்றிருக்கும். தோற்றிய என்பதனால் ஒருவனால் தோற்றுவிக்கப்பட்ட என்று பொருளாகும்.

**திதி** என்பது காவல். காவல் என்பது உள்ள பொருளுக்கேயாம். ஆகவே திதி என்பது உள்பொருள் எனக் கொள்ளப்பட்டது.

அந்தம்,—முடிவு. உலகுடல்களுக்கு முடிவினைச் செய்யும் கடவுளை அந்தம் என்றது ஏற்றுரை. ஏற்றுரை என்பது உபசாரம். அது தோழி தன்னைத் தலைவி என்று கூறுவதைப் போன்றது. கடவுள் முடிவில்லாதவன்.

**ஒடுங்கி** என்பது உலகம் ஒடுங்குதற்கு நிலைக்களமாயுள்ள கடவுளைக் குறிக்கின்றது. அதனால் அது பெயர்ச் சொல். அது கடவுளுக்குப் பெயராகின்றது. கால் முதலிய உறுப்புக்கள் வீங்குவதற்கு நிலைக்களமாகவுள்ளவனை வீங்கி என்று தானே சொல்லுவோம். அதைப் போன்றதே இது.

## உண்மை உணர்தல்

காணப்பட்ட உலகால் காணப்படாத கடவுளுக்கு உண்மை கூறல் வேண்டும். அப்படித்தான் திருவள்ளுவநாயனாரும் "ஆதிபகவன் முதற்றே உலகு" என உலகின்மேல் வைத்துக் கூறினார். மெய்கண்டாரும் "தோற்றிய திதியே எனவும், ஒடுங்கி உளதாம்" எனவும் உலகின்மேல் வைத்துக் கூறினார். கூறினாரேனும் உலகிற்கு முதல் கடவுள் எனக் கொள்ளல் வேண்டும். அப்படிக்கொண்டால்தான் கடவுள் எழுவாயாகவும் உலகு செயப்படுபொருளாகவும் வரும். எப்பொழுதும் எழுவாய்க்கே சிறப்பு.

**அதிகரணம்**

ஒரு சூத்திரத்தை எத்துணை கூறிட்டு விளக்கியருளுகின்றனரோ அவற்றிற்கு அதிகரணம் என்று பெயர். இம் முதற் சூத்திரம் மூன்று கூறிட்டு விளக்கப்படுகின்றது. அதனால் மூன்றதிகரணத்தையுடையது இச்சூத்திரம்.

"போற்றுபொருள் ஐயம் பிறன்கோள் துணிபியையபாம்
கூற்றைந் ததிகரணம் கூறு"

**கருத்து:** அனைத்தையும் ஒடுக்கும் அரனே முழுமுதல்.

---

## முதல் அதிகரணம்

ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என்றது.

எ - து. மே - ள். எ - னின். முவினையுடைத்தோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண் நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சத்தை முவினையுடைத்தென்றல் பொருந்தாது என மீமாஞ்சகரும் உலோகாயதருங் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இதன்பொருள் வெளிப்படை.

ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப்பகுப்புடைத்தாயும் பலவேறுவகைத்தாய்ச் சடமாயுஞ் சுட்டியறியப்படுவதாயுமிருத்தலின் இம்மூன்றேதுவானும் பிரபஞ்சந்தோன்றிநின்றழியுமென்பது துணியப்படுமென்பார், உளதாயொருவனொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென உடம்பொடு புணர்த்தோதினார்.

உளதாய்ச்சுட்டப்பட்டவெனவியையும். உளதாகச் சுட்டப்படுதல் முயற்கோடு முதலியனபோலத் திரிபு ஐயங்களானன்றி மெய்யாகச் சுட்டப்படுதல்.

தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.

எ - து. ஏது எ-னின். காட்சியளவைக்கு எய்தாதுரைப்பன வெல்லாம் பிரமாணமாகாவென உலோகாயதர் கூறுங் கடாவை யாசங்கித்துக் காட்சியளவைபற்றியும் மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ - ள்.) உற்பத்தியும் நாசமுங் காணப்பட்ட திதியின் பக்கத்தே காணக் கிடத்தலின் உளதாயொருவனொருத்தியொன் றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என மேற்கொண்டது (எ - று).

பூதாதி யீறும் முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையின்—ஓதாரோ
ஒன்றொன்றின் தோன்றி உளதாய் இறக்கண்டும்
அன்றென்றும் உண்டென்ன ஆய்ந்து.

எ - து. உ - ம். எ-னின். உள்ளதன்பால் அவ்விரண்டுங் கிடத்தல் யாங்ஙனம் என்னுங் கடாவையாசங்கித்து ஏதுவை வலியுறுத்துக ஞுதலிற்று.

(இ - ள்.) பேதாய்-காட்சியளவைகளானும் அறியப்படாத மடவோனே, பூதாதி—பூதமுதற் காரணமாகவுடைய பிரபஞ்சத் திற்கு, திதி ஈறும் முதலும் துணை ஆக ஆகும்—திதி நிகழ்வழி, நாசமும் உற்பத்தியுந் தனக்குத் துணைக்காரணமாகக்கொண்டே நிகழாநிற்கும். அற்றாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் கண்டிலமாலெனின்; ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக் கண்டும்—ஒவ்வொரு கால விசேடத் தில் சாதிபற்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிவதனைக் கண்டு வைத்தும், என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ—என்றாயினும் அதற்குரிய காலம் வருமென்று உலகத்திற்கும் அங்ஙனமாதலுண்டென்று அக்காட்சிபற்றி ஆராய்ந்து சொல்லார்களோ உன்னைப்போலும் மடமையில் லாதோர் (எ - று).

பூதாதி அன்மொழித்தொகை. பூதத்துக்கு மேலுளவாய தத்துவங்கள் உலோகாயதருக்கு உடம்பாடன்மையின், பூதமுத லாய தத்துவங்களெனவுரைத்தல் ஈண்டைக்கேலாமையறிக.

பூதாதிக்கென நான்கனுருபு விரித்துரைக்க; அது பின் னருஞ் சென்றியையும். ஆகுமென்பது முற்றுவினை.

ஈண்டுப் பெற்றிமை என்றது சாதியை.

ஓகாரம் எதிர்மறை.

ஒன்றொன்றின் என்பது "ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே" என்றாற்போல அடுக்குமொழி; அது கால விசேட மாதல் என்றும் அன்றெனப் பின்வருதலாற் பெற்றாம்.

ஒருங்கேயென்பது சொல்லெச்சம்.

ஒன்றொன்றின் தோன்றி உளதாய் இறுதலாவது "* பயில் வித்தெல்லாங்-காரிடமதனிற் காட்டுமங்குரங் கழியும் வேனில்" என்பதனானறிக.

"கண்டும்" உம்மை சிறப்பு.

## விளக்கம்

### உலகம்

உலகம் இருவகைப்படும். அவை காரண உலகம காரிய உலகம் என்ப. காரண உலகம இயற்கை. காரிய உலகம் செயற்கை. காரிய உலகமும் இருவகைப்படும். அவை கடவுளால் காரியப்படுவதும், கடவுட் கலப்போடு கூடிய உயிாகளால் காரியப்படுவதும் என. கடவுளால் காரியப் படுவன கடல், நிலம், காடு, மலை, ஆறு முதலியன. உயிாகளால் காரியப் படுவன உண்டி, உடை, உறையுள், ஊர்தி, ஏர், நாடு, ஊர், பேரூர் பட்டினம் முதலிய பலவாம்.

### இயற்கை

நாம் கடவுளால் காரியப்படும் உலகத்தை இயற்கை என்று சொல்லு கிறோம். உண்மையாகப் பார்த்தால் அதுவும் செயற்கையே. கண்ணுக்குப் புலனாகும் பருப்பொருள் எதுவும் செயற்கையே. அதுபோல் ஏனைய மெய், வாய், மூக்குச், செவி முதலிய பொறிகளுக்குப் புலனாகக்கூடிய நுண்மை பருமைகளாவனவும் செயற்கையே.

கடவுள், உயிர்கள், மலம் மாயை கன்மங்கள் மூன்று ஆக ஐந்தும் இயற்கை. இவை தொன்மையிலேயே உள்ளன. இவற்றுள் கடவுள் எவ்வகைத்திரிபுமின்றி என்றும் ஒரு படித்தாய இருப்பா. உயிர்கள் மும்மலச் சார்பினால் கட்டுற்றும் முழுமுதற்சார்பினால் வீடுற்றும் விளங்கும். மலமாயை கன்மங்கள் ஆற்றல் வெளிப்படாமல் காரண நிலையில் தனித் தனி ஒவ்வொன்றாய் இருக்கும்.

### செயற்கை

காரியநிலையில் மலம் பல்வேறு ஆற்றல்களாய் விரியும். விரிந்து ஒவ் வோருயிரையும் தனித்தனி மறைக்கும். மாயை, அமாயை, தூவாமாயை எனவும், மூலப்பகுதி எனவும் முத்திறப்பட்டு ஊண் உடலாய்; உணர்வுக் கருவியாய், உணர்த்துவதாய் மலம் நீங்கவும் அறிவு விளங்கவும் துணை செய்யும். கன்மம் பிறப்பினைத்தரும் இருவினையாய்ப், பிறப்பினையறுக்கும் இறைபணியாய் மலமறைப்பை அகற்றும்.

மலம் அகலுதல் என்பது விரிந்து உயிர்களைத் தனித்தனி பிணித் துள்ள மலவாற்றல் உயிரினைப் பிரிந்து மலத்தொடுங்கல். இது பகலவன்† பல் கதிர்களால் பகலை விளக்கி அந்திமாலைக்கண் தன்கண் சேர்த்துக்

* சிவஞானசித்தி, சுப. க. 'ஓரிடமழிய.' † கலித்தொகை, கஉக. கூ.

கொள்வதையொக்கும். இவை கடவுட் செயற்கை. மக்கட் செய்ற்கை மனம் நன்மைபாய் மொழியும் செயலும் அதன் வழித்தாய் நலம் புரிந் தொழுகி இன்புற்று வாழ இனநலம் வேண்டும். இனநலம் மக்கட் செயற்கை.

## குறி

இறையைச் **சார்பு** எனவும், உயிரைச் **சார்பி** எனவும், தளையைச் **சார்பல்சார்பு** எனவும் வழங்கலாம். இவற்றை ஓர் ஒப்பில் வைத்துக் காணுங்கால் ஆசான் இறைபாகவும், மாணாக்கர் உயிராகவும், விளையாட்டுத் தளையாகவும் கொள்க. மாணாக்கர்கள் ஆசானைச் சார்ந்து கற்று வாலறி வன் நற்றாள் தொழுது வாழ்வதே கடமையும், உரிமையும், முறைமை யும் ஆகும். விளையாட்டால் வீண்காலம் போக்குவது மடமையாகும். மடமை அகலத்துணைசெய்வது ஆசான் கடமையாகும். இவற்றை விளக் கும் வெண்பாக்கள் வருமாறு:

> சார்பு முழுமுதலாம் சார்பியுயிர் சார்பலாச்
> சார்புமலம் நூல்மாணி சார்ஆடல்—நேருமறை
> "சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
> சார்தரா சார்தரு நோய்."

நூல் - ஈண்டு ஆசான்.

> "சார்பினால் தோன்றாது தான்அருவாய் எப்பொருட்கும்
> சார்பெனநின் றெஞ்ஞான்றும் இன்பந் தகைத்தரோ
> வாய்மொழியான் மெய்யான் மனத்தான் அறிவிறந்த
> தூய்மையதாம் மைதீர் சுடர்."

## உளதாய்ச் சுட்டப்படல்

உலகம் காரண காரியத்தன்மையாகிய இரண்டிடத்தும் உண்மையாய் உள்ளது. காரிய நிலையில் காண்டல் கருதல் உரை என்னும் அளவை மூன்றனுள் காண்டல் அளவைக்குப் புலனும். காரண நிலையில் கருதல் அளவைக்குப் புலனும். கருதலளவை என்றாலும், வழியளவை என்றாலும், அனுமான அளவை என்றாலும் ஒன்றே. மேற்கொள்ளப்படுவது காரிய உலகம் என்பதும் சுட்டப்படுவது என்பதும் குறிக்கச் சூத்திரத்து, ஒருவன் ஒருத்தி ஒன்றென்றுவது வடமொழி மொழிபெயர்ப்பில் கூறியதுபோன்று ஆண் பெண் அலி என்றுவது வினைப்பெயர்ச் சொற்க ளாற் கூறாது "**அவன் அவள் அதுஎனும் அவை**" எனச் சுட்டுச் சொற்க ளாற் கூறியருளினர், நம் மெய்கண்டார். இதனாலேயே தமிழ்ச் சிவஞான போதத்தின் தனிச் சிறப்பும், மொழிபெயர்ப்பன்றென்பதும், முதன்மை யும் நன்கு புலனும். உளதாய்ச் சுட்டப்படுதல், உண்மையாக—மெய்யாகச் சுட்டப்படுதல்.

## திரிபு ஐயங்கள்

கயிற்றை அரவு எனத் துணிந்து கருதுதல் **திரிபு**. பழுதையோ பாம்போ எனத்துணியாது கருதுதல் **ஐயம்**. உலகம் அவ்வாறன்றி மெய்யாகச் சுட்டப்படும் கயிற்றை அரவெனத் திரியக் கோடற்கு மாலைக் காலமும், நடைவழியும், நீண்டு வளைந்து தோன்றும் வடிவமும் வாயில்க ளாகும். ஆனால் அக்கயிற்றை ஆய்ந்து அகலினும் ஆராயாது அணுகினும்

அதனிடத்து அரவின் தொழிற்பாடு காணப்படாது. உலகத்தினிடத்து அவ்வாறன்றித் தொழிற்பாடு நிகழக் காண்கின்றோம். எனவே உலகம் மெய்யாகவுள்ளது.

## மூவினைமை

உலகம் **தோற்றம், நிலை, இறுதி** என்னும் முத்தொழில் உடையது. சுட்டப்பட்ட உலகம் என்று மட்டும் கூறாது, **ஒருவன், ஒருத்தி, ஒன்று** என்று சுட்டப்பட்டவுலகம் என்றது கடவுளால் ஆக்கப்பட்ட உலகத்தைக் குறித்தற்பொருட்டு. நாடு, நகர் முதலிய மாந்தர்களால் ஆக்கப்படும் உலகத்தை அன்று.

## வேறுவேறு பல்வேறுவகை

உறுப்புடைப் பகுப்பு என்பது (அவயவப்பகுப்பு) ஆடையின்கண் நூல் பகுக்கக்கூடிய உறுப்பு. பல்வேறுவகை நெடுக்கும் குறுக்குமாக அமைத்து செய்யப்படுவதற்குரிய வன்மை மென்மைகளான் இயன்ற பல்வேறுவகை. நிறம் பலவாகிய நூல்களும் கொள்ளலாம். உலகும் **அவன் அவள் அது** என்னும் உறுப்புடையதாகத் தோன்றப்படுவது வேறு வேறு. இம்மூன்றும் தனித்தனி அளவிலா எண்ணுகக் காணப்படுவன பல் வேறு வகை.

அறிவுள்ளது பல்வேறுவகையாக இருப்பினும் அழியாது. அறிவில்லது பல்வேறுவகையாகத் தோன்றின் அழிவெய்தும். அழிவென்பது ஒடுக்கம். மண் ஒன்றாக இருக்கிறது. அதனால் அதற்கு அழிவில்லை. அம்மண், பானை, சட்டி, குடம், கலயம் முதலிய பல உருவாகத் தோன்றல் வேறு வேறு. ஒவ்வொன்றும் பலவாதல் பல் வேறு வகை. அவை அறிவில்லா நிலைமையால் உடைந்து அழியும். ஆனால் அவற்றை ஆக்கும் குயவன் குடும்பத்தோடு தனித்தனியும் பல் வேறு வகையும் ஆவன். அவன் இவைபோல் அழிவுறான்.

ஆணவ மலம் ஒன்று. அஃது என்றும் அழியாதது: அறிவில்லது; அதனுடைய ஆற்றல் பல. அதற்கு அழிவுண்டு. காரண மாயை ஒன்று, அறிவில்லது: அழியாதது. காரியமாயை முத்திறப்படும், அழிவுறும். வினை ஒன்று, அறிவில்லது; அழியாதது. வினையாக்கம் நல்வினை தீவினை என இரண்டு. அழிவுடையது.

## காட்சியளவையானும் முத்தொழில்

மீமாஞ்சகர் உலகம் இயற்கை யென்பர். உலகாயதரும் அங்ஙனமே கூறுவர். இவ்விருவரும் கடவுளுண்மை கொள்ளாதார். உலகம் ஒடுங்கும் என்பதற்கு மேற்கொண்ட ஏது மூன்று.

க. பகுக்கப்படும் உறுப்புடையது: அவன், அவள், அது.

உ. பல் வேறு வகை: அறிவில்லது.

௩. மெய்ம்மையாகச் சுட்டப்படுவது: அது கயிற்றை அரவென்றது அரவையே அரவு என்பது.

இங்ஙனம் முத்திறப்படுத்துக்காணுமாறு, "ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட, பிரபஞ்சம்" என உடம்பொடுபுணர்த்து ஓதியருளியதாகும். உடம்பொடு புணர்த்து ஓதிய இடங்களில் சிறந்த குறிப்புப் பொருள் காண்டல் வேண்டும். ஈண்டுக்கூற வேண்டுவது சுட்டப்பட்ட பிரபஞ்சம் என்பதே. ஒருவன், ஒருத்தி, ஒன்று என்பது அடைமொழி. இவையே உடம்பொடு புணர்த்தல். இவற்றால் பெறப்படுவன மேற்குறிக்கப்பட்ட முத்திறப்பாகுபாடு.

இங்ஙனம் விளக்குவது வழியளவையால் ஆகும். வழியளவையால் காட்டவே மீமாஞ்சகா ஒப்புக்கொள்வாராயினர். உலகாயதர் வழியளவை ஒப்புக்கொள்ளாதவர். அவர்கட்குக் காட்சியொன்றே அளவை. அவர்கட்குக் கூறுங்கால் "தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தல்" எனக் கூறல்.

## தோற்றமும் ஈறும் உள்ளதன் பாலே கிடத்தல்

இப்பொழுது உலகைக் காண்கின்றோம். இது நிகழ்காலம். இஃது உள்ளது. இவ்வுலகம் இறந்த காலத்தில் தோன்றியிருக்கும் என்று உய்த்துணர்கின்றோம். இது தோற்றம். இஃது எதிர்காலத்தில் ஈறு எய்தும். இஃது ஒடுக்கம். இவற்றை ஓர் ஒப்பில் வைத்துக் காண்பாம். பள்ளிக்கூடத்தில் மாணவர் படிக்கக் காண்கின்றோம். இது நிகழ்காலம்; உள்ளது(திதி). அம்மாணவர்கள் முன்னரே வந்து கூடினர் என்பது துணிபு. இஃது இறந்த காலம் இது தோற்றத்தை ஒக்கும். மாணவர்கள் வகுப்பின் காலம் முடிந்ததும் வீட்டுக்குச் செல்லுவர். இஃது எதிர்காலம், ஈற்றினை ஒக்கும். மேலும் வயலின் விளைவைக் காண்கின்றோம். விளைவொன்றாலேயே முன்பின் ஆகிய விதைத்தலும் அறுத்தலும் அறிகின்றோம். வழி நடப்பானைக் காணுங்கால் அவன் புறப்பட்ட இடமும், போய்ச் சேரும் இடமும் வேறு வேறு என அறிவோம் அல்லவா? அதுவும் ஒக்கும். உள்ளது - இருப்பு.

ஆயினும் உள்ளதாகிய இறை உயிர் தளைகட்குத் தோற்றமும் ஈறும் கிடையா. என்னை எனின்? சுட்டியுணரப்படுவதாகிய காரிய உலகு (பிரபஞ்சம்)க்கே இவை கூறப்படுகின்றன.

## மீளப்பிறத்தல்

நாடோறும் பள்ளியினின்றும் வீடு செல்லும் மாணவர் மறுநாள் பள்ளிக்கு வருவது போன்றதும், பிறந்தவுயிர் பிறவாப் பெருநெறி எய்தாது மீளப்பிறக்குமாறு வாழ்ந்து மாளுவது. பள்ளிக்கூடம் நெடுவிடு முறையில் மூடப்பெற்றுத் திறப்பதை ஒக்கும், உலக முழுவதும் ஒருங்கு ஒடுங்கி மீளத்தோன்றுவது.

## ஒருங்கழிதல்

உலகத்தில் ஒன்று தோன்ற, ஒன்று நிற்ப, ஒன்று அழியக்காண்கின்றோம். கொள் பெயரன் தோன்றுகின்றான், தந்தையும் பாட்டனும் நிற்கின்றனர், முப்பாட்டன் மறைகின்றான், வீடுகள் புதிதாகக் கட்டப்படுதலும், முன்பே கட்டப்பட்ட வீட்டில் வாழ்தலும், கட்டப்பட்ட பல வீடுகள் வாழ்வாரற்று அழிவுறுவதையும் காண்கின்றோம். புதிய மாணவர்

சேருகின்றனர். பழைய மாணவர் பயில்கின்றனர். தேறிய மாணவர் செல்கின்றனர். இவற்றை யொத்தே உலகமும் ஓரிடம் அழிய, ஓரிடம் நிற்க, ஓரிடம் தோன்றும். அப்படிப்போன்றே உலகம் ஒருங்கு தோன்றி ஒருங்கு நின்று ஒருங்கு அழியும் என்பது எப்படி என்பார்க்கு எடுத்துக்காட்டும் காட்டு.

ஓரினப் பயிர்களும் சிற்றுயிர்களும் ஒருகாலச் சிறப்பில் தோன்றி நின்று அழிவதைக் காண்கின்றோம் அல்லவா? அதனாலன்றோ 'பருவத்தே பயிர்செய்' என்னும் முதுரையும் தோன்றிற்று. வழக்கத்திலும் மாம் பழக்காலம் கொய்யாப்பழக்காலம் எனக் கால வேறுபாடு கூறுவர்.

திருவள்ளுவப் பெருந்தகையாரும் :

> " எய்தற்கு கரியது இயைந்தக்கால் அந்நிலையே
> செய்தற்கு அரிய செயல் " —திருக்குறள், ௪௮௯

என ஓதி அருளினர்.

பயிர்கள் நெல், புல், கொள்ளு, உழுந்து, கேழ்வரகு முதலியன. சிற்றுயிர்கள் ஈசல் (முதாய்) பட்டுப்பூச்சி முதலாயின.

> " ஓரிடம் அழியப் பின்னும் ஓரிடம் நிற்கும் ஒக்கப்
> பாரிடம் அழிவ தின்றாம் என்றிடிற் பயில்வித் தெல்லாம்
> காரிடம் அதனிற் காட்டும் அங்குரங் கழியும் வேனில்
> சீருடைத் துலகு காலஞ் சேர்ந்திடப் பெயர்ந்து செல்லும் "
> —சிவஞான சித்தியார், ௧—௯.

என்னும் சித்தியார் திருப்பாட்டும் மேலதனை வலியுறுத்தும்.

**பூதாதி** - அன்மொழித்தொகை. இது, பூதத்தை முதற்காரணமாக வுடைய **உலகம்** என்று பொருள்படும். பூதாதி - பூதமுதலாய மெய்கள் எனப்பொருள்கொள்ளலாம். ஆனால் உலகாயதர் பூதத்துக்குமேலுள்ள மெய்களை ஒப்புக்கொள்ளார். அதனால் அது பொருந்தாது.

**ஆதும்** - நிதிஆகும் என்பதன்கண் உள்ள **ஆதும்** என்பது வினைமுற்று. ஆகும் - நிகழும். ஓதாரோ - ஓ எதிர்மறை; ஓதுவார் என்பது பொருள்.

**ஒன்றென்றின்** என்பது அடுக்குமொழி. ஒவ்வொன்று என்பது பொருள். இஃது, இந்நூல் பதினோராம் சூத்திரத்தில், ௧. அதிகரணம். எடுத்துக்காட்டு வெண்பாவில் " ஒன்றொன்ற " என்று வருவதோ டொக்கும்.

" ஒன்று ஒன்றின பெற்றிமையின் " என்ற இடத்து ஒவ்வொரு காலச்சிறப்பில் **ஒருங்கு** என்று கொள்வதால், ஒருங்கு என்பது " சொல்லெச்சம் ". சொல்லெச்சம் என்பது ஒருசொல் எஞ்சி நிற்பது. " இறக்கண்டும் " இதில் உள்ள உம்மை, சிறப்பு.

## இரண்டாம் அதிகரணம்

இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லையென்றது என இங்ஙனஞ் சொற் பல்காமைப் பொருட்டுத் துணிந்ததாக வைத்துரைத்தாராயினும், பொருளியையிற்கேற்ப இதனை மூன்றதிகரணமாக வைத்துரைப்பது ஆசிரியர் கருத்தெனக் கொள்க; அஃதாமாறு காட்டுதும் :—

*இனி உலகமுள்ளது என்றது*

எ-து மே-ள். எ-னின், உலகம் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றியழிதல் இயல்பென்றலே அமைவுடைமையின், அது மூவினையுடைத்தாயினும் தோற்றுவானொருவனை உடைத்தாதல் செல்லாது எனப் புத்த நூலார் சொல்லுங் கடாவையாசங்கித்துத் திதியென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ-ள். வெ-டை.

*இல்லதற்குத் தோற்றமின்மையின்*

எ-து. ஏது எ-னின். உள்ளதாதல் யாங்ஙனம் என்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்காலத்தும் உற்பத்தியின்மையின் ஈண்டுற்பத்தி காணப்படுதலான் உலகமுள்ளது என மேற்கொண்டது (எ-று).

*இனி உலகஞ் செய்வோனையுடைத்து என்றது*

எ-து மே-ள். எ-னின். உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சம் தத்தமுதற்காரணத்தினின்றுந் தானே தோன்றியழியும். இதற்கொரு நிமித்தகாரணமாய் ஒருகருத்தா வேண்டாம் எனச் சாங்கியர் கூறுங் கடாவை யாசங்கித்துத் தோற்றியவென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ-ள். வெ-டை.

*உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்*

எ-து. ஏது எ-னின். அதற்குப்பிரமாணமென்னை என்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) மண் முதலியவற்றினுள்ளதாகிய கடமுதலிய பொருட்குக் குயவன் முதலிய செய்வோரையின்றி வனைதல் முதலிய செய்தொழில் நிகழாமையின், உலகம் இவ்வியல்பிற்றாகலான் இனி யிவ்வுலகஞ் செய்வோனையுடைத்து என மேற்கொண்டது (எ-று).

இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லையென்றது

எ-து. மே-ள். எ-னின். இத்துணையுங் கூறியவாற்ருன் உலகத்தைத் தோற்றுவிப்பான் உண்டெனப்பட்ட கருத்தா, திதிகருத்தா சிருட்டிகருத்தா முதலியோரில் ஒருவனேயாதலையும் எனப் பாஞ்சராத்திரி முதலியோர் கூறுங் கடாவையாசங்கித்து ஒடுங்கியுளதாமென்னுஞ் சூத்திரக் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ-ள்.) உலகந்தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்கார கருத்தாவினின்றன்றி உளதாகாது (எ-று).

ஒடுங்கினவென்னும் பெயரெச்சஞ் சங்காரமென்னும் இடப்பெயரோடு முடிந்தது. சங்காரம் ஆகுபெயர்.

அல்லதில்லை என்று எதிர்மறைமுகத்தாற் கூறியது, ஏனைக் கடவுளரின் உளதாகாமை யாப்புறுத்தற்பொருட்டு.

இதனுள் ஒடுங்கின என்பதனாற் போந்த குறிப்பேதுவைப் புலப்படக்காணுமாறு.

ஆண்டு ஒடுங்குதலின்

எ-து. ஏது எ-னின். அதற்குப் பிரமாணமென்னை என்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) யாது யாண்டொடுங்கும் அஃததனிலுற்பத்தியாம் மண்ணிற்குடம்போலும் என்னும் அவினாபாவத்தாற் பிரபஞ்சஞ் சங்கார காரணன்மாட்டொடுங்குதலின் மீளத் தோன்றுங்கால் ஆண்டு நின்றுந் தோன்றுதலே பொருத்தமுடைமையின் அவ்வாறு மேற்கொண்டது (எ-று).

இவ்வாறு மூன்றதிகரணப் பொருளும் இதன்கட்போந்தவாறும் இவ்வாறுரையாக்காற் பொருளியையுபடாமையும் நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

இலயித்த தன்னில்இல யித்ததாம்ம லத்தால்
இலயித்த வாறுளதுஆ வேண்டும்

எ-து. உ-ம். எ-னின். உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாக வேண்டுவதில்லையாகலாற் சற்காரியவாதம் அடாது எனப் புத்தர் கூறுங்கடாவையாசங்கித்து இல்லதற்குத்தோற்றமின்மையினென்ற ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்.) இலயித்தது இலயித்த தன்னில் ஆம்—உள்ளதாயினுஞ் சங்காரகாலத்தினொடுங்கிய தாகலான் அவ்வொடுங்கிய

உலகம் தானொடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவி னின்றும் படைப்புக் காலத்தின் மீளவுளதாம். அற்றேல் ஒடுங் கியது ஒடுங்கியவாறே யொழியாது மீளவுண்டாகவேண்டாம்; வேண்டுமாயின், முன்னொடுங்காது நிலைபெறவே யமையும்; அவ் வாறன்றி ஒடுங்கி மீளவுளதாவது எற்றுக்கெனின்; மலத்தால் —உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகமாதற்பொருட்டு ஒடுங்கி ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளவுமுண்டாம். அற்றேல் முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக வேறு தோன்று மென்னுமல் அதுவே ஒடுங்கி நின்று மீளவுளதாமென்றற்குப் பிரமாணம் என்னை எனின்; இலயித்தவாறு உளது ஆ வேண்டும் —எஃதெவ்வாறு நின்றொடுங்கிற்று அஃதவ்வொடுங்கியவாறே உளதாதல் எல்லாரானும் விரும்பப்படும் (எ-று).

எனவே அந்நியமமில்லையாயின் நெற்கமுகாய் நீளாது நெல் லாய் நீளுதற்கு ஏதுவென்னையென்னுந் தருக்கமே அதனை யறி வுறுத்து மென்றவாறாயிற்று சற்காரியவாதத்தினியல்பு "தந்து முதல்காரகம்" *என்னும் ஞானாமிர்தத்தினுங்காண்க.

இதனானே, இல்லதும் உள்ளதுமல்லாத பொருடோன்று மென்னுஞ் சூனியவாதிகளும், இல்லதுமுள்ளதுமாய பொருள் தோன்றுமென்னும் அநேகாந்த வாதிகளும் மறுக்கப்பட்ட வாறறிக.

—இலயித்தது

அத்திதியில் என்னின் அழியாது அவையழிவது
அத்திதியும் ஆதியுமாம் அங்கு.

எ-து. உ-ம். எ-னின். இனிச் சற்காரியவாதத்தின் அவ் வக்காரியங்கள் தத்தமுதற்காரணத்தொடுங்கு மெனவே கோட லின் உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவ னுருவாகலான் உலகம் அவன்மாட்டொடுங்குமென்றலே அமை வுடைத்தன்றி முதற்காரணத்தின் வேறாய நிமித்த காரண மெனக்கொண்ட சங்காரகருத்தாவின்மாட் டொடுங்குமென்றல் பொருந்தாதெனப் பாஞ்சராத்திரிகள் கூறுங்கடாவை யாசங் கித்து ஒடுங்கின சங்காரத்தின் எனவும் இலயித்ததன்னில் எனவுங் கூறிப்போந்த குறிப்பேதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) இலயித்தது அத்திதியில் என்னின் —உலகமொடுங் கியது அந்தமூலப்பகுதி வடிவாய திதிகருத்தாவின்கணென்னை யாயின், அவை அழியாது—நீ அங்ஙனங்கொள்ளினும் மூலப் பகுதிக்கு மேலுள்ள புவனங்கள் அதனால் வியாபிக்கப்படாமை

* ஞானாமிர்தம் உஉ

யிற் கீழுள்ள ஏகதேசமாத்திரையே ஆண்டொடுங்குவதன்றி மாயாகாரியத் தொகுதி முழுவதும் ஆண்டொடுங்காது; அற்றேல், (மாயாகாரியத்தொகுதி முழுவதும் யாண்டொடுங்குவ தெனின்) அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது—அந்தத் திதிக் கடவுளும் படைப்புக் கடவுளும் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக்கடவுளிடத்தே அவ்விருவரோடுங்கூட அழிவதாம் அத்தொகுதி (எ-று).

இவ்வெண்பாவினைச் "செய்யுட்க ளோசை சிதையுங்கால் ஈரளபும்-ஐயப்பா டின்றி யமையுமாம் மைதீரொற்று-இன்றியுஞ் செய்யுட் கெடின்ஒற்றை யுண்டாக்கு—குன்றுமேல் ஒற்றளபுங் கொள்" *என்பதுபோல இரண்டதிகரணப் பொருள்படுமாறு இருதொடராக வைத்துரையாக்காற் பொருளியைபு படாமை யறிக.

இலயித்த வென்னும் பெயரெச்சம் தன்னென்னும் இடப்பெயரோடு முடிந்தது.

இலயித்தது என்றது ஏதுப்பொருண்மையுணர நின்றபெயர். இலயித்ததெனச் சற்காரியவாதங் கூறவே இலயித்தவவத்தையின் அவ்வக் காரியசத்தி சூக்குமமாய் நிற்பதொன்றுண்டு. அதுவே முதற்காரணமெனப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையுண்மையும் பெறப்பட்டது.

ஆ வென்பது முதனிலைத்தொழிற்பெயர். வேண்டுமெனச் செயப்படுபொருளைச் செய்ததுபோலக் கூறினார்.

அவை தொகுதி; அஃறிணைப்பன்மைப் பெயரென்பார்க்கு அழியாது அழிவதென்னும் ஒருமைகளோடியையாமையும் உத்தராமாகாமையுமுணர்க.

திதியும் ஆதியும் ஆகுபெயர். ஆமங்கு பெயரெச்ச முடிபு.

இரணிய கருப்பமதத்தையும் மறுத்தற்பொருட்டுப் படைப்புக்கடவுளையும் உடன் கூறினார்.

நிமித்த காரணனாகிய முதல்வன் உலகிற்கு முதற்காரணனல்லனாயினும் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின், உலகம் ஆண்டொடுங்கி ஆண்டுநின்று தோன்றுதல் அமையுமென்பது வருகின்ற வெண்பாவிற் பெறப்படும்.

---

* "நீட்டம் வேண்டின்" தொல். எழுத்து கூ-ஆம் சூத்திரத்து நச்சினார்க்கினியர் உரை மேற்கொள்.

வித்துண்டாம் மூலம் முளைத்தவா தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து.

எ-து. உ-ம். எ-னின். உலகந் தனக்கு முதற்காரணமாகிய மாயையினொடுங்குவதன்றி நிமித்தகாரணன் ஒருவனுண்டெனக்கொள்ளினும் அவன்மாட்டொடுங்குமென்றல் பொருந்தாமையின், யாது யாண்டொடுங்கும் அஃததனினுற்பத்தியாம் என்னும் அவினாபாவத்தான் மாயையினொடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும், இதற்கோரிறைவன் வேண்டா எனச் சாங்கியநூலார் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்னு மேதுவை வலியுறுத்தல் நுதலிற்று

(இ-ள்.) மண்போல் குளிர்ந்து வித்து உண்டா மூலம் முளைத்தவா தாரகம் ஆம் அத்தன் தாள் நிற்றல் அவர் வினையால் வித்தகம் ஆம்.—மாயையும் உலகமும் வித்தும் அங்குரமும்போலுமாகலின் வித்துக்கு ஆதாரமாகிய நிலங்குளிர்ந்தவழி அதன்கண் வித்துள்ளதாக அதனினின்றும் அங்குரந்தோன்றியவாறுபோல மேலைவெண்பாவின் இலயித்தது என்பதனாற் பெறப்பட்ட மாயை தனக்காதாரமாய் நின்று தோற்றுவிக்கும இறைவனது சத்தியின்கணுள்ளதாய் நிற்றலால் அச்சத்தி சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கிடாக அவ்வக்காரியங்களை அவ்வவ்வியல்பிற் பிறழாமற் பயக்குஞ் சதுர்ப்பாடுடைத்தாம்: அல்லுழி உடைத்தன்று. நிலங்குளிர்ந்தவழி அதன்கட் கிடந்தன்றி வித்துமுளையைத் தோற்றாதவாறுபோலும்; ஆகலான் மாயையினொடுங்கித் தோன்றிய உலகம் அதற்காதாரமாய் நின்ற இறைவன் சத்தியினொடுங்கித் தோன்றியதேயாம் (எ-று).

ஆகலானென்பது முதல் குறிப்பெச்சம். இது கிழங்கினின் றுந் தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதனாலுமறிக. வழிநூலாசிரியர் *"உயிரவை யொடுங்கிப் பின்னுமுதிப்பதெனரன் பால்." எ-ம். "உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடும்." எ-ம். ஓதியதூஉம், உலகவனுருவிற் றோன்றியொடுங்குமாறு வாதுளாகமத்தில் வகுத்தோதியதூஉம் இவ்வியல்புநோக்கியென்க. இஃதறியாதார் இன்னோரன்னவற்றைத் தத்தமக்கு வேண்டியவாறேயுரைப்ப.

---

*சிவஞானசித்தி, சுபக்கம், முதற்சூத்திரம்.௩. உ. 'உயிரவையொடுங்கிப்'. சஅ. 'உலகினையிறந்து'.

உவமவினை பொருளினும் பொருளடை உவமையினுஞ் சென்றியையும்.

உண்டாகவெனச் சற்காரியத்தை வலியுறுத்துதல், வித்தில் வழிநிலத்தினின்றும் அங்குரந் தோன்றுதவாறுபோல மாயை யில்வழிப் பிரமத்தினின்றும் உலகந் தோன்றுதெனப் பரிணாம வாதிகளையும், மாயை அநிர்வசனமென்னும் மாயாவாதிகளையும், வித்துநிலனும்போ லென்றதனான் மாயைமுதல்வனின் வேறு பொருளன்றென்னுஞ் சிவாத்துவிதசைவர் பாஞ்சராத்திரிகளை யும், மறுத்தவாறாயிற்று.

முதல்வன் பலவேறுவகைப்படச் சங்கற்பித்தவாறென்னை என்னுங்கடாவை யாசங்கித்து, அவர்வினையாலென்றார்.

வித்தகம் விசித்திரமென்றுரைப்பினும் அமையும்.

அற்றேல், தன்மயத்தானன்றி வினைவயத்தாற் றோற்று விப்பான் இறைவனாகானெனின்,

வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் வேண்டுஉருவைத் தான் கொடுத்துக் கூட்டானே—வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்குமாறுபோல இறை வனும் அவரவர் வேண்டுமுருவினைக்கொடுத்து அவ்வினைக்குத் தக்க பயன்களையுங் கூட்டுவன் ஆகலான் அதுகொண்டு சுதந்திரத் திற் கிழுக்கென்னை (எ-று).

ஆகலான் அதுகொண்டு சுதந்திரத்திற் கிழுக்கென்னை யென்பது குறிப்பெச்சம்.

போல் அசை. குளிர்ந்தவழியென்பது குளிர்ந்தெனத் திரிந்து நின்றது.

நிற்றலினென்னும் ஐந்தாவது விகாரத்தாற்றொக்கது. ஏகாரம் எதிர்மறை.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தின்
தாக்காது நின்றுளத்தின் கண்டிறைவன்—ஆக்காதே
கண்ட நனவுணர்வில் கண்ட கனவுணரக்
கண்டவனின் இற்றின்றுங் கட்டு.

எ-து. உ-ம். எ-னின். மேலையுதாரணத்திற் கூறியவாற் றான் உலகிற்கு முதற்கடவுள் உண்டெனக் கொள்ளினும் அவன் படைப்பு முதலியன தொழில் செய்வானாயின் விகாரமெய்தி அதனின் பந்தமுறுவா னென்னுமவர் மதம்பற்றி நிகழுங் கடாவையாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இறைவன்-முதல்வன். காலத்தின் தாக்காதுநின்று —இறப்புநிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத் தொழிலுஞ் செய்துந் தனக்கு விகாரமின்றி நிற்குங் காலம் போல விகாரப்படாது நின்று, ஆக்காதே கண்டு—பிரபஞ்சத்தைக் கரணத்தாற் படையாது சங்கற்ப மாத்திரத்தானே படைத்து, நோக்காது நோக்கி நொடித்து—அவ்வாறே காவாது காத்து அழியாதழித்தலால், இன்று ஆம் கட்டு—இவ் அமலனுக்குப் பந்தமின்றாதல், உளத்தின் கண்ட நனவு உணர்வில் கண்டகனவு உணரக்கண்டவனின் இற்று—கற்றநூற்சொல்லும் பொருளும் உள்ளத்தில் தோன்றுங்கால் உள்ளம் அவற்றிற் றொடக்குண்ணுதவாறு போலும் கனவின்கட் கண்டவற்றைப் புறத்து விடயங்களையறிந்து வந்த நனவுணர்வின்கண்ணே விளங்கவறிந்தவன் அப்பொழுது அவற்றிற்றொடக்குண்ணுதவாறு போலுமித் தன்மைத்து (எ-று).

எனவே, இஃதிவ்வாறாகவென் றெண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் செய்வதூஉம் கரணத்தாற் செய்வதூஉமென வினைமுதல் இருவகைப்படுமென்பதூஉம், கரணத்தானன்றிச் செய்யமாட்டாத குயவன் முதலியோர் சங்கற்பமாத்திரையாற் செய்யுமுதல்வனுக்கு வினைமுதலாதற் பொதுமைபற்றி ஒருபுடையுவமையாதலன்றி முற்றுவமையாதல் செல்லாமையானும் சங்கற்பமாத்திரையாற் செய்யுஞ்செய்திக்குக் கட்டுண்டன் முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகலானும் அவை ஆண்டுளவாதற்கோரியைபின் றென்பதூஉம் கூறி, ஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

ஆக்குதல் படைத்தல்; காண்டலும் அது. நோக்குதல் காத்தல். நொடித்தல் அழித்தல்; அது "நொடித்தான்மலை" என்பதனானுமறிக.

ஆக்காது நோக்காது என்றமையால் நொடியாதென்பது வருவித்துரைக்கப்பட்டது. நொடித்தலானென்பது நொடித்தெனத்திரிந்தது.

அன்றே அசை; அநாதியேயெனினுமமையும்.

இன் மூன்றும் உவமவுருபுகள்.

உளத்தினென்பதற்குச் சங்கற்பத்தாலென் றுரைப்பினும் அமையும்.

இன்றாங்கட்டு என்பது "அருங்கேடன்" என்பதுபோல நின்றது.

## விளக்கம்

இவ் அதிகரணத்தை மூன்று அதிகரணமாக வைத்து உரைப்பதே ஆசிரியர் கருத்து. அப்படியானால்தான் பொருள் செவ்வையாகப் புலனாகும். ஆசிரியர் அப்படி விரியாமைக்குக் காரணம் சொற்சுருக்கங் கருதி. மற்றொன்று நிலைநாட்டவேண்டிய பொருள் கருத்தா ஒருவன் உண்டென்பதே.

க. **இல்லதற்குத் தோற்றம் இன்மையின்** இதுதொடர் ஏது. இதனால் வருவிக்க வேண்டிய மேற்கோள்.

**இனி உலகம் உள்ளது.**

உ. **உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் இத்** தொடர் ஏது. இதனால் வருவிக்கவேண்டிய மேற்கோள் :

**இனி உலகஞ் செய்வோனை உடைத்து.**

ங. **இனி ஒடுங்கின சங்காரத்தினலல்லது உற்பத்தி இல்லை இது** மேற்கோள். இதற்கு வருவிக்க வேண்டிய ஏது.

**ஆண்டு ஒடுங்குதலின்.**

### ஆக்கப்பாட்டிற்கு வினைமுதல் வேண்டும்

இல்லாத பொருள் முயல்கோடு (முயல்கொம்பு). அதற்கு முக்காலத்தும் தோற்றமில்லை. உள்ளபொருள் உலகம். அதற்குத் தோற்றம் காணப்படுகின்றது. உலகம் உள்பொருளானாலும் அதுதானே தன் முதற்காரணத்தினின்று தோன்றாம். இதற்கு ஒருமுதல்வன் வேண்டா என்று கொள்வோமானால், உலக இயற்கையில் அப்படி ஒன்றை நாம் காண்டல் வேண்டும். காணமுடியாமையால் தோற்றம் உள்ளபொருள் ஒருமுதல்வனாலேயே தோற்றுவிக்கப்பட்டிருத்தல் வேண்டுமென்பது உறுதி.

### அம்முதல் பேரொடுக்கத்தைச் செய்பவனே

ஒருமுதல்வன் வேண்டும் என்பது பெறப்பட்டபின் அம்முதல்வன் யாவருள் யாவன் என்னும் ஐயம் தோன்றும். மூவராவார் படைப்போன் காப்போன் துடைப்போன். இது "படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகள் ஆயினை" என்னும் ஆளுடைய அடிகள் அருளிய எட்டாந்திருமுறையானும் அறிக.

படைப்போனும் காப்போனும் முழுமுதல்வன் ஆணைபெற்று அவ்வத் தொழில்களை வரையறையுடன் ஆற்றுபவர். துடைப்போனும் அப்படிப் பட்டவனே. ஆயினும் அத்தொழில் அப்பொருளைப்பற்றிய முடிவாகக் காணப்படும். அதனால் ஒடுங்கியபொருள் மீளத்தோன்றுங்கால் அவனிடமேயிருந்து தோன்றும் என்பது இயல்பு. மூவருடன் வைத்து எண்ணப்படும் துடைப்போன் முழுவதும் துடைப்போன் அல்லன். முழுவதும் துடைப்போன் பேரொடுக்கத்தைச் செய்யும் '**சங்காரகாரணனா**யுள்ள முழுமுதற் சிவபெருமானேயாவன்.

## ஒடுங்கிய இடத்தினின்றே மீண்டும் தோன்றும்

ஒவ்வொரு பொருளும் தோற்ற ஒடுக்கம் ஆகிய இரண்டியல்புகளையும் ஒருங்குடையது. அவ்வாறு இருக்குந்தன்மையை விட்டுநீங்காத் தன்மை என்பர். இதனை அவினாபாவம் என்பர். முதல்வன் உலகத்தைத் தாங்கும் பொருளாக இருக்கின்றான். நீர்நிலைகளில் நிலமே நீரைத் தாங்குவது. ஆனால் நாம் நீரையே மேற்பார்க்கின்றோம். நிலம் உண்டென உய்த்து உணர்கின்றோம். நிலத்தைக்காணுங்கால் நீரை ஊடுருவி நிலத்தைக் காண்கின்றோம். நிலத்தைக்காணுங்கால் நீரின்கண் உணர்வு நிலைப்பதில்லை. நீரைக் காணுங்கால் நிலமே கட்புலனாவதில்லை. அதனால் தான் நிலத்தை உய்த்துணர்கின்றோம். இவை போன்ற நிலைமைதான் உலகத்தையும் உடையா (முதல்வன்)னையும் காண்பது. இவ்வுண்மை,

> "எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு" —திருக்குறள், ௩௫௫.

என்னும் தமிழ்மறையானும் உணர்க.

> நீர்தாங்கும் நன்னிலமும் நேருய்த் துணர்வாலாம்
> நீருருவத் தோன்றும் நிலம்.

## மெய்யுணர்வு

நம்முணர்வு சார்பினால் மூவகைப்படும். அவை சுட்டுணர்வு, சிற்றுணர்வு, முற்றுணர்வு எனப்படும். உடம்பொடு கூடிக் கருவி முதலியவற்றைக்கொண்டு உணரும் உணர்வு சுட்டுணர்வு. புறக்கருவியின் துணையின்றி அகக்கருவியாகிய திருவருள் துணை ஒன்றே கொண்டு உணர்வினில் நான் உணர்ந்தேன் என்பது சிற்றுணர்வு. முழுமுதல் சார்பால் அம் முதலையே காண்பது முற்றுணர்வு.

சாரப்படுவதைச் **சார்பு** எனவும் சாரும் உயிரைச் **சார்பி** எனவும் முன்னே குறித்துள்ளேன். ஒரே இடத்தில் பலபொருள் இருப்பினும் கண்ணும் கருத்தும் ஒன்றினையே ஊன்றிப் பற்றுவது போன்று உலகமும் கடவுளும் பிரிக்கமுடியாதபடி விரவி யிருப்பினும் உயிர்கள் ஒன்றைப் பற்றுங்கால் மற்றொன்றினைப் பற்றா. இவ்வுண்மையினையே திருமூல நாயனார் வருமாறு அருளுகின்றனர்:—

> "மரத்தை மறைத்தது மாமத யானை
> மரத்தின் மறைந்தது மாமத யானை
> பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
> பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்." —திருமூலர், ௨௨௯0.

முதலும் வினையும் என்னும் இரண்டனையும் முறையே காரணமும் காரியமும் என்பர். காரணத்தை இயற்கை என்பர். காரியத்தைச் செயற்கை என்பர். செயற்கையை ஆக்கமென்பர். ஆக்கப்பாடு நிகழ்வதற்கு மூன்று காரணம் வேண்டும். அவை பொருள்முதல், துணை, வினைமுதல் என்ப. பொருள்முதல் முதற்காரணம். துணை துணைக் காரணம். வினைமுதல் நிமித்தகாரணம். இது தொல்காப்பியனார் கூறி அருளிய நூற்பாவாலும் தெரியலாம்:

> "ஆக்கந் தானே காரண முதற்றே."— தொல். சொல். ௨௧.

கடவுள் நிறைவில் உயிர்களும், உயிர்கள் நிறைவில் உலகமும் இருக்கின்றன. இவை உடல், உயிர், உயிர்க்குயிராகிய முதல்வன் எனக் கூறும் ஒப்பாலும் உணரலாம். செயற்கையை நோக்குங்கால் அது இயற்கையை மறைக்கும். இயற்கையை நோக்குங்கால் அச் செயற்கை இயற்கைக்குள் மறையும். இவையே திருமூலர் திருப்பாட்டின் கருத்து.

### ஒடுங்கிய உலகே மீளவுண்டாம்

தோன்றிய உலகம் பேரொடுக்க முதல்வன்பால் ஒடுங்குவது வினை செவ்வியுற. மீளத் தோன்றுவது மலம் செவ்வியுற. அவ்வுலகு நிலைத்திருப்பது மாயை செவ்வியுற. செவ்வியுறல் என்பது பதனெய்தல். இதனைப் பரிபாகம் என்பர்.

ஒடுங்கிய உலகமே மீளத்தோன்றும் என்பது எதற்கு? ஒடுங்கியது ஒடுங்கியவாறே அழிவுறும். பின் புதிய உலகம் தோன்றும் என்று கொள்ளுதல் பொருந்தாதோ எனின்? பொருந்தாது. உறங்குபவனே மீண்டும் விழித்தெழுவான். எழும்பொழுது புதியவன் ஆவான் அல்லன். ஆனால் இளைப்பு நீங்கிப் புத்தெழுச்சியோடு எழுவன். அதுபோல் உயிர்களும் இருவினைகளைச் செய்து இளைப்புறுகின்றன. அவ் இளைப்பு நீங்க ஓர் ஒடுக்கம்வேண்டும். "அழிப்பு இளைப்பாற்றல்" என்னும் சிவஞானசித்தி (௯௭)த் திருப்பாட்டால் இவ்வுண்மை உணரலாம். உயிரோடு கூடிய உலகமே மீளத் தோன்றும். இதுவே ஒழுங்குமுறை. நெல் நெல்லாகவே வளரும். கழுகாக மாறாது.

### வினைச்செவ்வி

வினை, செய்துமுடிக்க வேண்டிய வேலையையும், வித்தி விளைக்க வேண்டிய விதையையும், படித்து முடிக்கவேண்டிய பாடத்தையும் ஒக்கும். வினைசெய்வாரும், உழவரும், கற்பாரும் இடையிடையே இளைப்பாறுதல் வேண்டும். அப்படியானால்தான் ஊக்கமாக உழைக்கமுடியும். மேலும் பலகால் விதைத்து விதைத்து நிலமும் தக்கவாறு விளைவினைத்தந்து வலிகுன்றிவிடும். அப்பொழுது உழவர்கள் சிலகாலம் அந்நிலத்தில் விதைக்காமல் விட்டுவிடுவார்கள். பிறகு விதைத்தால் செழிப்பாக விளையும்.

நெடுங்காலம் இருவினைப் பயன்களாகிய இன்பத்துன்பங்களைத் துய்த்துத் துய்ப்பதற்குக் கருவியாம் உடல் இளைப்புறும். அது நிலம் விளையும் தகுதியில்லாது வலிவுகுன்றுவதை ஒக்கும். ஒடுங்கி மீளத் தோன்றின் இளைப்பு நீங்கித் தக்க வலிவுபெற்று ஊக்கத்துடன் உழைக்கவும் உண்ணவும் தகுதியாகும். கருவிகள் சில நாள் ஓய்வுபெற்று எண்ணெய் பூசப்பெற்றுத் தீட்டிக் கூர்மையாக்கப்பெற்று மீட்டும் தொழில் செய்வதற்கு ஏற்புடைத்து ஆதலையும் ஒக்கும்.

### மலச்செவ்வி

ஒடுங்கிய உலகம் மீளத்தோன்றுவதால் பழமலம்—ஆணவமலம் செவ்வி எய்தும். மலம் செவ்வியுறல் என்பது மலஆற்றல் தேய்வுறல். பழமலம் உயிர்களைப் பண்டே இயற்கைபோல் புல்லியுள்ளது. புல்லுதல் பொருந்துதல். அஃது உயிர்களின் அன்பு அறிவு ஆற்றல்கள் விளங்க ஒட்டாது தடை செய்யும். அத்தடை கண்ணொளி விளங்க ஒட்டாது மறைக்கும் இருளை ஒக்கும். இத்தடையையே அறியாமை என்பர். இஃது ஒரு திரையையும் ஒக்கும்.

மீளத்தோன்றி இருவினை செய்து வினைப்பயன் துய்க்குங்கால் மல ஆற்றல் தேய்வுறும். அதனை ஓர் ஒப்பில் காண்பாம். வழிநடை மலம். அப்பெருவழியில் காணும் தூசு மலவாற்றல். கால் வினைத்தன்மை. காலால் நடத்தல் இருவினை. நடக்க நடக்க வழிதொலைவது மல வாற்றல் தேய்ந்து முடிவுறுவதையொக்கும். ஊரைச்சார்தல் அறியாமை நீங்கி முற்றறிவு விளங்கி முதல்வன் திருவடியைச் சார்வதாகும். வழி நடக்க நடக்கக் காலில் தூசுபட்டுக்கழியும். இக்கழிவே மலச்செவ்வி யாகும். நடக்குங்கால் கால் நொந்து இடையே தங்கி நோவகற்றி மீட்டும் நடப்பதே உலகம் ஒடுங்கி மீள்வதாகும்.

**மாயைச்செவ்வி**

மாயை ஆணவமலச் சார்பால் மயக்கத்தைச் செய்யும். மயக்கமாவது திரிபுணர்ச்சி. திரிபுணர்ச்சியாவது 'நில்லா தவற்றை நிலையின என்று உணர்தல்.' உலகம் நிலைப்பட்டு உலகிடைப் பொருள்கள் பலகால் ஒடுங்கு தலும் தோன்றுதலும் கண்டு கண்டு உலக நிலையாமை மெய்யுணர்வால் கைவருதல். இதுவே மாயைச் செவ்வியாகும். செவ்வி - பரிபாகம்.

**அமைவு**

பாழ்ங்கோள (சூனியவாதி)ன் கொள்கை இல்லதும் உள்ளதும் அல்லாதது உலகம் என்பது. உலகம் உள்பொருள் என்று நாட்டியதால் பாழ்ங்கோள் மறுக்கப்பட்டது. ஆருகதர் பல முடிபுகளை யுடையவர். அஃதாவது, உலகம் இல்லதும் உள்ளதும் ஆயது என்பதாம். உலகம் உள்ளதா? இல்லதா? என்ற இரண்டில் ஏதாவதொன்றில் உறுதி கொள்ளாமல் மயங்குவது ஆருகதர் கொள்கை. அதுவும் உலகம் உள்ளது என்று நாட்டியதால் மறுக்கப்பட்டதாம்.

## பேரொடுக்கப் பெரும்பொருள் இடத்தே உலகம் ஒடுங்கும்

வயிணவர் இருபத்துநான்கு மெய் (தத்துவம்)களே ஒப்புக்கொள்வர். அவை செந்நெறிச் செல்வர்கள் ஒப்புக்கொள்ளும் உடன்மெய் (ஆன்ம தத்துவம்) ஆகும். பூதம் ஐந்து, பூதமுதல் ஐந்து, அறிபுலன் ஐந்து, செய்கருவி ஐந்து, அகப்புறக்கலன் (அந்தக்கரணம்) நான்கு ஆக இருபத்து நான்கு.

செந்நெறிச் செல்வர்கள் இவற்றிற்கு மேலும் உணர்வுமெய் ஏழு, உணர்த்துமெய் ஐந்து ஆகப் பன்னிரண்டு மெய்கள் கொள்வர். வயிணவர் கள் பாஞ்சராத்திரிகள் என்றும் அழைக்கப்படுவர். அவர்கள் கூறுவது உலகம் முதற்காரணத்தில் ஒடுங்கும் என்பது பொருந்தும். உலகிற்கு முதற்காரணம் மூலப்பகுதி. மூலப்பகுதி வாசுதேவன் உருவம். ஆகவே உலகம் வாசுதேவனிடத்தே ஒடுங்கும். அதனால் வாசுதேவனே உலகிற்கு முதற்கடவுள் என்பதே. மேலும் அவர்கள் பேரொடுக்க முதல்வனை உலகிற்கு வினைமுதற் காரணம் என்று சொல்லுவதால் அவனிடத்தில் ஒடுங்குவது பொருந்தாது என்பர்.

உலகம் வாசுதேவனிடத்து ஒடுங்கும் என்னும் பொருந்தாக்கூற்றை ஒப்புக்கொள்ளினும் முப்பத்தாறு மெய்கள் அடங்கிய முழு உலகமும் அவனிடத்து ஒடுங்காது. அவன் வடிவுக்கு மேலுள்ள மெய்கள் ஒடுக்கப் படும்போது அவனும் சேர்த்து ஒடுக்கப்படுவன். அவனுக்குக் கீழுள்ள

படைப்போனும் அவனுடன் சேர்த்து ஒடுக்கப்படுவான் என்பது சொல்லா மலே விளங்கும்.

பேரொடுக்கப் பெரும்பொருள் பொருள்முதற்காரணம் அல்லவாயினும், பொருள் முதற்காரணமாகிய மாயைக்கு நிலைக்களமாக இருப்பதால் அஃது அதனிடத்தில் ஒடுங்கும் என்பது பொருந்தும். "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்னும் பொருள்மொழியில் உலகத்து உயிர்களைக் காத்து நிலைக்கச் செய்கின்ற மன்னனையே உயிரெனக் கூறுவதையும் பொருந்தும்.

ஆ—என்பது முதல்நிலைத் தொழிற் பெயர். அஃது ஆதல் என்று பொருள்படும். திதியும் ஆதியும் ஆகுபெயர். அவ்விரண்டும் முறையே காப்போனையும் படைப்போனையும் குறிப்பன. இலயித்த தன்—ஒடுங்குவதற்கு நிலைக்களமாகிய முதல்வன்.

## உலகை இறைவனே தோற்றுவிப்பன்

மாயையில் ஒடுங்கிய உலகத்தை மாயையே மீளத் தோற்றுவிக்கும் என்று சாங்கியர் கூறுவர். இது கையில் ஒடுங்கிய எழுதுகோலைக் கையே விடுவிக்கும் என்பதை ஒக்கும். எழுதுகோலும் கையும் அறிவில்லன. அவையிரண்டும் ஒன்றோ டொன்று கூடா; பிரியா. கூட்டமும் பிரிவும் உடலகத்து நின்று இயக்கும் அறிவுடைய உயிரினாலேயே ஆகும்.

இதுபோல் அறிவில்லாத உலகம் அறிவில்லாத மாயையில் ஒடுங்குவதும் மீளத் தோன்றுவதும் முற்றுணர்வுடைய முழுமுதல்வனாலேயேயாம். அதனால் உலகை இறைவனே தோற்றுவிப்பன்.

## வினைக்கு ஈடாகத் தோற்றுவிப்பன்

உயிர்களைப் பலவேறு வகையாத் தோற்றுவிப்பதன் காரணம் அவ்வவ்வுயிர்களின் எண்ணமே. அவ் எண்ணம் அவ் உயிர்கள் மாட்டுத் துய்க்க வேண்டிய எஞ்சுவினைக்கு ஈடாகத் தோன்றும். நல் எண்ணந் தோற்றுதற் பொருட்டே நல்லார் இணக்கம வேண்டும என வற்புறுத்தப்படுகின்றது. வினைக்கீடாகப் பிறப்பு முதல்வனால் நல்கப்படும் என்பதைத் திருவள்ளுவப் பெருந்தகையார்,

> "அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
> தவாஅப் பிறப்பீனும் வித்து" —திருக்குறள், ௩௬௧.

என்னும் திருமொழியால் வலியுறுத்துகின்றனர்.

பிறவாப் பெருநெறி பற்றுஞ் செந்நெறிச் செல்வர்கள் ஆக்கைவிட்டு ஆவிபிரியுங்கால் ஐந்தெழுத்து ஓதியே பிரிய வேண்டுமெனக் காதல் கொள்கின்றனர். கடவுள்பால் வேண்டுகின்றனர். இதுவே மெய்ந்நெறி; இதுவே மெய்யுணர்வு. இவ்வுண்மை,

> "தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த
> காமன் பொடிபடக் காய்ந்த கடல்நாகைக் காரோணநின்
> நாமம் பரவி நமசிவா யவென்னும் அஞ்செழுத்தும்
> சாமன் றுரைக்கத் தருதிகண் டாய்எங்கள் சங்கரனே"
>
> —௪. ௱௪—௫.

என ஆளுடைய அரசர் அருளிய திருப்பாட்டானும் உணர்க. இறுதிக் காலத்து உறுதியாகிய இவ் ஐந்தெழுத்து ஓதும் திருவருள் கைகூடுதற்கு நாளும் "நந்தி நாமம் **நமசிவய**" என வஞ்சமில மனத்துடன் நவிலுதல் வேண்டும். அப்படி நவின்றுவரும் பழக்கம் இறுதியிலும் இயல்பாகவே கைகூடும். அங்ஙனங் கைகூடும அவ் எண்ணத்தால் பிறவி அறும்.

## ஒப்பு

வித்தினின்று முளை தோன்றுகின்றது. அதற்கு மண்ணும் நீரும் துணைவேண்டும். மண்ணுடன் பொருந்திய நீரால மண்குளிரும். மண் குளிர்ந்தபொழுது மண்ணுள் அடங்கிய வித்தினின்று முளை தோன்றும்.

வித்து மாயையை ஒக்கும். முளை மாயாகாரியமாகிய பலவேறு உலகங்களை ஒக்கும். மண் கடவுளை ஒக்கும். நீர் திருவருளை ஒக்கும். நிலங் குளிர்வது போன்று திருவருள் கலந்தியக்கி இவ்வாறாக என எண்ணும் அருளினைப்புரியும். அதுவே உலகத் தோற்றத்திற்கு வினை முதற் காரணமாகும். வினைமுதற் காரணம் நிமித்தகாரணம்.

## ஒப்பல் ஒப்பு

திருவருள் கைவரப்பெற்ற மெய்ந்நூல் ஆசிரியன்மாரும் ஏற்ற வரால் ஒப்பென உணர்த்தப்பட்டு, நம்மவரும் ஆயவின்றி நம்பிப் பயின்று வருவரேல் அதனைத் தாம் உணரத்தவேண்டிய உண்மைக்கு விளக்கமாகக் காட்டுவர். இவ் ஒப்பல் ஒப்பை இல்பொருள் ஒப்பெனக்கொள்ளினும் இழுக்கன்று. இவ் உண்மை,

> "வலியின் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
> புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று" —திருக்குறள், உஎஉ.

எனத் திருவள்ளுவ நாயனா அருளிய திருப்பாட்டானும் உணர்க.

இதனை பொத்தே நம்மெய்கண்ட நாயனாரும் வேட்டுவப்புழு ஒப்புக் கையாளுவா ராயினா. அவ் ஒப்புப் பிறரால ஆசிரியன் மாணாக்களை ஆய்ந்து எடுத்து, அருமறை (உபதேசம்) பகர்ந்து வேண்டுதல் என்னும் பாவனையால் இறையடி எய்துவதென்னும் இறைபாம் வண்ணம் செய்தற் குக் காட்டப்படுகின்றது. அக்காட்டு வருமாறு:—

> "அடங்கிய விருத்தி யாமென் றறிந்தபின் செறிந்த மனைனில்
> குடம்பையுள புழுமுன் னோதும குளவியள்ன கொள்கை போலத்
> தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே மருவ வேண்டி
> உடம்பினுள் சீவ னைப்பாத் தூபத்தசம் ஓது வாரே."

முதல்வன் உயிர்களின் எண்ணப்படி உடலை அருளுவன் என்பதற்கு 'வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுப்பன்' என்றருளினர்.

அவ் ஒப்பினுல் உலகோர் கொள்வது வேட்டுவாளி (குளவி) ஒரு புழுவினை எடுத்துத் தன் கூட்டில் வைத்து மூடிவிடுகின்றது. பின் நாடொறும் வந்து ஒலித்துக்காக்கின்றது. ஒரு நாள் அக் கூட்டினின்று குழவிக்குஞ்சு வெளிவருகின்றது. அதுவே அப்புழு என நினைத்தனா. அப்புழு இயல்பாகவே முட்டையினின்று வெளிவரும் குஞ்சுக்கு இரையாக வைக்கப்படுவது.

**வினைமுதல் இருவகை**

கருத்தால் படைப்பதும், கருவியால் படைப்பதும் என வினைமுதல் இருவகைய. அவற்றுள் கருத்தால் படைப்பது கடவுள். கருவியால் படைப்பது உயிர்கள். கருத்தால் படைப்பது 'இஃதிவ்வாறு ஆகுக' எனத் திருவுள்ளங் கொள்ளுதல். திருவுள்ளம் - சங்கற்பம். இப்படைப்பையே இயற்கை என்பர்.

கருவியால் படைப்பது கட்புலனும் இயற்கையிலிருந்து செயற்கையாகிய ஊண் உடை உறையுள் முதலிய பல ஆக்கப்பாடுகளைச் செய்தல். இவை செய்வாரையும் செய்விப்பாரையும் ஒக்கும். செய்விப்பார்க்கு நினைவும் சொல்லும் செயற்படும். அதனால் மிக்க இளைப்பு உண்டாவதில்லை. செய்வார்க்கு நினைவும் கைமுதலிய மெய்யும் தொழிற்படும். அதனால் இளைப்பு நேரும். அது பிறர்க்குப் புலனும்.

முழுமுதல்வன் கருத்தால் ஆக்குவன் என்பது,

"நோக்காதே எவ்வளவும் நோக்கி னானை
நுணுகாதே யாதொன்றும் நுணுகி னானை
ஆக்காதே யாதொன்றும் ஆக்கி னானை
அணுகாதார் அவர்தம்மை அணுகா தானைத்
தேக்காதே தெண்கடல்நஞ் சுண்டான் தன்னைத்
திருப்புன்கூர் மேவிய சிவ லோகனை
நீக்காத பேரொளிசேர் நீடூ ரானை
நீதனேன் என்னேநான் நினைபா வாறே." — ள. கக — ரு

என்னும் ஆளுடைய அரசர் திருப்பாட்டானும் உணர்க.

மேலும் அவன் காது முதலிய கருவிகளின்றியே கேட்டல் முதலியவற்றைச் செய்தருள்வன். அது,

"கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதே எல்லாங் கேட்டான்"
—அ. திருச்—உஅ.

என்னும் ஆளுடைய அடிகள் திருப்பாட்டானும் உணர்க.

**முதல்வன் கட்டுருன்**

கருத்தால் செய்தருளுதற்குக் கட்டுறுதல் இன்று. அது, மேல் நினைப்பளவால் உடல் இளைப்புறுதல்லவா? படித்த படிப்பின் சொல்லும் பொருளும் நினைவிற்கு வருங்கால் மனம் கட்டுறுவதில்லை. கட்டுறுதல் தொடக்குறுதல். தொடக்குறுதல் என்பது அழுந்தல். அழுந்தல் வருந்தல். இது பாடம் மனத்துக் கொள்வதற்குமுன் பலமுறை நெட்டுருப் பண்ணுதல் முதலியவற்றால் வரும் வருத்தத்தால் தெரிந்துகொள்க.

மேலும் கனவு காணகின்றோம். அக்கனவில் இன்பத்துன்பப் பயனுகர்ந்து இளைக்கின்றோம். ஆனால், அக்கனவினை நனவின்கண் உணரினும் உணர்த்தினும் எவ்வகை வருத்தமும் எய்துவதில்லை.

இன்மூன்றும் உவம உருபுகள் என்பது, 'நோக்காது.........கட்டு' என்னும் செய்யுளில் காலத்தின் - காலத்தைப்போல எனவும், சின்றுளத்தின் - உள்ளம் அவற்றில் தொடக்குண்ணுதவாறு போல எனவும், கண்டவனின் - விளங்க அறிந்தவன் அப்பொழுது அவற்றில் தொடக்குண்ணுதவாறு போல எனவும் பொருள் கொள்வதனுல் என்க.

அருங்கேடன்* - கேடில்லாதவன். அதுபோல் 'இன்றுங்கட்டு கட்டு இன்றுதல். இதில் கேடருமை, கட்டு இன்று என்று மொழிமாறுக.

---

## மூன்றும் அதிகரணம்

*இனிச்சங்காரமே முதலென்றது*

எ-து. மே-ள். எ-னின். 'ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை' எனவே சங்காரகருத்தா உலகிற்கு முதற்கடவுளென்பது போந்ததாயினும் தேர்முதலாயின பலர் கூடிச்செய்யக் காண்டலின் அவற்றினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு மற்றுமதத்தன்மையராய முதற் கடவுளர் உண்டெனக்கோடும் என்னும் அநேகேசுரவாதிகண் முதலியோர் மதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்து 'அந்தம்ஆதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ - ள்.) சங்காரகருத்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுளென்றது.

சங்காரம் ஆகுபெயர். ஏனையோர் முதல்வராகாரெனப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின்வழி யல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.

எ-து. ஏது எ-னின். அதற்குப் பிரமாணமென்னையெனின் னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்ததனுதலிற்று.

(இ - ள்.) ஒன்றென்றுஞ் சுட்டியறிவதாகிய உருவும் அருவுமென்றிருவேறுவகைப்பட்ட பிரபஞ்சம் அவ்வாறு சுட்டியறிதலின்றி எவ்வுலகும் ஒன்றாயறிந்து நின்ற சங்காரகருத்தாவின் வழிப் பாரதந்திரமாய் நிற்பதல்லது தனக்கெனச் சுதந்திர முடைத்தாய் நிற்பதன்றுகலாற் சங்கார காரணனொருவனே உலகிற்கு முதற்கடவுளன்றி ஏனையோர் முதற்கடவுளரல்லரென மேற்கொண்டது (எ-று).

---

* "அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்" --திருக்குறள், உ௧0).

பிரபஞ்சத்திற்குச் சுதந்திரமின்மையுஞ் சங்காரகாரணனுக்குச் சுதந்திரமுண்மையும் ஏதுமுகத்தாற்காட்டுவார் சுட்டுணர்வாகிய பிரபஞ்சமெனவும் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரமெனவும் ஈரிடத்தும் உடம்பொடு புணர்த்தோதினார். சுட்டு உணர்வுடையதனைச் சுட்டுணர்வென்றது உபசாரம்.

ஈண்டுப் பிரபஞ்சமென்றது சேதனப் பிரபஞ்சத்தை; பிரிநிலையேகாரத்தான் விலக்குதற்குரியது அதுவேயாகலின்.

தேர்முதலாயின பலராற்செய்யப்படினும் அப்பலரும் ஒருவனேவல்வழி நின்றேசெய்ப வாகலானும், வேதத்துட் காரணவாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அங்கி சூரியன் முதலியோரைக்காரணமென்றது குயவன்போல் அவாந்தரகாரணமாதல் பற்றியேயாகலின் அவையெல்லாம் ஆகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே உணர்த்தி நிற்குமாகலானும், செய்துஞ் செய்வித்தும் எல்லாத் தொழிற்கும் வினைமுதலாய் நிற்கு முதற் கடவுள் சங்காரகருத்தா ஒருவனேயென்பது கருத்து.

ஒன்றலா ஒன்றால் உளதாகி நின்றவாறு
ஒன்றலா ஒன்றிலவை யீறுதல்—ஒன்றலா
ஈறே முதலதனின் ஈறலா ஒன்றுபல
வாறே தொழும்பாகும் அங்கு.

எ-து. உ-ம். எ-னின். அங்ஙனமாயினும் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற்போலச் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரமும் பலவுளவெனக் கோடும்; ஒன்றேயென்றற்குப் பிரமாணமென்னை யென்னுங்கடாவை ஆசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) அவை—சேதனப் பிரபஞ்சத்தொகுதி, ஒன்று அலா ஒன்றால்—உருவும் அருவுமென்னும் அவ் இருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே, உளது ஆகி நின்றவாறு—சிருட்டிப்பட்டுத் திதிப்பட்டவாறே, ஒன்று அலா ஒன்றில் ஈறுதல்—அந்தப் பரம்பொருளின்கண்ணே சங்காரப்படுதலால், ஒன்று அலா ஈறே முதல்—அச்சங்காரக் கடவுள் ஒருவனே உலகிற்கு முதற்கடவுள். அற்றேல் இவ்வாறு முத்தொழிற்படுஞ் சேதனப்பிரபஞ்சம் வீடுபெற்றவழிச் சுட்டுணர்வின்றிச் சிவசமமாமென வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின் அவ்வழி அவையும் முதற்கடவுளாமென்றற்கு இழுக்கென்னையெனின்; அதனின் ஈறு அலா ஒன்று—அப்பரம் பொருள்போல் அழிவின்றி நித்தமாய சேதனப் பிரபஞ்சம்,

அங்கு—வீடுபேற்றின் கண்ணும், பலவாறே தொழும்பு ஆகும்—பலவாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையாம் (எ-று).

இது சொற்பொருட் பின்வருநிலை

காரியப்பிரபஞ்சஞ் சடமாகலானும், சேதனப்பிரபஞ்சம் அவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற்றாய் நிற்றலானும், இவற்றைத் தொழிற்படுத்தற்கு இவற்றின்வேறாய் ஒருமுதற் கடவுளுண்டென்பது பெற்றாம். பெறவே; பிரபஞ்சம் விசித்திர காரியமாய்க் காணப்படுதலின் இவ்வாறு நடாத்தும் முதற் கடவுள் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளுஞ் சுதந்திரமும் முதலிய நிரதிசய குணங்களுடையனென்பதூஉம் பெறப் பட்டது; படவே, இத்தன்மையனாகிய முதற்கடவுளொருவனே அமையுமாகலின் வேறும் அத்தன்மையர் உண்டெனக்கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம்: அல்லதூஉம், இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம் பலவாதல் செல்லாதென்னுங் கருத்தால், ஒன்றலா ஒன்று என வரையறுத் தோதினார்.

ஈறே முதலென்றது முடிந்தது முடித்தல். ஈறு ஆகுபெயர்.
இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது.

பலவாறுவன, இருணீங்கியவழியுங் கண்ணுக்குக் காட்சி ஞாயிற்றை இன்றியமையாதவாறுபோல, மலநீங்கிய முத்தி நிலையினும் ஆன்மாவுக்கு அறிவு வியஞ்சகமாய் உடனின்றறிவிக்கு முதல்வனையின்றியமையாதவாறும், கண் படிகம் ஆகாயம் போலச் சார்ந்ததன்வண்ணமாயன்றி முதல்வன்போலத் தனித்து நிற்குமியல்பில்லாதவாறும், முதல்வன்போல் ஐந்தொழிற்கும் வினைமுதலாம் உரிமையின்றிச் சிவாநுபவமொன்றினுக்கே உரித்தாயவாறும், சமவியாபகமாயினும் முதல்வனை நோக்கத் தூல அறிவாகலான் விளக்கொளியுட் கண்ணொளிபோல முதல்வனின் வியாப்பியமாயன்றி நில்லாதவாறும் முதலாயின. அற்றேல், முத்திநிலையின் ஆன்மாச் சிவசமமாமென்னுஞ் சுருதிக்குப் பொருளென்னையெனின், அஃது உண்மையதிகாரத்துட் பெறப் படும். இதனானே சிவசமவாதி சங்கிராந்தவாதி உற்பத்திவாதி ஆவேசவாதி மதங்களும் மறுக்கப்பட்டன.

பதியுண்மைக்குப் பிரமாணம் கூறுவார் மலத்துளதாம் எனப் புனருற்பத்திக்கேதுக் கூறுமுகத்தான் மலத்துண்மைக்குப் பிரமாணமும் உடன்கூறினார். அதனை ஈண்டு வேறோரதிகரணமாக வைத்துரையாராயினார், அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியனவெல்லாஞ் சகசமலத்துணராதென அதனிலக்

கணங் கூறும்வழிப் பெறப்படுதலால், ஈண்டு மிகைபட வேறோதல் வேண்டாமையின்.

இச்சூத்திரத்ததிகரணங்களாற்போந்த தொகைப்பொருளாவது:—தோற்றக்கேடுகளதுண்மை காட்சி முதலிய அளவைகளான் அறிய வாராமையிற் பிரபஞ்சம் நித்தப்பொருளேயாம். அன்றித் தோன்றியழியுமெனக் கொள்ளினும், இல்பொருள் தத்தஞ்சார்பிற்றேன்றி நின்றழிதல் இயற்கையெனவமையும்; செயற்கையென்றற்கு ஓரேதுவின்மையின். மற்று உள்பொருளாயின் அதுவேயமையும் இறைவன் வேண்டா, இரண்டுஉள்பொருள்கோடல் மிகையாகலின். வேண்டுமாயினும், மாயோன் முதலிய கடவுளரில் ஒருவனே அமையும். அவரையொழித்துச் சங்காரகருத்தா முதற்கடவுளென்றதற்குப் பிரமாணமென்னை? பிரமாணமுண்டாயினும், அதிவிசித்திரமாய பிரபஞ்சம் ஒருவனாற்செய்தல் கூடாமையின், மற்றும் அவ்வியல்பினராய முதற்கடவுளர் உளராதல்வேண்டும் என உலோகாயதர் மீமாஞ்சகர் புத்தர் சமணர் சாங்கியர் பாஞ்சராத்திரிகள் அநேகேசுரவாதிகள் மதம்பற்றிப் பூருவபக்கநிகழ்ந்தவழி அவரை மறுத்துச் சித்தாந்தஞ்செய்து முதற்கடவுளது உண்மை பொதுவகையானுஞ் சிறப்புவகையானுங் கருதலளவையின் வைத்துணர்த்தியவாறென உணர்க. இவ்வாறு சூத்திரந்தோறும் உணர்ந்து உரைத்துக்கொள்க.

---

## விளக்கம்

### பேரொடுக்கப் பெரும்பொருள் ஒருவனே

உலகிற்குப் பேரொடுக்கப் பெருமானாகிய (சர்வ சங்கார காரணனாகிய) சிவபெருமானே முழுமுதல்வன் என இரண்டாம் அதிகரணத்தில் அறுதியிட்டுக் கூறி உறுதி செய்தனர். அப்படிப்பட்ட முதல்வன் ஒருவனோ? அன்றிப் பலரோ? என்று ஐயம் தோன்றிய இடத்து, அதனை அகற்றுதற் பொருட்டு மூன்றாம் அதிகரணம் அருளிச் செய்தனர்.

ஐயங் கொள்வார் கூறுவது, உலகம் மிகவும் வியக்கத்தக்க பெரும் பொருள். அத்தகைய பேருலகத்தை எப்படி ஒரு முதல்வனால் செய்ய முடியும்? ஆகவே பல கடவுளர் வேண்டும் என்பது. அவர்கள் எடுத்துக் காட்டும் காட்டு (உதாரணம்) தேர். தேர் உருவினாலும் வேலைப்பாட்டாலும் மிகவும் வியக்கத்தக்க பெருமையுடையது. அதனைப் பலர்கூடிச் செய்யக் காண்கின்றோம். ஆயின் உலகமும் பல கடவுளரால்தான் படைக்க முடியும் என்பதே.

ஐயங் கொள்வார் சிறிதும் அன்றி எல்லோருக்குமே இப்படிப்பட்ட ஐயம் தோன்றுது. முதல்வன் உலகத்தைப் படைத்தல் "இவ்வாறு

ஆதக" என எண்ணும் சங்கற்பத்தால் செய்தருள்வன் என்பதே. அதற்குக் கருத்தானல்லாமல் கருவியால் செய்யும் வினைமுதலை ஒப்புப்பார்ப்பது எங்ஙனம் பொருந்தும்? மேலும் உலகத்தின்கண்ணும் தேர் முதலிய வியத்தகு பொருள்கள் பலர் கூடிச் செய்யப்படினும் ஒரு முதல்வன் ஏவல்வழியே பலரும் செய்கின்றனர். அப்படிச் செய்யாமல் ஒவ்வொருவரும் தாம் தாம் நினைத்தபடி செய்யலுற்றால் அச்செயல் எப்படிச் செவ்வையாக முடியும்? பாழாகும் அல்லவா? மேலாளன் ஒருவன் ஏவல் வழிச் செய்வதுதான் வழக்கமாகக் காண்கின்றோம். அதுவே முறை.

பல கடவுள் உண்டு எனக் கொள்வாரும் கடவுள் தன்மையில் வேற்றுமை கூறாது ஒற்றுமையே கூறுதல் வேண்டும். இலக்கணத்தில் வேறுபாடு இல்லாவிட்டால் இலக்கியம் எப்படிப் பலவாதல் கூடும். அது போன்று முதல்வனுடைய தன்மைகளை ஒன்றுபோல் கூறி அப்படிப் பலர் இருப்பர் என்று சொல்லுவது பொருந்தாது. இது கண்ணாடியில் காணும் உருவமும் அதற்கு அடிப்படையான் புறத்துத் தோன்றும் உருவமும் எவ்வகை வேற்றுமையும் இன்றி ஒன்றுபோல் இருக்கும். ஆயின் அவ்விரண்டும் ஒன்றே. நிழலும் நிழலியும் ஆயதனால் ஒன்றாயிற்று. அதுபோன்று வேறு இருவர் முகத்தை எங்கேனும் ஒன்றுபோல் காண்டல் இயலுமா? இயலாது அல்லவா? ஆகவே, இலக்கணத்தால் வேறுபாடு இல்லையாயின் பொருள் ஒன்றே. நிழலும் நிழலியும் போற் காணுவதற்குக் கூடக் கடவுளின்பால் இடம் இல்லை. ஆகையால், பேரொடுக்கத்தைச் செய்யும் பெரும் பொருள் ஒருவனே.

## பேரொடுக்கப் பெருமானின் தன்மைகள்

க. முற்றுணர்வு, உ. அளவிலாற்றல், ௩. பேரருள், ௪. தன்வயமுடைமை (சுதந்திரம்) முதலிய எண்குணங்கள் என்க.

இதனையே, திருவள்ளுவப் பெருந்தகையாரும்,

> "கோள்இல் பொறிஇல் குணம்இலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை." —திருக்குறள், ௯.

என அருளிச்செய்தனர். இதற்கு உரை கண்ட பரிமேலழகியார்: எண்குணங்களாவன, க. தன்வயத்ததனால், உ. தூய உடம்பினனாதல், ௩. இயற்கை உணர்வினனாதல், ௪. முற்றுமுணர்தல், ௫. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், ௬. பேரருள் உடைமை, எ. முடிவிலாற்றல் உடைமை, அ. வரம்பில் இன்பம் உடைமை என இவை என்பர். மேலும் இவ்வாறு கூறுவது சைவாகமம் என்பர். சைவாகமம் என்பது தமிழாகமமே.

ஆளுடைய அரசரும்;

> "மணவன் காண்மலை யாள்நெடு மங்கலக்
> கணவன் காண்கலை ஞானிகள், காதல்என்
> துணவன் காண்குரங் காடு துறைதனில்
> அணவன் காண்அன்பு செய்யும் அடியர்க்கே —௫-௬௩-௪.

என்னும் திருப்பாட்டால் 'எட்டுவான குணத்தீசன் எமமான்' என அருளிச் செய்தனர்.

சங்காரத்தைச் செய்யும் முழுமுதலைச் சங்காரம் என்று குறித்தலால் **சங்காரம்** ஆகுபெயர். ஏகாரம் ஏனையோரெல்லாம் உயிரினத்தவரே; அவர்கள் முழுமுதல்வர் ஆகார்; சிவபெருமானே முழுமுதல்வன் எனப் பிரித்தலால் அவ் **ஏகாரம்** பிரிநிலை.

## உடலால் உயிர்கட்கு உரு அரு உண்டு

உயிர்கட்கு மாயா காரியமாகிய முப்பத்தாறு மெய்களினால் உடம்பு உண்டு. அவ்வுடம்பு கண்ணுக்குப் புலனாகும் **உரு** உடம்பும், கண்ணுக்குப் புலனாகாது கருதி உணரப்படும் **அரு** உடம்பும் என இருவகைப்படும். இவ் இருவகை உடம்பும் உயிர்கட்கு இருவினைகட்கு ஈடாக இறைவனால் படைத்து வழங்கப்படுவன. உரு உடம்பைப் பாரிய—பருத்த உடல் என்பர். பாரிய உடல்-தூல சரீரம்; பருமை-தூலம். அரு உடம்பை-நுண் உடல் என்பர். நுண் உடல் - சூக்கும சரீரம்; நுண்மை - சூக்குமம்.

ஆண்டவன் இவ் இருவேறு வகை உடம்பும் இல்லாதவன். மெய் யடியார்கள் பொருட்டுத் திருவருளால் திருவுருக்கொள்பவன். அவ்வுரு கண்ணுக்குப் புலனாயினும், கருத்தையும் கடந்து உணர்வுடன் ஒன்றி உரு அரு என உணரவாராது உண்மை அழுந்தலாய் உறையும். அது, **கண்டால்** அமைந்த உருவைக்காண்கின்றோம்; கருதுகின்றோம்; கையால் தீண்டுகின்றோம்; நாவால் சுவைக்கின்றோம்; உண்டால் உணர் வுடன் ஒன்றாய்ப் போவதல்லது வேறு நில்லாது. பளிங்கு முதலிய இயற்கைகளாலும் வெண்கலம் முதலிய புணர்ப்புகளாலும் உரு அமைந் தால் காண்டலும் கருதலும் தீண்டலும் சுவைத்தலும் உண்டு. ஆனால், உண்டல் இல்லை. உண்டல் இன்மையால் உணர்வுடன் ஒன்றலும் இன்று. ஒரு பொருளின் உருவினையே காண்போம். அவ்வுருவைக் கருதுங்கால் அதன் நிலை அருவமாகும். உணர்வுடன் ஒன்றாமையால் அது நமக்கு வேறாகின்றது. ஆண்டவன் உணர்வுடன் ஒன்றுகின்றமை யால் நம்மோடு உடனாகின்றான். அதனாலேயே ஆளுடைய அடிகள் "இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க" எனவும், "கண்ணால் யானும் கண்டேன் காண்க" எனவும் எட்டாந் திருமுறைக் கண் அருளிச்செய்தனர். உயிர்களுடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் திருவருள்வாய்ந்த இறைவனே உரு அரு இல்லா ஓங்கிய உண்மை முழுமுதல்வன். ஏனை உரு அரு உடைய தேவர்களும் மற்றும் யாவர்களும் உயிரினத்தாரே. தேவர்கள் யாவர்களுக்கும் வாய்த்த அரு வுடம்போடு பருஉடம்பின் காரணமாகிய அரு உடம்பும் உடையா. உயிர் கள் அரு உடம்போடு உரு உடம்பும் உடையன. கண்டு-கற்கண்டு. இது,

> "பூதனா சரீரம் போனால் புரிஅட்ட ரூபந் தானே
> யாதனா சரீரம் ஆகி இன்பத்துன் பங்கள் எல்லாம்
> நாதனார் ஆணை உய்க்க நரகொடு சுவர்க்கம் துய்த்துத்
> தீதிலா அணுவாய் யோனி சேர்ந்திடும் சீவன் எல்லாம்."
>
> —(சித்தியார், உ. உ - உரு)

என்னும் அருள்நந்திசிவநாயனார் அருளிய சிவஞான சித்தியார் திருப் பாட்டாலும் உணர்க. பூதனாசரீரம் உரு உடம்பு. புரி அட்டரூபம் அரு உடம்பு. யாதனா சரீரம் உரு நுண்மை. இவற்றை முறையே ஒருபுடை ஒப்பாகப் பனிக்கட்டி, நீர் ஆவி, நீர் எனக்கூறலாம்.

"பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீங்கிப் பாசம் அறுத்தால்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே."

—திருமூலர், ௧0-௨௪0௬.

எனத் திருமூல நாயனாரும் உயிரினங்கள் பலகோடியாக எண்ணிறந்தன என்றும், அவை பிரமன் முதலாகச் சொல்லப்பட்ட தேவர்கள் உள்ளிட்டவை என்றும், தலைவன் ஒருவனே என்றும், உயிர்கள் மும்மலப் பிணிப்புடையன என்றும், தலைவனைப்பற்றினால் அப்பிணிப்பு அகலும் என்றும் அருளுகின்றனர். இது,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்னும் திருவள்ளுவ நாயனார் திருமொழியாலும் உணர்க.

கண்டால் உருஅமையக் கட்புலனும் மெய்யெனினும்
உண்டார்க்கு ஒன்றாம் உணர்.

கண்டு – கற்கண்டு.

## உயிர்க்குத் தன்வயம் இன்மை

உயிர்க்குத் தன்வயம் இல்லாத் தன்மையை வலியுறுத்தவேண்டிச் "சுட்டுணர்வாகிய பிரபஞ்சம்" எனக் கூறியருளினர். சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் என்று கூறியது சுட்டுணர்வினையுடைய பிரபஞ்சம் என்க. அது தனக்குக் காட்டாகிய துணையின்றித் தானே அறியமுடியாத உயிரினங்களைக் குறிக்கும். பிரபஞ்சம் – உலகு. சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் அறிவுடைய உலகு. அது உயிரினங்கள். தன்வயம் – சுதந்திரம். சேதனப் பிரபஞ்சம் – அறிவுடைய உலகு. அது உயிரினங்கள். உயிர் சார்ந்த தன் வண்ணமாய் நிற்கும். கருவிகளைச் சார்ந்து பொருளுக்கு வேறாகிநின்று சுட்டி உணர்கின்றது. அதனால் சுட்டுணர்வு உடையதாகின்றது. அதுவே அதன் தன்மை அன்று. அப்படியிருந்தும் சுட்டுணர்வினை உடைய என்னாது சுட்டுணர்வாகிய என்பது எற்றுரை. எற்றுரை-உபசாரம்.

## முதல்வனுக்குத் தன்வயம் உடைமை

பேரொடுக்கப் பெருமானுக்குத் தன்வயம் உடைமையை வலியுறுத்த வேண்டிச் "சுட்டுணர்வின்றி நின்ற சங்காரம்" என்றார். இரண்டிடத்தும்—உயிர்களிடத்தும் கடவுளிடத்தும் ஏதுவை உடம்பொடு புணர்த்திக் கூறினார். அஃதாவது உயிர்களுக்குச் சுட்டுணர்வு இருக்கின்ற காரணத்தால் தன்வயம்—சுதந்திரம் இல்லை எனவும், முதல்வனுக்குச் சுட்டுணர்வு இல்லாத காரணத்தால் தன்வயம்—சுதந்திரம் உண்டு எனவும் வலியுறுத்தினார்.

## சுட்டுணர்வு

சுட்டுணர்வு என்பது அருள்துணைகொண்டு ஐம்புலனால் காணுங் காட்சி. சிற்றுணர்வு என்பது அருள் துணையால் அறிவிற் காணுங் காட்சி. முற்றுணர்வு என்பது அருளால் அழுந்தி உணரும் உணர்ச்சி. இம்மூன்றினையும் முறையே புலனறிவு, புல்லறிவு, நல்லறிவு எனக் கூறலாம்.

சுட்டுணர்வு, உயிர்கள் பொருள்களுடன் கலவாமல் வேருக் இருந்து அப்பொருள்களைக் காண்கின்றன ; அக் காட்சியைச் சுட்டுணர்வு என்பர். சுவடி—ஏட்டிலுள்ள திருப்பாட்டைப் பார்த்துப் படிப்பது சுட்டுணர்வு. அப்பாட்டினை நெட்டுருச் செய்து மனத்துக் கொள்வது சிற்றுணர்வு. தானகவே பாடுவது முற்றுணர்வு. ஏடு படிப்பார்க்குப் புறமாய், பருமையாய் இருக்கிறது, எனவே இது புற அறிவு.

மனத்துக் கொள்வது அகப் புற ஏடாய், பிறர்க்குப் புலன் ஆகாததாய் இருக்கிறது. எனினும் படித்த பாட்டின் அளவன்றி மேற்சொல்ல முடியாது. அதனால் அது சிற்றுணர்வு எனப்படுகிறது. அது அகப் புற அறிவு. தானே பாடுவது பாடும் உணர்ச்சி உயிரில் கலந்து எல்லையின்றி யாண்டும் வேண்டியவாறு புதுப்புதுப் பாடல்களைப் பாடுந் தன்மைத்து. அதனால் அஃது அக உணர்ச்சி அல்லது உயிரொடு கலந்த உள் உணர்ச்சி என்னலாம். அது முற்றுணர்வு எனப்படுகிறது.

### சுட்டுணர்வின்மை

முழு முதல்வன் உயிர்ப்பொருள் உயிரல்பொருள் எல்லாவற்றோடும் பிரிப்பின்றிக் கலந்து நிற்கின்றன். எனவே, அவன் அப்பொருள்களை வேறுநின்று உணரான் ; கலந்து நின்றே உணர்வன். நாம் ஒன்றை நினைக்குங்கால் நெஞ்சொடு கலந்து நின்று நினைக்கின்றோம். நினைக்கப்படும் பொருள் நெஞ்சின்வழி அறிவில் புலனுகின்றது. அப்பொழுது அறிவும் நெஞ்சும் பிரிப்பில் கலப்புடைய ஆகின்றன. ஆனல் அப் பொருளையே கண்ணல் காணும்போது கண்ணும், அப்பொருளும், மனமும், அறிவும் ஒன்றன்பின் ஒன்றுகக் கலந்து காணினும் அப்பொருள் புறத்துப் பருமையாய் உயிர்க்கு வேருய் இருக்கின்றது. முதல்வன் கலப்பு நுண்மையாய் உயிர்க்கு உயிராய் ஒன்ருயிருக்குந்தன்மை. அதனல் அவன் மாட்டுச் சுட்டுணர்வு இன்மை காணப்படும்.

### உயிர் முத்தொழிற்படும்

என்றும் அழியாத உயிரினங்களை முத்தொழிற்படும், எனக் கூறுதல் எங்ஙனம் பொருந்தும் எனில்? உயிா மலம் நீங்குதற்பொருட்டு முதல்வன் இருவினைக்கீடாக உடம்போடு கூடி உலகில் வாழும்படி படைத்தருளுகின்றனன். அங்ஙனம் வாழத் துணைபுரிகின்றனன். பின் புதிய நிலையை எய்துதற்பொருட்டு அவ்வுடலை மாற்றியருளுகின்றனன். இவ்வுடற் சார்பால் உயிர்கள் முத்தொழிற்படுகின்றன. அது பட்டி மண்டபத்து ஒட்டி நிகழும் பேரவைக்கண் வருவாரும் இருப்பாரும் போவாருமாகக் காணப்படுவர். அக்காலத்து அவர்கள்எல்லாரையும் வருவார் இருப்பார் போவார் என்னும் பெயராலேயே அழைப்போம். அங்ஙனம் அவ் அவையினர் முப்பெயர் பெறினும் அவை அவர்க்கு இயல்பாக உள்ளன அல்ல. சார்பினல் வந்தன. அதுபோலவே அழிவில் உயிர்கட்கும் உடற்சார்பால் அழிவுடைய முத்தொழில் பேசப் படுகின்றன.

### சிவசமம்

வீடுபேறு எய்திய உயிர்கள் சிவனேடு ஒப்பர் என்பது அவ்வுயிர்கள் மீட்டும் பிறவாமையால் முத்தொழிற்படா. அதனல் முத்தொழிற்கு உட்படாத சிவனேடு ஒரு தன்மையர் ஆவர் என்பதாம். இது நீர்

வேட்கையுடன் நீரொடு கலப்பின் நீர்வேட்கை அற்று நீரேயாவன். ஆனால் பிறர் வேட்கையைத் தணிக்க அவனால் முடியுமா? முடியாதல்லவா? பசிவேட்கையுடையான் திருமணவீடு செல்லின் அறுசுவை உண்டியை வயிறார உண்டு பசியினைப் போக்குவன். ஆனால் பிறர் பசியைப்போக்க மாட்டுவனோ? மாட்டான் அன்றே. அதுபோல் உயிரும் சிவத்துடன் கூடிச் சிவ சமமாயினும் தான் முத்தொழில் புரியாது. முத்தொழிற் படாமலிருப்பதே பேறு. இவ்வுண்மை,

"செம்பிரத குளிகையினால் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தால் சீவன்
நம்பனுடன் கூடும்எனில் பொன்போல் அல்லன்
நற்குளிகை போலஅரன் நணுகுமலம் போக்கி
அம்பொன்அடிக் கீழ்வைப்பன் அருங்களங்கம் அறுக்கும்
அக்குளிகை தானும்பொன் ஆகாதாகும்
உம்பர்பிரான் உற்பத்தி ஆதிகளுக் குரியன்
உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே."
(ஒன்றினுக்குமே உரித்து) —சிவஞானசித்தியார், கக-கo.

என்னும் திருப்பாட்டாலும் உணரலாம்.

## அணி

"சொற்பொருள் பின்வரும் நிலை" இஃது ஓர் அணி. அஃதாவது வந்த சொல்லும் பொருளும் ஒரு பாட்டில் பல இடத்து வருமானால் சொற்பொருள் பின்வரும நிலை என்பர். 'ஒன்றலா...அங்கு' என்னும் வெண்பாவில் 'ஒன்று அலா ஒன்று' என்னுஞ் சொல் மூன்றிடத்து முழு முதல்வனையே குறிக்கின்றது. அதனால் அது சொற்பொருட் பின்வரும் நிலையென்னும் அணியாகும். இஃது ஒரு படித்தாய பல வளையல்களை அடுக்கு அடுக்காக அணிந்திருப்பது சிறப்பான ஓர் அழகைத் தருவது அல்லவா? அதுபோன்றே சிறந்த அழகைத் தருவதாகும்.

## நிர் அதிசய குணம்

முதல்வன் முற்றுணர்வும், அளவில் ஆற்றலும், பேரருளும், சுதந்திரமும் முதலிய நிர் அதிசய குணங்களையுடையவன். நிர் அதிசய குணம் என்பது மாறில் உறுதியாம் வியத்தகு பண்பு என்க. நிர் என்னும் இடைச்சொல் உறுதிப் பொருளைத்தரும் என்பது நிர்ப்பந்தம் என்பதனால் உணரலாம். அதிசய குணம் என்பது புதுமையாகக் காணப்படும் பண்பு. முழு முதல்வன்பால் அமைந்திருக்கும் முற்றுணர்வு முதலிய எண்குணங்கள் மக்கள் தேவர் முதலாகப் புக்க யாக்கையையுடைய எவ்வுயிர்கள் இடத்தும் காணப்படாத எழிற்பண்பு. இவ்வுண்மை,

"செங்கணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்குமில் லாததோர் இன்பம் "

என்னும் ஆளுடைய அடிகள் திருமொழியாலும் உணர்க.

## முடிந்தது முடித்தல்

ஈறே முதல் எனக் கூறியருளியது "இனிச் சங்காரமே முதலென்றது" என்னும் மேற்கோளை முடித்துக் காட்டினமையான் முடிந்தது முடித்

தலாம். அலுவலகத்தைப் பூட்டியேனும் பூட்டுவித்தேனும் போகும் ஒருவன் மீண்டும் திறக்கத் திறப்பிக்க உரிமையுடையன் ஆவன் அன்றே? அதுபோல் பேரொடுக்கத்தைச் செய்யும் முதல்வனே மீட்டும் படைத்தற்கும் உரியன் ஆவன். அதனால் 'ஈறே முதல்' என முடிந்தது முடித்தல் எனக் கூறினர்.

ஈறு ஒடுக்கத்தைச் செய்கின்ற கடவுளைக் கூறுவதால் ஆகுபெயர்.

## அங்கும் தொரும்பு

உயிர் வீடுபேற்றின்கண்ணும் முதல்வனுக்கு அடிமையேயாம். உயிரினங்கள் சார்ந்ததன் வண்ணமாய் இருக்கும். உயிர்கட்கு எனத் தனித்தன்மை இல்லை. இதற்கு ஒப்பு கண், பளிங்கு, வெளி என்னும் மூன்றுமாம்.

கண் இருளோடு கூடி இருளாயும் ஒளியோடு கூடி ஒளியாயும் இருக்கும். பளிங்கு பற்றப்படும் நிறங்களின் தன்மையாய் இருக்கும். வெளி (ஆகாயம்) ஒவ்வொரு பொருளோடுங் கலந்து அது அதுவாய் இருக்கும்.

'பலவாற்றானும் அடிமை என்பது' இருள் நீங்கிய இடத்தும் கண்ணுக்குக் காட்சி ஞாயிற்றை இன்றி அமையாது. ஞாயிறு தோன்றுதலும் இருள் நீங்கும். நீங்கிய இடத்துக் கண் ஞாயிற்றின் ஒளியுடன் கலந்து ஒளியாய் நிற்கும். ஆனால் காணும்தொழில் அவ்வளவில் நிகழ்ந்துவிடாது. ஞாயிற்றின் ஒளி எல்லாப் பக்கங்களிலும் பரவி எல்லாப் பொருள்களுடனும் கலக்கும். கண் தன்முன் உள்ளதைக் காணுமே அன்றிப் பின் உள்ளதைக் காணாது ஞாயிறு ஒருகாலத்து ஓர் இடத்து எல்லாப் பொருள்களையும் ஒருங்கு காணும். அதுபோன்று கட்டற்ற உயிரும் பேற்றின் கண்ணும் முற்றுணர்வு எய்தினும் முதல்வன் ஒருவனையே காணும். வேறு உயிரையேனும் உலகை ஏனும் காணாது. பள்ளியைச் சார்ந்த மாணவனும் தன்பாடமும் சுவடியும் காணபதல்லால் ஏனையாரையும் அவர்தம் சுவடியையும் அப்பொழுது காணான். ஆனால் ஆசிரியன் அனைத்து மாணவரையும் சுவடியையும் ஒருங்கு காண்பன். அதுபோல் முழுமுதல்வன் எல்லா உயிர்களையும் உலகங்களையும் ஒருங்கு காண்பன்.

உயிர் ஆண்டவன் திருவடியின்பத்தை அழிவின்றி என்றும் ஒரு படித்தாய் நுகர்ந்துகொண்டே இருக்கும். அதனால் உயிர் ஆண்டவனுக்கு என்றும் அடிமையேயாம். அடிமை என்பது வேறொன்றன்கண்ணும் அழுந்தாது எப்பொருளின்கண் உயிர் அழுந்தி நிற்குமோ அவ் உயிர் அதற்கு அடிமையாம். அது நவில்தொறும் நூல்நயத்தின்கண் நாவலன் அடிமையாவது போலாம் அடிமையே இன்புறுவன். ஆண்டானே இன்புறுத்துவன். இது சேயே இன்புறும் தாயே இன்புறுத்தும். அம் முறையில் தாய்க்குச் சேய் என்றும் அடிமையே.

## அடக்கம்

குறைவிலா நிறைவு, கூடும் நிறைவு, கொள் நிறைவு, என ஒன்றனுள் ஒன்று அடங்குவதை மூவகையாகக் கூறலாம். இதனை வியாபகம், வியாப்பியம், வியாத்தி என்பர். இறைவன் குறைவிலா நிறைவு; உயிர்கள் கூடும் நிறைவு; மலமாயை கன்மங்கள் கொள் நிறைவு. வேறோர் ஆற்றால் கூறின் மூன்றற்கும் முறையே தண்கடல், நீர், உப்பு எனவும் கூறலாம்.

வீடுபேற்று நிலையினும் முழுமுதல்வன் குறைவிலா நிறைவே. உயிர்கள் கூடும்நிறைவே. உயிர்கள் முழுமுதல்வனுடன் கலந்து அவன் திருவடி இன்பத்தை நுகருமேயன்றி ஏனைய உயிர்களையும் இறைவன் தொழிலையும் அறியா. இவ்வுண்மை,

"பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்* பார்க்க
வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வயிந்தவத்தின் கலக்கம்
தருஞானம் போகஞா திருஞான ஞேயம்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞானம் இவையெல்லாங் கடந்தசிவ ஞானம்
ஆதலால் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்."

—சிவஞான சித்தியார், கக—உ.

என்னும் சிவஞானசித்தியார் திருப்பாட்டானும் உணர்க.

**அமைவு**

பலர் கொள்கைகளையும் ஒவ்வாமை காட்டி அமைவுபடுத்துவது ஆன்றோர் கடன். அங்ஙனம் அமைவுபடுத்தாவிடில் உண்மை புலனாகாது. உண்மை புலனாகாவிடின் மம்மர் அகலாது. ஆகவே மெய்ம்மை புலனாக மறுப்பும் வேண்டப்படுவதாயிற்று. இச் சூத்திரத்தால்,

பல கடவுட்கோள், சிவனொப்புக்கோள், சிவச்சேர்க்கைக்கோள், சிவத்தோற்றக்கோள், சிவ ஏற்றக்கோள் என்னும் ஐவர் கொள்கைகளும் மறுக்கப்பட்டன. இவ் ஐவரும் முறையே அநேகேசுரவாதி, சிவசமவாதி, சங்கிராந்தவாதி, உற்பத்திவாதி, ஆவேசவாதி என அழைக்கப்படுவர்.

ஒன்றே கடவுள், ஏனைய உயிர்கள் என நாட்டியதால் பல கடவுட்கோள் மறுக்கப்பட்டது. உயிர் ஐந்தொழில் செய்யா என்றமையால், சிவனொப்பும் (சிவசமமும்.), பலவாற்றானும் அடிமை என்றமையால் சிவச்சேர்க்கையும், அதனின் ஈறலா ஒன்று என்றமையால் சிவத்தோற்றமும், அடிமை என்றமையால் சிவ ஏற்றமும் மறுக்கப்பட்டன.

க. **சிவசமம்:** வீடுபேற்றின்கண் உயிருக்கு எண்குணம் உண்டாகும் என்னும் முறைமையைத் தப்பாகக்கொள்வர். உயிர் மாயையினின்று விடுபட்டதும் முக்குணங்களும் நீங்கிவிடும். நீங்கவே ஆண்டவன் அருட்குணம் எட்டும் உயிரின்மாட்டு ஓங்கிவிடும். ஓங்கவே, உயிர் சிவம் என அழைக்கப்படும். இஃது, உள்ளிருக்கும் பொருளின்பேரால் கூடை, கலம், கோணி முதலியன அழைக்கப்படுமல்லவா? அதுபோல் சிவமென அழைக்கப்படுவதாயிற்று. பூ இருப்பின் அக்கூடையைப் பூக்கூடை என்போம். அதுபோல் சிவவிளக்கம் காணும் உயிரைச் சிவம் என்போம். ஆனால் கூடையிலுள்ள பூ நீங்கின் அக்கூடையின்பால் பூமணம் உண்டாகுமா? உயிர்களின்பால் சிவவிளக்கம் நீங்கின் உயிர்கள் சிவமாகா. ஆதலால் உயிர்கள் சிவமாயினும் சிவனுடைய இன்பத்தைமட்டும் துய்த்துக்கொண்டிருக்கும் என்பதுதான் மெய்ம்மையும் பொருத்தமுமாகும்.

அரசன் மனைவி அரசி என அழைக்கப்படினும் அவள் அரசனோடிணைந்து அரசன்பாலுள்ள இன்பந்துய்த்துப் பிரிப்பின்றி வாழ்வள்.

* திருக்குறள், கஉ௮௬. காணுங்காற்.

ஆனால், அரசாளுதல் புரியாள். அதுபோல் உயிர்களும் சிவனுப்பாய்ச் சிவனின்பத்தை நுகரும். இதுவல்லாமல் சிவனுக்குரிய படைப்பாதி ஐந்தொழில்களைப் புரியா. ஐந்தொழில்களும் புரியும் என்பதே சிவனுப் புக் கோளார் கொள்கை. அது பொருந்தாது.

உ. **சிவச்சேர்க்கை**: சங்கிராந்த வாதியின்கோள் முடிவில் உயிர்களும் கடவுளும் ஒன்றாய்ப்போகும் என்பதே. உயிர் வீடுபேற்றினும் அழிவுறாது, அடங்கி, இன்புற்றிருக்கும் என்பதே சித்தாந்தம். அது பல வாற்றானும் அடிமை என்றதனுல் பெறப்படும். இதனால் சிவச்சேர்க்கை மறுக்கப்பட்டது.

ங. **சிவத்தோற்றம்**: (உற்பத்திவாதி) உயிர்கள் மாட்டுச் சிவபெருமானின் எண்குணங்களும் தோன்றும் என்னும் கொள்கை. எண்குணங்கள் தோன்றுவன அல்ல; தோய்வன. தோற்றத்திற்குந் தோய்வுக்கும் வேறுபாடாவது, தோற்றம் பொருளின் குணத்தோடு பிறகுணமும் தோன்றுதல். இது, தூவெள்ளறுவை (ஆடை)யில் கருப்புப்புள்ளி தோன்றுவதை யொக்கும். தோய்வு என்பது தன்குணம் முற்றும் தோன்றாது தன்னால் சாரப்பட்ட பொருட்குணமே முழுவதும் விளங்குதல். இது, வெள்ளாடை முழுவதும் செவ்வண்ணம் தோய்க்கப் பெற்றுச் செவ்வாடை என விளங்குவதை ஒக்கும்.

இங்ஙனமன்றி உயிர்கள் இடையே உற்பத்தியாவன என்று கூறுவாரும் உளர். உற்பத்தி-தோற்றம். தோன்றும் பொருள்கள் எல்லாம் அழியும் என்பது மறுக்கொணாமுடிவு. உயிர்கள் அழியா என்பது 'அதனின் ஈறலா ஒன்று' என்பதன்கண் உயிரும் கடவுளைப்போல் அழிவில்லாத ஒன்று என்று நாட்டப்பட்டமையால் பெறப்படும். இதனால் அவர் கொள்கை பொருந்தாமை காண்க.

ச. **சிவ ஏற்றம்**: சிவ ஏற்றம் என்பது சிவன் ஆவேசம். சிவன் தன்மேல் ஏறியதால் தான் எல்லாஞ்செய்தல் கூடும் என்பது கொள்கை. தெய்வம் ஏறியவன்வழிக் காணப்படும் செய்கை தெய்வத்தின் செய்கையே; வேறன்று. இஃது ஆட்சி ஆணை பெற்று நடத்தும் செய்கை ஆட்சிச் செய்கை ஆவதன்றிச் செய்வான் செய்கை ஆகாமையைப் போன்றது.

தனக்கு எல்லாம் செய்தல்கூடும் என்னும் தன் முனைப்பு உள்ள போது தானற்ற இடத்துத் தோன்றும் வீடுபேறாவதெப்படி? தானற்ற இடம்என்பது உயிர்கள் தம்மை அடிமை எனச் செம்மையாக நினைக்கும் செம்பொருட்டுணிவு.

"பலவாறே தொழும்பாகும் அங்கு" என்னும் அடிமை முறையினால் அவர்கொள்கை பொருந்தாமை காண்க.

## ஐயம்

க. காணப்பட்ட உலகம் நிலைத்திருப்பதைக் காண்கின்றோம். ஆனால் இஃது எப்பொழுது தோன்றிற்று எப்பொழுது ஒடுங்கும் என்பது யார்க்கும் தெரியாது; எந்த அளவையாலும் அளந்து அறியமுடியாது. ஆதலால் உலகம் என்றும் உள்ள அழிவில் பொருள்.

உ. தோன்றி அழியும் என்று கொண்டாலும் இல் பொருள் அதனை தன் சார்பில் தோன்றி அழியும். கானல்நீர் நண்பகல் வெயிலின் கடுமையில் தோன்றி மாலை வெயில மறைவில் மறைவது இதற்கு ஒப்பு.

௩. உலகம் உள்பொருளானால் அது தானே உண்டாகும். அதை உண்டாக்க ஒருகடவுள் வேண்டுவதில்லை. உள்ளபொருள்கள் இரண்டு என்றுகொள்ளுவது பொருந்தாது; குற்றமும் ஆகும்.

௪. இறைவன் வேண்டுமெனக் கொண்டாலும் மாயோன் முதலிய கடவுளரில் ஒருவர்போதும். பேரொடுக்கப் பெரும் பொருளே முழு முதல்வன் என்பதற்கு அளவை என்னை? அளவை உண்டு என்றாலும் அவர் ஒருவராக இருத்தல்முடியாது.

௫. மிகவும் வியக்கத்தக்க இவ்வுலகத்தை எப்படி ஒருவர் செய்திருக்க முடியும்? தேர்முதலிய வியக்கத்தக்க பொருள்கள் ஒருவரால் செய்ய முடிகின்றதா? பலர் கூடியன்றோ செய்கின்றனர். அதுபோலவேதான் உலகத்திற்கும் பல கடவுளர்வேண்டும்.

இப்படிக் கூறுவார் ஐயங்களை அறிவுக்குப் பொருந்தும்படி அகற்றுகின்றார்.

## ஐய நீக்கம்

௧. காணப்பட்ட உலகம் நிலைத்திருக்கின்றது என்னும் சொல்லே நிலையாது ஒருகாலத்து ஒடுங்கும் என்பதையும் குறிக்கும். நிலையும் ஒடுக்கமும் பெறப்படவே தோற்றமும் பெறப்படும். பெறப்படவே, உலகம் அழிவுடைய உள்பொருளே.

௨. உலகம் உள்பொருளே. கானல் வெயிற் கடுமையால் வெட்ட வெளியில் தோன்றும் தோற்றம். இது காலமும் இடமும் தொலைவும் பற்றித்தோன்றுவது. உலகம் அப்படியன்று; எல்லாக் காலத்தும் எல்லா இடத்தும் ஒன்றுபோல் தோன்றுவது; ஆகையால் உள்பொருளே. சார்பில் தோன்றுவதன்று. காரணகாரியத் தொடர்பாய்த் தோன்றுவது.

௩. உள்பொருள் காரியப்படும்போது ஒரு வினைமுதற்காரணமாகிய கருத்தாவாலேயே உண்டாகும். மண்ணிலிருந்து குடம்முதலிய காரியங்கள் குயவனாகிய கருத்தாவால் உண்டாகுமல்லவா? அதுபோலக் கொள்க.

௪. ஒடுக்குகின்றவனே முழுமுதல்வன். படைப்போனும் காப்போனும் ஆகிய இருவரும் அன்னரல்லர். அஃது அவ்வச் சொல்லின் பொருள் விளக்கவே விளங்கும்.

௫. தேர் முதலியன செய்வதற்குப் பலர்வேண்டும் என்பது பொருந்தும். அவர்கள் உயிரினத்தர். சிற்றறிவும் சிறுதொழிலும் கருவிகொண்டு செய்யும் ஆற்றலும் உடையவர். கடவுள் அத்தகையர் அல்லர். கலந்து இயக்கும் பேராற்றல் வாய்ந்தவர். இஃது **'இவ்வாறாக'** என்னும் கருத்தால் மட்டும் செய்தருளுகின்றனர். அதற்குப் பல கடவுளர்வேண்டும் என்னும் கொள்கை எப்படிப் பொருந்தும்? எனவே எல்லா வலிமையுமுடைய முழுமுதல்வர் ஒருவரே அமையும். ஏனைக்கடவுளரும் உயிரினத்தவரே. அவரையும் ஒடுக்கித் தான்மட்டும் ஒடுங்காது* நிலைபெற்று நிற்பன் என்னும் உண்மை, ஆளுடைய பிள்ளையார் திருப்பாட்டாற் காண்க. அது வருமாறு:

* புறம். ௩௫௬. ௧௭௧. திருக்குறள், ௪௫௬. ஒறுத்தார்க்கு.

"தாங்கரும் காலம் தவிரவந் திருவர்
 தம்மொடும் கூடினார் அங்கம்
பாங்கினால் தரித்துப் பண்டுபோல் எல்லாம்
 பண்ணிய கண்ணுதற் பரமர்
தேங்கொள்பூம் கமுகு தெங்கிளங் கொடிமாச்
 செண்பகம் வண்பலா இலுப்பை
வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி
 மிழலையான் எனவினை கெடுமே." — ட. கககூ-ச.

## ஏதுவும் பயனும்

கூறுகள் ஒன்றற்கு ஒன்று ஏதுவும் பயனுமாய் வருகின்றன. அதனால், அவற்றை ஒரு சூத்திரத்தாற் கூறுகின்றார்.

க. **'அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்'** ஏது.

உ. **'தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம்'** பயன்.

ங. (இப்பயனே) 'தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம்' **ஆதலின்** ஏது. **'அந்தம் ஆதி என்மனார் புலவர்'** பயன்.

## அருள் நூல்

**சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு (சிவயநம)** என்னும் மெய்ப் பொருள்களைப்பற்றிக் கூறும் நூல்களே அருள்நூல்கள் என்ப. அருள்நூல்கள் கடவுளைப் பற்றிக்கூறும் இடங்களிலெல்லாம் கடவுள் ஒருவரே, பலரல்லர் என்றே அறுதியிட்டுக் கூறுகின்றன. உயிர்கள் பல என்பதே உண்மை. இவ்வுண்மைகளைச் செம்மையாக விளக்குவன திருமுறைகளும் சித்தாந்த நூல்களுமே யாம்.

திருமுறைகண்ட புராணத்துள்

"அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடும்
 அதுபோலன் றிதுவென்று முளதா முண்மைப்
பரபதமும் தற்பரமும் பரனே யன்றிப்
 பலரில்லை யென்றெழுதும் பனுவல் பாரின்
எரியினிடை வேவாதாற் றெதிரே யோடும்
 என்புக்கும் உயிர்கொடுக்கும் இடுநஞ் சாற்றும்
கரியைவலி விக்கும்கல் மிதக்கப் பண்ணும்
 கராம்மதலை கரையிலுறக் காற்றுங காணே."

—திருமுறைகண்ட புராணம், கஎ.

இதன்கண் எழு திருவருட் செயல்கள் கூறப்பட்டுள்ளன. அவை,

க. கடவுளுண்மை எழுதிய திருமுறைத் திரு எடு தீயில் வேவாது நிற்றல்;

உ. வையை யாற்றிலிட்டபோது அவ் எடு ஆற்றுக்கு எதிரே ஓடுதல்;

ங. திருமயிலாப்பூரில் பூம்பாவை அம்மையாரின் எலும்பினைப் பெண் உருவாகச் சமைத்தல். இம்மூன்றும் ஆளுடைய பிள்ளையார் திருவருட் செயல்கள். அவர்தம் திருமுறையும் மூன்று.

ச. அமணர் சொல்வழி நின்று அறமுறை பிழைத்த பல்லவ மன்னனால் கொடுப்பித்த நஞ்சினை உண்டு இறவாதிருத்தல்;*

ரு. அம்மன்னன் ஏவலினால் கொல்லவிட்ட யானையை வணக்குவித்தல்;

சு. கல்லிலேசேர்த்துக் கட்டிக் கடலில் தள்ளிய காலத்து அக்கல்லையே மிதப்பாகக் கொண்டு கரை ஏறல். இம்மூன்றும் ஆளுடைய அரசின் திரு அருட் செயல்கள். அவர்தம் திருமுறையும் மூன்று.

எ. திருஅவிநாசியில் முதலையுண்டு மாண்டுபோன பிள்ளையை நெடுநாட்களுக்குப் பின் பெற்றோர்க்கிரங்கி அருளால் கடந்த அகவையுடன் வரவழைத்தல். இவ் ஒன்று ஆளுடைய நம்பியின் திருவருட் செயல். அவர்தம் திருமுறையும் ஒன்று.

இத்திருவருட் செயல்கள் ஏழும் முறையே மும்மாயை, மூவ்வினை, மலப்பசை நீக்கங்களை ஒருபுடையாக நினைவூட்டுவன. மும்மாயை: உணர்த்துமெய், உணர்வுமெய், உடன்மெய் என்பன. மூவ்வினை: தீவினை, நல்வினை, இறைபணி என்பன. மலப்பசை (வாசனாமலம்) அவா என்ப.

மும்மாயை மூவ்வினை மூளும் மலப்பசைஏழ்
அம்மஅருட் செய்கைமுறை அங்கு.

## தொகைப் பொருள்

முதற்சூத்திரத்தால் காணப்பட்ட உலகைக்கொண்டு காணப்படாத கடவுளுக்கு உண்மை கூறுகின்றார். உலகம் பிரிக்கக் கூடிய பல உறுப்புக்களைக் கொண்டது. அவ்வுறுப்புக்கள் கடல் மலை மண் காடு முதலியனவாகக் கூறப்படும் அஃறிணையும், ஆண்பெண் பலர் என்று கூறப்படும் உயர்திணையும் ஆகும். இவை, தோற்றம் நிலை இறுதி என முத்தொழில்களைக் கொண்டன. முத்தொழில்கள் என்றும் இடையறாது நிகழ்வன. உயர்திணை அஃறிணைக்குரிய உடலுறுப்புக்கள் அறிவில்லன. எனவே அவை தாமே தோன்றா. ஒரு முழுமுதல்வனாலேயே தோற்றுவிக்கப் படுதல்வேண்டும். ஆகவே உலகம் தோற்றுவிக்கப்பட்ட உள்பொருள். அவ்வுலகம் உயிர்கள் இளைப்பாற ஒடுக்கப்படும். இது விடுமுறைக் காலத்தில் பள்ளிக்கூடம் மூடப்படுவதை ஒக்கும். மலம் அகலுதற் பொருட்டு மீண்டும் தோற்றுவிக்கப்படும். கற்றுத்தேறுதற் பொருட்டு மீண்டும் பள்ளிக்கூடம் திறக்கப்படுவதை ஒக்கும்.

எனவே அந்தத்தைச்செய்யுங் கடவுளே உலகிற்கு ஆதி-முதற் கடவுளராவர். 'என்மனார் புலவர்' என ஆசிரியர் அளவை நூலுணர்ந்தாரைக் கூறுவதால் இஃது எம்மொழியினின்றும் எந்நூலினின்றும் மொழிபெயர்க்கப்பட்டது அன்று என்பது தேற்றம். என்று கூறுவர் முதல்வர் என்றோ, என்று கூறும் ஆகமம் என்றோ கூறாமை குறிக்கொண்டு நோக்கத்தக்கன.

தாய் மொழியாம் தண்தமிழில் தண்அருளால் தோன்றியதே
வாய்மைமெய் கண்டார்நூல் வாழ்த்து.

**குறிப்பு:** மெய்கண்ட நாயனாரின் தலைமாணாக்கர் அருணந்தி சிவநாயனார். அவர் மெய்கண்டார் அருளிய தனித்தமிழ் முதன்மைச் சிவ

* திருக்குறள், ருஅ0. 'பெயக்கண்டும்.'

ஞான போதத்திற்கு விரிந்த பேருரையொன்று செய்யுள் நடையில் யாத்துள்ளார். அந்நூல் "**சிவஞான சித்தியார் சுபக்கம்**" எனப்படும். அது முந்நூற்று இருபத்தெட்டுச் செய்யுட்களையுடையது. பன்னிரு சூத்திரங் களையும் அப்படியே விரித்தமைத்து அதிகரண முதலிய கூறுகளுடன் விளக்கி அருளுகின்றனர். அந்நூலைச் சித்தாந்தம் பயில்வார் உடன்வைத்து உறுதுணையாப் பயில்வது நன்று. பயில்வார்க்கு எளிதாகும் பொருட்டுப் பாட்டு எண்களை முதற்குறிப்புடன் வரைகின்றாம். இவர் இந்நூலேயன் றிச் **சித்தியார்பரபக்கம், இருபா இருபது** என்னும் வேறு இருநூற்களும் அருளியுள்ளார். சுபக்கம் - தன்கோள். பரபக்கம்-பிறன்கோள். முதற் சூத்திரம், க. ஒருவனோடு. முதலதிகரணம் (க.பூதாதி) அ. காயத்தி. இரண் டாம் அதிகரணம் (உ இலயித்த) ௩உ. உயிரவை. (உ.-இலயித்தது) ௩௫. இறுதியாம். (௩.வித்துண்டாம்) கஎ. புத்திமன். (ச.நோக்காது) ௩௦. சீலமோ. ௩௩.. தோற்றுவித்து. மூன்றாம் அதிகரணம், (௫.ஒன்றலா). கூச. சிவனும்.

> காணும் உலகுடல்கள் கண்ணுதலோன் தன்படைப்பே
> ஆணுவினை மும்மைஅந்தம் ஆதியாம்—காணும்
> "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
> மருளானும் மாணாப் பிறப்பு." —திருக்குறள், ௩௫க.

புறநானூறு, ௩௫௬. கள்ளி, இதன்கண் புறங்காட்டின் புறங்காணும் உயிர் கள் இல்லாமைபோல இறைவன் புறங்காணும் புறங்காடும் இன்று.

இவ்வுண்மை ஆளுடைய பிள்ளையாரருளிய திருநெறிய தமிழின் முதல் திருப்பாட்டாம் "தோடுடைய" என்னும் பாட்டின் கண் "காடு டைய சுடலைப்பொடி பூசி" எனவரும் சுடலை புறங்காடேயாகும். அப் புறங் காட்டில் ஆண்டவன் ஆடுவன் என்பதனால் விளங்கும். மேலும் சுடலையென்பது சுடலையுள்ளிட்ட எல்லா உலகுடல்களையும் உயிர்களை யும் தன் பெருவெளியில் ஒடுக்குவதைக் குறிக்கும் உருவகமேயாம். அது,

> "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
> கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகல்குறிக்
> கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ.
> —கலித்தொகை, கடவுள்வாழ்த்து.

என்னும் சங்கச் சான்றோர் அருளிய கடவுள் வாழ்த்துப் பாட்டா னுணரலாம்.

> "தோடுடையசெவி யன்விடை ஏறியோர் தூவெண்மதி சூடி
> காடுடைய சுடலைப் பொடிபூசியென் உள்ளங்கவர் கள்வன்
> ஏடுடையமல ரால்முனை நாள்பணிந் தேத்தஅருள் செய்த
> பீடுடையபிர மாபுர மேவிய பெம்மானிவன் அன்றே."

> வெல்விடை யாற்படைப்பாம் விண்மதி யாற்காப்பாம்
> தொல்சுட லைதுடைப்பாம் தூக்களவால்—நல்மறைப்பாம்
> கேட்கும்அருள் தோடுடைய கேழில்செவி யால்அருளாம்
> பாட்டுதிருப் பிள்ளையருட் பண்பு.

---

# இரண்டாம் சூத்திரம்

அவையே தானே ஆயிரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

**எ - து. சூ - ம். எனின். புனருற்பவம் வருமாறுணர்த்துதனுதலிற்று.**

*எ - து. க-ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துதனுதலிற்று.*

(இ - ள்.) உலகம் ஒடுங்கியினின்றும் மீளவுளதாமாற்றை வகுத்துணர்த்துமுகத்தானே துணைக்காரண முதலியன இல்வழி இறைவன் உலகிற்கு நிமித்தகாரணனாதல் சாலுமாறு யாங்ஙனம் என்னுங் கடாவை யாசங்கித்து அவற்றது உண்மைக்குப் பிரமாண முணர்த்துதனுதலிற்று இச்சூத்திரம் (எ - று).

சூத்திரவியைபும் இதனானே விளங்கும்.

ஒடுங்கியுளதாமென்றவழி ஒடுங்கியினின்றும் மீளவுளதாவது எவ்வாறென்று அவாய் நிற்றலின், அவ்அவாய் நிலைபற்றிப் புனருற்பவமே ஈண்டுக் கூறப்பட்டது.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: (மேலைச் சூத்திரத்து எடுத்துக்கொண்ட சங்காரகாரணனாகிய முதல்வன் கலப்பினால் உடலின் உயிர்போல்) அவ்வுயிர்களேயாய், (பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல் அவற்றின்) வேறுமாய், (உயிர்க்கு உயிராதற்றன்மையாற் கண்ணொளியின் ஆன்மபோதம்போல்) உடனுமாய் நின்று, ஆணையென்னும் பரியாயப் பெயருடைய தனது சிற்சத்தியான் (வரும்) இருவினைகளான் (அவை) இறத்தல் பிறத்தல்களைப் புரியும்வண்ணம் (அவ்வாணையிற்) பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பன் (எ-று).

அவையே தானே ஆயென்பதனை இரட்டுற மொழிந்து கொண்டுரைக்க. இக்கருத்தேபற்றி* "உலகெலா மாகிவேறாய் உடனுமாய்" என்றார் வழிநூலாசிரியரும்.

மேலைச்சூத்திரத்தின் 'அந்தமாதி' என்புழி விகாரத்தாற் றொக்க பிரிநிலையேகாரத்தான் விலக்கப்பட்டு நின்ற சேதனப் பிரபஞ்சத்தை ஈண்டு அவையெனச் சுட்டிக்கூறினர்.

'ஒடுங்கியுளதாம்' என்றதற்கேற்ப ஈண்டும் போக்கினை முற்கூறினார்.

---

* சிவஞானசித்தி, சுபக்கம், இரண்டாஞ் சூத்திரம்.—க.

புரிதல் எப்பொழுதும் மேற்கோடல்.

ஆணையினென்பது சிங்கநோக்காய் இருவினையென்பத ேனாடும் நீக்கமின்றி யென்பதனோடும் இயைந்து பொருடந்து நின்றது. ஆண்டு இன்னுருபு, முன்னர் ஏதுப்பொருட்கண்ணும், பின்னர் நீக்கப்பொருட்கண்ணுமாய் நின்றது. இன்னென்பது சாரியையெனக் கொண்டு ஈரிடத்தும் ஏற்கும் உருபுகள் விரித் துரைத்தலுமொன்று.

அன்றே அசை; அநாதியே இவ்வாறு நிற்குமெனினும் அமையும். ஆய்ப் புரியநிற்கும் எனவே, அச்செயல்களெல்லாம் முதல்வன் கரணத்தானன்றிச் சங்கற்ப மாத்திரத்தாற் செய்வ னென்பது பெறப்பட்டது.

இதனானே மேல் 'அந்தம்' என்று உத்தேசமாயெடுத்துக் கொண்ட முதல்வனுக்கு இலக்கணங் கூறியவாறுமாயிற்று. இது தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஆணையினிருவினையினெனவே, தனது சிற்சத்தி துணைக் காரணம், இருவினையும் அதன்வழித்தாய துணைக்காரணம். இரு வினையினெனவே அதற்குப் பற்றுக்கோடுண்டென்பதூஉம் பெற்றுமாகலின், அது முதற்காரணமென்பதூஉம் இருவினையிற் போக்குவரவுபுரியவெனவே ஒடுங்கியின் மீளவுளதாங்கால் இரு வினைகட்கேற்பப் பலவேறு வகைப்பட்டு விரியுமென்பதூஉம் போந்தவாறு காண்க.

இதனுள் அவையே தானேயாய் என்பதோரதிகரணம்; ஆணையின் இருவினையின் என்பதோரதிகரணம்; போக்குவரவு புரிய என்பதோரதிகரணம்; ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே என்பதோரதிகரணம்; ஆக நாற்கூற்றது இச்சூத்திரமெனக் கொள்க.

## விளக்கம்

* 'அவையே............அன்றே.'

(**போ - ரை.**) பேரொடுக்க முதலாகிய முழுமுதல்வன் அன்பின் **கலப்பால்** அவ்வுயிர்களோடு **ஒன்றாய்**, அறிவின் சிறப்பால் அவ்வுயிர்களின் **வேறுமாய்,** ஆற்றல் துணையால் அவ்வுயிர்களின் **உடனுமாய்** நின்று ஆணை என்னும் ஈட்டுப் பெயருடைய தனது அறிவாற்றலால் வரும் இருவினைக ளான் அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம் அவ் ஆணையில் பிரிப்பின்றி ஒற்றுமைத் தொடர்பாய் நிற்பன்.

முதல்-காரணம், காரியத்திற்கு முன்னிற்றலால் முதல் காரணம் எனப்பட்டது. முதல்வன் கலப்பினால் உயிர்களுடன் ஒன்றாயிருப்பதற்கு ஒப்பு உடலின்கண் உயிர் கலந்து நிற்கும் நிலையாகும். பொருள்தன்மை

* சித்தியார். இரண்டாம் சூத்திரம், க. உலகெலாம்.

யால் வேறாயிருப்பதற்கு ஒப்பு கண்ணின்கண் ஞாயிற்றின் கதிர்கலந்து கண் ணொளியை (பொருளின் கண்ணும் பட்டு) விளக்குவதாகும். உயிர்க்கு உயிராதல் தன்மையால் உடனாய் இருப்பதற்கு ஒப்புக் கண்ஒளியோடு உயிர் அறிவு கலந்து பொருள்களைக் காட்டிக் காணும் தன்மையாகும்.

சமவேதம்-நீக்கமின்றி யிருப்பது. சமவாயம்-நீக்கமின்றியிருத்தல்.

## இரட்டுற மொழிதல்

ஒரு சொல்லிற்கு இரண்டு பொருள் படும்படியாகக் கொண்டுகூட் டிப் பொருள் காண்டல். இங்கு **'அவையே தானே ஆய்'** என்பதற்கு அவையே ஆய், தானே ஆய், அவையே தானே ஆய் என முத்திறப் பொருள் கொள்ளப்பட்டது.

அவையே ஆய், என்பது கலப்பு. தானே ஆய், என்பது பொருள் தன்மை, அவையே தானே ஆய், என்பது உயிர்க்கு உயிராதல் தன்மை.

இக் கருத்து,

"உலகெலாம் **ஆகி வேறாய் உடனுமாய்** ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத்து ஆணையின் அமர்ந்து செல்லத்
தலைவனாய் இவற்றின் தன்மை தனக்கெய்தல் இன்றித் தானே
நிலவுசீர் அமல னாகி நின்றனன் நீங்கா தெங்கும்."

—சித்தியார். ௨ . ௧.

என்னும் அருணந்தி சிவநாயனார் திருப்பாட்டானும் விளங்கும்.

## முத்திற மாண்பு

முழுமுதல்வன் 'நிலவுசீர் அமலனாகித்' தானேயாய் நிற்கும் நிலை **சிவம்.** உலகெலாம் ஆகி வேறாய் உடனுமாய் உயிர்வழி நிற்குநிலை **ஆற்றல்** (சத்தி). இவ்விரண்டும் நீங்காமையான் (தாதான்மியம்) இருதிறப்பட்டு நின்று தன் ஆற்றலால் ஐந்தொழில் நிகழ்த்துந் தன்மையில் **தலைவன்** (பதி) எனப் பெயர் பெறுவன். ஆற்றல்-மறைப்பாற்றல் (திரோதானசத்தி).

உலகம் - உயிர்கள். ஒளி - ஆற்றல். தலைவன் - பதி.

"ஈறாய்முதல் ஒன்றாயிரு பெண்ஆண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்அவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை **தானாய்**
**வேறாய் உடன் ஆனா**னிடம் வீழிம் மிழலையே."   —௧. ௧௧-௧.

ஆளுடைய பிள்ளையார் அருளிய இத்திருப்பாட்டின்கண் **தானாய் வேறாய் உடன் ஆனான்** என முத்திறமாண்பும் ஒருங்கமைந்து வருதல் உற்றுநோக்கி உளங்கொளற் பாலது. மேலும் இத்திருப்பாட்டு மெய் கண்டான் செய்தருளிய தமிழ் நூற்குக் கருவாய் அமைந்துள்ளது. அதனை யும் சிறிது காண்பாம்.

ஈறாய்முதல் ஒன்றாய் என்றதனால் 'அந்தம் ஆதி' என்ற முதற் சூத் திரமும், இருபெண் ஆண் (அம்மையப்பர்) என்பதனால் 'ஆணையின் நீக்க மின்றி நிற்கும்' என்ற இரண்டாம் சூத்திரமும், 'குணமூன்றாய்' என்பத னால் அமைதி எழுச்சி அழுந்தல் ஆகிய முக்குணமயமாம் 'மாயாதனுவி னுள் ஆன்மா' என்னும் மூன்றாம் சூத்திரமும், (நான்காம் சூத்திரம் இது வும் அது என மாட்டெறியப் படுதலால், மூன்றன்கண்ணே அடங்கும்.)

'மாறுமறை நான்கு' என்பதனால் 'தாந்தம் உணர்வின் தமியருள்' என்னும் ஐந்தாம் சூத்திரமும், 'பூதம் அவை ஐந்து' என்பதனால் 'இருதிறன் அல்லது சிவசத்து' என்னும் ஆறும் சூத்திரமும், (ஏழாம் சூத்திரம் 'மேலதற்கோர் புறனடை' என்பதனால் ஆறன்கண் அடங்கும்.) 'ஆறுர்சுவை' என்பதனால் 'விட்டு அன்னியம் இன்மையின் அரன்கழல் செலும்' என்னும் எட்டாஞ் சூத்திரமும், 'ஏழோசை' என்பதனால் 'விதி எண்ணும் அஞ்செழுத்தே' என்னும் ஒன்பதாம் சூத்திரமும், 'எட்டுத்திசை தானய்' என்பதனால் 'ஏகனகி' என்னும் பததாஞ்சூத்திரமும், 'வேறய் உடன் ஆனன்' என்பதனால் 'கண்டுகாட்டலின்' என்னும் பதினேராம் சூத்திரமும், 'இடம் வீழிம் மிழலை' என்பதனால் 'அரனெனத் தொழுமே' என்னும் பன்னிரண்டாம் சூத்திரமும் குறிப்பால் பெறப்படுதல் காண்க.

### அவை—உயிர்கள்

ஈண்டு அவை எனச் சுட்டப்படுவது உயிர்களை. முதற் சூத்திரத்தில் 'அந்தம் ஆதி' என்றதில் அந்தமே என்றிருத்தல்வேண்டும். ஏகாரம் பிரிநிலை. இது செய்யுள் திரிபால் தொக்கது. இப்பிரிநிலை ஏகாரத்தால் விலக்கப்படுவது உயிருலகம் (சேதனப்பிரபஞ்சம்). அவ்வுயிர்களை அவை எனச் சுட்டினர்.

### போக்கு

முதற் சூத்திரத்தில் 'ஒடுங்கி (மலத்து) உளதாம்' என்று கூறியருளியதற்கு இணங்க இவ் இரண்டாம் சூத்திரத்துப் 'போக்கு வரவு' எனப் போக்கினை முற்கூறினர். புரிதல் எப்பொழுதும் மேற்கோடல். அஃதாவது இறப்புப் பிறப்பு இடையறாது நிகழ்ந்துகொண்டிருத்தல்.

வள்ளுவப் பெருந்தகையாரும் 'போக்கினையே' முற்கூறினர். அது,

"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு." —திருக்குறள், ௩௩௯.

இவ் உண்மை,

"துறக்கப் படாத உடலைத் துறந்துவெம் தூதுவரோடு
இறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தால் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோ* என்றென் னுள்ளங் கிடந்து மறுகிடுமே."
—௪. ௧௧௩-௮.

என்னும் ஆளுடைய அரசர் திருப்பாட்டாலும் உணரலாம்.

### அரிமாநோக்கு

ஆணையின் என்பது அரிமா (சிங்கம்) நோக்காய் இருவினை என்பதனேடும் நீக்கமின்றி என்பதனேடும் இயைந்து பொருள்தந்து நின்றது. 'ஆணையின் இருவினை' என்பது ஆணையால்வரும் இருவினை. ஈண்டு 'இன்' ஆல் என்னும் ஏதுப்பொருளை உணர்த்திற்று. 'ஆணையின் நீக்கமின்றி' என்பது ஆணையின் நின்றும் நீக்கமில்லாமல் என்று பொருள்படும். அப்பொழுது 'இன்' நீக்கப்பொருளை உணர்த்தும் உருபாம். இன் என்பதை இரண்டிடத்தும் சாரியையாகக் கொள்ளலாம். கொண்டால் 'ஆணையால்' என மூன்றுவதும், 'ஆணையின் நீக்கமின்றி' என ஐந்தாவதும் விரிக்க.

---

* நற்றிணை, ௩௧௭. 'தோளும்'

## அசை

'அன்றே' அசை. அல்லது தொன்மையே - அந்நாளிலே (அநாதி) என்றும் பொருள் கொள்ளலாம். அப்படிக்கொண்டால் முழுமுதல் வன் தொன்மையிலேயே உயிர்களோடு ஒன்ருய் வேருய் உடனாய் நிற்கின்ருன் என்று பொருள்படும். இதுவும் சிறந்த மெய்ப்பொருளே யாம்.

## எண்ணத்தால் இயற்றல்

'ஆய்ப் புரிய நிற்கும்' எனவே அசைசெயல்களெல்லாம் திருவுள்ளம் (சங்கற்பம்) கொண்ட அளவானே நிகழ்வன. கருவிகொண்டு செய்வன் எனின் செயப்படுபொருட்கும் கொள்வோர்க்கும் வேருய்ச் செய்வோன் இருக்கும நிலையை ஆண்டவன் எய்துவன். எதுபோல் எனின்? குடத்தைச் செய்யும் குயவன், செயப்படுபொருளாகிய குடத்திற்கும் அதனைக் கொள்வோராகிய மாந்தர்க்கும் வேருய் இருப்பது கண்கூடன்ருே! ஆண்டவன் கலந்து நின்று இயக்குவதால் கருதும் எண்ணத்தளவானே செய்தருள்வன். அதற்கு ஒப்பு:

உயிர் உடலொடு கலந்து உடலை இயக்குகின்றது. அங்ஙனம் உடலை இயக்கும் உயிர் கலப்பாயிருப்பதால் நினைப்பளவானே உடல் இயங்குகின்றது. எடுத்துக்காட்டாக நாம் திருக்கோவிலுக்குச் செல்லவேண்டுமென்று நினைத்தால் உடனே ஒருப்பட்டுச் செல்லுகின்ருேம். ஏனையாரைச் செல்லச் செய்யவேண்டுமாயின் நாம் அவர்களுக்கு வேருயிருப்பதால் நினைப்பளவால் முடியாது. பின் சொல்லாலேனும் எழுத்தாலேனும் சொல்லுவிப்பதாலேனும் அவர்களைப் போகச்செய்தல்வேண்டும். ஆண்டவன் கலந்து ஒன்ருயிருப்பதால் 'இஃது இவ்வாருருக' என்னும் எண்ணத்தளவானே எல்லாம் செய்தருள்வன். ஒருப்பாடு-தயார்; சமைவு.

இவற்றைக் குறிக்கும் வெண்பா :

ஓங்கும் உடலசைக்க எண்ணம்ஒன்றே ஆம்உயிர்க்கு
நீங்கா நிலையதனுல் நேர்ந்தபிற—தாங்குகலன்
வேண்டுமால் முன்னேனும் ஒன்ருய்வே ருயுடனாய்
ஆண்டமையால் எண்ணமே ஆம்.

## குறியீடு

ஒருபொருளின் தன்மை (இலக்கணம்)யை ஆராய்வதற்கு முதற்கண் அப்பொருளைப் பெயரளவானே குறியிட்டு ஆளுதல்வேண்டும். அக்குறியீடு உத்தேசம் என்று வழங்கப்படும். 'அந்தம்' என்று குறிசெய்து எடுத்துக்கொண்ட முதல்வனுக்கு இலக்கணம் கூறியவாறும் ஆயிற்று. இது சார்பு இலக்கணம் எனப்படும். சார்பு இலக்கணம் பொது இயல்பு. இதனையே தடத்தலக்கணம் என்பர்.

## மூவகைக் காரணம்

ஆணையின் இருவினையின் எனவே, வினைமுதற் காரணனாகிய ஆண்டவனின் அறிவாற்றல் தற்கிழமைத் துணைக்காரணம். இருவினை அதன் வழித்தாய பிறிதின்கிழமைத் துணைக்காரணம். எடுத்துக்காட்டாக எழுதுவதற்குக் கை தற்கிழமைத் துணைக்காரணம். எழுதுகோல் கையின் வழித்தாய பிறிதின்கிழமைத் துணைக்காரணம். இருவினையின் எனவே

அவற்றிற்குப் பேரொடுக்கம்வரை இறுப்புமெய் (புத்திதத்துவம்) பற்றுக் கோடு. பேரொடுக்கததின்பின் மாயை பற்றுக்கோடு. அம்மாயை பொருள் முதற்காரணமாகும். வினைமுதற்காரண மெனினும் பொருட்டுக்காரண மெனினும் நிமித்த காரணமெனினும் ஒன்றே. பொருள்முதற்காரணம் எனினும் முதற்காரணமெனினும் ஒன்றே.

உயிர்கள் பலவேறு வகைப்பட்டுத் தோன்றுவதற்குக் காரணம் இரு வினையின் போக்குவரவு புரியுங்கால் ஒடுங்கியின் நின்று மீள உள தாம்; மீளஉளதாம் பொழுது இருவினைகட்கு ஏற்பப் பலவகையாகத் தோன்றும்.

## வினைமாயை உண்மை

முதற் சூத்திரத்தால் காணப்பட்ட உலகத்தைக் கொண்டு வழியள வையான் காணப்படாத கடவுளுண்டெனக் கூறினர். அவ்வுலகத் தோற்றத்திற்கு முதற்காரணம் **மாயை.** துணைக்காரணம் ஆணையாகிய ஆண்டவன் **அறிவாற்றல்,** அதன் வழியாய்வரும் **இருவினை.** இவைகளை வழியளவையான் உண்டென இச்சூத்திரத்தால் கூறுகின்றார்.

## ஐவகை இயைபு

க. முறைமை உ. ஐயம் (ஆசங்கை) ங. அவாய்நிலை ச. பெரும் பிரிவு (அதிகாரம்) ரு. நூலியைபு என, இயைபு ஐவகைப்படும். இவ் ஐவகை இயைபினுள் நூலியைபு அறிவெனனும் ஞானபாதப் பொரு ளியல் ஆராய்தல். பெரும் பிரிவாகிய அதிகார இயைபு கட்டினின்ற (பெத்தத்தினின்ற) நிலைபற்றி இலக்கணங் கூறுதல் முன் ஆறுசூத்திரத் திற்கும் ஒக்கும். எனவே, இவை இரண்டும் கூறுமே விளங்கும். ஏனைய முறைமை, ஐயம், அவாய்நிலை என்னும் மூன்றனுள் அவாய் நிலைபற்றிய இயைபு சிறந்தது.

## அவாய் நிலை

முதற் சூத்திரத்துள் உலகம் ஒடுங்கியினின்றும் மீளவுண்டாம் என் றனர். மீள உளதாவது எவ்வாறு? என்ற அவா உண்டாகின்றது. அவ் அவாய்நிலைபற்றி மீண்டும் உலகம் தோன்றும் என்பது இரண்டாம் சூத்திரத்தில் கூறியருளுகின்றார். மீளத்தோன்றுதல் புனர் உற்பவம். இதன் முன்தோற்றம் தொடக்கத் தோற்றம் எனப்படும். இதுவே முதலுற் பவம். தொடக்க தோற்றக்காரணம் நுண் உணர்விஞர்க்கே புலனும். மீளத் தோன்றும் தோற்றக் காரணம் எல்லார்க்கும் புலனும். அஃது இருவினை.

## முறைமை, ஐயம்

முதற் சூத்திரத்தில் குறியீட்டால் (உத்தேசம்) பெயர் மாத்திரை யான் 'அந்தம்' என எடுத்துக்கொண்ட இறைவனுக்கு இலக்கணங் கூறு தல் **முறைமை.** அவ் இலக்கணத்தை இவ் இரண்டாம் சூத்திரத்தில் கூறு கின்றார். இது முறைமை பற்றிய இயைபு ஆகும்.

இறைவன் வினைமுதற்காரணன் (நிமித்தகாரணன்) ஆதற்குத்துணைக் காரண முதலிய உண்மைக்கு அளவை கூறல்வேண்டும். அல்லாவிட்டால் வினைமுதற்காரணன் ஆதல் பொருந்தாதென்னும் ஐயம் தோன்றும் அல்

லவா? அவ் ஐயம் மாயை வினை உண்மைக்கு அளவை கூறுமுகத்தான் இச் சூத்திரத்தான் நீக்கப்படுதலின் இஃது ஐயம் பற்றிய இயைபு ஆகும். முறைமைபற்றிய இயைபை அதிகரண இயைபெனவும் கூறுவர். அதிகரணம்-கூறு.

நூலே பெரும்பிரிவு நோக்கியல் சூத்திரம்
சால்கூறே டைந்தியைபு சாற்று.

## தொடக்கத் தோற்றம்

உயிர்கள் தொன்மையிலேயே மலச்சார்புடன் கிடந்தன. உயிர்களின் அன்பு அறிவு ஆற்றல்களை (இச்சை ஞானம் கிரியை) மல ஆற்றல் விளங்க ஒட்டாது மறைத்துக்கொண்டிருந்தது. இஃது ஆடையில் பற்றிய அழுக்கு அவ் ஆடையின் வெண்மையை மறைத்துக்கொண்டிருப்பதை யொக்கும். அம்மலவாற்றலை அகற்ற ஆண்டவன் உலகுடல் உண்பொருள்களாகிய மாயையையும், தொன்மை வினை என்னும் வினைத்தன்மையையும் அவ்வுயிர்களுடன் இயைத்தனன். இவ் இயைப்பையே படைப்பு என்பர். ஆடையின் அழுக்கு அகற்றும் வண்ணான் மெல்லிய ஆடையின் அழுக்கை அகற்ற, மேலும் அழுக்காகிய சாணம் உவர்மண் இவற்றை அவ் ஆடையோடு கூட்டுவன். கூட்டி அவ் ஆடையின் அழுக்கை அகற்றுவன். அச்செயலேயே ஒக்கும் மாயை வினைகளை ஆண்டவன் கூட்டுவது. இது,

"எழுமுடல் கரணம் ஆதி இவைமலம் மலம லத்தாற்
கழுவுவன் என்று சொன்ன காரணம் என்னை எனனிற்
செழுநவை அறுவை சாணி உவர்செறி வித்த ழுக்கை
முழுவதுங் கழிப்பன் மாயை கொடுமலம் ஒழிப்பன் முன்னோன்."*
—சித்தியார். உ-௫உ.

என்னும் அருணந்தி சிவநாயனர் திருப்பாட்டாற் காண்க.

## நுண் உடல்

ஓர் அறிவுமுதல் ஆறறிவு ஈறாகவுள்ள எல்லா உயிர்கட்கும் நுண் உடல் ஒன்று போன்றே உள்ளது. நுண் உடல் என்பது எட்டுறுப்புக்களால் ஆயது. அவ் எட்டுறுப்பும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் பூதமுதலாகிய தன்மாத்திரை ஐந்து, மனம் எழுச்சி (ஆங்காரம்) இறுப்பு (புத்தி) என்னும் அகக்கலன் மூன்று, ஆக எட்டு. அகக்கலன் அந்தக்கரணம். இவை மாயாகாரியங்கள். இவற்றுள் மனத்தின்கண் தொன்மை வினையாகிய வினைத்தன்மை அல்லது ஊக்கத்தை முதல்வன் சேர்ப்பன். மல ஆற்றலுக்குத் தக்கவாறு மனம் புடை பெயர நோக்கும். அந்நோக்கமே வாய்ப்பான பருவுடல் நல்குவதற்குத் தொடக்க வினையாகும். இவ்வினைக் கீடாகத் தொடக்கத் தோற்றம் உண்டாம். குருடனுக்கு வேட்கை கோலின்கண் உண்டாம். குருடன்காணுமையாற் கோல் என உள்ளத்துக் கொள்ளான். வாயிற்கூறான். ஆயினும், அருள்கண் உடையார் குறிப்பான் அதனை அறிந்து கோல்கொடுத்து நடத்துவர். அது போலவே ஆண்டவன் தொடக்கத் தோற்றத்தில் உயிர்களின் மனநிலைக்கு எற்றவாறு பருவுடலை நல்கியருளுகின்றான். இது,

* 'குறித்தபொழுது' கஉ. திருக்குறிப்புத் கஉக.

"கண்ணை மறைத்த கடியதொழில் ஆணவத்தால்
எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும்—உள்நாடிக்
கட்புலனுற் காணார்தங் கைக்கொடுத்த கோலேபோல்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்—முற்பால்
தனுகரண மும்புவன மூந்தந்த வற்றூன்
மனமுதலால் வந்தவிகா ரத்தால்—வினையிரண்டுங்
காட்டி யதனுற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி"

—போற்றிப்பஃறொடை, வரி. க0-கஎ.

என்னும் உமாபதி சிவநாயனார் திருமொழியாலும் உணரலாம்.

## தொன்மைவினை

வினைத்தன்மை அல்லது ஊக்கம் என்பதே மூலகன்மம். இதனை ஓர் ஒப்பால் கூறின் உயிரின் ஆற்றல் சோறாக்குதற்குரிய அரிசியை ஒக்கும். அதற்குத் துணையாய் உடன்சாரும் நீர் வினைத்தொன்மை அல்லது வினைத்தன்மையை ஒக்கும். அவ்வினை நல்வினை தீவினை என இரண்டாதல் மலச்சார்பினுன் ஆகும். அஃது அரிசி செவ்வி அழிந்து மிகவும் குழைந்துவிடுதல் நல்வினையை ஒக்கும். அரிசி செவ்வியுறாது வேவாதிருத்தல் தீவினையை ஒக்கும். (உண்ணும் செவ்வியுறவே இறைபணி.) நோய்க்குத் தக்கவாறு ஓடல் முதலிய செயல் நிகழுமல்லவா? அதனையொத்ததே மல ஆற்றலுக்குத் தக்கவாறு இருவினை நிகழ்ச்சியும் நிகழ்வது.

ஆற்றல் அரிசி அணைநீர் வினைத்தொன்மை
சாற்றிரண் டாதல்நோய்ச் சார்பானும்—ஊற்றமாய்
ஓடல் கிடத்தல் உளறல் சொறிதல்வெயில்
நாடல்நோய் சேர்மனத்தால் நாடு.

இரண்டாதல்-நல்வினை தீவினையாதல். நோய்-மல ஆற்றல். நோய்-உடல்நோய். இவ்வுண்மை எறத்தாழ ஆறாயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றிய ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தின்கண் வினைநிகழ்ச்சிக்கு எட்டுக்காரணங்கள் வேண்டுமெனக் கூறப்பெற்றுள்ளது. அவ் எட்டனுள் வினை என்பதும் ஒன்று. அதுவே முதற்கண் வேண்டப்படுவது. அக்குறிப்புத் தோன்றச் சூத்திரத்தின் முதற்கண் அதனை அமைத்தனர்.

அச் சூத்திரம் வருமாறு:

வினையே (க) செய்வது (உ) செயப்படு பொருளே (ந)
நிலனே (ச) காலம் (ரு) கருவி (சு) என்று
இன்னதற்கு (எ) இதுபயன் (அ) ஆக என்னும்
அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முதல் நிலையே.

—தொல். சொல்—கக உ.

முதல் நிலை—காரணம்.

ஈண்டுவினை என்பது வினைத்தன்மை. அஃதாவது வினைபுரிதற்கு வாய்ப்புடைத்தாதல். அவ்வினைத்தன்மை பொருள் முதற்காரணத்தின் கண்ணும் வினைமுதற்காரணத்தின் கண்ணும் அமைந்திருத்தல் வேண்டும். பொருள் முதற்காரணத்தின்கண் அமைந்திருப்பதைப் பாங்கென்றும், வினைமுதற் காரணத்தின்கண் அமைந்திருப்பதை ஊக்கம் என்றும் கூறலாம்.

இதனை ஓர் ஒப்பில் காணுங்கால் கலமுதலியன செய்தற்குப் பாங்காயுள்ளது களிமண் அவற்றைச் செய்யும் ஊக்கமுள்ளவன் குயவன். அக்குயவனை ஊக்கப்படுத்துவோர் அவற்றைப் பெறுவோர். இவை போன்று, மண்போன்று வினைசெய்வதற்கு இடனாவதுமாயை. குயவன் போன்று ஊக்கமுடையது உயிர். பெறுவோர் போன்று ஊக்கத்தை எழுப்புவது வினைத்தொன்மை இத்தொன்மை வினையைத் தொல்லோன் கூட்டுவன்.

> மாயை உயிர்வினை மண்குயவன் ஊக்கமாம்
> ஆயகொள்வோர் ஊக்கெழுப்பு வார்.

**கூறு**

இச் சூத்திரம் நான்கு கூறுகளை உடையது. கூறு-அதிகரணம்.

க. **'அவையே தானேஆய்'**
உ. **'ஆணையின் இருவினையின்'**
ங. **'போக்கு வரவு புரிய'**
ச. **'ஆணையின் நீக்கமின்றி நிற்கும் '**

---

## முதல் அதிகரணம்

**ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானேஆய் நிற்கும் என்றது.**

எ - து. மே - ள். எ-னின். மேல் முதற்கடவுளல்லவென விலக்கப்பட்டு நின்ற சேதனப்பிரபஞ்சமும் முதல்வனும் பொன்னும் பணியும்போல் அபேதமோ இருளும் வெளியும்போற் பேதமோ சொல்லும்பொருளும்போற் பேதாபேதமோ என்னும் ஐயப்பாட்டின்கண் அம்மூன்றனுள் ஒரோவொன்றேபற்றி அவ்வம்மதத்தார் கூறுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ - ள். வெ-டை.

ஈண்டும் இரட்டுறமொழிந்து கொள்க.

இதனானே, ஒரு விடயத்தைக் காணுங்கால் ஆன்மபோதம் கண்ணொளியெனத் தானென வேறின்றி உடனாய் நின்று காணுமாறுபோல, முதல்வன் புனருற்பவஞ் செய்யுங்கால் உயிர்களோடு உடனாய் நின்று செய்வனென்பதூஉம், பெறப்பட்டது.

**அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவ துண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்து மாயிட்டு.**

*எ - து. ஏது. எ-னின். முதல்வன் அவ்வாறு மூவகையுமாய் நிற்பனென்றற்குப் பிரமாணமென்னை என்னுங்கடாவை ஆசங் கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.*

(இ - ள்.) (*அத்துவிதமென்ற சொல்லின் நகரம் இன்மை அன்மை மறுதலை என்னு முப்பொருளுணர்த்துமன்றே அவற் றுள் இன்மைப்பொருள்பற்றி) அத்துவிதமென்ற மொழி மாத்திரையானே ஒரு பொருளென்றல் பொருத்தமுடைத் தெனின்,—தானே தன்னையொன்றெனக் கருதல் வேண்டா மையின் அவ்வாறு கருதும் பொருள் வேறுண்டென்பது பெறப் படுதலானும், (எண்ணுப் பெயர்மேல் வந்த நகரம் அன்மைப் பொருண்மாத்திரையே யுணர்த்திப் பொதுமையி னிற்பதன்றி ஏனைச் சொற்களின்மேல் வந்த நகரம்போல இன்மை மறுதலைப் பொருள்களை யுணர்த்துதல் வழக்கின்கணின்மையின்) அத்து விதமென்கின்ற மொழிதானே (பிறிது காரணம் வேண்டாது) வேறன்மையை உணர்த்திநிற்குமாகலானும், ஈண்டிவ் ஆன்மாக் கள் பலவும் முதல்வன்தானேஆய் நிற்குமென மேற்கொண்டது (எ - று).*

*ஆகலானென்பதற்கு ஆயிட்டென்பது அக்கால் வழக்குப் போலும்; அற்றாகலினன்றே* "நீயோ செய்யாய் நின்மலனு யிட்டு" என்றார் வழிநூலாசிரியரும்; இனி "மழைபெய்து குள நிறைந்தது" என்புழிப்போல ஆயிடலாலென்பது ஆயிட்டெனத் திரிந்துநின்றதென்றலுமொன்று.*

*எண்ணும்மை விரித்துரைக்க.*

*வேறன்றி உடனுதல் பெறப்படவே, பொருண்மையாற் பேதமென்பதூஉம் கலப்பினால் அபேதமென்பதூஉந் தாமே போதருமென்பது கருத்து.*

†கட்டும் உறுப்பும் கரணமும் கோண்டுள்ளம்
இட்டதோரு பேரழைக்க என்னேன்றுங்கு—ஒட்டி
அவனுளமா கில்லான் உளமவனு மாட்டாது
அவனுளமாய் அல்லனுமாம் அங்கு.

---

* இருபாவிருபது ௪. கூறிய மூன்று.

† உருவொடு, சித்தியார் உ-௩.

எ-து. உ-ம். எ-னின். ஒருபொருள் மூவகையியல்பை உடைத்தாதல் யாங்ஙனம் என்னுங்கடாவை ஆசங்கித்து அவற்றுள் அவையேயாதலை உவமைமுகத்தான் வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) உள்ளம் கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு - உயிர் (நரம்பு முதலியவற்றாற்) பிணிக்கப்படும் உடம்பினையும் ஐம்பொறி முதலிய கருவிகளையுங் கைக்கொண்டு நின்று, இட்டது ஒருபேர் அழைக்க என் என்றாங்கு - சாத்தா கொற்றா என உடம்பிற்கு இட்ட பெயரால் பிறரழைத்தவழித் தான் என்னையென வந்து நிற்றல் காண்டுமன்றே (இருவர் கைகோத்து நின்றுழியும் அவருள் அழைக்கப்பட்டோனேயன்றி ஏனோன் என்னையென்றல் உலகத்தின்மையின் அவ்வாறன்றி உடம்பின் பெயரான் அழைத்தவழி உயிர் என்னென்றற்குக்காரணம் பிறிதோராற்றாற் பெறப்படாமையின் அருத்தாபத்தியளவையானே அவ்வுயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய் நிற்றல் பெற்றாம்) அதுபோல, ஒட்டி—(முதல்வன் உயிர்களின் அபேதமாய்) ஒட்டி நிற்போனும், அங்கு அவன் உளம் ஆகில்லான் உளம் அவனுமாட்டாது அவன் உளம் ஆய் அல்லனும் ஆம்-(அவ்வாறொட்டியவழியும் உயிர் உயிரே, உடம்பு உடம்பே, உயிர் உடம்பாயொழியாது உடம்பு உயிராக மாட்டாது; அவ்வாறாயினும் உயிர் உடம்பாயும் அதனின் வேறாயு நிற்கும்; உடம்பு அங்ஙனநில்லாது;) அதுபோல (முதல்வன் முதல்வனே உயிர் உயிரே) முதல்வன் உயிராயொழியான் உயிர் முதல்வனாக மாட்டாது. (அவ்வாறாயினும்) முதல்வன் உயிராயும் அதனின் வேறாயுநிற்பன் (உயிர் அங்ஙனநில்லாது.) (எ - று).

அவனுளம் ஆகில்லான் உளமவனுமாட்டாது அவனுளமாய் அல்லனுமாம் அங்கு என்றது ஒன்றாயும் ஒன்றன்மைக்கு அநுபவங் காட்டியவாறு.

உறுப்பு ஆகுபெயர். எவனென்பது என்னென மரீஇயிற்று. ஒட்டியென்பது பெயர்; வினையெச்சமாகக் கொள்ளிற் சிறப்பும்மை விரித்துரைக்க.

ஒட்டுதல் பொருந்துதல். அங்கு அதுபோல.

*ஒன்றென்றது ஒன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண்—ஒன்றின்றால்
அக்கரங்கள் இன்றாம் அகர உயிரின்றேல்
இக்கிரமத் தென்னும் இருக்கு.

* ஒன்றென, சித்தியார் உ-உ.

எ-து. உ-ம். எ-னின். வேதத்துள் அத்துவிதமென்றதூஉமன்றி ஏகமெனவுமோதுதலின் அதற்கு மறுதலையாய் உயிர்களோடொட்டி நிற்பனெனப் பேதப்படக் கூறுவதென்னை என்னுங் கடாவையாசங்கித்து அச்சொற்குத்தாற்பரியங் கூறுமுகத்தால் தானேயாதலை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) இருக்கு ஒன்று என்றது ஒன்றே காண்—வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம்; வேறு பொருள்படாது. பதி ஒன்றே—(அதற்குத் தாற்பரியம்) பதிப் பொருளொன்றே; இரண்டில்லையென்பதாம். ஒன்று என்ற நீ பசுஆம் காண்—இஃதறியாது ஒன்றென்று சொல்லுகின்ற நீ அப்பதிப்பொருளின் வேறாய பசுவென்றறிவாயாக. (பதியுஞ் சேதனமாக யானுஞ்சேதனமாக என்னைப் பசுவென்றதென்னை யெனின்) பாசத்தோடு உளை—நீ மலத்தோடு கட்டுற்று நின்றுயாகலிற் பசுவெனப்பட்டனை; (அற்றேல் இவ்வாறு வேற்றுமை கூறிற் பிரமமில்லையாயின் ஒரு பொருளுமில்லையென்னும் வேதத்திற்குத் தாற்பரியமென்னையெனின்) அகரவுயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம் இக்கிரமத்து ஒன்று இன்று என்னும்—அகரவுயிரில்லையாயின் அக்கரங்களில்லையாமென்னும் இம்முறை பற்றி (வேதம்பிரமப்பொருள் இல்லையாயின்) ஒரு பொருளுமில்லை யென்றோதும் அத்துணை (எ - று).

ஒன்றின்றால் அக்கரங்களின்றும் அகரவுயிர் இன்றேலிக் கிரமத்து என்னும் என்றது வேறாகியும் வேறன்மைக்கு அநுபவங்காட்டியவாறு.

இக்கிரமத்தாலெனை உருபு விரித்துரைக்க. இன்றென்னும் ஒருமை அப்பண்பின்மேனின்றது. காணென்பதனை மேலே கூட்டுக. ஆல் அசை.

பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போல் எங்குமாம்—அண்ணல்தாள்
அத்துவிதம் ஆதல் அருமறைகள் ஒன்றென்னா
அத்துவிதம் என்றறையும் ஆங்கு.

எ-து. உ-ம். எ-னின். வேதம் ஏகமாய பிரமத்தை ஏகம் என்றொழியாது பிரமம் அத்துவிதமெனவும் ஓரோரிடங்களின் ஓதுதலின் அத்துவிதம் இருபொருட் கண்ணதென்பார்க்கு ஏகமாய பிரமத்தை அத்துவிதமென்றல் பொருந்தாதாய் முடியும் என்னுங்கடாவை யாசங்கித்து அதனை நீக்குமுகத்தானே அவையே தானேயாதலை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும் எண்ணும் சுவையும்போல் எங்கும் ஆம் அண்ணல் தாள் அத்து விதம் ஆதல்—பண்ணும் (அதனின் வேறன்றுயெண்ணப்படும்) இசையும்போலவும், பழமும் (அதனின் வேறன்றுயெண்ணப் படும்) சுவையும் போலவும் யாங்கணும் வியாபகமாய முதல்வன் திருவருள் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான், அரு மறைகள் ஒன்று என்னாது அத்துவிதம் என்று ஆங்கு அறையும் —வேதங்கள் ஏகமென்னாது (பிரமம்) அத்துவிதம் என்று அவ் விடங்களிற்கூறும் (எ - று)

ஆண்டுப் பிரமம் அத்துவிதமென்றது பிரமம் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்குமென்னும் பொருட்டாகலான், அஃது ஏகமென்பதோடு முரணுமாறில்லையென்பதாம்.

பண்ணையென்னும் ஐகாரம் பகுதிப்பொருள் விகுதி. பண் பாலைப்பண் முதலாயின.

எங்குமாம் அண்ணல்தாளென விசேடித்தது, குண குணிகள் போல் உடனாயும் அவ்வாறுடனாகாமைக்கு அநுபவங்காட்டிய வாறு. வியாப்பிய வியாபகமாதலொப்புமை மாத்திரையேபற்றிக் குண குணிகளை உவமை கூறினாரென்பது.

*அரக்கொடு சேர்த்தி அணைத்தஅக் கற்போல்
உருக்கி உடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று.

எ-து. உ-ம். எ-னின். இங்ஙனம் வெவ்வேறுவமை எடுத் துக்காட்டின் அநேகாந்தவாதமாமென்னுங்கடாவை ஆசங்கித்து அஃதாகாமை உவமைமுகத்தான் விளக்கி மூன்றனையும் ஒருங்கே வலியுறுத்துதலிற்று.

(இ - ள்.) உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற் போல் உடங்கு இயைந்து நின்று பிரிப்பு இன்றித் தானே உலகு ஆம்—அரக்கையுருக்கி அதனோடு சேர்த்து அணைத்த கற்பொடி அவ்வரக்கினோடொன்றாய் ஒருங்கியைந்து நீக்கமின்றி நின்றாற் போல, (முதல்வன் உயிர்களின் ஒருங்கு கூடி நின்று) நீக்கமின்றி (உடனாகலால்) தானேயாம், உலகேயாம், தானே உலகேயாம்; (அற்றேல், வாமதேவமுனிவன் முதலியோர் யானேயுலகெல்லா மாயினேன் எனக் கூறுதலானும, சர்வஞ்ஞானோத்தரத்தில் யானே எல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நின்றேன் என்று

* உருவொடு, சித்தியார் ௨-௪.

உயிர்கண்மேல் வைத்தோதுதலானும், உயிர்களும் இவ்விலக்கணத்தன ஆவான் செல்லும் போதுமெனின்) தமியேன் உளம் புகுதல் யானே உலகு என்பன் இன்று—அம்முதல்வன் பாசக் கூட்டத்தினீங்கித் தனியாய் நின்ற என்னகத்துப் (சோகம் பாவனையாற்) புகுந்து வேற்றுமையின்றித் தோன்றலான் யானே உலகெல்லாமென்பேனுயினேன் இம்முத்திக்காலத்து (ஆகலின், அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான்சேறலின்று) (எ - று).

அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான் சேறலின்றென்பது குறிப்பெச்சம்.

இவ்வொற்றுமைபற்றியன்றே அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த கண்ணன் யானே உலகெல்லாமாயினேனென்றதூஉம், முதல்வனது விச்சுவரூபத்தைத் தான் காட்டியதூஉம், ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுகவென்றதூஉம், அதனை உறுதியாகக்கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்துநோக்கிச் சாங்காறுஞ் சிவபூசை செய்ததூஉம், கண்ணன் மேலிட்ட போதுகள் முதல்வன்றிருமுடிமேற் கண்டதூஉமென்க. கண்ணன் உபமன்னியுமுனிபாற் சிவதீக்கையுற்றுத் தன்னையுந் தலைவனையு முணர்ந்தோனுகலிற் சிவோகம்பாவனையைத் தலைப்பட்டோனுதலறிக.

கலப்பாய் நிற்றலான் உலகேயாமென்பார் உடங்கியைந்து எனவும், பொருட்டன்மையால் வேறு நிற்றலால் தானேயாமென்பார் நின்று எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானேயுலகாமென்பார் பிரிப்பின்றி எனவுங்கூறினர்.

ஈண்டும் இரட்டுறமொழிந்துகொண்டுரைக்க.

இன்றியென்னுஞ் செய்தெனெச்சக்குறிப்பு மழைபெய்து குளநிறைந்தது என்புழிப்போலக் காரணகாரியப்பொருட்டாய் நின்றது.

இவ்வதிகரணத்தானே பேதமென்றும் அபேதமென்றும் பேதாபேதமென்றும் பிணங்குஞ்சமயிகளையெல்லாம் மறுத்து அம்மூவகையியல்புந் தன்கட்டோன்ற நிற்கும் அத்துவிதத் தன்மை ஏதுக்களானும் உவமைகளானும் உணர்த்தியவாறு. புடைநூலாசிரியரும் இவ்வதிகரணப்பொருளேபற்றி *"புறச் சமயத்தவர்க்கிருளாய்—தெரிக்கலுற்றும்" எனவகுத்தோதினர்.

* சிவப்பிரகாசம், பாயிரம் எ,

## விளக்கம்

### இரட்டுற மொழிதல்

மேற்கோள் 'ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானே ஆய் நிற்கும் என்றது.' ஈண்டு இவ்வதிகரணம் நான்கனுள் வைத்து இம் முதலதிகரணத்துள், முதல்வன் இவ் ஆன்மாக்கள் பலவுமாய், தானேயாய், இவ் ஆன்மாக்கள் பலவுந் தானேயாய் நிற்பன்.

முதல்வன் கலப்பினால் இவ் ஆன்மாக்கள் பலவுமாய், பொருள் தன்மையால் தானேஆய், உடனாதல் தன்மையால் இவ் ஆன்மாக்கள் பலவும் தானேஆய் நிற்பன்.

### ஐயம் அகற்றல்

முதற் சூத்திரத்தில் 'அந்தம் ஆதி'—அந்தமே ஆதி. இவற்றில் அந்தமே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலை. இதனால் பிரிக்கப்பட்டவை சுட்டுணர்வு உடைய உயிர்கள். சுட்டுணர்வுடைய உயிர்கள் என்பது உடம்போடு கூடிய உயிர்கள். உடம்பின் சார்பே சுட்டுணர்விற்குக் காரணம்.

இவ்வுயிர்களை அறிவுடைய உலகம் என்பர். அறிவுடைய உலகமே சேதனப் பிரபஞ்சம் எனக் கூறப்படும். இவ் உயிர்களும் முதல்வனும் பொன்னும் அணியும்போல் ஒருபொருளோ? ஒற்றுமையோ (அபேதமோ)? இருளும் வெளியும்போல் இருபொருளோ? வேற்றுமையோ (பேதமோ)? சொல்லும் பொருளும்போல் ஈரொட்டோ?* வேற்றுமையும் ஒற்றுமையும் (பேதாபேதம்) கலந்ததோ? என ஒவ்வோர் கொள்கையுடையவர் தனித்தனி ஐயங்கொள்வர்.

க. ஒற்றுமையோ என்று ஐயம் கொள்பவர் மாயாவாதிகள். இவர்கள் உயிர்கள் என்பதும் உலகம் என்பதும் பொய். பரமான்மாவாகிய கடவுள் ஒன்றே உள்ளது என்பர். இவர்களுக்கு மூலப்பகுதியோடு அமைந்த இருபத்தைந்து மெய்களே உடன்பாடு. இவர்கள் பிழையாகத் தம்மை வேதாந்திகள் எனக் கூறிக்கொள்கின்றனர்.

உ. வேற்றுமையோ என ஐயங்கொள்பவர் மாத்துவர். இவர்கள் கருதுவது முதல்வனும் உயிரும் ஒளியும் இருளும்போல் வேறு வேறு என்பது. ஈண்டு ஒளி என்பதே வெளி என ஆளப்பட்டுள்ளது.

ங. வேற்றுமையும் ஒற்றுமையும் கலந்தது எனக் கூறுவோர் பாஞ்சராத்திரிகள்.

இம் மூவர்களும் ஒவ்வொரு சார்புபற்றிக் கூறும் தனித்தனிக் கொள்கைகள் மூன்றும் ஒருங்கமைந்த முதல்வனுக்குப் பொருந்தா. மேலும் இவர்கள் எடுத்துக்கொண்ட ஒப்புமைகளும் பொருந்தா.

### உடனாய்நின்று மீண்டும் உலகைப் படைத்தல்

உயிர் அறிவு கண்ணொளியோடு பிரிப்பின்றிக் கலந்து உடனாய்நின்று ஒரு பொருளைக் காணும் இக்காட்சியைக் கண் கண்டதா? உயிர் அறிவு கண்டதா? என்று பிரித்துக் காணமுடியாது. ஆனால், இரண்டும் கலந்து கண்டது என்றே கொள்ளுதல் வேண்டும். இது கையும் கருவியும்

---

* பாட்டுத் தற்கிழமையும் பிறிதின்கிழமையுமாய் இருப்பது போன்றது.

சேர்ந்து எழுதிய எழுத்தைப் பிரித்துக்கூற முடியாமையை ஒக்கும். உயிர் அறிவு ஆன்மபோதம்.

முதல்வனும் உயிர்களோடு உடனுய்க்கலந்து அவ்வுயிர்களை உடலுடன் பொருத்தி உலகிடை உண்டு உழைத்து உலவச்செய்வன். இதுவே 'ஆண்டவன் அருளால் மீண்டும் உலகுள' என உரைக்கும் பின்தோற்றம். இதனையே புனர்உற்பவம் என்பர்.

இதனை நூர் ஒப்பில் வைத்துக் கூறுங்கால் மாடுமேய்த்தலும், மாணக்கரைப் படிப்பித்தலும், மக்களை நடப்பித்தலும் முறையே மேய்ப்போன், ஆசான், அம்மை அப்பர் கலந்தே தொழிற்படுத்தக் காண்கிறோம் அல்லவா? இவர்கள் காலத்தாலும் இடத்தாலும் நடக்கையாலும் ஒன்று பட்டுள்ளார்கள். இம்மூன்றும் முறையே அன்பு அறிவு ஆற்றல்களின் கலப்பினையும் குறிக்கும். மேய்ச்சற் புலமாகிய இடக்கலப்பு அன்பு, ஓதுவித்தற் பண்பாகிய அகத்தொழிற் கலப்பு அறிவு. நடப்பித்தல் தொழிலாகிய புறத்தொழிற் கலப்பு ஆற்றல். புறத்தொழில் அடிச்சுவடு நிலத்தே பதிந்து பிறர்க்குப் புலனும் புறக்குறிகளை உடைத்தாதல்.

## ஒன்றாய் வேறாய் உடனும் உண்மை

உயிர்களுக்குச் சார்பினால் நிலைப்பும், தகைமையால் அறிதலும், தனித்துணையால் நெறிச்செல்லுதலும் கைகூடுவன. இவை முறையே அன்பறிவு ஆற்றல்களின் கலப்பு எனலாம். இவை என்றென்றும் வேண்டுவன. அதனால் ஆண்டவன் உயிர்களோடு ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று என்றும் பொன்றாப் பெருந்துணை ஆகின்றான்.

நிலைப்போ டறிவும் நெறிநடத்தல் மூன்றும்
தலைப்பாட் டுயிர்க்குளவாம் சாற்று.

ஒன்றாத லால்நிலைப்பிங் கோங்கறிவா லாம்வேறு
நன்றுடனு லாகும் நடப்பு.

## புணர்ப்பு

புணர்ப்பு அத்துவிதம் என்று கூறப்படும். எட்டாந் திருமுறையாகிய திருவாசகத்தில் புணர்ச்சிப்பத்து என்னும் பகுதியின் விளக்கதது 'அத்துவித இலக்கணம்' என வரையப்பட்டுள்ளது. அஃது அத்துவிதக் கலப்பு என்பது 'புக்குப் புணர்ந்து நிற்பது என்று கொல்' என்னும் அருள் தொடரால் விளங்கும். அத்திருப்பாட்டு வருமாறு:

"நெக்கு நெக்குள் உருகிஉருகி நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்
நக்கும்அழுதும் தொழுதும் வாழ்த்திநாளு வித்தத்தால் கூத்தும் நவிற்றிச
செக்கர் போலும் திருமேனி திகழ நோக்கிச் சிலிர்சிலிர்த்துப்
புக்குநிற்ப தென்றுகொல்லோஎன் பொல்லா மணியைப் **புணர்ந்தே.**"

— புணர்ச்சிப்பத்து, அ.

அத்துவிதம் என்னும் வடசொல் பிரிக்குங்கால் ந + துவிதம் = நத்துவிதம். இந்நகரம் மெய்ஒழித்து அகரமாய் நின்று அ + துவிதம் = அத்துவிதம் என்றாயிற்று. துவிதம் என்பது இரண்டு என்னும் பொருட்டு. ந + துவிதம் = அத்துவிதம் இரண்டன்மை என்னும் பொருட்டு.

## மெய்ப்பொருள்

அத்துவிதம் என்ற சொல்லின் நகரம் மூன்று பொருள்களில் ஆளப்பெறும். அவை: க. **இன்மை,** உ. **மறுதலை,** ங. **அன்மை**

இன்மைபற்றிப் பொருள் இரண்டின்மை எனக்கொண்டு ஒன்று எனக் கூறின் ஒன்றாகிய கடவுள் தன்னைத்தானே தனக்கு ஒன்று எனக் கூறுவது எதன்பொருட்டு என்றோர் ஐயம் தோன்றின் எவ்வாறு விடை இறுப்பது? மேலும் யாருக்குக் கூறுவது என்று ஐயம் தோன்றின் என்செய்வது? கடவுள் ஒன்று எனக் கருதுகின்ற-கட்டுரைக்கின்ற-கை கூப்புகின்ற-கழல்பணிகின்ற மன்னுயிர்கள் வேறுள எனக்கொள்க.

எண்ணுப் பெயர்மேல் வந்த நகரம் உலக வழக்கில் அன்மைப் பொருள் மட்டுமே உணர்த்தும். ஏனைய பெயர்களால் இன்மை அன்மை மறுதலைகளை ஏற்றபெற்றி உணர்த்திப் பொதுமையில் நிற்கும். எடுத்துக் காட்டாக:

க. **அப்பிரகாசம்** இது, வருமொழிப்பொருளின் இன்மையினை உணர்த்தும். வருமொழிப்பொருள் பிரகாசம். பிரகாசம் ஒளி. பிரகாசமில்லை; விளக்கமில்லை.

உ. **அதன்மம்** வருமொழிப் பொருளின் **மறுதலை**யினை உணர்த்தும். வருமொழிப்பொருள் தன்மம். தன்மம் அறம். மறுதலை அதன்மம். அதன்மம பாவம். அறத்தின் மறுதலை பாவம்.

ங. **அப்பிராமணன்** வருமொழிப் பொருளின் அன்மையினை உணர்த்தும். வருமொழிப் பொருள் பிராமணன். அப்பிராமணன் பிராமணத்தன்மை அல்லாதவன். ஏனை வேந்தர் வணிகர் வேளாளரைக் குறியாமல் பிராமணத்தன்மையின் அன்மையினை மட்டும் குறிப்பது காண்க. இதுபோல் அத்துவிதம் இரண்டன்மை என்றபோது உயிர் தன் தன்மையினை இழந்து கடவுள் தன்மையினை விழைந்து எய்திப் பிரிப்பின்றி வேறறநிற்கும் என்பதாம். இதற்கு ஒப்பு, பாலோடளாய நீர் நீர்த்தன்மை யிழந்து பால்தன்மை எய்தும். அன்மைப்பொருளில் பொருள் கெடாது ஒன்றாய்க்கலந்து தன் தன்மையினை இழந்து உயர்ந்த தன் தன்மை எய்தி உயர்வற உயர்வுறுதலாகும்

அப்பிராமணன் அன்மை அந்தணத் தன்மையன்மை
செப்புபிற பாலரைச்செப் பாது.

அத்துவிதம் இரண்டற்று இணைந்து ஒன்றுதல் என்பதனைத் தமிழாகமமாகிய திருமந்திரத்தின்கண் திருமூல நாயனார் அருளிச்செய்துள்ளார். அத்திருப்பாட்டு வருமாறு:

“ஒழிந்தேன் பிறவி உறவென்னும் பாசம்
கழிந்தேன் **கடவுளும் நானும்ஒன் றனேன்**
அழிந்தாங் கினிவரும் ஆக்கமும் வேண்டேன்
**செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே.**”* —க௦. உகூ௬அ.

## தொல்வழக்கு

‘அந்நிய நாத்தியை உணர்த்தும் **ஆயிட்டு**’ இதன்கண் உள்ள ‘ஆயிட்டு’ என்பது ஆகலான் என்னும் பொருளையுடையது. இஃது அக்கால வழக்குப்போலும். அருணந்திசிவ நாயனார் தாம் பாடியருளிய இருபா இருபது என்னும் பொருள்நூலில் நான்காம் திருப்பாட்டில், (வரி உ௫.) “தானோ மாட்டாது யானோ செய்கிலன், நீயோ செய்யாய் நின்மலன் **ஆயிட்டு**” என்றருளிச்செய்தனர். ஆண்டு ஆயிட்டு என்பது ஆகலான் எனப் பொருள் தருதலும் காண்க.

---

* ‘முத்திநெறி.’ அ. அசம்சா - க.

'மழை பெய்தலான் குளம் நிறைந்தது' என்று கூறவேண்டுவதை 'மழைபெய்து குளம் நிறைந்தது' என்று கூறுகின்றனர். இதனோடு ஒத்துக்காணின் ஆயிடலால் என்பது ஆயிட்டு எனத்திரிந்தது எனலாம்.

அந்நியம் - வேறு. நாத்தி - அன்மை. அந்நியநாத்தி - வேறன்மை.

**உம்மை**

'எண்ணும்மை விரித்துரைக்க' ஏதுவில் 'ஏகமென்று சுட்டுவது உண்மையின்' இதில் உண்மையானும், 'அந்நிய நாத்தியை உணர்த்தும் ஆயிட்டு' இதில் ஆகலானும் என விரித்துப் பொருள் கொள்ளவேண்டிய திருப்பதால் உம்மை விரித்துரைக்க என்றனர்.

**கருத்து**

அன்மைப் பொருள்பற்றி வேறன்றி உடனாதல் பெறப்பட்டது. படவே பொருள் தன்மையால் வேறென்பதும், கலப்பினால் ஒற்றுமை என்பதும் தாமே பெறப்படும் என்பது கருத்து.

திருவள்ளுவ நாயனாரும் இருபொருள் வேறன்மையாய்க் கலக்கும் புணர்ப்பினை (அத்துவிதம்) உறுப்பும் உறுப்பியுமாக உரைத்தருளுகின்றனர்; அது வருமாறு:

"நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன்." —திருக்குறள், அ0உ.

'கட்டும்... ... ..... ........அங்கு'

உள்ளம் உயிர். ஒட்டி-முழுமுதல்வன். அங்கு-அதுபோல.

**'அவையே யாதல்'**

முதல்வன் உயிர்களோடு அன்பால் அவையேயாய், அறிவால் தானே யாய், ஆற்றலால் அவையேதானேயாய் என்றும் அமர்ந்திருப்பன். இவற்றைக் கலப்பால் ஒன்றாய், பொருள்தன்மையால் வேறாய், உயிர்க்கு உயிராதல்தன்மையால் உடனாய் இருப்பன் எனவும் கூறுவர். இம்மூன்றனுள் இம் முதலதிகரணத்து முதல்வெண்பாவால் அவையே யாதலை வலியுறுத்துகின்றார்.

உயிர் உடம்புடன் விரவிப் பிரிப்பின்றி உடம்பேயாய் நிற்கிறது. அக்கலப்பின் தன்மையால் உடம்புக்கு இட்டபெயரைத் தனக்கெனப் பற்றுக்கொண்டு அழைத்தவுடன் உடம்புடன் கூடி வருகின்றது. உயிருக்குஎனப் பெயரில்லா திருந்தும் உடம்பின் தொடர்பால் தனக்கெனக் கொண்டு வருகின்றதல்லவா? அதுபோல் முதல்வனும் தனக்கென உடலுறுப்புக்கள் இல்லாதிருந்தும் உயிர்கள் பொருட்டு அவ்வுயிர்களோடு கலந்து உலகுடலாய் வருவன். இம்முறையே அவையேயாதல். மேலும் மதுரையான், தில்லையான் என மாந்தரை அழைப்பதும் இக்கருத்துப் பற்றியே. இது,

"உலகமே உருவ மாக யோனிகள் உறுப்ப தாக
இலகுபேர் இச்சா ஞானக் கிரியைஉட் கரண மாக
அலகிலா உயிர்ப்பு லன்கட் கறிவினை ஆக்கி ஐந்து
நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்" எனவும்,
—சித்தியார். ௫. எ.

"தானலா துலகம்இல்லை சகமலா தடிமையில்லை
கானலா தாடல்இல்லை கருதுவார் தங்களுக்கு
வானலா தருளும்இல்லை வார்குழல் மங்கையோடும்
ஆனலா தூர்வதில்லை ஐயன்ஐ யாறனார்க்கே." —ச. சO-க.

எனவும் அருளிய பொருள்நூல் புகழ்நூற்களின் திருப்பாட்டுக்களால் உணரலாம்.

## தொடர்பு

திருமயிலாப்பூரில் சிவநேசச் செட்டியார் திருமகளார் பாம்புகடித்த லால் ஆவிநீத்தனள். அவள்தம் திருப்பெயர் பூம்பாவை. செட்டியார் அம்மகளாரைப் பிள்ளையார்க்கென நேர்ந்திருந்தனர். அதனால் அத்திரு உடம்பின் என்பையும் சாம்பலையும் ஒரு பொற்குடத்து அமைத்துக் கன்னிமாடத்து வைத்துச் சிறப்பாக வழிபட்டுவந்தனர். அவர்வேண்டு கோளுக்கு இணங்க ஆளுடைய பிள்ளையார் "மட்டிட்ட புன்னையங் கானல்" எனத் தொடங்கும் திருப்பதிகம்பாடி அருளால் எழுப்பிஅருளினர். அப்பொழுது 'பூம்பாவாய்' என்றே அழைத்தனர். அதுவும் உடம்பின் தொடர்பினாலாம் என்று சேக்கிழார் அடிகள் அருளுகின்றனர். அது வருமாறு:

"இந்த மாநிலத் திறந்துளோர் என்பினைப் பின்னும்
நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை
அந்த என்பொடு தொடர்ச்சியாம் என அருள் நோக்கால்
சிந்தும் அங்கமங் குடையபூம் பாவைபேர் செப்பி."

—கஉ. திருஞா—கOஅகூ.

## பொருட்குறிப் பளவை

பொருட்குறிப்பளவை எனினும் பொருள் அளவை எனினும் ஒன்றே. இதனையே அருத்தாபத்தி என்பர். உயிர் உடம்பின் பெய ரான் அழைத்தவழி என் என்றற்குக் காரணம் வேறெவ்வகையானும் புலப்படவில்லை. அவ் உயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி ஒற்றுமையாய் நிற்றலே காரணம். இங்ஙனம் உய்த்துணர்ந்து குறிப்பி னால் கொள்வதைப் பொருளளவை - பொருட்பேறென்பர். 'பகலுண் ணான் பருத்திருக்கின்றான்' என்றால், பருத்திருப்பது உணவினாலேயாம். அப்பொழுது இரவில் உண்டிருப்பான் என்று உய்த்துணர்ந்து குறிக்கின் றோம். இதுவே பொருளளவை.

## ஒன்றாயும்வேறாயும் நிற்றல்

உயிர் உடம்பாயும் வேறுமாயும் நிற்கும். உயிர் உடம்பாகமாட்டாது. உடம்பு உயிராகமாட்டாது. உடம்பு உடம்பே. இவைபோன்றே முதல் வனும் உயிராகமாட்டான்; உயிரும் முதல்வனாக மாட்டாது. இங்கு உயிர் '**உளம்**' என்னும் சொல்லால் குறிக்கப்பட்டுள்ளது. முதல்வன் '**ஓட்டி**' என்னும் சொல்லால் குறிக்கப்பட்டுள்ளான். முதல்வன் முதற்சூத் திரத்து '**ஒடுங்கி**' என்னும் பெயரால் குறிக்கப்பட்டுள்ளதும் இதுபோன் றதே. முதல்வன் உயிராயும் வேறாயும் நிற்பன்.

தொடர் வண்டியின்முன் ஈர்த்துச் செல்லும் பொறிவண்டி தொடர் வண்டியோடு சேர்ந்தும் செல்லும்; அதுவன்றித் தனித்தும் செல்லும்.

ஆனல், தொடர்வண்டியோ பொறிவண்டியோடு இயைந்து செல்லும். தனித்துச் செல்லமாட்டாது. இவ் ஒப்புப்போன்று உயிர் முதல்வனேடு இயைந்து செல்லும்; தனித்துச் செல்லமாட்டாது. முதல்வன் தனித்தும் செல்லுவன். உடம்பு உயிரோடு இயைந்து செல்லும்; வேருகச் செல்ல மாட்டாது. உயிர் வேருகவும் செல்லும். இவ்வுண்மை திருமூலநாயனர் வேறோர் உடம்பிற் சென்று புகுந்து எழுந்து நடந்தமையாலறிக. அவர் உடம்பு நிலத்துக் கிடந்து பழுதுற்றமையே அன்றி வேறேதுமாகாமையாலறிக பொறி - இயந்திரம்.

உந்துபொறி யாலன்றி ஒட்டுதொடர் செல்லாவாம்
தந்தபொறி செல்லும் தனித்து.

**நுகர்வு**

நுகர்வு அநுபவம் ஒட்டியாகிய முதல்வன் உளமாகிய உயிராகியும் அல்லனுமாகியும் நிற்பன். இஃது ஆசான் மாணுக்கரோடு மாணுக்கராயும் மாணவரல்லாத ஆசானுமாயும் நிற்பதை யொக்கும். ஆசான் மாணவரோடு சேர்ந்து ஓதுங்கால் மாணவராகவே விளங்குவன். மாணவரைத் தனித்து ஓதச்செய்யுங்கால் ஆசானகவே விளங்குவன். இதுவே ஒன்ருயும் ஒன்றன்மைக்கு நுகர்வு (அநுபவம்) காட்டுதல்

**ஆகுபெயர்**

கட்டும் உறுப்பு கட்டப்படும் உடம்பு என்று பொருள் கொள்வதால், 'உறுப்பு ஆகுபெயராய் உடம்பினைக் குறிக்கிறது.

**வினை எச்சம்**

'ஒட்டி' என்பது உயிர்களோடு 'அவையேயாய்'ப் பொருந்தி நிற்பன் எனப் பொருள்தந்து பெயராய் நிற்கின்றது. வினை எச்சமாகக்கொண்டால் 'ஒட்டியும்'-பொருந்தியும் என உம்மை விரித்துரைக்க. பொருந்தியும் முதல்வன் உயிராகமாட்டான். உயிர் முதல்வன் ஆகமாட்டாது. முதல்வன் உயிராயும் வேருயும் நிற்பன்.

'அந்த' என்பது அதுபோல என்னும் பொருள் குறித்து நின்றது.

'ஒன்றென்றது..................இருக்கு'

**தானே யாதல்**

தானேயாதல் என்பது முதல்வன் உயிர்களோடு வேருய் நிற்பன் என்பதாம.

மறையின்கண் இறைவன் வேறன்மை (அத்துவிதம்) என்பது மட்டும் அல்லாமல் ஒன்று (ஏகம்) எனவும் கூறப்படுகின்றனன். அதற்கு மாருக உயிர்களோடு ஒட்டி நிற்பன் எனக் கூறுவது பொருந்துமா என்பது ஐயம். ஒட்டி நிற்பன் என்பது பெயர். ஒன்று என்னும் சொற்பொருளின் விளக்கம் (தாற்பரியம்) கூறும் வழியால் அமைதி காணப்பெறும்.

**மந்திரம்**

இருக்கு என்பது மந்திரம். இது நிறைமொழிமாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப."
—தொல். செய்யுளியல். கஅஅ.

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்." —திருக்குறள், உஅ.

முழுமுதலாகிய முதல்வன் முனைவன் எனப்படுவன். அவன் உடனாய் நின்று உள்உணர்வாய் உணர்த்த உயிரின்கண் எழுதுமொழியை அவ்வுயிர்கள் வழிமொழிவதே மறையெனப்படும். இவ்வுண்மை ஆளுடையபிள்ளையார் அருளிய திருநெறிய தமிழ்த்திருப்பாட்டால் உணரலாம். இதுவே செம்பொருள் துணிவுடைய செந்நெறித் தொன்மைத் தமிழர் கைக்கொண்டொழுகிய மெய்ந்நெறி. அத்திருப்பாட்டு வருமாறு:

"ஒழுகலரி தழிகலியி லுழியுலகு பழிபெருகு வழியை நினையா
முழுதுடலில் எழுமயிர்கள் தழுவுமுனி குழுவினொடு கெழுவுசிவனைத்
தொழுதுலகில் இழுகுமலம் அழியும்வகை கழுவுமுரை கழுமலநகர்ப்
பழுதில்இறை எழுதுமொழி தமிழ்விரகன் வழிமொழிகள்
[மொழிதகையவே."
—ந. ௯எ-கஉ.

மேலும் 'எனதுரை'யென உலகம் கருதும் இவை 'தனதுரையாக' என ஆளுடையபிள்ளையார் அருளிச் செய்கின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

"பாலனும் விருத்தனும் பசுபதிதானும் பண்டுவெங்
கூற்றுதைத் தடியவர்க் கருளும்
காலனும் எனதுரை தனதுரை ஆகக் கனலெரி
அங்கையில் ஏந்திய கடவுள்
நீலமாமலர்ச்சுனை வண்டுபண் செய்ய நீர்மலர்க்
குவளைகள் தாதுவிண் டோங்கும்
ஏலநாறும் பொழில் இலம்பையங் கோட்டூர்
இருக்கையாப் பேணிஎன் எழில்கொள்வதியல்பே."
—க. எ௯-ந.

ஏறத்தாழ ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்குமுன் தோன்றியருளிய திருநெறிய தமிழின் சீர்சிறப்புமிக்க செவ்விய வாய்மைக் கொள்கையே ஆறாயிரம் ஆண்டுகளுக்குமுன் தோன்றியருளிய செந்தமிழ் முழுமுதல் நூலாம் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தின்கண்ணும் காணப்படுமாயின், தொன்மைத் தமிழர் நன்மைக் கொள்கை தொடர்ந்து படர்ந்து வரும் பண்பாடு மிக்க கேடில் விழுக் கொள்கை என்பது துணிபு. அது வருமாறு:

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்." —தொல். மர பு. கூச.

இதன்கண் 'முதல்நூல் ஆகும்' என்பதை நூல்முதல் ஆகும் என மாறுக. நூல்முதல் என்பதற்குப் பொருள் நூலுக்குக் காரணம் என்பதாகும். நூலுக்குக் காரணமே, 'இறை எழுதுமொழி' என்க.

இருக்கு - மந்திரம். அருளிருக்கும் மொழி என்பது பொருள். அது திருஇருக்குக் குறள் என்ற திருப்பதிகத்தால் அறிக. அத்திருப்பாட்டில் ஒன்று வருமாறு :

" துன்பம் துடைப்பீர்காள், அன்பன் அணிஆரூர்
நன்பொன் மலர்தூவ, இன்பம் ஆகுமே." — க. கூக-ரு.

இவைகளே தனித்தமிழ்மறை முறையெனக் கொள்க.

## யாப்பு

'**சிவயநம**' என்னும் செந்தமிழ்த் தனிமறையின் செவ்விய பொருள் சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு என்பவே. யாப்பு என்பதே பசு எனப்பகர்வது. யாப்பு என்பது கட்டுடையது. பசு என்பது பாசத் தோடுடையது. அப்பசுவே பதியினை ஒன்றெனக் கூறுவது. பசு என்னும் சொற்பொருள் விளக்கம் கூறுவார் "பாசத்தோடுஉளை" என்றனர். உளை உள்ளாய்.

## மறைமுறை

'இக்கிரமத் தென்னும் இருக்கு' என்பது மறைமுறை என்பதாகும். கிரமம் முறை 'அகர உயிரின்றேல் அக்கரங்கள் இன்றாம்' என்னும் ஒப்பு மிகவும் சிறந்த ஒப்பாகும், இறைவன் உண்மை நாட்டற்கு.

'அகரஉயிர்' இயற்கையொலி. பல் அண்ணம் முதலியவற்றின் தொழின் முயற்சியின்றி வாயைத் திறந்த அளவானே வரும் இயற்கை ஒலி **அகரம்**. இது கடவுளை ஒக்கும். ஏனைப் பதினோருயிர்களும் பல உயிர்களையும் ஒக்கும். பதினெட்டுமெய்களும் உலகு உடல் உண்பொருள் கட்கு வித்தாம் மாயையினை ஒக்கும். அகர உயிர் உயிர்களோடு கலந்து அவ்வுயிர்களை இயக்குகின்றது. மெய்களுடன் கலந்து அம்மெய்களையும் இயக்குகின்றது. ஏனை உயிர்களோடும் அவ் உயிர்கள் பொருந்தும் மெய்களோடும் உடங்கியைந்து அவ்விரண்டினையும் ஒருங்கு இயக்குகின்றது. அப்படியே இறைவனும் உயிரோடும் உடலோடும் ஒருங்கியைந்து இயக்குகின்றான். இது, பிள்ளையைச் சுமப்பார் பிள்ளைமேற் கொண்டிருக்கும் அணி ஆடையைச் சுமப்பது கூறாமலே விளங்குமன்றோ?

பிள்ளை தனைச்சுமப்பான் பிள்ளையணி ஆடைசுமை
கொள்ளல்கூ றாமலாம் கூறு.

மறையின்கண் ஒன்றென்றது இறையொன்றே. இறையினை ஒன்றென்று கூறும் யாப்புடைய உயிர்கள் பசுவென்பதே. இத்துணை நனி பெருஞ்சிறப்புப் பொருந்தியதனாலேயே தனித்தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறளின்கண் திருவள்ளுவநாயனாரும்,

" அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு." —திருக்குறள் க.

என்றருளிச் செய்தனர்.

இதனை வழிமொழிந்து உமாபதிசிவ நாயனாரும்,

" அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து." —திருவருட்பயன் க.

என்றருளினர்.*

* "அக்கரங்கட்'' ரு. உண்மை விளக்கம் உக.

ஆளுடைய நம்பியும் அகரஒப்பு அருளுகின்றனர். அது வருமாறு

"சிகரம் முகத்திற் றிரளாரகிலும் மிகவுந்திவரும் நிவவின் கரைமேல்
நிகரின் மயிலா ரவர்தாம்பயிலும் நெல்வாயில் அரத்துறை நின்மலனே
மகரக் குழையாய் மணக்கோலமதே பிணக்கோலமதாம் பிறவியிதுதான்
அகரம்முதலின் எழுத்தாகிநின்றாய் அடியேன் உய்யப்போவதோர்
[சூழல்சொல்லே."
—எ. ரு -எ.

இவைகள் ஆண்டவன் வேறாகியும் வேறன்மைக்கு நுகர்வு (அநுபவம்) காட்டியவாறாம்.

### வேறுதல்

இறைவன் கலப்பால் ஒன்றாய் இருப்பினும் பொருள் தன்மையால் வேறாம் என்பது, வண்டியோட்டுபவன் வண்டியோடும் எருதோடும் அவற்றை இணைத்து இயக்கும் தொழிற்பாட்டிற் கலந்து ஒன்றாய் இருப்பன். இருப்பினும் வண்டி ஓட்டியாகிய வலவன் ஆறறிவு படைத்த மேலோன் ஆவன் அல்லவா? அதுபோன்று இறைவனும் உயிரோடும் உலகுடல்களோடும் இபைந்து இயக்கினும் முற்றறிவு முடிவிலாற்றல்கள் முதலியவற்றால் வேறாவன். அவ்வுண்மை ஆளுடைய அரசர் அருளிய திருப்பாட்டால் அறியலாம். அத்திருப்பாட்டு வருமாறு:

"விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர்
வேத விதியல்லர் விண்ணும் நிலனும்
திரிதரு வாயு வல்லர் செறுதீயும
அல்லர் தெளிநீரும் அல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை ஒருபாகம்
ஆக அருள்கார ணத்தில் வருவார்
எரியர வாரமார்பர் இமையாரும்
அல்லர் இமைப்பாரும் அல்லர் இவரே." —ச. அ-உ.

வண்டி எருது வலவன் ஒருமூன்றும்
கண்டமருள் ஆவியிறை காண்.

வலவன் - வண்டியோட்டுபவன். மருள் - மாயை.

### இலக்கணம்

'இக்கிரமத்து' என்ற இடத்து இக்கிரமத்தால் என ஆல் உருபு விரித்துரைத்தலால் இம்முறைமை பற்றி எனப் பொருள் தந்தது. 'அக்கரங்கள்' என்னும் பன்மை 'இன்று' என்னும் ஒருமையோடு முடியாது. அதனால் இன்று என்னும் ஒருமை இன்றாம் என அப்பண்பின் மேல் நின்றது. அதாவது அக்கரங்கள் இன்றாம் தன்மைய என்க.

'பாசத்தோடு உளகாண்' என்பதிலுள்ள 'காண்' என்பது 'பசுவாம் காண்' எனக் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது.

'பண்ணையும்.........ஆங்கு'

## அவையே தானேயாதல்

மறையின்கண் ஒன்று என்றதே அன்றி இருபொருள் கலப்பால் வேறன்றி நிற்கும் புணர்ப்பும் (அத்துவிதம்) கூறுவது ஒன்றோடொன்று முரணுமல்லவா? முரணுதல் மாறுபடுதல். முரணுமல் பொருள் கொள்ளின் புணர்ப்பு என்பதும் ஒன்றென்றே பொருள் கொள்ளுதல் வேண்டும் எனப் பிறர் ஐயங்கொள்வர். அவர்தம் ஐயத்தை அகற்ற இவ்வெண்பா அருளுகின்றார்.

மறையின்கண் புணர்ப்பு (அத்துவிதம்) எனக் கூறியதன் பொருள் முதல்வன் உயிர்களோடு வேற்றுமையின்றி நிற்பன் என்பதாம். அப்பொருள் ஒன்று என்பதனோடு முரணுமாறு இல்லை. ஆண்டவன் எங்கும் நிறைவாய் எவற்றினும் பிரிப்பின்றிக் கலந்து நிற்கின்றான். அவ்வுண்மையைப் புலப்படுத்தக் குணகுணியாகிய 'பண்ணும் ஓசையும்' 'பழமதுயும் சுவையும்' என ஒப்புக் காட்டப்பட்டது.

இவ்வொப்பு அவ்வளவே அல்லாமல் இருபொருளும் ஒன்று என்னும் கருத்துடையதன்று. பண்ணில் ஓசையும் பழத்தில் சுவையும் பிரிக்க முடியாததைப்போல அண்ணல் தாளும் ஆருயிர்களும் பிரிக்கமுடியா என்பதாம்.

வெளி எங்கும் நிறைந்திருக்கும். ஆயினும், பொருள்கள்தோறும் தனித்தனி விரவிநிற்கும். அதுபோல் முதல்வன் குறைவிலா நிறைவாய் யாண்டும் நீக்கமற நிற்பன். உயிர் உடல் உலகுகளோடும் தனித்தனியும் நிறைந்து நிற்பன்.

அண்ணல்தாள்—ஆண்டவன் திருவருள். எங்குமாம் அண்ணல்தாள் எனச் சிறப்பித்தது, ஆண்டவன் குறைவிலா நிறைவாய் நிற்க உயிர்கள் அந்நிறைவிலே போக்குவரத்து புரிகின்றன. புரியும் உயிரோடும் நிறைந்து நிற்பன். அவ்வளவே அன்றி உயிர் செல்லும் இடமெல்லாம் தானும் வேறாகச் செல்வன் என்பதில்லை. நீர்நிலையில் நீர் எங்கும் நிறைந்திருக்கிறது. நீரின் அகத்துவாழ் மீன் முதலிய உயிர்கள் ஆண்டு இயங்குகின்றன. அவ்வுயிர்களோடு நீர், இருந்த இடத்திலிருந்தே நிறைகின்றது. புறத்துவாழ் மக்கள் முதலியோர் மூழ்க இறங்குவதும் அழுந்தி ஏறுவதும் செய்வர். அவர்களோடும் ஏனைய உயிர்களோடும் நீர் இருந்தபடியே நிறைவுறுகின்றது. இத்தன்மையே முதல்வன் "போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியன்" ஆதலின் இருந்தபடியே எல்லாவற்றோடும் நிறைவுறுகின்றனன்.

நின்றபடி நீரும் நிறையும் பலவுடனாய்
மன்றோன் உயிர்நிறைவம் மாண்பு

## சிறப்பு

அவையே தானாதல் உடனாதல். ஆசான் ஓதி ஓதுவித்தால் அன்றி மாணாக்கன் ஓதுதல் இயலாது. ஓதுவித்ததைப் பின் ஓதுதல் ஆசான் உடன் ஓதுதலேயாகும். வேறு பலவற்றை மாணவன் ஓதிடினும் அதுவும் ஆசான் உடன் ஓதுதலேயொக்கும். இது வித்தினின்றும் பெருகிய விளைவெல்லாம் அவ்வித்தின் விளைவே அன்றோ! இம்முறை போன்று ஆண்டவன் கலப்பால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும் இருப்பதுபோல உதவுதல் தன்மையால் உடனாயும் நிற்பன்.

உயிரின்நிலை ஒன்றுதலாலும், உயிரின் அறிவு வேறுதலாலும், உயிரின் நடக்கை உடனாதலாலும் விளங்குவன. இதனாலேயே புணர்ப்பு (அத்துவிதம்) என்பது முத்திறப் பாகுபாடும் ஒருங்கியைந்த நிலைமையாகும் என வலியுறுத்தப்படுகிறது.

இதனையோர் ஒப்பில்வைத்துக்காணின் நீர், தோண்டி, கயிறு மூன்றும் கூடியிருக்கின்றன. இம் மூன்றின் கூட்டமே புணர்ப்பு. நீரும் தோண்டியும் கலப்பால் ஒன்று. நீர் பொருள்தன்மையால் வேறு. கயிறு தொழில்தன்மையால் உடனாதல். இவற்றை ஒருபுடை ஒப்பாகக்கொள்க.

> "நீர்தோண்டி நீர்கலப்பாம் நீர்பொருளால் வேறாமால்
> சேர்கயிறு செய்கையுட னாம்.

## உடனும் ஒப்பு

ஆளுடைய அரசரும் இப் பண்ணும் ஓசையும் பழமும் சுவையுமே உடனாதற்கு ஒப்புக்காட்டுகின்றனர் அத் திருப்பாட்டு வருமாறு :

> "பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை*
> பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்
> வண்ண மில்லி வடிவுவே றாயவன்
> கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே." —நு. சஎ - அ.

> எங்கும் குறைவில் நிறைவாம் இறையோனும்
> அங்கங்கே ஆவியுட னாம்.

## இலக்கணம்

பண்ணை - ஐகாரம் பகுதிப் பொருள் விகுதி. பண் - பாலைப்பண் முதலாயின. ஓசை - எடுத்தல், படுத்தல், நலிதல் முதலாயின. குணகுணிகளின் உவமை கூடுநிறைவும் குறைவிலா நிறைவுமாம். இவற்றை வியாப்பியம் வியாபகம் என்ப.

எங்கும் ஆம் அண்ணல்தான் எனச் சிறப்பித்தது குணகுணிகள் போல் உடனுயுப உடனாகாமைக்கு உண்மை காட்டியவாறு. உண்மை - அநுபவம்.

> † 'அரக்கொடு.................இன்று'

## ஒரு முடிவு

உடலுயிர் ஒன்றுதற்கும், அகர உயிர் வேறுதற்கும், பண்ணையும் ஓசையும் உடனாதற்கும் தனித்தனி உவமை கூறின் பல முடிபாகும் அன்றோ? ஒரு முடிபாயின் அன்றோ உண்மை உறுதியாகும். பல முடிபாகக் கூறின் பயனில்லை என்று எனையார் கூறுவர். அவர்க்கு

---

* 'பண்ணிடைத்' எ. உகூ - எ.

† கற்பொடியும் அரக்கும் ஒருங்கியைந்து பிரிப்பின்றி நிற்கும் ஒப்பு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னுள்ள அகநானூற்று முதற்பாடலிலும் வந்துள்ளது. அப்பாட்டு 'வண்டுபட' எனத் தொடங்குவது; வரி ரு. "சிறுகாரோடன் பயினொடு சேர்த்திய, கற்போல் பிரியலம்" காரோடன் - சாணைக்கல் செய்வோன், பயின் - அரக்கு, கல் - கற்பொடி. இவ் ஒப்பு இரண்டும் பிரியாமைக்கு வருகின்றது

விடை கூறுவாராய் ஒரு முடிபும் உரைத்தருளுகின்றனர். அதுவே இவ் வெண்பா. இதன்கண் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்றல் ஒருங்கு பெறப் படும்.

முன்னோன் அருளரக்காம் மூவுயிர்கள் கற்பொடியாம்
அன்னோன்கா ரோடனும் அங்கு.

அரக்கும் கற்பொடியும் பிரிக்கமுடியாத நிலையில் கலந்திருப்பது ஒன்றாதல். பொருள் தன்மையில் கற்பொடியும் அரக்கும் வெவ்வேறே யாம். அது வேறாதல். கற்பொடியே கருவியினைத் தீட்டும். அரக்கு உடன் துணையாகும். இஃது உடனாதல்.

இவற்றைத் தானேயாம், உலகேயாம், தானே உலகேயாம், என்று உரையிற் காண்கின்றோம். தானேயாம் வேறு; உலகேயாம் ஒன்று; தானே உலகேயாம் உடன் எனக்கொள்க.

இவ் வெண்பாவில் **'உடங்கியைந்து'** என்பதால் ஒன்றாதலும் **'நின்று'** என்பதால் வேறாதலும், **'பிரிப்பின்றி'** என்பதால் உடனாதலும் பெறப் படும்.

## உயிர்கொள் உலகுரு

கட்டற்றுத் தமித்து முழு முதல்வன் தாளுற்று அவனையே வேண்ட அவனருளால் உயிர்களும் உலக வடிவினைக்கொள்ளும். உலக வடிவமே உலகுரு. இதுவே விசுவரூபம். தமித்துக் கட்டகன்று தனியாய் இறை யைச் சார்ந்து நிற்றல் என்பது உயிர்கள் அன்பும் அறிவும் ஆற்றலும் என்னும் மூன்றும் முக்கண்ணன்பாலே அழுந்தி நிற்றல். அன்பாற் சார்தலும் ஆற்றலால் பற்றலும் அறிவால் வேண்டலும் பூண்டு நிற்றல். ஊர்தியிற் செல்வோர் தாங்கள் தாங்கள் போய்ச் சாரவேண்டிய இடத்தையே நாட்டம்கொண்டு செல்வர். ஊர்தியிலுள்ளாரின் உரையாடல் களிலேனும் வழிநடை உலகின் காட்சிகளிலேனும் கேட்டும் கண்டும் கருத்தழுந்தார். அதுபோல் இறை உயிர் தளை என்னும் மூன்றும் ஒரு நிறைவில் ஆயினும் உயிர்கள் தளையாகிய மல மாயைவினைகளைச் சாரா. இறைவனையே சார்ந்து நிற்கும்.

ஊர்தியினிற் செல்வார் உரைஉலகிற் பற்றுறா
சாருமூர்ப் பற்றுறுவர் தாம்.

வேண்ட இடைவிடாது பாவிக்க. **வேண்டல்** - பாவித்தல். இதுவே சிவோகம்பாவனை. சிவோகம்பாவனையே சோகம்பாவனை எனவும் கூறப் படும். சிவோகம்பாவனையின் தன்மை சித்தியார் கூ. ரு. எ. - ஆம் திருப் பாட்டில் அருணந்தி சிவனாயனார் கூறியருளுகின்றனர். அது வருமாறு:

"கண்ட இவை அல்லேனான் என்றகன்று காணுக்
கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினொடும் உளத்தவன்தான் நின்றகலப் பாலே
**சோகமெனப் பாவிக்கத்** தோன்றுவன்வே றின்றி
விண்டகலும் மலங்களெல்லாம் கருடதியா னத்தால்
விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்
பண்டைமறை களுமதுநான் ஆனேன் என்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே"
—சித்தியார், கூ. ரு - எ.

வேண்டல் பாவித்தல் என்னும் பொருளில் திருவள்ளுவ நாயனாரும் அருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு :

"தூஉய்மை என்பது அவாஇன்மை மற்றது
வாஅய்மை **வேண்ட** வரும்." —திருக்குறள், ௩௬௪.

இச்சிவோகம் பாவனை இறப்பில் தவத்தால் கைவரப்பெற்றமையால் 'வாமதேவ முனிவன் முதலியோரும்' யானே உலகெல்லாம் ஆயினேன் எனக் கூறினர். அனைத்து மெய்யுணர்வுச் சிறப்புநூலாம் 'சர்வஞ் ஞானோத்தரத்தில்' முதல்வன் உயிர்கள்மேல் வைத்து 'யானே எல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நின்றேன்', எனக் கூறியருளினன்.

இவ்வியைபுபற்றி மெய்கண்ட நாயனாரும் வீடுபேற்றுக் காலத்து முதல்வனையே சார்ந்து அடிமுதல்வனில் பிரிப்பின்றி உயிர்கள் நிற்றலால் அவனருளால் அவ்வுயிர்களும் உலகமாய் நிற்கின்றேம் என்று கூறுதல் அமைவுஉடைத்து என்றருளினர். 'யானே உலகெல்லாம் என்பன்' எனவுங் கூறினர்.

இவ்வுண்மை, ஆளுடைய அரசர் அருளிச்செய்த திருப்பாட்டானும் உணர்க. அத்திருப்பாட்டு வருமாறு :

"செற்றதோர் மனமொழிந்து சிந்தை செய்து
சிவமூர்த்தி என்றெழுவார் சிந்தை யுள்ளே
உற்றதோர் நோய்களைந்திவ் **உலகம் எல்லாம்**
காட்டுவான் உத்தமன்தான் ஓதா தெல்லாம்
கற்றதோர் நூலினன் களிறு செற்றான்
கழிப்பாலை மேய கபா லப்பனார்
மற்றிதோர் மாயக் குரம்பை நீங்க
வழிவைத்தார்க்கு அவ்வழியே போதும் நாமே."
—சு. கஉ . கூ.

சிவபூசை

சிவபூசையால் **சிவவேண்டல்** எளிதிற் கைகூடும். சிவவேண்டல் சிவோகம்பாவனை. சிவவேண்டல் கைகூடினோர் 'செயற்கரிய செய்வா ராகிய பெரியராவர்'. அவர்கள் தங்கள் உடல் உயிர்கள் ஆண்டவன் திருவருளால் அவன் திருமேனி எனவேகொள்வர். தங்களையே சிவபெருமானாக வழிபடும் திறமும் வகுத்துக்கூறுவர். தங்களைச் சிவனாகக் கருதி மெய்யன்பர் வழிபடுங்கால் தாங்கள் (வழிபடப்படுவார்) சிவனையே வேண்டுவர். அதனால் வழிபடுவார் சூட்டிய பூ முதலிய திரு அடையாளங்கள் சிவன் மாட்டுக் காணப்பெறும். அதுபற்றி அவ்வுயிர்கள் சிவமாய் மாறிவிடாது. நோயாளி மருத்துவனை அடைந்து மருந்துண்டு நோய் நீங்கப்பெற்று நலமும் இன்பமும் நன்குறினும் மருத்துவனாக மாறிவிடான். இவ்வொப்பே உயிர்கள் சிவமாய் மாறிவிடாமைக்குக் கொள்க.

இவ்வுண்மை திருவள்ளுவ நாயனார் அருளிய திருப்பாட்டானும் அறிக. அது வருமாறு :

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை." —திருக்குறள், ருரு.

இதன்கண் தெய்வம் தெய்வத் திருவுரு. தெய்வத் திருவுரு எட்டு. அவை, 'நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்விசும்பு, நிலாப், பகலோன்,

புலனுய மைந்தன்' என்ப. உயிர் காற்று. புலனுய மைந்தன் ஆருயிர். ஆருயிர் வழிபாடே சிவவழிபாடு. ஏனை எழுவகைத் திருவுருவ வழிபாட்டினும் ஆருயிர் வழிபாடாகிய எட்டாந் திருவுருவ வழிபாடே நனிமிகச் சிறந்தது. இவை பள்ளி வகுப்புப்போலவும் ஏணிப்படிபோலவும் கொள்ளற்குரியன. மேல்வகுப்பும் மேற்படியும் எய்தியவன் ஏனை வகுப்புக்களையும் படிகளையும் நாடான், புறக்கணியான். இவ் ஆருயிர் வழிபாட்டைக் கொண்டவன்வழி இயற்கைகளும் தேவர்களும் தொழிற்படுவர். அதனையே "பெய்யெனப் பெய்யும் மழை" என வற்புறுத்துவாராயினர்.

இச்சீரிய செம்பொருட்டுணிவுக் கொள்கையினையே ஆளுடைய அரசரும் அருளிச் செய்வாராயினர். அத்திருப்பாட்டு வருமாறு:

" முழுத்தழல் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்து
எழிற்பெருஞ் சோதியை எங்கள் பிரானை இகழ்திர்கண்டீர்
தொழப்படும் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத்
**தொழப்படும் தேவர்தம் மால்தொழு விக்குந்தன் தொண்டரையே "**

— ச. கக௨ - ரு.

கண்ணன் ஐவருள் நடுவுள்ளவனுகிய அருச்சுனனுக்குத் தன்னைச் சிவமாகக் கருதி வழிபடப் பணித்தனன். அவனும் அப்பொழுது அவனைச் சிவன் எனவே கருதி வழிபட்டனன். அவன் சூட்டிய திருமலர்களைச் சிவன் திருமேனியிற் கண்டனன். அதனுல் சிவனையே முழுமுதல் எனக் கொண்டனன். இறக்குங்காறும் சிவபூசையினைச் சிறக்கச்செய்து உய்ந்தனன். மேலும் கண்ணன் தானே உலகெல்லாம் ஆயினன் எனக் கூறினன். உலகுருவாம் பெருவடிவினையும் எடுத்துக் காட்டினன். அருச்சுனன் சிவன்பால் **பாசுபதம்** பெற்றுப் போர்வென்று கொற்றம் எய்தினன். இதனை ஆளுடையபிள்ளையார் அருளிய திருப்பாட்டான் உணர்க. அது வருமாறு:

" வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலும்நற் பூசனையால்
நஞ்சமுது செய்தருளும் நம்பியென வேநினையும்
பஞ்சவரிற் **பார்த்தனுக்குப் பாசுபதம்** ஈந்துகந்தான்
கொஞ்சுகிளி மஞ்சணவுங் கோளிலியெம பெருமானே."

— க. சுஉ - ரு.

**சிவதீக்கை**

தீக்கை என்பது தெய்வத்தை வழிபடும் கொள்கையினை ஆசான் வழியாக மாசகன்று மேற்கொள்வது. தீ என்பது தீய்த்தல் என்னும் தொழிற்பெயரின் முதனிலை. கை என்பது கைக்கொள்ளுதல் என்னும் தொழிற்பெயரின் முதனிலை. இவ்விரண்டு முதனிலைகளும் சேர்ந்து **தீக்கை** என்னும் ஒருசொல் நீர்மைத்தாய் வழங்கப்படுகின்றது.

கண்ணன் பாற்கடல் வேண்டிப்பெற்ற உபமன்னிய முனிவர்பால் சிவ தீக்கை பெற்றவன்; சிவ வழிபாடு செய்தவன்; சிவ வேண்டல் உடையவன். அதனுல் அவன் தன்னைச் சிவனெனக் கருதி வழிபடச் செப்பினன். கண்ணன் சிவதீக்கை பெற்றமையைச் சேக்கிழார் அடிகள் அருளிச்செய்கின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு;

"யாத வன்துவ ரைக்கிறை யாகிய
மாத வன்முடி மேலடி வைத்தவன்
பூத நாதன் பொருவருந் தொண்டினுக்கு
ஆதி அந்தம் இலாமை அடைந்தவன்."

—கஉ. திருமலை - கசு.

## முதற்கூற்றின் பிறிவு

முதற்கூறு முதலதிகரணம். இக்கூற்றில் கடவுளும் உயிரும் ஒன்றென்றும், வேறென்றும், வேறும் ஒன்றுமாம் என்றும் பிணங்குங் கொள்கையினர்தம் கொள்கையை மறுக்கின்றனர். இக்கொள்கை அபேதம், பேதம், பேதாபேதம் எனக் கூறப்படும்.

ஒன்றெனக் கூறுவார் மாயாவாதிகள். வேறும் ஒன்றுமாம் என்பார் திரிபுக்கொள்கையினர். இவர்களே பரிணமவாதிகள் எனப்படுவர். வேறென்பார் ஏனையார்.

க. ஒன்றெனக் கூறுவார் காட்டும் ஒப்பு பொன்னும் பணியும். பொன்போன்றது கடவுள். பணிபோன்றது உயிர். பணியின் கண்ணும் பொன்னின் தன்மை காணப்படும் அல்லவா? அதுபோல் உயிரின் கண்ணும் கடவுள் தன்மை காணப்பெறுதல் வேண்டும். கடவுள் தன்மை கட்டுறாதது, பிறப்பு இறப்புக்கு உட்படாதது, நினைப்பு மறப்பு அற்றது, வரம்பலின்பம் உடையதுபோன்ற பல நலங்களும் உடையது. உயிர்கள் எல்லாக் குற்றமும் உடையன. நலங்கள் சிறிதும் இல்லாதன. இந் நிலையில் எப்படி இரண்டும் ஒன்றெனக் கூறல் பொருந்தும்?

உ. வேறும் ஒன்றுமாம் என்பார் காட்டும் ஒப்புச் சொல்லும் பொருளும். சொல் வந்து எழலும் பொருள் தோன்றுகின்றது. சொல் லின்றிப் பொருளில்லை பொருளின்றிச் சொல்லில்லை. எனவே கடவுளும் உயிர் உலகங்களும் வேறுபோற் காணப்படினும் ஒன்றே மரமும் கிளையும் பிறவும் வேறுவேறு பெயர் கூறப்படினும் ஒன்றேயன்றோ? அதுபோல் கடவுள் உயிர் உலகங்கள் என வேறுவேறு பெயர் கூறப்படினும் ஒன்றேயாம் என்பா.

இவர்கள் ஒப்பின்படி மரம தரையிலிருக்கிறது கிளை மரத்திலிருக் கிறது. இரண்டற்கும் இடம் ஒன்றன்று. அதுபோலவே சொல் அகமாகிய நாவில் இருக்கிறது. பொருள் புறமாகிய உலகு உடல்களில் இருக்கிறது. கடவுளும் உயிரும் ஒரே இடத்திலிருப்பதன்றி வெவ்வேறு இடங்களில் இருப்பன அல்ல. ஆகவே அக்கொள்கையும் பொருந்தாது.

ந. வேறென்பார் கடவுளும் உயிரும் வெளியும் இருளும்போலும் என்பர். ஈண்டு வெளிச்சம் என்னும் பொருளுடையதாய் ஒளியைக் குறிக்கின்றது. ஒளியும் இருளும் ஒன்றாய்க் கலப்பது என்றும் இன்று. ஒளி தோன்ற இருள் அடங்கிவிடும். எனவே ஒளியின் உதவி இருளுக்கு இல்லை. அதுபோல் கடவுளின் உதவியும் உயிர்கட்கு இல்லை என்றாகும். அதனால் இதுவும் பொருந்தாது.

மேற்கூறிய மூவரும் உறையுள் உணர்த்தல் ஊக்கல் என்னும் முத்திற முறையும் ஒருங்கமைந்த புணர்ப்பாம் இயைபே முழு முதல்வனுக்கும் மூவா உயிர்களுக்கும் உள்ள ஒற்றுமைத் தொடர்பு என்னும் உண்மையை உணரார். அதனால் பொருந்தா ஒப்புக்களைக் கூறி மயங்கி மெய்ம்மை காணாது ஒழிந்தனர்.

செம்பொருள் துணிவினர் செவ்விய ஒப்பின் வழியாக யாவரும் உளங்கொள உரைத்தருள்வாராயினர்.

க. அவையேயாதல் அல்லது ஒன்றாதல்: முதல் வெண்பாவில் கூறிய உடல் உயிர் ஒப்பு. உடல் உயிர்கட்கும் உயிர் முதல்வனுக்கும் உவமையாகக் கொள்ளப்பட்டன. உயிர் உடலாகவும் உடற்கு வேறாகவும் நிற்கும். அதுபோல் கடவுள் உயிராகவும் உயிர்க்கு வேறாகவும் நிற்பன். ஓர் உடல் ஒருயிரையே சார்ந்திருக்கும். ஓர் உயிர் விட்டுவிட்டுப் பல உடல்களைச் சாரும் தன்மையதாய் இருக்கிறது. அதனால் உயிர் உடம்புமாய் அதற்கு வேறுமாய் நிற்கும். உடம்பு அவ்வாறு நில்லாது. இது குடியிருப்பார் வீடு விட்டு வீடு மாறுவர். ஆனால் வீடு இடம் மாறுவதின்று.

கடவுளும் உயிருமாய் அதற்கு வேறுமாய் நிற்பன் என்பது கடவுள் பல் உயிர்க்கும் சாரபாய் நிற்பன். ஆனால் தனக்கோர் சார்பு இல்லான் என்பதனால் பெறப்படும். அது, * "சார்பினால் தோன்றாது" என்னும் வெண்பாவால் காண்க. உயிர்கள் கடவுளைச் சார்வதல்லாமல் ஏனை உயிர்களுக்குச் சார்வாவதில்லை. ஆட்சித் தலைவன் நாட்டவாக்குச் சார்பாவன். நாட்டவர் ஒருவருக்கு ஒருவர் தலைவனை யொத்த சார்பாவதில்லை. இதில் கடவுள் ஒன்றாய் நிற்கும் நிலையே வலியுறுத்தப்பட்டது

உ. தானேயாதல் அல்லது வேறாதல்: இரண்டாம் வெண்பாவில் கூறிய எழுத்துக்களும் அகர வுயிரும் என்னும் ஒப்பு மிகவும் பொருத்தமானது. அகர உயிர் கடவுள்; ஏனைய உயிர்கள் உளமாகிய ஆன் மாக்கள். மெய்கள் மலம் மாயை வினைகள். அகரவுயிர் உயிரெழுத்துககளோடும், மெய் எழுத்துக்களோடும் இயைந்து கானும் இயங்கி அவற்றை இயக்கியும், தான் தனித்து இயங்கியும வருகின்றது. 'ஆ' என்னும் உயிரினோடு அகர உயிர் இயைந்து இயங்கி அதனை இயக்குகின்றது. 'க' என்னும் மெய் யெழுத்தினோடும் இயைந்து அதனை இயக்குகின்றது. அம்மட்டும் அன்று. அன்பு என்னும் சொல்லில் முதலில் தனித்தும் 'பு' என்னும் எழுத்தில் உகர உயிரொடும் பகரமெய்யொடும் சேர்ந்தும் இயங்குகின்றது: இயக்குகின்றது. அன்பு என்பதில் 'அ'கரம் பகரவுகரமாகிய 'பு'கரத்தில் நிற்கும் நிலையே முதல்வன் உடம்போடு கூடிய உயிருடன் கலந்து நிற்கும் நிலைக்கு ஒப்பாகும்.

முதல்வனும் உயிர்களோடும் பிறவற்றினோடும் இயைந்து இயக்குகின்றான். தானும் இயங்குகின்றனன். இயங்குகின்றனன் என்பது ஐந்தொழில் கூத்தேயாம். முழு முதல்வன் உயிர் உடல் உலகுமாய் நிற்பதோடு வேறுமாய் நிற்பன். அது முதல்வன் அறிவித்தால் அசைவித்தால் இயக்கினால் அன்றி உயிர் உடல் உலகங்கள் அறியா, அசையா, இயங்கா. முதல்வனுக்கு அறிய அசைய இயங்க வேறொன்றின் துணை வேண்டுவதில்லை. ஆதலால் அவன் தானேயாய் நிற்கும் வேறும் நிலைமையும் உடையன். இதற்குக் கண் அருக்கன் என்னும் ஒப்புக்காட்டுவா. அருக்கன் தானேயும் விளங்கும். கண்ணொடு சேர்ந்து கண்ணையும் விளக்குவிக்கும். கண் அருக்கனுடன் சேராவிடில் விளங்கா.

ந. அவையே தானேயாதல் அல்லது உடனாதல்: பண்ணும் ஓசையும், பழமதுவும் சுவையும் ஒப்பாகக் கொள்வா. இவை குணகுணிகள் போல் பிரிப்பின்றி உடனாய் நிற்றற்குப் பொருந்திய ஒப்பாகும். ஓசை பண்ணையின்றி நிற்காது. சுவை பழத்தையின்றி நிற்காது. ஓசை பண்

* இந்நூல் ௩௭-ஆம் பக்கம் காண்க.

முழுவதும் பிரிப்பின்றி நிற்கும். சுவை பழ முழுவதும் பிரிப்பின்றி நிற்கும். பண் உயிரையும் ஓசை திருவருளையும் குறிக்கும். பழம் உயிரையும் சுவை திருவருளையும் குறிக்கும். பண்ணைக் கேட்பதும் பழத்தைத் தின்பதும் அவற்றின்பாலுள்ள ஓசை சுவைகளின் இன்பம் நுகர்தற் பொருட்டேயாம். நுகர்ச்சியின் பொருட்டுக் கேட்கத் தின்னச் செய்யும் செயல் உடனாதற்குப் பொருந்திய ஒப்பேயாம்.

இதற்கு உயிர் அறிவும் கண்ணொளியும் உடன் கலந்து காட்டிக் காணும் உதவுதலாகிய உடனும் ஒப்புங் கூறுவர். அதுவும் பொருத்த முடையதே.

ச. தனித்தனி வெண்பாக்களால் கூறிய ஒன்றும் வேறும் உடனும் ஒப்பு மூன்றும் ஒருங்கமைய 'அரக்கொடு சேர்த்தி' என்னும் நான்காம் வெண்பாவில் கூறியருளுகின்றனர். இரு பொருள் கலந்து நின்று, பிரிப்பின்றி ஒரு பொருள் பயனுற உதவும் ஒண்மை ஒன்றாய் வேறாய் உடனும் முத்திற ஒப்புக்கு வாய்ப்பாய் அமைந்தமை சாலச் சிறந்ததே. இதில் அரக்கு கற்பொடிக்கு உறையுள் அளித்துக் கலந்து ஒன்றாய் நிறகின்றது. தீட்டுந் தன்மை கற்பொடிக்கு உணவெனக் காட்டி வேறாய் நிற்கின்றது. கருவிகளைத் தீட்டுமாறு துணை செய்து உடனாய நிற்கின்றது. உடங்கியைந்து என்பதால் ஒன்றாயும், நின்று என்பதால் வேறாயும், பிரிப்பின்றி என்பதால் உடனாயும் நிற்கும் முத்திற மெய்ப்புணர்ப்பும் ஒருங்கு பெறப்பட்டது.

ஒன்றாம் உடங்கியைதல் நின்றென்ப தாம்வேறு
பொன்றா வுடன்பிரிப் பின்று.

இவையெல்லாம் சால விளக்கமுற மேலாம் சிவப்பிரகாசத்துள் உமாபதி சிவ நாயனார் அருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு :

"புறசசமயத் தவர்க்கிருளாய் அகசசமயத் தொளியாய்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்
அறிவொளிபோற் பிரிவருமத் துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கல் உற்றாம்."

—சிவப். நூற்க - எ.

ஆண்டவன் முத்திற மெய்ப்புணர்ப்பாய் என்றும் நிற்கும் இயல்பினன் என்பது திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் அருளிய திருப்பாட்டால் உணரலாம். அது வருமாறு :

"ஈறாகி அங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய்
மாறாத எண்வகையாய் மற்றிவற்றின்—வேறாய்
உடனாய் இருக்கும் உருவுடைமை என்றும்
கடனாய் இருக்கின்றான் காண்." —திருக்களிற்றுப்படியார், அ௬.

திருவள்ளுவப் பெருந்தகையாரும் ஒன்றாய் வேறாய் உடனாய் இருக்கும் ஒப்பினை உய்த்துணர வைத்தருளுகின்றனர். அவை வருமாறு :

"பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின்." (ஒன்றாய்)

"பசந்தாள் இவளென்ப தல்லால் இவளைத்
துறந்தார் அவரென்பார் இல்." (வேறாய்)

"பசக்கமன் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின்." (உடனாய்)

திருக்குறள், கங-கூ0, கங-அ௨, கங-அக.

இம் மூன்றும் ஒருங்கமைந்த திருக்குறள் :

**என்ஐமுன் நில்லன்மின்** தெவ்விர் பலர்என்ஐ
முன்னின்று கல்**நின் றவர்.** —திருக்குறள், எஎக.

இதன்கண் என்ஐ என்பதனால் **வேறும்,** நில்லன்மின் என்பதனால் **ஒன்றும்,** நின்றவர் என்பதனால் **உடனும்** உய்த்துணர்ந்து கொள்ளக் கிடக்கின்றமை காண்க.

## இலக்கணம்

'இன்றி' என்பது செய்து என்னும் எச்சக்குறிப்பு. மழை பெய்து குளம் நிறைந்தது. இதில் 'பெய்து' என்பது செய்து என்னும் எச்சம். இதன் பொருள் மழை பெய்தலால் குளம் நிறைந்தது என்பது. இன்றி என்பது இன்மையால் என்று ஆகும். பிரிப்பின்மையால் தானே உலகாம் எனப் பொருள்படும். அப்பொழுது இன்மையால் என்பது காரணமாய் நிற்கும் தானே உலகாம் என்பது காரியமாகும். இன்றி என்பது முக்காலத்தையும் குறிப்பாக உணர்த்தும். அதனால் அஃது எச்சக் குறிப்பு.

## ஆவிநிலை

முழுமுதல்வன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் ஆவிகளின் இயல்பு: அளவில்லன, என்றுமுள்ளன, இருள்மலத்தால் பிணிக்கப்பட்டு அம்மலத்து அழுந்தின, ஆண்டவன் அருளால் இருவினைக்கு ஈடாகப் பிறப்பு எய்துவன, வினைப்பயன் துய்ப்பன, புண்ணிய பாவம் புரிவன, இறப்புப் பிறப்பு உடையன, திருவருளால் மலமகன்று திருவடி எய்தி அழிவின்றி இறவா இன்பந்துய்த்து இன்புறுவன.

இவ்வுண்மை உமாபதி சிவநாயனார் அருளிய திருப்பாட்டான் உணர்க. அது வருமாறு :

"எண்ணரிதாய் நித்தமாய் இருள்மலத்தில் அழுந்தி
இருவினையின் தன்மைகளுக்கு ஈடான யாக்கை
அண்ணலரு ளால்நண்ணி அவையவரய் அதனால்
அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றால்
புண்ணியபா வம்புரிந்து போக்குவரவு உடைத்தாய்ப்
புணருமிருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உண்ணிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாதம்
உற்றிடுநற் **பசுவர்க்கம்** எனஉரைப்பர் உணர்ந்தோர்."

—சிவப்பிரகாசம், ௨-க.

## இரண்டாம் அதிகரணம்

**இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது.**

*எ-து. மே-ள். எ-னின். முதல்வன் அவ்வாறு உயிர்களோடியைந்து நின்று புனருற்பவஞ்செய்யுங்கால் உலகத்துக்குப் போல் அவனுக்குத் துணைக்காரண முதலியன வேண்டப்படுமோ படாவோ என்னும் ஐயப்பாட்டின்கண் முதல்வனது சுதந்திரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய் முடியுமாகலின் அவனுக்கு அவை வேண்டப்படா எனப் பரிணாமவாதிகள் கூறுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. .இ - ள். வெ - டை.*

*ஈண்டு இருவினையென்றது முற்பிறவிகளின் ஈட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக் கிடந்த புண்ணியபாவங்களையென்க; எனவே, மாயையின் உண்மையும் பெறப்பட்டது. இவை வேண்டப்படுதல்பற்றி முதல்வன் சுதந்திரத்திற்கு இழுக்கில்லையென்பார், முதல்வன் ஆணையின்வரும் என்றார்.*

**ஒருநகரியைக் காப்பான் பாடிகாவல் இட்டாங்கு அவை அவனது ஆக்கினையாகலான்.**

*எ-து. ஏது. எ-னின். ஆணையேஅமையும் இருவினையெற்றுக்கு என்னுங்கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.*

*(இ - ள்.) ஒரு பட்டணத்தைப் புரக்கும் வேந்தன் பாடிகாவற்றொழிலைக் களைகணுவாரொருவன்மாட்டு வைத்தாற்போல எல்லாஅறிவு முதன்மை அநுக்கிரகங்களுடைய அம்முதல்வன் புனருற்பவத்தைச் செய்வதாகிய தனதாணையை அவ்விருவினைகள்மாட்டு வைத்து நடாத்துதலே முறையாகலான் இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என மேற்கொண்டது (எ - று).*

*முதல்வன் செய்யுஞ் செய்தியெல்லாம் உலகத்தோடொப்ப நிகழ்வனவாகலின் ஈண்டைக்கு அரசன் செய்தி உவமை ஆயிற்று.*

*பாடிகாவலாவது களைகணுவாரொருவனைக்கொண்டு வேந்தன் செய்விப்பதொரு தண்டத்தொழில் விசேடம். அது *"கோடி காவனைக் கூறாத நாளெலாம்—பாடிகாவலிற் பட்டுக்*

---

* *திருநாவுக்கரசு நாயனார் திருக்கோடிகாத் திருக் குறுந்தொகை க, நாடி நாரணன்,*

கழியுமே" என்னுந் திருப்பாட்டானுமறிக. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறெல்லாம் உரைப்ப.

*உள்ளதே தோற்ற உயிரணையும் அவ்வுடலின்
உள்ளதாம் முற்செய்வினை உள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோல்
செயவன் செயலணையா சென்று.

எ-து. உ-ம். எ-னின். வினை உண்டென்பதற்கும் அதுவே உயிர்க்குப்பயனாய் வருமென்றற்கும் மேல்வினையேறுமாற்றிற்கும் அது முதல்வனை இன்றியமையாமைக்கும் பிரமாணமென்னை என்னுங் கடாவை ஆசங்கித்து ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ-ள்.) உள்ளதே தோற்ற—(இல்லது தோன்றாதென்பது மேற்கூறிப் போந்தமையான்)முன் உள்ளதாய புண்ணியபாவமென்னும் இருகூற்றுச் சஞ்சிதவினையே (தன்பயனாகிய இன்பத் துன்பங்களையும் அவை நுகர்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பினையுந்) தோற்றுவிப்ப, உயிர் அவ்வுடலின் அணையும்—(அவ் வின்பத் துன்பநுகர்ச்சி சடத்துக்குக் கூடாமையின்) சித்தாகிய உயிரே அவ்வுடம்பிற் பொருந்தி அவற்றையநுபவிக்கும். (முன் வினையை ஈண்டனுபவித்தொழிந்தால் மேலைக்கு வினையுண்டாமாறு யாங்ஙனமெனின்) முன்செய்வினை உள் அடைவே உள்ளதாம்--முன்செய்தவினை அநுபவித்தற்கேதுவான முறைமையிலே மேலைக்குவினையுளதாம். (அற்றேல், அவ்வினையே பயனாக வரும் என அமையும் முதல்வன் எற்றுக்கென்னின்) செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோல்—உழவர் செய்யுந் தொழிற்குத் தக்க பயனை விளைநிலம் விளைவிப்பதன்றி அத்தொழில்தானே விளைவிக்கமாட்டாததுபோல, வள்ளலவன் செய்வன்—(உணவும் வித்துமாய்த் தொன்றுதொட்டுவரும் அவ்வினைகளை) வள்ளலாகிய முதல்வனே அவ்வுயிர்கட்குக் கூட்டுவன், செயல் சென்று அணையா—(அவ்வாறன்றி) வினைதானே உயிர்கட்குப் பயனாய் வந்து பொருந்தமாட்டாது (எ-று).

வள்ளலென்றார், தற்பயன் குறியாது †"வேண்டுவார் வேண்டிய" வாறே நல்கும் அருளுடைமை நோக்கி,

---

* 'முற்செயல்' சித். உ. ௬-கஉ. 'இருவினை' சித். உ. உ. க.

† திருநாவுக்கரசு நாயனார் திருமறைக்காட்டுத் திருத்தாண்டகம் க, தாண்டு சுடரனைய.

உள்ளடைவு உள்ளுதற்கேதுவாகிய அடைவென விரியும். ஏகாரம் ஏழாவதன்பொருட்கண் வந்தது. உள்ளுதல் ஈண்டநுபவித்தல்; அதற்கேதுவாய முறைமையாவன அநுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள். அவற்றின்கண் உண்டாமாறு முன்னர்க் காட்டுதும்.

மேல் முதல்வனுக்கு வினை வேண்டப்படுமென்பதற்கு அரசனை உவமைகூறினர்; ஈண்டு வினை முதல்வனை இன்றியமையாதென்பது உணர்த்துதற்கு உழவுதொழிலை உவமை கூறினரெனக் கொள்க.

*அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாஞ்சென்றங்கு
அவ்வினையைக் காந்த பசாசம்போல்—அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு.

எ-து. உ-ம். எ-னின். இருவினை சடமாகலிற் சென்றணைய மாட்டாவாயினும் உயிர்கள் சேதனமாகலின் அவையே அவற்றது பயனையறிந்து எடுத்துக்கொண்டு நுகரும். வள்ளல் எற்றுக்கு என்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) காந்த பசாசம் போல்—(ஒருவனெடுத்து நேரொக்கப் பிடித்தவழி) இரும்பினை (வலித்துக்கொள்ளும்) காந்தம்போல, அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின்—அவ்வினைப் பயன்களைப் பிறழாமல் நுகர்விக்கும் முதல்வனால், அவ்வினைஞர் தாம்—அவ்வினைகளைச்செய்யும் ஆன்மாக்கள் தாம், அவ்வினையைச் செய்வதனில் சென்று அவ்வினையை நுகராரேல் ஆர் தாம் அறிந்து அணைப்பார்—அவற்றைச் செய்தற்கு உரிய நிலைக்களமாகிய உடம்பின்கட் பொருந்தி (அவற்றது பயனை அநுபவிப்பர்) அவ்வாறநுபவியாராயின் வேறே எவர்தாம் அவற்றையறிந்து கூட்டுவார், ஆங்கு—(அறிவுஞ் சுதந்திரமுமின்றி மலத்தின் மறைப்புண்டு கிடக்கும்) அப்பெத்தகாலத்து (எ - று).

ஒருவருமில்லையென்பதாம்.

ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும் வினை சடமாகலானும், மாயை தாரகமாமத்தன்றுணிற்றல் எனப் போந்தமையானும், முதல்வனே அறிந்தணைப்பனெனப் பாரிசேடஅளவை கூறுவார், பிரானின்நுகராரேல் ஆர்தாம் அறிந்தணைப்பாரென்றார். இது சொற்பொருட் பின்வருநிலை.

* 'உலகுடல்' சித். உ. உ. உஉ.

*நெல்லிற்கு உமியும் நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லின் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்மம் அன்றுளவாம் வள்ளலால் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத்து ஆம்.

*எ-து. உ-ம். எ-னின். அவ்வினை ஆதியோ? அநாதியோ? ஆதியெனின் முன்பில்லது இடையே தோன்றுமென்பது சற்காரிய வாதத்துக்கு ஏலாது, அநாதியெனின் ஒருவர் கூட்ட வேண்டுவதில்லையென்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துத னுதலிற்று.*

*(இ - ள்.) நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும் சொல்லின் புதிது அன்று தொன்மையே—நெல்லின்கண் உமியும் செம்பின்கண் களிம்பும் எக்காலத்து உளவாயினவென்று ஆராய்ந்து சொல்லுங்கால் அந்நெல்லுஞ் செம்பும் உளவாயின வன்றே உள்ளனவன்றி இடையே வந்தன அல்ல; அதுபோல, வல்லி மல கன்மம் அன்று உளவாம்—மாயை மலம் கன்ம மென்னும் மும்மலங்களும் அநாதியேயுள்ளனவாம், கமலத்து அலர் சோகம் பொன்வாள் செய் வள்ளலால் ஆம்—(முன்னே உள்ளதாய) தாமரைப்பூ அலர்தலும் கூம்புதலும் ஞாயிற்றினாற் செய்யப்படுமாறுபோல (அவை தத்தங் காரியங்களைச் செய்தல்) முதல்வனாலேயாம் (எ - று).*

*இஃதெடுத்துக்காட்டுவமை.*

*புதிதன்றென்பதனைத் தனித்தனி கூட்டுக.*

*தொன்மையிலுள்ளவற்றைத் தொன்மை என்றுபசரித்தார்.*

*ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.*

*மாயை இறைவனுக்குப் பரிக்கிரகசத்தியாகலின், வல்லி யென்றார்.*

*வினைக்குத் தொன்மை கூறுவார் இனம்பற்றி மாயைமலங்களுக்குந் தொன்மை கூறினார்.*

*மூலமலத்தின் காரியம் மோகம் மதமுதலாயின. இருவினையின்காரியம் இன்பத்துன்ப முதலாயின. மாயையின் காரியம் தநுகரணமுதலாயின. வள்ளலால் ஆமெனவே திரோதான சத்தியது உண்மையும்பெற்றாம். அது பாகம் வருவித்தற்பொருட்டு மலத்தின் வழிநின்று மோக முதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற் கேதுவாதல்பற்றி*

---

*** 'இருவினை.' (பக்கம் - ௧௧௪.) சித். உ. உ.—௪0.**

மலமென்றுபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மல கன்ம மாயை திரோதானம் மாயாகாரியமென்னும் ஐவகைப் பாசமுங் கண்டு கொள்க.

இவற்றுள் மாயை சுத்தமாயை அசுத்தமாயை என்றிரு வகைப்படும். இவ்விரண்டனுள் சுத்தமாயையின் காரியமே அசுத்தமாயையென்பாரும், சுத்தமாயைபோல அசுத்தமாயையும் அநாதியேயாமென்பாரும், ஒன்றுதானே ஊர்த்துவமாயை அதோமாயையென்று இருவகைப்படுமென்பாரும் எனப் பல திறத்தார் ஆசிரியர். இனி, முதல்வனது கிரியாசத்தியே சுத்தமாயை யெனப்படுமென்பாருமுளர். அது முதல்வனுக்குத் தாதான்மிய சத்தியாகலின் பரிக்கிரகசத்தியாகிய சுத்தமாயையாதல் யாண்டையதென்றொழிக. சுத்தமாயையினின்றும் பஞ்ச கலைகளும் நால்வகை வாக்குஞ் சிவதத்துவம் ஐந்துஞ் சுத்தகால முதல் சுத்த நிலமீறாகிய முப்பத்தொன்றுந்தோன்றும். அசுத்த மாயையினின்றும் அசுத்தகாலமுதல் அசுத்தநிலமீறாகிய முப்பத்தொரு தத்துவங்களுந் தோன்றும். இந்தத் தத்துவங்களெல்லாம் பொதுவுஞ் சிறப்பும் பொதுச்சிறப்புமெனத் தனித்தனி மூவகைப்பட்டு உயிர்கள்தோறும் வெவ்வேறுளவாம்.

கன்மமும் *“நாசோற்பத்தி பண்ணிவருமாதலா லநாதி” என்பதுபற்றிப் பிரபஞ்சம்போலப் பிரவாகாநாதியென்பாரும், †“ஏகன் அநேகன் இருள்கருமம் மாயையிரண்டு—ஆகவிவை ஆறு தியில்.” எ-ம். ‡“ஆணவ முதலன் றதுபோற் கருமமும்” எ-ம். ஒப்ப ஓதுதல்பற்றி மூவகைவினைக்கும் முதற்காரணமாய மூலகன்மமொன்று அநாதிநித்தமாயுண்டென்பாருமென்று இருதிறத்தராசிரியரென்க. இவ்வினை யீட்டப்படுங்கால், மந்திர முதலிய அத்துவாக்களிடமாக மனம் வாக்குக் காயமென்னும் மூன்றுன் ஈட்டப்பட்டு, தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர் பெற்று, பின்னர்ப் பக்குவமாங்காறுஞ் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற் கிடந்து, சாதி ஆயுப் போகமென்னும் மூன்றற்கும் ஏதுவாய் முறையே சனகந் தாரகம் போக்கியம் என்னும் மூவகைத்தாய் அபூருவம் சஞ்சிதம் புண்ணிய பாவமென்னும் பரியாயப்பெயர்பெற்று, பின்னர்ப் பயன்படுங்கால் ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னு முத்திறத்தாற் பலதிறப்பட்டு பிராரத்தமெனப் பெயர் பெறும். ஆதிபௌதிகமாவது சடம் வாயிலாக வருவது. ஆத்தியான்மிகமாவது சடத்தோடுகூடிய சேதனம் வாயிலாக

---

* சிவப்பிரகாசம், பொது. கக. ‘நண்ணியிடு.’

† திருவருட்பயன், நிஉ. ‡ ஞானமிர்தம்.

வருவது. ஆதிதைவிகமாவது ஒரு வாயிலானன்றித் தெய்வந் தானே காரணமாக வருவது. இன்னும் இவ்வினைகள் உலகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம் என்று ஐவகைப்பட்டு ஒன்றற்கொன்று ஏற்றமுடைத்தாய், முறையே நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளினடங்கி, அசுத்தம் மிச்சிரம் சுத்தமெனப்படும் போகங்களைப் பயப்பிக்குமென்றறிக.

## விளக்கம்

### துணைக்காரணம்

முதற்கூற்றில் முதல்வன் உயிர்களின் வேற்றுமையின்றி விரவி நிற்பன் என்பது **அவையேஆய், தானேஆய், அவையேதானேஆய்** என்னும் மூத்திற மெய்ப்புணர்ப்பான் நன்குபெறப்பட்டது. உயிர்களின் பொருட்டே ஐந்தொழில் செய்வன் என்பதும் போந்தது. ஐந்தொழில் படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்ப. செல்சமமும் நல்அருளும் ஒருங்குடைய முழுமுதல்வன் எல்லா உயிர்களையும் ஒன்று போல் படையாமல் வேற்றுமையுறப் படைத்தருளுதற்குக் காரணம் வேண்டும். அதுவே துணைக்காரணம் என்ப. அத்துணைக்காரணம் இரு வகையது. அவை, ஒன்று திருவருளாகிய **ஆணை**; மற்றொன்று **இருவினை.**

### நோய்

திருவருளாகிய ஆணை தன்னைவிட்டு நீங்காமையால் தற்கிழமைத் துணைக் காரணம். இருவினை மாயையோடு இருப்பதால் பிறிதின் கிழமைத் துணைக் காரணம். இயற்கைநோய் மலம். ஈட்டமாகிய செயற்கை நோய் இருவினை. மருந்து இன்பத்துன்பம். மருத்துக்கலம் மாயை. மருத்துவன் முழுமுதல்வன். ஆருயிர் நோயாளி. அம்மருந்து அருந்த அருந்த வினை மாசுகள் தேயும், பின் மாயும். மாய்தல் ஈண்டு நீங்குதல். அழுககாடையை அழுக்கேற்றி நன்னீரால் இரண்டு அழுக்கையும் போக்கும் ஏகாலியின் எழிற் செயல் இதற்கு ஒப்பு. ஏகாலி - வண்ணான்

> நோயிரண்டு மாசுவினை துய்ப்பிரண்டாம் இன்பதுன்பம்
> மாயைகலம் தீர்ப்பான் இறை.

### வேற்றுமை

மன்னுயிர்கள் உடலொடு பொருந்தித் தோன்றுங்கால் தோன்றும் வேற்றுமை எண்வகை என்ப. உயிர்கள் படைக்கப்படுவன அல்ல. அவை இறைவன்போல் என்றும் உள்ளன. உடலொடு கூட்டுவிப்பதே படைப்பு. அவ்வுடலின்கண் வினைப்பயன்களை ஊட்டுவிப்பதே காப்பு. வினைமுடிவில் அவ்வுடலினின்றும் ஓட்டுவிப்பதே துடைப்பு. இவை, நோயாளியை மருத்துவ நிலையத்தில் பெயர் பதிந்து சேர்ப்பதும், மருந்து நல்குவதும், நோயகன்று திருந்து நலமுற்றதும் வீடுற நீக்குவதும் போன்றன.

வேற்றுமை க. வாழ்வு, உ. தாழ்வு, ௩. துறக்கம், ௪. நரகம், ரு. உயர்வு, சு. இழிவு, எ. நெடுவாழ்நாள். அ. குறுவாழ்நாள். இவ்வாறாக உயிர்கள் வேற்றுமையுறக் காரணம் அவ்வவற்றின் வினைப்பயன்களே. இதனால் வினை துணைக் காரணம். வினைப்பயனுக்குத் தக்க வேற்றுமை

யுடன் படைப்பது இறைமுறை. இது, பள்ளித் தேர்வில் படிப்புக்குத் தக்க புள்ளி கொடுப்பது உள்ளுமுறை என்பதை ஒக்கும். புள்ளி என்பது தேர்வு எண்.

இவ் எட்டனுள் க. வாழ்வு, உ. துறக்கம், ௩. உயர்வு, ௪. நெடுவாழ் நாள்; இந்நான்கும் நல்வினைக் கூறுகள். க. தாழ்வு, உ. நரகம், ௩. இழிவு, ௪. குறுவாழ்நாள்; இந்நான்கும் தீவினைக் கூறுகள். இவ் எட்டனையும் தொகுத்துக் கூறின் வாழ்வு, தாழ்வு என்னும் இரண்டாய் அடங்கும். அதுபற்றியே அருள்நந்திசிவ நாயனார் மையல்வாழ்வும் சிறுமைத்தாழ்வும் அகலவேண்டும். இறை அடிமை என்னும் பெருமைத் தாழ்வு உறல் வேண்டும். அப்பொழுதுதான் திருவருள் கைகூடும் என்றருளினர். அத் திருப்பாட்டு வருமாறு :

" வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனும் தன்மை யோடுஞ் சைவமாம் சமயஞ் சாரும்
ஊழ்பெறல் அரிது சால உயிர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி ஞனைப் போற்றுவார் அருள்பெற் றாரே."

—சித்தியார். உ. உ. ௯௧.

ஆளுடைய அடிகளும் இவ்வுண்மையை அருளுகின்றனர். அத்திருப் பாட்டு வருமாறு :

" வைத்த நிதிபெண்டீர் மக்கள்குலம் கல்வியென்னும்
பித்த உலகிற் பிறப்போடு இறப்பென்னும்
சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ.

—அ. திருக்கோத். ௬

*வாழ்வோடு தாழ்வு துறக்கநர கம்ஏற்றம்
சூழிழிவு நீள்குறைவெண் துய்ப்பு.

## இயைபு

ஐவகை இயை(எ௬)பினுள் ஐயம் பற்றிய இயைபினால் ஓர் இயலில் சேரவேண்டிய சூத்திரம் அதிகரணம் முதலிய பெறப்படும். அம்முறை யில் ஈண்டுத்தோன்றிய ஐயம் துணைக்காரணங்களது உண்மைக்கு அளவை கூறவேண்டுமே என்பது. அவ் ஐயநீக்கம் இவ்விரண்டாஞ் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்துப் பெறப்படுகின்றது. ஆகவே இயலாகிய ஓத்தியைபு பெறப்படும்.

'உள்ளதே................................சென்று.'

## உயிர் அணைவு

உயிர் உடலின்கண் அணைவதற்கு, முன் உயிரான் ஈட்டப்பட்டுத் தொகுப்பாகக் கிடக்கும் எஞ்சுவினையே காரணம். இல்லது தோற்றா தென்பதுமுன் ௪௧-இல் கூறப்பட்டுள்ளது. அதனையே ஈண்டுஉள்ளதே தோற்ற என்றார். எஞ்சுவினையின் பயன் இன்பத்துன்பங்கள். அவற்றை நுகர்தற்கு நிலைக்களம் உடம்பு. அவற்றை நுகர்வது உயிர். நுகர்ச்சி

* 'இருமை.' திருக்குறள், உ௩.

அறிவுள்ளவற்றிற்கே உண்டு. அறிவில்லாத உடம்பிற்கு இல்லை. நுகர்ச்சி என்பது அனுபவம். அறிவில்லாத பொருள்களுக்கும் உண்டென்றால் கையிற் குடையும் காலிற் செருப்பும் எத்துணைத் துன்பம் உறும்? நமக்குத் துணையாகுமா? ஆகவே உயிரே உடம்பில் அணைந்து வினைப்பயன்களாகிய இன்பத்துன்பங்களை நுகரும்.

**உள் அடைவு**

ஈண்டு உள்ளுதல் அனுபவித்தல். அடைவு முறைமை. 'உள்ளடைவு' நுகரும் முறைமை* இம்முறைமையில் இனிப்பிறப்பதற்கோ, பிறவாமைக்கோ வாயில் உண்டாகும். முன் வினையை நுகர்ந்தால் பின் பிறப்பதற்கு வினை உண்டாவது எப்படி என யார்க்கும் ஐயம் தோன்றும். முன் வினையை நுகருங்கால் நுகர்வார்க்கு அப்பயன் இன்பமாயின் விருப்பும், துன்பமாயின் வெறுப்பும் தோன்றும். இவ்விருப்பு வெறுப்புக்களே வினைநுகர்வுக்குத் துணைக்காரணம். அவையே பின் பிறப்பிற்கு முதற் காரணமாகிய எஞ்சுவினையோடு கூடுவன. இப்படிக்கூடும் துணைக் காரணம் ஒழியின் எஞ்சுவினை எதுஞ்செய்ய இயலாது நின்றுவிடும்.

இது, தன்புறுத்த வருவார்க்கு வெளிச்சமாகிய துணைக்காரணமும், நீர்பருகுவார்க்குக் கலம் ஆகிய துணைக்காரணமும் இல்வழித் துன்புறுத்தலும் நீர்பருகலும் இயலாமைபோல, எஞ்சுவினையாலாகிய ஊழுக்கும் தன் இனத்தை மேலும் புகுத்த வழியுண்டாகாது; அதுபோன்றதாகும். குளம் நிறைய நீர் இருப்பது எஞ்சுவினை. அதனைக் குடத்தில் முகந்துகொண்டு பருக வைத்திருப்பது ஊழ்வினையாகும். அந்நீரைப் பருகுங்கால் அந்நீர் மிக்க சுவையுடையது; அதுவே மேலும் மேலும் பருகற்குரியது; அதனையே பருகவேண்டும் என அவாக்கொள்ளின் எஞ்சுவினைக்கு அவ் அவா துணைக்காரணமாக வலுப்பெறச் செய்யும். அங்ஙனம் கொள்ளாது இந்நீரைப் பருகுவது எம் செயலன்று; இறைசெயல். அவன் எந்நீர் தரினும் பருகும் கடப்பாடு உடையேம். தாராதொழியினும் வேண்டும் கடப்பாடில்லேம். அவன் மாட்டு வேட்கை கொள்வது அன்றி ஏனைப் பொருள்கள் மாட்டு வேட்கை கொள்ளேம் என்று உறுதியாக நிற்பாரே அவனைச் சேர்வர்.

நீர்க்குடம் முடியின் பிறிதோர் குடம் விரும்பாதது போன்று, எண்குணத்தான் திருவடியை எய்த வேண்டுமென இடையறாது திண்ணமாய் எண்ணுவார்க்கு "வேண்டுவார்க்கு வேண்டியவாறே" நல்கும் விழுமியானாகிய முழுமுதல்வன் திருவடியை நல்காது குடம்போன்ற உடம்பினை நல்குவனோ? நல்கான். ஆண்டவன் விருப்பமே தம் விருப்பம் என்பார் வேட்கை விடுத்த விழுமியோராவர். அவர்தம் நிலையை ஆளுடைய அடிகள் அருளிச்செய்யும் திருப்பாட்டு வருமாறு :

"வேண்டத் தக்கது அறிவோய்நீ வேண்ட முழுதும் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயா தருள்செய்தாய் யானும்அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில் அதுவும்உன்தன் விருப்பன்றே."

— அ. குழைத்த—சு.

---

* பன்னிரண்டாம் சூத்திரம், க-'புண்ணிய' (உரை). 'மேலைக்கு.' சித்தி. உ-க-உ. 'மேலைக்குவரு' சிவப். ௩o.

நீர்குளத்தெஞ் சல்குடத்தேல் என்றவினை நேரிறைதான்
சேரின்பார்ந் தாரருந்தார் நீர்.

உள்ளம் பிறநினைப்பின் ஊண்சுவையோ ராமைபோல்
வள்ளல்நினை வார்க்கூழ் மனத்துவரா — உள்பிறப்பில்
"வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல." — திருக்குறள், ச.

வள்ளல் - முழுமுதல்வன். வேண்டுதல் - விரும்புதல். வேண்டாமை - வெறுத்தல். சேர்தல் - இடைவிடாது நினைத்தல். ஊழ்துய்க்குங்கால் உள்ளம் இறை நினைவிலிருப்பின் அவ்வூழ் உடலூழாய்க்கழியும்.

## வள்ளல் வருப்பன்

வினையே பயனுகவரும். முதல்வன் வேண்டா எனின், விளைவு தானே வீடுவந்து சேராது; விளைவித்தோன் கொண்டுவந்து சேர்ப்பன். என்னை? விளைபொருட்கு அறிவில்லை; இயக்கம் இல்லை. அதுபோலவே வினைக்கும் அறிவில்லை; இயக்கம் இல்லை. ஆயின் வள்ளலாகிய முழுமுதல்வனே வினையைக் கூட்டுவிப்பன்.

மேலும் தொழிலுக்குப் பயன் அத்தொழிலே தராது. தொழில் சேர் பொருளே தரும். நெல்லை விளைவிப்பார்க்கு நிலமே விளைவினைத் தரும். விளைவித்தற்றொழில் அவ்விளைவினைத் தராது. அதுபோல் வினைப்பயனை வள்ளலாகிய முதல்வனே தருவன். அவ்வினை தராது என்க. கூலியாட்குச் செய்த வேலை கூலியைத் தருவதற்கில்லை. செய்வித்துக் கொண்டோரே கூலியை நல்குவர். வேலை கூலி நல்குவதற்குத் துணைக்காரணமாகும்.

'வேண்டுவார்க்கு வேண்டியவாறே' நல்கும் வள்ளல்* தன்மையை ஆளுடையஅரசர் அருளிச் செய்கின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

"தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்அமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரதம் எல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே."
— சு. உ௩ — க.

## ஒப்பு

"ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனது ஆக்கினை யாகலான்," இதில் ஆட்சித் தலைவன் தன் ஆணையை அலுவலாளர்பால் வைத்து அவர்வழித் தங்கீழ் வாழ்வாரைக் குற்றம் நீக்கி நற்றம் ஆக்கி வாழ்விப்பன் என்பது கூறப்பட்டது. இதில் ஆட்சித் தலைவனை ஒப்பவன் ஆண்டவன். ஆணையை ஒக்கும் திருவருள். குற்றம் நற்றங்களை ஒக்கும் இருவினை.

---

* 'இம்மைச்' புறம். கஙச, 'வலம்படு' புறம். கக.

"பயன் விளைக்கும் செய்யே போல்" என்பதில் விளைநிலம் உழவர் செய்யும் செயலுக்குத் தக்கவாறு பயன் விளைக்கும் என்பது கூறப்பட்டது. இதில் விளைநிலத்தை ஒப்பவன் ஆண்டவன். உழவரை ஒப்பர், உயிர்கள். செயலை ஒக்கும் இருவினை. விளைநிலப் பயனே வினைப்பயன். நல்கும் ஆற்றலே ஆணை.

முதல்வன் உயிர்களின் வினைவழியே அவ்வுயிர்களுக்குப் பல்வேறு வகை உடல், உறவு, ஊண், உலகுகளைப் படைத்தருளுகின்றனன். அதற்கு ஒப்பாக ஆட்சித் தலைவனைக் கூறினர். ஆண்டவன் ஆணை நல்கும் வினைப் பயனுக்கு ஒப்பாக விளைநிலத்தைக் கூறினர்.

படைப்புக்கு வினை வேண்டப்படுமென்பதனால் வினைக்கு முதன்மை பெறப்படும். ஆயினும் அவ்வினை தன் பயனைக்கூடத் தான் நல்க முடியாத படி ஆண்டவன் ஆணையை அவாவுகின்றது என்பதால் ஆண்டவனுக்கே முழுமுதல் தன்மையும் வினைக்கு ஒரு சிறிதும் முதன்மை இன்மையும் பெறப்படும்.* அதனால் இருவேறு ஒப்புக்கூற நேர்ந்தது.

> ஆக்கற் கரிசிமுதல் அப்பயனைத் தந்தருள்வார்
> ஆக்குவார் அவ்வரிசி அன்று.
>
> 'அவ்வினையைச்......................ஆங்கு.'

**உயிர்கள் எடுத்துக்கொள்ளா**

வினைக்கு அறிவில்லை எனினும் அறிவுள்ள உயிர்கள் வினைப்பயனை அறிந்து நுகருமோ எனின்? நுகரா. உயிர்கட்கு அறிவுள்ளதேனும் மாணக்கர்களுக்கு ஆசான் அறிவுறுத்துவதுபோல இறைவன் அறிவுறுத் தினலன்றி உயிர்கள் அறியா. ஆகவே வள்ளலாகிய இறைவனே வினைப் பயனை அறிந்து நுகர்விப்பன். மேலும் நோயாளி மருந்தினை உணர்ந்து நுகரான். மருத்துவனே "நோய்நாடி நோய் முதல் நாடி அதுதணிக்கும், வாய்நாடி வாய்ப்பச் செயல்" (திருக்குறள், ௯௪௮) மேற்கொள்வன். அது போல இறைவனே உயிர்களுக்கு வினைப்பயனை ஊட்டுவிப்பன். இங்ஙனம் தோன்றும் ஐயத்தையே இவ்வெண்பா நீக்குகின்றது.

சடம் - அறிவில்லது. சேதனம் - அறிவுள்ளது. கடா - வினா. ஆசங்கித்தல் - மறுத்தல்.

> அறிவில் மருந்தடையா ஆயினும்நோ யாளன்
> அறிவாலும் கொள்ளான் அறி.

**காந்த ஒப்பு**

காந்தம் இரும்பை இழுப்பது. பசாசம் - இரும்பு. செய்வது - செய்யும் நிலைக்களம்; உடம்பு.

காந்தத்தினிடத்து இரும்பை இழுக்கும் ஆற்றல் உள்ளது. ஆனால் இரும்பும் காந்தம் இருக்கும் இடத்தைத் தேடிச் செல்லும் ஆற்றல்உடைய தன்று. காந்தமும் இரும்பு இருக்கும் இடத்தைத் தேடிப் பற்றும் ஆற்றல் உடையதன்று. ஆனால் ஒருவன் இரும்பைக் காந்தத்திற்கு நேராக ஆக்கின இடத்து அக்காந்தம் வலித்துக்கொள்ளும். வலித்தல் - இழுத்தல்; ஈர்த்தல்.

* 'நாமல்ல' மெய்கண்டார், ௧௦. ௨—௧.

அதுபோல் வினைப்பயனை நுகரும் ஆற்றல் உயிருக்கு உண்டு என்றாலும் உயிர் ஒட்டி நிற்கும் புல்மலத்தால் அன்பு அறிவு ஆற்றல்கள் மறைக்கப்பட்டுக் "காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற, கண்ணிலாக் குழவியைப்போற் கட்டுண்டு" (தாயுமானவர், சின்மய-சு.) கிடப்பது. அதனால் அவ் உயிரும் தன் வினைப்பயனை எடுத்துக்கொள்ளாது. இதுவே கட்டு நிலை. இதனையே ஆந்து என்றனர்.

காந்தத்தை ஒக்கும் உயிர். இரும்பை ஒக்கும் இருவினை. இரும்பை நேரொக்க ஆக்குவோனை ஒக்கும் இறை. இக் காந்த ஒப்பாலும் முழுமுதல்வன் முதன்மையே வலியுறுத்தப்பெறும். ஏரின் நுகத்தடியை எரும்பூட்டாது: எருதும் தானே பூட்டிக்கொள்ளாது; ஏர் உழுவோனே பூட்டுதல் வேண்டும். எருதுக்கு அறிவிருந்து என் பயன்?

ஏர்நுகத்துக் கில்லை எருதுக் கறிவுண்டேர்
ஏரோனால் பூணும் எருது.

## ஒழிபளவை

ஒழிபளவை எனினும் மீட்சி அளவை எனினும் ஒன்றே. இதனையே பாரிசேடம் என்பர். பாரிசேடம் என்பது கூட்டிக் கழித்தல். இறை உயிர் தளை என்னும் மூன்றனுள் தளையின் பகுதியாகிய வினைக்கு அறிவில்லை. மற்றொன்றாகிய மாயைக்கும் அறிவில்லை. மேலும் அதுவும் வினைபோன்று இறைவனாலேயே காரியப்படுகின்றது. வித்து நிலத்திற் கிடந்து நீரின் துணையால் முளையைத் தோற்றுவிக்கும். வித்துப் போன்றது மாயை. நிலம் போன்றது இறைவன் குறைவிலா நிறைவு. நீர்போன்றது இறைவன் திரு ஆணை. 'மாயை' அத்தன் தாள் நிற்பது, (சஙு) எனவே, முழு முதல்வனாகிய இறைவனே வினைப்பயனை உயிர்களுக்கு நுகர்விப்பன். இங்ஙனம் உய்த்துணர்ந்து கூறுவதுதான் ஒழிபளவை. அஃதாவது இறை, உயிர், தளை என்னும் மூன்றனுள் தளையாகிய வினை மாயைகளுக்கு அறிவில்லை. உயிர்க்கு அறிவுண்டு எனினும் தானே விளங்கும் ஆற்றல் இல்லை. மேலும் மலத்தால் கட்டுற்று நிற்கின்றது. இவ்விரண்டும் இங்ஙனமாகலின வினைப்பயனைக் கூட்டா. பின் வினைப்பயன் கூடிப் பிறவி நேர்ந்திருக்கின்றது. அப்படியானால் வினைப்பயனைக் கூட்டியது யார்? அல்லது எது? என்னும் வினா எழும். அவ் வினாவின் விடையாக மூன்றாவது பொருளாகிய இறைவனே கூட்டுவிப்பன் என உய்த்துணர்ந்து கூறுவது ஒழிபளவை என்க. இதனைப் புலப்படுத்துவார் "பிரானின் நுகராரேல் ஆர்தாம் அறிந்தணைப்பார்" என்றருளினர்

## அணி

சொற்பொருள் பின்வரும் நிலை என்பது ஓர் அணி. அஃது ஒரே பாட்டில் வந்த சொல்லும் பொருளும் மீட்டும் பலமுறை வருதல். இவ் வெண்பாவில் 'வினை' என்னும் சொல் "அவ்வினையை, அவ்வினைஞர், அவ்வினையை, அவ்வினையை" என நான்கிடத்து வருகின்றது. இதுவே சொற்பொருள் பின்வரு நிலை என்று கூறப்படுகிறது.

'செல்விற்கு..........................ஆம்.'

## வினை உண்மை

வினை தொன்மையா? தொடக்கமா? தொன்மை எனின் ஒருவர் கூட்டவேண்டுவதில்லை. தொடக்கம் எனின் எல்லாப் பொருளும்

தொடக்கமில்லது ; தொன்மையே உள்ளது என்னும் உள்ளாக்க வழக்கிற்கு ஒவ்வாது. உள்ளாக்க வழக்கு - சற்காரிய வாதம். இதனை உள் வழக்கு எனவும் கூறலாம். மேலும் தொடக்கம் எனின் உள்ளதுதான் தோன்றும் என்னும் உண்மை மாறுபடும். இல்லது தோன்றாதென்னும் இயற்கை இல்லாதொழியும்.

மும்மலமும் தொன்மையே. ஆயினும் மாயையின் காரியம் தொடக்கம். அதுபோல் வினைத்தன்மை அல்லது ஊக்கத்தின் கூட்டம் தொடக்கம். அதனால், மாயையின் காரியம வினைத்தன்மைக் கூட்டம் தொடக்கமுள்ளனவே. அவற்றை இறைவனே கூட்டுவிப்பன். அதனால் தொடக்கம் எனக் கூறுவார் சொற்கள் மாயையின் காரியத்தையும், வினைத்தன்மைக் கூட்டத்தையும் குறிப்பன. ஆகவே வினையின் உண்மை தொன்மையே. இதனை எஅ-ம் பக்கத்தில் விரியக் காண்க.

இவ் உண்மையை வலியுறுத்த நெல்லின்கண் உமியும், செம்பின்கண் களிம்பும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. நெல்லுக்கு உமி நெல் உள்ள போதே உள்ளது. செம்புக்குக் களிம்பும் செம்பு உள்ளபோதே உள்ளது. **'அதுபோல'** உயிர் உள்ளபோதே மாயை, மலம், கன்மம் என்னும் மும்மலங்களும் உள்ளன என்பதே. 'அதுபோல' என்னும் சொல் வெண்பாவில் இல்லை. அச்சொல்லை வருவித்துப் பொருள் கொள்ளுகின்றோம். அப்படிக் கொள்வதற்கு எடுத்துக்காட்டு உவமை என்று பெயர். மேலும் இரு வேறு சொற்றொடரும் தனித்தனியாக முடிவுறுகின்றன. அவை 'தொன்மையே' 'அன்றுளவாம்' இரண்டையும் இணைத்துப் பொருள் கொள்ள இடையே உவமச் சொல் வருவிப்பது எடுத்துக்காட்டுவமை என்ப.

## வெள்ளத்தொன்மை

அருணந்திசிவ நாயனாரும் வினை செய்யப்படுதலால் தொடக்கம் என்றும், துய்க்கப்படுதலால் முடிவுள்ளது என்றும், மாறி மாறி வருவதால் வெள்ளத் தொன்மை என்றும் அருளுகின்றனர். வெள்ளத் தொன்மை - பிரவாகாநாதி. அருவிநீர் ஆற்றில் ஓடிக்கொண்டேயிருக்கிறது. ஆற்றில் நீர் எப்பொழுதும் காணப்படுகின்றது. நீர் பல துளி சேர்ந்தது. முன் உள்ள துளியைப் பின்னுள்ள துளி தள்ள இங்ஙனமே முன்னும் பின்னுமாய் ஆற்றொழுக்குச் செல்கின்றது. அதுபோலவே தான் வினையும் வழி வழித் தொடர் (சந்தானம்) பாய் வந்துகொண்டிருக்கிறது. எனவே வினை தொன்மையே. அருணந்திசிவ நாயனார் அருளிய திருப்பாட்டு வருமாறு :

"இருவினை அநாதி ஆதி இயற்றலால் நுகர்வால் அந்தம்
வருமலஞ் சார்ந்து மாயா உருவுகள் மருவி யார்த்துத்
தருசெயல் முறைமை யாலே தான்பல பேதங் காட்டி
அருவதாய் நின்ற ரன்றன் ஆணையின் அமர்ந்து செல்லும்."

—சித்தியார். உ. உ - ௪0.

## வள்ளல் ஒப்பு

மலம், மாயை, கன்மம் தொன்மையில் உள்ளன. எனினும், அவற்றின் காரியங்கள்—ஆக்கப்பாடுகள் தொடக்கத்தன. அவை ஆண்டவனால் தொழிற்படுவன. இதற்குக் கூறும் ஒப்பு தாமரைப்பூ. தாமரைப்பூ

முன்னே உள்ளது. ஆனால் அது, விரிவதும் கூம்புவதும் ஞாயிற்றினாற் செய்யப்படுமாறு போல மலமாயை கன்மங்களின் தொழிற்பாடு ஆண்டவனாலேயாம். தாமரைப்பூவின் மலர்ச்சியும் கூம்பலும் கூறவே இடையே நிற்றலும் பெறப்படும். எனவே படைப்பு, காப்பு, துடைப்பு மூன்றும் பெறப்பட்டன. மேலும் தாமரை கூம்புவது வாடுவதோ அழிவதோ அன்று; பிரிவது. பிரிவதென்பது ஞாயிற்றின் மறைவினால் நிகழ்வது. கூம்பிய அப்பூ ஞாயிறு தோன்ற மலரும். இது, தலைவன் பிரியத் தலைவி சோர்ந்திருப்பதை யொக்கும். எனவே துடைப்பென்பது ஒரு மாற்றம். உயிர்கட்கு அது நிற்கும் பருவுடலை மாற்றிக் கொடுப்பதாகும்.

தாமரைப் பூவலர்தல் நிற்றலொடு கூம்பலுயிர்க்(கு)
ஆமிறைமுச் செய்கையொப் பு.

## இலக்கணம்

"புதிது அன்று என்பதனைத் தனித்தனி கூட்டுக" என்பது, நெல்லினிடத்து உமியும் புதிதன்று, செம்பினிடத்துக் களிம்பும் புதிதன்று, (தொன்மையே) எனத்தனித்தனிக் கூட்டிக் கொள்வதாகும்.

"தொன்மையில் உள்ளவற்றைத் தொன்மை என்று உபசரித்தார்" என்பது, தொன்மை என்னுஞ் சொல் பழைமையில் உள்ளது என்று பொருள் படாது பழைமை என்று மட்டும் பொருள்படும். இங்கே பழைமையில் உள்ளது என்று பொருள்பட இருப்பதால் அஃது உபசாரம் என்றனர். உபசாரம் என்பது ஏற்றுரை. அஃதாவது ஒரு சொல்லின் பொருளை, மற்றொரு சொல்லின்மேல் ஏற்றிக்கூறுதல். ஈண்டுத் தொன்மையில் உள்ளன என்பது மலம் மாயை கன்மங்கள்.

ஏகாரம் பிரிநிலை. 'தொன்மையே' என்பதிலுள்ள ஏகாரம், இஃது இடையே உள்ளது அன்று என இடையைப் பிரித்தமையின் பிரிநிலை ஆயிற்று.

'பரிக்கிரக சத்தி' வைப்பாற்றல்; பரிக்கிரகம் ஏற்றுக்கோடல். இது கோலூன்றி நடப்பார்க்குக் கோலும் ஒரு கால் போல் ஏற்றுக் கொள்வதை யொக்கும். ஆண்டவன் அறிவாற்றலில் அறிவில் ஆற்றல் சேர் மாயை எங்ஙனம் பொருந்தும் எனின், உணர்ச்சியுள்ள கையகத்து உணர்ச்சியில்லாத கோல் தங்குவதை ஒக்கும்.

மேலும் உயிர்களின் அறிவாற்றலில் மந்திரத்தின் அறிவில் ஆற்றல் தங்குவதையும் ஒக்கும். மாயை இறைவன் வைப்பாற்றலாதலின் வல்லி என்றார். வல்லி வலிமையுடையது - வல்லமையுடையது.

உள்ளத் தறிவில்மறை ஆற்றல் உறைவொக்கும்
வள்ளலறி வாற்றலில்வைப் பு.

மறை - மந்திரம்.

வல்லி, மலம் என்னும் இரண்டனையும் எடுத்துக் கூறியது இனம் பற்றியாம். ஈண்டு ஐயுறுவார்க்கு எடுத்துக்கூற வேண்டியது வினைத் தொன்மையே, இனம்பற்றி மற்றிரண்டினையும் உடன் கூறினர்.

## மும்மலகாரியம்

### மூலமலத்தின் காரியம்

மூலமல மென்பது வேறு காரண மில்லாது உயிர்களைப் பண்டே புல்லிய மலம். அது தன் ஆற்றலால் உயிர்களின் அன்பு, அறிவு, ஆற்றல்களை மறைப்பது. அம்மலத்தின் காரியம் எழுவகைப்படும். அவை, மயக்கம் (மோகம்), மதம், அவா (அராகம்), கவலை, உட்சூடு (தாபம்), வாட்டம், வியப்பு (விசித்திரம்) என்ப.

௧. மயக்கம்: இது மத முதலிய அறுவகைக் காரியங்கட்கும் ஏதுவாயுள்ளது. கட்டு நீங்கும்வரை உயிர்களோடு ஒட்டி (இயல்பாய்) யிருப்பது. மயக்கம் இல்லாத விடத்து ஏனைமத முதலியன நிகழா, தலைவன் இல்லாத இடத்துத் தானை செல்லாமை போல. அதனால் மயக்கமே முதன்மை. மயக்கமாவது, "கொள்ளற்பாலது இது நீக்கற்பாலது இது என நான்முகத்தான் உணர்ந்தும், பொருள்களின் மயங்குவதற்கு ஏதுவாயது."

௨. மதம்: தான் கொண்ட பொருளைத் தானே கொண்டாடிப் புகழ்தல். அப்பொருளுக்கு மேற்பட்ட பொருள் உலகத்திலேயே இல்லை என மதித்தல் இவைகட்கு ஏதுவாகியது மதம். மதம் - செருக்கு.

௩. அவா: அப்பொருளின்மேல் மேலும் மேலும் ஆசைமிகுதற்கு ஏதுவாயது.

௪. கவலை: ஊழ்வலியால் அப்பொருள் தம்மை விட்டு நீங்கிய இடத்துக் கண்ணீர்விட்டு அழுது பெரிதும் துன்பமுற்றுக் கவலுதற்கேதுவாயது.

௫. உட்சூடு: கவலையினால் உள் வெதும்பிக் காய்ந்து வருந்துதற்கு ஏதுவாயது.

௬. வாட்டம்: பொருள் நீங்கியதால் அலறியும் அடக்கியும் உள் வெதும்பல் ஏற்படும் உள் வெதும்பவே மூர்ச்சை ஏற்படும். மூர்ச்சை உண்டாகவே உள்ளமும் உடம்பும் வாடும். இவற்றிற்கு ஏதுவாயது வாட்டம்.

௭. வியப்பு: தாம் பெற்ற பொருள் முதலிய உலக வாழ்க்கையை நோக்குந்தோறும் நமக்கு ஒன்றாலும் குறைவில்லை, இனிமேல் நம்மால் பெறுதற்குரிய பொருள்கள் ஒன்றும் இல்லை. எல்லாம் எம்மால் ஆயது, யாம் இல்லாவிட்டால் இப்பொருள்களையும் குடும்பத்தையும் காப்பாற்றுவார் எவர்? என்றெல்லாம் தம்மைத் தாமே புகழ்ந்து இறுமாந்து வியத்தற்கு ஏதுவாயது.

இப்பொருந்தா இறுமாப்பினையே வள்ளுவப் பெருந்தகையார், 'மகிழ்ச்சியின் மைந்துறுதல்' என்றருளினர். அத்திருப்பாட்டு வருமாறு:

> "இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாம்தம்
> மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து."
>
> —திருக்குறள், ௫௩௪.

மயக்கம், மதம், அவா, கவலை, உட்சூடு, வாட்டம், வியப்பு முதலாகிய காரிய மாகிய ஆக்கப்பாடுகள் ஏழுடன் மூலமலம் ஒன்றுங் கூட்டி எஃடு

எனத் தாயுமானப் பெருஞ் செல்வர் கூறியருளுகின்றனர். அத்திருப் பாட்டு வருமாறு :

" கருணைமொழி சிறிதில்லேன் ஈதல் இல்லேன்
கண்ணீர்கம் பலையென்றன் கருத்துக் கேற்க
ஒருபொழுதும் பெற்றறியேன் என்னை ஆளும்
ஒருவாஉன் அடிமைநான் ஒருத்த னுக்கோ
இருவினையும் மூக்குணமும் கரணம் நான்கும்
இடர்செயும்ஐம் புலனுங்கா மாதி ஆறும்
வரவரவும் ஏழைக்கோர் எட்ட தான
மதத்தொடுமவர் தெதிர்த்தநவ வடிவம் * அன்றே."

—தாயுமானவர், கசு. பன்மாலை—உ

மயக்கம் மதமவா வன்கவலுட் சூடு
பெயல்வாட்டம் மேவியப்பேழ் பேசு.

### வினையின் காரியம்

இருவினையின் காரியம் இன்பத்துன்பம் முதலாயின.

### மாயையின் காரியம்

மாயையின் காரியம் உடல் உறுப்பு உலகம் ஊண் முதலாயின. இம் மூன்று மலமும் உயிர்களைக் கட்டுறுத்தி முறையே மூலமலம் இன்பத்துன் பங்களை நுகருந்தன்மையனாக்கி, நென்முளை தோன்றுதற்குப் பொருட்டுக் காரண மாகிய உமிபோல, இன்பத் துன்பம் தோற்றுதற்குப் பொருட்டுக் காரணமாகிய பொருள்களை முறுகுவித்து நின்று அவ் இன்பத்துன்பங் களை நுகருமாறு அவ்வுயிர்களை நிலை பெறுத்தியும், வினை நெல்லின் கண் உளதாகிய முளைப்பாற்றலைத் தோற்றுவிப்பது போல, இன்பத்துன்பங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவித்தும், மாயை முளைத்தற்குத்துணையாய் உடனிற்கும் தவிடு போன்று உடல், உறுப்பு, உலகம், ஊண் முதலியவற் றைத் தோற்றுவித்து உயிரை இயைவித்தும் முழுமுதல்வன் ஆணையால் இயங்கும்.

இவற்றை விளக்கும் சித்தியார்த்திருப்பாட்டு வருமாறு :

" மும்மலம் நெல்லி னுக்கு முளையொடு தவிடு உமிப்போல் †
மம்மர்செய் தணுவின் உணமை வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மல மூன்றி னோடும் இருமலம் இசைப்பன் இன்னும்."

—சித்தியார். உ. ச—அக.

போகம் - ஊண் ; இன்பத்துன்பங்கள். இது வினையின் செயல்.

பந்தம் - கட்டு ; இருத்தல். இது மாயையின் செயல்.

போத்திருத்துவம் - போகநுகர்வோனுதல் தன்மை ; ஆள் ; ஆண்மை ஆணவம். இது மலத்தின் செயல்.

---

* 'சிவம்சத்தி' சித்தியார். உ. ச-எச. † 'நெல்லினுக்குத்' சித்தி யார். கக. ௫. 'புண்ணிய' மெய். கஉ. க. க.

" பந்தம் போகம் போகம் நிறுத்தலும்
வந்தது மாயை வினைமலத்து."—ஞானாமிர்தம்.

முளை தவிடு உமி முதலியவற்றை உய்த்துணரின் கூல முதலிய வித்துவின்கண்ணும் உயிரில்லை என்பது பெறப்படும். உயிருளவேல் அவ் வித்துக்கள் வளர்ச்சி தளர்ச்சி யுறுதல் செய்யும். வித்து நிலம் நீர்களோடியைந்தக்கால் வளர்ச்சியுறுகின்றது. நீரில்வழித் தளர்ச்சியுறுகின்றது. எனவே முளை தோன்றுங்காலே உயிர்புகும் என்பதே நேரிது. அதற்கு முன் உயிர்புகும் வாய்ப்புக்கு இடமாய் இருக்கிறது. முளை தோன்றி வளரும் பயிர் செடி கொடிகளையே ஓர் அறிவு உயிர் என்று சொல்லுகின்றோம். இலை குழைகளைப்போல் வித்துக்கும் உயிரில்லை. வித்தினுக்கு உயிரில்லாமையினாலேயே அதனை ஓர் அறிவு உயிர் என்று யாண்டும் வழங்குவது இன்று. குடி புகுவதற்கு அமைக்கும் வீட்டின் முதற்பொருளை ஒக்கும் வித்து. துணைப்பொருளை ஒக்கும் நிலம், நீர். குடியிருக்கும் வீட்டினை ஒக்கும் பயிர் செடி கொடிகள். பயிரினை அழிப்பது பாவம். வித்தினை உண்பது பாவமன்று. மரம் தூணுக்கும் ஆகும்; விறகுக்கும் ஆகும். ஆனால் தூணை எடுத்து விறகு ஆக்குவது பாவம். மரத்தை விறகு ஆக்குவது பாவம் அன்று. புண்ணியமும் ஆகும்.

மெய்க்கண் உயிருண்மை மேவும் வளர்ச்சியொடு
உய்வில் தளர்ச்சியினால் ஊண்முதலாம்—செய்நெல்லும்
நீர்நிலம் சேர்ந்துமுளை நேருங்கால் ஆவியுறும்
ஓரிற்கூ லம்முயிரில் ஊண்.

ஆவி அகத்தாயின் அஃதுடலாம் அன்றென்னில்
மேவும் உடன்முதலாம் வித்து.

## மறைப்பாற்றல்

'வள்ளலால் ஆம்' என்பது மறைப்பாற்றலைக் குறிப்பதாகும். மறைப்பாற்றலைத் திரோதான சத்தி என்பா; இவ்வாற்றல் மலம் செவ்வியுறுதற் பொருட்டும், உயிர் திரு அருளினைக் கூடுதற்பொருட்டும் மூலமலத்தின் காரியமாகிய மயக்க முதலிய எழினையும் தொழிற்படுத்துவதாகிய சிவத் திருவுள்ளத்திற்கு ஏதுவாயது. மலத்தைத் தொழிற்படுத்துந் திருவுள்ளத்திற்கு ஏதுவாதல்பற்றி மலமென்று ஏற்றிக்கூறப்படும்.

மலம், கன்மம், மாயை, மறைப்பாற்றல், மாயையின் காரியம் இவ் ஐந்தும் மலங்கள் எனப்படும். மும்மலத்தைப் பற்றிய சித்தியார் திருப்பாட்டு முன் (ககஎ) வந்துள்ளது. இவ்விரு மலத்தைப்பற்றிய திருப்பாட்டு வருமாறு:

" மாயையின் காரியத்தை மாயேய மலமதென்றும்
ஏயுமும் மலங்கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும்
தூயவன் தனதோர் சத்தி திரோதான கரியதென்றும்
ஆய்வரிம் மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும்."

—சித்தியார். உ. ச - அஎ.

## இருவினை உண்மை

### பிறப்பு வினை

வினை மூத்திறப்படும். அவை ஏறுவினை, ஏஞ்சுவினை, ஏன்றவினை என்ப. இவற்றை முறையே ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் எனக் கூறுவர். தான் என்னும் மூனைப்பாகிய செருக்குடன் செய்யும் இரு வினையும் செய்யுங்கால் பருமையாய் வினைக்கேற்ப நல்வினை தீவினை எனப் பெயர் பெறும். இவையே ஆகாமியம் - ஏறுவினை பின் அவை நுண்மை யாய்ப் புண்ணிய பாவம் எனப் பெயர் பெறும். இவையே சஞ்சிதம் - ஏஞ்சுவினை. பின்பயனுய் வருங்கால் இன்பத்துன்பமாக ஊட்டும். இவையே பிராரத்தம் - ஏன்றவினை. இவற்றையே ஊழென்பர். ஈண்டுப் பிறப்புவினை என்பது ஏஞ்சுவினை. அதுவே முழுமுதல்வன் பலவகை யாக உயிர்களை மீண்டும் பிறப்பித்தற்குத் துணைக்காரணம் என்ப.

### வினைக்கூறு

பருஉலகில் பருஉடலோடு செய்யப்படும் வினை பருமையதாய் நன்மை தீமை எனப் பெயர்பெறும். அதுவே ஏறுவினை. இது முறையே சந்தனம் பூசுதலும் தசையைக் கிள்ளலும் ஆகும்.

பின் ஆவியின் இறப்புமெய் (புத்தி தத்துவம்) பற்றுக்கோடாக மாயையில் தங்கும்.

பற்றும் இறப்புமெய் பார்க்கில்பேர் ஏடொக்கும்
உற்றபொருள் வைப்பாம்மா யை.

இறப்புமெய் நுண் உடலகத்து உள்ளது. ஆகவே அவ்வினை நுண்மை யாயிருக்கும. அப்பொழுது புண்ணிய பாவம் எனப் பெயர்பெறும். அதுவே ஏஞ்சுவினை. நன்மை தீமை உடையாரை நல்லார் பொல்லார் எனவும், புண்ணியர் பாவர் எனவும் கூறுவோம். அப்புண்ணிய பாவம் அவர்தம் பண்பாகிவிடுகின்றன. எப்பொழுதும் பண்பு பண்பியினுள் விரவி நுண்ணிதாய் இருக்கும். "பழத்தினில் இன்சுவை" (கூகு) என் பதில் பழம் பண்பி. இன்சுவை பண்பு. பழம் பருமையாக இருக் கிறது கண்ணுல் காண்கின்ருேம், கையால் தீண்டுகின்ருேம், மூக்கால் மோக்கின்ருேம். சுவையைக் காணவோ, தீண்டவோ, மோக்கவோ முடியாது. அதனுல் பண்பாகிய சுவையை நுண்மை என்கிருேம். நுண்மை கட்புலன் ஆகாதது. ஆகவே ஏஞ்சு வினை நுண்மையது.

### வினைச் செவ்வி

அவ்வினைப் பயனைச் செய்த உயிர் ஈட்டிய முறையானன்றிச் செவ்வி முறையான் நுகரும். செவ்வி பக்குவம். செவ்வியாவது பயன்களைத் தோற்றுவித்தற்குரிய துணைக் காரணங்கள் எல்லாவற்ருேடும் கூடுதல். துணைக்காரணங்கள் இறைவன் ஆணை, உலகுடல்கள், முன்னிலைகள். இவற்றுள் முன்னிலைகள் தன்னையும், பிற உயிர்களையும், தெய்வத்தையும் என மூவகைப்படும்: *

முன் செய்தவினை பின்னும் பின் செய்தவினை முன்னும் பயனுக வருவதற்குக் காரணம் காய் பழமாதல் போல நிலை வேறுபாடும் அன்று.

* திறக்குறள், ச. 'வேண்டுதல்வேண்'. (பரி. உரை).

வித்தும் முளையும் போன்று கால நீட்டிப்புமன்று. வேறென்னை எனின்? மாணவர்கட்கு ஆசான் பாடம் வகுத்து வகுப்பு நடத்துங்கால் வந்த மாணவர்தம் இனச் சேர்க்கைக்கு எற்பப் பாடங்களை முன் பின்னாக மாற்றிக் கற்பிப்பதை யொக்கும். அது பாட்டும் உரைநடையும் சேர்ந்து பயில்வாரும் தனித்தனி பயில்வாருமாக மாணவர் இருசாராருளரேல் வந்த மாணவர் இனக் கூட்டத்துக்குத் தக்கவாறு முன்நடக்கவேண்டிய உரைநடை (வசனம்) யைப் பின்னும், பின் நடக்கவேண்டிய பாட்டை முன்னும் ஆசிரியர் நடத்துவதாகும்.

ஒருவன் மயிர்க்கம்பளமும் பஞ்சிநூலாடையும் பட்டும் ஒன்றன்பின் ஒன்றாக வாங்கினான். வாங்கி முடிந்ததும் வேனிற்காலந் துவங்கி விட்டது. அப்பொழுது வாங்கிய முறைப்படி உடுப்பதானால் மயிர்க் கம்பளம் உடுத்தல் வேண்டும். அஃது அக்கால இயல்புக்கு உடுக்க இயலாது. எனவே பருத்தி நூலாடையையே உடுப்பன். இதுவே அவ் ஆடை காலமாகிய துணைக்காரணத்துடன் பொருந்தி உடுக்கும் செவ்வி (பக்குவம்) வாய்ந்தது எனலாம். அதனால் அதையே விரும்பி உடுத்த நேரிடுகின்றது. இதுபோலவே வினைக்கு ஆணை, ஆவிகளின் மிக்க நினைவு, எடுக்கும் உடல், உலகம், உண்பொருள்கள் இவற்றுடன் பொருந்த நேர்வதே வினைச் செவ்வி என்பர்.

எடுத்த ஆடை பெட்டியகத்துத் தங்கியிருப்பதை யொக்கும் வினை மாயையில் தங்கியிருப்பது. அவ்ஆடை எடுத்தவனுடைய நினைவில் தங்கியிருப்பதை யொக்கும் வினை ஆவியின் இறப்பு மெய் (புத்திதத்துவம்) யில் தங்கியிருப்பது. ஒருவன் ஒன்றை ஊன்றி எண்ண எண்ண அவ்வினை முதற்கண் முற்றுவது போல, உயிர்களும் எஞ்சுவினைக் கூட்டத்து ஏதாவது ஒன்றனை ஊன்றி எண்ணும். அவ் எண்ணமும் வினைச் செவ்வி உறுவதற்கோர் துணைக்காரணமாகும். இதுவே அவா என்பர். இவ் அவாவின் வழியே பிறப்பு நேரிடும். இதனையே திருவள்ளுவ நாயனார்.

> "அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
> தவாஅப் பிறப்பீனும் வித்து." —திருக்குறள், ௩௬௧.

என்றருளினர்.

> பாட்டுரை கள்தனித்தும் சேர்ந்தும் பயில்வார்
> கூட்டினத்தால் முன்பின்னும் கூறு.
>
> மயிர்பஞ்சு பட்டால் வாங்குமுடை காலம்
> வெயிலேல் நடுப்பஞ்சே வேட்பு.*

வினைச் செவ்வியுற ஊன்றி எண்ணற்கும் பயன்துய்த்தற்கும் ஒப்பு, மாணவன் கற்கவேண்டிய நூல், கல்லூரி, கற்பிப்பார், கற்பார் கூட்டம் முதலியவற்றை ஆழ்ந்து எண்ண எண்ண அதற்கு வேண்டியமுயற்சியும் துணையும் வந்து கைகூடும். கூடினதும் அவன் கற்கத் தொடங்கிக் கற்றுப் பயனுறுவதாகும்.

மிகப் பெரிய அறஞ்செய்தாரும் மிகப்பெரிய பாவஞ் செய்தாரும் முறையானன்றி இம்மை தன்னுள்ளே அவற்றின் பயன் நுகர்வர்†

---

* 'பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்'—சிலப். இந்திர - வரி - ௧௬. சீவக. ௨௬௮௬.

† 'கொல்லாமை' திருக்குறள், ௩௨௬. பரி - உரை.

மேலும், ஏணிப்படியில் விரைந்து ஏறுவோர் அப்பொழுதே உயர் நிலை எய்துவர். அதுபோல் விரைந்து இறங்குவோர் கீழ்நிலை எய்துவர். இருப்புப்பொறி ஊர்தியில் சரக்கு வண்டி, ஆள்வண்டி, தனிவண்டி முதலிய மூவகை வண்டியும் ஒன்றன்பின் ஒன்றாக ஒக்கப் புறப்பட்டாலும் தனி வண்டி முன்னும், ஆள்வண்டி அதன் பின்னும், சரக்குவண்டி எல்லாவற்றிற்குப் பின்னும் போய்ச் சேர்வது கண்கூடல்லவா? அதுபோல் வினையும முதன்மைக்குத் தக்கவாறு பின்னுள்ளது முன்னும் வரும்.

வினை அறிவுமுனைப்பால் செய்யப்படின் நல்வினை எனவும், அறியாமை முனைப்பால் செய்யப்படின் தீவினை எனவும் பெயர் பெறும். அறிவுக்கு அருள் அடிப்படை. அறியாமைக்கு ஆணவம் அடிப்படை. வினைப் பயன் கடுமையால் கைகூடியதற்கு முறையே மூர்த்தி நாயனார் மும்மையால் உலகாண்டதும், வடுகக்கருநாட மன்னன் அன்றிரவே மாண்டதும் எடுத்துக்காட்டாகும். அத்திருப்பாட்டு வருமாறு :

"இவ்வா றுலகத்தின் இறப்ப உயர்ந்த நல்லோர்
மெய்வாழ் உலகத்து விரைந்தணை வார்க ளேபோல்
அவ்வா றரனார் அடியாரை அலைத்த தீயோன்
வெவ்வாய் நிரயத் திடைவீழ விரைந்து வீந்தான்."

—கஉ. மூர்த்தி—உ௫.

ஏறுபடி நன்மை இறங்குபடி தீமைபயன்
கூறுவிரை வால்முன்பின் கூடுமால்—தேறுபொறி
ஊர்திசரக் காள்தனிமை ஒக்கப் புறப்படினும்
சேர்வுபின் முன்விரைவால் செப்பு.

## உடலூழ்

உடலூழாய்க் கழிவதே 'ஊழை உப்பக்கம் காண்டல்.'* உடம்பின் கண் புண் முதலியவற்றைக் கருவியிட்டாற்றுவார் உணர்வொழி மருந்து (Chloroform) கொடுத்து அறுத்தல் சுடுதல் முதலிய அறுவை மருத்துவம் எத்துணைதான் புரியினும் அந்நோயாளியின் உள்ளம் உடம்பின்கண் ஒட்டாமையால் அவன் மருத்துவத் துன்பம் சிறிதும் உணரான். அதுபோலவே ஆண்டவன்பால் உள்ளம் வைத்தார்க்கு உடம்பின்கண் ஊழ்த் துன்பம் எத்துணைவரினும் ஓரார்.

## உடையான் உள்ளம்

கடவுட் பெருங்காதலராம் கண்ணப்ப நாயனார் அறுபகை நீக்கம் அறுவழி நீக்கம் ஆகியவற்றின் அமைவுபோல் ஆறு நாள் அல்லும் பகலும் ஊண் உறக்கம் இன்றி இறைதொண்டியற்றியும், ஏழாம்நாள் உச்சியிற் கண்ணிடந் தப்பியும் ஊறு சிறிதும் ஓராது உவகையுற்றுக் கூத்தும் ஆடினர். கூத்தாடிய சிறப்பைச் சேக்கிழார் அடிகள் கூறும் திருப் பாட்டான் உணர்க. அது வருமாறு :

"நின்றசெங் குருதி கண்டார் நிலத்தினின் றேறப் பாய்ந்தார்
குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினார் கூத்தும் ஆடி
நன்றுநான் செய்த இந்த மதியென நகையும் தோன்ற
ஒன்றிய களிப்பினாலே உன்மத்தர் போல மிக்கார்."

— கஉ. கண்ணப்பர் — கஎ௩

---

* 'ஊழையும்' திருக்குறள், ௬௨0.

கண்ணப்ப நாயனார் அகக்கண்ணை இறைபால் அப்பியது போல் புறக் கண்ணையும் இறைபாலே அப்பினர். ஊன் உண்பார் இறைவன் தாள் உறார். அவ்வூன் அழக்கொண்ட பொருள் ஆதலால் அழுவித்தே பாவம் அகற்றும். ஊன் கொண்டுவந்தார் சிற்றுயிர்கள் படுந்துன்பத்தைக் கண்ணாரக் கண்டும் கண்ணோட்டம் கொள்ளாமையால் ஆங்கே கண் இழப்பர். ஆண்டவன் இவ் உண்மைகளைப் புலப்படுத்தவே உண்ட தான் குருதிக் கண்ணீர் வடித்தழுதும், கொண்டு ஊட்டிய கண்ணப்பர் கண்ணை இழப்பித்தும் காட்டினர். கண்ணப்பர் கண்ணை ஆண்டவன்கண் நன்றாக வேண்டுமென அப்பினமையால் பேறு பெற்றனர். இது, நன்மையின் பொருட்டு இழப்பதால் பிற்பயன் உண்டாம் என்பதைக் காட்டுகிறது. சிவக்கொழுந்தின் மாட்டுத் தோன்றுங் கண்ணூறு போக்கும் கண்ணப்பர் அடிச்சுவடுபற்றும் நாம் ஆருயிர்கள் மாட்டுப் புறக்கண் ஊறாகிய வறுமை போக்கலும், அகக்கண் ஊறாகிய அறியாமை போக்கலும் ஆற்ற வேண்டாவா? அவை அன்றே சிவ புண்ணியங்கள். அவையன்றே பாவம் அறுக்கும் அறங்கள்.

ஊன்உண்ணார் சேர்வர்தாள் ஊட்டினரும் கண்ணிழப்பர்
தானிழந்தும் கண்ணப்பர் தாள்சேர்ந்தார்—வான்செயலால்
“ அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.” — திருக்குறள், சுடுகூ.

### மனம் அழுந்தல்

சண்டேசுர நாயனாரும் சிவ வழிபாட்டில் உள்ளம் அழுந்தி அந்நிலைனவாகவே இருக்குங்கால சிவ பூசையினும் தவ வேள்வி பெரிதெனத் தப்பாகக் கொண்ட அவர்தம் தந்தையாம் எச்சதத்தன் எத்துணை கொடுமொழி கூறி முதுகிற் புடைத்தும் ஒரு சிறிதும் உணர்ந்திலர். அதற்குக் காரணம் மனம் சிவன்பால் அழுந்தினமையே. வடுவுறு கொடுமொழி உட்புகவில்லை. படுவுறு அடி பல உடலூறாய்க் கழிந்தன. கொடுமொழி ஊழாக்கும் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள் என்க. ஊழ் ஒழியினும் விளைவு உண்டபின்னும் வித்தொழியாமைபோல் ஊழாக்கமாம் துணைக்காரணம் ஒழியா. இவ்வுண்மையைத் திருவள்ளுவ நாயனார் உடலூறாகிய தீப்புண் ஆறும் எனவும் ஊழாக்கமாகிய கொடுமொழி என்றும் ஆறாதெனவும் கூறியருளினர். அஃது ஊழ்ப்பயனடைந்தும் அப்பயனிடத்தும் வழியிடத்தும் கொள் விருப்பு வெறுப்பு அறாமையை ஒக்கும். அத்திருப்பாட்டு வருமாறு:

“ தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு.” —திருக்குறள், கஉகூ.

சண்டேசுர நாயனார் மனம் சிவன்பாலே வைத்தமையைச் சேக்கிழார் அடிகள் அருளும் திருப்பாட்டு வருமாறு:

“ கண்ட போதே விரைந்திழிந்து கடிது சென்று கைத்தண்டு
கொண்டு மகனார் திருமுதுகில் புடைத்துக் கொடிதா மொழிகூறத்
தொண்டு புரியுஞ் சிறியபெருந் தோன்ற லார்தம் பெருமான்மேல்
மண்டு காதல் அருச்சனையில் வைத்தார் மற்றொன் றறிந்திலரால்.*”
—கஉ. சண்டேசுரர்—ருகூ.

*‘ இன்னாமை’ திருக்குறள், சுகூ0. ‘ யானை’ நாலடி. உகரு. ‘ அன்பொடு’ நீதிநெறி—கூ0.

**தவம்**

இந்நாயனர் திருவுள்ளம் முழுமுதல்வன்பாலே வைத்தமையின் அவர் 'தந்தையின் தாளற வீசிய' வன்செயல் தவமாயிற்று. அது சேக்கிழார் அடிகள் அருளியவாற்ருன் உணர்க. அத்திருப்பாட்டு வருமாறு :

"வந்து மிகைசெய் தாதைதாள் மழுவால் துணித்த மறைச்சிறுவர்
அந்த உடம்பு தன்னுடனே அரனுர் மகனுர் ஆயினுர்
இந்த நிலைமை அறிந்தாரார் ஈறி லாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே தவமாம் அன்றே சாற்றுங்கால்."
—கஉ. சண்டேசுரர்—டுக.

இதுவே தனிச்சிறப்பு வாய்ந்த தவமாம் என்பது தமிழ் மூதாட்டியார் அருளிய தனிப்பாட்டானும் உணர்க. அது வருமாறு :

"சிவத்தைப் பேணில் தவத்திற்கு அழகு." —கொன்றை. உ௮.

திருவள்ளுவனுரும் இக் கருத்துக்கொண்டே

"அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டும் ஆற்ருன் வரும்." —திருக்குறள், ௩௬எ.

என்றருளினர்.

**தலைமை**

மனம் எவரிடத்துப் பற்றுகின்றதோ அவரின் கையாளே ஆவர், அம் மனம் உடையார். அக்கையாளின் வழிச்செய்யும் செயல் எல்லாம் மனம் பற்றப்பட்டார் செயலே ஆகும். அக்குறிப்புத் தோன்றவே திருவள்ளுவ நாயனர், படைமறவன் வாயில் வைத்து அவன் தன்முன் நில்லற்க என்று சொல்ல வேண்டிய இடத்து "என்ஐமுன் நில்லன்மின்" (கOஉ) எனக் கூறியருளினர். இதனுல் அம்மறவன் தன்னைத் தலைவன் கைஆள் என்றே கருதினமை காண்க. இதுவே போன்றது மெய்யுணர்ந்தாராய், மெய்ப்புணர்ப்பினராய் வாழும் விழுமியோர் செயல்.

மனம் பற்ருவழிச் செயற்பயன் இல்லை என்பதைத் திருவள்ளுவ நாயனர் திருப்பாட்டும் வலியுறுத்தும். அது வருமாறு :

"எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணுசெய் யாமை தலை." —திருக்குறள், ௩கஎ.

**துய்ப்பு**

இவ்வினைப்பயன் கட்புலனும் உலகில் கட்புலனும் உடலில் துய்க்கப்படும். அப்பொழுது ஏன்றவினை எனப் பெயர் பெறும். இன்பத்துன்ப உலகங்களும், உடல்களும் ஆண்டுள்ளார்க்குக் கட்புலனுவனவே. இன்ப உலகம் துறக்கம் (சுவர்க்கம்). துன்ப உலகம் நரகம். நாம் வாழும் இந்நில உலகமும் உய்த்துணருங்கால் இரு வேறு தன்மையதாய் விளங்கும். அம்மெய்ம்மையைத் திருவள்ளுவ நாயனரும் அருளிச் செய்துள்ளனர். அத்திருப்பாட்டுக்கள் வருமாறு :

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."* —திருக்குறள், ௫O

*'கள்வார்க்குத்' திருக்குறள், உ௬O.

"நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்."* —திருக்குறள், ௯௯௯.

வினைப்பயனை நுண்ணுடம்பில் முற்றும் துய்ப்பிக்காது பருவுடம்பில் துய்ப்பித்தற்குக் காரணம் துய்ப்பானும் பிறரும் கண்கூடாகக் கண்டு அஞ்சித் தீவினை ஒழித்தற்கும், அகமலி உவகையராய் ஒல்லும் வாய் ஓவாது அறமாகிய நல்வினை செய்தற்கும் என்க.

இவ் உண்மை அருணந்திசிவ நாயனார் அருளியவாற்றானும் உணர்க. அத்திருப்பாட்டு வருமாறு:

"அரசனுஞ் செய்வ தீசன் அருள்வழி அரும்பா வங்கள்
தரையுளோர் செய்யில் தீய தண்டலின் வைத்துத் தண்டத்து
உரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமும் சேரார் அந்த நிரயமுன் னீர்மை ஈதாம்."†
—சித்தியார், ௨. ௨ - ௩௨.

## வினைக்குப் பற்றுக்கோடு

வினைக்குப் பற்றுக்கோடு இறப்பு மெய்; இவ் இறப்பு மெய்க்குப் பற்றுக்கோடு தூவாமாயை. வினைக்குப் பற்றுக்கோடு ஆவி என்றோ ஆண்டான் என்றோ கூறலாமோ? உருவமாய் அறிவிலதாய் உள்ள வினை அருவத்துக்கு அப்பாலாய் இயற்கை ஆர் அறிவாய் உள்ள ஆண்டவன் பாலோ, சார்பின் நிறைவும் விளக்க விளங்கும் ஆர் அறிவும் உள்ள ஆவிகள் பாலோ தங்குவதற்கு அமைவு இன்று. எதுபோலெனின்? விதைப்பவன், வித்து, விளைநிலம், மழைநீர் நான்கும் விளைவுக்குக் காரணம். விதைப்பவன் விளைவினை உண்பான. வித்து விளைவதற்கு நிலமும் நீரும் துணைக்காரணங்களாகும். அவ்வித்து விளைப்பவன் வயிற்றகத்துப் புகுந்தால் விளைவுண்டாகுமா? நீரிற்கிடந்தால் நிலைபேறுண்டாமா? விளைநிலத்துக் கிடந்தால் மட்டும் விளையும். அதுபோல் என்க.

வித்து வினை, விளைநிலம் மாயை, நீர் இறைவன் ஆணை, விதைப்பவன் வினைசெய்யும் உயிர்க்கிழவன். இம்முறையாகக் கொண்டு மாயை தாங்குவதாய், இறப்புமெய் கொள்கலமாய், வினைவிளைவு ஊணாய், உயிர்க்கிழவன் உண்பானாய், இறைவன் உண்பிப்போனாய் வினைநுகர்வு நிகழும் என்க.

வித்துவினை மாயை விளைநிலமாம் நீர்இறையாம்
வித்தலுயிர் ஊணும் விளைவு.

மேலும் மாயையினன்றி வேறெங்கும் கிடவா தென்பதை வரும் சித்தியார் திருப்பாட்டானும் உணர்க.

"செய்தவர் மனத்தே எல்லாச் செய்தியும் கிடந்து பின்னர்
எய்தவே பலன்கள் ஈனும் என்றிடின் இருஞ்சு வர்க்கம்
பொய்யர்வாழ் நரகம் பூமி புந்தியிற் கிடந்து போந்தது
ஐயனே அழகி துன்சொல் இந்திர சாலம் ஆய்த்தே."
—சித்தியார், ௨. ௨. ௨0.

*'உண்ணுமை உள்ள' திருக். ௨௫௫. †'கடிதோச்சி' திருக். ௫௬௨.

வினைப்பயனை ஊட்டுவிப்போன் விழுமியானாகிய முழுமுதல்வன் என்பதைச் சேக்கிழார் அடிகள் அருளியுள்ளனர். அத்திருப்பாட்டு அனைத் துலகப் பொது நெறியாம் சித்தாந்த சைவத்தின் செம்பொருள் தெளித் தருள்வதும் ஆகும். அது வருமாறு:

"செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லைஎன
உய்வகையால் பொருள்சிவனென் றருளாலே உணர்ந்தறிந்தார்."
—கஉ. சாக்கிய - ௫.

உயிரின் கண்ணே பற்றுக்கோடு வினைக்கு உண்டென்னும் பொருந் தாக் கொள்கை முறை விளக்கம் காணக் குறையால் நேர்ந்ததென்க. அப்பாட்டு வருமாறு:

"வெவ்வினை செய்யு மாந்தர் உயிரெனும் நிலத்து வித்தி
அவ்வினை விளையுள் உண்ணும் அவ்விடத் தவர்கள் துன்பம்
இவ்வென உரைத்தும் என்று நினைப்பினும் பனிக்கும் உள்ளம்
செவ்விதிற் சிறிது கூறக் கேண்மதி செல்வ வேந்தே."
—சீவக, முத்தி - கக௪.

இதன்கண் 'உயிரெனும் நிலத்தில்' என்பதன் விளக்கம் உயிர் நிலைக் களமாகிய உடல் உலகுகளின் முதலாகிய மாயையே. என்றும் வினை அதன்பாலே நிலையுடையதென்பதாம்.

பிறர்மாட்டுச் செய்த இன்னாதனவே தம்மாட்டுவந்து பொருந்து மாறு ஆணையால் ஊட்டுவிக்கும் என்பதே திருவள்ளுவ நாயனார் திரு வுள்ளம். அத்திருப்பாட்டு வருமாறு:

"நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோய்இன்மை வேண்டு பவர்." —திருக்குறள், ௩உ0.

## முதன்மை

முழுமுதல்வன் தன் ஆணைவழிப் பிறப்பியாது இருவினையின் வழிப் பிறப்பிப்பான் என்பது அவனுடைய முதன்மைக்கு இழுக்கு உண்டா காதோ எனின்? உண்டாகாது. ஆணைவழிச் செல்லும் இருவினைக்கு முதன்மை எப்படி உண்டாகும்? ஆணைவழிச் செலுத்தும் முதல்வனுக்கே முதன்மை உண்டாம். இது கண்ணும் கருத்தும் கையும் ஒன்றுகூடி எழுதுகோல், மை, தாள் முதலிய துணைக்காரணங்கள் கொண்டு செய்தி களோ, ஓவியமோ வரையப்படின் அச்செய்தியும் ஓவியமும் கூடி நிறத்துக் குத் தக்கவாறு பலவேறு வகையாகத் தோற்றமுறும். அத்தோற்றம் துணைக்காரணங்களாகிய எழுதுகோல் மை முதலியவற்றால் ஆவதே. ஆயி னும், அவ் அமைவு எழுதுவோன் அறிவாற்றலால் அமைவதன்றித் துணைக்காரணங்களால் தானே அமைந்துவிட முடியாதல்லவா? ஆதலால் எழுதுவோனுக்கே முதன்மை என்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தது. அது போல இருவினைக்கு அல்லாமல் முழுமுதல்வனுக்கே முதன்மை உண்டாகும்.

துன்னுநிறத் தோற்றம் தொழில்வலான் செய்முதன்மை
மன்னுவினை ஆணையினும் மற்று.

**வினையின் இன்றியமையாமை**

ஆண்டவன் அருளால் மீண்டும் உலகு உண்டாகும். அத்தோற்றத்திற்கு இருவினையாகிய துணைக்காரணம் இன்றியமையாதது. இது, மாணவர்களின் திறத்தை அளத்தற்குத் தேர்வு இன்றியமையாமையாய் இருப்பதை ஒக்கும். முதல்வன் செய்யும் எல்லாச் செயல்களும் அவன் ஆணைவழியே நிகழும் உலகியலோடு ஒத்தே இருக்கும். மேலும் உலகியலுக்கு அரணாகுமே அன்றி முரண் ஆகாது. அரண் - காவல். முரண் - மாறுபாடு.

ஓர் ஆட்சித்தலைவன் தன்கீழ் வாழ்வாரைத் தீநெறி விலக்கி நன்னெறிப் படுத்துவன். அதனாலேயே அவன் காவலன் என்று பெயர் பெறுகின்றனன். அவன் நன்னெறி ஒழுகுவார்க்குப் பட்டம், முதன்மை முதலிய வரிசைகள் நல்கி மேன்மேல் உயர்ந்து வாழத் துணைபுரிவன். நன்னெறியொழுகாது தீநெறி ஒழுகுவார்க்கு மேலும் தீநெறியொழுகித் தாழ்வுறாவண்ணம் ஒத்தாங்கு ஒறுப்பதாகிய தண்டம் புரிவன். அத்தண்டத்தால் தீநெறி நீங்கி நன்னெறி ஒழுகி வாழ்வுறுவர்.

முழுமுதல்வனும் மன்னுயிர்களை விழுமிதாக்கி அருள்வழி ஒழுகப் பண்ணித் தன் திருவடிக்கீழ் வைத்து மாறிலா இன்பம் துய்ப்பிப்பன். மாறிலா இன்பம் துய்ப்பதற்கு அறவழியொழுகுவதாகிய நல்வினையும் பாவவழி ஒழுகுவதாகிய தீவினையும் பிறப்பைத் தருதலால் தடையாகும். அருள்வழி ஒழுகுவதாய இறப்பில் தவமாம் இறைபணியே பிறவாமையைத் தருதலால் துணையாகும். அதன்வழியாகவே பேரின்பம் எய்தும். இம்முறையால் இருவினைக்கும் பிறப்புண்டு. பிறப்புக்கு இருவினை இன்றியமையாதன. அறவழி - நூல்வழி. ஒழுகுகிறேன் என்பது நூல்வழி. ஒழுகச்செய்கிறான் என்பது அருள்வழி. நூல்வழி தன் இழவாமை. அருள்வழி தன் இழப்பு. இவ் உண்மை வரும் வெண்பாவான் உணர்க.

நன்றி பிறர்பயனே நாடலாம் நல்உதவி
என்றும்அதற் கீடாய் இயற்றலாம்—நின்றகடன்
பெற்றபொருள் மீட்டிறுத்தல் பேணுபணி தன் இழப்பாம்
உற்றஅறம் பொன்இன்ப வீடு.

ஆற்றுவல்யான் என்ப தறநூல் வழிஎன்னல்
ஆற்றினன்முன் என்ப தருள்.

இருவினையைக் கூட்டி ஆண்டவன் இன்பத் துன்பங்களைத் துய்ப்பிப்பன். இவ்வுண்மை வரும் சித்தியார் திருப்பாட்டானும் உணர்க.

"அருளினால் உரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யின்
இருளுலாம் நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாம் சுவர்க்கம் ஆதி போகத்தாற் புண்ணியந் தீர்ப்பன்
மருளுலாம் மலங்கள் தீர்க்கும் மருந்திவை வயித்திய நாதன்."

—சித்தியார். ௨. ௨. ௩௩.

முன்னோன் தலைவன் அமைச்சாணை சட்டம்அறம்
மன்னுயிர்வாழ் வார்வினைதுய்ப் பு.

தலைவன் - வேந்தன். அறம் - அறநூல். வாழ்வார் - குடிகள்.

**பாடிகாவல்**

வேந்தன்கீழ் வாழ்வார் குற்றம் புரியின் அவர்களை அக்குற்றம் மேற் புரியாவண்ணமும் நற்றம் புரியும் வண்ணமும் திருத்துதற் பொருட்டு அவ்வேந்தன் செய்வதோர் ஒறுப்பு வேறுபாடு. ஒறுப்பு வேறுபாட்டைத் தண்ட விசேடம் என்பர். உலகில் நிகழும் வினைகளை இருவேறு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று உரிமை கொண்டாடல். மற்றொன்று ஊறு விளைத்தல். இவற்றால் தொடரப்படும் வழக்குகளை வினவும் (விசாரிக்கும்) மன்றங்களை முறைமன்றம் (Civil Court) மிறைமன்றம் (Criminal Court) எனக் கூறலாம். அம்முறையில் **'பாடிகாவல்'** மிறைமன்ற ஒறுப்பாகும். ஒறுப்பினை வேந்தனுகிய ஆட்சித் தலைவன் தன் ஆணைவழி ஒழுகும் 'அன்பு, அறிவு, தேற்றம், அவாவின்மை'யாகிய நாற்பண்பு வாய்ந்த நல்அலுவலாளனைக் கொண்டு நிறைவேற்றுவன். களைகண் ஆவான் - களையவேண்டும் குற்றத்தைக் களையும் இடமாய் உள்ளவன். மிறை - குற்றம்; வருத்தம்.*

மெய்கண்ட நூற்குப் பேருரை வகுத்தருளிய மெய்யுணர்வுச் செல்வராம் சிவஞான முனிவரனுர் தம் பேருரைக்கண் "பாடிகாவல் என்பது நெறியின் வழீஇயினுரை வழக்குவினுப் ஒப்பநாடிச் செய்யுந் தண்டத் தொழில் உணாத்துவதோர் சொல்," என்றருளினர். (உ. உ. எது.) பாடிகாவல் என்பது ஊர், உடல், உடைமை, உரிமைகளைக் காப்பது என்றுகும். ஆளுடைய அரசரும் செம்பொருளின் திருப்பெயராம் **'சிவயநம'** எனத் திருவாய்ப் பொலியச் செப்பாத நாளெல்லாம் நிலைபாப் பொருள்களில் மனம் உலைந்து துன்புற்றுக் கழியும் எனக் கூறியருளினர். இவ் உலேவே மீண்டும் பிறக்கவேண்டும் வழிக்குத் துணையாவது. அத் திருப்பாட்டு வருமாறு.

"நாடி நாரணன் நான்முகன் வானவர்,
தேடி யேசற வுந்தெரி யாததோர்
கோடி காவனைக் கூறுத நாளெல்லாம்
**பாடி காவலிற் பட்டுக் கழியுமே.''** —கு. எஅ - சு.

திருவள்ளுவ நாயனுரும் இன்பத்துப்பாலில் தலைவிவாயில் வைத்துத் தலைவனை மறந்தால் இறந்துபடுவதே நேரும் என இயம்பி அருளினர். ஈண்டுத் தலைவன் தலைவி என வெளிப்படக் கூறியிருப்பினும், உள்ளுறையாக உய்த்துணரின் தலைவன் இறைவன் எனவும், தலைவி உயிர் எனவுமே பெறப்படும். அப்படிக்கொள்ளின், உயிர் இறையை மறப்பது அவன் திருப்பெயரை மறப்பதே. அதுவே 'கோடி காவனைக் கூறுதநாள்;' அதனுல் விளைவது பிறப்பு. அப்பிறப்பிற்குக் காரணம் திருவடிப் பேறு பெறுது இறப்பதாதலின் அதனையே இறந்துபாடு எனக் கூறினர். இக் குறிப்பு 'மறப்பின் எவனுவன்' என்னும் சொல்லில் அமைந்துள்ளது. இறையை மறப்பார் முறை தவறுவர். முறை தவறவே தீயன பலவும் செய்து மிறை பெறுவர். அத் திருப்பாட்டு வருமாறு :

"மறப்பின் எவனுவன் மன்கொல் மறப்பறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும்.'' —திருக்குறள், கஉ0எ.

---

* 'அருமறை' திருக்குறள், அசஎ.

**காலக்கழிவு**

"விதித்தன செய்யாதவழிப் பாவம் உண்டாதற்கு முன்னர்த் தூலமாய் (பருமையாய்) நின்று அழிவுபட்டதென்னை? செய்யாமைக்கு அழிவில்லையாலெனின், அற்றன்று; நாளை விதித்தவற்றை இன்று செய்யாமையாற் பாவமின்மையின், அவ்வக் காலங்களோடு கூடிய விதித்தன செய்யாமையே பாவத்துக் கேதுவாகலான், அவ்வக் காலங்கழியவே அவற்றோடு கூடி விதித்தன செய்யாமையும் அழியுமாகலின், அஃதழிந்து சூக்குமமாய் நின்ற அவத்தையே பாவவினையாமென்றொழிக." (மெய். உ. உ. இருவினை உண்மைத் தலைப்பின் பேருரை.)

உலகில் அனைத்துச் செயல்களும் காலத்தொடு பொருந்தச் செய்தல் வேண்டும். அதற்குரிய காலந்தவறிவிடின் அச்செயல்கள் பாழாகும். உண்ணும் காய்கள் முதிர்ந்துவிடின் உண்ணாது புறத்துப் போடுவது கண்கூடு அன்றோ? உற்றகாலத்து அக்காயினை உண்டு உடலுரம் பெற்று இன்புறும் நாம், காலந்தவறியதால் அக்காலத்தோடு அதன் பசுமையும் அகன்றது; முதிர்வும் ஏற்பட்டது; உண்பதற்கு உதவாநிலையும் நேர்ந்தது; வருத்தமும் எய்தினோம். துன்பம் எய்துவதே பாவவிளைவு. ஆகவே நாம் ஒரு பாவமும் செய்யவில்லை என்று எண்ணுகின்றோம்; காலத்தில் உண்ணாமையே பாவமாயிற்று.

மேலும் உண்ணத்தக்க நிலையில் காய்கனிகளை வாங்கிவந்து, காலந்தவறவிடுவோமானால் வாடியும் வதங்கியும் அழுகியும் பயனுறாது பழுதுறும். இதுவும் காலந்தவறியதால் ஏற்படும் பாவமேயாம். உணுமுதலையோ உணவையோ வீணாக்குவது பாவம் என்பது வெளிப்படை.

காட்சிகாண்பான் சீட்டும் பெற்றுக் காலங்கடந்து அரங்கிடைப் போனால் சீட்டும் செல்லாது; காட்சியும் வாராது. அப்பொழுது எவ்வளவு துன்பம் சீட்டுப் பெற்றாற்கு ஏற்படுமென்பது சொல்லாமலே விளங்கும். துன்பம் எல்லாம் பாவவிளைவே. விதித்தன செய்யாமல் காலங்கழியுமேல் பெரும் பாவமென்பதை வலியுறுத்தவே "பருவத்தே பயிர்செய்" என்னும் மூதாட்டியார் மூதுரையும், "காலத்தினாற் செய்த நன்றி" என்னும் திருவள்ளுப் பெருந்தகையார் திருமொழியும் தோன்றுவ ஆயின. காலம் கடவுள் அருளால் வருவது; நம் ஆற்றலால் ஆக்கிக்கொள்ளக் கூடியதன்று.* நோய்க்கு மருந்து காலத்தே கொடுத்தல் வேண்டும். கொடாதொழியின், உயிர் கேடெய்தும். அப்பொழுது நேருவது பாவம் அல்லாது பிறிதென்னும். சமைக்கப்படும் பொருள் அடுப்பிலேற்றிக் காலந்தவறின் பாழாகுமல்லவா? ஆகவே விதித்தன செய்யாது காலங் கழியவிடுவது பாவமேயாம்.

**தொழுங்காலம்**

கடவுளைத் தொழுங்காலம் நான்கினில் ஒரு காலம் தொழாமற் கழியுமேல் அது பாவமாம் அன்றோ? வாயிற்காவலன் ஒரு சிறுபொழுது காவற் சோர்வுற்றுக் கேடு நேரின் அதற்குப் பொறுப்பாளி அவனன்றோ? கடவுளைத் தொழுங்காலம் நான்கினையும், வெள்ளிமலைக்கண் வீற்றிருந்தருளும் ஆண்டவனே அம்மைகாண "வருமிவள் நம்மைப் பேணும் அம்மைகாண்" என்று திருவாய் மலர்ந்தருளப்பெற்ற காரைக்காலம்மையார் அருளிய அற்புதத் திரு அந்தாதியின்கண் காணலாம். அத்திருப்பாட்டு வருமாறு:

---

* 'எய்தற்' (பக்கம்-கஉக.) திருக்குறள், ௪அக.

"காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையில்
தாங்குருவே போலும் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு."
—கக. காரைக்கால். அற்புதம் - சுஙி.

இந்நான்கும் முறையே அறம், பொருள், இன்பம், வீடு என்பன வற்றையும், சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்பனவற்றையும், குறிஞ்சி மருதம், முல்லை, நெய்தல் என்னும் திணைப்பொழுதினையும் உள்ளுறை யாகக் குறிப்பனவாகும். இவ் உண்மை உணர்ந்து இந்நாற்பொழுதிலும் அவன் திரு அடையாளங்களைக் கண்ணி அந்நோக்கொடு சிறப்பருளும் செம்பொருளைத் தொழுதல் வேண்டும். தொழுகை - பசனை.

திருவள்ளுவப் பெருந்தகையாரும்,

"எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற்கு அரிய செயல்." —திருக்குறள், ருஅக.

காட்சியூண் ஆக்கல்தொழுல் காலமக விற்கேடாம்
மாட்சிவிதித் தன்னசெய்யா மை.

## மாயை பற்றுக்கோடு

இறப்புமெய் (புத்திதத்துவம்) பற்றுக் கோடாகவும், மாயை வைப் பாகவும் கிடந்த எஞ்சுவினை பேரொடுக்கம் அல்லது பேரூழிக் காலத்து மாயையையே பற்றுக்கோடாகவும் வைப்பாகவும் கொண்டு கிடக்கும். என்னை? பேரூழிக்காலத்து நுண்ணுடல் ஒடுக்கப்பெறும். அப்பொழுது இறப்பு மெய் மாயையிற் கலந்துவிடும். ஆகலின், கற்பலகையில் எழுதிய எழுத்துக் கலைக்குங்கால் அகன்று விடுமல்லவா? அதுபோல என்க. ஆயினும், மாணவர் உள்ளத்து அவ்வெழுத்துப் பதிந்துவிடுவதால் வேண்டுங்கால் அவர்களால் எழுதவும் சொல்லவும் கூடும். அதுபோல் பேரொடுக்கத்தின் பின் ஆண்டவன் அருளால் மீண்டும் உலகுளவாம் அன்றே? அப்பொழுது ஆண்டவன் திருவுள்ளத்தான் நோக்குங்கால் அவரவர் வினை கணகெழுதுவார் வெளிப்படுத்துவதுபோல் வெளிப்படப் பெறும். அதனாலேயே ஆண்டவன் 'கீழ்க்கணக்கன்' எனவும் அழைக்கப் பெறுகின்றனன். அத்திருப்பாட்டு வருமாறு:

"தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
**எழுதுங் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே.**"
—கு. உக - அ.

## மாயையின் வகை

மாயை உலகிற்கு முதற்காரணமாயது. முதற்காரணம் எனினும் பொருள்முதற்காரணம் எனினும் ஒன்றே. இஃது அழிவில்லது. என் றும் உள்ளது. முதல்வனுக்கு வைப்பாற்றலாய் வாய்ந்தது. முதல்வ னிடத்துக் கொள்கிறைவாய் உள்ளது; உண்மையானது; கட்புலன் ஆகாதது; இஃது இருவகைப்படும். அவை, தூமாயை (சுத்தமாயை), தூவா மாயை (அசுத்தமாயை) என்ப. "சுத்தமாயை, மாமாயை, குடிலை,

குண்டலி, விந்து என்பன ஒரு பொருட்கிளவி." "அசுத்தமாயை அதோ மாயை, மோகினி என்பன ஒரு பொருட்கிளவி."

**தூமாயை**

ஐந்தொழில் செய்வது முதல்வனுக்கு இலக்கணம். அதனால் அவனுக்கும் மூன்று நிலை உளவாம். அவை கூட்டல், ஊட்டல், ஆட்டல் என்ப. இவை முறையே இலயம் போகம் அதிகாரம் எனவும் கூறப்பெறும். இம்மூன்று நிலையும் முழுமுதல்வன் நேரே செய்யும் விழுமிய திரு அருள் இடம் ஆதலின் தூவாமாயையின் காரியமாகிய தூவா உலகம் (அசுத்தப் பிரபஞ்சம்) பொருந்தாது. தூய உலகே பொருந்தும். அதற்கு முதற்காரணம் **தூமாயை** என்க.

> கூட்டலாட் டல்லிரண்டும் கொள்நுண்மை யேபருமை
> வாட்டமிலா அத்தன்அன்னை வாழ்ஆண்டான்—நாட்டமிகும்
> ஆசான்மெய் ஊட்டல்அரு ளோன்ஒன்றே இவ்வைந்தும்
> மாசில்தூ மெய்ஐந்தாம் மற்று.

மேலும் முடிவிலான் (அநந்ததேவன்) ஒரு மலமுடையாரில் செவ்வி வாய்ந்தவன். சீகண்ட நொடித்தான் (சீகண்ட உருத்திரன்) இருமல முடையாரில் செவ்வி வாய்ந்தவன். இவ்விருவரும் பண்டே புல்லிய மலம் விண்டு "முதல்வன் அருளால் முழுதுணர்ந்து படைப்பு முதலிய தொழில் செய்தற்கு ஏதுவாகிய ஆட்சி (அதிகாரம்) மலப்பசை மட்டும் உடையவர். முதல்வன் ஏவல் வழி நின்று தூவாமாயை முதலியவற்றைக் காரியப்படுத்துவர். இவ்விருவர்க்கும் உடல், உறப்பு, உலகம், உணா முதலியன வேண்டும். அவை தூமாயையினின்றே நல்கப்படும். இவற்றிற்குத் தூவாமாயை பொருந்தாது. தூவா மாயை மயக்கம் செய்யும். இவர்கட்கு மயக்கம் இன்று. தூவா மாயையினின்றும் தூமாயை தோன்றுது. தூவா மாயை வினைசேர் உயிர்கட்கே மறைப்பு ஆகும். மறைப்பு - ஆவாரகம். ஒரு மலமுடையார்க்கு வினையில்லை."

வழுவில் காட்சி (சவிகற்ப உணர்வு) எழுத்தாகிய சொல்லான் அன்றிப் பெறப்படாது. அவ் எழுத்தோசைக்குக் காரணம் தூமாயை. எழுத்தோசைக்குக் காரணம் மூலப்பகுதியின் வழியில் உலகெழுச்சியில் தோன்றும் ஓசையின் கூறாகிய விண் (ஆகாயம்) ணே ஓசைக்குக் காரணமாயிருக்கும்போது வேறு காரணம் கூறுவது எதன்பொருட்டு? விண் எழுத்தோசையைப் புலப்படுத்துவதாகிய இசை ஓசைக்கே காரணம். புலப்படுவதாகிய எழுத்தோசையும் புலப்படுத்துவதாகிய இசை ஓசையும் தம்முள் வேறேயாம். அது புலப்படுவதாகிய உருவமும் புலப்படுத்துவதாகிய ஒளியும் தம்முள் வேறுதல் போற் காண்க.

இசை ஓசை கடலோசை முதலியன. அவை ஓம் என்று இசைப்பினும் எழுத்தோசையாகா, என்னை? இசை யோசையை எழுப்பும அக் கடல் முதலிய பொருள்களுக்கு உயிர் இல்லை. உயிரில் பொருளான் வரும் இசை ஓசை உயிர்ப்பொருளான் வரும் எழுத்தோசையைப் புலப்படுத்தும். ஒருவரின் வடிவத்தைப் புலப்படுத்துவதாகிய பூதவொளியும் புலப்படுவதாகிய வடிவமும் வேறுதல்போல என்க. மேலும் அங்காப்பு முதலிய அக முயற்சியாற் பிறப்பது எழுத்தோசை. எடுத்தல் படுத்தல் முதலிய புறமுயற்சியாற் பிறப்பது இசை ஓசை.

இரண்டோசைக்கும் விண்ணே காரணமென்றல் பொருந்தாதோ எனின்? பொருந்தாது. விண்மெய்க்கு மேலுள்ள எழுச்சி (ஆங்காரம்) மெய் முதலியவற்றிலும் உயிர்கள் வாழ்கின்றன. அவற்றிற்கும் எழுத்தோசை வேண்டும். இவ் எழுத்தோசைக்குக் கீழுள்ள விண்மெய் காரணமென்றல் எங்ஙனம் பொருந்தும்? எனவே எழுத்தோசைக்குத் தூமாயையே காரணம் என்க.

**நால்வகை ஓசை**

எழுத்தோசை நான்கு வகைப்படும். அவை, **நுண் ஓசை, நினைவோசை, மிடற்றோசை, செவியோசை** என்ப. இவற்றை முறையே சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி எனவுங் கூறுவர். இவை வழுவில் காட்சிக்கு ஏதுவாய் நிற்கும். இவை ஐவகையாக விளங்கும். **விளக்கத்தை விருத்தி** என்பர். இதற்கு ஒப்பு ஆடை பொருள் வைக்கும் பையாதல், எழினி (திரை) யாதல், மேற்கட்டி யாதல், குடிலாதல் முதலியனவாக விளங்கல். இவ்வொப்பினைப் படங்குடிலானல் போல எனப் பகர்வர். பால் நெய்யாவது வேறுபாடு. இதனைப் பரிணமம் என்பர். திரிபு என்பதும் அதுவே. படம் - ஆடை.

> **வேறுபாடு** பால்நெய் பரிணமம் ஆடைகுடில்
> கூறு**விளக்** கம்விருத்தி கூறு.

செவி ஓசை தன் செவிக்குக் கேட்கும் நுண்மையும், பிறர் செவிக்குக் கேட்கும் பருமையும் என இருவகைப்படும். இஃதன்றி நுண் ஓசையை நுண்மை, மிகுநுண்மை என இருவகைப்படுத்துவாரும் உளர். எனவே எழுத்தோசை ஐவகைப்படும். அவை நுண்மை, நினைவு, மிடறு, தன் செவி, பிறர் செவி என்ப.*

> நுண்மைநினை வேமிடறு தன்செவி யேபிறர்
> வண்செவியோ டைந்தோசை மற்று.

எழுத்தோசை தூமாயையின் காரியமானல் தூமாயையின் காரியமாகிய ஐந்நிலைகளும், பொருள்களும், உலகங்களும் நம்மனோர்க்குக் காட்சிப் புலனாகாமை போலப் புலனாகாதிருத்தல் வேண்டும். அப்படிக்கில்லாமல் எழுத்தோசை செவிக்காட்சிக்குப் புலனாகின்றதே எனின், எழுத்தோசையாகிய **நுண்மை** (சூக்குமம்) தோற்றத் துணையின்மையின் தூமாயையில் நுண்மையாயும், தோற்றத் துணையாகிய இசை யோசை முதலிய உண்மையின் தூவாமாயை ஆக்கத்தில் பருமையாயும், மூலப்பகுதி ஆக்கத்தில் மிகப் பருமையாயும் நிற்றலின் அத்தோற்றத்துணை வழியானே நம்மனோர்க்குப் புலனாகும் என்க தோற்றத் துணை-உபாதி. ஆக்கம்-காரியம்.

**ஐவகை நிலை**

தூமாயையின் ஆக்கம் ஐவகை நிலைகளாகும். இவற்றைப் பஞ்ச கலைகள் என்பர். கலையெனினும் நிலை எனினும் ஒன்று. அவை, **நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல்** என்ப. அப்பாலாக்கல் அருளிலழுத்தல். இவற்றை முறையே, நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்ப.

> நீக்கல்நிலைப் பித்தல் நுகர்வித்தல் நேரமைதி
> ஆக்கலப் பாலாக்கல் ஐந்து.

---

* 'வைகரி' 'மத்திமை' 'சூக்கும' 'நிகழ்ந்திடு', சித்தியார். க.க-உ0-உச.

### சொற்பொருள் உலகு

ஓசைகள் சொல் உலகென்றும், நிலைகள் முதலியன பொருள் உல கென்றும் கூறப்படும். இவ்விரண்டற்கும் தூமாயை ஒன்றே காரணம் என்பது எங்ஙனம் பொருந்தும்? சொல்லுலகு பொருள் உலகைப்பற்றி யன்றி நில்லா, உயிர் உடலைப்பற்றி யன்றி நில்லாமைபோல. பெயர் பொறிக்கப்படுவதும் மாயாகாரியம். பொருள் ஆக்கப்படுவதும் மாயா காரியம். வீட்டுக்குத் **'திருவள்ளுவரகம்'** என்று பெயர் வழங்க அப்பெய ரைக் கருங்கல்லிலே பொறிப்போம். அதுவும் மாயாகாரியமே. பின்னர் வீடும் கருங்கல் ஏனைக்கல் முதலிய பொருள்களாலேயே ஆக்கப்படும். அவையும் மாயாகாரியங்களே. ஆகவே இரண்டும் ஓரினப் பொருளா யிருத்தலின் ஒருமாயையே அமைவது போல, சொல்லுலகும் பொருள் உலகும் ஆவதற்கு இனம் பற்றித் தூமாயை ஒன்றே அமையும் என்க. தூமாயை ஒன்றே "சொல்வடிவும் பொருள் வடிவுமாகிய இரண்டு தன் மையும் உடைத்தாய் அவ்விரண்டற்கும் முதற்காரண மெனக் கொள்ளப் படு மென்க."

இப்பொருள்முதற்காரணம் வினைமுதற்காரணமாம் முதல்வன் இயைந்து இயக்க இயங்கும். அவ்வுண்மை ஆளுடைய அரசர் அருளிய வரும் திருப்பாட்டான் உணர்க.

> "நல்லானை நல்லான நான்மறையோ டாறங்கம்
> வல்லானை வல்லார்கள் மனத்துறையும் மைந்தனைச்
> **சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானைத்** துகளேதும்
> இல்லானை எம்மானை என்மனத்தே வைத்தேனே:"
>
> —௬. ௭ - ௭.

> பஞ்சொக்கும் சொல்லுலகு பற்றுபொருள் ஆடையொக்கும்
> எஞ்சிலினம் தூமருள்ஒன் றே. மருள் - மாயை.

### மாயை ஒன்றே

தூமாயை தூவாமாயை என்று பேசப்படுவதால் மாயை இரண்டோ என ஐயுறுவாரும், இரண்டே என வழக்கிடுவாரும் எனப்பலதிறத்தராவர். பல கட்டுக்கள் பலமாடிகள் வைத்துக் கட்டிய வீட்டுக்குச் சமையற்கட்டு, உண்ணுங்கட்டு, இரண்டாவது மாடி, மூன்றாவது மாடி எனப்பெயர் வழங்கினும் வீடு ஒன்றே. அது போல் தூமாயை தூவாமாயை என்று வழங்கினும் மாயை ஒன்றே. பின் இருவகையாகக்கூற நேர்ந்தது மல கன்மங்களோடு விரவியதும், விரவாததுமான தன்மைபற்றி. மல கன் மங்களோடு விரவாதது தூமாயை. மல கன்மங்களொடு விரவியது தூவாமாயை. தூமாயை மயக்காது அறிவிக்கும். தூமாயையை நேரே தொழிற்படுத்துவது முழுமுதல்வனின் பேராற்றலாகிய திருவருள்.

தூவாமாயை மலச்சார்பினால் மயக்கி அறிவிப்பது.* முழுமுதல் வனின் திருவாணை, அருள்பெற்ற முடிவிலான் வழித் தூவாமாயையைத் தொழிற்படுத்தும். தூவாமாயையின் கீழ்ப்பகுதியாய மூலப்பகுதி திரு வாணையின்வழிச் சீகண்ட னொடித்தானால் தொழிற்படுத்தப்படும். அறி வில்லதாய மாயை பலவாயின் அழிவெய்தும். அறிவுள்ளதாய உயிர் பல

*'இருள் நீங்கி' திருக்குறள், ௩௫௨.

வாயினும் அழிவுறா. ஆகவே மாயை ஒன்றென்பதே ஏற்புடைத்து. இவற்றின் விரிவெல்லாம் இச்சூத்திரத்திற்கு ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரனார் இயற்றியருளிய பேருரைக்கண் கண்டு கொள்க. மாயை இருவேறு வகையாக இருப்பதற்கு ஒப்புப் பெரும்பாகம் செம்மையும் சிறு பாகம் கருமையும் வாய்ந்த குன்றிமணி. இதனைத் திருவள்ளுவ நாயனார் அருளியதும் வலியுறுத்தும். அத்திருப்பாட்டு வருமாறு:

> " புறம்குன்றி கண்டனைய ரேனும் அகம்குன்றி
> மூக்கிற் கரியார் உடைத்து." —திருக்குறள், உஎஎ.

> " நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் உலகத் திற்கோர்
> வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமல னுக்கோர்
> சத்தியாய்ப் புவன போகந் தனுகர ணமுமு யிர்க்காய்
> வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே."
> —சித்தி. உ. ரு - ரு

## தூமாயை

### உணர்த்து மெய் ஐந்து:

தூமாயையின் ஆக்கப்பாடுகள் ஐவகைப்படும். அவற்றை உணர்த்து மெய் என்று கூறுவர். இவை முறையே அத்தன், அன்னே, அருளோன், ஆண்டான், ஆசான் எனப்படும். இம்மெய்கள் தூமாயையினின்று தோன்றுவன. தூமாயை தன் ஆற்றலாகிய காரியங்களைத் தன்னில் ஒடுக்கி நிற்கும். அப்பொழுது முதல்வனும் தன்னுற்றலைத் தன்னில் ஒடுக்கித் தானேயாய் நிற்பன்.* மீளவும் தூமாயை காரியப்படத் தகுதியாம் வண்ணம் தன் அறிவாற்றலால் பொதுவாய் நோக்குவன். அப்பொழுது ருசு. **அத்தன்** மெய் (சிவ தத்துவம்) தோன்றும். பின் தொழிலாற்ற லால் பொதுவாய் நோக்குவன் அப்பொழுது ருடு. **அன்னே** மெய் (சத்திதத்துவம்) தோன்றும். பின் இவ் இருவகையாற்றலாலும் சிறப் பாக நோக்குவன். அப்பொழுது ருச. **அருளோன்** மெய் (சதாசிவதத்து வம்) தோன்றும். தொழிலாற்றலை மிகுச செலுத்த ருரு. **ஆண்டான்** மெய் (மகேசுரதத்துவம்) தோன்றும். அறிவாற்றலை மிகுச செலுத்த ருஉ. **ஆசான்** மெய் (சுத்தவித்தியாதத்துவம்) தோன்றும். தூமாயையைத் தெருள் எனவும் கூறலாம்.

### ஐங்கலைகள்

ஐங்கலைகள் எனினும் ஐந்நிலைகள் எனினும் ஒன்றே. உயிர்களைக் கட்டினின்றும் நீக்கியருளும் சிவ ஆற்றல் நீக்கி எனப் பெயர் பெறும். அவ் ஆற்றற்கு நிலைக்களமாகிய தூமாயையின் விளக்க (விருத்தி) மும் நீக்கி எனப் பெயர் பெறும். மற்றைய நான்கு நிலைகளுக்கும் இவ்வாறே கண்டு கொள்க. திருக்கோவிலில் கூறப்படும் திருவுருவப் பெயர் சீவன். இது சீவன் நிற்றற்கு இடமானமையின் பெற்ற திருப்பெயர். இதனை யொக்கும் மேற்கூறிய பெயரும்.

அங்ஙனம் நீக்கப்பட்ட உயிர்கள் மீள நோக்கா வண்ணம் அருளும் சிவ ஆற்றல் நிலைப்பி எனப்படும், அங்ஙனம் நிலைபெற்ற ஆவிகட்கு

---

*' கண்ணி ' ' ஆறறி ' புறம், கலி - கடவுள் வாழ்த்து.

நூலுணர்வு (ஆகமஞானம்) ம், நுண் உணர்வு (அனுபவஞானம்) ம் நல்கும் சிவ ஆற்றல் நுகர்வி, ஆவிகட்கு விருப்பு வெறுப்பு எண்ணம் முதலிய எல்லாத் துன்பங்களையும் அமைதிப்படுத்தும் சிவ ஆற்றல் அமைப்பி, அவ் அமைதியும் நீங்கி அருளில் அழுந்தச் செய்யும் சிவ ஆற்றல் அழுத்தி. இவ் ஐவகைச் சிவ ஆற்றல்களும் ஙரு. அன்னை மெய்க்கண் உலகுருவமாய் இருக்கும் இடங்களில் தங்கும்.

## தூவாமாயை

### உணர்வுமெய்

தூவாமாயை ஆகிய மருளினை —ஙக - ம் மெய்யினை (அசுத்தமாயை) முடிவிலான் (அனந்தன்) ஆற்றல் கலக்கத் தோன்றுவன உணர்வுமெய்-ஙO. காலம், உகூ. ஊழ் (நியதி), உஅ. உழைப்பு (கலை), உழைப்பினின்றுந் தோன்றுவது உஎ. உணர்வு (வித்தை), உணர்வினின்றுந் தோன்றுவது ஙசு. விழைவு (அராகம்) ஆகிய ஐவகை மெய்கள்.

இவ் ஐவகை மெய்களும் ஆவியைக் கட்டுறுத்தியக்கால் ஆவி ஆள் எனப்பெயர்பெறும். இது மடிநற்று முந்துறும் மகன் ஒக்கும். அதனால் இவற்றை உடுப்பு என்ப. உடுப்பு - கஞ்சுகம். வேறுவகையாகக் கூறின் கோவணம், ஆடை, கச்சு, மேலாடை, தலைக்கட்டு எனலாம்.

> கோவணமே ஆடைகச்சு மேலாடை கட்டுதலை
> மாவணமைந் துற்றுள் மதி.

இவ் ஆள் என்னும்மெய் 'தான் ஒன்றில் தோன்றாமையானும் தன்கண் தோன்றுவன இன்மையானும் இரண்டும் அல்லன்'* என்னும் சொல்லிற்குரியது. இரண்டாவன முதனிலையும் ஆக்கமும். இவற்றைப் பகுதியும் விகுதியும் எனக் கூறுவர். இவ் ஆள் உடு - ஆவது மெய்யாகும்.

மொத்தம் உணர்வுமெய் ஏழு : உடு. ஆள் (புருடன்), உசு விழைவு, உஎ. உணர்வு, உஅ. உழைப்பு, உகூ. ஊழ், ஙO. காலம், ஙக. மருள் (தூவாமாயை) என்ப.

தூவாமாயையினின்று காலமும் அதன்பின் ஊழும் அதன் பின் உழைப்புந் தோன்றும். எனவே இம் மூன்றும் தூவாமாயையின் ஆக்கம். உழைப்பினின்று உணர்வு தோன்றும். இஃது ஆக்கமும் முதனிலையுமாகும். உணர்வினின்று விழைவு தோன்றும். இவ்விழைவு மெய்யினின்றும் ஏதும் தோன்றாமையால் இஃது ஆக்கமாவதன்றி முதனிலையாவது இல்லை.

க. காலம் ஆவியின் வினை நுகர்வுப் போழ்தை வரையறுக்கும்.

உ. ஊழ் ஆவியின் வினைநுகர்வுப் பொருளை வரையறுக்கும்.

ங. உழைப்பு ஆவி வினைப்பயன் நுகர்தற்பொருட்டு மலஆற்றலைச் சிறிது நீக்கி ஆவியின் உழைப்பாற்றலை விளக்கும்.

ச. உணர்வு ஆவியின் உணர்வினை விளக்கும்.

ரு. விழைவு ஆயின் வேட்கையை விளக்கும்.

---

* 'சுவையொளி' திருக்குறள், உஎ பரி. உரை.

சு. ஆள் ஆடையணிந்தோன் ஆள்வினைக்குத் தகுதி ஆவதுபோல் உயிர் பயன் நுகர்வுக்குச் சமைந்து ஆள் ஆவதால் ஆள் எனப்படும்.

எ. மருள் இவற்றை எல்லாம் தோற்றுவித்த ௩௪-ம் மெய் ஆவிகளை வினைப்பயனின்கண் நிறுத்துதற் பொருட்டு வெறுப்புறாது விருப்புறமயக்குவது: இம் மயக்குந்தன்மை மாயையின் இயல்பன்று. மாயையின் இயல்பு கண்ணை விளக்கும் விளக்குப்போன்று ஆவியின் அறிவை விளக்குவது. "மாயா தனுவிளக்காம்" * என்னும் மெய்கண்டார் திருமொழியாலும் விளங்கும். இம்மாயை மலச்சார்பான் மயக்குவதாகும்.

## மூலப்பகுதி

### உடல்மெய்

உடல் மெய் ஆன்மதத்துவம் என்ப. மூலப்பகுதி, தூவா மாயையின் கண் தோன்றிய உ௮-ஆம் மெய்யாகிய உழைப்பினின்று தோன்றும். இம்மூலப் பகுதியைச் சீகண்ட நொடித்தான் ஆற்றல் கலக்கும். கலக்க இம் மூலப்பகுதியினின்றும் உ௪. குணமெய் தோன்றும். சீகண்ட நொடித்தான் - சீகண்டருத்திரன்.

### மூலப்பகுதி :

இதன் விளக்கம் உ௪. குணமெய். விளக்கம்-விருத்தி. மெய்-தத்துவம். இக்குணம மூன்று வகைப்படும். இம்மூன்றும் **அமைதி, ஆட்சி, அழுந்தல்** என்று வழங்கப்படும். இவற்றை முறையே சாத்துவிகம், இராசதம், தாமதம் என்ப. இம்மூன்றும் விரவிக் கலந்திருக்கும். கலப்பு நிலையில் ஒன்று முனைத்துத் தொழிற்படும்போது ஏனைய இரண்டும் அதனுள் அடங்கி நிற்கும். இஃது ஒரு வழக்கை மன்றுடி (வக்கீல்) மூவர் கலந்து நடத்தினால் ஒருவர் பேசும்போது ஏனை இருவரும் வாளா இருப்பர். ஓர் உருளையில் மூன்று ஆர்க்கால் இருந்தால் மேற்பகுதியில் வரும் ஆர்க்காலுக்கு மற்றைய இரண்டும் அடங்கியிருக்கும் அல்லவா? இவற்றை ஒத்திருக்கும் முக்குண நிலையும்.

### உ௧. இறுப்புமெய்

உ௪-ஆவதாகிய குணமெய்யினின்று உ௧ **இறுப்புமெய்** தோன்றும். இது குண மெய்யின்கண் உள்ள அமைதிக் குணமிகுந்து ஏனைய இரண்டும் அடங்கி நிற்பத் தோன்றுவது. இதுவாயில்களானும் மனத்தானும் எழுச்சியானும் பற்றி நினைந்து ஊக்கித் துணிய வேண்டிய உண்பொருள்களைக் கொள்ளுமாறு இறுத்தல் செய்வது. இஃது இறையிறுத்தல் போன்றது. இவ் இறுப்புமெய்யைப் புத்தி தத்துவம் என்ப.

### உஉ. எழுச்சி

எழுச்சி (ஆங்காரம்) இஃது இறுப்பு மெய்யினின்று அமைதி, ஆட்சி, அழுந்தல் என்ற மூன்றனுள் அமைதியும், அழுந்தலும் அடங்க ஆட்சி (இராசதம்) மிக்குத் தோன்றுவது. இவ் எழுச்சி மூவகைப்படும். அவை **உணர்வு, உழைப்பு, உலக எழுச்சி** என்ப. இவற்றை முறையே தைசத ஆங்காரம், வைகரி ஆங்காரம், பூதாதி ஆங்காரம் என்ப. இவ் எழுச்சி மனம்

---

* 'மாயா' மெய்கண். ௪. உ. க.

எண்ணி நினைந்து ஐயுற்ற பொருளை உறுதி செய்யுமாறு இறப்பு மெய்யினை எழுப்பி ஊக்கப்படுத்துவது.

**உக. மனம்**

இம்மனம் உணர்வு எழுச்சியினின்றும் தோன்றுவது. இம்மனத்தின்பின் உ0. **செவி**, கக. **மெய்**, கஅ. **நோக்கு**, கஎ. **நாக்கு**, கசு. **மூக்கு** என்னும் ஐம்புலன்களும் தோன்றும். இவ் ஐந்தும் அறிகருவி என்ப. அறிகருவியை ஞானேந்திரியம் என்ப. இவ் ஐந்தும் கேட்டல், தீண்டல், காண்டல், சுவைத்தல், மணத்தல் என்னும் ஐம்புல நிகழ்ச்சிக்கு வாயிலாவன. இவையே இல்வாழ்க்கையின் முதன்மைப் பகுதி. இவ் உண்மை திருவள்ளுவ நாயனார் அருளியவாற்றானும் அறியலாம். அத்திருப்பாட்டு வருமாறு :

"கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள." —திருக்குறள், கக0க.

**கக. செய்கருவி**

செய்கருவியும் ஐந்து. இவ்வைந்தும் உழைப்பு எழுச்சியினின்றும் தோன்றுவன. அவை முறையே கரு. **வாய்**, கச. **கால்**, கந. **கை**, கஉ. **எருவாய்**, கக. **கருவாய்** என்ப. இவற்றின் செயல் முறையே பேசல், நடத்தல், உழைத்தல், கழித்தல், மகப்பெறல் என்ப. இதனால் 'அறிவறிந்த மக்கட்பேறு' பெறுதற் பொருட்டு 'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றி' 'எப்போதும் இனியானை' இன் மனத்தே வைத்து உடனுறை வாழ்வு உடையராதல் வேண்டும்.*

**சு. நுண்மை**

நுண்மை தன் மாத்திரை எனவும், பூதமுதல் எனவும் கூறப்படும். அவையும் ஐந்து. அவை உலக எழுச்சியினின்றும் தோன்றுவன. அவை, க0. **ஓசை**, கூ. **ஊறு**, அ. **ஒளி**, எ. **சுவை**, சு. **நாற்றம்** என்ப. இவ் ஐந்தும் பருமைக்கு முதலாயுள்ளன. இவற்றைத் திருவள்ளுவனாரும்,

"சுவைஒளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு."

என்றருளினர். —திருக்குறள், உஎ.

**ரு. பருமை**

இப்பருமை பூதம் எனப்படும். இவையும் ஐந்து, ரு. **விண்**, ச. **கால்**, ந. **தீ**, உ. **நீர்**, க. **மண்** என. மண்முதல் மூலப்பகுதி ஈறாகவுள்ள மெய்கள் இருபத்து நான்கும் உடல் மெய்யாகும். இவையே உடலாய், உலகாய், உண்பொருளாய் உள்ளன. இங்ஙனம் உடல்மெய் இருபத்துநான்கு, உணர்வுமெய் ஏழு, உணர்த்துமெய் ஐந்து ஆக முப்பத்தாறும் 'அருஞ்சைவர் தத்துவம்.'†

**மெய்களின் வகை**

மண்முதல் உழைப்பு (கலை) ஈறாகிய முப்பத்தொரு மெய்களும் புறப்புறக் கருவி, புறக்கருவி, அகப்புறக்கருவி, அகக்கருவியும் என நான்கு வகைப்படும்.

---

* 'கருமம்' நீதிநெறி. எஅ. † 'ஆகின்ற' பக்கம்—உ0

அவற்றுள் பருமை ஐந்து, நுண்மை ஐந்து ஆகப்பத்தும் புறப்புறக் கருவி. அறிகருவி ஐந்து, செய்கருவி ஐந்து ஆகப்பத்தும் புறக்கருவி. மனம், எழுச்சி, இறுப்பு, குணம் முதலியன அகப்புறக் கருவி. ஆள், விழைவு, உணர்வு, உழைப்பு, ஊழ், காலம், மருள் முதலன அகக்கருவி.

மேலும் இம் மெய்கள் பொதுவும், சிறப்பும், பொதுச் சிறப்பும் என மூவகைப்படும்.

உலக வடிவாகிய மெய் எல்லா உயிர்களுக்கும் பொதுவாய் ஊண் நல்கலால் பொது எனப்படும். நுண் உடலாகிய மெய் எட்டு. இவ் எட்டும் புரியட்டகமெனக் கூறப்படும். இவை உயிர்தோறும் வேறு வேறாய் நின்று நுகர்வு பயத்தலின் சிறப்பெனப்படும். இந்நுண் உடல், நுண்மையும் மிகு நுண்மையும் என இருவகைப்படும். மிகு நுண்மை பரம் எனப்படும்.

**நுண்மை :** நுண்மை (தன் மாத்திரை) ஐந்து, மனம், எழுச்சி, இறுப்பு மூன்று ஆக எட்டுங் கொண்டதாகும்.

மிகு நுண்மை : பருமையொன்று, நுண்மை ஒன்று, அறிகருவி ஒன்று, செய்கருவி ஒன்று, அகப்புறக்கலன் (அந்தக்கரணம்) ஒன்று, குணம் ஒன்று, மூலப்பகுதி ஒன்று, உழைப்புமுதல ஒன்று, என எண் வகைப்பட்ட முப்பத்தொரு மெய்களும் கூடியவையாகும்.

> தோற்றுபரு மைநுண்மை சொல்அறிசெய் உட்கலனே
> ஆற்றுகுணம் மூலமுழைப் பெட்டு.

"பருவுடல் மெய்கள் அவரவர் நுகர்ச்சிக்குச் சிறப்பு வகையால் நிலைக்களமாதலும், மனைவி முதலியோர்க்குச் சந்தனம் பூமாலை முதலியன போலப் பொதுமைபால் நுகர்வாதலும் ஆகிய இருவகையும் உடைமையின், பொதுச் சிறப்பெனப்படும் என்றுணர்க." இவற்றின் விரி வெல்லாம் மெய்கண்டநூற் பேருரைக்கண் சிவஞான முனிவரனா அருளியவாற்றான் அறிக.

## தளைப்பொருள்தொகை

இறை, உயிர், தளை என்னும் முப்பொருள்களுள் தளையின் நிலைமையைப்பற்றித் தென்றல் தவழும் தென்கயிலைச் செல்வர், அறுமுகப் பண்ணவன் அருமறை பெற்றவர், செந்திலாண்டவனால் 'குமரகுருபரன்' என அழைத்தருளப் பெற்றவராகிய குமரகுருபர அடிகள் தாம் அருளிச் செய்த எ. சிதம்பர மும்மணிக்கோவையில் **"கொண்டல்கண் படுக்கும்"** எனத் தொடங்கும் திருப்பாட்டில் வரி,

> உக. " தாதிற் சென்றநின் துணையடிக் கமலத்து
> ஈதொன்று இயம்புவல் கேண்மதி பெரும
> அலையா மரபின் ஆணவக் கொடியெனும்
> பலர்புகழ் சேரிப் பரத்தையொடு தழீஇ
> உகு. ஏகலன் தணந்தாங்கு என்னையும் உணராது
> மோகமொ டழுந்தி முயங்குறும் அமையத்து
> அங்கவட் குரிய தங்கையர் இருவருள்
> துடிலை என்னும் மடவரல் ஒருத்தி

எய்தரும் புதல்வியர் **ஐவரைப்** பெற்றனள்
**மோகினி** என்பவள் **மூவரைப்** பயந்தனள்
ஆகிய புதல்வியர் அங்கவர் மூவருள்
**கலை** எனப் பெயரிய கணிகைமற் றொருத்தி
தானும் **மூவரைத்** தந்தனள் அவருள்
**மான்**எனப் பட்ட மடவரல் ஒருத்தி
**எண்மூன்று** திறத்தரை ஈன்றனள் இத்திறம்
நண்ணிய மடந்தையர் **ஐஎழு வரையும்**
கிளப்பரும் காமக் கிழத்திய ராக
அளப்பில் காலம் அணைந்தனன் முயங்குழி
முறைபிறழ்ந் திவரொடும் முயங்குதல் ஒழிகென
அறிஞராங் குணர்த்த அஞ்சினன் ஒரீஇ
இன்னிடைப் புகுந்தனன் மன்னோ என்னிடை
**ஞான வல்லியை** நன்மணம் புணர்த்தி
ஆஞ ஞேயத் தரும் பொருள் வழங்கி
இறவா வீட்டினில் இருத்திக்
குறையாச் செல்வமொடு கூட்டுதி மகிழ்ந்தே.”

குடிலை - தூமாயை. ஐவர் - அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான். மோகினி - அசுத்தமாயை. மூவர் - காலம், ஊழ், உழைப்பு. கலை (உழைப்பு) தந்தமூவர் - உணர்வு, விழைவு, மூலப்பகுதி. மான் (மூலப்பகுதி) தந்த இருபத்துநால்வர் - குணம், இறப்பு, எழுச்சி, மனம், அறிகருவி ஐந்து, செய்கருவி ஐந்து, நுண்மை ஐந்து, பருமை ஐந்து. ஞானவல்லி - மெய்யுணர்வுச் செல்வி.

மாய்தலோ டாதலெனும் மாண்டமிழின் சொல்லிரண்டின்
தாயாம் முதல்நிலைகள் தாம்இணைந்தே—ஆய்வார்க்கு
மாயா எனும் சொல்லாய் மன்னியிடல் தோன்றுமால்
ஆயாதார்க் கென்னும் அது.

## ஆணை இடம்

விழுமிய முழுமுதல்வன் செழுமிய அறிவாற்றலாம் ஆணையை இடமாகக்கொண்டு ஆவிகளின் மலப்பிணிப்பு அகற்றித் தன் திருவடி இன்பத் தேன் நுகர்விப்பன். இவ்வுண்மை ஆளுடைய அரசர் அருளிய திருப்பாட்டானும் காணலாம். அது வருமாறு:

*“குலங்கெடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக்
குலவரையின் **மடப்பாவை இடப்பா** லானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையி னானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்மம் என்னும்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
**நலங்கொடுக்கும் நம்பியை** நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.” —௬. ௨0 - ௬

மடப்பாவை - திருவருள்; ஆணை. இடப்பால் - இடப்பகுதி; நிலைக்களம். நலம் - திருவடி இன்பம்.

---

* ‘எயி லானை.’ ௫. ௧௧ - ௧.

## மூன்றும் அதிகரணம்.

**இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.**

எ - து. மே - ள். எ - னின். புனருற்பவம் சடத்துக் கன்றிச் சித்துக்கும் உளதாயினன்றே முற்செய்வினையே ஈண்டைக்கு வருமென மேற்கூறியதனையும். அஃதுண்டோ? இல்லையோ? என்னும் ஐயப்பாட்டின்கண் குடமுடைந்தவழிக் குடாகாயம் ஆகாயத்தோடு கூடுமாறுபோல உடம்பு நீங்கியவழி உயிர் பிரமத்தோடு கூடுமென்னும் சுருதிபற்றி இறந்தவுயிர் மீளப்பிறப்பதில்லை எனக் கிரீடாப்பிரமவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல்நுதலிற்று. இ - ள். வெ - டை.

வருதல் தொன்றுதொட்டு அவ்வாறுதல்.

மாறுதல் ஈண்டிறத்தலென்பது, 'போக்குவரவு புரிய' என்னும் மூலத்தானும், ஏது உதாரணங்களோடு உளதாகிய இயைபானும் உணர்க. இஃது உணராது அச்சு வேறுபடுதலென்றுரைப்பாருமுளர். அஃதீண்டைக்கியாதுமியையாமையுணர்க.

**தோற்றமும் ஈறும் உள்ளதற்கு அல்லது உளதாதல் இன்மையான்.**

எ - து ஏது. எ - னின். அதற்குப் பிரமாணம் என்னையென்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) உற்பத்தியும் நாசமும் தொடர்ச்சியாயுள்ள பொருட்கு அன்றி ஏனைப்பொருட்கு உற்பத்தி கூடாமையான், இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென மேற்கொண்டது (எ - று).

தோற்றமும் ஈறும் என்னும் உம்மைகளை எதிரது தழீஇயினவாகக் கோடலின் தொடர்ச்சியா யென்பது போந்தவாறு அறிக. உளதாதல் ஈண்டுத் தோன்றுதல்.

இனி இவ்வாறன்றிக் குடாகாய உவமையேபற்றி இருவினையான் வரும் புனருற்பவம் உயிரின் பொருட்டுச் சிவத்துக்கே ஆமெனச் சிவாத்துவிதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்தும் மூலப்பகுதியில் தோன்றும் புத்திதத்துவத்திற்கே அது எனச் சாங்கியர் கூறுங்கடாவை ஆசங்கித்தும மேற்கோடல் நுதலிற்று இவ் அதிகரணமெனக் கொண்டு, தோற்றமும் ஈறும் அவ் உரிமை உள்ளதற்கேயன்றி ஏனையவற்றிற்கு உளதாதலின்மையான் இவ்வான்மாக்களே மாறிப் பிறந்து வருமென மேற்கொண்டது

என்றுரைப்பினும் ஆம். இப்பொருட்கு உரிமை என்பது அவாய்நிலையான் வந்தது.

உளதாத லென்னும் ஒருமை தோற்ற ஈறுகளோடு தனித் தனி சென்றியையும்.

ஆன்மாக்களே யென்னும் பிரிநிலைஏகாரம் விகாரத்தால் தொக்கது.

இனி மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற் பொருட்டு மேற்கொண்ட தென்பாருமுளர். அத்துவிதமென்ற சொல் லானே அவரை மறுத்து ஆன்மாக்களைப் பெறுவித்தமையின் ஈண்டவர் மதம்பற்றிக் கடா நிகழ்தற்கோர் இயைபு இன்மை உணர்க.

* கண்ட நனவைக் கனஉணர்வின் தான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினல்—கண்செவிகெட்டு
உள்ளதே தோற்ற உளம்அணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவில் தான்.

எ - து. உ - ம். எ - னின். புனருற்பவம் ஆங்காற்படும் இயல்புகள் உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற உளம் அத்தூடு விண் படர்ந்து கண்ட நனவைக் கனவு உணர்வின் தான் மறந்து மனம் தள்ள வினையினல் அணுவாய்ச் சென்று கருவில் விழுந் தான் எனக் கொண்டு கூட்டுக.

(இ - ள்.) கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற - கண் செவி முதலிய உறுப்புக்களை யுடைய இவ்வுடம்பு கெட்ட வழித் (தனக்குக் கேடின்றிப் படைப்புக் காலந்தொடங்கிச் சங்கார காலமளவும்) நிலைபெற்றுள்ள தாகிய சூக்குமதேகம் (பூதசார வுடம்பு முதலியனவாய்க்) காரியப்பட, உளம் அத்தூடு விண் படர்ந்து - உயிரானது அப்பூதசார முதலிய உடம்பின்கண் (பொருந்தித்) துறக்க நிரயங்களிற் சென்றநுபவித்து, (பின்னர்) கண்ட நனவைக் கனவு உணர்வின் மறந்து - நனவின்கண் கண்ட வற்றைக் கனக்காணுங்காலத்து (மறந்து) அறிவுவேறு பட்டாற் போல (முன்னைக் கண் செவி கெட்டவாறும் உள்ளதே தோற்ற அத்தூடு விண் படர்ந்தவாறும் ஆண்டநுபவித்தவாறு மாகிய இன்னோரன்னவற்றை) மறந்து (அறிவு வேறுபட்டு), மனந்தள்ள வினையினல் அணுவாய்ச் சென்று கருவில் விழும்- (முன்னுடம்பு இறக்குங்கால் அடுத்த வினை காட்டுங் கதிநிமித்தம் பற்றி உயிர்

* பக்கம் - கூ0. 'பூதனு' 'பனனக' சித்தியார், உ. உ - கூகூ, கூஅ.

அவாவுமாறு) மனஞ் செலுத்துதலான் (அக்கதிக்கட்சேறற் கேதுவாய் எஞ்சி நின்ற) புண்ணிய பாவ சேடத்தாற் சூக்கும தேகமாத்திரையாய்ச் சென்று (அம்மனந் தள்ளிய கதிக்கு அமைந்த) அக்கருவின்கண் படும் (எ - று).

இன் உவமவுருபு. தான் அசை. மறத்தற்குச் செயப்படு பொருள் அவாய் நிலையான் வந்தது.

விண்படர்ந்து என்னும் உபலக்கணத்தால் நிரயம்படர்ந்து என்பதூஉம பெறுதும். படர்ந்தெனக் காரியத்தைக் காரண மாக உபசரித்தார்.

அத்தூடென்புழி அன்சாரியை விகாரத்தால் தொக்கது. பொருந்தி என்பது சொல்லெச்சம். வினை ஆகுபெயர்.

உடம்பு நீங்கிப் போங்கால் முதற்கட்கெடுவன கண்ணுஞ் செவியுமாகலின், அச்சிறப்பு நோக்கிக் கண் செவி கெட்டென்று உபசரித்தார். கெட்டவழி என்பது கெட்டெனத் திரிந்து நின்றது.

ஐம்பெரும் பூதத்தின் காரியம் எனப்பட்ட தூலவுடம்பு சூக்குமவுடம்பின் காரியம் ஆமாறு என்னை யென்னும் ஐயம் நீக்குதற்கு உள்ளதே தோற்ற என்றார்.

ஏகாரந் தேற்றம்.

ஆகாய முதலிய தூல பூதங்கள் சத்த முதலிய சூக்கும பூதங்களின் காரியமாதலின், அது பற்றியே தன்மாத்திரை மயமாகிய சூக்கும வுடம்பில் தோன்றுவதாய தூலவுடம்பு ஐம் பெரும் பூத மயமெனப் பட்டதன்றிப் பிறிதில்லை யென்பது. * "பூதனுசரீரம் போனாற் புரியட்ட ரூபந்தானே யாதனு சரீர மாகி" எ - ம். † "சூக்கும வடிவே தென்னில் தூலகாரணம தாகும்." எ - ம். ‡ "தூலமாம் உருவினுக்குச் சூக்கும முதல்" எ - ம். § "மாறி இவ்வுருவ மெல்லாம் வருவதெங்கே நின் றென்னிற், கூறிய சூக்குமத்தாம்." எ - ம். ** "விதிப்படி சூக்குமத்தே உருவரும்." எ - ம். †† "மனுதிதரும் உடல்." எ -ம். வழிநூலாசிரியரும் இவ்வாறே கூறியவாறு காண்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப. அது தோன்றுங்கால் ‡‡ "காலமுற்று - நீக்கிட மரம்பின் வேறோர் நீண்மர நிகழ்த்து" மாறுபோலச் சூக்குமவுடம்பு கெடாது

* சிவஞானசித்தி, இரண்டாஞ் சூத்திரம். ௩௯. † நான் காஞ்சூத்திரம். ௧0. ‡ இரண்டாஞ் சூத்திரம். ௫0. § இரண்டாஞ் சூத்திரம். ௪௭. ** இரண்டாஞ் சூத்திரம. ௪௧. †† பதினொராஞ் சூத்திரம். ௩. அநாதி யுட. ‡‡ இரண்டாஞ் சூத்திரம். ௪அ. சூக்குமம்.

நிற்பத் தூலவுடம்பு *"வேறொரு குறியாம் ஆரம் வீரசங் கிலி யுமா" தல்போல வினைக்கீடாக அச்சுவேறுபட்டு, †"மதிக்கெழு கலைகள்போல வருவது போவதாம்." என்பதூஉம் வழிநூலா சிரியர் கூறிய வாற்றான் அறிக.

அணு சூக்குமவுடம்பு.

தள்ள தள்ளுதலானென்க.

அக்கருவிலெனச் சுட்டு வருவிக்க.

தான் அசை.

உள்ளதே தோற்ற என்றதனால் உடல் திரிவும், விண் படர்ந்து என்றதனால் இடத்திரிவும், கண்ட நனவைக் கனவுணர் வில் தான் மறந்து என்றதனால் அறிவுத்திரிவும் பெறப்பட்டன.

உள்ளதே தோற்ற என்றதனால் புதிது புதிதாய்த் தோன்று தல் பற்றிச் சற்காரியவாதத்திற்கு இழுக்கின்மையும், அத்தூடு விண் படர்ந்தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழுமென வுங் கூறியதனால் போக்குவரவு பற்றி வியாபகத்துக்கு இழுக்கின் மையும், வினைச் சேடத்தா லென்றதனால் துறக்க நிரயங்களின் அநுபவித் தொழிந்தமை பற்றிய புனருற்பவ காரணத்திற்கு இழுக்கின்மையும், மனந்தள்ள வென்றதனால் அஃது எஞ்சுதற்கு ஏதுவுங் காட்டியவாறு.

வேதத்துட் கூறப்படும் பஞ்சாக்கினி வித்தையின் இயல் புணர்த்துவார் கண் செவி கெட்டவழி விண் படர்ந்து மறந்தணு வாய்ச் சென்று கருவில் விழும் என்றார். பஞ்சாக்கினிவித்தை யினியல்பு நீலகண்ட பாடியத்திற் காண்க.

மறந்து விண் படர்ந் தெனக்கூட்டி உரைப்பாருமுளர். துறக்க நிரயங்களிற் படர்ந்து அநுபவிப்புழி அறிவு திரியாமை புராணங்களுட் காண்க

‡அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
பரகாயம் போய்வரும்அப் பண்பும்—பரவில்
குடாகாய ஆகாயக் கூத்தாட்டாம் என்பது
அடாதுள்ளம் போமாறு அது.

எ - து. உ - ம். எ - னின். உயிர்க்குப் புனருற்பவ மாகாமைக்கு வாதிகளான் எடுத்துக் காட்டப்படுங் குடாகாய ஆகாயவுவமைக்குப் பொருள் கூறி மேலதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

---

* இரண்டாஞ் சூத்திரம். சஎ. (பக். கரசு) மாறியிவ்வுருவ.
† இரண்டாஞ் சூத்திரம். சகூ. ‡ 'பன்னகம்' சித்தியார். உ. உ - கூஅ.

(இ - ள்.) அரவு தன் தோல் உரிவும் அக்கனவும் பரகாயம் போய்வரும் அப் பண்பும் பரவில் வேறு (கண் செவி கெட்ட வழி உள்ளதே தோற்ற அத்தூடு விண் படர்தற்குப்) பாம்பு தோலுரித்துப் புதிதொருதோல்போர்த்துச் சேறலும், புருடன் நனவுடம்பினீங்கிக் கனவுடம்பிற் சேறலும், யோகிகள் தம் முடம்பு நீங்கிப் பரகாயத்திற் சென்று மீடலுமாகிய இவ்வுவமை கள் மிக்கு வழங்குதற்கண் இவற்றிற்கு மாறாக, குடாகாய ஆகா யக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது - குட ஆகாயம் (குட முடைந்தவழி) ஆகாயத்தோடு கூடுமாறு போல்வதோர் கூத் தாட்டு ஆமென்று நீ கூறுதல் பொருந்தாது, உள்ளம்போம் ஆறு அது - சூக்கும உடம்பு விட்டுப் போமாற்றிற்கே அவ்வுவ மையாகலான் (எ - று).

எனவே, உடல் விட்டுப் போமாற்றிற்கு இவ்விருவகை உவ மைகளும் ஆகமங்களிற் கூறுதலின், அவை தம்முள் முரணுத வாறு, அரவுதன்தோலுரிவு முதலியன தூலஉடல் விட்டுப் போமாற்றிற்கும், குடாகாயவுவமை சூக்கும உடம்பு விட்டுப் போமாற்றிற்கும் எனக் கோடல் பொருத்த முடைமையின் அவ் வேறுபாடுணராது குடாகாயவுவமையுந் தூலவுடம்பு விட்டுப் போமாற்றிற்கே போதுமென மலையற்கவென மேலதனை வலி யுறுத்தவாறு காண்க

மேலைவெண்பாவில் "கண்ட நனவைக் கனவுணர்வில் தான் மறந்து" என்றது அறிவு வேறுபடு முறைமைக்கு எடுத்துக் காட்டிய தெனவும், ஈண்டு அக்கனவும் என்றது அதனையே உடல் வேறுபடு முறைமைக்கு எடுத்துக் காட்டியதெனவுந் தெரிந்து கொள்க.

பரவு முதனிலைத் தொழிற் பெயர். இல்லுருபு தொழில் நிகழ்ச்சிக்கண் வந்த ஏழாவது.

பரவுதல் எல்லார்க்கும் புலனுமாறு மிக்கு நிகழ்தல்.

ஈண்டு உள்ளம் என்றது சூக்கும உடம்பை.

போமாற்றிற்கு என்னும் நான்காவது விகாரத்தால் தொக் கது; "ஐந்தவித்தான் ஆற்றல்" என்புழிப்போல.

குளம் ஆம்பல் குளாம்பலென மரீஇயினாற்போலக் குடம் ஆகாயங் குடாகாயமென மரீஇயிற்று.

ஆகாயக் கூத்தாட்டு என்பது உவமத்தொகை. இதனை உம்மைத் தொகையாகக் கொண்டு குடாகாய ஆகாயமுங் கூத் தாட்டும் போலென்று உரைப்பாரும் உளர்.

## விளக்கம்

'கண்ட....................................தான்'

### மாறிப்பிறத்தல்

ஈண்டு மாறுதல் இறத்தல். எனவே இறந்து பிறத்தல். பண்ட மாற்று என்னும் பொருளில் மாறுதல் பொருளை விட்டு நீங்குதல் என்பது பெறப்படும். அதுபோல் இறத்தல் என்பது உயிர் உடலைவிட்டு நீங்குவதாம். கடவுளாடற் கோளினர், (கிரீடாப் பிரமவாதி) மீளத் தோன்றுவது அறிவில் பொருளாகிய உடலுக்குப் பொருந்தும். அறிவுப் பொருளாகிய உயிருக்குப் பொருந்தாது. உயிர் மீளப் பிறப்பின் முற்செய்வினை ஈண்டைக்கு வருமெனக் கூறுவது பொருந்தும். உடம்பு நீங்கிய இடத்து உயிர் கடவுளுடன் சேர்ந்துவிடும்; சிறை நீங்கிய இடத்து யாற்றுநீர் கடலுடன் கலந்து விடுவதுபோன்று என்பர்.

மாறுதல் இறத்தல் என்னும் பொருள் குறிப்பது என்பதற்குச் சூத்திரத்தில் 'போக்கு வரவு புரிய' என்பதில் 'போக்கு' இறத்தலைக் குறிக்கிறது. ஏதுவில் 'தோற்றமும் ஈறும்' என்பதில 'ஈறு' இறத்தலைக் குறிக்கிறது. இவைகளே போதுமானவை ஆகும். மேலும் எடுத்துக்காட்டிலும் 'கெட்டு' என்னும் சொல் இறந்து என்னும் பொருளே பயக்கின்றது. அதுவும் அப்பொருளையே பயப்பதால் 'மாறுதல்' இறத்தலேயாம்.

### உயிரே மாறிப்பிறக்கும்

மாறிப்பிறப்பதென்பது, உடல்விட்டு மற்றோர் உடம்பில் தோன்றுவதே. அங்ஙனம் தோன்றுவது அழிவில்லாது என்றும் தொடர்ந்து வரும் உயிருக்கே பொருந்தும். அது வீடு மாறுதல், பள்ளிக்கூடம மாறுதல் என்னும் சொற்களில் குடியிருப்பாரும், கற்பாரும் மாறுவதன்றி வீடும் பள்ளிக்கூடமும் மாறுவன அல்ல என்பது விளக்கமல்லவா அதனால் உயிரே மாறிப் பிறக்கும். இஃது, ஆளுடைய அரசர்,

* "பிறப்பன் பிறந்தால் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோஎன்றென் உள்ளங் கிடந்து மறுகிடுமே."

என்று அருளுவதால் மாறிப் பிறப்பது உயிரே, உடல் அன்று.

சிவமாயைக் கோளினர் (சிவாத்துவிதிகள்) உயிரின் பொருட்டு மாறிப் பிறத்தல் சிவத்துக்கே என்பர். இவர்களுக்குத் துணை, குடாகாய உவமை. இறப்பு மெய்க்கு என்பது சாங்கியா கொள்கை. இவைகளும் பொருந்தா. உயிர்களே மாறிப் பிறக்கும். மாறிப்பிறக்கும் உரிமை, உயிர்களுக்கே உள்ளது. அதனால் 'உரிமை' என்பது அவாய்நிலையான் வந்தது.

### இலக்கணம்

'இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வரும்' என்பதில் ஆன்மாக்களே என்று இருத்தல் வேண்டும், உடலும் கடவுளும் அல்ல. அவ் ஏகாரம் பிரிநிலை. அது செயற்கை முறையால் தொக்கது. செயற்கை-

* பக்கம், எச.

விகாரம். 'உளதாதல்' என்னும் ஒருமை 'தோற்றம்' உளதாதல் எனவும், 'ஈறு' உளதாதல் எனவும் தனித்தனியே முடியும்.

## பருவுடல்

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் நுண்மை ஐந்தும், மனம், எழுச்சி, இறப்பு மூன்றும் கூடிய எட்டுங் கொண்டது நுண் உடலாம். இவ்வுடல் படைப்புக் காலந் தொடங்கிப் பேரொடுக்கக் காலம்வரை அழியாது நிலைபெறும். நுண்மை (தன்மாத்திரை) ஐந்தின் காரியமே பருவுடல். தொடக்கத் தோற்றத்தில் நுண் உடல் படைத்த நல்கி அதன் விளைவாகவே பருவுடல் நல்குகின்றனன் * நுண் உடலின் காரியமாதல் பற்றியே பருவுடல் ஐம்பருமை (பூதம்) மயம் எனப்பட்டது. ஆகவே பருவுடல் அழிந்தபின் புதிய பருவுடல் நுண்மையின் காரியமாய்த் தோன்றும்.†

## கண் செவி கெடல்

கண் செவி முதலிய உறுப்புக்களானுகிய உடம்பினைக் கண்செவி என்று ஏற்றிக் கூறினர். உயிர் உடம்பு நீங்கிப் போங்கால் முதற்கண் கெடுவன கண் செவி என்ப. அச்சிறப்பு நோக்கிக் கண் செவி கெட்டென்றார். வேட்கைக்குக் காரணம் காண்டலும் கேட்டலுமேயாம். கேட்ட பொருளையும் கண்டாலன்றி வேட்கை எழாது. ஆகவே கண்ணே சிறப்புடையது. பிறப்பினில் சிறப்பாங் கண் இறப்பினில் முதற்கண் கெடுதல் ஏற்புடைத்தே. இவ்வுண்மை புலப்படுத்தவே, ஆளுடைய அரசர் 'மையினுற் கண் எழுதி' என்கின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

> "ஐயினுல் மிடறடைப்புண்டு ஆக்கை விட்டு
> ஆவியார் போவதுமே அகத்தார் கூடி
> மையினுல் கண்ணெழுதி மாலை சூட்டி
> மயானத்தில் இடுவதன்முன் மதியம் சூடும்
> ஐயனுர்க்கு ஆளாகி அன்பு மிக்கு
> அகங்குழைந்து மெய்அரும்பி அடிகள் பாதம்
> கையினுல் தொழும்அடியார் நெஞ்சின் உள்ளே
> கன்றாப்பூர் நடுதறியைக் காணல் ஆமே."
>
> — சா. சூக — எ.

உள்ளது - எண்கூட்டுரு : நுண்உடல்

## பாரிய நுகர்வு

நுண்உடலே வேறோர் பருவுடல் தோன்றுவதற்கு வாயில் எனின், நுண்உடலே அமையும்; பருவுடல் எற்றுக்கெனின்? நுகர்வுப் பொருள்கள் பருமையாயின் பருவுடல் வேண்டும். இது, தேங்காய் தின்றற்குப் பருமையாய பல் வேண்டும்; தேங்காய்ப்பால் பருகுவதற்குப் பல் வேண்டுவதின்று; அது போன்றென்க. ஆவிகள் பருப்பொருள்களிலுள்ள பிழிவாகிய நுண்மையைப் பருகுமென்பதுங் காண்க. ஆவி நுண்உடலோடு இருப்பதால் அதற்குப் பாரிய நுகர்வு இன்று; நுண்ணிய நுகர்வே உள்ளது.

---

* பக்கம்—௭௭. † "பூரண" 'தூலமா' 'மாறிஇவ்' 'விதிப்படி' சித்தியார். உ. உ. ௩௬, ௪௭, ௪௧, 'சூக்கும' சித்தியார் ௪. உ. ௧0.

### மூவகை உடல்

இன்பத்துன்பம் விரவிய நுகர்வு, இன்ப நுகர்வு, துன்ப நுகர்வு என்னும் மூவகை நுகர்வுக்கு மூவகை உடல்கள் உள. அவை முறையே, பருஉடல், ஒளியுடல், இருளுடல் எனக் கூறலாம். இவற்றைப் பூதவுடல், பூதசார உடல், யாதனா உடல் எனவுங் கூறுவர்.

### அச்சுமாறித் தோன்றல்

நுண் உடல் வேறுபாடு இன்றி ஒன்றாயிருக்கப் பருவுடல் அச்சு மாறியே பிறக்கும். அதற்கு ஒப்பு, பொன்னால் ஆவது அணிகலம்; அப் பொன்னின் நின்றும் வடிவு மாற்றி அமைக்குங்கால் வேட்கைக்குத் தக்கவாறு வெவ்வேறு அணிகலம் ஆவதும் ஆகும். இவ்வுண்மை அருணந்திசிவ நாயனார் அருளியவாற்றானும் அறிக. அத்திருப்பாட்டு வருமாறு:

"மாறியிவ் வுருவம் எல்லாம் வருவதெங் கேயின் றென்னிற்
கூறிய சூக்கு மத்தாம் உருவென்னிற் குறியொன் றென்னின்
வேறொரு குறியாய் ஆரம வீரசங் கிலியும் ஆகும்
தேறுநீ ஒருவ னாலிச செயலெலாஞ் சிவனால் ஆகும்."

—சித்தியார். உ. உ. சஎ.

அச்சுமாறிப் பிறப்பதென்பது, ஆட்சித் துறையிலுள்ளார் ஆளுந் துறைகளுக்குத் தக்கவாறு பல்வேறு உடைகளைப் பூண்டு வருதலும், கோலங்கொண்டு கூத்தியற்றுவார் கோலத்துக்குத் தக்கவாறு பல்வேறு உடை உடுத்தலும் போன்றதாகும்.

ஆட்சி நடுத்தீர்ப்போ டாண்மை உலாமுதல
பூட்சியுடை அசசுமா றல்.

### நுண்மைகெடாது பருமைதோன்றல்

நுண் உடல் கெடாது நிற்கப் பருவுடல் தோன்றும். அது கால முதிர்ந்து மரம் கெட அம்மரத்தின் வேரின் நின்றும் பிறிதோர் மரம் வருவதை ஒக்கும். இஃது ஒருபுடை ஒப்பு. நுண் உடலின்கண் பரு வுடல் ஆதற்குரிய தன்மை தங்கியிருக்கிறது, பொன்னின்கண் பலவேறு அணிகலன் அமைப்பதற்குரிய தன்மை தங்கியிருப்பதுபோல. வேர் முன் உள்ள மரத்தினையே தரும். பொன் அப்படியன்று: பலவேறு வகை அணிகலன்களைத் தரும். அவ் ஒப்பே பொருந்திய ஒப்பு. அருள் நந்திசிவ நாயனார் திருப்பாட்டுக்கள் இதனை வலியுறுத்தும்:

"சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா சூக்கு மத்தின்
ஆக்கியோர் உடல்கி டப்ப தின்றுட லாக்குந் தன்மைக்கு
ஒக்கிய சத்தி உண்டாய் உடல்தருங் காலம் முற்றும்
நீக்கிட மரம்பின் வேரோர் நீண்மரம் நிகழ்த்து மாபோல்."

"விதிப்படி சூக்கு மத்தே உருவரும் வினையால் இங்கே
உதித்திடா உருவ மாக உருவரும் மரங்கள் வித்திற்
கதித்தெழு மரமும் வித்தும் கழியும்பின் அழியும் சூக்கம்
மதிக்கெழு கலைகள் போல வருவது போவ தாமே."

—சித்தியார். உ. உ - சஅ, சகூ.

**இலக்கணம்**

'இன்' உவம உருபு: இவ் 'இன்' 'கனவுணர்வின்' என்பதில் உள்ளது. 'நனவின்கண் கண்டவற்றைக் கனவுக் காணுங்காலத்து மறந்து அறிவு வேறு பட்டாற்போல என்பது பொருள் 'தான்' அசை. இது 'கனவுணர்வின் தான்' என்பதில் உள்ளது. இறுதியிலுள்ள 'தான்' அசை. மறத்தற்குச் செயப்படுபொருள் : 'முன்னை.........இன்னோரன்னவற்றை'. 'விண் படர்தல்' என்பது இனம்பற்றி நிரயம் படர்தலும் கொள்ளுதலாம். இனம் - உபலக்கணம்.

காரணத்தைக் காரியமாகக் கூறல்: காரியம் நுகர்தல் (அனுபவித்தல்). காரணம் 'படர்தல்.' படர்ந்தால் அன்றி நுகர்தல் கூடாது. எனவே படர்தல்மேல் நுகர்தலை ஏற்றிக்கூறினார்.

அத்தாடு - அன்(சாரியை) அதனாடு. அதனாடு பொருந்தி என் றிருத்தல் வேண்டும். அதனை வருவிப்பதால் சொல் எச்சம்.

'வினையினால்' ஆகுபெயர், எஞ்சுவினையின் எச்சத்தைக் குறிப்பதால் என்க.

**முவ்வேறுபாடு**

"உள்ளதே தோற்ற என்றதனால் உடல் வேறுபடுமாறும், விண் படர்ந்து என்றதனால் இடம் வேறுபடுமாறும், கண்ட நனவைக் கனவு உணர்வில் தான் மறந்து என்றதனால் அறிவு வேறுபடுமாறும்" என மூன்றும். இம் மூன்றும் உடல், இடம், அறிவு எனக்கொள்க.

> உடலே இடம்அறிவு வேறுபாடு உன்னில்
> கடன்உள்ள வினைமறந்து காண்.

**ஐந்தீ நினைப்பு**

இது, பஞ்சாக்கினி வித்தை எனப்படும். "உயிர் பருவுடல் நீங்கிய வழித் துறக்கமும், மேகமண்டலமும், நிலமும், தந்தையும், தாயும் என்னும் ஐந்து நிலைகளத்தும் வைகித் தோன்றுதலின், இவ் ஐந்திடமும் தீயாகவும், இவற்றின் எய்திய உயிர் அவியாகவும், இங்ஙனம் அழுந்தி நினைப்ப (தியானிப்பது) ஒரு பயிற்சியாம். இதன் விரிவை மெய் கண்டான் பேருரைக்கண் காண்க.

ஈண்டும் வித்து உயிருணவே. அது நிலத்தில் புகுமேல் பயிராம். வயிற்றில் புகுங்கால் மேற்கூறிய உயிர் ஏதாவதொரு வித்திற்கலந்து கரு வாம். இதனாலும் வித்துத் தீதில் உணவு என்பது வெளிப்படும்.

> சாலியாய்த் தோன்றச்செய் சார்தல்போல் ஆவிவித்தில்
> கோலும்ஐந் தீமுறைப்பால் கொள்ளுணவாய—ஏலும்வித்து
> எல்லாம் உயிர்அன்றும் என்றஒன் றேஉயிராம
> பல்லா றுணரின்வித் தாண்.

**வேறுபடாமை**

உயிர் மண்ணுலகிற் பிறக்குங்கால் முன் துறக்க நிரயங்களில் நுகர்ந்த நுகாவு அறிவினை மறக்கும். ஆனால், ஆண்டு நுகரும் காலத்து அறிவு வேறுபடாது செய்த வினையை மறவாது பயன் துய்க்கும்.

'அரவுதன்..............................அது.'

## பொருள் விளக்கம்

உயிர் பருஉடலை விட்டுப் போதற்கு ஒப்பு: அரவின் தோலுரிவு, கனவுடல், வேற்றுடல். அரவு புதிதொரு தோலைப் போர்த்துக்கொண்டு முன்னுள்ள தோலை நீக்கும். இது நாம் புதிய ஆடையைக் கட்டிக் கொண்டு பழைய ஆடையை அகற்றுவதையும், புத்தாடை புனைந்து ஈரக் கோவணம் நீக்குவதையும் ஒக்கும். இதுபோல் உயிரும் பரு நுண்உடல் (பூதசாரம்) பெற்று இப்பருவுடலை நீக்கும்.

**கனவுடல்:** நனவில் இருபத்து நான்கு மெய்களுடன் கூடிய பரு உடலில் நின்று உழைத்தலும், உண்டலும், உணர்தலும், உதவலும், உறங்கலும் செய்கின்றோம். கனவில் எட்டு மெய்களோடு கூடிய நுண் உடலில் உறங்கல் ஒழிந்த ஏனையவற்றைச் செய்கின்றோம். அதுபோல் துறக்க நிரயங்களுக்குரிய உடல்களை உயிர்பெற்று இப்பருவுடலை நீங்கும்.

**வேற்றுடல்:** திருமூலர் போன்ற தவத்தோர் அருள் காரணமாகத் தம் பருவுடலைவிட்டு நீங்கி வேறோர் பருவுடலிற் புகுவர். புக்கவர் மீட்டும் தம்முடம்பிற்கு வருவர். அதுபோல் உயிரும் பருவுடலை விட்டு நீங்கி வேறோர் பருவுடற்கு வரும்.

இம்மூவகை ஒப்பும் பருவுடல்விட்டுப் போமாற்றிற்கு என்க. நுண் உடல் விட்டுப் போமாற்றிற்கு ஒப்புக் குடஆகாயம், ஆகாயம் என்க. நுண் உடல் விட்டுப்போய் இறைவன் திருவடி சேரின் அவ்வுயிர் மீளப் பிறவாது. திருவடி சேராது பேரொடுக்கக் காலத்தும் இருப்பின் மீட்டும் முழுமுதல்வன் வினைக்கீடாக நுண் உடலும் பருவுடலும் படைத்தளிக்கப் பிறக்கும். இதுவேயன்றி இவ்வொப்பும் பருவுடலுக்கே எனின், நுண் உடல் போமாற்றிற்கு ஒப்பு யாது? வேறு ஒப்பு இன்மையால் இவ்வொப்பு நுண்உடற்கே யாம்.

அரவின்தோல் அக்கனு வேற்றுடல்போம் ஒப்பாம்
பருவுடல்ஆ காயநுண் மைப் பாங்கு.

## முதல்வனுக்கே யுரியது

உரையளவை, வழியளவைகளான் இறந்தவுயிர் மீளப் பிறக்கும் என வலியுறுத்தப்பட்டது. இறந்தவுயிர் கடவுள் அருளால் மீளப்பிறக்கும். அறிவுடைய உலகமும் அறிவில் உலகம் போன்று கடவுள் ஆணையை முதன்மையாகக் கொண்டு பேரொடுக்க முதல்வனின்நின்றே தோன்றும். 'சங்கார காரணன்' என்பது இயைபின்மை நீக்கிய அடைமொழி. ஐந்தொழில் நிகழ்த்துவோன் இறையே என்க. இதனால் சங்கார காரணத்து இறைக்கே உரியது ஐந்தொழில் செய்தல். அதுவே அவன் இலக்கணம்.

## இலக்கணம்

குளம்ஆம்பல் - குளாம்பல். மரம்அடி - மராடி. குடம்ஆகாயம் - குடாகாயம். இவை மரூஉ. இலக்கணமும் ஆகலாம்; எனனை?

"அகர ஆகாரம் வரூஉங் காலை
ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே.' —தொல். எழுத்து. நககக.

என்பது விதியாகலின்.

குடாகாய ஆகாயக் கூத்தாட்டு என்பது குடாகாயம் ஆகாயம் போல்வதோர் கூத்தாட்டு. இஃது உவமத் தொகை.

குடாகாய ஆகாயமும் கூத்தாட்டும் எனின் உம்மைத் தொகையாம். கூத்தாட்டு - கோலங் கொண்டாடும் கூத்து.

## குடாகாய ஒப்பு

ஆகாயம் வெளி. எனவே வெளி ஒப்பு எனப்படும். இவ்வொப்பு உயிர் நுண்உடல் விட்டு இறை திருவடியைக் கூடி மீட்சியின்றி இருப்பதற் குரிய ஒப்பு. அவ்வளவே அன்றிப் பொருள் ஒன்றென்பதற்கு அன்று.

பொருள் ஒன்றென்பார் குடத்தகத்து வெளியும் புறத்து வெளியும் ஒன்றேபோல் உயிரும் இறையும் ஒன்றென்பர். ஆனால் இரண்டிடத்தும் உள்ளது ஒன்றாயிருப்பதால் வெளி என்ற பெயரே வருகின்றது. உயிரும் இறையும் தனித்தனி வெவ்வேறாதலால் நீரும் பாலும் போல் இரு வேறு பெயர்கள் நேர்ந்து வழங்குகின்றன. பாலும் நீரும் கலந்தால் நீர் பால் தன்மை எய்தி ஒன்றாயிருக்கும். நீர் அறிவில் பொருளாதலால் பாற் பயனைத் துய்க்காது. ஆனால் உயிர் அறிவுப் பொருள் ஆதலால் இறைவன் பயனைத் துய்க்கும்.

உடம்பு அறிவில் பொருள் ஆதலால் ஆசான் அறிவுறுக்கும் அரு மறை முதலியவற்றை ஆருயிர் துய்க்கக் கருவியாகும் *இக்கருவி பாற் கலனை ஒக்கும். கலன் வாயிலாகப் பாலை நாமே பருகுவோம். கலன் பருகாது. பாலும் தன்னைத் தானே பருகாது.

வெளி இரண்டும் ஒன்றாவது இறை ஒன்றே உள்ளது என்பதற்கு ஒப்பாயின், இடையே குடம் எப்படி வந்தது? அதனை வனைந்தவர் யார்? எதன்பொருட்டு வனையப்பட்டது? எல்லாம் இறையே எனின் சிறு மகாரும் எள்ளி நகையாடற்குரிய முறையில் பேச்சாம்.

கொள்குடத்தின் உள்புறமும் கூறும் வெளிஒன்றே
விள்ளுமுயிர் மெய்யிறைவெவ் வேறு.

## மாறில் இன்பு

முழுமுதல்வன் திருவடியைத் தலைப்பட்ட ஆவிகள் மீண்டுவாரா. வேறறக் கலந்து மாறிலா இன்பம் துய்த்து மன்னும். இவ்வுண்மை வரும் ஆளுடைய அரசர் திருப்பாட்டான் உணர்க.

“முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.” —சா. ௨௫ - ௭.

---

* 'உடம்பார்' ௧௦. திருமூ. ௭௨௪.

## நான்காம் அதிகரணம்

**இனி நீக்கமின்றி நிற்றும் அன்றே என்றது.**

எ - து. மே - ள். எ - னின். அங்ஙனம் புனருற்பவமாதற்கு ஏதுவாய் இருவினைகளைச் செலுத்தி நிற்பதெனப் போந்த ஆணை எனப்படுஞ் சத்தியாவது முதல்வனின் வேறோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண் பொருட்குச் சத்தி வேறென்னும் மீமாஞ்சகர் முதலியோர் மதமும், அன்றென்னும் நையாயிகர் முதலியோர் மதமும் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ - ள்.) முதல்வன் தனதாணையாகிய சிற்சத்தியோடு சமவேதமாய் நிற்பன் (எ - று).

அன்னியயோக வியவச்சேதம் அயோக வியவச்சேதம் என்றற்றொடக்கத்து வடசொற்கள் பிறிதினியைபு நீக்குதல் இயைபின்மை நீக்குதல் என்றற்றொடக்கத்தனவாக மொழிபெயர்த்து வழங்கப்படுமாறு போலச் சமவாய என்னும் வடமொழி தமிழின்கண் நீக்கமின்றி நிற்றலென மொழிபெயர்த்து வழங்கப்படும் என்றுணர்க. வடமொழி இரண்டாஞ் சூத்திரத்து இறுதியின் ஆணை முதல்வனோடு சமவேதமாய் நிற்குமென ஆணை மேல் வைத்தோதியதனை ஈண்டு முதல்வன்மேல் வைத்தோதினார். கண்ணழிப்புழி இருவினை முதல்வனாணையின் வருமெனக் கூறிப் போந்த ஆணை ஈண்டுக் கூறுமையே இனிது விளங்குமென்னுங் கருத்தாற் சொற்பல்காமைப் பொருட்டு அதனை ஒழித்து எடுத்துக் கொள்ளப்பட்டது. இப்பொருள் காணமாட்டாதார் சருவவியாபியாய் நிற்றலாலென்னும் ஏதுவின் பொருளே மேற்கோளுக்கும் பொருளாகக் கொண்டுரைப்ப. அது கூறியது கூறலாதலுமன்றி மொழிபெயர்த்தல் யாப்பிற்கு ஏலாமையும் அறிக. ஈண்டுச் சமவாயமென்றது தாதான்மிய சம்பந்தத்தை. அஃதாவது பொருளான் ஒன்றேயாயும ஒரு வாற்றாற் பேதமாதற்கு உரிமை யுடைமை.

**அவன் ஏகாநேகமிரண்டு மின்றிச் சருவவியாபியாய் நிற்றலான்**

எ - து. ஏது. எ - னின். அதற்குப் பிரமாணமென்னை என்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அம்முதல்வன் ஒன்றெ வேறே என்னும் இரு தன்மையுமின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் எங்கணும்

வியாபியாய் நிற்றலான் இனி ஆணையின் நீக்கமின்றி நிற்கும் அன்றே என மேற்கொண்டது (எ - று).

அவிநாபாவம் உணர்த்துவார் ஏகாநேகம் இரண்டும் இன்றி யென மேற்கோளிற் போந்த பொருளை அநுவதித்துச் சருவவியாபியாய் நிற்றலானென ஏதுக்கூறினார். சருவவியாபியாய்நிற்றல் அவையே தானேஆய் என்னும் அதிகரணத்தால் சாதிக்கப் பட்டமையின் அதனை ஈண்டேதுவாக வைத்து ஆணையின்நீக்க மின்றி நிற்கும் என்னு மேற்கோளைச் சாதித்தவாறு.

* எங்குமுளன் என்றளவை ஒன்றன்று இரண்டேன்னில்
எங்கும் உளன்அன்று எவற்றேவனும்—அங்கண்
அவைஅவன் அன்றில்லைப் பொன்ஒளிபோல் ஈசன்
அவைஉடைமை ஆளாம்நாம் அங்கு.

எ - று உ - ம். எ - னின் ஏதுவும் மேற்கோளுந் தம்முள் அவிநாபாவம் ஆமாறு யாங்ஙன மென்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ - ள்.) எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று யாங்கணும் அவையேதானே என (மேற்கூறிய) அளவையானே (முதல்வன்) ஒரு பொருளாதல் கூடாது (ஒன்றாயிற் கங்கைக் கரையில் நின்ற ஒரு மானுடனே காவிரிக் கரையினும் ஒருங்கு நிற்க மாட்டான். அது போல, ஒரு பொருள் ஓரிடத்துளதாதலன்றி யாங்கணும் வியாபித்து நிற்கமாட்டாதென்பதாம்.) இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று-அற்றேல், முதல்வன் இருபொருளாய் நிற்குமெனக் கோடுமெனின், யாங்கணும் அவையே தானே ஆய் உளனுதல் கூடாது. (தன் மாட்டே வேற்றுமையுடையானுக்குப் பிறபொருள்களின்கண் வேற்றுமை இன்றி வியாபித்து நிற்றல் சாலாது என்பதாம். அற்றேல், இவ்விரண்டோடு முரணுதலின் எங்கும் உளன் அல்லனெனக் கோடுமெனின்) எவற்று எவனும் அங்கண் அவை அவன் அன்று இல்லை - எவ்விடங்களினுள்ள எத்திறப் பொருளுமாகிய அவ்விடத்து அவைகளெல்லாம் (அகரவுயிரின்றேல் அக்கரங்களில்லையா மாறு போல) அம்முதல்வனை இன்றியமையா ஆகலான் (எங்கு முளனல்லனென்றல் பொருந்தாது. ஆகலான் எங்கு முளனல்லனென்றல் பொருந்தா தென்பது குறிப்பெச்சம். அற்றேல் வேறு விடுக்குமாறென்னை யெனின்) 'ஈசன் பொன் ஒளிபோல் - எங்கு முளனாகிய முதல்வன் ஞாயிறும் ஒளியும்

* 'மொய்தரு' 'சிவஞ்சத்தி' 'சததியாய்' 'சத்திதான்'
—சித்தியார், உ. ச. எங - கூ.

போல (ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் தாதான்மியத்தாற் சிவமுஞ் சத்தியு மென்றியைந்து நிற்கும். அற்றேல், பசு பாசங்களும் வியாபகமெனக் கோடலின் அவையும் இம்முறைமை பற்றி ஏகாநேகமிரண்டும் இன்றி முதல்வன் போலத் தத்தஞ்சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனோடு சமமாவான் செல்லுமெனின்), அவை உடைமை (ஆம்) நாம் ஆள் ஆம் அங்கு-(அவ்வாறாயினும் முதல்வனது வியாபகத்தை நோக்கி வியாப்பிய மாகலின்) அப்பாசங்கள் உடைமையாம்; பசுக்களாகிய நாம், அடிமையாவேம் அம்முதல்வன் மாட்டு (எ - று).

அன்றெனப் பாடம் ஓதுவாருமுளர்.

பாசங்கள் உடைமையாமாறும் பசுக்கள் அடிமையாமாறும் 'தாரகமாம் அத்தன் தாள் நிற்றல்' எ-ம், 'அதனின் ஈறலாஒன்று பலவாறே தொழும்பாகும்' எ - ம், மேற்பெறப்பட்டமையின், அவற்றை ஈண்டு எடுத்துக்காட்டி ஆசங்கை நீக்கியவாறு.

என்ற என்னும் பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கது, "புகழ்புரிந்த"* என்புழிப்போல. அளவையான் என ஆனுருபு விரித்துரைக்க.

ஒன்றன்று உளன் அன்று என்புழி ஒன்று உளன் என்னுந் தருமிவாசகங்கள் ஆகுபெயரால் அத்தருமங்களின்மேல்நின்றன ஆகலான் உளன்என்பதும் அஃறிணை ஒருமையோடு முடிந்தது.

அன்மை கூடாமைப் பொருட்டு.

எவற்றெவனும் என்பது ஏழாம் வேற்றுமைத் தொகை. அஃறிணைக்கண்வரும் எவனென்னும் வினாவினைக் குறிப்புச்சொல் ஈண்டுப் பெயர்த்தன்மைப்பட்டு எவனும் என எஞ்சாப் பொருண்மையுணர்த்தி நின்றது.

அன்றி என்னும் வினையெச்சம் செய்யுளாகலின் அன்று† எனத் திரிந்தது.

இன்மை ஈண்டு அமையாமைப் பொருட்டு.

பொன் ஆகுபெயர்.

ஆம் என்பது உடைமையோடும் இயையும்.

பொன்னொளிபோல் ஈசனென்பது தொகையுவமமாகலிற் பொதுவியல்பு விரித்துரைக்கப் பட்டது.

---

* திருக்குறள், ௫௯. † திருக்குறள், ௧௩.

இவ்வதிகரணத்தால் போந்த தொகைப்பொருள், முதல்வன் வியாபகனாதலின் வியாபகப் பொருட்கு ஒன்றாய் நிற்றல் கூடாது; அது கூடாமை பற்றி இரண்டாய் நிற்பனெனின் வியாபகனாதல் கூடாது: வியாபியல்லனெனின் பசுபாசங்கள் அவனை இன்றி அமைதல் கூடாது; ஆதலான் முதல்வன் ஒருவனே ஞாயிறும் ஒளியும் போலச் சிவமுஞ் சத்தியுமெனத் தாதான்மியத்தால் இருதிறப்பட்டுச் சருவவியாபியாய்ப் பொதுமையினிற்பனெனச் சமவேதமாய் நிற்குமாறு தெளிவிக்கு முகத்தானே தாதான்மியசத்தி உண்மைக்குப் பிரமாணங் கூறியவாறும் என்றுணர்க. அஃதாமாறு,—தன்னை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதூஉம் தானேயாகிய ஞாயிறு ஒன்று தானே விடயங்களை விளக்குழிக் கதிரெனவும் தன்னை விளக்குழிக் கதிரோனெனவும் தாதான்மியத்தால் இருதிறப்பட்டியைந்து நிற்றல் போல, புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய்த் தன் இயல்பினிற்பதூஉம் புறப்பொருளை நோக்கிநின்றுணர்த்துவதூஉமாகிய இரு தன்மையை யுடைய பேரறிவாய சைதன்னியம்ஒன்றே அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையிற் சத்தியெனவும் புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கும் நிலையிற் சிவமெனவுந் தாதான்மியத்தால் இருதிறப்பட்டியைந்து நிற்கும் எனவுணர்க.

இனித் தீயின் சத்தியொன்றுதானே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தி யென்றற்றொடக்கத்துப் பலவேறு வகைப்படுமாறுபோல, சிவசத்தியொன்றே காரியவேறுபாட்டால் பரை ஆதி இச்சை ஞானம் கிரியை யென்று ஐவகைச் சத்திகளாயும், முறையே ஐந்தும் நான்கும் எட்டும் பதின்மூன்றும் எட்டுமாகிய கூறுபாடுடைய ஈசானி முதலிய ஐவகைச் சத்திகளாயும், ஆரணி செனனி முதலிய மூவகைச் சத்திகளாயும், நிவிர்த்தி பிரதிட்டை முதலிய ஐவகைச் சத்திகளாயும், வாமை சேட்டை முதலிய அட்டசத்திகளாயும், பரவாகீசுவரி அபரவாகீசுவரி மனோன்மனி மகேசை உமை திரு வாணியென எழுவகைச் சிவபேதங்கட்கும் முறையே எழுவகைச் சத்திகளாயும், அத்தியான்மிக மெனப்படும் உன்மனை சமனை முதலிய கலைகளாயும், இன்னும் பலவேறு வகைப்பட்டு நிற்கும். அவ்வச் சத்திகளோடு புணர்ந்த சிவமும் அவ்வாறே பலவகைப் பெயர் பெற்று நிற்கும். அவ்வச் சத்திகட்கு இடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறு வகையான் விருத்திப்பட்டு அப்பெயர் பெறும். இவற்றினியல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

## விளக்கம்

***அறிவாற்றலும் ஐந்தொழிற்புரியாது**

பேரொடுக்கப் பெரும்பொருளாகிய முதல்வனே ஐந்தொழிற்கும் வினைமுதலாவன் எனச் சிறப்புவகையான் இலக்கணத்தை வலியுறுத்தினர், என்னை? "மூன்றும் கூற்றில் உயிர்கள் முன்னை அச்சுமாறி மீளப் பிறந்து இவ்வாறே வரும் என்றதனால் ஒடுங்கின சங்காரத்தின் அல்லது உற்பத்தியில்லை யாகலின்." அப்பொழுது இருவினை அதிகரணத்தின் முதல்வன் ஆணையான் இருவினை வரும் என்றதனுன் அவ் ஆணையும் ஐந்தொழில் புரியும என்பது பெறப்பட்டது. படவே ஆணையாகிய திருவருளும் முதல்வியாகான் செல்லுதலின், ஐந்தொழில் செய்தல் சங்காரகாரணனாகிய முதல்வனுக்கே உரிய சிறப்பிலக்கணம் என்பது எங்ஙனம் பொருந்தும் எனபது ஐயம்? அவ்வையத்தை நீக்கு முகத்தானே முதல்வனுக்குரிய அறிவாற்றலாகிய துணைக்காரணம உண்டென்பதற்கு அளவை கூறுவது இந்நான்காங் கூறு.

இஃது பிறிதின் கிழமைப் பொருளாம் கருவியாலும், தற்கிழமைப் பொருளாம் கையாலும் ஆவிமருவினலன்றி எழுத ஒண்ணு. எனவே எழுதும் முதன்மை ஆவிக்கே : இவற்றிற்கு அன்று. அதுபோல் பிறிதின் கிழமைப் பொருளாம் இருவினையாலும், தற்கிழமைப் பொருளாம் ஆணையாலும் ஐந்தொழில் புரிய ஒண்ணு, ஆவிபோன்ற முழுமுதல்வன் இவற்ருேடு மருவினல் அல்லாமல். எனவே ஐந்தொழில் முதன்மை முழுமுதல்வனுக்கே.

கருவியும் கையும் எழுதாகாண் ஆவி
மருவினும் அவ்வே முதல்.

இவ்வுண்மை புலப்படவே திருமுறைக்கண் முழுமுதல்வனேடு சார்த்தியன்றித் திருவருளாம் அம்மையையும், திருவருளின் கூறும் பிள்ளையார் முருகன் முதலாயினரையும் தனித்துப் பாடாமை; ஓர்ந்துணர்க. இஃது ஆளுடைய அரசர் அருளியவாற்ருன் அறிக. அத்திருப்பாட்டு வருமாறு :

"**செல்வியைப் பாகங்** கொண்டார் **சேந்தனை மகனைக்** கொண்டார்
மல்லிகைக் கண்ணி யோடு மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியைக் கரையி லாத காஞ்சிமா நகர்தன் உள்ளால்
எல்லியை விளங்க நின்ருர் இலங்குமேல் தளிய னரே."

—ச. சங—அ.

ஆண்டான் அறிவாகும் ஆற்றல் அருளாணை
வேண்டின்பம் சேர்தனும் மேவு.

தமிழகப் பண்பும் இதுவே. அது புறநானூறு, ௩-ஆவது பாட்டில் (உவவுமதி) வரி ஆறில் 'செயிரதீர் கற்பிற்† **சேயிழை கணவ**' எனச் சார்த்திப் பாடப்பெற்றிருப்பதால் விளங்கும்.

'எங்குமுளன்........................அங்கு.'

---

* 'மூத்தவனும்' (கடுகூ) கூ. சுசு—க.

† 'பாடாண்' தொல். பொருள்—அ௦. நச்சி. உரை.

## வடமொழி ஒவ்வாமை

மெய்கண்டார் முதல்வன் தனது ஆணையாகிய அறிவாற்றலோடு* நீக்கமின்றி நிற்பன் என்றருளினர். இச் சிறப்பறியாது முறையும் மரபும் குறைய வடமொழியில் ஆணை முதல்வனோடு நீக்கமின்றி நிற்கும் என மொழி பெயர்த்தனர். நீக்கமின்றி நிற்றலைச் சமவாயம் என்பர். நீக்கமின்றி நிற்கும் முதன்மை தாங்கும் பொருளுக்கே அன்றித் தாங்கப்படும் பொருளுக்கு அன்று. எடுத்துக் காட்டாக உடல் கையைத் தாங்குகின்றது. அதனால் உடல் கையுடன் நீக்கமின்றி நிற்கும். அதுபோல் கை உடலிடம் எங்கணும் நீக்கமின்றி நில்லாது. இஃது ஒருபுடை ஒப்பு. முதன்மை முதல்வனுக்கே அன்றி ஆற்றலுக்கு அன்று. ஆதலால் மெய்கண்டார் அருளியதே விழுமியது

மேலும் ஆசான் மாணுக்கரோடு நீக்கமின்றி நிற்பன். மாணுக்கர் ஆசானுடன் நீக்கமின்றி நிற்பரோ? நீக்கமின்றி நிற்றல் இயைந்து இயக்கல். ஏவி இயக்கல் அன்று. இயக்கப்படும் பொருட்கு இயக்கும் பொருள் முதன்மை உடைத்தென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது ஒன்று. அங்ஙனமாயின் மாணவரை இயக்கும் ஆசான் போன்று முதல்வனே ஆணையை இயக்கும்.

இங்ஙனமெல்லாம் இருப்பவும் தனித் தமிழ்ச் சிவஞானபோத மெய்கண்டார் அருளிய முழுமுதல் நூலினைப் பார்த்துக் காலமயக்கால் மதுகையில்லார் வடமொழியில் மொழிபெயர்த்த சிவஞான போதத்தை முதனூல் எனக்கூறிப் பாராட்டுவது எங்ஙனம் பொருந்தும்? ஆசிரியர் சிவஞான முனிவரனூர்க்கும் இதுவே திருவுள்ளம். ஆயினும் இடத்தாலும் காலத்தாலும் உய்த்துணரவைப்பதன்றி வெளிப்படக் கூற ஒண்ணுமையை ஓர்ந்து ஆங்காங்கே மொழிபெயர்த்தல் யாப்பான் செய்தலான் முரணுது என்று அமைவு கூறிப் போந்தவர், ஆறும் நூற்பாவில் அமைவுகூற ஒண்ணுது முரணும் எனவும், வடமொழிச் சூத்திரம் பிழைபாடுடையதெனவும், வலுவில்லதெனவும், தனித் தமிழ்ச் சூத்திரமே பிழையில்லதும் வலுவுள்ளதுமாம் எனவும் வலியுறுத்தி யருளினர். ஆண்டுக் காண்க.

> நீக்கமின்றி நிற்றல் இயைந்தியக்கும் நீர்மையாம்
> ஆக்குமுதல் ஆணையுடன் ஆம்.

## தாதான்மியம்

வடசொற்களைத் தமிழ்ப்படுத்தி ஆளும் தமிழ் நன்மக்கள் தனிப்பண்பு யாண்டும் கடைப்பிடித் தொழுகற்குரியது. பிற்காலத்தோர் அவ்வரம்பினை யழித்து நிரம்ப வடசொல்லைப் புகுத்தித் தமக்கும் மொழிக்கும் நாட்டுக்கும் கேடு சூழ்ந்தனர். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னுள்ள திருமுருகாற்றுப்படையில் ஆசிரியர் நக்கீரனர் 'சாம்பு நதம்' என்னும் வடசொல்லைத் தூய தமிழ்ச் சொல்லில் 'நாவலொடு பெயரிய பொலம்' என்றருளினர். என்றும் அவ்வாறே நற்றமிழ் மாந்தர் நடாத்துதல் வேண்டும்.

**சமவாயம்** என்னும் வடசொல் **நீக்கமின்றி நிற்றல்** என வழங்கப்படும். முதல்வன் ஆணையாகிய அறிவாற்றலுடன நீக்கமின்றி நிற்கும் பொருளாவன். நீக்கமின்றி நிற்கும்பொருள்-**சமவேதம்**

நீக்கமின்றி நிற்றல் - சமவாயம். நீக்கமின்றி நிற்பது - சமவேதம்.

* '[illegible]' [illegible]

ஈண்டுச் சமவாயம் என்றது தாதான்மியத் தொடர்பை. தொடர்பு சம்பந்தம். தாதான்மியமாவது பொருளான் ஒன்றேயாயினும் ஒருவாற்ருன் வேறுபடற்கு உரிமையுடைமை. ஒரு பொருள் வேற்றுமை தாதான்மியம்; இருபொருள் ஒற்றுமை அத்துவிதம். இவற்றிற்கு ஒப்பு முறையே முதல்வனும் முதல்வியும், ஆவியும் ஆண்டானும் என்ப. இவ்விருவகைத் தொடர்பும் தாதான்மியமே.

**தாதான்மியம்** என்னும் சொல்லியல்பு '**அதுதானுதல்**'.

ஒன்றே பொருளாய் ஒருவாற்ருன் வேறுபட
நின்றதுதா **தான்மியமாம்** நேயத்தால்—பொன்றலிலா
வேருெம் பொருளிரண்டு வேறன்மை யாய்ஒன்ருெம்
மாருமெய் **அத்துவிதம்** மற்று.

## எங்குமுளன்

எங்கும் நிறைந்தவன். இதனைச் சருவவியாபி எனவும் கூறுப. ஆண்டவன் ஒன்றும் வேறும் இன்றிப் பொதுமையில் நிற்பன். இந் நிலையே எங்கும் உளன் என்னும் நிலை. இதுவே சருவ வியாபகம்.

"முதல்வன் தனது அறிவாற்றலோடு வேறும் ஒன்றும் இன்றிப் பொதுமையில் நிற்பன், எங்கும் நிறைந்தவன் ஆகலான்; யாது யாது நிறைவாய் நிற்கும், அது அது ஒன்ருதலும இரண்டாதலும் இன்றி அவ் இரண்டற்கும் பொதுமையில் நிற்கும்; தன் எல்லை அளவும் நிறைவாய் நிற்கும் ஞாயிறு தன் கதிர்களோடு அவ்வாறு நிற்றல் போலும்" என உடம்பாட்டு முகத்தானும், "யாது யாது அங்ஙனம் பொதுமையில் நிற்ப தன்று அது அது நிறைவாய் நிற்பதும அன்று; குடம்போலும்" என எதிர்மறை முகத்தாலும் கூறிக் கண்டுகொள்க.

## நீக்கமின்றி நிற்பன்

நீக்கமின்றி நிற்பன் என்பதும் சருவவியாபியாய் நிற்கும் என்பதும் ஒன்றே. ஏகாநேகம் இரண்டும் இன்மை பொதுமை. இதுவே நீக்கமின்றி நிற்பது. ஏகாநேகம் இரண்டுமின்றி என்பது விட்டு நீங்காது உடன் நிகழுந்தன்மை எனப்படும். அதனை அவினுபாவம் எனவும் கூறுவர்.

சருவ வியாபியாய் நிற்றல்: இது சூத்திரத்து முதல் அதிகரணத்து நிலை நிறுத்தப்பட்டது. நிலைநிறுத்தல் சாதித்தல். எங்கணும் நிறைவது அருளாற்றலின் செயல். இது ஞாயிற்றின் கதிர் எங்கணும் நிறைவதை ஒக்கும். எனவே முதல்வன் ஆணையில் நீக்கமின்றி நிற்பன். இது ஞாயிறு தன் கதிரில் நீக்கமின்றி நிற்பதை ஒக்கும். இம்முறையானும் முதல்வன் ஆணையோடு நீக்கமின்றி நிற்பன் என்பதே ஏற்புடைத்தாகும்; வலியுமுறும். ஆணை முதல்வனேடு நீக்கமின்றி நிற்கும் (வட) என்பது பொருந்தாது.

## வழிமொழிதல்

முன்கூறியதொன்றனைப் பின்னும் ஒரு பயன் நோக்கி எடுத்துக் கூறின் அது வழிமொழிதல் எனப்படும். மேற்கோளில் 'நீக்கமின்றி

கிற்கும்' என்பதும், எதுவில் 'ஏகாநேகம் இரண்டுமின்றி' என்பதும் ஒன்றே. இதனை உணர்த்தவே வழிமொழிந்தனர். வழிமொழிதல் - அனுவதித்தல்.

## ஒழிபு

"அற்றேல், இவ்வதிகரணம் இருவினை முதல்வன் ஆணையின் (கடுரு) வரும் என்னும் அதிகரணத்தைச் சாரவையாது போக்கு வரவு அதிகரணத்தின் பின் வைத்தல் முறையன்றுலெனின், அங்ஙனமாயினும், அவையே தானேஆய் என்பது அவனவள் அதுஎனும்அவை மூ வினைமையின், தோற்றிய திதியே என்றதனுற் குறித்துணரப்படும் சற்காரிய வாதத்தின் ஒழிபு; போக்குவரவு புரிய என்பது ஒடுங்கி மலத்துளதாம் என்றதன் ஒழிபு; ஆணையின் நீக்கமின்றி நிற்கும் என்றது எய்தியது ஒருமருங்கு மறுப்பதாகிய அந்தம் ஆதி என்றதன் ஒழிபாம் என்பதூஉம் உணர்ந்து கோடற்கு இம்முறை வைத்தார் என்க. அவை அவற்றின் ஒழிபாதல் ஈண்டு உரைத்தவாறு பற்றி உணர்ந்துகொள்க."

## உடைமை

அறிவுள்ளன அறிவில்லனவாகிய எல்லாம் ஆண்டவன் உடைமை. அதனாலேயே அவன் உடையான்* எனப்பட்டான். இவற்றுள் அறிவுள்ளன அடிமை எனப்படும். அறிவில்லன உடைமை எனப்படும். அறிவுள்ளன ஆவிகள். அறிவில்லன மாயை கன்மங்கள். மாயை கன்மங்கள் உடைமையாம் என்பது 'தாரகமாம் அத்தன்தாள் நிற்றல்' (சடு) என்பதனுல் பெறப்படும். ஆவிகள் அடிமை யாமாறு 'அதனின் ஈறலா ஒன்றுபல, வாறே தொழும்பாகும்' (நிகூ) என்பதனுல் பெறப்படும். இவ் எடுத்துக்காட்டால் ஐயம் அகற்றப்பட்டது. ஆளுடைய அடிகளும் முதல்வனை உடையவன் என அருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

"கடையவ னேனைக் கருணையி னுற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின்தோல்
உடையவ னேமன் னும் உத்தர கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேன்எம் பிரான்என்னைத் தாங்கிக்கொள்ளே."

—அ. நீத்தல் - க.

ஆவிகள் அடிமை என்பது ஆளுடைய அரசர் அருளியவாற்றான் உணர்க. அத்திருப்பாட்டு வருமாறு:

"மறப்பித்த வாவல்ல நோய்வினை காட்டி மறப்பித்தநோய்
துறப்பித்த வாதுக்க நோய்வினை தீர்ப்பான் உகந்தருளி
இறப்பித்த வாறடி யேனை யுடையாறன் அடிமைக்குளே
சிறப்பித்த வாதொண்ட னேனைத்தன் பொன்னடிக் கீழெனையே."

ச. கூக - அ.

ஆன்றஅறி வுள்ள அடிமையாம் இல்லனவே
தோன்றுடைமை இஃதாக்க மாய்த்தோன்றும்—என்ற
அடிமைக் குதவியாம் ஆண்டான்தாள் சேர்தல்
அடிமைத் தனிச்சிறப்பாம் அங்கு.

---

* 'சடையானே' அ. திருப்—உ.

### சமமாவான்செல்லா

முதல்வன் தன் ஆற்றலுடன் ஒன்றுதலும் வேறுதலும் இன்றிப் பொதுமையாய் இயைந்து நிற்பன். இதுபோல், உயிரும் தளையும் பரப்பு (வியாபகம) எனப்படுதலின் அவை தத்தம் ஆற்றல்களோடு பொதுமை (தாதான்மியம்) யாய் நிற்கும் என்பது பெறப்படும். படவே அவையும் முதல்வனொடு சமமாவான் செல்லுமோ? என்பது ஐயம். இவைகள் பரப்புள்ளனவேனும் முதல்வனது பரப்பை நோக்க முறையே கூடும் நிறைவும், கொள் நிறைவுமாய் அடங்கும். அங்ஙனம் அடங்கும் முறைமைதான் மேல் 'உடைமை * என்னும் தலைப்பில் விளக்கப்பட்டது. இவ் விளக்கத்தால் இவ் ஐயம் அகற்றப்பட்டது. அஃது, உயிரும் தளையும் முதல்வனோடு சமமாவான் செல்லா என்பதே. பரப்பு - வியாபகம்.

### தருமி

**தருமம்** என்பது தன்மை; **தருமி** என்பது தன்மையை உடையது. குணம் குணி என்பனவும், பண்பு பண்பி என்பனவும் இத்தகையவே. ஒன்றன்று, உளன் அன்று என்பதன்கண் ஒன்று அன்று என்னும் அஃறிணை முடிபும், உளன் அன்று என்னும் அஃறிணை முடிபும் முதல்வன் என்னும் எழுவாய்க்குப் பொருந்தா. ஒன்றும் உளனும் முதல்வனின் பண்புகள். எனவே அவை தருமி வாசகங்கள் எனப்பட்டன. அவை பண்பின் மேல் - தருமத்தின் மேல் நிற்பின் பொருந்தும். அப்படி நிற்குங்கால் 'ஒன்றுதல் அன்று' 'உளனுதல் அன்று' என முடியும்.

### இலக்கணம்

அன்மை கூடாமைப்பொருட்டு. இஃது ஒன்றன்று உளன் அன்று என்பதன்கண் உள்ள அன்மை, ஒன்றல்லன் உளன் அல்லன் என்று பொருள் குறிக்கவில்லை. அவ்வாறு இருக்கமுடியாது என்னும் பொருள் குறித்து நின்றது.

எவற்று எவனும் என்றதன்கண், எவற்று என்பது எவ் இடங்களினுள்ள என்று வருதலால் ஏழாம் வேற்றுமைத் தொகை. இடம ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு.

பொன் ஆகுபெயராக ஞாயிற்றைக் குறிப்பது என்பது பொன் போன்ற ஞாயிறு எனப் பொருள்படும்.

பொன் ஒளிபோல் ஈசன் இவற்றில் பொன் ஒளி ஒப்பு. ஈசன் பொருள். ஒப்பை உவமை (உவமானம்) என்பர்.

பொருளை உவமேயம் என்பர். இவ் இரண்டன்கண்ணுமுள்ள பொதுத்தன்மை பிரிக்கமுடியாமை. இது தொக்கு நின்றது.

### பொதுமையின் நிற்றல்

"ஒரு பொருளே அதுதானுதல் என்னும் தாதான்மியத்தான் இரு திறப்பட்டுப் பொதுமையில் நிற்றல் யாங்ஙனமெனின், அஃதாமாறு விளங்க உணர்த்துதும் : தன்னை விளக்குவதூஉம் பொருள்களை விளக்குவதூஉம் தானே ஆகிய ஞாயிறு ஒன்றுதானே பொருள்களை விளக்குழிக்

* பக்கம், கருள.

கதிரெனவும், தன்னை விளக்குழிக் கதிரோன் எனவும் தாதான்மியத்தால் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும்."

"அதுபோலப் புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பில் நிற்பதூஉம், புறப்பொருளை நோக்கி நின்று உணர்த்துவதூஉம் ஆகிய இரண்டியல்புடைய பேரறிவாகிய கடவுள் (சைதன்னியம்) ஒன்றே அங்ஙனம் புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையில் ஆணை - ஆற்றல் (சத்தி) எனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் அவாவாது நிற்கும் நிலையிற் சிவமெனவும் பொதுமை (தாதான்மியம்) யான் இருதிறப்பட்டு இயைந்து குண குணியாய் நிற்கும்."

## தீர்த்தவன்

ஆவிகள் பண்டே புல்லிய மல நோயுடன் கிடந்தமையைத் தண் அருளால் விடுவித்துத் தாள் நிழல் சேர்த்து இன்புறுத்துக் கருதிய விழுமிய முழுமுதல்வன் முப்பொருள்களுள் முதன்மையானவன். அவன் உண்மையை உலகின்கண் காணப்படும் முத்தொழிலில் வைத்து முதற் சூத்திரத்து வழிஅளவையான் வலியுறுத்தினர். அவனுக்குத் துணைக்காரணம் ஆணையும், வினையும் ஆகும். பொருள் முதற்காரணம் மாயை. இவை ஈண்டுக் கூறப்பட்டன. இவ் உண்மைகளை உள் அடக்கி ஆளுடைய 'அரசு கூறும் திருப்பாட்டு' வருமாறு:

"மூத்தவனாய் உலகுக்கு முந்தி னானே
முறைமையால் எல்லாம் படைக்கின் றானே
ஏத்தவனாய் ஏழுலகும் ஆயி னானே
இன்பனாய்த் துன்பங் களைகின் றானே
காத்தவனாய் எல்லாந்தான் காண்கின் றானே
கடுவினையேன் தீவினையைக் கண்டு போகத்
**தீர்த்தவனே** திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் அபயம் நானே."

—௬. ௪௪ - ௧.

## கருத்து

ஆண்டவன் அருளால் மீண்டும் உலகுள.

## முதுமொழி

மீண்டும் படைப்புருள வேண்டும் துணைக்கருவி
காண்டும்அருள் கன்மம் கழலருள—ஈண்டும்
"இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி அவர்க்கு." —திருக்குறள், ௩௫௨

---

*

## மூன்றும் சூத்திரம்

உளதிலது என்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

**எ - து. சூ - ம். எனின். ஆன்மப்பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று.**

*எ - து. க - ரை. எ - னின். சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ - ள்.) மேல் அவையேதானே யென்றெடுத்துக்கொள்ளப்பட்ட உயிர் சூனியமுதலியவற்றுள் ஒன்றாகற்பாற்றெனை அவ்வமதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்து உயிர் அவற்றிற்கு வேறாய் உண்டென்பது கருதலளவையான் விளக்கி மேலைச் சூத்திரத்தின் உயிர்கண்மேல் வைத்தோதிய முதல்வனதிலக்கணத்தை வலியுறுத்துதல் மூன்றாஞ் சூத்திரத்தின் கருத்து (எ - று).

முதன்மையுடைமைபற்றி உலகிற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருளுண்டென்பது முதற்சூத்திரத்துட் கூறி, காரணமாதற்பொதுமையான் இயைபுடைமைநோக்கித் துணைக்காரண முதற்காரணங்களது உண்மையும் அவற்றான் உலகங் காரியப்படுமாறும் இரண்டாஞ்சூத்திரத்துட்கூறி அவற்றானையபயன் கோடற்குரிய பசுக்களதுண்மைக்குப் பிரமாணம் ஈண்டுக் கூறுகின்றாரென்றுணர்க. இதனானே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. இலதென்றன்முதலிய அறுவகை ஏதுக்களானும் மாயா இயந்திர தனுவென்னும் பெயரடையாற்பெறப்படும் குறிப்பேதுவானும் இவற்றின்வேறாய் இவ்வுடம்பினுள் உயிரெனப் படுவதொன்றுண்டு (எ - று).

இது பூட்டுவிற்பொருள்கோள்.

உளதென்றது சாதியொருமை. அறிதலினென்றது ஐம்புலனோடுஞ் சென்றியையும்.

*தனுவினுளான்மா உளதென்றாரேனும்,* காணப்பட்ட உடம்பாற் காணப்படாத உயிருக்குண்மை கூறவேண்டுதலின் இவ்வுடம்பு சூனியமுதலியவற்றின் வேறாய ஆன்மாவையுடைத்தென உடம்பின்மேல் வைத்தோதுதல் ஆசிரியர் கருத்து.

அற்றாகலினன்றே பதியுண்மை உலகின்மேல் வைத்தோதியதூஉ மென்பது.

ஈண்டு மேற்கோள் ஒன்றாயினும் எழுவகை மதங்களை வேறு வேறு மறுக்கும் ஏதுக்கள் ஏழாகலான் ஆன்மாவுளதென்னும் மேற்கோள் அவற்றொடு தனித்தனி சென்றியைதலின் ஏழதிகரணத்ததாயிற்று இச்சூத்திரமென்றுணர்க. இதனுட் கூறிய ஏதுவே ஏதுவும் மேற்கோளும் அதுவேயாகலான் ஏனைச்சூத்திரங்களுட்போல வேறேதுக் கூறவேண்டாமையின், இவை ஏதுவாமாறும் இவற்றான் மேற்கோளைச் சாதிக்குமாறும் இனிது விளக்கி வலியுறுத்துதன்மாத்திரையே ஈண்டுரைக்கப் படுவதெனக் கொள்க.

## விளக்கம்

### வழி அளவை

இச்சூத்திரத்தின்கண் ஆவியின் நிலை வழிஅளவையான் உணர்த்தப் படுகின்றது. தமிழகப் பண்பாட்டின்படி மெய்கண்ட நாயனார் தாம் உணர்த்த எடுத்துக்கொண்ட இறை, உயிர், தளை என்ற மூன்று பொருள் களையும் வழியளவையான் உளங்கொள உணர்த்தி வலியுறுத்தி அருளு கின்றனர்.

முதற் சூத்திரத்தில் இறை உண்மையை உலகின்மேல் வைத்து வழி அளவையான் உணர்த்துகின்றனர். உலகிற்கு மூவினைமை உடைத்து என்பதை வலியுறுத்து முறைமையான் உலகிற்கு வினைமுதற்காரணம் —பொருட்டுக்காரணம்—நிமித்த காரணம் எனப்படும் பொருள் முழு முதல்வன் என்று வழி அளவையான் வலியுறுத்தினர். உலகிற்கு முதற் காரணம் மாயை. முதற் காரணம் எனினும் பொருள்முதற்காரணம் எனினும் ஒன்றே.

> காணுக் கடவுளுயிர் காண்டற் குலகுடல்நாள்
> ஏணும் வழியளவை என்று.

### முதன்மை

முழுமுதல்வன் எல்லாவற்றிற்கும் முதன்மையானவன். ஆனது பற்றி அவன் உண்மையை முதற் சூத்திரத்துக் கூறியருளினர். அதுவும் வழியளவையான் அவன் வினைமுதற்காரணன் (நிமித்த காரணன்) என்று வலியுறுத்தினர். வினைமுதற்காரணன் பெறப்பட வேண்டு மெனின் துணைக்காரணமும், பொருண்முதற் காரணமும் (முதற்காரணம்) வலியுறுத்தப்படல் வேண்டும். துணைக்காரணம் ஆணையும் அதன் வழித் தாய இருவினையும் ஆகும். பொருள்முதற்காரணம் மாயை. மாயையின் காரியங்கள் உடல் உலகு உணபொருள்கள். இவற்றைப்பற்றி இரண் டாம் சூத்திரத்து வலியுறுத்தினர்.

இறைவன் செய்தருளும் ஐந்தொழிற் பயனை ஆரத்துய்க்கும் வாரமும், உரிமையும், முறைமையும், கடமையும் உடைய ஆருயிர்களைப்பற்றி இம் மூன்றாம் சூத்திரத்துக் கூறுகின்றார். இதனால் சூத்திரஇயைபு இனிது புலப்படும்.

"**அவையே தானேஆய்** என மேலைச் சூத்திரத்தில் எடுத்துக் கொண்ட ஆன்மாக்கள் பாழ முதலியவற்றின் வேறாய் உளவென வழியளவையான் விளக்கி, **ஆன்மாக்கள் பலவும் முதல்வன் தானேஆய் நிற்கும்** எனவும், **ஆன்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும்** எனவும், **ஆன்மாக்கள் மாறிப் பிறந்து வரச்செய்யும்** எனவும், **ஆன்மாக்களுக்குப் புறப்பொருளை உணர்த்துவதாகிய நீக்கமின்றி நிற்கும்** (தாதான்மியம்) **சத்தியுடையன்** எனவும் ஆனமாக்களின்மேல்வைத்து மேற்கூறிய முதல்வன் இலககணத்தை வலியுறுத்துதல் இவ்இயலி (ஓத்து)ன் மூன்றாம் பாதமாகிய மூன்றாஞ் சூத்திரத்தின் கருத்தென்பதாம்." (மெய் - பேருரை)

முன்னோன் வினைமுதல் மூப்பில்துணை ஆணைவினை
நன்மாயை துய்ப்பாவி நாடு.

## இயைபு

முதற் சூத்திரம் : வினைமுதற் காரணம் முழுமுதல்வன்.

இரண்டாம் சூத்திரம் : துணைக்காரணம் ஆணை, ஆணைவழித்தாய இருவினை. முதற் காரணம் மாயை.

மூன்றாஞ் சூத்திரம் : பயன் துய்க்கும் ஆருயிர்கள்.

'உளதிலது..............ஆன்மா.'

(பொ - ரை.) இவ் உடம்பினகத்துக் காணப்படும் உயிர் பாழ் முதலிய அறுவகை ஏதுக்களானும், மாயா இயந்திர தனு என்ற குறிப்பேதுவானும் இவற்றிற்கு வேறாய் உள்ளது.

'பூட்டுவிற் பொருள் கோள்' வில்லின் இரண்டு நுனியும் சேர்ந்து நாணுக்கு இருப்பிடமாவதுபோல் இச்சூத்திரத்தின் முதற்கண் "உளது" என்பதும் முடிவில் **ஆன்மா** என்பதும் சேர்ந்து எழுவகைக்கும் வேறாய் ஆன்மா உளது என்று முடிகிறது. அதனால் இது பூட்டு விற் பொருள் கோள்.*

" எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக் குடையது பூட்டுவில் ஆகும்." —நன். சகரு.

" இலதென்றலின், எனதுடல் என்றலின், ஐம்புலன் **அறிதலின்**, **ஒடுக்கம்** அறிதலின், உண்டி வினை (கண்படில்) இன்மையின், உணர்த்த **உணர்**தலின், மாயா இயந்திர தனு என்றலின்" என எழுவகை ஏதுக்களானும் ஆவி வேறுண்டு என்று வலியுறுத்தும் சூத்திரத்து "ஐம்புலன் ஒடுக்கம் **அறிதலின்**" என்றிருப்பது ஐம்புலனோடும் சென்றியையும் என்பதாம்.

உளதென்றது சாதியொருமை—சாதி யொருமையாவது : "ஒரு சொல் ஒருமையீறு தோன்ற நின்றும் தோன்றாது நின்றும் பின் ஒருமைப் பன்மை வினையீறாக மேல்வந்து முடிக்கும் சொற்களும் இன்றித் தானே பன்மைப் பொருளுணர்த்துவது."

* 'நிரல்நிறை.' தொல். சொல்-சமசு.

"ஈறு தோன்றிய சாதி ஒருமையும்
ஈறு தோன்றாத சாதி ஒருமையும்
எனஇரு திறப்படும் இருதிணை மருங்கினும்."

ஈறு தோன்றிய சாதி ஒருமை: 'பொறுத்தான்'.
" " 'அஞ்சுவது'.

"அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
**பொறுத்தானேடு** ஊர்ந்தான் இடை," — திருக்குறள், ௩௭.

"**அஞ்சுவது** அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்." — திருக்குறள், சஉஅ.

ஈறு தோன்றாத சாதி ஒருமை: '**தெய்வம்**'
" " '**குணம்**'

"தென்புலத்தார் **தெய்வம்** விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை." — திருக்குறள், சங.

"**குணம்** என்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது." — திருக்குறள், உக.

ஈண்டு 'ஆன்மா உளது' என்பதன்கண் ஆன்மாக்கள் என்று பெறப் படுவதால் சாதி ஒருமை. இஃது ஈறு தோன்றிய சாதி ஒருமை.

எழுவகைக் கொள்கைகளையும் மறுத்து உயிர் உண்டு என நாட்டப் படுகிறது. அவ் எழுவகைக் கொள்கைகளையும் மறுக்க எடுத்துக்கொண்ட ஏதுக்கள் ஏழு. ஆனால் மேற்கோள் ஒன்றே அஃது, **ஆன்மா உளது** என்பது. இம் மேற்கோள் ஒவ்வொரு ஏதுககளோடும் தனித்தனி சென்று பொருந்தும். ஆதலால், மேற்கோள் ஒன்றாயினும் ஏதுக்கள் ஏழாவதுபற்றி அதிகரணங்கள் ஏழாயின.

---

## முதல் அதிகரணம்

**ஈண்டு இலதென்றலின் ஆன்மா உளதென்றது.**

எ - து. மே - ள். எ-னின். சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமூகான்மவாதி என்னும்எண்மருள் அந்தக்கரணான்மவாதிகள் ஆன்மாவின திலக்கணங்கூறும்வழி அநுவாதமுகத்தான் மறுக்கப்படுதலின் அவரையொழித்து, ஒழிந்த எழுவர்மதங்களையும் முறையே மறுத்து உயிருண்மை சாதிப்பான்றொடங்கி, அவற்றுள் இது சூனியமே ஆன்மாவென மாத்துமிகர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடால்நுதலிற்று. இ - ள். வெ-டை.

ஆன்மாஇலதென்றலினென வருவித்துரைக்க.

**எவற்றினையும் அன்றன்றெனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பது உள தாகலின் அதுவே அவ்ஆன்மாவாம் என்றது.**

*எ - து. பொ - ரை. எ-னின் ஆன்மா இலதென்றலேபற்றி அஃதுண்டெனக் கோடல் முயற்கோடில்லையென்னும் ஏதுவால் அஃதுண்டெனச் சாதித்தலோடொக்கும் என்னுங் கடாவை ஆசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதனுதலிற்று.*

*(இ - ள்.) ஆன்மா இலதென்னுஞ் சூனியான்மவாதிகளும் இல்லையென வாளாகூறுதலமையாமையின் உடல் பொறிவிடயம் அனைத்தினையும் முறையானே இஃதான்மாஅன்று இஃதான்மா அன்றென ஒரோவொன்றாகக் கழித்து இவ்வாறாகலின் ஆன்மா என்பது சூனியமென்று அங்ஙனங் கூறுபவாகலான் அவற்றை ஒரோவொன்றாக விட்டு அங்ஙனங் கூறிக்கொண்டு நிற்பதோர் அறிவுண்மையின் அவ்வறிவே மேல் அவையே தானேஆய் என்பதனுள் ஆகமஅளவையாற் சாதித்துப் போந்த ஆன்மா என்றவாறும். ஈண்டிலதென்றலின் ஆன்மா வுளதென மேற்கொண்டது (எ - று).*

*அங்ஙனம் அறியும்அறிவுஞ் சூனியமேயெனின், அஃது என்னை ஈன்றாள் மலடியென்பதனோடு ஒக்குமென்றொழிக வென்பது கருத்து.*

*இன்மை ஈண்டுச் சூனியப்பொருட்டு, சூனியமாவது உள்ளதுமன்று இல்லதுமன்று இரண்டுமாவதுமன்று வேறுமன்றெனப்படும் பாழ்.*

*ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.*

*அன்றன்று எனநின்று அனைத்தும்விட்டு அஞ்சேழுத்தாய்
நின்றேன்று உளதது வே நீயனைத்தும்—நின்றின்று
தர்ப்பணம்போல் காட்டலால் சார்மாயை நீஅல்லை
தற்பரமும் அல்லை தனி.

*எ-து. உ-ம். எ-னின். அவ்அறிவை உடல் பொறி விடய முதலியவற்றின் வேறாகப்பிரித்துக் காணுமாறும் அதுவே உயிராமாறுந் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துத னுதலிற்று.*

*(இ - ள்.) அனைத்தும் நின்று-உடல் பொறி விடய முதலிய அனைத்தினும் அது அது தானாகி நின்று, அன்று அன்று என விட்டு-முறையானே இது நான் அன்று இது நான் அன்று என ஒரோஒன்றாகக் கண்டு நீக்கியவழி, அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளது-அவ்விடத்து அகாரமுதலிய சூக்குமபஞ்சாக்கர ரூபமாய் அறிந்துவந்ததோர் அறிவு நிலைபெற்றுளதன்றே, அதுவே*

* 'அவ்வுடன்' சித்தியார். ச. க ௫.

நீ--(அதுவுநானன்றெனக் கழிப்பின் அங்ஙனங் கழித்த வுணர்வு வேறுண்டெனப்பட்டு மேலும் வரம்பின்றியோடுமாகலிற் சூக்குமபஞ்சாக்கரரூபமாய் நின்றறிந்து வந்த) அவ்வறிவு தானே நீ யென்பதறிவாயாக. (அற்றேல், மாயேயமுஞ் சிவமும் உள வென்பது மேலைச்சூத்திரங்களாற் சாதிக்கப்பட்டமையின் அவையே அவ்வறிவினையும் அறிந்து நீக்குமெனஅமையுமாகலான் வரம்பின்றியோடுமா றில்லையாலெனின்;) சார்மாயை—நின்னால் சாரப்பட்டமாயை, அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம்போல் காட்டலான் நீ அல்லை—நிலமுதலிய காரியம் அனைத்துமாய் நின்னொடு விரவி நின்று இப்பெத்தகாலத்துக் கண்ணுக்குக் கண்ணாடிபோல் உனக்கறிவை விளக்கி நிற்றன் மாத்திரையேயன்றி அறிவதன்றாகலான் நீ அம்மாயையல்லை, தற்பரமும் அல்லை—மாயையான் விளங்கியறியும் நீ அதற்கு அதீதமாகிய சிவமுமல்லை, தனி—அவற்றின்வேறு (எ - று).

விட்டவழியென்பது விட்டெனத் திரிந்துநின்றது.

அவ்அறிவாவது இஃது என்றுணர்த்துவார் அன்றன்றென நின்றனைத்தும் விட்டவழியென ஏதுப்பொருளை அநுவதித்து அஞ்செழுத்தாய் ஒன்று நின்றுளதென அடையாளங் கூறினார். அஞ்செழுத்தாய் நின்றறியுமாறு வருகின்ற சூத்திரத்துட் பெறப்படும். இதற்குப் பிறரெல்லாங் கூறியது கூறலென்னும் வழுப்பட மேலுமோரியைபின்றி உரைத்தார்.

அனைத்தும்நின்று என்புழி முன்னர்க் கண்ணுரும் பின்னர் ஆக்கச்சொல்லுந் தந்துரைக்க ஏகாரந் தேற்றம். தற்பரம் என்றது குறிப்பேதுவாய் நின்றபெயர்.

அனைத்தும் நின்றின்று தர்ப்பணம்போல் காட்டலால் சார் மாயை நீ அல்லை தற்பரமும் அல்லை தனி என்றதனானே வருகின்ற அதிகரணங்களுக்கெல்லாந் தோற்றுவாய் செய்தவாறும் ஆயிற்று.

## விளக்கம்

நெறிமுறைபற்றி உலகிடைத் தோன்றும் ஐயங்கள் அனைத்தும் எண் பெருங்கோளில் அடங்கும். அவை **பாழ், உடல், புலன் உட்கலன், நுண்உடல், உயிர்மூச்சு, முதல்வன், கூட்டம்** என்ப. இவை முறையே "சூனியம், தேகம், இந்திரியம், அந்தக்கரணம், சூக்குமதேகம், பிராணன்மா, பிரமான்மா, சமூகான்மாவாதி கொள்கை எனக் கூறப்படும்.

> பாழே உடல்புலன் பற்றுகலன் நுண்மூச்சு
> சூழ்முதலோ டாம்குழுவெண் கோள்.

நுண் - நுண்உடல்.

இவ் எண்மருள் உடலனே உயிர் என்னும் கொள்கையர் நான்காம் சூத்திரத்து உயிரியல்பு கூறும் வழி "அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று" என வழிமொழிதலான் மறுக்கப்படுகின்றனர். ஏனை எழுவரும் ஈண்டுக் கூறப்படும் எழு கூறு (அதிகரணம்)களானும் முறையே மறுக்கப் படுகின்றனர்.

இம் முதற்கூற்றின்கண் பாழ்ங்கோளர் (சூனியான்மவாதியர்) கொள்கை மறுக்கப்படுகின்றது. இக்கொள்கை நால்வகைப் புத்தருள் ஒருசாராருடையது அவர்கள் மாத்துமிகர் எனக் கூறப்படுவர். அவர்கள் முயலுக்குக் கொம்பு இல்லையென்று சொல்லுகின்றோம்; அப்படிச் சொல்லுகின்ற அச்சொல்லாலேயே உண்டென நிலைநாட்டத் துணிவது எப்படிப் பொருந்தும்? என ஐயங்கொள்வர்.

இல்லை என்று வாளா கூறுது உடல் உயிர் அன்று; பொறிபுலன்கள் உயிர் அன்று; ஏனையவும் உயிர் அன்று என ஒவ்வொன்றனையும் சுட்டிக்கொண்டே சொல்லுவர். அவை எல்லாம் பொருந்தும். ஆயினும் அங்ஙனம் உயிர் அன்று எனக்கூறும் அறிவு ஒன்று உண்டல்லவா? அதுவே உயிர் எனக் கொள்ளப்படும். அதுவும் அன்று எனக் கூறின், அஃது ஒருவன் தன்னை ஈன்றாள் மலடி என்று கூறுவானுனல் அஃது எல்லாராலும் எள்ளி நகையாடப்படும் அல்லவா? மலடி என்பதன் பொருள் பிள்ளை இல்லாதவள். இவனொரு பிள்ளையிருந்துகொண்டு தன் தாய் மலடி என்று சொன்னுல் என்செய்வது? இதனை ஒக்கும்.

ஒருவன் வழிப்போக்கன் ஒருவனைக்கண்டு கூப்பிடுகின்றான். அவனும் வருகின்றான். கூப்பிட்டவன் வந்தவனைப் பார்த்து 'நான் குருடன் அல்லவா?' என்று கேட்டால் எவ்வளவு பொருந்தும? அவ்வளவே உயிர் இல்லை என்று கூறுபவன் கூற்றும்.

> கண்டழைக்க வந்தவன்பால் கண்டாய்யான் கண்ணிலேன்
> விண்டதுமெய் யாமே விளம்பு.

இரண்டாம் சூத்திரத்தில் 'அவையே தானே ஆய்' என்பதனுள் உயிர் உண்டு எனக் கூறப்பட்டது அஃது உரை அளவை. என்னை? உயிர் உண்மையை வழிஅளவையான் நிலைநாட்டாது ஆண்டவன் மீள உலகைப் படைக்குங்கால் அவ் உயிர்களோடு பிரிப்பின்றி நின்று படைப்பன் எனக் கூறியதனுல் என்க.

'அதுவே' என்பதிலுள்ள 'ஏ'காரம் பாழைப் பிரித்தமையின் பிரிநிலை ஆயிற்று.

'அன்றன்று..............................தனி.'

**அன்று**

உயிர் ஒவ்வொன்றோடும் ஒட்டிநின்று இது நான் அல்லை என்று சொல்லிக்கொண்டு சென்று முடிவில் ஒன்றுமில்லை என்கின்றது. ஆனுல் இவ்வாறு சொல்லும் பொருளே உயிரென உணர்தல் வேண்டும். இவ் உணராமை எதுபோல் என்றால் கற்கும் மாணவன் கற்பதற்குக் கருவியாகிய சுவடி கல்லூரி முதலியவற்றை இவை மாணவன் அல்லை எனக் கூறித் தன்னை மாணவன் எனக்கூற மறந்தமைபோல் என்க. மேலும் ஆற்றில் நீந்திக் கரை ஏறிய பதின்மருள் ஒவ்வொருவரும் தன்னை ஒழித்து எண்ணி ஒன்பதின்மர் காணப்பட ஒருவர் ஆற்றில் அமிழ்ந்தனர் என்று துணிந்து அல்லலுற்று அழுங்கியதும ஆகும்.

அன்று என்பது அல்லை என்பதே. விரவி நிற்கும் பொருள் வேறாக நிற்கும் நிலைமையில் அல்லை அல்லை என்று சுட்டிக் கூறுவது ஒவ்வும். அம்முறையில் முழுமுதல்வன் கலந்துநிற்கும் பொருளுக்கு வேறு என்று உணர்த்த ஆளுடைய அரசர், 'அல்லை' என்னும் சொல்லால் அருளுகின்றார். அத்திருப்பாட்டு வருமாறு:

" மண்ணல்லை விண்ணல்லை வலயம் அல்லை
மலையல்லை கடல்அல்லை வாயு அல்லை
எண்ணல்லை எழுத்தல்லை எரியும் அல்லை
இரவல்லை பகலல்லை யாவும் அல்லை
பெண்ணல்லை ஆணல்லை பேடும் அல்லை
பிறிதல்லை ஆனாயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை அல்லை
உணர்வரிய ஒற்றியூர் உடைய கோவே."

—சு. சுஒ - க.

**அனைத்தும் நின்று**

'அனைத்தும் நின்று' என்பது இரண்டிடத்தில் வந்துள்ளது. முதலில் 'உடல் பொறி அனைத்தினும்' இவற்றை உயிர் நிற்கும் இடமாகக் குறிப்பதால் '**கண்**' உருபு விரித்துப் பொருள் கூறப்பட்டது. அனைத்தினிடத்தும்—அனைத்தின் கண்ணும் என்க.

இரண்டாவது (மாயை) 'அனைத்தும் நின்று' அனைத்துமாய் நின்று என்று கருவியாகக் குறிப்பதால் '**ஆய்**' என்னும் ஆக்கச்சொல் வருவிக்கப்பட்டது.

மாயா காரியம் ஒன்றே இடமும் கருவியுமாய் இருப்பதற்கு ஒப்புப் பலகணிப்படியில் இருந்துகொண்டே ஒருவர் புறத்துப் பார்ப்பதை ஒக்கும். பலகணி இருக்கை நல்கலால் இடமும், பார்க்கத் துணைபுரிவதால் கருவியும் ஆகின்றதன்றோ?

பார்க்க இடங்கருவிப் பண்பாம் பலகணிபோல்
ஓர்கமருட் காரியமும் உற்று. மருள் - மாயை.

'அதுவே நீ' என்றதன்கண் உள்ள 'ஏ'காரம் தேற்றம். இத்தேற்றத்தால் பிற அல்ல என்னும் ஐயம் அகற்றப்பட்டது. ஏகாரம் ஐவகைப்படும். அது,

"தேற்றம் வினவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்ஐந்து ஏகா ரம்மே." —தொல். சொல்-உருஎ

என்னும் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய நூற்பாவான் உணரப்படும்.

**தற்பரம்**

தனக்கு மேலாய் "உணர்ந்தார்க்கு உணர்வரியோனாய்" "மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்" ஆகிய சிவன் தற்பரம் ஆவன். தன் - ஆவி. பரம் - மேலானது.

இது, குறிப்பு ஏதுவாய் நின்றது.

**"சார்மாயை நீஅல்லை, தற்பரமும் அல்லை தனி"** என்னும் வாய்மை* ஆளுடைய அடிகள் திருப்பாட்டானும் உணர்க. அது வருமாறு:

"சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
கண்இணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குஉன்
மணிவார்த்தை க்காக்கி ஐம்புலன்கள் ஆர
வந்தனை ஆள் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனைசெந் தாமரைக்காடு அனைய மேனித்
**தனிச்சுடரே இரண்டுமிலித் தனிய னேற்கே."**
—அ. திருச் - உ௬.

இரண்டும் இலி - இரண்டும் இல்லாத. இரண்டு - மாயை, கடவுள்.

## தோற்றுவாய்

"அனைத்தும் நின்று தர்ப்பணம் போல் காட்டலால் சார்மாயை நீ அல்லை" என்பது உ, ௩, ௪, ௫-ஆம் கூறுகட்குத் தோற்றுவாய் ஆகும். 'தற்பரமும் அல்லை' என்பது ௬-ம் கூற்றுக்குத் தோற்றுவாய். 'தனி' என்பது எ-ம் கூற்றுக்குத் தோற்றுவாய்.

மாயைசார் மூன்றுநான் கைந்துதற்ப ரம்ஆறும்
எய்தனிஏ ழின்தோற்று வாய்.

## கோள்

தன்கோள் ஆவி பாழின் வேறு. பிறர்கோள் பாழ் என்பது. ஐயம் பாழோ வேறோ ஆவி பாழன்று. வேறு என்பதே வலியுறுத்தப் பட்டது.

---

# இரண்டாம் அதிகரணம்

**இனி எனது உடல் என்றலின் ஆன்மாஉளது என்றது.**

எ - து. மே - ள். எ-னின். அவ்வறிவு உடம்பின்கணன்றி நிகழக் காணாமையானும் நான் நுணுகினேன் பருத்தேன் என உடம்பினையே நானென்று வழங்கக் காண்டலானும் உடம்பே ஆன்மா எனத் தேகான்மவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித் துச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ-ள். வெ-டை.

நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப் பான் என உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயி ருக்கு ஏற்றி வழங்கினும் யான்உடம்பு யான்கை யான்கால் என உடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி எனதென வேற்றுமைப்

---

* 'யாவையும்' மெய். எ-ம் சூத்திரம்.

படவே யாவரும் வழங்கக் காண்டலின் அதுவே உயிர்வேறுண் டென்பதனை அறிவுறுக்கும் என அவன் வழங்கும் உரையே பற்றி அவனை மறுத்தவாறு.

**என்பதி என்மனை என்றற்போல என்கை என்காலென நிற்பதுள தாதலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

எ - து. பொ - ரை. எ-னின். எனதுடல் என்பது பிறி தின் கிழமைப்பொருள்படாது தலைமாத்திரையாய் நிற்குமிரா குவை இராகுவினது தலையென்று வழங்குமாறுபோல அபேதம் பற்றியே வழங்கப்படுமென அமையுமென்னுங் கடாவை ஆசங் கித்து அதன் தாற்பரிய முணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இராகுவினது தலையென்றாற்போல்வன சிறு பான்மை வழக்கமாகலின் ஆண்டொற்றுமைப்பொருள் கோட லமையும். ஈண்டவ்வாறன்றி என்பதி என்மனைவி என்பொருள். என்று வழங்குமாறுபோல என்கை என்கால் என்கண் என் செவி என்பொறி என்பிராணன் என்னறிவெனப் பலவாற் றானும் பெரும்பாலும் உலகத்து வழங்கக் காண்டலின் இவ்வழக்க மிகுதிப்பாடு பிறிதின்கிழமைப் பொருட்கணன்றி வாராமை யான் அங்ஙனங் கூறிக்கொண்டு நிற்கும் பொருள் வேறொன்று உண்டென்பது பெறப்படுதலின் அதுவே மேலுரையளவை பற்றிச் சாதித்த ஆன்மா என்றவாறும். எனது உடலென்றலின் ஆன்மாவுளதென மேற்கொண்டது (எ - று).

*எனதுஎன்ற மாட்டின் எனதலாது என்றது
உனதலாது உன்கைகால் யாக்கை—யெனதென்றும்
என்னறிவது என்றும் உரைத்துநீ நிற்றிகாண்
உன்னிலவை வேறாம் உணர்.

எ - து. உ - ம். எ-னின். பதி மனைவிமுதலிய பொருள்கள் தம்மின் வேறாதல் கண்டு பிறிதின்கிழமைப்பொருள்பட என தென்றாற்போலன்றிக் கை கால் முதலியவற்றைத் தற்கிழமைப் பொருள்பட எனதென்று கூறிநிற்றலின் அவ்விருவேறுமொழி யுந் தம்முளொக்குமா றென்னையென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எனது அலாது என்றது எனது என்றமாட் டின்—(நீ உலோகாயதநூல் கேட்குமுன்னெல்லாம் பதி மனைவி முதலிய புறப்பொருள்களையே உயிரெனக்கொண்டு மயங்கி நின்றாயன்றே, அக்காலத்து அவற்றை) எனதன்றென வேறு

---

* 'உடலின்வே' சித்தியார். ரு-உ.

காணாது தனித்தனி எனதென்றே தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல, உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண்—உனதன்றாகிய உன் கை கால் யாக்கைகளைத் தனித் தனி எனதென்றும் அங்ஙனம் அறிந்த பாசஅறிவை என்னறிவது என்றுந் தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு நீ ஒருபொருள் வேறு நிற்கின்றாய்காண், உன்னில்—(உலோகாயதநூல் ஆராய்ந்தபின்னர்ப் பதி மனைவி முதலிய பொருள்கள் உனக்கு வேறாதல் கண்டாற்போலக் கை கால் முதலியவற்றினியல்புகளையும் ஏதுக்கள் முதலியவற்றான்) ஆராய்ந்து பார்த்தியாயின், அவை வேறாம் உணர்—அக் கை கால் முதலியன உனக்கு அன்னியமாம் அதனை அறிவாயாக (எ - று).

இன் உவமவுருபு.

உனதலாதென்பதனைக் கை கால் யாக்கைகளோடு தனித் தனி கூட்டுக.

## விளக்கம்

'எனதென்ற.................................உணர்.'

**உடம்பு ஆவி அன்று**

முதற்கூற்றில் உடல், பொறி, உலகியற்பொருள் ஒவ்வொன்றனையும் தனித்தனி சுட்டி இஃது ஆவி அன்று, இஃது ஆவி அன்று எனக்கூறிக் கொண்டே வந்து முடிவில் ஒன்றும் இல்லாத பாழே ஆவி என்று கூறினர் பிறர். அக்கூற்றைத் தக்க காரணங்காட்டி மறுத்தனர். மறுக்கவே இக்கூற்றில் உடலே ஆவி என உரைப்பாராயினர். அங்ஙனம் உரைப்பவர் உலகாயதர்.

இவர்கள் உலகாயத நூல் கேட்பதற்குமுன் மனைவி, மக்கள், மாடு, வீடு முதலியவற்றையே தம் உயிர் எனக் கருதினர். அவைகள் ஊழால் நீங்கப்பெறின் உயிரிழந்தேம் என ஓலமிட்டு உழந்து உலைவர். உலகாயத நூல் கேட்டபின் தம் உடலையே உயிரெனறனர். உலகாயத நூலும் உயிர்களை ஒருபடி உயர்த்துவதால் வேண்டப்படுவதாயிற்று. அம்முறை பற்றியே "வேதமுதல் உலகாயத நூல் இறுதியாகிய எல்லா நெறியும் பரமசிவனாற் செய்யப்பட்டமையின் பிரமாணமாம்" என்பர் பேருரையாசிரியர்.

**'எனது உடல்'** என்று வேற்றுமைபடக் கூறுவதால் உடலுக்கு வேறாய் உயிர் உண்டு. இக்கூற்று இராகுவினது தலை என்பதுபோல ஒற்றுமைபற்றிக் கூறப்பட்டதென்பது பிறர் கொள்கை. இக் கொள்கையுடையார் உடற்கோளினர். இவர்களே 'தேகான்மவாதியர்'. இராகு என்பது தலை மட்டும் உள்ள பொருள். அதற்கு உடல் கிடையாது. அப்படிக்கிருந்தும் உடலுள்ள பொருள்போல் இராகுவினது தலை என்பர். இஃது ஒற்றுமை நயத்தால் கூறப்படுவது. அதுபோலவே உடலை

அன்றி வேறு உயிர் இல்லாதிருந்தும் எனது உடல் என்று கூறப்படுகிறது.

மேலும், "நான் வளர்ந்தேன், மெலிந்தேன், பருத்தேன், சிறுத்தேன், கரியேன், மனிதன், பார்ப்பான்" எனக் கூறுவதெல்லாம் உடம்பினையே சுட்டுகின்றது. அப்படியானால் நான் என்னும் சொல்லுக்குப் பொருள் உடம்பு என்று ஆகின்றதல்லவா? அதனால் உடம்பே உயிரென்பர்.

> இல்லை இராகுவினுக் கேயுடலன் னத்துதலைச்
> சொல்லாம் எனதுடலும் ஆக்கு.

நான் 'பருத்தேன்' முதலிய சொற்கள் உடம்பின் பண்புகளைக் குறிக்கின்றன. அதனால் இவற்றைக் குண வேறுபாடுகள் என்ப. வேறுபாடு—விசேடம். இச்சொற்கள் ஏற்றுரை. இவை சிறுபான்மை வழக்கு. இங்ஙனம் பண்பைக் கூறினும் பண்பியாகிய உடலை அங்ஙனம் கூறுவார் யாண்டும் எவரும் இலர்.

உடலைக் கூறுங்கால் எவரும் "யானுடம்பு, யான்கை, யான்கால்," என வழங்கக் காணோம். எனதுடல், எனதுகை, எனதுகால், எனவே வழங்கக் காண்கின்றோம். அதனால் 'உடம்பு ஆவி அன்று'. உடம்புக்கு வேறாய் ஆவி ஒன்று உண்டு.

### உடம்பகத்து உயிர்

திருவள்ளுவப் பெருந்தகையாரும் உடம்பகத்து உயிர் வேறு உண்டு என்பதைக் கூட்டகத்துப் புள்வேறு உண்டு என்னும் ஒப்புமையால் வலியுறுத்தி அருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

> "குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
> உடம்பொடு உயிரிடை நட்பு." —திருக்குறள், ௩௩அ.

இக்கருத்துறவே ஆளுடைய அரசர் அருளுவதில் ஆண்டவனே ஆவிகளுக்கு அருளினால் அமைத்துக் கொடுப்பதே உடம்பு என்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

> "கால்கொடுத்து இருகை ஏற்றிக் கழிநிரைத்து இறைச்சி மேய்ந்து
> தோல்படுத்து உதிர நீரால் சுவரெடுத்து இரண்டு வாசல்
> ஏல்வுடைத் தா அமைத்தங்கு ஏழுசா லேகம் பண்ணி
> மால்கொடுத்து **ஆவி** வைத்தார் மாமறைக் காடனாரே."—௪. ௩௩-௪.

### கிழமை*

கிழமை இருவகைப்படும். ஒன்று தற்கிழமை. மற்றொன்று பிறிதின் கிழமை. தன்னோடு ஒற்றுமையுடையது தற்கிழமை. தனக்கு உரியது, ஆனால் தனக்கு வேறாய் உள்ளது பிறிதின் கிழமை. உயிர்க்குத் தற்கிழமை அறிவு. பிறிதின் கிழமை உடல். உயிர் உடலோடு தொன்றுதொட்டு வேற்றுமையின்றிக் கலந்துவரும் ஒற்றுமை நயம்பற்றி உடல் தற்கிழமை எனக் கொள்ளின் மனைவி, மக்கள், வீடு, மாடு முதலியன பிறிதின் கிழமைப் பொருள்கள். ஈண்டு உயிர்க்கு உடல் பிறிதின் கிழமைப் பொருளே.

---

* 'ஆறுருவதே' தொல். சொல்-எ௬.

**இலக்கணம்**

'இன்' உவம உருபு. இவ் இன் 'எனது என்ற மாட்டின்' உள்ளது. எனது என்றே தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல என்பது பொருள்.

'உனதலாது' என்பது ஒருமை. ஆதலால், உனது அன்றாகிய கை, உனது அன்றாகிய கால், உனது அன்றாகிய யாக்கை எனத் தனித்தனி கூட்டி உரைக்க.

---

## மூன்றும் அதிகரணம்

**இனி ஐம்புலன்அறிதலின் ஆன்மாஉளது என்றது.**

எ - து. மே - ள். எ-னின். ஐம்பொறிகள் ஐம்புலன்களை அறியும் என்றல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின் அவை உடல்போல் சடமன்மை பெறப்படுதலானும், அவற்றை எனது என்னும் வழக்கம் பெரும்பான்மைஅன்றாகலானும், அவையே உயிராதல் அமையுமென இந்திரியான்மவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ-ள். வெ-டை.

**ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியாமையின் இவ்ஐந்தினாலும் ஐம்பயனும் அறிவது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

எ - து. பொ - ரை. எ-னின். ஐம்புலன் அறிதலின் ஆன்மா ஐம்பொறியின் வேறெனச் சாதித்தற்கு ஏதுவாமாறு யாங்ஙனம் என்னுங் கடாவை ஆசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதல்நுதலிற்று. இ-ள். வெ-படை.

*ஒன்றறிந்தது ஒன்றறியாது ஆகி உடல்மன்னி
அன்றும் புலனாய்அவ் அஞ்செழுத்தை—ஒன்றறிதல்
உள்ளதே ஆகில் அதுநீ தனித்தனிகண்டு
உள்ளல்அவை ஒன்றல்லை ஓர்.

எ - து. உ - ம். எ-னின். இந்திரியங்கள் ஒன்றறிந்தது ஒன்றறியா தென்றதொக்கும் ஐந்தும் ஐந்துயிரெனக் கோடலின் அதனால் எமக் காவதோரிழுக்கில்லை. இனி இவ்வைந்தை யுங்கொண்டு ஐம்புலனையும் ஒருபொருளே அறியுமெனின் அதற்குப் பிரமாணங் கண்டிலம். குடத்தைக் கண்ட யானே அதனைத் தீண்டினேனென மறித்துணர்வு நிகழ்தல் ஐந்தும் ஒருடம்பின்கண்ணே நிலைபெறும் ஒற்றுமைபற்றி அமையு

* 'அறிவதைம்.' சித்தியார். ௩-௩.

மெனக் கோடுமென்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலி யுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியா தாகி—உடம்பின்கண்ணே நிலைபெற்று ஒருவிடயத்தை அறிந்த இந்திரியம் மற்றொருவிடயத்தை அறியாதாய், அன்றும் புலன் ஆய் அவ் அஞ்செழுத்தை—அங்ஙனந் தம்முள் மாறு படுஞ் சத்தமுதலிய புலன்களை (சூக்குமபஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு) ஆராய்ந்து அறிகின்ற அவ்ஐம்பொறிகளின் தொழிற்பாட்டை, அறிதல் ஒன்று உள்ளதேயாகில்—கண் உரு வத்தை அறிவது செவி ஓசையை அறிவதென்று இவ்வாறு உணர்தலையுடையதோர் பொருள் (இல்லதோ உள்ளதோவென வினுயினுர்க்கு இல்லதுஎனின் அவ்வறிவு நிகழாதாதல்வேண்டு மாகலான்) உள்ளதேயாமெனின், அது நீ—அவ்வாறுணர்வது யாது அதுவே நீயாகிய ஆன்மா (அவ்வாறுணர்வனவும் அவ் இந்திரியங்களே யென்றூற்படும் இழுக்கென்னையெனின்), அவை தனித்தனி கண்டு உள்ளல்—அவ்இந்திரியங்கள் தத்தம் விடயங் களை வேறுவேறு கண்டறிதன் மாத்திரையேயன்றி இத் தொழிற்பாட்டையுடையேம் யாமெனவும் அறியமாட்டாவாக லான், ஒன்று அல்லை ஓர்—அவ்ஐந்தின் தொழிற்பாட்டை யும் அறிந்து அவற்றின் வரும் பயன்கொள்வதாய நீ அவற்றின் வேறுவை அதனை ஆராய்ந்து அறிவாயாக (எ - று).

ஆகி என்னுஞ் சிறப்புவினை ஆய்என்னும் பொதுவினையோடு முடிந்தது; "இவனும் இவளுஞ் சிற்றிலிழைத்துஞ் சிறுபறை அறைந்தும் விளையாடுப" என்றூற்போல. ஆய்என்பது வினைத் தொகை. அவ் அஞ்செழுத்தென்க. அஞ்செழுத்தாற் செலுத் தப்பட்ட பொறியை ஆகுபெயரான் அஞ்செழுத்தென்றூர். அஃதிருமடியாகுபெயராய் ஐம்பொறியின் தொழிற்பாட்டை உணர்த்திநின்றது.

உள்ளல் உள்ளலான் என்க.

இம்மூன்றதிகரணங்களாலுஞ் சாக்கிரத்தின் நிகழும்இயல்பு பற்றி ஆன்மாவின் உண்மை சாதிக்கப்பட்டது.

## விளக்கம்

'ஒன்றறிந்த..................................ஓர்.'

**புலனும் உயிர் அன்று**

பாழ் (சூனியம்) என அறியும் அறிவு உண்டு என்று கூறியதால் பாழின் வேருய் உயிர் உண்டு என்பது பெறப்பட்டது. கை, கால் முதலியவற்றைத் தன்னின் வேருக அறிவதால் உடலின் வேருய் உயிர் உண்டு என்பது பெறப்பட்டது.

"சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்" என்னும் ஐம்புலன் (பொருள்) களையும் 'வாய், கண், மெய், செவி, மூக்கு' என்னும் ஐம்புலன் (இந்திரியம்) களும் அறிதலின் அவையே ஆவியாகும். ஐம்புலனை ஐம்பொறி எனவும் கூறுவர். புலன் பொறிவாயில் நின்று பற்றும் நுண் கருவி. இப்புலனால் பற்றப்படும் பொருளும் புலன் என்றே கூறப்படும். பொருளை விடயம் என்பர்.

இப்புலன்களின் தொழில்களை என்செவி கேட்டது; என்கண் கண்டது; எனச் சிறுபான்மை வழங்குவர். ஆயினும், நான் கேட்டேன், நான் கண்டேன் என்று வழங்குவதே பெரும்பான்மை. ஈண்டு நான் என்பது செவி, கண் முதலியவற்றையே சுட்டுகின்றது. ஆகவே, ஐம்புலன்களே ஆவி என்பர் புலக்கோளினர். அது பொருந்ாது என்பதே ஈண்டு விளக்கப்படுவது. என்கண் என்செவி என்று வழங்குதலன்றி நான்கண்: நான்செவி; என்னும் வழக்கம் யாண்டும் இன்மையால் ஆவி வேறு என்பதே துணிவு.

## ஒன்று அறிந்தது ஒன்று அறியாது

ஐம்புலனுள் ஒன்று அறிந்ததை மற்றொன்று அறிவது இன்று. இவ் ஐந்தையும் கொண்டு "கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்" பற்றிப் பயன்கொள் ஆவி வேறு உண்டு என்பது தெரிகின்ற தல்லவா? புலக்கோளினர் (இந்திரிய ஆன்மவாதிகள்) ஐம்புலனும் ஐந்து உயிர் என்று கொள்வதால் எங்கள் கொள்கைக்கு ஒரு குற்றமும் இல்லை; ஆதலால் புலன்களே ஆவி என்பர்.

ஒன்று அறிந்தது ஒன்று அறியாமைமட்டும் அன்று "குடத்தைக் கண்ட நானே அதனைத் தீண்டினேன் என மறித்துணர்வு நிகழ்கின்றது" அதனால் இவற்றைக்கொண்டு கண்ணால் கண்டும் கையால் தீண்டியும பயன்கொள்ளும் ஓர் ஆவி இவற்றிற்கு வேறாக இருக்கின்றதென்பது தெளிவு. ஐம்புலனும் ஓரிடத்திருக்கும் ஐந்துயிர்கள். அவ் ஒற்றுமை பற்றி ஒன்று அறிந்ததை ஒன்று அறியாவிட்டாலும் அறிந்ததுபோலக் கூறுகின்றன என்று கொள்ளின், அதுவும் பொருந்தாததாக முடியும். என்னை? ஒரு வகுப்பிலிருக்கிற மாணவர்களுக்குள் ஒருவருக்குத தெரிந்த மறை (இரகசியம்) மற்றவர்கட்குத் தெரியாமைபான் என்க.

## அன்றும் புலன்

அன்றுதல் - மாறுபடுதல். மாறுபடுதலாவது கண் காணுங்கால் செவியும் அதனுடன் சேர்ந்து காணவோ அல்லது காணுதற்குத துணை செய்யவோ வருவதில்லை. அதுபோலவேதான் ஒவ்வொரு புலன்களும். அம்மட்டோ கண் கண்டு முடிவதற்குள் ஓசை நிகழுமேல் காது கண்ணின் தொழிற்கு மாறுபடக் கேட்கத் துவங்கிவிடுகிறது. இவ் ஒற்றுமை இன்மையே மாறுபடுவதாகும். 'அன்றினவர் புரமூன்றும்' என்னும் ஆளுடைய அரசர் (௬.அஅ-௪) திருமொழியும் மாறுபடுதல் என்பதனைக் குறிக்கும்.

## அஞ்செழுத்து

இவ் அஞ்செழுத்து நுண்மை அஞ்செழுத்தாகும். நுண்மை அஞ் செழுத்தாவது, அ, உ, ம், வழிஒலி, முதல்ஒலி. வழிஒலி என்பது விந்து எனவும் முதல்ஒலி என்பது நாதம் எனவும் கூறப்படும். இவற்றை

முறையே ஒலிமுதல் முதல்ஒலி எனவும் கூறுப. இவ் அஞ்செழுத்தின் விளக்கம் நான்காம் சூத்திரத்துக் கூறப்படும்.

### ஆகுபெயர்

'அஞ்செழுத்து' தன்னால் செலுத்தப்படும் ஐம்பொறிகளின் தொழிற்பாட்டை உணர்த்துகின்றது. அஞ்செழுத்து ஆகுபெயராகத் தன்னால் உணர்த்தப்படும் பொறியை முதலில் உணர்த்துகின்றது. பின் அவ் அஞ்செழுத்தாற் செலுத்தப்படும் அப்பொறிகளின் தொழிற்பாட்டை உணர்த்துகின்றது. அதனால் அஃது இருமடி ஆகுபெயராம். இஃது, கார் வந்தது என்பது போன்றது. கார் - கருமை. அது கருமை நிறமாகிய மேகத்தை முதலில் உணர்த்திற்று. பின் அம்மேகம் பொழியும் காலத்தை யுணர்த்திற்று. இதுவும் இருமடி ஆகுபெயர்.

### சிறப்புவினை

'ஒன்றறிந்தது ஒன்றறியாது ஆகி' 'ஆகி' என்பது சிறப்புவினை. ஒவ்வொன்றும் தனித்தனி அறியாது ஆகி என்று முடிவதால், அது சிறப்புவினை. 'புலன் ஆய்' என்பதன்கண் உள்ள 'ஆய்' எல்லாப் புலன்களுக்கும் பொதுவினை. அஃதாவது 'ஆய்'-ஆராய்தல், இஃது எல்லாப் புலன்களுக்கும் பொதுவினை, எனவே 'ஆகி' என்னும் சிறப்புவினை 'ஆய்' என்னும் பொதுவினையோடு முடிவது ஏற்புடைத்து.

### காட்டு

"இவனும் இவளும் சிற்றில் இழைத்தும், சிறுபறை அறைந்தும் விளையாடுப." இவற்றுள் 'சிற்றில் இழைத்தல்' மகளிர் செயல். சிற்றில்-சிறுவீடு. இழைத்தல் - ஆக்குதல். இது மகளிர்க்குரிய சிறப்புவினை. 'சிறுபறை அறைதல்' ஆடவர்க்குரிய சிறப்புவினை. சிறுபறை - சிறு கொட்டு. அறைதல் - கொட்டுதல். இச் சிறப்புவினைகள் 'விளையாடுப' என்னும் பொதுவினை கொண்டு முடிந்தன. விளையாடுதல் பொதுவினை. அஃது இருவர்க்கும் உரியது.

இஃது,

> "ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
> பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி
> அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே." —தொல். சொல். ௨

என்னும் விதியான் முடிந்தது.

### இலக்கணம்

'ஆய்' - ஆராய்ந்து அறிகின்ற. இது வினைத்தொகை. வினைத்தொகை என்பது காலங்கரந்த பெயரெச்சம.

அது, "வினையின் தொகுதி காலத்து இயலும்."
—தொல். சொல். ௪௧௫

என்னும் விதியான் அறியப்படும்.

'உள்ளல்' அல் ஈற்று எதிர்மறை: அறியமாட்டா. "இத்தொழிற் பாட்டை உடையேம் யாம்" என அறியமாட்டா ஆகலான் என்பது பொருள். அதனால் 'உள்ளலான் என்க' என்று விளக்கப்பட்டது.

மனம்பற்றப் புலன்கள் கொள்ளும். கொள்ளினும் கொண்ட தன்னையும் தன் தொழிலையும் அறியமாட்டா. அது, பளிங்கு ஒன்றனைப் பற்றும் ஆனால் பற்றிய தன்னையும் பற்றும் தொழிலையும் உணராது. மேலும் நாழியினால் கூலம் முதலிய பொருள்களை அளக்கின்றோம். ஆயின் அந் நாழி தன்னையும், அளத்தலாகிய தன் தொழிலையும், தன்னைக்கொண்டு அளப்போனையும், அளக்கப்படும் கூலத்தையும் அறியாது. இவற்றைப் போன்றது என்க.

> " பண்பார் பளிங்குபோல் பற்றபுலன் தான்கொண்டும்
> உண்மைஉணா ராதன் தொழில்.

## நனவு நிகழ்ச்சி

முதல்கூறு 'பாழ்' எனக் கூறுதலால் அங்ஙனம் கூறும் ஆவி ஒன்று உண்டு. இரண்டாங்கூறு 'எனது உடல்' எனக் கூறுதலால் உடற்கு வேறாய் உயிர் உண்டு. இம் மூன்றாங்கூறு 'ஐம்புலன் அறிதலின்' எனக் கூறுவதால் தனித்தனி அறியும் அவ்வைம்புலனையும் செலுத்திக் கூட்டியுணரும் நாட்டம சேர் நல் ஆவி ஒன்று உண்டு. இங்ஙனம் மூவகையானும் உயிர் உண்மை விளக்கியது நனவு நிலையிலேயாம். நனவு நிலை விழிப்புநிலை. இதனைச் சாக்கிரம் என்பர். இனிவருவது கனவுநிலை.

## ஒற்றி

ஒற்றி என்பது பொருளுக்கு உரியவர் வேறு இருப்பக் காரணம்பற்றி அப்பொருளைப் பிறர்வழிச் செல்லவோ, பிறவற்றின் வழிச்செல்லவோ விடுதல். அதுபோல் ஆவிகள் பண்டே ஆண்டவன் அடிமை. அங்ஙனமிருந்தும் மலப்பிணிப்புக காரணமாக 'ஐம்புலனுக்கு தவ் ஆவிகள் ஆண்டவனால் ஒற்றிவைக்கப்பட்டன, ஒற்றிவைக்கும் உரிமை* அவனுக்கு உண்டாகலான். ஒற்றியை மீட்ட காலத்து ஒற்றி பெற்றார் பொருளின் வழிச் செல்லுவா. இவ்வுண்மை உணர்த்துவதே 'தம்மை ஐந்து புலனும்பின் செல்லும் தகையார்' என்னும் அருள்மொழி.

புலனுக்கு வேறாம் ஆவி என்பதும் அது புலனுக்கு ஒற்றிவைக்கப் பட்டது என்பதும் வரும் ஆளுடைய அரசா திருப்பாட்டான் உணர்க:

> " என்றுகொண் டாய்என்னை எம்பெரு மான்இனி அல்லபென்னில்
> சான்றுகண் டாய்இவ் வுலகமெல் லாந்தனி யேனென்றென்னை
> ஊன்றிநின் றார்ஐவர்க்கு ஒற்றிவைத தாய்பின்னை ஒற்றிஎல்லாம்
> சோன்றுகொண் டாய்கச்சி ஏகம்பம் மேய சுடர்வண்ணனே."
>
> —ச. கூகூ-கூ

> " செம்மை வெண்ணீற் றொருமையினார் இரண்டு பிறப்பின் சிறப்பினார்
> மும்மைத் தழலோம் பியநெறியார் நான்கு வேத முறைபயின்றார்
> தம்மை ஐந்து புலனும்பின் செல்லும் தகையார் அறுதொழிலின்
> மெய்ம்மை ஒழுக்கம் எழுலகும் போற்று மறையோர் விளங்குவது."
>
> —கஉ சண்டே. உ

> " இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
> புன்மையில காட்சி யவர்." —திருக்குறள், கஎச

---

* 'விற்றுக்கொள்வீர், எ. கூகு-உ. 'உமையலா.' ச. சO-கூ.

## நான்காம் அதிகரணம்

**இனி ஒடுக்கம்அறிதலின் ஆன்மா உளதென்றது.**

*எ - து. மே - ள். எ-னின். * "நேச இந்திரியங்கட்கு நிகழறிவு இதனாற் காண்டும்" என நிவிருங் கோடலின் அவ்விந்திரியங்களின் வேறாய் அங்ஙனம் அறிவது புரியட்டகவுடம்பேயாம் என அமையும். அது புறத்து நிகழாதாயினும் அகத்தேநின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தி அறியுமெனக் கோடுமெனச் சூக்குமதேகான்மவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் நாலாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.*

(**இ - ள்.**) *ஐம்பொறிகளுமொடுங்கின சொப்பனத்தானத்தின் நிகழ்ந்தவற்றையறிதலின் ஆன்மா வேறுண்டு (எ - று).*

*ஒடுக்கம் ஆகுபெயர்.*

**நனவின்கண் கனவு கண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

*எ - து. பொ - ரை. எ-னின். சொப்பனத்தினிகழ்ந்தவற்றை அறிவதுஞ் சூக்குமதேகமேயாகலின் இது சித்தசாதனமாமால் என்னுங்கடாவை ஆசங்கித்து அதன்தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று. இ-ள். வெ-படை.*

*இஃதென்சொல்லியவாறோவெனின், ஒடுக்கம் அறிதலின் என்றது ஒடுக்கத்தின்நிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கியறிதல் என்னும் பொருட்டாதலால் சித்தசாதனமாதல்யாண்டையதென விடுத்தவாறென்பது. கனவுகண்ட சூக்குமஉடம்பே நனவின்கண் அதனையறியுமாயின் கண்டபடியறியாது மயங்கியறிதல் கூடாமையின் உயிர்க்காயின் அதுபோல் ஒருதன்மைத்தாகலின்றி அகத்துச் சேறலும் புறத்துச்சேறலும் வேறுபாடுடைமையான் அதுபற்றி மயங்கியறிதல் கூடுமாகலின் அங்ஙனம் அறியும் உயிர் வேறுண்டென்பது கண்டுகொள்க.*

அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாம்கிடப்பச்
செவ்விதின் அவ்வுடலில் சென்றடங்கி—அவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுடல் நீயல்லை மற்று.

*எ-து. உ-ம். எனின். கனவின்கண் செல்லுமாறும் ஆண்டு நிகழுமாறும் மீளவருமாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.*

---

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம். சூ ௪. (௧௭௬) 'ஓசை நற்பரிச.'

(இ - ள்.) அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் கிடப்ப—(மேல் உயிர் அன்றெனக் கூறிப்போந்த) தூல உடம்பின் நின்று உயிர்ப்பனவாய ஐம்பொறிகள் ஆண்டே உயிர்ப் பொழிந்து கிடப்ப, அடங்கி அவ் உடலில் செவ்வி தின் சென்று —(அவை அங்ஙனங்கிடந்தவழிப்) புறத்து நிகழுந் தொழிற்பாடெல்லாமடங்கி அவ்வுடம்பினுள்ளால் வருத்தமின்றிச் சென்று, அவ் உடலின் வேறு ஒன்றுகொண்டு விளையாடி—அத்தூல உடம்புபோல அதனின் வேறாயதோர் உடம்பை யெடுத்துக் கொண்டு வேறோராற்றாற்கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று* விளையாடி, மீண்டு அதனை மாறல்—மீள அதனை மாறி மேற் சேறலான், நீ உடல் அல்லை—நீ அச்சூக்கும தேகமில்லை அதனின் வேறாவை (எ-று).

உயிர்ப்ப என்றது அன்பெறாத அகரவீற்றுப் பல அறி சொல். உயிர்த்தல் தொழிற்படுதல்.

தாமும் மற்றும் அசை.

மீண்டு மீள.

மாறல் மாறலானென்க.

இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தினிகழும் இயல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

## விளக்கம்

'அவ்உடலின் ..... .......................... .....மற்று.'

### ஒடுக்கம் அறிதல்

'ஒடுக்கம் அறிதல்' : ஒடுக்கம் பொறிபுலனுகிய நனவு நிகழ்ச்சி ஒடுங்குதல். அறிதல் நுண்உடலால் கனவு நிகழ்ச்சியை உணர்தல். நுண் உடல் எட்டுறுப்புக் கொண்டது. அவை, (எ) நுண்மை ஐந்து, மனம், எழுச்சி, இறப்பு என்ப. ஆனால், ஈண்டு அப்பொருள் படக்கவில்லை; நுண் உடலோடு கனவில்கண்ட மெய்யாம் கனவு நிகழ்ச்சியை, நனவில் கண்டவாறே உணராது மயங்கி அறிவது எனப் பொருள்படுகின்றது.

### மயங்கும் வாயில்

மாணவர் பள்ளியில் பயிலும் பாடத்தை அப்பொழுது வினவின் எவ்வகைத் தடையுமின்றி விடையிறுப்பர். அப்பாடத்தையே வீட்டுக்கு வந்தபின் வினவின் பெரும்பாலோர் மயங்கி ஆழ்ந்துஎண்ணிப் பின் ஒருவகையாகவும் விடையிறுப்பர். இதற்குக் காரணம், காலமும் இடமும் வேறுபட்டதே ஆகும்.

மேலும் நெட்டுருப்பண்ணிய செய்யுட்களின், முதல் நினைப்புக் கூறின் எவரும் அச்செய்யுட்களை உடன் ஒப்புவிப்பர். ஆனால், இடையே உள்ளவற்றையும் கருத்தையும் கூறி வினவின் பெருப்பாலோர் மயங்கி ஆய்ந்து

* திருக்குறள், கக0க.

எண்ணியே விடையிறுப்பர். இவைபோன்றே ஆவிகளும் கனவில்கண்டவற்றை நனவில் மயங்கி உணர்கின்றன.

பள்ளியினில் பாடம் பகர்வருடன் வீடுவர
உள்ளியபின் ஆகும் உணர்.

நுண்உடல் கண்டகனு நொய்மயக்கம் என்நனவில்
எண்உயிரே கண்டுவரல் ஈண்டு.

செய்யுள் முதல்நினைப்புத் தேரின் நனவாகும்
வெய்ய இடைகருத்து வீழ்கனு—செய்யுளினை
முன்பின்னபாற் கூறும் முறைஎளிது வன்மைபிற
தன்மையமங் கற்கொப்பாம் சாற்று.

## நுண் உடல் ஆவி

மூன்றும் கூற்றில் ‘ஐம்புலனும்’ ஆவி அன்று எனக் கூறியது பொருந்தும். என்னை? அவை தனித்தனி அறிவதால் என்க. ‘நுண் உடல்’ அங்ஙனம் இன்றிக் காரண காரியத் தொடர்ச்சியான வழிமுறையான் அறிவதால் அதுவே ஆவி என நுண்உடற் கோளினர் கூறுவர். இவர்கள் சூக்கும தேகான்மவாதிகள் எனப்படுவர். மேலும், சிவஞான சித்தியாரில் வரும்,

“ ஓசைநற் பரிச ரூப இரதகந் தங்க ளொன்று
பேசுமாத் திரைகள் ஐந்தும பிறக்குமப் பூதாதி கத்தின்
நேசஇந் திரியங கட்கு நிகழறிவு இதனால் காணும்
ஆசைசேர் மனாதி தன்மாத் திரைபுரி யட்ட கந்தான்.”
—சித்தியார். உ. ௫-௬௪

என்னும் திருப்பாட்டைக் காட்டி ‘நுண்உடலே ஆவி’ என நீவீருங் கோடலின் என்பர். நுண்உடல் புறத்தும காணப்படாவிடினும், அகத்து அமைந்து புலன்களைப் புறத்துச் செலுத்தி அறிகின்றது. அதனால் நுண் உடலே ஆவி என்பர்.

## நுண் உடல் ஆவி அன்று

கனவுகண்ட நுண் உடலே மீண்டும் நனவு காணுமாயின் மயங்கி அறிவதற்கு ஒருவாயிலும் இல்லை. வாயில் - காரணம் நுண் உடலோடு சேர்ந்து கனவு கண்டதும ஆவியே. பின் அந்நுண்ணுடலோடு பரு உடற்கு வந்து ஆங்கு நிகழும் நனவு நிகழ்ச்சியை நிகழ்த்துவதும் ஆவியே. அங்ஙனம் நிகழ்த்துங்கால் கண்டகனவை மறந்து விடுகிறது. பின் மயங்கி நினைவுகூர்ந்து அறிகிறது. அதனால், ஆவி வேறென்பது துணிபு. நுண்உடலே ஆவி எனக் கூறுவது பொருந்தாமை காண்க. மேலும், கனவு காணும்பொழுதில் நனவில் கனவு கண்டதுண்டா? எனத் தன்னைத் தான் வினவியோ, பிறரால் வினவப்பட்டோ வருங்கால் இல்லை என்னும் விடையும் வருகின்றது. கனவு நிகழ்ச்சி இல்லையாயின் நுண்உடற்கும் வேலை இல்லை. நுண்உடற்கே தெரியாத ஒன்றைப் பருவுடலில் நனவிற் கூறுவது எதுவாக இருக்கமுடியும்? அதுவே அவ் ஆவியாம் என்க.

## நுண்மை ஐந்து

இவ் ஐந்தும் உலகஎழுச்சி (தாமதாங்காரம்) யினின்றும் தோன்றுவன. இவை இருவகை ஐம்புலன்களுக்கும் மதுகையை விளைவிப்பன. மதுகை-

ஊக்கம். ஐம்புலன் (இந்திரியம்)கள் அறிதற்குச் செவி வாய் முதலிய பொறிகள் இடங்களாம். இது தேர் செல்வதற்குரிய நிலம்போன்று ஆகும். மதுகையை விளக்கும் நுண்மை தேர் போன்றாகும்.

> " செவிவாய் நிலமாகும் தேர்நுண்மை ஆவி
> கவிகுடைக்கீழ் வேந்தாகும் காண்."

### பேற்றுத் துணை

இது சித்தசாதனம் எனப்படும். சித்தம் - சித்தித்தது; பேறு. சாதனம் - துணை. எனவே பேற்றுத்துணை என வழங்கலாம். இதன் பொருள் தடை எழுப்புவான் தன் சார்பாக உடன்பட்டதையே, விடை இறுப்பானும் தனக்குச சார்பாகக் கூறுவது.

கனவிற் காண்பது நுண்உடல். அதுவே 'ஒடுக்கம் அறிதலின்' என்று கூறப்படுகிறது. இக்கொள்கை நுண்உடற் கோளினர் கொள்கை. அதனையே கூறுவதால் பேற்றுத்துணை எனப்பட்டது ஆனல், ஆசிரியர் மெய்கண்டார் கூறும் திருவுள்ளம் அப்படி அன்று. 'ஒடுக்கம் அறிதலின்' என்றது ஒடுக்கத்தின் நிகழ்ந்தவற்றை நனவின்கண் **மயங்கி அறிதலின்** என்னும் பொருட்டு. ஆதலால் பேற்றுத்துணையாகிய சித்தசாதனம் ஆகாதென்க.

### புறம் அகம்

ஆவி பருவுடலைக் கருவியாகக்கொண்டு இயைந்து இயக்கிப் புற நிகழ்ச்சிகளை அறிந்து அழுந்துகின்றன அதுபோலவே, அக நிகழ்ச்சிகளை நுண்உடலைக் கருவியாகக் கொண்டுணர்கின்றன. பருஉடலுக்கு வேறாக ஆவியிருப்பதை ஒப்புக்கொள்வதுபோல் நுண்உடலுக்கு வேறாகவும் ஆவி இருக்கும் வாய்மையை ஒப்புக்கொள்ள வேண்டுவதே.

### வேறு கோடல்

ஆவி நனவுடலைவிட்டுக் கனவுடலைக் கொள்ளுவது என்பதால் இடம் வேறன்று. உருமாறுதலும் இன்று. புதிது கொள்ளுதலும் அன்று. இவற்றிற்கு ஒப்பு தொழிலக உடுப்புக்களை மனைக்கு வந்தவுடன் மாற்றி வேறொன்றுகொள்வதுபோன்று நனவுநிகழ்ச்சியில் பருவுடலோடு இருந்த ஆவி கனவுநிகழ்ச்சியில் நுண்உடலோடு இருப்பது.

தொழிலகத்துக்கு வேண்டுவ குப்பாயம், துண்டு, அரையாடை. இவற்றுள் மனையகத்து வந்ததும் மாற்றப்படுவன குப்பாயம், துண்டு இருப்பது அரையாடை. இவைபோன்றன நனவுடலும் கனவுடலும். உருமாறவில்லை என்பது ஆள்தோற்றம் ஒன்றே என்பது. புதிதுகொள்ள வில்லை என்பது பண்டுள்ள ஆடைகள் மாற்றும்வரை அவற்றையே கொள்ளுதலாகும்.

> தோற்று தொழிலுடுப்புத் தோமில் மனைமாற்றி
> ஆற்றல் கனுநிகழ்வில் ஆம்.

> குப்பாயம் துண்டரை யாடை கொளல்தொழிற்காம்
> வைப்புமனைக் கண்ணரையா டை.

வீட்டகத்துப் புலவர் முதலிய பலருடன் கூடியிருப்பது கூடம். புலவர் கூட்டம் கூடியிருந்து கன்னித்தமிழ் ஆய்ந்தமையினாலேயே மதுரை

யம்பதிக்குக் கூடல் மாநகர் என்னும் பெயர் மன்னி வழங்குவதாயிற்று. வீட்டகத்தாரோடு இருப்பது நடுவீடு. இவ்விரண்டும் முறையே நனவு கனவுகட்கு ஒப்பாகும்.

கூடத் திருத்தல்புறங் கொள்நனவாம் இல்நடுவிற்
கூடல்கனா இல்லொன்றும் கூறு.

ஊசல் ஆடுவோர் நிலம், தூண், விட்டம், கயிறு, பலகை இவற்றோடு கூடியிருந்து ஆடுதல்வேண்டும். இவற்றுள் நிலம் நனவாகும். ஏனைய கனவாகும். நிலத்திலிருந்தே ஊசல்மேல் ஏறுதல் வேண்டும்.

தாங்கு தரைநனவு சாருந லாம்கனவு
ஈங்கிடமொன் றுதல் இசைவு.

நுண்ணுடல் எட்டுறுப்புக் கொண்டது. அவ் எட்டினையும் ஒருபுடை ஒப்பாகக் கூறின், தூண்கள் இரண்டும் மனம் எழுச்சி ஆகும். விட்டம் இறப்பு (புத்தி) ஆகும். பலகை ஒன்று கயிறு நான்கு ஆக ஐந்தும் நுண்மை (தன்மாத்திரை) ஐந்தாகும்.

தூண்கள் மனம்எழுச்சி விட்டம்இறப் பாம்கயிறு
மாண்பலகை ஐம்மாத் திரை.

## இலக்கணம்

'**தாம்**' என்பது 'ஐம்பொறிகள் **தாம்**கிடப்ப' என்றதன்கண் உள்ளது. '**மற்று**' ஈற்றிலுள்ளது. இவ்விரண்டும் அசை. மற்று வினைமாற்றுமாம். '**மீண்டு**' - மீள என்று இருத்தல்வேண்டும். இஃது எச்சத்திரிபு. '**மாறல்**' - மாறலால் என்னும் சொல்லில் ஈறு குறைந்து நின்றது.

## கனவுண்மை

நனவின் நிகழ்ச்சிபோல் கனவின் நிகழ்ச்சியும் உண்மையே ஆம். சிலர் பொய்யெனக் கூறுவது எவ்வகையானும் பொருந்தாது. அக்கனவு மென்மையாயின் நுண்ணுடல்அகத்தோடு அமைந்து விடும். வன்மையாயின் பருவுடலிலும் குறிகள் காணப்படும். சிலர் கண்டதும் எழுதல், நகுதல், அழுதல், புலம்பல் முதலியவற்றைச் செய்கின்றனர். அச் செயல் எல்லாம் கனவின் தொடர்ச்சியாய் நனவின்கண் நிகழும் பருவுடலில் தோன்றுவன அன்றோ? கனவுண்மையினை ஆளுடைய அரசரும் அருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

“* தஞ்சே கண்டேன் தரிக்கிலா தாரென்றேன்
அஞ்சேல் உன்னை அழைக்கவந் தேனென்றார்
உஞ்சேன் என்றுகந் தேஎழுந் தோட்டந்தேன்
வஞ்சே வல்லரே வாய்மூர் அடிகளே.” —௫. ௫0-௩

திருவள்ளுவப் பெருந்தகையாரும்,

“நனவினாற் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது.” —திருக்குறள், ௧௨௧௫

என்று அருளினர்.

* ‘பட்டமும்’ ௬. ௧௭-௬.

# ஐந்தாம் அதிகரணம்.

**இனிக் கண் படில் உண்டிவினை இன்மையின் ஆன்மா உள தென்றது.**

எ - து. மே-ள். எ-னின். சொப்பனத்தான மாத்திரையின் அன்றித் தொழிற்படாத சூக்குமதேகம்போ லன்றிச் சுழுத்தி துரியங்களினுந் தொழிற்படுவதாய பிராணவாயுவே அடங்குதல் விடுதல் செய்தறிவதாகிய ஆன்மாவாதலைமையுமெனப் பிரா ஞன்ம வாதிகள் கூறுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஐந்தாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ-ள். வெ-படை.

உண்டி வினை உம்மைத்தொகை அஃது *"உண்டியும் வினையு மின்றிக் கிடந்து" என வழிநூலாசிரியர் கூறியவாற் றானு முணர்க.

**ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

எ-து. பொ-ரை. எ-னின். கண்படைகொண்டவழி உண்டி வினையில்லையென்றது உடற்கோ பிராணவாயுவுக்கோவென வினு யினர்க்கு உடம்பு உயிரன்மையான் அதற்கவை யில்லாமைபற்றி ஈண்டைக்காவதோரிழுக்கில்லை. இனிப் பிராணவாயுவுக்கென் னின் அது துயின்றெழுந்தபின்னர்ச் சுகமாகத் துயின்றேனென் றறிதல் பிறிதோராற்றாற்பெறப்படாதென்னும் அருத்தாபத்தி யான் ஆண்டும் இன்பநுகர்ச்சி யுண்டென்பது பெற்றாம். விழித் துழிப்போல உறங்குழியும் பிராணவாயுவியங்குதலான் வினை யுண்மையுங் கண்டாமாகலின் அதற்கு அவையாண்டில்லையென் றல் மாறுகோள்போலுமென்னுங் கடாவை யாசங்கித்து அதன் தாற்பரியம் உணர்த்துதல் நுதலிற்று.

**(இ - ள்.)** ஈண்டு உண்டியென்றது விடயங்களினிடமாக வரும் இன்பத்துன்ப நுகர்ச்சியை; வினையென்றது உடம்பு சேட்டித்தலை. ஆகலின், . இவ்விரண்டும் பிராணவாயுவை ஒழித்தொழிந்த கருவிகளெல்லாமொடுங்கிய துயிலிடத்து அஃதியங்காநிற்பவும் உடம்பின்கண்ணே நிகழ்தலின்மையின் அவையொடுங்காத நனவினிடத்து அவையிரண்டும் அதன்கணி கழ்தலுண்மையின் அவ்வின்மை யுண்மைகட்கேதுவாகக் கருவி களையொடுக்கியும் ஒடுக்காதும் நிற்பதியாது அதுவே அவ் ஆன்மா என்றவாறாம். கண்படில் உண்டி வினை இன்மையின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. (எ-று).

---

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௩௦. 'கண்டுணர்.'

பிராணவாயுவை ஒழித்தொழிந்த கருவிகளென்பது ஆற்றலான் வந்தது.

இன்பத்துன்ப நுகர்ச்சியை இன்பத்துன்பமென்று உபசரித்தார்.

சீவனம் சீவித்தல்; சேட்டித்தலென்றதாம்.

செவ்வெண்தொகை விகாரத்தால்தொக்கது.

சீவியாநிற்பதென்பது சீவியாநிற்றலென்னுந் தொழிற்பெயர்மாத்திரையாய் நின்றது, "உறங்குவதுபோலும்"* என்புழிப்போல.

உளதென்றது தனித்தனி சென்றியையும்.

துயின்றுழியும் விழித்துழியுந் திரிபின்றி ஒருதன்மைத்தாதல்பற்றி உடம்பு பிரகிருதியெனப்பட்டது. பிரகிருதிக்கென்றது உருபுமயக்கம்.

இரண்டுகாலத்தும் ஒப்ப இயங்குதல்பற்றிப் பிராணவாயுவைப் பிரகிருதியெனக்கொண்டு அதற்கவையின்மையினென்றுரைப்பாரும், பிரகிருதிவிகாரமாகிய சித்தத்திற்கு அவையின்மையினெனவுரைத்துச் சுழுத்தியின்கண்ணுந் தொழிற்படுவதாய சித்தமேயுயிரென்னுஞ் சித்தான்மவாதிகளை மறுத்தற்கு எழுந்தது இவ்வதிகரணம் என்று உரைப்பாருமுளர்.

†கண்டறியும் இவ்உடலே காட்டோடுங்கக் காணுதே
உண்டிவினை யின்றி உயிர்த்தலாற்—கண்டறியும்
உள்ளம்வேறு உண்டாய் ஒடுங்காது உடல்நண்ணில்
உள்ளதாம் உண்டிவினை ஊன்.

எ-து. உ-ம். எ-னின். துயிலிடத்துக் கருவிகளெல்லாம் ஒடுங்குதலின் இன்பத்துன்ப நுகர்ச்சியுஞ் சேட்டையும் பிரகிருதிக் கில்லையாயினவாகலான் அதுபற்றிப் பிராணவாயுவை ஆன்மா என்றற்கு இழுக்கென்னை என்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) கண்டு அறியும் இவ்வுடலே—கண்டறிதற்கு நிலைக்களமான இவ்வுடம்பின் கண்ணே, காட்டுக் காணுதே ஒடுங்க—காட்டாய கருவிகள் தொழிற்படாதே யொடுங்கவும், உண்டி வினை இன்றி—அவை யொடுங்கியவழி உண்டியும் வினையும் பிரகிருதிக்கில்லையாகவும், உயிர்த்தலான்—பிராணவாயு நிலை

* திருக்குறள், ௩௩௯.

† 'அறிந்திடும்,' சித்தியார். ௩—௪.

பெற்று இயங்குதலான், கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு—கண்டறியும் உரிமையையுடைய உயிர் பிராணவாயுவின் வேறாய் உண்டு, ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டி வினை உளதாம்—அவ்வுயிரொடுங்காது அவ்வுடலின்கண் எய்திற்றாயின் அவ்வுடம்பு கருவிகளின் றொழிற்பாட்டானாய உண்டியும் வினையும் உடைத்தாம், ஆய்—அதனை ஆராய்ந்து அறிவாயாக (எ - று).

இஃது அருபத்தாபத்தி அளவை.

கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

இன்றி என்னும் வினைக்குறிப்புச் செயவெனச்சத்திரிபு. சிறப்பும்மைகள் தொக்கன. அவை* "அறிந்திடாதுடலுறக்கத் தறிவின்மை கரண மின்மை—யறிந்திடு முதலியாகி னதுநிற்கக் கரணம் போகாது" என்னும் பொருள் விளைத்து நின்றன.

ஊன் ஆகுபெயர்.

உயிர் வேறுண்டென்றதனை வலியுறுத்துவார் உடம்பாட்டு முகத்தானும் ஓதினார்.

இவ் அதிகரணத்தானே சுழுத்தி துரியங்களின் நிகழும் இயல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறுஞ் சார்மாயை நீ யல்லை என்றதனை வலியுறுத்தியவாறு.

## விளக்கம்

'கண்டறியும்........................ ......ஊன்'

**உயிர்மூச்சு**

உயிர்மூச்சு எழுச்சியினால் இயக்கப்படும் பத்துவளிகளுள் முதன்மையானது. பத்துவளிகளையும் தசவாயுக்கள் என்பர். பத்து - தசம். வளி - வாயு. அவை முறையே க. உயிர்வளி அல்லது உயிர்க்காற்று, உ. மலக்காற்று, ௩. தொழிற்காற்று, ச. ஒலிக்காற்று, ரு. நிரவுகாற்று, சு. தும்மற்காற்று, எ. விழிக்காற்று, அ. கொட்டாவிக்காற்று, கூ. இமைக்காற்று, க0. வீங்கற்காற்று என்ப. இவற்றை முறையே பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் எனவும் கூறுப.

"காற்றுயி ரேமலம் கண்ணுதொழி லேஒலி
ஆற்று நிரவுதும்மல் அம்விழியே—தோற்றுகொட்
டாவி இமைவீங்கல் ஐயிரண்டு மேயியங்கும்
தாவில் எழுச்சியினால் தான்."

* 'அறிந்திடும்,' சித்தியார். ௩—ச.

இவ் உயிர்மூச்சு நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம் ஆகிய நான்கு நிலைகளினும் இடைவிடாது உயிர்க்குக் காவலாக இருக்கின்றது. அங்ஙனம் இருப்பதனால் அவ் உயிர்மூச்சே ஆவி என மயங்கிக் கூறுவர். அங்ஙனம் கூறுவார் உயிர்க்காற்றுக்கோளினர். இவரைப் பிராணான்ம வாதியர் என்ப.

அவர்கள் கூறுவது, நுண்உடல் ஆவிஅன்று என்பது ஒக்கும். அது கனவுநிலைக்குமேற் செல்லுவதில்லை. கனவு நிலைக்குமேலுள்ள உறக்கம், பேருறக்கம் என்னும் இரண்டு நிலைகளினும் நிலைபெறுவது உயிர்மூச்சு; ஆதலால், உயிர்மூச்சே ஐம்புலன்களையும் அடக்கிக்கொண்டு கனவு நிலையில் அறிகிறது. அவ் ஐம்புலன்களையும் வெளிப்படுத்திக்கொண்டு நனவுநிலையில் அறிகிறது. அதனால் உயிர்மூச்சே ஆவி என்பது பொருந்தும் என்பதாம்.

**உம்மை**

'உண்டி வினை' என்பது உண்டியும் வினையும் என்று பொருள்படுவதால் உம்மைத்தொகை என்றனர். இங்ஙனம் தொகும்தொகை ஆறு வகைப்படும். அது வருமாறு:

"வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்று
அவ்ஆறு என்ப தொகைமொழி நிலையே."

—தொல். சொல் - ௪௧௨.

**உண்டி வினை**

ஈண்டு உண்டி என்றது புலன் நுகர்ச்சியை. அஃதாவது கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலன் நுகர்ச்சியை. வினை என்றது உடம்பின் புடைபெயர்ச்சியினை. இஃது உடம்பினைத் தொழிற்படுத்தல் எனப் பொருள்படும். உயிர்மூச்சு நனவேபோன்று கனவு உறக்கம் பேருறக்கங்களிலும் ஒப்பரிகழ்கின்றது. அங்ஙனம் நிகழுங்கால் அப்புலன்கள் எங்ஙனம் தொழிற்படாமலிருத்தல் முடியும்?

ஞாயிறு இயங்குங்கால் அதன் கதிர்கள் படாதிருக்கும் பொருள்கள் உண்டோ! ஆசிரியா வகுப்பு நடத்துங்கால் மாணவர்கட்கு வகுப்பின்கண் உறங்க வாய்ப்புண்டாகுமா? இவைபோன்று ஆவி விழித்திருக்கும்போது ஐம்புலன்கள் உறங்கா. ஞாயிற்றையும் ஆசிரியரையும் ஒக்கும் ஆவி. பொருள்களையும் மாணவர்களையும் ஒக்கும் ஐம்புலன்கள்.

ஞாயிறியங் கக்கதிர்கள் நண்ணுப் பொருளின்றும்
ஆவியுமவ் வாறும் அறி.

மேலும் நிலப்பொறி ஊர்தியும் (Motorcar) வலவனும் (Driver) அவ்வூர்திக்கு உரிமையோன் அதன்உள்ளிருப்பின் அது செல்லாமலும் அவன் செலுத்தாமலும் இருக்கமுடியுமா? முடியாதன்றே! அதுபோல் ஆவி இயைந்து இருப்ப ஐம்பொறிகள் உறங்கா. அவ் உரிமையோன் மனையகம்புகின் அதுவும் நிலையம் சேரும்; அவனும் வீடுபுகுவன்.

உயிர்மூச்சு வாயிற்காவலனை ஒக்கும். காவலோன் விழித்திருக்குங் கால் ஏவலோன் உறங்குவது இயல்பாம். அதுபோல் உயிர்மூச்சு விழித்திருப்ப ஐம்புலன்கள் உறங்குகின்றன. அதனால் உயிர்மூச்சு ஆவி அன்று; அஃது உயிர்க்காவலேயாகும்.

ஊர்திவல வன்செல்லா உள்ளோன் மனைசேரின்
ஆருமுயிர் உண்டிவினை ஆங்கு.

ஆவி விழித்திருப்பின் ஐம்புலன்கள் தாம்உறங்கா
காவல்விழிப் பவ்வுறஙகுங் காண்.

காவல் உயிர்மூச்சு கண்ணுறக்கம் பேருறக்கம்
மேவுறினும் ஆவியன்று வேறு.

## செவ்எண்

'இன்பத்துன்பம் சீவனம்' என்பது இன்பத்துன்பமும் சீவனமும் என்னும இரண்டும் என்றிருத்தல் வேண்டும். உம்மை கொடுத்து எண்ணுமையால் செவ்எண் என்றாயிற்று. இங்ஙனம் வரும் தொடர் இறுதியில் இரண்டும் எனத் தொகை பெறுதல்வேண்டும். அது பெருமையால் 'செவ்எண் தொகை திரிபால் தொக்கது' என்றனர்.

'சீவனம்-சீவித்தல்; சேட்டித்தல் என்றதாம்.' சேட்டித்தல்-தொழிற்படுத்தல். இதற்குரிய விதி வருமாறு:

"உம்மை எண்ணும் எனஎன் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே."

—தொல். சொல் - உ௮எ.

## சீவியா நிற்பது

'இன்பத்துன்பம் சீவியா நிற்பது' என்றதன்கண் உள்ள 'சீவியா நிற்பது' என்பது (இன்ப)நுகர்வு. ஆவி இன்பம் நுகரும் என்று முற்றாகப் பொருள்படவில்லை. இன்பம் நுகர்தல் என்று பொருள்படுகிறது, அதனால் வினைப்பெயர் - தொழில் பெயராகும். இங்ஙனமே திருவள்ளுவப் பெருந்தகையார் திருப்பாட்டு ஒன்றினும் காணப்படுகின்றது. அதுவருமாறு:

'உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு." —திருக்குறள், ௩௩௯.

## உளது

'இன்பத்துன்பம் உளது, சீவியா நிற்பது உளது' எனத் தனித்தனி முடிக்க.

## பிரகிருதி

திரிபின்றி ஓரியல்பாயிருப்பது பிரகிருதி. ஊர்திகள் நிலையத்திருப்பினும் நெடுவழிக் கடிது செல்லினும் ஓரியல்பாகவே இருக்கும் அல்லவா? அதுபோன்றே உடம்பும் விழித்துழியும் உறஙகுழியும் ஓரியல்பாகவே இருக்கும். அதனால் அது பிரகிருதி எனப்பட்டது, பிரதிகிருதிக்கு

என்பது நான்காம் வேற்றுமை உருபு. ஆனால் அது பொருள்படுவது ஏழாம் வேற்றுமை. 'பிரகிருதியின்கண்ணே'—உடம்பின்கண்ணே.

"யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்."
—தொல். சொல் - கO௬.

## பொருள் அளவை

பொருள் அளவை எனினும் அருத்தாபத்தி எனினும் ஒன்றே. உறக்கம் பேருறக்கங்களிலும் உயிர்மூச்சு ஒப்ப இயங்கிக்கொண்டிருக்கிறது. அவ்வாறு இருந்தும் உடம்பின்கண்ணே இன்பத்துன்ப நுகர்வும் புடைபெயர்வும் காணுமாறில்லை. விழித்துழியும் உயிர்மூச்சு முன்பு போலவே இயங்குகின்றது. அப்பொழுதுமட்டும் அவை உண்டாவதற்குக் காரணம் பிறிதொன்று என்று பெறப்படும். அதுவே ஆவி. அங்ஙனம் பெறப்படுவது ஆவியால் எனக் கொள்ளநேரும்; அதுவே பொருள் அளவை - பொருள் குறிப்பு அளவை.

## ஒருபொருட் பன்மொழி

'கண்டறிதல்' இதில் 'காண்டல்' என்பதும் அறிதலே, 'அறிதல்' என்பதும் அறிதலே; ஆகவே அறிதல் என்னும் ஒரு பொருளைக் குறிக்கின்ற இருசொல் ஆகும். பன்மொழி - இருசொல்.

## எச்சத்திரிபு

'உண்டிவினை இன்றி' என்பதில் 'இன்றி' என்பது செய்து என்னும் வாய்பாட்டு வினைக்குறிப்புச் சொல். இங்ஙனமிருந்தால் இல்லாமல் என்று பொருள்படும். இங்கே 'இல்லையாக' எனப் பொருள்படுகிறது. ஆகவே அது செயஎன் எச்சம் ஆதல்வேண்டும். ஆதலால் செயஎன் எச்சத் திரிபு என்றனர். காலங் காட்டாமையால் வினைக்குறிப்பு ஆயிற்று.

## ஊன்

'ஊன்' என்பது ஆகு பெயராக உடம்பைக் குறிக்கின்றது. திருவள்ளுப் பெருந்தகையாரும் ஊனை உடம்பென அருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு :

"தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது **ஊன்**உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்." —திருக்குறள், உடுக.

திருமூல நாயனாரும் ஊனை உடம்பெனக் குறித்தருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு :

"தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ
வானுக்குள் ஈசனைத் தேடும் மதியிலீர்
தேனுக்குள் இன்பம் செறிந்திருந் தாற்போல்
**ஊனு**க்குள் ஈசன் ஒளிந்திருந் தானே." —கO. நடOசுடு.

## கூற்றுப்பொருள்

இக்கூற்றானே (அதிகரணம்) உறக்கம் பேருறக்கம் ஆகிய இரண்டு நிலைகளின் நிகழும் இயல்பு பற்றி உயிருண்மை நிலைநாட்டப்பட்டது. உறக்கத்தைச் சுழுத்தி எனவும் பேருறக்கத்தைத் துரியம் எனவும் கூறுவர்.

## வலியுறுத்தல்

இச்சூத்திரத்தின் முதலதிகரண வெண்பாவில், 'சார்மாயை, தற்பரம், தனி' என முப்பொருள் ஆய்வு தோற்றுவிக்கப்பட்டது. இவை முறையே தனை, இறை, உயிர் ஆகும். இரண்டாம் கூறுமுதல் ஐந்தாம் கூறுமுடிய உடல், புலன், நுண்உடல், உயிர்மூச்சு ஆகிய நான்கும் மாயையின் ஆக்கப்பாடுகளே; அவை கருவிகளே; அவற்றிற்கு வேறாக அவற்றோடு இயைந்து இயக்கி உணரும் ஆவி வேறுண்டு என வலியுறுத்தப் பெற்றது. அதனால் 'சார்மாயை நீ அல்லை' என்பது விளக்கப் பட்டது. ஆறாம் கூற்றில் 'தற்பரமும் நீ அல்லை' என்பது விளக்கப் பெறும்.

> "உடல்புலனே நுண்உடல் ஓங்குயிர் மூச்சாம்
> இடனுற்சார் மாயைநீ அன்று."

## உயிர்ப்பு

உயிர்ப்பு என்பது உயிர்மூச்சு. இதுவே பிராணவாயு. இவ்வுயிர் மூச்சுடன் இயைந்து ஆவி உடம்பகத்து வாழ்கின்றது. அங்ஙனம் வாழினும் உடல், புலன், நுண்உடல், உயிர்மூச்சு முதலியவற்றிற்கு ஆவி மறைவாகவே - கள்ளமாகவே நிற்கின்றது. இதுபோலவே, முழுமுதல் வனும் ஆவிகட்கு உயிர்ப்போடு வரினும் கள்ளமாய் நிற்கின்றனன் என்று ஆளுடைய அரசர் அருளுகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

> "*விள்ளத்தான் ஒன்று மாட்டேன் விருப்பெனும் வேட்கையாலே
> வள்ளத்தேன் போலே நுன்னை வாய்மடுத் துண்டி டாமே
> உள்ளத்தே நிற்றி யேனும் உயிர்ப்புளே வருதி யேனும்
> கள்ளத்தே நிற்றி அம்மா எங்ஙனம் காணு மாறே."
>
> —ச. எகூ - எ.

ஆளுடைய பிள்ளையார் அருளும் உயிர்ப்புக் குறிப்புள்ள திருப்பாட்டு வறுமாறு:

> "ஊனில்உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
> ஞானவி ளக்கினை ஏற்றி நன்புலத்து
> ஏனைவ ழிதிறந்து ஏத்து வார்க்கிடர்
> ஆனகெ டுப்பன அஞ்செ ழுத்துமே." —ந. உஉ - ந.

திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டுங் காண்க:

> "உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
> செம்மல் சிதைக்கலா தார்." —திருக்குறள், அஅ0.

---

* 'என்னில்' ஞ. உக - க.

## ஆறாம் அதிகரணம்.

**இனி உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது என்றது.**

எ-து. மே-ள். எ-னின். பிரமப்பொருள் மேற்கூறிப் போந்த சடப்பொருள்கள்போலன்றிச் சித்தாகலான் அதுவே உயிராதலமையுமென விஞ்ஞானான்மவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஆறாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ - ள்.) தொழிற்படுங் கருவிகள் ஒன்றுமின்றிக் கேவலமாய் அதீதாவத்தையினின்றுழி அறியுமாறின்றிப் பின்னர்க் கலைமுதலிய கருவிகளால் அறிவிக்க அறிந்துவருத லுண்மையின் எக்காலத்துந் திரிபின்றி அறிந்தாங்கறிந்து நிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு இது தகாமையான் அங்ஙனம் உணரும் ஆன்மா வேறுண்டு (எ - று).

உணர்த்த உணர்தலெனவே முன் உணராது கிடத்தல் பெற்றாம்.

**அவன் அறிந்தாங்கறிவனென்று அறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

எ-து. பொ-ரை. எ-னின். அறிந்தாங்கறிவதாகிய பிரமப் பொருள் அவிச்சைக்காலத்துக் கருவிகளோடுங்கூடியன்றி அறியாதெனக் கோடுமாகலின் அதுபற்றி உயிர் வேறுண்டென்றல் பொருந்தாதென்னுங் கடாவை ஆசங்கித்து 'அவ்வளவின் அவன் மகிழ்க' என்னும் நியாயத்தால் வேறும் அதன்தாற்பரியமுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) கருவிகளோடு கூடியவழியுந் தன்னியல்பு உணருமாறில்லாத ஆன்மாவைப்போல அம்முதல்வன் மறந்து மறந்து அறிதலின்றி அறிந்தவாறே அறிந்து நிற்கும் பேரறிவுடையனென வேதாகமங்களானறிவிக்கவறிந்து குரவனறிவுறுக்கும் உபதேசமொழியைப் பெற்றுடையதாய் நிற்பதொன்றுளதாகலின், அதுவே மேலுரையளவையாற் சாதித்துப்போந்த ஆன்மா என்றவாறாம். உணர்த்த உணர்தலின் ஆன்மா உளதென மேற்கொண்டது எ - று.

அறிந்தாங்கென்பது அப்பொருட்டாதல் "எண்ணிய எண்ணியாங் கெய்துப"* என்பதனானுமறிக. இதற்குப் பிறவாறும் உரைப்ப. அவையெல்லாம் பொருந்தாமை ஓர்ந்துணர்க.

---

* திருக்குறள், ௬௬௬.

*அறிந்தும் அறிவதே ஆயும் அறியாது
அறிந்ததையும் விட்டங்கு அடங்கி—அறிந்தது
எதுஅறிவும் அன்றாகும் மெய்கண்டான் ஒன்றின்
அதுஅதுதான் என்னும் அகம்.

எ-து. உ-ம். எ-னின். கருவிகளோடு கூடியவழியும் அவிச்சை நீங்காமையின் விடயங்கள்மாத்திரையே அறியுமன்றித் தன் இயல்பு அறியுமாறில்லை. அஃது உபதேசத்தால் அறியற்பால தேயா மாகலான் அதுபற்றி இழுக்கென்னை யென்னுங் கடாவை ஆசங்கித்து அதனையும் மேற்கூறிய நியாயத்தான் உடம்பட்டு இன்னும் ஒருதாற்பரிய உரைக்குமுகத்தானே விடயங்களை அறிவுழியும் படும் வேறுபாடுகூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று. அவனறிந்தாங் கறியுமாறும் உயிர் மறந்து மறந்து அறியுமாறும் தெரித்துணர்த்தி வலியுறுத்துதல் நுதலிற்று எனினும் அமையும்.

(இ - ள்.) அறிந்தும் அறிவதே ஆயும் அறியாது—(கருவிகளெல்லாவற்றோடுங்கூடிச் சாக்கிரத்தானத்தினின்று விடயங்களை அறியுமிடத்தும் ஒருங்கே அறியமாட்டாது) ஒன்றனையே அறிந்தும் ஒன்றனை அறியப்புகுவதாயும் முன்னறிந்தது ஒன்றனை அறியாதொழிந்தும், அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி—இங்ஙனம் ஒரோ ஒன்றாக அறியப்பட்டவிடயத்தையும் இடையீடின்றி அறியமாட்டாது விட்டுவிட்டாங்கே ஐந்தவத்தைப் பட்டடங்கி, அறிந்தது எது—(மீள அறிந்து வருதல் கண்கூடாகக் காணப்படுதலான்) அங்ஙனம் அறிந்து வந்தபொருள் யாது அது (சடமன்றென்பது மேற்காட்டப்பட்டது முன்னருங் காட்டப்படும்), அறிவும் அன்று—(ஒன்றாக இயல்பாகவுணர்தலே பேரறிவாகலின்) அதுவும் மன்றாம், மெய் கண்டான் ஒன்றின்—இனி மெய்யாகிய சித்தாந்தநெறியினை யுணர்ந்தோன் வேறென்னையோ வென மனமொருங்கியாராயுமாயின், அது அதுதான் என்னும் அகம் ஆகும்—காட்டுமொளிக்கு வேறாய கண்ணொளி போல அவ்வறிவிற்கு வேறாய் அதுவதுவே தானெனச் சார்ந்ததன்வண்ணமாய் நின்றறியுமியல்பையுடைய உயிராம் (எ - று).

அறிந்தும் அறிவதே ஆயும் என்னும் உம்மைகள் எண்ணின் கண் வந்தன. அறியாதுமென்னும் எண்ணும்மை விகாரத்தால் தொக்கது. அறிந்ததையும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. அறிவும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது. ஏகாரம் அசைநிலை.

* 'புந்தியை' சித்தியார். சு. உ-உ உ.

அங்கு உணர்த்துமுறைமைத் தானமாகிய இலாடத்தி னென்றவாறு.

அறிந்ததையும் விட்டடங்கடங்கி அறியுமாறு வருகின்ற சூத் திரத்திறுதியினும், அது அது தானெனச் சார்ந்ததன் வண்ணமா மாறு உண்மையதிகாரத்தும் பெறப்படும்.

அறிந்தும் அறிவதே ஆயும் அறியாது அறிந்ததையும் விட்டடங்கடங்கி அறிந்ததெது என்பதற்கு ஓதியதனை ஓதிய பொழுதே உணர்ந்தும் பலகால் ஓதி உணர்வதாயும் பலகால் ஓதியும் உணர்தலின்றியும் உணர்ந்ததனையும் பின்னர் மறந் தொழிந்தும் இவ்வாறோதியுணர்ந்ததியாதென் றுரைத்தலு மொன்று. இப்பொருட்கு அடங்கி யென்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க.

இங்ஙனம் மூவகைப்படுத்துரைப்பவே, உணர்த்தவுணர்த லென்னுமேதுவான் முறையே அதீதத்தின்க ணிகழு மியல்புபற் றியும் சுத்தத்தின்க ணிகழு மியல்புபற்றியும் உணர்த்து முறை மைக்க ணிகழு மியல்புபற்றியும் உயிருண்மை சாதிக்கப்பட்டது. இது தற்பரமுமன்லே என்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

விஞ்ஞானமே ஆன்மாவென்னும் புத்தரின் யோகாசாரன் மதத்தை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணமெனக்கொண்டு அதற்கியையவுரைப்பாருமுளர்.

## விளக்கம்

### முதல்வன்

முதல்வனைப் பிரமம் என்பர். முதல்வனையே ஆவி என்பர். அவர் கூறுமாறு: 'உடல், புலன், நுண்உடல், உயிர்மூச்சு' இந்நான்கும் அறிவில் பொருள்கள்; ஆதலின் அவை ஆவி அல்ல என்பது பொருந்தும். முதல்வன் அறிவுடையவன். அவனையே ஆவி என்று கூறுவதில் என்ன தடை உளது? யாக்கும் எவ்வகைத் தடையுமிருப்பதற்கு வாயில் ஏதும் இல்லை என்பராம் இக்கொள்கையாளராகிய விஞ்ஞானான்ம வாதிகள் என்பர்.

உடல் ஆவி அன்று என்பது இரண்டாம் கூற்றிலும், ஐம்புலன் ஆவி அன்று என்பது மூன்றாம் கூற்றிலும், நுண்உடல் ஆவி அன்று என்பது நான்காம் கூற்றிலும், உயிர்மூச்சு ஆவி அன்று என்பது ஐந்தாம கூற்றிலும் தக்கசான்றுகளுடன் மேற்கோள் காட்டி வலியுறுத்தப்பட்டன.

### முதல்வன் ஆவி அல்லன்

இவ் ஆறாம் கூற்றில் முதல்வன் ஆவி அல்லன் என்பது நாட்டப் பெறுகின்றது. ஆவிகள் விட்டபுலம்பில் கருவிகள் எவற்றொடும் கூடுத லின்றி அறிவு விளங்காமல் கிடக்கின்றன. விட்டபுலம்பு என்பது துரியா தீதமாகிய கேவலம். விட்டபுலம்பு - கருவிகளுடன் கூடாத தனிமை.

தொட்ட நனவில் உழைப்பு (கலை) முதலாகிய கருவிகளால் அறிவிக்க அறிகின்றன. முதல்வன் திரிபின்றி என்றும் ஒரு தன்மையனாய் முழுதும் அறிவன். ஆகவே முதல்வன் ஆவி அல்லன். கருவிகளுடன் கூடாதவழி உணராதும் கூடியவழி உணர்ந்தும் வரும் ஆவி வேறு உண்டு. இந்நிலையே உணர்த்த உணரும் நிலை. தொல்புலம்பு-கருவிகள் படைத்துக் கூட்டாமுன் உள்ள தனிமை.

## மாணி

மாணி ஆவான் ஆசான் அருமறைத் திருமொழியின் மாண்பினைப் பெற்றவன் ஆவன். திருமொழி - உபதேசம். உபதேசத்தைப் பெற்றுள்ளவன் உபதேசி.

முதல்வன் என்றும் ஒரு தன்மையாய் அறியும் தன்மையுடையவன் என்பது மெய்ம்மையே. ஆயினும், அவன் அறியாமை (இருள்) யோடு கூடிய காலத்தில் உழைப்பு முதலிய கருவிகளோடு கூடியல்லது உணரான். அதனால் அவனே ஆவி. அவனுக்கு வேறாக ஆவியுண்டென்று கூறுவது பொருந்தாது என்பர். இதனை மறுக்கும் துணிபு வருமாறு :

ஆவிகள் கருவிகளோடு கூடிய வழியும் தன்னியல்பும் முதல்வன் இயல்பும் உணரா. அம் மட்டுமன்று. மறந்து மறந்து அறியும். இவ் உண்மையினைக் குரவன் மெய்யுணர்வு நூலின்வழி அறிவுறுத்துவன். அவ் அறிவினைப் பெற்றுடையவனே மாணி எனப்படுவன். அறியாமையிற் கட்டுண்டு பின் கருவிகளோடு கூடி அறிவிக்க அறிந்துவரும் தன்மையுடைய ஒன்றினுக்கு முதன்மை எங்ஙனம் உண்டாகும்.

முதல்வனோ அறியாமையிற் கட்டுணலும் கருவிகளோடு கூடலும் அறிவிக்க அறிதலும் முதலாய குறைபாடுகள் ஒன்றும் இல்லாதவன். ஒருதன்மையாய் அறிபவன். அறிந்தாங்கு அறிதல் என்பது அறிந்த படியே அறிதல் எனப் பொருள்படும். அது, திருவள்ளுவப் பெருந்தகையார்,

“எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்.” —திருக்குறள், ௬௬௬

என்று அருளிய திருப்பாட்டில் எண்ணியாங்கு என்பது எண்ணிய படியே என்று பொருள்படுவதை ஒக்கும்.

‘அறிந்தும்................. .........அகம்.’

## மூவகை அறிவு

ஆவி எல்லாக் கருவிகளோடுங்கூடிய நனவில் புலன்களை அறியும் பொழுதும் ஒவ்வொன்றாக அறியும். ஐம்புலன்களையும் ஒருமிக்க அறியாது. அறிந்துகொண்டு இருக்கும்பொழுதே மற்றொன்றனை அறியச் செல்லும். மற்றொன்றனை அறியுங்கால், முன் அறிந்ததை மறக்கும். கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்குதல் முதலிய நிலைகளை எய்துங்கால் அறவே மறந்துவிடும். மீண்டும் நனவுக்குவந்து நினைந்துணரும். நனவின்கண் உணர்த்த உணரும் முறைமையிலும் ஐந்து நிலைமைகள் உண்டு. இந்நிலைகளின் நின்று உணருவதே ‘விட்டடங்கி’ உணருவது.

விட்டபுலம்பு, புரிவு, உணர்த்துமுறைமை என்று மூவகையான் அறிவதால் மூவகை அறிவு எனக் கூறப்பட்டது. விட்டபுலம்பு - துரியாதீதம். புரிவு - சுத்தம். உணர்த்துமுறைமை - முப்பொருள் உண்மையினை ஆசான் நூல்வழியானும் அருமறைவழியானும் உணர்த்தும் முறைமை என்றலும் ஒன்று. அருமறை - உபதேசம்.

திருவள்ளுவப் பெருந்தகையாரும் உபதேசம் என்னும் பொருளில் அருமறை என்னும் சொல்லை அருளியுள்ளார். அத்திருப்பாட்டு வருமாறு :

“ அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.” —திருக்குறள், ௮௪௭

விட்டபுலம் பேபுரிவு மேலுணர்த் தும்முறைமை
தட்டிலறி வாம்மும்மை சாற்று.

## நனவில் ஐந்நிலை

நனவில் நனவு, நனவில் கனவு, நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப்படங்கல் என்ப. இவற்றைச் சாக்கிர சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சாக்கிர சுழுத்தி, சாக்கிர துரியம், சாக்கிர துரியாதீதம் என்ப.

## மெய்கண்டான்

‘மெய்கண்டான்’ என்பது செம்பொருள் துணிவினன் எனப் பொருள் பயக்கும் சீரிய பெயராகும். செம்பொருள் துணிவினன் என்பது ‘சித்தாந்த நெறியினை உணர்ந்தோன்.’ இப்பொருளே பயப்பதாகும் திருவள்ளுவ நாயனார் கூறியருளிய மெய்யுணர்ந்தோர் என்னும் திருமொழியும். மெய்கண்ட நாயனார் இப்பெயரினை நான்கு இயல்களினும் ஆறு இடங்களில் அருளியுள்ளனர்.

அளவை இயல் மூன்றும் சூத்திரத்து ஆறுங்கூற்று வெண்பாவில் ‘மெய்கண்டான் ஒன்றின்’ எனவும், தன்மை இயல் ஆறும் சூத்திரத்து முதற்கூற்று வெண்பாவில் ‘மெய்கண்டான் ஆயின்’ எனவும், அச் சூத்திரத்து இரண்டாம் கூற்று முதல் வெண்பாவில் ‘மெய்கண்டான் எண்ணின்’ எனவும், இரண்டாம் வெண்பாவில் ‘மெய்கண்டான் தன்னால் உணர்தலால்’ எனவும், துணைஇயல் எட்டாம் சூத்திரத்து மூன்றும் கூற்றின் முதல் வெண்பாவில் ‘மெய்கண்டான் மெய்ப்பொருட்கு’ எனவும், துய்ப்பியல் பத்தாம் சூத்திரம் இரண்டாம் கூற்றின் ஐந்தாம் வெண்பாவில் ‘மெய்கண்டான் சத்தருளிற் காணின்.’ எனவும் கூறியருளுவனவே நான்கியல்களினுமுள்ள ஆறு இடங்களாகும்.

நான்கியலில் மெய்கண்டான் ஒன்றுமூன் றொவ்வொன்றுத்
தான்ஆ றிடம்புணர்த்தார் சார்ஒன்றின் ஆயின்எண் ணின்
தன்னல் உணர்தலால் மெய்ப்பொருட்கு காணின்மூன்
றன்றெட் டுப்பத்தாம் ஓர்.

## இலக்கணம்

‘எண் உம்மை’ ஒன்று இரண்டு முதலாக எண்ணப்படுவன. ‘அறிந்தும், அறிவதே ஆயும், அறியாதும்’ என மூன்றாக எண்ணுவதால் எண்

உம்மை. இம்மூன்றனுள் ‘அறியாதும்’ என்று இருக்கவேண்டுவது பாட்டில் அறியாது என்று இருக்கிறது. அதனால் உம்மை திரிபால் தொக்கது. திரிபு - விகாரம்.

‘அறிந்ததையும்’ என்னும் உம்மை இழிவு சிறப்பு. அஃதாவது அறியவேண்டிய உயர்ந்த உறுதிப் பொருளாம் மெய்ப்பொருள் விழுமிய முழுமுதல்வன். அவனை உணர்தற்குக் கருவியே உடல் உலகங்கள். ஆவிகள் இவற்றையே சிறந்த பொருள் என்று எண்ணுவதால் இழிபு சிறப்பு ஆயிற்று. இழிந்ததனைச் சிறப்பித்துக் கூறுவது இழிவு சிறப்பு.

> கண்ணாடி நூல்கருவி கைக்கொண்டோன் நோக்குணர்வு
> பண்ணெழுதல் செய்யாமை பாழ்.

‘அறிவும்’ என்னும் உம்மை இறந்தது தழீஇயது. முற்கூறிய கூறுகளால் பெறப்பட்ட ‘அறிவில்லனவும்’ அன்றாகும் என்பதைத் தழுவியது. ‘அறிவதே’ என்றதன்கண் உள்ள ‘ஏ’காரம் அசை.

## நான்கு ஏழு

‘அறிந்ததையும் விட்டங் கடங்கி’ அறியுமாறு நான்காம் சூத்திரத்து இறுதியிற் காணப்படும். ‘அது அதுதான்’ எனச் சார்ந்ததன் வண்ணமாம் முறைமை ஏழாம் சூத்திரத்திற் பெறப்படும்.

## தற்பரம்

இச்சூத்திரத்து முதற்கூற்றிற் கூறப்படுகின்ற ‘தற்பரம்’ முழுமுதல்வனே. இதனை வரும் ஆளுடைய அரசர் திருப்பாட்டும் வலியுறுத்தும்:

> “நிற்பனவும் நடப்பனவும் நிலனும் நீரும்
> நெருப்பினொடு காற்றாகி நெடுவான் ஆகி
> அற்பமொடு பெருமையுமாய் அருமை ஆகி
> அன்புடையார்க் கெளிமையதாய் அளக்க லாகாத்
> **தற்பர**மாய்ச் சதாசிவமாய்த் தானும் யானும்
> ஆகின்ற தன்மையனை நன்மை யோடும்
> பொற்புடைய பேசக் கடவோம் பேயர்
> பேசுவன பேசுதுமே பிழையற் றோமே” — தி. கூஅ-எ

## ஏழாம் அதிகரணம்.

**இனி மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளதென்றது.**

எ-து. மே-ள். எனி-ன். உடம்புமுதலியவற்றுள் ஒரோ ஒன்றே ஆன்மாவாதல் இன்றென்றது ஒக்கும்; அவற்றுள் ஒன்று குறைந்த வழியும் அறிவு நிகழாமையானும் எல்லாங் கூடியவழி அது நிகழ்தலானும் அனைத்துங் கூடிய சமுதாயமே உயிராதல் அமையுமெனச் சமூகான்மவாதிகளாகிய சௌத்திராந்திகர் வைபாடிகர் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ - ள்.) மாயாகாரியங்களான் யாக்கப்பட்டியன்ற சூத்திரப்பாவை போலும் உடம்பின்கண்ணே அவற்றிற்கு வேறாய் ஆன்மா உண்டு (எ - று).

எனவே அவையெல்லாம் மாயையின்காரியங்களாய் நிலை பெறுதனவாகலின் நிலைபேறுடைய உயிராகா என்றவாறாயிற்று.

மாயை ஆகுபெயர். இகரம் விரித்தல்விகாரம்.

**அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்.**

எ - து. ஏது எ-னின். சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச் சமுதாயம் ஐந்தும மாயாகாரியமென்பது எம்மனோர்க்கு உடம்பாடன்மையின் அதுபற்றி ஆன்மா வேறுண்டெனச் சாதித்தல் அமையுமாறென்னையென்னுங் கடாவை ஆசங்கித்து அவ்வாவின் அவன்மகிழுக என்னும் நியாயம்பற்றி வேறுமோர் ஆற்றால் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) நீ ஐந்துகந்தமெனக் கொண்ட மாயாகாரியங்கள் ஆன்மா எனப் பெயர்பெறுமாறின்றி வேறுவேறு பெயர் பெற்று நிற்பனஆகலான் மாயாஇயந்திர தனுவினுள் ஆன்மா உளதென மேற்கொண்டது (எ - று).

வேறுவேறு என்பது வெவ்வேறென மரீஇயிற்று.

கலைஆதி மண்அந்தம் காணிலவை மாயை
நிலையாவாம் தீபமே போல—அலையாமல்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடில் அதுதனுவாம்
தானத்தின் வேறகுந் தான்.

எ - து. உ-ம். எ-னின். அவை தனித்தனி வெவ்வேறு பெயர் பெறினுந் தொக்க சமுதாயத்தின்கண் ஆன்மா எனப் பெயர்பெறுமெனக் கோடுமாகலின் அதுபற்றி இழுக்கென்னை என்னுங் கடாவை ஆசங்கித்து அவை வெவ்வேறு பெயர்

பெறும் வழியும் அவர் கூறியவாறு பெயர்பெறாது வேறுபெயர் பெறுமாறும் அவை மாயா காரியங்களே ஆமாறும் அவை தொக்க சமுதாயத்தினும் ஆன்மா எனப் பெயர் பெறாது வேறு பெயர் பெறுமாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) காணின் கலை ஆதி மண் அந்தம் (ஆம்)—(அங்ஙனஞ் சமுதாயம் ஆதற்குரியவை யாவையென்று) அளவைகளான் அறியப்புகின் கலைமுதல் நிலம் ஈறாகிய தத்துவங்களேயாம், அவை மாயை நிலையாவாம்—அவை அனைத்தும் மாயையின் காரியங்களாகலின் நிலையுதலின்றிச் சிலகாலம் நின்றழிவனவாம், ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில்—(அவை தொக்க சமுதாயத்தின் விளங்கித் தோன்றுவதாய) ஞானத்தின் இயல்பை அசையாமல் (கருத்தை ஒருக்கி) முன்னுணர்ந்து (பின் அச்சமுதாயத்தை) யாதென்றாயின்—அது தீபமேபோலத் தனுவாம்—அச்சமுதாயம் (கண்ணுக்கு) விளக்குப்போல (உயிர்க்குத் தூல சூக்கும பரங்களாகிய) உடம்பாம், தான் அதனின் வேறு ஆகும் தான்—(ஆதலாற் கண் விளக்கின் வேறாயினாற்போல) உயிர் அவ்வுடம்பின் வேறாம் (எ - று).

ஆமென்பது மேலுஞ்சென்றியையும்.

மாயை ஆகுபெயர்.

தானென்பது முன்னையதெழுவாய்; பின்னையது அசை.

அதனினென்பது அத்தினென மரீஇயிற்று, * "இத்தை மெய்யெனக் கருதி" என்புழிப்போல.

இதனானே தனி என்றதனை வலியுறுத்தியவாறு.

இவ்வாறு மூன்று சூத்திரத்தானும் சைவாகமங்களுள் கூறப்படும் பதிமுதலிய பொருள்களதுண்மை அனுமானவளவையான் வலியுறுத்தப்பட்டது. ஆகமவளவையே அமையுமாகலின் அனுமானவளவை மிகையாம்போலுமெனின், ஆகாது; மந்தவுணர்வுடைய மாணுக்கர்க்கு வேற்றுச் சமயநூல்களை நோக்கியவழிச் சைவாகமப்பொருளின் மலைவு நிகழாமைப் பொருட்டும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னும் நான்குவகையானன்றி ஆகமங்களைக் கேட்ட துணையானே அநுபவங் கூடாமையிற் சிந்தனை செய்து வன்மை மென்மைகளை உணர்ந்து தெளிந்துகோடற்பொருட்டும் கருதலளவையும் வேண்டப்படுமாகலான் என்க.

ஏழாம் அதிகரணமும், மூன்றும் சூத்திரமும் முடிந்தது.

பிரமாண இயல் முற்றிற்று.

---

* திருவாசகம், 'பொத்தையூன்' அதிசய - எ.

## விளக்கம்

'கலையாதி..............தான்.'

### உடம்பினுள் ஆவி

உடம்பு மாயா காரியக் கூட்டம். அது தோன்றி நின்று அழிவது. ஆவி அதனைக் கருவியாகக் கொண்டு அதனுள் விரவிநின்று இம்மை உம்மை அம்மை இன்பந்துய்ப்பது. ஆவி தோன்றி நின்று அழிவது அன்று. கடல் நீரில் தோன்றும் குமிழி தோன்றி நின்று அழியும். கடல் நீர் அதுபோல் தோன்றி நின்று அழியாது அல்லவா? இஃது ஒருபுடை ஒப்பு.

உடம்பினை 'மாயா இயந்திர தனு' என்பர். தனு—உடம்பு. உடம்பு முதலியவற்றைத் தனித்தனி ஆவி அன்று என்பது பொருந்தும். அவை தனித்தனியாக இருக்குங்கால் அறிவு விளங்குவதில்லை. அவை ஒன்று கூடிய கூட்டத்தில் அறிவு விளங்கும். இஃது எழுத்துக்கள் தனித்தனியாக நிற்குங்கால் பொருள் விளக்குவதில்லை. ஆனால் சில பல எழுத்துக்கள் சேர்ந்து சொல்லாகுங்கால் பொருளை விளக்குமல்லவா? அதனை ஒக்கும்.

### அகக் கூட்டமும் ஆவி அன்று

அகக் கூட்டம் என்பது அகச் சமுதாயம். புத்தர் கூட்டத்தைச் சமூகம் என்பர்; சமூகம் என்பதைக் கந்தம் எனவும் கூறுவர். அங்ஙனம் கூறும் கந்தம் ஐந்து என்பர். அவை உருவம், வேதனை, ஞானம், குறி, வாசனை என்ப. இவ் ஐந்தும் சித்தமும் சித்தப்பகுதியும் என்பர். அவர்கள் கொள்கை இவை மாயகாரியம் அன்று என்பது. ஆகவே இக் கூட்டமே ஆவி என்பர்.

அவர் கொள்கைப்படி பார்த்தாலும் இவ் ஐந்தனுள் ஒன்றிற்கேனும் ஆவி என்று பெயர் வழங்கவில்லை. ஆகவே இவை ஆவி ஆகா இவற்றின் அகத்து இவற்றிற்கு வேறாக ஆவி உண்டு என்பதே வாய்மையாம்.

### கூட்டத்தும் ஆவிப்பேர் இன்று

தனித்தனி ஆவி என்னும் பெயர் பெறாவிடினும் கூட்டத்தில் ஆவி என்னும் பெயர் பெறும் என்பர். ஆராயும் இடத்து அவை மாயா காரியங்கள் என்றே பெயர் பெறும். அவற்றை உழைப்பு முதல் நிலம் ஈறாகச் சொல்லப்படும். இவற்றையே 'கலையாதி மண் அந்தம் என்றனர்.' இவை கண்ணுக்குக் கருவியாய்த் துணைசெய்யும் விளக்குப்போல ஆவிக்குக் கருவியாய் பருவுடல், நுண்உடல், முதலுடல் ஆக விளங்கும். இதனாலும் அவ்உடம்பிற்கு வேறாக ஆவி உண்டு என்பது தேற்றம். கண் விளக்கின் வேறு ஆனாற்போல ஆவியும் உடம்பின் வேறு. ஆகவே உடம்பு ஆவியாகாது. அதனுள் ஆவி வேறு உண்டு.

### தொகைப் பொருள்

அளவை இயலின்கண் கூறப்படும் மூன்று சூத்திரங்களானும் முறையே இறை தளை உயிர் உண்மைக்கு வழிஅளவை கூறப்பட்டது. இம்மூன்றினையும் முறையே பதி பாசம் பசு என்பர். வழிஅளவை எனினும் கருதல்அளவை எனினும் ஒன்று. இதனை அனுமானப் பிரமாணம் என்பர்.

இறைவன் நூலிற் கூறியுள்ளன என்று இவற்றை ஏற்றுக்கொள்ளச் செய்தல் இயலாததொன்றோ? அன்று! அன்று! கூர்மை இல்லாத—

மட்டமான அறிவுடைய மாணவர்களுக்கு உரையளவை மட்டும் போதாது. அவர்கள் வேற்றுக் கொள்கையாளரின் நூற்களைப் பார்க்கவோ, அவர்கள் வினவும் வினாக்களைக் கேட்கவோ நேரின் மயங்குவர்.

வேற்றுக் கொள்கையாளரா வேற்றுச் சமயத்தர். மாணவர் மயங்காது இருத்தற்பொருட்டு அவர்கள் இறைவன் நூலினைக் கேட்டலோடு அமையாது கருதல்—சிந்தித்தற்கும் இடமாக்குதல் வேண்டும். இதுவே அவர்கள் அறிவின் முழுத்துணையால் முயன்று தெளிந்து கெழுமுதல் ஆகும். இம்முறையினையே கேட்டல், கருதல், தெளிதல், ஒருமையுறல் என்பர். இவற்றையே 'கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை' என்பர். சிந்தித்தலே கருதலெனப்படும். நிட்டையே ஒருமை எனப்படும். இங்ஙனம் கருதிப் பார்ப்பதையே திருவள்ளுவ நாயனார் அறிவென்பர். அத் திருப்பாட்டு வருமாறு:

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு." —திருக்குறள், ௪௨௩.
கேட்டல்கரு தல்தெளிதல் கேடிலொரு மையுறல்நாற்
கூட்டால்மெய்த் துய்ப்புளதாம் கூறு.

**புக்க ஆவி**

நிலையிலா உடல், பொருந்தாத உடல் என்று சொல்லப்படுகின்ற இவ் உலகத்துப் புக்க ஆவி வேறு உண்டு என்பதை ஆளுடைய அரசர் அருளிய வரும் திருப்பாட்டானும் உணர்க:

"பொருந்தாத உலகத்திற் புக்க ஆவி
போமாறு அறிந்தறிந்தே புலைவாழ் வுன்னி
இருந்தாங் கிடர்ப்படநீ வேண்டா நெஞ்சே
இமையவர்தம் பெருமானன் றுமையாள் அஞ்சக்
கருந்தாள் மதகரியை வெருவச் சீறுங்
கண்ணுதல்கண் டமராடிக் கருதார் வேள்வி
நிரந்தரமா இனிதுறை நெய்த்தான மென்று
நினையுமா நினைந்தக்கால் உய்ய லாமே." —௬. ௪௨—௬.

**தனிமை**

ஆவி 'இரண்டுமிலித் தனிமை'யாம் எனப்படினும் ஆண்டான் திருவருளால் அவன் திருவடி சேர்ந்து தனிமை நீங்கி இனிமை எய்தும் என்பதை ஆளுடைய அடிகள் அருளிய வரும் திருப்பாட்டான் உணர்க:

"ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி தமியனேன் தனிமை தீர்த்தே."
—அ. திருச்—௬அ.

**கருத்து**

இன்உடல் அகத்துயிர் விளக்கம் மன்னும்.

**முதுமொழி**

மாயா உடலை இயக்காவி மற்றெட்டால்
ஆயாதார் ஐயம் அகற்றுவதாம்—ஓயாத
"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து." —திருக்குறள், ௩௫௩.

# இலக்கண இயல்

## நான்காம் சூத்திரம்

அந்தக் கரணம் அவற்றினொன்று அன்றவை
சந்தித்தது ஆன்மாச் சகசமலத்து உணராது
அமைச்சரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே.

**என்-து. சூ-ம். என்-னின், இதுவுமது.**

*எ - து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ - ள்.) *பிரமாணம் இலக்கணம்இரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்றென்னும் முறைமைபற்றி மேற்பிரமாணத்தால் பெறுவிக்கப்பட்ட பதி பாச பசுக்களுக்கிலக்கணம் எதிர்நிரனிறையாக வைத்துக் கூறுவான்தொடங்கி அவற்றுள் இது மேலடுக்க நின்ற ஆன்மாவின் இலக்கணம் கூறுதல் நுதலிற்று.*

*சொற்பல்காமைப்பொருட்டும் ஒத்துவேறாயவழியும் இயைபுடைமை உணர்ந்துகோடற் பொருட்டும் ஈண்டு இதுவும் அது என மாட்டெறிந்துரைத்த ஆசிரியர், இங்ஙனமுரைத்துக் கோடற் கேற்பவன்றே ஆண்டு ஆன்மாவின துண்மையுணர்த்துதனுதலிற்றெனச் சிறந்தெடுத்தோதாது பொதுப்பட ஆன்மப்பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்றென்றதூஉ மென்க. இவ்வாறன்றி மேலைச் சூத்திரத்தின் ஆன்மாவினதுண்மை கூறுமுகத்தால் தொகுத்தோதிய அஞ்சவத்தை ஈண்டிலக்கணம் கூறுமுகத்தான் விரித்தோதப்படுதலின், இதுவுமதுவென்றது மேலைச் சூத்திரப்பொருளோடு மாட்டெறிந்தது என்றுரைப்பினுமாம். இதனானுஞ் சூத்திரஇயைபு இனிது விளங்கும்.*

*இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரஞ் சித்தமென்னும் நான்கனுள் ஒன்றன்றாயினும் நுண்ணுணர்வின்மையிற் சூழ்ச்சித்துணைவராகிய அமைச்சரோடும் கூடிநின்று தன்தொழில் நடாத்தும் அரசன்போல, சகசமலத்தினான் உணர்வின்றிக் கஞ்சுகம் போலுங் கலாதிகளாற் பொதுவகையான் உணர்வு நிகழினுஞ் சிறப்புவகையான் நிகழுமாறு அவற்றால் பெறப்படாமையின்*

சிறப்புவகையானுணருமாறு தனக்குச் சூழ்ச்சித்துணையாகிய அவ்அந்தக்கரணங்களோடு கூடிநின்று சாக்கிர முதலிய ஐந் தவத்தைஉடைத்தாம் (எ - று).

எனவே, அங்ஙனநின்று அஞ்சவத்தைப்படுதல் ஆன்மா வுக்கு இலக்கணமென்றவாறாயிற்று. இஃது உயிர்க்குத் தடத்த லக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஒன்றன்றாயினும் சகசமலத்து உணராது அமைச்சர சேய்ப்ப அவற்றோடு சந்தித்தது நின்று அஞ்சவத்தைத்தாம் என இயையும்.

உணராது சந்தித்ததுஎன்பது காரணகாரியப் பொருட்டாய் நின்றது. சந்தித்தது வினையெச்சமுற்று.

இவ்வாறன்றி, ஆன்மா அவற்றினொன்றன்றாயினும் சகசம லத்துணராமையால் அவற்றொடுசந்தித்தது. சந்தித்தவழி அவை யும்தானும் அமைச்சரசுஏய்ப்ப நிற்றலான் ஐந்தவத்தைத் தாயிற்று என அதிகாரணம் பகுத்துக்கோடற்கேற்ப வேறு வேறு வினைமுடிபு செய்துரைத்தலும் ஒன்று.

வடமொழிச்சூத்திரத்தோதுதலின் ஈண்டும் ஆயினுமென வருவித்து ஒருதொடராக வைத்துரைக்க. அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்றாயினுமெனவே, அவற்றினொன்றாதலும் அதுவாதமுகத்தால் ஈண்டேபெற்றாம். இஃதுணராதார் அந் தக்கரணம் அவற்றினொன்றென்றதனை வேறு தொடராக வைத்து உரைப்ப. அங்ஙனம் உரைப்பின், முன் வருவனவற்றை அவாய்நின்று ஒரு பொருண்மேல் வாராமையின் ஒரு சூத்திரம் ஆதற்கேலாமையறிக.

அவை சந்தித்தது என்புழி ஒடுவுருபு விகாரத்தால் தொக் கது. இரண்டாவது விரிப்பினும் அமையும்.

ஆன்மா என்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித் துரைக்கற்பாலதாகவும், ஈண்டு வேறோதியது ஒத்து வேறாதல் பற்றி என்றுணர்க.

ஆன்மா என்னுஞ்சொற்குப் பொருள் வியாபகமென்ப தூஉம் சித்தசித்தென்பதூஉமாம்.

மலத்து மலத்தாலெனவிரிக்க.

அமைச்சரசு அமைச்சரோடு கூடிய அரசென உருபும் பொருளும் உடன்றொக்கன.

காரணப்பொருட்டாய நின்றென்னும் வினையெச்சம் அஞ்சு அவத்தைத்தென்னும் வினைக்குறிப்புமுற்றோடு முடிந்தது.

இதனுள் அந்தக்கரணம்அவற்றினொன்று அன்றென்றது ஓரதிகரணம்; ஒன்றுஅன்றாயினுஞ் சகசமலத்துணராது அமைச்சரசேய்ப்பவவை சந்தித்தது என்றது ஓரதிகரணம்; அமைச்சரசு ஏய்பநின்று அஞ்சவத்தைத்தேயென்றது ஓரதிகரணம். ஆக மூன்று அதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

## விளக்கம்

### சூத்திர இயைபு

மூன்றாம் சூத்திரத்துக் கருத்துரை 'ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று.' ஆன்மப் பிரகாசம் என்பது ஆவி விளக்கம். ஆவி விளக்கம் எனவே ஆவியது உண்மையும் தன்மையும் விளக்குவது என்று பொருள் தரும். ஆனால், அக்கருத்துரை 'ஆவியின் உண்மை உணர்த்துதல் என்று சிறந்தெடுத்துக் கூறல்வேண்டும். அங்ஙனம் கூறாமை மூன்றாம் சூத்திரமும் நான்காம் சூத்திரமும் ஆவியைப்பற்றியே கூறுகின்றன என்று உணர்த்துதற்கேயாம். ஆவியின் விளக்கம் என்பது பொது. ஆவியின் உண்மை என்பது சிறப்பு.

முதற் சூத்திரத்தில் இறை யுண்மையும், இரண்டாம் சூத்திரத்துத் தளை உண்மையும், மூன்றாம் சூத்திரத்து உயிர் உண்மையும் கூறப்படுகின்றன. இம் முப்பொருள்களின் இலக்கணங்களை நிரல்நிறையாகக் கூறல்வேண்டும். அப்படிக் கூறுவதானால் நான்காம் சூத்திரம் இறையின் இலக்கணம் கூறுவதாதல் வேண்டும். ஐந்தாம் சூத்திரம் தளையின் இலக்கணமும், ஆறாம் சூத்திரம் உயிரின் இலக்கணமும கூறுவதாதல் வேண்டும். அப்படிக்கு அமையவில்லை.

இப்பொழுது அமைந்திருப்பது நான்காம் சூத்திரம் உயிரிலக்கணமும், ஐந்தாம் சூத்திரம் தளை இலக்கணமும், ஆறாம் சூத்திரம் இறை இலக்கணமும் ஆகும். இவ்வாறு அமைந்திருப்பதை எதிர் நிரல்நிறை என்பர்.

அல்லதூஉம் மூன்றாம் சூத்திரத்து ஐம்பாடு—ஐந்நிலை தொகுத்து ஓதப்பட்டன. அவற்றையே நான்காம் சூத்திரத்து விரித்து ஓதுகின்றனர். ஆவியின் உண்மை கூறுமிடத்துத் தொகுத்துக் கூறுதலும, இலக்கணம் கூறுமிடத்து விரித்துக் கூறுதலும் மரபு ஆகும். ஐம்பாடு—ஐந்தவத்தை.

ஆகவே 'இதுவும் அது' என்பது சூத்திரக் கருத்தோடு மட்டும் அன்றிப் பொருளோடும் மாட்டெறியப் பட்டதெனக் கூறினும் பொருந்தும். மூன்றாம் நூற்பாவில் ஐம்பாடு தொகுத்துக் கூறுமாறு .

முதல் மூன்று கூறுகளானும் நனவும், நான்காம் கூற்றாற் கனவும், ஐந்தாம் கூற்றால் உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படங்கல்களும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

"மூன்றுமுக் கூறுநனு நான்குகனு ஐந்துறக்கோ
டேன்றமேல் ஐந்தொகையாம் இங்கு."

## மாட்டெறிதல்

நான்காம் சூத்திரப் பொருள் மூன்றும் சூத்திரப் பொருளோடு தொடர்பு காட்டுவது அணுகிய நிலையிலுள்ள மாட்டெறிதலாம். மாட்டெறிதற்கு விதி வருமாறு :

" அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்."

—தொல். பொருள் - ருஉஉ.

## உண்மை

பொருள் உண்மை காண்டற்கு அளவையும் தன்மை (இலக்கணமும்) யும் ஆகிய இரண்டும் வாயில்களாகும். அளவை மூன்று: காண்டல், கருதல், உரை என. தன்மை இலக்கணம். எடுத்துக் காட்டாகத் தீ உண்மையை அறிதற்கு நேரில் கண்ணுற் காணின் காண்டலளவை ஆகும். புகையைப் பார்த்துத் தீ உண்டு என உறுதி கொள்ளுவது கருதலளவை ஆகும். தீ ஒளியும் வெப்பமும் உடையது. வெளிச்சம் தருவது. இருட்டைப் போக்குவது. சமைத்தல் முதலிய தொழில்கட்குத் துணையாவது என்று நூலின்வாயிலாகத் தெரிந்துகொள்வது உரையளவை. தீயைக் காணாத இடத்தும் வெப்பம் முதலியவற்றால் உணர நேரின் அதுவும் அதன் தன்மை—இலக்கணம் ஆகும்.

அதுபோல், உயிர் உண்மை, தளை உண்மை, இறை உண்மை மூன்றனையும் முறையே மூன்றும் நூற்பா, இரண்டாம் நூற்பா, முதல் நூற்பாக்களில் வழி அளவைமுறையால் கூறியருளியவற்றை ஈண்டு இலக்கண முறையால் கூறியருளுகின்றனர்.

ஆன்றஅள வைஇலக்க ணத்தால் பொருளுண்மை
தோன்றச்செய் தல்முறையாம் சொல்.
போற்று புகைவெப்பம் புக்களவை தன்மைதீத்
தோற்றம் பொருளுண்மை தூக்கு.

## பொதுவகை உணர்வு

ஒருவன் விழித்தவுடன் அவனுக்கு இருக்கும் அறிவு பொதுஅறிவு எனலாம். முயற்சியுடனும், ஆள்வினை புரிதல் (வேலைசெய்தல்) சிறப்பு அறிவு எனலாம். அதுபோல் ஆவிக்கு அறியாமையில் நின்று நீங்கிச் சிறிது அறிவு விளங்கும்; அப்பொழுது பகுத்தறிவு உண்டாகாது. இப்போது அறிவு தூவாமாயையினின்று தோன்றும் காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு என்னும் ஐந்துறுப்பால் நிகழ்வது.

காலமே ஊழ்உழைப் போடுணர் வாம்விழைவால்
சாலும் பொதுஅறிவு சாற்று.

## சிறப்புணர்வு

மேற்கூறிய ஐந்தனுடன்கூடிப் பொதுவகை உணர்வு நிகழும். ஆவிக்குச் சிறப்புணர்வாகிய பகுத்தறிவு நிகழ்வதற்கு எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு ஆகிய நான்கு கருவிகளுடனும் ஆவி பொருந்துதல் வேண்டும். அப்பொழுது சிறப்புணர்வு நிகழும். இஃது இன்புறுநிலை

எய்துதற்கு மடிநீக்கம், முயற்சி ஊக்கம், ஆள்வினைப் புரிவு மூன்றும் வேண்டும் என்பதை ஒக்கும். மடிநீக்கம் மலநீக்கமாகும். முயற்சி ஊக்கம் ஐங்கருவியுடன்கூடிப் பொதுவகை உணர்வு நிகழ்வதையொக்கும். ஆள் வினைப் புரிவு நான்கு கருவிகளுடனும் பொருந்திச் சிறப்புணர்வு நிகழ் வதை ஒக்கும்.

எண்ணம் மனமோ டெழுச்சி இறுப்பெனநால்
வண்ணம் சிறப்புணர்வா யில்.

இந்நான்கும் சித்தம், மனம், ஆங்காரம், புத்தி எனவும் கூறப்படும்.

மலநீக்கம் மாமடியின் நீக்காம் முயற்சி
நலத்துணையாம் ஆள்வினையாம் துய்ப்பு.

## ஐம்பாடு

ஆவி, உட்கலன் நான்கனுடன்கூடி ஐம்பாடு எய்துவதாயிற்று. ஐம்பாடு - ஐந்நிலை (ஐந்தவத்தை). அவை 'நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்குதல்.' இவை இருவகை உடலோடுங்கூடிய ஆவியின் சார்புத்தன்மை என்ப. சார்புத்தன்மை தடத்தலக்கணம். இதுவே பொதுஇயல்பு.

## காரணகாரியம்

உணராது காரணம். உணராமையினல் எனப் பொருள்படும். ஆவி இருள்மலத்தோடு ஒட்டித் தெருளின்றிப் பொருள் உணராமலிருந்தது. ஆண்டவன் திருவளால் உட்கலனாகிய எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் நான்கனுடன் சந்தித்தது. இங்ஙனம் சந்தித்தது காரியம்.

## வினைஎச்சமுற்று

'சந்தித்தது' என்பது வினைமுற்று. ஆனல் அதுபொருள் தருவது சந்தித்து நின்று - கூடிநின்று என. இது வினைஎச்சமாகும். சொல்லால் வினைமுற்றாயும் பொருளால் வினைஎச்சமாயும் இருப்பதால், இது 'வினை எச்சமுற்று.'

## ஆயினும்

ஆயினும் என்னும் சொல் சூத்திரத்துப் பொருள்கொள்ளும் முறை யில் அவாய்நிலையால் தானேவந்தெய்தும். அங்ஙனம் இருப்பவும் வட மொழியிலிருப்பதால் கொள்ளல்வேண்டுமெனல் அத்துணை இன்றியமை யாமை அன்று என்பது உய்த்துணர்வார்க்கு நன்குபுலனும்.

## வழிமொழிதல்

வழிமொழிதலே அனுவாதம் என்ப. ஆவி உட்கலனாகிய அந்தக்கர ணங்களுடன் கூடிநின்றது என முன் சொல்லப்படாவிட்டாலும், 'அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்'றாயினும் என்று கூறுவதால், அவற்றுடன் கூடிநின்றுள்ளதெனக் கருதுதல்வேண்டும். இதுவே வழிஅளவை. இது படித்தவன் தேறினன் என்று கூறுங்கால் படித்தமை முன்கூறப்படாவிட் டாலும் கூறியதாகக் கருதுவதை ஒக்கும்.

**ஒத்துவேறு**

ஒத்தென்பது இயல். ஆவி என்பது ஆன்மா. ஆன்மா என்னும் சொல் மூன்றாஞ் சூத்திரத்து "மாயா இயந்திர தனுவினுள் **ஆன்மா**" என்றிருப்பதால் அதுவேபோதும். அவ்வாறிருந்தும் இச்சூத்திரத்தும் வேறு கூறியது, ஒத்து வேறுமை உணர்த்துதற்கு. முந்தினது அளவை ஒத்து; இஃது இலக்கண ஒத்து.

**ஆன்மா**

ஆன்மா என்னும் சொற்குப்பொருள் சார்ந்ததன்வண்ணமாம் பரப்புடையது. அறிவோடுகூடின் அறிவு விளங்கியும் அறிவில்லவற்றுடன் கூடின் அறிவு விளங்காதும் இருப்பது. இது கண் ஒளியோடுகூடி விளங்கியும், இருளோடு கூடி விளங்காதும் இருப்பதை ஒக்கும். இந்நிலையே, ஆன்மாவின் 'வியாபகம் சித்தசித்து' என்னும் நிலை. இதுவே ஆன்மா என்னும் சொல்லுக்குப் பொருள்.

சார்பரப் போடறிவின் தன்விளக்கம் இல்விளக்கம்
நேர்வஆன் மாப்பொருளாய் நீடு.

**இலக்கணம்**

'அமைச்சரசு' என்பதில் "அமைச்சரோடுகூடி நின்று தன் தொழில் நடாத்தும் அரசு" என்று பொருள்படுவதால், 'ஓடு' என்னும் மூன்றும் வேற்றுமை உருபும் 'கூடி' என்னும் பொருளும் செய்யுள் திரிபால் தொக்கு நின்றன.

'அமைச்சரசு எய்ப்ப நின்று' என்பதிலுள்ள 'நின்று' என்பது நிற்றலால் என்னும் பொருள் குறித்தலால் காரணம். இவ்வினையெச்சம் 'அஞ்சவத்தைத்து' என்னும் வினைகொண்டு முடிந்தது. இவ்வினைமுற்று காலங்காட்டாமையால் வினைக்குறிப்புமுற்று.

**முக்கூறு**

இந்நான்காம் நூற்பா முக்கூறுகளையுடையது. நூற்பா - சூத்திரம். கூறு - அதிகரணம்.

ஒன்றன்று சந்தித்த தோடஞ் சவத்தைத்தே
நின்றமுக் கூறுநான் கிற்கு.

---

## முதல் அதிகரணம்

**ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தி அகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது.**

*எ - து. மே - ள். எ - னின். ஏனையவெல்லாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான் உயிராகாவாயினும் மனமுதலிய அந்தக்கரணங்கள் *"சிந்தையைச் சிவனென்றுஞ் சிவனைச் சிந்தையென்றும்" இங்ஙனம் உயிரென்னும் பெயரானும் வழங்கப்படுதல் உண்மையானும் இந்திரிய முதலியவற்றை அவ்வாறு கூறுமையின் அஃது ஆகுபெயரென்றற் கேலாமையானும் அவையே தனித்தனி ஆன்மாவாமென்றல் அமைவுடைத்தென அந்தக்கரணான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இது மேலைச்சூத்திரத்துள் ஒதற்பாலதேயாயினும் ஈண்டிலக்கணங்கூறும் வழியும் அவற்றோடு சந்தித்து அமைச்சர சேய்ப்ப நிற்பதென அவத்தைக்கேதுவாக எடுத்தோதவேண்டுதலின் ஈரிடத்துமெடுத்தோதுதல் "சில்வகை யெழுத்தின் செய்யுட்டாகிச் — சொல்லுங்காலை உரையகத்தடக்கி — நுண்மையொடு புணர்ந்த வொண்மைத்தாகி" என்னுமிலக்கணத்ததாய சூத்திரத்துக் கேலாமையான் அதுபற்றி விதிமுகத்தாலன்றி அநுவாதமுகத்தான் ஈண்டுணர்த்தப்பட்டது. இ - ள். வெ - டை.*

*ஈண்டு அந்தக்கரணமென்றது உள்ளந்தக்கரணமாகிய கலாதிகளினுஞ் செல்லாமைப் பொருட்டு மனோபுத்தியகங்கார சித்தங்களிலெனக் கிளந்தெடுத்துரைத்தார். கலாதிகளுண்டெனக் கொண்டோரின் உயிர் வேறுண்டெனக் கொள்ளாதார் இன்மையின் ஆண்டாசங்கை நிகழாமையானும் அமைச்சரோடு உவமிக்கப்பட்டு அவத்தைக்கேதுவாவன அம் மனமாதியேயன்றிக் கஞ்சுகத்தோடு உவமிக்கப்பட்டு அதீதத்தினும் நீக்காது உடனிற்பனவாய கலாதிகளன்மையானும் அவற்றை ஈண்டெடுத்தோதவேண்டாமையின் மனமுதலிய புறவந்தக்கரணங்களே ஈண்டுக் கூற நின்றனவென்பது கருத்து.*

**அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்**

*எ - து. ஏது எ - னின். †"மனமும் புத்தி யகங்காரஞ் சித்த நான்கு—மருவியான் மாவே யென்ன வரும்" என நீயிருங் கோடலின் உயிர் அவற்றுளொன்றுதல் அமையுமென்றுற்படும் இழுக்கென்னையென்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.*

---

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், உஅ. புந்தியை. (பக். உகக.)
† சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். உ. கருவியாம். (பக். உகச.)

(இ - ள்.) அவ்வந்தக்கரணங்கடாம் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாய்நின்றே தம்மை நோக்கி அசித்தாய் நிற்றலால் தன்னை நோக்கியுஞ் சித்தாய்நிற்கும் இவ் ஆன்மாவாவது அந்தக் கரணங்களாயுள்ள மனோபுத்தி அகங்கார சித்தங்களில் ஒன்றன்றென மேற்கொண்டது (எ - று).

எனவே, உயிரான் அதிட்டிக்கப்பட்டு ஐம்பொறிகளறிந்த விடயங்களுள் ஒன்றனை இஃது யாதாகற்பாற்றெனச் சித்தஞ் சிந்தித்தறியும்; யான் சிந்தித்தேனென்று அறியமாட்டாது. மனம் அதனை இஃதின்னதாகற்பாற்றெனவும் அஃது ஆமோ அன்றோ எனவும் இவ்வாறு சங்கற்ப விகற்பஞ்செய்தறியும்; யான் சங்கற்ப விகற்பஞ்செய்தேனென்று அறியமாட்டாது. அகங்காரம் அதனை இன்னதெனத் துணிவேன் யான் என்று ஒருப்பட்டெழுந்து அறியும்; யான் ஒருப்பட்டெழுந்தேன் என்றறியமாட்டாது. புத்தி அதனை இன்னதிதுவென நிச்சயித்தறியும்; யானிச்சயித்தே னென்றறியமாட்டாது. ஆகலான் அவ்வாறின்றி அவற்றோடுகூடி யான் சிந்தித்தேன் பற்றினேன் எழுந்திருந்தேன் நிச்சயித்தேனென்றும் அதன்பின் அதுவது வாய்ப் பரிணமித்துச் சுக துக்க மோக ரூபமாய்த் தன்மாட்டுவந்த புத்திதத்துவத்தின் பரிணமங்களைக் கலாதிகளோடு கூடி நின்று இது சுகம் இது துக்கம் இது மோகமென்றறிந்தும் யான் சுகித்தேன் யான் துக்கித்தேன் யான் மோகித்தேன் என்றறிந்தும் இங்ஙனம் பிறவற்றை நோக்கியுந் தன்னை நோக்கியுஞ் சித்தாகிய ஆன்மாத் தம்மை நோக்கிச் சித்தாகாத அந்தக்கரணங்களின் ஒன்றுமாறுயாண்டையதென மறுத்தவாறாயிற்று. *"இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி" என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கி.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன சித்து அசித்தென்னும் பொருளவாம்.

ஏனையோரை நோக்கி அரசனுக்கு அணுக்கராதற் சிறப்புப் பற்றி அமைச்சரை அரசரென்று உபசரித்துக் கூறப்படுமாறு போலப் புறக்கருவிகளை நோக்கி ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்றற்சிறப்புப்பற்றி மனம் புத்தி அகங்காரஞ் சித்த நான்கும் மருவி ஆன்மாவேயென்ன உபசரித்துக் கூறப்படும் அத்தனை என்றொழிக. சூழ்ச்சித்துணையாதல்பற்றி அந்தக்கரணங்கள் அமைச்சரை ஒக்குமெனவே, ஏனைக்கருவிகள் ஏனைப்பரிசனங்களை ஒக்குமென்பது பெற்றாம். அது ஞானாமிர்தத்திற் காண்க.

* சிவஞானசித்தி, பதினொராஞ் சூத்திரம். கக. சிவன்சீவ.

மேலைச் சூத்திரத்தினோதிய ஏதுக்களே ஈண்டைக்கும் அமையுமாயினும், சிறந்தமைபற்றி வேறேதுக்கூறினார்.

* மனம்ஆதி யாலுணர்தல் மன்னு புலன்கள்
மனம்ஆதி மன்புலனின் அல்லன்—மனமேல்
உதித்தோன்றை உள்ளம் உணர்தல் அதனின்
உதிக்குங் கடல்திரையை ஒத்து.

எ - து. உ - ம். எ - னின். அவ்வந்தக்கரணங்கள் தம்மின் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும் தம்மின் மேலுள்ள வற்றை நோக்கியுந் தம்மை நோக்கியும் அசித்தாமாறுந் தெரித் துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள்—மனமுதலிய அந்தக்கரணங்களால் உணரப்படுவன (ஐம்பொறி களால் தரப்பட்டுப் புறத்தே) நிலைபெற்ற விடயங்களாம்; உள்ளம் உணர்தல் மனம் மேல் உதித்த ஒன்றை—ஆன்மாவுணர் வது மனத்துக்கு மேலெனப்படும் புத்தியில் தோன்றியது ஒன் றனையாம்; கடல் திரையை ஒத்து உதிக்கும்—(அவ்விருவேறுணர் வுங்) கடலிடை எழுந்து கரைசாருந் திரைபோலப் (பரம்பரையின் ஆன்மாவின் மாட்டு வந்து) தோன்றும், அதனின் மனம் ஆதி புலனின் அல்லன்—அதனானே மனமுதலியன அவ்விடயங்களின் வேறாயினாற்போல ஆன்மாவும் அம்மன முதலியவற்றின் வேறாம் (எ - று).

உதிக்கும் என்னும் பயனிலைக்கு உணர்தலிரண்டும் எழு வாய்.

செவ்வெண்தொகை விகாரத்தால் தொக்கது.

புலனின் இன் உவமவுருபு. மன் - அசை.

அல்லன் என ஆடூஉஅறிசொல்லால் கூறியது வடமொழி மதம்பற்றி.

உதித்த என்னும் பெயரெச்சஈறு விகாரத்தால் தொக்கது.

புத்தியில் தோன்றியது ஒன்றாவது சுகதுக்க மோகரூப விடயம்.

பரம்பரையில் தோன்றுதலாவது முன்னர் வாயிற்காட்சி யுணர்வு தோன்றி அதன்பின் மானதக்காட்சியுணர்வு தோன்றி அதன்பின்னர்த் தன்வேதனைக்காட்சியுணர்வு உயிரின்கண் வந்து தோன்றுதல்.

---

* சிவஞானசித்தி, ச. க—உ. கருவியாம். (பக்கம் உகச)

இதனானே அந்தக்கரணங் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும் மேலுள்ளவற்றை நோக்கி அசித்தாமாறும் உயிர் அவ்வாறன்றி யாண்டுஞ் சித்தாமாறுங் கண்டுகொள்க.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதாய் ஆங்காரம்
புந்தியாய் ஆய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ளம் இவ்வேறும்
அவ்வேறும் போதுபோல் ஆங்கு.

எ - து. உ - ம். எ - னின். மேற்பொதுவகையாற் கூறிப் போந்த அந்தக்கரணங்களினியல்பு சிறப்புவகையாற் கூறுமுகத்தான் மானதக்காட்சியுள்ளுங் கடற்றிரைபோலப் பரம்பரையின் வெவ்வேறா யுணர்வு நிகழுமாறுணர்த்தி உயிர்வேறாதலை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உள்ளம்— புருடத்துவமென நின்ற உயிர், ஆங்கு—வாயிற்காட்சியால் கண்டவிடயங்களின் ஒன்றனை மனமாதியால் உணரும் மானதக்காட்சியின்கண்ணும் ஒருபெற்றித்தாதலின்றி, சித்தமாய்ச் சிந்தித்து— சித்தமாய் (நின்று இஃது யாதாகற்பாற்றெனச்) சிந்தித்தும், மனம் ஆகிப் பந்தித்து— அதன்பின் மனமாய் (நின்று இஃதின்னதாகற்பாற்றெனப்) பற்றியும், ஆங்காரம் ஆய்த் தெளியாது—(அதன்பின்) அகங்காரமாய் (நின்று இஃதாமோ அன்றோ இதனை இன்னதெனத் தெளிவேன் யானெனத்) தெளிவுபிறவாது எழுந்தும்,—புந்தியாய் ஆய்ந்து—(அதன்பின்னர்ப்) புத்தியாய் (நின்று இஃதின்னதெனத்) தெளிந்துப், வெவ்வேறு துணிந்து இவ்வேறும்— (இங்ஙனம்) வெவ்வேறாகவே உணர்தலான் (அவ்வாறுணரும் புருடன்) இவ்வந்தக்கரணங்களின் வேறாம், போது அவ்வேறும் போல்—(ஞாயிறு முதலியவற்றோடு கூடிநின்று நாழிகை நாள் பக்கந் திங்கள்யாண்டு முதலியனவாய்ப் படும் பாகுபாடுசெய்யும்) காலதத்துவம் அஞ்ஞாயிறு முதலியவற்றின் வேறாயினாற்போல் (எ - று).

ஆய்தல் ஈண்டு நிச்சயித்தற்பொருட்டு.

துணிதலென்பது அறிதலென்னும் பொருண்மாத்திரையாய் நின்றது.

தான் அசை. ஏகாரந் தேற்றம்.

இவ் அவ் என்பன வகரவீற்றஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயர்.

வேறும் போதுபோலெனவே, ஆண்டு நீக்கப்பொருள் ஞாயிறு முதலியனவென்பது தானே விளங்குமென்பது நோக்கி அவ்வெனச்சுட்டியொழிந்தார். சாரியையும் உருபும் உடன் றொக்கன.

சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஆங்கும் வெவ்வேறு தானே துணிந்தெனவே மானதக்காட்சியும் இங்ஙன நால்வேறு வகைத்தாய் ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய்க் கடற்றிரைபோலப் பரம்பரையிற் றோன்றுமென்றவாறாயிற்று.

செய்யுளாகலின் முறைபிறழ வைத்தார்.

† அகார உகாரம் அகங்காரம் புத்தி
மகாரம் மனம்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாதம் உளவடிவாம் நாடிற் பிரணவமாம்
போதம் கடற்றிரையே போன்று.

எ-து. உ-ம். எ-னின். அம்மானதக்காட்சியில் நிகழுஞ் சவிகற்ப உணர்விற்கேதுவாய் அவற்றையுடனின்று செலுத்தும் அக்கரங்கள் இவை என்பதும், அவற்றானுணர்வு மாறிமாறித் தோன்றுமாறும் உணர்த்துதல் நுதலிற்று. இ-ள். வெ-டை.

*"மன்னும் மகாரம் மனஞ்செலுத்தும் புத்தியினை—உன்னும் உகாரம் உபகரிக்கும்—முன்னாகும்—ஆங்காரந் தன்னை அகாரஞ் செலுத்திடும்—நீங்காத சித்தம் விந்து நேர்" என்பவாகலானும், ஈண்டோதிய முறையே முறையெனவும், † "அவ்வுடனுவ்வும் மவ்வும் மனம்புத்தி அகங்காரங்கள்" என வழிநூலாசிரியரோதியது எதிர்நிரனிறைப் பொருளெனவுங் கொள்க. "அவ்வுடனுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்காரங்கள்" என்றதே முறையெனக்கொண்டு அதற்கியையக் கொண்டு கூட்டியுரைப்பாருமுளர்.

பகாதிவற்றைநாடில் பிரணவமாம் எனவும் போன்றும் எனவுங் கூட்டுக.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களைக் கூறுவார் ஒப்புமைபற்றிப் புருடனைச் செலுத்தும் அக்கரமும் உடன் கூறினார்.

உடனின்று செலுத்துதல்பற்றி அபேதமாக வைத்து ஓதப்பட்டன.

---

* துகளறுபோதம், கச.

† சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். அவ்வுடன். ௩.

*“ நிகழ்ந்திடும் வாக்கு நான்கும் நிவிர்த்தாதி கலையைப் பற்றி ” அகரமுதலிய பஞ்சகலைவடிவாய் நின்று இவற்றை வேறு வேறு செலுத்துதல்பற்றிக் கணந்தொறும் நினைப்பும் மறப்பும் ஆகிய சகல கேவலங்கள் அதிநுட்பமாய்க் கறங்கோலைபோல மாறி மாறி நிகழுமெனவும் மாசகலத்தின்கட் கணந்தோறும் அங்ஙனமுணர் வுதித்தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தின்கட் புதிது புதிதாய்த் திரைதோன்றியும் ஒடுங்கியும் வருமாறுபோலு மெனவுமுணர்க. கடல்திரை உவமை மேற் பரம்பரையாய் உணர்வு வருதற்கு எடுத்துக்காட்டினார்; ஈண்டுப் புதிது புதிதாய் வருதற்கு எடுத்துக்காட்டினார்; ஆதலாற் புனருத்தியன்மை யுணர்க.

†எண்ணிலவு ஓங்காரத்து ஈசர் சதாசிவமாம்
நண்ணிய விந்துவோடு நாதத்துக்—கண்ணின்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வம்
அகரவுக ரம்மகரத் தாம்.

எ - து. உ - ம். எனி - ன். அவ் அக்கரங்களுஞ் சடமாகலின் அவற்றை அதிட்டிக்கும் அதிதெய்வங்கள் இவையென்பதுணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணிலவு ஓங்காரத்து நண்ணிய விந்துவொடு நாதத்து அதிதெய்வங் கண்ணில் ஈசரொடு கூடிய சதாசிவமாம். அகரவுகரமகரத்து அதிதெய்வங்கண்ணிற் பகரயன் மாலோடு பரமனும் (எ - று).

எண்ணிலவு ஓங்காரம் எண்ணத்தின்கண் நிலவிய ஓங்காரம் என வினைத்தொகை. எண்ணம் ஈண்டு மானதக் காட்சி.

ஒடு எண்ணின்கண் வந்தது.

ஈண்டு அயன் மால் பரமனென்றது சுத்தவித்தையின் வைகுவாரை. பரமன் உருத்திரன். அகரவுகரம் மகரத்தாமென் புழிமகரம் இசைப்பொருட்டாய் ஒற்றில் வழியொற்றாய் வந்தது.

## விளக்கம்

**அகப்புறக் கலனும் ஆவி அன்று**

அகப்புறக்கலன் என்பது புற அந்தக்கரணம். அவை எண்ணம், மனம், எழுச்சி, இறப்பு என்ப. இவற்றை முறையே சித்தம், மனம், அகங்காரம், புத்தி எனவும் கூறுவர்.

எண்ணம் மனம்எழுச்சி யோடிறப்பாம் நாற்கலனும்
நண்ணும் அகப்புறமாம் நாடு.

---

* சிவஞானசித்தி, முதற்சூத்திரம். உ௯.
† ‘அயன் அரி’ ,, ச. க-௯.

அகக்கலன் என்பது உள் அந்தக்கரணம். அவை, ஆள், விழைவு, உணர்வு, உழைப்பு, ஊழ், காலம், மருள் என்ப. இவற்றை முறையே புருடன் அராகம், வித்தை, கலை, நியதி, காலம், மாயை எனவும் கூறுப.

> ஆளே விழைவுணர்வோ டாம்உழைப்பூழ் காலமருள்
> வாள்எழ் அகக்கலனும் மற்று.

இவ் அகக்கலன் ஏழும் உண்டு எனக்கொள்ளும் நல்லுணர்வினர் இவற்றிற்கு வேறாக ஆவி உண்டு என ஐயமின்றிக்கொள்ளும் செவ்வியராவர். ஆகவே ஈண்டு ஐயம் கொள்வோர் அகப்புறக்கலனாய புற அந்தக் கரணக் கோளினரே ஆவர். அவர் கூறுமாறு :

இவ் அந்தக்கரணங்களைச் சிந்தாந்தச் செல்வரும் ஆவி எனக்கூறுகின்றார். அங்ஙனம் கூறுவதும் ஆகுபெயர்ப் பொருளாய் அன்று ; இயற்பெயராகவே கூறுகின்றனர் என்பர். அவர் காட்டுமாறு :

> " புந்தியை மனம தென்றும் மனமது புந்தி என்றும்
> சிந்தையைச் சீவன் என்றும் சீவனைச சிந்தை என்றும்
> முந்தனை ஆன்மா என்றும் ஆன்மாவை முந்தன் என்றும்
> வந்திடும் என்றன் ஆன்மா என்றது மற்றொன் றைக்காண். "
>
> —சித்தியார். சு. க - உஅ.

இவற்றைப்போல் புலன் முதலியவற்றை எவரும் கூறுவது இல்லை என்பர். புலன் முதலியவற்றைப் போலவே அந்தக்கரணம் முதலியவற்றையும் ' என் மனம், என் எண்ணம், என் எழுச்சி, என் இறப்பு ' என வழங்கி வருதலால் அவை ஆவி ஆகா.

## சூத்திரமுறை

இம்முதற் சூற்றின்கண் கூறப்படும் ' அகப்புறக்கலன் ஆவி அன்று ' என்னும் செய்தி மூன்றாம் சூத்திரத்திலேயே கூறப்படுதல் வேண்டும். எனினும், நான்காம் சூத்திரம் " **அந்தக் கரணம் அவற்றினொன்று அன்று (ஆயினும்) அவை, அமைச்சரசு ஏய்ப்ப அவற்றோடு சந்தித்து நின்று அஞ்ச வத்தைப்படும்** " என இலக்கணம் கூறுகின்றது. இலக்கணம் கூறும் இடத்தும் இவற்றைக்கிளந்தெடுத்துக் கூறுதல் வேண்டும். இரண்டிடத்தும் கூறுவது சொற்சுருக்கமாகச் சொல்லும் சூத்திரமுறைக்குப் பொருந்தாது. அதனால் வழிமொழியும் முறையினால் ஈண்டே கூறியருளினர்.

ஆவி அந்தக்கரணங்களில் ஒன்று அன்று என அளவை இயலில் கூறப்படாவிட்டாலும், கூறியிருப்பது போன்று ' அந்தக் கரணம் அவற்றினொன்று அன்று ' எனக்கூறுவதே வழிமொழிவதாகும். வழிமொழிதல் என்பதை அனுவாதம் என்ப.

> " அவற்றுள் சூத்திரந் தானே
> ஆடி நிழலின் அறியத் தோன்றி
> நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
> யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே. "
>
> —தொல். செய்யுள் - கசுசு.

> " மேற்கிளந் தெடுத்த யாப்பினுள் பொருளொடு
> சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச

சொல்லுங் காலை உரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத் தாகித்
துளக்க லாகாத் துணைமை எய்தி
அளக்க லாகா அரும்பொருட் டாகிப்
பலவகை யானும் பயன்தெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர்." —தொல். மரபு - ௱.

இவ் இரண்டு சூத்திரங்களும் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய முனிவரனால் அருளிச்செய்யப்பட்டவை. இவற்றின் திரண்ட பொருள் சிறிய கண்ணாடியில் மலை கடல் யாறு ஊர் முதலிய பெரிய பொருள் களையும் சாயல் உருவாய்த் தெளிவாகக் காணுமாறு போல, சிறிய எழுத்துக் களால் ஆகிய சொற்சுருக்கச் சூத்திரத்துப் பெரிய பொருள்களையும் தெளிவாக விளங்கிக்கொள்ளும்படி அமைப்பதாகும்; இதுவே சூத்திரத் தின் இயல்பு எனப்புலவர் கூறுவர் என்பதே.

அதனால் நான்காம் சூத்திரத்துக் கிளர்ந்தெடுத்து ஓதவேண்டிய இன்றி யமையாமை இருந்தமையால் மூன்றாம் சூத்திரத்துக்கூறாது நான்காம் சூத் திரத்து வழிமொழியு முறையாற் கூறியருளினர்.

## அகப்புறக் கலன்களின் எல்லை

எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் புற அந்தக்கரணங் களாகிய சித்தம், மனம், அகங்காரம், புத்தி என்னும் நான்கும் நனவு, கனவு, உறக்கம் என்னும் மூன்று நிலைகளினும் தொழிற்படும். உறக்க நிலையில் எண்ணமாகிய சித்தம் ஒன்றே தொழிற்படும். பேருறக்கம், உயிர்ப்படங்கு தலாகிய இரண்டு நிலைகளிலும் அவ் எண்ணமும் தொழிற்படாது. அது தொழிற்படாமையினாலேயே அவ் இரு நிலைகளும் உளவாயின. உயிர்ப் படங்குதலினும் **ஆள்மெய்** (புருடதத்துவம்) தொழிற்படுதலின் அவற் றோடு இயைந்த ஏனைய ஆறுமெய்களும் உள. ஆறுமெய்கள் என்பன மருள், காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவாகும். இவ் ஏழும் என்றென்றும் உடம்போடு கூடிய ஆவிகளை ஒட்டி இருப்பன. ஏனைய போல் விட்டும் தொட்டும் வருவன அல்ல.

ஒட்டி உறைவஎழ் உட்கலன் உட்புறன் நால்
விட்டும்தொட் டும்வருவ மெய்.

## ஆவி அகப்புறக் கலன்களில் ஒன்றன்று

ஆவியான் இயைந்தியக்கப்பட்டு **எண்ணம்** ஒன்றனைத் தாக்கி எண் ணும். எண்ணுதல் எனினும் சிந்தித்தல் எனினும் ஒன்றே. நடந்து செல்வானுக்குப் பிறர் நவிலும் ஓசை காதிற்படுதல் உண்டல்லவா? அது போன்று மனத்தின் ஒரு நிலையாகிய எண்ணத்திற்கும் எழுவாய்க் காட்சி யில் கண்ட பொருள்கள் பலவற்றுள்ளும் ஒன்றனைத் தாக்கி எண்ணும் எண்ணம் உண்டாகும். அவ்வாறு எண்ணியவுடன் விரலெடுக்கும் பொருளைக் கை பற்றுவது போல **மனம்** பற்றிக்கொள்ளும். பற்றியதும் பண்டைப் பயிற்சியால் அப் பொருளின் பண்புகளை நோக்கி அஃது இன்னது என நினைக்கும். பின் அங்ஙனம் நினைத்ததில் ஐயங்கொள்ளும். இந் நினைப்பைச் சங்கற்பம் என்றும், இவ் ஐயத்தை விகற்பம் என்றும் கூறுவர்.*

---

* 'ஆனதனு' சிவப். உ. உ௬.

ஒட்டிவிரல் தாக்குபொருள் உள்ளங்கை பற்றல்போல்
எட்டுமெண்ணம் பற்றல்மனம் எண்.

மனத்தின் ஐயத்தை அகற்றி இன்னது இது எனத்துணிவேன் என்று ஒருப்பட்டு எழும் கருவி எழுச்சி. இக்கருவி ஆவியைப்பற்றி யான் என்னும் வடிவிற்றாய் ஆவிதோறும் வெவ்வேறாம். அவ் எழுச்சிக் குப்பின் இறுப்புமெய் வெளிப்பட்டு அதனை இன்னது என உறுதிசெய்யும். உறுதி செய்தலாவது: "ஆவி அகப்புறக் கலன்களோடு இயைபின்றி உடனாய் நிற்கும் அகக்கலன் ஆகிய உணர்வுமெய் மட்டுமே கருவியாகக் கொண்டு வாயில்களைத் தூண்டும். அப்பொழுது எதிரே தோன்றுவதோர் பொருளில் பொதுவகையான் இஃதோர் பொருள் என்று அறிதலாகிய எழுவாய்க் காட்சி முற்பட நிகழும். அதன்பின் ஆவி மனத்தைத் தூண்டும். மனம் எண்ணமாய் நின்று ஒன்றனைத் தாக்கி எண்ணும். பின் பயிற்சியான் நினைக்கும். பின் ஐயம் கொள்ளும். பின் ஆவி எழுச்சியைத் தூண்டும். அஃது யான் உறுதிசெய்வேன் என ஒருப்பட்டு எழும். பின் ஆவி இறுப்புமெய்யினைத் தூண்டும். அஃது இன்னது இது என உறுதி செய்யும் வழுவில் காட்சியால் துணிவதே உறுதி செய்வதாகும்." உறுதி செய்த இறுப்புமெய் உணர்வே இன்பத்துன்ப மபக்க வடிவிற்றாய் ஆவிக்குத் துய்ப்பாகும்.

ஆவி இத்துய்ப்பைக் கொள்ளுவதற்குக் கருவி உணர்வுமெய் என்க. "ஆவியைப்பற்றி எழுச்சியான் வரும் துணிபு யான் நாட்டுவேன்என ஒன்றாய் யான் என்னும் வடிவிற்றாய் நிற்பது. பொருள்களைப்பற்றி இறுப்புமெய்யின் தொழிற்பாடாகிய துணிபு பொருள்தோறும் வேறு வேறாய் இஃதென்னும் வடிவிற்றாய் நிற்பது."

ஆவிக்கண் ணாய்நாட்டல் ஆம்எழுச்சி சார்புலக்கண்
மேவிநாட் டல்இறுப்பாம் மெய்.

இவ்வாற்றால் அகப்புறக்கலன்கள் ஆவி அன்று என்பது விளங்கும்.

## அகப்புறக் கலன்களும் அறிவுடையன அல்ல

பொறி புலன்களை நோக்க அகப்புறக்கலன்கள் அறிவுடையனபோல் காணப்படும். எனினும் ஆவியை நோக்க அவை அறிவில்லனவேயாம். ஆவி கருவிகளோடு இயைந்து பொருள்களை அறிந்து அப் பொருள்களை நுகர்ந்து யான் அழுந்தினேன் எனத் தன்னையும் உணரும். பொறிபுலன் கலன்கள் ஆவியான் உணரும்; ஆனால் தாம் உணர்ந்தேம் என்று உணரா; தம்மையும் உணரா. இவற்றான் அவற்றிற்கு அறிவில்லை என்க.

இதனை ஓர் ஒப்பால் கூறுதும். எழுதி அறிவித்தற் பொருட்டு எடுக்கும் ஓலை அல்லது தாள் பொறிபுலன்களை ஒக்கும். அதன்கண் பொறித்த எழுத்து மனம் முதலிய அகப்புறக்கலன்களை யொக்கும்.

இவ் எழுத்துக் கூறுகின்றது என்பதையொக்கும் எண்ணம் எண்ணுகின்றது; மனம் நினைக்கின்றது; ஐயம் கொள்கின்றது; எழுச்சி ஒருப்பட்டு எழுகின்றது; இறுப்புமெய் துணிகின்றது என்பன. மேலும் நூலோர் துணிபினை நூல்மேல் எற்றி நூல் துணிகின்றது என்பதனையும் ஒக்கும். இது திருவள்ளுவ நாயனார் அருளிச்செய்த,

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு" —திருக்குறள், உக.

என்னும் திருப்பாட்டான் நன்கு பெறப்படும்.

கண்காண்டல் கையெழுதல் கட்டுரைத்தல் அவ்வெழுத்தும்
நண்ணும் உயிரால் ஆம் நாடு.
ஓலைபொறி உட்புறத் தோர்கலனும் ஊட்டெழுத்து
நூலையுணர்த் தும்எனலாம் நோக்கு.

அகப்புறக்கலன்கள் அறிவுடையனபோல் நின்றே அறிவில்லனவாய் நிற்கின்றன என்பதே "அவைதாம் பிரகாசமாய் நின்றே அப் பிரகாசமாய் நிற்றலான்" என்பதன் பொருள். ஈண்டுப் பிரகாசம் அறிவு. அப் பிரகாசம் அறிவின்மை.

## ஏற்றுரை

அகப்புறக்கலன்களை ஆவி என்று கூறுவது ஏற்றுரை என்க. ஏற்றுரை உபசாரம். அங்ஙனம் கூறும் திருப்பாட்டு வருமாறு:

"கருவியாம் மனமும் புத்தி அகங்காரஞ் சித்தம் நான்கும்
மருவிஆன் மாவே என்ன வருந்தீபம் எனத்தெ ரிந்தங்
கொருவிஆன் மாவின் உண்மை உணர்ந்தவர் தமையு ணர்ந்தோர்
தருமிது பசுஞா னம்பின் சிவஞானம் தனக்கு மேலாம்."
—சித்தியார், ச. க. உ.

## இருவகையானும் அறிவு

"பிறவற்றை நோக்கியும் தன்னை நோக்கியும் சித்தாகிய ஆன்மா" என்பது: பொறிபுலன்கலன்கள் எல்லாம் ஆவியினாற் செலுத்தப்பட்டுத் தொழிற்படுகின்றன; அதனால் பிறவற்றை நோக்கியும் என்றும், அவற்றால் எய்திய புலன் (விடயம்)களை ஆவி யான் கண்டேன், யான் எண்ணினேன், யான் நினைந்தேன், யான் ஐயுற்றேன், யான் எழுந்தேன், யான் துணிந்தேன், யான் நுகர்ந்தேன் என்று நயந்து நவிலுகின்றது; அதனால் தன்னை நோக்கியும் என்றும், ஆக இவ் இருவகையானும் ஆவி அறிவுடையதென்பது வலியுறுத்தப் படுகின்றது.

தன்நோக்கல் துய்ப்புகலன் தம்மைநோக் கல்செலுத்தல்
இன்னவற்றால் ஆவிஅறி வாம்.
வினைமுதலும் மேவுபுலன் துய்ப்பும் ஆவி
தனைச்சார லாலறிவு தான்.

'மனம்...........ஒத்து'

## உணரும் முறை

உணரும் முறையினைக் காட்சிமுறை எனலாம். உணர்வு—காட்சி. அக்காட்சி மூவகைப்படும். அவை வாயில் மனம் ஆவித்துய்ப்பு என்பன. இவற்றை முறையே வாயிற்காட்சி மானதக்காட்சி தன்வேதனைக்காட்சி எனவும் கூறுப. இவற்றுள் மானதக்காட்சி என்பது புத்திக்காட்சியாகும். புத்திக்காட்சி எனினும் இறப்புமெய் உணர்வு எனினும் ஒன்றே. இவ் இறப்புமெய்உணர்வை மனஉணர்வு என்று கூறியது மனத்தின் வழியாக வரும் வழிமுறைபற்றி. வழிமுறையைப் பரம்பரை என்பர்.

வாயில் என்பன மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்புலன்கள். வாயில்களை இந்திரியங்கள் எனவும் கூறுவர்.

> வாயில் இறுப்புமெய் மன்உணர்வா வித்துய்ப்பு
> மேய உணர்வுமுறை வித்து.

"அஃது அங்ஙனமாக; அறிதற்குக் கருவியாகிய இறுப்புமெய் (புத்தி தத்துவத்தை)யை அறியப்படும் புலன் (விடயம்) என்றும், அதனை ஆவி அறிதற்கு. உணர்வு (வித்தை) கருவியென்றும் சொல்லியது என்னையோ எனின், கூறுதும்: வாயிற்காட்சி மானதக்காட்சிக்கு வாயிலும் அந்தக்கரணங்கள் கருவியும், சந்தனம் மாலை முதலிய புறப்பொருள்கள் புலனுமாம். அவற்றின் பின்னிகழும் தன்வேதனைக்காட்சி அறிவிற்குச் சந்தனம் மாலை முதலிய புறப் பொருள் புலனாகா; என்னை? சந்தனம் மாலை முதலியன நுகர் (போக்கியம்)வுக்கு ஏதுவாதலன்றி நுகர்வு அன்மையின், தன்வேதனைக்காட்சி அறிவிற்கு நுகர்வு மாத்திரையே புலனாகலின். மற்றென்னையோ அதற்குப் புலனாவது என்னின், சந்தனம் மாலை முதலியவற்றிற்பற்றி அவையவையாய் மாறிய (பரிணமித்த) போதமாகிய இறுப்புமெய்யே தன்வேதனைக்காட்சி யுணர்விற்குப் புலனும் என்க; அதுவே இன்பத் துன்பவடிவாகிய நுகர்வாகலான் என்பது. இங்ஙனமாகலின் (புடைபெயர்வின்றி) தனிமை (கேவலம்)யாய் நின்ற இறுப்புமெய் சந்தனம் மாலை முதலியவற்றிற்பற்றி அவையவையாய் மாறிநின்று ஆவியின் அறிவாற்றற்குப் புலனாமாகலின் அதனைப் புலப்படுத்தற்குக் கருவி உணர்வு (வித்தை)மெய் என்க. சிவப்பிரகாசத்தில் 'வாயில்களின் பயனைப், புத்திதரவித்தை இடைநின்றறிவை உயிர்க்குப் பொருந்திபிடும் வகை புணரும்' என்றதும், அப்பொருட்டு. அதற்கு மனமே கருவியாகுக எனின், இது (இறுப்புமெய்) பொருந்தாதென்பது முன்னர்க் கூறப்படுமாற்றான் அறிக" (பேருரை)

> "இத்தகைமை இறையருளால் உயிரறியும் அறிவுக்கு
> ஈடாக வாடாதே ஈரிரண்டின் உரைத்த
> வித்தைமுதல் ஐவரான் விளங்கும் ஞானம்
> மேவியிடும் எனஉரைப்பர் அசுத்த மாயை
> வைத்தகலை தான்மூலம் மலம்சிறிதே நீக்கும்
> மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்
> புத்திதர வித்தை யிடை நின்றறிவை உயிர்க்குப்
> பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசதி புணர்ந்தே.":
>
> —சிவப்பிரகாசம், உ - உக.

இறுப்பு மெய்யும் உணர்வுமாகிய கருவிகள் தத்தந் தொழிலையன்றி மேற்செல்லாமை ஊண் உண்ணக் கரண்டி கை நா முதலிய கருவிகளைப் பயன் படுத்துகின்றோம். ஆயின் ஒவ்வொரு கருவியும் தத்தம் தொழிலையன்றி மேலுள்ளவற்றின் தொழிலைச்செய்யா. அது போன்று ஆவிக்கு உணர்வுமெய் இறுப்புமெய் இரண்டும் கருவிகள். அவற்றுள் இறுப்புமெய் தன்மேலுள்ள உணர்வுமெய்யின் தொழிலைச் செய்யாது. எனவே ஆவியின் அணுக்கமாகவுள்ள உணர்வுமெய்யே எவ்வகைப் புலனையும் ஆவிக்கு அளிக்குங்கருவியாகும். இக்கருவி நாவினை ஒக்கும். இறுப்புமெய் உணர்வு மெய்க்குக் கொடுக்கும் கருவியாகும். இது கரண்டி கைகளையொக்கும்.

உண்ணக் கரண்டிகை நாக்கருவி யொப்பிறப்பும்
நண்உணர்வும் மேற்செல்லா நாடு.
காட்சிஎழு வாயெழக் கண்கருவி எனும்அதைப்
பூட்சியுணர் வால்தூண்டல் போற்று.

## ஒப்பு

உணர்வுமெய் கருவி என்பதற்கு ஓர் ஒப்புக்கூறுதும். நிலத்திருக்கின்ற ஒருவன் ஆடை தண்ணீரால் நனைந்துவிட்டது. அந்நனைவினை ஆவி அறிவதற்குக் கருவியாயுள்ளது உடலே. அதுபோல் புலன்களைக் கொண்டு இறப்புமெய் உணர்ந்தவற்றை ஆவி உணர்வதற்குக் கருவியாயுள்ளது உணர்வுமெய். இவ்வொப்பினில் நிலம் போன்றது பொறிபுலன். நீர்போன்றது புலன் (விடயம்). ஆடை போன்றது இறப்புமெய். ஆடை நனைவது போன்றது இறப்புமெய்யின் மாறுதல். உடலிற்பட்டு உயிர்க்குணர்த்துவது போன்றது உணர்வுமெய் ஏற்று ஆவிக்கறிவிப்பது.

சாங்கும் நிலம்புலன் சாராடை நனைவுகலன்
ஆங்கலைமெய் ஆவியோர் தல்.
செய்கருவிக் கின்றறிவு செய்விப்ப தற்குண்டாம்
செய்கருவி யும்மாம் இறப்பு.

## உருவகம்

அகப்புறக் கலன்களை அமைச்சரோடு ஒப்புக்கூறினமையின், ஏனையவற்றையும் பிற உறுப்புக்களோடு இணைத்துச் சொல்லுமாறு:

௧. அமைச்சர்கள் : அகப்புறக்கலன்கள்.

| | |
|---|---|
| ௨. வாயில்காப்போர் | |
| ஒற்றர் | |
| தூதர் | } அறிகருவிகள் ஐந்து. |
| வேத்தவையோர் | |
| அந்தணர்-ஆகஐவர் | |

| | |
|---|---|
| ௩. யானை | |
| தேர் | |
| குதிரை | } செய்கருவிகள் ஐந்து. |
| காலாள் | |
| படைத்தலைவர்-ஆகஐவர் | |

௪. அறிகருவியாற் கொள்புலன் : 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்'

செய்கருவி யாற் கொள்புலன் : 'பேசல், நடத்தல், உழைத்தல், கழித்தல், மகப்பெறல்' ஆகிய பத்தும் ஏவலாட்கள்.

௫. வளி: உயிர்க்காற்று, மலக்காற்று, தொழிற்காற்று, ஒலிக்காற்று, நிரவுகாற்று, தும்மற்காற்று, விழிக்காற்று, கொட்டாவிக்காற்று, இமைக்காற்று, வீங்கற்காற்று ஆகிய பத்து வளியும் * உறுதிச் சுற்றமாகும்.

---

* பக்கம், ௧௨௪.

இந்த முறையானே அவைகளை உருவகப்படுத்தி ஓர்ந்துணர்ந்து கொள்க.

ஆவிக் ககப்புறம் அமைச்சாகும் ஐந்தறிவும்
மேவுகாரீ பாளரொற்றர் மெய்த்தூதர்—தாவிலவை
அந்தணர்செய் நாற்படை ஆம்தலைபத் தேவல்புலன்
தந்தவளி சுற்றமாம் சாற்று.

அகப்புறம்—அகப்புறக்கலன்கள். ஐந்தறிவு—அறிகருவி ஐந்து. அவை—அவையோர். செய்—செய்கருவி ஐந்து. தலை—படைத்தலைவன். பத்தேவல்—பத்து வேலையாட்கள். புலன்—அறிகருவியாலும், செய் கருவியாலும் கொள்ளப்படும் நுகர்வுகள். வளி—காற்றுப் பத்து.

**அலையொப்பு**

கடலின்கண் தோன்றிய அலை கரைவந்து சாரும் முறைமையைச் சிறிது உற்று நோக்குதல் வேண்டும். மேலெழுந்த வாரியாகப் பார்க்கின் கண்ணுக்குப் புலனும் ஓர் அலையே கரைவந்து சாருகின்றது என நினைக்க இடமுண்டு. உண்மையில் முதற்கண் தோன்றிய அலை ஓர் எல்லைவரை வந்து மற்றொன்றினைத் தள்ளும். அதுவும் பிறிதொன்றினைத் தள்ளும். இங்ஙனமே கரைவந்து சாரும். அதுபோல், ஆவி உணரும் முறையினை யுங்கூறுதும் :

முதற்கண் கண் முதலிய புலன்களாற் காணும் உணர்வு தோன்றும். அவ்வுணர்வு புலன்களைப் பொதுமையில் பிழம்பாக உணர்வது. பிழம்பு-பிண்டம். அதன்பின் இறப்புமெய்யாற் காணும் உணர்வு தோன்றும். அவ்வுணர்வு புலன்களைப் பகுத்துக் காண்டல். அஃதாவது இன்பதுன்ப மயக்க வடிவாக மாறுவது. மாறுதல்—பரிணமம். பின் தன் வேதனை உணர்வு தோன்றும். அஃதாவது இறப்புமெய்யின் மாறிய வடிவை உணர்வுக் கருவி (வித்தை) கொண்டு நுகர்வது.*

இங்ஙனங் கூறிய புலன், கலன், உணர்வு என்னும் மூன்றும் அலைக் கும். ஆவி கரைக்கும் உவமைகளாகும். புலனாகிய கடலில் பொறியுணர் வாகிய அலை இறப்புமெய்யுணர்வாகிய அலையைத் தள்ளும். அவ்வலை தன்வேதனையாகிய உணர்வு அலையைத் தள்ளும். உணர்வு அலை ஆவி யாகிய கரையைச் சாரும். தன்—ஆவி. வேதனை—நுகர்வு.

துய்ப்புகடல் யாக்கைதிரை சொல்புல னோடுகலன்
உய்ப்புணர்வு எல்லையுயிர் ஓர்.

**அல்லன்**

ஆவியும் 'மனம் ஆதி புலனில் அல்லன்' என்பதன்கண் காணப் படும் அல்லன் என்பது ஆவி அன்று என முடியவேண்டும். இங்ஙனம் முடிந்திருப்பது வடமொழி மதம்; அம்மட்டும் அன்று; தமிழ்மதமும் ஆகும்.

"குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்று

* 'ஈத்து வக்கும்' திருக்குறள், உஉ௮.

ஆஅறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கு இயலும்."

—தொல். சொல் - ருடு.

இந்நூற்பாவின்படி ஆவி அஃறிணை முடிபாகிய அன்று என்பதே கொள்ளுதல் வேண்டும். எடுத்துக்காட்டு 'குடிமை நன்று'.

"நின்றாங்கு இசைத்தல் இவண்இயல்பு இன்றே."

—தொல். சொல் - ருஅ.

இதன் எடுத்துக்காட்டில் "குடிமை நல்லன், வேந்து செங்கோலன் என நின்றாங்கு நின்று உயர்திணையாய் இசைத்தல் இயல்புடைத்தென்ப தாம்" என்றுரைக்கும் சேனாவரையர் உரையின்படி 'ஆவிநல்லன்' என்று முடிவது தமிழ்மதமேயாகும்.

'சிந்தித்தாய்ச்........ஆங்கு.'

## காலமெய்போல் ஆவி

காலமெய்யானது ஞாயிறு நாள் பிறை முதலியவற்றோடு கூடி நின்று நாழிகை, நாள், பக்கம், திங்கள் முதலியனவாய்ப் படும்பாகுபாடு செய்யும். ஆயினும் அக்காலமெய் அவற்றிற்கு வேறாகும். அதுபோல் ஆவியும் எண்ணம், மனம், எழுச்சி, இறப்பு முதலியவற்றோடு கூடிநின்று சிந்தித்தல், பற்றுதல், தெளியஎழுதல், ஆய்ந்துதுணிதல் முதலியவற்றைச் செய்யும். அங்ஙனஞ் செயயினும் ஆவி அகப்புறக் கலன்களாகிய அந் நான்கிற்கும் வேறாகும்.

## ஏதுவும் பயனும்

எண்ணம் (சித்தம்) கண்ட பொருள்களுள் ஒன்றனைத் தூக்கி இஃது யாதாகற்பாற்று என எண்ணும். இஃது ஏது. இந்த ஏதுவினால் விளையும் பயன் மனம் அப்பொருளை நினைவுகூர்ந்து ஐயுறுதல். இங்ஙனம் நினைவு கூர்ந்து ஐயுறுதல் ஆகிய ஏதுவினால் எழுச்சிமெய் முனைந்து இஃது இன்னதெனத் துணிவேன் யான் என ஒருப்பட்டெழும். இது மனம் ஏதுவால் விளைந்தபயன். எழுச்சி ஏதுவினால் இறப்புமெய் இன்னது இது எனத் துணியும். இத்துணிபு பயன். இம்முறையான் அகப்புறக் கலன்கள் நான்கும் ஒன்றற்கொன்று ஏதுவும் பயனும் ஆதல் காண்க.

எண்ணத்தா லாம்நினைவோ டையம்இவ் ஏதுவினால்
நண்ணுமுனைப் பால்துணிபாம் நாடு.

## உள்ளம்

ஆவி காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு என்னும் ஐவகை யாம் உடுப்புக்களுடன் இயைந்திருக்கும்போது பொதுமையாற் போகம் நுகர்வோனுதல் தன்மை எய்தும். பின்பு உடல்மெய்யாம் மூலப்பகுதி மாயையின் நுகர்ச்சிப்பொருட்டு அம்மாயையோடு இயைந்து நோக்குதற்கு ஏதுவாகிய திரிபுணர்ச்சி முதலிய ஐங்குற்றம் என்னும் ஆளாந்தன்மை

எய்தும். இதுவே சிறப்பாகப் போகம் நுகர்தல். ஐங்குற்றம் - பஞ்சக் கிலேசம். ஆளாந்தன்மை - பும்சத்துவ மலமுடையனாதல். இவையே புருடதத்துவ ஏதுக்கள். ஆள் - புருடன் என்னும் பெயர்க்காரணம் வருமாறு:

"கருவிகட் கிறைமை காட்டுபு நிற்றலிற்
புருட நாமம் புனைந்தன மாயினும்
அத்தநிற் குறிப்பிற் சத்திகள் யாமே."
—குமரகுரு. பண்டாரமும்மணி-அ.

ஆளே விழைவுணர்வோ டாம்உழைப்பூழ் காலமருள்
வாள்ஏழ் அகக்கலனும் மற்று.

ஐங்குற்றம்: திரிபுணர்வு, செருக்கு, அவா, ஆசை, வெகுளி. இவற்றுள் செருக்கு திரிபுணர்வின்கண் அடங்கும். அவா ஆசைக்கண் அடங்கும். எனவே, திரிபுணர்வு ஆசை வெகுளி என்னும் மூன்றும் குற்றமாம். இம் முக்குற்றத்தையுமே திருவள்ளுவநாயனார் அருள்வாராயினர். அத் திருப்பாட்டு வருமாறு:

"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய்." —திருக்குறள். ௩௬0.

மேற்கூறிய பொதுவும் சிறப்புமாம் இருவகை ஐஞ்சேர்க்கையின் உள்ளீடாய் ஆவி நிற்றலின் உள்ளம் என்னும் பெயர் ஒக்கும் எனலாம்.

திரிபுணர்ச்சி தீச்செருக் கோடவா ஆசை
விரிசினம்ஐங் குற்றம் விளம்பு.

## இலக்கணம்

'வெவ்வேறு தானே' இதன்கண் தான் என்பது அசை. ஏ என்பது தேற்றம். ஏகாரம் தேற்றமுதல் ஐவகைப்படும்.* அவற்றுள் ஏகாரம் தேற்றம். தேற்றம் என்பது தெளிவு. தெளிவு எனினும் உறுதி எனினும் ஒன்று.

'இவ்' இவற்றின், 'அவ்' அவற்றின் என்னும் சுட்டுப்பொருள் பயத்தலால் அவை வகரயீற்று அஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயர் என்றனர்.

'போது அவ்வேறும் போல்' காலமெய் ஞாயிறு முதலியவற்றோடு கூடிநின்று அவற்றின் வேறாயினாற் போல, என்பதன்கண் ஞாயிறு முதலியது சுட்டப்படவில்லை. எனினும் 'அவ்வேறும்' என்பது அவற்றின் வேறும் எனப் பொருள் தருதலின் 'இன்' ஐந்தனுருபு நீக்கப் பொருள். நீக்கப்பொருளால் ஞாயிறு முதலியன தாமே பெறப்படும் என்னும் கருத்தால் 'அவ்' எனச் சுட்டியருளினர். காலம் நாள் முதலிய வற்றானன்றி அறியப்படாது. நாள் முதலியனவும் ஞாயிற்றானன்றி அறியப்படா. எனவே ஞாயிறு முதலியன தாமே பெறப்படும் என்பதாயிற்று.

சாரியை 'இற்று,' உருபு 'இன்,' சொல் 'அவ்' இவ்வனைத்துஞ் சேர்ந்து அவற்றின் என்றாகும்.

---

* பக்கம், கசுஎ.

'சிறப்பும்மை' 'ஆங்கும்' என்பதன்கண் இருக்கவேண்டுவது. இவ் ஆங்கும் என்பது 'அவ்வேறும் போதுபோல் ஆங்கு' என்பதே. இதன்கண் செய்யுள் திரிபால் அவ் உம்மை தொக்குநின்றது.

## முறை பிறழ்வு

செய்யுளின்கண் 'சித்தம், ஆங்காரம், புந்தி, மனம்' என வைப்பு முறை காணப்படுகின்றது. இவை இருக்கவேண்டிய முறை சித்தம், மனம், ஆங்காரம், புந்தி என்பதே. அங்ஙனம் இல்லாமை செய்யுள் திரிபு. இவையே முறை பிறழ்வு.

'அகார...................................போன்று'

## அகப்புறக்கலன்களை இயக்கும் எழுத்து

அகப்புறக் கலன்களுக்கு அறிவில்லை. எனவே அவை தாமாகத் தொழிற்படா. அவற்றைத் தொழிற்படுத்தும் துணைக்கருவி எழுத்து. எதுபோல் என்றால் ஒரு பொருளை ஆளுதற்கும், நினைத்தற்கும், போக்கு வரவு முதலியவாகத் தொழிற்படுத்துதற்கும் அப்பொருளின் பெயரும் ஏவற்கு ஏற்ற சொல்லும் இன்றி இயலாதல்லவா? எடுத்துக்காட்டாக ஆவினை அழைக்க, அதற்கு வாயுறை கொடுக்க என ஏவுங்கால் பெயரும் வியங்கோட்சொல்லும் வருவன காண்க. எனவே, எல்லா நிகழ்ச்சிகளும் சொல்லானன்றி இல்லை. சொல் எழுத்தான் அன்றி இல்லை. எழுத்து ஓசையான் அன்றி இல்லை. அதனாலேயே ஓசை உலகை ஆட்டும் என்னும் மாசில் பழமொழியும் வழங்குவதாயிற்று.

மேலும் சிலம்பொலிக்கத் திருக்கூத்தியற்றும் சிவபெருமானை 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே'* என்று ஆளுடைய அரசரும் அருளிச்செய் வாராயினர்.

போற்றல் நினைத்தல் பொருளழைத்தல் போக்கல்பிற
தோற்றெழுத்தால் அன்றியின்றாம் சொல்.

ஆவிக்கு வழுவில் காட்சியாகிய சவிகற்ப உணர்வு தோன்றுதற்கு அகப்புறக்கலன்களைச் செலுத்தும எழுத்துக்களே முதற்றுணை என்க. அவ் எழுத்துக்கள் "அ, உ, ம், ஒலிமுதல், முதல்ஒலி" என்ப. இவற்றுள் ஒலி முதல் என்பது நம் செவிக்குக் கேட்கும் இசை ஓசையோடு கூடிய எழுத்தோசைகட்கு எல்லாம் முதற்காரணமாயுள்ளது. இதனை விந்து எனவும் கூறுவர். விந்து என்பது வித்து என்பதன் திரிபே. வித்து என்பது காரணமாம்தன்மை எல்லார்க்கும் எளிதிற் புலனும். முதல் ஒலி என்பது ஒலிமுதற்குக் காரணமாயுள்ளது. முதல் ஒலி என்பது நாதம் எனக் கூறப்படும்.

நாதம் என்பது ஓசையின் முதற்காரணமாகிய நாவின் அடியாகத் தோன்றிய தமிழ்ச்சொல். இனி நந்துதல் அடியாகத் தோன்றியது எனக் கூறினும் பொருந்தும். நந்துதல் - விளங்குதல். அகப்புறக் கலன்கள் நான்கினையும் செலுத்தும் எழுத்துக்கள் அ, உ, ம், ஒலிமுதல் (விந்து) என்னும் நான்கே. முதல் ஒலி என்னும் நாதம் ஆள் என்று சொல்லப் படும் உள்ளத்தைச் செலுத்தும். ஆள் என்பது புருட தத்துவம். இதனைச் செலுத்தும் எழுத்தைக் கூறியது ஒப்புமைபற்றி என்க.

* சு. கஅ.

## ஓம்

மேலும் நுண்மை ஐந்தெழுத்து என்னும் ஒற்றுமைபற்றியும் கூற நேர்ந்தது என்க. நுண்மை ஐந்தெழுத்தைத் தொகையாகக் கூறுங்கால் 'ஓம்' என்னும் தமிழ்மறையாகும். இதனை ஓங்காரம் எனவும் கூறுவர். ஓங்காரத் துட்பொருள் ஒப்பில் முழுமுதலே என்பது வரும் ஆளுடைய அரசர் திருப்பாட்டானும் உணர்க.

"ஒன்றவே உணர்தி ராகில் ஓங்காரத் தொருவ னாகும்
வென்றஐம் புலன்கள் தம்மை விலக்குதற் குரியீ ரெல்லாம்
நன்றவன் நார ணனும் நான்முகன் நாடிக் காண்குற்று
அன்றவர்க் கரியர் போலும் அதிகைவீ ரட்ட னாரே."

— ச. உரு - கூ.

திருமூல நாயனார் அருளியது வருமாறு:

"ஓமெனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே உருஅரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே." — க0. உகூஎகூ.

## அடைவு

இத்திரு வெண்பாவில் கூறிய 'அகார உகாரம்' என்பதே முறை என்க. இதனைத் துகளறு போதத்துவரும் பதினொன்றாம் வெண்பாவும் வலியுறுத்தும்.

"மன்னும் மகாரம் மனம்செலுத்தும் புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும் - முன்னாகும்
ஆங்காரந் தன்னை அகாரஞ் செலுத்தியிடும்
நீங்காத சித்தம்விந்து நேர்." — துகளறு போதம், கக.

"அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம்புத்தி அகங்கா ரங்கள்
செவ்விய விந்து நாதம் சித்தமோடு உள்ளம் ஆகும்
ஒவ்வெனும் எழுத்தாம் ஐந்தும் உணர்வுதித் தொடுங்கு மாறும்
பவ்வமுந் திரையும் போலும்பார்கிலிப் பண்புந் தோன்றும்."

—சித்தியார், ச. க - ந.

இச் சிவஞான சித்தியார் திருப்பாட்டில் அமைந்துள்ள முறை எதிர் நிரல் நிறைப் பொருள்கோள் எனக்கொள்க.

## எழுத்துக்கள் நிற்கும் முறை

அகரம், உகரம், மகரம், ஒலி முதல், முதல் ஒலி என்று ஓதப்படும் ஓமொழி எழுத்தைந்தும் கலைகளில் நிற்கும் நிலையும் ஐவகைப்படும். அவை வருமாறு: செவிஓசை பருமை (தூலவைகரி) நீக்கற் கலையைப் பற்றி அகரமாய் நிற்கும். செவி ஓசை நுண்மை (சூக்குமவைகரி) நிலைப்பித்தற் கலையைப்பற்றி உகாரமாய நிற்கும். மிடற்றோசை (மத்திமை) நுகர்வித்தற் கலையைப்பற்றி மகரமாய் நிற்கும். நினைவோசை (பைசந்தி) அமைதிக் கலையைப்பற்றி ஒலி முதலாய் நிற்கும். நுண்ஓசை (சூக்குமை) அப்பாற் கலையைப்பற்றி முதல்ஒலியாய் நிற்கும்.

இந்நுண்ணோசைக்கு இடம் மூலம். மூலம் - மூலாதாரம். முதல் ஒலி - ஓசைகட்கெல்லாம் முதற்காரணமாய் உள்ளது. ஒலி முதல் - முதற்கண்தோன்றும் ஒலி.

## எழுத்துக்கள் செலுத்தும் முறை

எழுத்துக்கள் அகப்புறக்கலன்களைச் செலுத்து முறையை ஒருசார் இயைபுபற்றிக் கூறுதும்: செவிஓசைப் பருமை '**அகரம்**'. இவ் அகரம் வாயைத்திறந்த அளவானே உண்டாவது, வாய் திறக்கலை அங்காத்தல் எனவும், அண்ணாத்தல் எனவும் கூறுவர். உலகவழக்கில் வாயைத்திற என்னும் சொல்லுக்கு ஈடாக அண்ணாறு என மருவி வழங்குகின்றனர்.

வாய்திறக்கும் எழுச்சியில் அகரந்தோன்றும் என்பது பெறப்படுதலால் அவ் அகரம் எழுச்சிமெய்யினைத் தூண்டும். தூண்டுதலாவது பிறருக்குத் தெரிவிப்பேன என்று எழுதல்.

செவிஓசை நுண்மை '**உகரம்**'. இது ஓசை தன் செவிக்குமட்டும் கேட்பது. உகரம் இதழ்குவிவதால் உண்டாவது, குவிவு உள்ளொடுக்கம். ஒடுக்கம் ஒருங்கிய நினைவு. எனவே அவ் உகரம் இறுப்புமெய்யைத் துணைடுவது ஒருசார் இயைபே. இறுப்புமெய் உறுதி செய்யும் - துணியும்.

மிடற்றோசை '**மகரம்**' இவ் ஓசை "இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்" எனும் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் (கூ௭) நூற்பாவின்படி இதழிரண்டும் பொருந்தப் பிறக்கும். ஆதலால் பொருள்களை (புலன்)ப் பற்றும் மனத்தைத் தூண்டும் என்பது இயைபுடைத்தே.

நினைவோசை '**ஒலிமுதல்**' இவ் ஓசை அ, உ, ம் என்ற எழுத்து வேறுபாடு இன்றி புள்ளிம்பான்று ஏனைய எழுத்துவடிவும், பிற ஓசையும் விரிவதற்கிடனாய் நிற்கும். இஃது எண்ணத்தின்கண் நிற்றலால் எண்ணத்தைத்தூண்டும் என்பது இயைபே. இதற்கு இடம் உந்தி.

நுண் ஓசை '**முதல் ஒலி**' இவ் ஓசை ஒளியாய் அகஓசையின் காரணமாய் ஆளின்கண்நிற்கும். நின்று உள்ளம் - ஆள் என்னும் கருவியைச் செலுத்தும். ஒளி தீயின் தன்மையுடையது. "தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி" என்பதனால் தீயின்கண 'ஓசை, ஊறு, உருவம்' என்னும் மூன்று தன்மையும் உண்டென்பது பெறப்படும். அவற்றுள் ஓசை 'தம தம' என ஒலிக்கும் என்பர். எனவே புறஓசை உந்தியின்கண் நின்று எழும். தொல்காப்பியனாரும் பிறப்பியல் (அ௩) கூறுங்கால் "உந்தி முதலா முந்துவளி தோன்றி" என நூற்பாத் தொடங்குகின்றனர். எனவே புற ஓசை தோன்றும் முதலிடம் உந்தி என்பது தெற்றென விளங்கும். உந்தி - கொப்பூழ். அக ஓசை நிற்கும் இடம் மூலம்.

> தன்பிறர்கா தோசை அகரவுக ரம்மிடறு
> மன்மகரம் எண்ணம் ஒலிமுதல் - துன்னுந்தி
> ஆட்பால் முதல்ஒலி ஆகுமஅகா ரவ்வுகரம
> மாட்சிமெய் கண்டார்வெண் பா.

எழுத்துக்களின் முறைமைகளை வரும் சிவப்பிரகாசத் திருப்பாட்டானும் காண்க:

"புகலுமல மொழித்தற்குக் கலாதிமுதன் மாயை
பொருந்தியிடும் அரனருளால் போதம் தீபம்
சகலமெலாம் உடலுடைய வாறு போலும்
தரும்அருளை மலமுயிர்கள் சாராமல் மறைக்கும்
இகலிவரும் இவையுணரின் இருள்வெளியாம் தன்மை
எய்தும்வகை தன்செய்தி யிலங்கு விந்து
பகர்வரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப்
பான்மையினல் ஒரு நாதம் படரும் தானே."

"வந்தடைந்து பின்னமாய் வன்னங்கள் தோற்றம்
வரும்அடைவு படவொடுக்கி மயிலண்ட சலநேர்
சிந்தைதனில் உணர்வாகும் பைசந்தி உயிரிற்
சேர்ந்துவரும் அவைமருவும் உருஎவையும் தெரிந்து
முந்தியிடும் செவியிலுறாது உள்ளுணர்வாய் ஓசை
முழங்கியிடும் மத்திமைதான் வைகரியில் உதானன்
பந்தமுறும் உயிரணைந்து வந்தமொழி செவியின்
பாலணைய நினைந்தபொருள் பகரும் தானே."

—சிவப்பிரகாசம், பொது-கக, உ0.

நாதம் - சூக்குமை: முதல்ஒலி; அகஓசை. இடம் மூலம். விந்து - குண்டலி. இதற்கு இடமும் மூலமே. இவ்விந்துவினின்றும் நாதம் தோன்றும்.

பைசந்தி - ஒலிமுதல். இடம் - கொப்பூழும் நெஞ்சமும். மத்திமை-மிடற்றோசை. வைகரி - செவியோசை.

*இவ் ஓசை நான்கும் தூமாயையாகிய உணர்த்து மெய்யில் நுண்மையாயும், தூவாமாயையாகிய உணர்வு மெய்யில் பருமையாயும், மூலப்பகுதியாகிய உடல்மெய்யில் மிகப் பருமையாயும் நிற்கும்.

ஓசைநுண்மை யேபருமை மீப்பருமை ஆம்உணர்த்தல்
வீசுணர்வோ டாம்உடல்மெய் வேறு.

தொன்மை மல நீக்கத்திற்குக் கூட்டுத்தொடக்க மலமாகிய மாயையின் காரியமும் வினையின் காரியமும் வேண்டப்படும். அதுபோல் புணர்வாகிய சகலநிலை நிகழ்வதற்கு நால்வகை ஓசையும் வேண்டப்படும் என்க.

தொன்மை மலமகலத் தோயும்இடைக் கூட்டுமலம்
முன்மைநால் ஓசைபுணர் வுக்கு.

புணர்வு - சகலம்.

"எண்சிலவு............... ...........தாம்'

## இயைந்தியக்கும் தெய்வம்

'ஓமொழி'யின்கண் காணப்படும் எழுத்தோசைகளும் அகவோசைகளும் அறிவில்லனவே. அவற்றை இயைந்து இயக்கும் அறிவுடைத் தெய்வங்கள் வேறுள. அவை அருளோன், ஆண்டான், அயன், அரி,

---

* 'விந்துவின்' 'வைகரி' 'உள்ளுணர்' 'வேற்றுமைப்' 'சூக்கும' —சித்தியார். க-கக-உரு.

அரன் என்ப. இவ் ஐவரையும் முறையே சதாசிவம், ஈசர், அயன், மால், பரமன் எனவும் வழங்குவர். மால் - அரி. பரமன் - அரன். அயன், அரி, அரன், என்னும் இம்மூவரும் தூமாயையில் உணர்வு மெய்யில் உறைப வராவர்.*

## இயைந்தியக்கும் திருவருள்

நீக்கி, நிலைப்பி, நுகர்வி, அமைப்பி, அழுத்தி† என்று சொல்லப்படும் திருவருள் ஆற்றல் ஐந்தும் முறையே அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் ஆகிய ஐவரையும் இயைந்தியக்கி (அதிட்டித்து) ஐம்பெரும் தொழில்களையும் புரியும். ஐம்பெருந் தொழில்களாவன: படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்பன.

## எண்ணம்

'எண்ணம்' ஈண்டு மானதக் காட்சியினைக் குறிக்கும். மானதக்காட்சி என்பது இறப்புமெய் உணர்வு.

---

# இரண்டாமதிகரணம்

**இனி இவ்வான்மாச் சகசமலத்தினால் உணர்வின்றேன்றது.**

எ - து. மே - ள். எ - னின். ஆன்மா அந்தக்கரணங்களின் ஒன்றன்றாயின் அவற்றோடு சந்தித்து நிற்றற் கேதுவென்னை யென அவர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

ஆகந்துக மலங்களி னீக்குதற்குச் சகசமலமென விசேடிக் கப்பட்டது: படவே, உயிர் முதல்வனைப்போல் அந்தக்கரண முதலியவற்றின் வேறாய சேதனப்பொருளாயினுஞ் செம்பிற் களிம்புபோல வேறு காரணமின்றி மூலமலந் தன்னோடு உடனாய் நிற்றலில் தன்னியல்பானுணருமாறின்றிக் கருவிகளைக் கூடி நின்றுணர்வதாயிற்றெனை விடுத்தவாறாயிற்று. இதனானே மலத்துளதாமென மேற் பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட மூலமலத்திற்கு ஈண்டிலக்கணங் கூறினாரென்பது பெறுதும். அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தினிகழுமியல்பே மலத்திற்குத் தன்னியல்பு; கருவிகளோடுகூடி அவத்தையுறுவதாகிய விபரீத வுணர்வைச் செய்யுஞ் சகலத்தினிகழுமியல்பே பொதுவியல்பாக லான், மலத்திற்கு இருவகையிலக்கணமும் ஈண்டே பெறப் பட்டன.

---

* பக்கம்-௩உக. † கரு௬.

**அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்**

எ - து. ஏது எ - னின். சகசமலத்தினால் உணர்வின்றி யொழியிற் பின் கருவிகளோடு கூடியவழி அறிவுண்டாமாறு யாங்ஙனமெனச் சற்காரியவாதம்பற்றி நிகழுங்கடாவை யாசங் கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அச்சகசமலமாவது ஞானத்திற்குத் திரோதக மாய் அதனை இல்லையென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்ற லான் இனி இவ்வான்மாச் சகசமலத்தினால் உணர்வின்றெனா மேற்கொண்டது (எ - று).

மலத்தினதிலக்கணம் வடமொழி வழக்குப்பற்றிக் கூறு வார் ஞானதிரோதகமாயெனவும் அதனைத் தமிழ்மொழியான் விளக்குவார் மறைத்துக்கொடு நிற்றலானெனவுங் கூறினாராக லான், அது கூறியது கூறலன்மையுணர்க. திரோதகமென்னும் வடமொழி மறைத்தலைச் செய்வதென்னும் பொருட்டாய் வினை முதன்மேனின்ற வினைப்பெயர்.

இதனானே ஞானாபாவமே அஞ்ஞானமென்பார் மதமும் மறுக்கப்பட்டது; அபாவம் ஒருகாரியத்தைச் செய்யமாட் டாமையின்.

*மாயா தனுவிளக்காம் மற்றுள்ளங் காணாதேல்
ஆயாதாம் ஒன்றை அதுஅதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்தோன்றுங் காட்டம்போல்
தன்னைமலம் அன்றணைதல் தான்.

எ - து. உ - ம். எ - னின். ஆகந்துகமலமே ஞானதிரோதக மாதலமையும் வேறுமோர் மலமுண்டென்றல் மிகைபோலு மென ஐக்கவாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்து ஆகந்துகமலத்தானுஞ் சகசமலத்தானுஞ் செயப் படுங்காரியங்கட்குத் தம்முள் வேற்றுமை பெரிதாமாறுணர்த்து முகத்தான் ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உள்ளம் மாயா தனுவிளக்கு ஆக் காணாதேல் ஒன்றை ஆயாது ஆம்—உயிர் ஆகந்துகமலமெனப்படும் மாயா காரியமாகிய உடம்பு தனக்குக் காட்டாகக்கொண்டு காணா தாயின் ஒருவிடயத்தையும் அறிவதில்லையாம், மற்று மலம் தன்னை அன்று அணைதல்தான்—சகசமலம் உயிரை அநாதியே பற்றிநிற்றல், அது அது ஆய் வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்று ஆம் காட்டம்போல்—காட்டமுதலியவற்றுள்

*'புருடனே' சித்தியார். சு. உ-௩க. 'மலமென' 'போதகா' உ. ச-அக,அ௪.

அதுவதுவேயாய் நின்றுந் தனக்குக்கேடில்லாத வன்னியைத் தனக்குள் மறைத்துவைத்து ஒன்றேயாய் நிற்குங்காட்டம் போலும் (எ - று).

எனவே, காட்டாய் நின்று விடயங்களை யறியும்வண்ணம் உயிர்க்கு அறிவை விளக்குதல் மாயையின் செய்தி; அவ் அறிவைத் தடைசெய்துகொண்டு நிற்றல் மலத்தின் செய்தி; இவ்விரண்டும் இங்ஙனம் ஒளியுமிருளும்போல் இகலி நிற்பனவாகலான் அத்தன்மைத்தாய மாயை இத்தன்மைத்தாய மலமாதல் யாண்டையதென மறுத்தவாறாயிற்று.

மற்றென்பது மலமன்றணை தலென்பதனேடியைந்து வினைமாற்றின்கண் வந்தது.

முற்றும்மை சிறப்பும்மைகள் தொக்கன.

ஆமுந் தானுங் கட்டுரைக்கண் வந்த அசை.

வன்னி அது அதுவாதல் காட்டத்துள் மறைந்துழிக் காட்டமேயாயுஞ் சூரியகாந்தத்துள் மறைந்துழி அதுவேயாயும் இவ்வாறே அவ்வவற்றின் மறைந்துழித் தானென்பதொன்றில்லையென்னும்படி நிற்றல். அங்ஙனமாகியும் வீயாமை, கடைதன் முதலிய தொழிற்பாடு நிகழ்ந்தவழித் தோன்றுதலாற் பெற்றும். தன்னுள் மறைத்தல் வன்னியென்பதொன்றில்லை யென்னும்படி பொதிந்துகொண்டு தானேயாதல். ஒன்றுங்காட்டம் ஒன்றே போல் அத்துவிதமாங் காட்டமென்றவாறு. இவ்வாறு உவமைக்கோதிய அடையுந்தொழிலும் இயைபும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க.

மாயை கன்மங்கள்போல ஆதியன்றெனக் காலத்தானும் வேற்றுமை கூறுவார் அன்றணை தலென்றார்.

இங்ஙனங் கூறிப்போந்த மலமாவது ஞானபாவமென்பாரும், பிராந்திஞானமென்பாரும், தமோகுணமென்பாரும், பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய அவிச்சையென்பாரும், மாயை கன்மங்களென்பாரும், சிவசத்தியென்பாரும், உயிர்க்குணமென்பாருமாய், அவ்வச்சமய நூல்பற்றி மயங்குவாருமுளர். அம்மலத்திற்குப் பற்றுக்கோடாகிய சூனியமுதலியவற்றின் வேறெனப்பட்ட ஆன்மாவும் இயற்கையாற் சடமென்பாரும், அறிவுமாத்திரையேயெனக் குணிப்பொருளன்றென்பாரும், சுதந்திரவறிவுடைத்தென்பாரும், அவ்வவ்வுடம்பளவிற்றென்பாரும், அணுவளவிற்றென்பாரும், உருவென்பாரும், அருவென்பாரும், உருவருவென்பாருமாய், இன்னும் பலதிறப்படக்கூறி மயங்குவாரும்

உளர். அவையெல்லாம் பொருந்தாமை ஆகமங்களுட்காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

இச்சகசமலம் ஞானதிரோதகமாய்த் திரவியமாய் அறியாமைக்குணத்ததாய்ச் செம்பிற் களிம்புபோல உயிரின் குற்றமாய் அநாதிபந்தமாய்ச் சடமுமாய்ப் பலவுமாயின் அழிவெய்துமாகலின் அநாதிபந்தமாதல் பெறப்படாமையின் ஒன்றேயாய் விஞ்ஞாகலர் பிரளயாகலர் சகலரென்னும் உயிர்ப்பாகுபாட்டிற் கேதுவாய் உயிர்கடோறுந் தனித்தனி வெவ்வேறாய் மறைத்து நின்று தத்தங்காலவெல்லையி னீங்குவனவாகிய சத்திகள் பலபலவுடைத்தாய் உயிர்கள் மூன்றவத்தைகளும்படுதற்கு மூலகாரணமாய் நித்தமாய் வியாபகமாய் வியாபகவுயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்ப் பசுத்துவம் பசுநீகாரம் மிருத்தியு மூர்ச்சை மலம் அஞ்சனம் அவித்தை ஆவிருதியென்றற் றொடக்கத்துக் காரணக்குறிகளுமுடைத்தாய் நிற்பதெனவும் படலம் படர்ந்த கண் ஞாயிற்றின் சந்நிதியின் நிற்பினும் படலத்தான் அவ்வொளியை யிழந்து இருளினழுந்துமாறுபோல முதல்வன் சந்நிதியினிற்பினுஞ் சோபானமுறையின் அறிவிக்க அறியுந்தன்மைத்தாய உயிர் அநாதியே யறிவித்தால் அறியமாட்டாமையின் அம்மாட்டாமையான் அவ்வறிவை இழந்து அறியாமையாய் அழுந்துதலின் அஃதவ்வுயிர்க்குப் பந்தமாயிற்றெனவுமுணர்க. அநாதியே மலத்தினீங்குதல் முதல்வன் வினையாய் அநாதி முத்தத்தன்மையென எண்குணங்களுள் வைத்தெண்ணப்படுவதென்பது சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்தாற்போல அநாதியே மலத்தைப்பற்றுதல் உயிரின் வினையாய் உயிர்க்குற்றங்களுள் வைத்தெண்ணப்படுவதென்பதூஉம் அவற்றிற்கெல்லாம் ஒப்பமுடிந்தது. ஈண்டுப்படுங் கடாவிடைகளெல்லாம் ஈரிடத்துமொக்கும்.

## விளக்கம்

### அறிதலும் அறிவித்தலும்

ஆவி அறிதலும் அறிவித்தலும் ஆகிய இருவேறு தொழில்களும் ஒருங்கியற்றும். அறிதல் தன் அளவான் அறிதல். அறிவித்தல் கருவியைக் கொண்டு செய்வித்தல். கை எழுதுகோலைக் கொண்டு எழுதும்; ஈண்டு எழுதுதல் கையின் தொழில். அத்தொழிற்குத் துணைக்கருவியாக நிற்பது எழுதுகோல். எனவே எழுதுகோல் தானே எழுதாது கை எழுத எழுதும். அதனால் எழுதுகோல் எழுதுவித்தல் எனப் பொருள்படுவதாயிற்று. அறிதல் தற்பிரகாசம், அறிவித்தல் பரப்பிரகாசம்.

> கையால் எழுதல் எழுதுவித்தல் காணுங்கால்
> செய்கோலா லாம்எழுது விப்பு.

அகப்புறக்கலன்கள் பொறிபுலன்களைக் கருவியாகக் கொண்டறியினும் தாம் ஆவிக்குக் கருவியாக இருப்பதால் அறிதலின்றாகின்றது. இதனையே பரப்பிரகாசமட்டாய் நின்ற அகப்புறக்கலன்கள் என்று கூறப்பட்டது. நாழிகை வட்டில் நாழிகையை அறிவிக்கும். ஆனால் அக்கருவி உணராது. அக் கருவியின்றியும் நாம் உணரோம். அக் கருவியை உணர்த்துமாறு செய்வதும் நாமே. இந் நிலையில் நாம் உணர்தலும் உணர்த்தச் செய்தலும் ஆகிய இரு தன்மையுடையோம். நாழிகை வட்டில் உணர்த்துவதாகிய ஒரு தன்மையே உடையது. இதனாலேயே அது தற்பிரகாசம் இல்லது என விளக்கப்படுவதாயிற்று.

### கருவியின் இன்றியமையாமை

ஆவி அறிதலும் அறிவித்தலும் ஆகிய தற்பிரகாசமும் பரப்பிரகாசமும் உடையதாயின் கருவிகளையின்றி அறியாமைக்குக் காரணம் என்னை? ஆவி செம்பிற் களிம்புபோல் ஒன்றிநின்று தன் அறிவை மறைக்கும் தொன்மைமலப்பிணிப்பால் கருவிகளின் துணையின்றி அறியமாட்டாததாயிற்று. நோய்த்தன்மையால் தள்ளாடுகாலுடையான் ஊன்றுகோலின் துணைகொண்டு நடக்கக் காண்கின்றோம் அல்லவா? அதுபோலவே தான் ஆவியும் கருவியின் துணையின்றி அறியமாட்டாததாயிற்று. ஊன்றுகோல் ஊன்றுவார் துணையின்றி நில்லாமைபோல் கருவிகளும் ஆவியின் துணையின்றி எதும் செய்யா.

### புல்லுமலம் பொருந்துமலம்

புல்லுமலத்தைச் சகசமலமென்பர். பொருந்துமலத்தை ஆகந்துக மலமென்பர். புல்லுமலம் தொன்மையிலேயே உள்ளது. பொருந்துமலம் தொன்மையிலேயே உள்ளதாயினும் பொருந்துவதற்குத் தொடக்கம் உண்டு. புல்லுமலம் ஆவியோடு உடனிற்பது. அஃது அறிவை மறைப்பது. இது கண்ணினுள்ள மாசு பொருள்களை மறைப்பதனை ஒக்கும். கண் கண்ணாடியின் துணையால் பொருள்களைக் காண்பதுபோல் ஆவியும் மாயா காரியமாகிய உடலின் கருவிகளைக்கொண்டு உணர்வதாயிற்று. மாயையும் வினையும் தொன்மையே. ஆயினும் அவற்றின் காரியமாகிய உடலுறுப்பு உலகங்களும் இருவினைகளும் இறையருளால் பொருந்தப் பொருந்துவன. அதனால் இவற்றை இடைச்சேர் மலம் என்பர். காலிலுள்ள நோய் நடக்கத் தடைசெய்வது, கைக்கோல் நடக்கத்துணை செய்வது. இவைபோன்று மலம் அறிவை மறைப்பது, மாயை அறிவை விளக்குவது. வினை கருவியும் கண்ணாடியும் தீட்டுவதாலும் துடைப்பதாலும் விளக்கமுறுவன போன்று மாயை அறிவை விளக்குவதற்குத் துணை செய்வது.

### மலத்தின் இருநிலை

மலத்தின் தன்னியல்பு அறிவை மறைப்பதாகிய அறியாமையைச் செய்வது, தன்னியல்பு எனினும் உண்மை எனினும் ஒன்று. இது நிகழும் இடம் புலம்பு. புலம்பு எனினும் கேவலம் எனினும் ஒன்றே. ஆவி மாயா காரியமாகிய உடலுறுப்பு உலகங்களுடன் கூடிப் பாடு எய்தும் நிலையாகிய அவத்தையின்கண் மலம் மாறுபாட்டுணர்வை உண்டாக்கும். இது நிகழும் இடம் புணர்வு. புணர்வு எனினும் சகலம் எனினும் ஒன்றே. மாறுபாடு எனினும் விபரீதம் எனினும் ஒன்றே. மாறுபாட்டைச் செய்யும்

நிலையே மலத்தின் பொது இயல்பு. இப்பொது இயல்பினைக் காரறி வாண்மை என்றும், புல்லறிவாண்மை என்றும் புகல்வர். பொது - சார்பு.

ஆவியறி வைமறைத்தல் ஆம்மல உண்மைகலன்
மேவினும் பாடுறல்புன் மை.

## ஒப்பு

மலம் நோயை ஒக்கும். மலப்பிணிப்புற்ற ஆவி நோயாளியை ஒக்கும். மாயை மருந்து தங்கும் கலத்தை ஒக்கும். வினை மருந்தை ஒக்கும். இறைவன் மருத்துவனை ஒப்பன். மருந்தும் கலமும் மருத்துவன் உடைமை. நோய் மருத்துவனுக்குப் பகை. அவைபோல் மாயை வினைகள் இறைவனுக்கு உடைமை. மலம் இறைவனுக்குப் பகை. நோயகன்று நோயாளி நலமுறுதல் மருத்துவன் பேரிரக்கத்தாலாம். மலமகன்று ஆவி நலமுறுதல் இறைவன் திருவருளால் ஆம்.

தொன்மைமலம் நோயாம் தொடக்கமலம் ஆம்வினை
வன்மருந்து சேர்கலம்மா யை.

## இன்மை

இன்மையை அபாவம் என்பர். இன்மை ஒரு தொழிலைச் செய்ய மாட்டாது. கண்ணில் ஒளி கலவாமல் மறைப்பது படலம், படலம் ஒளியின் இன்மை அன்று. பொருளைக்காண ஒட்டாது மறைப்பது திரை. திரை பொருளின் இன்மை அன்று. படலமும் திரையும் தடைகளே. இவைபோல் அறிவை மறைக்கும் மலம் அறிவின் இன்மை அன்று, அறியாமை. அறிவின் மறைப்பு அறியாமை. இதனால் அறிவின் இன்மையே அறியாமை என்பார் கொள்கை ஒவ்வாமை காண்க. இதனை "ஞானபாவமே அஞ்ஞானமென்பார் மதம்" என்ப.

'மாயா................... .....தான்.'

## ஒளி இருள்

மாயை ஆவிக்குக் காட்டாய் நின்று புலன்களை அறியும்வண்ணம் அறிவை விளக்கும். மலம் அவ் அறிவைத் தடைசெய்து கொண்டு நிற்கும். இவ்விரண்டும் ஒன்றோடொன்று மாறுபட்ட ஒளியும் இருளும் போன்றாகும். எனவே மாயை மலமன்று. இவ் உண்மை வரும் சிவப்பிரகாசத்திருப்பாட்டான் உணர்க.

"புகலுமலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை
பொருந்தியிடும் அரனருளால் போதம் நீபம்
சகலமெலாம் உடனுபவ வாறு போலும்
தரும்அருளை மலமுயிர்கள் சாராமல் மறைக்கும்
இகலிவரும் இவையுணரின் இருள்வெளியாந் தன்மை
எய்து வகை தன்செய்தி இலங்கு விந்து
பகர்வரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப்
பான்மையினுல் ஒருநாசம் படரும் தானே."

—சிவப்பிரகாசம். ௨-௧௧.

## காட்டு

ஆவிக்கு மாயாகாரியம் காட்டாய் நிற்கும். காட்டு - விளக்குங்கருவி வியஞ்சகம்.

**அது அது ஆதல்**

மலம் ஆவியைத் தன்னகத்து மறைத்து மலமே என்று சொல்லும்படி நிற்கும். ஆவி மலத்தை அருளால் நீக்கி அறியாமையாகிய இருளும் புல்லறிவாகிய மருளும் அகன்று நல்லறிவாகிய தெருள் பெற்று அருளே எனும்படி நிற்கும் இயல்புடையது. எனவே ஆவி மலத்தைக் கெடுக்கும் தன்மையது. மலம் பொருந்தியதனால் ஆவிக்குக் கேடு இன்று.

இஃது எதுபோல் என்றால்: விறகினுள் தீ இருக்கின்றது. தீ விறகுக்குப் பகை. அவ்விறகினைக் கெடுக்கும். ஆனால் அவ்விறகினைத் தீக்கடை கோலாற் கடைந்து அத்தீயை எழுப்புதல் வேண்டும். அதுவரையும் அத்தீத் தோன்றாது. அத்தீயினை மறைத்து விறகென்றே தோன்றும்படி அவ்விறகு நிற்கும், அதுபோல் என்க.

மேலும் அத்தீ வெங்கதிர்க் கல்லில் மறைந்துழி அக்கல்லாகவே தோன்றும். வெங்கதிர்க்கல் - சூரியகாந்தக்கல். அதிலடங்கியிருக்கும் தீ பகலோன்கதிர். தீ அதில் அடங்கியிருக்கின்றதென்பது வெயில்முன் கிடக்கும் பஞ்சு எரிந்து சாம்பராகாது வெங்கதிர்க்கல்லின்முன் எரிந்து சாம்பராகிவிடும் என்பதனால் விளங்கும். வரும் திருமூல நாயனார் திருப் பாட்டும் இவ் உண்மையை விளக்கும்.

" சூரிய காந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தம் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே." —௧௦ - ௧௧௭.

வெங்கதிரும் காய்ந்தெரிக்கா வெண்பஞ்சை வெங்கதிர்க்கல்
இங்கெரிக்கும் ஆவிமலம் எய்ந்து.

விறகைக் கடைந்துழித் தீ வெளிப்படும்மெய்ம்மை வரும் ஆளுடைய அரசர் திருப்பாட்டானும் உணர்க.

" விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன் நிற்குமே." —௫. ௯௦ - ௧௦.

இத்திருப்பாட்டு இறைவன் ஆவியுடன் மறைந்து நிற்கின்றான் என்பதும், அவனை அன்பாகிய கோவில் மறவாமையாகிய அறிவுக் கயிற்றால் சீலம் நோன்பு என்னும் செய்ம்முறை செய்து வலிந்து இழுத்துக் கடைய விறகில் தீப்போல் வெளிப்படுவன் என்பதும் கூறுகின்றது.

மேலும் செறிவு என்னும் ஒழுக்கத்தில் நிற்பார்க்கு இழுத்துக் கடையப் பாலில் நெய் தோன்றுவதுபோல் தோன்றுவன், (நெய் - வெண்ணெய்.) அறிவென்னும் ஒழுக்க நெறி நிற்பார்க்குக் கடைய மணியில் ஒளி தோன்றுவதுபோல் தோன்றுவன், என்பனவற்றையுங் குறிக்கின்றது. முறுக - வலிந்து. வாங்கி - இழுத்து.

இத்திருப்பாட்டின் ஒப்பையே ஒருபுடை ஒப்பாக ஆவிக்கும் கூறலாம். ஆவி மலச் சார்பால் மூவகைப்படும்: ௧. மலமட்டும் உடைய ஒருமலத்தார், ௨. மலமும் கன்மமும் உடைய இருமலத்தார். ௩. மலம் கன்மம் மாயை என்னும் மூன்றும் உடைய மும்மலத்தார்.

"*திரிமலத்தார் ஒன்றதனிற் சென்றோர்கள் அன்றி
ஒருமலத்தா ராயும் உளர்." —திருவருட்பயன், உ. உயிர் - உ.

ஆணவமலமட்டும் உள்ள ஒருமலமுடையார்க்கு வேண்டுதல் வேண்டாமையாகிய இருவினைச் செயல்கள் இல்லை. அதனால் அவர்கள் ஒருமலத்தார் என்று அழைக்கப்படுவர். அவர்களுக்கு இருக்கை தூமாயை. வினையும் தூயவினை, யாக்கையும் தூய யாக்கை. எனவே மணியின்கண் ஒளி கடைதன் மாத்திரத்தால் வெளிப்படுவதுபோல் முழுமுதல்வன் உண்ணின்று (அறிவுக்கறிவாய்) உணர்த்துதன் மாத்திரத்தான் மெய்யுணர்வு தோன்றும். தூமாயை - உணர்த்துமெய்.

வேண்டுதல்வேண் டாமை மயக்கிலவாம் உண்டுமலம்
தூண்டுதூ மாயைமலம் தூக்கு.

ஆணவம் கன்மம் என்னும் இரண்டுமலம் உடையார்க்கு விருப்பு வெறுப்புக்கள் உள எனவே யாக்கையும் தூவா மாயையால் ஆயது. தூவா மாயை உணர்வுமெய். இவர்கட்கு மூலப்பகுதியில் தோன்றும் உடல்மெய் இன்மையால் மயக்கின்றாம். இவர்களுக்கு மெய்யுணர்வு பாலில் வெண்ணெய் இழுத்துக்கடையத் தோன்றுவதுபோல் ஆண்டான் அருளுருவாய்த் தோன்ற அடியுணர்வு தோன்றும்.

வேண்டுதல்வேண் டாமை உளவுணர்வு மெய்யிரண்டு
பூண்டமலத் தார்மலத்தாற் புக்கு.

ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலமுடைய மும்மலத்தார்க்கு விருப்பு வெறுப்போடு மயக்கமும் உண்டு. மயக்கம் மூலப்பகுதிச சார்பு. அதனாலேயே மும்மலத்தார் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்கட்கு மெய்யுணர்வு விறகில் தீ வலிந்து இழுத்துக்கடைய முன்னிற்பது போல், ஆண்டவன் அருளால் ஆசிரியத் திருக்கோலங்கொண்டு நூலும் நொடித்தலும் நடித்தலும் ஆகிய செயல்களால் வெளிப்படும்.

வேண்டுதல்வேண் டாமைமலம் வீழ்நுகர்வு ஆம்உடல்மெய்
காண்டுமலம் மும்மையர்க்குக் காண்.

## அடையும் தொழிலும் இயைபும்

உவமைக்கு ஓதிய அடை 'அது அதுவாய் வீயாத' என்பது. தொழில் 'மறைத்தலும்' கடைதலும். இயைபு 'ஒன்றேபோல்' அத்துவித மாதல். இவற்றைப் பொருளின்கண் சார்த்துங்கால், ஆணவமலமும் ஆவியும் விறகில் தீப்போல் விரவி மறைந்து நிற்பினும் ஆவிக்குக் கேடின்று. இஃது அடை. விறகைக் கடைந்தவழித் தீவெளிப்படுவது போல் ஆவிக்குக் கருவிகளுடன் கூடியவழி அறிவு விளங்கும். இது தொழில். விறகும் தீயும் பொருளால் இரண்டே ஆயினும் தோற்றத்தில் விறகென ஒன்றேயாய் இருப்பதுபோல் ஆணவமும் ஆவியும் பொருளால் இரண்டாயினும் தோற்றத்தில் ஒன்றேயாய்த் தோன்றுவது. இஃது இயைபு.

வீயாமை மேலாதல் வேறன்மை ஆம்அடையே
மாயாச் செயலியைபாம் மற்று.

---

*'உரைதருமிப்' சித்தியார். அ. க - உ.

### நீங்கலும் தாங்கலும்

விழுத்துணை முழுமுதல்வன் தொன்மையிலேயே 'இயல்பாகவே பாசங்களினின்றும்' நீங்குதல் உடையன். இஃது அவன் எண்பெருங் குணங்களுள் ஒன்று. நீங்குதல் தொழிலும் ஆகும். இதனையே அநாதி முத்தத்தன்மை என்பர். தொன்மையிலேயே ஆவிகள் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்காமை. இதனையே பாசங்களைத் தாங்குதல் என்று குறிக்கப்பட்டது. இஃது ஆவியின் குற்றக்குணம் மலத்தைப்பற்றுதல் ஆவியின் வினை. "எண்குணங்களாவன: தன் வயத்தனாதல், தூயவுடம் பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்று முணர்தல். இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம் பிலின்பமுடைமை என இவை."*

இவ் உண்மை வரும் திருமூல நாயனார் திருப்பாட்டானும் காண்க:

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கில்பசு பாசம் நிலாவே." —கo. ககரு.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." —திருக்குறள், ௩ரு0.

தொன்மையிலே தொல்லோன் தொழிற்குணம் நீங்கல்மலம்
பன்மையுயிர்க் குற்றம்பற் றல்.

### பண்பு

பண்பு இருவகைப்படும். அவை பண்பும் தொழிலும் என்ப. எடுத்துக்காட்டாகத் தீயின் பண்பு சூடு அதன் தொழில் சுடுதல். அது போல் "இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல்" இறைவன் எண் குணங்களுள் ஒன்று. அது சூடுபோல் புடை பெயர்வின்றி நிற்பது. அவன் நீங்கி நிற்பது என்பது புடம் போட்ட பொன்னின்கண் மாசு பற்றாமைபோல் மலம் ஒட்டாமை, இது தொழில். இத்தொழில் தீச் சுடுதலை ஒக்கும். குளிர் தீயின்கண் அண்டாமை தீயின் தன்மையே அன்றிக் குளிரின் தன்மையன்று. எனவே பண்பு அடங்கியிருக்குங்கால் குணம் எனவும், வெளிப்பட்டுத் தொழில் புரியுங்கால் ஆற்றல் என்றும் வழங்குப.

ஆற்றல் அடக்கமிவை ஆயின் தொழில்குணமாம்
சாற்றுமெழிற் பண்புநிலை சார்ந்து.

### மலப்பெயர்கள்

ஆணவம், பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி முதலிய காரணக்குறிகள் மலத்திற்கு உண்டு. இவற்றின் பொருள்களை ஒருவாறு கூறுதும்: ஆணவம் - அணுத் தன்மை செய்வது. உயிர் பரப்புடையதாக இருந்தும் மலச்சார்பால் உட லோடு ஒட்டிச் சிறுதன்மை எய்துகின்றது. இதனால் மலத்திற்கு ஆணவம் என்னும் பெயர் வழங்குவதாயிற்று. இது கணநோய் உற்றான்

* 'எட்டுக்' ச. கஅ - அ.

பார்வை மழுங்கி அண்மையில் அழைத்துக் காண்டலும், கை கவித்துக் காண்டலும் முதலிய சிறுமைச் செய்தியோடு ஒக்கும். சென்று பற்றும் கண்ணின் பரப்பாற்றல் நோய் முதலிய சார்புக்குற்றத்தால் சிறுமை எய்திற்று.

பசுத்துவம் ஆவியைப் பிணித்துக் கட்டி (பசுத்துவம்) என அவற்றிற்குப் பெயா வரச்செய்வது. பசுநீகாரம் - ஆவியின் அறிவை மறைப்பது. மிருத்தியு - ஆவியை மாறிப்பிறக்கச் செய்வது. மூர்ச்சை - மயங்கிக் கிடக்கச் செய்வது. மலம் - வாலாமை ஆக்குவது. அஞ்சனம் - இருள் போன்றிருப்பது. அவித்தை - அறியாமையைச் செய்வது. ஆவிருதி - மூடுவது. கட்டி - கட்டினையுடையது ; பசு.

---

# மூன்றும் அதிகரணம்

**இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென்றது.**

எ - து. மே - ள். எ - னின். இருளினகப்பட்ட கண் விளக்கோடு கூடியவழி விடயங்களைக் காண்டலேயன்றி வெவ்வேறு அவத்தைப்படுமாறில்லை. அதுபோல மலத்திலகப்பட்ட உயிர் கருவிகளோடு சந்தித்தவழி ஒருதன்மைத்தாயறிதலே அமைவுடைத்து. அவ்வாறன்றி மேலைச்சூத்திரத்தோதிய முறையான் ஐம்புலனறிந்தும் ஒடுக்கமறிந்தும் உண்டி வினையின்றிக் கிடந்தும் உணர்த்தவுணர்ந்தும் இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப் படுமாறியாங்ஙனமென அவர் கூறுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ - ள். வெ - படை.

அவத்தையெனப்படுவன பலவுளவாகலின் அவற்றுள் ஈண்டு ஐந்தவத்தையெனப்பட்டவை யாவையென்னும் ஐய நீக்குதற்குக் கிளந்தெடுத்துரைத்தார்.

அவத்திதன் என்னும் வடமொழி ஆடூஉவறிசொல்லாற் கூறியது அம்மதம்பற்றி.

அமைச்சரசேய்ப்ப நிற்றலானென்பதூஉம் ஈண்டு வருவித்துரைத்துக்கொள்க. கொள்ளவே, * "படைகொடு பவனி போதும்" வேந்தன் "கடைதொறும் விட்டுவிட்டுக் காவலும் இட்டு" அந்தப்புரத்திற் செல்லுமாறுபோல ஆன்மா அங்ஙனம் அஞ்சவத்தைப்படுதல் அமைவுடைத்தென விடுத்தவாறாயிற்று.

---

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௩௨. பக்கம். (௨௩௧)

**அதுதான் மலசோருபத்தின் மறைந்து அருப சோருபியாய்நிற்றலான்.**

எ - து. ஏது எ - னின். அரசன்போல் உயிர் அங்ஙனம் அஞ்சவத்தைப்படுமாயின் வியாபகத்திற்கிழுக்காய் முடியும் போலுமென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அவ்வுயிர்தான் மலவடிவின் மறைப்புண்டவழி அருவுடம்பாகிய தத்துவசொரூபியாய் நிற்றலான் அத்தத்துவங்கள் தொழிற்படுமவத்தை வேறுபாடுபற்றி இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென மேற்கொண்டது (எ - று).

*"சீவனே வியாபி யவத்தையிலிழிந்து திரும்புதல் குற்றமாங் கருவி சேருதல் பிரித லில்லையா முறையிற் செய்யப்படுங் கருவியே தெரியுந்—தாவிலா வறிவு தங்கினவிடமே தகுமுயிர்க்கிருப்பிடம்" என்றதூஉம் இப்பொருள்பற்றியென்க.

தத்துவவன்ன ரூபனாதல் வீடுபெற்றுழியும் உண்டுபோலுமென்று ஆசங்கை நிகழாமைப்பொருட்டு, மலசொரூபத்தின் மறைந்தென மேற்கூறிப்போந்ததனை வழிமொழிந்துகொண்டு அரூபசொரூபியாய் நிற்றலானென்று ஏதுக்கூறினார்.

மறைந்தவழியென்றது மறைந்தெனத் திரிந்துநின்றது.

†ஒன்றணையா மூலத்து உயிரணையும் நாபியினில்
சென்றணையுஞ் சித்தம் இதயத்து—மன்றவே
ஐயைந்தாம் நன்னுதலிற் கண்டத்தின் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

எ - து. உ - ம். எ - னின். தத்துவங்கள் தொழிற்படுதற்கண் நிகழும் அவத்தை வேறுபாடு தெரித்துணர்த்தி அஃதேதுவாதலை வலியுறுத்துதனுதலிற்று. நன்னுதலில் வாக்காதி மெய்யாதி மன்றவேய் ஐயைந்தாம் கண்டத்தின் (வாக்காதி மெய்யாதி) விட்டு அகன்று வேறு (ஐயைந்தாம்) இதயத்திற் சித்தஞ் சென்றணையும் நாபியினில் உயிர் அணையும் அணையா மூலத்து ஒன்று எனவியையும்.

(இ - ள்.) சாக்கிரத்தானமெனப்படும் இலாடத்திற் புறவிந்திரியம் பத்தினையுந் தேற்றமாகப் பொருந்திய இருபத்தைந்து கருவி தொழிற்படும்; சொப்பனத்தானமெனப்படுங் கண்டத்தின் அப்பத்தினையும் விட்டு நீங்கி வேறாய இருபத்தைந்து

* உலகுடைநாயனார் கழிநெடில். ௩.

† 'சாக்கிர' சித்தியார் ௪ - ௩ - ௩௩.

கருவி தொழிற்படும்; சுழுத்தித் தானமெனப்படும் இதயத்தின் அவற்றுள் இருபத்திரண்டு கருவிகளைவிட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் இரண்டு கருவிகளோடுகூடிய சித்தந் தொழிற்படும்; துரியத்தானமெனப்படும் உந்தியிற் சித்தத்தையும் விட்டு நீங்கி முன்னர்க் கூறப்படும் புருடதத்துவத்தோடு பிராணவாயு கூடித்தொழிற்படும்; இக்கருவிகளொன்றும் அணையாத அதீதத் தானமெனப்படும் மூலாதாரத்திற் புருடனொன்றே நிலைபெறும் (எ - று).

எனவே, இலாடத்தான முதலிய ஐந்தினும் நிற்கும் கருவிகள் முறையே முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றுமென்பது போந்தவாறுணர்க.

மன்றவென்பது தேற்றப்பொருட்டாகிய இடைச்சொல்.

ஏய்தல் பொருந்துதல்; வினைத்தொகை.

வாக்காதி மெய்யாதியையென இரண்டாவது விரித்துரைக்க. அஃதீரிடத்துஞ்சென்றியையும்.

வருகின்ற சூத்திரத்தின் மெய் வாய் கண் மூக்கு எனச் செய்யுட்கேற்ப மெய்யை முற்கூறுதலின் அம்முறைபற்றி ஈண்டுச் செவியாதியென்னாது மெய்யாதியென்றார். அவற்றோடுகூடிய இருபத்தைந்தாவன அவ்விந்திரியம் பத்துக்கும் விடயமாகிய வசனாதி சத்தாதி பத்தும் அவற்றினுக்கு உட்கருவியாகிய அந்தக் கரணங்களுன்கும் அவற்றோடு கூடி அவத்தையுறுவதாகிய புருடனொன்றும், அஃதவத்தையுறுதற்குரிய மதுகைக்கேதுவாய் அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணாதிவாயுக்கள் பத்துமென இவை. ஈண்டுச் சத்தாதியென்றது வசனாதிபோலும் விடயங்களை யெனக்கொள்க. எனவே, பூதங்களின் கூறாய் அவற்றுடனின்று தேராழிக்குத் தேருறுப்புப்போல இந்திரியங்களின் றொழிற்பாட்டுக்கு மதுகையை விளைத்து நிற்பனவாய புறக்கருவியறுபதில் ஈண்டுக் கூறிப்போந்த விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்தும் ஒழித்தொழிந்த புறக்கருவிகள் நாற்பதும் அவற்றையுடைய பூதங்களைந்தும் அவற்றிற்கு வலியாயுடனிற் பனவாய சூக்குமபூதமெனப்படுந் தன்மாத்திரைகளைந்து மென்னும் ஐம்பது கருவிகளுங் கீழ்நோக்கிய சாக்கிரத்தானத்தில் தமதுசத்தி மடங்கி வினைக்கீடாகத் தொழிற்படாதொழியுமெனவும், அவை யொழிந்தவழி அவத்தைக் கேதுவாய் நின்ற ஏனைப் பொறி முதலிய முப்பத்துநான்கும் அவற்றோடு கூடிய புருடதத்துவமும் இருவகைப் பூதங்களானும் புறக்கருவிகளானுந் தரப்படும் மதுகையின்மையின் ஆண்டுப் பொறிகளின் றொழிற்பாடு மெத்தென நிகழுமெனவுங்கொள்க. கலாதிகளுஞ் சுத்த தத்துவ

மும் அவத்தைக் கேதுவாகாமையான் உடனெண்ணாராயினர். ஏனையவும் விரிந்தநூல்களுட் கூறியவாறுபற்றி உணர்ந்து கொள்க.

*இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்
இலாடத்தே ஐந்தவத்தை எய்தும்—இலாடத்தே
அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டதுவே
அவ்வவற்றின் நீங்கலது ஆங்கு.

எ - து. உ - ம். எ - னின். அங்ஙனம் அதீதத்தை யெய்திய புருடன் மீளப் பிரேரக வவத்தையாகிய உணர்த்து முறைமைச் சாக்கிரத்தைத் தலைப்படுமாறு அநுவாதமுகத்தான் விளக்கி அவ்விடத்தினும் முறைமையிற் செலுத்தும் பிரேரகக் கருவிகளைந்தின் றொழிற்பாடுபற்றி ஐந்தவத்தை நிகழுமென்பதூஉம் அவை இவையென்பதூஉஞ் சுத்தாவத்தையும் இவைபோல் உண்டென்பதூஉங்கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்—(இலாடத்தானத்தினீங்கி ஆண்டாண்டவத்தைப்பட்டுக் கீழ்ப் போந்து மூலாதாரத்தினெய்தியபின் மறித்தும் அவ்வாறே ஆண்டாண்டவத்தைப்பட்டு மேற்சென்று) இலாடத்தானத்தின் (உணர்த்துமுறைமைச்) சாக்கிரத்தைத் தலைப்பட்ட புருடன், இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும்—ஆண்டுஞ் சாக்கிரச் சாக்கிர முதலிய ஐந்தவத்தையுறும், இலாடத்தே அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டு—(அவையாவன) அவ் இலாடத்தானத்தின்கண்ணே அவ்வப்பொறிகளான் அவ்வவ்விடயங்களையுணர்ந்து, அதுவே—அப்போதப்போதே, அவ்வவற்றின் நீங்கல்—அவ்வவ் விடயங்களினீங்குதலாம், அது ஆங்கு—(இனி முன்னர்க் கூறப்படுஞ் சுத்தாவத்தையும்) இவைபோல ஐவகைப் படும் (எ - று).

மேற்செல்வுழி ஆண்டாண்டுப்படும் அவத்தைகளுங் கீழ்ச் செல்வுழிப் போலன்றி விசேடமின்மையின் வகுத்தோதாது இலாடத்தே சாக்கிரத்தையெய்திய உள்ளமென அநுவாதமுகத் தாற் கூறியொழிந்தார்.

இழியுங்காலும் ஏறுங்காலும் கண்டத்தானத்திற் கனக் காண்டலுண்டென்பது முறையே ஞானாமிர்தத்தினும் போற்றிப் பஃறொடை†யினுங் காண்க.

அவ்வவ இந்திரியம் ஆண்டாண்டு விடயித்தற்குரிய இந்திரியம்.

---

* பக்கம் 'அறிதரு' (உசஅ) † 'புன்புலால்' (உசகூ)

அவ்வவ்விடயம் ஆண்டாண்டுப் புலனாதற்குரிய விடயம்.

கண்டுநீங்கலென வியையும்.

அது அவ்வக்காலம். ஈண்டும் அடுக்கிக் கூறிக்கொள்க.

கண்ணுருபு தொகுத்து ஏகாரம் விரித்தார்.

கண்டதென ஒருமொழியாகவைத் துரைப்பாருமுளர். குற்றியலுகரத்தின்முன் உடம்படுமெய் பெறுதற்கு ஒத்திலாமை யானும் பொருட்சிறப்பின்மையானும் அஃதுரையன்மை யறிக.

அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்ட கண்டபொழுதே அவற்றை அயர்த்துவிடுதல். *“ஒன்றன்பா லும் வருபயன் மாறி மாறி வந்திடும்” என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கியென்க. † “கரணந்தன்னிற் செயல்தொறுங் கண்டுகொண்ணீ” ‡“உந்திடுங் கரணந்தன்னிற் செயல்தொறும் உணர்ந்து கொள்ளே” என்பனவுமது. இந் நுட்ப முணர்ந்துகோடற்குத் தூலாருந்ததி நியாயம் பற்றிக் கைப்பொருளை வீழ்த்தித் தெளிதன்முதலிய தூலத்துள் வைத் துக் காட்டுப.

இனி அருபசொரூபியாய் நிற்புழிப்படும் ஐந்தவத்தையி னியல்பு கூறுதற்கெடுத்துக்கொண்ட இவ்வதிகரணத்தின் அத னோடியைபில்லாத சுத்தத்தின்கட்படும் ஐந்தவத்தை கூறுதற்கு ஓரியைபில்லையாயினும் அவத்தையெனப்படுவன ஈண்டோதி யன மாத்திரையே போலுமென மயங்காமைப்பொருட்டு வேறு மைந்தவத்தையுள அவை முன்னர்க் கூறப்படுமென்னுந் துணையே கூறுவார் அதுவாங்கு என்றொழிந்தார். இக்கருத்தே பற்றி §“பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பறவருளாலாங்கே— குறியொடு மைந்தவத்தை கூடுவர் வீடுகூட” என்றொழிந்தார் வழிநூலாசிரியரும்.

இவ்விரண்டு வெண்பாக்களானும் கூறிப்போந்த முத்திறத் தைந்தவத்தைகட்கு முறையே மூலமாய கேவலஞ் சகலஞ் சுத்த மென்ற மூன்றனுள் வைத்துத் தன்னுண்மை யெனப்படுங் கேவலத்தினியல்பு சகசமலத்துணராதென்பதனானே பெற்றாம். ஏனைச் சகலத்தினியல்பு வருகின்ற சூத்திரத்தினுஞ் சுத்தத்தி னியல்பு அப்பாலைச் சூத்திரத்தினும் பெறுதும்.

---

* சிவஞானசித்தி, உ. ச - கூச. ஒருபுலனுகரும். (உசஎ)

† நான்காஞ்சூத்திரம். ௩௯. அறிதருமுதலவைத். ௪. (உசஅ)

‡ ‘ஐந்துசாக்.’ ௩௬. (உசஎ)

§ சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௩௰. அறிதருமுதலவத்.

## விளக்கம்

### காட்டு

ஆவி மலமறைப்பால் அறிவு விளங்காது கிடந்தன. அறிவு விளங்குதற் பொருட்டுக் கருவிகளுடன் திருவருளால் கூட்டப்படுவவாயின. கூட்டப்பட்டதும் அறிவு விளங்கிற்று. இது கண் இருளோடுகூடி ஒளி விளங்காது கிடந்தன. காட்டாகிய விளக்கொடு சார்ந்து ஒளிவிளங்கிப் பொருளுணர்ந்து தெருளுற்றன என்பதை ஒக்கும். காட்டு - விளக்குங் கருவி ; துணைக்கருவி. வியஞ்சகம் என்பதும் இதுவே.

கண் ஒளிவிளங்கிய காலத்துப் பலநிலை எய்தாது ஒருநிலையாக இருந்தன. ஆனால் ஆவி கருவிகளுடன் கூடியவழி அங்ஙனம் ஒருநிலையாக இல்லை. பலநிலை எய்துவதாயிற்று. நிலையை அவத்தை என்ப. அதற்குக் காரணம் காட்டாகிய கருவிகள் அகப்புறக்கலன்கள் நான்கு. அக் கலன்கள் நான்கும் பிறகருவிகளையும் அவாவுகின்றன. அதனால் பல நிலை எய்துவது பொருத்தமேயாம். காட்டுப் பலவாதலின் நிலையும் பல வாயிற்று. அவாவும் பிறகருவிகள் : அறி கருவி ஐந்து, செய்கருவி ஐந்தென்ப. எனவே விளக்கு ஒருபுடை ஒப்பென்க. அதனாலேயே **அமைச்சரசு ஏய்ப்ப** என வேறு உமையும் கூறியருளினர்.

இஃது ஐந்திணையும் கடந்து அகம்புகுவான் ஒருவன் அவ்வத்திணைக் குரிய முதற்பொருள் கருப்பொருள்களின் வேறுபாட்டால் வெவ்வேறு நிலை எய்துவதை ஒக்கும். மேலும் நிலைபெற்ற ஆட்சித்தலைவன் தன் ஆணை பெற்றுத் தன்கீழ்த் தொழில் புரிவார் அனைவரையுந் துணைக்கொண்டு அவ்வத் துறைக்குரியாரை நோக்கியும் உசாவியும் வெவ்வேறு நிலைகளை எய்துவன் அன்றே? அவ் எய்தற் பாட்டினையும் ஒக்கும். இவ் உண்மை திருவள்ளுவ நாயனார் அருளிய வரும் திருப்பாட்டான் உணர்க :

> “ சூழ்வார்கண் ஆக ஒழுகலான் மன்னவன்
> சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.” —திருக்குறள், ௪௪௫.

ஊணும், உடையும், உறையுளும், ஓங்கிய பண்ணும் பிறவும் யாண்டும் ஒருநிலையாகக் கைக்கொள்ளல் ஒண்ணாது, காலத்தானும் இடத்தானும் வெவ்வேறு நிலையாகக் கைக்கொள்ளல வேண்டுவதையும் ஒக்கும்.

### கிளந்தெடுத்துரைத்தல்

ஆவி எய்தும் நிலைகள் மூன்று. அவை புலம்பு, புணர்வு, புரிவு என்பன. இவற்றை முறையே கேவலம், சகலம், சுத்தம் எனவும் கூறுப. நிலையினை அவத்தை என்பர். அவற்றுள் எந்நிலையோ என்னும் ஐயம் எழாதிருத்தற் பொருட்டு ஐம்பாட்டினனாய் -‘பஞ்சாவத்திதனாய் நிற்கும் என்பது’ எனக்கிளந்தெடுத்துரைத்தார். ஐம்பாடு - நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்குதல். இவற்றை முறையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ப. இவ்வைம்பாடு புணர்வுநிலையாகிய சகலநிலை. இம்மூன்றனையும் உமாபதி சிவநாயனார் அருளும் திருப்பாட்டு வருமாறு :

> “ நீக்கமில் அதீதம் மாசு நிறைந்தகே வலமாம் நீர்மை
> சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை ஆகும்
> ஊக்கமில் இரண்டும் கூடாது ஒழியவோர் நிலையில் நீடும்
> சாக்கிரா தீதம் சுத்தத் தகைமைய தாகும் தானே.”
> —சிவப்பிரகாசம், ௨. ௩.

## ஏனை ஒப்பு

அகப்புறக் கலன்கள் அமைச்சரோடு ஒப்புமைகூறியதற்கு ஏற்ப ஏனைக்கருவிகளையும் மற்றச் சுற்றத்தோடு ஒப்பித்தமை (பக்கம் உ௪௬) காண்க. அவற்றை விளக்கும் சிவஞான சித்தியார் திருப்பாட்டு வருமாறு:

"படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போ தில்லிற்
கடைதொறும் விட்டு விட்டுக் காவலும் இட்டுப் பின்னர்
அடைதரும் தனியே அந்தப் புரத்தினில் அதுபோல் ஆன்மா
உடலினில் அஞ்ச வத்தை உறுமுயிர் காவ லாக."

—சித்தியார், ௪. ௩ - ௩௨.

உயிர் - உயிர்மூச்சு.

## சார்பி

ஆவி எஞ்ஞான்றும் ஒன்றனைச் சார்ந்தே நிற்கும் அச்சார்பு மெய்ப் பொருளாயின் வீடுபேறு எய்தும். பொய்ப் பொருளாயின் பிறப்பினை எய்தும். மெய்ப்பொருள் - நிலைபேறுடைய பொருள். பொய்ப்பொருள்- தோற்ற ஒடுக்கமுடைய நிலையிலாப் பொருள். மெய்ப்பொருள் முழு முதல்வன். பொய்ப்பொருள் உலகம். ஆவி சார்ந்துநிற்கும் தன்மைய தாயிருப்பதால் **சார்பி** என அழைக்கப்பெறும்.

ஆவி பொய்ப் பொருளாம் மாயா காரியமாகிய உடலினைச் சார்ந்து நிற்குங்கால் **ஆக்கமெய் உருவன்** என்று பெயர் பெறும். ஆக்கமெய் - தத்துவம். 'தத்துவ **வன்ன நபன்**.'

ஆக்கமெய் மூவகைப்படும். அவை நுண்உடல், முதல்உடல், பரு உடல் என்ப. இவற்றை முறையே சூக்குமதேகம், காரணதேகம், தூல தேகம் என்ப. இவற்றுள் நுண்உடலும் முதல் உடலும் கட்புலன்ஆகா உருவாம் அருவம் என்ப. பருஉடல் கட்புலன் ஆகும் உருவம். ஆவி இவ் உருவ அருவ உடல்களைச் சார்ந்து உருவுடையது போன்று நிற்கும். இந் நிலையினையே தத்துவவன்ன உருவநிலை என்பர். இவ் உண்மை வரும் சிவப்பிரகாசத் திருப்பாட்டானும் உணர்க:

"தனக்கென அறிவி லாதான் தான்இவை அறிந்து சாரான்
தனக்கென அறிவிலாத வாயில்தான் அறியா சார
தனக்கென அறிவி லாதான் **தத்துவ வன்னநபன்**
தனக்கென அறிவா ஞலிச் சகலமும் நுகருமதானே."

—சிவப்பிரகாசம், ௫. உ.

## பரப்பிற்கு இழுக்கின்று

ஆவி சார்புப் பரப்புடையது. பரப்பு - வியாபகம். அத் தன்மையை உடைய ஆவி ஐம்பாடு எய்துங்கால் ஒவ்வொன்றளவில் தங்கிவிடுகின்றது. அதனால் அதன் பரப்புக்கு இழுக்கு வருமோ எனின்? வாரா. கண் தனக்குக் காட்டாகிய 'இல்லக விளக்கு, பல்லக விளக்கு'களின் பரப்பினையுடை யது. இல்லக விளக்கு - திருவிளக்கு. பல்லக விளக்கு - ஞாயிறு, திங்கள். ஆயினும் ஒரு பொருளைக் காணுங்கால் காட்சியளவில் தங்கி அஃகிய பரப்புடையதாகின்றது. அஃகுதல் - சுருங்குதல். அதனால் அது அஃகிய பரப்புடையதாகுமா? ஊசியைக் காணுங்கால் ஊசியின் பரப்பாயும், யானையைக் காணுங்கால் யானையின் பரப்பாயும், அதனினும் பரியதைக்

காணுங்கால் அவ்வவற்றின் பரப்பினதாயும் இருக்கும். அதனால் ஆவியின் பரப்பு அகன்றும் அஃகியும் வருவதன்று என்பது விளங்குகின்றதன்றோ? கண்ட பொருளளவின் பரப்புப்போல், ஆவியும் தங்கின இடப் பரப்பினை உடையதாகும்.

இதனை உலருடைய நாயனார் 'சிவனே வியாபி'* எனத் தொடங்கும் செய்யுளின்கண் "தாவிலா அறிவு தங்கின இடமே தரும் உயிர்க்கு இருப்பிடம்" என்றனர். ஒருவனின், கிடக்கை, இருக்கை, நிற்கை முதலிய நிலை வேறுபாட்டால் இடப்பரப்பு அஃகியும் அகன்றும் வருமன்றோ? ஆயின் அவன் மாட்டஃதின்மையும் காண்க. இதுவே ஒரு புடைப்பரப்பு

காட்டும் ஒளிப்பரப்புக் கண்ணுறினும் கண்டபொருள்
காட்டளவாம் ஆவிநிலை காண்..

"இல்லக விளக்கது இருள்கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே." —௪. கக - அ.

## ஆவி உரு

ஆவி உடலினைச் சார்ந்து 'தங்கிய இடமே இடமாக்' கொண்டு நிற்பதற்குக் காரணம் மலமறைப்பு. இதனையே 'மல சொரூபத்தின் மறைந்து' என்றனர். வீடுபேற்றின்கண் மலமறைப்பின்மையால் சார்புப் பரப்பு முழுவதுமாம். எனவே வீடு பேற்றின்கண் அரு உருவநிலை ஆவிக்கின்று. இதுவே 'தத்துவவன்ன உருவன் ஆதல்' இன்று என்பதாம்

## ஏதுவும் பயனும்

ஆவி அகப்புறக்கலன்களாகிய அந்தக் கரணங்களின் ஒன்றன்று என்றது ஏது. இது முதற்கூறு. புல்லுமலமாகிய சகச மலத்தினால் உணர்வில்லை என்பது பயன். இஃது இரண்டாங் கூறு. உணர்வில்லை என்பது ஏதுவாய் ஐம்பாடாகிய ஐந்தவத்தை பயனாகும். இது மூன்றாம் கூறு.

ஆவிகலன் அன்றேது அறிவின்மை யேபயனும்
மேவும்அறி வின்மைஐம் பாடு.

'ஒன்றணையா... ................வேறு.'

## கருவி நிலை

௩. ஆவி ஐம்பாடு எய்துங்கால் முப்பத்தைந்து கருவிகளும் சில தொட்டும் விட்டும் நிற்கும். அவற்றை விளக்குங்கால், உயிர்ப்படங்கலாகிய துரியாதீதத்தில் கருவிகள் ஒன்றும் இன்று. ஆள் மட்டும் தங்கும். அதற்கு இடம் மூலம். 'ஒன்றணையா மூலத்து' என்பது 'அணையா மூலத்து ஒன்று' என இயையும்.

௪. பேருறக்கமாகிய துரியத்தில் ஆளோடு உயிர்வளி பொருந்தும். இதற்கு இடம் கொப்பூழ் கொப்பூழ் - நாபி.

* பக்கம் (உ௩௪)

௩. உறக்கமாகிய சுழுத்தியில் ஆள், உயிர்வளி இவற்றோடு, எண்ணமாகிய சித்தம் இயையும். இதற்கு இடம் நெஞ்சம்.

௨. கனவு நிலையாகிய சொப்பனத்தில் ஆள், உயிர்வளி, எண்ணம் ஆகிய மூன்றனோடு புலன்பத்து, கலன் மூன்று, வளி ஒன்பது ஆகிய இருபத்திரண்டும பொருந்தும். இதற்கு இடம் மிடறு. மிடறு - கண்டம்.

புலன்பத்து: புலன் அறிபுலன் செய்புலன் என இருவகைப்படும். அவற்றுள் அறிபுலன் ஐந்து. அவை: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். செய்புலன் ஐந்து. அவை பேசல், நடத்தல், உழைத்தல், கழித்தல், மகப்பெறல்.

௧. நனவுநிலையாகிய சாக்கிரத்தில் கனவுநிலைக்குக் கூறப்பட்ட வளி பத்து, புலன் பத்து, கலன் நான்கு, ஆள் ஒன்று ஆகிய இருபத்தைந்தனோடும் புலன் கொள்ளும் இருவகைப்பொறி பத்தும் சாரும். இருவகைப் பொறி அறிகருவி, செய்கருவி என்ப. அறிகருவி ஐந்து. அவை மெய், வாய், கண், மூக்குச் செவி என்ப. செய்கருவி ஐந்து. அவை வாய், கால், கை, எருவாய், கருவாய் என்ப. இதற்கு இடம் புருவநடு.

போற்றுபொறி பத்து புலன்பத்து கால்பத்தாம்
ஆற்றுகலன் நான்குடன் ஆள் ஒன்று.

கால் - காற்று ; வளி.

நனவு முப்பத்தைந்து, கனவு இருபத்தைந்து, உறக்கம் மூன்று, பேருறக்கம் இரண்டு, உயிர்ப்படங்கல் ஒன்று என்ப.

தொட்டும்விட் டுந்தொழில் தோய்தல்ஐம் பாடென்னும்
கட்டவத்தை ஆவியுறும் காண்.

ஒன்றிரண்டு மூன்றுடனே ஐயைந்தோ டேழைந்தாம்
நின்றஐம் பாட்டு நிலை.

இந்நிலையினை அருணந்திசிவ நாயனர் உமாபதிசிவ நாயனர் அருளிய திருப்பாட்டுக்களானும் உணர்க. அவை வருமாறு:

"சாக்கிர முப்பத் தைந்து நுதலினிற் கனவு தன்னில்
ஆக்கிய இருபத் தைந்து களத்தினிற் சுழுனை மூன்று
நீக்கிய இதயந் தன்னில் துரியத்தில் இரண்டு நாபி
நோக்கிய துரியா தீதம் நுவலின்மூ லத்தின் ஒன்றே."
—சித்தியார். ௪.௩—௩௩.

"எண்ணவொன் றிலாத தீதம் எய்திய துரியத் தொன்று
நண்ணிடும் சுழுத்தி தன்னில் நயந்துள தொன்று பின்னும்
அண்ணிடும் கனவு தன்னில் ஆறேழாஞ் சாக்கி ரத்திற்
கண்ணுறும் அஞ்சா றைய கருவிகள் மருவும் தானே."
—சிவப்பிரகாம், ௪. ௧.

இதனைத் திருமூல நாயனர் அருளுவதும் காண்க:

"ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரம்
கைகண்ட ஐயைந்திற் கண்டம் கனவென்பர்
பொய்கண்ட மூவர் புருடர் சுழுனையின்
மெய்கண் டவனுந்தி மேவல் இருவரே."
—௪0 ௨00௨.

மூவர் புருடர்—புருடரோடு மூவர்; ஆள், வளி, எண்ணம்.

தாயுமானச் செல்வர் அருளுவதும் காண்க:

"சாக்கிரமாம் நுதலினில்இந் திரியம்பத்தும்
சத்தாதி வசனாதி வாயுபத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருடனோடு
நின்றதுமுப் பானைந்து நிலவும்கண்டத்து
ஆக்கியசொப் பனமதனில் வாயுபத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதியாக
நோக்குகர ணம்புருடன் உடனே கூட
நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணியோரே."

"சுழுத்திமித யந்தனிற்பி ராணன்சித்தம்
சொல்லரிய புருடனுடன் மூன்றதாகும்
வழுத்தியநா பியிற்றுரியம் பிராணனோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்காநிற்கும்
அழுத்திடுமூ லந்தன்னிற் றுரியாதீதம்
அதனிடையே புருடனொன்றி அமரும்ஞானம்
பழுத்திடுபக் குவரறிவர் அவத்தைஐந்திற்
பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசுதானே."

—தாயு. ஆசை—உ௫, உசு.

அந்தப் புரமனையாள் ஆம்காவ லோடெண்ணம்
வந்தகலன் கால்புலனும் மற்று.

## மன்ற

'மன்ற' என்னும் சொல் தேற்றப் பொருளை உணர்த்தும். தேற்றம்-தெளிவு. இஃது இடைச்சொல்.

"மன்றஎன் கிளவி தேற்றம் செய்யும்."—தொல். சொல்—உசு௫.

## ஈரிடம்

'வாக்காதி மெய்யாதி' என்பன செய்கருவி ஐந்து அறிகருவி ஐந்து ஆகிய பத்தும் என்க. இவை ஈரிடத்தும் இயைதல்: நனவு நிலை எனகிற புருவநடு (நன்னுதல்) வில் உறுதியாகப் பொருந்தியிருப்பது எனவும், கனவு நிலையாகிய கண்டத்தில் விட்டகன்று இருப்பது எனவும் கொள்க. ஆவி இப்பத்தினையும் நனவில் தொட்டுத் தொழில்புரியும். கனவில் விட்டுத் தொழில்புரியும். ஈரிடம் நனவு கனவு.

## மெய்யாதி

'வாக்காதி மெய்யாதி' என்றிருப்பது முறையன்று, தலைதடுமாற்றம். முறையாக இருக்கவேண்டுவது வாக்காதி சத்தாதி என்க. பின் இத் தலைதடுமாற்றத்திற்குக் காரணம் வரும் ஐந்தாம் நூற்பாவில் "விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு" என்று அமைந்துள்ளது. அதற்கு ஏற்ப மெய்யை முற்கூறி அருளினர். இந்நூற்பாவில் 'மெய்' முன்வருதற்குக் காரணம் 'விளம்பிய' என்று துவங்கியதற்குரிய மோனை என்க.

வாக்காதி செய்கருவி, மெய்யாதி அறிகருவி. இவற்றின் தோற்றம்: முறையே உழைப்புஎழுச்சியினின்றும், உணர்வுஎழுச்சியினின்றும் ஆவன. உணர்வு எழுச்சியே முன்னது; உணர்வு எழுச்சியைச் சாத்துவிக அகங்காரம் என்பர். இவ் எழுச்சியினின்றும் முதற்கண் மனம் தோன்றும். அதன்பின் செவி, மெய், கண், வாய், மூக்கு எனனும் அறிபொறி ஐந்தும் தோன்றும்* உடம்பின்—மெய்யின்கண் காணப்படும் செவி முதலியன இடம். அவற்றை இயைந்தியக்கும் கருவி பொறி. பொறியை இந்திரியம் வாயில் புலன் எனவும் கூறுப. செவி முதலிய இடத்தின் பெயர் ஆகுபெயராகப் பொறிபுலனுக்காயிற்று.

செவிப்புலன் ஓசை, மெய்ப்புலன் ஊறு, கட்புலன் ஒளி, வாய்ப்புலன் சுவை, மூக்குப் புலன் நாற்றம் என்ப. இங்ஙனமிருப்பவும் மெய்யை முற்கூறியருளினர். மோனை மட்டும் அன்று 'மெய்' உறுப்பியாக இருக்கும் சிறப்பு நோக்கியும் என்க. என்னை? செவி, கண், வாய், மூக்கு என்னும் நான்கும் முகத்திற் காணப்படும் உறுப்புகள். மெய் அவ் உறுப்புக்களைக் கொண்ட உடம்பு முழுவதுமாகும். அதனால் அஃது உறுப்பி எனப்படும் ஆகலான் என்க. இச் சிறப்புப் பற்றியே திருவள்ளுவநாயனாரும், வருமாறு கூறியருளியது காண்க:

> "மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
> சொற்கேட்டல் இன்பம் செவிக்கு."—திருக்குறள், ௬௫.

இங்ஙனம் மெய்யை முற் கூறுவது: 'முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றே' என்னும் உத்தி என்க. —தொல். பொருள்-௬௬௫.

இவ்வைந்தினையும் முறையே செவி, துவக்கு, நோக்கு, நாக்கு, துண்டம் என்ப.

செய்கருவி, உழைப்பெழுச்சியினின்றும் தோன்றும். அவை முறையே வாய், கால், கை, எருவாய், கருவாய் என்ப. இவற்றை வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்ப. இவற்றுள் வாக்கு முதன்மை பெற்றது. அது முதற்கண்ணே கூறப்பட்டுள்ளது.

**சத்தாதி**

உரையின்கண் "அப்பொறி (இந்திரியம்) கள் பத்துக்கும் புல (விடயம்) ஆகிய வசனாதி சத்தாதி பத்தும்" எனக் கூறப்பட்டுள்ளது. "ஈண்டுச் சத்தாதி என்றது வசனாதி போலும் விடயங்களை எனக்கொள்க." எனவும் கூறப்பட்டுள்ளது. சத்தாதி என்பது ஓசை முதலாக என்பதாம். ஓசை முதலாக என்பது நுண்மை ஐந்திற்கும் உண்டு. நுண்மை ஐந்தைத் தன்மாத்திரை எனவும் கூறுப. பெயர் ஒற்றுமையால் இரண்டும் ஒன்றே எனக் கொள்ளுதல் பொருந்தாது.

நுண்மை ஐந்தும் பருமை ஐந்திற்குக் காரணமாயுள்ளன. இந்நுண்மை ஐந்தும் உலகெழுச்சியினின்றுந் தோன்றுவன. அறிகருவி செய்கருவிகளைக் குறிக்கும் சித்தியார்த்திருப்பாட்டுக்கள் வருமாறு:

> "நற்செவி துவக்குக் கண்நா நாசிஐந் தினையும் நல்லோர்
> புத்தியிந் திரிய மென்று புகன்றனர் இவைத மக்குச்
> சத்தநற் பரிச ரூப இரதகந் தங்கள் ஐந்தும்
> வைத்தனர் விடய மாக அடைவினின் மருவும் அன்றே."

---

* பக்கம். க௩௬.

" வாக்கொடு பாதம் பாணி பாயுவோ டுபத்தம் ஐந்தும்
நீக்கினர் முன்னே கன்மேந் திரியங்கள் எனநினைந்தே
ஆக்கிய வசன கமன தானமும் விசர்க்கா னந்தம்
ஊக்கமார் ஐந்தும் ஐந்தின் தொழிலென ஓதினரே."
—சித்தியார். உ. ௩ - ௬௧, ௬௨.

நுண்மை ஐந்தும் பருமை ஐந்தின் தோற்றத்திற்குக் காரணமாய் உள்ளது. புலன்கள் (விடயம்) ஐந்தும் பருமை ஐந்தின் பண்பாயுள்ளன. இவ் உண்மை வரும் சித்தியார்த்திருப் பாட்டானும் காண்க :

" சாற்றிய பஞ்ச தன்மாத் திரைகளிற் சத்த முன்னாத்
தோற்றும்வான் வளிதீ நீர்மண் தொடங்கியே ஒன்றுக் கொன்றங்கு
ஏற்றமாம் ஓசை ஆதி இருங்குணம் இயைந்து நிற்கும்
ஆற்றவே விடய பூதம் அங்காங்கி பாவத் தாமே."
—சித்தியார். உ. ௩ - ௬௫

## கீழ்நோக்கிய நனவு

நனவின்கண் முப்பத்தைந்துகருவி தொழிற்படும். பருமையின் (பூதம்) கூறாயும் அப்பருமையோடு உடனின்று தேரின்உருளைக்கு வலியைச் செய்கின்ற அச்சாணிபோல புலன்களின் தொழிற்பாட்டிற்கு வலியை உண்டுபண்ணி நிற்பனவாயுமுள்ள புறக்கருவிகள் அறுபது. அவை :

கூறு

| | |
|---|---|
| நிலம்—மயிர், தோல், எலும்பு, நரம்பு, தசை. | ரு |
| நீர்—நீர், குருதி, மூளை, கொழுப்பு, வெண்ணீர். | ரு |
| தீ—ஊண், உறக்கம், உட்கு, உடனுறைவு, மடி. | ரு |
| வளி—ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், தத்தல். | ரு |
| வெளி-வெகுளி, இவறன்மை, மயக்கம், செருக்கு, பொறாமை. | ரு |
| செய்கருவி—பேசல், நடத்தல், உழைத்தல், கழித்தல், மகப்பெறல். | ரு |
| அறிவுவளி—உயிர்க்காற்று, மலக்காற்று, தொழிற்காற்று, ஒலிக்காற்று, நிரவுகாற்று. | ரு |
| தொழில்வளி—தும்மற்காற்று, விழிக்காற்று, கொட்டாவிக் காற்று, இமைக்காற்று, வீங்கற்காற்று. | ரு |
| நாடி—இடப்பால் நரம்பு, வலப்பால் நரம்பு, நடு நரம்பு, இடக்கண் நரம்பு, வலச்செவி நரம்பு, உள்நாக்கு நரம்பு, இடச்செவி நரம்பு, வலக்கண் நரம்பு, கருவாய் நரம்பு, எருவாய் நரம்பு. | ௧0 |
| ஓசை—நுண்ணோசை, நினைவோசை, மிடற்றோசை, செவியோசை. | ௪ |
| முப்பற்று—பொருட்பற்று, புதல்வர்ப்பற்று, உலகப்பற்று. | ௩ |
| முக்குணம்—அமைதி, ஆட்சி, அழுந்தல். | ௩ |
| (அறுபது) | ௬0 |

இப்புறக்கருவி அறுபதனுள் பொறிவழிக் கொள்ளப்படும் புலன்கள் பத்தும், வளிகள் பத்தும் ஆகிய இருபதும் நீங்கிய ஏனைப் புறக்கருவி நாற்பது. இப்புறக்கருவிகளையுடைய பருமை (பூதம்) ஐந்து, இப்பருமை

ஐந்திற்கும் அடிப்படை வலிமையாய் அவற்றுடன் நிற்கும் நுண்மை ஐந்தும் ஆகிய ஐம்பது கருவிகள் கீழ்நோக்கிய நனவில் தம் ஆற்றல் மடங்கி வினைக்கீடாகத் தொழிற்படாதொழியும்.

## மெத்தென நிகழ்தல்

பொறி பத்து, புலன் பத்து, கலன் நான்கு, ஆள் ஒன்று ஆக முப்பத்தைந்து கருவிகளும் கீழ்நோக்கிய நனவில் மெத்தென நிகழும். என்னை? புறக்கருவிகள் அறுபதில் புலன் பத்து, வளி பத்து ஆகிய இருபதும் நீங்கலாகவுள்ள புறக்கருவிகள் நாற்பதும், நுண்மை ஐந்து, பருமை ஐந்து ஆகிய பத்தும் கூடிய கருவிகள் ஐம்பதும் தொழிலின்றி நிற்றலான் என்க.

## பதினொன்று

'ஆகின்ற தொண்ணூற்றோ டாறும் பொது' என்று சொல்லப்படுவன வற்றுள் மேற்கூறிய ஐம்பதும், முப்பத்தைந்தும் ஆகிய எண்பத்தைந்தும் நீங்கிய கருவிகள் பதினொன்றும் தொட்டும் விட்டும் தொழிலுறும் பாட்டுக்கு - அவத்தைக்குஉரியன அல்ல. அப்பதினொன்றும் வருமாறு:

மாயை, காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு என்னும் தூவா மாயையில் தோன்றும் உணர்வு மெய் ஆறு * ஆவியினை இவை என்ஞான்றும் ஒட்டி நிற்பன. தொட்டும் விட்டும் தோய்வன அல்ல.

தூமாயையினின்றும் தோன்றும் உணர்த்து மெய் ஐந்து†. அவை அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்பன. இவ் ஐந்தும் ஆவியைத் தொழிற்படுத்துவதற்கு ஏதுவாய் உள்ளன. தொழிற்கு ஏதுவாவன அல்ல. இவ் இருவகையும் சேரப் பதினொன்றாம்.

## மும்மை நனவு

கீழ் நோக்கிய நனவு, மேல் நோக்கிய நனவு, இரண்டும் நோக்கா நனவு என முத்திறப்படும். கீழ் நோக்கிய நனவு மேலே கூறப்பட்டது. மேல்நோக்கிய நனவு "நெஞ்சம், மிடறு, நாக்கின் அடி, புருவநடு, உச்சித் துளை என்னும் ஐந்திடத்தும்." இதுவே மன ஒருக்க நிலை என்ப. உச்சித் துளை - பிரமரந்திரம். மனஒருக்கம் - யோகம்.

இரண்டும் நோக்காத நனவு புறப்புலன்களை நுகர்தற்குரியது. இதற்கு இடம் புருவநடு. இந்நனவில் தொண்ணூற்றாறு கருவிகளும் தொழிற்படும். இந்நனவிலும் ஐம்பாடுண்டு. அதுவரும் வெண்பாவில் காணப்பெறும். புருவநடு எல்லா நிலைகளுக்கும் நாப்பண் என்க.

இவ் உண்மை வரும் சித்தியார்த் திருப்பாட்டானும் காண்க:

"இருவகைச் சாக்கி ராதி அவத்தைகள் இயல்பு தானும்
ஒருவகை கீழே நோக்கி உற்பவங் காட்டும் ஒன்று
பெருகமேல் நோக்கித் தீய பிறப்பறுத் திடும் யோகில்
தருவதோர் சமாதி தானும் தாழ்ந்துபின் சனனஞ் சாரும்."

—சித்தியார். ௪. ௩ - ௩௪.

'இலாடத்தே......... .......ஆங்கு.'

(பக்கம்) * ௧௩௪. † ௧௩௩.

## உணர்த்துமுறை நனவு

ஆவி இழிந்து உயிர்ப்படங்கலை எய்தியபின் மீண்டும் நனவினை எய்தும். எய்துங்கால் முன் 'கடைதொறும் விட்டு விட்டுக் காவலும் இட்டு'ச் சென்ற முறை போன்று ஏறுங்கால் விட்ட கருவிகளை ஆண்டாண்டுத் தொட்டு ஐம்பாடு எய்திப் புருவநடுவாகிய நனவுநிலையை எய்தும். இது மேலும் கீழும் அல்லா நிலையாகும். இந் நனவே உணர்த்துமுறை நன வென்ப. உணர்த்து முறையைப் பிரேரகம் என்ப. பிரேரகம்—ஏவுதல்.

ஆவி இழியுங்காலும் ஏறுங்காலும் ஒன்றுபோல் ஐம்பாடு எய்தும் என்பது வரும் 'போற்றிப் பஃறொடைத் திருவெண்பா'வால் உணர்க:

புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையில்
அன்புசேர் கின்றனகட் டைந்தாக்கி—முன்புள்ள
உண்மை நிலைமை ஒருகால் அகலாது
திண்மை மலத்தால் சிறையாக்கிக்—கண்மறைத்து
மூலஅருங் கட்டிலுயிர் மூடமாய் உட்கிடப்பக்
கால நியதி அதுகாட்டி—மேலோங்கும்
உந்தியின் கட்டிலுயிர் சேர்த்துக் கலைவித்தை
அந்த அராகம் அவைமுன்பு—தந்த
தொழிலறி விச்சை துணையாக மானின்
எழிலுடைய முக்குணமும் எய்தி—மருளோடு
மன்னும் இதயத்திற் சித்தத்தாற் கண்டபொருள்
இன்ன பொருளென்று இயம்பவொண்ணு—அந்நிலைபோய்க்
கண்ட வியன்கட்டில் கருவிகளீரைந் தொழியக்
கொண்டுநிய மித்ததற்றை நாட்கொடுப்பப்—பண்டை
இருவினையால் முன்புள்ள இன்பத்துன் பங்கள்
மருவும்வகை அங்கே மருவி—உருவுடன்நின்று
ஓங்குநுத லாய ஓலக்க மண்டபத்தில்
போங்கருவி எல்லாம் புகுந்தீண்டி—நீங்காத
முன்னை மலத்திருள் மூடா வகையகத்துள்
துன்னும்இருள் நீக்கும் சுடரேபோல்—அந்நிலையே
சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரியர்
ஆக்கிப் பணித்த அறம்போற்றி.

## நனவு ஐம்பாடு

நனவில் நனவு, நனவில் கனவு, நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப்படங்கல் என்னும் ஐந்தும் நனவு ஐம்பாடு என்ப. இவ் ஐம்பாடு எய்துவதற்குக் காரணம், ஓசை ஐந்திற்குமுரிய எழுத்து அ, உ, ஒலிமுதல், முதலொலி என ஐந்து. இவற்றிற்குரிய தெய்வங்கள் அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் என்ப. இத்தெய்வங்களைத் தூண்டும் திருவருளாற்றலாம் கலைகள் ஐந்து. அவை நீக்கி, நிலைப்பி, நுகர்வி, அமைப்பி, அழுத்தி என்ப. இவ் ஐந்தினையும் செலுத்தும் இறைநிலை ஐந்து. அவை அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்ப.* இவ் வேறுபாட்டால் மிக நுட்பமாகக் காற்றூடி சுழலல்போல் நிகழும். அதனால் நனவில் நனவு முதலிய ஐம்பாடுகள் உள.

---

* பக்கம். ௧௩௩.

## ஏவும் கருவி

நனவில் நனவு நிகழுங்கால் தூமாயைக்கண் உள்ள அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்னும் கருவிகள் ஐந்தும் ஒருங்கு ஏவும். நனவிற் கனவு நிகழுங்கால் அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான் என்னும் நான்கு கருவிகள் ஏவும். நனவின் உறக்கம் நிகழுங் கால் அத்தன், அன்னை, அருளோன் என்னும் மூன்று கருவிகள் ஏவும். நனவிற் பேருறக்கம் நிகழுங்கால் அத்தன், அன்னை என்னும் இரண்டு கருவிகள் ஏவும். நனவில் உயிர்ப்படங்கல் நிகழுங்கால் அத்தன் என்னும் ஒரு கருவி ஏவும். இங்ஙனம் ஏவும் கருவி குறையக் குறைய நிகழ்ச்சியும் மெத்தென நிகழும். இதனையோர் ஒப்பில் வைத்துக் கூறுங்கால் ஓர் ஓசை ஐவர்பின் நிற்பான் ஒருவன் செவியிற்பட அவ் ஐவரும் ஒருவர்பின் ஒருவ ராய்க் கேட்டுரைப்பின் எவ்வளவு தெளிவாய்க் கேட்கும். இதுவே நனவில் நனவு. ஏனைய ஒவ்வொருவர் குறையக் குறையக் கேட்டுரைப்ப தாகும். இவை முறையே ஐந்தாமவன் கூறுவது நனவில் நனவு. நான்கா மவன் கூறுவது நனவிற் கனவு. மூன்றாமவன் கூறுவது நனவின் உறக் கம். இரண்டாமவன் கூறுவது நனவிற் பேருறக்கம். ஒன்றாமவன் கூறு வது நனவின் உயிர்ப்பு அடங்கல். ஏவும் கருவிதூயது என்பது சிற்றம் பல நாடிகள் கூறும் "சுத்தக் கருவிகள் ஐந்தும்கொண் டேசொல் அவத்தைஐந்தும்—சித்திக்கும் போது...... ...

ஓசை வழிவழியாய் ஓரைவர் கேட்டுரைத்தல்
மாசில்நன வில்நனவாம் மற்றவருள்—ஓசைதான்
ஒவ்வொருவ ராய்க்கழிய உண்டாகும் மென்மைநிலை
ஒவ்வுமால் ஏனையநான் கு.

இவ் ஐம்பாட்டினை அருளும் சித்தியார்த் திருப்பாட்டு வருமாறு:

"ஐந்துசாக் கிரத்தில் நான்கு கனவினிற் சுழுனை மூன்று
வந்திடும் துரியந் தன்னின் இரண்டொன்று துரியா தீதம்
தந்திடும் சாக்கி ராதி அவத்தைகள் தானம் தோறும்
உந்திடும் கரணம் தன்னில் செயல்தொறும் உணர்ந்து கொள்ளே."
—சித்தியார். ௪. ௩. ௩௬.

## அப்போதப்போதே நீங்கல்

புலன்களைக் கண்ட கண்டபொழுதே அயர்த்துவிடுதல். அயர்த்தல் - மறத்தல். புலன்களை அறிதலை நுகர்வெனவும், அயாத்தலைத் தேட்டம் எனவும் கூறுப கண்ட கண்டபொழுதே அயர்த்துவிடுவதற்குக் காரணம் ஏவும் கருவிகளின் வேறுபாடேயாம. இவ்வுண்மை வரும் சித்தியார்த் திருப்பாட்டானும் காண்க:

"ஒருபுலன் நுகரும் போதங்கு ஒன்றிலை ஒன்றின் பாலும்
வருபயன் மாறி மாறி வந்திடும் எல்லாம் மாறும்
ஒருபொழு துணரின் உண்டாம் அல்லதிவ் அல்லல் வாழ்க்கை
மருள்கன வதுவும் போல மாயும்பின் மாயும் அன்றே."
—சித்தியார். உ. ௪. ௧௪.

## காட்டு

நனவில் நனவு முதலிய ஐம்பாட்டு நிலையை மட்டமான உணர்வுடை யார் பொருட்டுப் பருமையில் வைத்துக் காட்டுப. ஒருவன் கையிலிருந்த

பொருள் அவனை அறியாது நிலத்தே விழுந்துவிடுகின்றது. அப்பொருள் கிடைத்தற்கரிய பெருமதிப்பு வாய்ந்த மாணிக்கம். அவனுக்குச் சிறிது கழித்து அதன் நினைவு வருகிறது. வந்ததும் வைப்பனைய அப்பொருள் காணப்பெறாமையால் செய்வது இன்னது என்று அறியாது கையற்று உளம் நடுங்க உடல் நடுங்க மெய்சோர்ந்து மூர்ச்சித்துவிழுகின்றான். வீழ்ந்ததும் உயிர்ப்பு அடங்கிவிடுகின்றது. இங்ஙனம் உயிர்ப்படங்குதலே நனவில் உயிர்ப்படங்கல். உயிர்ப்படங்கல் என்பது உயிர்வளியின் இயக்கம் இன்றுதல். அப்பொழுது ஆள் மட்டும் மூலத்தில் மூலப்பகுதியோடு மயங்கிக் கிடக்கும்.

பின் சிறிதளவு உயிர்வளி இயங்கும். இந்நிலையே நனவிற் பேருறக்கம். இதற்கு இடம் கொப்பூழ். இந்நிலையில் ஆள் உயிர்வளி என்னும் இரண்டும் இயங்கும். அதன்பின் யாண்டு விழுந்தது, எங்ஙனம் விழுந்தது என எண்ணம் தோன்றும். இந்நிலையில் ஆள், உயிர்வளி, எண்ணம் என்னும் மூன்றும் இயங்கும். ஆனால் உயிர்வளி, எண்ணம் என்னும் இரண்டுமே கருவிகள்; இதற்கு இடம் நெஞ்சம். இதுவே நனவின் உறக்கம். பின் விழுந்த இடம் இதுவோ அதுவோ என்று ஐயம் தோன்றும்; இதுவே நனவிற் கனவு. பின் பலவாயில்களானும் துணிவுபிறக்கும். பின் கண் டெடுப்பன். இதுவே நனவில் நனவு.

வீழ்ந்த பொருளுணர்வால் மேவும் உயிர்ப்படங்கல்
ஆழ்ந்த உயிர்ப்பியங்கல் அவ்வெண்ணம்—சூழ்ந்தையம்
கொள்துணிபால் கண்டெடுத்தல் கூறில் நனவின்கண்
கொள்ளுமைம் பாடாம் குறி.

## வேறான ஐம்பாடு

இக்கூறு ஆவி மாயா ஆக்கமாகிய மெய்யுடன் கூடிநின்று நனவு முதலிய ஐம்பாடு எய்தும் என்பதைக் கூற எழுந்தது. அதனோடு இயை பில்லாத புரிவின் (சுத்தம்) கண்படும் ஐம்பாடும் கூறுதல் இயையா தெனின்? அற்றன்று; ஐம்பாடு ஈண்டு ஓதிய அளவே போலும் என மயங்காமைப் பொருட்டும் மேலும் உளவென அறிவுறுத்தற் பொருட்டும் ஓதியருளினர் என்க. நீங்கிநிற்றல் தாமரை நீர்போல் ஒட்டாதுநிற்றல்.

புரிவின்கண்படும் ஐம்பாடு மாயாஆக்க மெய்யை நீங்கி நிற்கு நிலையில் நிகழ்வது. மெய் - தத்துவம். இவ்வுண்மை வரும் சித்தியார்த் திருப் பாட்டானும் உணர்க.

" அறிதரும் முதல வத்தை அடைதரும் இடத்தே ஐந்தும்
செறிதரும் கரணந் தன்னிற் செயல்தொறும் கண்டு கொள்நீ
பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற அருளால் ஆங்கே
குறியொடும் அஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட."

—சித்தியார். ௪. ௩௩ - ௩௪

## ஐம்பாட்டின் குறி

இக்கூற்றின்கண் ஓதியருளிய இரண்டு திருவெண்பாக்களாலும் கீழ் நோக்கிய ஐம்பாடு, மேல் நோக்கிய ஐம்பாடு, நாப்பண் நிகழும் ஐம்பாடு என ஐம்பாட்டின் இயல்பு குறிக்கப்பட்டன. அவற்றுள் மேல் நோக்கிய ஐம்பாடு புணர்விற்புரிவு. புணர்விற்புரிவினைச் சகலத்திற் சுத்தம் என்ப.

நாப்பண் நிகழும் ஐம்பாடு புணர்விற்புணர்வு. இது சகலத்திற் சகலம். கீழ் நோக்கிய ஐம்பாடு புணர்விற்புலம்பு. இது சகலத்திற்கேவலம்.

## மும்மைநிலை

புலம்பு, புணர்வு, புரிவு என்னும் மூன்று நிலையும் கேவலம், சகலம், சுத்தம் எனக் கூறப்படும். புலம்பு என்பது ஆவி கருவிகளுடன் கூடாது பழமலத்தோடு ஒட்டியபடியே கிழமை உணராது உண்மை அளவான் நிற்பது. இந்நிலை இந் நான்காம் நூற்பாவில் "சகச மலத்து உணராது" என்று ஓதியருளியதால் விளங்கும். இது புலம்பு.

கருவிகளெல்லாம் கடவுட் காவலன் படைத்தளித்தருளிக் கூட்டிய போது ஆவிக்கு அறிவு நிகழும். அந் நிகழ்வு வருகின்ற ஐந்தாம் நூற்பாவில் "தாம்தம் உணர்வின் தமியருள்" என்று ஓதியருளியதால் விளங்கும். இது புணர்வு.

கருவிகளுடன் கூடியிருந்து கருவிகளின் உண்மைத் தன்மை உணர்வு உண்டாதல் புரிவு. இஃது ஆறாம் நூற்பாவில் "உணர்உரு அசத்து" என்று ஓதியருளியதால் விளங்கும். இது புரிவு. உண்மைத் தன்மை உணர்வே புரிவு என்பது உமாபதி நாயனார் அருளிய வரும் திருப்பாட்டான் உணர்க:

"மண்முதல் சிவமது ஈறும் வடிவுகாண் பதுவே ரூபம்
மண்முதல் சிவமது ஈறும் மலம்சடம் என்றல் காட்சி
மண்முதல் சிவமது ஈறும் வகையதில் தான்நி லாது
கண்ணுதல் அருளால் நீங்கல் சுத்தியாய்க் கருதும் அன்றே."

—உண்மைநெறி விளக்கம், க.

சிவம்—௩௬ ஆம் மெய்யாகிய அத்தன்; நாதம்.

போற்று புலம்பொன் றுணராமை புல்லுணர்வு
ஆற்றுபுணர் வாம்புரிவுண் மை.

## தொகைப் பொருள்

இந் நான்காம் நூற்பாவானும் கூறுகளானும் பெறப்படும் பொருள் அளவையியல் மூன்றும் நூற்பாவால் நிலைநாட்டப்பட்ட ஆவி, அகப்புறக் கலன்களில் ஒன்றன்று; ஆயினும் புல்லு மலத்துடன் ஒட்டி அறிவுவிளங் காமல் அறியாமையாக இருந்த நிலை அகன்று அறிவு விளங்குதற் பொருட்டு அகப்புறக் கலன்களை—அந்தக்கரணங்களைக் கூடுவதாயிற்று. கூடின இடத்து ஐம்பாடு எய்திற்று. இதுவே ஆவியின் பொதுவியல்பு.

பொது இயல்பு சார்பியல்பு. உடலோடு சார்ந்த இயல்பு. இதுவே தடத்தலக்கணம். உடம்பினுள் காணப்படும் ஏனைக்கருவிகள் ஆவி அல்ல வாயினும், அகப்புறக்கலன்கள் ஆவியென்று மெய்கண்ட நூலானும் பெறப்படுகின்றது என நிகழ்ந்த ஐயம் அகப்புறக்கலன்கள் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்க அறிவுள்ளனபோல் தோன்றினும் தம்மை நோக்கி யும தம்மைச் செலுத்தும் அகக்கலன்கள் ஆவி முதலியவற்றை நோக்கியும் அறிவில்லனவே எனக் கூறுவதால் நீக்கப்பட்டது. கருவிகளைக் கூடிய ஆவி ஐம்பாடு எய்துவதற்குக் காரணம் கருவிகளைத் தொட்டும் விட்டும் தொழிற்படுவதாஉம், தூண்டும் துணைக்கருவிகளின் கூட்டக் குறைவினன் ஆவதாஉம் என்க. முத்திறத்து ஐம்பாடுகளும் விளக்கமும் காண்க. (உசரு)

ஆவிக்கு ஆண்டான் அருளும் கருவிகளின் நிலையைத் தெளிய விளக்கியருளும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாட்டு வருமாறு :

“**புவிமுதலைம் பூதமாய்ப் புலன்ஐந்தாய் நிலன்ஐந்தாய்க்**
**கரணம் நான்காய்**
*அவைஅவைசேர் பயனுருவாய் அல்லவுரு வாய்நின்றான்*
*அமருங் கோயில்*
*தவமுயல்வார் மலர்பறிப்பத் தாழவிடு கொம்புதைப்பக்*
*கொக்கின் காய்கள்*
*கவணெறிகற்* போற்சுனையிற் கரைசேரப்*
*புள்ளிரியும் கழுமலமே.*”

—௧. ௧௨௧ - ௭.

## கருத்து

*ஈண்டிய உயிர்நிலை ஐவகை என்ப.*

## முதுமொழி

*இந்நூற்பா ‘**இதுவும் அது**’ என்று மூன்றாம் நூற்பாவுடன் மாட்டெறியப் படுவதால் அதற்குக் கூறிய ௧௬௮.-ஆம் பக்கத்தில் காணப்படும் ‘மாயா’ என்னும் முதல் நினைப்புடைய வெண்பாவே இதற்குங் கொள்க.*

---

* “யானே ஈண்டை யேனே என்னலனே
ஏனல் காவலர் கவண்ஒலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீன்எறி தூண்டிலின் நிவக்கும்
கானக நாடனொடு ஆண்டொழிந் தன்றே.” —குறுந். ௫௪.

*

## ஐந்தாம் சூத்திரம்

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

**எ - து. சூ - ம். எ - னின். இவ் ஆன்மாக்களிடத்துத் தமது முதல் உபகாரம் உணர்த்துதல் நுதலிற்று.**

*எ - து. க - ரை. எ - னின். சூத்திரக்கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ - ள்.) *ஐந்தவத்தைப்படும் வழிக் கருவியும் உயிரும் அமைச்சும் அரசும ஏய்ப்ப நிற்பின் அவையே அமையுமாகலான் முதல்வனால் ஆண்டைக்கு ஆகற்பாலதொரு பயனில்லை போலும் என்னுங் கடாவை ஆசங்கித்து ஆண்டும் இன்றியமையாது வேண்டப்படுவதாய முதல்வனுடைய உதவியை அறிவிக்கு முகத்தானே இரண்டாஞ் சூத்திரத்தின் ஓதிய துணைக்காரணம் முதற்காரணங்களதிலக்கணம் உணர்த்துதல் இவ் அஞ்சாஞ் சூத்திரத்தின் கருத்து (எ - று).*

*இதனானே சூத்திர இயைபும் இனிது விளங்கும்.*

*மாயை கன்மங்கள் திரோதானசத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்குதலின் தமது முத***லு***பகாரம் எனப்படுந் திரோதான சத்தியதிலக்கணங் கூறவே அவற்றதிலக்கணமுங் கூறிய வாறாதலறிக.*

*இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: மேலைச்சூத்திரங்களின் அங்ஙனம் கூறிப்போந்த உயிரானே மெய் வாய் கண் மூக்குச் செவியென்பன தத்தம் விடயங்களை இஃதின்னதென்று அளவிட்டறிந்தும் அங்ஙனம் அறியுந் தம்மையுந் தம்மையதிட்டித்து நின்றுசெலுத்தும் அவ்வுயிரையும் அறியமாட்டா: அவ் இந்திரியங்கள்போல் உயிர்களுந் தமதறிவிற்கு வியஞ்சகமாகிய முதல்வனது சிற்சத்தியான் மேற் கூறிப்போந்த இருவகை அஞ்சவத்தையினின்று வினைப்பயன்களை யறிந்து அநுபவிக்குந் தம்மையுந் தம்மைச் செலுத்திநிற்குந் திருவருளையும் அறிய மாட்டா; உயிர்கள் அவ்வாறுணர்தல் காந்தத்தைக்கண்ட இரும்பு அதன் சந்நிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளப்படு மாறுபோலக் கரணத்தானன்றிச் சங்கற்பத்தான் அதிட்டிக்கு*

முதல்வன் சந்நிதிமாத்திரையினும் ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்று (எ - று).

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்றென்பது குறிப்பெச்சம்.

செவியென்பது சொல்லெச்சம்.

ஐம்பொறிகளைக் கூறியது உபலக்கணமாதலின் ஏனைக் கருவிகளும் அவ்வாறுதல் கொள்ளப்படும். அற்றாகலினன்றே *"பொறிபுலன் கரண மெல்லாம் புருடனாலறிந்து" என்றார் வழிநூலாசிரியரும்.

விடயங்களை அறிவுழி முதல்வன் உடனின்று செலுத்துவனாயின் அவ்விடயங்களோடொப்ப முதல்வனையும் அறிதல் வேண்டுமென்பாரை நோக்கி, அளந்தறிந்தெனறொழியாது அறியாவென்றார்.

ஆங்கவை ஒருசொன்னீர்மைத்து. தம்முணர்வின் தமி யென்றது தமது முதலென்னும் பொருள்பட வந்த ஆறும் வேற்றுமைத்தொகை.

ஈண்டு அருளென்றது ஏற்புழிக்கோடலால் திரோதான சத்தியின்மேல் நின்றது. அருளாலென விரித்து அளந்தறிந்தறியாவென உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டியுரைக்க.

இதனுள் விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண்மூக்கு அளந்தறிந்தறியா வென்றது ஓரதிகரணம்; ஆங்கவைபோலத் தாந்தம் உணர்வின் தமியருள் காந்தங்கண்ட பசாசத்தவையேயென்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

## விளக்கம்

**துணை**

நான்காம் நூற்பாவில் ஆவியின் நிலையாச் சார்பியல்பு கூறப்பட்டது. அவ் ஆவியை ஊட்டுவிக்கும் நடப்பருளாகிய **மறைப்பாற்றலின்** சார்பியல்பு இந் நூற்பாவின்கண் விளக்கியருளுகின்றனர். மறைப்பாற்றலாம் திருவருளின் மாண்பு கூறவே அதற்குக் கருவியாக இரண்டாம் நூற்பாவில் பெறப்பட்ட 'ஆணையின் இருவினையின்' என்பதன்கண் காணும் '**இருவினை**' அதற்குத் துணையாக வுள்ள '**மாயை**' இவற்றின் தன்மைகளும் கூறப்படுபவாயின.

---

* சிவஞானசித்தி, ஐந்தாஞ்சூத்திரம். க.

அளவை இயலின்கண் முதன்மையும், துணைமையும், பயன்முற்றலும் ஆகிய மூன்றும் பற்றி வழியளவையான் வலியுறுத்தருளினர். இம்மூன்றும் முறையே இறை, தளை, உயிர் எனக் கூறப்படும். இம்மூன்றனையும் தன்மை இயலாகிய இலக்கண இயலில் எதிர் நிரல் நிறையாக வைத்து ஓதி அருளுகின்றனர். அம்முறையில் நான்காம் நூற்பா உயிரின்-ஆவியின் தன்மை கூறுவதாயிற்று. இவ்வைந்தாம் நூற்பா தளையின் தன்மை கூறுவதாயிற்று. தளை வினை மாயைகளும், இவற்றை நடப்பிக்கும் மறைப்பாற்றலுமாம். மறைப்பாற்றலைத் திரோதான சத்தி என்பர்.

## யாண்டும் முதல்உதவி

முழுமுதல்வன் உடல், உறுப்பு, உலகம், உணு இவற்றை மாயாகாரிய மாய்ப் படைத்தளித்து அருளியபின் ஆவிகள் இவற்றோடு கூடி அறிதலும் அயர்த்தலுமாகிய நுகர்வும் தேட்டமும் தாமே புரியும். ஆண்டு முதல்வன் உதவி இன்றியமையாமை அன்று எனக் கொள்ளாமோ எனிற்? கொள்ளாம். என்னை ? ஆவி தனக்கெனத் தானே விளங்கும் அறிவில்லது. முதல்வன் விளக்க விளங்கும் அறிவுடையது. நினைப்பும் மறப்பும் உடையது. இந்நிலையில் முதல்வன் உதவி யாண்டும் இன்றியமையாதது ஆகலான்.

இதனை ஓர் ஒப்பில் வைத்துக் காண்பாம். பிள்ளைகட்குப் பெற்றோர் உதவி எஞ்ஞான்றும் வேண்டப்படுவதே. பிள்ளைகளுடைய நிலையை முத்திறப்படுத்தலாம். அவை படிப்பு, பணந்தேடல், பண்பார் மணவாழ்க்கை என்ப. இவற்றுள் பிள்ளைகள் படிக்குங்கால், இறையுண்மை, உணடி, உடை, உறையுள், உறை, பள்ளிப்படி, நூல் முதலிய நல்கல் வேண்டும்.

பணம் தேடுங்கால் ஊக்கமும், உரனும், நடுநிலையும், உண்மையும் முதலிய நல் உணர்வு நல்கல் வேண்டும்.

மணவாழ்வு எய்திக் குடும்ப வாழ்வு நடத்துங்கால் அன்பு, அருள், விருந்தோம்பல், ஒப்புரவு, ஈகை, நல்லாண்மை, பொறை, பேராண்மை, செல்வம், சிறப்பு முதலிய நற்பண்புகள் நடந்து காட்டி நடத்துவித்தல் வேண்டும். இம்முறையான் ஈன்றோர் உதவிகள் எஞ்ஞான்றும் வேண்டுவனவே. அதுபோல் முதல்வன் உதவியும் எஞ்ஞான்றும் வேண்டுவதே.

> பள்ளிபணம் தேட்டுணர்வு பண்புமண வாழ்வுறுத்தல்
> உள்ளின் ஈன் றோர் துணைக்கோய் வின்று.

## ஆதி

ஆவிக்குத் தோற்றம் நிலை இறுதி என்னும் மூன்றிடத்தும் முழுமுதல்வன் திருவருள் ஆற்றலின் உதவி ஒப்பவேண்டுவதே. நாப்பண் உள்ள ஆவியின் நிலைத் தொழிற்கும் வேண்டுமோ என்னும் ஐயத்தை அகற்றுவதே இந் நூற்பா.

இம்மூவிடத்தும் ஒப்ப உதவும் ஆண்டவன் திருவருள் ஆற்றல் 'ஆதி' எனப்படும். ஆதி என்பது ஆதலைச் செய்பவள் எனப் பொருள்படும். ஆதலைச் செய்பவளை அம்மை என்போம். அவ் அம்மைக்குத் தன் வடிவில் ஒரு கூறு செம்பாகமாகப் பகுத்துக்கொடுத்த செம்பொருளை அப்பன் என்போம். இவ் உண்மையினையே திருவள்ளுவ நாயனர் தாம் அருளிய கடவுள் வாழ்த்து முதல் திருப்பாட்டில் கூறியருளினா. இதுவே தமிழகப்

பண்பு, செம்பொருட்டுணிபு. எனவே அத் திருக்குறளில் பெறப்படும் '**ஆதி பகவன்**' என்பதன் செம்பொருள் அமையப்பரே; ஆதியை ஒரு கூற்றிலேயுடைய பகவன். இத்தகைய விழுமிய தெய்வத் திருவடிவும், இருபாற் பொருட்கும் இயைந்த ஒருபால் தனிச் சொல்லும் தெய்வத் தமிழகத்தும், தெய்வத் தமிழின் கண்ணும் அன்றி வேறு எந் நாட்டகத்தும் எம் மொழியகத்தும் காண்டல் இன்று என்பதைப் பதினாறும் நூற்றாண்டின் நாப்பண் தோன்றி அருளிய பொருநைத்துறையின் ஒரு பெருந் தவத்திருவர் குமரகுருபரமுனிவரனார் அருளிய வரும் திருப்பாட்டால் வலியுறுத்தப் பெறுதல் காண்க.

"அருவருக்கும் உலகவாழ்வு அடங்க நீத்தோர்க்கு
ஆனந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்ணெனுமெண் வகையுருப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன் றாலவ்
உருவையிஃ தொருத்தனென்கோ ஒருத்தி என்கோ
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொலில தெனின்யான் மற்று என்சொல் கேனே."
—குமரகுருபரர், சிதம். செய்—௫௪.

## அருந்தமிழ்

தமிழகத்தமைந்த தனிமுழுமுதல் தமிழ்க் கடவுளின் வடிவம் ஆண் பெண்ணாய் 'வேறுருவின் ஒருடம்பாய்'த் திகழ்வது. அத்திருவடிவினை '**ஒருவர்**' என்னும் ஓர் இயற்சொல்லான் அன்றி அயற்சொல்லான் அழைத்தல் அமையாது. அத்தகைய சிறப்புவாய்ந்த அருஞ்சொற்கு விதி தொல்காப்பியத்தின்கண் காணப்படுகின்றதென்றால் தொன்மைத் தமிழ்க் கடவுள் அம்மையப்பரே. விதிவருவாறு:

"ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை."

"தன்மை சுட்டின் பன்மைக்கு ஏற்கும்."
—தொல். சொல் - ௧௯௧, ௧௯௨.

இத் திருவுருவினைத் தொல்காப்பிய மேற்கோள் திருப்பாட்டொன்றுனும் திருச்சிற்றம்பலக்கோவையார் திருப்பாட்டொன்றுனும் ஓர்க. அவை வருமாறு:

"சிலம்பும் சிறுநுதலும் சில்குழலும் பல்வளையும்
[ஒருபால் தோன்ற
அலங்கலந் திண்தோளும் ஆடெருத்தும் ஒண்குழையும்
[ஒருபால் தோன்ற
விலங்கல் அரஞ்சரத்து வேறுருவின் ஒருடம்பாய்
[வருவார்க் கண்டே
அலங்கல் அவிர்சடைஎம் அண்ணல் விளையாட்டென்று
[அகன்றேம் பாவம்."
—தொல். பொருள்-௪0. மேற்கோள்.

"மின்தொத் திடுகழல் நூபுரம் வெள்ளைசெம் பட்டுமின்ன
ஒன்றொத் திடஉடை யாளோடோன் றம்புலி யூரனென்றே
நன்றொத் தெழிலைத் தொழவுற் றனமென்ன தோர்நன்மைதான்
குன்றத் திடைக்கண் டனம்அன் னைநீசொன்ன கொள்கையரே."
—திருக்கோவையார். உசக.

இதுவே தொன்மைத் திருக்கோலம் என்பது வரும் திருவாசகத் திருப்பாட்டானும் விளங்கும்:

"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ."
—அ0. திருக்கோ - கஅ.

இவ் உண்மை எல்லாம் ஆடி நிழல்போல் தோன்ற நம் திருவள்ளுவ நாயனார் தம் பொது மறைக்கண் முதல் திருப்பாட்டாக அருளிய அருமை உள்ளுதோறுள்ளுதோ றுள்ளமுருக்கும் கள்ளமில் வாய்மையாம். அத் திருப்பாட்டு வருமாறு:

" அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு."    —திருக்குறள், க.

ஆதி பகவன் - ஆதிக்குப் பகுந்தளித்த அருந் திருமேனியையுடைய வன்; அம்மையோடு கூடிய அப்பன்.

* 'விளம்பிய..............தவையே.'

(பொ - ரை.) மேல் முறையே முதன்மையும், துணைமையும், பயன் மையுமாய்க் கூறிப்போந்த இறை, தளை, உயிர் என்னும் முப்பொருள் களுள் எதிர் நிரல் நிறையாக வைத்துப் பயன்பெறுதற்கு உரிய உயிரின்— ஆவிகளின் தன்மை நான்காம் நூற்பாவில் கூறியருளி, இவ்ஐந்தாம் நூற்பா வில் தளையின் தன்மை கூறியருளுகின்றனர். அத்தளை வினை மாயை மலம் என முத்திறப்படும். இவற்றை முறைப்படுத்திச் செயற்படுத்தும் இறைவன் திருவருளாற்றல் நடப்பி எனப்படும். இவ்வாற்றல் மறைப்பு என்று கூறப்படும். மறைப்பு—திரோதானம். மறைப்பாற்றலின் தன்மை கூறவே அதற்குக் கருவியாகிய தளைகளின் தன்மைகளும கூறியனவே ஆகும்.

மேற் கூறப்பட்ட ஆவியானே 'மெய், வாய், கண், மூக்கு, (செவி)' என்னும் கருவிகள் தங்களால் கொள்ளப்படும் புலன்களை இஃது இன் னது என்று அளவிட்டு அறியும். ஆனால் தம்மையும் தம்மை இயைந்து இயக்கும் ஆவிகளையும் அறியமாட்டா. அப்பொறிபுலனாகிய கருவிகள் போல ஆவிகளும் தம்மை இயைந்தியக்கித் தம் அறிவிற்கு விளக்குங்கருவி யாகிய முழுமுதல்வனது திருவருளாற்றலாகிய அறிவாற்றலான் கீழ் நோக்கிய ஐம்பாட்டிலும், புருவநடுவில் நிகழும் ஐம்பாட்டிலும் நின்று வினைப்பயன்களை நுகரும். நுகரும தம்மையும், நுகரும் வண்ணம் இயைந் தியக்கிச் செலுத்தும் திருவருளையும் அறியா. ஆவிகள் அங்ஙனம் உணர் வது எதுபோல் என்றால், மின்னூட்டி (காந்தக்கல்) யின் முன் அவ்வூட்டி இரும்பை நோக்களவானே இழுத்துக் கொள்வதுபோல். முழுமுதல்வன் கருவிகள் இன்றிக் கருத்தளவான் (திருவுள்ளம) நோக்கும் நோக்கத்திரு முன் நிகழ்வதால் முழுமுதல்வன் திரிபுஎய்தான். திரிபு-விகாரம்.

## நடப்பு

நடப்பு என்பது நடப்பாற்றல், அஃதாவது ஆவிகளை உடலோடும் உலகத்தோடும் வினைக்கு ஈடாக நடத்துவிக்கும் திருவருளாற்றல். இதனை மறைப்பாற்றல் எனவும் கூறுப. மறைப்பு—திரோதானம். 'சிவயநம' என்னும் ஐந்தெழுத்தும் முறையே சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு. ஈண்டுக் கூறப்படும் 'நடப்பு' என்பதே மறைப்பாற்றல்.

இவ்வைந்தெழுத்து மேற்கூறிய ஐம்பெரும் பொருள்களைக் குறிக்கும் வாய்மை வரும் சிவப்பிரகாசத் திருப்பாட்டானும் காண்க.

> "திருஎழுத் தைந்தில் ஆன்மாத் திரோதம்ஆ சருள்சி வஞ்சூழ்
> தரநடு நின்ற தொன்றும் தன்மையும் தொன்மை ஆகி
> வருமந மிகுதி யாலே வாசியி லாசை யின்றிக்
> கருவழிச் சுழலும் மாறுங் காதலார்க் கோத லாமே."
>
> —சிவப்பிரகாசம், ௯0-௯உ.

மறைப்பாற்றலுள் மாயை அடங்கும் என்னும் முறைமையால் திருவருட்பயனில் ஐந்தெழுத்து அருள்நிலை கூறுங்கால், மாயை நடப்பினுள் அடங்கும் என்னும் தன்மை கூறியருளிய திருப்பாட்டு வருமாறு:

> "இறைசத்தி பாசம் எழின்மாயை ஆவி
> உறநிற்கும் ஓங்காரத் துள்."
>
> —திருவருட்பயன், க. ஐந்-உ.

பாசம்—ஆணவம்; மறைப்பு. மாயை—திரோதானம்; நடப்பு.

இவ்வுண்மை எல்லாம் வரும் திருமூல நாயனார் திருப்பாட்டான் தெளிய உணர்க:

> "உள்ளத்தின் உள்ளே உடன்இருந் தைவர்தம்
> கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக்
> கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து
> வள்ளல் தலைவி மருட்டிப் புரிந்தே." —௯0. ௪-௧௧அ௫.

## தொன்மைமலம்

துணைமையின் தன்மை கூறும் இந் நூற்பாவின்கண் வினை மாயைகளைக் கூறியதோடொப்பத் தொன்மை மலமாகிய ஆணவமும் கூறவேண்டுவது முறைமையாயினும், அம்மலத்தின் தன்மை நான்காம் நூற்பா இரண்டாம் கூற்றின்கண் கூறப்பட்டுள்ளது. அஃது ஆவியினைத் தொன்மையே புல்லிய நன்மையில் பொருள் எனவே ஆவித்தன்மை கூறியவிடத்துக் கூறுதலே அமைவுடைத்தாகலின் ஆண்டுக் கூறப்பட்டுள்ளது பொருத்தமேயாம்.

## இயைந்தியக்கல்

நாம் பம்பரத்தைச் சுழலச்செய்கின்றோம். இஃது இயைந்தியக்கலே. இயைந்தியக்கல் இருவகைப்படும். ஒன்று பொருளோடு இயைந்தியக்கல். மற்றொன்று பொருளோடு இயைந்தியக்காது கருதுதல் அளவையான் இயைந்து இயக்குவது. எடுத்துக்காட்டாக நாம் பம்பரத்தைக் கையில் எடுத்துக் கயிறுசுற்றிக் கையால் சுழற்றிக் கடுநிலத்தே சுழலவிடுகின்றோம்.

இது கருவியால் இயைந்திக்கல். பின் அது சுழலும் காலம் முற்றும் நம் முன்பு நம் கருத்தால் சுழலுகின்றது. இதுவே கருத்தால் இயைந்தியக்கல் என்க. ஆனால் முழுமுதல்வன் இவ்விருதிற இயைந்தியக்கத்தையும் கருத்தான்—திருவுள்ளத்தானே செய்தருளுகின்றனன்.

காதலிறை கண்ணும் கருத்தே திருவுள்ளம்
ஆதல் இயைந்தியக்கல் ஆம்.

## சொல்லெச்சம்

சொல் எச்சம் என்பது, ஒரு சொல் நூற்பாவிலோ, செய்யுளிலோ, எஞ்சிநிற்பது. அதுபோல் இந் நூற்பாவில் "மெய், வாய், கண், மூக்கு" என்பனசொல்லப்பட்டுள்ளன. ஆனால் சொல்லப்பட வேண்டுவன 'மெய், வாய், கண், மூக்குச் செவி' என்னும் ஐந்துமாம். எனவே சொல்லப்படாதது 'செவி'. இச் சொல் எஞ்சிநிற்கின்றது. இதனை வருவித்துக் கூட்டிப் பொருள்கொள்வதால் அதனைச் சொல்லெச்சம் என்ப. இதனைத் தொல்காப்பிய முனிவரனார் கூறுமாறு காண்க:

"சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்
சொல்லளவு அல்லது எஞ்சுதல் இன்றே."
—தொல். சொல்-சசக.

## இனம்

'இனம் செப்பலை' உபலக்கணம் என்பர். 'ஐம்பொறிகளைக் கூறியது இனம்செப்பல்' ஆகலின், ஏனைக்கருவிகளும் அவ்வாறு கொள்ளப்படும் என்பதனால் அகப்புறக் கலன்கள், அகக்கலன்கள் முதலியவும் கொள்ளப்படும். இவ்வுண்மை அருணந்திசிவநாயனார் அருளிய வரும் திருப்பாட்டானும் உணர்க.

"பொறிபுலன் கரணம எல்லாம் புருடனால் அறிந்தான் மாயை
அறிகரா அவையே போல ஆன்மாக்கள் அனைத்தும் எங்கும
செறிதரும் சிவன்த னாலே அறிந்திடும் சிவனைக் காண
அறிதரும் சிவனே எலலாம் அறிந்தறி வித்து நிற்பன்."
—சித்தியார். ரு.

இனம் செப்பற்கு விதி தொல்காப்பியத்துக் கூறுமாறு:

"எடுத்த மொழி **இனம்** செப்பலும் உரித்தே."
—தொல். சொல்-௬0.

## ஐவகை ஆற்றல்

இறைவன் திருவருள் இறைவிஎன்று அழைக்கப்படும். அவ்இறைவி செய்யும் திருவருளால் ஐவகைத் திருப்பெயர் பெறும். அவை விழைவாற்றல், அறிவாற்றல், செயல் ஆற்றல், மறைப்பாற்றல், அருளாற்றல் என. இவற்றுள் இந் நூற்பாவின்கண் மறைப்பாற்றல் கூறப்படுகின்றது. தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழில்களுள் ஒருபுடை ஒப்பாகத் தோற்றம் செயலாற்றலாலும், நிலை மறைப்பாற்றலாலும், இறுதி விழைவாற்றலாலும் நிகழ்கின்றன. இதுபோல் மறைப்பு அறிவாற்றலாலும, வீடுபேறு அருளாற்றலாலும் நிகழ்கின்றன என்க.

தோற்றநிலை ஈறுமறை பேறுசெய லேமறைப்பு
ஆற்றுவிழை வேயறிவ ருள்.

**இலக்கணம்**

ஈண்டுத் '**தமிஅருள்**' என்பது மறைப்பாற்றலைக் குறிக்கும். **இம்மறைப்** பாற்றலைத் திரோதான சத்தி என்பர். **தமிஅருள்** என்பதனை அருளால் என விரித்துப் பொருள் கொள்ளப்பட்டது. 'அளந்தறிந்தறியா' என்னும் வினை உவமையாகிய 'மெய், வாய், கண், மூக்குச் (செவி) என்னும் பொறிகளுக்கு உரியது. அவ்வினையைப் பொருளாகிய ஆவிகளிற் கூட்டுதல் ஆவிகளும் 'அளந்தறிந்தறியா' என்பதே.

**கூறு**

இந் நூற்பா இரண்டு கூறுகளையுடையது. ஒன்று '**விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்கு அளந்தறிந்தறியா**' என்பது. மற்றொன்று '**தாம்தம் உணர்வின் தமிஅருள்** என்பது.

மெய்முதல உள்ளத் தளந்தறிந் தேயறியா
உய்யுந் தமியருளீர் கூறு.

---

## முதல் அதிகரணம்

**ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் என்றது.**

எ - து. மே - ள். எ - னின். தாமரையிலையினீர்போல் புருடன் பற்றற்று நிற்பப் புருடன் சந்நிதியிற் புத்திதத்துவமே ஐம்பொறி வழியான் விடயங்களை அறியுமெனவமையும்; அவ்வா றன்றிக் கருவிகளோடு கூடிப் புருடனே அவத்தைப்படுமென மேற்கூறியதமையுமாறென்னை யெனச் சாங்கியநூலார் மதம் பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

உணர்விற்கேதுவாகிய பொறிகளை உணர்வென்று உபசரித்தார்.

**அவற்றினுன் ஆன்மா ஒற்றித்துக்காணின் அல்லது அவை ஒன்றையும் விடயியாவாகலான்.**

எ - து. ஏது எ - னின். அதற்குப் பிரமாணமென்னை என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ - ள்.) அவ்ஐம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்றறிந்தாலன்றி அவை ஒருவிடயத்தையும் விடயிக்கமாட்டா வாகலான் ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணருமென மேற் கொண்டது (எ - று).

*ஆன் உடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது.*

*உம்மை இழிவுசிறப்பு; முற்றுமாம்.*

*எதிர்மறைமுகத்தாற் கூறினார் இன்றியமையாமை விளக்குதற்கு.*

* ஐம்பொறியை ஆண்டங்கு அரசாய் உளம்நிற்ப
ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்—ஐம்பொறியில்
காணுதேல் காணுது காணும்உளம் காணுதேல்
காணுகண் கேளா செவி.

*எ - து. உ - ம். எ - னின். உயிர் அங்ஙனம் ஒற்றுமைப் பட்டு நின்று செலுத்துதலும் அவை உயிரையின்றி அமையாமையும் எற்றாற் பெறுதுமென்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.*

(இ - ள்.) *அரசு ஆய்—அரசன் அத்தாணிமண்டபத்தின் வைகித் தன்கீழ்க் கருமஞ்செய்வாரை அவரவர்க்குரிய காரியங்களிற்செலுத்தி ஆளுமாறுபோல, உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப—உயிர் ஐம்பொறிகளை (அவ்வவற்றிற்குரிய விடயங்களிற்செலுத்தி) ஆண்டு இலாடத்தானத்தின் நிற்றலான், ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்—(அரசனால் ஏவப்பட்டோர் ஏவிய கருமமாத்திரையினன்றி அதிகத்திற் செல்லமாட்டாமை போல) அவ் ஐம்பொறிகள் உயிரை யறியமாட்டாவாயின (அற்றேல் ஐம்பொறிகள் உயிரானன்றியறிதல் அமையாதாயினும் உயிர் ஐம்பொறிகளானன்றியும் அறிதலமையும்போலுமெனின்), ஐம்பொறியில் காணுதேல் காணுது காணும் உளம் காணுதேல் காணுகண் கேளா செவி—(ஒரு கருமஞ் செய்தற்கண் அரசரும் அமைச்சர் முதலாயினாருந் தம்முள் இன்றியமையாதவாறுபோல) ஒன்றனை விடயித்தற்கண் உயிரும் ஐம்பொறிகளுந் தம்முள் இன்றியமையா (எ - று)*

*அன்னவாதல் உயிர் ஐம்பொறியினீங்கிச் சொப்பனத் தானத்தினெய்தியவழிக் கண்டுகொள்க.*

*நிற்பவென்னுஞ் செயவெனச்சம் மழைபெய்யக் குளநிறைந்தது என்புழிப்போல நிற்றலானெனக் காரணப்பொருட்டாய் நின்றது. இவ்வாறுரையாக்கால் இஃது ஏதுவின் பொருள் வலியுறுப்பதாய உதாரணமாதற்கேலாமை அறிக.*

---

* ‘ தெரிந்துகொண் ’ சித்தியார். ரு. உ - அ.

## விளக்கம்

### இன்றியமையாமை

ஆவி புலன்களை உணருவதற்குப் பொறிகளின் துணை இன்றியமையாதது. அதுபோல் பொறிகள் உணர்வதற்கு ஆவியின் துணை இன்றியமையாதது. இஃது எதுபோல் என்றால் எழுது கோலினுக்குக் கையின் துணையும், கையினுக்கு எழுதுகோலின் துணையும் ஒன்றினுக்கு ஒன்று இன்றியமையாது வேண்டப்படுவனபோல் என்க.

எழுது கோலினுக்கு எவ்வகை உணர்ச்சியும் இல்லை. கையினுக்கு மெய்யின் பகுதியாகிய ஊற்றுணர்ச்சி உண்டு. உணர்ச்சியில்லாத எழுது கோலினும் உணர்ச்சியினையுடைய கை சிறந்தது. எனினும் இவ்விரண்டும் தம்முள் இயைந்தே தொழில் நிகழவேண்டிய திருக்கின்றது அல்லவா? அதுபோலவே நான் விளக்க விளங்கும் அறிவுடைய ஆவியும் அறிவே இல்லாத பொறிபுலன்களும் தம்முள் இயைந்து ஒருபொருளைப் புலன் கொளல் வேண்டியதாகின்றது. எனினும் ஆவி பொறிபுலன்களினும் சிறப்புடையதென்பதைக் கை எழுது கோலினும் சிறப்புடையது என்பதுபோல் கொள்க.

கைஒக்கும் ஆவி கலந்தெழுது கோலொக்கும்
மெய்ம்முதல வாம்பொறிகள் வேட்டு.

### இறப்புமெய் உணரா

ஆவி கலன்களோடும் புலன்களோடும் இயைந்திருப்பினும் அவற்றுடன் தொடக்கு— பற்றின்றி நிற்கும். கலன்கள் எண்ணம், மனம், எழுச்சி, இறப்புமெய் முதலியன. புலன் மெய், வாய், கண், மூக்குச் செவி என்பன. எதுபோல் பற்றின்றி நிற்கும் என்றால்? தாமரை யிலையில் தண்ணீர்போல் பற்றின்றி நிற்கும். ஆயின் கலன்களுள் ஒன்றாகிய இறப்புமெய் அவ்ஆவியின் முன்னிலையில் தானே புலன்களைக் கொள்ளும் எனப் பகுத்தறிவுக் கோளினர் கூறுவர். பகுத்தறிவுக் கோளினரைச் சாங்கியர் என்பர். கையின் முன்னிலையில் எழுதுகோல் தானே எழுதும் என்று சொல்வது எவ்வளவு பொருந்துமோ அவ்வளவும் பொருந்தும், இறப்புமெய் ஆவியின் முன்னிலையில் பொறிகள் வழிப்புலன்களைக் கொள்ளும் என்பதும, கொள்ளா தென்பதே பொருத்தம். மேலும் பற்று வரவுகளைப் பேரேடு பார்த்துக் கணக்கன் கூறுவதன்றிப் பேரேடு தானே அவற்றைக் கூறாது என்பதையும் பொருந்தும்.

### ஏற்றுரை

'ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் என்றது' இதன்கண் ஐம் பொறிகள் ஆன்மாவால் உணரும் என்றிருத்தல் வேண்டும். உணாவிற்கு எதுவாகிய பொறிகளை உணர்வு என்று கூறியிருப்பது ஏற்றுரை. ஏற்றுரை எனினும் உபசாரம் எனினும் ஒன்றே. இது பணம் பெறுதற் பொருட்டு வழங்கப்படும் பண ஓலையைப் பணம் என்றே கூறுவதை ஒக்கும்.

பணஓலை பார்க்கிற் பணமாகா ஆயின்
குணமார் பொறியுணர்வும் கொள்.

## ஒற்றித்துக் காணல்

ஒற்றித்துக் காணல் என்பது இயைந்தியக்கிக் காண்டல். இதுவே அதிட்டித்தல் எனக. இவ் உண்மை திருவள்ளுவ நாயனார் கூறியருளிய ருகூ—ஒற்றாடல் என்னும் பகுதியாற்காணலாம். அவற்றுள் வரும் திருப் பாட்டுக் கிளந்தெடுத்துக் கூறுவதாகும்.

> "மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
> ஐயப்பாடு இல்லதே ஒற்று." —திருக்குறள் - ருஅஎ.

மேலும் இவ்வுண்மை பேருரைக்கண் முனிவரனாரால் மனத்தின் மாட்டுவைத்து அருளியதும் காண்க. "மனம், நாட்டின்கண் நிகழ்வன வற்றைச் சென்றறிந்து வந்து வேந்தர்க்குப் புலனாகச் செய்யும் ஒற்றர் போலப், புற இந்திரியங்களான் அறிந்த விடயத்தை இடையே நின்று பற்றி வாங்கிப் புத்தியின் எதிர்விம்பமாய்த் தோன்றுமாறு கொண்டுய்க்கும் அக இந்திரியமாய்க், காகத்தின் கண்மணிபோல அகம் புறமாகிய ஈரிடத் தினும் விரைந்து செல்லும் சதாகதியுடையதாய் நிற்பது."

இந்திரியம் - பொறி. விடயம் - புலன். புத்தி - இறப்புமெய். விம்பம - நிழலுரு. சதா - எப்பொழுதும். கதி - ஓட்டம்.

## உடன் நிகழ்ச்சி

"அவற்றினன் ஆன்மா ஒற்றித்து" என்பதன்கண் காணப்படும் 'ஆன்' வேற்றுமையுருபு. இது மூன்றாம் வேற்றுமை உருபு. உடன் நிகழ்ச்சிப் பொருள். உடன் நிகழ்ச்சியாவது இருபொருள் ஒருங்கு நிகழ் வது. எடுத்துக்காட்டு 'தூங்குகையான் ஓங்கு நடைய' - புறநானூறு, உஉ. இதன் பொருள் 'அசைந்த பெருங்கையுடனே தலை எடுத்து நடக் கும் உயர்ந்த நடையை உடையனவும்' என்பது. இதன்கண், கை கால் இரண்டு உறுப்பும், அசைதல் நடத்தல் இரண்டு தொழிலும் ஒருங்கு நிகழ் வன காண்க.

திருவள்ளுவ நாயனார் அருளிய .

> "பண்டறியேன் கூற்றென் பதனை இனி அறிந்தேன்
> பெண்தகையால் பேரமர்க் கட்டு."—திருக்குறள் - கOஅங.

என்னும் திருப்பாட்டின்கண் 'பெண்தகையால்' என்பதன் பொருள் பெண்தகையுடனே என்பது. ஈண்டும் உடனிகழ்ச்சியே. ஆல் கருவிப் பொருளில் வரும். எடுத்துக்காட்டு: 'எழுது கோலால் எழுதினன்.'

இவைபோன்று 'அவ் ஐம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு' என்ற பொருள் தருவதால் 'ஆன்' உடன்நிகழ்ச்சிப்பொருள். கருவிப் பொருள் அன்று.

## உம்மை

'அவை ஒன்றையும் விடயியா ஆகலான்' என்பதன்கண் உள்ள 'ஒன்றையும்' என்பதில் காணப்படும் 'உம்மை' இழிவு சிறப்புப்பொருளி லும் முற்றுப்பொருளிலும் வந்துள்ளது. ஒன்றை எனும் என்றபொருளில் இழிவு சிறப்பு. எல்லாமும் என்ற பொருளில் முற்று.

### எதிர்மறை

"அவற்றின்ன் ஆன்மா ஒற்றித்துக் காணின் அல்லது அவை ஒன்றையும் விடயியா ஆகலான்" 'அல்லது விடயியா' என்பது எதிர்மறை முகத்தாற் கூறுதல். இஃது இன்றியமையாமை உணர்த்துவதன் பொருட்டு என்க. பொறிகட்கு என்றும் ஆன்மாவின் இன்றியமையாமையை வலியுறுத்துதற் பொருட்டு இங்ஙனம் ஓதியருளினர்.

'ஐம்பொறியை... ..செவி.'

### பொறி உணராமை

'ஐம்பொறிகள்' ஆவியை இன்றி உணராமை ஆவி கண்டத்தின்கண் நிகழும் இருபத்தைந்து* கருவிகளோடு கூடிய கனவின்கண் ஐம்பொறிகள் ஒன்றையும் உணராமல் வாளாகிடக்கின்றமையால் உணரலாம். ஐம்பொறிகள் ஆவியை இன்றி உணராமை கூறநேர்ந்த இவ்விடத்து ஆவியும் ஐம்பொறிகளை இன்றி உணராமையை உடன் கூறினர். இது திருவள்ளுவநாயனர் கூறியருளிய வரும் திருப்பாட்டின் திருக்குறிப்போடொக்கும்.

"மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு."—திருக்குறள் - ௧0௬.

இதன்கண் இம்மைக்குறுதி 'நட்புத் துறவாமை.' அதனை அருளவந்த வள்ளுவர் பெருமான் மறுமைக் குறுதியாகிய 'கேண்மை மறவாமையும்' உடன் அருளினர்.

### ஐம்பொறி அமைச்சு

நான்காம் நூற்பாவில் அகப்புறக்கலனாகிய அந்தக்கரணங்களை அமைச்சருடன் ஒப்பித்து அருளினர். இவ்ஐந்தாம் நூற்பா எடுத்துக் காட்டு வெண்பாவில் ஐம்பொறியை அமைச்சருடன் ஒப்பித்தருளினர். அகப்புறக் கலன்களும் ஐம்பொறிகளும் ஆவிக்குக் கருவிகளாய்நிற்கும் உண்மைத் தன்மையை வற்புறுத்தற்கென்க.

### அரசொப்பு

அரசாய் என்னும் ஒப்பு, அரசின் ஆணைபெற்று அவன்கீழ் ஆட்சித் துறையில் பல்வேறு நிலையினை எய்தும் அமைச்சர் படைத்தலைவர் படையினா முதலாயினர் அரசனால் ஏவிச செலுத்தும் வினை அளவின் அன்றி மேற்செல்லும் தன்மையினர் அல்லாமை போன்று ஐம்பொறிகளும் ஆவியினாற் செலுத்தப்பட்டு மேற்கொள்ளும் புலன்அளவின் அன்றி மேற்செல்லாமையை உணர்த்துவதேயாம்.

### ஆக்கம்

'அரசு ஆய்' என்பதன்கண் உள்ள 'ஆய்' ஆக்கம் குறிப்பது. இது 'போல' என்னும் பொருளைத் தந்து நிற்கின்றது. இதற்கு எடுத்துக் காட்டு ஆளுடைய அடிகள் அருளிய திருப்பாட்டு. அது வருமாறு:

* 'சாக்கிர' பக்கம் - ௨௪௧.

"இரங்கும் நமக்கம் பலக்கூத்தன் என்றென் றேமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்தாண்டாய் ஆள்வார் இலிமா டாவேனே
நெருங்கும் அடியார் களும்நீயும் நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வரஎங்கள் வாழ்வே வாவென் றருளாயே."
—அ. கோயில்மூத்த - எ.

இலிமா டாவேனே - இலிமாடு ஆவேனே. ஆவேனே - போல்வேனே.

---

## இரண்டாம் அதிகரணம்

**இனி இதுவுந் தமது முதலாலே உணருமென்றது.**

எ - து. மே - ள். எ - னின். கருவி சடமாகலிற் சித்தாகிய உயிரானன்றி அமையாவாயினுஞ் சித்தாகிய உயிர் முதல்வனது உபகாரத்தை அவாய் நிற்பதன்று. அவாவுமாயின், முதல்வனும் அவ்வாறே பிறிதொன்றன் உபகாரத்தை அவாவும் எனப்பட்டு மேலும் வரம்பின்றியோடும் என ஈசுரவவிகாரவாதி முதலியோர் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் பிற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ - ள். வெ - டை.

தமது முதலென்பது யானெம்மூர் புகுவன் நீ நும்மூர் புகுவை யென்புழிப்போல வேறுமுடிபு கோடலிற் பால்வழு வன்மையுணர்க.

உம்மை இறந்ததுதழீஇயஎச்சம்.

இம்முறைமை தமக்கொரு முதலுடையவற்றிற்கேயன்றி ஏனைப்பொருட்கின்மையின் வரம்பின்றி யோடுமாறில்லை யென்பார், தமது முதலென்று உடம்பொடு புணர்த்தோதினார். தம் முணர்வின் தமியென்றதுமது.

தத்துவங்களும் உயிருந் தமக்கொரு முதலுடையனவாதலும் முதல்வனுக்கு அஃதின்மையும் மேற்கூறிப்போந்த சூத்திரங்களாற் பெறப்பட்டனவென்பது கருத்து.

**இவ்வான்மாத் தன்னாலே உணரும் இந்திரியங்களைப்போலத் தானுந் தன்னையுணராது* நிற்றலான்.**

எ - து. ஏது எ - னின். உயிர் ஐம்பொறியிற் சடமன்மையான் அவற்றை யெடுத்துக்காட்டி மேற்கோடல் ஈண்டைக்கு

---

* தன்னை யுணராது என்பதற்குத் தன்னையுந் தன் முதல்வனையு முணராது எனப் பொருள் கொள்ளப்படும். தன் ஐ-தன் முதல்வன்.

அமையாதென்பாரை நோக்கி அதனைச் சாதித்தல் நுதலிற்று. இ - ள். வெ - படை.

சடமுஞ் சேதனமுமாய வேறுபாடுபற்றித் தம்முள் ஒவ்வா ஆயினுந் தம்மையுந் தமது முதலையும் அறியமாட்டாமைக்கண் ஐம்பொறியும் உயிருந் தம்முள் ஒக்குமாகலின், அதுபற்றி அங்ஙனமேற்கோடல் அமையுமென்பது கருத்து.

* மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்தது
என்னும் மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு உளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணுன் சிவன்அசத்தை இன்று.

எ - து. உ - ம். எ - னின். தன்னுலுணரும் இந்திரியங்களை ஈண்டைக்கு உவமைகூறின் அவ்விந்திரியங்கட்கு வரும் பயன் அவற்றினுல் ஒற்றித்துக்காணும் உயிர்க்காயவாறுபோல உயிர்க்கு வரும் இன்பத்துன்பப்பயனும் உயிராெனுற்றித்துக் காணும் முதல்வனுக்காதல் வேண்டுமென்பாரை நோக்கி அங்ஙன மாகாமை கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) மன்னுசிவன் சந்நிதியின் மற்று உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல்மறந்தாய்—(ஈண்டுக் கூறிய கருதலளவையே யன்றி) நிலைபெற்ற முதல்வனது சந்நிதியிற் பிரபஞ்சஞ் செயற்படுகின்றதென்றோதும் வேதப் பொருளையும் அறியாது பிணங்குகின்றபேதாய், உளம் சொன்ன சிவன்கண்ணு வினையால் கண்டு அறிந்து நிற்கும் காண்—உயிராவது (தமக்கெனவோர் காரணமின்றித் தன்பொருட்டே அறிவனவாய அவ்விந்திரியங்கள்போலன்றி அவ்வேதத்துள்) எடுத்தோதப் படும் முதல்வன் தனக்குக் காட்டாகிநிற்பத் தான்செய்த வினைக்கீடாக ஒன்றனை யறிந்து நிற்கும்; (அவ்வேறுபாடு) அறிவாயாக, இன்று (ஆகலான்) சிவன் அசத்தை எண்ணுன்—(அங்ஙனங் காட்டாகி நிற்பினுந் தனது சந்நிதியின் அசத்தெல்லாஞ் சூனிய மாகலான்) மங்கலவடிவினனுய முதல்வன் (அவ்வுயிர்போல்) அவற்றை அநுபவியான் (எ - று).

இதனுட் சிவனென்றது மன்னுசிவனென்புழிப் பேரின்பத் துக்குக் காரணனென்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபுணர நின்றது; சொன்ன சிவனென்புழி முற்றுணர்வினனென்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய இயைபுணர நின்றது; எண்ணுன் சிவனென்புழித் தூயதன்மையனென்னும் பொருட்டாய் அசத்தை

* ‘இறைவன்தன்’ சித்தியார். சூ. உ - கூ.

எண்ணுமைக்குரிய இயைபுணரநின்றது. ஆகலாற் கூறியது கூறலன்மையுணர்க. அஃது அம்முப்பொருளுடைத்தென்பது சோமசம்புபத்ததி வியாக்கியான முதலியவற்றுட் காண்க. சிவ தத்துவ விவேகத்துள் மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையேயாமாறு கண்டுகொள்க.

ஈண்டு உலகமென்றது உயிர்களை.

மறையினியலும் பொருளை மறையினியலென்றுபசரித்தார்.

இறந்ததுதழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது.

மறந்தாய் என்பது விளியுருபேற்றபெயர்.

ஈண்டுச் சந்நிதியென்றது அவிகாரவாதிகள் கூறும் அபி முகமாத்திரையன்றென்பார் சொன்னசிவன் கண்ணு என்றார். சிவசத்தி அவ்வக்காரியங்களின் உன்முகமாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சந்நிதியெனப்படுமென்பதாம்.

காந்தங்கண்ட பசாசத்தவையேயென்றது ஒருபுடையுவமை யாதல்பற்றியே பிறிதன்றென்பது கருத்து.

வினையாலென்றது ஐம்பொறிபோலன்றி உணர்தற்பயன் உயிர்க்கேயாதற்கேதுக் காட்டியவாறு.

கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

எண்ணல் ஈண்டநுபவித்தன்மேற்று.

இன்றென்பது சாதியொருமை.

அவனெதிர் என்பது அவாய்நிலையான் வந்தது.

ஆகலானென்பது சொல்லெச்சம். இன்றுதல் யாவையுஞ் சூனியஞ்சத்தெதிர் என்புழிப் பெறப்படும். இக்கருத்தேபற்றி * "மாயை மருவிடான் சிவனவன்க—ளுறைதரா தசேதனத் தால்" என்றார் வழிநூலாசிரியரும். † "உன்னுதரத் தேகிடந்த கிட முறுவதெல்லா—முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ— மன்னுயிர்க, ளெவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுஞ்—செவ் வகையே நின்றசிவன் பால்" என்றதும் இவ்வியல்பு நோக்கி.

‡ வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல—மெய்யவனில்
கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனைக்
கண்டடைய் மன்னுதலைக் காண்.

* சிவஞானசித்தி, ஐந்தாஞ்சூத்திரம். சு. இறைவன்றன்.
† திருக்களிற்றுப்படியார். அள.
‡ 'அறிந்திடும் ஆன்மா' சித்தியார். ரு. உ - ௩.

எ - து. உ - ம். எனின். உயிர் அங்ஙனம் உணர்ந்து உணருங்கால் முதல்வனின் வேறுநின்றுணருமோ ஒன்றாய் நின்றுணருமோ வென்பாரை நோக்கி அவ்விரண்டியல்புமின்றி நின்றுணருமாறுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) வெய்யோன் ஒளியில் ஒடுங்கி—ஞாயிற்றினொளியின் அடங்கி, விளங்காது—(அதனின் வேறாய்) விளங்கித் தோன்றுதலின்றி, வெய்யோனை ஆகாத மீன்போல—அதுவாயொழிதலுமில்லாத நாண்மீன்கள் (அஞ்ஞாயிற்றானே ஒளியுடையவாமாறு) போல, கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனை மெய் அவனில் கண்டு—கண்டுங் கேட்டும் உண்டும் உயிர்த்துந் தீண்டியும் அறியப்படும் ஐவகை விடயங்களையும் (உயிர்) மெய்ப்பொருளாகிய முதல்வனால் உணர்ந்து, உடனாய் மன்னுதலைக் காண்—(வேறாதலும் ஒன்றாதலுமின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் அடங்கி) உடனாய் நிலைபெறுதலை அறிவாயாக (எ - று).

உவமையடை பொருளினும், பொருள்வினை உவமையினுஞ் சென்றியையும்.

ஐ சாரியை.

நாண்மீன் முதலியவற்றின் ஒளியெல்லாம் ஞாயிற்றனுடைய ஒளியேயென்பது வேதநூற்றுணிபாகலான் அஃதீண்டைக் குவமையாயிற்று.

உயிரென்னும் எழுவாய் மேலைவெண்பாவினின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

* அருளுண்டாம் ஈசற்கு அதுசத்தி அன்றே
அருளும் அவனன்றி இல்லை—அருளின்று
அவனன்றே இல்லை அருட்கண்ணார் கண்ணுக்கு
இரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து.

எ - து. உ - ம். எ - னின். அங்ஙனமாயினும் உயிர்கட்குப் பல வேறுவகைப்பட உணர்வு நிகழ்தலின் அஃதுணர்த்துதல் வேறுபாட்டானுயதெனல்வேண்டும். வேண்டவே, நிருவிகாரியென்னுஞ் சுருதியோடு முரணி முதல்வன் விகாரியாவான் செல்லுமென்பாரை நோக்கி விகாரியாகாமையுணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அருள் ஈசற்கு அன்றே உண்டாம்—(உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கணுள

* 'அருளது' சித்தியார், ௯. உ - ௬.

தாகிய) இரக்கம் முதல்வனுக்கு அநாதியேயுள்ளது, அது சத்தி—அவ்விரக்கம் (வேறு பொருளன்று முதல்வனுக்கு உளதாகிய) சத்தியேயாம், அருளும் அவன் அன்றி இல்லை அவன் அருளின்று இல்லை—(இரக்கமும் அவனுங் குணமுங் குணியுமாகலின்) அவ்வருளும முதல்வனையின்றி யமையாது முதல்வனும் அதனையின்றி யமையானாய், அருட்கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன்—ஞானக்கண்ணுடையார் உணர்விற்கு ஞாயிறு (தன்னொளியோடு தாதான்மியமாய் இயைந்து நிற்குமாறு) போல் (அவ்வருளோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பவன் முதல்வன்) ஆகலான் தன்வயத்தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்திசங்கற்ப மாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடும் (எ - று).

ஆகலான் தன்வயத்தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்திசங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல்கூடுமென்பது குறிப்பெச்சம்.

உம்மை எதிரது தழீஇயது.

இன்றியென்னும் வினையெச்சக் குறிப்பினிகரஞ் செய்யுளாகலின் உகரமாய்த் திரிந்தது.

அன்றே அசை.

இவ்வியல்பு சித்தாந்த நெறியுணர்ந்தார்க்கன்றி விளங்காதென்பார் அருட்கண்ணார் கண்ணுக்கென்றார்.

சத்தியது உண்மையும் அதனியல்பும் நீக்கமின்றி நிற்குமன்றேயென்பதனுள் வகுத்துரைத்தமையின் ஆண்டுக்காண்க.

## விளக்கம்

### துணைவேண்டாத் துணைவன்

கருவி அறிவில்லது. அதனால் அஃது ஆவியின் இயைந்து இயக்கும் துணையினை அவாவி நிற்பது ஏற்புடைத்து. ஆவி அங்ஙனமன்று. அஃது அறிவுடையது. அது முழுமுதல்வன் இயைந்தியக்கி விளக்க விளங்கும் துணையினை அவாவாது தானே விளங்கிக்கொள்ளும் தன்மையுடையது. அவ்வாறல்லாமல் முதல்வன் துணையை அவாவுமானால், அறிவுடைய அம்முதல்வனும் வேறோர் அறிவுடைப்பொருளை அவாவுவன் எனப்படும். இங்ஙனம் போய்க்கொண்டிருந்தால் எல்லையில்லாமல் - வரம்பில்லாமல் போய்க்கொண்டே இருக்கும். ஆதலால் ஆவிக்கு முதல்வன் துணை வேண்டுவதின்று என்ப. இங்ஙனம் கூறுவார் இறைவனை **ஊட்டா ஒருவன்** என்பர். இக் கொள்கையுடையார் ஈசுர அவிகாரவாதிகள். சுருங்கக்கூறின் இக் கொள்கையுடையார் இறைவனை அழைக்கும் முறைமையைக் கருதின் அவர்தம் போக்கின்படி இறைவனை **ஊட்டிலி** என்னலாம்.

அவர்கள் இறைவனை ஊண் எனக்கருதுகின்றனர். அவர்கள் கூறும் ஒப்பு 'நீரும் நிழலும்'. இவற்றைச் சார்ந்தார் யாவரும் விடாய்தீர்ந்து விழைந்துறைந்து இன்புற்று மகிழ்வர். இவையே அவர்கள் கொள்கை. பச்சிளம்பிள்ளை நீர் பருகவந்து வழுக்கி வீழ்ந்து மாளினும் அந்நீர் வாளா இருக்கும். அந்நீர் பிள்ளை பருகுவதனால் மகிழ்வும், மாள்வதனால் வருத்தமும் கொள்வதில்லை. அதுபோல் இறைவனும் வாளா இருப்பன் என்பதே அவர்தம் கொள்கை. இது பொருந்தாது. 'பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரி'வுடையன் இறைவன். அன்புள்ள தாய் தன் இனிய சேயை நீர்பருக இடங்கொடுப்பாளே அன்றி நீருள் மூழ்கி மாள இடங் கொடாள். அதுபோல் இறைவனும் ஆவியைக்கொண்டே படிப்படியாய் உயர்த்தித் தீநெறிவிலக்கி நன்னெறிக்கு உய்ப்பன்.

அறிவே இல்லாத கருவிகள் விளக்க விளங்கும் சிற்றறிவுடைய ஆவியின் துணையை அவாவுகின்றன. அவைபோல் சிற்றறிவுடைய ஆவிகள் தானே விளங்கும் முற்றறிவுடைய முழுமுதல்வன் துணையை அவாவுகின்றன. ஆனால் முற்றறிவுடைய முழுமுதல்வன் வேறொன்றனையும் தன் அறிவு விளக்கத்திற்கு அவாவுவான் அல்லன் என்பது முற்றறிவுடையன் என்னும் சொல்லினாலேயே பெறப்படும். இவ் உண்மை "இனி இதுவும் தமது முதலாலே உணரும் என்றது" என்ற இடத்து 'தமது முதலென' உடம்பொடு புணர்த்துக் கூறியதனாலேயே விளங்கும். துணையை அவாவுவதாகிய முறை தமக்கு ஒரு முதலையுடைய ஆவிகளுக்கே என்பது புலப்படுத்தவே தமது முதலென அடைகொடுத்தருளினார். அவ் அடைமொழியினால் ஆவிகளே ஒரு முதல்வனையுடையன என்பதும் அம் முதல்வன் தனக்குமேல் வேறொரு முதல்வன் இல்லா முழுமுதல்வன் என்பதும் விளங்கும். இது பிள்ளைகள், மாணாக்கர், வினைவலார், ஆட்சிப்பகுதியினர் முதலாயினார் முறையே ஈன்றார், ஆசிரியர், முதல்வர், தலைவர்களை முதன்மையாகக்கொண்டு நிகழ்வதை ஒக்கும். உடம்பொடு புணர்த்தி என்பது 'உடம்படு+உணர்த்தி' என்று இருத்தல் வேண்டும் என்பது பேராசிரியர் சங்கரநமச்சிவாயர் கருத்தாகும். இதன் பொருள் உடம்பட்டு உணர்த்தி என்பதாம். நூலாசிரியர் ஒன்றனைக்கிளந்தெடுத்துக் கூறுவிடினும் அப் பொருண்மையைத் தங்கருத்தான் விளக்கி உடம்பட்டமையைத் தெரிவிப்பதே அடைமொழி. அதுவே உடம்படு உணர்த்தல்-உடம்பொடுபுணர்த்தல்.

ஈண்டு மெய்கண்ட நாயனார் உடம்படு உணர்த்தி அருளிய திருவுள்ளம் ஆவிகளே முதல்வனையுடையன. முழுமுதல்வன் வேறோர் முதல்வனையுடையவன் அல்லன் என்பதே. திருவுள்ளம் - கருத்து. இங்கு அருள்யுள்ள கருத்துடை அடை 'தமது முதல்'. அல்லாவிட்டால் முதல் எனக்கூறியருள்வதே போதுமானது. திருவள்ளுவநாயனார் உடம்படு உணர்த்தியருளிய திருப்பாட்டு வருமாறு :

"பெறின்என்னும் பெற்றக்கால்என்னும் உறின்என்னும்
உள்ளம் உடைந்துக்கக் கால்." —திருக்குறள், கஉஎ0.

## இலக்கணம்

'இதுவும் தமதுமுதல்' என்றதன்கண் ஒருமைப்பன்மை மயக்கம் எனக்கருதுதற்கு இடனுண்டுபோல் தோன்றும். அஃதாவது 'இதுவும் தனதுமுதல்' என்றிருத்தல் வேண்டும். ஆனால் 'தமதுமுதல்' என்பது

பிறவுயிர்களையும் உளப்படுத்தி அவ்வுயிர்கட்கும் சேர்ந்தமுதல் எனப் பொருள்பட வைப்பதால் தமது என்பது முதல் என்பதற்கு அடையாய் முதல் என்னும் பொருளே தருவது. இஃது 'யான் எம்மூர் புகுவன், நீ நும்மூர் புகுவை' என்பன போன்ற தொடராகும். ஊர் ஒருவர்க்குரிய தன்று பலர்க்கும் உரியது. பேசுகின்றவன் ஒருவன். எனவே, யான் ஊர்புகுவன் என்பதே தொடரின் முடிபு. எம் என்பது ஊருக்கு அடை.

## எச்சஉம்மை

'இதுவும்' என்பதன்கண் உள்ள உம்மை எச்சவும்மை. எச்சவும்மை இறந்தது தழுவியது எதிரது தழுவியது என இருவகைப்படும். அவற்றுள் இஃது இறந்தது தழுவியது. இந்நூற்பா முதற்கூற்றில் ஐயுணர்வுகள் ஆவியினால் உணரும் எனக்கூறப்பட்டது. அவ் ஐயுணர்வுகளேயன்றி ஆவியும் எனப்பொருள்படுவதால் இறந்தது தழுவியது ஆயிற்று. ஐயுணர்வுகள் - ஐம்பொறிகள்.

## தன்னை

அறிவில்லதும் அறிவுள்ளதும் என உலகு இருவகைப்படும். அவற்றுள் அறிவில்லது *'நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்' முதலாய எழுமாம். அறிவுள்ளது 'புலனுய மைந்தன்'. அறிவுடைமையாகிய ஆள்புலனுய மைந்தன் எனக்கூறப்படும். அறிவுள்ளதாகிய உயிர் தன்னைக் காணுமைக்கு ஒப்பு கண் தன்னைக்காணுமை ஆகும். கண் ஆவியோடு ஒற்றித்து அவ் ஆவி காட்டத் தனக்கு வேருன புலனுகிய பொருள்களைக் காணும். ஆனல் தன்னைக் காணமாட்டாது. ஆனல் முகக்கண்ணுடியின் வழித்தன்னைக் காணும். அதுபோல் ஆவியும் ஆண்டானேடு ஒற்றித்து அவன் காட்டப் புறப்பொருள்களைக் காணும். தன்னைக்காண வேண்டுமாயின் முழுமுதல்வனின் அடிக்கீழ்த்தங்கி ஆண்டும் அவன் காட்டாக் காணும். †'காட்டுவித்தால் ஆரொருவர் காணு தாரே' என்னும் திருமுறையான் உணர்க. இதுபோல் ஆண்டவன் ஆவிகளைத் தன்னேடியைத்துத் தன்னையும் அவ் ஆவியையும் உணர்த்த அவைகள் காணும். இவ் அரும்பேருண்மை வரும் பட்டினத்தடிகள் திருப்பாட்டான் உணர்க.

"மேவிய புன்மயிர்த் தொகையோ அம்மயிர்"
........... ..............................
உரு. புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த
திருவிடை மருத பொருவிடைப் பாக
மங்கை பங்க கங்கைநா யகநின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித் தூய
௩0. ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெரும் தன்மையும் கண்டேன் காண்டலும்
என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலை அனைத்தையும் கண்டேன் ‡ என்னே
நின்னைக் காணு மாந்தர்
௩ரு. தன்னையும் காணுத் தன்மை யோரே."

—கக. திருவிடை. கங.

* 'நிலம்நீர்'—ரு. அ. திருதோள். † 'ஆட்டுவித்தால்' சு. சுரு-ங. (பக்கம் உஎங.) ‡ 'ஞானி புவி' க0. ரு-கசஉசு.

கண்தன்னைக் கண்ணாடி யிற்காணும் ஆங்காவி
தண்ணிறையிற் காணும்தன் னை.

'தன்னை' என்பது இரட்டுற மொழிதலால் தன்னையும், தன் தலைவனையும் உணராது என்பது பெறப்படும். தன்னை என்ற பொழுது ஐயுருபு ஏற்ற பெயர். 'ஐ' இரண்டாம் வேற்றுமை உருபு. தன் தலைவனை என்ற பொழுது 'ஐ' பெயர்ச்சொல்லாய்த் தலைவனைக் குறிக்கும். ஐ = தலைவன். தன் + ஐ = தன்னை.

'மன்னுசிவன்..............இன்று.'

## முதல்வன் நுகரான்

ஆவி புலன்களோடு உடனாய்நின்று அப்புலன்களைக் கருவியாகக் கொண்டு அறிவித்து அறியும். அங்ஙனம் அறியுங்கால் கருவிகள் அப்புலனைக் கொள்ளும். ஆனால், அப்புலன்களோடு கூடமாட்டா. கூடுவது ஆவியே. கொள்ளுவது ஈண்டு அறிதன்மேற்று. கூடுவது ஈண்டு நுகர்வதன்மேற்று. எடுத்துக்காட்டாகப் பாற்கலன் பாலைக்கொள்ளும். ஆனால் பாலைப் பருகாது. உரியவர்களே பாலைப் பருகுவர். பால் பருகுவார்க்குப் பல்லாற்றானும் துணைநிற்கும் பண்பினரும் அப்பாலினைப் பருகார். மேலும் நோய்க்கு வேண்டும மருந்தினை மருந்துக்கலம் கொள்ளும்; கூடாது. 'மருந்துழைச் செல்வான்' முதலிய துணைநிற்கும் பண்பினரும் கூடார். நோயாளியே கூடுவன். மருத்துவன் நோயாளிக்கு மருந்தினைக்காட்டிக் காணபன். மருத்துவனது காட்டற்பயனும் காணும் பயனும் ஆகிய இரண்டும் நோயாளிக்கே. கற்பிப்பார் கற்பார்க்குச் சொல்லிச் சொல்லுவித்தும், எழுதி எழுதுவித்தும் கற்பிப்பர். ஆயின் கூறிய இருவகைப்பயனும் கற்பார்க்கே. இவைபோல் முதல்வன் உடனாய் நின்று விளக்கித் துணைசெய்வன்; பயன் ஆவிக்கே. விளக்குப் பொருள்களுடனும் கண்களுடனும் விரவிக் காட்டிக் காண்பதுபோல் அமையும் எனினும் பயன் ஆவிக்கே. பொறிபுலன் ஆவிக்குக் கருவி. முதல்வன் ஆவிக்குக் கருவியன்று. முதல்வன் ஆவிக்குத் துணை. எனவே கருவியால் வரும் பயன் கருத்தாவுக்கேயாம். துணையால் வரும்பயன் துய்ப்போனுக்கேயாம். அந்த முறையிலும் நுகர்வு ஆவிக்கே. முதல்வனுக்கு அன்று. முதல்வன் ஆவிக்குத் துணையே அன்றிக் கருவி அல்லன். பெரியாரைத் துணைக்கோடலால் வரும்பயன் கொள்வார்க்கே அன்றி அப்பெரியார்க்கு அன்று. அவ் உண்மை வரும் திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டுக்களான் உணர்க:

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானுங் கெடும்."

"முதலிலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்
சார்பிலார்க்கு இல்லை நிலை." —திருக்குறள், ௪௪௮, ௪௪௯.

ஒங்கு கருவி துணை உண்டாம் நுகர்வினுக்கு
ஈங்காம் நுகாவு துணைக் கின்று.

## முதல்வன் துணையே

விழுமிய முழுமுதல்வன் அனைத்துயிர்க்கும் 'அன்னையும் அத்தனுமாய்'* விளங்குகின்ற 'அழல்வண்ணன்' ஆவன். அவன் தோன்றாத்

* 'முன்னே.' ௪. ௧௧உ-௫.

துணையாய் நின்றருள்வன். அங்ஙனம் நிற்கும்நிலை அனைத்தையும் முறைப் பெயர் மருங்கில் அப்பர்பெருமான் மொழிந்தருளினார். அஃதாவது, ஈன்றாள், எந்தை, உடன்தோன்றினர் என மூன்றும். இம்மூன்று மல்லாத முறைப்பெயர் இருப்பதாகத் தோன்றவில்லை. ஈன்றாள் எந்தை என்னும் முறைப்பெயரால் மக்கள் முறைப்பெயர் தானே தோன்றும். இனி உடன்தோன்றினர் என்னும் முறையைக் கொண்டுகூட்டுவதால் விரிந்த முறைப்பெயர் அனைத்தும் பெறப்படும். எங்ஙனம் எனிற் கூறுதும்.

அன்னையோடு உடன்தோன்றினர் இருவருள் ஆண்பாலார் அம்மான் எனவும், பெண்பாலார் சிற்றன்னை எனவும் அழைக்கப்பெறுவர். அத்த னோடு உடன்தோன்றினர் ஆண்பாலார் சிற்றத்தன்—சிற்றப்பன் எனவும், பெண்பாலார் அத்தை எனவும் அழைக்கப்பெறுவர். தன்னுடன் பிறந்தார முறையே தமையன் தம்பி, தமக்கை தங்கை என அழைக்கப்பெறுவர். இப்படியே மணம்முடிந்த இடத்துத் தலைவனுக்குத் தாய்தந்தையர் உடன் பிறந்தார், தலைவிக்குத் தாய்தந்தையார் உடன்பிறந்தார் முறையே மாமி மாமன், மைத்துனன் மைத்துனி என அழைக்கப்பெறுவர். இவையல்லாது வேறு முறையில்லை. பெயரன் பெயர்த்தி என்று இரண்டு முறைகள் உள. அவை ஏனைய முறைப்பெயர்போல் முறைப்பெயர் ஆகா. என்னை? அவர்தம் பெயரைக் காதலால் தம் மக்கட்கு இட்டு வழங்கினமைபற்றி ஆயதென்க. மாமன் மாமி என்னும் சொற்கள் நிலைத்த பெருமைத் திரு வுடையார் என்னும் பொருள் பயப்பன. மா - பெருமை. மன - நிலைப்பு. மாமன்னன், மாமன்னி என்னும் சொற்கள் மாமன மாமி என மருவி வழங்குகின்றன. மக்களைப்பெற்ற காலத்து மன்னன் எனவும், மக்களை மணப்பித்த காலத்து மாமன்னன் எனவும் பெயர் வழங்கலாயின. மன்னன் தன்கீழ் வாழ்வாரை ஆள்வோன். மாமன்னன் தன்கீழ வாழ்வார்க்குத் தொடர்புபடுத்திய பிறரையும் சேர்த்து ஆள்வோன். இம்முறைமை உலக வழக்கில் குடும்ப வீட்டைப் பெரிய வீடு என்று வழங்குவதாலும் காண்க.

இவ் உண்மை சிலப்பதிகாரத்துக் 'கற்புக் கடம்பூண்ட பொற்புடைத் தெய்வமாம்' கண்ணகியாரை விருந்து புறந்தரல் முதலிய திருந்திய வாழ்வு நிகழ்த்துதற்பொருட்டுத் தனிக்குடி புகுத்தியவர் கோவலன் அருமைத் தாயராவர். ஆசிரியர் இளங்கோவடிகள் அவ் அம்மையாரைச் சுட்டுங்கால் 'பேரிற்கிழத்தி' எனகின்றனர். பேரிற்கிழத்தி எனினும் பேரியற்கிழத்தியெனினும் ஒன்றே. அதுதொடர் வருமாறு:

"வாரொலி கூந்தலைப் பேரியற் கிழத்தி
அ௫. மறப்பரும் கேண்மையோ டறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண
உரிமைச் சுறறமோ டொருதனி புணர்க்க."

—சிலப்பதி. மனை. அ௪-அ௯.

துணை இருவகைப்படும் கருவித்துணையும், கருத்தாத்துணையுமென. இவற்றுள் அறிவில்லன அனைத்தும் கருவி எனப்படும். அறிவுள்ளன கருத்தா எனப்படும். கருத்தாவும் இருவகைப்படும். அவை ஏவுதற் கருத்தா இயற்றுதற் கருத்தா என்பன. முழுமுதல்வன் யாண்டும் ஏவுதற் கருத்தாவே. இயற்றுதற்கருத்தா அல்லன்.

முறையினை விளக்கி அருளும் ஆளுடைய அரசர் திருப்பாட்டு வருமாறு :

"ஈன்றாளு மாய்எனக் கெந்தையு மாய்உடன் தோன்றினராய்
மூன்றாய் உலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றான் இமையவர்க் கன்பன் திருப்பா திரிப்புலியூர்
தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்அடி யோங்களுக்கே."
—ச. கூச - க.

"அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூ ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய்நீ
துணையாயென் நெஞ்சம் துறப்பிப் பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத் தும்நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே." —சு. கூ௫ - க.

## அறிவன்நூல் அளவை

அறிவன்நூல் அளவையை உரையளவை எனவும், ஆகம அளவை எனவும் கூறுவர். வழிஅளவையான் வாய்மை ஏற்பித்துப் பொருளுண்மை வலியுறுத்துவதே மெய்கண்ட நாயனார் திருவுள்ளம். அங்ஙனம் அறிவுறுத்தியும் அருளினர். அவ்வழியளவைக்கு முரணின்றி அரண் செய்வதாய உரையளவையையும் ஓதி அருளினர். அதுவே "மறையின் இயல் மறந்தாய்" என்பது. 'மறை' என்பது 'நிறைமொழி மாந்தர் ஆணை மொழியே.' இதன் விரிவு பக்கம் தொண்ணூற்றொன்றிற் காண்க.

## திருமுன்

திருமுன் என்பது சன்னிதி எனவும் கூறப்படும். திருமுன் எனினும் திருமுகம் எனினும் ஒன்றே. திருமுகம் நேர்முகம் எனவும் உன்முகம் எனவும் இருவகைப்படும். நேர்முகம் என்பது முகமுடையார் எவ்வகை முயற்சியும் உளப்பாடும் இன்றி வாளா இருப்பப் பொருள்கள் தாமே நேர்பட்டு நெருங்கும் நீர்மையாகும். உன்முகம் என்பது முகமுடையாரின் முயற்சியும் உளப்பாடும் ஒருங்கியைவதாகும். நேர்முகம் என்பது நேர்பட இருக்கும் முகம். அது மரநிழலையும் ஊருணி நீரையும் ஒப்பதாகும். உன்முகம் என்பது உன்னித்து நோக்கும் முகம். உன் என்பது உன்னித்தல் என்னும் தொழிற் பெயரின் முதனிலை. உன்னித்தல் உளப்படுதல். முகம் நோக்கம். இஃது ஈன்றார் மக்கள் நலத்தினும், ஆசிரியர் மாணவர் கற்பினும், காதலர் குடும்ப வாழ்வினும், உடையவர் வினைவலார் முன்னேற்றத்தினும், ஆட்சித் தலைவர் அனைவர்களின் மாட்சியினும், நீத்தார் அடியவர்களின் சிறப்பினும் முயற்சியும் உளப்பாடும் கொண்டொழுகுவதை யொக்கும். இதனைத் திருவுள்ளம் எனவும், நோக்கல் நோக்கம் எனவும் கூறுப. இவ் உண்மை திருவள்ளுவ நாயனார் அருளிய, வரும் திருப்பாட்டானும் உணர்க :

"வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி." —திருக்குறள். ருசஉ.

இங்ஙனமே தொல்காப்பிய முனிவரனார் அருளுவது வருமாறு :

> "இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம் அவ்
> இரண்டன் மருங்கின் ஏதுவும் ஆகும்." —தொல். சொல்-௯௫.

> உன்னிநோக் கும்முகமே உன்முகமாம் நோக்கல்நோக்
> கென்பகருத் தாம் இறைக்கு ஈது.

"காந்தங் கண்ட பசாசத் தவையே என்று சன்னிதியை எடுத்துக் கூறியது ஒருபுடையொத்தல் பற்றியே பிறிதன்றென்பது கருத்து."

(பேருரை.)

## மூப்பண்பு

முழுமுதல்வனுக்குரிய எண்பெரும் பண்புகளுள் அம்முதல்வன் ஒன்றாய் வேறாய் உடனாய் ஆவிகளுடன் என்ஞான்றும் பிரிப்பின்றி நிற்கும் பெற்றியினும் முதன்மைப்பண்பு மூன்றும் கிளந்தெடுத்து ஓதியருளினர். அப்பண்புகள் முறையே பேரின்பு, முற்றுணர்வு, தூயதன்மை என்ப.

இறவா இன்பத்து அழிவில் வீடு பேரின்பமாகலின், அதனை அளித்தருளும் செம்பொருட் சிவனை 'மன்னுசிவன்' என்றருளினர். மன்னுதல் நிலைபெறுதல். இறவாமை என்பதும் இதுவே. இவ் உண்மை சேக்கிழார் அடிகள், காரைக்கால் அம்மையார் கண்ணுதற் கடவுளிடத்து 'இறவாத இன்ப அன்பு' வேண்டியருளினர் என அருளுவது காண்க :

> "இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
> பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
> மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
> அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க என்றார்."
>
> —கஉ. காரைக். ௬0.

சிவபெருமான் 'பிறவா யாக்கைப் பெரியோனாய்' இருத்தலின், இறவாமையும் உடையன். இறவாமையே நிலைபேறுடைமை. அப்பொருள் தோன்ற 'மன்' என்னும் அடைபுணர்த்து 'மன்னுசிவன்' என்றருளினர். ஆவிகளை இவ்வழிப்படுத்திக் கொண்டுவருவதே ஆட்டுதலாகும். 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' என்பதும் அது. அத்திருப்பாட்டு வருமாறு :

> "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா தாரே
> அடக்குவித்தால் ஆரொருவர் அடங்கா தாரே
> ஓட்டுவித்தால் ஆரொருவர் ஓடா தாரே
> உருகுவித்தால் ஆரொருவர் உருகா தாரே
> பாட்டுவித்தால் ஆரொருவர் பாடா தாரே
> பணிவித்தால் ஆரொருவர் பணியா தாரே
> காட்டுவித்தால் ஆரொருவர் காணா தாரே
> காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே."
>
> —௬. ௯௫ - ௫.

ஆட்டுதல் என்பது புடைபெயரச் செய்தல். அதுவே 'சேட்டித்தல்' என ஈண்டு ஓதியருளப்பெற்றது.

இனி, முற்றுணர்வு உடையன் ஆதலின் 'ஆலமர் செல்வனாய் ஆறறி அந்தணர்க்கு அருமறை பகர்ந்'தருளினன். அதனால் அந்தணன் எனவும் அழைக்கப்படுவன். அந்தணன்-கற்பிப்போன். இவ்வுண்மை ஆளுடைய பிள்ளையார் அருள்மொழியானும் காண்க:

"சுழிந்த கங்கை தோய்ந்த திங்கள் தொல்அரா நல்லிதழி
சழிந்த சென்னிச் சைவவேடம் தான்நினைந் தைம்புலனும்
அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே."

—க. ருஉ - சு.

ஆகவே **'சொன்னசிவன்'** என்பதன்கண் **'சொன்ன'** என்னும் அடைமொழியால் தோற்றுவித்தருளினர். சொன்ன - அருமறை பகர்ந்த. மறையால் புகழப்பட்ட சிவன் என்பதும் இதனுள் அடங்கும்.

இனித், 'தூயதன்மையன்' ஆதலின் தன்பாலுள்ள பேரின்பத்தையும் அதன் அறிகுறி முற்கொடையாம் சிற்றின்பத்தையும் ஆவிகள் பொருட்டே தான் நுகர எண்ணவும் செய்யாது தானே தாங்கி வலிய ஆட்கொண்டு ஊட்டியருள்கின்றனன். இவ் உண்மை மகப்பெற்றார் தம் மக்களையும் பிறர் ஈன்ற மக்களையும் ஒரு பெரும் நாளால் திருமணம் புணர்த்து ஐம்புல இன்பமும் ஆர நுகரத் துணைசெய்து அகமகிழ்வும் முகமலர்ச்சியும் மிகக்கொண்டு இன்புற்று இனிதுவாழ்வதால் நன்கு புலனாம். அவர்தம் தூய்மையால் காதலா கருதும் அகஇன்பத்தைக் கனவினும் எண்ணார். 'உற்றார்க்குரியர் பொற்றொடி மகளிர்' என்னும் நூன்முறையால் அவர்கள் தம் மகளாரே எனினும் பிறர் மனையாரே ஆவர். அக்குறிப்புந் தோன்றவே தம் மனையாளை ஒழித்துப் பிறர்க் குரியாளை விரும்பாதாரையே 'நலக்குரியார்' என நவின்றருளினர் நம் நாயனார். நலக்குரியார்—தூயார். அத்திருப்பாட்டு வருமாறு:

"நலக்குரியார் யார்எனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார்." —திருக்குறள்-கசசு

காதலர் துய்ப்பின்பம் கண்ணார் மகப்பெற்றார்
ஓதிறைஎண் ணாநுகாவை ஒத்து.

கண்ணார் - எண்ணார்; கருதார்.

மேலும் ஆவியின்பொருட்டே ஆக்கி அளிக்கும் ஆண்டான் அவற்றை எண்ணுமை கூறவும் வேண்டுமோ? அவன் மெய் அடியார்கள் அவனுக்கு என ஆக்கிய பொருள்களை நுகர்வு இன்றி நீர் பருகி நுணங்கி வாடினும் நுகரார் என்பது காணின்.

ஊட்டும் ஒண்மையால் **தாயனார்** எனப் பெயர் ஓங்கிய 'அரிவாட் டாய நாயனார்' செஞ்சாலி அரிசி செம்பொருட்கு என அமைத்துக் கூலி பெறும் கருநெல்லரிசியைமட்டும் தாம் உண்டு செந்நெல்லரிசியை ஆண்டவனுக்கே ஊட்டி உவந்தனர். கூலி எல்லாம் செந்நெல் அரிசியாகவே புனலுணவாக மனநிறைவோடு முதல்வனுக்கு அவ் அரிசியமுதினை முற்றும் ஊட்டி அருந்தொண்டாற்றினர். அத்திருப்பாட்டு வருமாறு:

"நண்ணிய வயல்கள் எல்லாம் நாடொறும் முன்னம் காண
அண்ணலார் கதிர்ச்செஞ் சாலி ஆக்கிட மகிழ்ந்து சிந்தை
அண்ணலார் அறுத்த கூலி கொண்டிஃது அடியேன் செய்த
புண்ணியம் என்று போத அமுதுசெய் விப்பா ராஞர்."

—கஉ. அரிவாட். கக.

கண்ணப்ப நாயனார் நீரும் பருகாது சுவைகண்டு ஊட்டி உவந்தனர். அத்திருப்பாட்டு வருமாறு :

"ஊனமுது கல்லையுடன் வைத்திதுமுன் னோயினன்றுல்
ஏனமொடு மான்கலைகள் மரைகடமை இவையிற்றில்
ஆனஉறுப் பிறைச்சியமு தடியேனும் சுவைகண்டேன்
தேனுமுடன் கலந்ததிது தித்திக்கும் எனமொழிந்தார்."

—கஉ. கண்ணப்பர்-கரு0.

ஆட்டுதல் காட்டுதல் ஊட்டுதல் ஆம்அடையால்
நாட்டும்மன் சொன்ன எண்ணுன்.

இம் முப்பண்பும் வாய்ந்த முழுமுதல்வனை அப்பண்புகள் தோன்ற வழுத்திய திருப்பாட்டுக்கள் வருமாறு :

"உலகெ லாந்தன தொருசிறு கூற்றினுள் அமைய
அலகி லாற்றலான் நிறைந்தவன் எனஅருள் நூலோர்
குலவி ஏத்துவோன் எவனவன் உமையொரு கூற்றின்
அலர்க றைக்களச் சிவபிரான் அடியிணை போற்றி."

"செவியுற வாங்கி மோகத் திண்படை சிலையிற் பூட்டும்
கவிகைவேள் மடியச் சற்றே கறுத்தியோ குறையும் பெம்மான்
குவிதழை நிறையப் பூத்த கோழ்ணர்ப் பதுமச் செங்கேழ்
அவிர்தரு விழிதீக் கென்றன் வினையிலக் காகு மாலோ."

*"திருமாலிந் திரன்பிரமன் உபமன்னியன்
தபனன்நந்தி செவ்வேள் ஆதி
தருமமுது குரவருக்கும் தனதருளால்
ஆசிரியத் தலைமை நல்கி
வரும்எவர்க்கும் முதற்குருவாய்* மெய்ஞ்ஞான
முத்திரைக்கைம் மலரும் வாய்ந்த
உருஅழகும் குறுநகையும் காட்டியருள்
தருஞ்சிவனை உளத்தில் வைப்பாம்."

—சிவதத்துவ விவேக வணக்கம்.

## இலக்கணம்

'மறையின் இயல்' என்பது மறையின் இயலும் பொருள் என்று பொருள் படுவதால் இஃது ஏற்றுரை. ஏற்றுரை - உபசாரம்.

'மறையின் இயல்' என்பது 'மறையின் இயலும்' என்றிருத்தல் வேண்டும். அங்ஙனமிருப்பதற்குரிய 'உம்மை' திரிபால் தொக்கது. இத்தொகை கைக்குட்டை தோளாடையாகத் தோன்றுவது போன்றது. இவ் உம்மை இறந்தது தழீஇய எச்சம். இறந்தது கருதலளவை.

* 'ஆரண' சித்தியார். க. உ—சசு.

'மறந்தாய்' வினைமுற்று அன்று. விளியுருபு ஏற்றபெயர். விளியுருபு 'ஆய்'. பெயர் 'மறந்தை'. இவற்றிற்கு விதி வருமாறு :

"அவைதாம்
இ. உ. ஐ. ஓ என்னும் இறுதி
அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே."

"அவற்றுள்
இ ஈ யாகும் ஐ ஆய் ஆகும்."
—தொல். சொல் - ௧௨0, ௧௨௧.

'இன்று' என்பது 'அசத்தெல்லாம்' இன்று என இயைந்தது. இஃது பன்மை ஒருமை மயக்கன்று. எல்லாம் என்பது பன்மையடங்கிய ஒருமைத் தொகுப்பாம். இதனைத் தொகுப்பொருமை என்னலாம். தொகுப்பொருமையே சாதி (பக்கம். ௩௩௫.) ஒருமை. இது, கண்ணெல் லாம் சிவந்தது என்பதுபோன்றாகும்.

'அவன் எதிர்' என்பது 'தனது சன்னிதி' என்னும் பொருள் தரு வது. இது வெண்பாவில் இன்றெனினும் இன்றியமையாது வேண்டப் படுதலால் 'அவாய் நிலையான்' வந்தது என்க.

'வெய்யோன்...............காண்.'

## உடன்ஆதல்

ஆவி முதல்வனின் வேறாய் விளக்குதலும் இன்றி அவனாய் ஒழிதலும் இன்றி உடனாய் அடங்கிநின்று உணரும். அடக்கம் என்பது விழுமி யோரால் விழுப்பயன் எய்த விழையும் மெய்அன்பர்கள் இன்றியமையாது மேற்கொண்டு ஒழுகவேண்டிய மெய்ப்பொருள் ஆகும். இவ்வுண்மை திருவள்ளுவநாயனார் அருளிய திருப்பாட்டானும், திருநாவுக்கரசுநாயனார் அருளிய திருப்பாட்டானும் உணரலாம். அவை வருமாறு :

"நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு." —திருக்குறள், ௭௧௫.

உடன் கிளத்தல்—முதுவர் பேசிமுடிந்த உடன்கிளத்சல்.

"துன்பம் நும்மைத் தொழாத நாள்கள் என்பாரும்
இன்பம் நும்மை ஏத்தும் நாள்கள் என்பாரும்
நும்பின் எம்மை நுழையப் பணியே என்பாரும்
அன்பன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்."
—௪. ௨௧ - ௬.

இவ்வுண்மை வரும் மெய்கண்ட நூல் திருமொழியாலும் காண்க :

"உற்கைதரும் பொற்கை உடையவர்போல் உண்மைப்பின்
நிற்கை அருளார் நிலை." —திருவருட். உயிர் - ௮.

மேலும் இவ்வுண்மை அருணகிரியார் அருண்மொழியாலும் காண்க :

"ஆனா அமுதே அயில்வேல் அரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியஎன் னைவிழுங் கிவெறும்
தானாய் நிலைநின் றதுதற் பரமே." —கந்தர். ௨௮.

## ஒப்பு

ஞாயிறு - முதல்வன். நாண்மீன் - ஆவி. நாண்மீன்களும் தனித்தனி ஞாயிறு எனவே கருதப்படும். அவற்றிற்குத் தனித்தனி ஒளிஉண்டு எனக் கூறப்படும். அங்ஙனம் இருப்பினும் ஒருபுடை ஒப்பாகக் கூறியருளிய தாகக் கொள்க. ஞாயிறு விளங்கும் பகற்காலத்து நாண்மீன்களின் ஒளி ஞாயிற்றின் விளக்கத்தில் அடங்கி அஞ்ஞாயிறாகவே விளங்கி நிற்கும். அதுபோலவே வீடுபேற்றின்கண் ஆவியின் சிற்றறிவும் முதல்வனின் பேரறிவின்கண் அடங்கி அம்முதல்வனாகவே விளங்கும். இதுவே 'நும்பின் எம்மை நுழையப் பணியே' (உஎசு.) என்பது. உலகின்கண் முதல்வன் ஆவியின்பின் மறைந்து நின்று அவ்ஆவியோடியைந்தியக்கி அதனை விளங்கவைப்பன். இஃது இராக்காலத்து ஞாயிறு மறைந்து பின் நிற்றலான் நாண்மீன் வெளிப்பட்டு விளக்கந்தருவதை யொக்கும்.

நுணுகி நோக்குங்கால் "நாண்மீன் ஒளி எல்லாம் ஞாயிற்றினுடைய ஒளியே" என்பது ஞாயிறு பின்நிற்பதால் விளங்கும் ஒளியே என்க. பின்நிற்றலும் துணையே ஆம். நாண்மீன்கள் இராக்காலத்தில் வெளிப் படுவது போன்று ஆவியும் அறியாமையாற் கட்டுப்பட்டு ஆணவமுனைத்து யான் எனதென்னும் செருக்கோடு விளங்கும். கட்டுநிலை—இருள்நிலை. நாண்மீன் விளங்காது இருப்பது இருள்நீங்கிய பகற்காலமாதலின் ஆவி யும் மலம்நீங்கி முதல்வனுடன் உடனாய் அடங்கி நிற்கும் காலம் ஒளிக் காலம். இதுவே மெய்உணர்வுப் பொழுது. அவன்பின் நுழையும் அருட் பொழுது.

> ஆண்டான்முன் பின்னைல் அடங்கல் வெளிப்பாடு
> பூண்டநாண் மீன்ஆவி போன்று.

## இலக்கணம்

உவமை அடை: உவமை 'நாண்மீன்' அடை: 'அடங்கி, விளங்காது, ஆகாது' என்ப. இவ்அடைகளைப் பொருளாகிய உயிருடன் கூட்டி உயிர் முதல்வனில் 'அடங்கி விளங்காது முதல்வனும் ஆகாது உடனாய் நிற்கும்' எனக் கொள்க.

பொருள்வினை: பொருள் 'உயிர்.' வினை: 'மன்னுதல்.' மன்னுதல்—நிலைபெறுதல்; விளங்குதல். உவமையாகிய நாண்மீனுடன் விளங்குதலைக் கூட்டி விளங்கும் எனக் கொள்க.

'ஐ' சாரியை. இவ் ஐ 'வெய்யோனை' என்பதன்கண் காணப்படுவது.

> 'அருளுண்டாம்......................எய்ந்து.'

## திரிபிலான்

ஆவிகள் புலனுகர்ச்சிக்கண் தாமே உணரமாட்டா. முதல்வன் திரு வருளாகிய ஆணை இயைந்தியக்குவதாகிய திருவுள்ளங் கொண்டுணர்த்த உணரும். அங்ஙனமாயின் ஆவிகள் எல்லாம் ஒன்றுபோல் உணர வேண்டும். அங்ஙனம் உணராமைக்குக் காரணம் ஆணை உணர்த்தும் வேறுபாடு என்றே பெறப்படும். பெறப்படவே முதல்வனும் வேறு பாடுற்றுத் திரிபெய்துவன். எய்தவே, அவன் திரிபில்லான் என்பதனோடு மாறுபடும். திரிபில்லான் - நிருவிகாரி. "விகாரமாவது செயற்கைக்

குணத்தோடு சமவேதித்தல். செயற்கையாவது முன்னின்ற நிலையின் வேறுபடுதல் (பேருரை)."

இவ் வேறுபாட்டை ஒல்காப் புகழ்மைத் தொல்காப்பியனார் 'அசைவு' என்பர். "அசைவென்பது, பண்டை நிலைமை கெட்டு வேறொருவாறாகி வருந்துதல்."

"இளிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே."
—தொல். பொருள். உ௫௩.

ஞாயிறு தன் ஒளியோடு பிரிப்பின்றி நின்று ஆவிகளின் கண்ணுக்குப் பல்வேறு வகைப்படக் காணும்தொழில் நிகழும்படி செய்யும். அங்ஙனம் செய்யினும் ஞாயிறு திரிபெய்தல் இன்று. ஆவிகளின் காண்டல் தொழில் பல வேறுவகைப்பட நிகழ்வதற்குக் காரணம், காலம், இடம், பொருள், உடல் உளம் இவற்றின் உரம், உணர்வுத்திண்மை, சூழ்வு முதலியன என்க.

அதுபோல் முதல்வனும் தன் அறிவாற்றலாகிய ஆணை என்னும் திருவருளோடு பிரிப்பின்றி நின்று அத்திருவருளின் அன்பாம் திருவுள்ளத்தால் உயிர்களின் மலம் மாயை கன்மங்களின் வேறுபாட்டுக்குத் தக்கவாறு உணர்த்துதல் வேறுபாடு நிகழும். அதனால் முதல்வன் என்றும் ஒன்றுபோல் திரிபிலான் ஆவன்.

### அருள்

"அருளாவது உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவம் அளித்தற்கண் உளதாகிய இரக்கம் (பேருரை)." இவ் உண்மை திருமூல நாயனார் அருளிய திருப்பாட்டுக்களான் உணர்க. அவை வருமாறு:

"அத்தன் அருளின் விளையாட் டிடம்சடம்
சித்தோ டசித்தறத் தெளிவித்த சீவனைச்
சுத்தனும் ஆக்கித் துடைத்து மலந்தினைச்
சத்துடன் ஐங்கரு மத்திடும் தன்மையே."

"ஈனப் பிறவியில் இட்டது மீட்டேட்டித்
தானத்துள் இட்டுத் தனையூட்டித் தாழ்த்தலும்
ஞானத்தின் மீட்டலும் நாட்டலும் வீடுற்று
மோனத்துள் வைத்தலும் முத்தன்தன் செய்கையே."
—௧0. ௭. உ0௬உ, உ0௬௧.

### இலக்கணம்

'உம்மை' எதிரது தழீஇயது. இவ் உண்மை 'அருளும்' என்பதன்கண் காணப்படுவது. 'அவனன்றே இல்லை' என்னும் தொடரின்கண் உள்ள அவன் என்னும் சொல்லைத் தழுவியது. அச்சொல் அடுத்த வரியில் காணப்படுவது. உம்மை சேர்க்கப்பட்டால் 'அவனும்' என்றாகும். அதன்பொருள் 'முதல்வனும்' என்றாகும்.

'இன்றி' என்னும் வினைஎச்சம் 'இன்று' எனக் காணப்படுகிறது. அங்ஙனம் காணப்படுவது செய்யுள் திரிபென்ப. இவ் எச்சம் குறிப்பு வினை எச்சம்.

'அன்றே' அசை. 'அவனன்றே இல்லை' இதன்கண் 'அவனன்றே' என்பதன்கண் காணப்படும் 'அன்றே' ஆகும்.

**கருத்து**

உயிர்கள்பால் தோன்றும் உடையவன் உதவி.

**முதுமொழி**

மெய்ப்பொருளால் ஐயுணர்வு மேவும் மறையுணரின்
வையப் புணர்வுநிலை வந்துறுமால்—வையமிசை
"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு." —திருக்குறள். ருடு௪.

---

# ஆறும் சூத்திரம்

உணர்உரு அசத்தெனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத்து ஆமென
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.

**எ-து சூ-ம். எ-னின். சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்து தல் நுதலிற்று.**

*எ-து. க-ரை. எ-னின். சூத்திரக்கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

*(**இ-ள்.**) மேல் ஐந்துசூத்திரத்தானுங் கூறிப்போந்த பொருள்களுள் யாது சத்து யாது அசத்து என்னும் ஐயம் நீக்குதற்குச் சத்தினியல்பும் அசத்தினியல்பும் இவையென அவ்விரண்டும் இலக்கணத்தால் தம்முள் மயங்காதவாறு வரைந்துவைத்துணர்த்தி உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யுமுகத்தானே இலக்கண ஒத்துள் கூறுதற்கு எஞ்சிநின்ற பதிப்பொருளதிலக்கணங் கூறுதல் இவ்வாறுஞ் சூத்திரத்தின் கருத்து (எ - று).*

*இதனானே சூத்திர இயைபும் இனிது விளங்கும்.*

*இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: தம்முணர்வின்றமியாகிய முதற்பொருள் அளவைகளான் அறியப்படும் இயல்பிற்றெனின், அங்ஙனம் அறியப்படும் பிரபஞ்சம்போல் அழிபொருளாகிய அசத்தாம்: எவ்வாற்றானும் அறியப்படாத இயல்பிற்றெனின், அங்ஙனமறியப்படாத முயற்கோடுபோலச் சூனியப் பொருளாம்: ஆகலான் இவ்விருபகுதியுமன்றி ஒருவாற்றானறியப்படாமையும் ஒருவாற்றானறியப்படுதலுமாகிய இரண்டு வகையானுஞ் சிவசத்தாமெனக் கூறுவர் மெய்யுணர்வின் நிலைபெற்றுயர்ந்தோர் (எ - று).*

*உணர்உரு எனின் அசத்தென மாறுக. எனினென்பது முன்னருஞ் சென்றியைந்தது.*

*முற்றும்மைகள் தொக்கன.*

*அல்லதென்பது வினையெச்சக் குறிப்புமுற்று. அன்றி ஆமென இயையும்.*

*ஒருவாற்றான் அறியப்படாமை பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமை. ஒருவாற்றான் அறியப்படுதல் சிவஞான*

மொன்றனே அறியப்படுதல். பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமையிற் சிவமாதலும் பதிஞானத்தால் அறியப் படுதலிற் சத்தாதலும் பெறப்படுமென்பார் இரண்டுவகையிற் சிவசத்தாமென இசைக்குமென்றார். சிவசத்தென்னும் இருபெய ரொட்டுப் பண்புத்தொகை வடநூன் முடிபு. சடமாகிய சத்தி னீக்குதற்குச் சிவசத்தென்றார். சிவசத்தென்பது சித்துச் சத் தென்னும்பொருட்டு.

எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கப் பட்டது.

இருதிறனுமன்றி இரண்டுவகையானுஞ் சித்தாதலுஞ் சத்தாதலு முடையனாய் நிற்றல் முதல்வனுக் கிலக்கணமென இலக்கணமும் இதனுட் போந்தவாறுணர்க.

முதல்வனுக்குப் பொதுவியல்பு மேற்புனருற்பவமுணர்த்து முகத்தாற் கூறிப் போந்தமையின் இது சொரூபலக்கண மெனப்படுஞ் சிறப்பிலக்கணமெனக் கொள்க. அற்றாகலினன்றே இதனை இலக்கணவோத்துள் முதற்கண்கூறாது உண்மையைச் சாரவைத்து இறுதிக்கண்கூறியதூஉமென்க. இன்னும் முதல்வ னுக்குளவாகிய சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இவ்விரண்டனு ளடங்கும். அஃதறிந் தடக்கிக்கொள்க. * "தன்னுலே தனை யறிந்தாற் றன்னையுந் தானே காணும்" எ-ம். † "உன்னரிய திருவருளை யொழியமல முளதென்றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" எ-ம். ‡ "மாயைமா மாயை மாயா வரு மிரு வினையின் வாய்மை—ஆயஆர் உயிரின் மேவும் அருளொனில் ஒளியாய் நிற்கும்" எ-ம். ஓதியவாற்றல் ஏனைப்பசுபாசங்க ளுஞ் சிறப்பியல்புபற்றி யுணர்தல் சிவஞானத்தானன்றி அமையா தாயினும் § "தீபமெனத் தெரிந்தாங்—கொருவியான் மாவி னுண்மை யுணர்ந்தவர் தமையுணர்ந்தோர்— தருமிது பசு ஞானம்" எ-ம். $ "இவைகீழ் நாடலாலே—காதலினு ஞன் பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானம்" எ-ம். பொது வியல்புபற்றி ஓதுதலானும் யானிதனை யறிந்தேன் அறிகின் றிலேனென்றறியும் பாசவுணர்விற்கு அவற்றது பொதுவியல்பு விடயமாதல் கண்கூடாகப் பெறப்படுதலானும், அவை ஒருவாற்று னுணருருவாதலுமுடைமையிற் சிவசத்தாவான் செல்லாமை

* சிவப்பிரகாசம், உண்மை. உஉ. தன்னறிவதனு.
† ,, பொது. உச. அன்னியமானவை.
‡ சிவப்பிரகாசம் உண்மை. உ0. மாயைமாமாயை.
§ சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். உ. கருவியாமனமு.
$ ,, ஒன்பதாஞ்சூத்திரம். உ. வேதசாத்திர.

அறிக. சற்காரிய வாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலையன்மையான் அப் பசுபாசங்கள் அங்ஙனமறியப்படும் பொதுவியல்புபற்றி அசத்தெனப்படுமாயினுஞ் சிறப்பியல்புபற்றி அசத்தாதல் செல்லாமையிற் சிறப்பியல்பு நோக்கும்வழி அவை சத்தாதற் கிழுக்கின்மையுமறிக. இங்ஙனஞ் செவ்வனே இறுக்க அறியாதார் அபாவத்தினியல்பாவது பாவத்திற்கு மறுதலைப்பொருள்போலுமென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி மயங்கி எல்லாப்பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுமைப்பொருட்டு ஈண்டுச் சத்து அசத்தெனப்பட்டனவும் சித்து அசித்தென்னும் பொருளவாமெனவும், சுத்தம் அசுத்தமென்னும் பொருளவாமெனவும் உரைத்திடர்ப்படுவர். காரியப்பிரபஞ்சம் ஏனைப் பசுபாசங்கள் போலன்றி இருவகையியல்பானுங் காட்சிப்புலனாய் இத்துணைப் பொழுது நிற்குமென நம்மனோரால் அறிய வாராது நிலைபெறுவதுபோலத்தோன்றி விரையக்கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமைபற்றி அதுவே ஈண்டு உணர்உரு அசத்தென்றெடுத்துக் கொள்ளப்பட்டது. அசத்தெனவே அசித்தென்பதுந் தானே போதரும்.

இதனுள் உணர்உரு அசத்தெனின் உணராதுஇன்மையின் என்றது ஓரதிகரணம்; இருதிறன் அல்லது சிவசத்தாம் என இரண்டுவகையின் இசைக்குமன் உலகே என்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

## விளக்கம்

### தோற்றுவாய்

ஆறாம் நூற்பா பொதுப்பாலாகிய பொதுஅதிகாரத்து இறுதியில் அமைந்துள்ளது. இஃது உண்மைப்பாலாகிய உண்மை அதிகாரத்திற்குத் தோற்றுவாயாகும். இதன்கண் நிலைபேறுடைய முழுமுதல்வனையும், நிலைபேறில்லாத மூவா மாயையையும் வரைசெய்து உணர்த்தப்படுகின்றன. அதனால் உண்மைப்பாலுக்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது காண்க. நிலைபேறுடைமை என்றும் ஒருபடித்தாந்தன்மை. நிலைபேறின்மை தோன்றி ஒடுங்குந்தன்மை. தோன்றி ஒடுங்குதல் நுண்மையாகிய காரணத்தினின்றும் அறிவுடைப் பொருளால் பருமையாகிய காரியமாகத் தோன்றுதல்; பின் தோன்றியவாறே பருமையாகிய காரியம் நுண்மையாகிக் காரணத்திற்சென்று ஒடுங்குதல். இத் தோற்ற ஒடுக்கம் அறிவில் பொருளாகிய மாயைக்கே உண்டு. சிற்றறிவுப் பொருளாகிய ஆவிக்கும், பேரறிவுப் பொருளாகிய ஆண்டானுக்கும் தோற்ற ஒடுக்கம் இல்லை. ஆவிக்குப் பிறப்பு இறப்பாகிய தோற்ற ஒடுக்கம் கூறுவது சார்பினாலே ஆம். ஆவிக்குச் சார்பு உடல்.

இஃது, 'ஈன்றாள், எந்தை, உடன்தோன்றினர், மாமன், மாமி,' என வழங்கிவரும் முறைப்பெயர்களும், ஆசான், மாணாக்கன், வினைமுதல்வன்,

வினைவலான், படைத்தலைவன், படை, அலுவலாளர், அமைச்சர், ஆட்சித் தலைவர், குடும்பத்தலைவர், சான்றவர், அடியார் என்று வழங்கிவரும் அனைத்தும் சார்பினால் உள்ளனவே ஆம். ஆவிக்கு ஆண்டான்பால் உள்ள துன்பில் இன்பினைத் துய்க்கும் உரிமையும் அதற்காம் அன்பு செய்யும் கடமையும் உண்டு. அதனால் ஆவி அன்பி என்று அழைக்கப் படும். இன்பம் கொடுத்தல்பற்றி இறையை இன்பி என்று வழங்குவர். சார்பனைத்தும் கற்பனை எனப்படும். இவ்வுண்மை:

> "எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு." —திருக்குறள். நடுடு.

என்னும் திருவள்ளுவ நாயனார் திருமொழியான் உணர்க.

இத் தோற்றுவாய் பொய்யில் புலவர் செய்தருளிய,

> "மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு." —திருக்குறள். கூ0.

என்னும் தோற்றுவாயோடு ஒக்கும்.

## இயலும் இயற்றலும்

ஒரு பொருளை உணர்வதற்கு அப்பொருளின் இயல்பும், அதனால் இயற்றப்படும் இயற்றுதலும் வாயில்களாகும். இவ்விரண்டனையும் பண்பும் தொழிலும் எனக் கூறுவர். எனவே 'நன்மக்கள்' என்பது இயல். அம்மக்களின் இயற்றுதல் 'என் நோற்றான் கொல்' எனச்சொல்ல ஒழுகுதல். அதுபோல் முழுமுதல்வன் சார்புத்தன்மையில் "அந்தம் ஆதியாய், அவையே தானேயாய், ஆணையில் நீக்கமின்றி நிற்கும் நிலை யினனாய், தமியருள் புரிபவனாய்ச், சார்ந்தாரைக் காக்கும் ஐந்தொழிலினன் ஆவன். இவை உண்மை அறிவு இன்பு என்னும் பண்பிற் காணப்படும் இன்பும், அன்பு அறிவு ஆற்றல் என்னும் பண்பிற் காணப்படும் அன்பும் ஆகும். மேற்கூறியவை முறையே ஒன்று, இரண்டு, ஐந்து ஆகிய நூற் பாக்களில் விளக்கி அருளப்பெற்றன.

இனி அம் முதல்வன் உண்மைத் தன்மையில் அறிவு உண்மை எனப் படும் 'சித்துச்சத்தாய்' நின்று அருள்வன். சித்துச்சத்து என்பதே சிவ சத்தெனப்படும். சிவம் என்பது அறிவு சத்து என்பது உண்மை. இவ்விரண்டுமே அறிவாற்றலாகும். அறிவால் ஆசான் அருட்கோலம் கொண்டருளி 'ஐம்புல வேடரின் நீக்கி' 'ஐந்தெழுத்து' எண்ணுவித்தலும், ஆற்றலால் 'இறைபணி நிற்பித்தலும்' 'காட்டிக் காண்டலும்' 'தொழுவித் தலும்' புரிந்தருள்வன். இவை முறையே எட்டு, ஒன்பது, பத்து, பதி னொன்று, பன்னிரண்டாம் நூற்பாக்களில் விரித்து விளக்கி அருளினர்.

> உண்மைஇவண் ஆற்றல் அறிவறிவே இன்பன்பாம்
> வண்மை புணர்த்துரைத்தல் வாய்ப்பு.

> ஏரார் இயல் இயற்றல் எண்ணின் இரண்டின்கண்
> நாரார்ஒன் றாய்வேறாய் நம்முடனாய்ப்—பாராரும்
> ஐந்தொழிலும் ஆற்றல் அருட்பொதுவாம் ஆண்டாற்கு
> முந்தின்ப அன்பு முறை.

ஆன்ற அறிவுணமை ஆம்சிறப் போடியலாம்
தோன்றுசான் சொல்லெட்டாம் காட்டிக்காண்—டேன்றல்
பதிஞென் றியற்றல் அறிவாற்றல் ஆறில்
புதியபால் தோற்றுவாய் போற்று.

## ஒழிபளவை

முப்பொருள்களுள் முழுமுதல்வனே விழுமியான். அவனே ஆவியை உடலோடு ஆட்டுவித்து, உழைப்போடு ஊட்டுவித்து, உணர்வோடு தன் அடிக்கீழ்க் கூட்டுவிப்பன். இவ் உண்மையைப் புலப்படுத்தும் செவ்விய அளவை, ஒழிபளவை. அஃதாவது ஏனை இரு பொருள்களுள் பாசமாகிய மாயை முதலியன அறிவில்லன. ஆவி விளக்க விளங்கும் அறிவுள்ளனவே அன்றித் தானே விளங்கும் அறிவுடையன அல்ல. இந்நிலையில் உலகைத் தோற்றுவித்தலும், நிலைப்பித்தலும், ஒடுக்குவித்தலும் ஆகிய செயல்கள் செய்தலும், ஆவியை ஆட்டல் ஊட்டல் கூட்டல் முதலிய செயற்படுத்தலும் முழுமுதல்வனுலேயே என்று வரையறுப்பது ஒழிபளவை. ஒழிபளவை எனினும், பாரிசேட அளவை எனினும் ஒன்றே.

சத்தும் அசத்தும்—நிலைப்பதும் நிலையாததும் வரைசெய்துணர்த்தவே இவற்றைச் சார்ந்துணர்ந்துய்யும் ஆவியும் பெறப்படும். நிலைப்பதன்முன் நிலையாதது விளங்கித் தோன்றாது. இது ஞாயிறும் விளக்கும்போல. ஞாயிறு நிலைப்பது. விளக்கு நிலையாதது. அது,

"விடிவாம் அளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து." —திருவருட்பயன். இருண். கய.

என்னும் மெய்கண்ட மொழியால் உணர்க.

இம் முறையில் இம் மூன்றனையும் முறையே 'இன்பி, அன்பி, நண்பி' எனக் கூறலாம். இன்பியாகிய சத்தின்முன் நண்பியாகிய அசத்து விளங்கித் தோன்றாமையால் அசத்துச் சத்தினையறியாது; அறியாது என்பது நுகராது என்பதே பொருள். இது நாணுநுகற்பும் நன்குடைய மகளிர் காதலரை அன்றி ஏனையாரால் அறியப்படாமையை ஒக்கும். இன்பியாகிய சத்து நண்பியாகிய அசத்தை அறியுமோ எனின், நாணுடை மகளிரை ஈன்றார் நலமுற மணவாளர்க்கு அளிப்பதன்றித் தாம் நுகராமை போன்று அறியாது. எனவே, அன்பியாகிய ஆவியே அறியும் என உண்மைப்பாவில் ஓதியருள்வதற்கு ஈண்டு வரைசெய்தலும் ஒழிபளவையாம்.

ஈன்றார்பால் நாண்மகளிர் ஏற்றார்பாற் கொள்ளாமை
சான்றும் உடல்ஆவிச் சார்பு.

## மூன்றிரண்டொன்று

உண்மை அறிவு இன்பு என்னும் மூன்றும் முதல்வன்பால் உள்ளன. உண்மையும் அறிவும் ஆகிய இரண்டும் ஆவிக்கண் உள்ளன. உண்மை ஒன்றே மாயை—உலகுக்கு உள்ளது.

உண்மையறி வின்பமொரு மூன்றுமுதல் ஆவிக்கண்
உண்மையறி வுண்மையுல குக்கு.

## இயைபு

க. ஆசங்கை: முதல்வன் எவ்வாற்றானும் அறியப்படாத பொருளோ என்பது. அன்று; அவன் அருளாலே அவனை அறியலாம். இதனால் கூறெனப்படும் அதிகரண இயைபு பெறப்படும். ஐந்தாம் நூற்பா இரண்டாம் கூற்றின்கண் 'அருட்கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் நிற்கும் அரன் ஏய்ந்து' என்பதனால் மேலது பெறப்பட்டது காண்க.

உ. முறைமை: நான்காம் நூற்பாவில் புலம்பும், ஐந்தாம் நூற்பாவில் புணர்வும், இந்நூற்பாவில் புரிவும் விளக்குவதால் ஐந்தாம் நூற்பாவிற்கும் இந்நூற்பாவிற்கும் இயைபு காணப்படும்.

ங. அவாய்நிலை: அளவை இயலுள் கூறிய பொருள்களுள் இறை தளை உயிர் என்னும் மூன்றற்கும் முறையே மூன்று சூத்திரங்களான் உண்மைகூறி, அம்மூன்றற்கும் இலக்கணம்—தன்மை இயலுள் எதிர் நிரல் நிறையாக நான்காம் சூத்திரம் உயிரையும், ஐந்தாம் சூத்திரம் தளையையும், விளக்கியபின் விளக்கவேண்டியது இறையைப்பற்றி. இஃது அவாவப்பட்டு நிற்கிறது. அவ் அவாய்நிலையை நிரப்புவது இவ் ஆறாஞ் சூத்திரம்.

## வைப்புக் குறிப்பு

இறையாகிய பதிப்பொருட்குப் பொது இயல்பு முன்னுள்ள சூத்திரங்களால் பெறப்பட்டது. இனிப் பெறப்படவேண்டியது சிறப்பியல்பு. அஃது உண்மை அதிகாரத்து ஓதப்படல்வேண்டும். அங்ஙனமிருப்பவும் பொது அதிகாரத்துள் கூறியது என்னையெனின்? பொது அதிகாரமாயினும் பொது அதிகாரத்து இறுதியில் ஓதிய குறிப்பு அவ் அதிகாரம் உண்மை யதிகாரத்தைச்சார இருப்பதால் உண்மை அதிகாரம் போலும் என்பதே. வீட்டு முதல்வர்க்குச் சாரவேண்டிய அஞ்சல் அவரைச் சார்ந்தார்பால் கொடுக்கப்பெறினும் அவர்பால் கொடுத்தமையே யாகுமன்றே? அதுபோன்றதாகும் இதுவும்.

'உணர்உரு... ..........உலகே.'

(போ - ரை.) தம் உணர்விற்குத் தலைவன் ஆகிய முதற்பொருள் அளவைகளான் அறியப்படும் என்னின், அழிபொருளாம். அளவைகளான் அறியப்படாஅனெனின், ஒருவாற்றானும் அறியவாராத பொய்ப் பொருள்—இல்பொருளாகிய பாழாம். இவ்விரண்டு தன்மையும் அல்லாமல் சிவசத்து என இருவகையாலும் மெய்யுணர்வின் நிலைபெற்று உயர்ந்தோர் கூறுவர். இருவகை: சுட்டுணர்வானும் சிற்றுணர்வானும் அறியப்படாமை. முற்றுணர்வான் அறியப்படுதல். சுட்டுணர்வு—பாசஞானம். சிற்றுணர்வு - பசுஞானம். முற்றுணர்வு - சிவஞானம்.

அளவை, காண்டல் கருதல் உரை என மூவகைப்படும். அழிபொருள் என்பது நிகழ்காலத்து ஆட்சிப்பண்பின் மிகுதிப்பாட்டால் விளங்கித் தோன்றும்; அழுந்தற்பண்பின் மிகுதிப்பாட்டால் ஏனைக் காலங்களில் விளங்கித் தோன்றாது அடங்கி நிற்கும்.

பாசஞா னம்சுட்டாம் பற்றுபசு சிற்றுணர்வாம்
ஏசில்சிவ ஞானமுற்றாம் இங்கு.
பொய்ப்பொருள்முக் காலின்றாம் போற்றும் அழிபொருள்
மெய்நிகழ்வில் ஏனைவிளங் காது.

## உலகு

உலகெனப்படுவது உயர்ந்தோர்மாட்டே எனக் கூறுவர். இவ்வுண்மை திருவள்ளுவ நாயனார் அருளிய வரும் திருப்பாட்டான் உணர்க.

" உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்." —திருக்குறள், அடுo.

உலகத்தார் உண்டென்று உறுதிபெற அறுதியிட்டுக் கூறும் பொருள்கள் ஆறு. அவை, விழுமிய முழுமுதல்வன், தொழும்பாம் ஆவிகள், தொன்மலம், முன்வினை, தூமாயை தூவாமாயை இரண்டு என்ப. இவ் ஆறும் உண்டென்பாரே ஆறு அறிவு படைத்த மக்களாவர். 'மக்கள் தாமே ஆறறி வுயிரே' (தொல். பொருள்-௫௭௮) என்றதும் இப்பொருட்டு. ஆறறிவு இரட்டுற மொழிவதால் ஆறுவகை என்னும் எண்ணிக்கையையும் ஆறு-நன்னெறி என்னும் வழியையும் குறிப்பதாகும். இதுவே வழக்கு.

" வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாக லான." —தொல். பொருள்-௬௪௭.

உலகம் பண்புடையாராகிய உயர்ந்தோரையே கண்ணாகக்கொண்டு நிகழ்கின்றது. இவ்வுண்மை வரும் திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டானும் உணர்க :

" பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்." —திருக்குறள், ௬௬௬.

உலகம் - உலகியல்; உலக ஒழுக்கம்.

## முன்

'உணர்உரு அசத்தெனின்' என்பது 'உணர்உரு எனின் அசத்து' எனக்கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. அதனால் 'மாறுக' என்றனர். 'எனின்' என்பது 'உணராது எனின்' என்றதன்கண்ணும் கூட்டிப் பொருள்கொள்ளப்பட்டது. எனவே, முன்னருஞ் சென்று இயைந்தது என்றனர். ஈண்டு 'முன்' என்றது இடமுன்.

" அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றனுள் நாப்பண்ணதாகிய பொருளுக்கு" முன் என்பது காலமுன்னாயின் அறம். இடமுன்னாயின் இன்பம்.

நின்ற பொருட்பின்னே நேர்வ திடமுன்னா
நின்றதூஉம் காலமுன்னும் நேர்.

## முற்றும்மைகள்

'இருதிறன் அல்லது' இஃது 'இருதிறனும் அல்லது' எனக் கொள்வதால் இதன்கண்ணும், 'இரண்டு வகையின்' இஃது இரண்டு வகையினும் எனக் கொள்வதால் இதன்கண்ணும் முற்றும்மைகள் வேண்டப்படுகின்றன. அங்ஙனம் விரித்துக் கூறுவதால் அவை தொக்கன என்றனர்.

**வினையெச்சம்**

'இருதிறன் அல்லது' இதன்கண் உள்ள 'அல்லது' என்பது குறிப்பு வினைமுற்று. அது வினை எச்சப் பொருளில் ஆளப்படுகிறது. அப்பொழுது 'அன்றி' என்னும் வினை எச்சமாகும். அவ்வினை எச்சம் 'சிவசத்தாம்' என்பதன்கண் உள்ள 'ஆம்' என்னும் வினைகொண்டு முடிந்தது. இதனை முற்றெச்சம் என்பர். இது,

"வினைஎஞ்சு கிளவியும் வேறுபல் குறிய."
—தொல். சொல் - சுகுஎ.

என்பதனாற் பெறப்படும்.

**அறிவு**

அறிவு எனினும் சிவம் எனினும் ஒன்றே. சுட்டுணர்வானும் சிற்றுணர்வானும் அறியப்படாமையின் சிவம் என்றனர். சுட்டுணர்வு பாசஞானம். சிற்றுணர்வு பசுஞானம். ஆண்டவனது உண்மைவடிவம் அறிவுவடிவம். அறிவைசசித்து என்பர். அஃது,

"அருவும் உருவும் அறிஞர்க்கு அறிவாம்
உருவும் உடையான் உளன்."—திருவருட்பயன், பதிமுது - ரு

என்பதனால் உணர்க. மேலும் திருவள்ளுவ நாயனாரும் இங்ஙனமே அருளியுள்ளார்; அத்திருப்பாட்டு வருமாறு:

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்." —திருக்குறள் - உ.

திருநாவுக்கரசுநாயனார் அருளிய திருப்பாட்டும் அக்கருத்தமைந்ததே. அது வருமாறு:

"அறிவிலா அரக்கன் ஓடி அருவரை எடுக்கல் உற்று
முறுகினான் முறுகக் கண்டு மூதறி வாளன் நோக்கி
நிறுவினான் சிறுவி ரலால் நெரிந்து போய நிலத்தில் வீழ
அறிவினால் அருள்கள் செய்தான் திருஐயா றமர்ந்த தேனே."
—சு. நகூ - கO.

**உண்மை**

உண்மையைச் சத்து என்பர். முழுமுதல்வன் உண்மையாய் இருப்பதால் உணரப்படுந்தன்மையனே. ஆனால் 'கண்முதற் புலனால் காட்சியும் இல்லோன.' 'மாற்றம் மனம்கழிய நின்ற மறையோன்' என்பனவற்றால் புலனால், கலனால் காண்டற் கரியன் கடவுள் என்பது பெறப்படும். அவனை அவனருள் மெய்யுணர்வினாற் காண்டல்கூடும். ஈண்டுக்காண்டல் என்பது நுகர்தல். இஃது ஒருவனுடைய அறிவினை உணர்வதற்குக் கருவியாய் நிற்பது, காணவுன்னும நம் அறிவேயாம். அறிவினை அறிவதற்குப் புலன் கலன் முதலிய கருவிகள் போதா. அறிவை அறிவதற்கு அறிவே கருவியாம். அறிவுடையாரையும் அவர்தம் நூலையும் கண்ணாற் காணலாம். அவர்தம் சொல்லைக் காதாற் கேட்கலாம். சொற்பொருளைக் கருத்தாற் கருதலாம். அறிவை அங்ஙனம் காண ஒண்ணாது. அதனாலேயே "புலமிக் கவரைப் புலமை தெரிதல், புலமிக் கவர்க்கே புலனாம்" என்னும் பழமொழிப் பாட்டும் பகர்வதாயிற்று. முழுமுதல்வனை அவன் பிரிப்பின்றி

நின்றருளும் அவன்தன் முற்றுணர்வினால் உணரலாம். உண்மை என்பது சார்பகன்ற மெய்த்தன்மையாகும். இதுவே உள்ளது.

திருவள்ளுவநாயனார் இப்பொருள் தோன்ற அருளிய திருப்பாட்டு வருமாறு.

" ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு." —திருக்குறள் - ௩௫௭.

மேலும் சார்பிலான் கடவுள் என்பதைத் தொல்காப்பிய மேற்கோள் பழம்பாட்டொன்றானும் உணர்க:

" சார்பினால் தோன்றாது தான்அருவாய் எப்பொருட்கும்
சார்பெனநின் றெஞ்ஞான்றும் இன்பம் தகைத்தரோ
வாய்மொழியான் மெய்யான் மனத்தான் அறிவிறந்த
தூய்மையதாம் மைதீர் சுடர்."
—தொல். பொருள் - ௮௮, மேற்கோள்.

### அறிவுண்மை

அறியப்படாமையும் அறியப்படுதலும் ஒருங்குடையன் என்றமையால் அறிவுண்மை அல்லது சிவசத்தென முழுமுதல்வன் வழங்கப்படுவானாயினன். இவையே முழுமுதல்வனின் உண்மை இலக்கணமாகும். உண்மை இலக்கணம் சொரூப இலக்கணம். இதுவே சிறப்பிலக்கணம்.

முற்றுணர்வால் முன்னோன் இயல்புணர்த லாம்சுட்டு
சிற்றுணர்வால் ஆகாமை செப்பு.
ஆசான் அறிவை அவன்மா ணவரறிவர்
பேசு பிறரறியார் பெற்று.

### அறிவுண்மை செல்லா

சுட்டறிவுப் புலனும் சிற்றறிவுப் புலனும் ஆகிய பாச பசுக்களும் முற்றுணர்வாகிய சிவஞானத்தான் அன்றி அறியப்படா என்பது அவற்றின் சிறப்பியல்பேயாம். அவற்றின் பொது இயல்பு சுட்டுணர்வானும் சிற்றுணர்வானும் உணரும் பான்மைத்து. ஆகையால் அவை ஒருவாற்றான் 'உணர்உரு' ஆதற்கு இழுக்கில்லை. உணர்உரு என்பது நுகர்வுப்புலன். நுகர்வுப்புலன் என்பதே அனுபவப்பொருள். ஒருவாற்றான் உணர்உரு பொது இயல்பு சுட்டுணர்விற்கும் சிற்றுணர்விற்கும் நுகர்பொருள் ஆதல். அறிவுண்மையாகிய சிவசத்து அங்ஙனமும் இன்று. ஆதலால் பாச பசுக்கள் அறிவுண்மையாகிய சிவசத்தாவான் செல்லா.

### சிறப்பு

பாச பசுக்கள் சிறப்புவகையான் அறியப்படுதல் சிவஞானமாகிய முற்றுணர்வினால் என்பது வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

' நின்னைக் காணா மாந்தர், தன்னையுங் காணாத் தன்மை யோரே.'
(பக்கம். உ௬௯.)

" தன்னறிவு அதனால் ஏதும் தனக்கறிவு இல்லை யேனும்
தன்னறிவு ஆக எல்லாம் தனித்தனி பயன்அருந்தும்
தன்னறிவு அறியும் தன்மை தன்னாலே தனைய றிந்தால்
தன்னையும் தானே காணும் தானது வாகி நின்றே."
—சிவப்பிரகாசம், ௮ - உ.

"மாயைமா மாயை மாயா வரும்இரு வினையின் வாய்மை
ஆயஆர் உயிரின் மேவும் மருளெனில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வரும்இரு வினையின் வாய்மை
ஆயஆர் உயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும்."
—சிவப்பிரகாசம், எ - உ.

"அன்னியமா னவையுணர்த்தி அனந்நியமாய் நிறைந்த
அறிவறியா மையினனும் அருள்நிலவும் காலம்
தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றிலதாய்
மன்னியிடும் மலமாயை கன்மங்கள் மாறி
வந்திடுமிங் கிதுவழுவா தாதலினன் மனத்தால்
உன்னரிய திருவருளை ஒழியமலம் உளதென்று
உணர்வரிதாம் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே."
—சிவம், உ - கஅ.

**உரை உரு**

"ஆன்மாவின் உண்மை யுணர்ந்தவர் தமையு ணர்ந்தோர்—தருமிது பசுஞானம்பின் சிவஞானம் தனக்கு மேலாம் (பக்கம் உகச) எனவும்,

"வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம்
விரும்பசபை வைகரியா திசதிறங்கள் மேலாம்
நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்
நணுகிஆன் மாவிவைகீழ் நாட லாலே
காதலினல் நான்பிரமம் என்னும் ஞானம்
கருதுபசு ஞானம்இவன் உடலிற் கட்டுண்டு
ஓதியுணர்ந் தொன்றென்று உணர்ந்திடலால் பசுவாம்
ஒன்றாகச் சிவன்இயல்பின் உணர்ந்திடுவன் காணே."
—சித்தியார். கூ. க—க.

எனவும் ஓதுதலின் பசுஞானத்தானே உண்மைசுட்டும் உணர்விற்கும் நான்பிரமம் என்னும் உணர்விற்கும் ஆவி புலனாதல் பெற்றாம். 'வரும் தீபமெனத் தெரிந்தங்—கொருவி' எனவும் 'இவைகீழ் நாடலாலே' எனவும் ஓதுதலின், ஒருவுதலும கீழ்நாடுதலுமாகிய சிற்றுணர்விற்குப் பாசம் புலனாதல் பெற்றாம். இனி, இதனை யான் அறிந்தேன் அறிகின்றிலேன் என்புழி, இது என்னும் சுட்டுணர்விற்குப் புலன் (விடயம்) புறத்தே தோன்றும் குடமும், யான் என்னும் உணர்விற்குப் புலன் அகப்புறக் கலன்களை இயைந்தியக்கும் (அதிட்டிக்கும்) ஆவியும், அறிந்தேன் என்னும் உணர்விற்குப் புலன் அவ் ஆவியினுணாவும், அறிகின்றிலேன் என்னும் உணர்விற்குப் புலன் அறியாமையுமே அன்றி வேறின்மையின், இங்ஙனம் உணரும் உணர்வு எல்லார்க்கும் ஒப்ப நிகழ்கின்றமையின் ஆவி உலகுகள் சுட்டுணர்விற்குப் புலனாதல் கண்கூடாகப் பெறப்பட்டது. மெய்யுணர்வு இல்லாதார் உடம்பு முதலியவற்றை யானென மயக்கத்தான் மதிப்பினும், இதனை யானறிந்தேன் என்புழி, யானென்னும் உணர்விற்குப் புலன் ஆவியே என்பது, நுகர்வு தன்மாட்டு நிகழ்தல்பற்றி உணர்ந்துகொள்க. இருளின்கண் கயிற்றை அரவென மதித்து இதுகிடக்கின்றதெனக் கூறினும் ஆண்டு இது என்னும் உணர்விற்குப்புலனாய்க் கிடந்தது கயிறே அன்றி அரவு அன்மையான் யாண்டும் அவ்வாறே கண்டுகொள்க" (பேருரை).

இதுபோல் சிவன் உண்டு, சிவன் இல்லை என மெய்யுணர்வு இல்லாதார் வழங்குவர். வழங்கினும் குடம்போல் உணர்விற்கு உறுவதில்லை. குடம் உண்டு என்றவழி இறப்புமெய்யின்கண் எதிர்நிழலாய் இயைந்து திரிந்து தூவா மாயையின்கண் உள-ஆவது ஆகத்தோன்றும் அகக்கலனும் உணர்வு மெய்யின்வழி ஆவி உணர்விற்குப் புலனும். அதுபோல் சிவன் உண்டு என்றவழிச் சிவப்பொருள் பொதுவகையான் ஆயினும் புலனுவதின்று. எனவே நுகர்வுப் புலனுக்குப் புலனுவதே உணர்உரு என்க.

## அழிபொருள்

அழிபொருளாகிய அசத்து என்பது என்றும் ஒரு படித்தாயுள்ள சத்தின் மறுதலை அன்று. அவை பொதுவகையானறியப்படும் இயல்பு பற்றி அசத்து எனப்படினும், சிறப்பியல்புபற்றிச் சத்தாதற்கு இழுக்கில்லை.

## ஆக்கப்பாட்டுலகு

ஆக்கப்பாட்டுலகாகிய காரியப் பிரபஞ்சமே ஈண்டு 'உணர்உரு' என்று எடுத்துக்கொள்ளப்பட்டது. அது நிலைபெறுவது போலத்தோன்றி விரையக்கெட்டு மறைந்து போகின்றது. அவ்வுண்மைபற்றி அதுவே 'உணர்உரு' என்று எடுத்துக்கொள்ளப்பட்டது. வழிநடையில் தங்குவதற்கு அமைக்கப்படும் கட்டுவீடு - கூடாரம் அனைத்தும் நிலைபெறுவன போலத் தோன்றி விரைய மறைந்துபோவதையும் இதற்கு ஒப்பாகக் காண்க. இவ்வுண்மை வரும் திருவள்ளுவநாயனார் திருப்பாட்டான் உணர்க :

"நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை." — திருக்குறள், ௩௩௧.

## வலிந்தும் பொருந்தாமை

செம்பொருள் துணிபாம் மெய்கண்டான் நூலாகிய சிவஞானபோதம் தனித்தமிழ் முழுமுதல் நூலே என்பது பேருரைப் பேராசிரியர் சிவஞான முனிவரனார் தாம் அருளிய பேருரையை நடுநின்று ஆய்வார் நன்குணரும் வண்ணம் அருளியுள்ளனர். அது வருமாறு :

"அஃது அங்ஙனமாக : ஆசிரியர் வடமொழி ஆறுஞ் சூத்திரத்து ஓதியவாறே "**உணர்உரு அசித்து**" எனச் சூத்திரஞ் செய்யாது '**உணர்உரு அசத்து**' எனச் சூத்திரித்தது முதல் நூலோடு முரணும் பிறஎனின், முரணாது ; அசத்தெனவே சடம் என்பதும் தானே போதரும் என்னும் கருததான் அவ்வாறு சூத்திரித்தாராகலான் என்க. அக் கருத்து உணர்ந்து கோடற்கன்றே "அறிபொருள் அசித்த சத்தாம்" எனக்கூட்டி உரைத்தார் வழிநூலாசிரியரும். அற்றேல், அம்முறைமைபற்றி '**அசித்**'தெனவே '**அசத்**' என்பதும் தானே பெறப்படும் என்னுமோ எனின், என்னும் ; என்னை ? அசித்தாகிய மலமாயை கன்மங்கள் நீர்மேல் எழுத்து முதலியன போல் நிலைபெறுவன போலக் காட்சிப்புலனாய்த் தோன்றிச் சடிதியில் மறைந்துபோம் அசத்தாதலின்மையின் என்றும் ஒரு தன்மையனாகிய முதல்வனை நோக்க அசத்தெனப்படுமாயினும் அங்ஙனம் தோன்றி மறைவதாகிய பிரபஞ்சத்தை நோக்கச் சத்தேயாம் ஆகலின் சிறப்புவகையான் உணர்உருவாகிய அசத்துப் பொதுவகையான் உணர்உருவாகிய சடத்தின்

வியாப்பியமாவதன்றி வியாபகமாதலின்மையானென் றொழிக. ஈண்டு அசத்தென்றதற்குப் பக்கம் காரியப் பிரபஞ்ச மாத்திரையே என்பது வரும் சூத்திரத்திற் காட்டுதும் (பேருரை).

வடமொழிக்கண் முதல் நூல் எனக்கட்டிக் கூறப்படும் படுபொய் நூற்பாவின் திட்பநுட்பச் செறிவின்மையும் சிறப்பின்மையும், சீர்தூக்கி ஆங்காங்கே அக்காலமும் இடமும் நோக்கிப் பொருந்தாமை பலவற்றையும் பொருந்துமெனத் திருத்திக் கூறப்படினும் இந் நூற்பாக்கண் அங்ஙனம் கூறப்படாமையும் அடியோடு பொருந்தாமையும் நோக்கி அமைவுக்கு இடமின்றி அமைவதாயிற்று.

முழுமுதல்வன் உண்மை, அறிவு, இன்பம் உடையவன். ஆவிகள் உண்மை, அறிவு உடையன. தளைகள் உண்மைய. தளைகள் புல்லுமலம் பொருத்துமலம் என இருவகைப்படும். அவற்றுள் பண்டேபுல்லிய மல நோய் தொன்மைமலம் எனவும் பழமலம் எனவும் வழங்கப்படும். பொருத்து மலம் மாயை வினை என இருவகைப்படும். இவ்விரண்டும் காரணமாம். **நுண்மையும்** காரியமாம் **நோன்மையும்** என இவ்விரண்டாகும். நுண்மை நோன்மையை நோக்கச் சத்தேயாம. இது நூல் வடிவிற்காணும் செய்யுட்கள் நோன்மைய. நூலாசிரியன் கருத்து வடிவிற்காணும் செய்யுட்கள் நுண்மைய. நூல்வடிவிற்கு ஒருபுடை ஒப்பாகத் தோற்றமும் ஈறும் புலனும். கருத்து வடிவிற்கு அங்ஙனம் புலனாவதில்லை. மேலும் நூல் அழிவதுபோன்று அஃது அழிவதும் இல்லை.

கற்பார் கற்பிப்பார் கையகத்துத் தாங்கும் நூல் கருவூலத்து உறுதல் முதலியவற்றால் கையைவிட்டு அகலவும் பெறும். அவர்தம் கருத்திற் கொண்டவை அகலாது நின்று நிலவுவ ஆகும்.

என்றும் ஒருபடித்தாய் நின்று நிலவும் முதல்வனை நோக்கத் தோன்றி மறைதற்குக் காரணமாய் உள்ள மாயை வினைகள் நிலையில்லன எனக் கூறப்படினும் தோன்றி ஒடுங்குவதாய ஆக்கமாயையினையும், துய்த்துக் கழிவதாய இருவினையையும் நோக்க நிலையுள்ளனவேயாம். நிலையுள்ளது சத்து. நிலையில்லது அசத்து. அசத்தை அழிபொருள் எனவும் கூறுப.

என்றும் அழியாதனவாயுள்ள மாயை வினைகட்கும், தோன்றிநின்று அழிவனவாய மாயைவினைகளின் ஆக்கப்பாடாகிய காரியங்கட்கும் அறிவு கிடையாது. இவ்அறிவின்மையைக் குறிப்பது 'அசித்து'. இந்நூற்பாவின்கண் வழியளவையான் மொழிய எடுத்துக் கொண்டது அறிவின்மையைப்பற்றியதன்று. அழிவுடைமையைப் பற்றியதே யாகும். அஃது அசத்து என்னும் சொல்லான் அன்றி அசித்து என்னும் சொல்லால் பெறப்படாது.

மாயை வினைகட்கும் அவற்றின் ஆக்கப்பாடுகளாகிய காரியங்கட்கும் அறிவின்மை பொது. அறிவின்மையே அசித்து. அழிவுடைமை மாயை வினைகளின் காரியங்கட்கேயுரிய சிறப்பு. சிறப்பின்கண் பொது அடங்கும். பொதுவின்கண் சிறப்பு அடங்காது. எடுத்துக்காட்டாகக் கற்றான் எனனும் பொதுவில் கற்பிப்பான் என்னும் சிறப்பு அடங்காது. திணை என்னும் பொதுவில் பால் என்னும் சிறப்பு அடங்காது. பொதுவினைக் கூறின் சிறப்பு எவ்வாற்றானும் கொள்ளமுடியாது. சிறப்பினைக் கூறின் பொது தானேவந்தியையும். எடுத்துக்காட்டாக கற்றான் என்றால் அவன் சிறப்பு இன்னது என்று பெறப்படாது. கற்பிப்பான் என்னும்

சிறப்பால் கற்றான் என்னும் பொது தானேவந்தியையும். ஆண்பால் பெண்பால் பலர்பால் என்னும் சிறப்பால் உயர்திணை என்னும் பொது தாமேவந்தியையும். ஒன்றன்பால் பலவின்பால் என்னும் சிறப்பால் அஃறிணை என்னும் பொது தாமேவந்தியையும்.

ஆகவே 'உணர்உரு அசத்து' என்பதே அமைவும் வலிவும் உடைத்து. தனித்தமிழின் முழுமுழுதற்செழும்பொருள் நூலாக மெய்கண்டார் செய்தருளிய சிவஞானபோதத்தினின்று மதுகையிலார் மயக்குறச் செய்த மொழிபெயர்ப்பாம் வடமொழி நூல் 'உணர்உரு அசித்து' எனக்கூறுவது ஒருசிறிதும் பொருந்தாவலியில் வழுவுரை என்க.

வலிந்து பொருத்திக்காட்டிய இடங்கள் சிலவேனும், அவற்றுள் ஒன்றிரண்டு காட்டி வடமொழியின் வழுவினைக்கூறுதும். மெய்கண்டார் நூல் முதல் நூற்பாவின்கண் உள்ள மிகவும் முதன்மையான "மலத்தால்" என்பது வடமொழி மொழிபெயர்ப்பில் இல்லை. 'இதனால்' என்பது அப்பொருள் குறிப்பதாகப் பொய்அமைவு காட்டிப்பொருதகவேண்டியதிருக்கிறது. இஃது இயற்கைக்குரலமைவு இல்லானுக்குச் செயற்கையால் குரல்கெட்டது எனச் சேர்ந்தார் செப்பி ஏய்ப்பமுற்படினும் மெய்ப்பொருள் காண்பார் போலிப்பொய்ப்பொருட்போக்கு எனப் போக்குவரன்றே. அதுபோன்ற போக்கேயாம். வடமொழி இரண்டாஞ் சூத்திரத்தில் 'ஆணைமுதல்வனோடு சமவேதமாய் நிற்கும்' என்ற பொருளின்படி முதன்மை ஆணைக்கு. மெய்கண்டார் நூலில் 'ஆணையின் நீக்கமின்றி நிற்கும்' என்ற பொருளின்படி முதன்மை முதல்வனுக்கு. இங்ஙனம் இருப்பவும் பொருளான் வேறன்மை எங்ஙனம் எய்தும். பொருள்மரபு கெடாமைப் பொருட்டன்றே முதல் திருக்குறள் உரையில் "ஆதிபகவன் முதற்றே என உலகின்மேல் வைத்துக்கூறினாரேனும், உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது கருத்தாகக் கொள்க" என ஆசிரியர் பரிமேலழகியார் கூறியதூஉம் என்க. (பக்கம். ௩௩)கருத்து—தாற்பரியம். வழிநூலார் 'அசித்து' என்று கூட்டி விளக்கியது உரைகாண் முறையென்க. அவர் காலத்துத்தோன்றாத வடநூற்கு அரண்செய்தற்கு அன்று.

கூறு

இந்நூற்பா இரண்டு கூறுகளை உடையது. அவை வருமாறு:

க. **உணர்உரு அசத்தெனின் உணராது இன்மையின்.**

உ. **இருதிறன் அல்லது சிவசத் தாம்என**
**இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.**

---

## முதல் அதிகரணம்

**ஈண்டு அறிவினுலறியப்பட்ட சுட்டு அசத்தென்றது.**

எ - து. மே - ள். எனின். மேலைச்சூத்திரத்தின் அளந்தறிந் தறியாவென்றதனை உடம்படாது பிரபஞ்சம்போல முதல்வனும் அளவைகளான் அளந்தறிபொருளேயாமென நையாயிகர் முதலி யோர் கூறுங்கடாவையும் எல்லாப்பொருளுஞ் சத்தாகலின் அளந்தறிபொருளுஞ் சத்தேயாமெனச் சாங்கியர் கூறுங்கடா வையும் ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ - ள்.) சுட்டறிவினுல் அறியப்பட்ட சுட்டுப்பொரு ளெல்லாம் அசத்து (எ - று).

சுட்டு ஆகுபெயர்.

சிவஞானத்தாலறியப்படுதலை நீக்குதற்கு அறிவினுலென விசேடித்தார்.

ஈண்டு அறிவென்றது ஒன்றை முந்தி அதுவதுவாகச் சுட் டிக்காணும் அளவையறிவினையென்பது *"அறிவினு லறிந்த யாவுமசத்தாதல் அறிதி" என்ற புடைநூலாசிரியர் "தொன்மை அறிவுதான் ஒன்றை முந்தி அதுஅது ஆகக் காணும்—அறிவு காண் அசத்து" என மீள அங்ஙனந் தெரித்தோதியவாறுபற்றி உணர்ந்துகொள்க.

**அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.**

எ - து. ஏது எ - னின். உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பிக்கும் பிரபஞ்சத்தை இல்லை யென்னுமுணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பிக்கும் இல்பொருளோடொப்ப அசத்தென்றல் அமையுமாறு யாங்ஙன மெனவும் சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதன்மாத்திரை யான் அசத்தென்றல் சற்காரியவாதத்திற்கிழுக்காம்போலு மெனவும் முறையே அவ்விருவர் மதம்பற்றிக் கூறுவாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ - ள்.) அச்சுட்டுப்பொருள்கள்தாம் இராசதகுண மிகு திப்பாட்டான் உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய் உபலத்தியைப்பயப்பித்து நின்று தானே தாமதகுண மிகுதிப் பாட்டான் இல்லையென்னுமுணர்விற்கு விடயமாய் அநுபலத்தி யைப் பயப்பித்து நிற்றலான் ஈண்டறிவினுலறியப்பட்ட சுட்டு அசத்தென மேற்கொண்டது (எ - று).

---

* சிவப்பிரகாசம், உண்மை. ரு.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசமென்பன உபலத்தி அநுப லத்தியென்னும் பொருளவாய் அவை நிகழ்தற்கிடனாகிய பொருள்மேல் நின்றன.

இது நையாயிகரை நோக்கி மேற்கோளைச் சாதித்தவாறு. இனி இதனையே இரட்டுற மொழிந்துகொண்டு அவைதாங் காரியவவத்தையிற் றாலமாய் விளங்கிநின்றே காட்சிப் புலனாய்ச் சடிதியின் மறைந்து சூக்குமமாய்க் காரணவவத்தையின் விளங்காது நிற்கும் இவ்வேற்றுமையுடைமையான் அங்ஙனம் புலனாகாத காரணப்பொருள்களை நோக்கிக் காரியப்பிரபஞ்சம் அசத்தாதல் சாலுமாகலின் ஈண்டறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்தென மேற்கொண்டதென்றவாறு எனவும் உரைத்துக்கொள்க.

* அசத்தறியாய் கேள்நீ அறிவறிந்த எல்லாம்
அசத்தாகும் மெய்கண்டான் ஆயின்—

எ-து. உ-ம். எ-னின். ஒருசாரன அங்ஙனமாயினும் உபலத்திப்பட்டனவெல்லாம் அவ்வாறு அசத்தாமென்றற்குப் பிரமாணமென்னையென்னும் நையாயிகரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) அசத்து அறியாய் நீ கேள்—அசத்தினியல்பை யறியாத மடவோனே யாம் இறுக்கும் இறையை நீ மனம்பற்றிக் கேட்பாயாக, மெய்கண்டான் ஆயின் அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும்—சத்தினியல்பை யறிந்தோன் ஆராய்ந்தானாயின் அறிவினாலறியப்பட்டனவெல்லாம் அசத்தேயாம் (எ-று).

அறியாயென்பது விளியுருபேற்றபெயர்.

அசத்தினியல்பை அறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவா யல்லையென்பார் அசத்தறியாயென்றும், † "எந்தை-தாட்பால் வணங்கித் தலைநின்று கேட்க" என்பார் கேள்நீயென்றும், உபலத்திக்கு விடயமானவையெல்லாம் அநுபலத்திக்கு விடயமாதல் ஒருதலையென்பார் அறிவறிந்தவெல்லாம் அசத்தாகுமென்றும், சத்தினியல்புணர்ந்தார்க்கன்றி அசத்தினியல்புணர வாராதென்பார் மெய்கண்டானென்றும், ஆய்தற்கருமைநோக்கி ஆயினென்றுங் கூறினார்.

‡ அசத்தலாய்
நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரின் அவை இன்றாமாறு ஒப்பு.

---

* 'ஆவதாய்' சித்தியார். சு. ௧-௬.

† திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருப்பாசுரம். ௫. ஆட்பாலவர்.

‡ 'மண்தனில்' சித்தியார். சு. ௧-௨.

எ - து. உ - ம். எ - னின். இரட்டுற மொழிந்துகொண்டு சாங்கியரை நோக்கியுரைத்த பொருளை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அசத்து அலாய்—அசற்காரிய வாதியல்லாத அறிவுடையோனே, அவை இன்று ஆம் ஆறு ஒப்பு ஓரின்—அங்ஙனந் தோன்றி மறைவனவாய பிரபஞ்சம் அசத்தாமாற் றிற்கு உவமையாராயின், நிகழ் நீரில் எழுத்தும் கனவும் பேய்த் தேரும்—நிகழாநின்ற நீர்மேலெழுத்துங் கனவிற் காட்சியும் பேய்த்தேருமாம் (எ - று)

எனவே, அப்போதுள்ளனவாய நீர்மேலெழுத்து முதலி யனவற்றை அங்ஙனே சடிதியின் மறைந்துபோதற் சிறப்புப் பற்றி அசத்தென்னல் எல்லார்க்குமொப்ப முடிந்தமையின், அவ் வியல்புடைய பிரபஞ்சத்தையும் அவைபோல் அசத்தென்றல் அமையு மென்றவாறாயிற்று.

அசற்காரியவாதியை அசத்தென்றுபசரித்தார்.

நீரிலெழுத்து முதலியன பொய்யென்பாரை மறுத்தற்கு நிகழென்றடை கொடுத்தார். அஃதியாண்டுஞ் சென்றியையும்.

குவ்வுருபு விகாரத்தாற் றொக்கது.

இன்றென்னுமொருமை அப்பண்பின்மேனின்றது.

நீரிலெழுத்துத் தோன்றியபொழுதே மறைந்துபோதற் கும், கனப்பொருள் முடிவுபெறுதலின்றி இடையே மறைந்து போதற்கும், அருஞ்சுரத்தின்கண் முதுவேனிலின் நண்பகற் கடுமைபற்றித் தோன்றி ஞாயிற்றின் கிரணம் முகிற்படலத்தின் மறைந்தவழித் தானு மறைந்துபோவதாகிய பேய்த்தேர் ஒரு காரணங்காட்டி மறைந்துபோதற்கும் உவமையாயின. இவ் வெண்பாவை "இயலயித்ததன்னில்" என்பதுபோல இங்ஙனம் இருதொடராக வைத்துரைத்து மேற்கோளேதுக்களையும் இரட் டுறமொழிந்துகொண்டு இரண்டதிகரணப் பொருள்கோடல் ஆசிரியர் கருத்தென்பது வழிநூலாசிரியர் *"அசத்தாஞ் சுட்டி யுணர்பொரு ளான வெல்லாம்" எ - ம். †"உலகினை யசத்தும் என்பர்" எ - ம். வேறு கூறியவாற்றானு முணர்க. இஃதறியாது இவ்வெண்பாவை ஒருதொடராகவைத்துரைப்பார்க்கு அசத்தறி யாய் அசத்தலாய் என்றதனால் ஒரு பயன்படாமையும், ஆயின் ஓரினென்று இருகாற்கூறுதலும், அசத்தாகும் இன்றுமென்று

* சிவஞானசித்தி, ஆறுஞ்சூத்திரம். உ. ஆவதாயழிவ.
† " " ௩. மண்டலனில்.

இருகாற்கூறுதலுங் கூறியது கூறலென்னும் வழுவாதலுமறிக. இனி ஒருவாற்றானுமுணரப்படாத பொருள் சூனிய மென்பது எல்லாச்சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்தமையின் ஆண்டதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியன நிகழாமையான் அதனை வேறெடுத்துரைத்து மேற்கொள்ளவேண்டாவாயினும், மந்தவுணர்வுடையார்க்கு அதன்கண் ஐயநிகழாமைப்பொருட்டு வழிநூலாசிரியர் *"உணராத பொருள்சத் தென்னில் ஒருபயனில்லை போலும்" என விடுத்தொழித்தாரென் றுணர்க.

## விளக்கம்

### சுட்டறிவுக்கு எட்டான்

முழுமுதல்வனும் சுட்டறிவினால் அளந்தறியப்படுவன் எனச்சிலர் கூறுவர். சுட்டறிவினால் அறியப்படுவன அனைத்தும் அழிபொருளாகிய அசத்தாம். சுட்டறிவினால் அறியப்படும் உலகும் உலகியற்பொருளும் தோன்றிநின்று ஒடுங்குவது வழியளவையான் உணர்த்தப்பட்டமையின் உலகு அழிபொருளாகிய அசத்தாம். முதல்வன் என்றும் ஒருபடித்தாய் நிற்பதுபற்றிஅன்றே உள்ளது எனப்படும் சத்தாயினன். உலகமும் சத்தே என்பது தொன்மை நிலைபற்றி என்க. தொடக்கநிலை பற்றி எண்ணின் உலகம் அழிபொருளாகிய அசத்தே. எனவே, முதல்வன் சுட்டறிவினால் அறியப்படான்.

### ஆகுபெயர்

'அறிவினால் அறியப்பட்ட சுட்டு' என்பதன்கண் உள்ள 'சுட்டு' சுட்டப்படும் பொருளை உணர்த்திற்று. எனவே அஃது ஆகுபெயர். 'அறிவினால்' என்னும் அடைமொழி மெய்யுணர்வாகிய சிவஞானத்தால் முதல்வனோடு ஆவிபுணர்ந்து உணரும் என்பதை நீக்குவதற்காம்.

### அளவை அறிவு

ஈண்டு அறிவென்றது ஒன்றை முந்தி அதுவதுவாகச் சுட்டி அறியும் அறிவை. அதுவே அளவை அறிவு எனப்படும். இவ்வுண்மை உமாபதி சிவநாயனார் அருளிய வரும் திருப்பாட்டான் உணர்க:

" அறிவினால் அறிந்த யாவும் அசத்தாதல் அறிதி என்றும்
அறிவினால் அறியொ ணாதேல் ஆவதொன் றின்மை தொன்மை
அறிவுதான் ஒன்றை முந்தி அதுவது வாகக் காணும்
அறிவுகாண் அசத்து மற்ற தறிவினுக்கு அறியொ ணாதே."
—சிவப்பிரகாசம், ௩ - ௪.

### பண்பிபண்பு

உலகிடைப் பண்புடைய பொருள்களைக் கண்ணாற் காணுதல் கூடும். அப்பண்பைக் கருத்தால் கருதுதல் கூடும். எடுத்துக்காட்டாக இனிப்புச் சுவையுடைய கட்டியைக் கண்ணாற் காண்கின்றோம். ஆயின் இனிப்பைக் கண்ணால் காண்கின்றோமா? இல்லையன்றே! கருத்தாற் கருதி நெஞ்சங் கொள்கின்றோம்.

* சிவஞானசித்தி, ஆறுஞ்சூத்திரம். ௪. உணராத.

அன்பு அறிவு முதலியவற்றை இன்மொழியால், நன்னூலால், மன் ஒழுக்கால் கண்டும் கேட்டும் மகிழ்கின்றோம். ஆயின் அன்பையும் அறிவையுஞ் கருதி நெஞ்சம் கொள்கின்றோம். அன்பு அறிவு ஆற்றல் களையுடைய ஆவி அம்முப்பண்பும் அடங்கியிருக்கும் நிலையில் எவ்வாற்றானும் உணர ஒண்ணாது, உண்டென நெஞ்சுகொள்வதல்லது. ஆவிநிலையே இவ்வாறாயின் ஆண்டான் நிலையைக் கூறவும் வேண்டுமா?

இவ்வுண்மை வரும் திருக்களிற்றுப்படியார் திருப்பாட்டான் உணர்க:

> "இன்றுதான் நீஎன்னைக் கண்டிருந்தும் கண்டாயோ
> அன்றுதான் நான்உன்னைக் கண்டேனோ—என்றால்
> அருமாயை ஈன்றவள்தன் பங்கனையார் காண்பார்
> பெருமாயைச் சூழல் பிழைத்து." —திருக்களி. அக.

## நெஞ்சுகொள்வன

காணவும் காட்டவும் ஆகாவாய்க் கருதற்கு ஆவனவாய் உள்ள பண்புகளை ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியமுனிவரர் அருளியவாறு காண்க:

> "ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
> கற்பும் ஏரும் எழிலும் என்றா
> சாயலும் நாணும் மடனும் என்றா
> நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
> ரு. ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்
> நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது
> காட்டல் ஆகாப் பொருள என்ப."
> —தொல். பொருள். உசஎ

## உண்டில்லை

உள்ளதென்றறியும் அறிவுக்குப் புலனாகும் பொருள் இல்லை என்றறியும் அறிவுக்கும் அங்ஙனமே புலனும். உள்ளதென்றறியும் அறிவை உபலத்தி என்ப. இல்லை என்றறியும் அறிவை அநுபலத்தி என்ப. இவ்விரண்டும் முறையே பிரகாசம் அப்பிரகாசம் என ஈண்டு ஆளப்பட்டுள்ளன. இல்லை என்றறியும் அறிவிற்குப் புலனாவதென்பது முன்உள்ளதென்றறியும் அறிவிற்குப் புலனாகிய பெற்றிமையை. இப்பொழுது இல்லை என்றறியும் அறிவிற்குப் புலனாவதென்பது அப்பொருள் காலத்தானும் இடத்தானும் காணப்படாது ஒழியினும் கருத்தினுள் முன்கண்ட நினைவு தோன்றும் அன்றே? அதனையே புலனாவதென்பது.

எனவே, சென்ற காலத்து ஆட்சிக்குண மிகுதிப்பாட்டால் தோன்றியதொன்று நிகழ்காலத்து அழுந்தற்குண மிகுதிப்பாட்டால் தோன்றாதொழிவதே அழிபொருளாகிய அசத்தென்க. இஃது அவிழ்த்த எட்டகத்துக் காணும் பொருள் கட்டிய எட்டகத்துக் காணாமையை ஒக்கும். முழுமுதல்வன ஒருகாலத்துத் தோன்றியும் பிறிதோர் காலத்துத் தோன்றாமையும் ஆகிய பண்புடையன் அல்லன். மேலும் வேறுநின்று காணும் மெய்யுடையனும் அல்லன். 'உடங்கியைந்து நின்று பிரிப்பின்றிப்' புணர்ந்து அவனருளாற் காணும் அருள்மெய்யுடையன்.

வேறறக் கலந்து காணும் விழுத்துணையாம் முதல்வனை வேறு நின்று காணும் அழிபொருட் காட்சியால் எஞ்ஞான்றும் காணஒண்ணாது என்பதே அம்மையார் திருவுள்ளம். அத்திருப்பாட்டு வருமாறு:

"அன்றும் திருஉருவம் காணாதே ஆட்பட்டேன்
இன்றும் திருஉருவம் காண்கிலேன்—என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட்கு என்உரைக்கேன்
எவ்வுருவோ நின்உருவம் ஏது."
—கக். அற்பு-சுக

மேலும், திருமூல நாயனார் 'அக இன்பம்' ஒத்துத் துய்ப்பதன்றிச் சொல்லால் யாண்டும் உய்ப்பதில்லை என்றருளினர். அக இன்பமாவது "ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின், அதனை அகம் என்றார்" எனக் கிளந்தெடுத்துக் கூறும் இன்பு.

"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுமாறு எங்ஙனே."
—க0. கூ-உகூசக

மகள் - ஆவிகள். தாய் - திருவருள்.

"உரையற்ற தொன்றை உரைசெய்யும் ஊமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாணல் ஆகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே."
—க0. கூ-உகூருரு

மேலைப்பாட்டில் கூறியருளிய அகக்கண் மெய்யுணர்வுக்கண்; அதுவே அகக்கண். அகக்கண் இல்லார் காணார். வீழ்பொருள் கண்டான் போல் காணநேரினும் உறைத்து நில்லார், தாமே அழித்தும் விடுவர். இவ் உண்மை வரும் திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டான் உணர்க :

"தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்."
—திருக்குறள், உசக

"கண்ணுதற்பெருங் கடவுளைக் கழகமோ டமர்ந்து, பண்ணுறத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமிழால்" பாடிக் கண்டு இன்புற்றமை அனைத்தும் சொல்லொணா அக இன்பமேயாம். அவ் அக இன்புக்கு வாயிலாகிய ஒருவன் ஒருத்தி போன்றதே 'திருக்கோவில், திருவுரு, சிவனடியார், செம்பொருட்குரு.' மேலும், கற்பார்க்குக் கழகமும் நூலும் பிறவும் வாயிலாக இருப்பதையும் ஒக்கும். இவ் உண்மை சேக்கிழார் அடிகள் திருப்பாட்டானும் உணர்க. அது வருமாறு :

"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உருவின்கண்
அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை எனப்போற்றி
இணையில் வண்பெருங் கருணையே ஏத்திமுன் எடுத்தசொற் பதிகத்திற்
புணரும் இன்னிசை பாடினர் ஆடினர் பொழிந்தனர் விழிமாரி."
—கஉ. திருஞா. கசுக.

ஆண்டவன் ஆவிகளின் நிலைக்குத் தக்கபடி படிமுறையான் இணைந்து அருளின்பம் அளிக்கின்றனன், ஆசான் மாணவரோடியைந்து படி முறையான் படிப்பிப்பதை ஒத்து. இவ்வுண்மை திருவள்ளுவா திருப்பாட்டு நன்கு தெளிவுறுத்தும் :

"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்." —திருக்குறள், கசO

"எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு." —திருக்குறள், சஉசு

'அசத்தறியாய்.........................ஆயின்.'

## மெய்கண்டான்

திருமுறைத் தீக்கைமுறையான் செம்பொருட்குருவின் திருவருள் கிடைக்கப்பெற்று 'மெய்கண்டான்' என்னும் திருப்பெயர் அமைந்து செந்நெறியொழுகும் திருவினன் மெய்ப்பொருள் உணர்ச்சியுடையோன் ஆதலின் சுட்டறிவினுல் அறியப்பட்ட அனைத்தும் அழிபொருள் என்று தெளிவன். மெய்யுணர்ந்தார்க்கன்றிப் பொய்யின் - அழிபொருளின் உண்மை புலனுகாது. இது மாணவர்கள் வீட்டகத்து உறைந்திருப்பதே மெய். கல்லூரிக்கு வந்துபோவது நிலைநில்லாத பொய். இவ்வுண்மை உணராதார் மாணவரைக் காணும் இடம் கல்லூரியாதலின் ஆண்டே நிலைத்திருப்பர் என எண்ணுவர். அவ் எண்ணத்தை ஒக்கும், உலகம் அழிபொருள் - அசத்து அல்ல என்று எண்ணுவது.

## அறியப்படான்

உண்டென்றறியும் அறிவிற்குப் புலனுவதனைத்தும் இல்லையென்றறியும் அறிவிற்குப் புலனும. அதனுல் அவை அழிபொருள்களே. முழுமுதல்வன் என்றும் ஒருபடித்தாயுள்ள தெளிபொருளாதலின் சுட்டறிவால் அறியப்படான்.

## தக்கார்

ஆண்டவனை வழிபட்டு உறைந்துநின்று இவ்வுண்மை உணர்வோரே தக்காராவர். அவ்விழுப்பொருளை ஆளுடைய பிள்ளையார் அருளும் திருப்பாசுரத் திருப்பாட்டானும் அறிக:

"ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகிலளை வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையும் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க தக்கார்."
—ந. நிச - ச.

இத் திருப்பாசுரத்துக்குச் சேக்கிழார் அடிகள் கூறும் செய்யுளுரை வருமாறு:

"ஆதி ஆட்பா லவர்க்கரு ளுந்திறம்
நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால்
ஓதும் எல்லை உலப்பில ஆதலின்
யாதும் ஆராய்ச்சி இல்லையாம் என்பதாம்."

"அன்ன ஆதலின் ஆதியார் தாளடைந்து
இன்ன கேட்கவே ஏற்றகோட் பாலவும்
முன்னை வல்வினை யும்முடி வெய்துமத்
தன்மை யார்க்கென் றனர்சண்பை காவலர்."
—கஉ. திருஞா. அநஉ, அநந.

**முதன்மை**

முழுமுதல்வன் திருவடிப்பேறு எய்துவதற்கு நூலும் செவியறிவுறூஉம் வாயில்கள் என்ப. அவ்வாயில்தானும் அரும்பெறல் ஆசான் அருள் இல்வழி அமையாதென்க. அது நோய் நீங்குவதற்கு மருந்தும் மருத்துநூலும் வாயில்களாயினும் மாண்புறு மருத்துவன் இல்வழிப் பயன்படாமையை ஒக்கும்.

மெய்யுணர்வு கைவருதலாகிய 'ஞானச் செய்தியால் சிந்தையுள்ளே மருளெலாம் நீங்கக்கண்டு வாழலாம்' எனக் கூறுவது சிறப்பு. இஃது, "ஆசான் அருளால் அடிசேர் ஞானம் வந்திடுமற் றொன்றாலும் வாராதாகும்" என்றருளினமையால், வாழ்வு ஆசான் அருள் ஒன்றினாலேயே கிடைக்கும்.

"அருளினால் ஆகமத்தே அறியலாம் அளவினாலும் தெருளலாம்" என்பது பொது. பொது என்பது திருவடி ஞானம் கிடைப்பதற்கு வாயில்என்பதே. இதுவும் ஆசான் அருள் உள்வழியே கூடும் என்பதை உணர்த்தும் திருப்பாட்டு வருமாறு:

" அருளினால் ஆகமத்தே அறியலாம் அளவி னாலும்
தெருளலாம் சிவனை ஞானச் செய்தியால் சிந்தை யுள்ளே
மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
இருளெலாம் இரிக்க லாகும் அடியரோ டிருக்க லாமே."
—சித்தியார். மங் - ரு.

ஆசான் திருவருள் இன்றி ஆவிகள் தம்முனைப்பால் அளந்தறிய முன்னின் முடியாதென்பதும், உயிர்க்கிறுதி யாகும் என்பதும், உலகம் பழிக்கும் என்பதும் விளங்க உணர்த்தும் திருப்பாட்டு வருமாறு:

" மறையினால் அயனால் மாலால் மனத்தினால் வாக்கால் மற்றும்
குறைவிலா அளவி னாலும் கூறொணா தாகி நின்ற
இறைவனார் கமல பாதம் இன்றியான் இயம்பும் ஆசை
நிறையினார் குணத்தோர்க் கெல்லாம் நகையினை நிறுத்தும் அன்றே."
சித்தியார். மங் - ச.

"............அசத்தலாய்...... ................ஒப்பு."

**இரட்டுற மொழிதல்**

திருவள்ளுவ நாயனார் அருளிய திருக்குறளின்கண் தொண்ணூறாம் அதிகாரம் பெரியாரைப் பிழையாமை. இதனை இரட்டுற மொழியுங்கால் ஆற்றலாற்பெரியாராய வேந்தர் எனவும், தவத்தாற் பெரியாராய முனிவர் எனவும் பொருள்படும். இதுபோலவே, இவ் அதிகரணத்தை இரட்டுற மொழிந்துகொண்டு இருதொடராக வைத்துப் பொருள் கொள்க.

சுட்டியறியப்படுவதாய உடல், கலன், உலகு, உணா என்னும் நான்கும் நோன்மையாகிய காரிய நிலையில் விளங்கிநின்றே காட்சிப் புலனாய்ச் சடிதியின் மறைந்து, நுண்மையாகிய காரண நிலையில் விளங்காது நிற்கும் வேறுபாடு உடையன. விளங்காத நுண்மைநிலையை நோக்க விளங்கி மறையும் நோன்மைநிலை அழிபொருளாகிய அசத்தேயாம். அந்த நிலையில் வேறுமோர் பொருள் கொள்ளப்பட்டது.

முந்திய பொருள் உண்டில்லை என்னும் தலைப்பின் (உ௬௭) கீழ்க் காண்க.

### ஏற்றுரை

அழிபொருட் கோளன் அல்லாதான் என்று கூறவேண்டியதை அழி பொருள் அல்லான் என்று கூறப்பெற்றிருப்பது ஏற்றுரை. இதனை 'அசற்காரியவாதியை அசத்தென்று உபசரித்தார்' என்னும் உரையாற் காண்க! இதன்படி 'அசற்கரியவாதி'—அழிபொருட்கோளன். 'அசத்து'- அழிபொருள்.

### மெய்

'நீரில் எழுத்தும், கனவும், பேய்த்தேரும்' அழிபொருள்களே அன்றிப் பொய்ப்பொருள்கள் அன்று என்பதை நன்று வலியுறுத்தவே "நிகழ்" என்று அடைபுணர்த்து ஓதியருளினர். அவ் அடை நடுநின்று முன்னும் பின்னும் சென்று இயையும்.

### மும்மை

தோன்றியபொழுதே மறைவது சொல்லின் நீரில் எழுத்து. முடிவு பேறின்றி இடையே மறைவது இயம்பின் கனவு. அருஞ்சுரத்தின்கண் முதுவேனிலின் நண்பகற் கடுமைபற்றித் தோன்றி ஞாயிற்றின் கதிர் முகிற்படலத்தின் மறைந்தவழித் தானும் மறைந்துபோவது சாற்றின் பேய்த்தேர்; இஃது ஒரு காரணங்காட்டி மறைந்துபோவதற்கு ஒப்பு.

### நோன்மை புலப்பாட்டால் நிலையின்மை

உலகமுதலாம் நுண்மை பொருள்தன்மையால் நிலையுள்ளதே. ஆக்கப் பட்டுக் காணும் நோன்மை புலப்பாட்டால் நிலையாதது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க. நிலையுள்ளதைச் சத்தென்றும், நிலை யில்லாததை அசத்து என்றும் கூறுவர்.

> "நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை என்னும்
> பெருமை உடைத்திவ் வுலகு." —திருக்குறள், ௩௩௬.

> "மண்தனில் வாழ்வும் வானத்து அரசயன் மாலார் வாழ்வும்
> எண்தரு பூத பேத யோனிகள் யாவும் எல்லாம்
> கண்டஇந் திரமா சாலம் கனக்கமு திரதங் காட்டி
> உண்டுபோல் இன்றும் பண்பின் உலகினை அசத்தும் என்பர்."
> —சித்தியார், சு. க-௩.

'அசத்தும்' என்றதன்கண் உள்ள 'உம்மை' எதிர்மறை. இவ் உம்மை யாற் பெறப்படுவது பொருள்தன்மையால் சத்தேயாம்.

புலப்பாடு எதன்கண் காணப்படுகின்றதோ அது நிலைப்படாது அழியும். இவ் உண்மை ஆளுடைய நம்பிகள் அருளிய வரும் திருப் பாட்டான் உணர்க:

> "தோற்றமுண்டேல் மரணமுண்டு துயரமனை வாழ்க்கை
> மாற்றமுண்டேல் வஞ்சமுண்டு நெஞ்ச மனத்தீரே
> நீற்றரேற்றர் நீலகண்டர் நிறைபுனல்நீள் சடைமேல்
> ஏற்றர்கோயில் எதிர்கொள்பாடி என்பதடை வோமே."
> —எ. எ-உ.

மாற்றம் - சொல்: நாதம். வஞ்சம் - பிறப்பு.

ஆவிக்கு உடல்முதலாய பொருள்உலகப் பிணிப்பே அன்றி ஓசை முதலாய சொல்லுலகப் பிணிப்பும் அகலவேண்டும். அப்பொழுதுதான் திருவடிப்பேறு கிட்டும். இவ் உண்மை விளக்குவதே 'மாற்றமுண்டேல் வஞ்சமுண்டு' என்பது. இதனை வரும் திருப்பாட்டும் வலியுறுத்தும்:

"மூவகை அணுக்க ளுக்கும் முறைமையின் விந்து ஞானம்
மேவின தில்லை யாகில் விளங்கிய ஞானம் இன்றாம்
ஓவிட விந்து ஞானம் உதிப்பதோர் ஞானம் உண்டேல்
சேவுயர் கொடியி னுன்தன் சேவடி சேர லாமே."

சித்தியார். க. க-உசு.

பாழ்

பாழ் என்பது சூனியம். இஃது எவ்வாற்றானும் உணரப்படாதது. மெய்கண்டார் இவ்வுண்மை எல்லாக் கொள்கையினர்க்கும் உடன்பாடா மாகலின் வேறு கூறுபடுத்தி ஓதியருளிற்றிலர். எனினும் வழிநூலாசிரியர் மட்டமான உணர்வுடையார்பொருட்டு உரைமுகந்து விளக்குகின்றனர். அத்திருப்பாட்டு வருமாறு:

"உணராத பொருள்சத் தென்னின் ஒருபயன் இல்லை தானும்
புணராது நாமும் சென்று பொருந்துவது இன்றாம் என்றும்
தணவாத கருமம் ஒன்றும் தருவதும் இல்லை வானத்து
இணரார்பூந் தொடையும் யாமைக் கெழுமயிர்க் கயிறும் போலும்."

—சித்தியார்.* சு. உ-ச.

பாழ் என ஒரு பொருளில்லை. பொருளெல்லாம் கட்புலனாவது, கருத்துப்புலனாவது, கலப்புப்புலனாவது எனத் தன்மை வேறுபாட்டால் மூத்திறப்படும். சுட்டி உணரப்படும உலகம் முதலியன கட்புலனும். சுட்டாகிய பிழம்பின்றி உண்மை அளவான் உள்ளத்துணரப்படும் அன்பு அறிவு (உகஎ) முதலியன நெஞ்சுகொள் கருத்துக்குப் புலனாவது. கடவுளும் ஆவியும் பிரிப்பின்றிக் கலந்தின்புறுவது கலப்பாற் புலனாவது. இவ் உண்மை தொல்காப்பிய முனிவரனார் ஓதியருளிய நூற்பாவான் உணர்க.

"இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்
அவையில் காலம் இன்மை யான."

—தொல். பொருள்-உசஅ.

---

# இரண்டாம் அதிகரணம்

**இனி இவ்விரண்டு தன்மையும் இன்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாய் உள்ள சிவம் என்று உணர்ப்பாற்று.**

எ - து. மே - ள். எ - னின். மேல் உணர்பொருளியல்பும் உணராத பொருளியல்புங் கூறுமுகத்தான் அசத்தினியல்பை வரைசெய்துணர்த்தியவழி இரண்டும் இவ்வாறாகலான் இவற்றின் வேறாய முதல்வனதியல்பாவது மாயாவாதி கூறும் அநிருவசனம் போலுமென்னுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின்

பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

வாக்கெனப்படு நாதமுடிவான பாசஞானத்தை வாக்கென்றும் அவற்றின் வேறாய பசுஞானத்தை மனமென்றும் உபசார வழக்காற் கூறினார்.

வாக்குமனாதீத கோசரமாய் நின்ற என்றது அவ்விரண்டின் விருத்திகளைக் கடந்து அதீதமாயும் ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவஞானமாத்திரைக்கே விளங்கிக் கோசரிப்பதாயும் நின்றவென்றவாறு.

அவ்வாறு நின்றபொருள் இதுவென அளவைகளான் அறிய வாராமைபற்றி அதுவேயென மகாவாக்கியத்திற் கூறியதனை அநுவதித்துச் சத்தாகிய சிவமாதலைச் செவியறிவுறுத்தார்.

வாக்குமனாதீதம் என்றது தமிழ் நூன்முடிபு: மரவடி மராடியென மரீஇயினாற்போல* மனவதீதம் மனாதீதமென மரீஇயிற்று. அதீதகோசரமென்பது வடநூன் முடிபு.

வாக்குமனாதீதப்பொருளாகலின் உணருருவாந்தன்மையும், கோசரப்பொருளாகலின் உணராதாந்தன்மையும் இல்லையென்பது பெறப்படுதலின் இவ்விரண்டுவகையு மின்றியென்றார்.

**பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும்.**

எ - து. ஏது எ - னின். இவ்விரண்டுவகையுமில்லாத பொருள் அநிருவசனமாய் நிற்பதென்னாது வாக்குமனாதீத கோசரமாய் நிற்பதென்றற்குப் பிரமாணமென்னை யென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) வாக்கு மனங்களால் ஓதி யுணரப்படுவதாய நிருவசனப்பொருட்கு முன்னர்க் கூறப்படுஞ் சாதனங்களினின்று அறியற்பாலதாக வேண்டாமையானும் ஒருவாற்றானும் அறியப்படாத அநிருவசனப்பொருட்குச் சாதனத்தினின்றும் அறியப்படுமாறின்மையானும் இனி இவ்விரண்டு தன்மையும் இன்றி வாக்குமனாதீதகோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற்பாற்றென மேற்கொண்டது (எ - று).

உணரற்பாற்றென்றார் உணர்தலருமை நோக்கி.

பிரகாசம் அப்பிரகாசமென்பன உபசாரவழக்கு.

* பக்கம் கசஅ.

எண்ணிய சத்தன்று அசத்தன்றும் என்றல்என்
கண்ணி உளதேன்றல் மெய்கண்டான்—எண்ணி
அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்தா ளாம்.

எ - து. உ - ம். எ - னின். பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் அவிச்சைவயத்தான் ஞாதாவெனவும் ஞேயமெனவும் பகுக்கப்பட்டு முன்னர்க் கூறப்படுஞ்சாதனங்களி னின்றறியவும்படும் அவிச்சைநீங்கியவழி அப்பகுப்பின்மையாற் சத்தென்றுதல்அசத்தென்றுதல் ஒருவாற்றானும் ஞேயமாமாறின்றிக் கேவல ஞானமாத்திரையேயாய் நிற்பதொன்றாகலான் அது கோசரமாமென்றல் பொருந்தாதென்பாரைநோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எண்ணிய சத்து அன்று அசத்துஅன்று என்றால் உளது என்றல் என்கண்ணி—(பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் விவகாரத்திற்) கருதப்பட்ட சத்தும் அன்று அசத்தும் அன்றெனின் அங்ஙனம் ஒருபொருளுண்டென்றல் யாது பிரமாணங்கருதியோ (அதனைக் கூறுவாயாக. பிரமாணமுண்டெனின் அதற்கு அது பிரமேயமெனப்பட்டு ஞேயமாவான் செல்லுமென்றஞ்சிப் பிரமாணமில்லையென்பையாயின்), மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்துஆம் - சத்தினியல்பையுணர்ந்தோன் ஆராய்ந்தறியிற் காட்சிமுதலிய பிரமாணங்கட்கு விடயமாவதூஉம் ஒருவாற்றானும் பிரமாணமல்லாத சூனியமுமாகிய இரண்டும் (மேற்கூறியவாற்றான்) அசத்தேயாம், ஆதல் சத்து ஆம் அறிவுஅறியா மெய்சிவன் தாள்ஆம்—ஆதலாற் (சாங்கேதாக்கிய முதலியவற்றுட்) சத்தென்றோதப்படுஞ் சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப்பொருள் (சைவபுராண தங்களினுஞ் சைவாகமங்களினும் அன்னியமின்றி நின்றுணரும் அநுபவமாத்திரையிற் கோசரிப்பதென் றோதப்படுஞ்) சிவனருளாவதன்றி நீ கூறுஞ் சூனியமன்று (எ - று).

அறியவென்னுஞ் செயவெனெச்சம் மழைபெய்யக் குளநிறையும் என்புழிப்போலச் செயினென்னும் எச்சப்பொருட்டாய் நின்றது. முற்றும்மை விகாரத்தாற்றொக்கது.

அசத்தாமென மாறுக.

சத்தாகிய மெய்யெனஇயையும். †"அடியளந்தான் தாஅயது" என்றாற்போல அறிவறியாமெய்யென்றது வாளாபெயராய் நின்றது.

---

* 'தத்துவம்' சித்தியார். ௬. ௧ - ௫. † திருக்குறள், ௬௧௦.

சிவன்தாளெனச் சிவசத்தியின்மேல் வைத்து உயர்த்துக் கூறியது உபசாரவழக்கு: *"இறைவனார் கமலபாதம்" என்பதுமது.

இதனாற் போந்தபொருள் சத்தும் அன்றி அசத்தும் அன்றி ஒருபொருள் உண்டெனின் அதற்குப் பிரமாணமென்னை? பிரமாணாதீதமாகிய 'சூனியமெனிற் சூனியமும் அழிபொருளு மாகிய இரண்டும் அசத்தேயென்பது மேற்காட்டினமையாற் பிரமப்பொருள் அசத்தெனப்பட்டுச் சத்தென்னுஞ் சுருதிகளோடு முரணுமாகலின் அவற்றுட் சத்தென்றோதப்படும் பரப்பிரமப்பொருளாவது உண்மைஞானத்திற் கோசரிப்பதென யாங்கூறுஞ் சிவமேயன்றி நீ கூறுஞ் சூனியமன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரமென்றதனை வலியுறுத்திய வாறு மென்க.

எண்ணியறிய விரண்டாம் அசத்தென்பதற்குப் பிறரெல்லாம் வருகின்ற வெண்பாவிற்கூறும் பொருள்படக் கூறியது கூறலாதன்மேலும் ஒரியைபின்றியுரைப்ப.

†உணர்ப அசத்தாதல் ஒன்றுணராது ஒன்றை
யுணருநீ தான்உணராய் ஆயின்—உணரும்உனின்
தான்இரண்டாம் மெய்கண்டான் தன்னால் உணர்தலால்
தான்இரண்டாய்க் காணன் தமி.

எ - து. உ - ம். எனின். பிரகாசித்த பொருளையும் வேறோராற்றான் அறிதுமென வேட்கைசென்றுழி அவ்வாற்றாற் புதுவதாய்ப் பிரகாசிக்கவேண்டுதலிற் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதில்லையென்றல் யாண்டுஞ் செல்லாமையின் வாக்குமனாதீதமென்றல் பொருந்தாதென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உணர்ப அசத்து—நின்னால் அறிவனவாய கருவிகளெல்லாம் மேற்கூறியவாற்றான் அசத்தாம், (அசத்தெனவே அசித்தாதலும் பெறப்படும்) ஆதல் ஒன்று ஒன்றை உணராது—ஆகலான் அவற்றுள் ஒரு கருவியும் ஒன்றாகிய முதற்பொருளை அறியமாட்டாது, உணரும் நீ தான் உணராய்—அவற்றானறிந்து வருகின்ற நீதானும் அதனை அறியமாட்டாய்: ஆயின்—நீயே ஆய்ந்தறிவாய் ஆயின், உணரும் உனின் இரண்டு ஆம்—(அவ்வாறுணரப்படும் பொருள்கள்போல்) உணர்கின்ற நின்னின் வேறாம், மெய்கண்டான் தன்னால் உணர்தலால் தான்

* சிவஞானசித்தி சூ பக்கம், பாயிரம்.

† 'அறிபொருள்' சித். சூ-௫-சூ.

இரண்டாய்க் காணுன் தமி—உயிர்க்கு அறிவு விளங்கும் உண்மை அறிந்தோன் தன்னறிவு அச்சிவனருளினடங்கி அது வாய்நின்று அதனுனே அதனை யறியுமாகலான் ஏனைப்பொருள் களை அறியுமாறுபோல வேறாய் நின்றறிவானல்லன் அத்தனி முதற்பொருளை (எ - று).

இதனுற்போந்தது சத்தாகிய சிவம் பாசஞானத்தானுதல் பசுஞானததானுதல் அறியப்படாது; அறியப்படிற் குடமுதலா யினபோல உயிரின்வேறாய் அவிச்சையான் வருஞ் சுகதுக்கங் களைப் பயப்பதன்றி அவிச்சையினீங்கிய நிரதிசயவின்பத்தினைப் பயவாதாகலான் அவ்வுண்மையுணர்ந்தோன் ஏனையபோல அசத் தாதலின்றித் தனியாய்நின்ற அம்முதற்பொருளை அதனுன் ஒற்றித்து நின்றே காண்பனென நையாயிகர் முதலியோரை மறுத்து வாக்குமனுதீதமாய் நின்றே கோசரமாமென வலியுறுத் தியவாறுமென்க.

உணர்பவென்பது அகரவீற்று அஃறிணைப்பன்மைப் பெயர்சொல்.

ஒன்றும் என்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது.

உனினென்னும் இன்னுருபு நீக்கப் பொருட்கண் வந்தது. ஒற்றிரட்டாமை புறனடையாற் கொள்க. தான் அசை.

*பாவகமேல் தான்அசத்தாம் பாவனு தீதமேனில்
பாவகமாம் அன்றேன்னில் பாழதுவாம்—பாவகத்தைப்
பாவித்தல் தானேன்னில் பாவகமாந் தன்னருளால்
பாவிப் பதுபரம்இல் பாழ்.

எ - து. உ - ம். எ - னின். தானே கோசரமாலன்றித் தன்னுலறிதல் கூடாமையின் தன்னுலே தனையுணருமென்பது தன்னைப்பற்றுதலென்னும் வழுவாமாகலின் அவ்வாறன்றி வாக்குமனுதீதப்பொருள் யோகநூலிற் கூறுந் தியானபாவனை களிற் கோசரமாமென்றலே அமைவுடைத்தென யோகமதம் பற்றிக் கூறுவாரை நோக்கித் தன்னுலன்றிக் கோசரமாகா மையை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பாவகமேல் தான் அசத்து ஆம்—(நீ கூறும் பாவனை ஏனைப்பாவகங்கள்போல மனமுதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும்) பாவகமெனின் அறிவினுலறியப்பட்ட சுட்டாகலான் அப்பொருள் அசத்தாம், பாவனுதீதம் எனின்

* 'பாவிப்பது' சித்தியார். சு. ரு - எ.

பாவகம் ஆம்—கருவிகளை நீங்கிநின்று பாவிப்பதாகலின் அப் பாவனையைக் கடந்ததெனிற் கருவிகணீங்கியவழி ஒன்றுமறியுமா றின்றிக் கேவலமாமாகலான் அது பாவகமாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை, அன்று என்னின் பாழ்அது ஆம்—இவ்விரு திறனுமன்றி அநிருவசனமாகப் பாவிக்கப்படுவதெனின் அது சூனியப்பொருளாம், பாவகத்தைப் பாவித்தல் என்னின் பாவகம் ஆம்—அவ்வாறன்றிப் பாவனைக்கெய்தாத பொருளை எய்தியதாகவைத்துப் பாவகஞ்செய்தலெனின் அது போலிப் பாவனை (யாதலாற் பாவனுதிதம்போலப் பாவனை மாத்திரையே யன்றிப் பயன்படுமாறில்லை. அற்றேல் ஒருவாற்றானும் பாவனைக் கெய்தாத பொருள் பாழாமெனின்). தன் அருளால் பாவிப்பது பரம்—அப்பாவகங்களை யொழித்துத் தனது திருவருளாற் பாவிக்கப்படுவதாம் பரம்பொருள், பாழ் இல்—(ஆகலான் நீ கூறும் பாவனைக்கெய்தாமைபற்றிப்) பாழாதல் இல்லை (எ - று).

தான் அசை.

பாவகத்தைப் பாவித்தலென்பது * "கறைமிடறணியலும் அணிந்தன்று" என்றதுபோலக்கொள்க.

மேலைவெண்பாவில் தன்னென்றது தனது சத்தியேயாக லால் தன்னைப் பற்றுதலென்னுங் குற்றமாதல் யாண்டையதென விடுப்பார் தன்னருளாற் பாவிப்பதென்றார். தன்னருளை அறியு மாறும் அதனாற்பாவிக்குமாறும் ஒன்பதாஞ் சூத்திரத்துட் கூறப்படும்.

யோகநூலார் கூறும் பாவனையாவது இந்நான்கனுள் ஒன் றாகற்பாலதன்றி வேறின்மையின் நான்கினையுங்கூறி மறுத்தார்.

† அறிய இரண்டல்லன் ஆங்கறிவு தன்னால்
அறியப் படான்அறிவின் உள்ளான்—அறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டாது அறிவறிந்து கண்டு.

எ - து. உ - ம். எ - னின். மேற்கூறிப் போந்த பாவனை கட்கு எய்தாதபொருளைத் தன்னருளாற் பாவித்தல்வேண்டா உயிர் பசுத்துவ நீக்கிய காலத்துச் சிவனைப்போல முற்றுமுணர் தன் முதலிய எண்குணங்களுமுடையதென்று ஆகமங்களுட் கூறுதலின் ஆண்டான்மஞானஞ் சிவஞானத்தோடொப்பதன் றிப் பசுஞானமெனப்படாமையான் அவ்வறிவான் அறியப்படுங்

* புறநானூறு, கடவுள் வாழ்த்து.
† 'அன்னியம்' சித்தியார். சு. ௩ - அ.

கோசரப்பொருளென்றலே அமைவுடைத்தென்னுஞ் சிவசம வாதிகளை நோக்கித் தன்னருளாலன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) அறிய இரண்டு அல்லன்—(சிவாகமங்களின் அத்துவிதங் கூறுதலின் உயிர்) தன்னறிவானறிதற்குத் தன்னின் வேறல்லன் ஆகலானும், அறிவின் உள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான்—(சமமாதலின்றித் தூலசூக்கும முறையால் தன்னறிவுக்குள்ளுமாய் நிற்றலின் அவ்விடத்துத் தன்னறிவினால் அறிய வாரான் ஆகலானும், அறிவுக்குக் காட்டு ஆகி நின்றானை—தன்னறிவுக்கு வியஞ்சகமாய் நின்றறிவிக்கும் உயிர்க்குயிராய முதல்வனை, அறிவு கண்டு அறிந்து காட்டாது— ஆன்மஞானமானது தான்கண்டறிந்து தன் குணியாகிய உயிர்க் குக் கோசரமாமாறு காட்டமாட்டாது, மெய் அறியாக் கண் என்ன—(தன்னின் வேறின்றித் தனக்குண்ணிற்றலிற் றன்னாற் காணப்படாது தனக்குக் காட்டாகிநின்ற) உயிரை யறியமாட் டாத கண்ணொளிபோல் (எ - று).

காட்டு முதனிலைத்தொழிற்பெயர்.

அறிவுக்குக்காட்டாகி நின்றானென்னும் பெயரடையானும் ஏதுக் கூறியவாறு.

கண்டறிதல் *"குழிந்தாழ்ந்தகண்" என்றாற்போல ஒரு பொருட்பன்மொழியாய்ச் சிறப்பின்கண் வந்தது.

மெய்யறியாக் கண்ணென்னவென இயைத்துரைக்க. கண் முதலியவற்றை நோக்கி உயிர்சத்துச்சித்தாமென்றவதனை மெய் யென்றார். கண் ஆகுபெயர்.

கண்ணறியாமெய்யென்ன என்பதற்குக் கண்ணையறியாத உடம்புபோலென்றுரைப்பாரு முளர். உடம்பிற்கு அறியுந் தன்மையின்மையானும், உடம்பிற்குக் கண்காட்டாதலுமின்மை யானும், அஃதீண்டுவமையாதற்கேலாமையின் அது போலியுரை யென்றொழிக.

† அது என்னும் ஒன்றன்று அதுவன்றி வேறே
அதுவென்று அறிஅறிவும் உண்டே—அதுவென்று
அறிய இரண்டல்லன் ஆங்கறிவுள் நிற்றல்
அறியும்அறி வேசிவமும் ஆம்.

* நாலடியார், தூய்தன்மை. க.

† 'ஒன்றெனும்' சித்தியார். சு. ௩ - க

எ - து. உ - ம். எ-னின். அத்தன்மையனாகிய முதல்வனைத் தலைப்பட்ட உயிர் அம்முதல்வனோடு ஒன்றாய்ப் போவதேயாகலின் ஆண்டங்ஙனமறிவதூஉம் அறியப்படுவதூஉமாதல் யாங்ஙனமென்னுஞ் சிவாத்துவிதசைவர் சுத்தசைவரை நோக்கி ஒன்றாயவழியும் அறிவதும் அறியப்படுவதும் உண்டென்பதுணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அது என்னும் ஒன்று அன்று—(சத்தாகிய சிவம் ஞேயப்பொருளாய் விசிட்டமாய் நிற்பதென்பது உமக்கும் ஒக்குமாகலான் அச்சிவம் இன்னதென்றறிய வாராது அநிருவசனமாய்நிற்பதொரு நிருவிசேடப் பொருளெனக்கொண்ட மாயாவாதத்தைப்போல) அது என்று அநிருவசனமாய்க் கூறப்படுவதொரு சூனியம் அன்று, (ஆகலான்) அது அன்றி வேறே அது என்றுஅறி அறிவும் ஆங்குஉண்டே—அந்த ஞேயமாத்திரையேயன்றி அதனின் வேறாக வாக்குமனாதீதமாய் நிற்பதொருபொருளென்றறிகின்ற ஞாதாவும் ஆண்டுள்ளதேயாம். (அற்றேல், ஒன்றாதல் பெறப்படாதாலெனின்) அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற்றல் அறியும் அறிவே சிவமும் ஆம்—(உலகத்துப்பொருள்போல்) அது என்று சுட்டி அறியுமாறு முதல்வன் தன்னின் வேறல்லனாய் (அப்பணைந்த உப்புப்போலத்) தன்னறிவின்கண் விரவி வேற்றுமை தோற்றாது நிற்றலான் அறிவிறந்தறிகின்ற அவ்வுயிர் சிவமேயாம் (எ - று).

உம்மை சிவமாயுஞ் சிவமாகாமை விளக்கிநின்றது.

'அதுவென்னும் ஒன்றன்று ஆகலா'னென ஏதுப்பொருள்படக் கொண்டுரைக்க.

அறிவும்என்ற உம்மை இறந்தது தழீஇயது.

அல்லன் என்பது முற்றெச்சம் வேறுமுடிபுகோடலிற்பால் வழுவாகாமையுணர்க.

உண்டேஎன்னும் ஏகாரம் தேற்றம்; ஏனையிரண்டும் அசைநிலை. நிற்றல் நிற்றலானென்றவாறு.

இவ்வெண்பாக்கள் ஐந்தும் முறையே வாக்குமனாதீதம் என்றல் பொருந்தும் கோசரமாம் என்றல் பொருந்தாதென்னும் மாயாவாதிகளையும், கோசரமாம்என்றல் பொருந்தும் வாக்குமனாதீதம்என்றல்பொருந்தாதுஎன்னும்நையாயிகர்முதலியோரையும், பாவனைக்குக்கோசரமாம்என்னும்பாதஞ்சலரையும், ஆன்மஞானத்திற்கே கோசரமாம்என்னுஞ் சமவாதசைவரையும், முத்தியிற் சிவமேயன்றி உயிரென வேறின்மையின் உயிர்க்குக் கோசரம்ஆமாறுயாண்டையதென்னுஞ் சிவாத்துவிதசைவர்முத

வியோரையும் மறுத்து, வாக்குமனாதீதகோசரமாய் நிற்கும் இயல்பு வலியுறுத்தி ஒருபொருள்மேல் வந்தவாறு காண்க.

இவ்வாறு நாலாஞ்சூத்திரமுதலிய மூன்றினும் மேற்பிரமாணத்தாற்கூறிப் போந்த பசுபாசபதிகட்கு இலக்கணங்கூறுமுகத்தான் முறையே கேவலஞ் சகலஞ் சுத்தம்என்னும் மூன்று அவத்தையுங் காட்டப்பட்டன. இம்மூன்றனுள் கேவலம் மருட்கேவலமும், சகலகேவலமும், பிரளயகேவலமும், விஞ்ஞானகேவலமும், அருட்கேவலமுமெனஐவகைப்படும். அவற்றுள், மருட்கேவலமாவது அநாதிகேவலம். சகலகேவலமாவது சங்கரித்தபின்னர்ப் புனருற்பவத்திற்கு ஏதுவாய்ப்படுங் கேவலம்; ஆண்டுச் சூக்குமஞானந்தொழில்உண்டென மிருகேந்திரத்துட் கூறுதலின் அநாதிகேவலத்தோடு இதனிடை வேற்றுமையாமாறு கண்டுகொள்க. பிரளயகேவலமாவது மாயையோடு இயைபின்றி ஆண்டுப்படுங் கேவலம். விஞ்ஞானகேவலமாவது மாயை கன்மங்களென்னும் இரண்டனோடும் இயைபின்றி ஆண்டுப்படுங் கேவலம். அருட்கேவலமாவது தத்துவ சுத்திப் பின்னர்ப்படுங் கேவலம். அது துகளறுபோதத்திற் காண்க. இனிச் சகலமுஞ் சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தமெனமூவகைப்பட்டு ஒரோவொன்று ஐந்துவகைப்படும். அவற்றுட் சகலத்திற்கேவலம் ஐந்தும் "ஒன்றணையாமூலத்து" என்றதனுட்காண்க. சகலத்திற் சகலம் ஐந்தும் "இலாடத்தே சாக்கிரத்தை" என்றதனுட்காண்க. சகலத்திற் சுத்தம் ஐந்தும் *"யோகிற்றருவதோர் சமாதி" என வழிநூலாசிரியர் தொகுத்தோதியது சித்தாந்தசாராவலி யோகபாதத்தின் வகுத்துக் கூறுதலான் ஆண்டுக் காண்க. இனிச் சுத்தமுஞ் சீவன்முத்தி அதிகாரமுத்தி போகமுத்தி இலயமுத்தி பரமுத்தி யென்று ஐவகைப்பட்டுச் சாக்கிரமுதலிய பெயர் பெறும்; அவற்றை முன்னர் வகுத்தோதுப.

## விளக்கம்

### ஒட்டி உணரப்படுவான்

அழிபொருளைச் சுட்டுப் பொருளென்றும், பொய்ப்பொருளைப்பாழ் என்றும் வரைசெய்துணர்த்திய வழிக் கெழுமும் உரிமையுடைய விழுமிய முழுமுதல்வன் தன்மை யாதெனக்கருதின் "**வாக்கு மனாதீத கோசரமாய்**" நிற்பது. அப்பொருளை இன்னதெனக்கூற ஒண்ணாமையின் சேய்மைச் சுட்டாகிய '**அது**' என்னும் சொல்லால் ஓதியருளினர். இது சிறப்பியல்பு. சத்து—உள்ளது. திருவள்ளுவ நாயனாரும் '**உள்ளது**' (௨௨௮) என அருளினர். 'வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அது' என்பது

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௩௬. இருவகை.

"மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்" என்னும் திருமுறைத் திருமொழி. —அ. சிவ - சுடு.

வாக்கென்பது நாலுணர்வு. மனம் என்பது நுண்ணுணர்வு. "நாலுணர்வு உணரா நுண்ணியோன் காண்க" என்பது திருமுறை. எனவே முதல்வன் நுகருணர்வுக்குரியோன். அதனால் அவனை 'ஒட்டி உணரப்படுவான்' என விளக்குவதாயிற்று. இவ் உண்மை ஆளுடைய அரசர் அருளிய திருப்பாட்டான் உணர்க. அது வருமாறு:

"உயிரா வணமிருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியின் உரு வெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
அமரர்நா டாளாதே ஆரூர் ஆண்ட
அயிரா வணமேஎன் அம்மானேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே."
—சு. உடு - க.

உள்ளம் - ஆவி. உணரப்படுவார் - மெய் அடியார். ஒட்டி - வேறற விரவி நின்று. வாழ்தி - வாழச்செய்வாயாக. இது பிறவினை.

மேலும் அடியாரே ஆண்டவன் திருவடியை அடைவிப்பதற்கு நேரான வாயில் என்பது வரும் அடிகள் திருப்பாட்டான் உணர்க:

"உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானால் அடியேன்உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே."
—அ. கோயில் மூத்த - த.

"உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே."
—அ. அதி - க.

## மாறிக்கூட்டுக

'அதுவே சத்தாயுள்ள சிவம்' இதன்கண் 'அதுவே' என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலை. இப்பிரிநிலை ஏகாரம் 'சிவம்' என்பதனுடன் மாறிக் கூட்டுதல் வேண்டும். ஆயின் "அது சத்தாயுள்ள சிவமே." என்றாகும்.

## இலக்கணம்

'வாக்கு மனாதீதம்' என்றது தமிழ்நூன்முடிபு. மன அதீதம் என்பது வழக்கமாய் மனவதீதம் என வருதல்வேண்டும். மனாதீதமென வருவது சிறுபான்மை. அது மரஅடி - மராடி என வருவதை ஒக்கும். (பக்கம். கசஅ)

**உணர்தல்**

ஒன்றனைக் காண்டற்குக் கண்ணும், தீண்டற்குக்* கையும், கேட்டற்குக்காதும், வேண்டற்கு வாயும், நினைத்தற்கு எண்ணமும், பற்றற்கு மனமும், முற்றற்கு எழுச்சியும், முடித்தற்கு இறுப்பும், அடுத்தற்கு உணர்வும் கருவியாதல்போல நுகர்தற்கு ஆவி அதுஅதுவாய்த்திகழும் அறிவாம் உணர்வு கருவி என்க.

ஆகவே 'என்றுணரற் பாற்று' - 'என்று உயர்ந்தோரான் அறியும் பான்மைத்தென்க' எனப் பேருரையாசிரியர் பகர்வாராயினர்.

**விளக்கு**

விளக்கியும் விளங்கியும் இலங்கும் விழுச்சுடர் விளங்குவதற்கு இடனாய் உள்ளது விளக்கு. இக்கருத்தினால் 'பிரகாசம்' என ஓதியருளியது பிரகாசிப்பதை. அங்ஙனமாதலின் ஏற்றுரை எனப்பட்டது.

மாற்றத்தால் ஓதியும் மனத்தால் (உஎ - உணர்வு) உணர்ந்தும் கொள்ளப்படுவதாய துணிவுச் சொற்பொருள் முதல்வன் எனின், இந் நூலகத்துக் காணப்படுவதாய எட்டு ஒன்பது பத்து—நூற்பாக்களால் முறையே கூறப்படும் அருளாசான் வெளிப்போந்து இருளும்மருளும் ஒருங்ககற்றி ஆட்கொண்டு அருமறை பகர்ந்து, ஐந்தெழுத்து எண்ணுவித்து ஆண்டான் அடிக்கே உய்க்கும் திருத்தொண்டாம் இறைபணி நிற்பித்து ஒழுகச் செய்யும் பயிற்சி வேண்டப்படுவதின்று. துணிவுச்சொல்—நிர் வசனம், நிர்வசனம் நிர்ப்பந்தம் போலும் சொல். இவற்றுள் நிர்என்பது உறுதி, துணிவு, மிகுதி முதலிய பொருளைக் குறிப்பதோர் இடைச்சொல்.

இஃது, அண்மையிற் காணும் பரியபொருட்கு ஆடிமுதலியதுணை வேண்டாமையை ஒக்கும். ஒருவாற்றானும் விளங்கப்படாத பொருட்குப்பயிற்சி முதலிய துணைகளான் ஆவதோர் பயன் இன்மையானும், முதல்வன் இவ்விரண்டு தன்மையுமின்றி மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனாய் உள்ளத்துணர்வால் ஒட்டியுணரப்படுவோன்; அவனே முழுமுதல்வன். அதுவே உள்ளதாய சிவம் என்க.

விளக்கினைக் காண்பதற்குத் துணைக்கருவியும் தோமில் பயிற்சியும் வேண்டாப்படாஅமை போன்று விழுத்துணை முழுமுதல்வனைக் காண்டற்கும்பயிற்சி வேண்டப்படாமை அமையும். அவன் அங்ஙனம் இன்மையான் முழுமுதல்வனைக்காண அவன் இன்னருட்டுணையும் ஆவியின் ஒட்டும் அழுத்தமும் வேண்டப்படுவ ஆயின.

'எண்ணிய......................தாளாம்.'

**அறிவு**

ஆண்டானும் ஆவியும் என ஈண்டு இருகூறாகப் பேசப்படுவது மலப் பிரிப்பால் ஆம் அறியாமைக்காலத்து. அந்நிலையில்தான் அறிவது அறியப் படுவது எனப் பகுத்துப் பேசப்படும். அறிவது ஞாதா; அறியப்படுவது ஞேயம். இவற்றை முறையே அறிபவன் அறியப்படுபவன் எனவும் கூறுப. அறியாமை அகன்ற காலத்து இவ்விரு பகுப்புமின்றித் தனி அறிவாகவே நிற்பது பெரும்பொருள். அப்பொருள் உணரப்படும் என்று கூறுவது பொருந்தாது என்பது மாயாவாதி கூற்று. அங்ஙனம் அன்று; ஆண்டவன் பூண்ட அருளால் ஆவியின் உணர்வுக்குப் புலப்படுவன் என்பதே பொருந்திய துணிபு.

**சிவன்தாள்**

சிவமுதல் வழக்கிற் காணப்படும் உள்ளதும் அன்று இல்லதும் அன்று எனக்கூறின் அப்படி ஒரு பொருள் உணடென்பதற்கு எவ்வகை அளவையும் பொருந்தாது. உள்ளதன் உணமை அவ் உள்ளதன் அருளால் உணர்த்த உணர்ந்தவன் ஒட்டி உணரமுடியும் என உரைப்பன். அதுவே உண்மை. அங்ஙனம் உரைப்பவனே மெய்கண்டான். ஆண்டவனோடு வேறறநின்று அறிபவன் ஆவி. அறியப்படுபவன் பிரான். இவ் உண்மை வரும் ஆளுடைய அரசர் திருப்பாட்டானும் உணர்க:

"என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும்முன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தெனே." —ரி. கூக - அ.

அறிந்திலன்-சிறப்பாக அறிவித்திலன், தன்வினை பிறவினைப் பொருளில் வந்தது. இது 'காட்டிக் காண்டல்' என்னும் மெய்ம்மையாகும்.

**இலக்கணம்**

'அசத்தன்றும்' என்பதன்கண் உள்ள 'ஆம்' அசை. 'இரண்டாம் அசத்து' இதன்கண் 'இரண்டாம்' என்பதில் 'இரண்டும்' என்றிருத்தல் வேண்டும். அவ் உம்மை முற்றும்மையாகும்.

"அடியளந்தான்" என்பது வாளா பெயராய் நின்றதற்கு எடுத்துக் காட்டு. ஈண்டு 'அறிவறியா மெய்' என்பது வாளா பெயராய் நின்றதென்க. 'அறிவறியாமெய் என்பது' சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப்பொருள் எனச் சொற்பொருள் பயவாது மெய்ப்பொருள் எனவே பொருள் பயந்து நின்றது. இஃது 'அடியளந்தான்' என்பது அடியால் உலகத்தை அளந்தான் என்று காரணப்பெயர் குறியாது திருமால் என்னும் பெயர் அளவாகவே நின்றதென்பதை ஒக்கும். இல்லையெனில் பின் 'தாஅயது' என்பது உலகை அளந்தது எனப் பொருள்படுவதால் கூறியது கூறலாகும். அத்திருக்குறள் பின்வருமாறு:

"மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு." —திருக்குறள், ௬௧0.

அளவை - ஆராய்ச்சி. அங்ஙனமாகலின் 'அடியளந்தான்' என்பது விழுமிய முழுமுதல் தலைவன் திருவடியை ஆராய்ந்தான் எனத் திருமாலுக்குக் காரணப்பெயராய் நிற்பதென்பதும் பொருந்தும். இவ் உண்மை சேக்கிழார் அடிகள் திருப்பாட்டானும் உணர்க:

"தொழுவார்க்கே அருளுவது சிவபெருமா னெனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகும் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்தும் துதித்துய்ந்த படிவிரித்தார்."
—கஉ. திருஞா—எஅ.

ஆளுடைய அரசர் அருளிய திருப்பாட்டானும் உணர்க:

"தெருளாதார் மூவெயிலும் தீயில் வேவச்
சிலைவளைத்துச் செங்கணையால் செற்ற தேவே
மருளாதார் தம்மனத்தின் வாட்டந் தீர்ப்பாய்
மருந்தாய்ப் பிணிதீர்ப்பாய் வானோர்க் கென்றும்

அருளாகி ஆதியாய் வேத மாகி
அலர்மேலான் நீர்மேலான் ஆய்ந்துங் காணுப்
பொருளாவாய் உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணி யனே." —சு. கக—ச.

சிவன்தாள் என ஓதியது சிவமுதலையே. தாள் என்பது திருவருள். இஃது ஏற்றுரை.

## இயைபின்மை

"எண்ணி அறிய இரண்டாம் அசத்து" இதன்கண் 'இரண்டாம்' என்பதற்கு இரண்டும் என்று பொருள் செய்யப்பட்டுள்ளது. பிறர் அதற்கு வேறு எனப்பொருள் கூறுவர். அக்கூற்றுப் பொருந்தாது. அடுத்த வெண்பாவில் 'தான் இரண்டாம்' என்றதில்வரும் 'இரண்டு' வேறு என்று பொருள் செய்யப்பட்டுள்ளது. ஆகவே ஈண்டும் அங்ஙனம் கோடல் இயைபின்று.

'உணர்ப.........................தமி.'

## மீண்டும் விளக்கம் வேண்டா

கைக்கணியாம் சுவடியினைக் காதலித்துப் பெற்றான் ஒருவன் கற்று வல்லனுய் முற்றுணர்ந்த பின்னும் அதனை அவன் அவாவுவதும் அதன் பொருட்டுச் சில முயல்வதும் இன்மைபோல மாற்றம் மனங்களான் விளங்கிய முதற்பொருளைத் தோற்றம், தோய்வு, தொணடு என்னும் ஏற்றங்களான் ஆயவேண்டுவதின்றும் எனக்கூறுவதுயாண்டும் செல்லாது எனஐயுறுவார் ஐயம் அகற்றி மாற்றம் மனம்கழிய நிற்பதே முதற்பொருள் என வலியுறுத்தியது இத்திருவெண்பா என்க.

## பெரும்பயன்

சுவடியினைக் காண்டலும் கருதலும் போல்வது மாற்றத்தால் மனத்தால் பொருள்களைத் தனக்கு வேறாக உணரும் உணர்ச்சி. இவ் உணர்ச்சி புனலினைக் காண்டலும் கருதலும் உடையாற்கு அழுக்கு அகல்வதாகிய புனிதம் அப்புனலோடு கலத்தலின்மையால், அப் புனலும் தானும் வேறாயுள்ளமையால் ஏற்படாமையை ஒக்கும். புனலிற்கலந்து அழுக்ககன்று தூய்மையுற்றுப்பொலிவுறுவது போன்று சுவடியிலுள்ள நூற்பொருளைத் துறைபோகக் கற்றுக்கலந்து நிறையுணர்வு எய்தி நீடின்பம் பெறுவது. இஃது ஒருபுடை ஒப்பு.

## இன்பும் துன்பே

அறியாமையால் தனக்கு வேறான பொருள்களைத் தன்னதாகக் கொண்டு நிலையா இன்பத்துன்பங்களை நீணுலகோர் கொள்வர். எடுத்துக் காட்டாக உமியகற்றி நொய்யும் நுறுங்கும் களைந்து, கற்போக்கி இற்புக்கு அட்டமைப்பது துன்பம். அதனை அளவிற்குறைத்துண்டு நிறைநலம் பெற்று முறையுற வாழ்வது இன்பம். இவ்விரண்டும் நாளும் மாறிமாறி வருவதால் துன்பமேயாம். இஃது உலகினர்க்கு அறிவுபோற் காணப்படினும் உலகிறந்து ஒருங்கி ஒழுகும் தவத்தோர்க்கு (யோகி) அறியாமை எனவே கருதப்படும். அத்தவத்தோர் காலுணவாக உண்டு வாலறிவன் நற்றாள் கண்டு கலந்து அறிவால் பெறப்படும் துன்பில் இன்பம் உண்டு

வாழ்கின்றனர். அவ்வாழ்வு ஒன்றே அறிவின் பாற்பட்டதாகும். இவ் உண்மை திருவள்ளுவநாயனார் திருப்பாட்டானும் உணர்க:

"மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை." —திருக்குறள், ௩௪௫.

## ஒற்றித்து நின்றுணர்தல்

தொன்மைக் குற்றமும் தொடக்கப்பற்றும் அகன்று 'பற்றற்றான் பற்றினைப் பற்றி' நற்றம் பெற்றுப் பழஅடிமைச் சுற்றத்தோடு முதற் பொருளை வேறறநின்று உணர்வதே விழுப்பமாகும். ஏனை உலகியற் பொருள்களைப்போல் "உள்ளதாய சிவத்தை அறியுங்கால் தன்னறிவு அதன்கண் அடங்கி அதுவாய்நின்று அதனானே அதனை அறியுமாகலான் ஏனைப் பொருள்களைப்போல அத்தனிமுதற் பொருளை வேறாய் நின்று அறிவான் அல்லன்" (பேருரை).

## இலக்கணம்

'உணர்ப' என்பது 'ப' கர ஈறாகக் கொள்ளின் உயர்த்திணைப் பலர்பால் ஈறாகி உணர்வார்கள் என்று பொருள் தரும். இது,

"ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி யுளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலர்அறி சொல்லே."
—தொல். சொல் - எ.

என்பதனால் உணர்க.

'உணர்ப' என்பது 'அ'கர ஈறுயின் அஃறிணைப் பன்மைப்பெயர் ஆகும். உணர்ப—உணர்வன. 'நின்னால் அறிவனவாய கருவிகள்' என்று பொருள்தருவதால் அஃறிணைப் பன்மைப்பெயரே.

உணர் + ப் + அ = உணர்ப. ப் எழுத்துப்பேறு. இஃது,

"அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பான் மூன்றே பலஅறி சொல்லே."
—தொல். சொல் - க.

என்பதனால் உணர்க.

'ஒன்று உணராது ஒன்றை' இதன்கண் ஒன்று என்பது ஒன்றும் என்றுபொருள்படுவதால் முற்றும்மை. அம்முற்றும்மை செய்யுள் திரிபால் தொக்கது.

'உனின்' இதன்கண் 'இன்' நீக்கப்பொருள்தரும் ஐந்தன் உருபு. உனின் என்பது நின்னின்வேறாம் என நீக்குவதால் நீக்கப்பொருள். உன் + இன் = உன்னின் என 'ன்' என்னும் ஒற்று இரட்டித்துவருதல் வேண்டும். அங்ஙனம் வாராமை புறனடையாற் கொள்க.

'உணரும் உனில் தான் இரண்டாம்' இதன்கண் உள்ள தான் அசை.

'பாவகமேல்........................பாழ்.'

### குற்றமின்று

முந்திய திருவெண்பாவில் செம்பொருளாம் சிவனை அவனைவிட்டு நீங்காத அம்மையாம் திருவருளால் காண்டலால் அது தன்னைப்பற்றுதல் என்னும் குற்றம் தங்காது. மேவும் தீப்பண்பாம் வெப்பதனால் சூடதனால் பண்பியாம் தீயை விளங்கக் காணுதலும், ஆசான் அறிவாலே அவனைக் காண்டலும் எப்படியோ அப்படியே எவ்வுயிர்க்கும் வைப்பாம் சிவனை அவன்தன் திருவருளால் ஆவிகள் காண்டலின் தன்னாலே தன்னைக் காண்டல் என்னும் குற்றம் இன்று.

### கருத்து கற்பனைகடந்தவன்

சிவபரம்பொருள் கருதலாகிய தியானத்திற்கும், கற்பனையாகிய பாவனைக்கும் எட்டாதது. எனவே கருத்துகற்பனை கடந்தவன் கடவுள் என்பது கட்டுரை. அங்ஙனமிருப்ப 'யோகநூலிற் கூறும் தியானபாவனை களிற் கோசரமாம் என்றலே பொருத்தமுடைத்து' என்பது எங்ஙனம் பொருந்தும்? இறைவன் தண்ணருளால் அன்றிக் கண்ணவும் கற்பிக்கவும் ஒண்ணாமை காண்க.

### பாவனை

க. பொறிபுலன் கலன்களால் காண்பது சிவம் எனின், அக்கருவி களால் காணப்படும் பொருள் காண்பானுக்கு வேறாய உலகியல் ஆக்கப் பொருளாம். அப்பொருளினைச் சுட்டுப்பொருள் என்றும், அவ்அறிவினைச் சுட்டறிவு என்றும் கூறுப. சுட்டுப்பொருளெல்லாம் தோன்றி நின்று ஓங்கி ஒடுங்கும் அழிபொருளே. இது 'கூத்தாட்டு அவைக்குழாம்' ஒக்கும். அங்ஙனம் கடவுளைப் பாவிக்கின் (கற்பிக்கின்) கடவுளும் அழி பொருளாவர். இங்ஙனம் பாவிப்பது கற்பனையே அன்றிக் கைகூடும் பயன் ஏதும் இன்று. கருவிகளுடன் கூடுவது புணர்வுநிலையாகிய சகலம்.

உ. பொறிபுலன் கலன்களைக் கடந்து நின்று கற்பிப்பதென்னின், பொறிபுலன் கலன்களை நீங்கின் புலம்பாகிய கேவலம் வந்து எய்தும். புலம்பு என்பது உயிர்ப்படங்கு நிலை. உயிர்ப்படங்கிய நிலையில் அறிவு விளக்கம் ஒருசிறிதும் உண்டாகாது. இருளாகிய அறியாமையே மேலோங்கி மூடியிருக்கும். கருங்காழ்கொளுவிய இருட்டறையில் அடைபட்டிருப்பார்க்கு உள்ளும் வெளியும் ஒன்றும் புலனாகாது விழியிருந் தும் குருடாம் நிலையாயிருப்பதுபோல் ஆகும் இது. இந்நிலையில் எங்ஙனம் கற்பனையாகிய பாவனை கைகூடும். அங்ஙனம் கற்பிக்கும் கற்பனை பொய்யே அன்றி மெய்யாகாது. இதனால் கற்பனைக்குப் பொய் என்னும் பொருளும் புனைந்துரைக்கப்படுவதாயிற்று. எனவே இப்பாவனையும் பயனின்றாம்.

௩. பொறிபுலன் கலன்களோடு கூடுதலும் இன்றிக் கூடாமையும் இன்றிச் சொல்ல ஒண்ணாததாய்க் கற்பிப்பதென்னில் அதுவும் கற்பனை மட்டே அன்றிக் கைகூடுமாறில்லை.

௪. 'பசித்தவன் உண்டவனாகப் பாவிக்குமாறுபோல் உணராத பொருளை உணர்ந்ததாக வைத்துப் பாவிப்பது என்னின்,' அது பெற் றெடுக்காத பிள்ளையும், கற்றுணராத அறிவும், கிட்டாத பொருளும், எட்டாத பழமும் கைகூடிற்று என்று வரும் கற்பனையால் கிடைப்பது யாது? ஏதும் இன்று.

### பாழ் அன்று

கடவுள் பாவனைக்கு எய்தாமைபற்றிப் பாழ் அன்று. ஆசான் அறிவு அவன் அன்போடு விழையும் மாணவர்க்கு அருளோடு ஈந்தாலன்றி அம் மாணவர் பெறமுடியாமை கண்கூடு. அதுபோல் முழுமுதல்வனும் அன்பொடு பராவும் மெய்யடியார்கள்தம் அகத்தின்கண் இன்பொடு விளங்கித் தன் திருவருளால் அவர்கள்பால் விரவிநின்று உணர்ச்சிக்கு ஒருவனுவன். உணர்ச்சியிலுண்டாம் இன்பம் பொய்க் கற்பனையால் ஆவ தன்று. ஆசான் கற்பித்ததாகவும் மாணவர் கற்றதாகவும் எத்துணைதான் கற்பனை செய்யினும் கைகூடுவது ஏதும் இல்லை. இறந்துபோய உயிர் மீண்டு வந்ததாகக் கற்பனைசெய்து எத்துணைதான் முயலினும் அவ் உடல் எழுந்து நடவாது ; அழுந்தி இன்புறாது.

எனவே, தனிமுதலின் தண்ணருளால் கற்பனையுறுவதே செம் பொருள். இதனையே 'தன்னருளால் பாவிப்பது பரம் பாழ் இல்' என்று ஓதியருள்வாராயினர். இவ் உண்மை பட்டினத்துப் பிள்ளையார் திருப் பாட்டாலும் உணர்க,

"மாயநட் டோரையும் மாயா மலமெனும் மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்அருளாம்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்து
ஏயுமதேசிட்டை என்றான் எழிற்கச்சி ஏகம்பனே."

பட்டின. ௩. திருஏ - ௧௦.

தாய் - முதல். தாதை - உறுதியாகிய பேரின்பத்தைப் பதிப்பவன்.

### அருட்பாவனை

திருவுருவப் பாவனை எல்லாம் சிவனருளாம் தாய் சிவனும் தாதை யொடு சேர்த்து இன்புறத் துணை செய்யவும் அவன் இன்புறுத்தவும் வாயிலாவதே அன்றி அன்பால் விளைந்து அழுத்தி இன்புறுத்தும் அவ் இன்பினைக் கருதவோ கற்பனைபுரியவோ கட்டுரைக்கவோ காரண மாவதின்று. நேரும் நெய்யின் உறுசுவையினையே யாரும் சுவைப்பதன்றிக் கூற ஒண்ணுதெனின் மெய்யினும் மெய்யாய் மிளிரும் மெய்ப்பேரின்பச் சுவையினைத் துய்ப்பதன்றி உய்த்துரைப்பது செல்லாது. கண்ணுடி முகங்காட்டிக் களிப்புறுத்துவது போலவும், ஆசான் வலிந்து மாணவர்க்கு வேண்டுவன ஆக்கி அருளுவதுபோலவும், ஈன்றார் மக்கட்கு இயற்றுவது போலவும் திருவருளே ஆவியின் உணர்வோடொன்றிக் கற்பனை முதலியவற்றைச் செய்விக்கும். ஆவியின் கடன் அருள்வழி நிற்றல் ஒன்றே. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"சேவிப் பதன்முன்னே தேவியையுத் வாகனத்தால்
பாவித் திரய கமலம் பதிவித் தங்கு
யாவர்க்கும் எட்டா இயந்திர ராசனை
நீவைத்துச் சேமி நினைந்தது தருமே." —௧௦. ௪ - ௧௩௬௮.

"பாவிக்கின் மனுதி வேண்டும் பயனிலை கரணம் நீத்துப்
பாவிப்பன் என்னில் என்னை பழுதுள பாவகத்தால்
பாவிக்க ஒண்ணுன் என்று பாவிப்பன் என்னின் நீஎன்
பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றி னோர்க்கே."

—சிவப். ௧௦ - எ.

## இலக்கணம்

'பாவித்தல்தான்' என்பதன்கண் உள்ள 'தான்' அசை. 'பாவகத்தைப் பாவித்தல்' என்பதன்கண் உள்ள 'பாவித்தல்' செய்தல் என்னும் பொருள் தருவது. ஆயின் பாவகத்தைச் செய்தல் என்றாகும். 'கறைமிடறு அணியலும் அணிந்தன்று'—'நஞ்சினது கறுப்பு திருமிடற்றை அழகுசெய்தலும் செய்தது' என்பது போன்றதாகும் இது.

'அறிய.....................................கண்டு.'

## சிவசமம் ஆகாது

ஆவி சுட்டறிவினாலும் சிற்றறிவினாலும் அறிதலே கற்பனை. மெய்யாகிய—உள்ளதாகிய சிவம் அதன்கண் புலனாகாது. புலனாவது கோசரமாவது. ஆவி ஆண் என்னும் முனைப்புடன் நிற்குங்கால் இரண்டு மாத்திரை பெறும். அப்பொழுது அறிவும் முனைத்திருக்கும். அறிவும் இரண்டு மாத்திரை. ஆண் என்னும் நிலையே யான் என்னும் செருக்கு. யான் இரண்டு மாத்திரை. அறிவு என்னும் நிலையே எனது (இரண்டு மாத்திரை) என்னும் செருக்கு. இந்நிலையே பிணிமையாம் பசுத்துவம். இவை நீங்கி, ஆண் பெண்ணாகவும், அறிவு அன்பு ஆகவும் விளங்குதல் வேண்டும். அப்பொழுது இரண்டும் தனித்தனி ஒவ்வொரு மாத்திரையாகும். சிவம் இரண்டு மாத்திரை. மெய் ஒரு மாத்திரை. இன்பு ஒரு மாத்திரை. இந்நிலையே 'அன்பினால் இன்பம் ஆர்வார்' எனவும், 'ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே என்னுடைய அன்பே' எனவும் கூறப்படும் சிவத்தன்மை.

இதனையே ஆவி வீடுபேற்றின்கண் ஆண்தன்மை நீங்கிப் பெண்தன்மை எய்திச் சிவனைப்போல முற்றுமுணர்தல் முதலிய எண்குணங்களும் உடையன் எனக் கூறப்பெறும் தலைமையாம் சிவசமம் என்ப. அப்பொழுது ஆவியின் அறிவு சிவனறிவே. அச்சிவனறிவால் காண்டும் என்ப. அது பொருந்தாது. சிவனைக்கூடிச் சிவமாம் பெருவாழ்வு எய்தினும் ஈரிடத்தும் ஆவி அடிமையே ஆதலின் சிவசமம் ஆகாது. ஈரிடத்தும் அடிமை என்பது,

> ஒன்றால் உயிர்கள் உலகம் உணர்ந்தியங்கும்
> நன்றாக ஈரிடத்தும் நாம்அடிமை—பொன்றாவே
> தோன்றும்ஒடுங் கும்மாயை சொல்ஐந்தால் வீடுண்டாம்
> தோன்றும்இடம் மூன்றில் தொழு.

தலைவனை மணந்த பெண் தலைவிஎனப் பெயர்பெறுவள். ஆனால், தலைவனுக்கு நிலையாம் மனைவியே. அவள் எல்லாராலும் வணங்கப்படுவள். ஆனால் தலைவன் அவளாலும் வணங்கப்படுவன். ஆனால் தலைவன் அவளை வணங்கான். இது திருக்கோவில் முதல்வனுக்கு உறையுள்—மனை. அத்திருக்கோவில் எல்லாராலும் வணங்கப்படும். ஆனால் முதல்வன் அத்திருக்கோவிலை வணங்கான். ஆயின் ஆவி சிவம் எனப் பெயர்பெறினும் சிவனருளால் அல்லது அச்சிவ மெய்யினைப் பேரின்பினை உண்ணாது. உண்பதே அறிவது. இதுவே மெய்க்கல்வி. இதனாலேயே "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை" எனவும், "கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி" எனவும் திருமுறைத் தீந்தமிழ்ச்செல்வம் முழங்குவதாயிற்று.

ஆளுடைய அரசர் அருளிய:

"உரைமாலை எல்லாம் உடைய அடி
உரையால் உணரப் படாத அடி
வரைமாதை வாடாமை வைக்கும் அடி
வானவர்கள் தாம்வணங்கி வாழ்த்தும் அடி
அரைமாத் திரையில் அடங்கும் அடி
அகலம் அளக்கிற்பார் இல்லா அடி
கரைமாங் கலிக்கெடில நாடன் அடி
கமழ்வீரட் டானக் கபாலி அடி." —கூ. கூ-எ.

என்னும் திருப்பாட்டில் அரை மாத்திரை என்பது ஆவி மூனைப்பால் ஆண் எனப்பட்ட நிலையில் இரண்டு மாத்திரைபெற்று நின்றது. இயற்கையாகிய ஒரு மாத்திரை அளவுப்பொருள் சார்பால் இருமாத்திரையாவது போல். மூனைப்பகல ஆவி ஆண்டானைப் பேணுவதால் பெண் எனப்பட்டு இரண்டு மாத்திரையின் பாதியாகிய ஒரு மாத்திரையாகிய இயற்கை ஆகின்றது. அவ் ஒருமாத்திரையாகிய பாதியே ஈண்டு 'அரை மாத்திரை' என அருளப்பட்டது. இஃது அரைப்பங்கு என்பது போன்றது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களானும் உணர்க:

"சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்தி ரமுங்கு லமுங்கொண் டென்செய்வீர்
பாத்தி ரஞ்சிவம் என்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளுமாற் பேறரே." —நி. கூ0-௩.

"எற்கமலஞ் செய்யும் எழின்மாசி லாமணிதன்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தேன்—நற்கமலை
ஊரிற் குறுகினேன் ஓர்மாத் திரைஅளவென்
பேரிற் குறுகினேன் பின்." —குமரகுரு. பண்டா-உ௪.

சிவம் ஒன்றே ஆண். ஆவியாகிய சீவன் எல்லாம் பெண். ஆண் பெண்ணுவதே ஓர் மாத்திரை அளவு பேரில் குறுகுதல். சீவன் என்பது மூன்று மாத்திரை. சிவம் என்பது இரண்டு மாத்திரை. ஆயின் மூன்று மாத்திரை இரண்டு மாத்திரையளவில் குறுகியது என்பதால் ஓர் மாத்திரை எனல்வேண்டும். அல்லது 'சீ' இரண்டு மாத்திரை. 'சி' ஒரு மாத்திரை. இங்ஙனம் கொள்ளின் பெயரின் எழுத்தில் குறுகுதல் ஆகும். ஆண் என்பதற்கு ஆளுதல் அடி. ஆளுதல் என்பது சார்ந்தாரை உயரச் செய்து தன்வழிப்படுத்தல். இவ்வுண்மை வரும் தமிழ்ப் பொதுமறையான் உணர்க:

"நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்." —திருக்குறள், ௧0உகூ.

திருவள்ளுவ நாயனார் அருளிய திருக்குறள் தமிழ்ப்பொதுமறை. நால்வர் ஓதும் தமிழ் தமிழின் சிறப்பு மறையும் மறைமுடிவும். திருமூலர் சொல் தமிழாகமம். ஆகமம் இறைவன் நூல். ஆ - ஆவி, கமம் - நிறைவு. ஆவியின் அறிவு நிறைதற்கு ஏதுவாம் நூல் ஆகமம். இவை எல்லாம் கன்னித் தமிழ்நூல்களே ஆதலின் இன்னினிய ஔவைப் பிராட்டியாரும் ஒரு வாசகம் என்னும் உண்மை போதர அருளிப் போந்தார். அது வருமாறு:

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவாம்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென்று உணர்." —நல்வழி, ௪0.

திருநான்மறை திருஐந்தெழுந்து. அது 'சிவசிவ' என்க. மூவர் தமிழ் முப்பாலாம் பொதுமறையின் சிறப்புமறை. முனிமொழியும் கோவை திருவாசகம் அம்மறையின் முடிவாம் வீடுபேறு. இது, 'பாடிப் பலநாள் பயின்றதற்பின் மூவரடி, நாடினரே நம்மடிகள் நாயனருள்கூடியதும், வீடே விழைந்துள்ளார், வேண்ட இருந்த அவர், ஏடே முழுக்கனிவாம் இங்கு.' என்பதனால் உணர்க.

## அகத்துறையும் அரும்பொருள்

ஆண்டான் ஆவியோடு மெய்ப்புணர்ப்பால் கலந்து அகத்து உறைந்தருளுகின்றனன். அதனால் அவன் புலனுதற்குரிய தன்மையில் வேறுபட்டு நில்லான். எனவே ஆவி தன்னறிவுகொண்டு அவனை அறியா. மேலும் அவன் ஆவிக்குக் காட்டாகி நிற்கின்றான். இது கண்ணொளிக்கு ஆவி காட்டாகி நிற்பதை ஒக்கும். ஆவி கண்ணொளியொடு கலந்து நுண்மையாய்க் கண்ணொளியின் அகத்து நிற்கின்றது. அக்கண்ணொளி அவ் ஆவியினை வேறு காணமாட்டாது, ஏனைய பொருள்களை வேறு காண்பது போன்று. என்னை? ஆவி அகத்து நிற்றலான். இதுபோல் ஆண்டானும் ஆவியின் அகத்து நிற்றலால் அவனை ஆவியும் வேறு காணாது. அவனருளாலே ஒற்றித்துக் காணும். இது நெய்யின் உறு சுவையும் நீண்மலரின் நறுமணமும், வையத்து ஆசான் மாண்அறிவும் வேறுகாணப்படாது அப்பொருள்களகத் துறைதலான் ஒற்றித்துக் காணப்படுவதையும் கட்டுரைப்பதையும் ஒக்கும்.

## இலக்கணம்

அல்லன் படான் உள்ளான் நின்றான் என்பன குறிப்பேதுக்கள். 'அறிவுக்குக் காட்டாகி நின்றான்.' இதன்கண் 'காட்டாகி' என்பது 'நின்றான்' என்னும் பெயர்க்கு அடை. இவ் அடைமொழியானும் ஓரேதுக் கூறியவாறு காண்க. இது வள்ளுவரருளிய வாய்மையோடொக்கும். அது வருமாறு:

"முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு." —திருக்குறள். ௧௧௧௩

வேய்த்தோளவள் பெயர். வேய் அடை.

'கண்டறிதல்' இத்தொடர் 'அறிவு அறிந்து கண்டு' என்பதனைக உள்ளது. காண்டல் - அறிதல். அறிதல் - அறிதல். இரண்டும் ஒரு பொருளையே தருதலால் சிறப்பித்துக் கூறுதலாகும்.

'கண்' என்பது கண்ஒளியைக் குறித்தலால் ஆகுபெயர்.

'அது என்னும்....................ஆம்.'

## வீடுபேற்றின் நிலை

ஆவி வீடுபேற்றின்கண்ணும் ஆண்ட முதல்வனுக்கு அடிமையாய் நீண்ட பேரின்பம் பூண்டு என்றும் இன்புற்றுப் பிரிப்பின்றி நிற்கும்.

அம்முதல்வனோடு வீடுபேற்றின்கண் ஆவி என ஒன்றின்றி ஒன்றாய்ப் போகும் என்னும் சிவாத்துவிதசைவர் கொள்கை பொருந்தாது. பொருந்துமெனின், பெறுவானும் பேறுமிலாப் பேறும் ஒருபேறாமோ? உறுவான் உழைப்பெல்லாம் வீணாக ஒண்ணுமோ? என்று வினவுவார்க்கு விடையின்மை அறிக. பெறுவானும் பேறும் இல்லை எனின், பெறுவிப்பானாகிய பெரும்பொருளும் இல்லை என்று முடியும். அந்தோ இஃதென்ன பேதைமை. இது பற்றியே நாயனாரும்,

> " பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை
> கைஅல்ல தன்கட் செயல்." —திருக்குறள் - அ௩உ.

என்று அருளுவராயினர்.

## கலப்பின்பெற்றி

நீரில் உப்புக் கலந்து ஒன்றாகிவிடுகின்றது. ஆனால் அந்நீரில் சுவையால் உப்பு இருக்கின்றதென்று நாப்புலனுக்குப் புலனாகுமே அன்றிக் கட்புலனுக்குப் புலனாகாது. என்னை? முழுவதும் கலந்து வேற்றுமையின்றி ஒற்றுமையுற்று விளங்குவதேயாம். நீரை ஒக்கும் ஆவி. உப்பை ஒக்கும் ஆண்டவன். இருபொருள்களும் கலந்து வேற்றுமையின்றி ஒற்றுமை உற்றுத் திகழினும் இருபொருள்களும் அழியாமல் என்றும் இன்புறுதலும் இன்புறுத்தலும் ஆகிய இயற்கையோடு விளங்கும்.

## முறையே அறியும் ஒப்பு

ஆவிகள் ஆண்டவனை அவன் திருவருளால் அறிந்து அவன்கண் அடங்கி, அழுந்தி இன்புறும். இது பகலவனைக் காணுங்கண் அப்பகலவன் ஒளியைத் துணையாகக்கொண்டு காண்பதை ஒக்கும். சொல்லைத் துணையாகக் கொண்டு பொருளை அறிவதையும் ஒக்கும். அருளால் பொருள் காண்பதன்றி அறிவால் காண்பதன்று. அறிவால்காண முனைக்கின் இருளே புலனாகும். இவ்வுண்மை தாயுமானச் செல்வர் திருப்பாட்டான் உணர்க :

> " அருளால் எவையும் பார் என்றான்—அத்தை
> அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்
> இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
> என்னையும் கண்டிலன் என்னடி தோழி. சங்கர."
> —தாயுமானவர் - ஙிச. ஆனந் - க௩.

## இலக்கணம்

'அறியும் அறிவே சிவமும் ஆம்.' இதன்கண் உள்ள 'உம்மை' எதிர்மறை. எதிர்மறை ஆகுங்கால் அவ்வும்மைக்குப் பொருள் சிவம் ஆகியும் சிவம் ஆகாமையைக் குறிக்கும்.

'அது என்று அறி அறிவும் உண்டே.' இதன்கண் உள்ள 'உம்மை' எச்சம். இவ்வெச்சம் முன்வந்ததைத் தழுவியதாயின் இறந்தது தழுவியது என்றும், பின்வந்ததைத் தழுவியதாயின் எதிரது தழுவியது என்றும் கூறுப. 'அறி அறிவும்' என்ற உம்மை முன்வந்த 'அது' என்னும் முதல்வனைத் தழுவிநின்றது. எனவே இஃது இறந்ததைத் தழுவியதாகும். பொருள்: முதல்வனே அன்றி ஆவியும் உண்டென்பதாம். இதற்கு விதி :

"எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே."
—தொல். சொல் - உருரு

'அறிய இரண்டல்லன்.' இதன்கண் 'இரண்டல்லன்' என்பது முற்று. ஆனால் முற்றுப்பொருள் தரவில்லை. இரண்டல்லனாய்—வேறு அல்லனாய் என்னும் எச்சப்பொருள் தருகிறது. எனவே முற்றெச்சம். (பக்கம். உஅஎ)

## பொருந்துமுறை

க. 'எண்ணிய' என்னும் முதல் திருவெண்பாவால் 'மாற்றம் மனம் கழிந்தது' என்பது பொருந்தும். ஆவிக்குப் புலனும் என்பதுபட 'நின்ற மறையோன்' என்பது பொருந்தாது என்பர் மாயாவாதிகள். அவர் கூற்றை மறுத்துப் புலனும் என்பது வலியுறுத்தப்பட்டது. புலன்—கோசரம்.

உ. 'உணர்ப' என்பதனால் புலனும் என்பது பொருந்தும். 'மாற்றம் மனம் கழிந்தது' என்பது பொருந்தாது என்பர் அளவை நூலார். 'மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்' என்பது வலியுறுத்தப்பட்டது.

ந. 'பாவகமேல்' என்பதனால் கற்பனைக்குப் புலனும் என்னும் பாதஞ்சலர் கூற்று மறுத்து அருளால் பாவிப்பது—கற்பிப்பது என வலியுறுத்தப்பட்டது.

ச. 'அறிய' என்பதனால் ஆவியின் சுட்டறிவு சிற்றறிவுக்குப் புலனும் என்னும் சிவசமவாத சைவரை மறுத்து முற்றறிவிற்கே புலனும் என வலியுறுத்தப்பட்டது.

ரு. 'அதுஎன்னும்' என்பதனால் வீடுபேற்றின்கண் எல்லாம் சிவனே அன்றி ஆவி என வேறின்மையின் ஆவிக்குப் புலனும் என்பது பொருந்தாது எனபர் சிவாத்துவிதசைவர். வீடுபேற்றின்கண்ணும் ஆவி அழிவதன்று. 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' அறிவிறந்தறிந்து இன்புறும் என வலியுறுத்தப்பெற்றது. இவ்வாற்றால் இவ்ஐந்து திருவெண்பாவும் ஒருபொருள் பயப்பதால் முதல்வன் புலனும் முறையின் மேலன.

## மும்மைநிலை

அளவை இயலாகிய ஒன்று இரண்டு மூன்றும் நூற்பாக்களால் இறை தளை உயிர் மூன்றுக்கும் வழியளவையான உண்மையும், தன்மையாகிய இலக்கண இயலில் எதிர்நிரல் நிறையால் நான்கு ஐந்து ஆறும் நூற்பாக்களால் உயிர் தளை இறை என்பவற்றின் சார்புத்தன்மைகளும் ஓதியருளினர்.

நான்கு ஐந்து ஆறு ஆகிய மூன்று நூற்பாக்களாலும் முறையே புலம்பு, புணர்வு, புரிவு—கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்று நிலைகளும் விளக்கப்பட்டுள்ளன.

## ஐந்நிலை

புலம்பு: புலம்பிற் புலம்பு, புணர்விற் புலம்பு, இருமைப்புலம்பு, ஒருமைப்புலம்பு, புரிவிற்புலம்பு என ஐவகைப்படும். இவற்றை முறையே

மருட்கேவலம், சகலகேவலம், பிரளய கேவலம், விஞ்ஞான கேவலம், அருட்கேவலம் என்ப.

௧. பிலம்பிற்புலம்பு—மருட்கேவலம்: ஆவி ஒட்டிநிற்கும் மலமாகிய ஆணவத்தோடுகூடி அறியாமை வயப்பட்டு அறிவு விளங்காது தொன்மையே நன்மையின்றி நிற்கும் புன்மை.

௨. புணர்விற்புலம்பு—சகல கேவலம்: ஆவி உடல், கலன், உலகு, உணு முதலன பெற்றுப் போக்குவரவு புரிந்து வருங்கால் மலம் அகலாமையால் வினைச்செவ்வி வாய்ப்ப ஆண்டான் திருவருளால் ஒடுக்கப்படும். ஒடுக்கியபின் மீண்டும் ஐந்தொழிற்படுதற்கு வேண்டும் நுண்மை ஐந்தொழில் நிகழும் நிலை.

௩. இருமைப்புலம்பு—பிரளய கேவலம்: இருமலத்தார்க்கு ஒடுக்கத்தின்கண் செய்வது.

௪. ஒருமைப்புலம்பு—விஞ்ஞான கேவலம்: ஒரு மலத்தார்க்கு ஒடுக்கத்தின்கண் செய்வது.

௫. புரிவிற்புலம்பு—அருட்கேவலம்: அருளிற் புணர்ந்துய்ய உடல், கலன், உலகு, உணு ஆகிய மாயையின் ஆக்கப்பாடுகளும், வினையின் ஆக்கப்பாடாகிய இருவினையும், மலத்தின் ஆக்கப்பாடாகிய ஆணவம் அல்லது செருக்கும் மலநீக்கத்தின்பொருட்டு 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனல்' இனைய பொருத்தப்பட்டன. அவனருளால் இவை அகல 'வீழ்நாள் படாஅமை நன்றாற்றலும்,' 'வேண்டாமை வேண்டலும்,' 'ஒப்பில் விழுச்செல்வம்' தப்பின்றிப் பெறுதலும் ஆகிய நற்றவம் முயன்று, 'இறப்பில் தவத்தால் சிறப்பொடு' உறச்செய்யும் வனப்பென்னும் அருளாய் நிற்றல்.

இவ்வுண்மை சீகாழிச் சிற்றம்பலநாடிகள் அருளிச்செய்த வரும் துகளறுபோதத் திருப்பாட்டான் உணர்க:

"பகல்இழந்த வான்போல் பரவுமல நீயா
இகலறவே நின்றாய் இழந்தாய்—அகலறிவு
வாடாத முத்தியினில் வாய்ந்தஅருட் கேவலம்நீ
நாடாத கேவலம்முன் நாள்." —துகளறு. கேவலம்—௨௫.

அருட்கேவலம் - திருவருட் செயலாய் நிற்றல். மருட்கேவலம் - செயலின்றிக் கிடத்தல். தாயுமானச்செல்வர் அருளுவதும் காண்க:

"ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ."
—தாயுமானவர். ௧௪. நிற்கு-௨அ.

புணர்வு மூவகைப்படும். அவை புணர்விற்புலம்பு, புணர்விற்புணர்வு, புணர்விற்புரிவு என்ப. இவை ஒவ்வொன்றும், முறையே நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என ஐவகைப்படும்.

௧. புணர்விற்புலம்பு: 'ஒன்றணையா' (பக்கம். ௨௩௪) என்னும் திருவெண்பாவின்படி புருவநடு, மிடறு, நெஞ்சம், கொப்பூழ் என்னும் இடங்கள்வழிக் கீழ்நோக்கிச்சென்று மூலத்துறைதல்.

௨. புணர்விற்புணர்வு: 'இலாடத்தே' (பக்கம். ௨௩௬) என்னும் திருவெண்பாவின்படி நனவு நிலையாகிய புருவநடுவில் நனவில்நனவு முதலிய ஐவகை நிலையினை அடைதல்.

௩. புணர்விற்புரிவு: நெஞ்சு, மிடறு, முதல்நா (நாக்கின் அடி), புருவநடு, உச்சித்துளை (பிரமரந்திரம்) என்னும் ஐந்திடங்களிற் படும் பாடு. இவ்வுண்மை வரும் சித்தியார் திருப்பாட்டானும் உணர்க:

"இருவகை சாக்கி ராதி அவத்தைகள் இயல்பு தானும்
ஒருவகை கீழே நூக்கி உற்பவங் காட்டும் ஒன்று
பெருகமேல் நோக்கித் தீய பிறப்பறுத் திடுமி யோகில்
தருவதோர் சமாதி தானும் தாழ்ந்துபின் சனனஞ் சாரும்."
—சித்தியார். ௪. ௩-௩௪.

## ஐவகைப் புரிவு

வீடு, முதன்மை, துய்ப்பு, தூங்கல், பேறு எனப் புரிவும் ஐவகைப் படும். இவை முறையே சீவன்முத்தி, அதிகாரமுத்தி, போகமுத்தி, இலயமுத்தி, பரமுத்தி என்ப. இவை தூநனு முதலிய ஐம்பெயர் பெறும். தூநனு முதலியவற்றை நின்மல சாக்கிரம் முதலனவாகக் கூறுப. இவ் ஐந்தும் முறையே எழு, எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்றாகிய ஐந்து நூற்பாக்களானும் நுனித்துணர்ந்துகொள்ள ஓதியருளினர். இவை முறையே 'இருதிறன் அறிவுளது,' 'தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு,' 'தண்ணிழலாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்து,' 'இறைபணி நிற்றல்,' 'அயரா அன்பின் அரன்கழல் செலல்' என்பன வற்றால் இனிது விளங்கும். வீடு - வீட்டுயிர்; அவா அற்றோன்.

## கருத்து

ஊழே ஒருநிலை இருநிலைப் பொருள்உள.

## முதுமொழி

சுட்டுப் பொருளெல்லாம் தோன்றும்ஒடுங் கும்மாயை
சுட்டாப் பொருள்இறைவன் துய்ப்பவன்நீ—ஒட்டியுணர்
"எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு." —திருக்குறள், ௩௫௫.

போதுவியல்பு முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்பியல்பு

## சாதனவியல்

---

### ஏழாம் சூத்திரம்

யாவையும் சூனியம் சத்தேதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்திலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா.

**எ - து. சூ - ம். எ - னின். மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.**

*எ - து. க-ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ - ள்.) *தூலாருந்ததி நியாயம்பற்றி மேலே ஆறுசூத்திரங்களினுஞ் சிவாகமங்களிற் கூறப்படும் முப்பொருள்களது பொதுவியல்பு பிரமாணமுகத்தானும் இலக்கணமுகத்தானும் ஆராய்ச்சி செய்துணர்த்திய ஆசிரியர், அம்முப்பொருள்களது சிறப்பியல்பெனப்படும் உண்மை சாதனமுகத்தானும் பயன் முகத்தானும் ஆராய்ச்சிசெய்துணர்த்துவான்புகுந்து முதற்கண் மூன்றுசூத்திரங்களான் அவற்றையறிந்து அதனானாயபயன் பெறுதற்கேதுவாகிய சாதனங்கூறிய தொடங்கினார். அவற்றுள் இச்சூத்திரம் உணர்உருஅசத்தெனவும் இருதிறனல்லது சிவசத்தெனவும் மேலைச்சூத்திரத்தான் வரைசெய்துணர்த்தியவழி அங்ஙனமறியும் பொருள் அவ்விரண்டினுள் ஒன்றோ வேறோ என்னும் ஐயப்பாட்டின்கண் அவ்விரண்டினுள் ஒன்றாகற்பாலதென்பார் மதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்துக்குப் புறனாக எடுத்து ஒரொழிபாகிய சதசத்தினியல்பு வரைசெய்துணர்த்து முகத்தானே சாதித்துப் பயன்பெறுதற்குரிய அதிகாரியினியல்பாவது இதுவென்ப துணர்த்துதல் நுதலிற்று (எ - று).*

*அதிகாரமும் ஒத்தும் வேறாயவழியும் இயைபுணர்ந்து கோடற்பொருட்டுக் கருத்துரை அவ்வாறு செய்தாரென்பது.*

இப்புறனடையை வடநூலார் வாக்கியசேடமென்ப.

இதனுள் கூறப்படும்மூன்றதிகரணமும் மூன்று புறனடை போலுமென மலையாமைப்பொருட்டு ஓர் புறனடையென்றார். முன்னையவிரண்டும் இறுதிஅதிகரணத்தைச் சாதித்தற்கு ஏது வாய் ஒரு பொருண்மேல் வந்தனவேயாம் என்பது கருத்து.

ஒன்றனை யறிந்தவழி அதனையை பயன்பெறுதற்குரிய முயற்சிசெய்யலுறுவார்க்கு அதனைச் சாதிக்குமாற்றல் தமக் குண்டென்பதூஉம், சாதித்ததனால் வரும் பயன் இதுவென் பதூஉம், அதனைப் பயப்பித்தற்குரிய சாதனமாவது இதுவென் பதூஉம், அதுவருவாயும் உணர்ந்தாலன்றி அதன்கண் மன வெழுச்சி செல்லாமையின் ஈண்டோதப்படுஞ் சாதனஞ்செய்து பயன் பெறுதற் குரிமையுடைய அதிகாரியி னியல்புணர்த்துவ தாய இச்சூத்திரம் முதற்கண்வைக்கப்பட்டது.

இதன் பிண்டப்பொழிப்பு : மேலைச்சூத்திரத்துட் கூறிப் போந்த இரண்டனுள், வாக்குமனாதீதமாகிய சிவசத்தின் சந்நிதி யின் உணர்உருவாகிய அசத்தெல்லாம் பாழாகலின் சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிதல்செய்யாது : அசத் தாகியபிரபஞ்சம் அறிவில்லாத சடமாகலின் சத்தாகியசிவத்தை அறிதல் செய்யாது : ஆகலாற் பாரிசேடவளவையான் இரு திறன் அறிவுளது ஒன்றுண்டென்பது பெறப்படுதலின் அதுவே சத்தாதல்தன்மையும் அசத்தாதல்தன்மையுமாகிய இரண்டுமன் றிச் சதசத்தாயுள்ள உயிராம் (எ - று).

இரண்டனுள் ஒன்றனைப்பிரிக்கின்றமையிற் சத்தேஎன்னும் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

அசத்திலது ஆகலின் என்றுரைக்க.

அசத்துச் சத்தை அறியாமைக்கும் சத்தெதிர் சூனிய மாதலே ஏதுவாதலமையுமாயினும், அசத்தெனப்பட்ட கருவி கள் முத்திநிலையில் சிவகரணமாய் ஆன்மசந்நிதியை ஒட்டி முதல்வன் சந்நிதியில் நிற்கப்பெறும் என்பாரை நோக்கி வேறும் ஓர்ஏதுக்கூறினார். இக்கருத்தே பற்றி *"சத்தின்முன் னிலாமையானுந் தனைக்கொடோன் றுணர்தலானும்" என இரண்டேதுவும் உடன்கூறினார் வழிநூலாசிரியரும்.

ஏற்புழிக்கோடலான் அறிதலென்றது ஈண்டனுபவ அறி வின்மேற்று.

---

* சிவஞானசித்தியார், ஏழாஞ்சூத்திரம், க. அனைத்துஞ்.

இனைத்தென அறிந்தபொருட்கு வினைப்படுதொகுதிக்கண் வேண்டப்படும் முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

இதனுள் யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலிற் சத்தே அறியாதென்றது ஓரதிகரணம்; அசத்திலது அறியாதென்றது ஓரதிகரணம்; இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்பது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

## விளக்கம்

### சிறப்பு

சிறப்பியல்பு எனினும் உண்மை அதிகாரம் எனினும் ஒன்றே. பொது இயல்பு என்பது சார்பியல்பு எனப்படும். முழுமுதல்வன் அடிமையாலும் உடைமையாலும் எஞ்ஞான்றும் சாரப்படுபவனே. அடிமை ஆவிகள். உடைமை மாயை வினைகள். மலமாகிய மாசும் அவன் திருவருள் வலத்தால் தொழிற்படினும், அஃது அவனுக்கு உடைமை ஆகாது. எதுபோல் என்றால் தீர்ப்பானாகிய மருத்துவனுக்குப் பிணியாளனைத் துன்புறுத்தும் நோய் அவன்தன் அருமருந்தால தொழிற்படினும் அவனுக்கு உடைமை ஆகாமையைப்போல். திருவள்ளுவநாயனாரும் மருத்துவன் துணையாய் உள்ளனவற்றைக் கூறியருளுங்கால் நோயைக் கூறியருளிற்றிலர். அத்திருப்பாட்டு வருமாறு :

“ உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று
அப்பால்நாற் கூற்றே மருந்து.” —திருக்குறள், ௯௫0

மலநோய் தீர்த்து வழிப்படுத்தி மாண்பார் மலரடி நல்கி இன்புறுத்தும் மருத்துவன் முதல்வன் ஆதலின், அவன் வயித்தியநாதன் என்று அழைக்கப்படுகின்றனன். அவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

“ அருளினல் உரைத்த நூலின் வழிவாராது அதன்மம் செய்யின்
இருளுலாம் நிரயத் துன்பத்து இட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாம் சுவர்க்க மாதி போகத்தாற் புண்ணியந் தீர்ப்பன்
மருளுலாம் மலங்கள் தீர்க்கும் மருந்திவை வயித்திய நாதன்.”
—சித்தியார், உ-௩௫.

ஆளுடைய அரசர் திருப்பாட்டு வருமாறு :

“ பேரா யிரம்பரவி வானோர் ஏத்தும்
பெம்மானைப் பிரிவிலா அடியார்க்கு என்றும்
வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீஎழத்திண் சிலை கைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே.” —௬. ௫௪-அ.

## சார்புமுறை

சார்புமுறை என்பது நுண்ணிய பொருளைக் காட்டவேண்டி முதற்கண் அதனை அடுத்துள்ள பரியபொருளை அந்நுண்பொருளென்றே கூறிக் காட்டி அதன்கண் தெளிவு வந்தபின், அஃதன்று என மறுத்து உண்மையாம் நுண்மையினைக் காட்டுதல். இம்முறையினைத் "தூலாருந்ததி நியாயம்" என்பர். அருந்ததி மீன் மிகவும் நுண்மையுடையது. அதனை முதற்கண் காட்டின் யார்க்கும் காண ஒண்ணாது. எனவே, அதன் பக்கத்துள்ள பரியதைக்காட்டிப் பின் நுண்மை காட்டப்படுவது.

இம்முறையில் இறை உயிர் தளை என்னும் முப்பொருட்கும் பொது இயல்பு மேல் அளவை தன்மை என்னும் இரண்டு இயல்களானும் உணர்த்தி அருளினர். அளவை - பிரமாணம். தன்மை - இலக்கணம்.

அம் முப்பொருள்களின் சிறப்பியல்பு பயிற்சி முகத்தானும் பயன் முகத்தானும் ஓதியருளுகின்றனர். பயிற்சியைச் சாதனம் என்பர். மேலும், இங்ஙனம் ஓதியருளும் முறைமையால் இஃது உண்மை அதிகாரம் என்னும் பெயர்த்தாயிற்று. சிறப்பியல்பு பொது இயல்புபோல் இடையே நீங்குவதன்று. எக்காலத்தும் ஒருதன்மைத்தாயுள்ளது. அது பற்றி உண்மை எனவும்படும். ஒருவனுக்கு விளையாட்டிடத்துப் படைத்துக்கோட்பெயர் அமையும். அஃது அவ்விளையாட்டின் பொருட்டு இடையே வந்து இடையே நீங்குவதாகும். ஆனால், அவனுக்கு இட்ட பெயர் என்றும் நிலைத்திருப்பதாகும். இப்படைத்துக்கோட்பெயரைத் தொல்காப்பியனார்,

> "........................................
> கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே." —தொல். சொல். கசுரு

என்றனர்.

## அதிகார இயைபு

பொது அதிகாரத்து முப்பொருளின் சார்பியல்புகூறி இவ் உண்மை அதிகாரத்து உடலுக்கே உழையாது உயிருக்கும் உய்திநாடி உழைக்க வேண்டும் என்பதும், அவ்வுழைப்பே உடலோம்புதற்கும் உறுதுணையாம் என்பதும், உயிர் உழைப்பால் வரும் ஊண் திருவடி இன்பம் என்பதும் ஓதி அருள்வதால் அதிகார இயைபு பெறப்படும்.

துணை துய்ப்பு என்பனவும், கருவி களிப்பு என்பனவும், உழைப்பு ஊண் என்பனவும், சாதனம் பயன் என்பனவற்றையே குறிக்கும்.

## முயற்சி

சாதன ஒத்து எனப்படும் இம்முதல் இயல் பயிற்சியின்கண் முயற்சியுறுமாறு கூறுகின்றது. அப்பயிற்சியான் விள்ளற் பாலதாகிய உடற்சார்பினை விண்டு துன்பத்தின் நீங்குதலும், கொள்ளற்பாலதாகிய உயிர்ச் சார்பாம் திருஅருட் சார்பினைக்கொண்டு இன்பத்து ஓங்குதலும் பெறுதற்காம் முயற்சி. திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டும் காண்க:

> "முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை
> இன்மை புகுத்தி விடும்." —திருக்குறள், சுகசு.

திருவினை - திருவருளினை. இன்மை - நிலையாமை; இறத்தலும் பிறத்தலும் ஆகிய துன்பம்.

பட்டினத்தடிகள் கூறும் திருப்பாட்டு:

"உழப்பின் வாரா உறுதிகள் உளவோ
கழப்பின் வாராக் கையறவு உளவோ."
—கக. பட். திருவிடை. கO.

## அவாய்நிலை

பொருளின் தன்மை உணர்ந்தோன் அதனைப்பெற முயல்வன். அதனால் இலக்கண இயலின்பின் சாதன இயல் அமையப்பெற்றது. இதனால் அவாய்நிலைபற்றிய ஓத்தியைபு பெறப்பட்டது.

## ஆவிச் சிறப்பியல்பு

என்றும் ஒருபடித்தாய் உள்ள முதல்வனும் நிலைப்பதும், தோன்றி மறைவதாகிய மாயையின் ஆக்கப்பாடுகளாகிய நிலையாததும் இத்தகைய என ஆறும் நூற்பாவில் வரைசெய்துணர்த்தவே, இவ்விரண்டினையும் அறியும் இயல்பு வாய்ந்தது யாது என ஐயம் நிகழும். அவ் ஐயத்தினைப் போக்கிச் சார்ந்துணரும் சார்பியாம் அடிமைத் தன்மையுள்ளது ஆவி என வரைசெய்து ஆறும் நூற்பாவுக்கோர் புறனடையாய் அமைந்தது இந்நூற்பா என்க. இதனால் மூன்னூற்பாவிற்கும் இதற்கும் இயைபு பெறப்பட்டது. சார்ந்துணர்ந்து அடிமையாதலே ஆவியின் சிறப்பியல்பு.

## ஓர் புறனடை

இந்நூற்பா மூன்று அதிகரணங்களையுடையது. அதிகரணங்கள் மூன்றும் ஒன்றினுக்கு ஒன்று ஏதுவும் பயனுமாகவுள்ளன. அதனால் புறனடை ஒன்றேயாம். மூன்று புறனடையோ என்று ஐயுறுதிருதற் பொருட்டு ஓர் புறனடை என்றருளினர்.

## உரிமை

ஆவிக்கே பயின்று பயன்பெறும் உரிமை உண்டு. இது 'பொற்றொடிமகளிர் உற்றார்க்கே உரியர்' பெற்றார்க்கும் பிறந்த இல்லிற்கும் உரியரல்லர் என்பதை ஒக்கும். அஃதாவது முதல்வன் திருவருள் பெற்றாரை ஒக்கும். முதலவன் உற்றாரை ஒப்பன். ஆவி பொற்றொடி மகளிரை ஒக்கும். மாயை வினைகள் பிறந்த இல்லினை ஒக்கும். இவற்றுள் ஆவியினைய பொற்றொடி மகளிர்க்கே பிறந்த இல்லினை உணரும் உரிமையும், உற்றாரை உணரும் உரிமையும் உள்ளன; இல்லும் உற்றாரனைய முதல்வனை யுணராது. உற்றாரும் இல்லினை உணரார். என்னை? காதலர் இருவர் கூட்டமும் இல்லிகந்த வெளிஅகத்து நிகழ்வதாலென்க.

'யாவையும்...........................ஆன்மா.'

(போ - ரை.) மாயாகாரியமாகிய உலகுடல் கலன்கள் முழு முதல்வன் திருமுன் சுட்டுணர்வாகிய ஆவிக்கு விளங்குவதுபோல் மூனைத்து விளங்காது. அதனால் அவை இருந்தும் பகல் விளக்குப்போல் பயனின்மையால் பாழேயாம. சத்து - உள்ளதாகிய முதற்பொருள் அறிந்தாங்கறிந்து ஒருங்கறிவதன்றிச் சுட்டியறியாது. இது, நூலாசிரியன்

நூலினைச் சுட்டியுணரான்; ஒருங்குணர்வன். மாணவர் தத்தமக்குரிய பாடங்களையே சுட்டியுணர்வர். இவற்றின் தன்மையை ஒக்கும். நிலையில்லதாகிய மாயாகாரியங்கட்கு என்றும் அறிவில்லை ஆதலால், முதல்வனை அறியாது. இது வளமனை அமைத்த உளமிகு திறலோன் அம்மனையை ஒருங்குணர்வதன்றிச் சுட்டியுணரான். என்னை? தான் குடியிருந்து பயன் துய்ப்பதின்மையான். வளமனையோ அறிவில்லது. அதுவும் அவ் அமைப்பாளனை உணராது. ஆனால், அமைப்பித்துக்கொண்டோனாகிய வளமனைக்குரியோன் செய்ந்நன்றி மறவாமைப் பொருட்டு அமைப்பாளனை உணர்தலும், பயன்கோடற் பொருட்டு வளமனையை உணர்தலும் செய்வன். அதுபோன்று ஆவியே உலகினைச் சார்ந்து உலகை அறியும். உடையானாகிய முதல்வனைச் சார்ந்து அவனை அறியும். ஈண்டு அறிதல் என்பது பயன்கோடல் அல்லது நுகர்தல். முதல்வனும் அறியான் என்பது பயன்கோடல் அல்லது நுகர்தலைச் செய்யான் என்பதாம். முற்றுணர்வுடைய முதல்வனும் அல்லாது உணர்வே இல்லாத மாயையும் அல்லாது முதல்வன் விளக்க விளங்கும் சிற்றுணர்வுடைய இரண்டலா ஆவிக்கே இரண்டினையும் சார்ந்துணர்ந்து பயன் துய்க்கும் அறிவுள்ளதென்க.

(பக்கம். ௧௬௮.)

**இலக்கணம்**

'இரண்டலா ஆன்மா' என்பது "சத்தாதல் தன்மையும் அசத்தாதல் தன்மையும் ஆகிய இரண்டும் அன்றிச் சதசத்தாயுள்ள ஆன்மா." இதன்கண் 'இரண்டும்' என உம்மை இருத்தல் வேண்டும். அஃது உறப்பு. இவ் உறப்பு ஆன்மா என்னும் உறப்பியாகிய முதலின் முடிக்குஞ் சொல்லொடு முடிந்தது: அவ் 'உம்மை' இல்லாமை செய்யுட்டிரிபு. இதற்கு விதி:

"இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்."
—தொல். சொல் - ௩௩.

---

## முதல் அதிகரணம்

**ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாதென்றது**

எ - து. மே-ள். எ-னின். "தந்திடுஞ் சிவனவன்றன் சந்நிதிதன்னி னின்றே." எ-ம். *"கூடுமொளி வளர்குடிலைமாயை மேவி." எ-ம். "தாரகமா மத்தன்றுள் நிற்றல்." எ-ம். "விமலனுக்கோர் சத்தியாய்." எனவும். "உலகமேயுருவமாக" எ-ம். "அத்துவா மூர்த்தியாகி." எ-ம். "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி—நின்றவாறே." எ-ம். கூறப்படுமியல்புடைய பிரபஞ்சத்தைச் சத்தெதிர் சூனியமென்றல் அவசித்தாந்தமாய் முடியும் போலும் எனவும், †"மண்டிய உணர்வுஉயிர்க்காய் மன்னிநின்

---

* சிவப்பிரகாசம், பொது. உ. நீடுபரா.
† ,, உண்மை. ௩௨. கண்டறி.

றறியும்" எனவுங் கூறுஞ் சிவாத்துவிதசைவர் மதம்பற்றி நிகழுங்கடாவையாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றிற்போந்த ஏதுவைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ - ள்.) சுட்டுணர்வின்றி நின்றறியுஞ் சிவசத்தின் முன்னர்ச் சுட்டியறியப்படும் அசத்தாய பிரபஞ்சம் விளங்கித் தோன்றாது (எ - று).

ஈண்டுச் சூனியமென்றது விளங்காமைப் பொருட்டென்பார் பிரகாசியாதென்றார். இக்கருத்தே பற்றி "முனைத்திடாது அசத்துச் சத்தின் முன்" என்றார் வழிநூலாசிரியரும். முனைத்திடாமையாவது இது குடம் இஃதாடையென நம்மனோரால் சுட்டியறியப்படுமாறுபோல முதல்வனால் சுட்டியறியப்படுவதாய் வேறுநில்லாமையாம். ஆகவே ஈண்டுச் சத்தெதிர்யாவையுஞ் சூனியமென்றது கொண்டு அவசித்தாந்தமாதல் யாண்டையதென மறுத்துச் சத்தறியாதென்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்

எ - து. ஏது எ-னின். முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத்தை விடயிப்பதாய சுட்டுணர்வும் உண்டென்றாற்படும் இழுக்கென்னை என்பாரைநோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) தன்னியல்பாகிய இயற்கையுணர்வின் முன்னர்ப் பொதுவியல்பாகிய செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையான் ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாதென மேற்கொண்டது (எ - று).

பிரகாசித்து நிற்றலின்மையாவது இயற்கையுணர்வோடொப்ப ஒருங்குநில்லாமை. எக்காலத்தும் நிலைபெறுவதாய தன்னியல்பே மெய்யெனவும் இடையே தோன்றிமறைவதாய பொதுவியல்பே பொய்யெனவுங் கூறப்படுவனவாகலான் அவை ஈண்டைக்கேற்புடைய அறிவின்மேல்நின்றன. இஃதறியாதாருரைப்பனவெல்லாம் மேற்கோளைச்சாதித்தற்குரிய ஏதுவாதல் செல்லாது கூறியது கூறலாய் முடியுமென்றொழிக.

*அன்னியம் இலாமை அரற்கோன்று உணர்வின்றும்
அன்னியம் இலான்அசத்தைக் காண்குவனேல்—அன்னியமாக்
காணுன் அவன்முன் கதிர்முன் இருள்போல
மாணு அசத்தின்மை மற்று.

* 'அனைத்துஞ்' சித்தியார், எ-க.

எ-து. உ-ம். எ-னின். சுட்டுணர்வு இன்மையான் முதல்வன் அசத்தைஅறியானெனின் முற்றுணர்வுடைமைக் கிழுக்காமென்பாரைநோக்கி இழுக்கின்மைகூறி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அன்னியம் இலாமை அரற்கு உணர்வு ஒன்று இன்று ஆம்—(தன்னுள் வியாப்பியமான பசு பாசங்களோடு) வேற்றுமையின்றி உடனாய் நிற்றலையுடைய முதல்வனுக்குச் சுட்டியறியக் கிடப்பதொன்றில்லை (ஆகலான்), அன்னியம் இலான் அசத்தைக் காண்குவனேல் அன்னியமாக் காணான்—அத்தன்மையனாகிய முதல்வன் அசத்தையறியலுறுவனாயின் (அறிந்தாங்கறிவனன்றி நம்மனோர்போல) வேறாகச் சுட்டி அறிவானல்லன், கதிர்முன் இருள்போல அவன்முன் மாணா அசத்து இன்மை—ஞாயிற்றின்முன் இருட்டுப்போல அம்முதல்வனெதிர் நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாதாகலான் (எ - று).

எனவே, அசத்தை விடயிப்பதாகிய ஏகதேசவுணர்வு முற்றுணர்வைத் தடுப்பதாகலான் அஃதில்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடாவதன்றி இழுக்காகாதென ஐயமகற்றி ஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

மாணாமை வியாபகவுணர்விற்கு விடயமாகாமை.

இன்மை ஈண்டு விளங்காமை குறித்து நின்றது.

மற்று அசை. மற்றுக் காண்குவனேலென மேலேகூட்டி வினைமாற்றின்கண் வந்ததெனினுமமையும்.

உணர்வும் கதிரும் ஆகுபெயர். கதிர்முன்னிருள் ஈண்டு முனையாமை மாத்திரைக்கு ஒருபுடை உவமையாயிற்றென்பது வழிநூலாசிரியர் *“முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிருளிரவி முன்போல்” என்றவாற்றானறிக.

## விளக்கம்

### முதல்வன் மரம் அல்லன்

எல்லாம் சிவம் என்பதே சிவாத்துவிதம். அவர்கள் கூறுவது, சார்ந்ததன் வண்ணமாம் ஆவியும், நிலையாச்சார்புக்கு இடனாம் மாயையும் எனப் பொருள்கள் இரண்டு வேறு கிடையா. அவையும் சிவமே. ஆனால் பெயர் மூன்றாவதற்குக் காரணம் தோற்றமே. மரம் எனவும் கவடு எனவும் கோடு எனவும் கூறுகின்றோம்; எல்லாம் மரமே. ஆனால் கவடும் கோடும் மரப்பரப்பினுள் செறிவே. பரப்பு - வியாபகம். செறிவு - வியாப்பியம்.

---

* ‘அனைத்துஞ்’ சித்தியார், ௧ ௭.

இதுபோன்று, சிவத்தின் பரப்பினுள் ஆவியும் உலகும் செறிவே. கவடு - கிளை. கோடு - கொப்பு.

இது பொருந்தாது. மரம் ஓர் அறிவுடைய உயிர் என்று கூறுவோம். எனவே மரத்தின்கண் அறிவுடைய உயிரும், அறிவில்லாத வேர், தூர், தண்டு, கவடு, கோடு, தளிர், இலை, அரும்பு, மலர், பிஞ்சு, வடு, காய், கனி, காழ் முதலாகச் சொல்லப்படும் பொருள்களும் உள்ளன. எனவே, மரம் என்பது இருபொருள் கூட்டம்.

அதுபோல் உலகம் என்பது முப்பொருட் கூட்டம். தானே விளங்கும் முற்றறிவுடைய முதல்வனும், விளக்க விளங்கும் சிற்றறிவும் கருவித் துணையாலாம் 'சுட்டறிவும்' உள்ள ஆவியும், அறிவே இல்லாத மாயையும் என்பனவே முப்பொருளாம். இம் மூன்றும் குறைவில்லா நிறைவும், கூடும் நிறைவும், கொள் நிறைவும் ஆக ஒன்றனுள் ஒன்று அடக்கமாய் இருப்பன(௬௪). எனவே முதல்வன் மரம்போன்று வேற்றுமையின்றி எல்லாந் தானே என்பது பொருந்தாது.

முதல்வனே ஆவியினிடமாக நின்று அறிவன் என்பது ஆசானே மாணக்கனிடமாக நின்று கற்பான் என்பதையும், தாயே சேயினிடமாக நின்று உண்பள் என்பதையும் ஒத்து ஒவ்வாமையாக முடியும்.

### உலகோடு ஒன்றல்

முதல்வன் உலகத்தோடு கலப்பாலும், காப்பாலும், கடாவுதலாலும் ஒற்றித்து நிற்கின்றான் என்பதை 'விந்துவின்' 'நித்தமாய்' (௧௩௩) "உலகமே' (அஅ) 'அத்துவா' என்று துவங்கும் சித்தியார்த்திருப்பாட்டுக்களும், 'நீடுபராசத்தி' என்னும் சிவப்பிரகாசத் திருப்பாட்டானும், "வித்துண்டா' (௭௫) மெய்கண்டார் திருவெண்பாவாலும், 'இருநிலனாய்த்' திருமுறைத் திருப்பாட்டானும் உணரலாம். எனினும், உலகம் அவன் முன் முனைத்து நில்லாது.

### சுட்டுணர்வின்றி

சுட்டுணர்வு என்பது தன்னின் வேறாய்த், தன்குறை முடித்தற்கு இன்றியமையாததாய்த், தன்னால் காணவும் கருதவும்பட்டு வேட்டற்கிடனாய் உள்ள அழிபொருளின்மாட்டுச் செல்லும் நிலையில்லாத உணர்வு. முழுமுதல்வனுக்கு வேறாய் எப்பொருளும் இருப்பதில்லை. இது நீரும் நீரகத்துவாழும் உயிரினங்களும் நீர்நிலைக்கு வேறாக யாண்டும் இருப்பதில்லை. நீர்பருகிப் பயன்கொள்வாரும், நீர்வாழ் மீன் முதலிய உயிரினங்களைக் கண்டு காட்சியின்புறுவாரும் நீரினைச் சுட்டிமுகத்தலும், நீர்வாழ் உயிரினங்களைச் சுட்டிநோக்கலும் புரிவர். ஆனால் நீர்நிலை கலந்திருப்பதாலும் தற்பயன் வேண்டாமையாலும் அதற்குச் சுட்டு இன்று. நீர்நிலைக்கு அறிவின்றேனும் அளவுபட்ட பாத்தி, வயல் முதலியன தம்பால் உள்ளவற்றின் பொருட்டு நீரினைவேட்டலும், சுட்டாம் அளவிற்கோடலும் நீர்பாய்ச்சுவாரால் நிகழக்காண்கின்றோம். மேலும் கற்கப்படும் நூலினைக் கற்பிக்கும் கணக்காயனாகிய ஆசான் சுட்டியுணரான். உணர்வனேல் ஒருங்கு உணர்வன். என்னை? தான் கற்கவேண்டும் என்னும் வரையறைப்பாடம் எதும் இன்மை. கற்கும் மாணவன் ஆண்டாண்டுள்ள பாடங்களைச் சுட்டியுணர்வன்.

**விளங்கித் தோன்றுமை**

'ஈண்டுப் பிரகாசியா'தென்பது விளங்கித் தோன்றாது என்பதாம். புலனாகிய பொருளை நோக்குந்தன்மை இருவகைப்படும். ஒன்று பொது நோக்கு; மற்றொன்று சிறப்பு நோக்கு. பொதுநோக்கு என்பது நோக்கு வார்க்கு வேறாயுள்ளபொருள் நேர்பட்டகாலத்து முயற்சியும் உளப்பாடும் வேட்கையுமின்றி நோக்குதல். இதுவே எழுவாய்க் காட்சியாகிய நிருவிகற்பக் காட்சியாகும். 'சாறு அயர்களத்து வீறுபெறத் தோன்றும்' மாந்தர்த் தொகுதியைக் காண்கின்றோம்; ஆனால், அக்காட்சி பொதுக் காட்சியே ஆகும். ஏனெனில், ஒருவரையேனும் சிலர் பலராகிய தொகுதியினரையேனும் ஆடை, அணி, நாடு, நகர், பேர், சிறப்பு முதலிய வற்றுள் ஒன்றேனும குறித்துப் பகுத்துணரும் பான்மை இன்மையான் என்க. பகுத்துணராமைக்குக் காரணம் தொடர்பும் வேட்கையும் சேரயும் சுட்டுணர்வும் இன்மையே என்க. இது போன்றதே கல்லூரி மாணவர் களையும், கற்கும் நூற்களையும், காணும் உலகப்படத்தையும், பேணும் கடையகத்துள்ள பல்பண்டங்களையும் ஒருங்கு காண்பது. இக்காட்சி போன்றதே எழுவாய்க் காட்சி.

இனிச் சிறப்புக் காட்சியாவது: ஒவ்வொரு பொருளையும் தன் பொருட்டேனும், பிறர் பொருட்டேனும், அப்பொருளின் பொருட்டே னும் சீர்தூக்கிப்பார்ப்பது. அங்ஙனம் பார்க்குங்கால் பெயரும் இனமும் பீடும் பிறவும் பேணினர்க்கு விளங்கும். அவ்விளக்கம் அப்பொருளின் கண் முன்னில்லதாய் அப்பொழுதுள்ளதாய்த் தோன்றுவதன்று. மேலும் அப்பொருள் நோக்குவார் உள்ளத்துக் கொண்டுவந்து நுழைப்பதும் அன்று. நோக்குவார்க்கு அப்பொருளின்கட் கிடந்த வேட்கையின்மை யும், வேட்கையுண்மையுமே விளக்கமின்மையும் விளக்கமுண்மையுமாகிய வேறுபாடுகளை விளைவித்தன. இவ்விளைவிப்பிற்கு வாயிலாகிய உணர்வின் நிகழ்ச்சியின்மை உண்மைகள், சுட்டுணர்வின்மையும் சுட்டுணர்வுண்மை யும் என்று அழைக்கப்படும். எடுத்துக்காட்டாக நீர்வேட்கையில்லான் நீர்நிலையைக் காணுங்கால் துறை சுவை ஆழம் எதும் இன்றிக் காண்பன். நீர்வேட்கையுடையான் முழுகுதற்கோ பருகுதற்கோ புகுமேல் துறை, சுவை, ஆழம் முதலியவற்றைக் குறைவற வுணர்வன். மேலும் வளமனை பல அமைந்த உளமகிழ் தெருவினைக்காணுங்கால் வேறுபாடின்றி வியப் புறக் காண்போம். குறித்தவளமனை ஒன்றினைக் காணுங்கால் வேறுபாட் டுணர்வோடு வியப்புறக்காண்போம்.

> வேறுபுலத் தாம்விளக்கம் வேட்கை விளைவிக்கும்
> கூறுவிளங் காமையின்றாம் வேட்பு.

**காண்டலின்று**

தேட்டுடன் வீடமைத்து அவ்வீட்டகத்து வாழ்வார் அவ்வீட்டைக் கேட்டுணர்தல் கண்டுணர்தல் ஆகிய சுட்டுணர்ச்சி கொள்ளார். அரையில் கட்டிய ஆடையினைத் தரையில் கிடக்கும் ஆடைபோல் வேறுணரார். ஒவ்வொருவரும் தத்தம் உடம்பினை உற்று நோக்காமை போன்று உடுத்த உடையினையும் நோக்கார். பிரிவிடையின்றிக் கலப்பிடைக் காணும் வேட்கை எழாமையும் இதற்குசான்று. 'உணர்ந்தார்க்கு உணர்வரி யோன்' என்பதும் அது. ஒருவன் உடுக்கும் உடையினைத் தலைச்சுமையாகக் கொள்ளின் அஃது அவற்குச் சுமையாதலும் வேறாதலும் ஆகும்

அதனையே அவன் உடுப்பின் அது சுமையாதலும் வேறாதலும் இன்றாம் அன்றே?

ஆயின், முழுமுதல்வனின் குறைவிலா நிறைவாம் பரப்பினுள் கொள் நிறைவாம் மாயை வேறுநில்லாது கலந்திருத்தலின் அஃது அவனுல் வேறு காணப்படாது. காதலின்மையால் கலந்து காணப்படும் காட்சியும் இன்று. கலந்துறையும் கலப்பொன்றே உள்ளது.

**'ஆவிக்கும் இன்றும்'**

வீடுபேற்றின்கண் ஆவி இறைவனின் திருவடி சேர்ந்து அவன் தன் குறைவிலாநிறைவில் கூடுநிறைவாய்ப் பீடுற்று விளங்கிப் பேரின்பம் துய்த்தலின் வேறுகாணப்பட்டு ஈறும் சிற்றின்பமாம் சுட்டுணர்வு அவ் ஆவிக்கு இன்றாம். அதற்குக் காரணம் அவ் ஆவிசார்ந்திருக்கும் முதல்வனுக்குச சுட்டுணர்வின்மையே காரணம். இந்நிலையே ஆவிக்குத் தன்னியல்பு.

**'மெய்யினிடத்'**தென்பது கலப்பால் மெய்யுணர்வு ஆவிக்கு விளங்கிய இடத்தென்பதாம. மெய்யுணர்வு விளங்கிய ஆவிக்கே அழிபொருளின் மாட்டுததோன்றும் பொய்யுணாவாம் சுட்டுணாவு விளங்காதாயின் முதல்வன் சுட்டியுணரும்வண்ணம் அழிபொருள் விளங்கிப் புலனுவது யாங்ஙனம்? இருளில் தோன்றும் விளக்குப் பகலவன் ஒளிமுன் விளக்கமின்றி நமக்குத தோன்றுமை அவ்விளக்கின் பயன் வேண்டாமையும் அவ்விளக்கின மிக்கதாய்ப் பேரொளியாய் யாவற்றையும் ஒருங்கு விளக்கும் பகலவன் துணைபூண்டமையும் என்க. அவ்விளக்கு நம்முனனே விளங்காதாயின் அப்பகலவன் முன விளங்குவது யாங்ஙனம்? பெரும்பயனும் பேரின்பந்துய்க்கக் கருவியாகவந்த உலகு, உடல், கலன்கள் அப்பேரின்பம் விளங்கிய இடத்து வரைதலன்றி வேறென் செய்வது? இது, 'தீம்பால் உண்டவா கொள்கலம் வரை'தலினை ஒக்கும். மேலும் தனித்தனியே எழுத்துக்களைக் கற்குங்கால் அவை முனைத்து நிற்கும். அவ்வெழுத்தானும் சொல்லைக் கற்குமகால் அவ்வெழுத்துச் சொல்லினுள் அடங்கிச் சொல்லாக அன்றி எழுத்தாக முனைத்து நில்லாமையையும் காணக. முதல்வன் முன் பொருள் விளங்காமைமாத்திரமே அன்றி இல்லாமை அன்று.

'பதியினைச் சென்றணு காப்பசு பாசம்' (உ௲உ) என்பதனுல் பசு பாசங்கள் முதல்வன் முன்னிலையில் முனைத்து நிற்றல் இலவாகிய விளங்கித் தோனறுமை காண்க. இக்குறிப்பினை ஒருபுடையாக இலங்கையர் வேந்தன் கயிலாய மீது தேர்செலுத்த உன்னுங்கால் பாகன் தடுத்தமையும், அவன் கேளாது விடுத்தமையும, ஆண்டவன் விரலூன்றினமையும், வேந்தன் மலைக்கீழ் மறைந்தமையும் நோக்கிக் காண்க.

வேந்தன் – ஆவி. தேர் - மாயை. பாகன் - திருவருள். கயிலாயமலை - மெய்யுணர்வு. விரலூன்றல் - இறைவன் தோன்றல். மலைக்கீழ் மறைதல் - பசு பாசம் விளங்கித் தோன்றுதிருத்தல். பசு - சிற்றுணர்வு. பாசம் - சுட்டுணர்வுக்குப் புலனுவது. இந்நோக்குடைய திருப்பாட்டு வருமாறு

"கடுகிய தேர்செ லாது கயிலாய
மீது கருதேலுன் வீரம் ஒழிநீ
முடுகுவ தன்று தன்மம் எனநின்று
பாகன் மொழிவானை நன்று முனியா

விடுவிடு என்று சென்று விரைவுற்
றரக்கன் வரையுற் றெடுக்க முடிதோள்
நெடுநெடு இற்று வீழ விரலுற்ற
பாதம் நினைவுற்ற தென்றன் மனனே.'' —௪. ௧௪ - ௧௧.

'அன்னிய..........................மற்று.'

## வேறாகக் காணான்

முதல்வன் அழிபொருளாகிய மாயையின் ஆக்கப்பாடுகளையும், உள்பொருளாகிய மாயையினையும் வேறாகக்காணான். காணநேரின் ஒருங்கு காண்பன். இஃது இருப்புப் பொறியூர்தியாகிய புகைவண்டியினை வகுப்போன் வலவன் என்னும் இருதிறத்தாரும் இயைந்து இயக்குகின்றனர். இவருள் வகுப்போன் (Guard) வண்டியின் பொறுப்புவாய்ந்த காவலனாய், வலவனுக்கு வழிகாட்டியாய், வண்டியினை நிறுத்தவும் செலுத்தவும் ஏவும் உரிமையனாய், வண்டியில் போக்குவரவுபுரியும் மாந்தர்க்கு ஆந்துணையும் உதவும் ஆண்மையனாய்த் திகழும் ஒருவனாவன். வலவன் (Driver) அவ்வண்டியினை இயக்கும் பொறிவல்லனாய்ப், பொருத்தமறிந்து பொறியினை இயக்கிப் போக்குவரவுபுரியும் மக்கள்தம் உயிரும் உடைமையும் தனவாகக்கருதி நெறிமுறை தவறாது நேர்மையொடு செலுத்தும் சீர்மையனாய்த் திகழும் ஒருவனாவன். இவ்விருவரும் முறையே உலகினைப் படைத்துக் காத்து அழிக்கும் முதல்வனும் மூவா ஆணையும் புரியும் பொய்யில் புகழ்த்தொழிற்கு எடுத்துக்காட்டாவர். இவர்கள் வண்டியினையும், வண்டி நின்று புறப்படும் நிலையங்களையும், வண்டியில் ஏறி இறங்கும் மாந்தர்களையும், அவர்தம், உடைமைகளையும், ஏனைப் பல்வகைப் பண்டங்களையும், அம்மாந்தர் சென்று சேர்ந்தின்புறும் வளமனை முதலியனவாய்ந்த ஊர்களையும் காட்சியானும் கருத்தானும் ஒருங்கு நோக்குவர். மேலும் கடமையை ஆற்றும் கருத்துடன் நோக்குவதன்றிக் கலந்தின்புற்றுக்களிக்கும் கருத்துடன் நோக்கார். இங்ஙனம் நோக்குவதோடொப்பதே முறைசேர் இறைவன் திருநோக்கும். இதுவே பொதுநோக்கு.
போக்குவரவுபுரியும் மாந்தர் இவ் அனைத்தினையும் காதல் நோக்காகிய சிறப்பு நோக்காற் காண்பர். இருக்கை வரையறுத்தலும், உடைமை முதலியவற்றைக் குறிக்கொண்டு காத்தலும், உறவும் பகையும் ஒருங்காக்கலும், ஊர்நோக்கலும், இறங்கி ஏறலும் ஆகியவற்றை வேணவாக் கொண்டு பயன்கருதிப் பன்னாளும் புரிவர். இப்புரிவினையே ஆவிகள் சுட்டுணர்வு சிற்றுணர்வுகளுடன் புரிந்துவரும் புலன்கொள் புரிவினுக்கு ஒருபுடை ஒப்பாகக்கொள்வர்.

## இழுக்கின்று

அழிபொருளைப் புலன் கோடலாகிய ஒருபுடையுணர்வு முற்றுணர்வைத் தடுப்பதாகும். புலன்கோடல் - விடயித்தல். ஒருபுடையுணர்வு - ஏகதேச உணர்வு. எங்ஙனமெனின்? ஒருகலம் நெல்லை முற்றாக அளக்கும் முகத்தலளவைக் கருவியும், ஒரு மணங்கை முற்றாக நிறுக்கும் நிறுத்தலளவைக்கருவியும், பத்து முழத்தை முற்றாக அளக்கும் நீட்டலளவைக் கருவியும் முறையே முந்நூற்றிருபதில் ஒருபங்காகிய முந்திரி முந்திரியாக, அளப்பதும், பலம்பலமாக நிறுப்பதும், விரல்விரலாக அளப்பதும் செய்யும் எனின் அவ்வக்கருவிகளின் முழுமைக்கு இழுக்காவதன்றி மேம்பாடாவதன்று. அதுபோல் முதல்வனுக்கும் ஒருபுடையுணர்வாகிய சுட்டுணர்வு

முற்றுணர்வைத்தடுக்கும். அஃது அவனுக்கு மேம்பாடன்று. அச்சுட்டுணர் வின்மை முற்றுணர்விற்கு இழுக்காகாது. மேலும் மலை கடல் யாறு முதலியவற்றைச் சுட்டுணர்விற்கு வாயிலாகிய கட்புலனால் காணுங்கால் ஒரு சிறு பகுதியையே காண்டல்கூடும். காண்டற்குக்காட்டாய் நிற்கும் கதிரவனும் ஒரு சிறு பகுதியையே காட்டல்கூடும். ஈண்டுக் காட்டல் என்பது கதிரவன் கதிர்கள் அப்பொருள்களின் பரப்பு முழுவதும் பரம்பி யிருப்பினும் கட்புலன்கொள்ளும் அளவில் விளங்கித் தோன்றல். இஃது "ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர், நாழி முகவாது நால்நாழி" என்பதை ஒக்கும். கதிரவன் காணுதல் என்பது, அப்பொருள்களை முற்றாகக்காண்டல். ஈண்டுக்காண்டல் என்பது கதிரவன் கதிர்கள் யாண்டும் பரம்பியிருத்தல்.

## இலக்கணம்

'மாணாமை'—முற்றுணர்விற்குப் புலனாகாமை. 'இன்மை' இது, 'மாணா அசத்தின்மை' என்றதன்கண் காணப்படும் இன்மை. இதன் பொருள் விளங்காமை. 'மற்று' இறுதியிலுள்ளது. இஃது அசை.

வினைமாற்றுப்பொருள் கொள்ளின், 'மற்றுக் காண்குவனேல்' என இயையும். அங்ஙனங்கொள்ளின் சுட்டிக்காணுந்தன்மையிலான் 'காண்குவ னேல்' வேறாகக்காணான். காணாதான் என்பதைக் காண்குவனேல் என்று மாற்றுவதால் வினைமாற்று.

> மற்றென் கிளவி வினைமாற்று அசைநிலை
> அப்பால் இரண்டென மொழிமனார் புலவர்."
>
> —தொல். சொல் - உசுஉ.

'உணர்வு' என்பது ஆகுபெயராக உணரப்படும் புலன்—பொருள் தனைக்குறிக்கும். 'கதிர்' ஆகுபெயராகக் கதிரவனைக் குறிக்கும். 'கதிர் முன் இருள்' முனையாமை. முனையாமை - விளங்காமை.

'கதிர்முன் இருள்' முனைத்துவிளங்காமைக்குக் காட்டும் ஒருபுடை ஒப்பு. கதிர மறைந்தால் இருள் புலனாம். இது வழியளவை. முதல் வன்முன் அழிபொருள் மாணாமையை வழியளவையானன்றிக் காட்சி யளவையான் கருதுதல். எனவே ஒருபுடை ஒப்பாம்.

---

# இரண்டாம் அதிகரணம்

இனி அசத்தினுக்கு உணர்வின்றென்றது

எ - து. மே-ள். எ-னின். சத்து அசத்தை அறியா தாயினும் அசத்தெனப்பட்ட தனுகரண புவனபோகங்களுள் ஒன்றாய கரணம் விளக்குப்போல் விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியிற் பெத்தநிலைக்கண் அசத்தாய விடயங்களை அறிந்தாற் போல முத்திநிலையிற் சிவகரணமாய் நின்று சிவத்தை அறியு மென்றலும் கண்ணாடியினிழல்போல ஆன்மசந்நிதியின் அதன் கண் அறிவுண்டாம் என்றலும் அமைவுடைத்துப்போலுமெனச்

சிவசங்கிராந்தவாதி மதம்பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றிற் போந்த ஏதுவைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

சூத்திரத்தின் இலதென்றது அறிவிலது என்னும்பொருட்டென்பார் உணர்வின்று என உரைத்தார்.

ஈண்டு அசத்தென்றது தத்துவப்பிரபஞ்சத்தை ; ஏனைப் பிரபஞ்சத்திற்கு அறிவின்மை சாதிக்கவேண்டாமையின்.

அதுதான் நிரூபிக்கின் இன்றாகலான்

எ - து. ஏது எ-னின். பதிஞான பசுஞானங்களோடு ஒப்பப் பாசஞானம் ஒன்றென வைத்தெண்ணப்படும் உரிமை உடையவதனை அறிவுடைத்தன்றென்றல் பொருந்தாதென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அவ் அறிவாவது தூலமாய் நோக்கும்வழி அவ்வசத்துக்கு உள்ளதுபோலத் தோன்றினும் ஐயந்திரிபின்றி மாசறுகாட்சியான் ஆராயும்வழி அதன்கண் இல்லதாகலான் இனி அசத்தினுக்கு உணர்வு இன்றென மேற்கொண்டது (எ - று).

எனவே, பாசம் வாயிலாக உயிரின்கண் நிகழும்ஞானமே பாசஞானமென்று உபசரித்துக் கூறப்படுமதனைப் பாசத்திற்குளதாகிய ஞானமெனக் காண்டல் நிரூபியாதவழிப்படும் மடமையே பிறிதில்லை யென்றவாறாயிற்று.

பேய்த்தேர்நீர் என்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வார் இல்வழியின் காணும் அசத்தின்மை
கண்டுணர்வார் இல்லதேனக் காண்.

எ - து. உ-ம். எ-னின். அதனை உவமைமுகத்தான் வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்குமற்று அணைந்த பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின்—(பாலை நிலத்தின்கண் காணப்படுவதாய) பேய்த்தேரை நீரென்று கருதி (அதனையுண்ண) வருகின்ற (நீர்வேட்கையுடைய) மடவோனுக்கு (அதனை யடுத்தவழித்) தன்னால் அணையப்பட்ட அப்பேய்த்தேர் (நீராதலின்றிப்) பொய்யாந் தன்மைபோல, வாய்த்து—(குரவன் அறிவுறுக்கும் உபதேசமொழி) கிடைத்து, அதனைக் கண்டு உணர்வார் இல்வழியின் அசத்து இன்மை காணும்—அவ்வசத்தி

னியல்பை ஆராய்ந்து அறிவாரின்றி அறியமாட்டாதார் உள்வழி அவர்க்கு (அதன்கண் அறிவுள்ளதாய் மதிக்கப்படுஞ்) சத்தாந்தன்மையே காணப்படும், கண்டு உணர்வார் இல்லது எனக் காண்—(அவ்வுபதேசமொழி கிடைத்து அதனியல்பை) ஆராய்ந்தறிய வல்லார்க்கு (அவ்அசத்து) அறிவில்லதேயாம் என்று அறிவாயாக (எ - று).

மற்று வினைமாற்று. மை பகுதிப்பொருள்விகுதி. இன் உவமவுருபு. வாய்த்தென்பது வாய்ப்பவென்பதன்திரிபு. வாய்த்தல் நேர்படுதல். ஆண்டைக்கு ஏற்புடைய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது.

அசத்தின்மையாவது சத்தாந்தன்மை. நான்கனுருபு விகாரத்தால்தொக்கது. அறிவென்பது அதிகாரத்தான வந்தது.

## விளக்கம்

### ஆவி விளக்கனையது அன்று

செப்பும் முப்பொருளும் சிவமே என்பர் சிவாத்துவிதசைவர். அஃது ஒவ்வாதென று நாட்டியபின், ஆடிநிழற் கோளினர் ஆவி விளக்குப்போல் வேறுபாடின்றி நிற்கும். அதன முன்னிலையில் உடல் இயங்குழி அகப்புறக் கலன்சள் அறியும். உடலும் காந்தத்தின் முன் இரும்புபோல் தொழிற்படும். இங்ஙனம் நிகழ்வன கட்டுநிலையிலென்பர். மேலும் வீட்டுநிலையில் கண்ணாடியின் முகஒளி தோன்றுமாறு ஆவியின்கண் முதல்வன் திருவருள் புக்குப்புலனும் என்பர். புக்குப்புலனும் என்பதைச சங்கிரமித்துத் தோன்றல் என்பா. இக்கொள்கை யுடையாரைச் சங்கிராந்தவாத சைவர் என்பர். இவரே ஆடிநிழற் கோளினர். இவர், வீட்டுநிலையில் ஆவி சிவமே ஆம் என்பர். அவ் ஆவியின் முன்னிலையில் அறிவனவாகிய அகப்புறக்கலன்கள் சிவக்கலன்களாக மாறி அச்சிவத்தை அறியும் என்பர்.

ஆவி விளக்குப்போல் வேறுபாடின்றி இருக்கும் என்பது பொருந்தாது. என்னை ? பயன் துய்ப்பது ஆவி ஆகலின் என்க. மேலும் ஐந்தாம் நூற்பா முதற்கூற்றின்கண் "ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால உணரும் என்றது" என்பதனுல் பொறிபுலன்கட்கு அறிவில்லை என்பது பெறப்பட்டது. அம்மட்டோ ஆவியின் முன்னிலைபளவானே பொறிபுலன்கள் அறியா என்பதும் பெறப்பட்டது. அவையே வீடுபேற்றின்கண்ணும் முதல்வனை அகப்புறக்கலன்கள் அறியா என்பதற்குப் போதிய சான்றாகும். ஈண்டும் அசத்து என்றது அகப்புறக்கலன்களை. என்னை ? எனைப்புறக்கலன்களாகிய பொறிபுலன்கட்கு அறிவின்மை வெளிப்படையாகத் தெரிதலான் என்க.

### உணர்வின்று

'அசத்து இலது' என்பதன் கருத்து (தாற்பரியம்) அசத்தாகிய அழிபொருட்கு உணர்வின்று என்பதே.

**கலன் உணர்வு**

கலன் உணர்வு என்பது கலன்கள் வாயிலாக ஆவி உணரும் உணர்வு. இதனையே பாசஞானம் என்பர். பாசஞானம் என்பது பாசத்திற்கு உள்ள ஞானம் என்பதன்று. பாசம் வாயிலாகப் பசு அறியும் அறிவென்பதே பொருள். பதிஞான பசுஞானங்களோடு ஒப்பப் பாசஞானம் ஒன்றனை வைத்து எண்ணுவதும் இப்பொருட்டேயாம்.

'பொதுமையான் நோக்கும் வழி அறிபொருளாகிய அகப்புறக்கலன்கள் அறிவுடையதுபோல் தோன்றினும் ஐயம் திரிபின்றி மாசறு காட்சியான் ஆராயும்வழி அறிவில்லதே. உள்ளதுபோற் காணப்படும் அதனை ஏற்றம் செய்யுங்கால் இன்றாகும். ஏற்றம் செய்தல் நிரூபித்தல். இஃது அரங்கேற்றம் என்னும் சொற்பொருளால் காண்க. இவ்வுண்மை சேக்கிழார் அடிகள் அருளிய திருப்பாட்டானும் உணரலாம்.

"அவ்வுரை அவையின் முன்பு நம்பிஆ ரூரர் சொல்லச்
செவ்விய மறையோர் நின்ற திருமறை முனியை நோக்கி
இவ்வுல கின்கண் நீயின் றிவரைஉன் அடிமை என்ற
வெவ்வுரை எம்முன்பு ஏற்ற வேண்டுமென் றுரைத்து மீண்டும்."
—கஉ. தடுத—௫௫.

"பேய்த்தேர்...............காண்."

**போலி**

போலி - போன்றிருப்பது. பாலைநிலத்தின்கண் சேய்மையிற் காணப்படும் பேய்த்தேர் எழுவாய்க் காட்சியில் எல்லார்க்கும் நீர்போன்று காணப்படும். எழுவாய்க்காட்சியென்பது தோன்றுவது ஒன்றை ஆராயாது பொது நோக்கால் காணும் காட்சி. பேய்த்தேர் என்பது கானல்நீர். இது, "அருஞ்சுரத்தின்கண் முதுவேனிலின் நண்பகற் கடுமை பற்றித் தோன்றி ஞாயிற்றின் கிரணம் முகிற்படலத்தில் மறைந்தவழி மறைந்து போவது" (பேருரை).

இவ்உண்மை தோன்றும் கானல் நீரை ஆராய உன்னி அதனை அணுகின் ஒன்றும் இல்லை என்று தோன்றும். அது வழுவில் காட்சியாகும். அதுபோல் அகப்புறக்கலன்களாகிய எண்ணம், மனம், எழுச்சி, இறப்பு முதலியவற்றிற்கு அறிவில்லை என்பது ஆசான் உணர்த்த ஆவி உணரும்.

**இலக்கணம்**

'மற்று வினைமாற்று'—இது 'மற்றனைத்த' என்பதன்கண் காணப்படுவது. சேய்மையில் நீர்போல் தோன்றும் தோற்றம் அண்மையில் நெருங்கிக்காணின் அங்ஙனம் தோன்றாமல் வெறுநிலமாகத் தோன்றுவதைக் குறிப்பது மற்று என்னுஞ்சொல். அதனால் அது வினைமாற்று.

'மை' பெற்றிமை என்பதன்கண் காணப்படுவது. பெற்றி—தன்மை. பெற்றிமை - தன்மையின் தன்மை. இங்ஙனம் பொருள்தராது, தன்மை என்று மட்டும் பொருள் தரலால் 'மை' முதற்பொருள் ஈறு; இதனைப் பகுதிப்பொருள் விகுதி என்ப.

'இன்' பெற்றிமையின்கண் காணப்படுவது - இது தன்மைபோல எனப்பொருள் தரலால் உவமஉருபு. அசத்தின்மை - சத்தாந்தன்மை; அறிவுடைமை.

## மூன்றாம் அதிகரணம்

*இனி இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்றது*

எ - து. மேல். எ-னின். சிவசத்தின் தன்மையே உயிர்க்குத் தன்மையாவதன்றி வேறில்லையாகலின் சத்தே அசத்தை அறியுமென்னுஞ் சிவாத்துவித சைவரையும் உயிர்க்குத் தன்மை என்பதொன்றின்மையின் அசத்தே சத்தை அறியுமென்னுஞ் சிவசங்கிராந்தவாத சைவரையும்மறுத்துச் சத்தும் அசத்துந் தம்முள் அறியுமாறில்லையென மேற்சாதித்தவழி இரண்டும் இவ்வாறாயின் இவற்றை அறியும்பொருள் வேறென்னையென்பாரை நோக்கிப் பாரிசேடஅளவையான் அவ்விரண்டின்வேறாய் உயிர்க்குத் தன்மையுண்டென்பது விளக்கிச் சதசத்தினியல்பை வரைசெய்துணர்த்துதல் நுதலிற்று. இ-ள். வெ-படை.

ஈண்டு இரண்டலாஆன்மா இருதிறனறிவுளதென்றது சத்தெதிர் நில்லாத அசத்துஞ் சத்துந் தம்முள் ஒன்றான் ஒன்று அறியப்படாமையான் இருதிறனறிவுளது இரண்டலாஆன்மாவேயாம். தம்முள் ஒன்றனொன்று அநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையும் அநுபவிக்குங் கண்போலுமென அநுமானங்கூறிக்காண்க. அவை உயிரானும் அறியப்படாதவழிப் பயப்பாடின்றிச் சூனியமாய் முடியுமாகலான் உயிர் அறிதற்றன்மைத்து என்பது தெற்றெனவுணர்க.

**இவ் இரண்டினையும் அறிவதாய் உபதேசியாய்நின்ற அவ் அறிவு இரண்டன்பாலும் உளதாய் உள்ள அதுவே அவ் ஆன்மாவாம் என்றது.**

எ - து. பொ - ரை. எ - னின். இருதிறனறிவென்னுந் தொகைச்சொல் விரியுங்காற்படும் பொருள்வேறுபாடு விளக்குமுகத்தான் உயிர்க்குத் தன்னியல்பு வேறுவேறு கூறுஞ் சமயங்களெல்லாம் மறுக்கப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்விரண்டினையும் அறிவதாய் — மேற்கூறிப் போந்த சத்தையும் அசத்தையும் அறியுந்தன்மைத்தாய், உபதேசியாய்—அறிவிக்க அறியுந்தன்மைத்தாய், அவ் இரண்டன் பாலும் நின்ற அறிவு உளதாய்—அவ்விரண்டின்கண்ணும் நிலைபெற்ற அநுபவஅறிவுள்ளதாய், உள்ள அதுவே அவ் ஆன்மாவாமென்றது—இவ்வாறுள்ள பொருள் யாது அதுவே சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய உயிராமென்றவாறும். இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மாஎன மேற்கொண்டது (எ - று).

ஆய் என்னும் வினையெச்சமூன்றும் உள்ள என்னும் பெயரெச்சவினைக் குறிப்போடு முடிந்தன.

இருதிறன் அறிவென்னும் தொகைச்சொல் ஈண்டு மூன்று பொருளின் மயங்கிற்றென்னுங் கருத்தான் இவ்வாறு மொழிந்தார். அவற்றுள் இருதிறனையும் அறியுமறிவென்னும் இரண்டாம் வேற்றுமைத் தொகைப் பொருள்பற்றி இவ்விரண்டினையும் அறிவதாயெனவும், இருதிறனால் விளங்கிய அறிவென்னும் மூன்றாம் வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி உபதேசியாய் எனவும், இருதிறனினும் உள்ள அறிவென்னும் ஏழாம்வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி நின்ற அறிவு இரண்டன்பாலும் உளதாய் எனவும உரைக்கப்பட்டன.

இவ்விரண்டினையும் அறிவதாயுள்ள அதுவென்பதனால் இரண்டும் இவ்வாறாயின் இவற்றை அறியும்பொருள் வேறென்னை என்னுங் கடாவுக்கு விடைகூறி அவ்விருவர் மதங்களையும் அவற்றோடு ஒரு தன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

உபதேசியாயுள்ள அது என்றதனால் உயிர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் இயல்பிற்றென்னுஞ் சமவாத சைவர் ஈசுரஅவிகாரவாத சைவர் ஐக்கவாத சைவர் மதங்களையும் அவற்றோடொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

இரண்டன்பாலும் உளதாயுள்ள அது என்பதனால் ஆன்மாவின் அறிவு சத்தோடு கூடுமாறில்லையென்னும் பாடாணவாத சைவர் பேதவாதசைவர் மதங்களையும் சத்தோடு கூடியவழி ஒன்றாய்ப் போதலே அன்றி அதன்பால் உளதாமாறில்லை என்னுஞ் சுத்தசைவர் மதத்தையும் அவற்றோடொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

இவ்விரண்டினையும் அறிவதாயெனவே அவ் அறியுந்தன்மை இவ்விரண்டின்றன்மைபோலன்றி *"இருளொளியலாக் கண்டன்மை" போல வேறாயதோர் தன்மையென்பதூஉம் உபதேசியாயெனவே அஃதாகாயத்தின் குணமாய ஓசையினியல்புபோலத் தன்னை விளக்குவதாகிய வியஞ்சகமுள்வழி விளங்குவதோர் தன்மையென்பதூஉம், இரண்டன்பாலு முளதாயெனவே அத்தன்மை படிகம்போலச் சார்ந்ததன் வண்ணமாய் அழுந்துந் தன்மையென்பதூஉம் பெறப்பட்டன.

†அருவுருவம் தானறிதல் ஆய்இழைஆய் ஆன்மா
அருவுருவம் அன்றாகும் உண்மை—அருவுருவாய்த்
தோன்றியுடன் நில்லாது தோன்றாது நில்லாது
தோன்றல் மலர்மணம்போல் தோக்கு.

---

* சிவப்பிரகாசம், சக. † 'சத்தசத்' சித்தி. எ-உ.

எ - து. உ - ம். எ - னின். அம்மூன்றனுள் முன்னையதனை வலியுறுத்தி இரண்டலாமையை விளக்குதல் நுதலிற்று.

(இ - ள்.) ஆய் இழை ஆய் ஆன்மா அருஉருவந் தான் அறிதல் அரு உருவம் அன்று ஆகும்—நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிரே சத்து அசத்தென்னும் இரண்டினையும் அறிவதாகலான் அஃதவ்விரண்டுமின்றி அவற்றின்வேறாம். (அற்றேல் அவ்விரண்டினையு மறியு முயிர்க்குத் தன்னுண்மையறியப்படுமோ படாதோவெனக் கடாயினார்க்குப் படுமெனின் தன்னோடுளப்பட மூன்றனையு மறிவதென்னாது அவ்விரண்டனையுமறிவதாயென்றல் பொருந்தாது; படாதெனின் அறியப்படாத பொருள் சூனியமெனப்பட்டு வழூவாமாலெனின்), உண்மை அரு உருவாய்த் தோன்றி உடன் நில்லாது தோன்றாது நில்லாது மலர் மணம் போல் தொக்குத் தோன்றல்—அவ்வான்மாவினுண்மைத் தன்மை அவ்விரண்டும்போல விளங்கித் தோன்றி அவற்றோடொப்ப நிற்பதுமன்று விளங்காது சூனியமாய் நிற்பதுமன்றாய் மலரின்கண் வாசம் (அவ்விருவகையுமன்றி அதன்கணடங்கித் தோன்றுமாறு) போலச் (சத்திலும் அசத்திலுஞ் சார்ந்ததன் வண்ணமாய்) அடங்கித் தோன்றுவதோரியல்பாம் (ஆகலான், அஃதைவபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையு மறியுமுகத்தான் அறியப்படுவதாம்) (எ - று).

ஆகலான் அஃதைவபோலத் தனித்தறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையு மறியுமுகத்தான் அறியப்படுவதாமென்பது குறிப்பெச்சம்.

சுட்டுணர்விற்கு விடயமாகாமைபற்றிச் சத்தை அருவென்றும் அதற்கு விடயமாதல்பற்றி அசத்தை உருவென்றுங் கூறினார். உணருரு அசத்தென்புழி உருவென்றதும் அதுநோக்கி.

செவ்வெண்தொகை விகாரத்தாற்றொக்கது. தான் அசை.

அறிதலானன்றாகுமெனவியையும்.

இழை நூலாகலான் ஈண்டுச் சாத்திரத்தையுணர்த்திற்று.

ஆய்தல் நுணுகுதல். *"ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய், ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்" என்றார் தொல்காப்பியனாரும். ஆய்இழை ஆய்எனப் பொருளினுணுக்கம் நூன்மேலேற்றப்பட்டது; இரண்டாவது விரித்துரைக்க.

உயிர்க்கு அறியுந்தன்மை உண்டாகலானன்றே வேதாகம முதலிய நூல்களுளவாயினவென அதனை வலியுறுத்துவார்

* சொல்லதிகாரம், உரிச்சொல்லியல், ௩௨.

ஆய்இழை ஆய் ஆன்மாவென அதனையுடம்பொடுபுணர்த்தோதி னார். அக்கருத்தே பற்றிப் *"பலகலை யுலகி னிலவுதலானும்" என்றார் புடைநூலாசிரியரும். இவ்வாறன்றி ஆயிழையாவென மகடூஉ முன்னிலையாக்குவார்க்கு இவ்வுதாரணம் மேலதனை வலி யுறுத்துதற்கெழுந்ததன்றாய்க் கூறியதுகூறலென்னும் வழுவாய் முடியுமென்றொழிக.

தேற்றேகாரம் விகாரத்தால் தொக்கது.

அருவுருவாயென்புழி ஆக்கச்சொல் உவமைப்பொருள் குறித்து நின்றது; †"ஆள்வா ரிலிமா டாவேனோ" என்றாற் போல.

தொக்குத் தோன்றல் மலர்மணம்போலெனக் கூட்டுக.

‡மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசில்—அசத்தும்அலை
நீஅறிந்து செய்வினைகள் நீஅன்றி வேறசத்துத்
தான்அறிந்து துய்யாமை தான்.

எ - து. உ-ம். எ-னின். அங்ஙனம்அறியும்உயிர் சிவசத் தோடு ஒப்பச்சித்தாகுமென்பாரை நோக்கி உபதேசியாய் என் றதனை வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ - ள்.) மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும்— (நின்அறிவை விளக்குதற்குரிய வியஞ்சகம்இல்வழி ஒருவிட யத்தை இன்னதென்றறியமாட்டாது) மயக்கத்தையுற்றும் (பசிநோய்க்கு அன்னம்போல) அம்மயக்கநோய்க்கு மருந்தாய வியஞ்சகமுளவழி அம்மயக்கநீங்கி (அதனை யின்னதென்று) நிச்சயித்தும், பெயர்த்து உணர் நீ பேசில் சத்துஆகாய்—இங்ங னம் மாறி மாறிஉணர்ந்து வருகின்ற நீ சொல்லுமிடத்துச் சிவ சத்தோடொப்ப அறியுஞ் சத்தியுடையாயல்லை, (அற்றேல் அசத் தனுவேன் போலுமெனின்)—நீ அறிந்துசெய்வினைகள் நீ அன்றி வேறு அசத்துத் தான்அறிந்து துய்யாமை அசத்தும் அலை—(வியஞ்சகம் உள்வழியும்) நீ முன்னறிந்து செய்த வினை களை இப்பொழுது நீயேயறிந்து அநுபவிக்கவல்லையன்றி நின் னின் வேறாய் அசத்தாகிய பாசம் அறிந்து அநுபவிக்கமாட் டாமையான் (அதனோடொப்ப) அசத்தனுவாயும்அல்லை, வேறு- (சத்தகுணமுடைய ஆகாயம்போல வியஞ்சகமுள்வழிஅறியும் ஆற்றலுடைமையும் அஃதில்வழி அவ்வாற்றலின்மையுமாகிய

---

* சங்கற்பநிராகரணம், கஅ. † திருவாசகம், இரங்குநமக்கு.
‡ 'அறிவிக்க' சித்தி, எ - ச.

இரண்டுமுடைய நீ அவ்விரண்டற்கும்) வேறாய்ச் சிதசித்தாந் தன்மையுடையை எ - று.

மருந்திற்றெளிந்தெனவே மயங்குதல் அஃதில்வழியென் பது பெற்றாம். வியஞ்சகமில்வழித் தலைப்படுவதூஉம் அஃதுள் வழி நீங்கிநிற்பதூஉமாகிய மயக்கம் உண்டியில்வழித் தலைப்படு வதூஉம் அஃதுள்வழி நீங்கிநிற்பதூஉமாகிய இயல்புடைய பசி யோடொத்தலின் அதனைப் பசிநோயாகவும் தீர்த்தலொப்புமை பற்றி வியஞ்சகத்தைப் பசிதீர்க்கு மருந்தாகவும் உருவகஞ்செய் தார். இஃதேகதேசவுருவகம். மருந்தெனப் பொதுப்பட உரு வகஞ்செய்தாராயினும் மறித்துமறித்து வேண்டப்படுமாறு ஈண்டைக்கேற்புடையது பசிநோய்தீர்க்கு மருந்தேயாகலின் அவ்வாறுரைக்கப்பட்டது. அது பகுதிப் பொருள்விகுதி.

உம்மை எண்ணின்கண் வந்தது. அசத்துமென்னும் உம்மை இறந்தது தழீஇயிற்று.

தானென்பது முன்னையது எழுவாயுருபு படநின்றது. பின்னையது அசைநிலை.

துவ்வாமை துய்யாமை என மரீஇயிற்று.

சத்தியுடையபொருள் சத்தம், அஃதில்பொருள் அசத்தம் ஆகலின், அவ்வடமொழிகள் ஈண்டம்முக் கெட்டுக் குற்றிய லுகரவீறாய் நின்றன. *"நாகணையான்;" †"பெற்றொன்று உயர்த்த பெருமான்;" ‡"பேது செய்து," §"வாது செயத் திரு வுள்ளமே" என்புழிப்போல.

அசித்தும்அலையென்பது பாடமாயின், மேற்சத்தாகாயென் றதனை இசையெச்சமாகக்கொண்டு சத்தாந்தன்மையே யுடையா யல்லை; அதன்மேலுஞ் சித்தாமாறியாங்ஙனமென்றுரைத்து இயைத்துக்கொள்க. இவ்வாறன்றி ஈண்டுச்சத்தாகாய் அசத்தும் அலையென்பவற்றைமேலருவுருவம் அன்றாகுமென்றதன்பொருள் படக் கொண்டுரைப்பாருமுளர். அவர் ஆண்டேயமைந்து கிடந்த பொருளை மறித்துங் கூறவேண்டாமையும் பெயர்த்துணர் நீ யெனவும் அறிந்து துய்யாமையெனவும் அறிவுடைமை அறிவின்

* திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம், கோயில். கோணு கணையானும்.

† ஷை திருப்பாசுரம். கக. அற்றன்றி.

‡ சிந்தாமணி, விமலையாரிலம்பகம், ருஉ.

§ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம். திருவாலவாய், நாலடி மேல்வைப்பு.

மைபற்றிக் கூறும் பொருள்அவையாதல் செல்லாமையும் நோக்கிலர்.

*மெய்ஞ்ஞானந் தன்னில் விளையாது அசத்தாதல்
அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே உளஅன்றே தண்கடல்நீர் உப்புப்போல்
தானேய் உளம்உளவாத் தான்.

எ - து. உ-ம். எ-னின். அம்மயக்கம் அவ்வுயிரோடு இயைபுடைய முதல்வனுக்கும் உண்டுபோலுமெனவும் அது தான் உயிர்க்கு எக்காலத்து வந்ததெனவும் நிகழுங்கடாவை விடுக்கு முகத்தான் இரண்டன்பாலும் உளதாமாறு வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அஞ்ஞானம் — மேற்கூறிப்போந்த மயக்கமாவது, மெய்ஞ்ஞானந் தன்னில் அசத்து ஆதல் விளையாது—(ஒரு பெற்றித்தாய அறிவெனப்படுஞ்) சிவத்தினெதிர் (கதிர்முன்னிருள்போல) நிலையுதலிலதாகலின் ஆண்டுளதாதலின்றி, மெய்ஞ்ஞானந்தானே உள அன்றே—அச்சிவம் என்றுள்ளது அன்றே, தான் ஏய் உளம் உளவா—தான் பொருந்துதற்கு உரிமையுடைய உயிர்களுள்ளனவாக, உள்ளம் அணைதல்—அவ்வுயிர்களைப்பற்றி நிற்றல், தண்கடல் நீர உப்புப்போல் காண்—தண்ணிய கடலின்கண் உளதாதலின்றி அக்கடலிடத்துளதாகிய நீரைப்பற்றி நிற்கும் உப்புப்போல் என்று அறிவாயாக (எ - று).

விளையாது என்னும் வினையெச்சமறை அணைதல் என்னுந் தொழிற்பெயரோடு முடிந்தது.

தானேயென்பது கட்டுரைக்கண் வந்தது. தானேய்உளமுளவாத் தானென்புழித் தானென்பது முன்னையது எழுவாய் பின்னையது அசைநிலை.

ஏய்உளமென்னும் வினைத்தொகை †"அறிவறிந்தமக்கட்பேறு" போலநின்றது. ஏய்தற்குரிமையாவது மேற்காட்டினும்.

தண்கடல்நீர் உப்புப்போல் என்றதனால் முப்பொருள்களும் வியாபக வியாப்பியங்களாய் நிற்குமாறும் பெறப்பட்டது.

இரண்டன்கண்ணும் உயிர்க்கியைபுடைமைகூறவே, இரண்டன்பாலும் உளதாதலை வலியுறுத்தவாறு காண்க.

ஈண்டிருதிறனையும்அறியும் அறிவுளதெனவே இருதிறனாகிய சத்து அசத்து எனப்பட்டனவெல்லாம் பிரமேயம் அவற்றை

* 'சுத்தமெய்ஞ்' சித்தி, எ, ௩-௩ † திருக்குறள். ௬௧.

அறியுஞ் சதசத்தாகிய உயிர் பிரமாதா அவ்வுயிரினறிவாகிய சிற்சத்தி பிரமாணம் அவ்வறிவு நிகழ்ச்சி பிரமிதியென்பதூஉம் இருதிறனுல் விளங்கும்அறிவுளதெனவே அவ்விரண்டனுள் அசத்தானறிவு விளங்கும்வழித் தனக்கு வேறாய்நின்று விளக்குவனவாய காட்சிஅனுமானம் உரையெனப்படும் அசத்தாகிய பாசஞான மூன்றும் சத்தானறிவு விளங்கும்வழி அன்னியமின்றித் தனக்காதாரமாய் உடனின்று விளக்குஞ் சிவஞானமுந் தனக்கு வியஞ்சகங்களாகலான் அதுபற்றி அவையும் பிரமாணமென்று உபசரித்துக் கூறப்படுமென்பதூஉம், இருதிறனினும் அறிவுளதெனவே ஈரிடத்துங் கேடின்றி அசத்தான் விளங்கி அசத்தை அறிவுழி அசத்தின்பாலும் சத்தான் விளங்கிச் சத்தைஅறிவுழிச் சத்தின்பாலும் அதுவதுவாய் அழுந்துமென்பதூஉம் பெறுதும். இவ்வாறன்றி வியஞ்சகங்களையே பிரமாணமென்னுந் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் பொருந்தாமையும் அவ் வியஞ்சகங்களான் நிகழும் பிரமிதிவேறுபாடும் அவற்றதியல்புகளும் ஈண்டு விரிப்பிற் பெருகும்; பௌட்கரமுதலிய சிவாகமங்களுட் கண்டுகொள்க.

## விளக்கம்

**ஒழிபளவை**

ஒழிபளவை எனினும் பாரிசேட அளவை எனினும் ஒன்றே. இறை உயிர் தளை ஆகிய பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களுள் இறை தானே விளங்கும் பேரறிவுப்பொருள். தளை அறிவில் பொருள். இறை குறைவிலா நிறைவினன். இன்பவடிவினன் எவ்வுயிர்க்கும் இன்பம் நல்குவோன். தளையாகிய மாயை இறைவனுல் உலகுடல்கலன் நுகர்வு ஆகக் காரியப்படுத்துதற்கு முதற்காரணமாய் உள்ளது. அஃது அறிவில்லது. அது தன்பயன் துய்க்கும் வேட்கையுடையார்க்கே விளங்கித்தோன்றுவது. இறைவன் திருமுன் விளங்கித்தோன்றும் இயைபில்லது. குறித்த நூல் கற்கும் வேட்கையொன்றில்லான் செறித்த திருவார் நூல்நிலையம் முற்றும் ஒருங்கு காண்பன்; எனினும் கற்றுப்பயன் துய்ப்பார்போன்று பயன் துய்யான். இப்பயன் துய்யாமையின் இயைபே விளக்கம் இன்மை எனக் கூறுவது. எனவே, இறைவன்முன் விளங்காமைக்குக்காரணம் இறைவன்மாட்டு வேட்கை இன்மையே.உயிர்விளக்கவிளங்கும் சிற்றறிவுடையன.

தளையாகிய மாயைக்கு அறிவின்மையால் இறைவனை உணர்ந்து அவன்தன் குறைவிலா நிறைஇன்பினை நுகராது. இது தொன்னை நெய்யை உணராமையையும் நுகராமையையும் ஒக்கும். 'விடுநிலமருங்கின் படுபுல் ஆர்ந்து, நெடுநில மருங்கின் மக்கட்கெல்லாம், பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால், அறந்தரு நெஞ்சோ டருள்சுரந்தூட்டும்''* ஆவும் நெய்யினை நுகராது. அதுபோல் இறைவனும் தளையை நுகரான். எனவே இவ்விரண்டினையும் சார்ந்து இரண்டன் பயனும் நுகர்வது உயிர் என்க. முப்பொருள்களுள் இறை தளை இரண்டும் ஒன்றனை ஒன்று

* மணி. ஆபுத் - ௯௧. ௯௪.

உணரா என முடித்தபின் மற்றொன்றாகிய உயிர் இவ்விரண்டினையும் உணர்ந்து நுகரும் என உய்த்துணர்ந்து முடிப்பது ஒழிபளவை.

**விளக்க விளங்கி**

ஆவி விளக்க விளங்கும் தன்மைவாய்ந்தது. விளக்குங் காட்டாகிய முதல்வனைச்சாரின் அறிவு விளங்கும். அறிவில்லாத மாயையைச்சாரின் அறிவு விளங்கா. மாயை விளக்கும் காட்டாவதின்று. கலன் முதலிய கருவிகளாம்போது காட்டாந்தன்மை எய்துகின்றனவே எனின்? காணும் உணர்வேனும் காட்டும் உணர்வேனும் அவற்றிற்கு இல்லை. ஆவி அவற்றொடுசார்ந்து நிலையில இன்பவேட்கையும் பிறப்பு வலையில் வீழ்த்தும் அறியாமையின் ஆட்சிக்கு அடிமைப்படலும் எய்துகின்றன.

எனவே, நிலையுள்ளதாகிய முதல்வனைச்சார்ந்து நிலையுள்ளதாதலும் நிலையில்லதாகிய மாயைச்சார்ந்து நிலையில்லதாதலும் கொள்வதாய ஆவி **சதசத்து** என்று அழைக்கப்படுகின்றது. சத்து நிலையுள்ளது. அசத்து நிலையில்லது. சத்து என்றும் ஒருபடித்தாய் இருப்பது. அசத்து தோன்றி நின்று ஒடுங்குவது. இப்பொருள் பயப்பதே **விளக்க விளங்கி** என்பது. ஆவி கற்பிப்பாரோடும கற்பாரோடும்சேரின் கற்கும் உணர்ச்சியும், வேட்கையும், ஊக்கமும் முனைத்துக் கற்கும். கல்லாரைக்கூடின் பொல்லாவிளையாட்டால் பொழுது கழிக்கும். இதுபற்றியே பிறிது மொழிதலாக உலகிற் பழமொழி '**எடுப்பார் கைப்பிள்ளை**' என்று வழங்குவதாயிற்று. எடுத்தல் - எழுப்புதல்.

> விளக்கினும் தான்விளங்கா மாயைநல் ஆவி
> விளக்க விளஙகுசத சத்து.

**கண்**

ஆவிக்குக் கண் ஒப்பு மிகவும் பொருத்தமானது. காட்சிப்புலனும் பொருள்கள்மேல் ஞாயிற்றின் கதிர்கள் படுகின்றன; அதனால் அப் பொருள்கள் காண்பார்க்குப் புலனாகின்றன. காண்பார் கண்டு காட்சி இன்பம் எய்துகின்றனர். அப்பொருள்களின்மேற்படும் கதிரேனும் கதிரவனேனும் அப்பொருள்களால் எவ்வகை மலிவும் பொலிவும் மகிழ்ச்சியும் மாறுதலும் அடைவனவல்ல. மலிவு - வளம். பொலிவு - வனப்பு.

அப்பொருள்கள் தம்மைக்கண்டு பிறர்காட்சி இன்பம் எய்தக் கதிரால் விளக்கமுறுகின்றன. அத்துணையே அன்றிக் கதிரைக் காண்பதும் இன்று; கதிரைத்துய்த்துப் பயன் எய்துவதும் இன்று. இந்நிலையில் ஒன்றை ஒன்று நுகராத ஞாயிற்றையும் புலனையும் (விடயம்) நுகர்ந்து காட்சி இன்பம் எய்துவது கண்ணேயாம். இதுபோல் உலகியற் பொருளையும், உலகிறந்து, உளம் இறந்து, உணர்விறந்து கலந்தமயக்கால் தெவிட்டாக்களிப்பினை வற்றா ஊற்றா வழங்கும் கடவுளையும் கலந்து இன்பம் துய்ப்பது ஆவி. அவை ஆவியானும் அறியப்படாவிடின் பயனிலவாய்ப் பாழாய் முடியும். அதனால் ஆவி அறியும் தன்மைத்து என்று உணர்க. திருக்கோவிலைக் கண்டவுடன் திருநெறிச்சான்றோர் உண்மை பெறப் படுவதுபோன்று உலகியற் பொருள்களைக்கண்டதும் அவற்றைத் துய்த்துப் பயன்கொள்ளும் அளவிறந்த ஆவிகளின் உண்மையும் பெறப் படும்.

கண்ணின் தன்மையைக் கட்டுரைக்கும் சிவப்பிரகாசத் திருப்பாட்டு வருமாறு:

"சத்திது வென்ற சத்துத் தானறி யாத சத்தைச்
சத்தறிந் தகல வேண்டா அசத்திது சத்தி தென்றோர்
சத்திருள் ஒளிய லாக்கண் தன்மைய தாம சத்தைச்
சத்துடன் நின்று நீக்குந் தன்மையால் சதசத் தாமே."
—சிவப்பிரகாசம், ௩ - ௬.

நிலைத்த கடவுள் மாயையை அறியாமைக்குக் காரணம் மாயை அவன் தாள்நிழல் பரப்பில் கலந்து வேறின்றி நிற்கின்றது. நீரும் மீனும் வேறின்றி நீர்ப்பரப்பில் மீன் கலந்திருப்பதை ஒக்கும். நீர் அம்மீனை வேறு காணாது. மீனும் நீரை வேறுகாணும் வேட்கையுடையது அன்று. மீனைக்கண்டு களிப்போர் நீரையும் மீனையும் நீரிலிறங்கற்கு வாயிலாம் படித்துறையை யும் கண்டுகளிப்பர், அவர் வேறு நிற்றலான்.

மாணி

மாணி என்னும் சொல் மாணவன் என்று பொருள்படும். மாணவன் என்பது மன்னுமோர் ஆசானால் மாண்புறு மறைமொழி குறைவற நிறை வுறச் செவியறிவுறுக்கப்பெற்று அவ்வழியொழுகி அளவில் இன்பு எய்தி அனைவாக்கும் துணையாய் நிற்பவன். இம் மாணியையே உபதேசி என்று கூறுவர். மாணி ஆசானையும் நூலையும் அறிவன். ஆசானாலும் நூலாலும் மெய்ப்பொருள் உணர்வன். ஆசான்கண்ணும் நூலின்கண்ணும் அழுந்தி அறிவன். அதுபோல் ஆவி ஆண்டானையும் உலகினையும் அறியும். ஆண்டானால் உலகால் உண்மை உணரும். ஆண்டான் கண்ணும் உலகின் கண்ணும் அழுந்தும். இப்பொருள்கள் பயக்குமாறு வேற்றுமைத் தொகையை விரிக்குங்கால் இரண்டன் உருபு ஐயும், மூன்றன் உருபு ஆலும், ஏழன் உருபு கண்ணும் விரிக்கப்படும்.

வேற்றுமை எட்டனுள் முதல் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமை யும் பெயரும் பெயரதுவிளியுமேயாம். எஞ்சிய ஆறனுள் பெரும்பான்மை பற்றி இரண்டாம் வேற்றுமை எழுவாயின் தன்மை உரிமை கடமை முதன்மை முதலிய பண்புகளை வெளிப்படுத்தும். மூன்றும் வேற்றுமை எழுவாய்க்குத் துணையாம் கருவிகளை யுணர்த்தும். நான்காம் வேற்றுமை எழுவாயின் ஊடராண்மையை உணர்த்தும். ஐந்தாம் வேற்றுமை எழுவாயின் நிலைமையை உணர்த்தும். ஆறும் வேற்றுமை எழுவாயின் உடைமையை உணர்த்தும். ஏழாம் வேற்றுமை எழுவாயின் உறைநிலை யுணர்த்தும். எனவே முதன்மை துணைமை முற்றுமை என்னும் மூன்றனுள் வேற்று மைப் பொருள் எல்லாம் தோன்றும்.

அம்முறையே "இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் (இரண்டாலும் அறிவிக்க அறிவது - உபதேசி) நின்ற அவ்வறிவு இரண் டன்பாலும் உளதாய் (இரண்டன்கண்ணும் அழுந்துவதாய்) உள்ள அதுவே அவ் வான்மாவாம் என்றது."

எனவே அறிவதாய் அறிவிக்க அறிவதாய் அழுந்துவதாய் உள்ளது ஆவி. அறிவதறிவிக்க அறிவ, தழுந்தி, அறியுமியல்புள்ள துயிர் என்க. உபதேசி—மாணி என்பவன் ஆண்டானையும், அவன் திருவுருவினையும், அவன் வழிபாட்டினையும், அதற்காம் பொருளினையும், தடையினையும்,

விடையினையும், தனிமுதலின்பினையும் அவனருளால் அறிந்தடைந்து அழுந்துபவன். இவ் உண்மை ஆளுடைய அரசர் திருப்பாட்டானும் உணர்க.

> "மாணி பால்கறந் தாட்டி வழிபட
> நீணு லகெலாம் ஆளக் கொடுத்தஎன்
> ஆணி யைச்செம்பொன் அம்பலத் துள்நின்ற
> தாணு வைத்தமி யேன்மறந் துய்வனோ."
>
> —தி. ௨ - ௬.

## மும்மை நிலை

நிலைப்பதும் நிலையாததும் ஆகிய சத்தும் அசத்தும் ஒன்றனை யொன்று அறியாதாகவே இரண்டனையும் அறிவது ஆவியே எனவும், ஆவியும் அறிவித்தால் அன்றி அறியா இயல்படையதெனவும், அறிந்தழுந்திப் பயன் துய்ப்பது ஆவியே எனவும் விளக்குவது முறையே இரண்டு மூன்று ஏழன் உருபுகளை விரித்துப் பொருள்கொள்வதால் என்க

## பளிங்கு

ஆவியின் சிறப்பியல்பு படிகம் - பளிங்குபோன்று சார்ந்ததன் வண்ண மாய்ப்பற்றி அதன்கண் அழுந்தும் தன்மைவாய்ந்தது. குழவும் பிள்ளை தாய் விட்ட இடத்தைப்பற்றித் தவழும். தாயும் பிள்ளைகட்கு உண்ண, உணர. உழைக்க, உதவ, உறங்க, கழிக்க, களிக்க வெவ்வேறு இடங்கள் அமைத்து ஆங்காங்கே அவ்வப்போது விடுவள். அதுபோன்று ஆண்டவனும் ஆவிகட்கு அவ்வப்போது வேண்டும் நிலை அருளி நன்னெறிக்கு உய்ப்பன்.

ஆவி பளிங்கனையது என்பதைத் தாயுமானச செல்வர் அருளுவது காண்க.

> "வந்தேனுடல் பொருள்ஆவி மூன்றுந்* தந்தை
> வசமெனவே அததுவா மார்க்கம் நோக்கி
> ஐந்துபுலன் ஐம்பூதம் கரணம் ஆதி
> அடுத்தகுணம் அத்தனையும அல்லை அல்லை
> இந்தஉடல் அறிவறியா மையும்நீ அல்ல
> யாதொன்று பற்றின்அதன் தியல்பாய் நின்று
> பந்தம்அறும் பளிங்கனைய சித்து நீஉன்
> பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்."
>
> —தாயு. ஆகார - ௧௮.

'அருவுருவம்................ ...தொக்கு.'

## மலர் மணம்

கடவுள் கட்புலன் ஆகாமையின் அரு என்பர். மாயை கட்புலன் ஆதலின் உரு என்பர். இவ்விரண்டினையும் சார்ந்து அவ்வற்றை அறிந்து அழுந்திப் பயன் நுகர்வது ஆவி. அவ் ஆவி தன்னை அறியுமோ? அறியாதோ? என ஆராய்வார்க்குத் தன்னை வேறு தனித்து அறியாது. அவ் இரண்டினையும் அறியும் வழியால் தன்னையும் அறியும். அது

---

* 'அன்றே என்தன்' அ. குழைத்த - ஏ.

மலரின்கண் மணம் வேறுகாணப்படாது மலராயும் ஒழியாது மலருள் அடங்கி மலரும் மணமும் என முறையே கட்புலனுக்கும் மூக்குப்புலனுக்கும் புலனும் தன்மையை ஒக்கும். ஆளுடைய அடிகள் கூறும் மலர்மணத் திருப்பாட்டு வருமாறு :

"உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போற்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே."

—அ. அதி - ௯.

## நுண்நூல்

'ஆய் இழை' என்பது நுண்நூல் எனப் பொருள்படும். ஆய் - நுண்மை. இழை - நூல். ஆய்தல் என்னும் தொழிற்பெயரின் முதல்நிலை ஆய். இவ் ஆய்தல் நுணுகுதல் என்னும் பொருளில் தொல்காப்பியத்து வரும் நூற்பாக்காண்க :

"ஓய்தல் ஆய்தல், நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்."

—தொல். சொல் - ௩௩௦.

கொள்வது இன்றெனில் கொள்பொருளும் கொடுப்பதும் இன்றாகும். கொள்பொருளாககாணின் கொள்வதும் கொடுப்பதும் உள எனக் காணுமே கூறலாம். அதுபோல் பலகலை நூற்களை உலகிடைப்பார்ப்பதால அந்நூற்களைக்கற்கும் ஆவிகள் உள என்பது தாமே பெறப்படும். அந்நூலகளை ஆக்குவித்த ஆண்டவன் கற்றற்பொருட்டு எனக் கொள்ளல் ஆகாதோ எனின்? ஆக்கியோன் நூலினைக் கற்கவேண்டுவதின்றென்பது கண்கூடல்லவா? அங்ஙனமாயின் நூலாசிரியன் உணர்வினிற் கலந்து ஆக்குவித்த ஆண்டவன் அறியவேண்டுவதின்மை சொல்லாமலே விளங்கும். நூலுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்."

—திருக்குறள், ௨.

"பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும்அரு உருஇன்றிக் குணங்குறிகள் இன்றி
நின்மலமாய் ஏகமாய் நித்தம் ஆகி
அலகில்உயிர்க் குணர்வாகி அசலம் ஆகி
அகண்டிதமாய் ஆனந்த உருவாய அன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவம்என்பர் தெரிந்துளோரே."

—சிவப்பிரகாசம், க - க.

## ஆய்இழைஆய்

'ஆய்இழைஆய்' என்பதற்கு நுண்ணியநூலை ஆராய்கின்ற என்று பொருள்கொள்ளாது 'ஆய்இழையாய்' ஆராய்ந்து எடுத்த சிறந்த அணியமை பெண்ணே என்று பொருள் கொள்ளின் இவ் எடுத்துக்காட்டு அறியும் தன்மை ஆவிகளுக்கு உண்டு என்பதை வலியுறுத்துவதாக முடியாது. இவ்விரண்டினையும் அறிவதாய் என்பதனையே மீட்டும்

'அருவுருவம் தானறிதல்' என்று கூறியது கூறலாகவே முடியும். எனவே, மகடூஉ முன்னிலை ஒவ்வாது.

### இலக்கணம்

'அருஉருஆய்' என்பதன்கண் உள்ள 'ஆய்' என்னும் ஆக்கச்சொல் உவமம் குறித்து நின்றது. —உ௬௩. ஆம் பக்கம் காண்க.

### மாணி

'மாணி' என்பது. அறிவிக்க அறியும் தன்மைத்து என்பதாம். இதனை 'உபதேசி' என்னும் சொல் விளக்கும். 'உபதேசி' உபதேசத்தைப் பெற்றுள்ளவன். ஆவிக்குள்ள அவ்அறிவு உரிமையாய் (சுதந்திரம்) உண்டு என்று கூறினால் வரும் குற்றம்யாது? ஆவி காட்டு இன்றி எதனையும் உணராது. காட்டு வியஞ்சகம். ஆவி ஆண்டவனை உணருங்கால் ஆண்டவன் திருவருள் நேர்நின்று காட்டாகும். மாயாகாரியப் பொருள்களை உணரும்கால் பொறிபுலன்கலன் முதலியவற்றினிடமாக மறைந்து நின்று திருவருள் காட்டுவிக்கும் காட்டாகும். இஃது ஆசான் மாணவரை நேராக ஓதுவிப்பன். பழையமாணவரைக் கொண்டு ஓதுவிப்பிப்பதும் செய்வன், அதனை ஒக்கும்.

ஓதுவித்தல் ஓதுவிப் பித்தல் அருள்நேரோ
டோதுகலன் உள்நின்றும் காட்டு.

'மயக்கமது.......................நான்.'

### மருந்து

பசிநோய்க்கு மருந்து எப்படியோ! அப்படியே ஆவி புலன்நுகர்வு கொள்வதற்குக் காட்டு. காட்டு - துணை; வியஞ்சகம். காட்டு இல்லையானால் மயக்கம் தெளியாது. பொருள் உணர்ச்சி உண்டாகாது. காட்டாகிய மருந்தினால் மயக்க நோய் நீங்கும். இது வெளிச்சத்தின் துணையினால் கண் காணவும் கால் நடக்கவும் முடிவதை ஒக்கும். இங்ஙனம் மயக்கமுற்றும் தெளிந்தும் வருகின்ற நீ என்றும் ஒருபடித்தாய் உள்ள சத்தாதல் எப்படி? சத்து - என்றும் ஒருபடித்தாய் இருப்பது. இது பொன்மாலையினையும், புகழ்சேர் வளமனையினையும் ஒக்கும்.

### அழிபொருளும் அன்று

ஆவி அறிவு அழுந்தல்கள் இல்லாத அழிபொருள்கள் ஆகுமோ எனின்? அங்ஙனமும் ஆகாது. அசத்து அவ்வப்பொழுது தோன்றுவதால் மலர்மாலையினையும் சிறுமியர் புனையும் சிற்றிலினையும் ஒக்கும்.

### ஆவியே அழுந்தும்

செய்வினைப் பயனைச்* சேர்ந்துணர்ந்து துய்ப்பது ஆவியே அன்றிக் கருவி ஆகிய உடல் அன்று. என்னை? உடலுக்கு அறிவில்லை. மட்கலத்து நீர் புறத்துப் புலனாவது போன்று உடலிலும் உயிர் உறைவால் ஊற்றுணர்ச்சி முதலியன உண்டாகின்றன, அதனால் என்க.

மேலும் உடல் போன்றது நூல். உயிர்போன்றவன் மாணி. உயிர்க்குயிராகிய நிலைப்பது - சத்துப்போன்றவன் ஆசான். வினைபோன்றது

* 'செய்வினையும்' பக்கம் ௩௨௫.

மாணவன் கற்பதும் கல்லாமையும் ஆகிய நலம்பொலச் செயல்கள். தேர்வில் தேறிநற்சான்று பெறுவது போன்றது வினைப்பயன் துய்ப்பது. சான்று பெறுவது மாணவனே அன்றி ஆசானும் அல்லன்; நூலும் அன்று.

வினைப்பயன் வீயாது சென்று செய்தானை அடைந்து துய்ப்பிக்கும் என்பது வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்று அடும்." —திருக்குறள், உ0எ.

"குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைச் செய்ததீமைகள் இம்மையேவரும் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன் மறவாதெழுமட நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றம்ஏறி புறம்பயந்தொழப் போதுமே."
—எ. ௩௫ - ௪.

"ஓதுவித் தாய்முன் அறவுரை காட்டி அமணரொடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி தீர்த்தாய் கலந்தருளிப்
போதுவித் தாய்நின் பணிபிழைக் கிற்புளி யம்வளாரால்
மோதுவிப் பாய்உகப் பாய்முனி வாய்கச்சி ஏகம்பனே."
—௪. ௧௧ - ௧.

காதுவித்தல் - பிரிவித்தல்.

"ஈனப் பிறவியில் இட்டது மீட்டேட்டித்
தானத்துள் இட்டுத் தனையூட்டித் தாழ்த்தலும்
ஞானத்தின் மீட்டலும் நாட்டலும் வீடுற்று
மோனத்துள் வைத்தலும் முத்தன்தன் செய்கையே."
—௧0. எ - உ0௬௧.

## சிவத்தின்பாற் சேரா மயக்கு

ஆவிக்கு மட்டும் மயக்கம் உண்டு. சிவத்திற்கு அஃது இல்லை எனக் கூறின், அவ்விரண்டும் தம்முள் இயைந்திருப்பது எங்ஙனம்? இயைபு இல்லை என்று ஆகுமன்றே! அதனால் சிவத்துக்கும் மயக்கம் உண்டெனல் வேண்டும் என்பார் கொள்கை மறுக்கப்படுகின்றது. கல்லாத மாணவர் .எனைக் கல்லாத மாணவரோடும் கற்று வல்லராய்க் கற்பிக்கும் தொழிலராய் ஆற்றல் மிக்காராய் விளங்கும் ஆசானோடும் இயைந்து வாழ்வர். ஆயினும் கல்லாமை - அறியாமை மாணவரைப் பற்றுமே அன்றி ஆசானைப் பற்றுவதின்று.

நோயாளர் எனை நோயாளரோடும் நோய் நீக்கும் மருத்துவரோடும் இயைபுகொண்டு மருத்துவ இல்லத்து வதிவர். ஆனால் நோய் நோயாளரைப் பற்றுமே அன்றி மருத்துவரைப் பற்றாது. இவைபோல் ஆவி சிவத்தோடு இயையுகொண்டு இருப்பினும், மயக்கம் ஆவியைப் பற்றுமே யன்றிச் சிவத்தைப் பற்றாது. ஆவியும் சிவமும் இயைந்திருப்பதால் ஆவியைப் பற்றும் மயக்கம் சிவத்தைப் பற்றாமைக்கு எடுத்துக்காட்டு நீருட் கிடந்து நிரம்ப பசியதாயிருப்பினும் நெட்டியின் அகத்து ஈரம் இல்லாமை;* தாமரை இலை நீர் ஒட்டாமையும் காண்க.

'மெய்ஞ்ஞானம்.................................தான்.'

---

* 'நீருள்' நாலடி. ௩௪0,

## தொல் இயைபு

சிவம் ஆவி மாசு எனப்படும் முப்பொருள்களும் தொன்மையில் உள்ளன. எனினும், மாசு தான் ஒட்டுதற்குரிய ஆவியை அன்றி புல்லுதற்கு இயைபில்லாத தூய சிவத்தின் மாட்டு ஒட்டுதல் இல்லை. ஒட்டுதல் எனினும் புல்லுதல் எனினும் ஒன்றே. எடுத்துக்காட்டு 'கடல், நீர், உப்பு.' கடல் என்பது நீருக்கு நிலைக்களனாக இருக்கும் நிலத்தினை அன்று; நீருக்கும் நிலத்திற்கும் இடம் கொடுத்து நிற்கும் வானாகிய வெளியினை. கடல் சிவத்தையும், நீர் ஆவியையும், உப்பு மாசினையும் ஒக்கும். உப்பு இயைபுடைய நீரைப் பற்றுவதன்றி இயைபில்லாத கடலைப் பற்றுவதின்று. கடலாகிய வெளியை உப்புப் பற்றிற்றேல் வெளி கலந்த பொருள் எல்லாம் உப்புறைத்தல் வேண்டும். அங்ஙனம் இன்மையால் நீரையே பற்றிற்று என்க.

அதுபோல் மாசு ஆகிய அறியாமை இயைபுடைய ஆவியையே பற்றிற்று. இயைபில்லாத சிவத்தைப் பற்றவில்லை. அறியாமை சிவத்தைப் பற்றுமேல் சிவத்தைச் சார்ந்த தூய உயிரும் அறியாமையாக அல்லவோ முடியும். ஆயின், சிவத்தை எஞ்ஞான்றும் அறியாமை பற்றுவதின்று. ஞாயிற்றைக் கண்டால் அடங்கும் இருள் அஞ்ஞாயிற்றை அடர ஒண்ணாமை போன்று சிவத்தைக் கண்டால் அடங்கும் அறியாமை சிவத்தைப் பற்றுவதில்லை.

## ஈர் இயைபு

நிலைப்பதன்கண்ணும் நிலையாததன்கண்ணும் ஆவிக்கு இயைபு கூறவே அவ்வவ்விடத்துள்ள காட்டு (வியஞ்சகம்) க்களை ஆய்வது கடனாகும். 'இருதிறனையும் அறியும் அறிவு' ஆவிக்கு உண்டு. இருதிறன் நிலைப்பதும் நிலையாததும். இவையே சத்து அசத்து எனப்படுவன. இவை அளக்கப்படும் பொருள்களாகிய பிரமேயம். அறியும் சார்பியாகிய ஆவி அளப்போன். அளப்போன் எனினும் பிரமாதா எனினும் ஒன்று. ஆவியின் அறிவாகிய அறிவாற்றல் அளவை. அளவை—பிரமாணம். அவ் அறிவின் நிகழ்ச்சியாகி அளத்தல். அளத்தல்—பிரமிதி.

## காட்டு

நிலையாத பொருளாகிய அழிபொருளால் அறிவு நிகழுங்கால், தனக்கு வேறாய் நின்று விளக்குவனவாய காண்டல், கருதல், உரை மூன்றும் காட்டாகும். இவையே சுட்டுணர்வு—கருவியுணர்வு எனப்படும். சுட்டுணர்வு எனினும் கருவியுணர்வெனினும் ஒன்றே.

நிலைத்த மெய்ப்பொருளால் அறிவு விளங்கும்போது வேறின்றி ஒன்றாய் ஆவிக்கு நிலைக்களனாய், உடனாய் நின்று காட்டாக விளக்கும் சிவ மெய்யுணர்வு காட்டாகும்.

## கேடின்று

நிலைப்பதும் நிலையாததும் ஆகிய பொருள்களை அவற்றான் ஆவி அறியும். அப்பொழுது அவ்வவற்றோடு சார்ந்து அவ்வவற்றின்கண் ஆவி அழுந்தும். அதனால் யாண்டும் ஆவிக்குக் கேடின்று.

**கேடின்று என்பதனைத் தாயுமானச் செல்வர் கூறியருள்வது காண்க.**

"தானான தன்மயமே அல்லால் ஒன்றைத்
தலைஎடுக்க ஒட்டாது தலைப்பட் டாங்கே
போனாலும் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
ஆனாலும் இதன் பெருமை எவர்க்கார் சொல்வார்
அதுவானால் அதுவாவர் அதுவே சொல்லும்."
—தாயு. ஆகார - உஉ.

மேலும் வினா வெண்பாவின்கண் வருவதூஉம் காண்க:

"காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை
காண்பார்கள் நன்முத்தி காணார்கள்—காண்பானும்
காட்டுவதும் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர்."
—வினா - கக.

## அறிவே கருவி

ஆவியின் அறிவே எப்பொருளையும், எஞ்ஞான்றும், யாண்டும் தப்பின்றிச் செப்பமாய் அறிதற்குக் கருவியாகும். திருவருளும் காண்டல் கருதல் உரையாகிய அளவைகளும் ஆவியின் அறிவிற்குக் கருவித்துணையாகும். இவைகள் அறியப்படும் பொருளாகவும் இருக்கின்றன.

## இலக்கணம்

'விளையாது' என்பது விளையும் என்னும் வினை எச்சத்தின் எதிர்மறை. அது 'அணைதல்' என்னும் தொழில் பெயர்கொண்டு முடிந்தது. '**தானே**' இது 'மெய்ஞ்ஞானந்**தானே**' என்பதன்கண் உள்ளது. அஃது உறுதிக்கண் வந்தது.

'தான்' தான் ஏய்உளம் என்பதன்கண் உள்ளது. இஃது எழுவாய்ப் பொருள்பட வந்தது. 'உளவாத்தான்' இதன்கண் உள்ள 'தான்' அசைநிலை.

'ஏய்உளம்' வினைத்தொகை. ஏய்தற்கு உரிமையுடைய உயிர் 'அறிவறிந்த மக்கட்பேறு' அறியவேண்டுவன அறிதற்குரிய மக்கள்.

உரிமை ஆவியினிடத்துள்ள பற்றுந்தன்மை. 'தன்னை மலம் அன்றணைதல் தான்' என்பதனால் விளங்கும். நூற்பா ச. அதி - உ. (பக்கம் - உஉரு.)

## கருத்து

என்றும் சார்ந்து நின்றதே உயிர்நிலை.

## முதுமொழி

இந்நூற்பா '**மேலதற்கோர் புறனடையுணர்த்துதல் நுதலிற்று**' என்று ஆறும் நூற்பாவுடன் மாட்டெறியப்படுதலால் அதற்குக்கூறிய ருஉச-ஆம் பக்கத்தில் காணப்படும் 'சுட்டுப்' என்னும் முதல் நினைப்புடைய வெண்பாவே இதற்கும் கொள்க.

## எட்டாம் சூத்திரம்

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே.

**எ - து. சூ - ம். எ—னின். ஞானத்தினை உணரும் முறைமையினை உணர்த்துதல் நுதலிற்று.**

*எ - து. க - ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

(இ - ள்.) *அவ் ஆன்மாவின் அறிவாவது மேல் இருதிறன் என்றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின்பாலுளதாய் அசத்தினையறிந்து நின்றவாறுஞ் சத்தான் விளங்கிச் சத்தின்பால் உளதாய்ச் சத்தினையறிந்து நிற்குமாறுந் தரிசிக்குமுறைமையினை உணர்த்துமுகத்தாற் சாதித்தற்குரிய அதிகாரந் தனக்கு உண்டென மேலைச்சூத்திரத்தானறிந்த ஆன்மாவுக்குச் சாதித்ததனாற் பெறப்படும் பயனும் அதற்குச் சிறந்த சாதனமாவதும் அது வருவாயும் இவையென்பது உணர்த்துதல் இவ் எட்டாம் சூத்திரத்தின் கருத்து (எ-று).*

*இதனானே சூத்திரஇயைபும் இனிது விளங்கும்.*

*இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: (உயிர்) தான் முன்னே செய்துகொள்ளப்பட்ட புண்ணிய விசேடத்தால் தனக்கு அந்தரியாமியாய் இதுகாறும் உண்ணின்றுணர்த்திவந்த பரம்பொருளே (இப்பொழுது) குருவடிவமுங்கொண்டு எழுந்தருளி வந்து சிவதீக்கை செய்து, "(மன்னவ குமாரனாகிய நீ) ஐம்பொறிகளாகிய வேடருட்பட்டு வளர்ந்து நின் பெருந்தகைமையை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய்; நின் பெருந்தகைமையாவது இவ்வியல்பிற்று" என்று அறிவுறுப்ப அறிந்த மாத்திரையே அவ்வேடரைவிட்டு நீங்கி அன்னியமின்றி அனன்னியமாந்தன்மையின் நிலைபெற்று அம்முதல்வன் திருவடிகளை அணையும் (எ - று).*

*உயிரென்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்து உரைக்கப்பட்டது.*

*தவத்தினிற் குருவுமாய் வளர்ந்தயர்ந்தனையென உணர்த்தவிட்டுச் செல்லுமென இயையும்.*

*புலன் ஆகுபெயர்.*

வளர்ந்தயர்ந்தனெ யென்பது "ஈந்துபுகழ் பெற்ருன்" என் புழிப்போலக் காரண காரியப்பொருட்டாய் நின்றது.

தம்முதலென்றது வேறுமுடிபாகலிற் பால்வழுவின்மை உணர்க.

குருவும் என்ற உம்மை உயிர்க்கு உயிராய் உள்நின்று உணர்த்தியதூஉம் அன்றியென இறந்தது தழீஇயிற்று; சிறப்புமாம்.

அன்னியமின்மை அத்துவிதம். அஃதாவது சேறலைப் பயப்பித்ததாய் ஆண்டுளதாகியவினையெ.

அரனென்றது சுட்டுப்பெயர்படநின்றது.

வெண்கொற்றக்குடையும் நவமணிமுடியுஞ் சிங்காதனமும் மன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம். அதுபோலப் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாம் இயல்பாகிய ஒரு பெரு வெண்கொற்றக்குடையும், எவற்றையும் ஒருங்கே ஒரியல்பானறியும் பேரறிவாகிய ஒருபெருஞ் சுடர் முடியும், அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று எவற்றினையுஞ் செலுத்துமியல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர் ஒருவர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமைபற்றிப் பசுக்களுக்குப் பாசங்களை யரித்தலான் அரனென்னுந் திருப்பெயருடைய முதல்வனை மன்னவனுகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வம் முழுதுந் தனதேயாகக் கொண்டனுபவிக்குஞ் சுதந்திரமுடைமையுஞ் சித்தெனப்படுஞ் சாதியொருமையும்பற்றி ஆன்மாவை மன்னவ குமாரனுகவும், அவ்வான்மாவை அறிவுப் பெருஞ் செல்வ முழுதையும் ஆறலைத்துக்கொண்டு சிறுமையுறுத்துதலும் விதிவிலக்கை இழப்பித்து இழிதொழிலினிற்பித்தலுமாகிய இயல்புபற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்தார். இஃது ஏகதேசவுருவகம்.

ஐம்புலவேடரின் அயர்ந்தனெ வளர்ந்தெனெ எனவே ஐம்புல வேடரின் வளர்ந்தயர்தலும் அறுவாதமுகத்தாற் பெற்றும.

இதனுள், தவத்தினில் உணர்த்த என்றது ஓரதிகரணம்; தம்முதல் குருவுமாயென்றது ஓரதிகரணம்; ஐம்புலவேடரின் அயர்ந்தனெ வளர்ந்தெனெ என்றது ஓரதிகரணம்; விட்டு அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமேயென்றது ஓரதிகரணம்; ஆக நான்கு அதிகரணத்தது இச்சூத்திரம் என்று உணர்க.

## விளக்கம்

**கருத்து**

ஆவியின் அறிவு சாட்டு வேறுபாட்டால் இருவகையாய் விளங்கும். சாட்டு வேறுபாடு எனினும் சார்பு வேறுபாடு எனினும் ஒன்றே. நிலையாப் பொருளாகிய உடல், கலன், ஊண், உலகம் முதலியவற்றோடு சார்ந்து, விளக்கமுற்று அதனை அறிந்து அதன்கண் அழுந்துவது ஒன்று. மற்றொன்று நிலைத்த பொருளாகிய சிவத்தின் திருவருளையுணர்ந்து அதன் கண் அழுந்துவது. இவற்றின் இயல்பை ஆசான் வாயிலாக உணர்வதே தரிசித்தல். இம் முறையினை விளக்கி அருளுவது ஏழாம் நூற்பா. அவ் விளக்கத்தால் சார்ந்து பயிலுதற்கு வேண்டிய உரிமை ஆவிக்கு உண்டு என்பதும் ஏழாம் நூற்பாவின்கண்ணே பெறப்பட்டது. ஒரு பொருளைப் பெறுதற்காம் உரிமையுள்ளார் முயலாதிருப்பதும், அஃது இல்லார் முயல்வதும் பொறுத்தற்கரிய பெரும் பிழையாம். இது வித்தினை விளை நிலத்து இடாமலிருப்பதும், அதனைக் களர் நிலத்திடுவதும் குற்றமாவது போன்றாகும்.

பயிலும் உரிமை உடைய ஆவி பயின்றால் எய்தும் பயனும், பயிலு தற்கு வேண்டும் சிறந்த துணையும், அத்துணை கைகூடும் வகையும் இவ் எட்டாம் நூற்பாவின்கண் விளக்கப்படுகின்றன.

**இயைபு**

நிலையாததும் நிலைப்பதும் ஆகிய ஒன்றோடொன்று மாறுபட்ட பொருள் இரண்டன்பாலும் ஆவியின் அறிவு சாரும் என்பது எப்படிப் பொருந்தும்? என ஏழாம் நூற்பா அதிகரணத்தால் ஐயம் தோன்றும். அவ் ஐயத்தினை எட்டாம் நூற்பாவில் அகற்றுதலால் அதிகரண இயைபு பெறப்படும்.

ஏழாம் நூற்பாவில் ஆவியின் இருப்புணர்த்தினர். ஆவியின் இருப் புண்மை ஆன்ம ரூபம் எனப்படும். ஆவியின் இயல்புண்மை உணர்த்துதல் முறை. அதனை இவ் எட்டாம் நூற்பாவில் அருளுகின்றனர். ஆவியின் இயல்புண்மை ஆன்ம தரிசனம் எனப்படும். இம்முறைமை இயைபான் நூற்பா இயைபு பெறப்படும்.

ஏழாம் நூற்பாவில் பயிலுதற்குரிய உரிமை ஆவிக்கு உண்டு என்பது பெறப்படப் பயின்றால் பெறும் பயனும், பயிலுதற்கு ஆம் துணையும், வரும் வழியும் யாவை என அவா எற்படுகிறது. அதனைக் கூறுவது எட்டாம் நூற்பா ஆதலின் இயல் இயைபும் பெறப்பட்டது.

(போ - ரை.) ஆவி பல்லூழி காலம் பயின்ற செந்தமிழ்ப்பாட்டால் அரனை வழிபட்ட சிவ புண்ணியப்பயன் இப்பிறவியில் கைகூடுவ தாயிற்று. இதுகாறும் அகம் உறைந்தாண்டு உணர்த்திவந்த முழுமுதல் இப்பொழுது ஆசிரிய அருள் வடிவமுங்கொண்டு எழுந்தருளிச் சிவ தீக்கை செய்து "மன்னவன் மகனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடரோடு கூடித் தங்கி வளர்ந்து நின் பெருந்தகைமை அறியாது மயங்கி இடர்ப் பட்டாய்; நின் பெருந்தகைமையாது? (மன்னவனுடன் கூடி முன்னு தற்கும் மொழிதற்கும் முடியாத மன் பேரின்பத்தை மாறின்றித் துய்க்கும்) இவ் இயல்பிற்று," என்று அறிவுறுப்ப, அறிந்த மாத்திரையே அவரை விட்டு நீங்கி, வேறின்றி உடனாந் தன்மையின் நிலைபெற்று அம்முதல்வன் திருவடிகளை அணையும்.

**அகம் உறைந்து ஆளுதல் தன்மை - அந்தரியாமித்துவம்.**

**தீக்கை**

சிவதீக்கை சிவபெருமான் திருவடியை அடைதற்குச் செய்யப்படும் திருமுறைச் செயல். செம்பொருட் செந்நெறிச் செல்வர்கள் சிவ தீக்கையைச் செந்தமிழ்த் திருமுறை வழிச் செய்வதே சிறப்புடைத்து. திருமுறைக்கு முன் தீக்கை எவ்வாறு நிகழ்ந்திருக்கும் என்று நினைந்து நெடும் பொழுது போக்குவதினும் திருமுறைவழித் தீக்கைப் பேறு எய்துவதே நம் கடமைஎன நாடி ஒழுகுதல் நயம் பயப்பதாகும்.

ஆளுடைய பிள்ளையார் தம் திருமணத்தில் வந்தாரனைவர்களும் சிவ பெருமான் திருவடியை எய்தும் பொருட்டுத் தீக்கை செய்யத் திருவுள்ளம் கொண்டருளினர். அருளிக் **'காதலாகி'** என்னும், 'நமச்சிவாயத்' திருப் பதிகத்தை நவின்றருளினர். அவ்வுண்மை வரும் சேக்கிழார் அடிகள் திருப்பாட்டான் உணர்க.

"ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவா யச்சொ லாமென்று
ஆனசீர் **நமச்சி வாயத்** திருப்பதி கத்தை அங்கண்
வானமும் நிலனும் கேட்க அருள்செய்திம் மணத்தில் வந்தோர்
ஈனமாம பிறவி தீர யாவரும் புகுக என்ன."

—௧௨. திருஞான - ௧௨௪௮.

தீக்கை என்னும் சொல் இருவேறு சொற்களின் முதல் நிலைகள் ஒன்றுகூடி ஒரு சொற்போல் காணப்படும். மாயை என்னும் சொல்லும் இத்தகையதே. (௧௩௮.) தீ - தீய்த்தல். கை - கைத்தல்; செலுத்துதல். தீய்த்தல் என்பது, மலம் மாயா கன்மங்களின் ஆற்றலகளைப் பற்றறத் தீயச் செய்தல், கைத்தல் என்பது செலுத்துதல் என்று பொருள் தருத லால், வீடு பேற்றின்கண் செலுத்துதல் ஆகும. (௬௮) இரண்டன் முதல் நிலைகளும் முறையே தீ, கை என்றாகும். இவ்விரு சொற்களும் புணர்ந்து தீ + கை = தீக்கை என்றாகும்.

**திருமுறை**

செந்தமிழ்த் திருமுறை பன்னிரண்டு. அவை, மூவர் தேவாரம் எழு திருமுறை. திருவாசகம், திருக்கோவையார் எட்டு, திருவிசைப்பா ஒனபது, திருமந்திரம் பத்து, நாற்பதுபனுவல் பதினொனறு, திருத் தொண்டர் புராணம் பன்னிரண்டு என்ப. தீக்கை என்பது மாசினைத் தீய்த்து ஆவியின் மனம் மெய்யுணர்வின்கண் அழுந்துமாறு செலுத்துதல்.

மாசினைத் தீய்த்தல் மனத்துமெய் கைத்தல்களின்
ஆசிரண்டும் தீக்கைஎனல் ஆம்.

மெய் - மெய்யுணர்வு. ஆசு - முதல்நிலை.

மாசு தீய்த்தலும் மனம் மெய்யுணர்வில் செல்லச் செலுத்தலும் வரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாட்டாற் காண்க.

"மந்த ரம்மன பாவங்கண் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
**சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால்**
நந்தி நாமம **நமச்சி வாயவே.**"

—௩. ௩0௭-௬.

**வல்வினை - இருள்சேர் இருவினை. செல்வம் - திருவடிப்பேறு.**

**நமசிவய:** பொருள்மறை; ந - நடப்பு: மறைப்பாற்றல். ம - மறைப்பு; மும்மாசு. சி - சிறப்பு; சிவம். வ-வனப்பு; உறைப்பாற்றல். ய- யாப்பு: ஆவி. உறைப்பாற்றலென்பது ஆவியைத் தக்க செவ்வி வருவித்துச் சிவத்துடன் கூட்டுவிக்கும் திருவருள். மறைப்பாற்றலென்பது ஆவி வினைப்பயனைத் துய்க்குமாறு சிவன் திருவடியின்பத்தினை மறைத்து உலக இன்பத்தினை உயாவுபோற் காட்டி ஊட்டும் திருவருள். இது கோடி ஆடையை மறைத்து வெளுத்த ஆடையில் விருப்பெழச் செய்து உடுப்பித்தலை ஒக்கும். 'மலத்தை நடத்தும் திருவுள்ளமே' மறைப்பாற்றலென்க. "தீக்கை என்னும் சொற்குப் பொருள் மலத்தைக் கெடுத்து மெய்யுணர் (ஞானம்) வினைக்கொடுக்கும்" (பேருரை). திருமுறைவழியே தீக்கை செயயவேண்டும் என்பதனை வரும் ஆளுடைய பிள்ளையார் திருப்பாட்டு வலியுறுத்துதல் காண்க.

> "வீடும் ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
> வாடி ஞானமென் ஆவதும் எந்தை வலஞ்சுழி
> நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை
> பாடு ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே." —௨. ௨-௧௧.

## திருப்பாட்டு

திருமுறைத் தீக்கைக்கு வேண்டும் திருப்பதிகங்கள் எட்டு. அவை, ௧. திருநீற்றுப் பதிகம் ௨. திருஅங்கமாலை, ௩. திருஐந்தெழுத்து (மற்றுப் பற்)ப்பதிகம், ௪. போற்றித் (கற்றவர்களுண்ணும்) திருத்தாண்டகம், ௫. திருத்தொண்டத்தொகை, ௬. திருப்பாசுரம், ௭. திருவெம்பாவை, ௮. திருப்பாசுர விளக்கம் (சேக்கிழாரடிகள் ௧௨. திருஞான - ௮௨0 - ௮௪௪). இப்போற்றித் திருத்தாண்டகத்தில் மட்டும் அருச்சனைக்கு வேணடும் நூற்றெட்டுப்போற்றி அமைந்துள்ளமை பெரிதும் கருதத் தக்கது.

இவ் எட்டுத் திருப்பதிகங்களுள்ளும் நாடொறும் காலை மாலை இரு வேளைகளிலும் முற்றுக ஓத வேண்டுவன திருநீற்றுப் பதிகம் திருஅங்க மாலை என்னும் இரண்டுமேயாம. ஏனை ஆறு திருப்பதிகங்களிலும் முறையே ஒவ்வொரு திருப்பாட்டுக்கள் ஓதி வழிபடுதல் அமையும். இவ் எட்டுத் திருப்பதிகங்களும் ஒருபுடை ஒப்பாக விழுமிய முழுமுதல்வன் எண் பெருங் குணங்களையும் குறிப்பனவாகும்.

## திருநீறு அணிதல்

திருநீற்றினை நீரிற் குழைத்து உச்சிதொட்டுப் பதினாறு இடங்களில் திருநீறு அணிதல் வேண்டும். திருநீற்றுப் பதிகத் திருப்பாட்டுக்கள் பதினொன்று. உச்சியிலும், கழுத்திலும், முதுகின் அடியிலும் ஆக மூன்றிடத்துக்கும் மூன்று திருச்சிற்றம்பலம், முழந்தாள் இரண்டு, காது இரண்டு ஆகிய நான்கிடங்களுக்கும் முறையே காண இனியது, ஆற்றல் அடல்விடை என்னும் இரண்டு திருப்பாட்டுக்கள். இம்முறையால் இடம் பதினாறும் அமைவது காண்க. விளக்கம்:

௧ உச்சி. திருச்சிற்றம்பலம்; ௨. நெற்றி, மந்திரமாவது; ௩. மார்பு, வேதத்தி; ௪. கொப்பூழ், முத்தி தருவது; ௫-௬. முழந்தாள்கள், காண இனியது; ௭. வலத் தோள், பூச இனியது; ௮. வல முழங்கை, அருத்தமதாவது; ௯. வல மணிக்கட்டு, எயிலது; ௧0. இடத் தோள், இராவணன்; ௧௧ இட முழங்கை, மாலொ; ௧௨. இட மணிக்கட்டு, குண்டிகைக்;

௧௩—௧௪. காதுகள், ஆற்றல் அடல்; ௧௫. கழுத்தினடி, திருச்சிற்றம்பலம்; ௧௬. முதுகினடி, திருச்சிற்றம்பலம். இடும் முறையில் திருப்பாட்டுக்கள் தோறும் வரி நான்கிருக்கின்றமையால் ஒரு வரியை ஓதித் திருநீற்றில் நீர் தொட்டுக் குழைக்க ஏனைய மூன்று வரிகளையும் தனித்தனி ஓதி மும்முறை நீறணிக.

## தொடும் இடம்

"மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" என்ற முறையாகக் கிடைத்த உடம்பாலும் உறுப்பாலும் உடையான்தன் திருப்பணி புரிவதே "ஊனடைந்த உடம்பின் பிறவியே, தானடைந்த உறுதியைச் சாருமால்" என்பதாகும். அக் கருத்துப்பட உடல் உறுப்புக்களை நாடொறும் தொட்டு உளத்திற் பயிலுதல வேண்டும். இதுவே "எண்குணத்தான் தாளை வணங்கு" வதாகும்.

இதற்குத் திருஅங்கமாலையில் கூறியபடி ஒவ்வொரு கண்ணிகளையும் ஓதி அவ்வவ் இடங்களைத் தொடுக. தொடுங்கால் வலக்கைப் பெருவிரல் அணிவிரலின் நடு இறையைப் பொருந்த அமைத்துத் தொடுதல்வேணடும். தொடும் இடங்கள், ௧. உச்சி, ௨. கண்கள், ௩. செவிகள், ௪. மூக்கு, ௫. வாய், ௬. நெஞ்சு, ௭. கைகள் (இருகையும் சோததுக் கூப்புதல்), ௮. ஆக்கை, ௯. கால்கள், ௧௦. உற்றார (இறை), ௧௧. இறுமாந்து (உயிர்), ௧௨. தேடிக் (தலை).

இங்ஙனம தொட்டபின் அவ்வுடம்பு சிவனுறையும் தவ உடம்பாய்த் திருவருள் ஒளியில் தோன்றும். அங்ஙனம் தோன்றும் மெய்ம்மை உளங் கொள வரும் திருப்பாட்டை ஓதுதல் வேண்டும்:

"செங்கண் விடையார் திருமலர்க்கை தீண்டப் பெற்ற சிறுவனார்
அங்கண மாயை யாக்கையின்மேல் அளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி எழுந்த திருவருளின் மூழ்கிப் பூமேல் அயன்முதலாம்
துங்க அமரா துதிசெய்ய சூழ்ந்த ஒளியில் தோன்றினார்."
—௧௨. சண்டேசுரர்-௫௫.

மற்றும் விரிவுகளைத் திருமுறைத் தீக்கைவழி ஒழுகும் வல்லார்வாய்க் கேட்டுணர்க. வேண்டுவன: திருநீறெடுத்தல் ('என்றபொழுது' - ௧௨. திருநா - ௬௬), திருநீறு குழையாது பூசுதல் ('திருவாளன்' - ௧௨. திருநா. ௬௭), குருவழிபாடு. ('தெளிவுகுருவின்' - ௧௦. ௧௩௯). புனல்மறை ('ஏவி யிடர்க்' - ௬. ௭௫-௧௦), திருநீற்று மறை ('கங்காளன்' - ௧௦. ௧௬௬௬), நீர் விட்டுக் குழைத்தல் ('தாரார் கொன்றை' - ௧ ௬௫-௪), முக்குடிநீர் ('அறு நான்க' ௧௦. ௨௨௬௭), வழிபாட்டை ஆண்டவன்பால் ஒப்புவித்தல் ('யாதே செய்தும்' - ௫. ௫௦-௬), வாழ்த்து ('மறையவர்' - ௧௨. திருஞான-௮௬௦).

## நாற்பொழுது

உயிர்க்கு உறுதி பயக்கும் அறமுதல் நான்கும் எய்துதற்கமைந்தமை போன்று வழிபடும்பொழுதும் நான்கென்ப. அவை, காலை, பகல், மாலை, இருள் என்ப. இவற்றையுணர்த்தும் காரைக்காலம்மையார் திருப்பாட்டு "காலையே" என்று தொடங்குவது. இதனைப் பக்கம் ௧௨௯-இல் காண்க.

## இலக்கணம்

'புலன்' ஆகுபெயர்: புலன் என்பது 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்' என்னும் நுகர்பொருள் ஐந்தும் ஆகும். ஈண்டுப் புலன் என்று

குறிப்பது இவற்றையன்று; வாய், கண், மெய், செவி, மூக்கு என்னும் பொறிகள் ஐந்தினையுமாம். இவ் ஐம்பொறிகள் வழியாக ஆவி ஐம்புலனை யும் நுகரும். அது 'பொறிபுலன்' (உ௫௭) என்னும் சித்தியார்த் திருப்பாட் டான் விளங்கும் புலன் பொறியைக் குறிப்பதால் ஆகுபெயர் என்ப.

'வளர்ந்து அயர்ந்தனை' என்பது காரண காரியப் பொருட்டு. அஃ தாவது ஐம்புல வேடருடன் வளர்ந்த காரணத்தால் ஆவி தன் பெருந் தகைமையை மறந்து நின்றது என்க. இஃது "ஈந்து புகழ் பெற்றான்" என்பதனை ஒக்கும். ஈந்த காரணத்தால் புகழ்பெற்றான் என்பதே.

## வேறுமுடிபு

'தம்முதல்' என்றது வேறுமுடிபு என்பதைப் பக்கம் உ௬அ-இல் காண்க.

## சிறப்பு

'குருவும்' என்றதன்கண் உள்ள உம்மை இதுகாறும் அகம் உறைந்து ஆள்வோனும் உயிர்க்குயிராய் உள்நின்று உணர்த்திய பெருந்தலையளியைக் குறிக்குங்கால் இறந்தது தழுவியதாகும். 'யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்' ஆவிகளை ஆண்டுகொள்ளுதற் பொருட்டு ஆசிரியர் அருள் வடிவங்கொண்டு எழுந்தருள்வதைக் குறிப்பதால் சிறப்பும்மையாகும்.

ஆண்டவன் அருள் வடிவங்கொண்டு ஆளும் சிறப்பு வரும் திருப் பாட்டான் உணர்க :

"ஆகமங்கள் எங்கே அறுசமயம் தான்எங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே—பாகத்து
அருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு."     —திருக்களி. ௫.

## மறவாமை

ஆவி என்றும் ஆண்டவன் திருவடியை விட்டு நீங்காப் புணர்ப்பாய் (அத்துவிதம்) நிற்கின்றது. ஆனால், ஆறலைக்கும் ஐம்புல வேடரின் சார் பால் திருவடியை மறந்துவிடுகிறது. அம் மறப்பினை உணர்த்தி அருள் பவன் ஆண்டவனே. அவ்வடிவமே ஆசிரியத் திருவுரு. உணர்த்தி யருளியபின் மறவாதொழுகுவதே செல்லுதல். இவ் இயைபே புணர்ப்பு. இது, திருக்கோவில் வழிபாட்டின் பொருட்டுச் சென்று திருக்கோவிலி னுள் உறைபவரும், கற்றற்பொருட்டுக் கல்லூரி சென்று உறைபவரும் கருத்தைக் காட்சியிற் செலுத்திக் காலத்தை மறந்திருப்பின் மணியோசை யுணர்த்தி அவ்வவர்களைச் செலுத்துவதோடு ஒக்கும்.

வேடர் செயல் ஆறலைப்பதே என்பது வரும் திருப்பாட்டான் உணர்க :

"கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண்டு ஆறலைக்கும் இடம்
முடுகு நாறிய வடுகர்வாழ் முருகன் பூண்டிமா நகர்வாய்
இடுகு நுண்ணிடை மங்கை தன்னொடும் எத்துக் கிங்கிருந்தீர்
[எம்பிரானிரே."
—எ. ௪௯-௧.

ஐவரை (ஐம்பொறி) வெல்லுவது அருளால் அன்றி ஆருயிர் அறிவாற்றல்களால் ஒல்லுவதன்று. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுகளான் உணர்க:

"மெய்யுளே விளக்கை ஏற்றி வேண்டளவு உயரத் தூண்டி
உய்வதோர் உபாயம் பற்றி உகக்கின்றேன் உகவா வண்ணம்
ஐவரை அகத்தே வைத்தீர் அவர்களே வலியர் சாலச்
செயவதொன் றறிய மாட்டேன் திருப்புகல் ஊர னீரே."
—௪. ௫௪-௧.

"என்றுகொண் ......................சுடர்வண்ணனே."
பக்கம், ௧௭௬-இல் காண்க.

## சுட்டுப்பெயர்

"தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு, அன்னியம் இன்மையின் அரன் கழல் செலுமே" என்பதில் முதல் வேறு அரன் வேறு என்பதில்லை. இரண்டும் ஒன்றே. எனவே, அரன் என்னும் சொல் முதலைக்குறிக்கும் அது என்னும் சுட்டுப்பெயராய் நின்று பொருள் தருவதாகும். இதற்குப் பேருரை ஆசிரியர் காட்டு வருமாறு :

"பொற்பூண் சுமந்த புணர்மென் முலைக்கோடு போழ
நற்பூங் கழலான் இருதிங்கள் நயந்த வாறும்
கற்பா டழித்த கனமாமணித் தூண்செய் தோளான்
வெற்பூ டறுத்து விரைவின்னெறிக் கொண்ட வாறும்."
—சீவக. பதிகம் - ௧௪.

## சிறப்படையாளம்

வெண்கொற்றக் குடையும், ஒன்பான் ஒண்மணி முடியும், மண்புகழ் அரிஅணையும் மன்னவர்க்கே உரிய சிறப்படையாளமாகும். இம் மூன்றும் முறையே அறிவு அன்பு ஆற்றல்களைக் குறிப்பனவாகும். அறிவு பிறர் துன்பம் போக்கல். அது திருவள்ளுவ நாயனார் அருளிய திருப்பாட்டான் உணர்க.

"அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தந்நோயபோல் போற்றாக் கடை" —திருக்குறள், ௩௧௫.

மேலும் மன்னன்முடிமீது கவிக்கப்பெறும் வெண்கொற்றக்குடை மன்னன்மீது வெயில் விழாது மறைத்தற் பொருட்டு அன்று; அம் மன்னனால் புரக்கப்படும் முடியினை நல்கும் மூவாக்குடிகளின் துன்பங்களை நீக்குதற்பொருட்டேயாம். முடி என்பது குடிகளின் படியிலாப் பண்பு சால் அடையாளமேயாம். சுருங்கச்சொல்லின் முடியே குடிகள். குடியின்றேல் படியினை ஆளும் பாங்கார்முடி எது? இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்." —திருக்குறள், ௧0௩௪.

"நளியிரு.................................
௧௭. ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
௨0. வெயின்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ !" —புறநானூறு, ௩௫.

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையும்
தவமிலார் இல்வழி இல்லை தவமும்
அரசிலார் இல்வழி இல்லை அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல்."　—நான்மணிக்கடிகை, ௪௮.

மணிமுடி அன்பினைக்குறிக்கும் என்பது குடிகள் அன்பாகத்தர, இன்பாகஏற்று இறைவன் திருவருள் முன்பாக அணியப்படுவது என்பதாம். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்."　—திருக்குறள், ௭௫௫.

"மல்லன் ஞாலம் புரக்கின்றார் மணிமா மவுலி புனைவதற்குத்
தில்லை வாழந் தணர்தம்மை வேண்ட அவரும் செம்பியாதம்
தொல்லை நீடுங் குலமுதலோர்க் கன்றிச சூட்டோம் முடியென்று
நல்கா ராகிச சேரலன்றன் மலைநா டணைய நண்ணுவார்."
—கஉ. கூற்று, ௪.

அரியணை ஆற்றலைக் குறிக்கும் என்பது ஆற்றலுள் மிக்கது உள ஆற்றலும் தவஆற்றலும் ஆம். அதற்கு அறிவாற்றலும் 'ஆன்றமைந் தடங்கிய கொள்கைச் சான்றோர் பலா' கேணமையும் வேண்டத்தக்கன. அவையின்றி உடலாற்றல் ஒன்றே அமையப்பெறின் அது விலங்காற்றல் எனப்படும். விலங்கினுள் மிக்கது அரி. அரி என்பது சிஙகம். அரி அனைவரையும் அச்சுறுத்தி நடுஙகச் செய்வதொன்றாகும். அச்சுறுத்துவது ஆணவத்தன்மை. ஆணவத்தன்மையை அடக்கி ஆள்வதே ஆற்றல. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"பேராண்மை என்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு."　—திருக்குறள், ௭௭௩.

"பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு."　—திருக்குறள், ௧௪௮.

எனவே, அறிவு, அன்பு, ஆற்றல் மூன்றானும் அனைத்துயிர்க்கும் நன்றாற்றித் துன்பகற்றி இன்புறுத்தி வாழ்வதே இருவர்தம் பொருவரும் கடமையாம் என்பது தானே விளங்குவது காண்க. இவ்வடையாளங்கள் மன்னவர்க்கு மாந்தர்களால் மனமுவந்து கொடுக்கப்படுவனவேயாம்.

இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"என்றிவ்வுரை கேட்டலும் எல்லையில் கல்வி யோரும்
வன்திண்மதி நூல்வளர் வாய்மை அமைசசர் தாமும
நன்றிங்கருள் தானெனை நற்றவ வேந்தர் சிந்தை
ஒன்றும் அரசாள் உரிமைச்செய லான உய்த்தார்."
—கஉ. மூர்த்தி, ௪௨.

"வந்த மரபின் அரசளிப்பான் வனஞ்சார் தவத்தின் மருவியபின்
சிந்தை மதிநூல் தேரமைச்சர் சிலநாள் ஆய்ந்து தெளிந்தநெறி
முந்தை மரபின் முதல்வர்திருத் தொண்டு முயல்வார் முதற்றாக
இந்து முடியார் திருவஞ்சைக் களத்தில் அவர்பால் எய்தினர்."
—கஉ. சேரமான், ௧௧.

இவ்வுருவகத்தினை முழுமுதல்வன்மாட்டு ஏற்றிச் சொல்லுங்கால்: அவன் அனைத்துலகிற்கும் வினைமுதற் காரணமாக இருக்கின்றான். வினைமுதற் காரணம் எனினும் நிமித்தகாரணம் எனினும் ஒன்றே. உலக னைத்தும் ஒடுங்கியபின் மீளத் தோன்றுமாறு திருவுளங் கொள்ளுதல் அறிவாற்றலின்கண் ஆகலின் வெண்கொற்றக் குடைக்கு ஒப்பாகும்.

பின்பு அனைத்துயிர்க்கும் வேண்டும் செயற்பாடுகள் அனைத்தும் ஒருங்குணர்ந்து திருவுள்ளங்கொள்ளும் அறிவாற்றல் செயற்கண்ணதாக லின் அஃது ஆற்றலின்பாற்படும். அதனை உணர்த்துவது ஒன்பான் மணிமுடி ஆகும்.

மேலும் உலகுயிர் அனைத்தையும் அங்கங்கே உயிர்க்குயிராய் உடங் கியைந்து செலுத்தத் திருவுள்ளங்கொள்ளும் அறிவாற்றல் இயக்குதற் கண்ணதாகலின் அஃது அன்பாற்றலின்பாற்படும். இஃது இயைந்து இயக்குவதால் இருக்கையை ஒக்கும்.

**மகன்**

அனைத்துயிரும் ஆண்டவன் மக்கள் என்று கூறுவதற்குரிய காரணங் கள் உயிர்கட்கும் அறிவு ஆற்றல் அன்பு என்னும் மும்மைப் பண்புகள் உளவாகலும், அம்மூன்றனும் முறையே முழுமுதல்வன் அறிவிக்க அறித லும், பற்றுவிக்கப் பற்றுதலும், இன்புறுத்த இன்புறுதலும் நிகழ்வனவாகலும் என்பனவே. திருவடியின்பப் பெருவாழ்வினை நுகரும் பேற்றுரிமை உயிர்கட்கே உரியது அவ் உரிமையும், உயிர் அறிவெனப்படும் இன ஒருமையும் உடையன. இவற்றால் மகன் என்னும் முறைமை முற்றுவது காண்க. தொல்காப்பியத்தும் "தந்தையர் ஒப்பர் மக்கள்" எனவருதலும் காண்க. (தொல். பொருள், ௧௪௭.)

**ஒருபுடை**

ஒருபுடை எனினும் ஏகதேசம் எனினும் ஒன்றே. ஈண்டு ஐம்புலன் (பொறி)களை மட்டும் வேடராக உருவகித்தனர். முதல்வனை மன்னவ னாகவும், ஆவிகளை மன்னவன் மகனாகவும் உருவகிக்கவில்லை. அதனால் இஃது ஒருபுடை உருவகம் என்க.

**வழிமொழிதல்**

வழிமொழிதல் எனினும் அனுவாதமெனினும் ஒன்றே. ஆவி ஐம்புல வேடரில் வளர்ந்தமை முன்பு கூறப்படாவிடினும் "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென" நூற்பாவின்கண் குறிக்கப்படுவதால் 'வளர்ந்து அயர்தல்' முன்பே அமைந்துள என்பது தெளிவு. எனவே, அச்சொல்லை அங்ஙனங் கொள்ள வாய்ப்பளிப்பது வழிமொழிதல் என்னும் மரபே. இது வந்தவன் போயினன் என்று வழங்குவதை ஒக்கும்.

**கூறுகள்**

இந்நூற்பா நான்கு கூறு(அதிகரணங்)களைக் கொண்டது. இரண் டாம் நூற்பாவும் பன்னிரண்டாம நூற்பாவும் இங்ஙனமே நான்கு கூறு களைக் கொண்டவை.

௧. **'தவத்தினில் உணர்த்த'**

௨. **'தம்முதல் குருவுமாய் உணர்த்த'**

௩. **'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து'**

௪. **'விட்டு அன்னியம் இன்மையின் அரன்கழல் செலும்'**

---

## முதல் அதிகரணம்

**ஈண்டு இவ் ஆன்மாக்களுக்கு முன்செய் தவத்தான் ஞானம் நிகழு மென்றது.**

*எ - து. மே - ள். எ-னின். மேற்கூறிப்போந்த சாதகராற் செய்யப்படுஞ் சாதனமும் அது வருவாயும் வேறுவேறாகக் கூறுஞ் சமயத்தாரை நோக்கிச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ-ள். வெ-டை.*

*மேற்கூறிப்போந்த இயல்புடைய ஆன்மாக்களுக்கு என்பார் இவ்வான்மாக்களுக்கு என்றார்.*

*படிமுறையான் அன்றி இவ்வொரு பிறவியிற்செய்த தவந் தானே அமையாது என்பது உணர்த்துதற்கு முற்செய்தவம் என விசேடித்தார்.*

*ஈண்டு ஞானமென்றது குரவன் உணர்த்தியவாறு சிவ ஞானங் கண்ணாகக்கொண்டு அறிவதாகிய சாதன அறிவின் மேற்று.*

*நிகழ்தல் ஐயந்திரிபு இன்றி விளங்குதல்.*

**மேற் சரியை கிரியாயோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கோடாவாகலான்.**

*எ - து. ஏது எ-னின். தவங்களே சாதனமாதல் அமையும் ஞானம் எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று. இ - ள. வெ - டை.*

*ஈண்டுத் தவமெனப்பட்டன பிற அல்லவென்பார் சரியை கிரியாயோகங்களை எனக் கிளந்துரைத்தார்.*

*கிரியாயோகங்கள் என்னும் உம்மைத்தொகை வடநூன் முடிபு. கிரியாயோகம் இரண்டற்குந் தீக்கை ஒன்றென்பது தோன்ற அவ்விரண்டனையுந் தொகுத்தோதிச் சரியையைத் தமிழுக்குரிய ஈற்றுன் வேறு வைத்தார்.*

*ஆளுடையபிள்ளையார் முதலாயினார்க்குத் தவம் இன்றியும் ஞானம் நிகழ்ந்தவாறு என்னையென்னுங் கடாவை விடுத்தற்கு மேற்செய்துழியென ஈண்டும் வலியுறுத்தார்.*

*மேலாகிய உண்மைச்சரியை கிரியாயோகங்களை எனினும் அமையும்.*

*காட்டிக்கொடுக்கும் எனற்பாலதனை எதிர்மறை முகத்தாற் கூறினார், ஞானத்தை இன்றியமையாமை உணர்த்துதற்கு. சரியை*

கிரியா யோகங்களைச் செய்தாழி என்றது உபலக்கணமாகலின் தீக்கை பெற்றாழி அதுவும் ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாதெனக்கொள்க. அவையெல்லாம் ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாமையை வலியுறுத்துவார் நன்னெறியாகிய என ஞானத்தை விசேடித்தார். நன்மையெனப்படுவன எல்லாவற்றினுஞ் சிறந்த நன்மையாவது வீடுபேறென்பது. அதனைத் தலைப்படுதற்கேதுவாய்ச் சிறந்த நெறியாகலின் ஞானம் நன்னெறி எனப்பட்டது. வீட்டிற்கு நெறியென அவ்வச்சமயத்தாரால் கூறப்படுவன அனைத்துந் தன் கண்ணே வந்து கூடநின்ற பெருநெறியாகலானும் அது நன்னெறி எனப்பட்டது. நன்னெறி சன்மார்க்கமென்பன ஒருபொருட் கிளவி.

* தவஞ்செய்தார் என்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றார்சூழ் சொல்லுமாங் கண்டு.

எ - து. உ - ம். எ-னின். மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்தார் அவற்றான் ஞானத்தைக் காணுமுறைமை எவ்வாறு என்பாரை நோக்கி அஃதாமாறு உணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தவம் செய்தார்—சரியை முதலியவற்றைச் செய்தோர்கள், என்றும் தவலோகம் சார்ந்து—(அவ்வத் தவப்பயன்களைப் பயப்பிக்குஞ்) சாலோகாதிபதங்களை ஒரு தலையாக நண்ணி (ஆண்டுளவாகிய இன்பங்களை அனுபவித்து), பற்றுப் பவம் செய்து அறுப்பார் ஆக—(முன் உடம்பிறக்கு நாள் அடுத்த வினை காட்டுங் கதிநிமித்தம்பற்றி எழுந்த) அவா வினை (மீள நிலத்தின்கட்) பிறந்தனுபவித்து நீக்கிக்கோடற் பொருட்டு, தவம் செய்த நற் சார்பில்வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலை—(மீளத்) தவஞ்செய்தற்குரிய உயர்ந்த குலத்தின் கண் வந்து தோன்றித் (தவக்குறையான் அவ்விடயப்பற்று முறுகாவண்ணம் அறுத்துத்) தத்துவஞானத்தைத் தலைப்படுவாராதலை, கற்றார் சூழ் கண்டு சொல்லுமாம்—வீட்டு நூல்களைக் கற்றாரது சூழ்ச்சி அந்நூற் கருத்துணர்ந்து சொல்லும் (எ-று).

தவந்தானுகப் பிறிதொன்று தானுக இவ்வுலகத்து உடம்பொடு நின்றீட்டிய வினையெல்லாம் அவ்வுலகத்திற் செலுத்தித் தத்தம் போகங்களைப் பயந்தேவிடுமாகலான் அவற்றை ஒரு

* 'புறச்சமய' சித்தியார், அ-உ. கச. 'கேட்டலுடன்' அ-உ. உச.

ஞான்றும் பிறழமாட்டாரென்பார் என்றுந் தவலோகஞ்சார்ந் தென்றார்.

ஆக என்னுஞ் செயவெனெச்சம் உண்ணவந்தானென் புழிப்போலத் தற்பொருட்டாய் நின்றது.

பற்றறுதற்பொருட்டு வந்துதித்தெனவே ஆண்டுப்பற்றுச் செல்லாதவழி அவ்வுலகத்து நின்றாங்கே ஞானத்தை நண்ணுவ ரென்பதூஉம் பெறுதும்.

கற்றாரது சொல்லுதற்றொழில் சூழ்ச்சிமேல் ஏற்றப்பட் டது.

ஆம் அசை. நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுத லென்ற அருத்தாபத்தியான் இழிகுலத்தோர் தத்துவஞானத் துக்கு உரியர் அல்லரென்பது பெறப்பட்டது.

* பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்து வருவினையில் இன்பம்—இசைத்த
இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனும் ஞானத்தை வந்து.

எ - து. உ - ம். எ-னின். சரியை முதலிய தவங்களே தத்துவ ஞானத்தைக் காட்டும் என யாப்புறுத்தோதியதென்னை? வேதத்துள் கூறிய வேள்வி முதலாயினவுந் தத்துவஞானத்தைக் காட்டுமென்றல் அமையும் எனப் பாட்டாசாரியன் மதம்பற்றிக் கூறுவாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இசைத்து வருவினையில் இன்பம்—(ஒரு நல்வினை செய்வான் தொடங்கி அறநூலை ஆய்வாரது உணர்வின்கண் விடயமாய் வரும்பொழுதே தம்மாற் பெறப்படுங் காமியப் பயன் களை உடன்) கூறிக்கொண்டே வருகின்றனவாய வேள்வி முதலிய அறங்களின் பயனாகிய இன்பம், பசித்து உண்டு பின்னும் பசிப் பானை ஒக்கும்—முன்னர்ப் பசித்துண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுண்டியான் வரும் இன்பத்தை ஒக்கும் ஆகலான், இசைத்த இருவினை இறப்பு இல் தவத்தான் ஒப்பில் - (ஒருவனுக்கு ஞானத் தைத் தடுத்துப் பந்தமுறுத்துதற்கட் பொன்விலங்கும் இருப்பு விலங்கும்போலத் தம்முள்) சமப்படுத்துணரப்படுவனவாகிய அறம் பாவம் இரண்டும் (தம்மைப்போல் அனுபவ மாத்திரை யாற் கெடுதலின்றி) மேன்மேன்முறுகி வளர்வனவாய சரியை முதலிய தவங்களானே நேராக ஒத்தால், வந்து ஞானத்தை மருவுவன் - அத்தவ முதிர்ச்சி உடைமையான் முன்னர்க் கூறப்

* 'உரைதரு' சித்தியார், அ. க-உ.

படும் ஞானகுருவைத் தேடி வந்து ஞானத்தைத் தலைப்படுவன் (எ - று).

வேள்வி முதலாயினவெல்லாம் அழிதன்மாலையவாய காமியங்களைப் பயப்பன அன்றித் தத்துவஞானத்தைப் பயவா என்றற்கு அவற்றை விதித்த நூல்களே சான்றென்பார் இசைத்து வருவினையென்றும், அவை ஞானத்தைப் பயவாமை மாத்திரையே அன்றித் தீவினைபோல அது நிகழவொட்டாது தடைசெய்து நிற்றலும் உடைமையின் அவற்றது கழிவே ஈண்டைக்குக் காரணமாவது என்பார் இசைத்த இருவினை ஒப்பில் என்றுங் கூறினார்.

ஒப்பில் என்னும் வினையெச்சம் மருவுவன் என்னும் பிறவினை முதல்வினைகொண்டது.

தேற்றேகாரம் விகாரத்தால் தொக்கது.

ஆம் அசை.

வருதல் இடவழுஅமைதி.

பசிப்பானென்றது ஆகுபெயர். இசைத்துவருவினையென நூலின்றொழில் வினைமேல் ஏற்றப்பட்டது. மிசைத்த இருவினையெனப் பாடம் ஓதி, இருவினைகளுள் மிக்க இருவினையாகிய பிரமக்கொலை பரிமேதவேள்வி போல்வன தம்முள் ஒருங்கே பயன் தருவனவாய் ஒத்தகாலத்து என்று உரைப்பாரும் உளர். அஃது ஈண்டைக்குப் பயன்படாமையும் சித்தாந்தத்துக்கு ஏலாமையும் அறிக.

இசைத்து வருவினையில் இன்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் எனவே, இறப்பில் தவத்தான் மருவப்படு ஞானம் பசித்துண்டு பின்னும் பசித்தலில்லாத கடவுளர்க்கு அவ்வமிழ்த உண்டியானுய பயனை ஒக்கும் என்பதூஉம் பெறப்பட்டது. படவே, அவ்அமிழ்த உண்டி நரை திரைமூப்பின்றி நிலைபெறுதலாகிய பெரும்பயனைத் தருதன்மாத்திரையே அன்றிப் பசி தீர்தலாகிய அவாந்தரப்பயனையும் தருமாறுபோல இறப்பில் தவமும் தத்துவஞானத்தைப் பயத்தன்மாத்திரையே அன்றித் தத்தம் பதமுத்தியாகிய அவாந்தரப்பயனைப் பயத்தலும் அமைவுடைத்தாமாறு கண்டுகொள்க.

## விளக்கம்

**இவ்ஆன்மா**

பயின்று பயன் எய்தும் பாங்கமை பண்பு வாய்ந்தன ஆருயிர்கள். அப் பண்பு சார்பினால் காணப்படும். அஃது ஏழாம் நூற்பாவின்கண் வலியுறுத்தப்பட்டுள்ளது. அவ்வுண்மை சுட்டவே இவ்வான்மா என

அண்மைச் சுட்டால் கூறியருளினர். அச்சுட்டு ஏழாம் நூற்பாவைக் குறிக்கும்.

**தவம்**

தவத்தால் மெய்யுணர்வு (ஞானம்) கைவரும். கைவருதல் சித்தித்தல். மெய்யுணர்வால் "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும், செம்பொருள் காண்பது அறிவு." என்று திருவள்ளுவ நாயனார் கூறியருளியபடி திருவடிப்பேரின்பம் எய்தும். அத்தவமே மெய்த்தவம் எனப் படும். ஏனைய பயன் தந்தமையும் வேள்வி முதலியவற்றிற்கும் பிறர்தவம் எனக் கூறுவதால் அழியாத் தெய்வத்தீந்தமிழ்த் தவத்திற்கு 'மாதவம்' என அடைபுணர்த்து ஓதினர்.

**முன்தவம்**

நானெறிப்பண்பாம் "சீலம், நோன்பு, செறிவு என்பனவாகிய செந் தமிழ்த் திருமுறைத்தவம் ஒரு பிறவியில் செய்து கைவருவது அன்று. "பல்லூழிகாலம் பயின்றுஅரனை அர்ச்சித்தால், நல்லறிவு சற்றே நகும்." என்பது முறையாகலின், தவத்தை முற்செய்தவம் எனச் சிறப்பிக்கப் பட்டது.

**மெய்யுணர்வே வீடுபேறு தரும்**

தவம் மெய்யுணர்வைத் தருவதன்றி வீடுபேற்றினைத் தாராது. மெய் யுணர்வு நன்னெறி எனப்படும். "நன்னெறிக் குய்ப்பது நமச்சி வாயவே" என்னும் தமிழ்மறையும் அது. சரியை, கிரியை, யோகம் என்னும் மூன் றும் சீலம், நோன்பு, செறிவு எனத் திருமுறைத் திருப்பாட்டால் வழங்கப் பெறும். மெய்யுணர்வு என்பது ஞானம். ஞானம் அறிவென வழங்கப் பெறும். இவ்வுண்மைகள் அனைத்தும் வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"சீலம் இன்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலும் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலம் காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே."
—அ. ஆனந்த, ௩.

சீலத்தால் மால்அகலும்; நோன்பால் வழிவாய்க்கும்; செறிவால் கோலம் கொள்ளும்; அறிவால் ஆண்டான் அடிமை அருள்நெறியாம்.

"விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே."
—தாயுமானவா, பராபரக், ௧௫௭.

"என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து
முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே."
—உ. ௧0௬-௧.

பன்னுதல் சீலம்; ஆதரித்தல் நோன்பு; ஏத்தல் செறிவு; பாடல் அறிவு.

"எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை ஆய பராபரன்
அந்த மில்புகழ் ஆரூர் அரநெறி
சிந்தை யுள்ளும் சிரத்துளும் தங்கவே." —ரு. எ-உ.

## ஞானம்

சிவஞானம் கண்ணுக - அருட்கண்ணே கண்ணுக ஆசிரியன் அறிவுறுத்தியவாறு திரு ஐந்தெழுத்தாகிய 'சிவயநம' என்னும் தமிழ்மறையினை இடையருது பயிலும் தடையிலா நடையுணர்வாகும்.

"உள்ள சரியாதி ஒட்டியே மீட்டென்பால்
வள்ளல் அருத்தியே வைத்த வளம்பாடி
செய்வன எல்லாம் சிவமாகக் காணடலால்
கைவள மின்றிக் கருக்கடந் தேனே." —க0. கூ-உகஎஎ.

"ஊனப்பேர் ஒழிய வைத்தார் ஓதியே உணர வைத்தார்
ஞானப்பேர் நவில வைத்தார் ஞானமும் நடுவும் வைத்தார்
வானப்பேர் ஆறும் வைத்தார் வைகுந்தற்கு ஆழி வைத்தார்
கானப்பேர் காதல் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே."
—ச. ௩0-எ.

## மேற்செய்தல்

ஆளுடைய பிள்ளையார் முதலாயினார்க்கும் முன்னைத்தவமே என வலியுறுத்துவார் மேற்செய்துழி என்றருளினர். மேல் என்பது முன் என்று பொருள்படும். மேலைத் திருப்பாட்டில் 'முன்னம் நீபுரி நல்வினை' என்பதும், 'ஏடுடையமலரால் முனம்நாள் பணிந்தேத்த அருள் செய்த' என்பதும் தெற்றெனப் புலனாக்கும். மேற்செய்கை - உண்மைச் செய்கை; நிலைத்த பயன்தரும் செய்கை. நொய்ம்மைச் செய்கை - உபாயச் செய்கை; நிலையிலாப் பயன்தரும் செய்கை.

'தவஞ்செய்தார்................. . ...கண்டு.'

## பற்று

பற்று எனினும் அவா எனினும் ஒன்றே. 'பற்றுப் பவஞ்செய்து அறுத்தல்' அவா உள்ளதுணையும் பிறப்புண்டு. அவ் அவாவின்வழி மனம் தள்ளும். அம்முறைக்கேற்ப உயிர் கருவழிப் பிறக்கும். இதனைப் பக்கம் கச0-இல் காண்க. இக்கருத்து வரும் நாயனார் திருப்பாட்டான் உணர்க;

"அவாஎன்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து." —திருக்குறள், ௩கக.

## இலக்கணம்

'ஆக' என்பது 'பற்று பவஞ்செய்து அறுப்பார் ஆக என்பதன்கண் உள்ளது. இது செய என்னும் வினை எச்சம். இவ் எசசம் தற்பொருட்டாக நின்றது. அஃதாவது பற்றறுத்தற்பொருட்டாக. இஃது உண்ண வந்தான் என்றால் உண்ணுதற் பொருட்டு வந்தான் என்பதை ஒக்கும்.

## குலம்

தாழ்ந்த குலத்தார் மெய்யுணர்வு கைவரும் தவநிலைக்கு உரியர் அல்லர் என்பது அக்குலத்தின் சூழல் அத்தவநிலைக்கு வேண்டும் வாய்ப்பினை

நல்காது. அம்மட்டோ மறப்பினையும் மறைப்பினையும் நல்கும். இது காலமும் இடமும் மாறுமயின் எவ்வேலையும் செவ்வையாக வாய்க்காதென் பது தேற்றம். இது திருவள்ளுவ நாயனார் "வலியறிதல், காலமறிதல், இடனறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல்" முதலிய பல் வேறு தலைப்புக்களில் பிரித்து விளக்கி அருளினமையால் தெரியும். மேலும் இவ்வுண்மைஎல்லாம் வரும திருப்பாட்டான் உணர்க:

"காலம் அறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூலம் அறிந்து விளைவறிந்து—மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்து
ஆள்வினை ஆளப் படும்."
—நீதிநெறி, ௩௨.

மேலும் கல்லூரியிலுள்ளார் கருத்துங் காட்சியும் கல்வியினன்றிப் பிறவற்றிற் புகுவதற்கு அக் கல்லூரியிடமும், கலைபயில் காலமும், கற்கும் மாணவர் சூழலும், கற்பிக்கும் ஆசான் அமைவும் இடந்தரா. இவை போல் ஆடிடம் முதலியவற்றின்கண் அச்சூழல் கல்வி முதலியவற்றிற்குத் துணைசெய்யாது.

'நற்சார்பில்' தோன்றுவார் முன்னைத தொடர்புடையராய் நானெறித் தவம் முயல்வாராயின் அச் சார்பு வழிநடப்பார்க்குத் துணைக்காற்றுப்போல் துணைசெய்யும். முன்தவம் இலராயினும் அவர்தம் கருத்தும், காட்சியும் சார்பின் சிறப்பால் தவத்தின்கண் புகுதலால் வித்துக்கு நிலமும் நீரும், உரமும் கதிரும் உறுதுணையாக ஓங்கிவளரச் செய்யுமாறுபோல வளரச் செய்யும். இதனால் முன்னைத் தொடர்புடையார்க்கும் அஃதில்லார்க்கும் நற்சார்பு நற்றுணையாதல் காண்க. இது கற்றார்க்கும் கல்லார்க்கும் 'கேள்வி' துணையாவதையும் ஒக்கும்.

தீச்சார்பு முற்றவம் உடையார்க்குத் துணையாகாதொழியினும் தடை யாக விலக்குவது இன்று. அத்தவமில்லார்க்கு வழிபாடு, மெய்ந்நூற் பொருள், நல்லாரிணக்கம் முதலியன அமைய வழியாகாது. ஆயின், அதுவே பெருந்தடையாம் என்க. கண்ணப்பர், திருநாளைப்போவார் முதலாயினார் திருவருள் வலத்தால் தம் தீச்சார்பை 'மருவிய பிறவியாற்றில் மாதவர் மனம் சென்றாற்போல்' எதிர்த்துச் சென்று உய்ந்தார்.

கண்ணப்ப நாயனார் முற்றவமுடையார் என்பதூஉம், அவரைப் பெறும்பேறு பெற்ற தந்தையாம் நாகன் தவமுடையனேனும் பிறப்பின் சார்பால் 'குற்றமே குணமாக் கொள்ளும்' கொடுமை நிறைந்தவன் என்ப தூஉம், அக்குலச்சூழலில் தோன்றிய கண்ணப்பர் முற்றவவலியால் எதிர்த் துச்சென்று தேவுமால் கொண்டார் என்பதும் வரும் சேக்கிழார் அடிகள் திருப்பாட்டான் உணர்க:

"பெற்றியால் தவமுன் செய்தான் ஆயினும் பிறப்பின் சார்பால்
குற்றமே குணமா வாழ்வான் கொடுமையே தலைநின் றுள்ளான்
விற்றொழில் விறலின் மிக்கான் வெஞ்சின மடங்கல் போல்வான்
மற்றவன் குறிச்சி வாழ்க்கை மனைவியும் தத்தை என்பாள்."
—௧௨. கண்ணப்பர், அ.

சார்பு - சாதி.

"முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்ப மான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி
மன்பெருங் காதல்கூர வள்ளலார் மலையை நோக்கி
என்புநெக் குருகி உள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்."

"நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
பேணுதத் துவங்கள் என்னும் பெருகுசோ பானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில்."

"திங்கள்சேர் சடையர் தம்மைச் சென்றவர் காணு முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த அருள்திரு நோக்கம் எய்தித்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட்டு அகல நீங்கிப்
பொங்கிய ஒளியின் நீழல் பொருவிலன் புருவம் ஆனார்."
—௧௨. கண்ணப்பர், ௧0௨-௧0௪.

'பசித்துண்டு...... ..................வந்து.'

## வேள்வி

அறநூல்களில் விதித்தவாறு இன்ன பயன் வேண்டுமாயின் இன்ன வேள்வியினை இன்ன முறையாகச் செய்க எனக் கூறுவது வேள்வி ஆகும். அவ்வேள்வி அப் பயனைத் தந்தொழியும். வேறொன்றும் தருதற்கில்லை. எடுத்துக்காட்டாக வகுப்பு மாணவர் அவ் வகுப்பில் தேறி மேல்வகுப்பிற்குப் போவர். இஃது இறப்பில் தவத்துக்கு ஒப்பாகும். ஆனால், பயிற்சி மாணவர் பயிற்சியில் தேறித் தொழிலிற் புகுவர். அரமட்டோடு அமையும். இதுவே வேள்விக்கு ஒப்பாகும். இவ் வேள்வி சிவவேள்வி அன்று. ஆண்டுச் சிவபெருமான் திருப்பெயர் கேட்கப்படினும் அது, "பொது நீக்கித் தனை நினைய வல்லார்" செய்யும் வேள்வி ஆகாது. ஆண்டுச சிவ பெருமானை மூவரில் ஒருவன் என்றே மொழிந்தயர்வர்.

பொதுநீக்கிச் செம்பொருளை நினையவல்லார் திருமுறைச் செந்நெறிச் செல்வர்களே. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க.

"அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகன்ஞாலத்து அகத்துள் தோன்றி
வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணை மேல் வரும்பயனைப் போக மாற்றிப்
**பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்**
**பெருந்துணையைப்** பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே." —௬. ௧-௫.

திருமுறை வேள்வி அகம்புறமாய் அஞ்செழுத்தோதி அழல் ஓம்புதலாகும். இவ் அழலோம்புதல் மெய்யுணர்வு கைவரச் செய்து செம்மேனி எம்மான் திருவடி நீழல் எய்துவிக்கும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணாக:

"அஞ்செழுத் தோதி அங்கி வேட்டுநல் வேள்வி எல்லாம்
நஞ்சணி கண்டர் பாதம் நண்ணிடச் செய்து ஞாலத்து
எஞ்சலில் அடியார்க் கென்றும் இடையறா அன்பால வள்ளல்
தஞ்செயல் வாய்ப்ப ஈசர் தாள்நிழல் தங்கி னாரே."
—௧௨ சிறப்புலி-௫.

திருமுறை வேள்வி அல்லா வேள்வி பெரும்பயன் விளையாமையானும், மெய்யுணர்வு கைவரத் தடை செய்தலானும் அது செந்நெறிச் செல்வர்களால் போற்றப்படாதாயிற்று. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"வேதம் ஓதிலென் வேள்விகள் செய்கிலேன்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி அங்கமொ ராறும் உணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி இல்லையே." —௫. கக-ச.

## இறப்பில் தவம்

இறப்பில் தவம் சீலம், நோன்பு, செறிவு என்பன. இவற்றால் அறிவு கைகூடும். எனவே சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்பன நுண்ணின் நோக்குங்கால் ஒவ்வொன்று நந்நான்காய்ப் பதினாறு ஆகும். அங்ஙனம் விரியுங்கால் பெறப்படும் பெயர்முறை:

க. **சீலம்:** சீலத்திற் சீலம், சீலத்தில் நோன்பு, சீலத்தில் செறிவு, சீலத்தில் அறிவு.

உ. **நோன்பு:** நோன்பிற் சீலம், நோன்பில் நோன்பு, நோன்பில் செறிவு, நோன்பில் அறிவு.

ங. **செறிவு:** செறிவிற் சீலம், செறிவில் நோன்பு, செறிவில் செறிவு, செறிவில அறிவு.

ச. **அறிவு:** அறிவிற் சீலம், அறிவில் நோன்பு, அறிவிற் செறிவு, அறிவில் அறிவு.

இவற்றைச் சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் முதலிய பெயர்களானும் கூறுப.

இவற்றின் விரிவெல்லாம் மெய்கண்டான்நூற் பேருரைக்கண் காண்க.

இவற்றைக் குறிக்கும் திருப்பாட்டுக்கள் வருமாறு:

"விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினால் பதிற்றி ஆகும்
துளக்கில்நன் மலர்தொடுத்தால் தூயவிண் ஏறல் ஆகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானம் ஆகும்
அளப்பில கீதம் சொன்னார்க்கு அடிகள்தாம் அருளும் ஆறே."
—ச. எஎ-ங.

"உடம்பெனும் மனைய கத்துள் உள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய் அட்டி உயிரெனும் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே." —ச. எ௫-ச.

"நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்
பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு மஞ்சனப் பணிக்குள்ளோர்
அல்லும் நன்பக லும்திரு அலகிட்டுத் திருமெழுக்கு அமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை எழுதுவோர் வாசிப்போர்."
—கஉ. கணநாதர்-ங.

"தானம்யா கந்தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள்
சாந்திவிர தமகமம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவில் மீள்வர்
ஈசன் யோகக்கிரியா சரியையினில் நின்றோர்

ஊனமிலா முத்தியும் பெற்றுலகம் எல்லாம்
ஒடுங்கும் போதரன் முனிலா தொழியி னுற்பவித்து
ஞானநெறி அடைந்தடைவர் சிவனை அங்கு
நாதனை முன்நிற்கில் நணுகுவர்நல் தாளே.''
—சித்தியார். அ. ௨-௨௫.

## இருவினை ஒப்பு

ஒருசாரார் கூற்று: ''இறப்பில் தவத்தான் நிகழும் இருவினை ஒப்பாவது, எஞ்சுவினையாய் ஈட்டப்பட்டுக் கிடந்த இருவினைகளும் செவ்வி முறையானே (க௨0) பயனாய் வரும்வழி, நல்வினையுள் மிக்கதாகிய பரிமேத வேள்விப் புண்ணியமும், தீவினையுள் மிக்கதாகிய ஆருயிர்க் கொலைப் பாவமும் ஒருங்கே பதன்எய்திப் பயன்படுதற்கண் ஒத்தனவாயின் ஒன்றான் ஒன்று அடிக்கப்பட்டுக் கெட்டொழியுமாகலின் அவை அவ்வாறு தம்முள் ஒத்தலே இருவினை யொப்பு'' ஆம (பேருரை).

மற்றொருசாரார் ''எஞ்சுவினையாய்க் கிடந்த புண்ணியங்களும் பாவங்களும் மிகுதி குறைவு இன்றித் தம்முள் ஒத்தல் இருவினை ஒப்பென்பர்'' (பேருரை).

இவை இரண்டும் பொருந்தா. என்னை? மிக்க புண்ணிய பாவம் அங்கனம் ஒப்ப வருவதே அருமை; வரும் எனினும் எஞ்சிய இருவினைகள் என்ன ஆவன? ஆதலால் அது பொருந்தாது என்க. மற்றுப் ''புண்ணிய பாவங்கள் முழுதும் தம்முள் ஒக்குமாறு இன்று; ஒக்குமேனும், அது பற்றி ஆணவமலம் நீங்குமாறு இல்லை. ஆணவமலம் நீங்காமையால் ஒரு மலம் உடையவராவரே அன்றி வீடுபேறு எய்தியவர் ஆகார் (பேருரை).

மலச்செவ்வி, அருள் வீழ்ச்சி சிவபுண்ணியம் இவற்றின் குறிகள் எல்லாம் ஆவியின் அறிவினகண் விளங்குவ; அதுபோல் இருவினை ஒப்புக்குறியும் ஆவியின் அறிவின்கண்ணே விளங்கத்தக்கன.

மலச்செவ்வி - மல பரிபாகம். அருள்வீழ்ச்சி - சத்திநிபாதம். சிவபுண்ணியம் - இறைவினை என்ப.

மெய்யுணர்வால் திருமுறைச் செந்தமிழ்வழிச் செம்பொருட் சிவ பெருமானைத் தன் தூய உள்ளத்து மறவா நினைவால் தொழுதுகொண்டு வேறொன்றும் காணாது விழுப்பொருளே கண்டு இறையடி நீழலின் இன்புற்றுறைவர்.

அத் தவத்தோர்க்குச் செய்யும் செயலின்கண்ணும், அதன் விளைவாம் பயனின்கண்ணும் விருப்பு வெறுப்பு இன்றிச் செய்தலும் பயன் எய்தலும் அவர்பாற் காணப்படினும் அவர் உள்ளம் அவற்றின்கண உறைதலின்றி இறைதிருத்தாளின்கண் உறைதலால் அப்பயன் இறைக்கேயாம். இறையும ''வேண்டுதல் வேண்டாமை இலான்'' ஆதலால் இறைபணி நிற்பார்க்குச் செயற்கு முன்னிலையாய் வரும் நல்லார் பொல்லார்க்கேயாம். அவர்க்காம் என்பது அவர் வினைப்பயன் வீறுபெற்று எழுந்து ஊறுபயன் நல்க வித்துக்கு எருப்போன்று துணையாகும் அத்துணையே. இதனை ஓர் ஒப்பால் காண்பாம்;

விளைநிலம் விழுமிய தவத்தோரை ஒக்கும். உழவர் அத் தவத்தோர் செயற்கு முன்னிலையாம் நல்லார் பொல்லாரை ஒப்பர். வித்து அந்நல்லார் பொல்லாதம் நயனொடு நயனில் வேட்கையை ஒக்கும். தவத்தோர் செயல் எருவினை ஒக்கும்.

இவ் உண்மை வரும் திருவள்ளுவர் திருப்பாட்டான் உணர்க.

" இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்." —திருக்குறள், ௬௨௯.

உள்ளம்இறை பாலாம் அடியர்வினைத் துய்ப்புறார்
எள்ளுவினை ஒத்தார் இவா.

புணர்வு புரிவு ஒப்பருள் வீழ்ச்சி

ஆவி வினைக்கீடாக அருளால் பல பிறவிகள் பிறந்து இறந்து இருவினைகள் புரிந்து வினைப்பயன் அருந்தும் நிலை புணர்வு - சகலம்.

வினைகள் ஏறுவினை, எஞ்சுவினை, என்றவினை என முத்திறப்படும். இம் முத்திறவினையையும் அவற்றின் முதலாகிய ஆணவ அழுக்கினையும், வினைத்தாங்கலாம் மாயையினையும், இவற்றை நடத்தும் நடப்பாம் திருவருள் ஆற்றலையும், சார்பாம் தம்மையும் நூலுணர்வாலும் நுண் உணர்வாலும் நோக்கியுணர்தல் புரிவு - சுத்தம்.

முத்திற வினையினும் நத்துதல் செய்யாது எத்திறம் வரினும் இறையடி மறவா மெய்த்திறம் கொண்ட திருவுள்ளமே இருவினை ஒப்பு வருவிக் கும் எழில் உள்ளம். அவ்வுள்ளத்தார் எச்செயல் புரியினும் அஃது இறைபணி ஆவதன்றி உயிர்ச்செயல் ஆகாது. ஆகவே அவ்வினைப்பயன் ஆவியைப் பற்றுவதின்று. இஃது ஆள்வோர்பொருட்டு அலுவலாளர் ஆற்றும் வினைப்பயன்கள் அவ் ஆள்வோரைச் சார்வதன்றி அலுவலாளரைச் சாராமையை ஒக்கும். இந்நிலையே இருவினை ஒப்பாம்.

இருவினை ஒப்பு வாய்ந்த பருவமே அருள் வீழ்ச்சியாம். அருள் வீழ்ச்சியென்பது நடப்பாற்றலாகிய திருவருள் வனப்பாற்றலாக வாய்ந்து உடையான் திருவடியில் ஆவியினை உய்க்கும் ஒப்பில் ஒண்மைத் திருவருள் ஆற்றலாகும். (௩௧) இஃது அரும்பெறல் தாய் சேயின் இளம் பருவத்துத் தொண்டியற்றித் துணைபுரிதலும், அவர்தம் கட்டிளம் பருவத்து அவர் தம்மைக்கொண்டு தொண்டினை இயற்றுவிக்கத் துணை புரிதலும், முதிர்பருவத்து அவர்தம் தொண்டினுக்கு எத்துணையும் புரியாது தொண்டியற்றக் கண்டு களித்தலும் செய்யும் அருஞ்செயலை ஒக்கும்.

இவ்வுண்மைகள் வரும் திருப்பாட்டான் உணர்க.

" இனையபல பிறவிகளின் இறந்துபிறந் தருளால்
இருவினைகள் புரிந்தருந்தும் இதுசகலம் அகலா
முனமருவும் இருபயனும் ஒருகாலத்து அருந்த
முந்துநுகர் உந்துபயன் அந்தமுற வந்த
வினையும்எதிர் வினையுமுடி வினையுதவு பயனால்
நேராக நேராதல் மேவுங் கால்முன்
சினமருவு திரோதாயி கருணை ஆகித்
திருந்தியசத் திநிபாதந் திகழும் அன்றே."
—சிவப்பிரகாசம், உ-௩0.

உந்துபயன் - எஞ்சுவினை. அந்தமுற வந்தவினை - என்றவினை. எதிர்வினை - ஏறுவினை. முடிவினை உதவுபயன் - இறைபணி. முடிவு - வீடு.

செவ்வி

"மலபரிபாகமாவது மலம் தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதலேயாம்" (பேருரை).

*சொல்லிற் பரிபாகச் செவ்வி துணைமுதல்கள்*
*எல்லாமும் கூடல் இசை.*

### அடிப்பாடு

*தாய் சேயின் நிலைக்குத் தக்கவாறு ஊண், உழைப்பு, உணர்வு முதலியன உற்றுழி உதவி ஊக்குந்தகையதே திருவருள் ஆவியோடு புலம் பின்கண்ணும் நீங்காது உடனாய் நின்று படிமுறையான் அவற்றை நோக்கி வரும் பேரருள் நோக்கத்தின் அடிப்பாடென்க. ஊட்டுவார், உழைப் பிப்பார், உணர்விப்பார் தம் ஊண் உழைப்பு உணர்வின் அளவின்று நல்கு வது, உண்பார், உழைப்பார், உணர்வார் தம் வல்லுநராம் வன்மையளவே யாம். ஆயின், படிமுறையானன்றி உணர்த்தின் உணரவொண்ணா வல்லுதல் ஆவிகள்மாட்டு உண்டு. அவ் வல்லுதலே செவ்வி முதல் என்க.*

---

## இரண்டாம் அதிகரணம்

**இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த் தும் என்றது.**

*எ - து. மே-ள். எ-னின். மேற்கூறியவாற்றான் நிகழும் ஞானத்தை உணர்த்துவார் கலைஞானங்களை உணர்த்துவார் போல நம்மனோரில் ஒருவராதல் அமையும் எனச் சாங்கியர் நையாயிகர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித் துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.*

*(இ - ள்.) மேற்கூறியவாற்றாற் சரியை முதலிய மூன்றும் முற்றிய பின்னர் இம்முற்றுதலானே மலபரிபாகஞ் சத்திநி பாதம் நிகழ்ந்து தத்துவஞானத்தின் அவாவுதலையுடைய உயிர் கட்கு இதுகாறுந் தமக்கு முதலாய் உண்ணின் றுணர்த்தி வந்த பரம்பொருளே அப்பருவம் அறிந்து குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்து அதனை அறிவுறுக்கும் (எ - று.)*

*எனவே, ஏனையோர்க்கு அது கூடாது என்றவாறாயிற்று.*

*இக்கருத்தே பற்றி *“அகத்துறுநோய்க்கு உள்ளினரன்றி யதனைச்-சகத்தவருங் காண்பாரோ தான்” என்றார் புடை நூலா சிரியரும். ஏகாரம் தேற்றம்.*

**அவன் அன்னியமின்றிச் சைதன்னியசொரூபியாய் நிற்றலான்.**

*எ - து. ஏது எ - னின். மாயா ஒருவன் மாயாஉருவினை ஏயான். ஏயும் எனின் எம்மனோரில் ஒருவனாய் முடியும் ஆகலின் தமது முதல் குருமூர்த்தி ஆதாரமாகத் தரித்துநின்று உணர்த்*

---

* திருவருட்பயன், அருளுருநிலை, ௨.

தும் என்றலே அமைவுடைத்தெனப் பொதுவகையான் அதிட்டான பக்கங் கூறுவாரைநோக்கிச் சிறப்புவகையான் ஆவேச பக்கமாமாறு உணர்த்தி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அம்முதல்வன் பாலின் நெய்போல மறைந்து வேறாய் நிற்றலின்றிச் சுத்தான்ம சைதன்னியமே தனக்குச் சொரூபமாகக்கொண்டு தயிரின் நெய்போல ஆண்டு விளங்கி நிற்றலான். 'இவ் ஆன்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவு மாய் உணர்த்தும்' என மேற்கொண்டது (எ - று).

பாலின் நெய்போல வேறாய் மறைந்து நின்று செலுத்தப் படுவனவற்றினும் பொதுவாயச் செல்வதாகிய அதிட்டானபக்கங் கொள்வார்க்கு ஏனைச்சமயகுரவருங் குரவராவான்சேறலின், அஃது ஈண்டைக்கு அமைவுடைத்து அன்றென்பதாம்.

சைதன்னியம் என்றார் மாசுதீர்ந்தது என்பது உணர்த்து தற்கு.

* மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்கு
அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்தும் தான்குருவாய் முன்.

எ - து. உ - ம். எ - னின். ஒரோரிடங்களிற் குருவாய் வந்து உணர்த்துதல் இன்றியும் ஞானம் நிகழுமாறு என்னை என்பாரை நோக்கி அதனை வரைசெய்துணர்த்தி வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும்—(அம்முதலவன் மூவகை ஆன்மாக்களுள்) விஞ்ஞான கலராயினார்கருத் தன்மையின் நின்றவாறே தத்துவஞானத்தை விளைவிபபன்; அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும்—அவ்வாறன்றிப் பிரளயாகலராயினார்க்கு நாற்றோளும் முக்கண்ணுங் கறைமிடறு முதலிய உறுப்பிற்றாய் முதலொழினடாத்தி நின்ற தன் இயற்கைவடிவே குருவடி வாகக்காட்டி முன்னாகநின்று தத்துவஞானத்தை உபதேசித்து உணர்த்துவன், அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்ப்பின் மெய்ஞ்ஞானம் உணாத்தும்—அவிச்சையையுடைய சகலராயி னார்க்கு அவர்வடிவுபோலும் வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்துநின்று தத்துவஞானத்தை யுணர்த்துவன், முன்—அவ்வேறுபாட்டை அறிவாயாக (எ - று).

* 'உரைதரு' சித்தியார். அ. க - உ.

முன் என்றதனை முன்னைப் பொருளென்று உரைத்து எழுவாயாகக்கோடலும் ஒன்று.

விளையும் என்பது அரசன் எடுத்த ஆலயம் என்புழிப் போல விவ்விகுதி தொக்குநின்றது. இவ்வாறன்றி எளிதின் அடப்படுதல் நோக்கி அரிசி தானே அட்டது என்றாற்போல எளிதின் விளைவிக்கப்படுதல் நோக்கி மெய்ஞ்ஞானந்தானே விளையுமென்றாரெனினுமமையும் *"உள்நின்று அறுத்தருளி" என்றார் புடைநூலாசிரியரும்.

ஈண்டு அஞ்ஞானம் என்றது அவிச்சையை என்பது சகலர்க்கே அடையாய் ஓதியவாற்றான் அறிக.

அச்சகலர் என்றது தவஞ்செய்தாரென மேலெடுத்துக் கொள்ளப்பட்ட சகலர் என்றவாறு.

அக்குரு என்றது மேற்கோளில் கூறிப்போந்த குரு என்றவாறு.

தானே விளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் எனவே, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப் படர்க்கையினும் நின்று உணர்த்தும் என வரைசெய்தவாறு காண்க. இவற்றுண் முன்னைய இரண்டும் நிராதாரமெனவும் பின்னையது சாதாரமெனவுங் கூறப்படும்.

அறிவிக்க அன்றி அறியா உளங்கள்
சேறியுமாம் முன்பின் குறைகள்—நெறியிற்
குறையுடைய சோற்கொள்ளார் †கோள்பவத்தின் வீடேன்
குறைவில்சகன் சூழ்கோள் பவர்க்கு.‡

எ - து. உ - ம். எ - னின். விஞ்ஞானகலர் முதலிய மூவர்க்கும் ஓரியல்பான் உணர்த்தாது அவ்வாறு தன்மையினும் முன்னிலையினும் பின்னிலையினுமாய் உணர்த்துதல் எற்றுக்கு என்பாரை நோக்கிக் காரணங்கூறி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா—உயிர்களெல்லாந் தமக்குரிய படிவழியின் வைத்து முதல்வன் அறிவிக்க அறியும் இயல்பின அன்றி ஒன்றுபோல் அறிவிக்க அறியும் இயல்பின அல்ல ஆகலான், குறைவு இல் சகன் சூழ்

* போற்றிப்பஃறொடை, கண்ணி, கூ௰.
(பாடம்) † கொள்ளான். ‡ கொள்பவற்கு.

கொள்பவர்க்கு—அவ்வறிவாற் குறைபாடில்லாத சகக்கடவுளது உபதேச மொழியைக்கொண்டு உணரும் இயல்பினராகிய பிரளயாகலர் சகலர்க்கு, குறைகள் முன் பின் செறியுமாம்—அவ்வறிவித்தால் அறிதலாகிய குறைகள் முன்னிலையினும் பின்னிலையினு நிகழ்வனவாம், குறை உடைய சொல் கொள்ளார் கொள் பவத்தின் வீடு (ஆம்) என்—குறைவில் சகனால் ஆகிய குறைவினையுடைய உபதேசமொழி கொண்டுணரவேண்டாத விஞ்ஞானகலர்க்கு முதல்வனாற் கொள்ளப்பட்ட தன் உண்மை மாத்திரையின் வீடு பயக்கும் உணர்வு உண்டென்று அறிவாயாக (எ - று)

குறை இன்றியமையாமைப்பொருள், அது *"வினைக்குறை தீர்ந்தாரின் தீர்ந்தன்றுலகு" என்பதனுட் பரிமேலழகருரையானு முணர்க.

பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட்கிளவி.

வீடுபயக்குமுணர்வை வீடென்றும், சூழ்ச்சி பயக்கு முபதேசமொழியைச் சூழென்றுங் காரணகாரியமாக உபசரிக்கப்பட்டன. கொள்பவர் கொள்ளார் என்பனவும் அவை. கொள்ளார்க்கு என்னு நான்கனுருபு விகாரத்தால் தொக்கது. †"ஐந்தவித்தானாற்றல்" என்புழிப்போல.

ஆம் வீடெனவுமியையும். வீடாமெனப் பாடமோதுவாருமுளர்.

மேலைவெண்பாவின் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் தானே விளையுமெனக் கூறியவற்றை ஈண்டு நெறியின் அறிவிக்க அன்றி அறியா ஆகலான் அது முன்செறியும் பின்செறியும் பவத்தினும் எனக் காரணங் காட்டி வலியுறுத்தினார். இதற்குப் பிறரெல்லாந் தத்தமக்கு வேண்டியவாறே மேலைவெண்பாவோடு இயைபறவுரைத்தார். அல்லதூஉம் அறிவிக்க அன்றி அறியாமை உபதேசியாம் என ஆன்மாவின் தன்னியல்பு கூறும் வழிப் பெறப்பட்டதாகலின் அதனை ஈண்டும் புனருத்தியாகக் கூறவேண்டாமையின் மேலது வலியுறுத்துதற்கு ஏற்புடைய அறிவிக்க அறிதற்கட்படும் விசேட மாத்திரையே ஈண்டெடுத்தோதினாரென்றுணர்க. படிவழியின் வைத்து அறிவிக்க அன்றி அறியாமை ‡"பந்தமும் பிரிவுந் தெரிபொருட் பனுவல் படிவழி சென்றுசென்றேறி" என்பதனானு மறிக.

---

* திருக்குறள். ௬௧௨.  ‡ கருவூர்த்தேவர் திருவிசைப்பா.
† ௸ ௨௫.

இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல்—இல்லா
அருவாகி நின்றானை ஆரறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று.

எ - து. உ-ம். எ-னின். அம்முத்திறத்துள் ஈண்டைக்கு எடுத்துக்கொண்ட அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாதல் உபசாரமேயன்றி ஏனையபோல் உண்மையாதல் செல்லாது என்பாரை நோக்கி உண்மையாதலை உவமைமுகத்தான் வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நல்லாய்—அறிவால் நன்மையுடைய மாணாக்கனே, ஏந்து இழைபால் முலைப்பாலும் கண்ணீரும் இல்லா உளவாம்—ஏந்திய இழைகளையுடையாட்குக் (குழவிமாட்டுளதாகிய அருவாகிய அன்பினைப் பிறரறியுமாறு வெளிப்படுத்தும் அவ்அன்பினுருவாகிய) முலைப்பாலுங் கண்ணீரும் (அவள் மாட்டுக்குழவியைக் காணுமுன்) இல்லாவாய்ப்பின்னுளவாம் (அதுபோல), நீர்நிழல்போல் இல்லா அருஆகி நின்றானை ஆர் அறிவார் தானே உரு ஆகி உற்றுத் தோன்றானேல்—நீரின்கண் நிழல்போல் (உயிர்கண்மாட்டுப்) புலப்படுதலில்லாது அருவமாய் நின்ற முதல்வனை யார்தாம் அறிவார் அவனே குருவடிவாய் வந்துதோன்றி நின்று உணர்த்தானாயின் (எ - று).

ஒருவரும் இல்லை என்பதாம்.

இஃதெடுத்துக்காட்டு உவமை.

இன்றி அமையாமையுணர்த்துவார் தோன்றானேல் ஆரறிவார் என எதிர்மறைமுகத்தாற் கூறினார்.

பொருளுக்கோதியதனை உவமையினுங் கூட்டி ஏற்குமாறு உரைக்க.

முலைப்பாலுங் கண்ணீரும் அன்பை விளக்கும் என்பது *"சுரந்த திருமுலைக்கே துய்யதிரு ஞானம்—சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச் - சுரந்த—தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த—மனமுடையாள் அன்பிருந்தவாறு." என்பதனானும், †"அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்—புன்கணீர் பூசல் தரும்." என்பதனானும் அறிக. அவ்விரண்டும் அன்பின் வடிவே பிறஅல்ல என்பது அன்பு நிகழ்தற்குரிய காரணம் உள்வழி வெளிப்பட்டு அஃதில்வழி

* திருக்களிற்றுப்படியார். ௬௪.

† 'அவர் தந்தார்' திருக்குறள், ௧௧அ௨.

வெளிப்படாத ஒற்றுமை நோக்கிக் கண்டுகொள்க. இவ் ஒற்றுமை யுணர்த்துவார் இல்லாவாய் உளவாம் என்றார்.

இல்லா என்பது முற்றெச்சக்குறிப்பு.

ஆல் அசை. நீர் அகத்தியங்கும் உயிர்கட்கு இடங்கொடுத்தல் உண்மையான் நீரின்கண் வெளிஉண்டு என்பதூஉம், உண்டாகவே, ஆண்டு நீருக்கு நிழல் உண்டென்பதூஉம், பெறப்பட்டன. அந்நிழல், வேறு நில்லாது நீரோடு விரவி நிற்றலின் நீர்போற் புலப்படாதாயிற்று. அதுபோலச் சிவசைதன்னியமும் யான் என்னும் உணர்விற்கு விடயமாய்ப் புலப்படும் ஆன்ம சைதன்னியத்தோடு விரவிப் புலப்படாது நிற்பதொன்றென்பார் நீர் நிழல்போல் இல்லா அருவாகி நின்றனை என்றார்.

## விளக்கம்

### ஞானாசிரியன்

மெய்யுணர்த்து முதலாகிய ஞானாசிரியன் விழுமிய முழுமுதல்வனே ஆவன். ஏனைக் கல்விகளை உணர்த்தும் குரவன்மாராமாட்டும் முழுமுதல்வன் கலப்பால் ஒன்றும் தன்மையில் விளங்குவன். ஞானாசிரியன் மாட்டுப் பொருள் தன்மையால் வேறாய்ச்சிறந்து விளங்குவன. அதற்கு ஒப்பு தயிரின் விளங்கும் நெய்யாகும். தயிரின்கண் தயிர் - மோர் உள்ளடங்க நெய் மேலோங்கிப் பிரிப்பின்றிப் பரந்திருக்கின்றது. நெய் என்பதனையே நாம் இஞ்ஞான்று வெண்ணெய் என்று வழங்குகின்றோம். இத்தகுதியுடையார் முழுமுதல்வனை அவனருளால் உயிருணர்வில் ஒழிவின்றுணரும் ஒண்மையுடையார். எனவே இறை உணர்த்தற்கு வாய்த்த எண்மை நிலைக்களமாவர். இவர்கள்பால் ஆண்டவன் விளங்கித்தோன்றும் நிலை இவர்ந்தாரும் நிலையாகும். இதனையே ஆவேச பக்கம் என்பர். ஆவேச பக்கம் எனினும் சிறப்பு அதிட்டானம எனினும் ஒன்றே. இவ்வுயிரினை மாசிலா வுயிர் என்பர். எனவே **மாசிலாமணி** என ஞானாசிரியனை அழைத்தல் மிகவும் பொருத்தமாகும். அம்முறையில் ஆவியை **மாசிலி** என அழைத்தல் தகும். இவ் ஆவிகளே 'தம்மையுணர்ந்து தமையுடைய தன்உணராவாராவர். இவ்வுண்மை 'என்னை ஏதும் அறிந்திலன்' (௩௧௩) என்னும் திருப் பாட்டான் உணர்க. இதுவே ஆனேற்றுநிலை, அஃது ஆண்டவன் தாங்கப்படுவோனாதல். (௬௨)

ஏனைக் கலைவலார் நூலுணர்வேயன்றி நுண்ணுணர்வு பெருமையால் அவர்மாட்டு முழுமுதல்வன் கலப்பால் ஒன்றாய் நின்று இயைந்தியக்குவன். இந்நிலையினையே பொதுவான அதிட்டான பக்கம் என்பர். இவ்வுயிர் மாசிலி ஆகாமையால் இதன்கண் பொதுவாக விளங்கும் முதல்வன் மாசிலா மணி என்னும் பெயருடையனாய் விளங்கான். மாசுடைய பளிங்கு தன் கண் வைத்த ஒளியினை மழுங்கக் காட்டுவதன்றி விளக்கமுறக் காட்டுதல் செய்யாது. அதுபோல்தான் இறைவனும் மறைந்து தோன்றுவன். இந் நிலையே பொதுவாக மாசகலா உயிரின்கண் காணப்படும் நிலை. இதுவே பாலில் நெய்போல் இறைவன் நிற்கும் நிலை என்பர். இது மதிசூடும் நிலை, அஃது ஆண்டவன் தாங்குவோனாதல்.

எண்ணின் இயைந்தியக்கல் எம்மான் அதிட்டானம்
நண்ணி இவரந் தூர்தலா* வேசம்.
மாசகலா விப்பால் இவர்தந்திங் கூர்ந்தியக்கும்
மாசாவி பிள்ளைமதி மானுமதன்—மாசகலத்
தன்மேலாக் கிச்செலுத்தும் தாங்கப்படுவோன் தாங்கி
மன்ஏறு வெண்பிறையாம் மற்று.

## முதலே உணரும்

உயிரின் செவ்வியை ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் முதல்வன் உணர்வதன்றி வேறு உணர்வார் யார்? ஒருவன் கற்றனவெல்லாம அவன் தானே உணர்வதன்றித் தொடர்பிலாப் பிறர் உணர்வது எங்ஙனம்? இவ்வுண்மை வைப்புப்பேழையில் வைத்தபொருள் வைத்தாற்கன்றிப் பிறர்க்கு அறியவாராமையானும் உணரலாம்.

ஈண்டுக்குரு என்றது மாசுதீர்ந்த ஆவியின் யாக்கையினை.

## இருக்கை உயர்வு

கொள்ளும் பொருளால் கொள்கலத்துக்கு உயர்வுண்டாவதுபோல் இருக்கும் பொருளால் இருக்கைக்கு உயர்வுண்டாகும். முழுமுதல்வன் 'மாயாவுருவினை எயான்' என்பது மெய்ம்மையே. அவன் திருவுருக் கொள்வது தன்னின் வேறல்லாத் திருவருளினன்றி மருளாகிய மாயையின் அன்று. 'உலகமே உருவமாக' இருக்கின்றான் என்பது கண் கை கால் முதலிய உறுப்புக்களோடன்று. அவ்வுறுப்புக்களோடு தோன்றுவது திருவருட்டிருமேனியிலேயாம் ஞானசிரியன் மாட்டு இவர்ந்தூர்வது மாயா உருவின் அன்று. ஆவி உருவின்கண்ணேயாம். ஆவி உருவில் இருப்பினும் அவ் ஆவி தங்கும் மாயா உருவும் அருளுருவாய்ப் பொலியும். அஃதன்றி மருள்யாக்கை எடான் என்பதே வரும் திருப்பாட்டு:

"மாயா உருவன் மாயா உருவினை
எயான் எய்ந்தவர் எம்மனோரே." —சங்கற்ப. சைவ-௨௬.

மேலும் முதல்வனுக்குக்காயம் மாயை அன்று என்பது வரும்பாட்டானுணர்க:

"மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவம் ஆகும்
ஆயஆ ணவமகன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும்
நாயகன் எல்லா ஞானத் தொழில்முதல் நண்ணலாலே
காயமோ மாயை அன்று காண்பது சத்தி தன்னால்."
—சித்தியார். க. ௨-௪௧.

இரும்பு பொன்னாயபின்னும் அப்பொன்னினை முன் இரும்பு இருந்த பெட்டியின் கண்ணே வைப்பர். அங்ஙனம் வைப்பினும் அப்பெட்டி இரும்புப்பெட்டி என்று அழைக்கப்படாது பொன்பெட்டி என்றே அழைக்கப் படுதல் காண்க. அதுபோல் ஆண்டவன் பொதுவாக அன்றிச் சிறப்பாக மாசுதீர்ந்த ஆவியின்கண் விளங்குவதால் அவ் ஆவிதங்கிய யாக்கையும் அருள் யாக்கையேயாம். எனவே, அவ் உடம்பினை முன் உடம்பென்று கருதற்க. புடம்போட்டபொன் மாசுதீர்ந்து தூய்மையாவது போல் தவ யாக்கையும் அருள் யாக்கை ஆகும். கல்லிருக்கையின்மேல் கலிங்கம் விரித்துப் பொலிவொடும் இருப்பர் புரையோர். ஆனால் அவர் இருப்பது

கலிங்கத்தின் மேலாயினும் கல்லின்மேல் என்றே கட்டுரைப்பர். அது போலவேதான் ஆசான் திருக்கோலத்தினை ஆண்டான் மேற்கொள்ளுங்கால் ஆவியையே இருக்கையாகக் கொள்கின்றனன். கொள்ளினும் நாம் அவ் ஆவியின் ஆக்கையினையே இருக்கை எனக் கூறுகின்றோம். இது பற்றியே ஆளுடைய நம்பி ஆண்டான் சிறப்பாக மேற்கொள்ளும் ஆவியும் ஆக்கையும் முன்போல் கருதாது வேருகக் கருதவேண்டுமெண்டுமென்று அருளுகின்றனா. அது வருமாறு :

" தானெனை முன்படைத்தான் அதறிந்துதன் பொன் அடிக்கே
நானென பாடல்அந்தோ நாயினேனைப் பொருட்படுத்துப்
வானெனைவந் தெதிர்கொள்ள மத்தயானை அருள்புரிந்து
ஊன் உயிர் வேறுசெய்தான் நொடித்தான்மலை உத்தமனே."
—எ. ௧00-௧.

வேறு - சிறப்பு.

இங்ஙனம் காணப்படும் அருள்யாக்கையிற் பொலியும் ஐம்பொறியும் ஐந்தவித்த பொறிகளாதலின் அவற்றையே திருவள்ளுவ நாயனர் 'ஐந்தவித்தான்' பொறிகள் எனக் கூறியருளினர் எனக. அத்திருப்பாட்டு வருமாறு :

" பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்." —திருக்குறள், ௬.

இத்தகைய ஆவிதங்கும் உடலே ஒளிவிடும் என்பதும் நாயனர் திருப்பாட்டு :

" சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு." —திருக்குறள், உ௬எ.

இத்தகைய உடம்பின்கண் இறை சிறப்பாக நிற்றலால் அவ்வுடம்பு அருள்மயமேயாம். அதுபற்றியே "மாயைமா மாயை" என்னும் திருப்பாட்டு (உஅ௬) தோன்றுவதாயிற்று.

'மெய்ஞ்ஞானம்....................முன்.'

## முத்திற ஆசான்

ஆவிகள் முத்திறப்படுதலின் ஆண்டானும் ஆசான் அருட்செயலின் கண்ணும் முத்திறப்படுவான் என்க. ஆவிகள் ஒருமலம் உடையன, இருமலம் உடையன, மும்மலம் உடையன என மூவகைப்படும். ஒருமலத்தார், இருமலத்தார், மும்மலத்தார் என அழைக்கப்படுவர். விரிவை உ௩0, உ௩௧-ம் பக்கங்களிற் காண்க.

ஒருமலத்தாரை விஞ்ஞான கலர் என அழைப்பர். அவரை உய்யக் கொள்ளுங்கால் அறிவிற்கறிவாய் உள்நின்றவாறே மெய்யுணர்த்தி வீடு பேறு நல்குவன். அதனல் அவ்வுரு உணர்வில் தோன்றும் அறிவுருவாகும். உள்ளிருந்துணர்த்துவதால் இது தன்மையிடமாகும்.

முதல்வன் உள்ளிருந்து உணர்த்தும் உண்மையை வரும் திருப்பாட்டான் உணர்க :

"பப்போதிப் பவணனுய்ப் பறித்ததொரு தலையோடே திரிதர் வேனை
ஒப்போட ஓதுவித்தென் உள்ளத்தின் உள்ளிருந்தங் குறுதி காட்டி
அப்போதைக் கப்போதும் அடியவாகட் காரமுதாம ஆரூரரை
எப்போதும் நினையாதே இருட்டறையில் மலடுகறந் தெய்த்த வாறே.
—௪. ௫ - ௬.

இருமலத்தாரைப் பிரளயாகலர் என்பர். இவர்க்குணர்த்துவது முன்னிலையினும். அங்ஙனம் உணர்த்துங்கால் ஆண்டான் கொள்ளும் திருவுரு அருள் உருவாகும். "நாற்றோளும் முக்கண்ணும் கறை மிடறும் முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்தி நின்ற தனதியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி முன்னின்று செவியறிவுறூஉ முகத்தான் உணர்த்துதல்" (பேருரை).

நாற்றோள் சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நானெறியின் நல்லடையாளக் குறிப்பாகும். முக்கண் அறிவு ஆற்றல் அன்பு என்னும் முப்பண்பின் அடையாளக் குறிப்பாகும். கறைமிடறு பிழைபொறுத் தடக்கிய மாசினைக் குறிக்கும் குறிப்பாகும். இவ்வொப்புக்கள் வீடு பேற்றின் கண்ணும் மூன்று முதலும் உள என்னும் மெய்ம்மையினை வலியுறுத்துவதாகும்.

நானெறிச் சென்ற நல்லார் மேனெறியாகிய ஆண்டான் திருவருளால் இறவாத இன்ப அன்பு எய்தி, அவன் திருவடியைப் பற்றுவதாகிய ஆற்றல்பெற்று, அவன் அறிவின்பினை நுகர்ந்து அவன் தாள் இணைக்கீழ் ஒன்றாய் வேறாய் உடனாய்ப் புணர்ந்து செறிவர்.

இவ்வுண்மைகள் வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"செய்யனின் கமல பாதம் சேருமா தேவர்தேவே
மையணி கண்டத்தானே மான்மறி மழுவொன் றேந்தும்
சைவனே சாலஞானம் கற்றறி விலாத நாயேன்
ஐயனே ஆலவாயில் அப்பனே அருள்செய் யாமே." —௪. ௬௨-௪.

முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தவணு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
இன்பம் கொடுத்தலிறை இத்தைவிளை வித்தன் மலம்
அன்புடனே கண்டுகொளப் பா.

—உண்மை விளக்கம், ௫0.

## மும்மையுண்மை

வீடுபேற்றின்கண் மலவுண்மை ஓர் ஒப்பால் விளக்குதும். கூத்தாட் டரங்கத்தின்கண் கூத்தாட்டுவான், கூத்தர், கூத்துவப்பார், திரை இவை எந்நாளும் உள்ளனவே. கூத்தாடுவார் அவையிடை நடிக்குங்கால் ஆட்டு வானை மறைப்பது திரை. ஆடுங்கால் அவையோரைக் காண்பிப்பது திரை. ஆடுவோர் அவையோர் கொள்ளும் அகமகிழ்ச்சியால் தம்மையும் தம் ஆடலையும் வியந்து தம்மை ஆட்டுவானை மறந்து நிலையாத பொய் யின்பம் கொள்வர். ஆட்டுவான் இன்றேல் ஆடரங்கும் அவையும் ஆடலும் எங்ஙனமுண்டாம்? உண்பவன் ஊட்டுவானை மறந்து ஊணை யும், கண்டுமகிழ்தலையும், உண்டு உவப்பதையும் கொண்டு வியக்கின்றான். ஆனால் ஊட்டுவானைக் காணின் உவப்பில் இன்பம் உறுவன். இது,

மழைநீரை நீர்நிலையில் கண்டு மகிழ்வொடு பருகி மழையினை மறந்து நீர்நிலையினை வியந்து இன்புறுகின்றவன் உண்மையில் பொய்யின்பமே கொள்கின்றனன். ஆனால் மழையினை உணர்ந்து அதன்பாற் சார்ந்து பருகுவனேல் அழியா இன்பம் ஆர்குவன் என்பதையும் ஒக்கும். கட்டியின் துண்டினையுண்டு இன்புறுகின்றவன் கட்டியினோடிணைந்து இன்புறுவதையு மொக்கும்.

ஆடுவார் திரையின் உட்புகுந்தால் ஆட்டுவானைக் கண்டு தம்மை மறந்து அவன்பால் சிறந்து அவனையே நினைந்து அழிவில் இன்பம் ஆர்குவர் அல்லவா? அவையினையும் தம்மையும் காணாமலிருப்பதற்குக் காரணம் திரையே. திரை அவையினை மட்டும மறைப்பது போல் காணப்படினும் அவை தோன்றாமையே அவர்தம் ஆடலின்மைக்கும் காரணம்; ஆட்டுவானைக் கண்டு இன்புறுதற்கும் காரணம் அதனாலேயே திரை அவ்வின்பினை விளைவித்தது என்று கொள்ளுதல்வேண்டும். "எடுத்த பொற்பாதத்தின்பினை" ஆவி எய்துவதும் 'ஊன்று மலர்ப் பதத்து' ஊற்றத்தாலாம். இவற்றான் "இத்தை விளைவித்தல் மலம்" என்பதன் வாய்மை தெளிந்து கொள்க. தம்மை மறத்தல் செயலறுதல். செயலறுதல் புறத்துச் செயலற்று அகத்துச் செயலுற்று வாழ்தல். இவை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"நீரின் றமையாது உலகெனின் யாயார்க்கும்
வானின் றமையாது ஒழுக்கு

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு." —திருக்குறள், உ0, ௩௫0.

ஆட்டுவான் ஆடுவார் ஆங்கவையோர் தூங்கெழினி
காட்டுமால் மெய்ம்மைநடுக் காப்பெழினி—கூட்டின்பம்
ஆங்கவையேல் நில்லாவாம் ஆட்டுவனேல் மன்னிலைப்பாம்
ஈங்குவிளை வித்தல்மலம் ஈது.

தூங்கெழினி—தொங்கிக்கொண்டிருக்கும் திரை.

மும்மலத்தாரைச் சகலர் என்பர். மும்மலத்தாராகிய நம்மனோர்க்கு நம்மைப் போன்ற மக்கள் யாக்கையினை நிலைக்களமாகக்கொண்டு அருளாசானாய்த் திருவருள் புரியவேண்டும். இஃது பேரொளியினை நம் கண் காணும் ஆற்றலுடையன அன்று. காண நேரின் கண் தம் ஒளியினையே இழந்துவிடும். அதனால் அக்கண்கள் காணும் அளவில் அவ்வொளியினை அடக்கிக்காட்டுவதே அமைவுடைத்து. அதுபோல் ஆண்டவனும் அருளுருவினை அடக்கி அருளுகின்றனன்.

இவ்வுண்மைகள் வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

'உலகம் உவப்ப.................மலைகிழ வோனே.'

உ அரு. வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந் தெய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
உ௯0. மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி

அஞ்சல் ஓம்புமதி அறிவன்நின் வரவென
அன்புடை நன்மொழி அளைஇ விளிவின்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகித் தோன்ற விழுமிய
௨௯௫. பெறலரும் பரிசில் நல்குமதி பலவுடன்.

—௧௧. திருமுருகாற்றுப்படை.

"பூவந்த உண்கண் பொறுக்கென்று மேவித்தன்
மூவா இளநலம் காட்டிஎம் கோட்டத்து
நீவா எனஉரைத்து நீங்குதலும்."

—சிலப்பதி. ௬. ௧௩. ௩௪-௩௬.

## ஆட்கொள் உண்மை

ஆண்டான் மக்களை நிலைக்களனாகக்கொண்டு செவ்விவாய்ந்த நல்லோரை ஆட்கொண்டருளிய திருவரலாறுகள் அளவில்லன. அவற்றுள் ஆளுடைய அடிகளின் திருவரலாறு தலைசிறந்தது. அதற்கு வேண்டும் அகச்சான்றுகள் எட்டாந் திருமுறைக்கண் உள. சில காட்டுதும் :

"கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க."

"பரிந்து வந்து பரமா னந்தம் பண்டே அடியேற்கு அருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தில் அருமால் உற்றேன் என்றென்று
சொரிந்த கண்ணீர் சொரிய உள்நீர் உரோமஞ் சிலிர்ப்ப உகந்தன்பாய்ப்
புரிந்து நிற்பது என்றுகொல் லோஎன் பொல்லா மணியைப் புணர்ந்தே."

—அ. புணர்ச்சி - ௬.

## குரு உண்மை

"ஒருவ ராய்இரு மூவரும் ஆயவன்
குருவ தாய குழகன் உறைவிடம்
பருவ ரால்குதி கொள்ளும் பழனஞ்சூழ்
கருவ தாங்கடம் பூர்க்கரக் கோயிலே."

—ரு. ௨0-௧.

## மும்மைஇடம்

ஒருமலம் உடையார்க்கு உயிர்க்குயிராய் உணர்வின்கண் உள்நின்றவாறே உணர்த்தும் இடம் தன்மை. ஒருமலம் உடையார்க்கு அறியாமைப் பிணிப்பொன்றே உள்ளது. எனவினையும் மாயையும் உளவேனும் அவற்றால் அவர் பிணிப்புறார். இது பகலுறக்கமும் இடையுணவும் கொள்ளாதார் அவற்றைக் கொள்வார் கடுவண் இருப்பினும் பிணிப்புறார் அன்றே? அச் செயலினை ஒக்கும். எனவே அறிவொன்றனே அறியாமையை அகற்றும் என்பது துணிபு.

இருமலம் உடையார்க்குப் புறத்தே திருவருள் உருவாய்த் திகழ்ந்து மலமகற்றி மலரடிக்கீழ் வைப்பன். இவர்க்கு அறியாமைப் பிணிப்போடு இருவினைப் பிணிப்பும் உண்டு. அதனால் அறிவோடுகூட ஆற்றலும் பயன்படுத்தல் வேண்டும். அவ் ஆற்றலின் பயனே திருவருள் உருக்கொண்டருளுதல். அத்திருவுருவினைக் காணும் ஆவி காண்டல் முதலிய தொழிற் பயனுறுதலால் ஆவியின் ஆற்றலும் பயன்படுகின்ற துணர்க. இதற்கு இடம் முன்னிலை.

மும்மலம் உடையார் அறியாமை, இருவினை, ஆசை என்னும் முப்பிணிப்புடையார். அவர்க்கு ஆண்டான் அறிவாலும், ஆற்றலாலும், அன்பாலும முப்பிணிப்பினையும் அகற்றியருள்வன். அதுவே மெய் அடியாராகிய நல்லன்பர்களை நிலைக்களனுகக்கொண்டு 'சிவயநம' என்னும் தமிழ்மறை செவியறிவுறுத்துக் குறைநிறைத்துக் குறைவிலா நிறைவாய்க் கோதிலா அமுதாய் என்றும் ஒருபடித்தாய்த் திகழும் தன் திருவடிக்கீழ் வைத்தாள்வன் என்னும் வாய்மையாம். இது மெய் அன்பர்களை இவர்தந்து ஊர்ந்து உணர்த்துதலால் நிலைக்களன் உடையது எனக் கூறுப. நிலைக்களன் உடையதனைச் சாதாரம் என்பர். இதற்கு இடம் படற்கை. ஒருமலமுடையார்க்கும் இருமலம் உடையார்க்கும் அறிவுக்கறிவாயும், திருவருள் உருவாயும் நின்று அருமறை அருள்தலின் அதற்கு மக்கட்சார்பாலாம் நிலைக்களன் இன்று. எனவே இவ்விரண்டையும் நிராதாரம் என்ப. நம்மனோர்க்கு ஆண்டான் அறிவு ஆற்றல் அன்பென்னும் மூன்றாலும் உணர்வினில் உரையினில் உருவினில் உறுத்து உணர்த்தலின் நாமும் முறையே எண்ணல் தொழுதல் எடுத்துச் சுமத்தல் இயற்றுகின்றோம். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தான் இடை."   —திருக்குறள், ௩௭.

"அப்பர்தாம் எங்குற்றார் இப்பொழுதென் றருள்செய்யச்
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசா செப்புவார்
ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினால் உம்மடிகள்
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யானென்றார்."
—௧௨. திருஞா. ௯௩௫.

"தொழுது திளைத்துப் புறப்போந்து தோன்றப் பண்ணும் பிடிமேற்பார்
முழுதும் எத்த நம்பியைமுன் பேற்றிப் பின்பு தாமஏறிப்
பழுதில் மணிச்சா மரைவீசிப் பைம்பொன் மணிமா ளிகையில்வரும்
பொழுது மறுகில் இருபுடையும் மிடைந்தார் வாழ்த்திப் புகல்கின்றார்."
—௧௨. சேரமான், ௧௪௭.

"செறிமதயா னைச்சிரத்திற் பொற்கலத்தே டெடுத்துத்
திருமுறையை இருத்தியபின் சேவையர் காவலரை
முறைமைபெற ஏற்றியர சனுங்கூட ஏறி
முறைமையினால் இணைக்கவரி துணைக்கரத்தால் வீச
மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி
மழைபொழிய திருவீதி வலமாக வரும்போது
இறைவர்திரு அருளாநினைந் தடலரசர் கோமான்
இதுஅன்றோ நான்செய்த தவப்பயனென் றிசைத்தான்."
—சேக்கிழார்புராணம், ௮௭.

'அறிவிக்க......................பவர்க்கு.'

## ஆவி அறியும்முறை

"ஆவிகள் அது அதுவாய்ச் செறிந்தறிவனவன்றி முதல்வன்போலச் செறியாது நின்றறிவனவல்ல ஆகலான், அம்முதல்வன் காட்டாய் நின்று படிவழிபோல வைத்து முறையான் விளக்கினால் அன்றி அவ்அறிவு விளங்காதென்பது பெறப்படும்" (பேருரை). இது கற்கும் மாணவராகிய

கணக்காயனார் பலவேறு வகைப்பட்டு நிற்பதும், அதனால் ஆசிரியன் படி வழி உணர்த்துவதும் செய்துவரும் மரபினை ஒக்கும். படிவழியருளல் வரும் திருப்பாட்டான் உணர்க:

"பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவல் படிவழி சென்றுசென் றேறி
சிந்தையும் தானும் கலந்ததோர் கலவி தெரியினும் தெரிவுறா வண்ணம்
எந்தையும் தாயும் யானுமென் றிங்ஙன் எண்ணில்பல் ஊழிகள் உடனாய்
வந்தணு காது நுணுகியுள் கலந்தோன் மருவிடம் திருவிடை மருதே."
—௯. கருவூர், ௧௦-டு.

## நுண்ணுணர்வினர்

ஒருமலம் இருமலம் உடையாராகிய அறியாமையினர் வினையினர் என்னும் இருதிறத்தார்க்கும் நூல்வேண்டும் குறைபாடு இன்று. எனவே அவர்கட்குத் தன்மை முன்னிலை ஈரிடத்தானும் முறையே உணர்த்துவித்தலும் நோக்குவித்துரைத்தலும் நிகழ்த்திய அளவானே ஒன்றுதலும் தெளிந்து ஒன்றுதலும் நிகழ்ந்து வீடுபேறு உறுவர். ஒன்றுதல் இறை நிறைவில் அழுந்துதல். இறைநிறைவில் அழுந்துதலே நிட்டை என்பர். திருவருள் உருவினை நோக்கின அளவானே நூலுணர்வுகொண்டு ஆராயாது பற்றப்படும் செம்பொருள் இதுவே என உணர்வினால் பற்றுவதனையே தெளிவென்ப.

## நொசிப்புணர்வினர்

நொசிப்பு என்பது மனத்தினை ஒன்றாக்கி நுண்ணிதாகக்காண்டல். மனம் அதன் முதல்நிலையாகிய எண்ணம், வழிநிலையாகிய நினைத்தல் ஐயுறல்கள் என இருவகைப்படும். எண்ணம் என்பதே சிந்தனை, சிந்தனையே முதல்நிலை. இஃது "அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையே யாக" என்னும் சேக்கிழார் அடிகள் திருமொழியான் உணர்க. மனத்தினை ஒன்றாக்குவது எண்ணமாகவே நிற்பது. எண்ணமாக நிற்பது என்பது நூலுணர்வான் ஆராய்ந்து துணிந்து நுண்ணுணர்வான் அதன்கண் அழுந்துவது.

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள அளப்பரும்
கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும் திருந்துசாத்
துவிகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடும்ஆ னந்த எல்லையில்
தனிப்பெரும் கூத்தின்
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா
மகிழ்ச்சியின் மலர்ந்தார்." —௧உ. தடுத். ௧௦௬.

நொசிப்புணர்வினராகிய சகலர்க்குக் கேட்டு எண்ணியன்றித் தெளியப் படாத குறைபாடு உண்டு. கேட்டல் என்பது நுண்ணுணர்வினர்பால் மெய்ந்நூல் கேட்டல். எண்ணல் என்பது மேற்கோள் ஏது என்பன வற்றால் ஆராய்தல். தெளிதல் என்பது எடுத்துக்காட்டால் ஏற்றுக் கோடல். இக்குறைபாட்டால் "மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல்" என மெய்கண்ட நாயனார் அருளியதூஉம் காண்க.

நொசிப்புணர்வினராகிய நம்மனோர்க்கு நுண்ணுணர்வினையுடைய மெய்க்குரவனால் நூல்வழிமுறையான் மெய்யுணர்வு கிட்டும் என்க. நுண்

ணுணர்வினர் தம்முள் ஒருமலத்தார்க்கு உள்நின்று உணர்தலேயன்றி உரைத்தலாகிய உபதேசம் இன்று. இருமலத்தார்க்கு உண்ணின்றுணர் த்தலோடு அமையாது தெய்வத் திருவுருக்கொண்டு நோக்குவித்தலும நுவல்வித்தலும் (உபதேசம்) செய்தருளுகின்றனன்.

நொசிப்புணர்வினர்க்கு உண்ணின்றுணர்த்தல், நோக்குவித்தல் நுவல் வித்தல்களோடு நூலுணர்த்தலும் செய்தருளுகின்றனன்.

**வலியுறுத்தல்**

மேலே வெண்பாவில் முன்உணர்த்தல், பின்உணர்த்தல், தானேவிளை யும் எனக் கூறியருளினர். முன்உணர்த்தல் நுண்உணர்வினராகிய இரு மலத்தார்க்கு. பின் உணர்த்தல் நொசிப்புணர்வினராகிய மும்மலத்தார்க்கு. தானே விளைதல் நுண்ணுணர்வினராகிய ஒருமலத்தார்க்கு.

இவ்வெண்பாவில் குறைகள் "முன்செறியும், பின்செறியும், பவத் தின் ஆம்" என்றருளினர். குறை - இன்றியமையாப் பொருள். பவம் - உண்மை. எனவே உணர்த்து முறைமைக்குக் காரணம் காட்டியவாறு காண்க. ஆயின் இதன்கண் 'அறிவிக்க அறிதற்கண்படும் வேறுபாடு மாத்திரையே' உணர்த்தி அருளினர் என்க. ஈண்டு உண்மை என்றது நிலைக்களம் இன்மையை. நிலைக்களம் இன்மை நிராதாரம். இதுவே இறைவன் தன் மாறாஇயற்கை நிலை. இயற்கைநிலை எனினும் சிறப்புநிலை எனினும் உண்மைநிலை எனினும் ஒன்றே. செயற்கைநிலை எனினும் பொதுநிலை எனினும் சார்புநிலை எனினும் ஒன்றே. இயற்கையைச் சொரூபம் எனவும் செயற்கையைத் தடத்தம் எனவும் கூறுப.

குறை இன்றியமையாப்பொருள் என்பதை வரும் பாட்டுக்களான் உணர்க.

"வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு." —திருக்குறள், ௬௧௨.

"....................................
௬. மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே." —புறம், ௧௮௮.

**இலக்கணம்**

வீடுபயக்கும் உணர்வை வீடென்றார். உணர்வு காரணம். அதன் காரியம் வீடுபயத்தல். இது மெய்யுணர்வால் வீடுண்டாம் என்பதனால் விளங்கும். எனவே காரணத்தைக் காரியமாக ஏற்றிக் கூறினர். இது போலவே சூழ் என்பது ஆய்தல். அது ஈண்டு நுண்ணுணர்வின்மேற்று. நுணணுணர்வு காரியம். அதன் வாயிலாகிய காரணம் அருமறை அல்லது செவியறிவுறூஉ. அருமறை என்பது உபதேசம் இங்கே நுண்ணுணர்வு அருமறையைக் குறிப்பதால் காரணம் காரியமாக ஏற்றிக் கூறப்பட்டது.

கொள்ளார் என்பது 'சோல்' - உபதேசமொழியைக் கொள்ளும் தன்மையில்லார் என்னும் காரணத்தைக் குறிக்கிறது. தன்மையின்மை வினையின்மை. எனவே காரணம் காரியமாக ஏற்றிக் கூறப்பட்டது. இதுபோல் கொள்பவர் கொள்ளும் தன்மையுள்ளவர் என்னும் காரணத் தைக் குறிக்கின்றது.

'குறையுடைய சொற்கொள்ளார்' என்பது சொற்கொள்ளார்க்கு என்று இருத்தல் வேண்டும். 'கு' நான்கன் உருபு. அது திரிபால் தொக்கது. இதற்கு எடுத்துக்காட்டு,

"ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி." —திருக்குறள், ௨௫.

இத் திருக்குறளின்கண் 'ஐந்தவித்தான் ஆற்ற'லுக்கு என்றிருத்தல் வேண்டும். இதன்கணும் நான்கன் உருபாகிய 'கு' தொக்குநின்றது.

'இல்லா......................உற்று.'

## நீர்நிழல்

நீருக்கு நிழல் உண்டு. நிலம், நீர், கண்ணாடி முதலியவற்றில் நம்முடைய நிழல் பிரிந்து வேறு தோன்றுவதுபோல நீர்நிழல் பிரிந்து வேறு தோன்றுதலின்று. ஆனால் நீருக்கு நிழல உண்டு; என்னை? நீரினகத்து மீன் முதலிய உயிரினங்கள் வாழ்கின்றன. அவை வாழவே ஆண்டு வெளியுண்டு. உண்டாகவே நிழலும் உண்டு அது கட்புலன் ஆவதின்று. கட்புல நுகர்ச்சிக்கு எட்டாமையால் அதனை அரு என்பர். கண்ணுக்குப் புலனாவது உருவம். நம்முடைய நிழல் உச்சியில் பிரிந்து தோன்றாமையும் ஓர்ந்துணர்க.

ஆண்டவனும் ஆவிகளுடன் பிரிப்பின்றி நீர்நிழல்போல் நிற்கின்றனன். அங்ஙனம் நிற்பவன் ஆண்டுகொண்டு அருளுதற் பொருட்டுப் பிரிந்து தோன்றியருளுவன். அங்ஙனம் அருளுவதற்கு ஆவியின இறவாத இன்ப அன்பே வாயிலாகும். பிரிந்து தோன்றினும் வேறாகான். ஒன்றாயே நிற்பன். இது,

நாம் ஓதிய திருக்குறள் நம் உணர்வோடு ஒன்றி ஒன்றாக இருக்கின்றது. எனினும் அத்திருக்குறள் பிறர்க்குப் பயன்பெற நம்மிலிருந்து பிரிந்து ஓசை வடிவில் பிறா செவியிலும் வரிவடிவில் பிறர் கண்ணிலும் புலனாகின்றது. பிறருக்குமட்டும் அன்று நம் செவிக்கும் நம் கண்ணுக்கும் அங்ஙனமே புலனாகின்றது. ஆயினும் அத்திருக்குறள் நம்மைவிட்டுப் பிரிந்ததின்று. அதுபோன்றதாகும.

"கற்றகுறள் கண்செவியின் காட்சிவரி ஓசையினால்
உற்றுவே றாதல்குரு ஒப்பு."

## வாயிலான் வெளிப்படுதல்

அன்பு அகத்துறைந்து அருவாய்ப் புலப்படாது எப்பொழுதும் நிற்கும் பொய்யிலா மெய்ப்பொருள். புறத்துப் புலப்படும்வாயில் உண்டாயின் உருவாய்க் கண்ணீராகப் புலப்படும். வாயில் காரணம். அதுபோல் 'இல்லா அருவாகி நின்றான்' என்ற இடத்து தானாகவந்து தோன்றியருளின் அல்லது வெளிப்படுதல் இல்லாது அருவாகி நின்றான் என்பது பொருள். கற்றன நினைப்பினும் நினையாவிடினும் நம்மைவிட்டு அகல்வன அல்ல. அவ் ஒற்றுமையே ஆண்டானுக்கும் ஆவிக்கும் உள்ளது. கற்றவற்றை நினைக்குங்கால் நினைப்பார் தம்பால் பிரிந்து தோன்றும். உரைக்குங்கால் கேட்பார் தம்பால் பிரிந்து தோன்றும். எழுதுங்கால் காண்பார் தம்பால் பிரிந்து தோன்றும். ஆயினும் ஒற்றுமைக்கு மாறின்று.

முழுமுதல்வனும் அன்புபோல் ஆவியுடன் என்றும் பிரியாது நிற்பன். சேயைக்காணின் தாயினிடம் அன்பு வெளிப்பட்டுத் தோன்று வதுபோல் ஆவிகட்குச் செவ்வி வாய்த்தவுடனே ஆண்டானும் ஆசானாய் வெளிப்பட்டு அருள்வன். தாயைவிட்டு அன்பு பிரிக்கமுடியாமைபோல் ஆவியைவிட்டு ஆண்டானையும் பிரிக்கமுடியாது.

**இலக்கணம்**

'இல்லா' என்பது முற்றெச்சக் குறிப்பு. இல்லை அருவாகி நின்றனை என்பதன்கண் உள்ளது இது. இல்லா முற்றாக இருப்பின் இல்லை என்று பொருள்தரும். தொடராய்க்கூறின் அவை இல்லாதன. இங்கு அப்பொருள்தராது 'புலப்படுதல் இல்லாது' என்று பொருள் தருகிறது. எனவே அது வினையெச்சம் ஆகும். காலங்காட்டாமையால் குறிப்பு ஆகும். எனவே முற்றெச்சக் குறிப்பெனக் கூறப்பட்டது.

---

## மூன்றும் அதிகரணம்

**இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை உணரா என்றது.**

எ - து. மே-ள். எ-னின். விடயஞானத்தை விளக்கும் ஐம் பொறிகளே தத்துவஞானத்தை விளக்குதற்கும் அமையும் தம் முதல் குருவுமாதல் வேண்டா எனச் சிவசங்கிராந்தவாதசைவர் மதம்பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன் றாங் கூற்றைத் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இவ்வாறுரையாக்கால், இனியென்பதனால் உணர்த்தப்படும் மேலை அதிகரணத்தோடு உளதாகிய இயைபு பெறப்படாமை அறிக. இ - ள். வெ - டை.

உணர்வு ஆகுபெயர்.

**அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம்போல் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.**

எ - து. ஏது எ-னின். அறிவை விளக்கும் கருவியான் மயக்கம் நிகழுமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) படிகத்தின் வைத்த பல்வேறு வகைப்பட்ட நிறங்கள் அப்படிக ஒளியைக் கீழ்ப்படுத்துத் தத்தம் இயல்பி னையே விளக்கி நிற்குமாறுபோல அவ்ஐம்பொறிகள்தாம் ஆன்ம சொரூபத்தைக் கீழ்ப்படுத்துத் தம்மால் காட்டப்பட்ட தத்தம் விடயமாத்திரையே அவ்வான்மாவுக்குக் காட்டி நிற்பன ஆகலான் இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை உணரா என மேற்கொண்டது (எ - று).

விடயங்களுள்ளும் அவ்வவ்விடய மாத்திரையே அவ்வவ் இந்திரியங் காட்ட வல்லுமென்பார் காட்டிற்றையென ஒன்றறி சொல்லாற் கூறினார்.

பன்நிறம் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.

எ - து. உ-ம். எ-னின். அங்ஙனங் காட்டிற்றையே காட்டி நிற்குமாயின், அவ்விந்திரியங்கள் உள்வழித் தம்முதல் குருவுமா யுணர்த்தினும் உணர்தல் செல்லாதுபோலு மென்பாரை நோக்கி உணர்தற் குபாயங்கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) பல் நிறம் காட்டும் படிகம்போல் இந்திரியம் தன் நிறமே காட்டும் தகை நினைந்து—(தன்னாற் சாரப்பட்ட). பன்னிறங்களினியல்பே தன்மாட்டுக் காட்டிநிற்கும் (பொது வியல்புடைய) படிகம்போலத் (தன்னால் சாரப்பட்ட) இந்திரியங் களின் இயல்பையே (சார்ந்ததன் வண்ணமாய்த்) தன்மாட்டு விளக்கிநிற்குந் தனது பொதுவியல்பை (முன்னர்ச்) சிந்தித் தறிந்துகொண்டு (பின்பு), பல் நிறத்துப் பொய்ப்புலனை வேறு உணர்ந்து—(அந்நிறங்கள் படிகத்துக்கு வேறென்று அறியுமாறு போலப்) பலவகை இயல்புடைய பொதுஇயல்பைச் செய்யும் பொறிகளைத் (தன்னின்) வேறெனத் தெளிந்து, பொய்பொய்யா மெய்கண்டான்—(அவற்றானை) அப்பொது இயல்பு பொய்யாய் ஒழியுமாறு (தனது) சிறப்பியல்பை உணர்ந்தானாயின் வேறு மெய்ப்பொருட்குத் தைவம் ஆம்—(அவ் அசத்தாகிய பொறி களுக்கு) வேறாகிய (சிவசத்தினது இயல்பு தன்மாட்டு விளங்கச் செய்யும் ஆகலின்) அச்சிவசத்துக்கு அடிமையாம் (எ - று).

ஈண்டுப் பொய் மெய் எனப்பட்டன அப்பொருளவாதல் மேலே காட்டினாம்.

தைவமென்பது தேவனது உடைமை யென்னும் பொருட் டாய வடமொழிப் பகுபதம்.

இதனானே கருவிகளுள்வழிக் காட்டிற்றைக் காட்டிநிற்ற லின் அறிதல் செல்லாது அவை நீங்கியவழிக் கேவலமாய் முடியு மாதலின் தன் உண்மை அறியுமாறு யாங்ஙனமென்னுங் கடாவை ஆசங்கித்து அவையுள்வழியே தன் உண்மையறிதற்கு உபாயங்கூறி இதுபற்றி அவை காட்டிற்றைக் காட்டி நிற்றற்கு இழுக்கில்லை என வலியுறுத்த வாறுமென்க.

மெய்ப்பொருட்குத் தைவமாம் என்றதனால் வருகின்ற அதிகரணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

## விளக்கம்

### பொறிபுலன் உணர்த்தா

இதுகாறும் ஆவிக்கலனாய் நின்று புலன்களை யுணர்த்தி நின்றன ஐம்பொறிகளன்றே! அவையே இறைகலனாய் நின்று மெய்யுணர்வினை யுணர்த்தும். இதற்கு முழுமுதல்வன் ஆசானாய் வருதல் வேண்டா எனச் சிலர் கூறுநிற்பர். ஆவிக்கலன் - பசுகரணம். இறைகலன் - சிவகரணம்.

ஐம்பொறிகள் உலகப் புலன்களைத் தத்தம் அளவில் காட்டி நிற்கும். ஆண்டானை அறிய ஒட்டாது ஈர்த்துநிற்கும. ஆடலின்கண் அவாவினை உண்டாக்கிய மாணவன், கல்வியின்கண அவாவினை உண்டாக்குவான் என்பது எங்ஙனம் பொருந்தும? அந்தணன் ஆகிய ஆசான் தோன்றி ஆடல் மாணவரைவிட்டகற்றி நல்லறிவுகொளுததிக் கல்வியிற் புகுத்தி நன்மாணவர் கூட்டம சார்ந்து இனபுறசெயதல் வேண்டும். இது போலவேதான் முதல்வனும் ஆசானாய் எழுந்தருளி ஆவிகளை ஐம்புலவழிச் செல்லவொட்டாது தடுத்து அவ்வைம்புலன்களை ஆவிவழிச் செல்லுமாறு அமைத்து ஆட்கொண்டருள்வன். இதுவே "ஒற்றியெல்லாம் சோன்று கொண்டாய" என்றருளிய திருமொழியாகும். ஆண்டானாலேயே ஐம்பொறியும் நன்மைத்துணையாகும.

மேவும் விளையாட்டை வேட்போர்கள் கல்வியினை
மேவுவரோ தாமாக மேலாசான்—மேவுவிப்பின்
மாற்றூர் வழிச்செல்வர் மானுமிவர் தன்மைபொறி
தோறறரனால் நன்மைத் துணை.

### ஆவியும்உணரா

ஆவி ஐம்புலவழி உலகினை அறியுமன்றித் தன்னையேனும் தலைவனை யேனும அறியாது. பளிங்கில் வைத்தநிறம் அப்பளிஙகின் வெண்மையினை மறைத்துத தன் நிறத்தையே அப்பளிஙகுநிறம்போல் காட்டுமல்லவா? பளிஙகுநிறம் வேற்றுநிறம் கலவாத இடத்தன்றே புலனாகும். இதுபோல் ஆவியும ஆண்டான் ஆசானாய்க் கலககும் கலப்பொன்றானே தன்னையும் தலைவனையும உணரும.

'பன்னிறங்........................வேறு.'

### பொறியுள்வழியும் நெறிச்செல்லும் பொற்பு

ஆசானாய்வந்து ஆட்கொண்ட வழியும் ஐம்பொறிகள் உள்ளனவாக ஆவி நனனெறிச் செலவது எஙஙனம் எனின்? கல்லா மாணவரும் ஒல்லா விளையாட்டும் ஒருங்கிருப்பினும் கற்கும் மாணவன் அவற்றின் வழிப் போகான். கல்வியினவழிச செல்லுவன். இவை ஆசான்பால் வைத்த 'அசசமும் அன்பும்' அவன்பால் நிசசலும் உளவாகலின் அவை அவனைச் "சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்" சிவனெறியே சேர்ப்பிக்கும்.

ஆண்டான்பாற் கொள்ளும் அச்சத்தால் தீநெறி சேராமையும், அன்பால் திருநெறி சேர்தலும் உண்டாம். பாடிகாவலர்க்கு அஞ்சும் கள்வர் முதலிய தீயோர் அவர்மாட்டு அன்பின்மையால் நன்னெறிசேராது தீநெறியே மீண்டும் சேர்வது காண்டுமன்றே? அச்சமின்றேல் தீநெறியே அன்றி நன்னெறியினைத் தினைத்துணையும் ஓரார்.

இம்முறையே ஆண்டான்பால் ஆவிகட்கு அச்சமும் அன்பும் ஒருங்கு வேண்டும் என்க. இவ்வுண்மை தெளியின் மெய்யுணர் ஆவிக்கும் ஆண்டான்பால் அன்பும், ஆணைத்தின்பால் அச்சமும் உடங்கு வேண்டும். ஒருகாலத்து நல்லதன்பால் கொண்ட அன்பு எக்காலத்தும் நிலைத்திருக்கின்றது என்பதனை அந் நல்லதன்வழி நாளும் செல்லுவதால் காண்கின்றோம். அதுபோலவே தீயதன்பால்கொண்ட அச்சமும் என்றும் அதன் வழிச்செல்லாமையால் நின்று நிலவுகின்றதென்னும் மெய்ம்மையை உணரத்தக் காண்கின்றோம். ஆகவே அச்சமும் அன்பும் ஒன்றின்வழிச் செல்வதால் மற்றொன்றுண்மையும் தோற்றுவிக்குமேனும் அன்பில்வழி அச்சம் பயன்தாராதென்பதை மேலே காட்டினும். அச்சம் உள்வழி அன்புண்டு என்பது உறுதியன்று. அன்புள்வழி அச்சம் உண்டென்பது உறுதி. பகலும் இரவும் ஒன்றுள்வழி மற்றொன்றின் உண்மையினைக் காட்டுமேனும் பகலாலேயே பயன்பெறுவது. பகலுள்வழி இரவினைக் காணமுடியாவிடினும் அஃது உள்ளத்துள்ளதாகலின் காண்பதேயாகும். இதுபோலவே பேரின்பம் துய்க்குங்கால் மலச்சார்பு இன்றேனும் அம் மலஅச்சம் உள்ளதாகலின் உண்டென்பதேயாம். இதனாலேயே "இத்தை விளைவித்தல் மலம்" என்றருளினர். நோயின் அச்சம் நோயகன்று நலமுற்றகாலத்தும் உண்டென்பதேயாம். என்னை? நோய் அணுகாமையான் என்க. நோய் அணுகாமை என்பது நோய்க்கு இடங்கொடாமை. அதுபோல் மலம் அணுகாமையும் மலத்துக்கு இடங்கொடாமையேயாம். மலத்துக்கு இடங்கொடாமை ஆவியின் செயலன்று. ஆண்டான் செயலேயாம். என்னை? ஆண்டான்பால் மலம் அடராமையான் என்க. அச்சமும் அன்பும் குறிக்கும் திருப்பாட்டு வருமாறு:

"அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழி நினைநின்றி யூரைநீ
இஞ்சி மாமதில் எய்திமை யோர்தொழக்
குஞ்சி வான்பிறை சூடிய கூத்தனே." —தி. ௨௩-௧.

புலம்புஆகா

ஆவி பொறிபுலன்களோடு கூடியவழி புணர்வுநிலையை எய்துகின்றது. அப்புணர்வு நிலையில் பொறிவழிச்சென்று பொய்ப்புலனை நுகர்ந்து பொதுவியல்புறுகின்றது. ஆண்டவன் ஆசானாய்வந்து உண்மை உணர்த்தி ஐந்தெழுத்தருமறை பகர்ந்து அடைக்கலம்நல்கி ஆட்கொண்டு அடியின் கீழ் அமர்த்தி முடிவிலா இன்பம் முற்றுவிக்குங்கால் ஐம்பொறிகளும் ஆவியின்வழிச் செல்கின்றன. (௧௭௬) இதுவே புரிவு. இதுவே ஆவியின் சிறப்புநிலை. இவ்வுண்மையை விளக்குவதே "பொய்பொய்யா மெய்கண்டான்" என்னும் அருள்மொழி.

ஆவி பொறிபுலன்களோடு கூடாதவழி புலம்புநிலை எய்தும். புலம்புநிலை கேவலநிலை. இந்நிலை உண்மையுணர்ந்த இடத்து வருவதில்லை. என்னை? இரவற்பொருளைத் தன்னது என்று கொண்டவிடத்துப் பற்றும் மயக்கமும் பயனிழப்பும் உண்டாகும். இரவல் எனக்கொண்டவிடத்து அவை உள

வாகா. அதற்கு மாறாக அன்பும் தெளிவும் பயன்உழப்பும் உண்டாகும். அதனால் என்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

௭௮. "...................யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும்அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே."
—பரிபாடல், ௫-பாயிரும்.

காற்குறட்டினை முடியெனை மயங்கித் தலைசுமந்தவன் உணர்த்த உணரும் உண்மைவழி உணரக் காற்கு அணிந்து பயன்பெறுவனன்றே! பயனிழப்பாம் புலம்பு எய்தான். இதுபோல் ஆசான் பொய்ச்சார்பும் மெய்ச்சார்பும் இவை என்று உணாத்தப் பொய்க்கு அடிமை ஆகாது, மெய்க்கு அடிமை ஆகிப் பொய் - நிலையில்லாத பொருள்களை நிலையுடைய மெய்ப்பொருளைச் சார்வதற்குத் துணையாக்கிக் கொள்வர். இது விட்டகல்வது என்னும் மெய்ம்மை.

மெய்ப்பொருளாகிய சிவத்தின் இயல்பு ஆவியின்மாட்டு அருளான் விளங்கிய இடத்து பொய்ப்பொருளாகிய பொறிச்சார்பு தந்த பொதுவியல்பு அதற்கு வேறாய் ஒழியும்.

"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்." —திருக்குறள், ௩௫௯.

**இழுக்கில்லை**

"இதனாற் போந்தது கருவிகள் செயற்படாது தன்னின் நீங்கிய வழியே புலம்பாகும்; அவ்வாறின்றி அவை தத்தம் தொழிற்பாட்டில் மடங்காது நிற்புழி அவற்றதியல்பைக் குருவாய் வந்துணர்த்த உணர்ந்து தான் அவற்றைவிட்டு நீங்கியவழித் தூய்மையாதல் கூடுமாகலான் அவை காட்டிற்றைக் காட்டி நிற்றல்பற்றி ஆண்டுத் தன்னியல்பு விளங்குதற்கு இழுக்கில்லை என வலியுறுத்தவாறாம்" (பேருரை).

**மேற்காட்டல்**

பொய் மெய் என்பதற்குப்பொருள் பொதுவியல்பும் தன் இயல்பும் என்பது ஆகும். இதை ௩௩௧ ஆம் பக்கம் காண்க.

---

## நான்காம் அதிகரணம்

**இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையுமென்றது.**

எ - து. மே - ள். எ-னின். பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா மெய்கண்டார்க்கு அதுவேயமையும் கருவிகள் நீங்கியவழிச் செய்யக்கடவதொரு முயற்சி கூடாமையின் ஆண்டு மெய்ப்பொருட்குத் தைவமாதல் பெறப்படாது எனப் பேதவாத சைவர் முதலியோர் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் நான்காங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ-ள். வெ-டை.

இந்திரியத்தின் வேறாயவழிக் கேவலத்தை அணைதலும் உண்மையின் அதனை நீக்குதற்பொருட்டு வேறாக என்றொழியாது வேறுவான் காணஎன்றார்; காண்டலே அதற்கு அமையும் என்றலின்.

ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது.

**ஊசல் கயிறற்றால் தாய் தரையேயாந் துணையான்.**

எ-து. ஏது எ-னின். அவ்வாறு காண்டலே சிபாதத்தை அணைதற்குச் சாலும் என்பது யாங்ஙனம் என்பாரை நோக்கி உவமையின் வைத்துக்காட்டி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்) ஒருவன் ஏறியிருந்து ஆடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறற்றதாயின் அவனுக்கு உற்றுழி உதவுந் தாய்போல ஆண்டுத் தாரகமாவது நிலனேஅன்றிப் பிறிதில்லை என்னும் ஒப்புமையான் இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சிபாதத்தை அணையும் என மேற்கொண்டது (எ - று).

வியாபகப்பொருட்குக் காட்சி விசேடமே நீக்கமாகலின் அறுதல் அதற்கு உவமையாயிற்று.

*சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலனுணர்வில் தீர்ந்து—சிறைவிட்டு
அலைகடலின் சென்றடங்கும் ஆறுபோல் மீளாது
உலைவிலரன் பாதத்தை உற்று.

எ - து. உ - ம். எ-னின். கருவிகள் நீங்கினவழி வேறு நில்லாது சிவத்தைத் தலைப்படுமாயின் அவ்வுயிர்க்குங் கருவிகள் நீங்கிக் கேவலத்தைத் தலைப்பட்ட உயிர்க்குப்போல மீட்சியுண்டு போலும் என்பாரை நோக்கி அஃது இன்றாமாறுகூறி மேலதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் - (ஒருவன் அணையை உயர்த்துக்கட்டித்) தடைசெய (ஆண்டுத் தடையுண்டு) தேங்கிநின்ற ஆற்றுநீர்போலக் (கருவிகளாகிய பாசஞானந் தனது வியாபகத்தைத் தடைசெய்ய அதன்கண் ஏகதேசமாய் அடங்கித் தடையுண்டு நின்ற) வுயிர், சிறைவிட்டு அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல்—அவ்வணை முறிந்து தடைதீர்ந்தவழி (இடையீடின்றிக்) கடலின்கண் (முடுகிச்)

* 'பன்னிறங்க' சித்தியார், அ. ௪-௩௭.

சென்று (அந்நீரேயாய்) அதனுள் அடங்கி மறித்து வாராத ஆற்றுநீர்போல, சிறைசெய் புலன் உணர்வில் தீர்ந்து—(கருவிக ளாகிய) பாசஞானத் தடையினின்று நீங்கியவழி, உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது—தனக்குக் கேடில்லாத சிவ பிரானது திருவடியைத் தலைக்கூடி (அத்திருவடி நிறைவேயாய் அதன்கண் அடங்கிப் பின்பு) மீளுதல் செய்யாது (எ - று).

சிறைசெய்யநின்ற செழும்புனலின் உள்ளம் என்றது தொகைஉவமம். இன் உவமஉருபு. தேக்கத்தின் மிகுதி உணர்த்துவார் செழும்புனல் என்றார்.

மலசத்திக்குக் கேடுஉண்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர்க்குக் கருவிகளின் மீட்சி கூடும்; சிவசத்திக்கு அஃதின் மையின் அதனைத் தலைப்பட்டவுயிர் அவ்வாறு மீளுதற்கோ ரியைபு இல்லை என்பார் உலைவில் அரன்பாதம் என விசேடித்தார்.

அடங்கும் என்னும் உவமவினை பொருளினும், மீளாது என்னும் பொருள்வினை உவமையினுஞ் சென்று இயைந்தன.

> *எவ்வுருவுந் தான்என்னில் எய்துவார் இல்லைதாள்
> இவ்வுருவின் வேறேல் இறையல்லன்—எவ்வுருவும்
> கண்போல் அவயவங்கள் காணுஅக் கண்இல்லார்
> கண்பேறே காணக் கழல்.

எ - து. உ - ம். எ-னின். மீளாதென்று விடுத்தல் வேண் டாம். எல்லாஞ் சிவமாகக் கண்டார்க்கு மீண்டால்என் மீளாக் கால்என் என்னுஞ் சிவாத்துவிதசைவரை நோக்கி அது விடை யாகற்கேலாமை கூறி மறித்தும் மீளாமையை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) எவ்வுருவும் தான் என்னின் தாள்எய்துவார் இல்லை—உயிருணர்வேயன்றிப் புலனுணர்வும் சிவமேயாமாயின் (விசேடம் இன்மையாற் புலன்வழி ஒழுகுஞ் சகலநிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக்கூட வேண்டாமையின் ஒரு வரும்) அதனை எய்துவார் இல்லையாய் (முடிந்து †"பாசத்தைப் பசுக்கள்விட்டுப் பதியினை அடைய முத்தி" என்னும் வேதாகமங் கள் போலியாய்) முடியும், இவ்வுருவின் வேறேல் இறைஅல்லன் —அதுபற்றி முதல்வன் புலனுணர்வோடு இயைபின்றி அதனின் வேறாய்நிற்பன் என்னின் (அப்புலனுணர்விற்கு அவனால் ஆகற் பாலது ஒன்றின்மையின்) அவன் ஆண்டைக்கு இறைவன் அல்ல

* 'எங்குந்தா' அ. ச-நஅ.

† சிவஞானசித்தி, பரபக்கம், பாஞ்சராத்திரிமதமறுதலை. உ௫.

னெனப்பட்டு மூதன்மைக்கு இழுக்காய் முடியும் (மற்றென்னையோ அதனியல்பு என்னின்), எவ்வுருவும்—உயிருணர்வு போலப் புலனுணர்வுங் கலப்பினால் சிவமேயாம் ஆயினும் இரண்டுந் தம்முள் ஒப்பனஅல்ல, அவயவங்கள் கண்போல் காணு—(உயிர் ஐம்பொறிகளினும் ஒப்ப நிற்பினும்) அவற்றுள் மெய், வாய், மூக்குச் செவி நான்கும் கண்ணிந்திரியம் ஒளியான் அவ்வான்மபோதத்தோடு விரவிச் சேய்மைக்கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்து அறியுமாறுபோல வியாபித்து அறியமாட்டாவாய்த் தம்மாட்டு வந்த விடயங்களை நின்றாங்கு நின்றியைந்து அறிதற் றன்மையவேயாம், அக்கழல் அக்கண் இல்லார் கண் பேறே காண்-அக்கண்ணினது வெற்றிப்பாட்டைக் கண்ணொளி இழந்தாரது கண்பேற்றின்கண் கண்டறிவாயாக (எ - று).

கண்ணும் அவயவங்களும் ஆகுபெயர். கண்பேறேஎன ஏழாவது தொகுத்து ஏகாரம் விரித்தார். கழல்அணிவார்க்கு உளதாகிய வெற்றிப்பாட்டைக் கழலென்று உபசரித்தார். கழல்—காலணி மணிவடம்.

ஈண்டு வெற்றியாவது ஏனை நான்கு இந்திரியங்களையும் நோக்கி மேம்படுதல்.

கண்போல் அவயவங்கள் காணு அக்கண்இல்லார் கண்பேறே காணக் கழல்என்பது முதல்வன் இரண்டினும்ஒப்ப விரவி நிற்பினும் உயிருணர்வுபோலப் புலனுணர்வு வியாபக விளக்கமாதலின்றி ஏகதேச விளக்கமாம். உயிருணர்விற்கு உளதாகிய அம்மேம்பாடு அவ்வியாபகவுணர்வை இழந்த பசுத்துவமுடையார்மாட்டு அறியப்படாதாயினும் அவரது பசுத்துவம் நீங்கிய சிவப்பேற்றின்கண் அறியப்படும் என்பது தோன்றநின்றமையின் இஃது ஒட்டு என்னும் அலங்காரம்.

சிவமாயவழியும் புலனுணர்வு ஏகதேச விளக்கமாவதன்றி உயிருணர்வுபோல வியாபக விளக்கமாதல் இல்லை எனவே, அதன்கண் மீளுதல் இழுக்கென்பது பெறப்பட்டது. இதற்குப் பிறரெல்லாம் இயைபின்றி யுரைத்தார்.

*ஐம்பொறியின் அல்லைஎனும் அந்த தரசிவனை
ஐம்பொறியை விட்டங்கு அணைசகலன்—ஐம்பொறியின்
நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்
நீங்கானை நீங்கும் நினைந்து.

* 'பாசிபடு' சித்தியார். அ. ௪-௩௧.

எ - து. உ - ம். எ - னின். சிறைவிட்டவழி அலைகடலிற் சென்று அடங்குதலே யன்றி *"ஆற்றால் அலைகடற்கே பாய்ந்த நீர் அவ்வாற்றால் மறித்"தலும் உண்மையின் அதுபோல அரன் பாதத்தை உற்றவுயிருக்கு ஒரோவழி மீட்சியும் உண்டென்பது பெறப்படுதலான் அவ்வழி மீளாமை செல்லாதென்பாரை நோக்கி அம்மீட்சிக்குக் காரணம் இது என்பதூஉம், அதனை நீக்குதற்கு உபாயமுங்கூறி வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஐம்பொறியின் அல்லை எனும் அந்த தர—ஐம்பொறிகள்போல ஏகதேசவிளக்கம் உடையாய் அல்லை என்று அறிவுறுக்கப்படுஞ் சித்தாந்த மகாவாக்கியத்தைப் பெற்றுடைய மாணவகனே, அங்கு ஐம்பொறியைவிட்டுச் சிவனை அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான்—(சிறைவிட்டு அலைகடலிற் சென்று அடங்கும் ஆறுபோல் என) மேற்கூறியவாறே ஐம்பொறிகளான் ஆய புலனுணர்வில்தீர்ந்து சிவன் திருவடியை உற்ற சகலன் அவ் ஐம்பொறிகளான் மீள அதனை நீங்குவான் அல்லன், நீர்ப் பாசிபோல் நீங்கு மல கன்மம் வரின் நீங்கானை நினைந்து நீங்கும்—(கல்லெறியும் வழிநீங்கிய) நீர்ப்பாசி (அது விடும் வழிப் பரக்குமாறு) போல அவ்வணைதலின்கண் நீங்கிய மலகன்ம மாயைகள் (வாதனைவயத்தான் நிகழும் அயர்ச்சிபற்றி) வந்து கூடுமாயின் (அதுபற்றிப் பொறிவழி மீளாமல் அவ்வழியுந் தன்னைவிட்டு) நீங்காத முதல்வனை முன்னர்க் கூறப்படும் உபாயங்களினின்று சிந்தித்து (அவற்றை) நீக்கிக்கொள்ளும் (எ - று).

வரினென்றதனால், வருதல் ஒருதலை அன்று வாசனையுள் வழியே என்பது பெற்றாம்.

நீங்கி என்பது பாடமாயின், நீங்கினவாகிய மலகன்ம மெனப் பெயராகவைத்து உரைக்க.

சித்தாந்தத்தை அந்தமென்றது தலைக்குறை. தரம் அதன் கண்ணதாய்ச்சிறந்த ஒருவார்த்தை.

அங்கு மேற்கூறியபடி.

ஐம்பொறியைவிட்டு அணைதற்குரியான் இவனென்பது உணர்த்துவார் சகலன் என்றார்.

நீங்கும் என்னும் மகரஞ் சந்தி நோக்கிக் கெட்டது. நீங் கெனவே பாடங்கொண்டு அணையென வேறு பிரித்து முன்னிலை ஏவலாக்கி அதற்கேற்ப நீங்காய் எனப் பாடந் திரித்து உரைப்பாருமுளர்.

---

* திருக்களிற்றுப் படியார். ௧௧.

மேற்கூறிய மீளாமையை வலியுறுத்துவார் ஐம்பொறியின் அல்லையெனும் அந்ததரசிவனை ஐம்பொறியை விட்டங்கு அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான் என்றும் ஒரோவழியுள தாம் ஆயின், அதற்குக் காரணம் இஃதென்பார் நீர்ப்பாசிபோல் நீங்கு மலகன்மம் வரின் என்றும், அது நீக்குதற்கு உபாயங் கூறுவார் நீங்கானை நினைந்து நீங்கும் என்றுங் கூறினார். மலகன்மம் எனவே, இனம் பற்றி மாயையுங் கொள்ளப்பட்டது.

*"மங்கலம் என்ப மனையாட்சி மற்றதன்—நன்கலம் நன்மக்கட் பேறு" என்றாற்போல நீங்கானை நீங்கு நினைந்தென்றதனால் வருகின்ற சூத்திரத்துக்குத் தோற்றுவாய் செய்ததும் ஆயிற்று.

இம்மூன்று தாரணங்களும் முறையே திருவடிஞானத்தைப் பெற்றவுயிர் புலனுணர்வின் மீடல் இல்லையெனவும் மீடல் இழுக்காம் எனவும் ஒரோவழிப் பயிற்சிவயத்தான் மீளவருமாயின் மீளாதவாறு செய்துகொள்ளற்பாற்று எனவுங் கூறித் தாய்தரையேயாம் என்னும் ஏகாரப்பொருளை வலியுறுத்தி ஒரு பொருண்மேல் வந்தவாறு காண்க.

## விளக்கம்

### வேறுவான் காண்டல்

வேறுவான் காண்பதென்பது ஆவி உடலகத்திலிருந்துகொண்டே அருளால் உண்மையுணர்ந்து இந்தவுடல் நானல்லன், இதன் சார்பும் நிலையன்று. வந்த பிறப்பும் இதற்கன்று. வாய்மைச் சிவன் தாள் சேர்வதற்கு என்று கொண்டு அன்பும் அறனும் அந்தண்மையும், அடியெய்தி இன்புறுதலும், நொடிப்பொழுதும மறவாமையும், மீளா அடிமைச் சார்பின் நிலைப்பும் உணர்தலே வேறுவான் காண்டல். அங்ஙனம் காணின் இவ்வுடலகத்திருந்தும் ஆண்டான் அடிக்கீழ் இருக்கும் அப்பேறு எய்திய நிலையே ஆகும்.

இவ்வுடலும் புக்கிலன் றென்றுணரின் நாட்டமிறை
செவ்வியதாட் காம்உடல்சேர்ந் தும்.

### அணைதல்

ஆவி தன்னை ஐம்பொறியின் வேறென்று எண்ணிய துணையானே ஆண்டான் திருவடியினை அடையும். இருப்புப்பொறி ஊர்தியில் இவர்ந்து செல்வோர் இறங்குமிடம் வந்ததென்று கண்ட துணையானே விரைந்திறங்கி உறைவிடம் சார்தலை ஒக்கும். ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை உணரா எனப்பட்ட ஆவிகள் அறிவாய்க் கூடும் நிறைவாய் உள்ளன. இதுவே அவற்றின் இயல்பு. இவ்வியல்பை அறிவில்லதாய் உடல் உலகில் ஒடுங்குவதாய்ச் செய்யும் பொறியுணர்வால் ஆகக்கடவது ஒன்றுமின்று. இதனை மெய்யுணர்வு ஆசானால் உணரவே பிறிது காரணம் வேண்டாது தனக்குத் தாங்குதலாயுள்ள முதல்வனது திருவடியினைத் தலைப்படும்.

---

* திருக்குறள். ௬0.

## தாய்தரை

"கருவிகள் ஆவிகளான் அறியப்படாது நீங்கியவழி அவ் ஆவிக்கு மலம் தாங்குதலாகும். அறியப்பட்டு நீங்கியவழிச் சிவம் தாங்குதலாகும். இதற்கெனப் பிறிதோர் புது முயற்சி ஆவிகள் எடுக்கவேண்டுவது இன்று. மலம் தாங்குதலாயுள்ளபோதும் சிவம் தாங்குதலாக இருப்பதுதான். உணராமை ஒன்றே தடை. இஃது ஆடும் ஊசல் நமக்குத் தாங்குதலாயுள்ளபோதும் தரை தாங்குவதேயாம். ஆனால் அதை நாம் உணர்வதில்லை. ஊசலே தாங்குவது என்று தவறாக எண்ணுகின்றோம். ஊசல் கயிறு அற்றால் தாங்குவது தாய்போன்ற தரையேயாம். அதைத் தாங்கச் செய்வதற்குப் புதுமுயற்சி எதும் செய்ய வேண்டுவதின்று. ஆவிகள் தம்மையும் தலைவனும் முழுமுதலையும் தடையாம் தளையினையும் அவ்வவற்றின் பொது இயல்பு சிறப்பியல்புகளோடு உணர்தற்காம் அம்முயற்சியே அடி அடைதலையும் செய்யத் துணைபாம். இது முகநோக்கி நிற்கவே அகநோக்கும் ஆன்றோர் வேண்டுவ கொடுத்துப் புரப்பர். சேட்கவேண்டிய புதுமுயற்சி இரவலர்க்கு வேண்டுவதின்று என்னும் மெய்ம்மையினை ஒக்கும். இவ்வுண்மை நாயனார் நவிலருளால் உணர்க.

> " முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
> உற்றது உணர்வார்ப் பெறின்." —திருக்குறள், ௭௦௮.

'சிறைசெய்ய......................உற்று.'

## அடிசேர்ந்த ஆவிமீளா

கருவிகளின் நீங்கி மலம் தாங்குதலாய் புலம்பு எய்திய உயிர் மீளவும் கருவிகளைக் கூடிப் புணர்வு எய்தும். அதுபோலக் கருவிகளின் நீங்கிச் சிவம் தாங்குதலாய்ப் புரிவு எய்தும். அதுவும் மீண்டும் கருவிகளைக் கூடுமோ எனின்? கூடா. அது யாற்றுநீர் அணையால் தடையுண்டு நின்று அணை முறிந்தவழிக் கடலொடு கலந்து பின் மீளாது. அதுபோல ஆவியும் கருவிகளான் ஆகிய சுட்டுணர்வால் தடையுண்டு நின்று நிறையறிவு விளங்காது குறையுணர்வாகி நிற்கும். மெய்யுணர்வு ஆசானால் அத்தடை நீங்கியவழி ஆண்டான் அடிசார்ந்து மீளாது என்றும் ஒருபடித்தாய் நிற்கும்.

மல ஆற்றலுக்குக் கேடு உண்டு ஆதலின் மீண்டும் கருவிகளைக் கூடும். சிவ ஆற்றலுக்குக் கேடு இன்மையால் மீண்டும் கருவிகளைக் கூடுவதில்லை. இவ்வுண்மை 'உலைவிலரன் பாதம்' என்னும் அடையால் பெறப்படும். வாடகை வீட்டில் குடியிருப்பார் காலமும் பொருளும் கழியின் வேறுவீடு மாறுதல் உண்டு. உரிய வீட்டிற் குடியிருப்பார்க்குக் காலமும் பொருளும் வரையறை இன்மையின் மாறுதல் இல்லை. ஊர்தியில் செல்வார் எல்லை கழியின் மாறுதல் வேண்டும். உறையுளில் தங்குவார்க்கு எல்லையின்மையின் மாறுதல் வேண்டா. வாழையிலைக் கலத்துண்பார் நாளும் புதியிலை கோடல் வேண்டும். பொற்கலத்துண்பார்க்கு அக்கலமே நாளும் பயன் பெறும். மல ஆற்றலுக்குக் கேடு என்பதை ஓர் ஒப்பால் காட்டுதும். ஓர் திங்கள் முற்றுக ஒரு தாளின்கண்ணே பார்க்கும் வாய்ப்புள்ள நாளட்டை (Calendar) ஒன்று, ஒவ்வொரு நாளும் தனித்தனியே கிழித்துப் பார்க்கும் நாளட்டை ஒன்று ஆக இரண்டு. இவ்விரண்டில் ஒவ்வொரு நாளும் கிழித்துப் பார்க்கும் நாளட்டையின் தாட்கேடே மல ஆற்றலின் கேடு. நாளட்டையைத் தாங்கும் படம் முதலிய பொறித்த தாளே மலம்.

நாள்கள் முப்பதையும் குறிக்கும் தாள்களே மல ஆற்றல். நாளுக்கு ஒன்றாய்க் கழிவதே ஆற்றலுக்குள்ள கேடு.

மணமக்கள் மணத்தின்முன் ஈன்றார் இல்லே எல்லையில் காலம் உறையும் செல்வமனை என்று உன்னி உரைத்துழைத்து உறைவர். பருவம் வாய்ந்ததும் காதலர் இல்லே என்றும் மாறா நன்றாம் உறையுள் என்று நாடுவர். நாடிச்சென்று நலமுடன் வாழ்வர். பெண் அன்றே காதலன் இல்புக்கு வாழ்பவள். ஆண்களும் அவ்வாறே எனின்? அஃதே முறையாம். என்னை? சிலப்பதிகாரத்துக் கோவலனும், திருத்தொண்டர் புராணத்துக் காரைக்காலம்மையார் கணவனும் தனிப்பெரும் மாளிகையில் குடிபுக்கமையால் விளங்கும் என்க.

மணவாளன் இல்புக்காள் மற்றில்லொன் றெண்ணாள்
குணமாம் இறையடிக்கூட் டம்.

## இலக்கணம்

உவமம் - ஆறு. பொருள்-உள்ளம். உவமவினை அடங்கும். பொருள் வினை மீளாது. இவற்றைக்கொண்டு கூட்டுங்கால் உவமாகிய யாறு அலை கடலிற் சென்றடங்கி மீளாது. பொருளாகிய உள்ளம் அரன்பாதத்தை யுற்று அடங்கி மீளாது என்றாகும்.

'எவ்வுரும் ................ .....கழல்.'

## சிவகரணம்

உயிர்க்கலன் இறைகலனுதல் என்பது, அக்கலன்கள் திருவடி இன்பம் துய்த்தற்கு வாயிலாதல் பற்றி. கல்லூரியில் புழங்கும் பொருள்களைக் கல்லூரிப் பொருள் என்றும, மணமனையிற் புழங்கும் பொருள்களை மணமனைப் பொருள் என்றும், அடை புணர்த்து வழங்குவோம். ஆனால், திருக்கோவிற் பொருளைத் திரு என்னும் அடை புணர்த்து ஓதுவோம். அப்பொருள் திரு என்னும் அடை பெற்றது திருக்கோவிற் சார்பினலே யாம். பொருள் ஒன்றேயாயினும் சார்பினல் இருளும் மருளும் தெருளும் அருளும் எய்தித் தணிவும் உயாவும் தாங்குகின்றது. இது, "திருமெழுக்கும் தோண்டியும்" என்னும் சிறப்புப் பெயர் எய்தியதனையும், திருநீறு எனப் பெயர் வழங்குவதையும் ஒக்கும். இவை போன்றனவே 'மருவு பசுகரணம் சிவகரணமாக' என்றன. இவற்றை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

" மாயைமா....................நிற்கும்."  —பக்கம், உஅக.

" இந்நிலைதான் இல்லையேல் எல்லாம் ஈசன்
இடத்தினினும் ஈசன்எல்லா இடத்தினினும் நின்ற
அந்நிலையை அறிந்தந்தக் கரணங்கள் அடக்கி
அறிவதொரு குறிகுருவி னருளினல் அறிந்து
மன்னுசிவன் தனையடைந்து நின்றவன்ற னலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதனில் துரியா தீதம்
தோன்றமுயல் சிவானுபவம் சுவானுபூ திகமாம்."
—சித்தியார். அ. உ—கூச.

## சிறப்பு

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்களின் இடமாக ஆவியின் அறிவு ஒப்பப் பரந்து நிற்பினும் கண்ணுக்குத் தனிச் சிறப்புத் தன்மை ஒன்றுள்ளது. புலன் - இந்திரியம். பரந்து நிற்றல் - வியாபித்து நிற்றல். மெய், வாய், மூக்கு, செவி என்னும் நான்கு புலனும் தம்கண் வந்துற்ற புலன்களையே பற்றிக்கொள்ளும் தன்மைய. அதனால் இப் புலன்கள் நான்கும் செப்பில் நின்று வந்நிலையும் பொருள்களை மூந்துறப் பற்றும் தன்மைய என்ப. ஆனால் கட்புலன் மட்டும் சென்று இயைந்து பற்றும் சீர்மைய என்ப.

மெய்யால் உணர்வது ஊற்றுணர்ச்சி. வாயால் உணர்வது சுவையுணர்ச்சி. மூக்கால் உணர்வது நாற்ற உணர்ச்சி. செவியால் உணர்வது ஓசை உணர்ச்சி. இந் நான்கின் புலன்களும் உடம்பகத்து அமைந்த பரப்பினை உடையன. கண் ஒளியால் புறப்பொருள்களின் மாட்டுச் சென்று பரம்பும் பரப்பினையுடையது. மெய், வாய், மூக்கு, செவி என்னும் நாற்புலனும் முறையே விளக்கு, திரி, நெய், தீ என்னும் நான்கினையும் ஒருபுடை யொப்பாகக் கொள்ளலாம். ஆனால் கண் விளக்கின் ஒளி போன்றது. ஒளி புறப்பொருள் மாட்டுப் பரந்து அமைந்திருத்தலை கண் கூடாகக் காண்கின்றோம். எனவே ஒளிக்குச் சென்று பற்றும் தன்மை உண்டென்பது தெளியப்படும். அதனால் கண் சிறப்புத்தன்மை வாய்ந்ததென்பது தெளிவு.

## ஆண்டான்

இவை போன்று ஆண்டான் ஆவியினிடத்தும் அருமாயையினிடத்தும் ஒப்ப நிற்பினும், ஆவியினிடத்து நிற்பது ஆவியின் அறிவு கண்ணிடத்து நிற்பதை ஒக்கும். மாயையினிடத்து நிற்பது ஆவியின் அறிவு ஏனைய நான்கிடத்தும் நிற்பதை ஒக்கும். மேலும் ஆவின்பால் மட்கலம் முதலிய ஏனைக்கலன்களில் புறத்துப் புலனாகாமையும் பளிக்குக் கலத்துப் புலனாதலையும் ஒக்கும். ஆழ்கடல் நீர் எங்கணும் பரவலாயிருப்பினும் நாழி மரக்கால் கலம் பறை முதலிய கொள்கலன்கள் கொள்ளும் முறையில் வேறுபாடு உடையன அன்றே? அவை போன்றே ஐம்புலன்களுள்ளும் ஏனைய நான்கு புலன்களும் நின்று பற்றலும் கட்புலன் சென்று பற்றலும் உடையன. இவ்வுண்மை- கண்ணொளி மழுங்கினார்க்கு அண்மையிலுள்ள பொருள்களை மட்டும் காணும் தன்மை எய்துகின்றது. அது கண் மழுக்கம் தீர்ந்த இடத்துச் சேய்மையிலுள்ள பொருள்களைச் சிறப்புறக் காண்டலான் உணர்க. இதனையே கண் பேறு அல்லது வெற்றிப்பாடு என்பர். இதனால் ஆவியின் அறிவும், கருவிகளும் ஆண்டானால் தூண்டப்பட்டுத் தொழிற் படினும் கருவிகள் சிறுபான்மையாகவே உணரும். ஆவியின் அறிவு பரந்துபட்டறியும் பான்மையது.

## இறைமை

ஆண்டான் திருவருள் உதவி ஆவிக்கும் கலனுக்கும் ஒப்பவேண்டுவது. கலனுக்கு வேண்டா என்னின் அக் கலன் ஆட்சி அவன்பால் இல்லையாய் இறைமைக்கு இழுக்காம். இஃது ஆசான் மாணவ மாணவியரை யன்றிப் பணியாளரையும் ஆளுவன். ஆயினும் மாணவ மாணவியரே பட்டம் பெற்றுக் கட்டுரைக்கும் சிறப்பினராவர். பணியாளர் அன்னார் அல்லர்.

கல்லூரியின்கண் மாணவரும் ஏவற் பணியாளரும் ஒருங்கிருப்பர். எனினும் மாணவர் சிறப்பு பணியாளர்க்கு இன்று. கல்லூரி இடமும் ஆசான் ஆட்சியும் ஒருங்கு அமையினும் மாணவர் கண் போன்ற சிறப்பினை உடையராவர். ஏவலாளர் ஏனைப் புலன்களாகிய மெய்வாய் மூக்குச் செவி அனையராவர்.

ஆசான் பணியாளரை ஆளுவதுபோன்றே ஆண்டான் ஆவிக்கலன்களை ஆளுவதும் ஆகும். இவ் உண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"எங்குந்தான் என்னின்நாம் எய்த வேண்டா
எங்கும்இலன் என்னின்வேறு இறையும் அல்லன்
அங்கம்சேர் உயிர்போல்வன் என்னின் அங்கத்து
அவயவங்கள் கண்போலக் காணு ஆன்மா
இங்குநாம் இயம்புந்தத் துவங்களின்வைத் தறிவது
இறைஞானம் தந்துதாள ஈதல்சுடர் இழந்த
துங்கவிழிச் சோதியுமுட் சோதியும்பெற் றுற்போற்
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே."

—சித்தியார். ௮. ௪ - ௩௮.

**மீளா**

"உலைவில் அரன் பாதத்தை உற்ற ஆவிகள் மீளா" என்பது ஒரு தலை அன்று. அலைகடலில் சேர்ந்த ஆற்றுநீர் கடல்நீருடன் கலந்து ஒன்றாய்த் தன் தன்மை யின்றி அக்கடல்நீரத்தன்மை எய்தும். ஒரோவழி மீண்டும் அவ் ஆற்றின் வழி எதிர்த்து வரினும கடல்நீர்த்தன்மையாகவே இருக்கும். அந்நீர் ஆற்றின்கண் காணப்படுவதால் நாம் அதனை ஆற்று நீர் என்போம். ஆனால் அந்நீரைச் சுவைத்துப் பார்ப்பின் கடல்நீர் என்னும் உணமை புலனாகும். இது போலவே ஆண்டான் திருவடியை அடைந்த ஆவிகள் ஆண்டானை உள்ளுவதும், அவன் அருட் புகழ்களை உரைப்பதும், அவன் திருவுருவினுக்கு ஒப்பனை செய்து தொழுவதுமே கடனாகக் கொண்டு ஒழுகும் இயல்பின. அவ்வியல்பு கடந்து உலகினை நோக்கலும், உள்ளலும், உரைத்தலும, உறுதுணையாச் செயல் பல புரிதலும் காண் போமாயின், அவை இறைவன் திருவருளால் உலகோர் உய்ய நிகழ்த்து வித்த ஒணமைத் தொழிலாம் என்க. இவ்வுண்மையினைச் சண்டேசுர நாயனா திருவரலாறு உள்ளங்கை நெல்லியெனத் தெள்ளத தெளியக் காட்டும் என்க. மேலும் நம்பியாரூரர் திருத்தோற்றமும் இவ் உண்மையினைப் புலப்படுத்தும். இத்தகைய மெய்யடியார் திருமேனிக்கண் காணப் படும் பொறிபுலன்கள் இறைகலன்களாம் என்க. (௩ அகு) இவர்கள் செய்யும் செயல்கள் அனைத்தும் செயற்கரிய பெரும் செயல்கள் ஆதலின் இறை செயலே. ஆயின் ஆண்டான் அடியிணையைச் சோந்த ஆவிகள் மீளா என்பது நம்போல் பிறப்பு இறப்புககு உட்படும் சிறப்பில் செயல்களைப் புரியா என்பதே. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுககளான் உணர்க:

"ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றி அவ் ஆற்றான் மறிததாற்போல்—தோற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியும் நம்தம்
மலங்கள் அற மாற்றுவிக்கும் வந்து."

—திருக்களிற்றுப்படியார், ௧௧.

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனைஅன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நம்தம்
கரணம்போல் அல்லாமை காண்."

—திருக்களிற்றுப்படியார், ௧௨.

பாலை நெய்தல்-மாயையின் தூய்மையைக் குறிக்கும். பாம் பொழிதல்-வினைத்தூய்மையைக் குறிக்கும். மரணம் தவிர்த்தல் - ஆணவத்தூய்மையைக் குறிக்கும். இவை முறையே ஆளுடைய பிள்ளையார், அரசர், நம்பியார் அருட்செயல்களைக் குறிப்பன.

" மாதவஞ் செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வாரவர் மேன்மனம் போக்கிடக்
காதல் மாதரும் காட்சியிற் கண்ணினர்."

—௧௨. திருமலை - ௨௫.

நம்பியாரூரர் இருவரை மணந்தமை நெறியலா நெறியெனவும் பொறுக்கலாகா ஒறுப்புண்டெனவும் புலிக்குணர்த்தப் போந்தமையாம்.

' ஐம்பொறியின்.................நினைந்து.'

## நீங்காளை நினைந்து நீங்கும்

ஆண்டான அருட்குருவாய்த் தோன்றியருளி அருமறை பகர்ந்து ஆட்கொண்ட பின்னர் ஆருயிர்கள் ஐம்புலன் வழிமீளா. பயிற்சி வயத்தான மீளநேரினும் ஆண்டான் 'உடங்கியைந்து நின்று பிரிப்பின்றி' உடனாய் என்றும் நின்று இயக்கும் உண்மை உணர்ச்சி கைகூடுவதால் அவன் அடியிணையை நினைந்து ஐம்புலன் வழிப்போகாது நீங்கும்.

இதற்கு ஒப்பு பள்ளி மாணவர் ஆசானால் ஆய்ந்தெடுக்கப்பட்டுப் பெயர்பதிவுப் பெற்று வகுப்பில் சேர்க்கப் பெற்றுப் பயிற்றிவரப்படுவர். அங்ஙனம் வருங்கால் ஆசானும் உடன் இருப்பன். இருப்பினும் பண்டைப் பயிற்சிவயத்தான் கல்லாச் சாரும், ஒல்லா விளையாட்டும் புல்லுவரேனும் ஆசான்பால் வைத்த அச்சமும் அன்பும் அவனுடனிருக்கும் நினைவும் நெருங்கு உளவாதலின் அவனையே நினைந்து அவ்விளையாட்டினின்றும் நீங்குவரன்றே? இதுவே ஒப்பென்க.

இவ் உண்மையினைத் திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டான் உணர்க:

"உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு."

—திருக்குறள், ௧௧௮௪

மனமொழிகட்கு மாறாக மெய்யின்கண் (செயல்) பசப்புவருதல் வியப்பு. உடம்பின்கண் காணப்படும் செயல் வேறுபாடு வருமாறு:

"... ... ... ..
பசியட நிற்றல் பசலை பாய்தல்
உண்டியிற் குறைதல் உடம்புநனி சுருங்கல்
கண்துயில் மறுத்தல் ... ....'

—தொல். பொருள் - ௨௭0.

**அகன்ற மலம் அணுதல் அயர்ச்சியான்**

இடையறாது இறைவன் திருஐந்தெழுத்தினை எண்ணல் வேண்டும். அங்ஙனம் எண்ணுதல் நீங்குமலகன்மம் வராது வழியடைக்கும் கல்லாகும். எண்ணாது மறத்தல் அயர்ச்சியாகும். அவ் அயர்ச்சியான் நண்ணுவன மலகன்மம். அவை நண்ணாமல் தடுப்பது அஞ்செழுத்தெண்ணும் அருஞ் செயல். இவ் உண்மையினை வரும் திருப்பாட்டான் உணர்க:

“ஓராதே அஞ்செழுத்தும் உன்னாதே பச்சிலையும்
நேராதே நீரும் நிரப்பாதே—யாராயோ
எண்ணுவார் உள்ளத்து இடைமருதர் பொற்பாதம்
நண்ணுவாம் என்னுமது நாம்.” —கக. பட்டினத் - க௪.

அயர்ச்சியினை மறப்பெனவும் பொச்சாப்பு எனவும் கூறுவர். பொச்சாப்பின் கொடுமையால் புகழும் பொருளும் பொருட்பயனும் பொய்யில் இன்பும் இழப்பர். பொய்யில் இன்பமே நன்மை எனப்படும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

“அச்சம் உடையார்க்கு அரண்இல்லை ஆங்கில்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு.” —திருக்குறள், ௫௩௪.

உலகுக்கு உணர்த்தியருளத் தோன்றிய நம்பியாரூரர் அயர்ச்சியான் பயிற்சிபற்றிக் கூடும் மலமாயைகன்மங்கள் ஒரோவழிக் கூடினும் உடையானை மறவாமை யாகிய உரனுடை உள்ளத்தால் நீங்கானை நினைந்து நீங்கினர். அது “பிழைப்பனாகிலும் திருவடிப் பிழையேன்” என்னும் உறுதி மொழியான் உணர்க. இதுவே நீங்கானை நினைந்து நீங்கும் முறைமை என்க. அத் திருப்பாட்டு வருமாறு:

“அழுக்கு மெய்கொடுன் திருஅடி அடைந்தேன்
அதுவும் நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்ப னாகிலும் திருஅடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெயர் அல்லால்
மற்று நான்அறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கொருமருந்து உரையாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே.” —எ. ௯௪ - க.

பிழுக்கை வாரியும் பால்கொள்வர் என்பது: ஆன்பால் கறக்கும் முறை வேறு, ஆட்டுப்பால் கறக்கும் முறை வேறு. ஆன்பால் மாட்டின் பக்க வயமாய் இருந்து கறப்பர். ஆட்டுப்பால் ஆட்டின் பின்புறமாயிருந்து பின்னங்கால் இரண்டுக்கும் ஊடாக மடுவின் காம்பை வெளி இழுத்துக் கறப்பர். அங்ஙனம் கறக்குங்கால் ஆட்டுப் பிழுக்கை பாலில் விழுவது தடுக்க ஒண்ணாதது. அதனை வாரிப் புறத்திட்டுப் பால் கொள்ளுதல் வேண்டும். இவ்வுண்மை குறிப்பதாகும்.

**நீர்ப்பாசி**

நிலைத்த நீரின்கண் பாசி கல்லெறியும் வழி நீங்கி அல்லுழிப்பரக்கும் தன்மையது. நீரின்கண் பாசி அந்நீரை மூடி நீரும் பிறரும் பயனுற ஒண்ணாதபடி தடைசெய்கின்றது. இதுபோல் உயிரை மூடிய மலமாயை கன்மங்கள் அவ்வுயிரின்கண் திருவருள் விளக்கம் தோன்ற ஒட்டாது

மூடுகின்றன. நீர்ப்பாசி நீங்கக் கல் எறிவதுபோல் மலமாயை கன்மங்கள் நீங்க நலமார் திரு ஐந்தெழுத்தை நவிலுதல்வேண்டும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க.

"பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்
படும்பொழுது நீங்கியது விடும்பொழுதில் பரக்கும்
ஆசுபடு மலமாயை அருங்கன்மம் அனைத்தும்
அரன்அடியை உணரும்போது அகலும்பின் அணுகும்
நேசமொடுந் திருஅடிக்கீழ் நீங்காதே தாங்கும்
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே ஆகி
ஆசையொடும் அங்கும் இங்குமு ஆகிஅல மருவோர்
அரும்பாசம் அறுக்கும்வகை அருளின்வழி உரைப்பாம்."
—சித்தியார், அ. ௧ - ௩௧.

இக்குறிப்பே தோன்றத் திருவள்ளுவ நாயனுர்,

"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு." —திருக்குறள், ௧௧௮௬.

என்று அருள்வாராயினர்.

அஞ்செழுத்தை நெஞ்சமுழுத்துவதே மலமாயை கன்மங்கள் அகலும் வழி. அஞ்செழுத்தின் பெருமை தொன்மைத் தமிழகப் பண்பென்பது ஒன்பதாம் நூற்பாவின்கண் காண்க. பசலை ஒப்பால் மலம் அகலுமே அன்றி அழியாது என்பது பெறப்படும். தொன்மைத் தமிழ்ப் புலவராம் பரணர் இவ்வொப்பினை எடுத்துக்காட்டியது வருமாறு:

ஊருண் கேணி உண்துறைத் தொக்க
பாசி அற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே. —குறுந், ௩௯௯.

## இலக்கணம்

'நீங்கி' என்று பாடம் இருப்பின் அதனைப் பெயராகக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் கொள்ளின் நீங்கினவாகிய மலகன்மம் எனப் பொருள்தரும். நீங்கி என்னும் சொல் மலகன்மங்களையே குறிப்பதால் இரு பெயர் ஒட்டாகும்.

ஒருமலம் உடையார்க்கும் இருமலம் உடையார்க்கும் மாயைத் தொடக்கு இல்லை. அதனுல், மும்மலம் உடையாரையே குறிக்கும் குறிப்புத் தோன்ற அணைசகலன் என்று கூறியருளினார்.

'அணைசகலன் ஐம்பொறியின் நீங்கான்' இத்தொடரை 'அணை' ஐம் பொறியைவிட்டுத் திருவடியைக்கூடு, 'நீங்கான்'—நீங்காய். திருவடியை நீங்காய்.

'நீங்கானை நீங்கு நினைந்து' இஃது ஒன்பதாம் நூற்பாவுக்குத் தோற்று வாயாகும்.

## பயிற்சி

செய்த செயல் தீதுஎன மேற்கோள் ஏது எடுத்துக்காட்டு முதலிய வற்றான் ஐயம் திரிபகற்றி மாசற உணர்ந்து மெய்நெறிச் சென்று நீக்கிய

இடத்தும் பண்டைப் பயிற்சியான் ஒரோவழி காணவோ கேட்கவோ கருதவோ நேரின் உள்ளம் செல்லும். அச் செல்வினையே பயிற்சி அல்லது வாதனை என்ப. இரும்பு தீயொடு பொருந்தி பழுக்கக் காய்ந்து செந்நிறமாக இருக்கும்போது சுடுகின்றது. அம்மட்டோ செந்நிறம் மாறிக் கருநிறம் தோன்றினும் தீப்பற்று நீங்குங்காறும் சுடும். அது போல் தீமை அகலினும், நன்மை ஓங்கிமுதிர்ந்து முற்றிக் கனிந்து இனிக்குங்காறும் பகை அறவே அகல்வது அரிது.

நமிநந்தி அடிகள் செந்நெறிச் சென்று சிறப்புற்ற ஞான்றும் 'சாதி குலம் பிறப்பென்னும் தடஞ்சுழி'ப்பகை விட்டபாடின்று. அது திருவருள் ஆணையால் விட்டகன்றது, சைவச்செந்நெறி ஒன்றேகுலம் என்பது வலியுற.

"தெய்வப் பெருமான் திருவாரூர்ப் பிறந்து வாழ்வார் எல்லாரும்
மைவைத் தனைய மணிகண்டர் வடிவே ஆகிப் பெருகொளியாம்
மொய்வைத் தமர்ந்த மேனியராம் பரிசுகண்டு முடிகுவித்த
கைவைத் தஞ்சி யவனிமிசை விழுந்து பணிந்து களிசிறந்தார்."
—௧௨. நமிநந்தி-௨௩.

பயிற்சியான வரும் பண்பினுக்கு ஒப்பு வருமாறு :

"காய்ந்த இரும்பு கனலை அகன்றாலும்
வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போல்
ஏய்ந்த கரணம் இறந்த துரியத்துத்
தோய்ந்த கருமத் துரிசக லாதே." —௧0. அ. ௨௩0௯.

## கருத்து

ஏற்றமாம் உணர்வை இறையே நல்கும்.

## முதுமொழி

தம்முதல்வன் சொன்மறையால் தாளணைதல் ஊசலற
இம்மென்னச் சோஎழிலே ஈண்டருளால்—அம்மறைசொல்
"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி." —திருக்குறள், ௩௫௬.

## ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினில் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணும்அஞ் செழுத்தே.

**எ - து. சூ - ம். எ - னின். ஆன்மசுத்திபண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

*எ - து. க - கரை. எ - னின். சூத்திரக்கருத்து உணர்த்துதல் நுதலிற்று.*

(இ-ள்.) *தம்முதல் குருவுமாய் உணர்த்தக் கேட்டு அதனைச் சிந்தனைசெய்துணருமாறு உணர்த்து முகத்தான் ஐம்புலவேடரின் வளர்ந்த வாலாமை நீக்கி உயிர் தன்னைத் தூய்மைப்படுத்துமாறு உணர்த்துதல் இவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து (எ - று).*

*சூத்திரஇயைபும் இதனானே இனிது விளங்கும்.*

*சிவப்பிரகாசத்துத் தான் பணியை நீத்தல் என்று ஓதப்படும் ஆன்மசுத்தியாவது "இறைபணிநிற்க" என வருகின்ற சூத்திரத்திற் பெறற்பாலது ஆகலானும், அழுக்குநீக்கமே அறுவைக்குச்சுத்தியாமாறுபோலப் பாசக்ஷயமே உயிர்க்குச் சுத்தியாவதன்றி வேறன்மையானும், பாசக்ஷயம் பண்ணுமுன்னர்ச் சுத்தியாதல் கூடாமையானும், வருகின்ற சூத்திரத்தின் கருத்தாய் நின்ற ஆன்மசுத்தி பண்ணுமாற்றைப் பதியை நாடியெனவுந்தண்ணிழலாம்பதியெனவுஞ் சிவதரிசனம் பண்ணுமாறே உணர்த்துதற்கு எழுந்த இச்சூத்திரத்தின் கருத்தாக வைத்துரைத்தது என்னையோஎன மலையற்க; சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்மசுத்தி என்னும் உடனிகழ்ச்சி உணர்த்துதற்கும் தம்முள் வேறுபாடு சிறுபான்மையுடையனவாய இவ்இருசூத்திரமும் ஒருபொருண்மேலன என்பது உணர்த்துதற்கும் இவ்வாறு உரைத்தாராகலின். இஃது அங்ஙனமாக, ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான்காணவே தமது முதல் சீபாதத்தை அணையுமென்றலின், அக்காட்சியே அதற்கு அமையுஞ் சுத்தி எற்றுக்கெனின், அஃதொக்கும்; நிருவிகற்பமாய்க் காண்டலும், இரட்டுறக்காண்டலும், தெளியக்காண்டலும் எனக் காட்சி மூவகைப்படும். இம்மூன்றும் அதிபரிபக்குவம் உடையார்க்குக் கேட்டமாத்திரையே ஒருங்குநிகழுமாயினும் ஏனையோர்க்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னுஞ் சோபான*

முறையின் அன்றி நிகழாமையின், அவரை நோக்கிச் சிவரூபத்தின் நிகழும் ஆன்மதரிசனத்தின் பின்னாகச் சிவதரிசனத்தின் நிகழும் ஆன்மசுத்தியும் ஒருதலையான் வேண்டப்படுமென்று உணர்ந்துகொள்க. *"நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தாங்கும் நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே ஆகி—ஆசையொடும் அங்கும்இங்கும் ஆகிஅல மருவோர் அரும்பாசம் அறுக்கும்வகை அருளின்வழி உரைப்பாம்." என வழிநூலாசிரியரும் இக்கருத்தேபற்றி ஓதினர்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: குறைஉணர்வாகிய பசுஅறிவானும் பாசஅறிவானும் உணரப்படாத முதல்வனை அவனது திருவடி ஞானத்தால் தன்னறிவின்கண்ணே ஆராய்ந்து அறிக. அத்திருவடி ஞானத்தான் நிலமுதல்நாதம்ஈறாகிய பாசக்கூட்டம் நின்றுழி நில்லாது பரந்து திரிதற்கண் அதிவேகமுடைய பேய்த்தேரின் இயல்பிற்றாய்க் கழிவது என்றறிந்து நீங்கவே, அப்பதிஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும்; அவ்வாறு பாசத்தை ஒருவி ஞானத்தைப்பெற்று ஞேயத்தைக் கண்ட காட்சி சலியாமைப்பொருட்டு அப்பொருள் பயக்குந் திருஅஞ்செழுத்து அவ்விதிப்படியறிந்து கணிக்கப்படும் (எ - று).

ஊனம் என்பது அப்பொருட்டாதல் †"ஊனமேற் கிரியை வித்தை" என்பதனானறிக.

"நன்று மன்னிது நாடாய் கூறி"‡ என்றாற்போல நாடி யென்பது இகரவீற்று முன்னிலையேவல்.

உராத்துனை ஏழாம்வேற்றுமைத்தொகை. உரா என்பது முதனிலைத் தொழிற்பெயர்; பறவாக்குளவி பாயாவேங்கை என்றாற்போல ஒருவரான் ஊரப்படாத வேகத்தையுடைய தேரெனச் செயப்படுபொருட்கண் வந்த பெயரெச்ச மறையாகக் கொண்டுரைத்து, "திருத்தார் நன்றென்றேன் தியேன்" என்றாற்போல உராவென்பது குறுக்கல் விகாரமென்பாரும் உளர்.

பின் வந்த பதி ஆகுபெயர்.

இதனுள், ஊனக்கண் பாசம்உணராப்பதியை ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி என்றது ஓரதிகரணம்; உராத்துனைத் தேர்த்தெனப் பாசம்ஒருவத் தண்ணிழலாம் பதி என்றது ஓரதிகரணம்; விதிஎண்ணும் அஞ்செழுத்தே என்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

---

* சிவஞானசித்தி, சுபக்கம், எட்டாஞ்சூத்திரம். ௩௧. பாசிபடு. (௪0௧)
† சிவஞானசித்தி, சுபக்கம், முதற்சூத்திரம், ௫௯. ஞானமேயான.
‡ 'அறியாய்' அகம்-உக௮.

## விளக்கம்

### ஆவி இயைபு

ஆவி இயைபு எனினும் ஆன்ம சுத்தி எனினும் ஒன்றே. உருவ தரிசன சுத்திகளை முறையே இருப்பே இயல்போடு இயைபுணர்தல் மூன்றும், உருவ தரிசனசுத்தி என உரைப்பர். ஆவியின் இருப்பு மூன்றாம் நூற்பாவின்கண் ஓதியருளப்பெற்றது. இருப்பெனினும் உண்மையெனினும் ஒன்றே. ஏழாம் நூற்பாவில் வீடுபேறு அடைதற்குரிய இயல்பு ஆவிக்கு உண்டென்பது வலியுறுத்தப்பட்டது.

ஆவியின் இருப்பு மூன்றாம் நூற்பாவின்கண்ணும், ஆவியின் நிலையில் இயல்பு ஐந்தாம் நூற்பாவின்கண்ணும், ஆவியின் நிலை இயல்பு ஏழாம் நூற்பாவின்கண்ணும் விளக்கப்பட்டுள்ளன.

வீடுபேறு என்பன "முப்பொருள்களுள் விள்ளற்பாலதனை விண்டு அதனால் வரும் துன்பத்தின் நீங்குதலும், கொள்ளற்பாலதனைக் கொண்டு அதனால் வரும் இன்பத்தைப் பெறுதலும்" ஆகிய இரண்டுமேயாம். விள்ளல்-விலகுதல்; வீடு. கொள்ளல்-பெறுதல்; பேறு. விள்ளற்பாலது பகை. கொள்ளற்பாலது நட்பு. இவ் இரண்டன் தன்மைகளையும் செறிவும் விளக்கமும் அமைய உள்ளுநோ றுள்ளுநோ றுள்ள முருகிக் கொள்ளும் வகையில் திருவள்ளுவர் உரைத்தருளிய திருப்பாட்டு வருமாறு :

> "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
> பின்னீர பேதையார் நட்பு."    —திருக்குறள், ௭௮௨.

"அவ் வீடுபேற்றைப் பயப்பித்தற்கண் சிறந்த துணையாவது விள்ளற்பாலதாகிய பகைப்பொருள் இது, கொள்ளற்பாலதாகிய நட்புப் பொருள் இது எனக் குருமுகத்தான் பாகுபடுத்து அறியும் மெய்யுணர்வு" ஒன்றேயாம். துணை-சாதனம். பாகுபடுத்து அறிதல் விவேகித்தறிதல். இவ் அறிவு பாசப்பற்று அற்றாலன்றி நிகழாது. அதனால் பாச அறிவால் நிகழற்பாலது அன்று என எட்டாம் நூற்பாவின்கண் உணர்த்தப்பட்டது. அப்பொழுது பாச அறிவு ஒருபுடை யுணரும் சுட்டறிவாகும். அதனால் எங்கும் பரவியிருக்கும் பொருளை அறியும் பகுத்துணர்வு எய்தாது. ஆவியின் அறிவு பரம்பியதாகலின் அதுவே பரப்புப்பொருளை அறிய அமையும் என்னும் ஐயம் உண்டாக, அவ் ஐயத்தைப் போக்குவதாகிய ஆவி இயைபு புரியுமாறு உணர்த்துமுகத்தான் "அத்துணையை நிகழ்விப்பது இது என்பதூஉம், அதனைப் பெறுமாறும் அது நிலைபெறுமாறும் ஆகிய பயிலும் வழி இது என்பதூஉம் வகுத்துணர்த்துதல் பயிற்சி இயலின் மூன்றாம் நூற்பாவாகிய இவ் ஒன்பதாம் சூத்திரத்தின் கருத்தென்க." ஐயம் - ஆசங்கை. ஆவி இயைபு - ஆன்ம சுத்தி. பயிலும்வழி - சாதிக்கும் உபாயம்.

### இயைபு

எட்டாம் நூற்பாவின் "இறுதிக் கூற்றால் 'பாசஞானப்' பற்றற்றால் அன்றி அறியக்கூடாதென்றவழி, அற்றேல் பசுஞானத்தால் அறிதல் கூடும்போலும் என்னும் ஆசங்கை ஈண்டு நீக்கப்படுகின்றது. இதனால் அதிகரண இயைபு பெறப்படும்.

மேல் ஆவியின் இயல்பு உணர்த்தியபின் ஆவியின் இயைபு உணர்த்து தல் முறை. அம்முறையான் நூற்பா இயைபு பெறப்படும். ஆவியின் இயல்பு - ஆன்மதரிசனம். ஆவியின் இயைபு-ஆன்மசுத்தி.

மேல் பயிற்சியாவது இஃது என்று உணர்த்தப்பட்டது. அப்பொழுது பயிலுமாறு யாங்ஙனம் என்று அவா உண்டாயிற்று. அவ் அவாய் நிலை பற்றிய இயைபானே இயல் இயைபு பெறப்படும். பயிற்சி - சாதனம். பயிலுமாறு - சாதிக்குமாறு. இயல் - ஓத்து.

### மலச்சிதைவு

மலச்சிதைவு எனினும் பாசச்சயம் எனினும் ஒன்றே. ஆற்றலழிந்து சிறிதும் பயன்படாது அடங்குவதே சிதைவு எனப்படும். இச்சிதைவு அறிவுப்பொருள்கட்கு இன்றென்க. இவ்வுண்மை ஒருபுடையொப்பாக அமைதற்க்கொள்ளுமாறு அமைந்த தொல்காப்பிய நூற்பா வருமாறு:

"சிதைவில என்ப முதல்வன் கண்ணே." —தொல், பொ - ௬௩௬

### உடனிகழ்ச்சி

தான் பணியை நீத்தலே புரிவு அல்லது ஆவியின் இயைபு என்று கூறப்படும். ஆவியின் இயைபு எனினும், ஆன்மசுத்தி எனினும் ஒன்றே. தான் பணியை நீத்தல் என்று சொல்லப்படுவது "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்பதாம். இதன்கண் செய்வாய் என்பது பிறவினைப் பொருளில்வந்த தன்வினை. எனவே செய்விப்பாய் என்பது பொருள். (௬௩௨) "பணிசெய்து கிடப்பதே" என்பதும் இப் பொருளே பயக்கும். கிடப்பது என்பது உணர்த்தியவண்ணம் உழைப்பது.

தான் பணியை நீத்தலாகிய ஆவியின் இயைபு பத்தாம் நூற்பாவின் கண் 'இறைபணி நிற்க' என்பதனாற் பெறப்படும். அழுக்கு நீங்குதலே ஆறுவைக்குத் தூய்மை. அதுபோல் மலச்சிதைவாகிய பாசசசயம் பண்ணுதலே ஆவிக்குத் தூய்மை. ஆயின், பத்தாம் நூற்பாவை யன்றோ ஆவித்தூய்மை என்று கூறுதல் வேண்டும். அங்ஙனம் கூறுது 'பதியைநாடி' 'தன்நிழலாம்பதி' எனச் சிவனியல்பாகிய சிவக்காட்சி காணுமாறு கூறும் இந்நூற்பாவை ஆவியின் இயைபு கூறிற்று என்பது மலைவாகும் எனின், ஆகாது; சிவக்காட்சி பண்ணுமாறு கூறிற்று என்பது நூற்பாவின் இயல்பானே இனிது விளங்கும். சிவக்காட்சியின்கண் நிகழும் உடன் நிகழ்ச்சியே உய்த்துணர்ந்து கூறவேண்டுவது; அஃது ஆவித் தூய்மையே; அதனையே ஓதியருளினார் என்க. மேலும் ஒன்பதாம் நூற்பாவும் பத்தாம் நூற்பாவும் ஒருபொருள் மேலன; தம்முள் வேறுபாடு சிறுபான்மை யுடையன.

சிவக்காட்சியில் உடன்நிகழ்வன மலச்சிதைவும் அன்புருவம் ஆதலுமேயாம். மணமனைபுக்கார்க்கு மங்கல ஒலியும் தங்க வசதியுமே யன்றி அறுசுவை உண்டியும், பூச்சும் அணியும், அறவுரைப் பேசசும் உடன் நிகழ்வன என்பதைக் கிளர்தெடுத்துக் கூறுதல்வேண்டும். என்னை? அவையே மணமங்கலத்துள் சிறப்பாம் என்க. இவ்வுண்மை கண்ணப்ப நாயனார் சிவக்காட்சியில் மலச்சிதைவும் அன்புருவமாதலும் உடன் நிகழ்ந்தன என்னும் உண்மையான் உணர்க. அது வருமாறு:

"திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த அருள்திரு நோக்கம் எய்தித்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய ஒளியின் நீழல் பொருவிலன் புருவம் ஆனார்."
—கஉ. கண்ணப்பர் - ௪௦௪.

## மூவகைக் காட்சி

காட்சி மூவகைப்படும். அவை, திரியக்காண்டல் இரட்டுறக்காண்டல் தெளியக்காண்டல் என்ப. இம்மூன்றும் மிக்க செவ்விவாய்ந்தவர்கட்குக் கேட்டமாத்திரையே ஒருங்கு நிகழும்; ஏனையார்க்குக் கேட்டல் எண்ணல் தெளிதல் என்னும் மூன்றுனும் படிமுறையான் நிகழும். எண்ணல் - சிந்தித்தல். படிமுறை - சோபானமுறை.

கேட்டலால் எண்ணத்தின்கண் திரியக்காண்டல் அல்லது எழுவாய்க் காட்சி நிகழும். கேட்டதன்பின் மனத்தின்கண் பகுத்துக்காணும் காட்சி நிகழும். அப்பொழுது அதனை இரட்டுறக் காண்டல் என்ப. கேட்டல் எண்ணல்களுடன், உள்ளத்தின்கண் தேர்வு நிகழும். அப் பொழுது அதனைத் தெளியக்காண்டல் என்ப. இதனால் ஆவியின் இயல் பைப் பயக்கும் சிவ இருப்பின் பின் ஆவியின் இயைபைப்பயக்கும் சிவ இயல்பு ஒருதலையான் வேண்டப்படும். இதனால் திரியக்காண்டல் இரட் டுறக் காண்டல் தெளியக்காண்டல்கட்குத் தம்முள் வேறுபாடுங் காண்க. சித்தியாரின்கண் 'அரும்பாசம் அறக்கும்வகை அருளின்வழி உரைப்பாம்' (௪௦௧) என்பதும் இக்கருத்தே பற்றியதென்க.

'ஊனக்கண்.................செழுத்தே.'

(போ - ரை.) சுட்டுணர்வாகிய பாசஞானத்தானும், சிற்றுணர் வாகிய பசு ஞானத்தானும் அறியப்படாத முதல்வனை மெய்யுணர்வாகிய ஞானக்கண்ணுனே தன் அறிவின்கண்ணே ஆராய்ந்து அறிக. மண் முதல் சிவமெய் ஈறாகவுள்ள முப்பத்தாறு மெய்களடங்கிய காரியமாயை ஒருபடித்தாய் நில்லாது பேய்த்தேராகிய கானல்நீர் போல் தோன்றி விரைய மறையும் நிலையாமைத் தன்மையுடையது என்று தெளிந்து அஞ்செழுத்து எண்ணும் திண்மையால் அம்மாயையின்கண் மருளகலவே அயமாயையும் அகலும், மாயை அகல ஆவிக்கு என்றும் புறம்புறம் திரிந்து புரக்கும் புகலிடப் புண்ணியனாகிய விழுமிய முழுமுதல்வன் தண்ணிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அந்நிழல் பிறவித்துனபாகிய பெரு வெப்பத்துக்கு அருநிழலாகும். மெய்யுணர்வால் விளங்கிய மெய்ப் பொருளாம் முதல்வனைக் கண்டகாட்சி சலியாமைப்பொருட்டு அப் பொருள்பயக்கும் திரு அஞ்செழுத்து அவ்விதிப்படி அறிந்து கணிக்கப் படும்.

## அஞ்செழுத்து உள்ளுறை

அஞ்செழுத்தை விதிப்படி எண்ணுக என்பது வருமாறு:

ஒரு பொருளை உணர்வதற்குப் பெயரும், நிழலுருவும், அப்பொரு ளின் தோற்றமும் வேண்டும். பெயரைக் கேட்டவுடன் பொருளிருப்பும், நிழலுருவைக் கண்டவுடன் பொருட் பிழம்பும், நேரே கண்டவுடன் பொருட்பண்பும் புலனாகும். இதுபோல் '**சிவயநம**' என்னும் அஞ் செழுத்தை ஒருசொல்லெனவும் ஒருபெயரெனவும் முதற்கண் கொள்வது

பெயர் கேட்பதை ஒக்கும். இவ் அஞ்செழுத்தும் அஞ்சு சொல்லின் முதலெழுத்தென்ப. அவற்றை விளக்குங்கால் சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு எனப் பெறப்படும். இது நிழலுருவைப் போன்றதாகும். இதனை வகை எனவும் கூறலாம். பின் யாப்பு என்னும் ஆவியின் பெயரின் முதலெழுத்தாகிய 'ய' ஐந்தெழுத்தின் நடுவாக உள்ளது. அவ் ஆவி என்றும் துணை இணைந்தே இருப்பும், இயலும், இயைபும் இன்புறலும் எய்தும். இவ் ஆவியை வினைக்கீடாகப் பிறவியிற் புகுத்தி ஆட்டுவிக்கும் திருவருள் நடப்பாகும். பின் இருவினை ஒப்புவாய்ந்த பருவம் நோக்கிச் சிறப்பினிற் சேர்த்துக் கூட்டுவிக்கும் திருவருள் வனப்பாகும். 'சி' மேலும் 'ம' கீழும் ஆவி நோக்கக்கூடிய நிலையில் அமைந்திருக்கின்றன.

அவ் ஆவியை அங்ஙனம் நோக்குமாறு துணைபுரிவன 'வ'வும் 'ந'வுமே யாம் எனவும், என்றும் சார்ந்து நிற்கும் இயல்பே ஆவிக்கு உள்ளதெனவும், அச் சார்பினை நல்குவதும் திருவருளே எனவும், கீழ்நோக்கிற் பிறப்பும் மேல்நோக்கிற் சிறப்பும் ஆவி எய்தும் எனவும், பிறப்பில் நிலையாஇன்பும் பெரும் துன்பும் எய்தும் எனவும், சிறப்பில் ஒரு சிறு துன்பும் இல்லாத நிலையாய என்றும் அழியாத மாறில்லா இன்பம் எய்தும் எனவும் உட்கொண்டு எண்ணுவதே விதிப்படி எண்ணுவதாகும். இதுவே இயல் உருவைக் காண்பதாகும். இதனை விரி எனவும் கூறலாம்.

**இலக்கணம்**

'நாடி' என்பது இகர ஈற்று முன்னிலை ஏவல். நாடி - நாடுக - ஆராய்ந்தறிக என்பது பொருள். இதுபோல் அகநானூறு - உ௬அ-ஆம் பாட்டில் (அறியாய்) 'நன்றுமன் அதுநீ நாடாய் கூறி' என்பதன்கண் கூறி என்பது கூறுக என்னும் பொருளைத் தருகின்றது.

'உராத்துனை' ஏழாம் வேற்றுமைத்தொகை என்பது 'உராவின் கண்' என விரியும். உரா - உலாவல்; பரந்து திரிதல். துனை - விரைவு.

"கதழ்வும் துனைவும் விரைவின் பொருள"

—தொல், சொல் - ௩௧௫.

'உரா' ஊரா என்பதன் குறுக்கம் எனக் கொள்ளின் ஊரப்படாத என்று பொருள் தரும். ஊ, உ வாயது முதற்குறை.

பின்வந்த பதி ஆகுபெயர் என்பது, 'தண்நிழலாம் பதி' என்பதன்கண் உள்ளது. பதி என்பது பதி ஞானத்தைக் குறிக்கின்றது. அதனால் அது ஆகுபெயர்.

**கூறு :**

க. **ஊனக்கண் பாசம் உணராப் பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி.**

உ. **உராத் துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத் தண்நிழலாம் பதி.**

௩. **விதி எண்ணும் அஞ்செழுத்து**

ஆக மூன்று கூறுகளையுடையது இந்நூற்பா.

## முதல் அதிகரணம்

**ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்றது.**

*எ - து. மே - ள். எ - னின். மேலைச்சூத்திரத்துஓதியவாற்றான் முதல்வன் பாசஅறிவால் நாடப்படுவனல்லனாயினும் பசுஅறிவால் நாடப்படுவனென்றற்கு இழுக்கென்னையெனச் சிவசமவாதசைவர் மதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல்நுதலிற்று. இ - ள். வெ - டை.*

*ஏகரம் தேற்றம்.*

**அவன் வாக்கு மனாதீதகோசரமாய் நிற்றலான்.**

*எ - து. ஏது எ - னின். ஏனைஞானங்களான் அறியப்படாது சிவஞானத்தான் அறியப்படுமென்றற்குப் பிரமாணமென்னை என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல்நுதலிற்று.*

(இ - ள்.) *வாக்குமனாதீத கோசரமாய் நின்ற அதுவே ஏன்புழியுரைத்தாம்.*

*ஆண்டுப் பொதுவகையால் பெறப்பட்டதனை ஈண்டு ஏதுவாகவைத்து வாக்கு மனாதீதமாயுங் கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாது என்னும் அருத்தாபத்தியான் ஞானக்கண்ணாலே காணப்படுமென்பது தாமே போதருமென மேற்கோளைச் சாதித்தார்.*

*நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
தேடி எனைஅறியேன் தேர்ந்தவகை—நாடிஅரன்
தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்
என்னும் எனஅறிவார் இன்று.

*எ - து. உ - ம். எ - னின். கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாதென்றதுஎன்னை பசுத்துவம் நீங்கியவழிச் சுட்டிறந்தறிவதாகிய உயிருணர்வு திருவடி ஞானத்தோடு ஒப்பதாகலின் அதன்கண் கோசரமாதல் அமைவுடைத்துப்போலும் என்பாரை நோக்கி அவ்வுணர்வு விளங்குமாறுணர்த்துமுகத்தால் அவரை மறுத்து ஏதுப்பொருளைவலியுறுத்துதல்நுதலிற்று.*

(இ - ள்,) *நாடியோ என்போ நரம்புசீக்கோழையோ தேடி எனை அறியேன் தேர்ந்தவகை நாடி—நாடி முதலியவற்றுள் (யான் யார்) என்னைத்தேடியு மறிகின்றிலேன் என்று, இவ்வாறு தேர்*

---

* ‘சிவனையவன்’ சித்தியார், க. க-ச.

நின்ற தேர்ச்சியறிவின்கண்ணே (இதனைத் தெளிவிப்பதோர் அறிவு வேறுண்டெனை) ஆராய்ந்து நோக்கி, அரன் தன்னாலே தன்னையும் கண்டு தமைக் காணார்—(அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றுவதாய) முதல்வனது திருவடிஞானத்தால் முதல்வனையும் உணர்ந்து (முதல்வனின் வியாப்பியமாய் நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய) தம்மையும் உணர்தலைச் செய்யாதார், என்னன அறிவார் இன்று—மற்றெவ் இயல்பினரென்று தம்மை யறிய வல்லுநர் இம்முத்திக்காலத்து (எ - று).

நாடியென்றது இடை பிங்கலை முதலியவற்றை. நரம்பு எனவே யடங்குமேனும் தலைமைபற்றி வேறு கூறினார். சீ புண்ணீர். கோழை ஐ.

ஓகாரந் தெரிநிலை. என்றென்பது சொல்லெச்சம். வகை ஆகு பெயர்.

ஒற்றுமைபற்றி அரனதுஞானத்தை அரனென்று உபசரித்தார்.

உம்மை எதிரது தழீஇயிற்று. எவனென்னும் வினாவினைக் குறிப்புப்பெயர் ஈண்டாகுபெயராய் என்னெனமரீஇயிற்று. ஆம் அசை.

நாடியோ என்போ நரம்புசீக்கோழையோ என்ற உபலக்கணத்தால் ஏனைத் தத்துவ தாத்துவிகங்களினும் அவ்வாறு தெரித்தல் கொள்ளப்படும்.

இது தம்மைஅறியுமாறு உணர்த்துமுகத்தானே தலைவனை அறிந்தபின் அறியபடுவதாகிய தம அறிவு கொண்டு தலைவனை அறியுமாறு யாண்டையதென மறுத்து வலியுறுத்தவாறு காண்க.

*காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணா—காட்டிய
உள்ளந் தனைக்காணா உள்ளத்தின் கண்ணாய
கள்வன்தானா உள்ளத்தற் காண்.

எ - து. உ - ம். எ - னின். எதிர் முகத்து ஒருபொருளைக் கண்ட கண்ணே மறித்து நோக்கியவழி வெரிநபுறத்துப் பொருளையுங் காண வல்லும் அதுபோல அங்ஙனந் தோந்தறிதலைச் செய்த உயிரே தெளிந்தறிதலையுஞ்செய்ய வல்லுமென அவையும

* 'கணடிடும.' சிவஞானசித்தியார, கூ. க-இ.

என்பாரை நோக்கி அதனது மாட்டாமையை விளக்கி அரன் தன்னாலே காண்டலே வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ - ள்.) காட்டியகண்ணே தனைக் காணா—(உயிரால்) காட்டப்பட்டு ஒரு விடயத்தைக் காண்கின்ற கண்ணானது தன்னியல்பைக் காணமாட்டாது, கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண்காணா—தனக்கு (அவ்விடயத்தைக்) காண்பித்து முதலாய் நிற்கும் உயிரையும் அது காணமாட்டாது, காட்டிய உள்ளம் தனைக்காணா—(அதுபோல முதல்வனால் மறைந்து நின்று) உணர்த்தப்பட்டு ஒன்றனைத் தேர்ந்துணர்கின்ற உயிர் (அவ்வாறே) தன்னியல்பையும் அறியமாட்டாது (தன்னையுணர்த்தி நிற்கு முதல்வனையும் அறியமாட்டாது), உள்ளத்தின்கண் ஆய கள்வன் தான்—அத்தேர்ச்சி அறிவின்கண்ணும் உடனாய்நிற்குங் கள்வன் அம்முதல்வனாகலானே, உள்ளத்தில் காண்—அவனை அவ்அறிவின்கண்வைத்து நாடித் தெளிவாயாக (எ - று).

இது சொற்பொருட் பின்வருநிலை. ஏகாரம் அசைநிலை. *"முறைகாக்கும் முட்டாச் செயின்" என்றாற்போலக் காணாது என்னுந் துவ்வீறு விகாரத்தால் தொக்கது.

பின்வந்த உள்ளம் ஈண்டுத் தேர்ச்சியறிவின்மேற்று. உள்ளத்தின்கண்ணும் என்னுஞ் சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது.

தோன்றாது நிற்றல்பற்றிக் கள்வனென்றார். கள்வனென்றது கண்ணுக்கு உயிர் மறைந்துநின்றே காட்டுவதாகலான் அது தன்னையும் உயிரையும் அறியமாட்டாதாயிற்று. அதுபோல முதல்வன் இருகாறும் மறைந்து நின்றே உணர்த்துதலின் உயிர் தன்னையும் முதல்வனையும் அறியமாட்டாதாயிற்றென்பதுபட நின்ற குறிப்புமொழி. உள்ளத்திற் காணவல்லார்க்கு அக்களவு தீர்தலின் தம்மையும் முதல்வனையுங் காண்டல் கூடுமென்பதாம் †"கள்ளரோ டில்ல முடையார் கலந்திடின் வெள்ள வெளியாமென் றுந்தீபற" (சஉச)என்றதூம் இக்கருத்துநோக்கி.

கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண் காணாவென உவமைக்கு ஓதியவாறு பொருளினும் வருவித்து உரைத்துக் கொள்க. இஃது எடுத்துக்காட்டுவமை.

---

* திருவள்ளுவர், திசஎ. † திருவுந்தியார், உரு.

## விளக்கம்

### முற்றுணர்வு

முற்றுணர்வு எனினும் பதிஞானம் எனினும் ஒன்றே. சிற்றுணர்வு எனினும் பசுஞானம் எனினும் ஒன்றே. சுட்டுணர்வு எனினும் பாச ஞானம் எனினும் ஒன்றே. இவற்றை ஓர் ஒப்பில் காணுங்கால், கேட்டுணர்தல் எட்டுணர்தல் உள்ளம் கெழுமுதலாம், தாட்சுட் டுணர்வுசிற்றும் முற்று எனச் சாற்றலாம். அஃதாவது கேட்டுணர்தல் பாசஞானம் போன்று புறமாகும். எட்டுணர்தல் பசுஞானம் போன்று அகப்புறமாகும். உள்ளம் கெழுமுதல் (உணர்வோடொன்றுதல்) பதிஞானம் போன்று அகமாகும். இம்முற்றுணர்வாலேயே முழுமுதல்வனைக் கலந்து காணலாம். மேலும் செம்மணியினைக் கடையிற் காண்டல், அணியாய் அமைப்பார் கையிற் காண்டல், அணியாய் அணிந்து மெய்யிற் காண்டல்களையும் ஒக்கும். முதல்வனை முதல்வன் உணர்வு கொண்டே காண்டல் வேண்டும் என்பதற்கு ஒப்பு ஆசான் அறிவினை அவனறிவின் துணை கொண்டே அறிவதாகும்.

அறிவை அறிவே அறியும். உருவாலும் உள்ளுவதாலும் உணர ஒண்ணாது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

“உறுப்பொத்தல் மக்கள்ஒப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு.” —திருக்குறள், ௯௯௩.

“புலமிக் கவரைப் புலமை தெரிதல்
புலமிக் கவர்க்கே புலனும்—நலமிக்க
பூம்புனல் ஊர பொதுமக்கட் காகாதே
பாம்பறியும் பாம்பின கால்.” —பழமொழி. க. கல்வி - எ.

### புலனுதல்

ஆண்டவன் ‘மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்’ ஆதலின் ஏற்றமாம் உணர்வின்வழி இயைந்து விளங்குவன். ஏற்றமாம் உணர்வு பதிஞானம். இப்பொருளே பயப்பது ‘அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றல்’ என்பது. கோசரம் - புலனுதல். பதிஞானத்தாலேயே பதியை உணரலாம் என்பது வரும் திருப்பாட்டான் உணர்க:

“முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத் திருளறுத் தாண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே.” —௫. ௯௧ - உ.

முன்னை ஞானம் - தானே விளங்கும் தன்மை வாய்ந்த தனிமுதற் பேரறிவு. முதல் - விழுமிய முழுமுதல்வன். தனிவித்து - வினைமுதற் காரணம். வினைமுதற் காரணம் எனினும் நிமித்த காரணம் எனினும் ஒன்றே. நிமித்த காரணத்தைப் பொருட்டுக் காரணம் எனவும் கூறுவர். பின்னை ஞானம் - இறைவன் உயிர்க்கு உயிராய் அறிவுக்கு அறிவாய் ஆவியொடு பின்னி நின்று அவ் ஆவியின் அறிவை விளங்கும்படி விளக்கும் ஞானம். பின் - முதல்நிலைத் தொழிற் பெயர்; பின்னுதல். இக்குறிப்புத் தோன்றவே சடையன் என்னும் திருப்பெயர் வழங்குவதென்க. இதுவே புணர்ப்பு அல்லது அத்துவிதம் எனப்படும். ஞானத்து - ஞானத்தால்;

பதிஞானத்தால். ஞானத்தை - திருஐந்தெழுத்தை மறவாது கணிப்பதால் முதல்வன் மனத்தகத்தே விளங்குவன். அங்ஙனம் விளங்குமாறு பிணித்தல்.

'வாக்கு மனாதீத கோசரம்' இத்தொடர் ஆறும் நூற்பா இரண்டாம் கூற்றின்கண் (௩௨) மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. இவ்விடத்து வாக்கு - சுட்டறிவு. மனம் - சிற்றறிவு. அதீதம் - எட்டாதது. கோசரம் - எட்டுவது. உரைக்கும் உணர்வுக்கும் எட்டாத ஒன்று எட்டுவது. எட்டுவது எப்படி என விளக்கமாகக் கூறவில்லை. பொதுவாகவே கூறப்பட்டுள்ளது. அதனை இங்குப் பதிஞானத்தால் அறியப்படுவன் என விளக்கிச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் கூறப்படுவதற்கு அளவை பொருள் அளவை ஆகும். பொருள் அளவை எனினும் அருத்தாபத்திப் பிரமாணம் எனினும் ஒன்றே.

'நாடியோ ...................... இன்று.'

## நாடி

நாடி எனினும் நரம்பு எனினும் ஒன்றே. அந் நாடிகள் பத்துவகைப்படும். கைநாடியாகிய நரம்பின் துடிப்பின்வழி உள் நிகழ்வனவற்றை நாடி உணர்வதால் அதற்கு நாடி எனும் பெயர் வழங்குவதாயிற்று. பத்து நாடிகளான பெயர்கள் வருமாறு: க. இடப்பால் நரம்பு, உ. வலப்பால் நரம்பு, ௩. நடு நரம்பு, ௪. உள் நாக்கு நரம்பு, ௫. வலக்கண் நரம்பு, ௬. இடக்கண் நரம்பு, ௭. வலச்செவி நரம்பு, ௮. இடச்செவி நரம்பு, ௯. கருவாய் நரம்பு, ௧0. எருவாய் நரம்பு என்பன. இவற்றை முறையே, இடைகலை, பிங்கலை, சுழுமுனை, சிகுவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு எனவும் சொல்லப்படும்.

நாடியும் நரம்பும் ஒன்றெனினும் தலைமை பற்றி நாடி எனக்கிளந்தெடுத்து ஓதப்பெற்றது.

## எனை அறியேன்

நாடி, எலும்பு, நரம்பு, சீ, கோழை முதலியவற்றுள் ஆவி எது என்று ஆராய்ந்து ஒன்றும ஆவி அன்று எனப் போந்த வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"மேவிய புன்மயிர்த் தொகையோ அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை
ஊறும உதிரப் புனலோ கூறுசெய்து
௫. இடையிடை நிறக்கும் எலும்போ எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்து
உள்ளிடை ஒழுகும் வழும்போ மெள்ளநின்று
ஊறும் புழுவின ஒழுக்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
க0. கட்டிய நரம்பின் கயிறோ உடம்பிற்குள்
பிரியாது ஒடுங்கும் பிணியோ தெரியாது
இனைத்து யானென்று அறியேன் என்னை
எங்குந் தேடினன் யாதிலுங் காணேன் முன்னம்"
—கக. பட்டின. திருவிடை - மும் - கந.

**எங்ஙனம் அறிவர்**

வீடு பேற்றின்கண் ஆவி கருவி கரணம் எல்லாம் நீத்துத் திருவருள் துணையாய் நிற்கும். அப்படி நிற்கும் பொழுது திருவருள் காட்டக்காணும் உணர்வினால் அத்திருவருளையும் உணர்ந்து தன்னையும் உணரும். இப்பொருளை பயக்கும் பேருரை வருமாறு :

"சிவஞானத்தைப் பெருமையால் எய்தியது என அறிந்து குருவருளால் உணரப்படும சிவஞானத்தானே சிவனை அறிந்தவர் அச்சிவனில் செறிவாய் நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய தம்மையும் அறிவர்; அப்படி அறியாதார் மற்றெவ்வியல்பினரென்று தம்மை அறியவல்லுவர் இவ்வீடு பேற்றுக் காலத்து ?"

செறிவு - வியாப்பியம். வீடுபேறு - முத்தி.

இதனை ஓர் ஒப்பிற் கூறின், மாணவர் வீட்டகத்துப் பொருள்களைத் தந்தை தாயர் உணர்த்த உணாவர். தந்தை தாயர் துணை வீட்டுடன் அகன்று விடும். கல்லூரியில் அவாகள் துணை எய்துவதன்று. மாணவர் தாமாக உணர்வரோ எனின் ? உணரார்; ஆசான் உணாத்தவே உணாவர். இது போலவே வீடுபேற்றுக் காலத்தும் இறையுணர்த்தவே உயிர் உணரும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டால் உணரலாம் :

> "உன் அறிவை நீயே உணர்வையே ஆமாகில்
> இந்நெடுநாள் பாசத்து இயையாயே—உன் அறிவை
> நீங்கா அறிவாகி நீரும் இரதமும்போல்
> ஆங்காண் அரனார் அருள்." —துகளறு போதம், ௩௯.

பதிஞானத்தால் ஆவிகள் தம்மையும் தம்தலைவனையும் உணராவாயின் வேறு எவ்வகையானும் உணர ஒண்ணாதென்பதை வருந்திருப்பாட்டான் உணர்க :

> "நானார்என் உள்ளமார் ஞானங்க ளார்என்னை யாரறிவார்
> வானோர் பிரான்என்னை ஆண்டிலனேல் மதிமயங்கி
> ஊனார் உடைதலையில் உணபலிதேர் அம்பலவன்
> தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ." —அ. திருக்- ௨

பிரான் என்னை ஆண்டான் - திருவடியுணர்வால் தன்னையும் என்னையும் உணரும்படி செய்தான். ஆணடிலனேல் யான் எங்ஙனம் உணர்வேன். இளமைப் பருவம் விட்டு முதுமைப் பருவம் எய்திற்றேனும் எழுத்தறிவிப் பாரின்றி எழுததறிய ஒண்ணாமை போன்று பாசஞானததாலும் பசுஞானத் தாலும் பதியினை உணர ஒண்ணாதென்க.

**இலக்கணம்**

'நாடியோ என்போ......கோழையோ' என்பவற்றின்கண் வரும் ஓகாரம் தெரிநிலை. தெரிநிலை என்பது ஆராய்தற்கண் வருவது.

> "பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
> **தெரிநிலைக் கிளவி** சிறப்பொடு தொகைஇ
> இருமூன் றென்ப ஓகா ரம்மே." —தொல். சொல் - ௨௫௬.

'**அரன்**' இஃது அரனது பேரறிவினை-மெய்யுணர்வினைக் குறிக்கின்றது. மெய்யுணர்வு எனினும் சிவஞானம் எனினும் ஒன்றே. இங்ஙனம்

பொருள் படவருவதை ஒற்றுமைபற்றி ஏற்றிக் கூறுதல் என்ப. இதனை உபசாரம் எனவும் கூறுப.

'உம்மை' எதிரது தழீஇயிற்று. இது, 'தன்னாலே தன்னையும் கண்டு' என்பதன்கண் காணப்படும் 'தன்னையும்' என்பதிலுள்ளது. இவ் உம்மை பின்வருகின்ற 'தமைக்காணார்' என்பதில் உள்ள 'தமை' என்பது தமையும் என்று பெறப்படும். எனவே இஃது எதிரது தழீஇயிற்று. இவற்றுள் - தன்னை என்பது முதல்வனை. தமை என்பது ஆவிகளை.

'எவன்' என்பது வினாவினைக் குறிப்புப் பெயர். அஃது என்னென மரீஇயிற்று. பின் ஆகுபெயராய் 'எவ்இயல்பினர்' என்று பொருள் தந்தது.

'நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ' என்றதன் இனம்பற்றி எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு எனனும் அகக்கலன் நான்கும் பிறவும் சொல்லுங்கால் மெய் (தத்துவம்) இனமெனவும். மயிர், நகம், காற்று (வாயு) முதலியவற்றைக் கொள்ளுங்கால் மெய்த்தொடர் (தாத்துவிகம்) பினமெனவும கொள்ளப்படும்.

'தலைவனை அறிந்தபின் அறியப்படுவதாகிய தம்மறிவு' தலைவன் அறிவே. இவ்வறிவால் தலைவனைக் காணின் தலைவன் அறிவாலே அவனைக் கண்டோம் எனபதே பெறப்படும். ஆகவே பதிஞானம் ஒன்றுமே பதியைக் காணமுடியும் என்பது வலியுறுத்தப்பட்டது. இதற்கு ஒப்புவருமாறு :

மாணவன் ஆசிரியன்பாற் கற்ற கல்வியும் நுண்ணறிவுங் கொண்டு அவனைப் போற்றிப் புகழ்ந்து வாழ்த்தி வணங்கிப் பாடுகின்றனன். அப் பாட்டினதறிவு ஆசான் அறிவேயாம். கடல்நீரைத்தடிந்து எழிலி கடலுக்குப் பெய்கின்றது. நாம் அதனை மழைநீர் என்று கூறினும் உண்மையான் நோக்குங்கால் அதுவும் கடல்நீரே.

தவசுப்பிள்ளை சமையல் செய்து தானும் உண்டு முதல்வர்க்கும் படைக்கின்றனன். அப்படைப்பு முதல்வரதே யன்றித் தவசுப்பிள்ளையது ஆகாமையுங் காண்க.

'காட்டிய......................காண்.'

### நேர்ச்சி அறிவு

ஆவி 'நாடி என்பு' முதலியவற்றான் யாக்கப்பட்ட யாப்பாகிய உடம் பின்கண் யான் யார் என்று ஆராய்வதாகிய தேர்ச்சி அறிவின்கண் தன்னையுங் காணமாட்டாது. கண் பொருளைக் காண்கின்றது. ஆனால், காண்கின்ற தம்மையும், காணச் செய்கின்ற உயிரையும் காணமாட்டா. இது போலவே ஆவியும் ஆண்டான் காட்டக் காண்கின்றது. ஆனால், கண் போன்று ஆவியும் தன்னையும் காணாது; தன்னைக் காணச்செய்கின்ற ஆண்டானையும் காணமாட்டாது. ஆவி தனக்குப் புறம்பாய் உள்ள பொருள்களை ஆய்வதே தேர்ச்சி அறிவென்க.

### தெளிவறிவு

ஆவி புறப்பொருளைத் தேர்ந்தறிவதுபோல் அல்லாமல் தம்மொடு கலந்து பின்னி நிற்கின்ற முதல்வனை அசைவற்ற நீர்போல் ஆடிபோல் அவன் அருள்வழி நிற்கின், முதல்வன் தன்னையும் காட்டி ஆவியையும்

காட்டும். தெளிந்த நீரில் முகம் காண்பதுபோல் 'பணிசெய்து கிடப்பதாகிய' தெளிவறிவின்கண் காணப்படும் உலகம் காணுமுயிர் காட்டும் இறை, மாண்பொருள்கள் மூன்றும் மதி என உலகோர கூறுகின்ற உண்மை புலனும். இவற்றின் தன்மையும் ஒப்பால் உணரின் நூலுக்கு அறிவின்று நூலுணரான் மாணவனும், நூலுணர்த்துவான் ஆசான் நோக்கு என்பதே யாம்.

### கள்வன்

தேர்ச்சி அறிவின்கண் உடனாய் நின்று காட்டியும் மறைந்து நிற்பது பற்றிக் கள்வன் என்றார். பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமை பற்றிக் கள்வன் என்றார் என்பதும இதுவே. பாசமாகிய உலகப பொருள்களையும் பசுவாகிய தனையும் ஆராயும் தேர்ச்சியறிவில் ஆண்டவன் மறைந்து நிற்பது பற்றியும கள்வன் என்றார் என்பதும ஆகும்.

தேர்ச்சி அறிவிற்குப் புலப்படான் என்பதே "மரத்தை மறைத்தது." (சக) என்னும் திருமூலர் திருப்பாட்டு. ஆண்டவனை "உள்ளத்தே நிற்றியேனும் உயிாப்புளே வருதியேனும், கள்ளத்தே நிற்றி" என்னும (கஅஅ) திருப்பாட்டின் கருத்தும் இதுவேயாகும. ஆண்டவன் ஆகிய கள்வனும உடம்பாகிய இல்லத்துக்கு உரிய ஆவியும் ஒன்றுபட்டால் அருள்வெளியும் வீடுபேறும உண்டாகும். உலகினர் மணிமந்திர மருந்துகளால் வழிப்படுத்துவதுபோல் முதல்வனும் முறையே கண்மணி ஐந்தெழுத்து வெண்ணீறு இவற்றால் வழிப்படுத்துவன. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

> "கள்ளரோடு இல்லம் உடையார் கலந்திடில்
> வெள்ள வெளியாமென்று உந்தீபற
> வீடும் எளிதாமென்று உந்தீபற." —திருஉந்தியார், உ௩.

### இலக்கணம்

'கணனே' இதன்கண் உள்ள 'ஏ'கார அசைநிலை. 'தனைக்காணு' இது தனைக் காணுது என்று இருத்தல் வேண்டும். 'து'வ்ஈறு தொகுக்கின்றது. இங்ஙனம் தொகுக்கு நிற்பதற்குக் காட்டு வருமாறு :

> "இறைகாக்கும் வையகம எல்லாம் அவனை
> முறைகாக்கும் முட்டாச செயின்." —திருக்குறள், ருசஎ.

இதன்கண் 'முட்டா' எனபது முட்டாது என்றிருத்தல் வேண்டும்.

'காட்டிய' என்பதும் 'கண்' என்பதும் தனித்தனியே சொல்லும் பொருளும் ஒன்றே பயக்கும் வண்ணம் மீண்டும் வருதலால் சொற்பொருள் பின்வருநிலை.

'தனைக்காணு உள்ளத்தின்' இதன்கண் காணப்படும் 'உள்ளத்தின்' என்பதிலுள்ள உள்ளம தேர்ச்சி அறிவின் மேலது. 'உள்ளத்தின்கண' இஃது உள்ளத்தினகண்ணும என்றிருத்தல் வேண்டும. இவ்உம்மை சிறப்பும்மை.

'கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண்காணு' இஃது உவமை. பொருள உயிர். உவமைக்கு ஓதியவாறு பொருளினும உரைத்துக் கொள்க என்பது, காட்டிய உள்ளந்தனைக்காணு என்றதனோடு தோன்றுகின்ற உயிர் தன்னையும காணுது காட்டிய முதல்வனையும் காணுது என உரைத்துக்கொளக.

## இரண்டாம் அதிகரணம்

**இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காணஉளதாய் நிற்பது ஞானசொரூபமென்று உணரற்பாற்று.**

*எ - து. மே - ள். எ - னின். அம்முதலே ஞானக்கண்ணாலே காண்க என்று உணர்த்தியவழி அந்த ஞானக்கண்ணைப் பெறுமாறு யாங்ஙனம்என நிகழும் அவாய்நிலையை நீக்குதற்பொருட்டு மேலதற்கோர் புறனடையாயெழுந்த இச்சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.*

*பாசம்ஒருவத் தண்ணிழலாம்பதிஎன்புழிப் பாசமென்றது காரியப்பிரபஞ்சத்தை என்பார் அசத்தாயுள்ள என்றும், சொற்பல்காமைப்பொருட்டு ஏதுப்பொருளை உருவகமுகத்தான் உடம்பொடுபுணர்த்துக் காட்டுவார் பிரபஞ்சத்தையென்னாது வன்னபேதங்களை என்றும், வியாபகப்பொருளுக்கு ஒருவுதலாவது உணர்ச்சிவிசேடமேயாம் என்பார் அசத்தென்றொழிய என்னாது காணவென்றும், தண்ணிழலாய் நிற்றல் புதிதன்றென்பார் உளதாய் நிற்பதென்றும், பதியென்றது ஆகுபெயராற் பதிஞானத்தின்மேல்நின்ற தென்பார் ஞானசொரூபமென்றும், இஃதநுபவத்தினன்றிச் சொல்லளவையின் அறிய வாராதென்பார் உணரற்பாற்றென்றும் உரைத்தார். இஃதேகதேச வுருவகம்.*

**இதனுட் பெறப்படும் ஏதுப்பொருளை ஏனையவற்றுட்போல மேற்கோளின் வேறுவைத்துக் காணுமாறு :**

*இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபம் என்றது வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாந்துணையான் எனவரும்.*

*(இ - ள்.) படிகசொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற வேற்று நிறங்களை இவை நிலையுதலிலவாகிய வேற்று நிறங்களெனக் கண்டு நிற்பின் அவ்வழி நிலையுதலுடைத்தாய் விளங்கி நிற்பது பளிங்கினது சொரூபமாமென்னும் ஒப்புமையான் நிலையுதலுடைய தற்சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையுதலிலவாயுள்ள பிரபஞ்சத்தை இவை நிலையுதலுடையன வல்லவென்று விவேகித்தறியின் அங்ஙன நிராலம்பமயமாய் விளங்கித் தோன்றுவது ஞானசொரூபமென மேற்கொண்டது. (எ - று).*

*வன்னபேதமாவது சித்திரமெனக்கொண்டு சுவர்மேல் வைத்துரைத்தலும் ஒன்று.*

அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலாவது ஆசிரியனறிவுறுத்த உபதேசப்பொருளினுறைத்து நின்று *"அட்டகுணமெட்டுச் சித்தி கோகனதன் முதல்வாழ்வு குலவு பத மெல்லாம்—வெறுத்துநெறி யறுவகையு மேலோடுகீழடங்கக்" காரணரூபத்தினில்லாமையால் †"வெறும் பொய்யென நினைந்திரு"த்தல்.

‡நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வன்—அற்புதம்போல்
ஆனா அறிவாய் அளவிறந்து தோன்றானே
வானே முதல்களையின் வந்து.

எ - து. உ - ம். எ - னின். அசத்தை அசத்தென்று கண்டு ஒருவியவழித் தோன்றுவது சூனியமேயன்றிப் பிறிதில்லை போலும் என்பாரை நோக்கி ஞானசொரூபத்தினியல்புகூறி அதனை வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ-ள்.) நிர்க்குணன் ஆய் (அசுத்தப்பிரபஞ்சம்போல) முக்குணரூபமாய் அளவிட்டறியப்படுவானும் அல்லனாய், நின்மலன் ஆய்—(முக்குணங்களைக் கடந்த மிச்சிரப்பிரபஞ்சம்போல) மலகன்ம காரியரூபமாய் அறியப்படுவானும் அல்லனாய், நித்தியானந்தன் ஆய்—மலகன்மங்களையுங் கடந்த சுத்தப்பிரபஞ்சம் போல அநித்தியானந்தரூபனாய் அறியப்படுவானும் அல்லனாய், தற்பரம் ஆய்—(இம்மூன்றனோடுங் கூடிப் பொதுவியல்புபற்றி அவ்வாறுணரப்படும் உயிர்போலன்றி) அதற்குமேலாய், நின்ற தனிமுதல்வன்—இவ்வாறு நிற்றலான் (ஒன்றனியல்புபற்றி யறியப்படாத) தனிமுதலாகிய இறைவன், வானே முதல் களையின்—ஆகாச முதலிய அசத்தை அசத்தென்று கண்டு ஒருவியவழி, அளவுஇறந்து அற்புதம்போல்வந்து—பயின்றறிந்துவாருந் தனது சுட்டறிவின் அளவினைக் கடத்தலான் (இன்னதென்றறியவாராத) சூனியப்பொருள்போலத் தோன்றி, ஆனா அறிவு ஆய்த் தோன்றானோ—(பின்னர்ச் சுட்டிறந்தறியுந்) தன்னறிவின்கண் நீங்காது நிலைபெறுவதாய்ச் (§"சோதிக்குட் சோதியாய்" விளங்கித்) தோன்றான் கொல்லோ (எ - று).

தற்பரம் தனக்குப் பரமெனவிரியும். தன்னென்றது உயிரை.

---

* சிவஞானசித்தி, ஒன்பதாஞ்சூத்திரம். சு. 'குறித்தடியின்.'

† சிவஞானசித்தி, ஒன்பதாஞ்சூத்திரம் சு. "

‡ 'குறித்தடியின்' சித்தியார். க. உ-சு.

§ சிவஞானசித்தி, எட்டாஞ்சூத்திரம். உஅ. எங்குந்தா. (சஈச.)

அற்புதம் ஈண்டுச் சூனியத்தின்மேற்று. முதற்கட் சூனியமாய்த் தோன்றினுஞ் சூனியமன்றென்பார் அற்புதம்போல் வந்தென்றார். ஆறுமை நீங்காமை.

ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் அசைநிலை.

வானே முதலெனவே தோற்றமுறைபற்றி வான் முதலாகிய பூதங்களும் ஒடுக்கமுறைபற்றி வான்முதலாகிய ஏனைத் தத்துவங்களும் அடங்கும்.

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியானந்தனாய்த் தற்பரமாய் என்புழி ஆக்கச்சொல் உண்மைகுறித்து நின்றது வடமொழி மதம். அறிவாய்என்புழி ஆக்கம் வேறுபாடு குறித்து நின்றது.

ஒற்றுமைபற்றி முதல்வனது ஞானத்தை·முதல்வனென்று உபசரித்தார்.

*சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்தென்னச்
சட்ட இனியுளது சத்தேகாண்—சுட்டி
உணாந்தநீ சத்தல்லை உண்மையைத் தைவம்
புணாந்ததனாற் போய்விட்டுப் போம்.

எ - து. உ - ம். எ - னின். வானே முதல் களைந்தவழி அங்ஙனந் தோன்றுவதும் வேறொன்றெனக் கோடும் ஞான சொரூபமென்றற்குப் பிரமாணமென்னையென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ - ள்.) சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்து என்ன—(ஏகதேசவுணர்வால்) சுட்டி உணரப்படுவதாய பிரபஞ்சத்தை (மேற்கூறியவாறே ஒரோவொன்றாகச்) சுட்டி அசத்தென்று கண்டு கழித்துக்கொண்டு சென்றவழி, இனிச் சட்ட உளது சத்தேகாண்—முடிவின்கட் செம்மையே கோசரமாவது (யாது அஃது அவ்வசத்தின் வேறாகிய) சத்தேயாம் அதனையறிவாயாக. (அற்றேல் அசத்தின் வேறாய் அங்ஙனந் தோன்றுஞ் சத்தாவது உயிரேயாமென அமையுமெனின்), சுட்டி உணர்ந்த நீ சத்து அல்லை—(இதுகாறும் அசத்தோடுகூடிச்) சுட்டியறிந்துவந்த நீ (அசத்தின் வேறாய் அங்ஙனந்தோன்றுஞ்) சத்தாவாயல்லை, (அற்றேல் இச்சுட்டுணர்வு எனக்கு நீங்குவதின்றுபோலு மெனின்) தைவம் (ஆய்) உண்மையைப்புணர்ந்து—(அசத்தின் வயப்பட்டு நின்று சுட்டி அறிந்துவந்த நீ அதனை யொழிந்து அங்ஙனந் தோன்றிய) சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்

* 'குறித்தடியின்' சித்தியார். க. உ-௯.

தால், அதனால் பொய் விட்டுப்போம்—அப்புணர்ச்சியானே சுட்டுணர்வாகிய அப்பொதுவியல்பு நின்னைவிட்டு நீங்கும் (எ - று).

என்னவென்றது உபசாரவழக்கு.

சட்டவென்பது செப்பமுணர்த்தி நிற்பதோர் அகரவீற்று இடைச்சொல்; அது சட்டம்என இழிவழக்கில் மகரவீறாய் மரீஇயிற்று.

அசத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

உண்மை சத்தென்பன ஒருபொருட் கிளவி.

தைவம்ஆய்என ஆக்கச்சொல் வருவித்துரைக்க.

புணர்ந்தாலென்பது புணர்ந்தெனத் திரிந்தது. உண்மைக்குத் தைவமாதல் புணரின்என உருபுமயக்கமாகக்கொண்டு உரைப்பினும் அமையும்.

பற்றறக் கழிந்தொழியும் என்பார் விடும்என்னாது விட்டுப் போம் என்றார்.

*கண்டதை அன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்
அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப்—பண்டணைந்த
ஊனத்தைத் தான்விடுமாறு உத்தமனின் ஒண்கருட
சானத்தின் தீர்விடம்போல் தான்.

எ - து. உ - ம், எ - னின். அசத்தை அசத்தென்று கண்டொழியுமாறும் ஒழிந்தவழி உண்மையைத் தைவம் புணருமாறும் புணர்ந்தவழி அதனாற் பொய்விட்டுப் போமாறும் யாங்ஙனமென்பாரை நோக்கி அவற்றைத் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ - ள்.) கண்டதை அன்று அன்று எனக்கண்டு அசத்து ஆய் விட்டு—சுட்டியுணரப்பட்ட பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்றுஎன ஒரோவொன்றாக வைத்து நோக்கி அசத்தென்றொழித்து, ஆன்மாவில் அண்டனை ஆய்ந்து—(அவ்வாறு கண்டொழிந்த) தன்னறிவின்கண்ணே (சுட்டுணர்வின்றி நின்ற) கடவுளை ஆராய்ந்து, உணர—சோகம்எனப் பாவிப்பனாயின், உத்தமனின் பண்டு அணைந்த ஊனத்தைத் தான் விடுமாறு—(அப்பாவகத்தான் அத்துவிதமாய் விளங்கித் தோன்று) முதல்வனால் அனாதியாய்க் கூடிநின்ற பொதுவியல்பைத் தான் விட்டு நீங்குமாறு, ஒண் கருடசானத்தின் தீர்விடம்போல்—ஒள்ளிய

* 'கண்டவிவை' சித்தியார். க.-ந-எ.

கருடதியானத்தில் (விளங்கித் தோன்றும் மந்திரதைவிக கருடனால் அப்பாவகன்) விடத்தைத் தீர்த்துக்கொள்ளுமாறு போலாம் (எ - று).

தானென்பது முன்னையது எழுவாய், பின்னையது அசை.

சானம் பாகதச்சிதைவு,

கருடதியானமாவது யாதெனிற் கூறுதும்; ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம் எனக் கருடன் மூவகைப்படும். பொருள்தோறும் இவ்வாறு கண்டுகொள்க. அவற்றுள், உலகத்திற் காணப்படுங் கருடன் ஆதிபௌதிககருடன், அதற்கதிதெய்வமாகிய மந்திரம் ஆதிதைவிக கருடன், அம்மந்திரம் இடமாகநின்று மாந்திரிகனுக்குப் பயன்கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிககருடன் எனப்படும். அம்மூன்றனுள் ஈண்டுக் கருடனென்றது கருடனுக்கு அதிதெய்வமாய மாந்திரிகனுள்ளத்தின் அதுபோல் வைத்துத் தியானம்செய்து கணிக்கப்படும் மந்திரரூபமாகிய ஆதிதைவிககருடனை. அதனைப் பாவித்தலாவது நாடோறும் பயின்றுவந்த பயிற்சிவிசேடத்தால் அம்மந்திரரூபமே தானாக அநன்னியபாவனை செய்து தன்னறிவு அதன் வயத்ததாம்படி உறைத்து நிற்றல். அவ்வாறு நின்று அம்மந்திரக்கண்கொண்டு பார்ப்பவே அஃதவ்விடவேகத்தை மாற்றுதல் ஒருதலையாகலின் அப்பாவனை ஈண்டைக் குவமையாயிற்று. புள்ளு விலங்கு மரமுதலியவற்றுக்கெல்லாம் அதி தெய்வமந்திரமுளவென்பதூஉம், மந்திரங்களைக் கணிப்போன் படிகம்போல மந்திரசொரூபியாவனென்பதூஉம் சர்வஞ்ஞானோத்தரமுதலியவற்றுட் காண்க.

இதனாலே கருடபாவனை அசத்தியமென்பார் மதம் போலியாயவாறும் உணர்க. அல்லதூஉம், பாவனை போலியாயவழி அது பயன்றருமாறுயாண்டையதென்றொழிக.

## விளக்கம்

### மெய்யுணர்வு

இந்நூற்பாவின் இரண்டாங்கூறு முதற் கூற்றின் புறனடை ஆகும். முதற் கூற்றில் 'அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க' என்ற இடத்து அத்தகைய ஞானக்கண்ணைப் பெறுமாறு எங்ஙனம் என்று அவாய் நிலை தோன்றும், அவ் அவாய்நிலையை நீக்குவது இரண்டாங்கூறு. அதனால் இது முதற்கூற்றின் புறனடையாகும்.

மெய்யுணர்வு என்பது விழுமிய முழு முதல்வனின் அழிவில் வடிவம் ஆகும். ஆண்டவனின் வடிவம் உண்மை அறிவு இன்பம் என்னும் மூன்றுமேயாம். உண்மையை அம்மையாகவும், அறிவை அப்பனாகவும்,

இன்பைப் பிள்ளையாகவும் உருவகப்படுத்தி உரைக்கப்படும். இம்மூன்றன் கலப்பே வாழ்வு. இவையே குடும்பம். இவற்றையே அம்மை அப்பன் பிள்ளை என்னும் சிறப்புத் திரு உருவமாகத் திருக்கோவில்களில் வைத்து வழிபாடியற்றி விழா நிகழ்த்தி வேண்டுவபெற்று இன்புற்று வருகின்றோம். இம் மூன்றையும் திருவள்ளுவ நாயனார் தாம் அருளிய கடவுள் வாழ்த்தில் முறையே முதல் மூன்று திருக்குறள்களில் கட்டுரைப்பாராயினர்.

இம் மெய்யுணர்வைத் திருவருள் துணையால் நாம் உணர்ந்து அதன் வழித்தாய் மெய்யான இன்பம் எய்துதற்குத் தடையாக இருப்பது பொய்ப் பொருளாகிய காரிய உலகத்தின் காட்சியேயாம். மெய் என்பது நிலைப்பது. பொய் என்பது நிலையாதது. நிலையாதது எனினும் தோன்றி மறைவது எனினும் ஒன்றே. தோன்றி மறைவது என்பது காரணத்தினின்றும் காரியமாய்ப் பருமையாய்த்தோன்றிச சின்னாள் இருந்து பின் காரணத்தின் கண் நுண்மையாய் மறைவதாகும்.

காரிய உலகக்காட்சியை அகன்று கடவுளைக்காண்பதே மெய்யுணர்வு. அதன்வழித்தாவதே கலப்பு; அதனை மறவாமையே பேரின்பம். கடவுளைத் தொல்லோன் எனக் கூறுவோம். தொல்லோன் துணை தொடர்பு தோன்றும் நலம்புரிய, இல்லைதொடர் பல்லதற்கிங் கெண், என்றபடி தொல்லோன் துணை பொது. தொடர்பு சிறப்பு. நல்லவர்க்கு ஆண்டவன் துணையும் தொடர்பும் உள அல்லவர்க்கு ஆண்டவன் துணையுண்டு; ஆனல் தொடர்பு இல்லை. ஆண்டவன் துணை என்பது அவன் ஆட்சிக்குள் இருப்பது. தொடர்பு என்பது அவனை மறவா நினைவாய் அன்போடு ஒழுகுவது. தொடர்புடையார் துன்புறார். தொடர்பிலார் துன்புறுவர். தொடர்புடையார் என்றும் இன்புறுவர்.

இதனை ஓர் ஒப்பில் வைத்துக் காணுங்கால் ஆசிரியன் துணை கல்லார்க்கும் கற்றாரக்கும் ஒப்ப உண்டு. ஆனல் கல்லாதார்க்கு ஆசிரியன் தொடர்பு இன்று. கற்குங் கருத்துடையார் கல்லூரிக் காட்சியையும் விளையாட்டின் மாட்சியையும் விடுத்து விழைந்து பாடத்தையும் படிப்பிப்பாரையும் நினைந்து தொடர்புற்று இருப்பதையும், அஃதிலார் மெய்ந்நூலைப் பெற்று நூலுறைவனப்பையும், நூல்கட்டட உறுதியையும், அதன் தாளின் உயர்வையும், அச்செழுத்தின் மாண்பையும் எண்ணி எண்ணி நூலின் உள்ளுறை பொருளை நாடாது உளம் களிப்பதையும் ஒக்கும். இவைபோன்றே நாமும் உருவும் திருவும் அமைந்த உடலையும், வளமும் வனப்பும் அமைந்த உலகத்தையும் எண்ணி எண்ணி இறுமாந்து சிறுமையராய்ப் பிறப்பிறப்பிற்குட்பட்டுப் பெறும் பொருளையும் பேரின்பத்தையும் இழந்து பெருந் துன்பம் எய்தி வருகின்றோம். இவ்வுண்மை தேர்ந்து தெளிதலே மெய்யுணர்வாகும். இதனையே "அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞான சொரூபமென்று உணரற்பாற்று" என ஓதி அருள்வாராயினர்.

## உருவகம்

'அசத்தாயுள்ள' என்றது சத்தாகிய காரணமாயுள்ள மலமாயா கன்மங்களை அன்று என்பதனை உணர்த்தற்பொருட்டு. சத்தாயுள்ள என்பது நிலையாய் உள்ளது என்று பொருள். அசத்தாயுள்ள என்பது நிலையுதல் இலவாகிய உடல்கலன் உலகம் உண்பொருள் முதலியவற்றை என்க. அசத்தாயுள்ள உலகம் எனக் கூறாது வன்னபேதங்களை எனக் கூறியது உருவகம். இதுவே உடம்பொடு புணர்த்தலால் எதுப் பொருளையும் குறிப்பதாயிற்று.

**காண**

நூற்பாவின்கண் 'பாசம் ஒருவ' என்றிருப்பதே இதன்கண் காண என வலியுறுத்தப்பட்டது. ஒருவுதல் விட்டு நீங்குதல். ஆண்டவன் குறைவிலா நிறைவு. ஆவி கூடும் நிறைவு. மலமாயைகன்மங்கள் கொள் நிறைவு. இவற்றை முறையே வியாபகம், வியாப்பியம், வியாத்தி என்ப. பரம்பியபொருளுக்கு ஒருவுதல் விட்டு நீங்குதலன்று. அப்பொருளோடு உளம் ஒட்டுதல் கூடாதென்று அறிவிற் காண்டலேயாம். அதுபற்றியே காண என்றருளினர். இதனையோர் எடுத்துக்காட்டால் விளக்குதும். நல்லார் பொல்லார் நிறைந்த நானிலமும் பள்ளியும், நல்லாரைச் சார ஓளத்தாம் என்பதனுல் நானிலத்தில் மக்களும் மாக்களும் நல்லாரும் பொல்லாருமாய் விரவியிருப்பர். நாம் இந்நானிலத்தைவிட்டு வேறெங்கும் செல்ல ஒண்ணாது. பொல்லாரைவிட்டு நல்லாரைச சார்வதற்கு நாட்டங் கொண்டு உளம் நாடி ஒழுகுவதே ஒருவுவதாகும். இதுபோன்றதே கல்லூரியில் கற்றாரும் கல்லாரும் விரவியிருப்பது. இடத்தால் விலகுவது எவர்க்கும் ஒண்ணாது. உள்ளத்தால் ஒட்டாது அறிவிற்கண்டு அகலுவதே அமைவுடைத்து. அங்காடியில் ஆவனவும அல்லனவும் பொங்கிக் கிடப்பினும் ஆவனவேகொள்ளும் அறிவுடைமையும் இதற்கு ஒப்பாகும்.

**வெண்மை**

படிகம் இயற்கையிலேயே வெண்மை நிறம் வாய்ந்தது. என்னை? வெண்மை அல்லாவிடின் ஏனை நிறஙகளை ஏற்றுக்கொள்ளா ஆகலான் என்க. வெண்பளிங்கு செம்மை நிறமாகக் காண்பது அகத்துச் செந்நிறப் பொருள் தங்கியிருப்பதனுல் என்க. அதுபோல் நாமும் மாயா காரிய உலகத்தைக்கண்டு மருளுற்றுத் தெருளுணர்வு இழந்து இருளின் வழித் தாய்ச் சிறப்பென்னும் செம்பொருளை மறந்து பிறப்பென்னும் பேதைமை உறுகின்ரும். ஆசான் அறிவுறுத்தும் ஐந்தெழுத்து அருமறையால் தெருளுற்றுத் திருவருள்வழித்தாய்ச் சிவத்தைசசார்ந்து இன்புறல் சிறப்பு. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

" ஒப்பாயிவ் வுலகத்தோ டொட்டி வாழ்வான்
ஒன்றல்லாத் தகைத்தாரோ டுடனே நின்று
துப்பாரும் குறையடிசில் துற்றி நற்றுன்
திறம்மறந்து திரிவேனைக் காத்து நீவந்து
எப்பாலும் நுணஉணர்வே ஆக்கி என்னை
ஆண்டவனே எழிலானைக் காவா வானோர்
அப்பாஉன் பொற்பாதம் அடையப் பெற்றல்
அல்லகண்டங் கொண்டடியேன் என்செய் கேனே."

—சா. சாஉ - ௩

அல்லகண்டம் - துன்பம். நுண் உணர்வு - மெய்யுணர்வு ; ஞான சொரூபம்.

**மேற்கோள்**

**இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொருபம் என்றது.**

**ஏது**

**வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பு என்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிக சொருபமாந் துணையான்.**

**உறை**

உலக உணர்ச்சி மெய்யுணர்வை மறைக்கின்றது. ஆவிகட்குப் பருவுடல் நுண் உடல் முதலுடல் மூன்றும் கழிந்தால் திருவருள் உடலோடு திகழும். இதனை ஓர் ஒப்பில் கூறினல் ஓங்கெழுத்தும் மேலுறையும் உன்னின் உறைநில்லா ஈங்கெழுத்தாம் ஒப்பறிவுக்கெண் என்பதாகும். அஃதாவது நாம் பெறும் எழுத்து அல்லது கடிதம் மேலுறையோடு வருகின்றது அவ்வுறை அதனை மூடி யிருக்கின்றது. ஆனல் அது நிலை நில்லாது; உள்ளார்ந்த தள்ளரியகடிதமே நிலைத்திருப்பது. உறையில் மயங்கி அக்கடிதப் பயனை இழப்பார் எவரும் இலர். அதுபோல் நாமும் உலகுடல் மயக்கில் வீழ்ந்து உண்மைப்பொருளை மறந்துவிடுதல் கூடாது. உறை பற்றுக்கோடாயிருந்த கடிதம் உறைகழிந்தால் பற்றுக்கோடின்றி இருப்பதுபோல் முதல்வனும் பற்றுக்கோடின்றி விளங்கித் தோன்றுவன். பற்றுக்கோடின்மை - நிராலம்பம். பற்றுக்கோடுண்மை - ஆலம்பம்.

**மெய்ம்மை**

"ஈண்டுப் **பாசம்** என்றது காரிய உலகத்தை என்பார், **அசத்தாயுள்ள** என்றும், எதுப்பொருளை உடம்பொடு புணர்த்துக் காட்டுவார் உலகத்தை என்னது **வன்னபேதங்களை** என்றும், பரவற்பொருளுக்கு ஒருவுதலாவது காட்சி வேறுபாடேயாம் என்பார் அசத்தென்று ஒழிய என்னது **அசத்தென்று காண** என்றும், தண்ணிழலாய் நிற்றல் புதிதன்று என்பார் **உளதாய் நிற்பது** என்றும், ஈண்டுப் பதி என்றது பதிஞானத்தை என்பார் **ஞானசொருபம்** என்றும், இது நுகர்வின்றிச் சொல்லளவையின் அறியவாராதென்பார் **உணரற்பாற்று** என்றும் உரைத்தார்" (பேருரை).

'நிர்க்குணனய்....................வந்து.'

**அளந்தறிதல்**

ஆவிகளை அளந்தறிவதற்கு வாயில் மூன்று. அவை, குணம் மலம் இன்பம் என்பன. இவற்றுள் குணம் மூன்றுவகைப்படும். அவை, அமைதி ஆட்சி அழுந்தல் என்பன. (௧௨௫) அமைதிக் குணத்தின் தன்மை ஒளி அமைதி இன்பமொரு மூன்றும் ஓரின், தெளி அமைதிப் பண்பாகும் தேர் என்பதற்கிணங்க வடிவம் ஒளியாயும் அமைதியாயும் இன்பமாயும் காணப்படும். இவற்றை முறையே 'சத்துவகுண விருத்தியாகிய பிரகாசரூபம் சாந்தரூபம் சுகரூபம் எனவும் கூறலாம். ஆட்சிக்குணத்தின் தன்மை ஆள்வினை அச்சமோடல்லல் ஒரு மூன்றும், நாளாட்சிப் பொற்பாகும் நாடு என்பதற்கிணங்க ஆள்வினை, அஞ்சுவித்தல், அல்லலுறல் எனும் வடிவம் புலப்படும். இவற்றைப் பிரவிருத்திரூபம் கோரரூபம் துக்கரூபம் என்க. அழுந்தற்குணத்தின் தன்மைகள் அடிமை அறியாமை அவா வெனுமோர் மூன்றும், படிஅழுந்தற்பண்பாகும்பார் என்பதற்கிணங்க அடிமை அறியாமை அவா எனும் வடிவம் புலப்படும். இவற்றை முறையே நியமனரூபம் மூடரூபம் மோகரூபம் என்ப. இங்ஙனம் அளவிட்டறியும் இக்குணங்கள் மாயாகாரியமாகிய மூலப்பகுதியிலுள்ளன. இம்மூலப்பகுதி (௧௨௫) உடல்மெய் என்று கூறப்படும். முதல்வன் இம் மாயாகாரியக்குணம் கடந்தவன் ஆதலின் அவனைக் குணமிலி என்பர். குணமிலி எனினும் நிர்க்குணன் எனினும் ஒன்றே. அவன் முக்குணங் கடந்தவன் ஆதலின் அவனை இக்குணம் வழியாக அறிதல் முடியாது. இதுவே அன்றி ஆண்டவன் ஒருகுணமும் இல்லாதவன் என்பதன்று;

குணம் இன்றெனில் பொருளும் இன்றாகும். அவனுக்கு அருட் குணங்கள் (௺௧) எட்டு உள்ளன.

உணர்வுமெய் முக்குணங்களையும் கடந்து குணமிலியாய் இருப்பது. குணமிலி எனினும் நிர்க்குணம் எனினும் ஒன்றே. உணர்வுமெய் (௧௩௪) எனினும் மிச்சிரப் பிரபஞ்சம் எனினும் ஒன்றே இதன்கண் குணமின்றெனினும் மலகன்மம் விரவியிருக்கின்றன. மலத்தின்காரியம் (௧௧௭) ஏழு. அவை, மயக்கம், மதம், அவா, கவல், உட்சூடு, வாட்டம், வியப்பு என்பன. இவற்றை முறையே மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்ப. இத்தன்மைகளாகத்தான் ஆவிகளை அறிய முடியும். கடவுள் இவற்றைக் கடந்தவனாதலின் இவற்றான் அறியப்படான். வினையின் காரியம் இன்பதுன்பம். வினையையும் கடந்தவனாதலின் வினைப்பயனும் இன்பதுன்பமாக அளவிட்டறியப்படான். அதனாலேயே அவன் மலமிலி அல்லது நின்மலன் என்று அழைக்கப்படுகின்றனன்.

உணர்த்துமெய் மலகன்மங்கள் விரவாதது. உணர்த்துமெய் எனினும் சுத்தப்பிரபஞ்சம் எனினும் ஒன்றே. இது மலமில்லாத தூயது எனினும் காரியப்பட்டு நிற்றலால் அழிவினை உடையது; இதன்கண் தோன்றும் இன்பும் அழிவினையுடையது. இவ்வின்பம் வியக்கத்தக்கது. வியக்கத்தக்கதென்பதனைச் சாதிசயானந்தரூபம் என்பர். கடவுள் இன்பம், எடுப்பிலா இன்பம் வியப்பிறந்த இன்பம், கடுக்கும் நிரதிசய இன்பு. மேலிலா இன்மை வியப்பிறந்த இன்பினை, நூல்சொல் நிரதிசய இன்பு. ஆகவே கடவுள் இன்பம் அழிவில்லது; அளவிறந்தது. இவ்வுண்மை வரும திருப்பாட்டான் உணர்க:

"அறவே பெற்றார் நின்அன்பர் அந்த மின்றி அகநெகவும்
புறமே கிடந்து புலைநாயேன் புலம்பு கின்றேன் உடையானே
பெறவே வேண்டும் மெய்யன்பு பேரா ஒழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவிலா மாளா இன்ப மாகடலே."

—அ. பிரார்த்தனை-௧.

பேரின்பப் பெருங்கடலுக்கு பேராமுதலிய ஏழு அடைகள் புணர்த்தப்பட்டமை கடல் ஏழு என்னும் வழக்குநோக்கி என்க. நம்பியாரூரர் திருவாரூரின்கண் திருவருளால் பரவைநாச்சியாரைக் கண்ணுற்றனர். கண்ணுற்றஞான்று காதல்வெள்ளம் கடல்போல் பரந்தது. ஆண்டும் சேக்கிழார் அடிகள் ஏழுபரவை அமைத்துள்ளனர். பரவை-கடல். அத்திருப்பாட்டு வருமாறு:

"பேர்பரவை பெண்மையினில் பெரும்பரவை விரும்பல்கு
லாரபரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
சீரபரவை யாயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட என் ஆசை எழுபரவை."

—௧௨. தடுத்தாட்-௧௪௮.

நிரதிசய இன்பம் - தன்னின் மேம்பட்ட இன்பம் இல்லாதது. உயர்வற உயர்ந்த நலம். தனக்குவமை இல்லாதான் இன்பமும் தனக்குவமை இல்லதே; வியப்பிறந்தது. சாதிசய இன்பம் - வியப்புடன் கூடியது; உவமையுள்ளது.

ஆவியின் பொது இயல்பில் குணமுளன், மலமுளன், இன்புளன் என்று அறியப்படுமாறுபோற்கூட ஆண்டவன் அறியப்படான் என்பார் 'என்றும் இன்பம் பெருகும் இயல்பினன்' என்றார். இப்பொருளே பயப்பது நித்தியானந்தன் என்பது. முதல்வன் காரியப்பாட்டின் எற்றுரையும் கடந்தவன். தற்பரமாய் நின்ற என்பது அவனருளாலே அவனுடன் கலந்து ஆரா இன்பம் நுகர்வது. தனிமுதல்வன் என்பது எவ்வாற்றானும் ஒப்பிலான் என்பதே. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

நின்னாவார் பிறரன்றி நீயே ஆனாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்தும் ஆனாய்
மன்னானாய் மன்னவர்க்கோர் அமுதம் ஆனாய்
மறைநான்கும் ஆனாய்ஆ றங்கம் ஆனாய்
பொன்னானாய் மணிஆனாய் போகம் ஆனாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே உன்னை
என்னானாய் எனஆனாய் என்னின் அல்லால்
ஏழையேன் என்சொல்லி ஏத்து கேனே. —௬ கூ௫-எ.

### சோதிக்குட்சோதி

சோதி - சுட்டிறந்தறியும் அறிவு. சிற்றறிவு - அறிந்ததை உணரும் உணர்வு. சுட்டிறந்தறிவது எனவே சிற்றறிவையும் கடந்தது. முற்றறிவு காட்டாக உணர்வது. உணர்த்தி நுண்மையாய் உள்நிற்பதால் சோதிக்குட் சோதி என்றார். வெளிப்படுத்தானே விளங்கித் தோன்றும் தன்மையன். அகத்துப்பாடத்தைப் புறத்துத்தானே புகன்றாலன்றிப் புரிய ஒண்ணாததை ஒக்கும் இது.

" எங்கும்தான் என்னில்நாம் எய்த வேண்டா
எங்குமிலன் என்னின்வேறு இறையும் அல்லன்
அங்கம்சேர் உயிர்போல்வன் என்னின் அங்கத்து
அவயவங்கள் கண்போலக் காணா ஆன்மா
இங்குநாம் இயம்புந்தத் துவங்களின்வைத் தறிவது
இறைஞானந் தந்துதாள் ஈதல்சுடர் இழந்த
துங்கவிழிச் சோதியும்உள் சோதியும்பெற் றாற்போல்
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே."
—சித்தியார். அ. ௪-௩அ.

தற்பரன் - தனக்குப்பரன். 'கு' நான்கன் உருபு. தன் - ஆவி ஆன்மா. அற்புதம் - ஈண்டுப்பாழின்மேற்று. பாழ் - சூனியம். ஆனா அறிவு - தன் அறிவின்கண நீங்காது நிலைபெறும் அறிவு.

### தோற்றமுறை

வான் வளி தீ நீர் நிலம். இவற்றைக்குறிப்பது வானே முதல்களையின் என்பது. இவ் ஐந்து பூதங்களுக்கு நுண்மையாகிய தன்மாத்திரை ஐந்துங்காரணம். நுண்மையிலிருந்து தோன்றியவற்றை ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியதாகக் கூறுவதன்கருத்து: ஓசையினின்றும் வான் தோன்றிற்று. ஊற்றினின்றும் வளி தோன்றிற்று. ஆனால் வானின் நின்றும் வளி தோன்றிற்று என்பது, வான் ஓசை ஒன்றே உடையது; வளி ஓசை ஊறு என்னும் இரண்டு பண்புகள் உடையது; வளியின் இயற்கைப்பண்பு ஊறு; ஓசை வானிடமாகப் பெற்ற செயற்கை; அஃது

அதற்குச் சிறப்பு; அவ் அடையின் சிறப்பை உணர்த்தவே வானின் நின்றும் வளி தோன்றிற்றென்பது. இப்படியே மற்றவையும் ஒவ்வொன்றினின்றும் தோன்றிற்று எனக் கூறுவது. அஃதாவது ஊற்று நுண்மையினின்றும் தோன்றிய வளி அந்நுண்மையொடு விரவிய வானத்திற்குக் காரணமாகிய ஓசை நுண்மை உண்மையால் சிறப்போடுகூடி நின்ற ஊற்று நுண்மையை ஓசை நுண்மை என்றே கூறினர். இங்ஙனம் மற்றவற்றையும் கண்டு கொள்க. ஓசை நுண்மை - சத்ததன்மாத்திரை. ஊற்று நுண்மை - பரிசதன்மாத்திரை.

## ஒடுக்கமுறை

ஒடுக்கமுறை பற்றி என்பது நிலம் நீரில் ஒடுங்க, நீர் தீயில் ஒடுங்க, தீ வளியில் ஒடுங்க, வளி வெளியில் ஒடுங்க, வெளி அதன் மேலுள்ள மெய்யில் ஒடுங்க இங்ஙனமே ஒவ்வொன்றும் மேலுள்ளனவற்றில் ஒடுங்கி இறுதியாக முப்பத்தாறும் மெய்யாகிய சிவத்தில் ஒடுங்க அனைத்தும் நுண்மையாய் மாயையில் ஒடுங்கும் என்க. இம்முறையையும் குறிப்பது 'வானே முதல்களையின் வந்து' என்பதாம். ஒடுக்கமுறை கூறும் திருப்பாட்டு வருமாறு :

“ இருநில னதுபுன லிடைமடி தரவெரி புகஎரி யதுமிகு
பெருவளி யினிலவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட
இருவர்க ளுடல்பொறை யொடுதிரி எழிலுரு வுடையவ னினமலர்
மருவிய அறுபத மிசைமுரல் மறைவன மமாதரு பரமனே.”

—க. உஉ-எ.

இவ் உண்மை வரும் திருப்பாட்டானும் உணர்க :

“ வான்கெட்டு மாருதம் மாய்ந்து அழல்நீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டென் உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ.”

—அ. திருத்தெள்-கஅ.

## இலக்கணம்

'ஓ'காரம் எதிர்மறை. இது, 'தோன்றானே' என்பதன்கண் காணப்படுவது. தோன்றுவன் என்பது பொருள். 'ஏ'காரம் அசை. இவ் ஏகாரம் ' வானே' என்பதன்கண் காணப்படுவது.

'ஆய்' என்பது உண்மை குறித்து நின்றது. இவ்ஆய். 'நிர்க்குணனாய், நின்மலனாய், நித்தியானந்தனாய்த் தற்பரமாய்' என்ற இடத்துவரும் ஆக்கச்சொல். இஃது என்றும உள்ளது என்பது பொருள். 'ஆனா அறிவாய்' என்ற இடத்துள்ள 'ஆய்' என்னும் ஆக்கச்சொல் வேறுபாடு குறித்து நின்றது. முன்னர்ப் பாழ்போல் தோன்றுகின்றவன் பின் அறிவாய்த் தோன்றுவன் என்பது வேறுபாடு.

முதல்வன் தோன்றானே என்பது முதல்வனதறிவு தோன்றாதோன் என்பது பொருள். குணகுணிகட்கு வேற்றுமை இன்மையின் ஞானத்தை முதல்வன் என்று கூறியது எற்றுரை.

' சுட்டி............................யோம்.'

## அழிவில்லது

கருவியாலறியும் ஒருபுடை உணர்வால் சுட்டியுணரப்படும் உலகு உடல்கலன்களை அழிவுடையன என்று கழித்தவழிப் புலனாவது அழிவில்லதாகிய முழுமுதலேயாம். இங்ஙனம் அறியும் முறைமையை ஆவி என்று கொண்டால் என்னெனின்? என்றும் ஒருபடித்தாயிருப்பதெனின் சென்று சார்ந்து திரிபெய்த வேண்டுவதின்று; ஆதலால் ஆவி அன்றென்க. கண்டு கழித்து முதல்வன் எனக் கொண்ட அளவை ஒழிபளவை ஒழிபு எனினும் பாரிசேடம் எனினும் ஒன்றே.

## பொது இயல்பு

ஆவிக்குப் பொது இயல்பு சுட்டுணர்வு. இவ்வுணர்வு உலகுடல் கரணங்களின் வழிவருவது. இவற்றைக் கண்டு கழித்தால் செம்மையாக நிற்பது முழுமுதலேயாம். ஆவி அச்செம்பொருட்கு அடிமையாய் அதனைச் சார்ந்து செம்மையாய் நிற்கும். அதன் சார்பாலேயே அழி பொருளைக் கண்டு கழிக்கும். நிலைபேறின்றி ஒரோவொன்றாகச் சுட்டியறிந்த ஆவி என்றும் ஒரு தன்மைத்தாய் நிலைபெற்று நிகழும் அறிவாகிய முதல்வன் ஆகாது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

> "சத்திது என்ற சத்துத் தானறி யாத சத்தைச்
> சத்தறிந் தகல வேண்டா அசத்திது சத்திது என்றோர்
> சத்திருள் ஒளிய லாக்கண் தன்மைய தாம சத்தைச்
> சத்துடன் நின்று நீக்கும் தன்மையால் சதசத் தாமே."
>
> —சிவப்பிர : ௩ - ௬

> "பிறத்தலும்பிறந் தாற்பிணிபட வாய்ந்தசைந்துட லம்புகுந்துநின்று
> இறக்குமா றுளதே இழித்தேன் பிறப்பினைநான்
> அறத்தையே புரிந்த மனத்தனாய் ஆர்வச் செற்றக்குரோதநீக்கியுன்
> திறத்தனாய் ஒழிந்தேன் திருவாரூர் அம்மானே."
>
> ௪. ௨௦ - ௮

## என்ன

"சுட்டி அசத்து என்ன" என்றதன்கண் உள்ள 'என்ன' ஆகும். இதன் பொருள் என்று சொல்ல என்பதன்று; என்று கண்டு கழிக்க என்பதாகும். இஃது எற்றுரை. இதற்கு ஒப்பு துன்பம் என்ன இன்பம் உண்டாம். இதன்கண் துன்பம் என்ன என்பதற்குப் பொருள் துன்பம் என்று விட்டு நீங்க என்பதாம். தைவம் - தேவனதுடைமை.

## விட்டுப்போம்

பற்று பகை என்பன பொருளின்கட் சென்ற உள்ளமும் பொருளை நுகர்ந்த பின்னும் அப்பொருள் வேண்டுமென்னும் அவா ஆகும். விடுதலும் போதலும் நீங்குதல் என்னும் பொருளையே தருமேனும் முன்னது புறத்துப் பொருள்கள்மேல் செல்லும் ஆசை அகலுதல். பின்னது பயிற்சி வயத்தான் அகத்துள்ள ஆசை அகறல். அகத்துள்ள ஆசை அகன்றிலதேல் புறத்துப் பொருளைக் காணினும் கேட்பினும் பற்றுத் தோன்றும். இப்பற்றே அவா எனப்படும் இவ்அவாவே பிறவிக்கு வித்து. இப்பகையும் அற்றது என்பது குறிக்கவே 'பொய் விட்டுப்போம்' என்றார். விட்டுப்போதல் பற்றறக்கழிதல். பகை-வாதனை.

**இலக்கணம்**

'சத்தேகாண்' இதன்கண் உள்ள ஏகாரம், அசத்து அன்று என அசத்தைப் பிரிக்கின்றமையின் பிரிநிலை. உண்மையும் சத்தும் ஒரு பொருளையே குறிக்கின்றன. உண்மையைப் புணர்ந்தால் என்பது சத்தைப் புணர்ந்தால் என்பதே. தைவம் என்பது தைவமாய் என ஆக்கச் சொல் வருவிக்கவேண்டும். இது மாணாக்கனைப் படிப்பதை ஒக்கும். ஆசான் ஏற்றுக்கொள்ளாத வழி மாணாக்கனாவது இன்மைபோல் ஆண்டான் ஏற்றுக்கொள்ளாதபோது தைவம் ஆவதும் இல்லை. உண்மையைத் தைவம் என்பது இரண்டாம் வேற்றுமை உருபு. உண்மைக்குத் தைவம் எனக்கொண்டால் நான்காம் வேற்றுமை உருபு.

'கண்டதை......................தான்.'

**ஆய்ந்துணர்தல்**

உயிர் உடல் கலன் உறுப்பு முதலிய கருவியின் வாயிலாகப் 'பொருளல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருள்' உணர்வு சுட்டறிவு. சுட்டறிவால் அறியப்படும் பொருள்கள் அனைத்தும் அழிபொருள்களேயாம். ஆண்டவன் அழிவில் பொருள். தரையில் நடக்கும் காலால் தண்ணீரில் நடக்க ஒண்ணாது. தண்ணீரில் நடக்கும் கலத்தால் வானில் பறக்க ஒண்ணாது. அவைபோன்று சுட்டறிவால் சுட்டிறந்தறியும் தொல்லோனை அறிய ஒண்ணாது. இன்பினைக் காணவும் கருதவும் கூடும். இன்பைக் காணவும் கருதவும் ஒண்ணாது. ஆயின், கலக்கவும் நுகரவும் கூடும். இவையும் மேலதற்குக் காட்டாகும். அசத்து - அழிவுடைப் பொருள். சத்து - அழிவில் பொருள். காரியப்பொருள் அனைத்தும் கிழமை வேறுபாட்டால் முக்காலத்தும் புலனாகாமை பற்றிப் பொய்ப்பொருள் என்பர். எடுத்துக்காட்டு முயற்கோடு. கிழமை சேர்க்கை, ஒற்றுமை, அடை என மூவகைப்படும். ஈண்டுக் குடமில்லை என்றால் வேறொரிடத்துச் சேர்க்கைக் கிழமையாற் புலனாகும். ஈண்டு அடை அடைகொளிக் கிழமையாற் புலனாகவில்லை. முயற்கோடு இல்லை என்பது ஆவின்கண் ஒற்றுமைக் கிழமையால் உள்ளதாகிய கோடு முயலின்கண் அடை அடைகொளிக் கிழமையால் முக்காலத்தும் புலனாவதில்லை. முக்காலத்தும் புலனாகாமை பற்றிப் பொய்ப் பொருள் என்பர். என்றும் இல்பொருளைப் பாழ் என்பர். பாழ் எனினும் சூனியம் எனினும் ஒன்றே.

குடம் தோன்றிற்று என்பதற்குப் பொருள் அழுந்தற் குணமிகுதிப் பாட்டால் நுண்மையாய காரணத்தில் ஒடுங்கித் தோன்றா நிலை எய்திய குடம் ஆட்சிக் குணமிகுதிப் பாட்டால் பருமையாய் விளங்கித் தோன்றும் நிலை எய்துவது; இந்நிலை பரிய நிலையாகும். பரியநிலை எனினும் தூலாவத்தை எனினும் ஒன்றே. இது குணமிகுதிப் பாட்டால் விளங்கலும் விளங்காமையும் பற்றி அழிபொருள் என்ப. அரிசி மாவாதலும் மாவு பண்டமாதலும் பண்டம் தின்பதால் மறைதலும் காட்டாகக் கொள்க. ஆண்டவன் பாழுமன்று; பொய்ப் பொருளுமன்று; அழிபொருளும் அன்று: மெய்ப்பொருளே.

**எண்ணம்**

எண்ணம் எனினும் பாவனை எனினும் ஒன்றே. பொற்பணியாம் பொய்யே பொருளாம் எண்ணமிது, நற்பாவனையகம்பின் நாடு என்றருளினான். ஆசான் அருமறைபெற்ற மாணாக்கன் அறிவின்கண்

சிவம் விளங்கித் தோன்றுமாறு தன்னறிவு சிவத்துள் அடங்கித் தான் சிவ மாய் அச்சிவத்தால் இவர்தந்து ஊரும் பெற்றியால் எண்ணுதல். அங்ஙனம் எண்ணவே மாணுக்கனும் எண்ணத் தொடங்குவன். இது கையும காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவையை ஒக்கும்.

> " கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
> பழன வாளை கதூஉம் ஊரன்
> எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
> கையும் காலும் தூக்கத் தூக்கும்
> ஆடிப் பாவை போல
> மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே."
>
> —குறுந்தொகை, அ.

இப்பாவனை திருவருளான் பாவிக்கப்படுவது பற்றிப் "பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றி நோக்கே" (கூகஎ) என்று உமாபதி சிவநாயனாரும் அருளினமை காண்க. கற்பிப்பான் கற்பானை மாணவனைத் தேர்ந்தெடுத்தபின் மாணவன் தனக்கெனச் செயலின்மையும், கற்பிப்பான் சொல்வழி நிற்றலும் இயக்கும் வழி இயங்கலும், செய்விக்கும் வழிச் செய் தலும் பிறவும் செய்து உய்வன் அன்றே! அவ் ஒப்பினை ஈண்டுக் கொள்க. இம்முறையே காதலர்களுக்குள்ளும் ஆம். அகத்துமுறை செயதல் காதலிக் கும், புறத்துமுறை செய்தல் காதலனுக்கும் ஆம். இன்பம் அகத்தும் பொருள் புறத்துமாம். அறம் இன்பத்தின் பொருட்டும் வீடு பேற்றின் பொருட்டும் நிகழ்வது அகத்து முறையாம். பொருள் வளர்ச்சியின் பொருட்டு நிகழ்வது புறத்துமுறையாம். அகத்துமுறை நிறுத்தல் பெண் பாலார்க்கும் புறத்துமுறை நிறுத்தல் ஆண்பாலார்க்கும் உரியன. திரு வள்ளுவ நாயனார் பெண்பாலார் உரிமையை வாழ்க்கைத் துணை நலத்தின் கண்ணும், ஆண்பாலார் உரிமையைப் பெண்வழிச் சேறலின்கண்ணும் வரை யறுத்தருளினர். முறைநிறுத்துங்கால் இருபாலாரும் காதல் கைவிட்டுக் குற்றங்களைந்து கோடாட்டி முறை நிறுத்தல்வேண்டும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

> " தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்.
> அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
> பெண்ணேவல் செய்வார்கண் இல்."
>
> —திருக்குறள், ருசு, கூ0கூ.

பேணல் - உணவு, உணர்வு, உழைப்பு, உடை, உறையுள், உறவு முதலியவற்றால் தகாதன வேண்டினும் நீக்கித் தக்கன வேண்டாவிடினும் ஆக்கிப் பழியொடுபடா வழியொழுகுவித்து நலத்தின்கண் நிறுத்தல்.

மேற்கூறிய முறைகளைக் குறிப்பாற் கொள்ளத் தொல்காப்பிய முனி வரனும் உணர்த்தியருளினர் :

> " மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
> நினையுங் காலைப் புலவியுள் உரிய."
>
> —தொல். பொருள் - உஉஎ.

புலவி - முறை நிறுத்தற்காம் மிறை; மிறை - குற்றத்தாலேற்படும் பிணக்கு.

காதல் கைவிட்டு முறை நிறுத்திய அம்மையார் திருநீலகண்ட நாயனார் மனைவியார். அவ் அம்மையார் பிறப்புறுவார்க்கு ஏற்புடைத்தெனை உலகோர் கொள்ளும் பொருட் பெண்டிர் முயக்கம் பிறப்பறுத்துச் சிறப்புறுவார்க்கு இழிவுடைத்து என்றமையால் 'தாய் போற்கழறித் தழீஇக்' கொள்ளாது, ஆய்மனைக் கிழத்திக்குரிய அரும்பெரும் ஒறுத்தலே புரிந்தனர். அத்திருப் பாட்டு வருமாறு :

"மூண்டஅப் புலவி தீர்க்க அன்பனார் முன்பு சென்று
பூண்டயங் கிளமென் சாயல் பொற்கொடி அனையார் தம்மை
வேண்டுவ இரந்து கூறி மெய்யுற அணையும் போதில்
தீண்டுவீ ராயின் எம்மைத் திருநீல கண்டம் என்றார்."

—கஉ. திருநீல - கூ.

கழற்சிங்க நாயனார் காதல் கைவிட்டுத் தம் மனைவியார் கையை வெட்டினர் :

"கட்டிய உடைவாள் தன்னை உருவியக் கமழ்வா சப்பூத்
தொட்டுமுன் எடுத்த கையாம் முற்படத் துணிப்ப தென்று
பட்டமும் அணிந்து காதல் பயில்பெருந் தேவி யான
மட்டவிழ் குழலாள் செங்கை வளையொடுந் துணித்தா ரன்றே."

—கஉ. கழற்சிங் - க0.

எண்ணம் அல்லது பாவித்தலென்பது திருவருள்வழிநின்று சிவமாக வேண்டும் மாணவன் என ஆசான் எண்ண எண்ண மாணவனும் அங்ஙனமே எழுத்தோதுவார் ஆசான் ஓதப் பின் ஓதுவதுபோல் பாவித்துச் சிவமாவன். இது பெரியார் வாழ்த்தும் வாழ்த்தால் அவர் வழி நிற்பார் பெரும் பேறு எய்துதலை ஒக்கும். எனையா இறைவன் அருட்செயல் இவனமாட்டுக் காணப்படுதலின் இவன் இறைவனே என வாழ்த்தவும் இறைவனும் பயன் எய்தும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"செய்தவ வேடம் மெய்யில் தாங்கிக்
கைதவ ஒழுக்கமுள் வைத்துப் பொதிந்தும்
வடதிசைக் குன்றம் வாய்பிளந் தன்ன
கடவுள் மன்றில் திருநடம் கும்பிட்டு
உய்வது கிடைத்தனன் யானே உய்தற்கு
ஒருபெருந் தவமும் உஞற்றிலன் உஞற்றாது
எளிதினிற் பெற்றது என்எனக் கிளப்பின்
கூடா ஒழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற் கேற்பநின் தொண்டரொடு பயிறலின்
பூண்டவவ் வேடம் காண்தோறும் காண்தோறும்
நின்நிலை என்னிடந்து உன்னி உன்னிப்
பன்னாள் நோக்கினர் ஆகலின் அன்னவர்
பாவனை முற்றியப் பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன் போலும் ஆகலின்
எவ்விடத் தவருனை எண்ணினர் நீயுமற்று
அவ்விடத் துளைஎனற்கு ஐயம்வே றின்றே, அதனால்
இருபெருஞ் சுடரும ஒருபெரும் புருடனும்
ஐவகைப் பூதமோடு எணவகை உறுப்பின்
மாபெரும் காயந் தாங்கி ஒய்வின்று

அருள்முந் துறுத்த ஐந்தொழில் நடிக்கும்
பரமா னந்தக் கூத்த கருணையொடு
நிலையில் பொருளும் நிலையியற் பொருளும்
உலையா மரபின் உளங்கொளப் படுத்திப்
புல்லறி வகற்றி நல்லறிவு கொளீஇ
எம்ம னோரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய் தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகா தனவே."

—குமரகுருபரர். சிதம்பரமும்-௧௧.

## பயன்

பாவனை பயன்பெறும் என்பது உண்மை. அது கூத்தியற்றுவோர் நாடகமேடையாகிய கூத்தரங்கின்கண் தம்மைப் பிறர்போல பாவித்துக் கோலங்கொண்டு நடிப்பர். அது நடிப்பே எனினும் அப்பொழுதைக்கு மெய்ம்மையாம் என்பது மறுக்கொணா வாய்மை. பொற்கொல்லர் பொன்னினை எப்பணியாக ஆக்கவேண்டும் என்று எண்ணுகின்றனரோ அப்பணியாக அமைக்கின்றனர். இதுவும் எண்ணமாகிய பாவனைப் பயனே. பிள்ளைகளையும் மாணவர்களையும் பெற்றோரும் ஆசிரியன்மாரும் எவ்வண்ணம் ஆதல்வேண்டும் என எண்ணுகின்றனரோ, அவ்வண்ணம் ஆதல் திண்ணம். இதுவே பாவனைப் பயன். இவ் உண்மை வரும் திருப்பாட்டான் உணர்க.

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.
உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின்." —திருக்குறள், ௬௬௬, ௫௪௦.

## அகவழிபாடு

அகவழிபாடு எனினும் தியானம் எனினும் ஒன்றே. எண்ணம் வளர்ந்து திண்ணம் எய்திப் பயன் கைகூடும் முயற்சியே அகவழிபாடு. ஆருயிர்க்குக் கட்புலனும் உடலும், செவிப்புலனும் உடலும் இவ்வுடலுள்ளும் உயிருள்ளும் கலந்து நின்று இயக்கி இன்புறுத்தும் திருவருளும் என மூன்றன் பிணிப்பினால் முயற்சியும் பயனும் முற்றுகின்றன. இவற்றை முறையே யாக்கை, மறை, இதனை இயக்கும் திருவருள் மூன்றுக்கம் பொருட்கெல்லாம் ஆம் எனவும் கூறலாம். கட்புலனும் உடலை ஆதிபௌதிகம் என்பர். செவிப்புலனும் உடல் மறை. மறை எனினும் மந்திரம் எனினும் ஒன்றே. இம்மறையினை ஆதிதைவிகம் என்பர். தைவிகம் என்பது தெய்வத் தொடர்புடையது. உடலும் மாயா காரியம், மறையும் மாயாகாரியம் எனினும், ஒன்றின் ஒன்று சிறப்புடையது. இவற்றிற்கு ஒப்புத் தரையும் இருக்கையும் ஆகும். மேலும் கடிதத்தில் மற்றைய எழுத்துக்களும் கைச்சாத்தும் ஆகும். மற்றைய எழுத்துக்களை உடல் எனவும் கைச்சாத்தை உயிர் எனவும் கூறுப. அதுபோல் திருவருள் மறையில் நின்று அதனையும் அதற்கிடமாகிய உடலையும் இயக்கும். உடல் தூவாமாயையின் காரியமும் மறை தூமாயையின் காரியமும் ஆகும். மறை உயிரை நேரே குறிப்பதாகும். என்னை? அவ்வுயிரின் சிறந்த பண்புகளுள் ஒன்றை மறையாக அமைப்பது ஆன்றோர் வழக்கு-

உடலுக்குப் பெயரிடுங்கால் உண்மையான் அமையின் அவ்வுடலின் நிறம், அளவு, வடிவு முதலிய ஒன்றுபற்றியன்றே அமையவேண்டும். அஃறிணை இனங்கட்கெல்லாம் ஒவ்வோர் இனத்தும் அங்ஙனமே அமைந்துள்ளமை காணக. எடுத்துக்காட்டு வெள்ளை மாடு: கருத்த மாடு.

'முருகன்' என்னும் மறையினை உன்னின் இளமை, மணம், அழகு, இன்பம், ஆற்றல் முதலிய பல பண்புகள் புலனாகும். இஃது ஒருவர்க்குப் பெயராயின், அப்பெயர் முதற்கண் அவர்தம் உடலினைக் குறிக்கும். பின் அவ்வுடலுள் விளங்கும் உயிரைக் குறிக்கும் அல்லவா? அதுபோல் உயிர்க்கு உணர்வுடலாய் விளங்குவது மறை. அதனுள் நின்று உயிர்க்கு வேண்டியாங்கு வேண்டிய எய்துவிப்பது திருவருள். மறை என்பது வரிவடிவச் சொல். அஃது எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் எங்ஙனம் உணர்வர். அச்சொல்லின் பொருள் வடிவையே உணரவர். பொருள் வடிவு சொல் வடிவில் உணருங்கால் ஒளிவண்ணமாய் உணர்வதே ஏற்புடைத்து. அங்ஙனம் உணருங்கால் உயிரின் அறிவொளியோ டொன்றிப் பயன் தருவதாகும். '**சிவய நம**' என்னும் பொருள் மறைக்கு ஒளி உணரும்கால் செம்மையொடு பசசை வெண்மை நீலம் கருமை, அம்மை எழுத்தைந்தின் நிறம் எனலாம்.

**கருட தியானம்**

கருடன் முதலிய எல்லாப் பொருள்களையும் மூவகையாகப் பகுக்கலாம். அவை, வடிவம் வண்ணம் வாழ்வு என்பன. கருடனை வடிவமாகக் காணும்கால் மாயாகாரியமாகிய பறக்கும் தன்மைக்குத் துணையாகிய இறக்கை முதலியன அமைந்த உடலோடுகூடிய கருடனாகக் காண்பது. இதனையே ஆதிபௌதிக கருடன் என்பது. பௌதிகம் பூதத்தொடர்புடையது. அக் கருடனிடத்தில் நன்மை ஆக்கமும் தீமை நீக்கமும் புரியும் வன்மையுண்டு. அவ்வன்மை உயிராற்றல். உயிராற்றல் செயல் புரிய உடல் துணைக்கருவியாகும். உயிர்க்குள்ள எழுதும் ஆற்றல் செயற்படக் கை கருவியாவது இதற்கு ஒப்பு. அவ்வுயிராற்றல் வேறோர் உயிராற்றலிற் கலந்து அதன் துணைகொண்டு செயற்பட அவ்வாற்றலை எண்ணுதல் வேண்டும். இஃது ஒருவன் எழுத்துப்போல் எழுதவேண்டுமானல் அவனுடைய எழுத்தை மேல்வரியாக வைத்து அதனைப் பலகால் எண்ணுவதாகிய பாவனை செய்து எழுதுதல் வேண்டும். அப்பொழுது அவ்வெழுத்து அங்ஙனமே அமைந்து விளங்கும். அம்மட்டோ மேல்வரி எழுத்திற்குரியவரும் அவ்வெழுத்துத் தம்மதே என்று ஒப்புக்கொள்ளும்படியும் அமையும்.

கருடனின் உயிராற்றலைப் பிறர்பெறுமாறு எண்ணம் - பாவனை கொள்ள இடனாக இருப்பது மறை. மறை எனினும் மந்திரமெனினும் ஒன்று. இது தெய்வத்தன்மை உடையது. அதனல், இதனை ஆதிதைவிக கருடன் என்ப. இம்மறையும் முழுப்பயனைத்தரும் ஆற்றலுடையதன்று. இதனையோர் ஒப்பில் காட்டுதும். பணத்தாள் (Currency) ஆதி பௌதிகம் போன்றது. அதன்கண் பொறிக்கப்பட்டுள்ள எண்ணும் எழுத்தும் ஆதிதைவிகம் போன்றது. இவற்றால் அத்தாள் பணமாகிவிடுமா? என்றால் விடாது. பின் வேண்டுவது யாது? அதன்கண் இடப்படும் கைச்சாத்து; இக்கைச்சாத்தே முழுப்பயன் தருவது. ஆனல் கைச்சாத்துமட்டும் போதாது; மேலனவும் வேண்டுவன; கைச்சாத்தனையது ஆத்தியான்மிகம். இதுவே மறைவல்லானுக்குப் பயன் கொடுப்பது. இது திருவருளாற்றல்

எனப்படும். இதுவே சிவசத்தி என்ப. ஆத்தியான்மிகம் என்பது உண்ணின்றுறுத்துவது.

கருடன் பாம்புக்குப் பகை. பகை என்பது பாம்பின் நஞ்சினை நீக்கும்தன்மை. இது நல்லதை ஆக்குவதுபோல் தீமையை நீக்குவதும் செய்யத்தக்க நன்மையேயாம். பகையை வெல்லுதற்குத் துணைப்பகை கூட்டிக்கோடல் தப்பும் அறிவுடைமையும் ஆகும் அல்லவா? இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"தன்துணை இன்றால் பகைஇரண்டால் தானொருவன்
இன்துணையாகக் கொள்கவற்றின் ஒன்று" —திருக்குறள், அஎரு.

இதுபோல் பாம்பின் நஞ்சை நீக்குவதற்கு கருடமறை பயன்படும். இஃதன்றி ஆதி பௌதிக கருடன் பாம்புகடியுண்டார்மேல் வீழ்ந்து புரளினும் நஞ்சின் கடுமை (விடவேகம்) நீங்குவதின்று. இவ் உண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"விடநகுலம் மேவினுமெய்ப் பாவகனின் மீளும்
கடனில்இருள் போவதினை கண்." —திருவருட். அருளுரு-எ.

யார் எவ்வழியாக எதை விழையினும் அவ்வழியாக அதனை முற்றுவித்துப் பயனுறுத்துவது திருவருள் ஆற்றல் ஒன்றேயாம். இவ்வுண்மை

"இங்குநாம் சிலர்க்குப் பூசை இயற்றினால் இவர்களோ வந்து
அங்குவான் தருவா அன்றேல் அத்தெய்வம் அந்த ஊைக்காண்
எங்கும்வாழ் தெய்வம் எல்லாம் இறைவனாணையினால் நிற்பது
அங்குநாம் செய்யும செய்திக்கு ஆணையைப் பாலனிப்பன்."
—சித்தியார், உ. உ - உசு.

ஒவ்வோர் நன்மை ஆக்கத்திற்கும், ஒவ்வோர் தீமை நீக்கத்திற்கும் தனித்தனி மறைகள் உள. ஆனால் எல்லா நன்மை ஆக்கத்திற்கும், எல்லாத் தீமை நீக்கத்திற்கும் தனிச் சிறப்புவாய்ந்த ஒரு முழுமுதல் தொன்மறை உளது. அதுவே நன்மைசால் "**சிவயநம.**" இவ் உண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவா தம்மை ஆள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
அந்தியுள் மந்திரம் **அஞ்செழுத்துமே.**" —ந. உஉ - உ.

"மந்திரங்கள் ஆனவெலாம் அருளிச் செய்து
மற்றவற்றின் வைதிகநூல் சடங்கில் வந்த
சிந்தைமயக் குறும்ஐயம் தெளிய எல்லாம்
செழுமறையோர்க் கருளியவா தெருளும் ஆற்றன்
முந்தைமுதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும்
முதலாகும் முதல்வனார் எழுத்தஞ் சென்பார்
அந்தியினுள் மந்திரம்**அஞ் செழுத்துமே** என்று.
**அஞ்செழுத்தின்** திருப்பதிகம் அருளிச் செய்தார்."
—கஉ. திருஞான - உசுசு.

தீமையை ஒழிப்பதற்குச் சான்றவர் படைக்கலமாகக் கொள்வது நல்லாரைப் பணிந்து துணைகூட்டிக்கொள்ளுதல். நல்லார்துணை நன்மை

ஆக்குதற்கு ஊக்கமும் ஆக்கமும் அளிப்பதுபோல் தீமை நீக்குதற்கும் துணையாம். இவ் உண்மை வரும் திருப்பாட்டுககளான் உணர்க:

“தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்தது இல்.
ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.” —திருக்குறள், ௪௪௬, ௯௮௫.

நல்லாருள் நின்று நயம் செய்வானும், அந்நல்லார் ஏத்தும் நல்லானும் முழுமுதல்வனே ஆகலின் அவன் திருநாமம் ஆகிய திரு ஐந்தெழுத்தே விழுமியமாற்றரும் பெரும்படை என்க. இவ்வுண்மைகள் வரும் திருப்பாட்டுக்களான உணர்க:

“சொல்லானைப் பொருளானைச் சுருதி யானைச்
சுடராழி நெடுமாலுக்கு அருள்செய் தானை
அல்லானைப் பகலானை அரியான் தன்னை
அடியார்கட்கு எளியானை அரண்மூன்று எய்த
வில்லானைச் சரம்விசயற் கருள்செய் தானை
வெம்கதிரோன் மாமுனிவர் விரும்பி ஏத்தும்
நல்லானைத் தீயாடும் நடபன் தன்னை
நாரையூர் நல்நகரில் கண்டேன் நானே.” —சு. ௭௪ - க.

“படைக்கல மாகஉன் நாமத் தெழுத்தஞ்சென் நாவிற் கொண்டேன்
இடைக்கலம் அல்லேன் எழுபிறப் பும்உனக் காட்செய்கின்றேன
துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித் தூநீறணிந்துன்
அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச் சிற்றம் பலத்தரனே.”

—௪. அக - அ.

இடைக்கலம்-கால இடையீட்டில் மீட்டிக்கொள்ளும் தன்மைவாய்ந்த ஒற்றிமுறி. ஒற்றிமுறியை ஒததிப்பத்திரம என்ப.

---

## மூன்றும் அதிகரணம்

**இனி இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது.**

எ - து. மே - ள். எ-னின். ஆன்மாவைச் சுத்திபண்ணுதற்குப் பாசம் ஒருவியவழித் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானசொரூபம் ஒன்றே அமையுமாகலின் இவ்விடத்தில் இனிச் செய்யக்கடவது ஒன்றில்லை என்பாரை நோக்கிச் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று.

(இ - ள்) பாசம் ஒருவி ஆண்டுத் தண்நிழலாய்ப் பிரகாசித்த ஞானக்கண்ணால் பதியைச் சிந்தை நாடியபின்னர் அவ்விடத்துத் திரு அஞ்செழுத்தையும் விதிப்படி கணிக்கவென மேற்கொண்டது (எ - று).

இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. அற்றாகலினன்றே *"பின்னும்—ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க" என்றார் வழிநூலாசிரியரும் என்க.

ஈண்டு ஸ்ரீ பஞ்சாக்கரத்தையென்றது முத்திபஞ்சாக்கரத்தை. திரு அஞ்செழுத்தால் சாதிக்கப்படும் பொருளும அதுவேயாகலான் வேறு வகுத்துக் கூறவேண்டாமையின், விதிப்படியென மாட்டெறிந்தொழிந்தார்.

இவ்வாறாசிரியர் மாட்டெறிந்ததூஉம் உணராதார் சாதித்து நிற்குமுறை வேறே ஓதுமுறை வேறேயெனச் சித்தாந்த வழக்கொடு முரணிக் கூறுவர். நிற்குமுறைமையும் ஓதுமுறைமையுந் தம்முள் இயைபில்வழி அஃது அதற்குச் சாதனம் ஆமாறு யாண்டையதென்று ஒழிக.

மானதம் மந்தம் உரையெனக் கணிக்கும் ஆறு மூவகைப் படும். அவற்றுள் சுத்தமானதமெனப்படும் அறிவால் கணித்தலே ஈண்டு உச்சரித்தல் என்பார் சூத்திரத்துள் உச்சரிக்க வென்னாது எண்ணுகவென்றார். வடமொழிச் சூத்திரத்துத் தியானிக்கவென்றதும் அது. இன்னும் இதன்கட்படும் இயல் பெல்லாம், உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுட் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்றபுழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கு எனக்கொள்க.

எ - து. ஏது எ-னின். அந்தரங்க வழிபாடாகலின் அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனைக்கண்டு வழிபடுமாற்றைச் சாரவைத்து ஓதற்பாலதாகிய இதனைச் சித்தசாதனமாய் ஈண்டு விதித்தல் எற்றுக்கென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) வேப்பு தின்ற புழு அதனை ஒருவிக் கரும்பைத் தலைப்பட்டு அதன்சுவை தெரிந்தவழியும் பயிற்சி வயத்தான் நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆறுபோல அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்தென்று கண்ட உயிர்களுக்கு அதனான் ஞான சொரூபம் விளங்கி ஞேயங்காட்சிப்பட்ட இடத்தும் அவை பயிற்சிவயத்தால் பண்டைச்சிற்றுணர்வை நோக்கி நிற்குமாகலின் அவ்வாதனை நீக்குதற்பொருட்டு ஈண்டைக்கு வேண்டப்படுது

* சிவஞானசித்தி, சுபக்கம், ஒன்பதாஞ்சூத்திரம், ௧. பாசஞானத்தாலும்.

லான் இனி ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி இவ்விடத்து உச்சரிக்கவென மேற்கொண்டதெனக்கொள்க (எ - று).

இவ்விடத்தென்றதனால் அணைந்தோர் தன்மையைச் சார வைத்து மேற்கோடற்குரிய ஸ்ரீ பஞ்சாக்கரத்தையென வருவித்துரைத்துக்கொள்க எனக்கொள்க என்று உடம்படுப்பித்ததும் அதுபற்றி. இக்கருத்து நோக்கியன்றே புடைநூலாசிரியர் அஞ்செழுத்தருணிலையை ஆன்மலாபத்தின் பின்னாக அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து ஓதியதூஉம் என்க.

*"வானோக்கி வாழும்" "கோனோக்கி வாழும்" என்றாற்போல ஈண்டு நோக்கென்றது மன எழுச்சி விசேடத்தை.

பிரகாசித்த வழியென்பது பிரகாசித்தெனத் திரிந்தது.

ஈண்டு ஞானமென்றது அசத்தை அசத்தென்று கண்டவழி விளங்குவதெனப்பட்ட ஞானசொரூபத்தை; அஞ்ஞானமென்றது அதற்கு மறுதலையாகிய சுட்டுணர்வையெனவுணர்க. அது நீக்குதற்கெனக் கொள்கவெனவே, சித்தசாதனமன்றென்பதும் பெறப்பட்டது.

†அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில்—அஞ்செழுத்தால்
குண்டலியில் செய்தோமம் கோதண்டஞ் சாணிக்கில்
அண்டனாஞ் சேடனாம் அங்கு.

எ - து. உ - ம். எ-னின். இஃதவ்வாசனையை நீக்குதற்குச் சாதனமாமாறு யாங்ஙனம் என்பாரை நோக்கி அஃதாமாறு கூறி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உள்ளம் அரன்உடைமை அஞ்செழுத்தால் கண்டு—உயிர் சிவனுக்குடைமையாதலை அஞ்செழுத்தை உச்சரிக்கு முறையில் வைத்து நோக்கி, இதயத்தில் அதனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து—(தன் உடம்பகத்தே இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றனையும் முறையே பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தானம் ஆகக் கருதிக்கொண்டு புறம்பே ஞானபூசைசெய்யும் முறைப்படி) இதயபங்கயத்தில் (அவ்அஞ்செழுத்தால் அமைந்த திருமேனியில் அம்முதல்வனைக் கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறை அருள் அறிவு வாய்மை தவம் அன்பு என்னும் அட்டபுட்பங்கொண்டு) அம்மனுவால் அர்ச்சனை செய்து, அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமம்செய்து—அத்திரு

* திருக்குறள் ருசஉ. (௫௪௨.)
† 'அஞ்செழுத்தால்' (௪௫அ.) சித்தியார். க-௩. அ.

மந்திரத்தானே குண்டலித்தானமான உந்தியில் (ஞானஅனலை எழுப்பி அதன்கண் விந்துத்தானத்து அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடியாகிய சுருக்குச் சுருவங்களால்) ஓமித்து, கோதண்டம் சானிக்கில்—விந்துத் தானமாகிய புருவ நடுவிற் (சிகர யகர வகரங்கண் மூன்றும் முறையே தற்பதப் பொருளும் துவம்பதப்பொருளும் அசிபதப்பொருளும் ஆம் முறைமைநோக்கி அதனாற்) சிவோகம்பாவனை செய்வனாயின், அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம் - அப்பாவனைக்கண் அமமுதல்வன் விளங்கித் தோன்றுவன் (அப்பாவகன் அவனுக்குச் சேட சேடிய பாவத்தால்) அடிமையாவன் (எ - று).

ஓமித்தலுந் தியானித்தலும் பூசைக்கு அங்கம் எனவறிக. ஞானசொரூபம் விளங்கிய வழியும் பயிற்சிவயத்தான் ஏகதேசப் பட்டுப்புறததிற் செல்ல நோக்குவதாய தன் அறிவை அங்ஙனம் ஆகாதவாறு மடக்கி அகத்தே ஒரு குறியின்கண் நிறுத்தி இட்டை கூடும்படி அஞ்செழுத்து ஓதுமுறையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க அஃது அநநோக்கத்தைப் பற்றறக் கெடுத்து ஞான சொரூபத்தை இனிது விளக்கிப் பூரண நிலையிற் கொண்டு செலுத்தும் ஆகலின் இஃது ஈண்டைக்குச் சிறந்த சாதனமாயிற்று என்பது.

*இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்
சிந்தையில் காணில் சிவன்கண்ணும்—உந்தவே
காட்டாக்கின் தோன்றிக் கனல்சேர் இரும்பென்ன
ஆட்டானும் ஓதஞ் சேழுத்து.

எ - து. உ - ம். எ-னின். அங்ஙனம் ஒரு குறியின்கண் வைத்தன்றி முதல்வனைக் காண்டல்செல்லாதவாறும் அவ்வாறு கண்டவழி முதல்வன் தன்மாட்டு விளங்கித் தோன்றுமாறுந் தோன்றிய வழித் தான் அம்முதல்வனுக்கு அடிமையாமாறும் உவமையில் வைத்துணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்கு - (அந்தரத்தியங்கும் நவக்கோள்களுள் ஏனையபோலக் காணப் படாத) இராகு கேதுக்களை (உபராகத்தில்) சந்திராதித்தர்மாட் டுக் கண்டாற்போல, சிந்தையில் காணில் - (முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் உணர் விற்கு விடயமாகிய பசுபாசங்களோடொப்ப வேறு உணரப் படாத முதல்வனைத்) தன் இதய பங்கயத்தின் (அஞ்செழுத்தின் முறையின் வைத்துக்) காணுமாயின், உந்தவே காட்டாக்கில்

* 'அஞ்செழுத்தால்' (சஙிஅ.) சித்தியார். க. ௩-அ.

சிவன் தோன்றிக் கண் ஆம்—(கோலைநட்டுக் கயிற்றினால் சுற்றிக்) கடையவே காட்டத்தின் நின்று அங்கி தோன்றுமாறுபோல அம்முதல்வன் ஆண்டுத்தோன்றி அறிவுக்கு அறிவாய் விளங்கி நிற்பன், தான் கனல் சேர் இரும்பு என்ன ஆள் ஆம்—(அப் பொழுது) தானும் எரிசேர்ந்த இரும்போலத் (தனது சுதந் திரத்தைவிட்டு அம்முதல்வனுக்கு) அடிமையாம், அஞ்செழுத்து ஓது—(ஆகலான்) அத்திரு அஞ்செழுத்தை (விதிப்படி) ஓது வாயாக. (எ - று).

கேது சாயாக்கிரகமாகலின், வேறு கூறுராயினர்.

கண் அறிவு.

தோன்றி ஆம் என இயையும்.

உந்துதல் ஈண்டுக் கடைதல்மேற்று.

காட்டாக்கி வடமொழிச் சிதைவு. இகரம் விகாரத்தால் தொக்கது.

இன் உவமவுருபு.

ஈண்டும் ஓது அஞ்செழுத்து என்றது வலியுறுத்தவாறு.

* மண்முதல் நாளமலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும்—நண்ணில்
கலைஉருவாம் நாதமாம் சத்திஅதன் கண்ணும்
நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்.

எ - து. உ - ம். எ-னின். தத்துவ முப்பத்தாறுக்கும் மேற்பட்ட முதல்வனை இதயபங்கயத்தில் கண்டர்ச்சிக்குமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி அவ்விதய பங்கயத்தின் இயல் புணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நண்ணில்—அவ் இதய பங்கயத்தின் இயல்பை அறியப்புகின், மண் முதல் நாளம்—நில முதலிய இருபத்து நான்கு தத்துவமும் (உந்தியினின்றுந்தோன்றி எண்விரல் அளவைத்தாயுள்ள) நாளவடிவாம், வித்தை மலர்—வித்தியா தத்துவங்கள் ஏழுஞ் சுத்தவித்தையும் என்னும் எட்டுத் தத்துவ மும் எட்டு இதழ்வடிவாம், எண்ணிய ஈசர் சதாசிவமும் கலா ரூபம்—(அத்தத்துவங்களுக்கு மேலாகக்) கருதப்பட்ட ஈசரஞ் சதாசிவமென்னும் இரண்டு தத்துவமும் அறுபத்துநான்கெனப் படுங் கேசரவடிவாம், சத்தி கலை உருவாம்—சத்திதத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டுவடிவாம், நாதம் அதன்

* 'நாட்டு மித' சித்தியார், கூ. ந-கூ. (சகூந.)

கண்ணும்—சிவதத்துவம் அப்பொருட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு வீசவடிவாம்; அதில் அச்சிவன் தாள் நிலையாம்—(ஆகலான்) அவ் இயல்பிற்றாகிய இதயபங்கயத்தின் (முப்பத்தாறு தத்துவமும் ஆசனமாக உடைய) அச்சிவனது சத்தி நிலைபெறும், நேர்—(அதனை அறிந்து திருஅஞ்செழுத்தால்) அர்ச்சிப்பாயாக (எ - று).

இதனானே *"அண்டபிண்டம் அவை சமம் ஆதலால்." புறத்துக் காணப்படும் முப்பத்தாறு தத்துவமும் அகத்தினிற் சூக்குமமாய் உண்டென்பது காட்டி முதல்வனுக்கு இந்நிலையே அந்நிலையெனத் தெளிவித்தவாறு.

வித்தை என்பது இரண்டெற மொழிதலான் அவ்வாறு உரைக்கப்பட்டது சிவஞானசித்தியில் †"மூட்டு மோகினி சுத்தவித்தை மலரெட்டாய்" என்புழி மோகினியென்றதூஉம் ஆகுபெயரான் அதன்காரியமாய கலாதிகளின்மேல் நின்றது.

இவ்வாறன்றி நிலமுதலிய முப்பத்தொரு தத்துவம் எனப்படும் எட்டுக்கொத்தும் எண்விரல் நாளவடிவும், அசுத்த மாயா தத்துவம் நாளத்துக்கும் மலருக்கும் நடுக்கண்டமாகிய கிரந்தி வடிவும், அதற்குமேற் சுத்தவித்தையின் வாமைமுதலிய எட்டும் எட்டிதழ் வடிவுமாம் என்று உரைப்பாரும், முப்பத்தொன்றுக்குமேல் அசுத்தமாயை கிரந்தியின் அதச்சதனம் சுத்தமாயை ஊர்த்துவச்சதனம் அதற்குமேல் ஈசுரதத்துவத்தில் அனந்தன் முதலிய எட்டும் எட்டிதழ்வடிவம் சதாசிவ தத்துவமொன்றும் கேசர வடிவமெனக்கொண்டு அதற்கியையக் கொண்டு கூட்டி உரைப்பாரும், கலாரூபமென்றது, பஞ்சகலைகளை எனவும் அஃது யாண்டுங் கூட்டியுரைக்கப்படுமெனவுங்கொண்டு, மண்முதல் நாளம் மலரென்பதற்கு மண்ணாகிய நிவிர்த்திகலாரூபம் நாளமும், மண்ணைமுதலாகவுடைய ஏனையிருபத்துமூன்று தத்துவமாகிய பிரதிட்டாகலாரூபம் மலருமாமெனவும், வித்தை எண்ணிய ஈசர் சதாசிவமும் கலையுருவமாம் என்பதற்கு வித்தியா தத்துவமாகிய வித்தியாகலாரூபங் கலையெனப்படுங் கேசரமுஞ் சுத்தவித்தையோடு கூடியெண்ணப்பட்ட ஈசுர தத்துவஞ் சதாசிவ தத்துவமாகிய சாந்திகலாரூபங் கலைக்குள் உருவெனப்படும் பொருட்டுமாம் எனவும், நாதமாம் சத்தி அதன்கண்ணும் என்பதற்குச் சிவதத்துவம் சத்திதத்துவமாகிய சாந்தியதீதகலாரூபம் பொருட்டின்கண்ணாகிய வீசமாம் எனவும் உரைப்பாரும் உளர். இவை எல்லாம் அவ்வவ் ஆகமபேதம் பற்றிக்கொள்ளப்படும்.

---

* கோயிற்புராணம், பதஞ்சலிச்சருக்கம். ௭0 வலங்கைமான்.

† சிவஞானசித்தி, சுபக்கம், ஒன்பதாஞ்சூத்திரம். ௧ நாட்டுமிதயம். ௭

கலை அறுபத்துநான்காகலான், அறுபத்துநான்காகிய கேசரங்களுக்குத் தொகைபற்றிக் கூறப்படும் ஆகுபெயராயிற்று.

ஈசர் ஆகுபெயர்.

கலையுரு கலைக்குள்ளுரு என உள்ளுருபு விரித்துரைக்க.

அதில் என்புழி அன் சாரியை விகாரத்தால் தொக்கது.

இது நாளமுதலாக மேனோக்கித்தோன்றும் உலகத்துக் கமலம் போலாது கண்முதலாகக் கீழ்நோக்கித் தோன்றியதோர் திப்பிய கமலம் எனக் கொள்க.

சிவன்தாள் அதில் நிலையாம் எனவே சிவன் சத்திக்கு மேலாய் நிற்பன் என்பதூஉம் பெறப்படும்.

மூன்றாம் அதிகரணமும், ஒன்பதாம் சூத்திரமும் முடிந்தது.
சாதன இயல் முற்றிற்று.

---

## விளக்கம்

### ஞானக்கண்

ஆவி சிற்றுணர்வாகிய ஊனக்கண்ணாலும், சுட்டுணர்வாகிய கருவிக் கண்ணாலும் காண ஒண்ணாத முழுமுதலை முற்றுணர்வாகிய திரு அருட் கண்ணால காணுதல் அமையும். சிற்றுணர்வு அல்லது ஊனக்கண் பசு ஞானம சுட்டுணர்வு அல்லது கருவிக்கண் பாசஞானம். முற்றுணர்வு அல்லது திரு அருட்கண் பதிஞானம். திரு அருட்கண்ணால் நிலையுதல இலவாகிய உலகியற பொருள்களை அழிபொருள் எனக்கண்டு நீங்கியவழி, 'உளதாய நிற்கும திரு அருட்கண்ணினால் ஒருவியதன் அறிவினை கண்ணே தனக்கு அறியப்படுவதாகிய முதல்வனை நாடுக;' நீங்குதலும் நாடுதலும் ஆகிய இரண்டும சிவப்பேரின்பினைப்பயத்தற்கு முறையே துணையாம். ஞானக்கண், திருவருட்கண். திருவருட்கண்ணால் காண்பதென்பது ஆவி திருவருள் வழுவாதாய் அதன் துணையாகத் தன அறிவின் கண்ணே முழுமுதல்வனை விளங்கக் காணுதல். இது யாணுக்கன் ஆசான் அறிவின் துணையாகத் தன் அறிவின்கண் நூற்பொருளைத் தெளிய உணாதலோடு ஒக்கும. இவ் உண்மை "நின் அருட் கணணால் நோக்காதார அல்லா தாரே" (௧௧) எனனும் திருப்பாட்டான் உணாக.

முழுமுதல்வனை அவனருளை கண்ணாகக் காணுதல் வேண்டும் என்பது வரும் திருப்பாடடான் உணாக:

"மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஓரூரன் அல்லன் ஓருவமன் இல்லி

அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.”
—சு. கஎ - கO.

உலகியல் முறையிலும் ஒருவர் கண்ணால் ஒருவர் காணுதல் உண்டென்பது உணர்த்தப்படும். அது வருமாறு :

“ என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான் ;
நெய்தல் இதழுண்கண், நின்கண்ணா கென்கண்மன ;”
—கலித்தொகை, ‘காமர்’ நக.

இங்ஙனம் கூறுவன அமைத்துக்கொள்ளப்படும் என்பது வரும் நூற்பாவான் உணர்க :

“ தாயத்தின் அடையா ஈயச் செல்லா
வினைவயின் தங்கா வீற்றக் கொளப்படா
எம்மென வரூஉம் கிழமைத் தோற்றம்
அல்லா ஆயினும் புல்லுவ உளவே.”
—தொல். பொருள் - உஉக.

## இடம்

‘ இனி இவ்விடம் என்பது ’ ஆவி பாசம் ஒருவித் திருவருட்கண்ணால் தன் அறிவின் கணணை அறிப்படுவதாகிய முதல்வனைக் கணட இடத்து என்பதாம். அணைந்தோர் தன்மை கூறும் இடத்துக் கணிக்க வேண்டிய திருஐந்தெழுத்தை ஆவி திருவருளால் சிவமாகக் கருதுவிக்கும் இடத்து அங்ஙனம் நாடுதற்குத் துணைபுரிவதால் ஈண்டுஙகணிக்க என்பார் இவ் விடத்தும் எனக் கூறினர்.

## பொருள்

‘ சீ பஞ்சாக்கரத்தை ’ என்பது வீடுபேற்றுக்கு உரியதாகிய திருஐந் தெழுத்தை. அஃதாவது “சிவயசிவ”; முதல்வன் ஆவிகளுடன் வேறறக் கலந்து உடங்கியைந்து பிரிப்பின்றி நின்று புறம் புறம் திரிந்து காத்தருளு கின்றனன் ஆதலின் அப்பொருள் பயக்க முதலும் ஈறும் ஆகிய இருபுறமும் சிவ என்னு மறையும் நடுவே ஆவியும் அமைந்திருப்பதே ஏற்புடைத்து. அது ‘சிவயசிவ’ என்பதன்கண் விளங்குவது காணக. புறம் புறம காத்தல் எப்புறமும் காத்தல். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

“ பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேன் உடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தம் ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே.”
—அ. பிடித்த - க.

**மாட்டெறிதல்**

இந்நூற்பா இரண்டாங் கூற்றில் வீடுபேற்று ஐந்தெழுத்தைச் சிவனை நாடுவதற்குத் துணைபுரியும் வாயிலாகக் கணிக்க என்று விதித்துள்ள முறைமையே நிற்குமுறைமை. ஆகவே அக்குறிப்புத் தோன்ற விதிப்படி என மாட்டெறிந்து அருளினர். நிற்கும் அம்முறையே ஓதும் முறையும் ஆகும் என்பதூஉம் இதனால் விளங்கும்.

**முறை**

ஆவி ஆண்டானோடு நிற்கும் முறையும் அந்நிற்றலைப் பயப்பிக்கும் ஓதும் முறையும் வெவ்வேறு தன்மையாதலின்றித் திருஐந்தெழுத்தின் கண் ஒரு தன்மையாகவே காணப்படுதலால் ஒருங்கு கூறியருளினர். நிற்றலை உறுதி பெறப் பயத்தற்கே கணிக்கப்படுதலால் இரண்டும் ஒன்றாயிருத்தலே ஏற்புடைத்து. ஆவி ஆண்டானோடு நிற்குமுறை **உடையாள் உன்தன்** (௩௧௧) என்று தொடங்கும் எட்டாம் திருமுறைத் திருப்பாட்டான் உணர்க. கணிக்கும் முறை எனினும் ஓதும் முறை எனினும் ஒன்றே. முறை, நிற்கும் முறை ஓதும் முறை என இருவகைப்படும். நிற்கும்முறை:

> "ஆசில்நவா நாப்பண் அடையாது அருளினால்
> வாசியிடை **நிற்கை** வழக்கு." —திருவருட். ௬. அஞ்செ-௮௧.

பொழிப்புரை: குற்றம் இல்லாத நகரவகரங்கட்கு நடுவண் யகரம் நிற்குமேல் பிறப்புறுமே அன்றிப் பிறப்பற்றுச் சிறப்புறாது. நகரவகரங் கட்கு நடுவண நிற்பதைச் 'சிவயநம'' என்பதன்கண் காண்க. திருவருளாலே ''சிவயசிவ'' என்ற மறைமுறை கணிக்கப்படும் அஞ்ஞான்று **வாசி**யிடை **நிற்கை** வழக்கென்பது போதரும்.

வாசி என்பது யாப்புப் பற்றி வகரம் நீண்டது என்க. இயற்கையாயின் **வசி** என நிற்றல் வேண்டும். வசியம் என்பது தன் வழிப்படுத்தல் என்றாகும். திருவருள் ஆவியைத் தன் வழிப்படுத்துவதே வசியமாம். தன் வழிப்படுத்துதல் என்பது வினைக்கீடாகப் பிறப்பினை நல்கி வினைப் பயன் துய்ப்பித்து மல ஆற்றலைத் தேய்ப்பித்து வினையொப்புவரச் செய்து தன்வழிப் படுத்திச் சிவத்தொடு கூட்டுவித்தலாம். இவ்வுண்மை பட்டினத்தடிகள் **''மாயநட் டோரையும்''** (௩௧௭) என்று தொடங்கும் திருப்பாட்டான் உணர்க. நகரமாகிய மறைப்பாற்றல் தானாக ஆவிகளை மறையாது. மல ஆற்றலைத் தொழிற்படுத்தும் முறையான் அது மறைப்பதற்குத் துணை புரியும் அத்தனையே மறைப்பது என்பதாகும்.

இஃது, ஆசான் மாணவர்களை இயற்கையான் ஒறுப்பவன் அல்லன். குற்றம் கண்டவழி அக் குற்றத்திற்குத் தக ஒறுப்பன் அன்றே? அச் செயலை ஒக்கும். மேலும் மல ஆற்றலுக்கு மறைக்கும் தன்மை உளதெனினும், அது தானாக மறையாது. திருவருள் ஆற்றல் துணைபுரிந்தால் மறைக்கும். எழினியாகிய திரைக்கு மறைக்கும் தன்மை உள்ளது. ஆனால் யாராவது அத்திரையை ஒருமுக எழினி, பொருமுக எழினி, கரந்து வரல் எழினி முதலியவற்றுள் ஒன்றாக அமைத்துப் பயன்படுத்தினால் மறைக்கும்.

மலம் ஆவிகளை ஒருமிக்க மறைத்து அறியாமையைச் செய்யும். அவ்வாற்றலைத் திருவருள் தொழிற்படுத்துங்கால் சிவத்தை மறைத்து உலகியற் பொருளைக் காட்டியும் தொழிற்படும். திரை அரங்கின்கண்

தொழிற்படுங்கால் ஆசானை மறைத்தும் அவையோரைக் காட்டியும் தொழிற்படும். இவ் இரண்டும் ஒன்றனை ஒன்று ஒக்கும். ஓதுமுறை:

"சிவமுதலே ஆமாறு சேருமேல் தீரும்
பவம்இதுநீ ஓதும் படி." * —திருவருள். ௯. அஞ்செ - ௭.

பொழிப்புரை: சிவமுதலாக வைத்து ஓதுமாறு திருவருளால் அமையுமேல் ஆவிகளின் பிறப்பு அறும். (அறவே சிறப்புறும்) இது நீ ஓதும் முறை ஆகும்.

பவம் - பிறப்பு. தீரும் - அறும். ஆமாறு - ஆகும் வண்ணம்.

சிவமுதலே ஆமாறு என்பதற்குச் சிகரம் வகரம் முதற்கண்ணே ஆகும் வண்ணம் என்பது பொருள். அதனையே இரட்டுறமொழிதலான் சிகரவகரங்கள் ஓதுதற்குக் காரணம் ஆகும் வண்ணம் எனப்பொருள்படும். படவே, ஓதுதல் என்பது எழுவாய் இறுவாய் இவைகளே ஓதுதலாகும். அம்முறையில் எழுவாய்க்கண் நிற்கும் காரண எழுத்தே இறுவாய்க்கண்ணும் நிற்றல் வேண்டும். எழுவாயின் செயலே பயனிலையாகும். எழுவாயாகிய சிகரவகரங்களின் செயல் ஆவிகளைச் சிகரவகரம் ஆக்குதலேயாம். ஆசான் செயல் மாணவனைத் தன்னைப்போல் அறிவுடையனாக்குதல் இதற்கு ஒப்பாகும். எனவே 'சிவயசிவ' என்றிருத்தலே நிற்கும் முறைக்கும் ஓதுமுறைக்கும் ஏற்புடைத்தாகும்

'சிவயநம' என்னும் ஐந்தெழுத்தின் இறுவாயிலுள்ள 'நம' எழுத்துக்கள் வீடுபேற்று நெறியிற் கூடும் வாயல் அறியாத மூர்க்கரோடு ஒக்கும். முதற்கண் உள்ள 'சிவ' எழுத்துக்கள் வீடுபேற்று நெறியிற் கூடும் வாயிலாகிய பத்திநெறியறியும் பண்பாளரோடு ஒக்கும். அவ் எழுத்தினையே முன்னும் பின்னும் முறைமுறை வருமாறு தன்னை ('ய' ஆவி) நடுவாக அமைத்து நன்கினிது கணித்தலாகிய ஓதுமுறையைக் கைக்கொள்ளின் திருவருள் என்சுவினையாகிய பழவினைகள் பாறும் வண்ணம் சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கும். பின் அத்தகைய அண்டான்பால் ஒப்புவித்து அவனால் ஆள்வித்துப் பேரின்பப் பெருவாழ்வில் இருத்தும். ஆளுதல் என்பது பேணுதல் என்பதாகும். தற்கொண்டாற் பேணுதல் என்பதும் இதுவே. தற்கொண்டான் என்பது தன்னை மும்மைவாழ்வுக்கும் துணைநலமாகக் கொண்டான் என்பதே. வாழ்க்கைத் துணைநலம் என்பதும் இதுவே. இவ்வுண்மை:

"நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்" —திருக்குறள், ௧0௨௬.

"குடியினை ஆளுந்தன்மை - குடியிலுள்ளாரை உயரச் செய்து தன் வழிப்படுத்தல்" (பரி)

சிவமாக்கி ஆளுந்தன்மை வரும் திருப்பாட்டானுணர்க:

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட
அத்தன்எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே
—அ அச்சோ-௧.

* 'பந்தமான' சிவப்பிரகாசம், ௧0 - ௧௧.

இவ் உண்மைகளை வலியுறுத்தும் திருப்பாட்டுக்கள் வருமாறு :

“சிவனரு ளாய சிவன்திரு நாமம்
சிவனருள் ஆன்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவமது அகன்று பரசிவன் ஆமே.” —க0. ௯. ௨௭௧௧.

நிரோதம் - தடை; நம. இந் ‘நம’ ‘சிவன்முதலாக’ வேண்டும். அங்ஙனம் ஆகவே ஆவி பிறப்பகன்று பரசிவன் ஆகும். பவம் - பிறப்பு. எனவே “**சிவயசிவ**” என்றிருத்தல் வேண்டும்.

“சிவாய நமஎனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே அடிமைய தாக்கிச்
**சிவாய சிவசிவ** என்றென்றே சிந்தை
அவாயம் கெடநிற்க ஆனந்த மாமே.” —க0. ௯-௨௭௧௮.

சிவாயசிவசிவ என்பது செய்யுளுக்காக அங்ஙனம் நிற்பினும் அஃது இருக்க வேண்டியமுறை ‘**சிவயசிவ**’ என்பதே.

“ஆசுறு திரோதம் மேவாது அகலுமா சிவமுன்னாக
ஓசைகொள் அதனில நம்மேல் ஒழித்தருள் ஓங்கும்மீள
வாசியை அருளும் மாய மற்றதுபற்ற உற்றங்கு
ஈசனில் ஏகம ஆகும இதுதிரு எழுத்தின் ஈடே.”
—சிவப்பி. அஞ்செழுத்-௯௨.

சிவ முன் என்பது ஈண்டுஇடமுன். அஃதாவது ‘நம’ என்னும் இடத்தை நிரப்பிய சிவ என்னும் சிறப்பு வனப்பாகிய இருசொற்களின் முதல் எழுத்தாகும்.

“அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும மேலைப் பெருஎழுத்தும—நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.” —கொடிக்கவி, ௪.

அஞ்செழுத்து - ‘சிவயநம’ எட்டெழுத்து - அ, உ, ம், சிவயநம. ஆறெழுத்து - ஓம்சிவயநம. நாலெழுத்து - சிவசிவ. பிஞ்செழுத்து - வ. பெருஎழுத்து - சி. பேசும் எழுத்து - வ. பேசாஎழுத்து - சி. நாலெழுத்தேமலாம் என்பது நால்வர்களால் நானெறியும் நாமுய்ய நாலெழுத்தும் பாலமுறையால ஓதகம் யப்பார்த் தோதவிளங்கும்.

இக் குறிப்பு வருமாறு :

“சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.” —க0. ௯ ௨௭௧௬.

இத்திருப்பாட்டினைப் பன்னிருமுறை ஓதின் நூற்றெட்டுச் ‘**சிவ**’ எனக் கணிக்கும் வாய்ப்புளதாகும். என்னை? நான்கு வரியிலும் முதற்கண் ‘சிவ’ என்பது எட்டுமுறை வந்துளது; நான்காவது வரியில் ஈற்றயற்சீர்க்கண் ஒருமுறை ‘சிவ’ என்பது வந்துளது. ஆக இரண்டும் கூட்டில் ஒன்பதாகும். இதனைப் பன்னிருமுறை உறழ நூற்றெட்டாகும்.

"ஏதும் ஒன்றும் அறிவிலர் ஆயினும்
ஓதி **அஞ்செழுத் தும்**உணர் வார்கட்குப்
பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர்மாற் பேறரே." —ரு. ௬0-௧.

**'மாதும் தாமும் மகிழ்வர்'** என்பது ஆருயிர்கள் மகிழ்ச்சியோடிருத்தற் பொருட்டு அம்மை அப்பராகிய ஆண்டவன் மகிழ்வது இன்றியமையா தது என்க. உருகுதலே மகிழ்தலாகும். இஃது "உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே" (௨௭௩) என்னும் திருமுறையான் உணர்க. கண்ஒளியோடு கதிரொளியும், மாணக்கன் அறிவோடு ஆசான் அறிவும், மக்கள் ஆற்றலோடு பெற்றோர் நல்கும் உணவாற்றலும் முறையே பார் வைக்கும், அறிதற்கும், செயற்கும் கலந்து பிரிப்பின்றி நின்று உடனும் துணையே அன்றிப் பயன் துய்ப்பு கண்ணுக்கும், மாணவனுக்கும், மக்க ளுக்குமேயாம். அதுபோல் மகிழ்ச்சிக்கு முதல்வன் துணையும் ஆம்.

அஞ்செழுத்தின் உள்ளீடு அறிவித்தான் அஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி—அஞ்செழுத்தை
உச்சரிக்கும் கேண்மை உணர்த்திஅதன் உச்சரிப்பு
வைச்சிருக்கும் அந்த வழியாக்கி..............

—நெஞ்சுவிடுதூது-௬௩, ௬௪.

"அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறாறக்கு அப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்." —உண்மைவிளக்கம், ௪௪.

## கணிக்குமுறை

கணிக்குமுறை அறிவுமென்மை உரை என மூவகைப்படும். இவற்றை மானதம் மந்தம் உரை எனக் கூறுவர். மானதம் அறிவாற் கணிக்கப்படுவது. மந்தம் தன் செவிக்குக் கேட்கும் அளவில் மெல்லென ஓதுவது. உரை பிறர் செவிக்குக் கேட்கும் அளவில் உரக்க ஓதுவது. இம் மூன்றனுள் ஈண்டு வேண்டத்தக்கது அறிவாற் கணிக்கப்படும் கலப்பில் மானதமே யாம். கலப்பில் மானதத்தைச் சுத்தமானதம் என்பர். அறிவாற் கணிப் பதைப் புலப்படுத்தவே நூற்பாவின்கண் ஒலிக்க என்னாது 'எண்ணுக' என்று ஓதியருளினர்.

## மீண்டும்நாட்டல்

கைகூடியதொன்றனை மீட்டும் நிலைநாட்டல் என்பதனைச் சித்தசாதனம் என்பர். சித்தம் - கைகூடுதல் சாதனம் - நிலைநாட்டல். அணைந்தோர் தன்மை பன்னிரண்டாம் நூற்பாவின்கண் கூறப்பட்டுள்ளது. ஆண்டுச் **சிவநுகர்வு** (சிவானுபவம்) நிலைத்தற்பொருட்டுச் 'சிவசிவ' என்னும் நாலெழுத்தேனும் 'சிவயசிவ' என்னும் ஐந்தெழுத்தேனும் அறிவாற்கணிப் பது இன்றியமையாத தொன்றும். அதனை ஈண்டுக் கணிப்பது அருளால் சிவமாகத் தம்மை எண்ணும் ஆவிகள் அவ் எண்ணத்தின்கண் உறைத்து நிற்றற்பொருட்டேயாம் எனவே மீண்டும் நாட்டலாகிய சித்தசாதனம் இன்று. இஃதின்றாகவே ஈரிடத்தும் ஓதியதுபற்றி மிகை என்னும் குற்றமும் இன்று.

**நோக்கு**

'நோக்கு' என்பது மன எழுச்சிச்சிறப்பை. இவ் உண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"வான் நோக்கி" பக்கம் ௨௭௨ காண்க.

இப்பொருளே பயக்கும் தொல்காப்பியநூற்பா:

"இரண்டன் மருங்கில்" பக்கம் ௨௭௩ காண்க.

'அஞ்செழுத்தால்... ...............அங்கு.'

**வழிபாடு**

வழிபாடு, சிறப்பு பூசனை என இருவகைப்படும். பூசனையை நாள் விழா எனவும். சிறப்பைத் திருவிழா எனவும் கூறுவர். ஓர் ஊரவர் கூடி ஒல்லும்வகை ஓவாது நாடோறும் ஒண்மையோடு நான்குகாலம் திருக்கோவில் அகத்துச செய்யப்படுவது பூசனை. பல்லூரவரும் நாட்டவரும் ஒருங்குகூடிக் குறித்தகாலத்து ஒல்லும்வகை ஓகையோடும் திருக்கோயிலகத்தும் புறத்தும் சிலநாட்கள் செய்யப்படுவது சிறப்பு. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு." —திருக்குறள், ௧௮.

வானோர்க்கும் என்பது "வானிடத்தவரும் மண்மேல்வந்து அரன் தனை அருச்சிக்கும்" அவ்வழிபாடு செல்லாதென்க. இதனால் மழையினது இன்றியமையாமை ஓரறிவுமுதல் ஆறறிவு ஈறாகிய உயிர்கட்கே அன்றி ஊணிலாத்தேவர்க்கும் வழிபாட்டின்பொருட்டு நீர் இன்றியமையாத தென்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"மானுடப் பிறவி தானும் வகுத்தது மனம்வாக் காயம்
ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன்பணிக்கு ஆக அன்றோ
வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் தனைஅர்ச் சிப்பர்
ஊனெடுத்து உழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ."
—சித்தியார். ௨. ௯ - ௧௨

"அங்கதி ரோன வனை அண்ணலாக் கருத வேண்டா
வெங்கதி ரோன் வழியே போவதற் கமைந்து கொள்மின்
அங்கதி ரோன வனை உடன்வைத்த ஆதி மூர்த்தி
செங்கதி ரோன்வ ணங்குந் திருச்சோற்றுத் துறைய னூரே."
—௫. ௭௧ - அ.

"அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்கன் ஆவான் அரன்உரு அல்லனோ
இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்
கருத்தி னைஙினை யார்கல் மனவரே."
—௫. ௧௦௦ - அ.

உலகியல் முறையிலும் பொற்பார் கற்புடைத்தெய்வம் கண்காண் தெய்வம் என 'உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர்—முனிவர் அடிகள் வேந்தர் முதலாயினோரும் தொழுந்தன்மையரே. அவர்கள் "வாய்ந்த கற்புடன் வான்கென வளர்ப்பர்கள் மடவார்' எனும் அருள்மொழிக்கு இணங்க

முழுமுதல் தெய்வத்தினைத் தம் கணவர் மேலாம் அறிவுருவில் வைத்து வழிபடுவர்; அவர்கள் 'வறனோடின் வான்தரும் கற்பினராவர்'; அவர்கள் படிமுறையாம் ஞாயிறு முதலியவற்றை வணங்குவாரல்லர். இது தமிழகப் பண்பாட்டின் ஒரு முழுமுதற் கொள்கையை வலியுறுத்துவதாகும். இவ்வுண்மை வருமாறு :

> " முள்முதல் மூழ்கிய வெம்மைதீர்ந் தூறுகென
> வளிதருஞ் செல்வனை வாழ்த்தவும் இயைவதோ."
>
> —'பாடின்றி' கலித்தொகை, ௧௬.

"தெய்வம் அஞ்சல்" (தொல். பொருள்-உ௭உ) என்னும் ஆணைமொழியால் தொல்காப்பிய முனிவரனார் மேலதனை வலியுறுத்தும் வாய்மை காண்க. இதன்கண் தெய்வம் எனக் கூறப்படுவது கணவனால் தொழப்படும் முழுமுதல் தெய்வமும், அத்தெய்வத் திருவருள் கைவந்த மெய்யடியார்களும ஆவர். இதனாலும் தமிழகப் பண்பாடு "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்னும உயர்வற உயர்நலமுடைய தொன்மை ஒண்மை என்க.

## மூவிடம்

வழிபாட்டிற்கு நெஞ்சம் கொப்பூழ் புருவநடு என்னும் மூன்றும் இன்றியமையாத சிறந்த இடங்களாம். இம்மூன்றனுள் நெஞ்சம் பூசையிடம். கொப்பூழ் வேள்வியிடம். புருவநடு அகவழிபாட்டிடம். தியானம் எனினும் அகவழிபாடு எனினும் ஒன்றே. இவ் அக வழிபாட்டை உணர்தல் எனக் கூறலாம்.

ஒருபொருளை உள்ளவாறுணர்ந்து ஒன்றுவதற்குக் கேட்டல் ஓர்தல் எண்ணம் தெழ்ல் உணர்தல்நால்; நாட்டமிறை ஆவியொருமையாதலின் முதற்கண் அப்பொருளை அருமறை (உபதேசம்) வாய்க்கேட்டல்வேண்டும். கேட்டபின் ஆராய்வதாகிய ஓர்தலைச்செய்தல் வேண்டும். பின் திண்ணமாக எண்ணுவதாகிய பாவனை வேண்டும். கடைப்பிடியாக உணர்வதாகிய தியானம் வேண்டும்.

வழிபாட்டிற்கு இடம் நெஞ்சம். இது "மறவாமையான் அமைத்த மனக் கோவில்" (௪௫௭) என்பதனால் விளங்கும். வேள்வியிடம் கொப்பூழ். வேள்வி என்பது நுண் ஓசை (சூக்குமை) பிறக்கும இடமாகிய கொப்பூழின்கண் அவ் ஓசை நினைவோசை மிடற்றோசை செவி ஓசையாக வளர்ச்சியுற்றுத் தயக்கும் பிறக்கும் புலனாய்த்தூண்டித தொழிற்படுத்திவரும் நிலை ஒடுங்கி மூலத்திடமாய் நிற்கும் காம ஒளியாய் நிற்கும். அதனை யுணர்ந்து வதே மெய்யுணர்வுத் தீயாகிய வேள்வித் தீ. இதனை ஞான அனல் என்ப. இவ்வுண்மை :

> " உந்திக் கமலத் துதித்தெழும் சோதியை
> அந்திக்கு மந்திரம் ஆரும அறிகிலார்
> அந்திககு மந்திரம் ஆரும் அறிந்தபின்
> தந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே." —௧0. அ௬௬.

இம் மூலத்திடத்திலுள்ள ஒளியை எழுப்பிக் கொப்பூழ்க் குழியின்கண் அமைத்து நெற்றிப்புருவத்துறையும் வெண்ணீர (விந்து) அமிழ்தை நெய்யாக எண்ணி நடுநரம்பு இடநரம்பு ஆகியவற்றை அளிதுடுப்பு அணை துடுப்பாக்கொண்டு தீசகட்பெய்து வேள்வி இயற்றலாம. அளிதுடுப்பு - நெய்யை ஊற்றுங் கருவி ; சுருக்கு. அணைதுடுப்பு வாக்கும் நெய்யை மூடும் கருவி ; சுருவம்.

வழிபடும் செம்பொருளை மனக்கோயிற்கண் வைத்து எண்ணுங்கால் பாவனையாகும். அப்பொருளைப் புருவநடுவின்கண் நினைப்பழுந்துங்கால் அக வழிபாடாகும். அகவழிபாடு எனினும் தேனித்தல் எனினும் ஒன்றே. தேனினை யுண்டு அதுவே நினைவாய் இன்புற்றுறையும் வண்டுபோல் உயிரும இறையடி இன்ப நினைவழுத்தமாய் இருப்பதால் தேனித்தல்* எனப்பட்டது. இத்தேனிப்பே தியானிப்பாயிற்று. தேனித்தலும், வேள்வி இயற்றலும் வழிபாட்டிற்கு உறுப்பாகும். நெஞ்சக வழிபாடு உறுப்பி யாகும்.

## வழிபாடு

புறவழிபாடு அனைத்தும் அக வழிபாட்டிற்புகுங்கால் மெய்யுணர்வுப் பொருளாகும். 'எட்டு நாண் மலர்' என்பன எண்பெரும் மெய்யுணர்வுப் பணபாகும். அவை. க. கொல்லாமை, உ. ஐம்பொறியடக்கல், ௩. பொறை, ௪. அருள், ௫. அறிவு, ௬. வாய்மை, எ. தவம் அ. அன்பு என்ப. திருமுழுக்கு, திருவிளக்கு, படைப்பு முதலியன அகவழிபாட்டிற் புகுஙகால் மெய்யுணாவுப் பொருளேயாகும். இவ்வுண்மை யுணர்த்தும் திருப்பாட்டுக்கள் வருமாறு :

"எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்ட லர்இடு வார்வினை மாயுமால்
கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ
ரட்ட னாரடி சேரு மவருக்கே."
—ரு. ௫௪ - க.

"மானமா மடப்பிடி வன்கையால் அலகிடக்
கானமார் கடகரி வழிபடும் கானப்பேர்
ஊனமாம் உடம்பினில் உறுபிணி கெடஎண்ணில்
ஞானமா மலர் கொடு நணுகுதல் நன்மையே." —௩. உ௬ - எ.

"மறவாமை யானமைத்த மனக்கோயில் உள்ளிருத்தி
உறவாதி தனையுணரும் ஒளிவிளக்குச சுடரேற்றி
இறவாத ஆனந்தம் எனும்திருமஞ் சனம்ஆட்டி
அறவாணர்க்கு அன்பென்னும் அமுதமைத்தர்ச் சனைசெய்வார்."
—௧உ. வாயிலார் - அ.

## மலர் உண்மை

அம்புயம்நீ லங்கழுநீர் நெய்தல் அணிபூகம்
தும்பைமந் தாரபுன்னை சொல்புறத்தாம்—நம் அகத்தாம்
கொல்லாமை ஐந்தடக்கல் கொள்பொறுமை யோடருள்
நல்அறிவு மெய்தவம்அன்பு எட்டு.

குறித்த எண்பெரும் பணபும் கைகூடுமாறு எண்குணத்தான் தாளைத் தலை வணங்கிப் போறறும் வாய்ப்புடைத தொடர்:

*"சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வேறிருந்துன் திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடும் தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனே நம்பி இனித்தான் நல்காயே."
—அ. கோயில்மூ - க.

கொல்லாநோன்பு அருளும் கூத்தா போற்றி
ஐந்தடக்கும் ஆற்றல் அருள்வோய் போற்றி
பொறையுடைமை கைக்கொளச்செய் புலமையோய் போற்றி •
அருள்வழியே நடப்பிக்கும் அன்பே போற்றி
அறிவுருவாய் ஆக்குவிக்கும் அண்ணல் போற்றி
வாய்மைவழி நிற்பிக்கும வள்ளால் போற்றி
தவநெறியில் சார்விக்கும் தக்கோய் போற்றி
அன்புநெறி ஒழுகச்செய் இன்பே போற்றி.

இவ் எண் பெரும் பண்புகளும் எய்துமாறு வரும் திருப்பாட்டு ஓதி வழிபடுக :

"எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாள் படையாய் போற்றி
கொல்லுங்கூற் றொன்றை யுதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றார் இடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியன்அரணம் எய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி." —௬. ௫ - க.

## அஞ்செழுத்தால் வழிபடல்

புறத்தே வேள்வியிற் செய்யும் அவி முதலியவற்றிற்கு அகம் குழைந்து கூறும் 'நிறைமொழி மாந்தர் ஆணையாம் மறை மொழி' போன்று "**சிவயசிவ**" என்னும் ஐந்தெழுத்தே கணித்து அக வேள்வியும், அக வழிபாடும, அகப்பூசையும புரிதல் வேண்டும். அஞ்செழுத்தே எல்லா மறைகள்—மந்திரங்களுக்கும் தாயாகும். விரிவாய் வேண்டுமெனின் திருமுறைத்திருப்பாட்டுந் திருமறைகளே சாலும். (௩௬க) இவ்வுண்மை வரும் திருப்பாட்டான உணர்க:

"மந்திரங்கள் ஆனஎலாம் அருளிச் செய்து
மற்றவற்றின் வைதிகநூற் சடங்கின் வந்த
சிந்தைமயக் குறம்ஐயம் தெளிய எல்லாம்
செழுமறையோர்க் கருளியவர் தெருளு மாற்றான்
முந்தைமுதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும்
முதலாகும் முதல்வனார் எழுத்தஞ் சென்பார்
அந்தியனுள் மந்திரம்அஞ் செழுத்து மேயென்று
அஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார்."

—கஉ. திருஞான-உ௬௬.

இங்ஙனமே திருநீறிடுதல், உறப்புத்தொடல், காந்தொடல், கணித்தல் எல்லாவற்றிற்கும திரு ஐந்தெழுத்தே அமையும் என்பதனைச் சித்தியார்த் திருப்பாட்டான் விரித்துரைத் தருளுகின்றனர். அஃது இவ் அக வழிபாட்டிற்கே என்க. புறவழிபாட்டிற்கு வேண்டும் முறைமை பக்கம், ௩௬0-ல் காண்க.

"அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு
அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவின் அஞ்செழுத்தால் இதயத் தர்ச்சித்து

அஞ்செழுத்தாற் குண்டலியின் அனலை ஓம்பி
அணைவரிய கோதண்டம் அணைந்தருளின் வழிநின்று
அஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்கமதி அருக்கன்
அணைஅரவம் போல்தோன்றும் ஆன்மாவில் அரனே."
—சித்தியார். கூ. ௩. அ.

## திருஉரு

கூத்தப்பெருமான் திருஉருவில் திருஅஞ்செழுத்தின் அமைவு காணுங்கால், சிகரம் துடிஅமை வலத்திருக்கையாகும். வகரம் தூக்கிய திருவடியைச சுட்டும் இடத்திருக்கையாகும். இதனை வீசுகரம் என்ப. யகரம் அஞ்சலி வலத்திருக்கையாகும. இதுவே 'என்று வந்தாய் என்னும் எம்பெருமான் தன திருக்குறிப்புத' திருக்கை என்ப. நகரம் தீ ஏந்திய இடததிருக்கை ஆகும. மகரம் முயலகனை அழுந்தியிருக்கின்ற வலத்திருககாலாகும். இவ்வுண்மை வரும திருப்பாட்டான் உணர்க:

"சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆக்கும் யகரம அபயகரம்—பாரக்கிலிறைக்கு
அஙகி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்." —உண்மைவி. ௩௩.

## முச்சொல்

படர்க்கை முன்னிலை பற்றுவிப்பித்தல், தொடக்கதுநீ ஆகின்றாய் சொல் என்ப. இதனைத் 'தத் துவம் அசி' தத் - அது. துவம் - நீ. அசி - ஆகின்றாய். சிகரம் படாக்கை, யகரம் முன்னிலை. வகரம் பற்றுவிப்பது (ஆகின்றாய்). இதன்படி 'சியவ' என்றாகும். 'சிவயசிவ என்றே வைத்து வகரம யகரததை நோக்குஙகால் அதற்கு அது முன்னிலையாகும். ஆயின் சிகரம் அதற்குப் படாக்கையாகும. முன்னிலையைப் படர்க்கைக்கண் பற்றுமா முற்றுவித்தல் மூவாத் திருவருளின் முறைமைச் செயலாகும்.

முச்சொல்லைத் "தத்துவமசி" என்ப. இதை விரிக்குங்கால் தற்பதம் துவமபதம் அசிபதம் என விரியும். இவற்றைப் பொருள் கொள்ளுஙகால் அது நீ ஆகின்றாய் எனவரும். தத் - அது. துவம் - நீ. அசி - ஆகின்றாய். அது, நீ என்று சொல்லும நிலை ஆண்டவன் ஆவிகளின் சார்பு நிலையாகும். சாாபு நிலையைத் தடததநிலை எனப. ஆகின்றாய் என்பது ஆண்டானும் ஆவியும வேறறக் கலக்கும் வீறுடை நிலையைக் குறிப்பதால் இந்நிலையை இயறகைநிலை எனவும, உண்மைநிலை எனவும் கூறுப. உண்மை நிலையைச் சொரூபநிலை எனப. இவ் வுணமைகளெல்லாம் திருமந்திரத்தின்கண் பரக்கக் காணலாம். காட்டாகச சில வருமாறு:

"வேதாந்த தொம்பதம் மேவும் பசுஎன்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டைக்கியம்
சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே."

"சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகும் அவ்வவ் விரண்டும்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன்று ஞானல்
நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே."

"சித்தாந்தத் தேசிவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தம் செம்பொருள் ஆதலால்
சித்தாந்த வேதாந்தம் காட்டுஞ் சிவனையே."

—க0. அ, உரு-உ௭.

"அஞ்ஞதி சீவன் ஐம் மலமற்றப் பாலாய்
அஞ்ஞதி அடக்கிந்த நனைக்கண்டு அரனைத்
தஞ்ஞதி மலங்கெடத் தத்துவா தீதம்
விஞ்ஞவுசீர் பாலாதல் வேதாந்த உண்மையே."

—க0. அ, ௬உ.

## எச்சம்

எச்சம் வழியினுள்ளார். பெற்றோர்க்கு மக்களும், ஆசிரியர்க்கு மாணாக்கரும், தலைவர்க்குக் குடும்பமும் குடிகளும், ஆண்டாற்கு அடிமையும எச்சமாவா. அடிமை என்பது அடிச்சுவடுபற்றி ஒழுகும் தன்மை. அத்தன்மையர் அடியார் எனப்படுவர். பயன் உறத்துவோன் ஆண்டான் எனவும், பயனுறுவோர் அடியார் எனவும் கூறப்பெறுவர். அடியார் ஆண்டான் இன்றித் தனித்து நில்லார், மக்கள் பெற்றோரையின்றித் தனித்து நில்லாமை போன்று. எனவே, சேடம் மிச்சம் - எச்சம் எனப் பொருள்படும். மேலும் எச்சத்தைக் கண்டு அதன் முதற்பொருளைக் கருதுதல்போன்று அடியாரைக்கண்டுழி ஆண்டானைக் கண்ணல் - கருதுதல் அமையும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து." —திருக்குறள், ககஉ.

## இலக்கணம்

'கோதண்டம் சாணிக்கில்' கோதண்டம் - புருவநடுவில், என்று பொருள்கொள்ளப்படுதலால் 'கண்' உருபு விரித்துக் கோதண்டத்தின் கண் எனக் கொள்க. 'அண்டன்' அண்டனுக்கு என்று பொருள் படுவதால் 'கு' உருபு விரித்துப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

'இந்துவில்..................செழுந்து.'

## நிழற்கோள்

வானுறு உராளும் ஒன்பான் கோள்களுள் கரும்பாம்பு செம்பாம்பு என்னும் இரு கோள்களும் நிழற்கோள்கள் எனப்படும். இந்நிழற்கோள்களை ஒரு குறியில் வைத்துக் காணபதல்லது என்றுங் காணடல் ஒண்ணுது. காணடற்குக் குறியாநிற்பது ஞாயிறும் திங்களும். திங்களுக்கும் ஞாயிற்றினுக்கும் நடுவே நிலவுலக உருண்டை நிற்குங்கால் உண்டாம் நிழலைத் திங்கட்பற்றி என்றும். நிலவுலக உருண்டைக்கும் ஞாயிற்றுக்கும் நடுவே திங்கள் நிற்குங்கால் உண்டாகும் நிழலை ஞாயிற்றுப்பற்றி என்றும் கூறுவர். திங்கட்பற்றியைச் சந்திரகிரகணம் எனவும், ஞாயிற்றுப் பற்றியைச் சூரிய கிரகணம் எனவும் கூறுப. கரும்பாம்பு - இராகு செம் பாம்பு-கேது. கிரகண காலத்தை உபராகம் எனவும் கூறுப. இதுபோல் செம்பாம்பும் நிழற்கோளேயாகலின் வேறு கூறாராயினர். மேலும், கரும்பாம்பு ஞாயிற்றைச் செம்பாம்பு திங்கள், உருவை மறைக்குமெனல்

உன்னிப் பார்ப்பார்க்கு விளங்கும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்பு*கொண்டு அற்று." —திருக்குறள், ௧௧௪௬.

"ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம்—திங்கள்போல்
செல்லாமை செவ்வனோ நிற்பினும் ஒப்புரவிற்கு
ஒல்கார் குடிப்பிறந் தார்.

பகைவர் பணிவிடம் நோக்கித் தகவுடையார்
தாமேயும் நாணித் தலைசெல்லார் காணாய்
இளம்பிறை ஆயக்கால் திங்களைச் சேராது
அணங்கரும் துப்பின் அரா." —நாலடி. ௧௪௮, ௨௪௧.

இதுபோல் முழுமுதல் தலைவனாகிய பதியை ஆவி தன்னறிவாகிய சிற்றறிவினாலும் தனக்குத் துணையாகிய பொறிபுலன் கலன்களான ஆகும் கருவி அறிவாகிய சுட்டறிவினாலும் அறிய ஒண்ணாது. என்னை? அவன் இவற்றைக் கடந்து நிற்பவன் ஆதலின் என்க. கடந்தபொருளை அப் பொருளின் அருள்துணையால் கலந்து கண்டின்புறுதலே அமைவுடைத்து.

## காணும்ஆறு

ஆண்டவனை ஆவி திருஐந்தெழுத்தை அகத்தில் அறிவாற்கணிக்கும் கால் அவன் அறிவிற்கு அறிவாய் விளங்கித் தோன்றுவன். அங்ஙனம் இன்றி 'யான் இதனை அறிந்தேன், அறிகின்றிலேன்' எனக் கூறுங்கால் அறிந்தேன் அறிகின்றிலேன் என்பது ஆவியின் சிற்றறிவிற்குப் புலனாம் தன்மை. இஃது ஆவி தன்னையறிதலாம். இதனையே பசு அறிவு என்ப. இதனை என்பது சுட்டறிவிற்குப் புலனாம் புறப்பொருள் அறிவாகும். இதனையே பாசஅறிவு என்ப. இவ்வாறாக ஆண்டவனைத் தனக்கு வேறாக அறிய ஒண்ணாது. நூல் சுட்டறிவாகவும் நூல் படித்தல் சிற்றறிவாகவும் நூல் உணர்தல் மெய்யுணர் (பதிஞானம்) வாகவும் கொள்க. நூலுணர்வு கற்பிப்பதன்வழி உணர்த்துவிக்கும் ஆசான் உணர்வோடு ஒன்றி உணர்வதாகும். இவ்வுண்மை "உணர்வின் நேர்பெற" (உகூஅ) என வரும் திருப்பாட்டான் உணர்க.

## ஆள்ஆம்

திரு ஐந்தெழுத்தை ஓதுமுறை (௪௫உ) யாற் கணிக்குங்கால் உணர்வுக்கு உணர்வாய் வெளிப்பட்டுத் தோன்றுவன் உடையவன். அங்ஙனம் தோன்றுவதற்கு ஒப்பு விறகினைக் கடையுங்கால் அதனகத்துத்தீ (உ௩0) வெளிப்பட்டுத் தோன்றுவதாகும். விறகுச் சார்பில் தீ விளங்குவது போன்றது உலகச் சார்பில் இறை உண்மை ஓர்வது. பாற்சார்பில் நெய் விளங்குவது போன்றது உயிர்ச்சார்பில் உடையான் விளங்குவது. விறகுலகாம் பாலுயிர்ச் சார்பாம் மணியும், உறவுடையான் உண்மையாம் உன்னின் மாமணிச் சார்பில் சோதி விளங்குவது போன்றது திருவருட் சாரபில் உயிர் உணர்வின்கண் உடையான் விளங்கியின்புறுத்துவது. இஃது உண்மை நிலையாகும். ஆவி ஆண்டவனோடு கலந்து மலமும் சுட்டறிவும் சிற்றறிவும் அகல ஆண்டவனின் பற்றுதலால் முற்றறிவுடையது ஆகும. அஃது இரும்பு தீயின் பற்றுதலால் கறையும் கடினமும்

---

* 'கண்டவி' கலித்தொகை, ௧௪0.

அகன்று தீவண்ணமாய்த் தோன்றுவதை ஒக்கும். கடினம் அகல்வது அவ்இரும்பு கரும்பொற் கொல்லன் கருதியதொழிற்குத் தகுதியாய்த் தொழிற்படுவது போன்றாகும். ஆவியும் இது போன்று ஆண்டவன் அருள்வண்ணமாய் மலமகன்று நலம் எய்தி அடிமை ஆகும். இது நோய் நீக்கிய மருத்துவனுக்கு நோயாளி நோயகன்று நலம் எய்தி அடிமை யாவதை ஒக்கும். அடிமை என்பது ஆண்டான் ஏவிய வழி இயற்றுவது. எனவே முதன்மை - நாயகம் ஆண்டானுக்கே. இவ்வுண்மை வரும் திருப் பாட்டுக்களான் உணர்க:

"அன்றே என்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னைஆட் கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே."
—அ. குழைத்த: எ.

செய்வாய் என்பது செய்விப்பாய் என்னும் பொருட்டு.

"பாசத்தில் இட்டது அருளந்தப் பாசத்தின்
நேசத்தை விட்டது அருளந்த நேசத்தில்
கூசற்ற முத்தி அருளந்தக் கூட்டத்தின்
நேசத்துத் தோன்றா நிலைஅரு ளாமே." —௧0. ௧௮0௨.

## இலக்கணம்

'கண்' 'சிவன் தோன்றிக் கண்ணும்' என்பதன்கண் உள்ளது. 'கண்' அறிவு அறிவுக்குஅறிவாய் விளங்கி நிற்பன் என்பது காண்க. 'இன்' உவமஉருபு. இது 'காட்டாக்கின்' என்பதன்கண் உள்ளது. 'தான்' எழுவாய். ஆட்டாளும் - ஆள்தானும் என்பதன்கண் உள்ளது.

'மண்முதல்......................நேர்.'

## உளக்கோயில்

முப்பத்தாறு மெய்களுக்கும் அப்பாற்பட்ட முழுமுதல்வனை எங்ஙனம் வழிபடுவது எனின்? உலகமும் உடலும் ஒப்பனவேயாம். உலகிலுள்ள முப்பத்தாறு மெய்களும் உடலகத்தும் உள. உலகில் பருமையாயும் உடலகத்து நுண்மையாயும் இருப்பன. உலகை அண்டமெனவும் உடலைப் பிண்டம் எனவும் கூறுப. எனவே உள்ளக் கோவிலில் முதல்வனை வழி படுதற்கு வேண்டிய இருக்கை அமைக்கப்படுகின்றது. கோவில் கருவறை. கருவறை எனினும் மூலத்தானம் எனினும் ஒன்றே.

அவ்வமைப்பு வருமாறு:

| | |
|---|---|
| நிலம், நீர், தீ, காற்று, வானம் | ரு |
| நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை | ரு |
| மூக்கு, வாய், கண், மெய், செவி | ரு |
| எருவாய், கருவாய், கை, கால், வாய் | ரு |
| எண்ணம், மனம், எழுச்சி, இறப்பு | ௪ |
| | ௨௪ |

இவ்விருபத்து நான்கு மெய்யும் (௧௩-ரு)உடல் மெய் என்ப. இவை அடித்தண்டாகிய நாளம் என்ப. இவை உந்தியினின்றும் தோன்றி நெஞ்

சம் நோக்கி எண்விரல் அளவாக இருப்பன. காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு, ஆள், மருள் (௧௰௪) ஆகிய உணர்வு மெய் ஏழு தூமாயைக்கண் உள்ள ௩௨-ம் மெய்யாகிய ஆசான் (௧௩௩) ஒன்று ஆக, எட்டும் அவ்அகத் தாமரையின் எட்டு இதழ்கள் என்ப. ஆண்டான் அருளோன் என்னும் மெய்கள் இரண்டும் அவ்விதழகத்தமைந்த பூந்தாட் கம்பிகள் என்ப. கலை அறுபத்துநான்காகவின் அப்பூந்தாட் கம்பிகளும் அறுபத்துநான்கென்ப. இவற்றைக் கேசரம் என்ப. அன்னைமெய் பொகுட்டு என்ப. பொகுட்டு என்பது தாமரை வித்தினைத் தாங்கிக் கொண்டிருப்பது. அத்தன்மெய் தாமரை வித்தென்ப. வித்தினைக் கொட்டை எனவும் கூறுப. அவ்வித்தின்கண் உடையாளாகிய திருவருளாற்றல் உறைந்திருக்கும். அத்திருவருள் ஆற்றலைவிட்டுப் பிரியா முதல்வன் - அவ்அருளை உருவாகக் கொண்டருளும் முதல்வன் ஈண்டு அணையாகக்கொண்டு எழுந்தருளி விளங்குவன். அச்செம்பொருளை அருள் துணையாய்த் **திருமுறைவழி** நாளும் வழிபாடு இயற்றுக. வழிபாடு "அருச்சனை பாட்டேயாகும்," என்பதும் 'பாட்டவி' என்பதும் போற்றிப் புகழ்ந்து தொழுவார்தம் தொழுகை எல்லாம் திருமுறைத் திருப்பாட்டான் ஆவன என்பனவற்றைக் குறிக்கும். இவ் அகததாமரை உலகியல் போன்று மேல்நோக்கித் தோன்றாது தாங்கப்படுவது தாங்குவதாய்ச் சாற்றக் கீழ்நோக்கித் தோன்றுவதாகும். அடியவர்களைக் கைதூக்கி ஆட்கொள்ளுதற்பொருட்டு முளைவித்தல் தண்டுகீழ் மேல்விளைவித்தாம், உளையகத்தாமரையாம் ஓர் என உய்த்துணர்ந்து வழிபாடு செய்துய்க என்பதாம். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"**உள்ளம் பெருங்கோயில்** ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும காளா மணிவிளக்கே." —௧0. ௧௮௨௩.

பெருங்கோயில் - கருவறை. ஆலயம் - திருக்கோவில்.

"வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமில்லோம் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன உள்ளம் குளிர்விக்கும்
**பாட்டவி** காட்டுதும் பாலவி யாமே." —௧0. ௧௮௨௪.

"அம்மனை அம்மை அரிவை மனோன்மணி
செம்மனை செய்து திருமங்கை யாய்நிற்கும்
இம்மனை செய்த இருநில மங்கையும்
அம்மனை ஆகி அமர்ந்துநின் றாளே." —௧0. ௧௨௫௩.

"மறவாமை" (௪௫௭)

"நாட்டுமித யந்தானும் நாபியினில் அடியாய்
ஞாலமுதல் தத்துவத்தால் எண்விரல் நாளத்தாய்
மூட்டுமோ கினிசுத்த வித்தைமலர் எட்டாய்
முழுவிதழ்எட் டக்கரங்கள் முறைமையினின் உடைத்தாய்க்
காட்டுகம லாசனமேல் ஈசர்சதா சிவமும்
கலாமூர்த்த மாம்இவற்றின் கண்ணுகும் சத்தி
வீட்டைஅருள் சிவன்மூர்த்தி மாணுகிச சத்தி
மேலாகி நிற்பன் இந்த விளைவறிந்து போற்றே."
—சித்தியார், கூ. ௩ - கூ

### இலக்கணம்

'ஈசர்' ஆகுபெயர்; ஈசர் என்பது ஆண்டான் மெய்யைக் (ஈசுரதத்துவம்) குறிப்பதால் ஆகுபெயர் என்ப. 'அதில்' என்பது 'நிலை அதிலாம்' என்பதன்கண் காணப்படுவது. இஃது 'அதனில்' என்று இருத்தல் வேண்டும். அதனால் அன்சாரியை தொக்கதென்றார்.

### பாட்டு

"தென்னாடுடைய சிவனாய் எந்நாட்டவர்க்கும் இறையாய்" அம்மை அப்பராய் எழுந்தருளும் தமிழகத் தனிப்பெரும் கடவுட்குத் திருமுறைத் தமிழ்த் திருப்பாட்டே வழிபாட்டிற்கு மறுபுலச் சொற்களினும் மிக்க வளம்நிறைந்த உளங்கொள் ஒண்மைத் திருப்பாட்டாம் என்க:

"கந்தமலர்க் கொன்றைஅணி சடையான் தன்னைக்
கதிர்விடுமா மணிபிறங்கு கனகச் சோதிச்
சந்தமலர்த் தெரிவையொரு பாகத் தானைச்
சராசரநல் தாயானை நாயேன் முன்னைப்
பந்தமறுத் தாளாக்கிப் பணிகொண் டாங்கே
பன்னியநூல் தமிழ்மாலை பாடு வித்தென்
சிந்தைமயக் கறுத்ததிரு அருளி னானைச்
செங்காட்டாங் குடியதனிற் கண்டேன் நானே."

—௬. ௮௪-௪.

"பெருரு வேதமும் முனிவரும் துதிப்பரும்
பெருமையா யுனை அன்பால்
திருஉலாப்புறம் பாடினோன் திருச்செவி
சாத்திடப் பெறவேண்டும்
மருவு பாசத்தை அகன்றிட வன்தொண்டர்
கூட்டம்வைத் தாயென்ன
அருளும் ஈசரும் சொல்லுக என்றனர்
அன்பரும் கேட்பித்தார்."

—௧௨. வெள்ளானை-௪௭.

### கருத்து

ஐயன் ஐந்தெழுத்தால் அருமலம் கழலும்.

### முதுமொழி

உள்ளத் துறுபொருளை ஒல்லாசிற் றேடுசுட்டால்
கொள்ளல் இறையுணர்வால் கூடுமால்—தெள்ளைந்தால்
"ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு."

—திருக்குறள், ௩௫௭.

## பயன் இயல்

## பத்தாம் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகன் ஆகி இறைபணி நிற்க
மலம்மாயை தன்னொடு வல்வினை இன்றே.

**எ - து. சூ - ம். எ-னின். பாசக்ஷயம் பண்ணுமாறுணர்த்துதல் நுதலிற்று.**

*எ - து. க - ரை. எ-னின். சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

*(இ - ள்) மேல், ஏழாஞ்சூத்திர முதலிய மூன்றானும் முறையே சாதிக்கும் பொருளதியல்புஞ் சாதித்துப் பெறப்படும் பொருளதியல்புஞ் சாதிக்கும் ஆறும் உணர்த்தி, இனி அச் சாதனத்தானாய பயனியல்பு வகுத்துக் கூறுவான் எடுத்துக் கொண்டார். அப்பயனாவது பாசவீடும் சிவப்பேறும் என இரு வகைப்படும். அவ்விரண்டனுள் சுட்டுணர்விறைலாகிய ஏகதேச நோக்கத்தைத் திருஅஞ்செழுத்தினது உச்சரிப்பால் பற்றறத் துடைத்தவழிப் பெறப்படுவதாகிய மேலைச்சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்திப் பயனாகிய பாசவிடுதியைச் செய்துகொள்ளுமாறு மேற்சிந்தனை செய்த பொருளைத் தெளியும் ஆறு உணர்த்துமுகத்தான் உணர்த்துதல் இப்பத்தாம் சூத்திரத்தின் கருத்து (எ - று).*

*இதனானே சூத்திர இயையும் இனிது விளங்கும்.*

*இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு : (ஞானக்கண்ணால் காணப்பட்ட) அம்முதல்வன் (தான் உடனாய் நின்று அறியவும் வேறு காணப்படுமாறு இன்றி யானே அறிந்தேன் என்னும்படி உயிர்) தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின்வழி நின்ற அப் பெத்த நிலைபோல் (ஈண்டு உயிர் அம்முதல்வனோடுடனாய் நின்றறியினுந் தானென வேறு காணப்படுமாறின்றி) அவனோடு ஒற்றுமைப்பட்டு அவ்இறைபணியின் வழுவாது நிற்பின், மல மாயை என்னும் இரண்டனோடு வலிய கன்மமலமும் இல்லையா யொழியும் (எ - று).*

அவனே தானே என்னும் ஏகாரம் இரண்டனுள் முன்னையது பிரிநிலைக்கண்ணும் பின்னையது தேற்றத்தின்கண்ணும் வந்தன.

நெறி உவமவுருபு.

மலமாயையொடு கூடிய வினை என்றாராகலின் இன்றே என்றார்.

உவமைக்கு ஓதியது பொருளினும், பொருளுக்கு ஓதியது உவமையினுஞ் சென்றியைந்தன.

ஈண்டு ஒற்றுமைப்படுதலாவது, குடம் உடைந்தவழிக் குடாகாயமும் ஆகாயமும்போல ஒருபொருளாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றிக் குற்றியை மகன் என்பதுபோலத் திரிவுகாட்சியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி மண்ணே குடம் என்பதுபோல ஒன்றுதிரிந்தொன்றாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றி வெள்ளையுந் தாமரையும்போலக் குணகுணித்தன்மையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றித் தீயும் இரும்பும்போல ஒன்றின் ஒன்று விரவுதலான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிப் பாலுநீரும் போலப் பிரிக்கப்படாத சையோகத்தான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிக் கருடனுமாந்திரிகனும்போலப் பாவனைமாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிக் காய்ந்த இரும்பில் நீர்போல ஒன்றில் ஒன்று இலயமாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றிப் பேயும் பேய்பிடியுண்டவனும்போல ஆவேசத்தான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி இந்தனத்தின் எரிபோல விளங்காமையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஞாயிற்றொளியின் விளக்கொளிபோலச் சத்திகெட்டு நிற்றலான் ஒற்றுமைப்படுதலோ, அன்றித் தலைவனுந் தலைவியும்போல இன்பநுகர்ச்சி மாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி நட்டாரிருவர்போல நட்புமிகுதியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஆவும் ஆமாவும்போல ஒப்புமை மாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ என்று அவ்வச்சமயவாதிகள் மதம்பற்றி நிகழும் இன்னோரன்ன ஐயப்பாடுகளை எல்லாம் நீக்குதற்பொருட்டு, அவனே தானே ஆகிய அந்நெறியென உவமையெடுத்துக்காட்டி ஓதினார். ஈண்டுக்கூறிய ஒற்றுமைக்கட்படும் இயைபாவது என்னையெனின் அது வருகின்ற சூத்திரத்திற் பெறப்படும்.

இதனுள், அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி என்றது ஓர் அதிகரணம்; இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே என்றது ஓர் அதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரம் என்று உணர்க.

## விளக்கம்

**பெயர்**

பயிற்சி இயல் மூன்று நூற்பாவானும் முறையே செய்வது செய்து பெறுபொருள் செயன்முறை, எய்துவதேழ் எட்டொன்பது என ஆராயின், ஏழாம் நூற்பாவால் பயிலும் பொருளாகிய ஆவியின் இயல்பும், எட்டாம் நூற்பாவால் பயின்று பெறப்படும் பொருளாகிய முழுமுதல்வன் இயல்பும், ஒன்பதாம் நூற்பாவால் பயிலும் முறையும் உணர்த்தியருளினார்.

இனி, அப்பயிற்சியான் எய்தும் பயன் இயல்பு வகுத்துக் கூற வேண்டுவது இன்றியமையாதது. எனவே, இவ் இயல் (ஓத்து) பயன் இயல் என்னும் பெயர்த்து.

**இருவகை**

பயன் இருவகைப்படும். அவை, பாசவீடு, சிவப்பேறு என்ப. இவற்றை வீடுபேறு என இயைத்துக் கூறுவர். சுட்டுணர்விலாகிய ஒருபுடைக் காட்சியைத் திருஐந்தெழுத்து ஓதுவதால் பற்றறத் துடைத்த வழிப் பெறப்படுவது ஆவித் தெளிவின் பயனாகிய பாசவீடு மேல் இடையறாநினைவால் உண்டாவது. முழுமுதலை இடையறாநினைவால் தெளியும் வழி உணர்த்துவது இப் பத்தாம் நூற்பாவின் கருத்து.

பாசம் நிலையாப் பொருள்; பேறெய்தத் தடையாய்ப் பிணிப்பது. பொருள்களின் நிலையாமை உணர்ந்தாலன்றிப் பற்றறுதி கூடாது. இந் நிலையாமையை உணர்த்துவது காஞ்சித்திணை. அது வருமாறு:

“காஞ்சி தானே பெருந்திணைப் புறனே.”

“பாங்கரும் சிறப்பில் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே.”

—தொல். பொருள் - ௭௭, ௭௮.

காஞ்சி - வீடுபேற்றின்பொருட்டு உணர்த்தும் நிலையாமை. பாங்கரும் - துணை ஒப்பில்லாத. சிறப்பு - வீடுபேறு. புல்லிய - பொருந்திய. நெறித்து - நன்னெறியையுடைத்து.

இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க.

“மயங்கிருங் கருவிய விசும்புமுகன் ஆக
இயங்கிய இருசுடர் கண் எனப் பெயரிய
வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் குறட்டின் வயங்குமணி ஆரத்துப்
பொன்னந் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணாச் செருமிகு முன்பின்
முன்னோர் செல்லவுஞ் செல்லாது இன்னும்
விலைநலப் பெண்டிரிற் பலர்மீக் கூற
உள்ளேன் வாழியர் யானெனப் பன்மாண்
நிலமகள் அழுத காஞ்சியும்
உண்டென உரைப்பரால் உணர்ந்திசி னோரே.”

—புறநானூறு, ௩௬௫.

"வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை நடுக்கம் செய்யத்
தளைத்தவைத் தலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடு கின்ற ஆமைபோல் தெளிவி லாதேன்
இளைத்துநின் றாடு கின்றேன் என்செய்வான் தோன்றி னேனே."

—௪, ௭௧ - ௬.

"நில்லா வாழ்வு நிலைபெறும் என்றெண்ணிப்
பொல்லா வாறு செயப்புரி யாதுநீர்
கல்லா ரும்மதில் சூழ்தண் கருவிலிக்
கொல்வேறு ஊர்பவன் கொட்டிட்டை சேர்மினே." —௫, ௬௧-௭.

"ஊரெலாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே" —௧௦, ௧௪௫.

## ஒழிபு

திருஐந்தெழுத்தை விதிப்படி கணிக்குங்கால் செயற்பாலது இறைபணி. இறைபணி என்பது 'ஐந்தெழுத்தால் உள்ளம் அரனுடைமை' எனக் கண்டமையால் ஆவி ஆண்டானுக்கு என்றும் அடிமை என்பது தெளிந்து செய்வன அனைத்தும் அவன் திருஅருள் ஆணையே எனக்கொண்டு தன்னைக் கருவியாகவும், தனிமுதலைக் கருத்தாவாகவும் கொண்டு ஞாலத்து இடையறா அன்பால இயன்றன செய்து உலகத்தோடு ஒட்ட ஒழுகுதல். எனவே, இந்நூற்பா திருஐந்தெழுத்தின் ஒழிபு எனக் கொள்க.

## இயைபு

பயிற்சி உணர்ச்சியவழிப் பயின்றாற் பெறுவது யாது எனப் பயனை அவாவுவர் அன்றே? அதனை உணர்த்துவது இவ் இயல். ஆதலால், அவாய்நிலைபற்றி ஒத்தியைபு பெறப்பட்டது. ஆவியின் இயைபு கூறிப் பின் ஆவியின் பேறு கூறுதல் முறைமை. அம் முறைமைபற்றிய இயைபானே நூற்பா இயைபு பெறப்பட்டது. திருஐந்தெழுத்தை ஓதினால் பசை மாசு கழியும். ஓதினோர் எல்லார்க்கும் கழியக் கண்டிலம். அதனால் ஓதுங்கால் நிற்குமுறையாகிய ஒழுக்கமும் வேறுண்டோ? என ஐயம் உண்டாம். அவ் ஐய இயைபானே அதிகரண இயைபு பெறப்படும். பள்ளிக்குச் சென்றாரெல்லாம் படித்தவராகார். பயில்வாரோடும் பயிற்றுவிப்பாரோடும் 'ஈரம் அளைஇப் படிறில'ராய்ச் சொல்வழிநின்று செம்பொருள் நினைவோடு கற்பாரே கற்றவராவர். அதுபோன்றதே ஐந்தெழுத்து ஓதுவாரும் அரும்பேறு எய்துதல்.

## சிறப்பு

அரன் கழல் செல்வதாகிய பேறும் பயிற்சியியலின்கண் "விட்டு—அன்னியம் இன்மையின் அரன்கழல் செலும்" எனக் கூறப்பட்டுள்ளது. எனவே, அவாவுமாறு யாங்ஙனம் எனின்? பயில்வார்க்குப் பயின்றால் பெறுவது என்னெனக் கூறல்வேண்டும். அங்ஙனம் கூறாக்கால் பயில்வார்க்கு மனஎழுச்சி சேறல் அருமையாகும். அதுபற்றி ஆண்டுப் பொது வகையால் அரன் கழல் செலும் எனக் கூறப்பட்டது. அதனையே கிளந்தெடுத்துச் சிறப்புவகையான் ஈண்டு ஓதப்பெறுகின்றது. அங்ஙனம் விடுமாறும் செல்லுமாறும் யாங்ஙனம்? என்று அவா உண்டாதல் இயல்பாதலானே ஈங்ஙனம் ஓதப்பெறுவதாயிற்று. எனவே, அவாய்நிற்றல் ஒருதலை என்க.

'அவனே..................................இன்றே.'

(போ - ரை.) திருவருள் உணர்வால் உள்ளத்தில் நாட்டப்பட்ட அம்முதல்வன் பொருள்தன்மையால் அவ்வுயிரும் கதிரவனும்போன்று வேறேயாவன். வேறே ஆயினும் வேறு காணப்படாது யானே கண்டேன் என்னும்படி ஆவி தானேயாய் நிற்பன். இந்நிலை கட்டுநிலை என்ப. இது போன்று வீட்டுநிலையாகிய ஈண்டுத் தான் என ஆவி வேறு காணப்படாது அம் முதல்வனேயாம்படி ஒற்றுமைப்பட்டு அவ் இறைபணியில் வழுவாது நிற்கும் அங்ஙனம் நிற்பின் விரைந்தோடும் கானல்நீர்போல் கட்டகலும். அகன்றவழியும் பசை ஆகிய வாசனை இருக்கும. அதன்வழியாக அகன்ற மல மாயை கன்மங்கள் வந்து உறுத்தும். அவ் உறுத்தல் இல்லையாம்படி இறைபணி நிற்றல்வேண்டும். அங்ஙனம் நிற்பார்க்கு அவை இல்லையாகும். பசையும பற்றறக் கழியும.

வழி

'அந்நெறி' என்பது கட்டுநிலையில் ஆவியும் ஆண்டானும் மெய்ப் புணர்ப்பால் ஒற்றுமைப்பட்டு ஒன்றன்வழி ஒன்று செல்லும் முறைபோல் என்பதாம். கட்டுநிலையில் 'பிள்ளைமகன் ஈன்றோர்முன் பின்நடப்ப தொக்கும் ஐந்தோ, டுள்ளுமிறை பதிலுறை முறையாய் ஆவியின்வழியே ஆண் டான் துணையாவன.' இது, நோயினைப் போக்கும் மருத்துவனும், அறி யாமையைப் போக்கும் ஆசானும் முறையே நோயின்வழியும அறியாமை யின்வழியும் அவ்வற்றின் இயல்பிற்குத் தக்கவாறு காலம் இடம் முதலி யன நோக்கிச்சென்றே நீக்குவர். அதுபோல் ஆண்டான் கட்டுநிலையில் ஆவியின்வழியாக நிற்பன். ஆவியின்வழியாக நிற்றல் என்பது ஆவி முனைத்து யான் செய்தேன் என்று புரிவொடு புகலுமாறு புகுந்து பின் நிற்றல். இது மேலாள் தொழில் துறையைத் தன் துறை என்றும், தொழிலைத் தனது என்றும், பிறர் நினைவூட்டினும் முதல்வர் இங்கிலரே என்றும கூறுவனபோன்றாகும். இவ்வுண்மை,

"வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு" —திருக்குறள், ருகக

என்பதனுன் உணர்க. அவ் ஆவி மெய்யுணர்வு கைவந்து திருவருள் முனைப்பால் ஆண்டான்வழி ஒழுகுங்கால் "என் ஐமுன் நில்லன்மின" என்று கூறுவதுபோன்ற ஆண்டான் செயலென்றே அகமுவப்ப முகமலர அன்போடடையும். இதுவே "நம்பின எம்மை நுழையப் பணியே" (கூஉ) என்பதாகும்.

கட்டு நிலையில் ஒங்கும் உடலுணர்வால் ஒட்டும் இரண்டு ஐந்தில், நீங்கிலா ஆவிவழி நேர் என்பதற்கிணங்க "**அவையே தானேஆய்**" எனவும், "**தாம்தம் உணர்வின் தமி**" எனவும் ஓதியருளும் ஆற்றால் உடல் ஒட்டு "**அவையே தானேஆய்**" என்பதனுலும், உணர்வு ஒட்டு "**உணர்வின் தமி**" எனபதனுலும பெறப்படும். என உடல் என்பதை இறை உடல் எனவும், என் உணர்வு என்பதை இறை உணர்வு எனவும் எண்ணவும்- கூறவும் இயற்றவும் நிகழும் இயல்பு நேருமேல் "ஏகன் ஆகி இறைபணி நிற்றல்" ஆகும்.

மேலும், தன்வழியேல் ஓதினேன் தன் ஆசான் தன்வழியேல் மன் ஓதுவித்தான் மதி எனக் கூறுதலும் ஒக்கும். 'அவையே தானேஆய்' என்பது இரண்டாம் நூற்பாவின்கண்ணும், 'தாம் தம் உணர்வின் தமி'

என்பது ஐந்தாம் நூற்பாவின்கண்ணும் பெறப்படும். ஆவிவழி ஆண்டான் நிற்குங்கால் ஆவியால் செய்யப்படும் செயல் அனைத்தும் ஆண்டானால் செய்விக்கப்படுவனவே. எனினும், ஆவியின் முனைப்பால் ஆவியின் வினையாய் இருவினை எனப்படும். வீட்டுநிலையில் ஆவியின் செயல் அனைத்தும் அருள் முனைப்பால் செய்யப்படலால் ஆண்டானால் செய்விக்கப்படும் உண்மை புலனாதலின் அவை இறைபணி எனப்படும். ஆவிகள் இருவினையால் பிறப்புறும். இறைபணியால் சிறப்புறும். பிறப்பற்றுச் சிறப்புறலே பிறவிப் பெரும் பேறு. இவ் உண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

பிறப்பானைப் பிறவாத பெருமை யானைப்
 பெரியானை அரியானைப் பெண்ஆண் ஆய
நிறத்தானை நின்மலனை நினையா தாரை
 நினையானை நினைவோரை நினைவோன் தன்னை
அறத்தானை அறவோனை ஐயன் தன்னை
 அண்ணல்தனை நண்ணரிய அமரர் ஏத்தும்
திறத்தானைத் திகழ்ஒளியைத் திருமாற் பேற்றெம்
 செம்பவழக் குன்றினைசென் றடைந்தேன் நானே.”

—சு. அ0 - எ.

## இறைசெயல்

ஆவி தன்னை முழுதும் இழந்த இடத்து ஆண்டானுக்கு அடிமையாகி விடுகின்றது. அப்பொழுது அவ் ஆவியால் செய்வதுபோல் காணப்படும் செயல் அனைத்தும் ஆண்டான் செயலே ஆகின்றது. இது மருந்துழைச் செல்வானால் சேர்த்துக் கொடுக்கப்படும் மருந்து அனைத்தும் மருத்துவர் மருந்தென வழங்கப்படுவதை ஒக்கும். மேலும் பட்டினத்தடிகள் கழுமுன்னிலையில் சென்றவுடன் பாடியருளியதும், சண்டேசுரர் தாதை தாளைத் துணித்ததும் போல்வனவற்றால் இறைசெயலின் மெய்ம்மை புலப்படும் :

என்செய லாவது யாதொன்று மில்லை இனித்தெய்வமே
உன்செய லென்றே உணரப்பெற் றேனிந்த ஊனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோஇங்ங னேவந்து மூண்டதுவே.

—பட்டினத்தடிகள், உஉ.

“வந்து...............சாற்றுங்கால்” கஉ௩ ஆ-ம் பக்கம் காண்க.

“ஆட்டுவித்தால்..............காலே” உஎ௩ ஆ-ம் பக்கம் காண்க.

## நூற்பா இயைபு

பத்து, பதினொன்று, பன்னிரண்டு ஆகிய நூற்பாக்கள் மூன்றனும் முறையே பாசப்பற்றறலும் இறையடி பற்றலும் பயிற்சியால் உடலூழாய்க் கழிவனவுன்றித் தெறுதலின்றாதலும் பெறப்படும். பற்றறல் தாள் பற்றல் பயிற்சியுடல் தாக்காமை, உற்றபத்தோடொன்றிரண்டோர் எனக்கூறினும் பொருந்தும். எனவே பத்தாம் நூற்பா பாசப்பற்றறு தல்கூறுவதாகும். பதினோராம் நூற்பா இறையடி பற்றுதல் கூறுவதாகும். பன்னிரண்டாம் நூற்பா ஏன்ற வினை—ஊழ் தாக்காமையைக் கூறுவதாகும்.

**இலக்கணம்**

"அவனே தானே" இதன்கண் 'அவனே' என்றவிடத்துள்ள 'ஏ'காரம் பிரிநிலை. இஃது உயிர் முதல்வனை இன்றி அறியாது என உயிரைப் பிரித்தமையின் பிரிநிலை. 'தானே' என்றவிடத்துள்ள 'ஏ'காரம் தேற்றம். இது, முதல்வன் உயிருடன் பிரிப்பின்றிக் கலந்து நின்றும் அந்நிலை சிறிதும் தோன்றாது உயிராகவே நிற்றலைக் குறித்தலின் தேற்றம்.

இறை கலந்துநின்றும் சிறிதும் தோன்றாமைக்கு மன்னுமலர் மாலையகம் மன்னுநார் ஓர் சிறிதும், துன்னுபுறம் தோன்றாத் துணையொப்பதாகும். பூமாலை வாழைநார் நடுவைத்து மலர்களை ஒவ்வொன்றாகச் சூழவைத்துப் பிணைக்குந்தோறும் வேறோர் மெல்லிய நாரால் பிணைத்துக் கட்டிவந்து முழுமாலையாக்கப்படும். அம்மாலையினை நாம் காணுங்கால் நார் இருப்பதாகக்கூட ஒரு சிறிதும் தோன்றாது. இவ்வொப்பே இறை உயிரொடு கலந்து நின்று ஒருசிறிதும் தோன்றாமைக்கு ஆகும்.

"அந்நெறி" என்பதன்கண் உள்ள 'நெறி' என்பது உவம உருபு. பொருள்போல என்பதாம்.

"மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே" 'மலம் மாயை வினை' என்னும் மூன்றும் இல என்று முடிதல் வேண்டும். அங்ஙனம் இன்றி இன்று என்னும் ஒருமை வினையால் முடிந்ததற்குக் காரணம் 'மலம் மாயை' என்பது 'வல்வினை' என்னும் பெயருக்கு அடையாய் நிற்கின்றது. மாணவரோடு கூடிய ஆசான் வந்தான் என்பதில் மாணவர் ஆசானுக்கு அடையாய் நிற்பதை ஒக்கும். "சிறப்பொடு பூசனை செல்லாது" (௨௫௫ - ஆம் பக்கம்) என்பதும் இவ்வாறு வந்தது.

உவமை: அவனே தானேயாகி (நிற்றல்)

பொருள்: ஏகனாகி (அவனே தானேயாய்)

உவமைக்கண் உள்ள "அவனே தானே" என்பது பொருளில்தானே அவனே என வருவிக்க வேண்டுதலால் உவமைக்கு ஓதியது பொருளிற் சென்றியைந்தது என்றார். 'பொருளில்' ஏகனாகி இறைபணி நிற்க என்பதன்கண் உள்ள நிற்க என்பது நிற்பின் எனப் பொருள்பட்டு இந் நிற்க என்னும் சொல் உவமையில் சென்று இயைந்தது.

**ஒற்றுமை**

"ஈண்டு ஒற்றுமைப்படுதலாவது தடம் உடைந்த வழி" எனத் தொடங்கி "ஆமாவும்போல" என முடித்து இவ் ஒப்புமை அனைத்தும் முற்றொப்புமையன்று; ஓர்புடை என்றும், "அவனே தானே ஆகுதல்" ஒப்பென்றும், அது வருகின்ற சூத்திரத்தில் கண்ணொளியும் ஆவியின் அறிவும்போல் எனப்படுவதாம் என்றும், அஃது ஒன்றாய் வேறாய் உடனும் மெய்ப்புணர்ப்பு (புனிதாத்துவிதம்) என்றும் ஓதுவதால் அவை நினைவில் நிற்றற்பொருட்டுச் செய்யுள் வடிவில் தருகின்றாம்.

குடவெளியும் மடவெளியும் இப்பி வெள்ளி
　　கூறுமண் குடம்வெள்ளை மரைதீ இரும்பு
இடனுறுபால் நீர்கருடன் மாந்தி நீகன்
　　எரியிரும்புண் நீர்பேய்அத் தாற்பற் றுண்டோன்

அடல்காட்டத் தீஞாயிற் றொளிவி ளக்கோடு
அன்புதலை வன்தலைவி அம்நட் டோர்கள்
மிடல்ஆவோ டாமாவும் மேவும் ஈரேழ்
விழையொப்பும் ஓர்புடைமெய்ப் புணர்ப்பி னுக்கே.

ஒருபொருளே திரிவறிவு திரிவாம் பண்டம்
ஓஙகுகுண குணியொருமை விரவு தல்லாம்
தருபிரிவில் கூட்டம்பா வனையொ டுக்கம்
சார்வெறியே விளஙகாமை சத்திக் கேடு
அருநுகர்ச்சி நட்பொருமை ஒப்பு மையாம்
ஆஙகணுணர்த் தும்பதினொன் குவமை முற்றம்
பொருவதன்றும் ஓர்புடையே பொருவு தமம
பொருவதொன்றாய் வேறுடனும மெய்ப்பு ணர்ப்பே.

கூறு :

க. அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி.

உ. இறைபணி நிற்க மலம் மாயை தன்னொடு வல்வினை இன்று.

---

## முதல் அதிகரணம்

ஈண்டுப் பரமேசுரன் இவ்ஆன்மாவாய் நின்ற முறைமையான் அவ னிடத்து ஏகனாகி நிற்க என்றது.

எ - து. மே - ள். எ - னின். ஞானம் பிரகாசித்து முதற் பொருளைக் காண்டன்மாத்திரையே வீடுபேற்றிற்கு அமையு மெனச் சிவசமவாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண் ணழித்துரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

அவ்வாறு நிற்கவே யான் எனது என்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையும் ஆகலான்.

எ - தி. ஏது எ - னின். அஃது எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) அங்ஙனம் ஒற்றுமைப்பட்டுநின்றாலே யானும் எனதும் எனப் பகுத்துநிற்கும் மயக்கவுணர்விற்கு ஏதுவாய மலம்நீங்கி அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாகலான் அச்செருக்கு அறுதிக்குக் காரணமாதல்பற்றி ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகிநிற்கவென மேற்கொண்டது (எ - று).

அவ்வாறு நில்லாதவழி மலமறாது, அஃதறாதவழிச் சீபா தத்தையணைதல் பெறப்படாதென்பார் நிற்கவேயெனத் தேற் றேகாரத்தாற் கூறினார்.

யானெனப்படுவது ஞாதிரு. எனதெனப்படுவன ஞானேஞேயங்கள்.

ஆறுவது பண்பின்கிழமையும் உணர்ச்சிக்கிழமையும்பற்றி வந்தது.

ஒருமை தனித்தனி சென்றியையும்.

செருக்கு ஆகுபெயர்.

அற்றணையுமென்றது மழைபெய்து குளநிறையும் என்றாற் போலக் காரணகாரியப்பொருள்பற்றி வந்த செயவெனெச்சத் திரிபு.

*நான்அவனென் றெண்ணினர்க்கும் நாடும்உளம் உண்டாதல்
தான்என ஒன்றின்றியே தான்அதுவாய்—நான்எனஒன்று
இல்லென்று தானே எனுமவரைத் தன்னடிவைத்து
இல்லென்று தான்ஆம் இறை.

எ - து. உ - ம். எ - னின். அங்ஙனம் பகுத்து நின்று உணருமுணர்வை மயக்கவுணர்வென்றது என்னை என்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ - ள்.) நான் அவன் என்று எண்ணினர்க்கும் நாடும் உளம் உண்டாதல் தான் என ஒன்று இன்றியே தான் அது ஆய்-யானென்றும் அவனென்றும் ஞாதிரு ஞேயங்களைப் பகுத்துணர்ந்து நிற்பார்க்கும் (யானேஎன நிற்பார்க்குப்போல) அவ்வாறு எண்ணுகின்ற உயிருணர்வு முனைத்துத் தோன்றும் ஆகலான், (அவ்வழித்) தான்என்றொரு முதல் காணப்படு மாறின்றித் தான் அவ்வுணர்வேயாய், நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரைத் தன் அடி இல் என்று வைத்து தான் ஆம் இறை—இனி யானென்றொரு முதல் காணப்படுமாறு இல்லை என்றுணர்ந்து முழுவதுந் தானே எனக்காணுந் தெளிவுடையாரைத் தனது திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்கச் செய்து அவ்வாறே ஆவன் முதல்வன் (எ - று).

ஆய் ஆம் என இயையும். ஆய் ஆம் என்புழிச் செய்தெனெச்சம் "நள்ளார்க்கு நஞ்சுஒத்து நட்டார்க்கு அமிழ்து ஒக்கும் இவன்" என்றாற்போலத் தன்வினையாதல் உணர நின்றது.

நாடும்உளம் உண்டாயவழித் தான் இலனாதலும் அஃதில்வழித் தான் உளனாதலும் யாங்ஙனம் பெறுதுமெனிற் காட்

* 'யான்செய்தேன்' சித்தியார், கo.

டுதும்:—தூல வொளியாகிய கண்ணொளியுஞ் சூக்கும வொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்குநிலை உற்றுநோக்க வல்லார்க்குப் பிரித்தறிய வாராமையிற் கண்ணொளியாக் காணுங்காற் காணுந்தன்மையே முனைத்துத் தோன்றும்ஆகலின் அவ்வழி விளக்கொளி இருந்தும் இல்லைத்தானே, அன்றி விளக்கொளியாக் காணுங்காற் காட்டுந் தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழிக் கண்ணொளி இருந்தும் இல்லைத்தானே; இனிக் கண்ணொளியும் விளக்கொளியுமெனப் பகுத்துக் காணப்புகினும் காணுந்தன்மையே முற்பட்டுத் தோன்றுதலின் அவ்வழி விளக்கொளி திரிவுபுலனாக் காட்சிப்படுவது அல்லது தெளிவுபுலனாக் காட்சிப்படுமாறில்லை. அதுபோலத் தூலஅறிவாகிய உயிருஞ் சூக்குமஅறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையும் பிரித்தறிய வாராமையின் ஆண்டும் இவ்வாறே கண்டுகொள்க.

எண்ணினர்க்கும் என இறந்தது தழீஇய எச்சவும்மை சந்திநோக்கி மகரங் கெட்டுநின்றது.

இக்கருத்துப்பற்றியன்றே *"கண்ணொளி விளக்கின்சோதி கலந்திடுங் கருத்தொன்றன்றே" எ-ம. †"காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை—காண்பார்க ளன்முத்தி காணார்கள்-காண்பானுங்—காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்—வாட்டுநெறி வாரா தவர்" எ-ம். கூறினார் புடைநூலாசிரியரும். அற்றேல், இவ்விரண்டனுள் யாது திரிவு காட்சி யாது தெளிவுகாட்சியெனின்—கண்ணொளியோடு கூடிய வழியும் இது விளக்கொளி இது ஞாயிற்றொளி இது திங்கள் ஒளியென அவ்வப்பெற்றியவேயாய்க் காணப்படும் விளக்கொளி முதலியவற்றின் காட்சி தெளிவுகாட்சியெனவும், அவ் ஒளிகளோடு கூடியவழி அவ்வாறு ஒருபெற்றித்தாய்க் காணப் படாத கண்ணொளியை வேறு காண்டல் திரிவுகாட்சியெனவும் கண்கூடாக விளங்கிக் கிடத்தலின் இவ்வாறே பொருளினும் வைத்துணர்ந்துகொள்க. இவ்வாறன்றி, விளக்கொளிமுன்னர்க் கண்ணொளி சத்தி மடங்கிப்போதலின் அது விளக்கொளியைப் போலக் காட்சிப்புலனாகாதாயிற்று என்னுமோஎனின்? என்னும்: என்னை? கண்ணொளி சத்தி மடங்கிற்றாயின் விளக்கொளி காட்சிப்புலனாதல் பிறிதொன்றாற் பெறப்படாமையின். அற்றேல், மின்மினித் துணையாயினுந் தானேவிளங்கும் இயல்பில லாத கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டென்பதற்குப் பிரமாணம்

* சிவப்பிரகாசம், உண்மை, அ. கண்ணொளிவிளக்களித்து.

† வினாவெண்பா, கக.

என்னையெனின் ;— அறியாதுகடாயினாய் : ஆகாயத்தின்கண்ண தாகிய சத்தகுணம் வியஞ்சகத்தானன்றித் தினைத்துணையானுந் தானென விளங்குமாறின்மையின் அதுபற்றி எதிரொலி வடிவாய அவ்வோசையை ஆகாயத்தின் குணம்அன்று வியஞ் சகப்பொருளின் குணம் என்பார் யாருமில்லை. அதுபோலக் கண்ணின் கண்ணதாகிய ஒளியும்வியஞ்சகம் உள்வழி விளங்கி அல்லுழி விளங்காமைமாத்திரையே பிறிதில்லை ஆகலான், அதனைக் கண்ணின் குணம் அன்றென்றல் அறிவிலாதார் கூற் றேயாமெனவும், அக்கண்ணொளியாவது தன்னை விளக்குதற் குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாயின் ஏகதேசமாய் விளங் கியும் அது வியாபகமாயின் வியாபகமாய் விளங்கியும நிற்பதோ ரியல்பிற்றெனவும் உணர்க. அஃதங்ஙனமாக, "கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும்" என்றற்குப் பிரமாணமென்னை : ஒருவிடயத்தின் வீழ்ந்த பல கண்ணொளிகட்குத் தம்முள் இயை பில்லாதவாறுபோல ஒருவயிற்பட்ட கண்ணொளி விளக்கொளி கட்குத் தம்முள் இயைபில்லையென்றலே பொருத்தமுடைத்துப் போலுமெனின்,— அஃதறியாதார் கூற்றேயா மென்றொழிக. என்னை ஒரு விடயத்தின் வீழ்ந்த கண்ணொளிகள் தமமுள் ஒன்றனையொன்று காணுமாறுமில்லை காட்டுமாறுமில்லையாக லான் அவை தம்முட்கலத்தற்கு ஒரியைபின்றென்பது ஒக்கும். அவ்வாறன்றிக் கண் விளக்கினைக் காண்டலும் விளக்குக் கண் ணுக்குக் காட்டலுமாகிய இயைபுண்மையானும், இவ்வியைபு தம்முட் பெறப்படாத கண்ணொளி முதலாயின ஈண்டைக்கு உவமையாதல் செல்லாமையானும், இந்திரியங்கள் தத்தம் விட யத்தோடியைந்தன்றிச் சந்நிதிமாத்திரையான் அவற்றையறிதல் செல்லாதென்பது ஆகமங்களுக்கெல்லாம் துணிபாகலானும் அத்தன்மையவாய கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முட் கலப்பில்லையென்றல் காண்டல் விரோதமாகலின் இவ்வாறு உவமைக்கோதியனவெல்லாம் பொருட்கண்ணும்ஆமாறுணர்ந்து உய்த்துரைத்துக்கொள்க. அற்றேல், ஈண்டெடுத்துக் காட்டிய கண்கள் தம்முள் ஒன்றனையொன்று காணுமாறின்மைபோல உயிர்களுந் தம்முள் ஒன்றனையொன்று அறியுமாறில்லைபோலு மெனின் ; அறியாது கூறினாய் : கண்கள் தம்முள் ஒன்று ஞொன்று காணப்படுமாறில்லையென்றது விளக்கும் விடயமுங் காணப்படுமாறுபோல வேறியைந்து தனிப்பொருளாய்க் காணப் படுமாறில்லை என்ற துணையேயன்றிப் பிறிதின்மையின், விளக் கொளியைக் கண் காணுங்கால் அதுவதுவாய் நின்று காணும் பெற்றித்தாய்த் தன்னையும் அவ்விளக்கொளிவண்ணமாய்க் காண்டலுண்டென்பது கண்கூடாக அறியக்கிடத்தலின், ஏனைக் கண்களையும் அவ்வாறு காண்டலமையுமாகலான் அதுபோலத்

தம்முட்டனித்தியையில்லாத உயிர்களுஞ் சிவத்தோடியைந்து நின்று தம்மையும் பிறவுயிர்களையும் இவ்வாறுணர்தல் அமைவுடைமையானென்பது *"நாடிஅரன்—தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார் என்னு மெனவறிவார்" எ-ம். †"தன்னாலே தனைஅறிந்தால்—தன்னையுந் தானே காணுந் தானதுவாகி நின்றே" எ-ம் ‡"அதிலறிவடங்கி—மன்னிட வியாபியாய வான்பயன் தோன்றும்" எ-ம். §"என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன் நின்னிலை அனைத்தையுங் கண்டேன் என்னே—நின்னைக் காணா மாந்தர் தம்மையுங்காணாத் தன்மை போரே" எ-ம். பிறாண்டும் இவ்வாறோதும் அநுபவமுடைய தேசிகர் திருவாக்குக்களானும் இவ்வுண்மை யுணர்ந்துகொள்க.

## விளக்கம்

**பின் முன்**

கட்டுநிலையில் ஆவியும் ஆண்டானும் உடனாய் நிற்க ஒருபொருள் அறியப்படுகின்றது. இருவராலும் அறியப்படும் அப்பொருள் ஆவியின் முனைப்பால் அவ் ஆவி தானே அறிந்ததுபோலத் தனும்படி நினைக்கவும் சொல்லவும் நோந்து செய்யவும் இடன் அளித்து ஆண்டவன் வேறு காணப்படுமாறின்றி ஆவியினுள் அடங்கி அவ் ஆவியேயாய் ஒற்றுமைப்பட்டு ஆவிவழிநிற்பன்.

வீட்டுநிலையில் ஆவி ஆண்டவனோடு உடனாய்நின்று அறியினும் ஆவியின் முனைப்பொடுங்கித் திருவருள் முனைப்பாய்த் திகழ்தலின் அவ் ஆவி தானென வேறு காணப்படுமாறின்றி ஆண்டானோடு ஒற்றுமைப்பட்டு அவன்வழி நிற்றலாயிற்று. அப்பொழுது ஆண்டு நிகழும் நிகழ்ச்சி ஆவியின் நிகழ்ச்சிபோற் காணப்படினும அவ் ஆவிக்குத் தான் என்னும் முனைப்பின்மையால் அது வேறு காணப்படுமாறின்று. ஆண்டான் செயலே என்று காணப்படுமாறு அவனோடு ஒற்றுமைப்பட்டு அவன்வழி நிற்கும். இதுவே, "**நும்பின் எம்மை நுழையப் பணியே**" (௨௭௬) என்னும் திருமுறைத் திருமறையாகும்.

இதனை ஓர் ஒப்பில் கூறின் ஈருருளிஆவி இயக்குவோன் ஆண்டான் கட்டீருருள்முன் பின்வீடிசை எனக் கூறலாம். அஃதாவது, ஈருருளி என்பது மிதிவண்டி (cycle). மிதிவண்டி ஏறி ஓட்டினும் ஈர்த்துவரினும் அவ்வண்டியும் அவனும ஒற்றுமைப்பட்டு உடனாய் வருதல் வேண்டும. மிதிவண்டியை ஆவிக்கும் இயக்குவோனாகிய ஓட்டுபவனை ஆண்டானுக்கும் ஒப்பாகக் கூறலாம். மிதிவண்டியின் கைப்பிடி முன்னானால் அதனை ஓட்டுபவன் பின்னாகி விடுகின்றனன். அப்பொழுது மிதிவண்டி தானாக ஓடுவது போல் ஒருவகையாக நினைத்தலும் கூடும். இதுவே ஆவியின் கட்டுநிலை.

* சகஎ-ம் பக்கம.

† சிவப்பிரகாசம், உண்மை. ௨௨. தன்னறிவதனை.

‡ ,, ,, ௨அ. இந்நிலை.

§ பட்டினத்துப்பிள்ளையார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, ௪௩, மேவிய. (பக்கம். ௨௯௯, ௪௨௧.)

அம்மிதி வண்டியை ஓட்டுபவன் ஈர்த்துக்கொண்டு வருங்கால் அவ் வண்டி பக்கவயமாய் வரினும் பெரும்பாலும் ஈர்ப்பவன் முன்னும் அவ் வண்டி பின்னும் இருப்பதுபோன்றே கொள்ளுதல் வேண்டும்; அன் றெனினும் இருக்கை பின்னுதல் துணிபு. எனவே இம்முறையே வீட்டு நிலையாகும். இக்குறிப்பே "என் கடன் பணிசெய்து கிடப்பதே' என் னும் திருமுறைத் திருமறையாகும். அது வருமாறு:

> "தங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
> தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
> தன்க டன்னடி யேனையும் தாங்குதல்
> என்க டன்பணி செய்துகி டப்பதே."
>
> —௫. ௧௧—௧.

கிடப்பதென்பது பாலுண்குழவி 'ஈன்று புறந்தருஉம் தலைக்கட னு'டையதாய் கிடத்திய இடத்துக் கிடத்தியவாறே கிடப்பதுபோன்று ஆவிகளும வீடுபேற்று நிலையில் ஆண்டான் அறிவித்தவாறே அறிவது முதலிய செயல்புரியும். எனவே அந்நிகழ்ச்சி அனைத்தும் ஆண்டவன் நிகழ்ச்சியாதலின் ஆவி ஆண்டான் அடியின்பினைத்துய்த்தவாறே அவன் திருவடியில் அடங்கும். உலகமும் அச்செயலை ஆண்டான் செயலென்றே ஆர்வமுடன் விளம்பும். இஃது ஆட்சித்தலைவர் ஆணைவழிப் பணியாளர் செய்யும் அனைத்தும் ஆட்சித்தலைவரதாய்க் கொண்டு உலகு உரைப்பதை ஒக்கும் ஆவி ஆண்டான்வழி நிற்றலே அவனோடு ஒற்றுமைப்பாட்டு உணர்ச்சி எய்துவதாகிய ஏகன் ஆகுதலாகும்.

### செருக்கறல்

செருக்கு என்பது ஆவிகளைப் பிறப்பு இறப்புகட்கு உட்படுத்தும் பெரும்பகை ஆறனுள் முதன்மைவாய்ந்தது. அவ் ஆறும் முறையே செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணா உவகை என்ப. இவற்றைத் திருவள்ளுவநாயனார் திருப்பாட்டான் உணர்க:

> "செருக்குஞ் சினமும் சிறுமையும் இல்லார்
> பெருக்கம் பெருமித நீர்த்து."
>
> "இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
> உவகையும் ஏதம் இறைக்கு."
>
> —திருக்குறள், ௪௩௧, ௨.

இக்குறிப்பு வரும் திருமுறைத் திருமறைத் திருப்பாட்டான் உணர்க:

> "அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற் றைம்புலனும்
> அடக்கி ஞானம்
> புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும்
> புராணர் கோவில்
> தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க் கந்திகழச்
> சலசத் தீயுள்
> மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணஞ்செய்யும்
> மிழலை யாமே."
>
> —௧. ௧ . - ௧.

செருக்கு என்பது தான் என்னும் முனைப்பு. இஃது ஆவியைப் பற்றியது. இதுபோன்று தன்னது என்னும் முனைப்பும் செருக்கு ஆகும்.

இஃது உடைமையைப் பற்றியது. முன்னது அகப்பற்றெனவும், பின்னது புறப்பற்றெனவும் கூறப்படும். இவற்றை "யான் எனதென்னும் செருக்கு" (ஙஉ) எனத் திருவள்ளுவநாயனாரும் கூறியருள்வாராயினர். செருக்கை அகந்தை எனவும் அகம் எனவும் கூறுவர். செருக்கு மயங்குதற்கு ஏதுவாவது. இது "பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும்" மருள். இது மாறுபாட்டுணர்வு எனவும்படும். இவ்வுண்மை வரும் "பொருள் அல்லவற்றை" என்னும் திருப்பாட்டான் உணர்க. (எ0)

இம்மருளால் பற்றறாது; பற்று முறுகும். எனவே, பிறந்து இறந்து வருகின்ற நிலையாமை காணப்படும்.

## முன்பின்

மோரோடு நீர் கலப்பின் முன் மேல் மோர் பின் நீராம், சீரிறைக்கும் ஆவிக்கும் செப்பென்றாங்கு ஆவியும் ஆண்டானும் என்றும் கலந்துநின்று ஆண்டானால் ஆவி தொழிற்படினும், உலகியலில் ஆவி முற்பட்டு ஆண்டான் பிறபட்டு ஆவியே விளங்கும். வீட்டியலில் ஆண்டான் முற்பட்டு ஆவி பிற்பட்டு ஆண்டானே விளங்குவன். இது மோரோடு தண்ணீர் கலந்த முற்பொழுதில் மோரே மிதந்து மோராகவே தோன்றும். பிற்பொழுதில் மோர் அடியில் உறையத் தண்ணீர் மிதந்து தண்ணீரே முற்பட்டுத் தோன்றுமல்லவா? அத்தோற்றத்தினை யொக்கும். இவ்வுண்மை குறிப்பாற் புலப்படுத்தும் பாட்டு வருமாறு:

"காண்பான் அவாவினாற் காதலன் காதலிபின் நடவா நிற்ப
நாண்பாலள் ஆதலான நன்னுதல் கேள்வன்பின் நடவா நிற்ப
ஆண்பான்மை குன்றா அயிலவே லவன்றனகரும் அஞ்சொ லாட்கும்
பாண்பால வண்டினமும் பாட அருஞ்சுரமும் பதிபோன் றன்றே."

—தொல். பொருள் - சு0. மேற்கோள்.

இப்பாட்டில் காதலனும் காதலியும் உடன்போக்கு முறையில் அருஞ்சுரத்துப் பெருவழியில் காதலன் கட்டளைப்படி காதலி சிறிதுதொலைவு காதலன்முன் சென்றனள். பின் உயிரினும் சிறந்த நாண் இயல்பாகவே உள்ளவளாதலின் கட்டளைப்படி நடந்தபின் காதலன் பின் முறையே நடப்பாளாயினள். இதுபோல் ஆவியும் பிறவியாகிய அருஞ்சுரத்தில் ஆண்டான் ஆணைவழி முற்செல்கின்றது. தன்னை யுணருங்காலத்து மெய் யுணர்வு தலைப்படும். தலைப்படின் அவ்வுயிர் நங்கை நிலை எய்தும். நங்கை நிலை எய்தவே "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" (கசகூ) என்னும் முறைப்படி ஆவி ஆண்டான் அடியுறைந்து ஆண்டானே முற்பட்டுத் தோன்றுவன். இதுவே "நம்பின் எம்மை நுழையப் பணியே" (உஎசு) என்னும் சிறப்புறற்காம் முதன்மை வேண்டுகோளாகும்.

## ஒற்றுமை

இவ் ஒற்றுமையினையே ஏகனாகி நிற்றல் எனக் கூறுவர். ஆவியும் ஆண்டானும் ஒற்றுமைப்பட்டு உடனாவதற்கு அவ் ஆவியின் அறிவை விளக்கவும் மல ஆற்றலைத் தேய்க்கவும் உடல் கலன் உலகு ஊண் எனத் தோன்றிய மாயாகாரியங்களுடன் ஆவியைப் புணர்த்தித் தானும் புணர்ந்து விரிகின்றான். பின் ஆவியைத் தன திருவடியில் சேர்த்தற்பொருட்டுச் சுட்டுணர்வாகிய மாயாகாரியம் வாயிலாக அறியும் அறிவும், அது நீங்க ஆவி தான் எனும் முனைப்போடு உணர்ந்தேன் எனக் கருதும் சிற்றுணர்

வும் ஒடுங்க ஒடுக்கித் தன் திருவடியுணர்வாம் முற்றுணர்வு என்னும் உணர்விறந்து உணரும் ஒன்றேயாய் உடனாய் நிற்பன். "சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்' என்னும் திருப்பாட்டின் சிறந்த பொருளுமிதாம். சுட்டுணர்வு சிற்றுணர்வு முற்றுணர்வு என்னும் பாகுபாட்டினுள் முதற்கண் சுட்டுணர் வொடுங்கப் பின் சிற்றுணர் வொடுங்க நிகழ்விப்பதே 'சென்று சென்று அணுவாய்த் தேய்தல்"; ஆவிகட்கு முற்றுணர்வு நிகழ்விப்பதே 'ஒன்றாதல்'. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலால் பிறிதுமற் றின்மை
**சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்**
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றும்நீ அல்லை அன்றிஒன் றில்லை
யாருன்னை அறியகிற் பாரே."

—அ. கோயில் திரு - ௭.

௫௫. "பதிபசு பாச முதிரறி வுகளுடன்
ஆறு முன்னாக் கூறுப் பினனர்
இருபொருள் நீத்துமற் றொருநால் வகையும்
ஈனமில ஞாதுரு ஞான ஞேயமென்று
இசைய மூன்றாய்ப் பசுபதி என்றவற்று
இரண்டாய் இரணடும் ஒன்றின் ஒன்றாகத்
௬0. திரண்டாம் பயனெனும திருவருள் தெளியிற்
**சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும்**
என்றிறை இயறகை இயம்புதல் தகுமே"

—சங்கற்ப. சைவவாதி.

## இலக்கணம்

'யானெனப்படுவது ஞாதுரு'. இதன்கண் உள்ள ஞாதுரு என்பது அறிபவன். அறிபவனைக் காணபான் எனவும் கூறுவர். 'எனதெனப் படுவன ஞானஞேயஙகள்'. ஞானம் - அறிவு. ஞேயங்கள் - அறியப்படும் பொருள்கள். ஞானத்தைக் காட்சி எனவும், ஞேயஙகளைக காட்சிப் பொருள்கள் எனவும் கூறுவர். ஆவியை உயிர்க்கிழவன் எனவும் கூறுவர். அறிவு உயிாக்கே உள்ளது. உயிரில் பொருளகட்கு அறிவு இல்லை.

'எனது' என்பது என் + அது = எனது. இதன்கண் காணப்படும் 'அது' என்பது ஆறாம்வேற்றுமை உருபு இவ்வுருபு அறிவையும் அறியப் படும் பொருள்களையும் சாரும். சாரவே எனதறிவு எனது பொருள் என்று வரும். எனது அறிவு என்னும்கால் பண்பின் கிழமையாகும். கிழமை - உரிமை. எனது பொருள் என்பது உணர்ச்சிக்கிழமை ஆகும். ஆவியின் பண்பு அறிவு. அவ் அறிவின் பயன் பொருள்களை உணாதல். அவ் உரிமை உணர்ச்சிக்கிழமையாகும். கண்ணின் பணபு பார்த்தல். பாாத்தலுக்கும் பார்க்கப்படும பொருளுக்கும் உள்ள உரிமை உணர்ச்சி. எனவே, அறியப்படும் பொருளுக்கும் அறிவோனுக்கும் உள்ள உரிமை உணர்ச்சிக்கிழமை.

எனது அறிவு, பொருள் என்று வருதல் பொருந்தாது. என அறிவு பொருள்கள் என்று வருதல்வேண்டும். எனது என்பதன்கண் உள்ள அது ஒருமையுருபாகும். என என்பதன்கண் உள்ள அ பன்மை உருபாகும். அது என்னும் ஒருமை எனது அறிவு எனத் தனித்தும், எனது பொருள் எனத் தனித்தும் சென்று முடியும்.

இவ்வுண்மை வரும் நூற்பாவான் உணர்க:

"ஆறனுருபே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினும் இதனது இதுவெனும்
அன்ன கிளவிக் கிழமைத்து அதுவே."

—தொல். சொல் - எக.

'செருக்கு' ஆகுபெயர். இது செருக்குக்கு ஏதுவாகிய மலத்தைக் குறித்தலால் ஆகுபெயராயிற்று.

'அற்று அணையும்' அற்று என்பது செயவென் எச்சம். அப்படியாயின் 'அற' என்றாகும். அப்பொழுது அறுதலால் அணையும் என்றாகும். இது மழை பெய்தலால் குளம் நிறையும் என்று கூறவேண்டுவதை மழைபெய்து குளம் நிறையும் என்று கூறுவதை ஒக்கும்.

'நான் அவனென்... .....இறை.'

## முனைப்பு

அறிவான் அறிவு அறியப்படும் பொருள் என மூவகையாகப் பகுத்துக் காணும் அறிவும் ஒருமை அறிவாகிய தெளிவறிவாகாது. பின் என்னாகுமெனில் மயக்கறிவே ஆகும். நூல் கற்பான் ஒருவன் கற்றலில் கருத்தூன்றுவதன்றிக் கல்லூரியையும், கற்கும் நூலையும், நூலின் அமைப்பையும், நூலுள் காணப்படும் ஓவியம் எழுத்து தாள் முதலியவற்றின் அழகினையும் பகுத்துப் பகுத்துக் கண்டு காலம் கழிப்பின் கற்குங்கொள்கைக்கு மாறாம் ஆகலின் அவ் அறிவை மயக்க அறிவு என்றே கூறுதல் வேண்டும். கற்பது ஒன்றே தெளிவு அறிவாகும். இதுபோல் ஆவியும் இறை நிறைவில் அழுந்துவது ஒன்றே தெளிவு அறிவாகும். கற்பான் வேறு அவன் கற்ற நூல் அறிவு வேறு என்று பகுத்துக் காணாது நூலறிவாகவே காணப்படுவன். அது திறம்பெற்ற நூலறிவின் பேரால் ஆசிரியன்மாரா அழைக்கப்படுதலும் அன்னவா அவ்வந் நூல்களையே கற்பித்தலும் வழக்காறாதலை ஒக்கும். எடுத்துக்காட்டு இலக்கணப் பேராசிரியன். தெய்வத் தெளிவே தெளிவு என்பதை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"மையடீர் ஏற்றானும் மலர்உறையும் நான்முகனும்
ஐயன்மார் இருவர்க்கும் அளப்பரிதால் அவன்பெருமை
தையலார் பாட்டோவாச் சாய்க்காட்டெம் பெருமானைத்
தெய்வமாப் பேணுதார் தெளிவுடைமை தேறோமே."[1]

—உ. சக - க.

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு." —திருக்குறள், ௩டு௪.

யான் என்றும் அவன் என்றும் பகுத்துக் காண்பார்க்கும் முனைப்பு உண்டு. அம்முனைப்பு அவன் என ஒரு பொருள் இல்லை; எல்லாம்

யானே; யானே அவன் எனக் கொள்வார்தம் முனைப்பை ஒக்கும். யான்-ஆவி; அவன் - கடவுள். இம்முனைப்புள்ள இடத்து ஆண்டான் வேறு காணப்படான். அவ் உயிராகவே காணப்படுவன். கோலம் கொண்டு கூத்தாடுவாரை வேறு காணப்படுமாறின்றி அக்கூத்தராகவே காணப்படுதலை ஒக்கும்.

ஆவி திருவருளால் தன் உண்மையையும் தலைவன் உண்மையையும் உணர்ந்து தான் தலைவன் திருவடிக்கீழ் அடக்கம் என உணர்ந்து முனைப்பற்று நிற்பார்பால் ஆவி என வேறு காணப்படுமாறின்றி ஆண்டவன் தானே விளங்கித் தோன்றுவன். மன்றுடி (வழக்கறிஞர்) பேசும்போது வழக்காளி பேசாது அடங்கி இருப்பன். இதுவே 'முந்து கிளவாச் செறிவு'. வழக்காளி பேசும்போது மன்றுடி வாளா இருப்பன். இம்முறையே ஆவியும் ஆண்டவனும் தனித்தனி விளங்கித் தோன்றும் முறையாகும். ஆண்டவன அடிக்கீழ் ஆருயிர் என்பது வரும் திருப்பாட்டான் உணர்க :

"தரியா வெகுளிய னாய்த்தக்கன் வேள்வி தகர்த்துகந்த
எரியார் இலங்கிய சூலத்தி னான்இமை யாதமுக்கண்
பெரியான் பெரியார் பிறப்பறுப் பான்என் றும்மப் பிறப்பை
அரியான் அடிநிழற் கீழதன் றேஎன்றன் ஆருயிரே."
—௪. அ௪ - ௩.

### இலக்கணம்

'ஆய் ஆம்' இத்தொடர் 'தான் அது ஆய்' என்பதன்கண் உள்ள 'ஆய்' 'இல்லென்று தான் ஆம் இறை' என்பதன்கணுள்ள 'ஆம்' என்னும் இரண்டும் கூடியதாகும். ஆய் என்பது வினை எச்சம். ஆம் என்பது வினைமுற்று. ஆய் என்பது வினை எச்சம் ஆயினும் காலம் காட்டாது முதல்வன் வினை என்ற பொருள்மட்டும் தந்துநிற்பது. காலம் காட்டு மேல் ஒரு காலத்து ஆய் என்று வரும். முதல்வன் எக்காலத்தும் விரவி நிற்றலால் ஒரு காலம்பற்றிக் கூறுவது பொருந்தாது. எனவே, அது வினையளவாகக் கூறுவதுதான் பொருந்தும். அதற்கு எடுத்துக்காட்டு :

"நள்ளார்க்கு நஞ்சு ஒத்து நட்டார்க்கு அமிழ்து ஒக்கும் இவன்" என்பதன்கண் 'ஒத்து' என்பது 'நஞ்சு'—இவன் நஞ்சு என்றும், 'ஒக்கும்' என்பதன்கண் 'ஒக்கும்' என்பது 'அமிழது' இவன் அமிழ்து என்றும் பொருள் தருவன ஆகும். ஒத்து என்பது இறந்தகாலத்தைபேனும் ஒக்கும் என்பது எதிர்காலத்தையேனும் குறிப்பன அல்ல.

### ஒளி

பரிய ஒளியாகிய கண்ணொளியும் நுண்ணிய ஒளியாகிய விளக்கொளியும் புணர்ப்பாய்க் கலந்துநிற்கும் நிலை பிரித்தறிய வாரா. புணர்ப்பெனினும் அத்துவிதம் எனினும் ஒன்றே. புணர்ப்பைப் பின்னல் எனவும் கூறலாம். கண் காணும் தன்மை உடையது. விளக்கு காட்டுந் தன்மையுடையது. இவ்விரண்டன்புணாப்பால் கண் கண்டு பயன் எய்தும். மாணுக்கன் படிக்குந் தன்மையுடையன். ஆசிரியன் படிப்பிக்கும் தன்மை உடையன். சேய் தாய்ப்பால் உண்ணும் தன்மையுடையது. தாய் ஊட்டும் தன்மை உடையள். இவைபோன்றனவே கண்ணும் விளக்கும் முறையே காணவும் காட்டவும் அமைந்த அமைவு. இவ்வுண்மை "காண்பார் ஆர் கண்நுதலாய் காட்டாக்காலே" (௨௭௩) என்னும் திருமுறைத் திருமா

மறையான் உணர்க. கண்ணுக்கு ஒளியுண்டு. ஆனால், தனித்து விளங்கும் தன்மை இல்லை. விளக்கொளியோடு வேற்றுமையின்றிக் கலந்து விளக்குக் காட்டக் காணும் தன்மைமட்டும் உள்ளது. நடக்கப் பழகும் பிள்ளைக்குக் காலுண்டு; காலால நடக்கும் தன்மையுமுண்டு. ஆனால், நடத்துவார் ஒருவர் இன்றியமையாது வேண்டப்படுகின்றனர்.

இதுபோல் ஆவிக்கு அறிவுண்டு. அவ் அறிவு தானே விளங்காது; ஆண்டவன் அறிவு விளக்க விளங்கும். விளக்குக்கு வேறோர் ஒளியின் துணை வேண்டுவதின்று. அதுபோல் ஆண்டவன் அறிவு தானே விளங்கும. அவனுக்கு வேறோர் அறிவின் துணை வேண்டுவதின்று.

**அடக்கம்**

கண்ணொளியாய்க் காணுங்கால் காணும் தன்மையே முனைத்துத் தோன்றும். அப்பொழுது விளக்கொளியிருந்தும் அடங்கியிருப்பதால் புலனாவதில்லை. விளக்கொளியாய்க் காணுங்கால் காட்டுந்தன்மையே முனைத்துத் தோன்றும். அவ்வழி கண்ணொளியிருந்தும் அடங்கியிருப்பதால் புலனாவதில்லை. கண் ஒளியும் விளக்கொளியும் எனப் பகுத்துக் காணப்புகினும் காணும் தன்மையே முற்பட்டுத் தோன்றும். அப்பொழுது விளக்கொளி திரிவு புலனாக் காட்சிப்படும. அஃதாவது, கண்ணொளியை விளக்கொளியாகக் காண்பது. விளக்கொளி தெளிவு புலனாகக் காணப்படுவதென்பது கண்ணொளி விளக்கொளியினுள் அடங்கி விளக்கொளியாகவே நிற்பது. இது சந்தனமும் நீரும் ஒன்றாய்க் கலந்து, நீர் சந்தனத்துள் அடங்கிச் சந்தனமாகவே புறத்தார்க்குப் புலனாகும். அதுபோல் நீரும் தன்னை வேறு காணாது அச்சந்தனமாகவே காணும். சுவரும் ஓவியமும் ஒன்றாய்ச் சுவராய்க் காணுங்கால் ஓவியம் அடங்கும். ஓவியமாகக் காணுங்கால் சுவர் அடங்கும். "மரத்தை மறைத்தது" (௪௧) என்னும் திருமூலர் திருப்பாட்டும் இதனை வலியுறுத்தும்.

இதுபோல் ஆவியும் ஆண்டானும் கலந்து ஒன்றாய் வேறாய் உடனாய் உறையும் மெய்ப்புணர்ப்பில் ஆவி முனைத்துக் காணும்கால் ஆவியாகவே ஆண்டானும் காணப்பட்டு ஆண்டான் அடங்கிநிற்பன். ஆண்டானைக் காணப்படுங்கால் ஆவி ஆண்டானுள் அடங்கி ஆண்டானாகவே காணப்படும். இதுவே திருவருள் முனைப்பு. ஆவியும் ஆண்டானும் என இரண்டுமாய்க் காணப்புகின் ஆவியின் அறிவு முனைத்துநிற்கும். அவ்வழி ஆண்டான் ஐயக்காட்சிப் புலனனறித் தெளிவு காட்சிப் புலனாவதின்று. ஒரு பொருள் தெளிவு காட்சிக்குப் புலனாவது என்பது வேறொன்றும் புலனாகாது காண்பான் காட்சி அப்பொருளுட்கலந்து அப்பொருளாகவே புலனாவது. அஃதாவது அப்பொருள்மட்டுமே புலனாவது. இவ்வுண்மை **"தான் அவனேன் றெண்ணினர்க்கும் நாடும் உளம் உண்டாதல், தான் என ஒன் றின்றியே தானதுவாய்"** என ஓதியருளியதால் காண்க. (௬௭௩)

காணும் உண்மை அடங்கிக் காண்பது என்பது வரும் திருப்பாட்டான் உணர்க:

"காண்பானும்"[1] என்னும் வெண்பாவை ௩௫௫-ஆம் பக்கம் காண்க.

"கண்ணொளி விளக்க ளித்துக் காட்டிடும் என்னின் முன்னம்
கண்ணொளி யொன்றும் இன்றாம் விளக்கொளி கலந்த வற்றைக்
கண்ணொளி அகல நின்றே கண்டிடும் வேறு காணக்
கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும் கருத்தொன் றன்றே."

—சிவப்பிரகாசம், ௩ - ௭.

கண்ணொளி சுட்டிக் காணும். விளக்கொளி சுட்டிறந்து காணும். இவை கடல் நீரைக் கண் எட்டியமட்டும் காணும். கை கண் கண்ட அத்தனையும் முகக்காது கொண்ட அளவில் முகக்கும் என்பனவற்றை ஒக்கும்.

## ஒரு பெற்றி

கண்ணொளியானது ஞாயிறு, திங்கள், தீ, விளக்கு முதலியவற்றோடு கலந்து அவ்வவ் ஒளிவடிவாய்க் காணப்படும் தன்மையுடையது ஞாயிறு, திங்கள், தீ, விளக்கு முதலியன கண்ணொளியோடு கலப்பினும் ஒரு பெற்றியனவாகவே காணப்படும். 'நிலத்தியல்பால் நீர் திரியுமாறுபோல் 'கண்ணொளி தான் சார்ந்த ஒளிவண்ணமாய்த் திரியும்'. ஒரு பெற்றிய வாய் விளங்காத கண்ணொளியைத் தனித்துக் காண்டல் திரிவு காட்சி. ஒரு பெற்றியனவாய் விளங்கும். அவ் ஒளிகளைத் தனித்துக் காண்டல் தெளிவு காட்சி. இவை தண்ணீரைச் செந்நிறமாகக் காண்டல் திரிவு காட்சி நிலத்தைச் செந்நிறமாகக் காண்டல் தெளிவு காட்சி என்பனவற்றை ஒக்கும். 'செம்புலப் பெயல்நீர்' என்னும் வழக்கு இவற்றைக் குறிக்கும்.

## ஒளியுண்டு

காட்டும் ஒளியின் வேறாய்க் கண்ணுக்கு ஒளி உண்டு என்றால் மின் மினித் துணையாயினும் தானே விளங்கல்வேண்டும். அப்படி இல்லையே என்றால்? அதற்குக் காரணம் காட்டு மொளியாய ஞாயிறு முதலியவற்றின் துணைவேண்டும் என்பதாம். நாம் ஓசையைக் கேட்கின்றோம். ஓசை வானத்தின் பண்பு. அவ் ஓசை புலப்படுதற்குரிய கருவிகளின் துணையில்லாமல் புலப்படமாட்டாது. கருவிகளின் துணைசேர்ந்தவழிப் புலப்படும். அதனால் அவ் ஓசையைக் கருவிகளின் ஓசை என்று கூறுதல் பொருந்துமா? நாம் பறை ஓசையைக் கேட்கின்றோம். பறையின்மேல் சிறு கோல் கொண்டு தட்டினால் ஓசை வருகிறது. ஆனால், இவ் ஓசை வானத்தின் எதிரொலியே ஆகும். இசைக் கருவியில் குரல் (சுரம) மீட்டுங்கால் வரும் ஒலியமைப்பை உற்று நோக்கின் இது நன்கு புலனாகும். இதனால் ஓசை வானத்தின் பண்பே.

இதுபோல் கண்ணுக்கு ஒளியுண்டு. அவ் ஒளி தன்னை விளக்கும் கருவி—காட்டு சுருங்கியதாயின் சுருங்கியும், விரிந்ததாயின் விரிந்தும் காணப்படும். இடத்துக்குத் தக்கவாறு நின்றும் இருந்தும் கிடந்தும் இயங்கும் ஆவியின் இயல்பு இதற்கு ஓர்புடை ஒப்பாகும்.

## கலப்புண்மை

ஒரு பொருளைப் பல கண்கள் காண்கின்றன; அக் கண்களின் ஒளி ஒன்றோடு ஒன்று கலப்பதுண்டா? இல்லையே? அதுபோல் விளக்கொளியும் கண்ணொளியும் தம்முள் கலப்பதில்லை என்பதே பொருந்தும். கலக்கும் என எங்ஙனம் உறுதிசெய்வது? கண் ஒளிகளுக்குள் ஒன்றற்கொன்று எவ்வகை இயைபும் இல்லை. கண்ணொளிக்கும் விளக்கொளிக்கும் காண்பதும் காட்டுவதும் ஆகிய இயைபு உண்டு. எனவே கலப்பும் உண்டு. மாணாக்கர்க்கும் ஆசிரியர்க்கும் கற்பதும் கற்பிப்பதும் ஆகிய இயைபு உண்டு. ஆனால், மாணாக்கர்களுக்குள் அத்தகைய இயைபு ஒருவருக்கு ஒருவர்பால் இன்று. வாங்குவார்க்கும் விற்பார்க்கும் கொள்ளலும்

கொடுத்தலும் ஆகிய இயைபு உண்டு. வாங்குவார்க்குள் அத்தகைய இயைபு ஏதும் இன்று. எனவே, இயைபுடைய பொருள் கலப்புடையதாகவே இருக்கும்.

மேலும், பொறிகள் தத்தம் புலன்களோடு இயைந்தே புலன்கொளும். புலன் கொள்ளுதலை விடயித்தல் என்பர். புலன் கொள்ளுதல் உணர்தல். புலன்கள் பொருள்களோடு இயைபின்றி முன்னிற்றல மாத்திரையான் நுகர்தல் முடியாது. முன்னிற்றலைச் சந்நிதி என்பர். முன்னிற்றல் மாத்திரையான் நுகர்தல்கூடுமென்பது சுவைப்பொருளைக் கண்ட அளவானே சுவைத்தல் கூடும் எனின், கையும் நாவும் வாயும் பிறவும் வீண் சுமை என்றன்றோ முடியும். அங்ஙனம் நிகழாமைபோன்று பொறி புலன்களும் இயையாது முன்நிற்றன் மாத்திரையான் புலன்கொளா என்க. ஆவியின் அறிவும் ஆண்டான் அறிவும் கலந்து ஆண்டான் காட்ட ஆவி கண்டு பயன் எய்தும்.

## காண்டலுண்டு

கண்கள் ஒன்றனையொன்று காண்டல் இல்லாமைபோல ஆவிகள் ஒன்றனை ஒன்று காணுமாறு இல்லை என்பதே பொருந்தும் எனின், அங்ஙனம் அன்று. கண் மற்றொரு கண்ணைத் தான் விரவிநிற்கும் விளக்கொளிவண்ணமாகத் தன்னைக் காணுமாறுபோல ஏனைக் கண்களையும் காணுமாறுண்டு. அதுபோல் ஆவிகளும் தம்மை ஆண்டான்வண்ணமாய்க் காண்பதுபோன்று ஏனை ஆவிகளையும ஆண்டான வணணமாகக் காண்பதுண்டு. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"தன்னுலே" உஅஅ - ஆம் பக்கம் பார்க்க.

"இந்நிலை தன்னின் மன்னி எய்திடும் கலாதி போதம்
தன்னள வறிந்து நிற்கும் தகவிலா மலங்கள் நீத்து
அந்நிலை கரணம் ஆகா வகையதில் அறிவ டங்கி
மன்னிட வியாபி ஆய வான்பயன் தோன்றும் அன்றே."

—சிவப்பிரகாசம், கூ - ரு

"என்னையும் கண்டேன்" உசுகூ - ஆம் பக்கம் பார்க்க.

"பன்னியசெந் தமிழறியேன் கவியேன்மாட்டேன்
எண்ணேடு பண்நிறைந்த கலைக ளாய
தன்னையும்தன் திறத்தறியாப் பொறியி லேனைத்
தன்திறமும் அறிவித்து நெறியும் காட்டி
அன்னையையும் அத்தனையும் போல அன்பாய்
அடைந்தேனைத் தொடர்ந்தென்னை ஆளாக் கொண்ட
தென்எறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே."

—சு. கக - கீ

# இரண்டாம் அதிகரணம்

**இனி இறைபணி வழுவாது நிற்க என்றது.**

எ - து. மே - ள். எ - னின். உடம்பு நிற்குங்காறும் அது கொண்ட வினைப்பயனும் அதனை அநுபவித்தற்குத் துணைக் காரணமாய் உடனிற்குமுயற்சியும் ஒருவாற்றானும் நீக்கலாகாமையின் அவை அவ்வழி ஏகனாகி நிற்றற்குத் தடையாதலைக் கடக்குமாறில்லைபோலுமெனச் சுத்தசைவர் ஈறாயினார் மதம் பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடல்நுதலிற்று. இ - ள். வெ - டை.

நிற்றலாவது சலியாது நிலைபெறுதலென்பார் வழுவாது நிற்க என்றார்.

ஈண்டு இறைபணி என்றது யாதெனின், அஃது ஆசிரியர் தாமே முன்னர்த் தெரித்துரைக்கின்றமையின் இனிது விளங்கும்.

**அவனருளால் அல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியாதாகலான்.**

எ - து. ஏது எ - னின். ஏகனாகி நிற்றலே அமையும் இறைபணி நிற்றல்எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல்நுதலிற்று.

(இ - ள்.) தன் செய்திக்கு முதல்வன் செய்தியை இன்றியமையாத ஆன்மா செய்வன எல்லாம் அவனருளின் வழிநின்று செய்யுமாயின் மாயேயமுங் கன்மமும ஏகனாகிநிற்றற்குத் தடையாய்வந்து தாக்கா ஆகலான், அவை தாக்காமைப்பொருட்டுச் செய்யப்படும் உபாயமாதல்பற்றி இனி இறைபணி வழுவாது நிற்கஎன மேற்கொண்டது (எ - று).

அஞ்ஞான கன்மம் உம்மைத்தொகை.

மலமின்றுதல் மேற்பெறப்பட்டமையின் ஈண்டு அஞ்ஞானம் என்றது மாயையின் காரியமாகிய மயக்கத்தை என்பதுபெற்றாம். உடம்பு நசிக்குமளவும் அவை மாய்வனஅன்மையின் அறும் என்னாது பிரவேசியா என்றார்.

*நாம்அல்ல இந்திரியம் நம்வழியின் அல்லவழி
நாம்அல்ல நாமும் அரன்உடைமை—ஆம்என்னில்
எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

* 'இந்திரிய' சித்தியார். ௧0. உ-௩.

எ - து. உ - ம். எ - னின். உடம்பொடு நிற்பார் நுகர்தற்கு வேண்டப்படும் பிராரத்தவினையும் அதுபற்றி ஏறும் ஆகாமியவினையும் ஒருதலையானுண்மையின் இறைபணி நிற்றல்பற்றி அவை பிரவேசியா என்றல் அமைவுடைத்தன்றுபோலுமென்பாரைநோக்கி ஏதுவை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) இந்திரியம் நாம் அல்ல—வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்குங் கருவியாகிய இந்திரியங்கள் (மாயேயம்ஆவன அன்றி) யாம்ஆவன அல்ல, நம் வழியின் அல்ல—(அவை தொழிற்படுதலும் முதல்வன்வயத்தான் அன்றி) நம்வயத்தான் அல்ல, வழி நாம் அல்ல நம் வழியின் அல்ல.—(வினை நிகழ்ச்சிக்கு) வாயிலாகிய விடயாதிகளும் அவ் இந்திரியங்கள்போல மாயேயமாவனவன்றி யாம் ஆவன அல்ல, அவை சேட்டித்தலும் முதல்வன் வயத்தன அன்றி நம் வயத்தன அல்ல, நாமும் அரன் உடைமை—அவற்றோடியைந்துநின்று வினைகளை ஈட்டுதற்கும் நுகர்தற்கும் வினைமுதலாகிய யாமும் (ஞானச்செய்திகளை முதல்வன் விளக்கியவழி விளங்கி அல்லுழி விளங்குமாறின்மையான்) அம்முதல்வன் வயத்தராவேம் அல்லது சுதந்திரராவேம் அல்லேம், ஆம் என்னில்—என்றிங்ஙனம் பசுபாசங்களதியல்பை உள்ளவாறுணர்ந்து செய்வனவெல்லாம் அவனருளின் வழிநின்று செய்யுஞ் செயலாகக் கண்டுகொண்டிருப்பாராயின், இறை பணியார்க்கு எத்தனுவின் நின்றும் வினை இல்லை—இவ் அடிமைத் திறமுடையார் எவ்வுடம்பினின்று எவ்வினைகளைச் செய்யினும் அவர்க்கு அவை பந்தமாதலில்லை, முன் செய்வினையும் தருவான் முன்—(அவ் ஆகாமிய வினையை அவினுபாவமாய் உடன்கொண்டு வருவதாகிய) பிராரத்தவினையும் தன்னைக் கூட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியின் (உடலூழாய்க் கழியும்) (எ - று).

நம் வழியின் அல்ல என்பது வழி என்பதனோடுங் கூட்டி உரைத்துக்கொள்ளப்படும்.

மகனன்று குற்றியென்றாற்போல அன்மைச்சொல் தழுவப்படும் பொருள்மேல்நின்றது. *"அன்மைக் கிளவி வேறிடத்தான" என்பது ஒத்தாகலின்.

நின்றும் உம்மைசிறப்பு: ஏனையும்மைகள் இறந்ததுதழீஇயின.

சஞ்சிதவினை தீக்கைசெய்தமாத்திரையே எரிசேர்ந்த வித்துப்போலக் கெட்டொழிதலின் ஈண்டு முற்செய்வினையென்றது ஏற்புழிக்கோடலாற் பிராரத்தவினை மேற்றாயிற்று.

* தொல்காப்பியம் சொல்லதிகாரம், உசு. (உ௫௪)

தருதல் இடவழு அமைதி.

கழியும் என்பது சொல்லெச்சம். உடல்ஊழாய் என்பது அவாய்நிலையான் வந்தது.

*சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்
சார்ந்தாரைக் காத்தும் சலம் இலனய்ச்—சார்ந்தடியார்
தாந்தாஞச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு.

எ - து. உ - ம். எ - னின். இறைபணியார்க்கு உளவாகிய முற்செய்வினை ஏனையோர்க்குப்போலன்றித் தருவான் முன்னய் ஒழியுமாயின் அங்ஙனம் இருவேறு வகைப்படச் செய்யுமுதல்வன் நடுவுநிலைமையின்றிக் கோட்டம் உடையன் எனப்பட்டு வழுவாம்போலும் என்பாரை நோக்கி வழுவன்மைகூறி அதனை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதல் சார்ந்தாரைக் காத்தும்—(தம்மாட்டு அடைக்கலமெனச்) சார்ந்தாரை (அவர்க்கு வரும் ஏதத்தை நீக்கிக் களைகணய்நின்று) காப்பது தலைமைக் குணம் உடையாராயினர்க்குக் கடமையாகலான் (முதல்வன் ஏனையோரை ஒழித்துத்) தன்னைச் சார்ந்தாரை அங்ஙனம் பாதுகாப்பானகியும், சலம் இலன் ஆய்—(அதுபற்றிக்) கோட்டம் உடையன் அல்லனய், சார்ந்து அடியார் தான் ஆச் செய்து பிறர் தங்கள் வினை கொடுத்தல்—தன்னைச்சார்ந்து தன்னடித்தொழில் செய்வார் தன்போல்ஆகாமிய வினைத்தொடக்கிலராகச்செய்து பிறர்க்கு வரும் ஆகாமிய வினையை (அவர்க்குக்) கொடுப்பானகலான், ஆய்ந்து ஆர் முன்செய்வினையும் ஆங்கு—(அவ் இருதிறத்தோர் மாட்டும்) நுணுகி வந்து கூடுவதாய பிராரத்த வினையும் அவ்வாறே (செய்வோர் செய்திக்குத் தக்க பயனய் இருவேறு வகைப்படச் செய்வன்) (எ - று).

இறைபணியார்க்கு இல்லை வினை முற்செய்வினையுந் தருவான் முன்னென்றதுபற்றி ஏனையோர்க்கு நியதி செய்தூட்டி இறைபணியார்க்கு வினைஇன்ருகச் செய்தல் இறைவனுக்கு நடுவுநிலைமை அன்றென்பாரை நோக்கி அதனை உடன்பட்டே அமைதிகூறுவாராய்ச் சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனெனப் பழமொழி யெடுத்துக்காட்டி இஃதவ்வாறு நடுவன்மையுமன்றென வலியுறுத்துவார் சார்ந்தடியார் தாந்தாஞச்செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தலென வேறுவமை யெடுத்துக் காட்டினர். சார்ந்தடியார் தாந்தாஞச்செய்து பிறர் தங்கள்

* 'சலமிலனய்' சித்தியார். ௧0. உ-௪.

வினைதான் கொடுத்தல் உண்டென்பதூஉம், அது கோட்டம் இன்று நமவுநிலைமையே ஆம் என்பதூஉம் ஏனைச் சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்தமையின், அஃதீண்டைக்கு உவமையாயிற்று.

உம்மை சிறப்பின்கண் வந்தது.

சலம் வஞ்சனை; அஃது ஈண்டுக் கோட்டத்தின்மேல் நின்றது.

சார்ந்தென்னும் வினையெச்சம் அடியார் என்னும் வினைக் குறிப்பு முற்றுப்பெயர் கொண்டது. சார்ந்த என்னும் பெயரெச்சத்து அகரந் திரிந்து முடிந்ததெனினும் அமையும்.

தாமும் பின்வந்த தானும் அசை.

ஆதல் கொடுத்தல் என்புழி ஆனுருபு விரித்துரைக்க.

தானைச் செய்து என்புழி ஆக்கம் உவமவுருபின் பொருள் குறித்துநின்றது.

பிராரத்தவினை அதிசூக்குமமாய் வருவதாகலின் அதன் இயல்பு அறிதல் அரிதென்பார் ஆய்ந்தார் முன் செய்வினையும் என்றார்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

ஆர் வினைத்தொகை. ஆய்தல் அப்பொருட்டாதல் மேற் காட்டினும்.

*இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுடன் நில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே
ஆயதனு லுணரும் அச்சு.

எ - து. உ - ம். எ - னின். இறைபணி நிற்பார்க்குப் பிராரத்தவினை தாக்குதலுண்டென்பதற்குத் †"தினைத்துணையேனும் பொறேன்துய ராக்கையின் திண்வலையே" என்றற்றொடக்கத்தான் அவர் கூறுந் திருவாக்குக்களே சான்றாகலின், அஃதவர்க்குச் செய்வோர்செய்திப் பயனுயொழியுமென்றல் அமையாமையின் அஃதுண்டாகவே அதுபற்றி நிகழும் ஆகாமியமும் பிறவிக்கு வித்தாய் நிலைபெறுதலுண்டுபோலும் என்பாரைநோக்கி ஆண்டுப் பிராரத்தவினை தாக்குதற் கேதுக்கூறி அதுபற்றிச் செய்வோர் செய்திப்பயனுயொழிதற்கு இழுக்கில்லையென வலியுறுத்தல்நுதலிற்று.

* திருவாசகம் தனித்துணை. (௬00) † 'அங்கித்தம்' சித்தியார், க0-சு.

(இ - ள்.) இங்குளி வாங்கும் கலம்போல—(தன்பால் வைத்தெடுக்கப்பட்டொழிந்த) பெருங்காயத்தினின்றும் (அதன் வாசத்தை) வாங்கிக்கொள்ளும் பாசனத்தின்கண் (அவ்வாசம் மங்கிப்போய் மெலிதாய்க் கந்திக்குமாறு) போல, ஞானிபால் முன்செய்வினை மாயை மூண்டிடினும்,—இறைபணி நிற்குந் தத்துவஞானிக்குப் (பயிற்சிவயத்தான் ஒரோவழி நாடுமுளமுண்டாதலும் உண்மையின் அதுபற்றிப்) பிராரத்தவினையும் அதற்கு வாயிலாகிய உடம்பு முதலிய மாயேயமும் (மங்கிப்போய் வாசனைமாத்திரையாய் மெலிதாய் வந்து) மூளுமாயினும், பின்செய் வினை மாயையுடன் நில்லாது—(அம்மூட்சிபற்றி ஒருதலையான் நிகழ்வதாகிய) ஆகாமியவினை (மேலைக்குவித்தாய் நிலைபெற்று முறுகுதலின்றித் தனக்கு வாயிலாகிய) மாயேயத்தோடு கெட்டொழியும், அவன் தான் மெய்ப்பொருளை ஆயவதனால் மற்று அச்சு உணரும்—(இறைபணி நிற்கும்) அவன் சத்தாயுள்ள சிவமேயாயவாற்றால் (ஒரோவழி அவ்வாசனைபற்றிப் பிறழுவரினும் பிறழவொட்டாத) அவ் அச்சினையே நோக்கி நிற்பனாகலான் (எ - று).

ஒளி இருளைத் துரக்குமாறுபோல அவ்வுணர்வு அவ் ஆகாமியத்தைத் துரக்குமென்பதாம். *"தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினையதுண்டேல்—அல்லொளிபுரையும் ஞானத்து அழலுற அழிந்துபோமே" எனப் புடைநூலாசிரியர் ஓதியதூஉம் அது.

உளி ஐந்தாம் வேற்றுமையுருபுபட நின்றது. †"மந்திர விதியின் மரபுளி வழாஅ—அந்தணர் வேள்வி" என்றாற்போல. முற்றுகரக்கேடு இலேசாற்கொள்க.

வாங்குதற்குச் செயப்படுபொருள் அவாய்நிலையான் வந்தது.

மூண்டிடினும் எனவே, மூளுதல் ஒருதலை அன்றென்பது பெற்றாம்.

மாயை ஆகுபெயர்.

மற்று வினைமாற்றின்கண் வந்தது.

தான் என்பது அநுவதித்தற்கண் வந்த இடைச்சொல்.

பிறழவிடாமைபற்றி மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ் செய்தார்.

---

* சிவப்பிரகாசம் உண்மை, ௩௧. எல்லையில்பிறவி. (௫௦௦)

† திருமுருகாற்றுப்படை, திருச்சீரலைவாய்.

*நண்அனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்அமர மாச்செலுத்தும் பாகரினும்—எண்ணி
அரனடி ஓர்பவர் ஐம்புலனில் சென்றும்
அவர்திறல் நீங்கார் அதற்கு.

எ - து. உ - ம். எ - னின். முன் செய்வினை மாயை மூண்ட வழியும் அந்நிலையிற் பிறழாது அவ் அச்சினையே உணர்ந்து நிற்றல் யாங்ஙனமென்பாரை நோக்கி உவமைமுகத் தான் அதனை வலியுறுத்துதல்நுதலிற்று.

(இ - ள்.) நண் அனல்வேவாத நற்றவர் தம்மினும் பண் அமர மாச் செலுத்தும் பாகரினும்—(அங்கித்தம்பனத்தால்) நண்அனல் வேவாமைக்கு ஏதுவாகிய நற்றவமுடையார் (அவ் வனலுட் கிடப்பினுந் தந்திறலின் நீங்காதவாறு)போலவும் பண் ணுதலமரப் பரிமாவூர்தற்குரிய பாகுநூல் கற்றுவல்லார் (அப் பரிமாவின் வேகத்துட்படினுந் தந்திறனினீங்காதவாறு) போல வும், எண்ணி அரன் அடி ஓர்பவர்—(ஐம்புலன்களில் அகப்படா மைக்கு உபாயம் யாதென்று) எண்ணி முதல்வன் திருவடியாகிய அச்சை உணரவல்லார், ஐம்புலனில் சென்றும் அதற்கு அவர் திறல் நீங்கார்—(முன் செய்வினை மாயை மூட்சிபற்றி) ஐவகைப் பட்ட விடயங்களிற் சென்றாராயினும் அதனால் அவர் தந்திறலில் தீர்ந்து பந்தத்தொடக்குறுவாரல்லர் (எ - று).

பொருள்வினை உவமையினுஞ் சென்று இயைந்தது.

நண்அனல் கீழ்நீர்போல முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. நள்அனல் நண்அனலென பரிஇயிற்று; †"நீணுலகெலாம்" என்றாற்போல. தம்மால் நண்ணப்படும் அனலென்று உரைப்பினும் அமையும்.

பண்ணுதல் கதிப்பித்தல்.

இன்இரண்டும் உவம உருபுகள்.

உம்மை எண்உம்மை. சென்றும என்னும் உம்மை சிறப்பு.

அதற்கு என்பது உருபுமயக்கம்.

‡சதசத்தாம் மெய்கண்டான் சத்தருளிற் காணின்
இதமித்தல் பாசத்தில் இன்றிக்—கதமிக்கு
எரிகதிரின் முன்இருள்போல் ஏலா அசத்தின்
அருகணையாா சத்தனைவார் ஆங்கு.

---

* 'அங்கித்தம்' சித்தியார். ௧௦. உ-௬.
† திருநாவுக்கரசுநாயனார் கோயிற்குறுந்தொகை, ௪. (௫௦௫)
‡ 'நாடுகளிற்' சித்தியார். ௧௦. உ. ௫.

எ - து. உ - ம், எ - னின். சார்ந்ததன் வண்ணமாய்ச் சதசத்தெனப்படும் இயல்புடையார் அரனடி ஒரினும் ஐம்புலனிற்சென்றுழி அவற்றில் தொடக்குண்ணுது திறலுடையராதல் யாங்ஙனம் என்பாரை நோக்கிச் சார்ச்சிக்கட்படும் விசேடங்கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்.) சதசத்து ஆம் மெய்கண்டான் சத்து அருளின் காணின்—(தன்னுற் சாரப்படுவன ஆகிய சத்தினும் அசத்தினும் அது அதுவாதல்பற்றிச்) சதசத்தென்னுந் தன் உண்மையை உணர்ந்தோன் சத்தாகிய முதல்வன் திருவருளால் அல்லது ஒன்றையுங் காணுஞ் அவ்வருளின் வழிநின்று காணுமாயின், பாசத்தில் இதமித்தல் இன்றி—(அவ்வழிப்) பாசமாகிய அசத்தின் இதஞ்செய்தல் இன்மையால், சத்து அணைவார் கதம் மிக்கு எரிகதிரின்முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அருகு அணையார்—சத்தாகிய முதல்வனைத் தலைப்பட்டு நிற்பார் சீற்ற மிக்கு எரியாநின்ற சுடரின் முன்னர் அந்தகாரம்போலச் சத்தெதிர் தனது சத்தி ஏற்கமாட்டாத அசத்தாய ஐம்புலனின் மாட்டெய்தி நிற்பார் அல்லர் (எ - று).

வேறுமுடிபாகலின் ஒருமைப் பன்மை மயக்கம் இன்மை உணர்க.

அருளின் என்னும் இன்உருபு ஏதுப்பொருட்கண் வந்தது.

இதமித்தல் பெயரடியிற் பிறந்த வினைப்பெயர் இதஞ்செய்தல் பற்றுச்செய்தல்.

இன்றியென்னுஞ் செயவெனெச்சக் குறிப்புக் காரணப் பொருட்டாய் நின்றது.

இன்மைக் கேதுக்கூறுவார் கதமிக்கு எரிகதிரின் முன் இருள்போல் ஏலாஅசத்து என்றூர். கதமிக்கு எரிகதிர் என்றது ஒப்புமைபற்றிய உபசாரவழக்கு. *"எல்லை யில்லவனெரி துள்ளினுலென வெகுண்டான்" என்பதனுனும் ஒப்புமையாதல் உணர்க.

இதனுற் போந்தது, சத்தும் அசத்தும் தம்முள் சமமல்ல ஆகலான் அரனடி ஓர்பவர் ஐம்புலனில் சென்றுலும் அதுபற்றி அவர் திறல் நீங்காரென மேலது வலியுறுத்தவாறும் என்க.

ஏகனுகிநிற்றலான் மலமின்றுதலும் இறைபணி நிற்றலான் மாயைவினைகளிலவாதலும் பெறப்பட்டமையின், மலமாயை தன்னெடு வல்வினையின்றே என்பதனை வேறோர் அதிகரணமாக வைத்து ஓதாராயினுர்.

---

* அமர்நீதிநாயனுர் புராணம், உக. நல்லகோவண. (௫0)

## விளக்கம்

### பசை அறும் வழி

மலப்பசை அறுதற்கு வழி ஆவியின் அறிவு சிவத்தின் அறிவில் அடங்கி அச்சிவத்தின் வழி நிற்றல். மலப்பசை எனினும் வாசனுமலம் எனினும் ஒன்றே. ஒன்பதாம் நூற்பாவில் திரு ஐந்தெழுத்தை முறைப்படி கணிக்க மலப்பசை அறும் என வலியுறுத்தப்பட்டது. கணிக்கின்ற பொழுது காண்பான் காட்சி காட்சிப்பொருள் என்ற பகுப்பு இருத்தல் கூடாது. அப்பகுப்பிற்குரிய திரு ஐந்தெழுத்தை மாற்றிக் கணித்தல் வேண்டும். பகுப்பிற்குரிய திரு ஐந்தெழுத்து எது என உன்னின் **"சிவயநம"** எனல் பொருந்தும். இவ் ஐந்தெழுத்தில் 'ய' காண்பானையும், 'ந' காட்சியையும், 'ம' காணப்படும் பொருளையும் குறிப்பனவாகும். இப் பகுப்பு நீங்கும்வழி **"சிவசிவ"** எனக் கணித்தலே ஆகும். முன்னா ஓதும் 'சிவ' அடையப்படும் பொருளும் அடைவிக்கும் துணையும் ஆகும். பின்னர் ஓதும் 'சிவ' ஆவியின் அறிவு சிவன் அறிவில் அடங்கிச் சிவன் அறிவாகவும் மாயாகாரியப் பொருளாகிய காட்சிப் பொருள்கள் அனைத்தும் அருள்தாங்கலின் நிற்கும் உண்மை திருவருளால் விளங்கலின் அருளேயாகவும் விளங்குதல். 'ய' கணிப்பதனுலேயே கணிப்பது ஒன்று உண்டென்றுதானே போதருமாகலினுலும், உயிர் இறைநிறைவில் அடங்கிநிற்கும் முறைமையாலும் கிளந்தெடுத்துப் பிரித்து ஓதுதல் வேண்டா. **"சிவசிவ"** என்ற நான்கெழுத்தினை நவிலவே ஐந்தெழுத்தும் கணிப்பதாலாகும் பயன் அனைத்தும் கைகூடும் என்பதேயாம். இங்ஙனம் சிவநிறைவில் அழுந்தி அடங்கி அதன் வழி நிற்பதே பசை அறும் வழி என்க.

### முதல்நினைப்பு

மாயாகாரியப் பொருள்களைக் காணுங்கால் அப்பொருள்கள் அனைத்தும் ஆண்டவன் உடைமையே என்னும் மெய்ம்மை காணுதல்வேண்டும். இக்குறிப்பே "எப்பொருள் எத்தன்மைத்து" (௩௫௫) என்னும் திருக்குறள் ஓதுதல் காண்க. நாட்டுப்பொருள் என்னும் பெயரால் நவிலுங்கால் அப்பொருள் கடையிலிருப்பினும், கொண்டவர் கையிலிருப்பினும், உண்டற்காம் இடத்திலிருப்பினும், உண்ணினும் அந்நாடு முதலிய பெயரடையோடே கூறுகின்றனம். எடுத்துக்காட்டு மலைப்பழம். இதுபோல் கல்லூரி, கலியாணம் கடைமுதலிய அடைசேர்த்தும் வழங்குகின்றேம். இம்முறையே உலகியற் பொருள்களையும் ஆண்டான் அடைசேர்த்துக் கூறுவோமாயின் உண்மையுணர்ந்தவராவோம். அதுவே முதல் நினைப்பாகும். முதல் என்பது முழுமுதல்வன் என்பதே. இங்ஙனம் ஒழுகுவார்க்குப் பசை அறும். பசை அறும் வழியும் இதுவே. முதல்வன் நினைப்பு வருவதால் அப்பொருள்களைக் குறிக்கும் 'ம' நிற்கும் இடத்தில் 'வ' நிற்பது வாய்மையும் வழக்கும் மரபும் ஆகும். இதனுலும் 'சிவசிவ' என்பதே சிறப்புடைத்தென்க.

### அன்பு அறிவு ஆற்றல்கள் அழியாமை

ஆவி ஆண்டானேடு ஒற்றுமைப்படுங்கால் ஆவிக்கு உரிய அன்பு அறிவு ஆற்றல்கள் கெட்டுக்கூடுமோ? கெடாதுகூடுமோ? எனின், அம்மூன்றும் ஆவியின் பண்புகள். பண்பு கெடின் பண்பியாகிய ஆவியும் கெடும். எனவே கூடுதல் என்னும் சொல்லுக்கே இடன்இன்று.

கெடாது கூடும் எனின் கூடும் வாய்ப்பே அமையாது. பின் என்னையோ கூடுமாறெனின்? பண்புகள் கெடாமல் ஆண்டான் அன்பறிவாற்றல்க ளுள் அடங்கி அவற்றின் வழி ஒழுகும் என்ப. இதுவே "இறைபணி" என்க. 'இறைபணி' என்பது இறைவன் திருவருள் வழி ஒழுகுவதென்ப தாகும். இஃது இயற்றுவோன் கருவியாகவும் ஏவுவோன் கருத்தா ஆக வும் அமைவது கண்கூடல்லவா? ஏவுவோனைக் காணவிடினும் அந் நிகழ்ச்சிக்கு அவனே பொறுப்பாளியாவன். அதுபோல் இறைபணியில் நிற்கும் ஆவிகளின் செயற்கும் ஆண்டவனே பொறுப்பாளியாவன். இத ஞலும் ஆவியின் பசை அறும். ஈண்டுப் பசை என்பது மாயை வினை களைப் பற்றியது.

### தடை அகறல்

ஆவியின் உடல் நிற்கும் காறும் அதுகொண்ட வினைப்பயன் நிற்கும். வினைப்பயன் துய்த்தே கழிதல்வேண்டும். இவ்வினையினை ஏன்றவினை என்ப. ஏன்றவினை எனினும் பிராரத்தம் எனினும் ஒன்றே. ஏன்ற வினையை ஊழென்பர். வினைப்பயன் துய்த்தற்கு ஊழ் முதற்காரணம். முயற்சி துணைக்காரணம். உடல் உள்ள அளவும ஆவியின் முயற்சி இருப் பதால் அஃது இறைபணி நிற்றற்குத் தடையாகும் என ஐயந்தோன்றும். தடையாகாது என்பது திருவருள் வழி ஒழுகும் ஆவிகட்குத் தம் முனைப்பு அகன்றுவிடும். அகலவே திருவருள் முனைப்பாக நிற்கும். அவ்வழி ஆவிகளின் செயல் அனைத்தும் திருவருட் செயலாதலின் அச்செயல்கள் இறைபணி நிற்றற்குத் தடையாகா. தடையாக வருவன மாயாகாரியமும் இருவினையும். மலப்பசை நீங்கும் வழி இதன்முதற்கூற்றின்கண் கூறப் பட்டுள்ளது. எனவே, இக்கூற்றின்கண் கூறப்படுவது மாயாகாரியமும் வினையும் ஆகியவற்றின் பசையே என்க.

### தலைவன் துணை

கண்ணொளிக்குக் காட்சி விளக்கொளியை இன்றி அமையாது. அப் படியாஞல் காண்பன எல்லாம் விளக்கின் செயல் எனக் காண்பது உண்மை. அங்ஙனம் காணின் தன் முனைப்பு அறும். முனைப்பறவே விளக்கொளியுள் கண்ணொளி அடங்கும். இதுபோன்று ஆவியின் அன்பு அறிவு ஆற்றல்களுக்கு ஆண்டானின் அன்பறிவாற்றல்கள் இன்றியமையாதன. இவை கலந்தால் அன்றி ஆவியின் அன்பறிவாற் றல்கள் தொழிற்படா.

கண்ணொளி விளக்கொளியின்கண் அடங்கி நிற்பின் அக்கண்ணுக் குப் புலன்கள் ஒன்றும் தாக்கா. புலன்கள்—விடயங்கள். அதுபோல் ஆவியும் ஆண்டான் நிறைவினுள் அடங்கி அவனருளால் தொழிற்படும். படவே புறத்துறையில் நிற்பார்க்கு அகத்துறை தாக்காமை போன்று அவ் ஆவிக்கு உலகியல் சிறிதும் தாக்கா என்க. புறத்துறை—வெளி வேலை. அகத்துறை—ஊண் உறக்கம் முதலிய வீட்டுச் செயல்கள். உல கியலைப் பிரபஞ்சம் என்பர்.

கம்பளம் போர்த்தார்க்குக் கடுங்குளிர் தாக்காது. அதுபோன்று திருவெண்ணீற்றுக் கவசம் அணிந்தார்க்கு மாயைச் செயல்கள் தாக்கா. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்கள் வருமாறு:

"நீர்கொள் நீள்சடை முடியனை நித்திலத்
தொத்தினை நிகரில்லாப்
பார்கொள் பாரிடத் தவர்தொழும் பவழத்தைப்
பசும்பொனை விசும்பாரும்
கார்கொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத்
துறையுங்கற் பகந்தன்னைச்
சீர்கொள் செல்வங்கள் ஏத்தவல் லார் வினை
தேய்வது திண்ணமே."
—உ. ௧0௪—௬உ.

வினை - ஊழ்வினை. தேய்வது - உடலூழாய்க் கழிவது. மெய்யடியார் உள்ளம் இறையடியின்பாலே இருத்தலால் வினை உள்ளத்தைத் தாக்குதல் இன்று. எனவே உடலூழாய்க்கழியும். செருப்புடையான் காலில் முள்ளும் கல்லும் பிறவும் படாமல் செருப்பிற்படுவது இதற்கு ஒப்பாகும். கால் உள்ளமாகவும் செருப்பு உடலாகவும் கொளக.

"வந்தித்திருக்கும் அடியார் தங்கள் வருமேல்வினையோடு
பந்தித்திருந்த பாவம் தீர்க்கும் பரமன் உறைகோயில்
முந்திஎழுந்த முழவினோசை முதுகல் வரைகள்மேல்
அந்திப் பிறைவந் தணையும்சாரல் அண்ணாமலையாரே."
—க. ௬௯—எ.

மேல்வினை—ஏறு வினை; ஆகாமியவினை.

"ஞானவாள் ஏந்துமையர் நாதப் பறையறைமின்
மானமா ஏறுமையா மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம மாயப்படை வாராமே."
—அ. திருப்படை - க.

மாயப்படை-மாயாகாரிய உலகு. மாயாகாரியப்பசை-மயக்கவாசனை.

தீக்கையால் எஞ்சுவினை தீயுழுந் துய்ப்புடலால், போக்கேறு ஒருமைவினை வால் என்பதற்கிணங்க "மலவாசனை யறுதல் மேலையதிகரணத்தாற் போந்தமையின், ஈண்டு அஞ்ஞானம் என்றது மாயையின் காரியமாகிய மயக்க வாசனையேயாம் எனவும், சஞ்சிதம் தீக்கையானும பிராரத்தம் அநுபவித்தானும் அறுதலின் ஈண்டுக் கன்மம என்றது ஆகாமிய வாசனையையேயாம் எனவும் கொள்க (பேருரை).

சஞ்சிதம் - எஞ்சுவினை. பிராரத்தம் - ஏனறவினை. ஆகாமியம் - ஏறுவினை. மும்மலமும் அறுதல் எட்டாம் நூற்பாவில் ஆசான் அருட்குரு வாய் வந்து அருமறை தந்து ஆட்கொண்ட அப்பொழுதேயாம். பின் நின்றது மும்மலப் பசையே. மும்மலப்பசையினுள் மலப்பசை நீக்கம், முதலதிகரணத்தாலும், மாயை கன்மப்பசை நீக்கம் இவ்வதிகரணத்தாலும் கூறப்படுகின்றன. அருமறை - செவியறிவுறாஉ.

**நுழையா**

"அவன் அருளால் அல்லது ஒன்றையும் செய்யானாகவே அஞ்ஞான் கன்மம் பிரவேசியா ஆகலான்" என ஓதும் ஏதுவினுள் 'பிரவேசியா' என்னும் சொல்லாற்றல் மிகவும் சிறப்புடையது. செம்பொருள் துணிவின் சீர்மையும் இதுவே. பிரவேசியா என்பது நுழையா என்பதாம். நுழையா என்பது அவை தாக்கா என்பதாம். அவை உடல் உள்ள அளி

வும் அறு அழியா என்பது பிரவேசியா - நுழையா என்னும் சொல்லாற்ற லாற் பெறப்படும். இவ்வுண்மை "முத்திதனில் மூன்று முதலும் மொழி யக்கேள்" (௩-அ௯) என்பதனால் வலியுறுத்தப்படும்.

### இலக்கணம்

'அஞ்ஞான கன்மம்: உம்மைத் தொகை; இத்தொகைவிரியுங்கால் அஞ்ஞானமும் கன்மமும் எனவிரியும். இஃது எண்ணும்மையாகும். அஞ்ஞானமும் கன்மமும் என இருந்தால்தான் பிரவேசியா என்னும் பன்மை முடிவுக்குப் பொருந்தும்.

### தன்வயமே

பிறர்வயப்படுவது அடிமைநிலையாம். அடிமை என்னும் சொல்லும் செயலும் தீதன்று, அதன் விளைவு நன்மையாய் இருப்பின். அடிமை என் பது அடியின் தன்மை. அடிச்சுவடுபற்றி நடத்தல். இதுவே வழி நிற்றல். வீட்டின் அடிப்படை தாங்குவதுபோன்று அடிச்சுவடுபற்றி நடப்பவரை அவ்வடிச்சுவட்டினர் தாங்குதல் கடன்: அதனாலே அவர்கள் தலைவராகின்றார்கள். இதுவே "சார்ந்தாரைக் காத்தல் தலைவா கடனதல்" என ஓதும் மெய்ம்மொழியும ஆகும். அடிமையானவன் வேறெவ்வகை எண்ணமும் இன்றி அப்பொருளை காதலாய் அப்பொருள்வழிநின்று பயன் துய்ப்பன். இது கற்பான் கல்வியை காதலாய்க் கல்விவழிநின்று அறிவொழுக்கப் பயன் துய்ப்பதை ஒக்கும். கற்பான் கல்விபிற் காதல் கொள்ளாது கல்லாப்புல்லர் கூட்டுறவால் வீண் விளையாட்டிற் காதல் கொண்டு அவ்விளையாட்டிற்கு அடிமையாயின் அது தீமையாம். எனவே, தீமைக்கு அடிமையாயின் அடிமை தீமையாகும் என்பதும, நன்மைக்கு அடிமையாயின் அடிமை நன்மையாகும் என்பதும் வெள்ளென விளங்கும. நன்மைக்கு அடிமை ஆதல் நாளும் வேண்டற்பாலதே.

அதுபோல் இறைவழி நிற்றலும் என்றும் வேண்டற்பாலதேயாம் அங்ஙனம் நிற்பது நன்மையேயாம. அதுவே ஆவியின் வேட்கையு மாகும். இது கற்பதே கற்பாருக்கு வேட்கையாவதை ஒக்கும். தீமைவழி நிற்பின் தீமையாகும். அதுவே கட்டாகும். இதனையே "பரதந்திரியம் கரைகழி பந்தம்" (ஞானமிர்தம் - ௯௨) என மெய்ந்நூல்கள் கூறும். பரதந்திரியம் - பிறர்க்கடிமை. பிறா என்பது நன்மைக்கு உரியரல்லாத தீமைக்கு உரியராகிய பிறர் என்பதாகும்.

### ஆக்கமுதல்

மலமும் மலத்தின் செயலாம் ஆசையும் அகலாது இறை அடி உறைப் பின்றி ஆசையாலுந்தப்பட்டு முத்தொழில் செய்ய நத்தி வழிபட்டு வரம் பெற்று அத்தொழிலை அருளியக்கத்தால் செய்துவரும் அயன் அரி அரன் என்னும் மூவரும் ஆக்கமுதல்வர் என அழைக்கப்படுவர். ஆக்கமுதல்வர் எனினும், காரணமூர்த்தி எனினும் ஒன்றே. காரணமூர்த்தி என்பது காரணத்தால் மூர்த்தியாயவர் என்பதாகும். என்னை காரணம் எனின் ? அம்மூவரும் உயிரினத்தரே. இயற்கை முதல்வர் அல்லர். ஆசையால் அருளை வேண்டி அவ்வருளால் ஆக்கப்பெற்ற செயற்கை முதல்வர் ஆவர். முழுமுதற் சிவபெருமான் ஒருவனே இயற்கை முதல்வன் ஆவான் அவன் வழி நிற்றலே இறைபணியாகும். இதுவே ஆவியின் வேட்கை. இதனா லேயே இறவா இன்பம் எய்தும். பணி என்பது தன் இழப்பு. அதனைக் குறிக்கும வெண்பா வருமாறு:

நன்றி பிறர்பயனே நாடலாம் நல்லுதவி
என்றுமதற் கீடாய் இயற்றலாம்—நின்றகடன்
பெற்றபொருள் மீட்டிறுத்தல் பேணுபணி தன்னிழப்பாம்
உற்றஅறம் பொன்இன்ப வீடு.

## சிறுதெய்வம்

செத்துச் செத்துப் பிறக்கும் அயன் அரி முதலிய சிறுதெய்வ வழிபாடு பிறப்பு இறப்புட் புகுத்தும். என்னை ? அத்தெய்வங்களே பிறப்பு இறப்பு எய்துகின்றமையான் என்க. இத்தெய்வங்களைச் சார்ந்தார்க்கு மனக்கவலை மாறாது. இதனையே திருவள்ளுவநாயனார்,

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது" —திருக்குறள், எ.

என ஓதியருள்வாராயினர். சிறுதெய்வம் - சிறுமைப்படும் தெய்வம்; சிறுமைப்படுத்தும் தெய்வம். இக்குறிப்பு வரும் திருப்பாட்டானும் உணர்க:

"என்றும்நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்
இருநிலத்தில் எமக்கெதிரா வாரும் இல்லை
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம அல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறையுடையோம் அல்லோம் அன்றே
உறுபிணியார் செறலொழிந்திட் டோடிப் போனார்
பொன்றினார் தலைமாலை அணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்து ளோமே."
—௬. ௯௮- ௫.

முழுமுதல்வனைத் தொழும் மெய்யடியார்களை இத்தெய்வம் தொழும் என்னும் வாய்மை "முழுத்தழல் மேனியன்" (௯௮) என்னும் திருப்பாட்டான் விளங்கும்.

"நாம் அல்ல..................முன்."

## நம் வயம் இன்று

மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் அறி பொறிகளும், எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு என்னும் கலன்களும், வாய் கால் கை எருவாய் கருவாய் என்னும் செய் பொறிகளும் முதலிய அமைந்த இருவேறுடம்புகளும் நாம் உறைந்து நன்னெறிப்பட்டாந்து நாயனார் திருவடியை நண்ணி எண்ணரிய பேரின்பம் எய்தி என்றும் ஒரு பெற்றித்தாய் நின்று நிலவி உடனாய் வாழக் கருவிகளாக விழுமிய முழுமுதல்வனால் கெழுமுதலுடன் அருளப்பெற்றவை. எனவே, அவ்வுடம்புகள் ஆண்டவன் உடைமை. அவை அவனருளால் நமக்கு இரவலாய்த் தரப்பெற்றன. அவை தொழிற்படும் முறைமையும் நம் வயம் அன்று. பெரும்பாலும் ஊர்தியில் செல்வார்கட்கு ஊர்தி உரிமையாக இருப்பது அருமை. ஊர்தி ஏறும் இடந் தொட்டு இறங்கும் இடம்வரை ஒட்டி இருப்பினும் விட்டு நீங்கும் இரவற் பொருளேயாகும். அதை இயக்கும் உரிமையும் இருப்பார்பால் இன்று. இயக்கும் வலவன்பாலே உள்ளது. வலவன்—ஓட்டுகின்றவன் (Driver). மேலும், வலவன் அவ்வூர்தியகத்து நிலைபாகக் காணப்படுகின்றனன். இவையனைத்தும் உடலையும் உடல்இயக்கத்தையும் ஒப்பன. ஊர்தி

செல்லும்வழி செல்வார்க்கு உரிமையின்றாய்ச் செப்பனிட்டார்க்கு உரிமை உடையதாய் இருப்பதுபோல் நாம் துய்க்கும் பொருள்களும் நம்முடைய அல்ல. அது விருந்து முதலிய சிறப்பால் உண்ணப்படும் ஊண் உண்பார்க்கு உரிமையின்றாய் ஊட்டுவார்க்கு உரிமையுடைத்தாய் வருவதை ஒக்கும். இது விருந்தினர்தம் செய்கைஎலாம் வேட்ட விருந்தோம்பப், பொருந்தினர்தம் செய்கைஎனல் பொற்பென்பதனை ஒக்குமன்றே. இம் முறையால் ஆவிகளும் ஆண்டான் உடைமையே ஆகும். இவ் உடைமையை அறிவிக்க அறியும் அறிவுள்ளதுபற்றி அடிமை என அறைவர்.

## கட்டுறுத்தலின்று

இவ் உண்மை தெரிந்த மெய் அன்பர்கள் எவ்வகை உடம்பில் தங்கி எவ்வகைச் செயல்புரியினும் அவை அனைத்தும் ஆண்டவன் செயலாவதன்றி ஆவியின் செயலாகா. இது கருவியின் செயலனைத்தும் கையின் செயலாவதன்றிக் கருவியின் செயல் ஆகாமையை ஒக்கும். ஆடை அணி முதலியவற்றால் சிறப்பு எய்தும் ஆவி, அவ் ஆடை அணி முதலியவற்றை ஆக்கித்தந்தாரால் எய்திற்று என்பதே வாய்மை. இவ்வுண்மை உணர்ந்தால் உடல்முதற் பொருள்களும், உழைப்புமுதற் செயல்களும் ஆவிக்குரியவல்ல; ஆண்டானுக்கு உரியன. இஃதுணரும் வாய்மையாளர் கட்டுறவாரல்லர். இவரே அடிமைத்திறமுடையார். இவர்க்கு ஏறுவினையை விட்டு நீங்காத தன்மையாய் உடன்கொண்டு ஒட்டியுறும் ஏன்றவினையும் தன்னைக் கூட்டுவிக்கும் ஆண்டான் முன்னிலையில் உயிரைக் கட்டுறுத்தலின்றி உடலூழாய் அகலும். முதன்மை ஆவிக்கு இன்மையால் ஆவியைக் கட்டுறுத்தும் அமைவும் இன்றென்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

> அன்றே என்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்
> குன்றே அனையாய் என்னைஆட் கொண்ட போதே கொண்டிலையோ
> இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண் எம்மானே
> நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே.''
>
> அ. குழைத்த - எ.

செய்வாய் என்பது செய்விப்பாய் என்னும் பொருளது.

## இலக்கணம்

''நம் வழியின் அல்ல என்பது வழி என்பதனோடுங் கூட்டி உரைத்துக்கொள்ளப்படும்'' என்ப. 'வழி நாம் அல்ல' என்றிருப்பதனோடு 'நம் வழியின் அல்ல' என்பதனையும் கூட்டினால், வழி நாம் அல்ல நம் வழியின் அல்ல என்றாகும்.

'அன்மைக்கிளவி வேறிடத்தான' என்பதை உடுச - ஆம் பக்கம் காண்க. 'உம்மை' சிறப்பு. இவ்வும்மை ''எத்தனுவில் நின்றும்'' என பதன்கண் உள்ளது.

''நாமும், முற்செய் வினையும்'' இவ்வும்மைகள் இரண்டும் இறந்தது தழீஇயின. 'நாமும்' என்பது 'இந்திரியம் வழி' என்னும் மாயாகாரியங்களே அன்றி நாமும் எனக் குறிக்கின்றது. 'முற்செய் வினையும்' இஃது ஏறுவினையே அன்றி ஏன்ற வினையும் எனக் குறிக்கின்றது. இவற்றால் அவை இறந்தது தழீஇயின.

'தருவான்' இவ்வினை முன்னிலைக்கு வரவேண்டுவது. படர்க்கைக்கண் வந்திருப்பதால் இடவழுவமைதி.

"செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப." —தொல். சொல். ௨௮.

அவற்றுள்,

"தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த." —தொல். சொல். ௨௯.

பொறிபுலன் கலன்கள் அனைத்தும் இறை நிற்பிக்கும் வழி நிற்கும் முறையின என்னும் மெய்ம்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"வேண்டத் தக்கது" ௧௧0 - ஆம்பக்கம் காண்க.

"மாயை மாமாயை" ௨௮௯ - ஆம்பக்கம் காண்க.

'சார்ந்தாரைக்....................ஆங்கு.'

## கோட்டம் இன்று

அடைக்கலம் புகுந்தாரை ஆர்வமுடன் காத்தல் தலையாயவர்தம் தனிக் கடன் அல்லவா? பள்ளிமாணவர் விளையாட்டிடத்து ஒருவருக்கொருவர் அடைக்கலம் ஈந்து உயர்வதையும் காண்டும் அன்றே? இம்முறையில் ஆண்டவனும் தன்னைப் புகல் என அடைந்த மெய்யன்பர்களைத் தகவுடன் காத்துத் தண்ணருள்புரிகின்றனன்.

ஊட்டுப்புரையாம் அறச்சாலையின்கண் உவந்து உண்ண வருவார் உண்டு பசியை வாட்டலும், வாராதார் உணவின்றி உண்ணாது பசியான் வாடுதலும் காண்டும் அன்றே? அங்ஙனம் நேர்வதால் அறச்சாலை அண்ணலார் கோட்டமுடையரெனக் கூறல் பொருந்துமா? அதுபோல் ஆண்டவனும் கோட்டம் உடையன் அல்லன். தன்னை அடைந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல் வரும் திருப்பாட்டுக்காளான் உணர்க:

"முன்னம் அடியேனறியாமையினால் முனிந்தென்னை
நலிந்து முடக்கியிடப்
பின்னையடியேனுமக காளும்பட்டேன் சுடுகின்றது
சூலை தவிர்த்தருளீர்
தன்னைஅடைந் தார்வினை தீர்ப்பதன்றே தலையாயவர்
தங்கட னாவதுதான்
அன்னநடை யாரதிகைக்கெடில வீரட்டா
னத்துறை அம்மானே." —௪. ௧—௪.

"சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்கு வான்நலன்
குலமில ராகிலும் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே."

"என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்." —திருக்குறள், ௭௭.

"உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்." —திருக்குறள், ௪௪௨.

உற்றநோய் -என்றவினை. (உடலூழாய் நீக்கி) உறாஅமை - ஏறுவினை.

## இலக்கணம்

'உம்மை' சிறப்பு. இது 'சார்ந்தாரைக் காத்தும்' என்பதன்கண் வருவது.

'சார்ந்த' என்னும் பெயரெச்சம் ஈறு திரிந்தது. இப்பெயரெச்ச ஈறு அகரம்: அஃது உகரமாய் திரிந்தது. திரியவே சார்ந்து என நின்றது. நிற்ப, சார்ந்து + அடியார் = சார்ந்து என்பது குற்றியலுகரம். அதுமெய் போன்று உயிர் ஏற இடங்கொடுத்துச் சார்ந்தடியார் என்று ஆயிற்று.

'ஆதல், கொடுத்தல்' என்பவற்றை 'ஆனுருபு' விரித்துக்கூறுங்கால் கடன் ஆதலான் எனவும், கொடுப்பன் ஆகலான் எனவும் வரும்.

'தானச் செய்து' இதன்கண் 'ஆச்செய்து' - ஆகச்செய்து. ஆக என்பது ஆக்கம் போல என்னும் பொருளதாய் உவமை உருபு ஆகும். ஆவிகளை ஆண்டான் தன்போல் செய்கின்றனன். தன்போல் செய்தலாவது தான் ஆவிகள் பொருட்டுச் செய்யும் திருவருட்செயல் அனைத்தும் ஏறுவினை ஆகாமை போன்று திருவருள் கைவந்த மெய்யடியார் திருவருள் முனைப்பால் செய்கின்ற செயல் அனைத்தும் ஏறுவினையின்பாற் படாமைச செய்தல். அதனால் அது தவம் என்னும் தனிப்பொருள் பயக்கும் இறைபணி என்னும் நிறை பெயர் பெறுகின்றது. இஃது ஓதுவிக்கும் ஆசான்தான் ஓதும்வினை ஏறுவினை, ஆதலின்று மாணிக்குஉரம் ஆம் என்னும் உண்மையை ஒத்திருக்கும்.

'ஆர்' வினைத்தொகை. கூடும் என்பது பொருள்.

'உம்மை' செய்வினையும் என்பதன்கண் உள்ளது. இவ்உம்மை இறந்தது தழீஇயது. இறந்தது - கடந்தது; காலத்தால் முனனுள்ளது. அஃது எறுவினை. ஏறுவினை எனினும் ஆகாமியவினை எனினும் ஒன்றே. இறைவன் செய்யும் திருஅருட் செயல் ஆவியின் நன்மையின் பொருட்டே ஆதலின் அஃது இறைவனுக்கு ஏறுவினையாவதின்று. அதுபோல ஆவிகளும் இறைவழி நின்று நிறை அருளோடு பிறவுயிர்களின் நன்மையின் பொருட்டுச செயல் செய்யப்படுகின்றமையின் அவ்வினை ஏறுவினை ஆவதில்லை. இறைவழி நிற்றலேயே இறைபணி என்றும், இறைவன ஆவிகளைத் தானகச செய்வனென்றும் ஓதி அருள்வர். ஆகவே, ஆவி ஆண்டான் ஆவது எனபதற்கும் இவ் இறைவழிநிற்றலே பொருள்.

ஆங்கு - அதுபோல; அவ்வாறே.

## மிகுநுண்மை

என்றவினை மிகு நுண்மையாய் உள்ளது. மிகு நுண்மை - அதிசூக்குமம். என்றவினை எனினும் பிராரத்தவினை எனினும் ஒன்றே. அதன் இயல்பு அறிதல் அரிது என்பதைக் குறிப்பிக்க 'ஆய்ந்து ஆர் முன்செய்வினையும்' என்றருளினர். ஏறுவினை - ஆகாமியம். இது தனக்கும் பிறர்க்கும் செய்யுங்கால் புலனுகும். ஆதலின், அதனைப் பரியதிலை எனக் கூறுவர். இது கரும்பின் சாற்றினைக் கட்டியாக ஆக்குங்கால் அக்கட்டி பருமை

யாவதுபோன்றாகும். இந்நிலையே ஏறுவினைநிலை. அக்கட்டியினை உண்ணுங்கால் வாயின் நீரால கரைந்து நுண்மையாய்த் துய்க்குங்கால் தோன்றாமையை ஒக்கும், என்றவினைப்பயன் துய்க்குங்கால் அது நுண்மையாவது. ஆய்தல் நுணுகுதல் என்னும் பொருளில் வருவதற்கு நூற்பா:

"ஓய்தல்"—நடுக ஆம் பக்கம் காண்க.

'இங்குளி......................அரசு.'

**தாக்கலும் ஏறலும்சாரா**

இறைபணியில் நிற்கும் நிறைதவத்தோர்க்குத் தம்முனைப்புக் தோன்றாது. அது 'கருமமே கண்ணாயினார்க்கு மெய்வருத்தம்' முதலிய ஆறும் வந்து பொருந்தி ஊறு செய்யாமையை ஒக்கும். ஒரோவழித்திருவருள் முனைப்பினின்று நீங்கித் தம்முனைப்புக்கு வருவர். அங்ஙனம் வரினும் அம்முனைப்பின்வழி ஒழுகார். மீண்டும் திருவருள் முனைப்பின் வழியே ஒழுகுவா

வழுக்கில் இழுக்கினான் ஊன்றுகோலின் பழுதில் துணையான் விழுமிய வழியில் ஒழுகுமாறுபோல ஆவிகள் தம் முனைப்பில் இழுக்கி உலகியல் வழியில் ஒழுக முனையின் திருவருள் முனைப்பாகிய ஊன்றுகோல் விழுமிய வழியாம் செந்நெறியில் ஒழுகுவிக்கும். ஊன்றுகோலின் மாண்பு வரும் திருப்பாட்டான் உணர்க:

"இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்." —திருக்குறள், சகரு.

மேலும், காயம் வைத்து எடுக்கப்பட்ட கலத்தின்கண் காயமணம் மெலிதாய் மணக்கும். அம்மணத்தால் உண்பார்க்குப் பயன் இன்று. காயமகல் மட்கலத்துக் காணும்மணம் ஊனொடுறா, மாயைவினை தாக்கா வளர்ந்து என்றாங்குத் தம்முனைப்புத் தோன்றுங்கால் பயிற்சிவயத்தான் மாயையின் காரியமாகிய உலகு உடல் ஊண்கள், தம்மைக் கட்டுறுத்தா, உளப்பாட்டு முயற்சியாம் இருவினைத்துணைக்காரணமும் முறுகுதலும் உறுவதும் செய்யா. மெய்யுணர்வு கைவந்த பொய்யில் புலவர்பெருமக்கள் "தினைததுணையேனும் பொறேன் துயராக்கையின் திணவலையே" என அருளுவது அவாகம் தூய நிலையினை உணர்த்தும் துணைபுரையாம் என்க. இவ் உண்மை உணர்த்தும் திருப்பாட்டுக்கள் வருமாறு:

"தனித்துணை நீநிற்க யான்தருக் கித்தலை யால்நடந்த
வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய
மனத்துணை யேஎன்தன் வாழ்முத லேஎனக் கெய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும்பொ றேன்துய ராக்கையின் திண்வலையே."
—அ. நீத்தல்—நக.

"எல்லையில் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின்
ஒல்லையின் அகலும் என்ற உடற்பழ வினைகள் ஊட்டும்
தொல்லையின் வருதல் போலத் தோன்றிரு வினையதுண்டேல்
அல்ஒளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே."
—சிவப். க0-க0௪

வழுக்கில் இழுக்குறுவானுக்கு உடனடியாக ஊன்றுகோல் துணையாவதுபோன்று மெய்யுணர்வு கைவந்த தவத்தோர்க்கு ஒரோ வழிப்

பயிற்சி வயத்தான் மனம் புறத்துச் செல்லுமேல் திருவருள் உணர்வாம் பெருவிளக்கு அச் செலவினை மாற்றிச் செந்நெறிச் செலுத்தும். இங்ஙனம் மாற்றிச செலுத்தாநிற்கும் நிகழ்ச்சிகட்குக் காலஇடையீடின்மையும் காண்க. எனவே என்றவினைத் தாக்கலும் ஏறுவினை முறுகலும் நிகழ்தற்கு இடம் இன்றென்க. இவ்வுண்மைகள் வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"உடம்பெனும்" ௩எ௫-ஆம் பக்கம் காண்க.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு." —திருக்குறள், எ௮௮.

"இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு." — „ ௬௩0.

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது." —திருக்குறள், எ.

மனக்கவலை - என்றவினைத் தாக்கலாலும் ஏறுவினைமுறுகலாலும் ஏற்படும் பிறவித்துன்பம். இவை நீங்கும்வழி, ஒளியால் இருள் அகல்வதுபோன்று மனம் இறைவழி நிற்கும் நிறைஒளியால் என்றவினை ஏறுவினைத் துன்ப இருள் அகலும்.

அச்சு

அச்சு, ஊர்தியின் உருள்கோத்த ஒன்று. அது பெரும்பாலும் மரத்தாலும் இருக்கலாம்; இரும்பாலும் இருக்கலாம். ஊர்தி செல்லுங்கால் ஏற்றிழிவு முதலியவற்றால் உருள் பிறழ நேருமாயின் அச்சு அங்ஙனம் பிறழ ஒட்டாது தடுத்து நேர் நிறுத்தும். அதுபோல் வீட்டுயிர் பயிற்சி வயததான் உள்ளந்திரும்பி உலகினை நோக்கநேரின் மெய்ப்பொருள் உணர்வாகிய அச்சு அங்ஙனம் நிகழஒட்டாது நேர்நிறுத்தும். அச்சு அத்தகையதென்பது வரும் திருப்பாட்டான் உணர்க:

"உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து." —திருக்குறள், சுசுஎ.

அச்சாணியின் நுண்மையை ஒத்து ஆவியின் உயிர்க்கு உயிராய் ஆண்டவன் மிகுநுண்மையாயிருப்பன்.

இலக்கணம்

'உளி' ஐந்தாம் வேற்றுமை உருபுபடநின்றது. இது 'இங்குளி' என்ற இடத்துக்காணப்படுவது. 'உளி' இன் என்னும் பொருள்தருவது, 'மரபுளி' என்பது மரபின் எனப் பொருள்தருவது. 'இங்கு' - காயம். கு - முற்றுகரம். இங்கு - முற்றுகரமாயினும், 'முற்றும் அற்று ஒரோவழி' என்றதன்படி புணர்ந்தது.

'வாங்கும்' இஃது இங்குளிவாங்கும் என்பதன்கண் காணப்படுவது. வாங்கும் என்பதற்குரிய செயப்படுபொருள். மணம் - வாசம். இஃது அவாய் நிலையான் வந்தது.

'மாயை' ஆகுபெயர். இது 'முன்செய்வினை மாயை, பின்செய்வினை மாயை' என ஈரிடத்தும் வருவது. ஈரிடத்தும் மாயையின் காரியத்தைக் குறிப்பதால் ஆகுபெயர்.

'மற்று' வினைமாற்று. இம்மற்று 'மற்றவன்தான்' என்பதன்கண் காணப்படுவது. இது பிறழவரினும் பிறழஒட்டாது செய்யும் என்னும் பொருள்தந்து நிற்றலின் வினைமாற்று.

'தான்' என்பது இறைபணிநிற்கும் அவன் என வழிமொழிந்து குறிப்பதால் அக்குறிப்புத்தோன்றும் இடைச்சொல். இத் 'தான்' என்பது 'மற்று அவன் தான்' என்பதன்கண் காணப்படுவது.

'நண் அனல்............அதற்கு.'

**உணர்ந்துநிற்றல்**

பயிற்சிவயத்தான் புறநோக்கம் நேரின் நிலையில் திரிய ஒட்டாத அச்சாகிய ஆண்டவன் உடனே நேர்நிறுத்துவன். அதற்குக் காரணம் 'வேண்டிக்கொள்வன் தவநெறியே' எனவும், 'குறிக்கொண்மினே' எனவும் வேண்டிக்கொள்ளும் வேண்டுகோளேயாம். மேலும், ஆவிகள் தம்மை ஆண்டான்பால் ஒப்புவித்த பின்னர், தமக்கோர முதன்மையும் இன்றெனத் துணிந்து அவன்வழி நிற்கும் அன்புடைமையும், அடியார் இணக்கமும், ஐந்தெழுத்தோதலும பிறவும் இதற்குக் காரணம் ஆகும்.

தீயைத் தடுக்கும் வல்லார் மறை எண்ணம் செய்கை மொழி மன மெய் மூன்றும், நிறைபூசனை உறப்பா நோந்தியற்றுவராதலின் அத்தடை வாய்ப்பதும் வாய்மையே. மறை - மந்திரம். எண்ணம் - பாவனை. செய்கை - வணக்க முதலிய தொழுகை. இம்மூன்றனையும் மந்திரம் பாவனை கிரியை என்பர். ஏனை மறைவல்லார் அனைவரும் அதற்கென வரையறுக்கப்பட்ட மறை எண்ணம் செய்கை என்ற மூன்றாலும் ஆண்டவனை வழிபட்டு அமைத்துக்கொள்ளுதல்வேண்டும். ஆயின், திருமுறை வல்லார்க்கு அங்ஙனம் அன்று. திருமுறைத் திருமாமறைத் திருப்பாட்டு ஏதேனும் ஒன்று "காதலாகிக் கசிந்து கணணீர் மல்க ஓது"வரேல் அனல் தடை அமையும் என்க. இவ்வுண்மை ஆளுடையபிள்ளையார் அரன் ஐந்தெழுத்தே அன்பகத்துக்கொண்டு ஆண்டானுரையாகத் திருமுறைத் திருப்பதிகம் அருளி எடு தீயிலிட்டருளினர். அவ்வேடு "**பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கியது.**" எனவே, திருப்பதிகத் திருப்பாட்டே அமையும். செய்கை மறைத் திருஐந்தெழுத்தாகிய '**ஓம் சிவசிவ**' என்னும் தனித்தமிழ் மறையினைக் கணித்துத் திருவுரு ஏற்றுக.

பரிமாவினைப் பண்ணமரச் செலுத்துதற்குரிய பாகுநூல் கற்றுவல்லார், அப் பாய்மா எத்துணைவேகமாய்ச் செல்லினும் தம் நிலையில் திரியாது நிற்பார். அதறகுக் காரணம் அவர் கருத்திருத்திக் கற்றுவல்லராய கல்வித்துணையே என்க. இம்முறையில் ஆவியும் ஆண்டான் அடியினை நினைந்து மெய்யுணர்ந்து உறுதியில் நிற்கும்.

ஆண்டவன் குறைவிலா நிறைவன். ஆவிகள் கூடும் நிறைவின. பொறி புலன் முதலியன கொள் நிறைவின. இம்முறையில் ஆவிக்கும் மாயாகாரியமாகிய பொறி புலன்கட்கும் உள்ள இயைபினைக் குறைவிலா நிறைவும் கூடும் நிறைவும் ஆகக் கொள்ளலாம். இவற்றை வியாபக வியாப்பியமாகக் கூறுவர். கொள் நிறைவு - வியாத்தி.

ஆவிக்கு ஐம்புலனும் கூடும் நிறைவே. எனவே, ஐம்புலன் ஆவிக்கு அடக்கம். அங்ஙனம் அடங்குவது ஆவிக்கு மெய்யுணர்வு கைவந்த திறத் தான் என்க. இது மறைமொழியால் தீயும், கலைவன்மையால் பரிமாவும்

அடங்குவதை ஒக்கும். இறைபணியில் நிற்பார் ஐம்புலனிற் சென்றும் அதன் வயத்தாகாது ஆண்டான் வயமாம் தம் வயத்தாயே நிற்பர். இவ்வுண்மைகள் அனைத்தும் வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"தீத்தொழி லான்றலை தீயிலிட் டுச்செய்த வேள்விசெற்றீர்
பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடை யீர்பிடித் துத்திரியும்
வேய்த்தொழி லாளர் மிழலையுள் ளீர்விக்கி அஞ்செழுத்தும்
ஒத்தொழிந்து உம்மை மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே."
—ச: கரு - ச.

"கண்டியிற் பட்ட கழுத்துடை யீர்கரி காட்டிலிட்ட
பண்டியிற் பட்ட பரிகலத் தீரபதி வீழிகொண்டீர்
உண்டியிற் பட்டினி நோயில் உறக்கத்தில் உம்மைஐவர்
கொண்டியிற் பட்டு மறக்கினும் என்னைக் குறிக்கொண்மினே."
—ச. கரு - சு.

"நாயிற் கடையாம் நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான் என்ன தோஇங் கதிகாரம்
காயத் திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே."
—அ. குழைத்த - அ.

"நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது. —திருக்குறள், கஉச.

"புண்ணிய புராதன புதுப்பூம் கொன்றைக்
கண்ணி வேய்ந்த கைலை நாயக
காள கண்ட கந்தனைப் பயந்த
வாளரி நெடுங்கண் மலையாள் கொழுந
பூத நாத பொருவிடைப் பாக
வேத கீத விண்ணோர் தலைவ
முத்தி நாயக மூவா முதல்வ
பத்தி யாகிப் பணைத்தமெய் அன்பொடு
நொச்சி யாயினும் கரந்தை யாயினும்
பச்சிலை யிட்டுப் பரவும் தொண்டர்
கருவிடைப் புகாமற் காத்தருள் புரியும்
திருவிடை மருத திரிபு ராந்தக
மலர்தலை உலகத்துப் பலபல மாக்கள்
மக்களை மனைவியை ஒக்கலை ஒரீஇ
மனையும் பிறவும் துறந்து நினைவரும்
காடும் மலையும் புக்குக் கோடையிற்
கைம்மேல் நிமிர்த்துக் காலொன்று முடக்கி
ஐவகை நெருப்பின் அழுவத்து நின்று
மாரி நாளிலும் வார்பனி நாளிலும்
நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும்
சடையைப் புனைந்தும் தலையைப் பறித்தும்
உடையைத் துறந்தும் உண்ணாது உழன்றும்
காயும் கிழங்கும் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன அருந்தியும்
களரிலும் கல்லிலும் கண்படை கொண்டும்

தளர்வுறும் யாக்கையைத் தளர்வித் தாங்கவர்
அம்மை முத்தி அடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவும் ஒறுப்பர்
ஈங்கிவை செய்யாது யாங்க ளெல்லாம்
பழுதின் றுயர்ந்த எழுநிலை மாடத்தும்
செந்தா துதிர்ந்த நந்தன வனத்தும்
தென்றல் இயங்கும் முன்றி லகத்தும்
தண்டாச் சித்திர மண்டப மருங்கினும்
பூவிரி தரங்க வாவிக் கரையிலும்
மயிற்பெடை ஆலக் குயிற்றிய குன்றிலும்
வேண்டுழி வேண்டுழி ஆண்டாண் டிட்ட
மருப்பின இயன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டின் மீமிசைப் படுத்த
ஐவகை அமளி அணைமேற் பொங்கத்
தண்மலர் கமழும் வெண்மடி விரித்து
பட்டினுள் பெய்த பதநுண் பஞ்சின
நெட்டணை அருகாக் கொட்டைகள் பரப்பிப்
பாயன் மீது பரிபுர மிழற்றச்
சாயல் அன்னத்தின் தளாநடை பயிற்றிப்
பொற்றோ ரணத்தைச் சுற்றிய துகிலென
அம்மென் குறங்கின் ஒம்மென் கலிங்கம்
கண்ணும் மனமும் கவற்றப் பண்ணுற
இரங்குமணி மேகலை மருங்கிற் கிடப்ப
ஆடரவு அல்குல் அரும்பெறல் நுசுப்பு
வாட வீங்கிய வனமுலை கதிர்ப்ப
அணிஇயல் கழுகை அலங்கரித் ததுபோல்
மணிஇயல் ஆரம் கதிர்விரித் தெளிதர
மணிவளை தாங்கிய அணிகெழு மென்தோள்
வரித்தசாந் திண்மிசை விரித்துமீ திட்ட
உத்தரீயப் பட்டொருபால் ஒள்ளாதர
வள்ளை வாட்டிய ஒள்ளிரு காதொடு
பவழத் தருகாத் தரளம் நிரைத்தாங்கு
ஒழுகி நீண்ட குமிழொன்று பதித்துக்
காலன் வேலும் காம பாணமும்
ஆல காலமும் அனைத்துமிட் டமைத்த
இரண்டு நாட்டமும் புரண்டுகடை மிளிர்தர
மதியென மாசறு வதனம் விளங்கப்
புதுவிரை யலங்கல் குழன்மிசைப் பொலியும்
அஞ்சொல் மடந்தையர் ஆகந் தோய்ந்தும்
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தின்
அறுசுவை அடிசில் வறிதினி தருந்தாது
ஆடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்
பூசுவன பூசியும் புனைவன புனைந்தும்
தூசு நல்லன தொடையிற் சேர்த்தியும்
ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்தும்
மைந்தரும் ஒக்கலும் மகிழ மனமகிழ்ந்து
இவ்வகை இருந்தோம் ஆயினும் அவ்வகை

மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது
௭௫. சிந்தை நினைவழி செலுத்தலின் அந்த
முத்தியும் இழந்திலம் முதல்வ அத்திறம்
**நின்னது பெருமை** அன்றே என்னெனின்
வல்லான் ஒருவன் கைம்முயன் றெறியினும்
மாட்டா ஒருவன் வாளா எறியினும்
நிலத்தின் வழாஅக் கல்லேபோல்
நலத்தின் வழாஅநின் நாமநவின் றோரே."

—௧௧. பட்டி - திருவிடைமும் - ௧௯.

**இலக்கணம்**

பொருள் 'அரனடி ஓரபவர். பொருள் எனினும் உவமேயம் எனினும் ஒன்றே. பொருளின வினை 'அவர் திறல் நீஙகார்'. உவமை: நற்றவர், பாகர். நற்றவா தம் திறலில் நீஙகாா எனவும், பாகர் தம் திறல் நீஙகார் எனவும் சென்றியையும். இதுவே பொருளின் வினை உவமையினும் சென்று இயைந்தது.

'நண் அனல்' - அனலது நண் என மாறிநின்று பொருள்தரும். எனவே, முன்பின்னாகத் தொக்க ஆறாம்வேற்றுமைத்தொகை. நள் + அனல்—நண் அனல் மரூஉ. நீள் + உலகெலாம் = நீணுலகெலாம்.

பண்ணுதல் - கதிப்பித்தல். கதி - நடை. பண் அமர - நடை பொருந்த. விரைந்து நடக்கும்படி செய்தல்.

'இன்' உவம உருபு. 'நற்றவர் தம்மின்' - நற்றவர் தம்மைப்போல. 'பாகரின்' பாகரைப்போல. நற்றவர் தம்மினும், பாகரினும் என்ற இடங்களிலுள்ள உம்மைகள் எண் உம்மைகள்.

'சென்றும்' உம்மை இழிவுசிறப்பு. செலவத்தகாத இடம் இழிந்த ஐம்புலம்.

'அதற்கு' உருபுமயக்கம். நான்கன் உருபு மூன்றன் உருபாக மயங்குதல். 'அதனால்' என்று பொருள்தரும்.

நீள் + உலகம் = நீணுலகம்.

"மாணி பால்கறந் தாட்டி வழிபட
நீணு லகெலாம் ஆளக் கொடுத்தவென்
ஆணி யைசசெம்பொன் அம்பலத் துள்நின்ற
தாணு வைததமி யேன்மறந் துய்வனே."

—௫. ௨ - ௪.

'சதசத்தாம்............ஆங்கு.'

**நில் நிலாதது**

நில் நிலாதது என்பது நிலைப்பதும் நிலையாததும் ஆகிய இருதன்மையுமுடையது எனப் பொருள்படும். இதனைச் **சார்பு** எனக் கூறலாம். இதனையே சதசத்து எனக கூறுவர்.

ஆவி நிலைப்பதோடு கூடியவழி நிலைப்பதாய் நிற்கும். நிலையாததோடு கூடியவழி நிலையாததாய் நிற்கும். இவ்வுண்மையை உணர்ந்தோன் மெய் கண்டான் என்று அழைக்கப்படுவன். ஒருவன் கலைஞனோடு கூடினால்

கலைஞன் எனவும், வலைஞனோடு கூடினால் வலைஞன் எனவும் அழைக்கப் படுதலும், முதல் வகுப்பினன் இரண்டாம் வகுப்பினன் என்று அழைக்கப் படுதலும் இதற்கு ஒப்பாகும். வலைஞனின் நின்றும் கலைஞனானவன் பின் வலைஞனாக மாறான். கற்றவன் கல்லாதவனாக மாறான். நோய் நீங்கிய வன் நோயாளியாக மாறான். அதுபோல் மெய்கண்டான் பொய்யினோடு பொருந்தான். மெய் பொய் என்பதும் சதசத்துக்குப் பொருந்தும்.

பொய்யினை - நிலையாததைச் சார்ந்து தோன்றி மறைவது ஆவிக்கு இயற்கை அன்று செயற்கையே. மெய்யினை - நிலைப்பதைச் சார்ந்து என்றும் ஒருபடித்தாக இருப்பது ஆவிக்கு இயற்கை. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்
என்றும் அகலாது இருள்" —திருவருள். ௩ - ௬.

ஒன்று - பண்டே புல்லிய மலம். ஒளி - இடையே பற்றற்கு இயை புடைய மாயை. ஆவி மாயையைப் பற்றுவது அதன் இயற்கை அன்று; செயற்கையே. நோயாளி மருந்தை உட்கொள்வது செயற்கை ஆகுமே அன்றி, இயற்கை ஆகாதல்லவா? நோயும் ஒருவனுக்கு இயற்கை அன்று. அதுவும் செயற்கையே. நலமே இயற்கை. அதுபோல் மலச் சார்பும இயற்கையன்று. ஆனால், செயற்கையா? என்றால், செயற்கையும் அன்று. ஆயின், நெல்லிற்கு உமிபோல் மலம் நீங்கும் இயல்புடைய இயல்பல் இயல்பு. அரிசிக்குத் தவிட்டுச சார்பு இயல்பு. அதுபோல் ஆவிக்கு ஆண்டான் சார்பே இயல்பு. இதுவே மெய். இவ்வுண்மையைத் திருவருளால் உணர்ந்தவனே மெய்கண்டான். அவனே செம்பொருட் டுணிவினன். செம்பொருட்டுணிவினன் எனினும் சித்தாந்தச் செல்வன் எனினும் ஒன்றே.

### கதிர் முன் இருள்

ஒளி முன் இருள் முனைத்து நில்லாது அடங்கி நிற்பதுபோல் திரு வருள் முனைப்பின் முன் உலகு விளங்கித் தோன்றாது. விளங்காமை யாவது ஒரு பெரும் நூல் நிலையத்துள் ஒரு நூலை நோக்குவானும் கற்பா னும் ஏனைய நூல்களை நோக்கலும் கற்றலும் செய்யான். அந்நூற்கள் இருந்தும் அவனைத் தம்பால் ஈர்க்கும் ஆற்றலுடையவல்ல அதுபோலவே உலகம் இருந்தும் மெய்கண்டான் தன் பொய்யிலுளத்து விளங்கித் தோன்றாது. கதமிக்கு எரி கதிர் என அடைபுணர்த்தி அருளினர். கதம்-சினம். இதுவும் தீத்தன்மையாவதுபற்றிக் கதம் எனக் கூறப்பட்டது. அதுபற்றிச் சினத்திற்குச் சேர்ந்தாரைக் கொல்லி என்னும் பெயரும் வழங்குவதாயிற்று. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து." —திருக்குறள் - ௧௩0.

"சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும்." —திருக்குறள் - ௩0௬.

"நல்ல கோவணம் கொடுப்பரென் றுலகின்மேல் நாளும்
சொல்லு வித்ததென் கோவணம் கொள்வது துணிந்தோ
ஒல்லை யீங்குறு வாணிகம் அழகிய துமக்கென்று
எல்லை இல்லவன் எரிதுள்ளி னுலென வெதண்டான்."
—க௨. அமர்நீதி - ௨௬.

## முறை

இந்நூற்பாவின்கண் வெண்பாக்கள் ஆறு. அவற்றுள் முதற்கூற்றின்கண் அமைந்த வெண்பா ஒன்று. இக்கூற்றின்கண் அமைந்தன ஐந்து. இவ் ஐந்தினுள்,

க. இறைபணியில் நிற்பார்க்கு என்றவினை முதல்வன் திருமுன் உடலூழாய்க் கழியும் என்னை? அவர் உள்ளம் "நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன், நினையாதொருபோதும் இருந்தறியேன்" என்ற திருமுறைத் திருமாமறைப்படி ஆண்டவன் பாலே தோய்ந்து நிற்றலின், பிற நினைப்புக்கு இடம் இன்மையான் என்க. உள்ளம் ஆண்டான்பால் உறுதவர் உயரார். உற்றார் உயர்வர். இவற்றை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு." —திருக்குறள் -ருகஅ.

உள்ளம் - ஊக்கம்; இறை உறையும் இன் உள்ளம். வள்ளியம் -பெருமிதம்.

"இறுமாந் திருப்பன்கொலோ—ஈசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச
சிறுமான் ஏந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றங்கு
இறுமாந் திருப்பன்கொலோ."
—௪. கூ. திருஅங் - கக.

கழியவே மேலைக்கு வினை ஏறுமாறில்லை.

உ. அது செய்வோா செய்திப்பயன் வினையுமாற்றாற் பெறப்படும்.

ந. செய்வோர் செய்திப்பயன் அன்றியும், வினைவது பசை அளவே ஆகலான் அதுபற்றிவரும் வினை திருவருள் உணர்வால் அழிவு எய்தும்.

௪. அம்மெய்யுணர்வு பயிற்சிபற்றிச் சலிக்குமாறு இல்லை.

ரு. சலியாமைக்கு வாயில் ஒளிமுன் இருள் விளங்காமைபோன்று திருவருள் உணர்வின்முன் உலகுடற செயல்கள் விளஙகா.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்ற முறைப்படி உலகியற் பொருள்கள் உறும்பொழுதெல்லாம் அப்பொருள்கட்கு உடையானும் ஆண்டான் உணர்வு தோன்றுமேல் அதனால் உறும் பயனும் உதவும உதவியும் ஆண்டவன் அருளே என்று ஆணடவன்பால் பெருங்காதல்பூண்டு நன்னெறிச செல்லும் நல்லாராவர்.

பெரும்பாலும் ஆவிகள் என்றும் உடையானை எண்ணுதியைப்பாரை, நின்றுணரும் நீர்மை தனதாம் முறைமையையே கைக்கொண்டு விருப்பு வெறுப்பால் உள்ளம் உருப்பெறச் செய்கின்றனர். அதனால் இருவினைப் பிணிப்பு எய்துகின்றனர். உடையானாகிய ஆண்டான் நினைவு வருமேல் அவர் செயல் திருவருட் செயலாய் இருவினைப் பிணிப்பகன்று அருந்தவ வினை எனும் இறை பணியாம் என்க.

## இலக்கணம்

'மெய்கண்டான், அருகணையார்' இவை ஒருமைப் பன்மை மயக்கம் போல் காணப்படும். முடிபு வெவ்வேறாக வருதலின் மயக்கமின்று. 'மெய் கண்டான் அருளிற் காணின்' என்பது ஒரு முடிபு. 'சத்தணைவார் அசத் தின் அருகணையார்' என்பது ஒரு முடிபு. ஆகையால், மயக்கமின்று. 'அருளின்' என்பது - 'அருளிற் காணின்' என்ற இடத்து வருவது. 'இன்' ஐந்தன் உருபு ஏதுப்பொருளது. அருளினால் என்றாகும்.

'இதமித்தல்'—இதம் - அன்பு; இனிமை. இதமித்தல் - பற்றுக் கொள்ளுதல். இதம் - பற்று; பெயர். 'இதமித்தல்' வினைப்பெயர். இஃது ஒருமித்தல் என்பதுபோல் காணப்படுவது. ஒருமித்தல்-ஒன்றுதல்.

ஏகனாகி நிற்றலாம் இறையொருமை மாசின் றிறைபணியால் மாயை, அறை வினைகள் இன்றாம் அறி என்பது பெறப்படுதலால் "மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என்பதனை வேறொரு கூறாக் கொள்ள வில்லை. ஆயினும், பன்னிரண்டாம் நூற்பா முதற்கூற்றின்கண் "மும் மலம் கழீஇ" என ஓதியருளினர்.

## அப்பால்

அப்பால் நிலையினைத் துரியாதீதம் என்ப. இந்நிலை அறிவும் உயிர்ப் பும் அடங்கி நிற்குமேல் புணர்வெனப்படும். உயிர்ப்படங்கி அறிவடங்காது நிற்குமேல் புரிவுநிலை எனப்படும். இவ்வுண்மை வருமாறு :

"பொற்புறு கருவி யாவும் புணராமே அறிவிலாமைச்
சொற்பெறும் அதீதம் வந்து தோன்றாமே தோன்றிநின்ற
சிற்பரம் அதனால் உள்ளச செயலறத் திடவுதிக்கும்
தற்பரம் ஆகிநிற்றல் சாக்கிரா தீதந் தானே."

—சிவப். கO - க.

## கருத்து

ஐயன் ஐந்தெழுத்தால் அருமலம் கழலும்.

## முதுமொழி

உள்ளத் துறுபொருளை ஒல்லாசிற் றேடுசுட்டால்
கொள்ளல் இறையருளால் கூடுமால்—தெள்ஐந்தால்
"ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு."
—திருக்குறள், ௩௫௭.

---

*

## பதிஞெராம் சூத்திரம்

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

எ - து. சூ - ம். எ - னின். பரமேசுரனது சீபாதங்களை அணையு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

*எ - து. க - ரை. எ - னின். சூத்திரக் கருத்துணர்த்துதல் நுதலிற்று*

*(இ - ள்.) அங்ஙனம் ஏகனுகி இறைபணி நிற்பார்க்கு அறிவு இச்சை செயல்கள் விடயித்தற்குரியதோர் இயைபு ஆண்டுப் பெறப்படாமையின் விடயமாவதொன்றில்லைபோலும் என்னுமவாதிகளை நோக்கி விடயித்தலில்வழி ஆண்டுப் புத்தர் கூறும் ஆலய விஞ்ஞானம்போலச் சூனியமாம் எனப்பட்டுக் குணஞ் சூனியமாகவே குணியுஞ் சூனியமாய் முடியும் ஆகலான் அஃது ஏலாமையின் ஆண்டவை இயைபுபற்றி விடயிக்குமாறு உணர்த்து முகத்தானே பயன் இரண்டனுள் முடிவாய் எஞ்சி நின்ற சிவப்பேறு கூடுதலாய நிட்டையின் இயல்புணர்த்துதல் இப்பதிஞெராஞ் சூத்திரத்தின் கருத்து (எ - று).*

இதனுனே, சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

*அற்றேல், ஏகனுகி இறைபணிநின்ருர்க்கு இனிச் செய்யக் கடவது ஒன்றின்மையானும், இருள் நீக்கமும் ஒளி விளக்கமும் உடன் நிகழ்ச்சி ஆயவாறுபோலப் பசுத்துவநீக்கமுஞ் சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடன் நிகழ்வனஆகலின் வேருேத வேண்டாமையானும், முதல்நூலுள் சுவாநுபூதியாகிய சிவப் பேற்றைப் பத்தாஞ்சூத்திரத்துள் பாசநீக்கத்தோடு ஒருங்கு வைத்தே ஓதலானும் அதனை ஈண்டு வேறு வைத்தோதல் அமை யாதுபோலும் எனின் ;—அறியாது கடாயினுய்: ஏகனுகி இறைபணி நிற்பது துரியநிலைக்கண்ணதாகிய அருணிலையே ஆக லின் ஆண்டுமலநீங்கிய துணையானே சுகப்பிரபை மாத்திரையே விளங்குவதன்றி அதீத நிலைக்கண்ணதாகிய சிவத்துவ விளக்க மெனப்படும் பரமசுகம் விளங்காமையின் அது விளங்குதல் அவனருளால் அல்லதொன்றையுஞ் செய்யாமைமாத்திரையால் அமையாமையின் அதற்கு வேறும் ஆண்டுச் செய்யக்கடவது*

உண்டென்பது தானே போதருதலானும், இருள்நீக்கத்தின் ஒளிவிளக்கம்போலப் பசுத்துவநீக்கத்தின் அருள்விளக்க மாத்திரையே அன்றி ஆனந்தவிளக்கமும் உடன் நிகழாமையானும், அவ் இரண்டற்கும் வேறுபாடு முன்னர்க் காட்டப்படும் ஆகலானும், முதனூலிற் பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்தியவழிப் பாசநீக்க மாத்திரையே முத்தியெனக்கொண்ட வாதிகளை மறுத்தற்பொருட்டுப் பாசநீக்கம்பெற்றோன் சுவாநுபூதி யுடையவனுவனெனப் பதினொராஞ் சூத்திரஞ்செய்தற்குத் தோற்றுவாயாந்துணையே பத்தாஞ் சூத்திரத்திற் செய்துவைத்துச் சுவாநுபூதி நிகழ்ச்சிக்கண் ஓதற்பாலனவெல்லாம் பதினொராஞ் சூத்திரத்துட் கூறுதலின் ஒன்பதாஞ் சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்தி பண்ணுமாறு பத்தாஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெற்றாற்போலப் பத்தாஞ்சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலை பதினொராஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுதலான் அதன்கண் மலையாமைப் பொருட்டு ஆசிரியர் சுவாநுபூதிமானுவனென்பதனையும் அரன்கழல்செலுமெனப் பதினொராஞ் சூததிரத்தானே ஒருங்குவைத்தோதினாராகலின் அதுமாறன்மையானும், அவ்வாறன்றி மொழிபெயர்த்தல் யாப்பால் நூல்செய்துரைப்பான் புகுந்த ஆசிரியர் வேறுபடச் செய்துரையாராகலானுமென்பது இதனானே, முதல் நூலிற் சுவாநுபூதிமானெனன வாளா கூறியதனைப் பதினொராஞ் சூத்திரத்துப் பத்திசெய்கவென்றதன் பின்னாகக் கொண்டுகூட்டி வைத்துரைத்தலே அதன் கருத்தென்பதூஉம் பெறப்பட்டது. அற்றாகலினன்றே, பத்தாஞ் சூத்திரம் பாசக்ஷயம்பண்ணுமாறுணர்த்திற்றெனவும், பதினொராஞ் சூத்திரம் பரமசிவனது சீபாதங்களையணையுமா றுணர்த்திற்றெனவுங் கருத்துரை செய்ததூஉமென்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: காட்டக் காணுந் தன்மையுடைய கண் உருவத்தைக் காணும்படி அதனோடொருங்கியைந்துநின்று காட்டி அவ்வுருவத்தைக் காண்கின்ற ஆன்மாப்போல அறிவிக்க அறியுமியல்பையுடைய அவ்வான்மா விடயத்தை யறியும்படி முதல்வன் அதனோடொருங்கியைந்து நின்று அறிவித்து அறிந்துவருதலான் அவ்வத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே அம்முதல்வன் றிருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும் (எ - று).

காணும் என்னும் உவமையடை பொருளினும், கண்டு என்னும் பொருள்வினை உவமையினும் சென்றியைந்தன. காணவென்பதனை ஈரிடத்துங் கூட்டுக.

*"வேர்த்து வெகுளார் விழுமியோர்" என்பதுபோலக் கண்டு காட்டலென்பது மாறிவைத் துரைக்கப்பட்டது.

இக்கருத்து நோக்கியன்றே, இதனை விரித்துக் கூறுவான் புகுந்த வழிநூலாசிரியர் †"காட்டிக்கண் டிடுமா போலக் ...."காட்டிக் கண்டிடுவன்" என்றதூஉமென்க.

அயராமைக்குச் செயப்படுபொருள் அதனையென் றெடுத்துக்கொள்க. அயராவன்பென்றது அயராமையாகிய அன்பென "ஆறுசென்ற வியர்" போல் நின்றது. அது ‡"இத்தை ஆயும் அறிவுடையனாய் அன்புசெய்ய" என வழிநூலாசிரியர் கூறியதனானுமுணர்க.

உள்ளத்தையென்பது உருபுமயக்கம்.

அறிவிச்சை செயல்களின் நிகழ்ச்சியாகிய அயராமையும் அன்பும் செலவும் முறையே காரணகாரியங்களாய் அவ்வொரு பொருண்மேல் ஒருங்கு நிகழுமென்பார் அயராவன்பின் அரன் கழல் செலுமேயென்றார்.

இஃதென்சொல்லியவாறோவெனின்;—உயிரை இன்றியமைமையாதகண் உருவத்தைக் காணுங்கால் உயிரினது உணர்வு கண்ணொளிஎனத் தான்என வேற்றுமையின்றி உடனாய் விரவிநின்று கண்ணுக்குக் காட்டிய அதனைக் கண்கண்டதென்றுங் கண்ணையதிட்டித்துநின்ற உயிர் கண்டதென்றும் பகுத்தறிய வாராது இரண்டன் காட்சியும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாகி ஒருங்கே நிகழுமாறுபோல, முதல்வனை இன்றியமையாத உயிர் ஒருவிடயத்தை யறியுங்கால் அம்முதல்வனது சிற்சத்தி ஆன்மசிற்சத்தியெனத் தானெனவேறின்றி உடனாய் விரவிநிற்ப முதல்வனும் அவ்வாறு விரவிநின்று ஆன்மாவிற்கு அறிவித்ததொன்றனை அவ்வான்மா அறிந்ததென்றும், அதனையதிட்டித்து நின்ற தானறிந்தானென்றும் பகுத்தறிய வாராது இருவகையறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தமுத்தி இரண்டினும் ஒருபெற்றித்தாய் உண்மையின் ஏகனாகி இறைபணிநிற்கும் உயிர் முதல்வன் அங்ஙனம் அத்துவிதமாய் உபகரித்து நிற்கும் உரிமையை நோக்குமாயின் நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அப்பொருட்கண் செல்லும் இச்சை அடங்காது மீதூரும் ஆகலின் அவ்வழி அவ்விச்சையே தானாகவிளங்கித் தோன்றும் பேரானந்தத்தை அநுபவிக்கப்படும் என அறி

---

* நாலடியார், சினமின்மை. நேர்த்து (ருகள)

† சிவஞானசித்தி, பதினொராஞ்சூத்திரம். க. காயமொழி. (ருகள)

‡ ,, ,, ௯. காய. ,,

விச்சை செயல்கள் மூன்றுங்கண்டு விடயிக்குமாறுணர்த்தி அதீதநிலையியல்புகூறியவாறு மென்க. அத்துவிதமாவது பேதப் பொருளிரண்டுந் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தவிசேடம். இக்கருத்தேபற்றி *"அறிவொளிபோற் பிறிவருமத்துவிதம்" என்றார் புடைநூலாசிரியரும். "அங்கியு மொன்றிற் றங்கிநின் றல்லது—தன்றொழினடத்தா"†தாகலின், அதுபோல முதல்வ னும் உயிரை யதிட்டித்துநின்று எத்தொழிலுஞ் செய்வனென் றுணர்க. உயிர் ஒன்றனையறிதல் முதல்வன் உடனின்றறிதலை யின்றி அறிவித்தன் மாத்திரையான் அமையாதென்பது ‡"தொண்டனே னினையுமா நினையே" "விரும்புமா விரும்பே" "தொடருமா தொடரே" "நுகருமா நுகரே" என்றிவ்வாறு மூததிநிலைபற்றியோதிய திருவாக்குக்களானுமறிக. இவ்வியல்பு நோக்கியன்றே "அறிவானுந்தானே யறிவிப்பான்றானே" என் றோதிய அம்மை §"அறிவாயறிகின்றான்றானே" எனவுமோதிய தூஉமென்க. முன்னறிதல் அறிவித்தற்பொருட்டெனவும் பின் அறிவாயறிதல் விடயத்தில் அழுந்துவித்தற் பொருட்டெனவுங் கொள்க. இதனை யீண்டுவைத்தார் அத்துவிதநிலை இனிது விளங்குதற்கு.

இவ்வாறன்றிக் காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம்போற் காணவுள்ளத்தைக் கண்டு காட்டலென்பதற்குக் காட்டுமுபகார முணர்த்தன் மாத்திரையே கருததென்றுரைப்பாரு முளர். இதனைக் கண்ணழித்துரைப்புழி அவனும் அவற்றது விடயத்தை யுணருமெனக் காணு முபகார மாத்திரையே எடுத்துக்கொண் டுரைத்த ஆசிரியர்$ கருத்தன்றாகலானும், காணுமுபகாரங் காட்டுமுபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழுமென்பது உணர்ந்து கோடற்பொருட்டு அதுவும் உடன்கூறப்பட்டதன்றி வேறின் மையானும், அவ்வாறன்றென்பார்க்கு ஐந்தாஞ் சூத்திரத்துட் பெறப்பட்டதனை ஈண்டுக் கூறுதல் புனருத்தியாய் முடியுமாக லானும், அவருரைப்பனவெல்லாம் போலியுரையென்றொழிக. அற்றேல், முதனூலிற் பதினொராஞ் சூத்திரத்துட் காட்டுவ னென்பது மாத்திரையேயன்றிக் காண்பனென்பது கூறிற்றில லயாலெனின்.—அறியாது வினாயினாய்: ஆண்டுக் காட்டுவானு மென்றவும்மை காண்பானுமாமென எதிரது தழீஇநிற்றலின், கூறாமை யாண்டையதென்றொழிக. அவ்வும்மைக்குப் பொருள் காணமாட்டாதார் பாடம் வேறாக ஓதுப.

* சிவப். பாயிரம், எ. புறச்சமயத். (௧0௧) † சங்கற்ப. ௧உ. (௫௧௧)
‡ திருமாளிகை. கோயில், ௧௧. ௧0. ௧. எ. (௫௧௧)
§ காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி, உ0. (௫உ0)
$ (பாடம்) ஆசிரியருக்கு அது.

இதனுள், காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற் காண உள்ளத்தைக் காட்டிக் காண்டலென்றது ஓரதிகரணம்; அதனை அயரா அன்பின் அரன்கழல் செலுமே என்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

## விளக்கம்

### உறைவுழைப்பு

விளக்கொளியில் உறைதலும் உழைத்தலும் வெவ்வேறாதல் கண்கூடு. இடை ஒன்றாயினும் இருத்தலும் இயங்கலுமாகிய எழில் நடை இரண்டனறே. இருத்தல் ஒன்றாதலும் இயங்கல் உடனாதலும் என்றும் பொன்றா இயல்பென்ப. ஒளியில் உறைதலொன்றாதல் ஒளியால், அளியோடுழைப்புடன் பேறு என உரைப்பதும் இவ் இயல்பினையேயாம்.

இருத்தலால் அறிவும் இயங்கலால் ஆற்றலும் விளங்கும் என்க. இடமும் காலமும் துணையும் இருப்பும் இனிதின் உணரும் உணர்ச்சி இன்றேல் அறிவுடைமையால் ஆம் பயன் யாது? இவ்வுணர்ச்சிகள் உள்ளவாறு உளவாயின அறிவுடையான் என அறைதல் பொருந்தும். மேற்கூறிய நான்கின் தொடர்பால் இயங்கல் ஆற்றலின் விளக்கமாகும். ஆற்றல் எனினும் தொழிலெனினும் செய்கை எனினும் ஒன்றே. இயங்கல் எனினும் ஒழுகலெனினும் துய்த்தலெனினும் அழுந்தலெனினும் ஒன்றே. இருத்தலை உறைவு எனவும், இயங்கலை உழைப்பு எனவும் கூறுப. இவ் இருத்தல் இயங்கல் இரண்டும் பத்தாம் நூற்பாவின்கண் முறையே ஏகனாதலாலும் இறைபணி நிற்றலாலும் விளங்க அதியருளினார் என்க. எனவே, பத்தாம் நூற்பாவின்கண் ஆண்டான் விளக்க ஆவியின் அறிவாற்றல் விளங்கும் நெறியுண்மை பெறப்பட்டது. விளக்கல் என்பது ஆவிக்கு அறிவும் ஆற்றலும் விளக்கமுறவேண்டுமேல், ஆண்டான் அறிவும் ஆற்றலும் உடனிருந்தியைதல்வேண்டும். எதிர்முகத்து விளங்குவதன்று விளக்கம். இயைந்தியக்க விளங்குவதே விளக்கம்.

ஆவிக்குரிய அன்பறிவு ஆற்றல்கள் மூன்றினுள் அறிவாற்றல்களின் விளக்கம் பத்தாம் நூற்பாவில் பெறப்படவே எஞ்சிய அன்பு விளக்கம் விளக்கப்பெறுதல்வேண்டும். அறிவைத் தந்தையாகவும், ஆற்றலைத் தாயாகவும் கொள்ளுங்கால் அன்பு மகவாகக் கொள்ளப்படும். ஒருபுடை ஒப்பாக ஆண் பெண் இன்பு எனல் பொருந்தும். இன்பின் அடையாளமே மகவு. மகவினைக் காணும் காட்சியில் அறிவு ஆற்றல்களாகிய தந்தை தாயர் காட்சி உடன்நிகழும் காட்சியாகும். அனபாகிய மகவுக் காட்சி இன்றெனில், அறிவு ஆற்றல்களின் காட்சி தந்தை தாயர் காட்சிகளாக நிகழா. பின் என்னையோ எனின்? அறிவு ஆற்றல்கள் ஆண் பெண் காட்சிகளாக நிகழும் என்க. இப்பதினோராம் நூற்பாவின்கண் அன்பின் விளக்கம் பெறப்படுதலின், அறிவாற்றல்களும உடன்நிகழ்வாய்ப் பெறப்படும் என்க. அறிவு விழுமிய முழுமுதலையே அறிதற்கும ஆற்றல் அவனையே பற்றிப் பிணிப்பகற்றற்கும் துணையாவனபோன்று அன்பு அவனது பேரின்பின்கண் அழுந்தற்குத் துணையாம் என்க. 'அன்பினல் இன்பம் ஆவர்' என்பதூஉம், 'இறவாத இன்ப அன்புவேண்டி' என்பதூஉம் மேலதனை வலியுறுத்தும் என்க. பேரின்பின்கண் முழுமுதலையே அறிதலும் பற்றலும் அவன் திருவடிக்கண் அழுந்தலும் ஆகிய

செயல்கள் இடையறாது நிகழ்தல் வேண்டும். அதனால் அறிவாற்றல் அன்பு மூன்றும் ஒருங்கு நிகழ்வதிப் பதினோராம் நூற்பாவின்கண்ணேயாம். அறிவாற்றல் ஆம் அருளில் அன்பறிவாற்றல்கள், செறியும் சிவப்பேற்றில் செப்பென்பதே சிறப்பென்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனமேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார் இவரைநீ அடைவாய் என்ன."

—கஉ. தடுத்தாட் - ககசு.

பெருமை - பணிவு; "பணியுமாம் என்றும் பெருமை" என்பது காண்க. பேணல் - ஆண்டான் நினைவோடு ஆருயிர் அனைத்தையும் ஓம்பல். ஒருமை - உடையான் உணர்வு; மெய்யுணர்வு. ஊனம - குறைவு. அருமையாம் நிலை - நிலையில் திரியாது அடங்குதல். அன்பு - திரு அடி மறவாமை. இன்பம் - திருவடி இன்பம். இருமை - இம்மை மறுமை; செல்வம்.

"இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி
அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க என்றார்."

—கஉ. காரைக்கால் - சுO.

இறவாத இன்பம் - திருவடி இன்பம். இன்ப அன்பு - திருவடி இன்பத்துக்கு வாயிலாகிய அன்பு. வாயில் - காரணம். பிறவாமை - "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்ற தமிழ்ப்பொதுமறையின்படி வேண்டத்தக்க பிறவாமை. இறப்பிற்குரிய பிறப்பிற் புகாமையும், சிறப்பிற்குரிய பிறப்பில் புகுதலும் வேண்டத்தக்கன. என்னை? பிறவாது சிறப்பெய்துதல் கூடாமையின் என்க. மறவாமை - இடையறா அன்பு. பாடுதல் - அயராமை. அடியின்கீழ் இருத்தல்-திருவருளின் வழிநிற்றல்; அரன் கழல் செலல். மறவாமையால் அன்பும், பாடுதலால் அறிவும், அடியின்கீழிருத்தலால் ஆற்றலும் ஆவிக்கு முறையே தொழிற்படும என்க.

## பண்பி பாழ்

அன்பு அறிவு ஆற்றல்கள் வீடுபேற்றின்கண் செயற்படாது ஒடுங்கி விடும் என்னுமோ எனின்? என்னும். என்னை? அம்மூன்றும் ஆவியின் பண்புகள். பண்பு அழியின், பண்பியும் உடன் அழியும். ஆகவே, ஆவி அழியுமென்று கூறுவார் கூற்றே அதுவாகலின் என்க.

இக்கொள்கையுடையார் புத்தர் என்ப. இவர்கள் இதனை 'ஆலய விஞ்ஞானம்' என்ப. பண்பியாகிய ஆவி பாழாய்விடின், பெறுவானும் பேறும் இன்றாய்க் கூறும் அடிப்படைக் கொள்கைகளும், அகற்காம் ஒழுக்கங்களும், அறமுறைகளும் பயனில் பாடாய், நனி நாகரிகம் என்பதோர் நயனும் இன்றாய் வீணும். அந்தோ! இதற்கோ பிறப்பும் சிறப்பும் பேசப் படுவன பெரியோரால்?

## மறவாமை

சிவனை மறவாமையே இறைபணியாகிய சிவன்வழி நிற்றலாம். இதுவே இரப்பில் தவமாம். இந்நிலையே பெரும்பேறும். பெரும்பேறு எனினும் நிட்டை எனினும் ஒன்றே. மெய்யுணர்வு கைவந்த தவத்தோர் நினைவு சொல் செயல் ஆகிய மூன்றின் அடிப்படைப் பண்புகளாகிய அன்பறிவு ஆற்றல்கள் மூன்றும் ஆண்டானின் அன்பறிவாற்றல்களின் இயைந்தியக்கும் துணை இயைந்தாலன்றி இயங்கா. ஆகவே, எல்லாம் அவனருளே என்றமைந்திருப்பார் அடியார் என்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"சிவன் முதலே அன்றி முதல்இல்லை என்றும்
சிவன்உடைய தென்னறிவ தென்றும்—சிவனவனது
என்செயல தாகின்ற தென்றும் இவையிற்றைத்
தன்செயலாக் கொள்ளாமை தான்."
—திருக்களிற்றுப்படியார், சுச.

நாயிற் கடையாம் நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கும் அதுஅன்றி
ஆயக் கடவேன் நானோதான் என்ன தோஇங் கதிகாரம்
காயத் திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்நுதலே."
—அ. குழைத்த - அ.

காயம் - உலகு உடல் உண்பொருள்களின் நினைவு.

கழல் - திரு அடி நினைவு.

## இயைபு

இறைபணி நிற்பார்க்கு அவர்தம் அன்பு அறிவு ஆற்றல்கள் ஆண்டுப் புலன் கொள்ளுதற்கோர் பொருளும் இன்மையால் பாழாய் முடியுமோ என்பது ஐயம். ஆண்டு ஓர் பொருளும் இன்றெனக்கொண்டது சிறிது எண்ணிப் பாராமையான் ஆகும. முப்பொருள்களுள் மலம் மாயை கன்மங்கள் அடங்குதலும், அதனைச்சார்ந்து மருண்டுநின்ற உயிர் திருவருள் முனைப்பால் உண்மை தெருண்டு சார்புணர்ந்து பிரிப்பின்றிச் சார்ந்தவழியும், சாரப்பெற்ற விழுமிய முழுமுதற் சிவபெருமானின் திருவடியைப் புலன்கொள்ளுமாகலின், பாழாமாறு இல்லை என்பது இந்நூற்பாவின்கண் பெறப்படுதலின, அஃது ஐப இயைபு எனப்படும். இதனால் முன் நூற்பாவின் இரண்டாம் கூற்றின் தொடர்பு பெறப்படும்.

பாச வீடு ஆவிப்பேறு எனப்படும் பயன் இரண்டனுள் மலநீக்கம் உணர்த்தியபின் சிவப்பேறு உணர்த்துதல் முறைமை. அஃது ஈண்டு உணர்த்தப்படுகின்றது. அதனால் ஒத்தியைபு பெறப்படும்.

"ஏகன் ஆகி இறைபணி நிற்க" என்றவழி அவ்வாறு நிற்பித்தற்குரிய தொடர்பு என்னை எனவும், "மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே" என்றவழி 'வினை' என்றது எற்புழிக்கோடலான் எறுவினை ஆகும்; ஆகவே, எனை என்ற வினைப்பசை கழியுமாறு யாங்ஙனம் எனவும் அவாய் நிற்றலின், அவ் அவாய்நிலை பற்றிய இயைபானே நூற்பா இயைபு பெறப்படும்.

ஐயம் - ஆசங்கை. புலன்கொளல் - விடயித்தல். கூறு - அதிகரணம். தொடர்பு - சம்பந்தம். பேறு - இலாபம். எறு வினை - ஆகாமிய வினை. என்ற வினை - பிராரத்த வினை. நூறபா - பாதம்; சூத்திரம்.

## அருள் நிலை

'ஏகன் ஆகி இறைபணி நின்'றார்க்கு இனிச் செய்யக்கடவது ஒன்றில்லை. இருள் நீக்கமும் ஒளி விளக்கமும் உடன்நிகழ்ச்சியான. இவ் உண்மை வரும் 'இறையனார்' அகப்பொருளின்கண் நக்கீரர் உரையான் உணர்க :

"காட்சியோடு உடனே கிளரும்." என்னை ? இருட்டகத்து விளக்குக்கொண்டு புக்கால், விளக்கு வாராத முன்னரும இருள நீஙகாது; விளக்கு வந்தபின்னரும் இருள் நீங்காது; விளக்கு வருதலும் இருள் நீக்கமும் உடனே நிகழும். அதுபோல, காட்சியும் ஞான ஒழுக்கக் குணங்களது தன்மை அழிவும் உடன் நிகழும். விளக்கினைக் காட்சியாகக் கொணடு ஞான ஒழுக்கஙகளை இருளாகக் கொள்க." ('அதுவே' சூத். உ)

உடனிகழ்ச்சியாமாறுபோல பிணிமை நீக்கமும் அருண்மை விளக்கமும் இடையீடின்றி உடன்நிகழ்வன. பிணிமை - பசுத்துவம். அருண்மை-சிவத்துவம். அதனால் வேறு ஓதவேணடா ; ஒருங்கு ஓதவே அமையும் எனின் ? பொருந்தாது. 'ஏகன் ஆகி இறைபணி நிற்பது' பேர் உறக்க நிலை ஆகும். இதுவே அருள்நிலை. ஆணடு மலம் நீஙகிய துணையானே இன்ப ஒளி மட்டுமே விளங்கும். அருள்நிலை எனினும் துரியநிலை எனினும் ஒன்றே.

## சிவநிலை

சிவநிலை எனினும் அப்பால்நிலை எனினும் ஒன்றே. இதனை அதீத நிலை எனவும கூறுவா. அதீதநிலை என்பது துரியாதீத நிலை. இந்நிலைக்கண் சிவவிளக்கம் எனப்படும் பேரின்பம் தோன்றும். இஃதொன்றே ஈடும் எடுப்பும் என்றும இல்லாத பீடுடை. இன்பம். இதனைப் பெறுதற்பொருட்டே ஆண்டவன் ஆவிகளுக்குப் பிறவியைப் படைத்தருளினன். இவ் இன்பம் பெறுதற்குச் செய்யக்கடவ செயல்களும் உள. அச்செயல்கள் ஆணடவன்பாலே செய்யப்படுவன. அதனால், அவை ஆவியின் உலகியற் செயல்போல் பிணிப்புறுத்தும் தனிச்செயல் அன்று. மேலும், அச்செயல் ஆண்டான்பாலே நிகழ்தலின் ஆண்டான் செயலே ஆகும். திருக்கோவிலின்கணணும், கல்லூரியின்கண்ணும், திருமணவீட்டின்கண்ணும் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் அவ்வப்பெயரானே வழங்கப்படும் அன்றே! அதுவே இசசிவநிலைக்கு ஒப்பாகும்.

'காணும்...........செலுமே.'

(பொ - ரை.) கண் உருவத்தைக் காணும். ஆனல், காட்டும் துணை இல்வழி அக்கண் காணமாட்டாது. அக்கண்ணுக்குக் காட்டும் துணை ஆவியே ஆகும். அதுபோல் ஆவிக்கு அறிவு உள்ளது. அவ் அறிவும் ஆண்டவன அறிவு இயைந்து இயககித் துணைபுரிந்தாலன்றி விளங்கா. ஆகவே, ஆவிக்கு ஆண்டவன் காட்டிக் காண்கின்றனன். அதனால் அவ் ஆவி ஆண்டவன் திருவருள் துணையை மறவாது அவன் திருவடியையே பற்றி அதனையே அறிந்து பேரின்பம் உறுதலாகிய அரன் கழலில் தலைப்படும் என்க.

செய்யாமைச் செய்த உதவியாகிய திருவருள் நன்றியை மறவாமையே அன்பு. அதனைக் கடைப்பிடித்து ஒழுகுதலே 'அரன் கழல் செலல்.'

## இலக்கணம்

உவமை - கண். பொருள் - ஆவி. கண்ணுக்கு அடை 'காணும்' என்பது. அடையோடு கூடிய உவமை 'காணும் கண்' அவ் அடை பொருளிற் செல்லுங்கால், 'காணும் உளம்' என்றாகும்.

பொருள் வினை கண்டு - இவ்வினை உவமையோடு கூடுங்கால், கண் காட்டிக் காணும் என்றாகும். காண என்பது கண் காண எனவும், ஆவி காண எனவும ஈரிடத்தும் கூட்டப்பெற்றது.

"காட்டிக் காண்டல்" எனற்பாலது "கண்டு காட்டலின்" என்றுள்ளது. அதனால் மாறிவைத்துரைக்கப்பட்டது என்றனர். இது "வேர்த்து வெகுளார் விழுமியோர்"* என்பது பொருள்கொள்ளுங்கால் "வெகுண்டு வேரார் விழுமியோர்" என வருவதை ஒக்கும். மேலும், இதுவே பொருண்மை என்பதனை வரும் திருப்பாட்டான் உணர்க:

காயமொழிந் தாற்சுத்த னாகி ஆன்மாக்
காட்டக்கண் டிடுந்தன்மை உடைய கண்ணுக்கு
ஏயும்உயிர் காட்டிக்கண் டிடுமா போல
ஈசன்உயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயும்அறி வுடையனாய் அனபு செய்ய
அந்நிலைமை இந்நிலையின் அடைந்தமுறை யாலே
மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீழ் இருப்பன்
மாறாத சிவானுபவம் மருவிக் கொண்டே." —சித்தியார். கக-க.

'அயரா அன்பு' அயராமை எதனை என ஆயுமிடத்து ஆண்டவன் புரிந்தருளும் மெய்ப்புணர்ப்பாகிய அதனை எனவரும். இது செயப்படு பொருள். மெய்ப்புணர்ப்பென்பது புனிதாத்துவிதம். அயராமையான் ஆகிய அன்பு என்பது அயரா அன்பு என்பதன்பொருள். எடுத்துக் காட்டு "ஆறு சென்றவியர்" ஆறு - வழி. வழிச்சென்றதனால் ஏற்பட்ட வியர்வை என்றாகும். அதனை என்பதனை 'இத்தை, ஆயும் அறிவுடையனாய் அன்பு செய்ய' என ஓதியருளியதாலும் காண்க.

'உள்ளத்தை என்பது உருபு மயக்கம்' உள்ளத்தை என்பது இரண்டாம் வேற்றுமை உருபு. இது பொருள் கொள்ளுங்கால் உள்ளத்துக்கு எனவரும். அப்பொழுது நான்காம் வேற்றுமை ஆகும். அதனால் உருபு மயக்கம் என்ப.

## ஒருபொருள்

அயராமை யாலன்பாம் அன்பாற் செலவாம், மயலகற்றும் செம்பொருள் மாட்டென்பது அயராமை அன்புசெலவு என்னும் மூன்றும்

* "நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்—ஓர்த்ததனை
உள்ளத்தான் உள்ளி உரைத்துராய் ஊர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாம் கீழ்."
—நாலடியார் எ. சினமின்மை - ௬.

ஆவியின் அறிவு அன்பு ஆற்றல்கள் மூன்றும் முழுமுதற்சிவமாம் ஒரு பொருளினிடத்து ஒருங்கு நிகழ்வனவாம். இடமும் பொருளும் வேறின்மையான் நிகழ்வும் வெவ்வேறின்றி ஒன்றேயாம் என்க. அதனால் "அயரா அன்பின் அரன் கழல் செலுமே" என ஓதியருளினர்.

அறிவு மறவாமை அன்புபற்றல் ஆற்றல், செறிந்துறைவு செம்பொருட்பால் என்பது வேறாய் ஒன்றாய் உடனாய் என்னும் மெய்ப்புணர்ப்புப் பேரின்பமாகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாத என்னை மையல் செய்திம் மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படும் உடம்புவிட்டு
இறக்குமாறு காட்டினாய்க்கு இழுக்குகின்ற தென்னையே."

—உ. கூஅ. ௫.

"நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுக் தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே."

—அ. அதிசயப் - அ.

நொடியன - புதுமையான, கேட்டறியாதன. நுகம்இன்றி விளாக்கைத்தல் - நுகத்தடி பூட்டாமல் உழுதல். அஃதாவது ஆண்டவன் கருவியின்றிக் கருத்தால் (திருவுளத்தால்) செய்தருள்வன் என்பதாம். கண்ணுதலோன் யாதும் கருவியின்றிக் கண்ணுதலால், பண்ணுவன் ஐந்தொழிலும் அன்றே! அதனைப் பிறிதுமொழிதலாக ஓதியருளினர். கண்ணுதலால் - கருதுதலால்.

## கலந்துதவல்

ஆவி ஒருபொருளை அறிதற்கு ஆவியின் அறிவு கண்ஒளி என்னும் இரண்டும் உடங்கியைந்து தொழிற்படுதல் வேண்டும். உடங்கியைதல் பிரிப்பின்றிக் கலந்திருத்தல். அங்ஙனம் கண்டகாட்சியைக் கண்ஒளி கண்டதென்றும் ஆவியின் அறிவு கண்டதென்றும் பிரித்தறிய ஒண்ணாது. அதுபோல் ஒருபொருளைப் புலன்கொள்ளுங்கால் முதல்வனை இன்றியமையாத ஆவி அம்முதல்வனது அறிவு ஆற்றல் ஆவியின் அறிவுஆற்றல் எனத் தானெனெ வேறின்றி உடனாய் விரவி நிற்ப முதல்வனும் ஆவியின் கண் அவ்வாறு விரவிநின்று அறிவித்த பொருளை ஆவி அறிந்ததென்றும் ஆவியை நிலைக்களனாகக் கொண்டு இயைந்தியக்கும் முதல்வன் தானறிந்தான் என்றும் பிரித்தறியப்படுமாறில்லை. இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாமல் புணர்ப்பாய் ஒருங்கே புலன்கொள்ளும். புலன்கொள்ளல் விடயித்தல்.

மிதிவண்டி (Cycle) யிற் செல்லும் க்திநடையைச் சற்று உன்னித்துப் பார்ப்பின் அவ்வண்டியைச் செலுத்துவோன் அதனை நிலைக்களமாகக் கொண்டு தன் காலால் வண்டி உருளுமாறு உருள்கோத்த அச்சினை மிதிக்கின்றனன். மிதிக்கவே உருள் உருள்கின்றது. வண்டி செல்கின்றது. இச்செலவின்கண் வண்டி சென்றதா? ஆள் சென்றதா? என்று பிரித்தறிய முடியாது. என்னை? வண்டியும் ஆளும் பிரிக்கஒண்ணாத நிலையில் உடங்கியைந்து தொழிற்படுகின்றன. இதுபோல் ஆவியும் ஆண்டானும்

உடங்கியைந்து தொழிற்படுகின்றனர். எழுதுகோலும் கையும் உடங்கியைந்து தொழிற்படுவதும் காண்க. கையைப்பிடித்து எழுதிக்கொடுக்கும் கணக்காயரும் மாணாக்கரும் உடங்கியைந்து தொழிற்படுவதும், ஓதுவிப்பாரும் ஓதுவாரும் உடங்கியைந்து தொழிற்படுதலும் ஒப்பாவன.

**மீதூர்தல்.**

இவ்வுதவி ஆவிக்கு ஆண்டான் பிறப்பிலும் சிறப்பிலும் ஒருங்கு செய்தருளுகின்றனன் பிறப்பு - கட்டு. சிறப்பு - வீடுபேறு. இங்ஙனம் உதவி புரிந்து அருளும் முதல்வன் பேரளியை ஆவிகள் எங்ஙனம் மறக்கும்? இதுவே செய்ந்நன்றி மறவாமை ஆகும். ஆவிகளுக்கு ஆண்டான்பால் இதனால் அன்பாகிய வேட்கைமீதூர்தல் இயல்பெனக. அவ் அன்பே தானாக விளங்கித்தோன்றும் முதல்வன் திரு அடியின்பினை ஆவி நுகரும். இந்நிலையே அன்பும் சிவமும் ஒன்றென்னும் நிலை.

இவ்வுண்மை உணர்த்தும் திருப்பாட்டுகள் வருமாறு:

"அறிவொளிபோற் பிரிவரும் அத்துவிதம்"—கOக-ஆம் பக்கம் காண்க.

"அங்கியும் ஒன்றில் தங்கிநின் றல்லது
தன்தொழில் நடத்தாது என்றறி இனிநீ"
—"சேர்ந்தமும்மை" - சிவசமய - சங்கற்ப நிராகரணம்.

**உடன்நின்றறிதல்**

முதல்வன் ஆவிக்கு உடன்நின்று அறிவித்தல் மட்டும் போதாது அறிதலும் வேண்டும். கற்பிப்பார் கற்பார்க்கு ஓதுவித்தல்மட்டும் போதாது ஓதுதலும் வேண்டும் அல்லவா? இவ் ஒப்புப்போன்றதே முதல்வன் அறிதலும்.

இவ்உண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

" மறைகளும் அமரர் கூட்டமும்
மாட்டாது அயன்திரு மாலொடு மயங்கி
முறைமுறை முறையிட் டோர்வரி யாயை
மூர்க்கனேன் மொழிந்தபுன் மொழிகள்
அறைகழல் அரன்சீர் அறிவிலா வெறுமைச்
சிறுமையிற் பொறுக்கும் அம்பலத்துள்
நிறைதரு கருணை நிலயமே உன்னைத்
தொண்டனேன் நினையுமா நினையே "
—திருமாளிகைத்தேவா, திருவிசைப்பா - க. கோயில் கக.

" மடங்கலாய்க் கனகன் மார்புகீண் டானுக்
கருள்புரி வள்ளலே மருளார்
இடங்கொள்முப் புரம்வெந் தவியவை
திகத்தேர் ஏறிய ஏறுசே வகனே
அடங்கவல் அரக்கன் அருள்திரு வரைக்கீழ்
அடர்த்தபொன் அம்பலத் தரசே
விடங்கொள் கண்டத்தெம் விடங்கனே உன்னைத்
தொண்டனேன் விரும்புமா விரும்பே." ,, கO.

"தக்கன்நற் றலையும் எச்சன்வன் தலையும்
தாமரை நான்முகன் தலையும்
ஒக்கவிண் டுருள ஒண்திருப் புருவம்
நெறித்தரு ளியவுருத் திரனே
அக்கணி புலித்தோ லாடைமே லாட
ஆடப்பொன் அம்பலத்தாடும்
சொக்கனே எவர்க்கும் தொடர்வரி யாயைத்
தொண்டனேன் தொடருமா தொடரே." ,, சு.

"நீறணி பவழக் குன்றமே நின்ற
நெற்றிக்கண் உடையதோர் நெருப்பே
வேறணி புவன போகமே யோக
வெள்ளமே மேருவில் வீரா
ஆறணி சடைஎம் அற்புதக் கூத்தா
அம்பொன்செய அம்பலத் தரசே
ஏறணி கொடிஎம் ஈசனே உன்னைத்
தொண்டனேன் நுகருமா நுகரே." —,, எ.

உள்ளம் - நினைதல், உரைசொல் - விரும்பல், எள்ளில்செய்கை - தொடர்தலும், நுகர்தலுமாக. இந் நான்கு திருப்பாட்டுக்களையும் ஒருபுடையாக அமைத்துக் கொள்ளலாம்.

"அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய அறிகின்றான் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும தானே அவன்." —கக. அம்மை. அற்பு—உ0.

ஒன்றாய் வேறாய் உடனாய் ஆவியோடு ஆண்டான் நிற்கும் மெய்ப் புணர்ப்பு நிலை மூன றும் முறையே "அறிவான், அறிவிப்பான், அறிகின்றான்" என்னும திருமொழியால் ஓதியருளினர்.

## புணர்ப்பு

"அவனே தானே ஆகிய அந்நெறி" என்பது புணர்ப்பு. அப்புணர்ப்பு அத்துவிதம் எனவும் கூறப்படும். இஃது உயிரோடு உடலோடு உணர்வோடு என மூன்றுவகைப்படும். உயிர உடலோடுள்ள புணர்ப்பு இரண்டாம் நூற்பாவின்கணணும், உணர்வோடு உள்ள புணாப்பு ஐந்தாம்நூற்பாவின் கண்ணும், ஓதியருளப்பெற்றமை ஓர்ந்துணர்க. மேலும் ஒன்றவிரண் டத்துவிதம் ஒன்றிரண்டு தாதன்மியம், நின்றபுணர்ப் பாம்தணப்பு நேர் என்பதை ஓர்ந்துணரின் பண்பும் பண்பியுமாய் விளங்கும் ஒரு பொருள் பிரிப்பின்றி இருநிலை எய்துவது தாதான்மியம். இதனைத் தணப்பு என்ப. இதுபோல் இனப்பொருள் இரண்டு பிரிப்பின்றி ஒற்றுமைப்பட்டு ஒருநிலை எய்துவது அத்துவிதம். இதனைப் புணர்ப்பு என்ப.

## இருவகை

ஒருபொருளே பரப்பும் பரப்பியுமாய் வேற்றுமைப்பட்டு நிற்கும் தாதான்மியம் ஒன்று. பரப்பும் பரப்பியுமாய் உள்ள இருபொருள் ஒரு தன்மையான் ஒற்றுமைப்பட்டு நிற்கும் தாதான்மியம் மற்றொன்று. இவ் ஒற்றுமைத் தாதான்மியமே அத்துவிதம் எனப்படும். பரப்பு - வியாபகம். பரப்பி - வியாப்பியம்.

## ஏன்றுகொள்ளுதல்

காட்டிக்காணும் முதல்வன் மெய்யடியார்களின் ஊழை ஏன்றுகொள்வன் என்பது, அம்மெய்யுணர்வுச் செல்வர் ஆண்டவன் திருவடிஇன்பினையே நுகர்ந்துகொண்டிருப்பதால் அவர்கள் ஊழால் தாக்குறார். அத்தாக்கினை இறைவனே ஏன்றுகொள்வன். ஏன்றுகொள்வதென்பது நீற்றுப்பூச்சும் நேரும் குப்பாயமும் குளிரும் பனியும் கொள்ள ஒட்டாத் தன்மையை ஒக்கும். மேலும் விருந்தினாதம் வரவு போக்கு முதலியவற்றின் செலவு அனைத்தும் விருந்தோம்புவாரே ஏன்றுகொள்ளுதலும் ஒக்கும்.

## புணர்ப்பின் இயல்பு

பொருள்களின் கலப்புத்தொடர்பு நான்கு வகைப்படும். அவை, கலப்பு, நீக்கமின்றியிருத்தல், சேர்க்கை, இயல்பு என்ப. இவற்றை ஐக்கியம், சமவாயம், சையோகம், சொரூபம் எனவும் கூறுப. ஆற்றுநீரும் கடல்நீரும் கலத்தல் கலப்பு. கண்ணும் ஒளியும் போலிருத்தல் நீக்கமின்றியிருத்தல். விரலும்விரலும் போன்ற இணைப்பு சேர்க்கை. தீயின் வண்ணம் செம்மை; ஞாயிற்றின் வண்ணம் செம்மை. இவை இயல்பு.

இவை அனைத்தும் ஆவியும் ஆண்டானும் கலந்துநிற்கும் மெய்ப்புணர்ப்பிற்கு ஒவ்வா. நீரும்நீரும் கூடுதல் இருபொருட்கண் அன்று; ஒருபொருட்கணணதே. இடவேறுபாடு மட்டுமேயுள்ளது. இந்நிலை கொள்ளின் பெறுவானும பேறுமின்றாம். கண்ணும் ஒளியும் போலெனின் ஆவிமுதல்வனின் பண்பன்று. கணணின் பண்பு ஒளி. விரலும்விரலும்போல் எனின் இவை வரையறைப்பொருள். ஆவி வரையிறந்த பரப்புப்பொருள். ஆவியும் அறிவுடையது ஆண்டானும அறிவுடையன். தீயும் ஞாயிறும்வண்ணத்தால் செம்மையாக இருப்பது போன்றெனின், அவ்விரண்டும் கலப்பதின்று. ஆவியும் ஆண்டானும் ஒன்றாகக் கலந்து ஆவி ஆண்டான் வண்ணமாய்த் திருவடியின்பினை நுகரும். ஆதலால் ஆவியும ஆண்டானும் புணரும் புணர்ப்பு புணர்ப்பேயாம்.

## காண்டல்

இந்நூற்பாவின்கண் காணும் உதவி கட்டுரைத்தலே முதன்மை காட்டும் உதவி ஐந்தாம் நூற்பாவின்கண் கட்டுரைத்தருளினர். அதுவே மறைப்பாற்றல் செய்தருளும் உதவிஎன்க. இப்பதினொராம் நூற்பாவின் கண் காட்டும் உதவியும் உடன்ஒதியருளியது காணும் உதவி காட்டும் உதவியின் பின்னர்த்தாய் நிகழும் என்பது உணர்த்துதற்கேயாம். இது பாட்டும் உணவும் பயிற்றலோடேட்டற்கண், கூட்டினர் காண்பரெனக் கூறுதலை ஒக்கும். பாட்டுப்பாடியவர் அப்பாட்டினைப் புதிதாகக் காணல் வேண்டுவதின்று. ஆனல் பிறர்க்கு அப்பாட்டினைப் போதிக்குங்கால் அப்பாடியவரும் காணல்வேண்டும் அல்லவா? உணவினை ஆக்கியவர் புதிதாக அவ்வுணவினைக் காணல்வேண்டுவதின்று. ஆனல் விருந்துமுதலாயினர்க்கு ஊட்டுங்கால் அவரும் அவ்வுணவினைக் காணல்வேண்டும் அல்லவா? இவைபோன்றதே ஆண்டவன் ஆவிக்குக் காட்டித் தன்னைக் காண்பதுவுமாம். மேலும் உடலுறுப்பினை ஆவி புதிதாகக் காணல் வேண்டுமென்பதில்லை. ஆனல் பிறர்க்குக் காட்டுங்கால் தான் காணல் வேண்டும் அல்லவா? இதுவும், பிறர்க்குச் சொல்லுஙகால் சொல்லுவார் பாட்டை நினைவுறுதல்வேண்டுமல்லவா? இதுவும் ஒப்பாகும். கடவுள் காட்டும் உதவியைக் குறிக்கும் திருப்பாட்டுக்கள் வருமாறு:

"ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
தானம் காட்டுவர் தம்மடைந் தார்க்கெலாம்
ஞானம் காட்டித்தன் றாளடைந் தார்கட்கு
வானம் காட்டுவர் போல்வன்னி யூரரே." —ரு. ௨௬-௩.

"நில்லாத நீர்சடைமேல் நிற்பித்தானை
நினையாஎன் னெஞ்சை நினைவித் தானை
கல்லா தனவெல்லாம் கற்பித் தானைக்
காணா தனவெல்லாம் காட்டி னானைச்
சொல்லா தனவெல்லாம் சொல்லி என்னைத்
தொடர்ந்திங் கடியேனை ஆளாக் கொண்டு
பொல்லாஎன் நோய்தீர்த்த புனிதன் றன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்தி கண்டேன் நானே." —சு. ௪௩-௧.

"ஆட்டுவித்தால்.................காலே."—௨௭௩. ஆம்பக்கம் காண்க.

**கூறு**

௧. **காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காணஉள்ளத்தைக் காட்டிக் காண்டல்.**

௨. **அதனை அயரா அன்பின் அரன்கழல் செலுமே.**

---

## முதல் அதிகரணம்

**ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணருமென்றது.**

எ-து. மே-ள். எ-னின். முதல்வன் உயிர்க்குக் காட்டும் உபகாரமாத்திரையே உள்ளதென்னும் வாதிகளை நோக்கி அத்துவித நிலை உணர்த்துதற்கு எடுத்துக்கொண்ட சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) முதல்வனும் உயிர்களானுணரப்படும் விடயத்தை உடனின்றுணருவன் (எ-று).

உம்மை உயிர்களுணர்தலேயன்றியென இறந்ததுதழீஇயிற்று.

இஃதறியாதார் ஈண்டுணருமென்றது அறிவித்தற்கேதுவாயறியுமென்றுரைப்பாருமுளர். அவ்வாறுரைப்பிற் சித்தசாதனமாமாகலானும், ஈண்டைக்கியைபின்மையானும் அதுபோலியென்றொழிக.

அவையே தானேயாய் எனவும், தாந்தம் உணர்வின் தமிய ருள் எனவும் மேற்பொதுவகையாற் கூறிப்போந்த அத்துவி தத்தை ஈண்டுக் காணும் உபகாரத்தின் வைத்துணர்த்தி இனிது விளக்கியவாறு.

**இவ்வான்மாக்கள் அவனையின்றியமைந்து ஒன்றையும் விடயியாவாக லான்.**

எ - து. ஏது எ - னின். கண் சடமாகலானும் காண்டற் பயன் உயிர்க்கேயாகலானும் கண் காண்புழி உயிரும் உட னின்று காண்டல் பெறப்படும். கண்போல் உயிர் சடமன்மையா னும் உணர்தற்பயன் உயிர்க்கேயாகலானும் அதனையெடுத்துக் காட்டி அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றல் அமையாதென்பாரைநோக்கி மேற்கோளைச்சாதித்தனுதலிற்று.

(இ - ள்.) விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண் ணொளியோடு கூட உருவத்தினுங் கலந்தாலன்றி அஃதவ்வுரு வத்தைக் காண்டல் இன்றாயவாறுபோல, அறிவிக்க அறியும் இயல்பினவாய உயிர்களும் முதல்வனதுணர்வு தம்மோடு விரவி நின்று தம்மோடு கூடச்சென்று விடயத்தினும் விரவிநின்றால் அறிவு விளங்கி அதனை அறியும் இயல்பின அன்றித் தனித் தமையவுமாட்டா தனித்தொன்றனைவிடயிக்கவுமாட்டா ஆக லான் அறிவு விளங்குதன் மாத்திரைக்கேயன்றி விடயத்தைப் பற்றுதற்கண்ணும் முதல்வன் உடனின்றறிதல் ஒருதலையான் வேண்டப்படுதலான் ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணருமென மேற்கொண்டது (எ - று).

அவனையின்றி அமையாமையிற் காட்டும் உபகாரம் விளங்கி னாற்போல அவனை இன்றி ஒன்றையும் விடயியாமையிற் காணும் உபகாரமும் இனிது விளங்கும் என்பார் அவனை இன்றியமைந்து ஒன்றையும் விடயியா ஆகலான் என்றார்.

அமைந்து விடயியாவென்றதனைக் * "கந்தித்துச்சுழலும்" என்றாற்போலக்கொள்க.

உம்மை முற்றும்மை.

விடயியா என்றது பெயரடியிற் பிறந்த எதிர்மறைவினை. †"எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை யறிந் தியற்றி யிடாவுயிர்க ளீசன் றானுஞ்—செவ்விதினி னுளம் புகுந்து செய்தியெலாம் உணர்ந்து சேட்டிப்பித்து எங்குமாய்ச்

* சிவஞானசித்தி, சுபக்கம், பத்தாஞ்சூத்திரம் ௬. அங்கித்.

† சிவஞானசித்தி, சுபக்கம், பதினொராஞ்சூத்திரம், எ. (ருஉ0)

செறிந்து நிற்ப—னிவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்றுவிவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்—அவ்வுயிர்போனின்றிடுவ ஞத லாஞ மரனடியை யகன்று நிற்ப தெங்கே யாமே" என வழிநூலாசிரியர் இதனை விரித்தோதியவாறுமுணர்க. எவ்விடத்துமென்றது பெத்த முத்தி இரண்டினுமென்பதாம். இதனுள், இறையடியை யின்றியமைந் தொன்மையறிந் தியற்றிடாவுயிர்கள் எனவும், "ஈசனுனெங்குமாய்ச் செறிந்து நிற்பன்" எனவுங் கூறியது விடயத்திலகப்படு நிகழ்ச்சிக்கெனவும் 'இவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்று' எனவும் 'அவ்வுயிர்போனின்றிடுவன்" எனவுங் கூறியது உயிரின்கட்படு நிகழ்ச்சிக்கெனவுங் கொள்க. அவ்வாறு கொள்ளாக்கால் இருகாற்கூறுதல் புனருத்தியாய் முடியுமென்றொழிக. இனி விளக்கொளி கலத்தல் ஈரிடத்தும் வேண்டப்படுமென்பதூஉம், "விளக்கொளி கலந்தவற்றை" எ - ம். * "விளக்கின்சோதி கலந்திடும்" எ - ம். புடைநூலாசிரியர் வகுத்தோதியவாற்றானுணர்க. அஃதங்ஙனமாக, பரமுத்தியில் உயிர்க்கு விடயமாவது ஒன்றின்மையின் வழிநூலாசிரியர் எவ்விடத்துமென்றது அமையுமாறென்னை யெனின்,—அறியாது கூறினுய்; †"சுத்தவநு போகததைத் துய்த்தலனு" எ - ம். ‡ "ஒன்றிநின்றுணரு முண்மை." எ-ம். பிறுண்டும் இவ்வாறே ஓதுபவாகலின், பரமுத்தியில் உயிர் சிவானந்தாநுபூதியை விடயித்தலுண்டெனவும், அது முதல்வனை இன்றியாகாமையின் அவனும் ஆண்டவ்வநுபூதியை உடனின்றறிவனெனவும் உணர்க.

§ ஐந்தையும் ஒக்க உணராது அவற்றுணர்வது
ஐந்தும்போல் நின்றுணரும் ஆகலான்—ஐந்தினையும்
ஒன்ருென்றுப் பார்த்துணர்வது உள்ளமே எவ்வுலகும்
ஒன்ருென்றுப் பார்க்கும் உணர்ந்து.

எ - து. உ - ம். எ - னின். அவனும் அவற்றது விடயத்தை உடனின்றுணருமாயின் அவற்ருேடு அவனிடையறிதற்கட்படும் வேற்றுமை இல்லைபோலுமென்பாரை நோக்கி வேற்றுமையுங் காட்டி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) உள்ளம் - ஆன்மாவாவது, அவற்று ஐந்தும் போல் நின்று உணர்வது உணரும் ஆகலான் - சுவை ஒளி

* சிவப்பிரகாசம், உண்மை அ. கண்ணொளி. (௫௩0)
† உண்மைவிளக்கம், ௫௧. முத்திதனில். (௩அ௬)
‡ சிவப்பிரகாசம், உண்மை. ௩௭. ஒன்றிரண்டாகி. (௫௩௧)
§ "சிவன்சீவ" சித்தியார். ௧௧. ௨. ௧.

ஓசை நாற்றம் என்னும் ஐந்தினும் ஐம்பொறிபோல் அதுஅதுவாய்ச்செறிந்து நின்று உணர்தற்பாலதனை உணருந் தன்மைத்தாகலான், ஐந்தையும் ஒக்க உணராது ஐந்தினையும் ஒன்று ஒன்று ஆப் பார்த்து உணர்வது - அவ்வைம்புலன்களை யும் ஒருங்கே யுணரமாட்டாது அவ்வைந்தினைவும் ஓரோவொன் ருய் அறிந்து அநுபவிப்பதாம், ஒன்று எவ்வுலகும் ஒன்ருஉணர்ந்து பார்க்கும்—(அதுபோலச் சார்ந்ததன் வண்ணமாய்ப் பலதிறப்படுதலின்றி) என்றுமொரு பெற்றித்தாகிய சிவம் (எல்லாவுயிர்களுடைய) எல்லா விடயங்களையும் (பொதுவகை யான்) ஒருங்கேயுணர்ந்து (அவ்வுயிர்களுடனின்று சிறப்புவகை யானும் அறியும் (எ - று).

இது சொற்பொருட்பின்வரும் நிலை.

சிவத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

ஒன்றென்பது குறிப்பேதுவாய்நின்ற பெயர்.

*ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்—ஏகமாய்
உள்ளத்தின் கண்ணானன் உள்குவா உள்கிற்றை
உள்ளத்தால் காணுனே உற்று.

எ - து. உ-ம். எ-னின். ஆன்மா ஐம்பொறியை விடயிப் புழிப்போல முதல்வனை விடயிப்புழியும் முதல்வன் அவ்வாறுட னின்று தன்னைத் தான் விடயிப்பனெனின் ஆன்மாச்சிரயம் என்னுங் குற்றமாம் ஆகலின் அது பெறப்படாமையான் அவ னும் அவற்றது விடயத்தை உணரும் என்றல் யாண்டுஞ் செல் லாது என்பாரை நோக்கி ஆண்டும் இவ்வாறுணர்தலுண்டென் பது உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) ஒன்று ஏகம் ஆய் நின்று இணை அடிகள் உண ரவே தான் போகம் ஆய் விளைந்த பொற்பினன் - (முதல்வனைச் சார்ந்தவழி அவ்வண்ணமேயாய்) ஒருபெற்றிப்பட்ட ஆன்மா அவனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவனதடியிணைகளை யுண ரவே தான் (அவ்வான்மாவுக்குப்) பரபோகமாய் மேன்மேல்விளை கின்ற பொலிவினையுடையன் ஆதலானும், உள்ளத்தின்கண் ஏகம்ஆய் ஆனன்—(அங்ஙனம் உணருங்கால்) அவ்வான்ம ஞானத்தினிடத்து ஏகமாய் விட்டு நீங்காதவனுகலானும், உள்கு வார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணுனே—கருதுவார்

* 'எவ்விடத்தும்' சித்தியார். ௧௧. ௧-எ. (இ௩௦)

கருதிய பொருளாகிய தன்னை அவரறிவோடு கூடி நின்றறியான் கொல்லோ (எ - று).

போகமாய்த் தான் விளைந்த பொற்பினன், ஏகம் ஆய்உள் ளத்தின் கண்ணன் என்னும் பெயரடைகள் ஏதுப்பொருள் வாய் நின்றன ; யாண்டுஞ்சேறல் உணர்த்துதற்கு.

உள்குவாருள்கிற்றையென்றார். *"வேண்டுவார் வேண் டியதேயீவான்" என்றாற்போல.

ஆனுருபு உடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது. ஓகாரம் எதிர்மறை.

ஆன்மாக்கள் முதல்வனை விடயிக்குங்கால் அவற்றது விடயமாகிய அவன் தன்னாலும் உடனின்றுணரப்படுவன், உள்குவாருள்கிய பொருளாகலின்.

மேலைவெண்பாவிற் கூறிப்போந்த ஐம்புலன்போல என்று அனுமானவளவை காட்டுவார் உள்குவாருள்கிற்றை உள்ளத் தான் உற்றுக்காணானோவென்றும், உள்குவாருள்கிற்றுதல் ஈரிடத்தும் ஒக்குமென்பார் ஏகம்ஆய்நின்றே இணையடிகள் ஒன்றுணரப் போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் என விடயித்தற்கண் படுமியல்பும் ஏகமாயுள்ளத்தின்கண்ணன் என அறிவு விளங்குதற்கண்படும் இயல்பும் எடுத்தோதினார்.

பரபோகமாய் என்னாது போகமாய் என்றதும் ஒப்புமை இணங்குதற் பொருட்டு. சேற்றுநிலமிதித்துச் சென்றானுக்கு வன்னிலம்போலப் பரபோகவிளைவு செயற்கைப்பொருளாய் நிற்றலின், ஆக்கமுங் காரணமும் அடுத்து வந்தது. இணையடிகள் உணருந்தோறும் போகம் மேன்மேல் விளைதல் †"புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்—மணந் தாழ்புரிகுழ லாளல்குல்போல வளர்கின்றதே.'; எனவும் அப் பொருண்மேல் வைத்தோதிய திருவாக்கானும் அறிக.

தெளிவுபற்றி விளைந்தவென இறந்தகாலத்தாற் கூறினார்.

கண் கண்ணாடியினின்றுந் தன்னை விடயித்தாற்போல முதல்வன் ஆன்மாவுடனின்று தன்னை விடயித்தல் பொருத்த முடைமையின், ஆன்மாச்சிரயமென்னுங் குற்றம் இன்னோர் அன்னவற்றிற்கு எய்தாதென்றுணர்க. கண்ணாடிக்குள்ளாகத்

* திருநாவுக்கரசுநாயனார், திருமறைக்காட்டுத் திருத்தாண்டகம், தூண்டுசுடர்.

† திருச்சிற்றம்பலக்கோவையார். க. உணர்ந்தார்க். (௫௩0)

தோன்றுவதுபோலும் எதிர்விம்பமாவது விம்பமேயன்றி வேறன்றென்பது சிவாகமநூல் துணிபென்க.

இதனுள் அவனும் அவற்றது விடயத்தை உணரும் என உணர்வேபற்றி ஓதினாரேனும் *"எத்திற ஞானமுள்ள தத்திறம் இச்சை செய்தி." என்பவாகலின், அவற்றிற்கும் இஃதொக்கும்; ஒக்கவே, பெத்தமுத்தி யிரண்டினும் ஆன்மா விடயிக்கப்படும் விடயங்களை முதலவன் உடனின்று விடயிப்பன் என்பதூஉம் பெத்தத்தின் அவனிவனாய் நின்று விடயித்தலின் விடயங்கள் அவனுக்கன்றி இவனுக்காயின, முத்தியின் இவனவனாய் நின்று விடயித்தலின் அவனொழிந்த விடயங்களெல்லாம் இவனுக்கின்றி அவனுக்காயின வென்பதூஉம் இனிது விளங்கும். இம்முறைமை நோக்கியன்றே உலகத்துள் ஒன்றனை ஈவாரும் ஏற்பாருஞ் சிவார்ப்பணமெனக் கருதாதவழிக் குற்றமென்று ஆகமங்களோதியதூஉம். †"யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே—மாதொரு பாகனார்தாம் வருவர்" என்றதூஉம், அவ்வுண்மையறிந்தவழி ‡"எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லைவினை—முற்செய்வினை யுந்தருவான் முன்." எ-ம். §"பெற்றசிற் றின்பமே பேரின்பமாய்." எ-ம். ¶"உடம்புடைய யோகிகடா முற்றசிற்றினப—மடங்கத்தம் பேரின்பத் தாக்கி." எ-ம். $"காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்—பேணுமடியார்." எ-ம். "எல்லாஞ் சிவமாயிருந்ததே." எ-ம். இவ்வாறோதியதூஉ மென்க.

## விளக்கம்

### புணர்ப்புச்சிறப்பு

புணர்ப்புத்தன்மை இரண்டாம் நூற்பாவின்கண் உடலுயிர் உலகுகளோடு விரவிநின்று உலகுடல்களைப் படைத்தலும், ஐந்தாம்நூற்பாவின்கண் ஆவிக்கு ஆண்டான் விரவிநின்று உலகினைக் காட்டும் உதவி புரிதலும் விளக்கியருளினர். இவை புணர்ப்பின் பொதுத்தன்மையாகும். இப்பதினோராம் நூற்பாவின்கண் ஆவிக்குத் தன்னைக்காட்டும் உதவியோடு தானகாணும் உதவியும் புரிந்தருள்கின்றனன். இது புணர்ப்பின் சிறப்புத்தன்மை. முதல்வன் தன்னைக் காண்டலே சிறப்புத்தன்மை என்பது ஆவிகள் பேரின்பம் உறுதலாற் காணலாம். காண்டற்கிடம் காட்டல் தீண்டற்கிடம் காண்டல், ஈண்டுத்தேன் ஆண்டுப்பேரின்பு என்பதைத் தெளித்து உணரில் விளங்கும்.

---

* சிவஞானசித்தி, முதற்சூத்திரம். சுஉ. சத்திதன்வடி.
† ,, இரண்டாஞ் சூத்திரம். உடு.
‡ சஅடு-ம் பக்கம். நாமல்ல. § திருவுந்தியார். ௩௩.
¶ திருக்களிற்றுப்படியார். எசு. $ திருவாசகம்.

## தேன்

சுவைமிக்க கொம்புத்தேனை ஒருவர் காணுமாறு காட்டவேண்டுவதும் அத்தேனே. கண்டவர் தீண்டிச் சுவைத்குமாறு இடங்கொடுப்பதும் அத்தேனே. தேன் தன்னைக் காட்டுங்கால் அதற்கு ஊற்றுணர்ச்சியின்று; ஆனல், ஒருவரின் நாவின்கண் அத்தேன் படுங்கால் நாவுக்குச்சுவையுணர்ச்சியும் தேனுக்கு ஊற்றுணர்ச்சியும் உண்டாம். அப்பொழுது நாவு சுவைக்க ஆவி இன்புறுகின்றது. தேன் உணர்ச்சியில் பொருள். இல்பொருள் ஒப்பாகக்கொண்டு அது நாவிற்படுதலையே ஊற்றுணர்ச்சிஎன உளம் கொள்ளுக. மேலும் திருவள்ளுவநாயனர் அருளிய,

"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு." —திருக்குறள், சுகூ.

என்றூர் தம்மெய்யை மக்கள் தீண்ட நல்குவது காட்டுதலாகவும் தாம் மக்கள் மெய்யைத் தீண்டுவது காண்பதாகவும் கொள்க. ஒருவரை ஒருவர் தீண்டுங்கால் ஊற்றுணர்ச்சி இருவர்க்கும் ஒப்பஉண்டெனினும் தீண்டப்பட்டாரைவிடத் தீண்டினூர்க்கே கழிபேரின்பமாம். ஆனல் திருவடிசூட்டலில் காதலர் முத்தம்போல் தீண்டப்படுதலாகிய சூட்டப் பட்டார்க்கே மாறிலா இன்பமாம்; சூட்டினூர்க்கு ஈத்துவக்கும் இன்பமாம். மேலும் தேறிய மாணவர்க்கு நற்சான்றிதழ் நல்குவார் தம்கடமையைச் செய்கின்றனர். அவ் இதழினைப்பெற்ற மாணவர் கழிபேரின்பு எய்துகின்றனர். கொடைக்குரி மரபினேர் மகட்கொடுக்குங்கால் கடமையைச செய்கின்றனர். கொளற்குரி மரபிற்கிழவன் அக்கிழத்தியைக் கொள்ளுங்கால் கழிபேரின்பு எய்துகின்றனன். இவையும் இவை போன்ற பிறவும் மேலதற்கு ஒப்பாகும். திருவடி தீண்டப்பெற்றூர்க்கே மாறில் இன்பமாம் என்பது வரும் திருப்பாட்டான் உணர்க:

"நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானேர்
இனந்துருவி மணிமகுடத்து ஏறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்
நல்லூர் எம் பெருமானூர் நல்லவாறே." —சு. கச-க.

நைதல் - தன்வயம் இழத்தல்.

காட்டிக்காண்பன் என்பதனை ஒருவெண்பாவால் உணர்த்துதும்.

என்னை இருள்மலத்தில் என்றும் இருத்தினையேல்
நின்னை அறியாப நெடுந்தகையே—நின்னை அறி
வேட்கையா லேனும் விடுவிப்பாய் 'காணும்கண்'
பூட்கையால் உண்மை புரி.

## காணப்படுவது

ஆவியோடு உடனின்று ஆண்டான் காணுங்கால் ஆவியின்கட்டுநிலையில் உலகமும் வீட்டுநிலையில் தானும் ஆகும். ஆவிக்குக் கட்டுநிலையில் நிலையிலா உலகஇன்பமும், வீட்டுநிலையில் நிலைபேருன திருவடிஇன்பமும் நுகர்வாகும்.

## இலக்கணம்

'அவற்றது' - ஆவிகளது. இதன்கண்வரும் 'அது' ஆறும் வேற்றுமை உருபு. அறிதற்கிழமைக்கண் வந்தது. தொல்காப்பியத்து, வேற்றுமையியல் பத்தொன்பதாம் நூற்பா 'இயற்கையின்' என்று தொடங்குவதில் பிறவும் அன்ன என்பதனுற்கொள்க.

'உம்மை' இறந்தது தழீயது. இவ்வும்மை "ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும்" என்பதன்கண் 'அவனும்' என்ற இடத்துக் காணப்படுவது. இவ் உம்மை ஆவி உணர்தலே அன்றி முதல்வனும் உணர்வன் என உணர்த்துகின்றது.

## உடனிற்றல்

கண் காண்பதை ஆவி உடன்நின்று காணுதல் பொருந்தும். என்னை? கண்ணுக்கு அறிவில்லை; ஆவிக்கு அறிவுஉண்டு. காண்டற் பயனும் கண்ணுக்கு இல்லை ஆவிக்கே; அதனுல் என்க. அதுபோல் ஆவி அறிவதையும் முதல்வன் உடனின்று அறிவன் எனின் பயனும் ஆவிக்கு இன்றி முதல்வனுக்கு ஆகவேண்டும். அவ்வாறு இன்மையால் அவன் காண்பன் என்பது எங்ஙனம் பொருந்தும்?

ஆவிகள் முதல்வனை இன்றியமைந்து ஒன்றனையும் புலன்கொளா. நாக்கே சுவையுணரும் நல்குகை தான்பற்றும், ஊக்குகை இன்றிஒண்ணு தோரின் விளங்கும். சுவை உணர்வது நாக்கு. ஆனுல், கையின் உதவி நாக்குக்கு இன்றியமையாதது. சுவைப்பொருளைக் கை பற்றி எடுத்து நாக்குக்குநல்கும். நாக்குப்பற்றிச் சுவைக்கும். பற்றும்தன்மை இரண டற்கும் ஒப்பஉண்டு. ஆனுல் நாக்குக்குப் பற்றுதலோடு சுவைக்கும் தன்மை கூடுதலாகவுள்ளது. அதுபோல ஆவிக்கு உடனுய்நின்று ஆண் டான் பற்றினுல் ஆவியும் பற்றும். ஈண்டுப்பற்றுதல் அறிதன்மேற்று. ஆவிக்கு அறிதன்மேலும் நாக்குக்குச் சுவைப்பது ஒன்று உள்ளதுபோல் அழுந்துவதுஒன்று உண்டு. இதுவேநுகர்வு. ஆவிக்கேநுகர்வாம். கைபோன்றுள்ள ஆண்டானுக்கு இனரும். உடன் நிற்றல் - பற்றல்.

## கண்ஒப்பு

கண்ஒளி பொருள்களைக் காணும். ஆனுல் விளக்கொளியின் துணையில்லாமல் காணுது. விளக்கொளி கண்ணில்மட்டும் கலந்தால் போதாது, கண்ணுல் காணப்படும் பொருளிலும் கலத்தல்வேண்டும். அப்பொழுது தான் கண்காணும். அதுபோல் ஆண்டான் ஆவியோடு கலந்து அதற்கு அறிவித்தால் மட்டும் போதாது; ஆவியால் அறியப்படும் பொருளோடும் கலந்து அறிதலும் வேண்டும ஆவி அறிந்தழுந்தும். ஆண்டான் அறி வன்; அழுந்தான். அழுந்தல் - நுகர்தல். முதல்வன் அறிவிக்குங்கால் ஆவியின் அறிவு விளங்குகின்றது. அறிந்த பொருளை ஆவிபற்றுங்கால் ஆண்டானும் உடன்நின்று பற்றுதல்வேண்டும். ஆசான் மாணுக்கர்க்கு எழுத்து உணர்த்துங்கால் உடனுய் நின்று உணர்த்துவன்; அவ்வளவில் மாணுக்கன் எழுத்தைக் கண்ணுல் உணர்வனே அன்றிக் கையால் எழுத மாட்டுவான் அல்லன். ஆசான் மாணவன்கையைப்பற்றி எழுதுவித்தலும் வேண்டும். இவையும் மேலதற்கு ஒப்பாவன.

## எச்சமுற்று

"இவ் ஆன்மாக்கள் அவனை இன்றி அமைந்து ஒன்றையும் விடயியா" இதன்கண் 'அமைந்து' என்பது அமையா எனப்பொருள்படுகின்றது. அமைந்து என்பது வினை எச்சம். அமையா என்பது வினைமுற்று. பெரும்பாலும் முற்றுச்சொல் எச்சமாகும். எடுத்துக்காட்டு 'கண்ணியன் வில்லன்'. ஈண்டு எச்சசொல்முற்றாகின்றது கூர்ந்து நோக்குக. இது,

> "வினை எஞ்சு கிளவியும் வேறுபல் குறிய."
>
> —தொல். சொல் - ௪௫௭.

என்னும் நூற்பாவான் அமைக்கப்பெறும்.

## இலக்கணம்

"அமைந்துவிடயியா" என்பது "உரைத்துத் தரியாது" என்றாற் போல வேறுவினை. அஃதாவது, அமையா விடயியா என்பதாம். அதனால் இன்றி என்பது ஈரிடத்தும் கூட்டப்பட்டது. அஃதாவது "இவ் ஆன்மாக்கள் அவனை இன்றி அமையா, அவனைஇன்றி விடயியா" என்பதாம்.

'ஒன்றையும்' என்ற உம்மை முற்று.

இவ்உண்மைகள் வரும் திருப்பாட்டான் உணர்க:

> "எவ்விடத்தும் இறையடியை இன்றியமைந் தொன்றை
> அறிந்தியற்றி யிடாவுயிர்கள் ஈசன் தானும்
> செவ்விதினில் உளம்புகுந்து செய்திஎலாம் உணர்ந்து
> சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
> இவ்வுயிர்கள் தோற்றம்போ தவனையின்றித் தோற்றா
> இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
> அவ்வுயிர்போல் நின்றிடுவன் ஆதலான் நாம்
> அரன் அடியை அகன்றுநிற்ப தெங்கே யாமே."
>
> —சித்தியார். ௧௧. ௧ - ௭.

## இருநிலை

ஆவிகள் "இறையடியை இன்றி அறிந்து ஒன்றை இயற்றிஇடா" எனவும், ஈசன்தான் எங்குமாய்ச் செறிந்துநிற்பன் எனவும் வருவன பொருள்களிற் படும் நிகழ்சசிகள்.

"இவ்வுயிர்கள் தோற்றம்போ தவனையின்றித் தோற்றா" எனவும், "அவ்வுயிர்போல் நின்றிடுவன்" எனவும் வருவன ஆவிகளின்மாட்டுப் படும் நிகழ்ச்சிகள்.

இவ்வுண்மை வரும்திருப்பாட்டுக்களான் உணர்க:

"கண்ஒளி"—௪அ௨-ம் பக்கம் காண்க.

> "உணர்ந்தார்க் குணர்வரி யோன் தில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்
> குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள்
> புணர்ந்தால் புணரும் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்
> மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே."
>
> —அ. திருக்கோ - ௧.

## பேற்றின்பெற்றி

வீடு பேற்றின்கண் ஆவிகளும் உள; ஆண்டானும்உண்டு; அவ் ஆவிகளுக்கு ஆண்டான் திருவடி இன்பநுகர்ச்சியும் உண்டு. இவ்வுண்மை தள் வரும் திருப்பாட்டுக்களான் காண்க.

"முத்திதனில்!..........அப்பா"—ந௨அசு-ஆம் பக்கம் காண்க.

"ஒன்றிரண் டாகி ஒன்றின் ஒருமையாம் இருமை ஆகி
ஒன்றிலொன் றழியும் ஒன்று தென்னின்ஒன் றுகா தீயின்
ஒன்றிரும் புறழின் அன்றும் உயிரின்னூங் தொழிலும் வேண்டும்
ஒன்றினின் றுணரும் உண்மைக் குவமை ஆணவத்தோ டொன்றே."
—சிவப்பிரகாசம், அஎ.

"ஆணவத்தோ டத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதம் சாருநாள் எந்நாளோ."
—தாயுமானவர், எந்நாட் - உஅ.

'ஐந்தையும்.................உணர்ந்து.'

## பொதுசிறப்பு

ஆவி "சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின் வகைதெரி"யும். தெரியுங்கால் சார்பியாய் நின்று தனித்தனி அறிந்து அழுந்தும். அழுந்துங்கால் வேறுகாணப்படாது அவ்வப்புலன்களாகச் செறிந்து நின்றழுந்தும்; செறிந்துநின்றழுந்துவதே ஆவியின் இயல்பு. ஆவிஅவ்வைந்தினையும் ஒருங்கே அறியமாட்டாது. ஓரோஒன்றாக அறிந்தழுந்துவதே ஆவியின் இயல்பாம். சாரபி என்பது சதசத்து எனப்படும். ஆண்டான் சாரப்படுபவனே அன்றிச் சார்பவன் அன்று. சார்பி என்பதைச் சார்வது எனவும் கூறுப.

ஆண்டவன் எல்லா ஆவிகளினுடைய புலன்களையும் ஒன்றாய் ஒருங்குணர்வன். இவ்வுணர்வு பொதுஎனப்படும். இஃது ஆசான் மாணாக்கர்களையும் நூற்களையும் ஒருங்கு உணர்தலைஒக்கும். ஆண்டான் ஆவிகளுடன் உடனாய் அவ்ஆவிகட்குப் பயனுறுத்துதற் பொருட்டுத் தனித்தனியும் காட்டிக்காண்பன். இது சிறப்பெனப்படும். ஆசான் மாணாக்கர்களைத் தனித்தனி வகுத்து அவ்வவர்கட்குரிய நூல்களையும் தெரித்து மீண்டும் காண்பன். அக்காட்சி சிறப்பெனப்படும். இதனால் ஆண்டான் கட்டுறுவான் அல்லன்.

## இன்பஉருவன்

ஆண்டவன் இன்ப உருவினன் ஆதலின் தன்னைப் புதிதாக அறிய வேண்டுவதோ அழுந்தவேண்டுவதோஇன்று. ஆவிகள் இன்பம் நுகர்வன ஆகலின் அவற்றிற்கு நுகர்விப்பதன் பொருட்டுத் தன்னைச் சிறப்பாக அறிவன். ஆனால் தன்இன்பில் தான் அழுந்தான். இது தாய் தான் தவமிருந்துபெற்ற சேய்க்குத் தன்பால் ஊட்டுங்கால் சிறப்பாகக் காண்டலை ஒக்கும். அப்பாலினைத் தாய் அருந்தாமை ஆண்டான் தன் இன்பினில் அழுந்தாமைக்கு ஒப்பாகும்.

## ஒப்பு

ஆணடான் கட்டுறாமைக்கு ஒப்பு கற்பிப்பானும் மருத்துவனும் நூலின்பாலும் மருந்தின்பாலும், அறியாமையின்பாலும் நோயின்பாலும்,

தனித்தனி அவற்றின் நீக்கத்தின்பாலும், அறிவும் நலமும் முறையே மாணவரும் நோயுற்றோரும் எய்தும் பேற்றின்பாலும் ஆசானும் மருத்துவனும் கட்டுறாமையும், மாணாக்கரும் நோயாளரும் கட்டுறுதலும் காண்டலேயாம். இதனால் தீப்பிணிப்புடையார் அக்கட்டகன்று நற்பிணிப்புறுவர் என்பது புலனாகின்றது. ஆண்டவன் ஆவிகளின் தீப்பிணிப்பகற்றித் தன் திருவடியின்பாகிய நற்பிணிப்புறுத்துவன். ஆண்டவன் இயல்பாகவே கட்டிலான் ஆதலின் என்றும் கட்டுறான்.

**இலக்கணம்**

'ஐந்து' என்பது சொற்பொருட்பின் வருநிலை. ஐந்தையும், ஐந்தும்போல், ஐந்தினையும் எனவரும் இடங்களிற் புலன்களைக் குறிக்கின்றமையால் சொற்பொருட் பின்வரும் நிலைஎன்க.

'அவற்று உணர்வது' என்பதன்கண் உள்ள 'அற்று' சாரியை. 'இன்' ஆகிய ஐந்தன்உருபு தொக்கது. "சாரியை உள்வழித் தன்உருபு நிலையாது வந்தது" மெய்பெற என்ற இலேசாற்கொள்க. இதற்குரிய நூற்பா வருமாறு :

"மெல்எழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்
வல்எழுத்து மிகுவழி மெலிப்பொடு தோன்றலும்
இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்
உயிர்மிக வருவழி உயிர்கெட வருதலும்
சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்உருபு நிலையலும்
சாரியை இயற்கை உறழத் தோன்றலும்
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க்கு அவ்வியல் நிலையலும்
மெய்பிறி தாகிடத் தியற்கை ஆதலும்
அன்ன பிறவும் தன்இயல் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கும்
ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப."

—தொல். எழுத்து-௧௫௭.

'உணர்வது' என்பது வினையாலணையும் பெயராயின் உணரும் பொருள் என்று ஆகும். தொழிற் பெயராயின் உணர்தல் என்று ஆகும். இங்ஙனம் வரும் திருப்பாட்டும் காண்க.

"உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

—திருக்குறள், ௩௩௯

வினைசெய்யிடத்தில்வரும் ஏழாவது விரிக்குங்கால் 'உணர்தற்கண்' எனவரும். நூற்பா வருமாறு:

"ஏழா குவதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் யிடத்தின் நிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பில் தோன்றும் அதுவே."

—தொல். சொல்—௮௧.

'ஏ'காரம் பிரிநிலை. இவ் ஏகாரம் 'உள்ளமே' என்பதன்கண் உள்ளது. சிவத்தைப் பிரித்தமையின் பிரிநிலை என்க. இஃது ஒன்று ஒன்றைப்பார்த்து உணரும் தன்மை சிவத்துக்கு இல்லை என்க.

'ஒன்று' என்பது குறிப்பு ஏதுவாய் நின்றது என்பது ஒருதன்மையாய் இருத்தலால் கட்டுருது என்னும் ஏதுவை உணர்த்துவதாம். அங்ஙனம் உணர்த்திய பின் ஒரு பொருளாகிய சிவத்தின் பெயராய் நின்றது.

'ஏகமாய்................ ........உற்று.'

## வழுவில்காட்சி

வழுவில்காட்சி என்பது சவிகற்ப உணர்வு. இவ் உணர்வு ஆவிகளுக்கு உண்டாதற்பொருட்டுக் கட்டு வீடு இரண்டிலும ஆண்டவன்மேற்கொள்வன். அதனால் என்றவினை உடலூழாய்க் கழியும்; அங்ஙனம் கழியும் கால் அதுசிவ நுகர்வு எனப்படும.

## உற்றுக் காண்டல்

முதல்வன் திருவடியின்கண் ஆவி நானென ஒன்றில்லென்று தன்னை மறந்து தானே என முதல்வனைத் தலைப்பட்டு அவனையே நினைந்து வருங்கால் என்றவினை உணர்வு வருமாயின் அவ்வுணர்வு சிவன் அருள் ஆதலின் அப்பயன் சிவனுக்கும சிவ இன்பமே ஆவிக்கும் ஆம் என்க. இதுவே ஆண்டவன் 'ஆலமே அமுதமாக உண்டு வானவர்க்களித்தனன்' என்னும் பொருளின உள்ளுறை. ஈண்டு வானவர் என்பது மெய்யடியார்கள். மெய்யடியாாகள மறவாது ஆண்டவனை நினைந்து அவன் திருவடியில் அழுந்திப் பேரின்பம துய்த்துக்கொண்டிருப்பர். ஊழுணர்வு வருங்கால் அவனையே நினைப்பராகலின அத்துன்பம ஆண்டானுக்கும் அடிநினைப்பாகிய இன்பம ஆவிககும் ஆகும். இவையே "வழுககி வீழினும் நின்திருப்பெயர் அல்லால் அறியேன மறுமாற்றம" எனவும், "பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன பரமா உன்னை" எனவும் ஓதியருளிய திருப்பாட்டுக்களாம் என்க. இவ்வுணமைகள் வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"ஆலமே அமுதமாக உண்டுவா னவர்க் களித்துக்
காலனை மாாக்கண டர்க்காக் காய்ந்தனை அடியேற்கின்று
ஞாலநின் புகழேயாக வேண்டுநான் மறைகள் ஏத்தும்
சீலமே ஆல வாயில் சிவபெரு மானே என்றூர்."

—கஉ, திருஞான—எசo.

ஆலம் - ஆவிகளின் ஊழ்ப்பயன். அமுதமாக - மகிழ்ச்சியாக. உண்டு - இறைவன் ஏற்று. அமுதமாக - மெய்யடியார்கட்குத் திருவடியின்பம் நிலைக்க. ஆலமே - உடலூழே. உண்டு - ஏற்று. இந்நிலை - மெய்யுணர்வாகிய அறிவுநிலை மாாக்கண்டர் - செறிவாகிய தவநிலை. தவம்-யோகம். புகழ் - நோன்புநிலை. சீலம் - சீலநிலை.

"அழுக்கு மெய்கொடு......... ..சoஅ. ஆம்பக்கம் பார்க்க."

"அங்கத்தை மண்ணுக் காக்கி ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதல்நாள் நாயேன் உன்னை
எங்குற்ருய் என்ற போதால் இங்குற்றேன் என்கண் டாயே."

—ச. எடு—அ.

பங்கம்-ஊழ். போகம் ஆற்றி-சிவநுகர்வாக நினைந்து. போகம் - சிவநுகர்வு. ஆற்றி-நினைந்து, இடையருத இறை நினைவுடையார் எண்

ணம் துன்பத்தைப் பற்ருது. என்னை? மயிர்ப்போர்வை போர்த்தார் உடம்பு பனி குளிர் முதலியவற்ருல் பற்றப்படாதல்லவா? அதுபோல் என்க. அப்போர்வை காற்ருல் சிறிது விலகப் பெறின் உடம்பில் பனி குளிர்படலுறத் தொடங்கவும் போர்வையை இழுத்து மூடுவர் அன்ருே? அதுபோல் மெய்யடியார்கட்குப் பயிற்சிவயத்தான் ஊழ்த்தோற்றமுறின் உடனே அத்தோற்ற நினைவைச் சிவநினைவாக ஆற்றுவர். இதுவே போகம் ஆக ஆற்றி என்பதாம்.

> "கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
> தெள்ளியேன் ஆகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
> உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி என்று
> வெளகினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட் டேனே."
>
> —ச. எடு—ச.

"வேண்டுவார் வேண்டியதே ஈவான்"—கககக. ஆம் பக்கம் காண்க.

> "இன்னுமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
> ஒன்னுர் விழையும் சிறப்பு." —திருக்குறள், கஙo.

## இலக்கணம்

'இணை அடிகள்' இணை அடிகளை என விரிப்பதால் 'ஐ' உருபு தொக்கது. நூற்பா,

> "ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
> மெய்உருபு தொகா அ இறுதி யான." —தொல். சொல்—கoரு.

'உணர' செயவெனெச்சம்; காரணப் பொருட்டு, 'மழைபெய்யக் குளம் நிறையும்' என்பதுபோல.

'விளைந்த பொற்பினுன்' என்ற விடத்துள்ள 'விளைந்த' என்பது இறந்த காலம். இது தெளிவுபற்றி வந்தது. இங்ஙனம் வந்ததற்குக் காட்டு,

> "பெறுமவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவறிந்த
> மக்கட்பேறு அல்ல பிற." —திருக்குறள், சுக.

'போகம் ஆய்த்தான் விளைந்த பொற்பினுன்' இதன்கண் 'போகம் ஆய்' என்பது காரணம். நூற்பா,

> "செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்."
>
> "ஆக்கந் தானே காரண முதற்றே." —தொல். சொல்—உo, உக

'காணுன் ஓ'-காணுனே, காண்பன் என்பது பொருள். ஓ: எதிர்மறை.

## ஒற்றுமையால் உறல்மெய்

திருவடியின்பத்தில் திளைக்கும் ஆவிக்குப் புலனுவது அனைத்தும் திருவடி இன்பமே திருவிழாவில் நேரும் முயற்சித்துன்பம் அனைத்தும் திருவிழா இன்பமே. இவை எல்லாம் இன்பத்திற்கு வாயிலாதல்பற்றியும், இவை இன்ப நினைவை ஆழ்த்தித் தன் துன்பநினைவில் வீழ்த்தும் வலி இன்மை பற்றியும் சிவநுகர்வே மேலோங்கும் வாய்மை பெறப்படும். இவ் வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க.

"அண்டம்மே விட அனைத்தும் அனைத்தையும் அண்டம் மேவிக்
கொண்டல்போல் எவையும் ஞானம் குறைவிலா நிறைத லாலே
கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினால் காணில் தானே
அண்டநா யகனார் மேனி யானதேல் ஐயம இன்றே."

—சிவப்பிரகாசம், கசு.

"பெற்றசிற் றின்பமே பேரின்பமாய் அங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயை என்று உந்தீபற." —திருஉந்தியார், நந.

"உடம்புடைய யோகிகளதாம் உற்றசிற் றின்பம்
அடங்கத்தம் பேரின்ப தாக்கில்—தொடங்கி
முளைப்பதும் ஒன்றில்லை முடிவதும் ஒன்றில்லை
இளைப்பதும்ஒன் றில்லை இவர்." திருக்களிற், எசு.

"காணும் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு." அ—. பண்டாய—சு.

## கூற்றுப்பொருள்

"அவையே தானே ஆய்" (எக) என முதல்வன் பரிய ஐந்தொழில் செய்யுமாறு உணர்த்துமுகத்தானும், "தாம்தம் உணர்வின் தமியருள்" (உருக) என மீநுண் ஐந்தொழில செய்யுமாறு உணர்த்து முகத்தானும் மெய்ப்புணர்ப்புரிலை பொதுவகையால் பெறப்பட்டது. மீநுண்ண ஐந்தொழிற்கண்படும் சிறப்பின்மேல் இட்டுச சிறப்புவகையால் பெறுவிக்கு முகத்தான் கட்டுவீடு இரண்டினும் ஆவிகளுக்கு வரும்பயனை முதல்வனே உடனாய் நின்று என்றுகொண்டு அவரவர்செய்யும் செய்திக்குத்தக்க பயன் விளைத்து நிற்பன் என்பது விளக்கியவாறும் என்க (பேருரை).

## இரவல்

ஆவியின்பால் உள்ள 'உடல் பொருள் ஆவி' மூன்றும் ஆண்டான் உடைமையே. கட்டிலும் வீட்டிலும் அவை ஆண்டவன் உடைமையே. ஆனால் ஆவி கட்டின்கண் பழமல முனைப்பால் அவற்றைத் தனதாக் கொண்டு மெய்ம்மை மறந்து பொய்ம்மைவழி ஒழுகித் திருவடியின் பத்தை நுகராது உலகியல் இன்பத்தை அவ்இன் ப நினைவு ஒன்றே உளத் தமைத்துப் பேரின்பம் எய்தாது வறிதே பிறப்பு இறப்பிற்கு உட்படு கின்றது. வீட்டுயிர் அம்மூன்றும் ஆண்டவன உடைமை என்னும மெய்ம்மை யுணர்ந்தமையால் அவற்றை இரவற்பொருள் எனக்கொண்டு ஆண்டான் திருஅடியே உளத்தமைத் தோாந்து பரவலும் பழிசசலும் செய்து சிறப்பிறகுரியதாய் வாழுகின்றது.

ஒருதந்தை தன் வீட்டை மகனுக்குக் கொடுத்துவிடுகின்றான். பின் கடன்பாட்டில் மகன் தந்தைக்கு அவ்வீட்டை விற்றுவிடுகின்றான். தந்தை அவ்வீட்டிலேயே மகனைக் குடியிருக்கச செய்கின்றான். மகன் அம்மெய்ம்மை ஓர்ந்து, தந்தை வீடேற்றமகன் தந்தைக் கீந்தாங் குறையும், அந்தமுறை ஆவி இறைக்கென்று உறுதிகொண்டு செய்ந்நன்றி மறவாச் செம்மையொடும வாழ்வனன்றே? இம்முறையே ஆவி மெய்ம்மை ஓர்ந்து வாழுதற்கு ஒப்பாகும்.

இம்மூன்றினையும் முதல்வன் உடைமை எனும் மெய்ம்மை ஓர்ந்தமையால் அவற்றை அவனுக்கே தானஞ்செய்வர். அங்ஙனம் தானம் செய்துள்ள பொருளின் துணையால் அதனை மறவாது செய்வதே தவம், "சிவத்தைப் பேணின் தவத்திற்கு அழகு." (கொன்றை. உஅ) என்பதூஉம் இதனை வலியுறுத்தும். திருவள்ளுவ நாயனாரும் இப்பொருளை பயப்ப,

"தானம் தவமிரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்கா தெனின்."
—திருக்குறள், கக.

என்றருளினர். இவ்வுண்மை உணர்ந்த மெய்யடியார்கள் முழுமுதலையே பார்த்திருப்பர். ஈவதும் ஏற்பதும் சிவனுரிமை என இசைத்தே இயற்றுவர். **சீவனுரிமை** என்பதே சிவார்ப்பணம் ஆகும். இம்முறைமையில் நிற்பார்க்கு உடம்புகொண்ட வினைப்பயன் ஒருவாற்றானும் அவர்க்கு ஏதல் செல்லாமையின் முதல்வனதேயாம். நற்கட்டுயிர்க்குவரும் வினைப்பயனும் முதல்வனே உடனாய் நின்று ஏன்றுகொள்வன். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே"
—௬௫. ஆம் பக்கம் பார்க்க.

"யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
**மாதொரு பாகனார்தாம்** வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படும்இ றக்கும் பிறக்குமேல் வினையும் செய்யும்
ஆதலான் இவையி லாதான் அறிந்தருள் செய்வன் அன்றே."
—சித்தியா. உ. உ-௨௫.

"இங்குநாம் சிலர்க்குப் பூசை இயற்றினால் இவர்களோ வந்து
அங்குவான் தருவார் அன்றேல் அத்தெய்வம் அத்தனைக்காண்
எங்கும்வாழ் தெய்வம் எல்லாம் இறைவனா ணையினால் நிற்பது
அங்குநாம் செய்யும் செய்திக் காணைவைப் பாலளிப்பன்."
—சித்தியார் உ. உ, உ௬.

"அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்."—கக. காரைக்கால் அற்புத—உ0.

விழுமிய முழுமுதல்வன் ஆவிகளோடு என்றும் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்றருளுகின்றனன். அன்பு நிலையில் ஒன்றாயும், அறிவு நிலையில் வேறாயும், ஆற்றல் நிலையில் உடனாயும் இயைந்து இயக்கும் இயல்பு என்றும் குன்றா நன்றுடையான் முதல்வன். அறிவானும் - ஒன்றாய், அறிவிப்பான்-வேறாய், அறிகின்றான்-உடனாய், என இயைத்து முத்திறமெய்ப் புணர்ப்பு நிலையும் கண்டு கொள்க.

---

## இரண்டாம் அதிகரணம்

**இனிப் பத்தியினுன் மறவாதுஏத்த அவனது சீபாதத்தை அணேயும் என்றது.**

*எ-து. மே-ள். எ-னின். ஏகனுகி நின்றூர்க்கு அவ்இயைபு பற்றி அறிவு இச்சை செயல்கள் மூன்றும் ஆண்டு விடயிக்கு மாறு யாங்ஙனமென்பாரை நோக்கி நிட்டையின் இயல்புணர்த்து தற்கு எடுத்துக்கொண்ட இரண்டாங்கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடல் நுதலிற்று.*

(இ - ள்.) *சூத்திரத்து உரைத்தவாறுபற்றி உரைத்துக் கொள்க.*

**"இத்தைஆயும் அறிவுடையனுய் அன்புசெய்ய" என வழி நூலாசிரியரும் ஓதுதலின் ஈண்டு மறவாது பத்தியினுல் ஏத்த எனச் சூத்திரப்பொருட்கு ஏற்ப மாறிவைத்து உரைத்துக் கொள்க. ஏத்தவென்றது உபசாரவழக்கு.*

*அன்பு பத்தி காதலென்றூற்போல்வன இச்சை மீதூர்தற் பொருளவாகலான், அது பரமுத்தியினும் உண்டென்பது உணராதார் பத்தியாவது சீவன்முத்திநிலேக்கே செய்யப்படுவ தொரு சாதனம்போலுமென மயங்கித் தத்தமக்கு வேண்டிய வாறே உரைப்ப. பரமுத்தியின்கண் இச்சை நிகழாதவழிச் சிவபோகம் அநுபவமாதல் செல்லாமையானும், சீவன்முத்தி நிலேக்கே கூறுவதொன்றூயின் "செம்மலர் நோன்றூள்" என் னுஞ் சூத்திரத்து ஒருங்குவைத்து ஓதவமையும் சூத்திரம் வேறுசெய்ய வேண்டாமையானும், அவ்வுரை போலியென்று ஒழிக.*

**அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளேத்து நிற்றலான்.**

*எ-து. ஏது எ-னின். பத்தியினுன் மறவாது ஏத்தினும் அவனது சீபாதத்தை யணேதல் பரமுத்தியின்அன்றி முடியா தென்பாரை நோக்கி மேற்கோளேச் சாதித்தல் நுதலிற்று.*

(இ - ள்.) *அம்முதல்வன் வேறு நில்லாது செய்வோர் செய்வனவற்றை அறிந்து அவ்வச்செய்திக்குத் தக்க பயனே மிகச் செய்யலாயின் அவ்வப்பொழுதே விளேவித்தும் அல்லு ழிக் காலாந்தரத்தின் விளேவித்தும் உடனுய் நிற்பனுகலான் இனிப் பத்தியினுன் மறவாதுஏத்தவே அம்முதல்வனது சீபா தத்தை அணேயும்என மேற்கொண்டது (எ - று).*

---

* சிவஞானசித்தி, சுபக்கம், பதினேராஞ்சூத்திரம். க. (ருகஎ)

*அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன்—அருட்கண்ணால்
பாசத்தை நீக்கும் பகல்அலர்த்தும் தாமரைபோல்
நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்.

எ - து. உ - ம். எ - னின். அரன் கழல் சேறல் உடம்பின் நீங்கியபின் அன்றி உடம்புடையவழியும் கூடுமாயின் அது ஞாயிற்றினொளிபோல மருங்குள்ளார்க்குப் புலனாதல் வேண்டும் என்பாரை நோக்கி அது கூடாமையும் கூடுமாறும் உவமை முகத்தான் உணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அருக்கன் நேர் நிற்பினும் காணார்க்கு அல் இருளே—ஞாயிறு (எல்லார்க்கும்) ஒப்ப நிற்பினும் அது காட்சியுடையார் கண்ணுக்கு அன்றி அஃது இல்லாதார் கண்ணுக்கு இரவின் கண்ணதாகிய இருளேயாம் (அதுபோல), ஈசன் பாசத்தார்க்கு இருட்கண்ணே—முதல்வன் (எங்கணும் ஒப்ப நிற்பினும்) மலநீங்கிய முத்தர்க்கு அன்றி அஃது உடையார்க்கு அவன் அம்மலத்தின் கண்ணே யாவன்; (சீவன் முத்தரும் ஏனையோர்போல் உடலுடைமையின் பாசத்தாராகலின் வேற்றுமையின்றால் எனின்), பகல் (நீக்கும்) அலர்த்துந் தாமரை போல்—(ஏனைத் தாமரைகளோடொப்ப ஒருங்கு நிற்பினும் பக்குவமுடைய) தாமரையை (க்கூம்புதலை) நீக்கி அலர்த்தும் ஞாயிறுபோல, நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் அருட் கண்ணால் பாசத்தை நீக்கும் (அலர்த்தும்)—ஏனையோர்போல் உடம்போடு நிற்பினும் பருவமுடையராய்ப் பத்தியினால் தன்னை மறவாது உணர்வார்க்கு முதல்வன் தனது திருவருட்பார்வையால் பாசத்தை நீக்கி (அறிவை) அலர்த்தும் (ஆகலான் உடம்புள் வழியும் அவர் பாசத்தார் அல்லர்) (எ - று).

ஆகலான் உடம்புள்வழியும் அவர் பாசத்தார் அல்லர் என்பது குறிப்பெச்சம்.

ஏகாரம் தேற்றம்.

திணிந்த இருளென்பார் அல்லிருள் என்றார்.

மலத்திற்குக் கண்ணாவது அறியாமை.

காணாரும் பகலும் ஆகுபெயர்.

அருக்கன் எடுத்துக்காட்டு உவமை.

தன்னையென்னும் இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது.

*'எங்குந்தான்' சித்தியார். கக—உ - அ.

ஏழாம்வேற்றுமைப் பொருட்கண் வரும் நேர் என்பது உருபு மயக்கமாய் நான்காவது உணர்த்திற்று.

நீக்குதலும் அலர்த்துதலும் ஏனை இடத்துஞ் சென்று இயைதலின, ஈரிடத்துஞ் செயப்படுபொருள் ஏற்பன வருவிக்கப் பட்டன.

*மன்னும் இருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னும் அரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில விகாரியலன் தான்.

எ - து. உ - ம். எ - னின். நேசத்தில் தன் உணரும் சீவன் முத்தர்க்குப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்துதல் பர முத்தியின அனறி இல்லையென முரணிக் கூறும் வாதிகளை நோக்கிப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்தும் முறைமை இவ் வாறென்று உணர்த்தி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளை மதி துரந்தவாறு மலம் துரந்து—(உயிரைத் தானுக்கிக் கோடற் கண்உளதாகிய) இச்சைமிகுதியான் (அவ்வுயிரோடும் அநாதியே) நிலைபெறும் முதல்வன் (கண்ணின்கண்) நிலைபெறும் இருளைப் பிறைமதி (நாடோறுஞ் சிறிது சிறிதாக நீக்கி) ஓட்டுமாறு போல் (அவ்வுயிரின் கண்ணதாகிய) மலசத்தியை (அவ்வப்பருவந் தோறும் சிறிது சிறிதாகச் சோபானமுறையின் நீக்கிப் பற்றறத்) துரந்து, காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசம் செய் வான் செய்தல் சலிப்பு இல்—காந்தக்கல் இரும்பைத் தன்கண் ஈர்த்துத் தன்வசமாகச் செய்தல்போல (மலம் அங்ஙனந் துரக் கப்படுந்தோறும் அம்முறையே அச்சத்தி பதிவித்து உயிரைத் தன்கண் வலித்துக்கொண்டு தன் வசமாகச் செய்துவருஞ் செய்கையின் (அவனுக்கு ஒருஞான்றும்) சலிப்பு இல்லை, விகாரி அலன் தான்—(அங்ஙனஞ் சலியாது செய்து வருதல்பற்றி) விகாரியாவானும் அல்லன் (காந்தம்போலத் தனது சந்நிதிமாத் திரையில் செய்யும்) அம்முதல்வன் (எ - று).

மதியென்றது ஏற்புழிக்கோடலான் ஈண்டு வளர்பக்கத் தின் திங்களின் மேற்றுயிற்று. †"அந்த அருளுணக்கிங் காதார மாய் அல்லின்—இந்து என எறித் திட்டு" என்றதும் அது.

மலந் துரத்தல் உயிரின் செயலான் ஆவதன்று என்பதுபட நின்றமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

*'இரும்பைக்' சிததியார. கக—உ - கஉ. (இசஅ) † துகளறுபோதம். ருசூ.

வான் பான் பாக்குக்கள் தொழிற்பெயர் விகுதியுமாம் என்பது *" கரப்பாக்கு அறிந்து " என்பதனான் உணர்க.

உவம உருபு விரித்து உரைக்க.

சலித்தல் வேசறுதல்.

செய்தற்கண்ணென ஏழனுருபு விரித்துரைக்க.

மதிதுரந்தவாறு மலந்துரந்தென்ற இதனானே மலம் நீங்கு வது பின் என்பார்மதம் மறுக்கப்பட்டவாறு காண்க.

சோபானமுறையின் நீக்குதலானன்றே, சத்திநிபாதஞ் சிவ புண்ணியமுதலாயின நால்வேறுவகைப்பட்டதூஉம், அவற்றுள் ளும் ஒரோ ஒன்று நந்நான்காய்ப் பதினாறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளும் ஒரோவொன்று பலவேறு வகைப்பட்டு விரிந் ததூஉ மென்க.

†நசித்தோன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா
நசித்திலதேல் ஒன்றுவ தில்லை—நசித்துமலம்
அப்பணைந்த உப்பின் உளம்அணைந்து சேடமாம்
கப்பின்றாம் ஈசன் கழல்.

எ - து. உ - ம். எ - ணின். உயிருக்குக் குணம்போல அநாதியாய் உள்ள சகசமலம் அவ் உயிரின் வேறாய்த் துரக்கற் பாலது அன்றாகலின் மலந்துரந்தென்றது அமையாது என்னும் பாடாணவாதசைவரை நோக்கி அருத்தாபத்தி அளவையான் அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா நசித்திலதேல் ஒன்று ஆவது இல்லை—(அரன்கழல் செல்லுங் கால் அதனை ஆன்மா கெட்டொன்றுமோ கெடாதொன்றுமோ எனக் கடாயினார்க்குக்) கெட்டொன்றும் எனின், ஆன்மாக் கெட்டுப்போகலான் ஒன்றமாட்டாது; கெடாதொன்றுமெனின் (கெடாதவழி இருபொருளாய நிற்றலின்) ஒன்றுமாறு இல்லை. (ஆகலான் அருத்தாபத்தியளவையானே), அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம்—உப்புத் தனது கண்டிப்பு நீங்கி நீரின் ஒன்றுமாறுபோலத் தனது சகசமலங் கெட்டொழிய ஆன்மா அரன்கழலை ஒன்றி (அவ்வரன்கழற்குச்) சேடமாம், கப்பு இன்று ஆம்—அங்ஙனஞ் சேடமாகிய ஆன்மாவுக்கு மீளக் கவர்ச்சியில்லை (எ - று).

* திருவள்ளுவர். ௧௧௨௭. (௫௪௭)

† 'சென்றணையும்' 'இரும்பைக்'—சித்தியார். ௧௧. ௨ - ௯, ௧௨.

ஒன்றுது என்னுந் துவ்விகுதி விகாரத்தால் தொக்கது.

பின் வந்த நசித்தென்பது செயவெனெச்சத் திரிவு.

யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரம் இன்றிநிற்கும் அஃது அதற்குச் சேடம் என்பது அறிக. *"அவைஉடைமை ஆளாம்நாம் அங்கு" என ஓதுதலின், ஏனைப் பசுபாசங்கள் முதல்வனுக்குப் பொது வகையாற் சேடமாம் ஆயினும் இதுபோலச் சிறப்புவகையால் சேடம்ஆதல் இன்மையின் இதனை வேறெடுத்து ஓதினர்.

முத்திநிலை கூறி முடிந்தமையின் இறுதிக்கண் கப்பின்றும் என அவினுவிருத்தியுங் கூறினர்.

†பொன்வாள்முன் கோண்மூவில் புக்கொடுங்கிப் போய்அகலத்
தன்வாளே எங்குமாம் தன்மைபோல்—முன்வாள்
மலத்துள் மறைந்துள்ளம் மற்றுலகை உண்ணும்
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

எ - து. ௨ - ம். எ - னின். நான்காஞ் சூத்திரமுதல் இது வரையில் கூறிப்போந்த கேவல சகல சுத்தம் என்னும் முத்திறத்து அவத்தைகளினும் ஆன்மாத் தன்னியல்பிற்குக் கேடின்றியே நிற்குமென்பது உவமையின் வைத்துக்காட்டி மேலதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பொன்வாள்முன் கொண்மூவில்புக்கு—ஞாயிறு காலைப்போதின் முகிற்படலத்துள் மறைந்து, ஒடுங்கி—(அம் முகிற்படலம் ஒருபுடை நீங்கியவழித் தன்ஒளி ஏகதேசமாய்) ஒடுங்கித்தோன்றி, போய் அகல எங்கும் தன் வாளே ஆம் தன்மைபோல்—(அம்முகிற்படலம் பெருங்காற்றான் அடியுண்டு முழுவதும்) விட்டொழிந்தவழி எங்கணுந் தன்னொளியேயாய்த் தோன்றும் பெற்றிபோல, உள்ளம் முன் வாள் மலத்துள் மறைந்து—ஆன்மா அநாதியே தன்னறிவு மலத்துண் மறைப்புண்டு (கேவலப்பட்டு), மற்று உலகை உண்ணும்—பின்பு (கருவிகளோடுகூடி ஏகதேசமாய் அறிவு விளங்கி) ஐம்புலன்களை விடயிக்கும், (மற்று) மலத்து இரித்து (எங்குமாம் வாள்) வரத்துச்செல்லும்—பின்பு அம்மலத்தை (முதல்வன் அருளால்) பற்றறக் களைந்து (வியாபகமாய் அறிவு) விளங்கி அவனது சீபாதத்தை அணைந்து சுத்தப்படும் (எ - று).

---

* ௧௫௧-ஆம் பக்கம் காண்க.

† 'செம்பிரத' சித்தியார், ௧௧. ௨-௧௦.

தன்மையென்றார் கொண்டூவில் புக்குழியுங் கேடின்மை யின்.

ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது.

பின்வந்த வாள் ஆகுபெயர்.

வினைமாற்றின்கண் வந்த மற்றென்னு மிடைச்சொல் மலத் திரித்தென்பதனோடும் இயைந்தது. சாரியை உள்வழித் தன் னுருபுநிலையாதுவருதல் இலேசாற் கொள்க.

உவமை வினைகள் பொருளினுஞ் சென்று இயைந்தன.

அறிவு மறைந்தும் ஒடுங்கியும் மறைப்பு நீங்கியே எங்கு மாய் நிகழ்தன்மாத்திரைக்கே பொன்வாள் உவமையென்பார், உலகை உண்ணும் வரத்துச் செல்லும் என வேற்றுமையும் உடன் கூறினார்.

மலநசித்தலாவது தனது மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப் படுதன் மாத்திரையே பிறிதன்றென்பதூஉம் உவமையாற் பெறுதும்.

## விளக்கம்

**சீபாதம்**

சீ என்பது சிறப்புணர்த்துவதோர் தமிழ்ச்சொல். அது சீர் எனவும் வழங்கப்பெறும். சீபாதம் என்பது திருவடி. திருவடிப் பேறெய்துவதே செம்பொருள் துணிவினர் செப்பும் சிறந்த வீடு பேறு. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"இம்மையே ஈரெட்டாண் டெய்திஎழி லாரும்
ஏந்திழைபார் முத்தியென்றும் இருஞ்சுவர்க்க முத்தி
அம்மையே எனறும்முத்தி ஐந்து கந்தம்
அறக்கெடுகை என்றும்அட்ட குணமுத்தி என்றும்
மெய்ம்மையே பாடாணம் போல்கைமுத்தி என்றும்
விவேகமுத்தி எனறும்தன் மெய்வடிவாம் சிவத்தைச்
செம்மையே பெறுகைமுத்தி என்றும்செப் புவர்கள்
சிவனடியைச் சேருமுத்தி செப்புவதிங் கியாமே."

—சித்தியார். அ உ-கஉ.

"அரிவையரின் புறுமுத்தி கந்தம் ஐந்தும்
அறுமுத்தி திரிகுணமும அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நிதகமுததி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலவுயிா அருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறதத தாமே." —சிவப். உ-௩உ.

## பற்று

பற்று என்னும் சொல்லே பத்தி என வழங்கப்படுகின்றது. இப் பத்தி திருஅடிப்பேற்றின்கண்ணும் உண்டு. இவ்வுண்மை புலப்பட "இனிப் பத்தியினுன் மறவாது எத்த அவனது சீபாதத்தை அணேயும்" என அருளினர். பற்று, பத்தி, அன்பு, காதல், நேயம் என்பன ஒரு பொருட் சொற்கள். இவை வேட்கைமீதூர்தற்பொருள. அறிவு அன்பு ஆற்றல்கள் மூன்றும் ஒருங்கே உடனுய் நிகழும் இயல்பின. "அயரா அன்பின் அரன்கழல் செலும்" என நூற்பாவின்கண் ஓதியருளியதும் இம்முறைமையை விளக்கியருளவேயாம் என்க.

## நுகர்வு செல்லாமை

நேயம் எனப்படும் பத்தி வீட்டுயிர் நிலைக்கண் செய்யப்படும் பயிற்சி மட்டும் அன்று; திருஅடிப்பேற்றின்கண் செய்யப்படும் சீரும் ஆகும். வீட்டுயிர் - சீவன் முத்தா. வீட்டுயிர் நிலைக்குமட்டுமே உளது எனின், பன்னிரண்டாம் நூற்பாவின்கண்ணே ஓதியருளியதே அமையும். பதினொராவது நூற்பாவிலும் கூறியருளவேண்டுவதின்று. எனவே, திருவடிப்பேற்றினகண்ணும் நேயமாகிய வேட்கைமீதூராவழிச் சிவநுகர்வு இன்ரும். எனவே, யாண்டும் அறிவு அன்பு ஆற்றல்கள் நிகழ்ந்து மறவாமையும், காதல்கொள்ளுதலும், பற்றி இன்புறுதலும் வேண்டும் என்க. இந்த அன்பின் பெற்றி சொல்லொணுதது. திருவடிப்பேற்றில் செலலப்பண்ணுவது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

> "அன்பேஎன் அன்பேஎன்று அன்பால் அழுதரற்றி
> அன்பேஅன் பாக அறிவழியும்—அன்பன்றித்
> தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யும்அவை
> சாற்றும் பழம்அன்றே தான்." — திருக்களிற். ருரு.

தீர்த்தம் முதலியன திருவடியுணர்விற்கு நேர்வழியாகாது. இவற்ருல் பேரன்பு தோன்றும் இப் பேரன்பே அம் மெய்யுணர்விற்கு நேர்வழியாம். இவ் அன்பின் முதிர்ச்சி இன்ப உருவாகும்.

> "முன்புதிருக் காளத்தி முதல்வனுர் அருள்நோக்கின்
> இன்புறவே தகத்திரும்பு பொன்னுனுற் போல்யாக்கைத்
> தன்பரிசும் வினையிரண்டும் சாருமலம் மூன்றும்அற
> அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ."

கஉ. கண்ணப்பர், கநிச.

யாக்கைத் தன் பரிசு - மாயை. வினையிரண்டு - நல்வினை தீவினை. சாருமலம் - ஆணவம். மூன்றும் அற - மாயை வினை ஆணவம் ஆகிய மூன்று மலங்களும் அகல. சாருமலம் மூன்று எனத் தொகை கொண்டால்- மலம், மறைப்பாற்றல், மாயைஆக்கம் எனக் கொள்க. மறைப்பாற்றல் - திரோதான சத்தி. மாயை ஆக்கம் - மாயேயம். அஞ்சு மலம் - ஆணவம், கன்மம், மாயை, மறைப்பாற்றல், மாயை ஆக்கம் என்பன.

அருவாய அன்பு உருவாய்ப் புலப்படுவது கண்ணப்ப நாயனுர் திருமேனியின்கண். அதற்குமுன் எல்லாம் கண்ணீராகப் புலப்படுவதுமட்டும்

**உண்டு.** அது, 'புன்கணீர் பூசல் தரும்'* எனவும், 'வந்திழிகண் ணீர்மழை யும்'† எனவும் வரும் திருமறைகளான் உணர்க. கட்புலனும் அன்பு **கண்ணப்பர்**. கண்ணப்பர் என்பது தம் நயம் ஏதும் விழையாத் தனி அன்பு. இவ்வுண்மை புலப்படுத்தவே, "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு"‡ என்று ஆளுடைய அடிகள் அருள்வாராயினர். இதன்கண் ஓ அசை. அன்புக்கு ஒப்பு கண்ணப்பன். கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு என்றே பொருள். அன்பிற்குரிய பிறிதோர் சொல் கண்ணப்பன்.

**பெறுதல் கூடும்**

உலகியற்பொருள்களை அறிந்த அளவானே அதன்கண் வேட்கை செல்லுதல்கூடும். வேட்கை சென்ற அப்பொழுதே அப்பொருளைப் பெறுதல் அரிது. என்னை? அப்பொருள் வேட்கையுறுவானுக்கு வேறாக இருக்கின்றமையான் என்க. ஆண்டவன் திருவடியில் வேட்கை யுறுவானுக்கு அத்திருவடி வேறின்றி உடனாய் என்றும் நின்று உதவுவ தால் வேட்கை உற்றபொழுதே பெறுதல்கூடும். திருக்கோவிற் புறத் துறுவாரும், திருமணவீட்டுப் புறத்துறுவாரும், கல்லூரிப் புறத்துறுவாரும், பணி அகத்தின் புறத்துறுவாரும் முறையே அகத்துறுவார்போன்று வேட்கை உற்ற அப்பொழுதே தொழுதலும், துய்த்தலும், கற்றலும், கை செய்தலும் கூடாவாம் என்க. கை செய்தல் - பணி செய்தல்.

"அம்முதல்வன் உலகத்தார்போலன்றிக் கட்டு வீடு இரண்டினும் பின்னலாய் உடன் நின்றுகொண்டு யார யார் யாது செய்கின்றாரென்று அறிந்து அவரவர்க்கு அவ்வச் செய்திக்கேற்றக்க பயனை அவ்வப்பொழுதே விளைவிப்பன் ஆகலான் '**இனிப் பத்தியினுன் மறவாது ஏத்த அவனது சீபாதத்தை அணையும்**' என மேற்கொண்டது என்றவாறு" (பேருரை). பின்னல் - அத்துவிதம்.

இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"செய்யும் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரம்கெட்டார்—ஐயா
**உழவும் தனிசும்** ஒருமுகமே ஆனல்
இழவுண்டோ சொல்லாய் இது." —திருக்களிற். உக.

உழவு-இறைபணி. தனிசு - பணியை ஏற்றவர் கட்டாயம் கொடுக்க வேண்டிய ஊதியம். ஒருமுகமே ஆதல் - ஆண்டான்பாலே ஆதல். இழவுண்டோ - காலக்கழிவுண்டோ? அப்பொழுதே கிட்டும் என்றபடி.

"குற்றொருவரைக் கூறை கொண்டு
கொலைகள் செய்த களவெலாம்
செற்றொருவரைச் செய்த **தீமைகள்**
**இம்மையே வரும் திண்ணமே**
மற்றொருவரைப் பற்றி லேன்மற
வாதெழு மட நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்ற மேறி
புறம்பயம் தொழப் போதுமே." —எ. ௩௫ - ௪.

*. 'அன்பிற்கும்' திருக். ௭௧. †. 'சிந்தைஇடை' ௧௨. திருஞா. ௨௭0.
‡. 'கண்ணப்பன்' அ. திருக்கோத். ௪.

'அருக்கன்நேர்...........நேர்.'

## I அறிவு

முதல்வன் கட்டு வீடு இரண்டினும் திரிபின்றி ஒருபெற்றித்தாகிய புணர்ப்பாய் நின்று உதவியருள்வனுயின், யாதானும் ஒருவாற்றால் உயிர் உலகங்கள்போல் கட்டுநிலையினும் முதல்வன் புலனாதல் வேண்டும் என்னும் ஐயத்தை நீக்கி அருளுகின்றனர். அதனால் அயராமை எனப்படும் அறிவு விளங்குவது புலனாகும்.

## செவ்வி உணர்வு

திருவடிப்பேற்றினைப்போல் கட்டுநிலையினும் முதல்வன் ஆவிகளுடன் புணர்ப்பாய் விரவி ஒற்றுமைப்பட்டு நிற்பன் எனின், ஏதாவது ஒருவாற்றான் புலப்படல்வேண்டும் அல்லவா? எனின், ஆவிகளுடைய செவ்விகளுக்குத் தக்கவாறு சுட்டுணர்வு சிற்றுணர்வு முற்றுணர்வு விளங்கச்செய்வன். முற்றுணர்வு விளக்கமே முதல்வன் விளக்கமாகும்.

கட்டுயிர் சுட்டுணர்வு சிற்றுணர்வுகள் விளங்கும் விளக்கத்தையுடையன. அவை இருளால் ஆம் மருளுடையன. அம்மருளால் முதல்வன் நேர் நிற்பினும், அவனைக் காணும் செவ்வி ஆவிகள் பெற்றில. ஞாயிறு கண்ணின்கண் படலம்நோய் உற்றாக்கும், அஃது அற்றாக்கும் ஒப்ப நிற்பினும் படலம் உற்றார்க்குப் புலனாகாமையும், அஃதற்றார்க்குப் புலனாவதும் காண்டும் அன்றே? அஃது ஆவியின் குற்றமே அன்றி, ஞாயிற்றின் குற்றம் அன்று. ஆவியின் படலம் நீங்கியதும் ஞாயிற்றின் ஒளி அக்கண்ணுக்குப் புலனாகும். அதுபோல் ஆவியின் மாசு அகலுதலும் ஆண்டானின் முற்றுணர்வு விளக்கத்தால் அவ் ஆவிக்கு முதல்வன் புலனாகும். அப்புலனும் பொறப்பு அவர்தம் திருஅருட்செயலாலல் சொல்லால் சிவவிளக்கால் ஏனையார்க்குப் புலனாகும். இது கற்றார் உணர் புலனை மற்றார் புறமுணாதல், உற்றவர் சொற்செயலால் ஓர்வதாம செயலோடு ஒக்கும். ஆயிரம் கதிர்ப்பகலவன் ஆயிரம் இதழ்த்தாமரையை ஒருங்கு அலர்த்துவது இல்லை. எந்த மலர் அலரும் செவ்வி வாய்ந்திருக்கிறதோ, அம்மலரையே அலர்த்துவன். செவ்விவாய்க்காத மலர் உடன்நிற்பினும் அதனை அலர்த்துவான் அல்லன். அங்ஙனம் அலர்த்தாமை அவன் குற்றம் அன்று. செவ்வி வாய்க்கப்பெறாத அம்மலரின் குற்றமேயாம். இதுவும் மேலதற்கு ஒப்பாகும்.

முதல்வன் உடன் நிற்பினும் மலமறைப்பால் ஆவி அம்முதல்வனை உணராமை போர்மறவன் சினமிகுதியால் தன்மேல் ஏறுண்ட வேலினை அறியாது கைவேலால் களிற்றின் உயிரை அவ்வேலொடும் போக்கி மேல் வருகின்ற களிற்றின் உயிரைப் போக்குதற்கு வேல்நாடித் திரிந்தவன் தன்மேல் ஏறுண்டிருந்த வேலினைக் கண்டு அதனைப் பறித்தனன். பறித்து நாடியது கைகூடிற்று என்று நனிமிக மகிழ்ந்தனன். இதுவும் ஒப்பாகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

> "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
> மெய்வேல் பறியா நகும்." —திருக்குறள், எஎச.

> "பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
> வேந்தர்க்கு வேண்டும் பொழுது." —திருக்குறள், சஅக.

### மாசுடையார் அல்லர்

வீட்டுயிராம் தொன்மையுடம்போடே ஒன்றியிருப்பினும் மாசுடையா ரல்லர். துறைபோகக் கற்று நிறையுடை நெஞ்சினராய் நல்லொழுக்கில் தலைநின்றார் முன் உடம்போடு கூடிக் காணப்பெறினும் கல்லார் ஆகாமை இதற்கு ஒப்பாகும் முதல்வன் சண்டேசுர நாயனாரை "அந்த உடம்பு தன்னுடனே அரனார் மகனார் ஆயினார்" என்பதும இதற்கு ஒப்பாகும். அத்திருப்பாட்டு வருமாறு:

"வந்து மிகைசெய் தாதைதாள்......"

—௩௨௩ - ஆம் பக்கம் காண்க.

நம்பி ஆரூரர் மாசகல் திருமேனி மெய்யுணர்வுப் பகுதியாகிய வெள் ளானைமீது விழுமியான் திருவருளால் கெழுமி வெள்ளிமலைக்குச் செல்லுங் கால் அவர்தம் திருமேனி இறைவிளக்கம உற்றமை அகச்சான்றாக அருளிய திருப்பாட்டான் உணர்க:

"தானெனை முன்படைத்தான்... . ..."

—௩௮௫ - ஆம் பக்கம் காண்க.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."

—திருக்குறள், ௫0.

### இலக்கணம்

'ஏ'காரம் தேற்றம். இஃது அல்லிருளே என்பதன்கண் காணப் படுவது.

'காணரும், பகலும்' ஆகுபெயர். 'காணர்' என்பது காணும் தொழில் இல்லாத கண்ணைக்குறித்து நிற்றலால் ஆகுபெயர். 'பகல்' என்பது பகற் காலத்தைச் செய்யும் ஞாயிற்றைக் குறித்து நிற்றலால் ஆகுபெயர்.

'நேர்' இது தன் உணர்ந்தார் நேர் என்பதன்கண் காணப்படுவது. இந் 'நேர்' ஏழாம்வேற்றுமைப்பொருட்கண் வரும் உருபு. அஃது உருபு மயக்கமாய் நான்காவதன்பொருள் உணர்த்திற்று. 'பத்தியினல் மறவாது உணர்வார்க்கு' என்று பொருளாகும்.

'நீக்குதல்' இது 'பாசத்தை நீக்கும்' என்பதன்கண் காணப்படுவது. தாமரையின் கூம்புதலை நீக்கும் என்றாகும். 'அலர்த்தல்' பாசத்தை நீக்கும் என்பதன்பின 'அறிவை' அலர்த்தும் என்பதனோடு கூட்டுக. "கூம்புதலை, அறிவை' என்ற சொற்கள செயப்படுபொருளாக வருவிக்கப் பட்டன.

'மன்னும்.......................தான்.'

## II. அன்பு

அன்பு எனப்படும் வேட்கையாகிய இச்சை விளங்குதல் எங்ஙனம் எனின், கூறுதும். "இவ்வாறு செவ்வி வரச்செய்து மாசினை நீக்கி அறிவை அலர்த்துவதாகிய அருட்கண் புதுவதாய் ஒரு காலத்தின் நிகழ்ந் தொழிவதன்று என அதனது உதவி உணர்த்துமுகத்தானே" (பேருரை) விளங்கும்.

## படிமுறை

இருள்நீக்கமும் தெருள்ஆக்கமும் அருளால் நிகழ்வன. அவை ஒருகாலத்து ஒருங்கு நிகழ்வன அல்ல. சிறிது சிறிதாக நிகழ்வன. அஃதாவது இருள் சிறிது சிறிதாகக் குறையும்; தெருள் சிறிது சிறிதாகக் கூடும். தெருள் - மெய்யுணர்வு; திருவடி ஞானம். இதற்கு ஒப்பு பிறைமதியாகும். பிறைமதி வளர்பக்கத்துத் திங்கள். இதனை முற்பக்கம் என்ப. வெள்ளைப்பக்கம் எனவும் கூறுவர். இதன் கலை குறைந்துவருங்கால் குறைமதி என்ப. குறைமதியினைத் தேய்பிறை என்ப. பிற்பக்கம் எனவும் கூறுவர். தளர்பக்கம் எனவும் கூறலாம். இருட்பக்கம் என்பதும் இதுவே. இவற்றை முறையே சுக்கிலபக்கம் கிருட்டிணபக்கம் என்ப.

நாளும் பிறை வளரவளர இருள் சிறிது சிறிதாகத் தளரும். ஈண்டுத் தளர்தல் தேய்தல். பிறையும் வளர்ந்து நிறையுங்கால் இருள் முற்றாக நீங்கும். அப்பொழுது ஒளி முற்றாக நிறையும். அப்பொழுது நிறைமதி என்ப. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

> "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
> பின்னீர பேதையார் நட்பு."— —திருக்குறள், எஅஉ.

நீரவர் கேண்மை - முதல்வன் திருவருள். பேதையார் நட்பு-ஆணவ வல்லிருட்சேர்க்கை.

"ஈண்டு மதி என்றது ஏற்புழிக்கோடலான் வளர்பக்கத்துத் திங்கள் மேல் ஆயிற்று" என்பதற்குக் காட்டிய காட்டு வருமாறு:

> "அந்த அருள்உனக்கிங் காதார மாய்அல்லின்
> இந்து எனஎறித்திட்டு ஏகமாய்—முந்தி
> உனைஉனக்குத் தான்விளக்கி ஓவாது உணர்த்தும்
> தனைஉனக்குக் காட்டுமே தான்." —துகளறு. நடசு.

அல்லின் இந்து - வளர்பக்கத்துத் திங்கள்; பிறைமதி.

## ஆவிச் செயல் அன்று

பண்டே புல்லிய மலவாற்றல் விண்டகலுதல் ஆவியின் செயல் அன்று; முதல்வன் செயலே. இதனை வலியுறுத்துதல், 'மன்னும் அரனே மலந்துரந்து" என்றதன்கண் உள்ள 'அரனே' என்பதில் காணப்படும் 'ஏ' காரத்தால் குறிக்கப்பட்டுள்ளது. இவ் ஏகாரம் பிரிநிலை.

## இலக்கணம்

"வான்பான் பாக்கு" தொழில் பெயரும் ஆகும். அங்ஙனம் ஆகுங்கால், 'வசம் செய்வான்' என்பது வசம் செய்தல் என்றாகும். இதற்குக் காட்டு:

> "கண்உள்ளார் காத லவராகக் கண்ணும்
> எழுதேம் கரப்பாக்கு அறிந்து." —திருக்குறள், ககஉ௭.

கரப்பாக்கு - கரத்தல்.

"ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக்கு அறிந்து." —திருக்குறள், ௧௩௬.

ஏதம் படுபாக்கு - குற்றம் உண்டாதல்.

உவம உருபு - செஞ்செய்வான்போல.

சலித்தல்-வேசறுதல். வேசறுதல் - வருந்துதல். இது, 'சலிப்பில் விகாரியலன் தான்' என்பதன்கண் காண்க. வரும் திருப்பாட்டும் இதனை வலியுறுத்தும்.

"ஏசினும் யானுன்னை ஏத்தினும் என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவழவெற்பின்
தேசுடை யாயென்னை ஆளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின ஆலமுண் டாய்அமு துண்ணக் கடையவனே."
—அ. நீத்தல் - ௫௦.

வேசறுவேனை - வருந்துவேனை.

## திரிபெய்தான்

காந்தம் இரும்பைத் தன்பால் இழுத்து ஒட்டியுறச் செய்யுமாறு போல முதல்வனும் ஆவியை இருள் நீக்கித் தன் ஆளாக்கித் தன் திருவடியைப் பற்றி விடாது இன்புறச் செய்கின்றனன். அச்சகாந்தம் இரும்பாகவேனும், இரும்பும காந்தமும் என்னும இருதன்மையாகவேனும் திரிபு எய்தாது காந்தமாகவே நிற்பதுபோல் முதல்வனும் ஆவியாகவேனும் ஆவியும் முதல்வனும் என்னும் இருதன்மையாகவேனும் திரிபெய்தான். முதல்வனாகவே இருப்பன். ஈவானும் ஏற்பானும் கலந்து ஈயப்படுதலால் ஏற்பான் இன்புறக் காணுமன்றே? அங்ஙனம் காணினும் ஈவான் பெரும்பாலும் திரிபு எய்தான். இதுவும் ஒருபுடை ஒப்பாகும். திரிபெய்தாமைக்கு ஒப்பு வரும் திருப்பாட்டான் உணர்க:

"இரும்பைக்காந் தம்வலித்தாற் போல்இயைந்தங் குயிரை
எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தைஅனல் அழிப்பதுபோல் மலத்தை
அறுத்தமலன் அப்பணைந்த உப்பேபோல் அணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை ஒளிப்பதுபோல் அடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பான் ஆகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியைஒத் திருப்பன்அந்த முத்தியினிற் கலந்தே."
—சித்தியார், ௧௧. ௨ - ௧௨.

## வசமாக்கல்

ஆவி ஆண்டானைப்பற்றி விடாது என்றும் ஒருபடித்தாய் நிற்கச்செய்வதே வசமாக்கல் என்ப. ஆண்டான் ஆவியோடு பிரிப்பின்றி நிற்றலை ஆவி மலமறைப்பால் அறியாதிருந்தது. அவ் அறியாமையை ஆண்டான் படிமுறையாய் நீக்கித் தன்னை உணரும் உணர்வை அறிவித்துத் தன்னைப் பற்றச் செய்வதே வலித்து வசமாக்கல் என்பதாகும். திருவருளாலே உள்ளம் வசமாதல்வேண்டும். அங்ஙனம் வசமாயின், அன்பர் பணி செய்தல் வாய்க்கும். அன்பர் பணியே ஆண்டான் திருவடியில் கூட்டும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணரலாம்:

"உய்யும் படிக்குன் திருக்கருணை
ஒன்றைக் கொடுத்தால் உடையாய்பாழ்ம்
பொய்யும் அவாவும் அழுக்காறும்
புடைபட் டோடும் நன்னெறியாம்
மெய்யும் அறிவும் பெரும்பேறும்
விளங்கும் எனக்குன் அடியார்பால்
செய்யும் பணியும் கைகூடும்
சிந்தைத் துயரும் தீர்ந்திடுமே."

—தாயுமானவர், ௨௩. தன்னை - ௬.

'நசித்தொன்றின்............கழல்.'

## III. ஆற்றல்

ஆற்றல் என்பது ஆவியின் தொழில் நிலையாகும். தொழில் நிகழும் முறையைச் சேறல் என்னும் சொல்லால் ஓதியருளினர். சேறல் - செல்லுதல்.

### கெடாது கூடல்

ஆவி ஆண்டான் அடியிணையைச் சாருங்கால் கெட்டுக் கூடுமோ? கெடாது கூடுமோ? என எண்ணுவார்க்கு ஆவி கெட்டால் கூடுவதாகிய பெருநிலை இன்று; கெடாது நிற்பின் கூடுமாறும் இல்லை. பின் என்னையோ பொருள் எனின்? ஆவியின் செறிவறிவை மறைத்துச் சுட்டறிவு சிற்றறிவுகளாகத் திகழும்வண்ணம் செய்யும் மலமாயை கன்மங்கள் நீங்குதலாகிய கேடெய்தப் பேரறிவு பிறங்கிப் பேரின்பம் உறற்குரிய ஆவி கெடாது ஆண்டான் திருவடியைக் கூடி இன்புறும் என்க. எனவே, கெடுதல் மலம் மாயை கன்மங்கள். இவற்றைப் பாசம் என்ப. ஆவி பாசத்தோடு பிணிப்புற்றிருக்குங்கால் பசு எனப்படும். இத்தன்மையைப் பிணிமை என்ப. பிணிமை என்பதே பசுத்துவம். எனவே, பசுத்துவம் கெடும். மல மாயை கன்மங்கள் கெடுதல் என்பதும் அவற்றின் ஆற்றல் அடங்குவதேயாம். ஆவிக்குக் கேடு என்றும் இன்று.

கலம் முதலிய பொருள்கள்மேல்படர்ந்து அவற்றை மறைத்து விளங்க ஒட்டாது செய்யும் புழுதியினைப்போக்கி, நீர் நிறம் முதலியவற்றால் பூசிப் புனைந்து அழகுறுத்துங்கால் அக்கலம் முதலியன கெடாமையும், அழகு முதலியன விளங்கித் திகழ்தலும் ஒப்பாகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு." —திருக்குறள், ௨௬எ.

துன்பம் - மலம் மாயை கன்மங்களின் பிணிப்பு. சுடுதல்-திருவருள் வழிநின்று ஒழுக அவ்வருள் அவற்றை அடக்குதல். நோற்றல் - இறை பணிபுரிதல்; அருள்வழி நிற்றல். இதுவே தவம்.

"சிற்றறிவு முன்சிதையின் சேர்வார்இன் றும்சிறிது
மற்றதனின நிற்கில்அருள் மன்னுவாம்—துற்றமுகில்
மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா
என்கொண்டு காண்பே னியான." —வினாவெண்பா, ௬.

சிற்றறிவு சிதையவேண்டும். முற்றறிவு துதையவேண்டும். துதைதல் - செறிதல்; மிகுதல். அறிவுப் பொருளாகிய ஆவி கெடாதிருத்தல் வேண்டும். நோய் மாளவேண்டும்; நோயாளி நலம்பெற்று மீளவேண்டும் என்பது இதற்கு ஒப்பாகும். ஆனால், நோயாளி மாளுதல் கூடாது.

## மலமும் கெடா

மலம் மாயை கன்மங்கள் தொன்மைய ஆதலின் அவையும் அழிவுறா. ஆனால், அவை வீட்டுயிரை விட்டகன்று கட்டுயிரோடு நிற்கும். தேறிய மாணவனுக்கு அவ்வகுப்புப் புத்தகம் பயிற்சிக்கு வேண்டுவதில்லை. ஆனால், அப்புத்தகம் கற்கும் மாணவரால் பேணப்பட்டு அழிவெய்துவது மின்று. இவை மலநிலைக்கு ஒப்பாகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"நெல்லினுக்குத் தவிடுமிகள் அநாதி யாயே
நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பால் இல்லை
தொக்கிருந்து மற்றொருநெல் தோன்றி டாவாம்
மெல்லஇவை விடும்அறவே இவைபோல அணுவை
மேவுமலம் உடல்கன்மம் அறுதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின்கண் பெத்தான மாவை
நணுகிநிற்கும் ஆதலான் நாசமுமின் றாமே."

—சித்தியார். ௧௧—௬.

## எச்சம்

எச்சம் என்பதும் சேடம் என்பதும் ஒன்று. யாதொன்று யாதொன்றன் பொருட்டாய்த் தனக்குரிமை, ஏதுமின்றி நிற்பததன் எச்சம் எனப் புகல்வர். எச்சமாவது தனக்கு எனத் தனி உரிமை யின்றிப் பிறிதொன்றன் பொருட்டாய்த் தான் சார்ந்து நிற்பது. பெரும்பாலும் மக்கள் ஈன்றோரையும், மாணவர் ஆசிரியரையும், காதலர் நண்பர் முதலாயினர் தம்முள் ஒவ்வொருவரையும் களைகணுக் கொண்டு தமக்கெனத் தனி உரிமை இன்றிச சார்ந்து நிற்கும் நிலை இதற்கு ஒப்பாகும்.

சேய் தாயினையே அறிந்து தாயினையே பற்றித் தாய்ப்பாலே உண்டு இன்புற்று வாழ்தல்போல் ஆவியும் முதல்வனையே அறிந்து முதல்வன் திரு அடியேபற்றி அத்திரு அடியின்பினையே நுகர்தற் பொருட்டுத் தனக்கென வேறு உரிமை இன்றி இருக்கும் என்றுமுள்ள எழிற்பொருள். எனவே ஆவிகள் அனைத்தும் ஆண்டானுக்கு எச்சமாகும். அவனால் படைத்து நல்கிஅருளிய உடல்கலன் முதலன அவன் திருத்தொண்டினுக்கே உரிய. ஆவிகளும் அவன் திருவடி அடைதற்கே உரியன. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்."

—திருக்குறள், ௧00௪.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே."

—௫. ௬0—௭.

**பொது, சிறப்பு**

ஆவி முதல்வன் ஆணைவழி நிகழும் மும்மலப்பிணிப்புக்கு அஞ்சியோ அன்பு பட்டோ அதன்வழி ஒழுகிவருமளவும் அவற்றிற்கு அடிமை யாவ தன்றி ஆண்டாற்கும் பொதுஅடிமையாகும். ஆண்டானும் அவ் ஆவி களைப் பொதுமையில் நோக்கியருள்வன். ஆவிகள் திருவருளால் ஆணை வழிக் கட்டடிமை ஆம்பொதுவிங்கு ஆண்டாற்குப், பூணடிமை ஆம் சிறப்புப் போற்று என்னும் மெய்ம்மை ஓர்ந்து மலத்துக்கு அடிமை யாவதை விட்டுத் திருவருளுதவியால் சிவத்துக்கு அடிமையாகி யிறைபணி யில் நிற்கும். இது சிறப்பு அடிமையின் பெற்றியாகும். ஆண்டானும் இந்நிலையில் சிறப்பாக ஆவிகளை நோக்கிஅருள்வன். கல்லூரியில் மூத் தாசான் மாணவரை முன்னும் பொதுமையினில், சீர்த்ததன் மாணி சிறப்பாக நோக்கும் இயல்பு இதற்கு ஒப்பாகும். மூத்தாசான் - தலைமை ஆசிரியன். தன்மாணி-தன்பால் கற்கும் மாணவன். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"இடுக்கண்பட் டிருக்கினும் இரந்து யாரையும்
விடுக்கிற் பிரான் என்று வினவுவோம் அல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினும் அருளின் நாம்உற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே." —ச. கக—ச.

"என்னை ஏதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும்முன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தெனே." —ரு. ககக—அ.

ஏதும்-சிறிதும். அறிந்திலன்-உடனாய் உணர்ந்திலன்; ஆண்டவன் ஆவிகளுக்குத் தன்னை உணர்த்தி உணர்ந்திலன் என்பதாம்.

ஆவிகள் ஆண்டானுக்குப் பொது அடிமையாம் தன்மை "அவையே தானேயாய்" என்னும் இரண்டாம் (எக) நூற்பாவால் பெறப்படும்.

**மூத்திறம்**

ஆவிகளைக் கட்டுயிர் கற்புயிர் ஒட்டுயிர் என மூவகையாகப் பிரிக்க லாம். கட்டுயிர் ஆம் பொதுமை கற்புயிர்கைக் கொள்சிறப்பு, ஒட்டுயிர் மெய்ச் சிறப்பாம் ஓர் எனக்கொண்டு இரண்டாம் நூற்பாவின்கண் "அவையுடைமை ஆளாம் நாம் அங்கு" (கஙக) என்பதன்கண் பெறப்படு வது பொது அடிமை ஆகும். இந்நிலை நடப்பாற்றல் நிகழ்த்தும் கட்டு நிலையாகும். ஒன்பதாம் நூற்பாவின்கண் "அண்டனும் சேடனும் அங்கு" (சசரு) என்பதன்கண் பெறப்படுவது பயிற்சிச சிறப்படிமையாகும். இந் நிலையைக் கற்புயிர் எனக் காண்க. இது வனப்பாற்றல் நிகழ்த்தும் கற்பு நெறியாகிய பயிற்சியாகும். கற்புநெறி என்பது கணவன் வழிநிற்கும் பொற்பு நெறியாகும். மேலும் இவ்வெண்பாவின்கண் வரும் சேடம் இறைவனுடன் ஒட்டிவாழும் உயர்வற உயர்நலம் உடைய ஒப்பில் ஒன்றாகுமென்ப. இது மீசசிறப்படிமையாகும். இதுவே மெய்ப்புணர்ப் புணர்வாம் உண்மை நிலை. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"கற்புறு சிந்தை மாதர் கணவரை அன்றி வேறோர்
இற்புறத் தவரை நாடார் யாங்களும் இன்ப வாழ்வும்
தற்பொறி யாக நல்கும் தலைவநின் அலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோம் கண்டாய் பூரணா னந்த வாழ்வே."

—தாயுமானார், ௩௬-௧.

## இலக்கணம்

'ஒன்றாது' என்பது நசித்தலால் ஒன்றாது எனவரல்வேண்டும். இங்கே ஒன்றா என்று நிற்கின்றது. அதனால் 'து' வ்வீறு திரிபால் தொக்கதாகும்.

பின்வந்த 'நசித்து' என்பது 'நசித்துமலம்' என்பதன்கண் காணப் படுவது. இதுகெட்டொழிய என்று பொருள் தருவதால் செயவெனெச் சத் திரிவு.

'கப்பின்றாம்' என்பது திருவடியை அடைந்த ஆவி மீளுதல் இல்லை. இதனையே கப்பின்றாம் என்றருளினர். கப்பு-கவர்சசி; பிளவு. அவினா விருத்தி என்பது கப்பின்றென்பதாம். அவிநாவிருத்தி-மாறுதலின்மை; விட்டு நீங்காமை. மீளுதலின்மை என்பது வரும் திருப்பாட்டான் உணர்க:

"மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே."

—எ. ௯௫-௧.

## இன்றியமையாமை

வீடுபேற்றின் கண்ணும் ஆவிக்கு நிகழவேண்டிய அறிவு அன்பு ஆற்றல்களுக்கு ஆண்டவனுடைய அறிவு அன்பு ஆற்றல்களின் இயைந்தி யக்கும் இயக்கம் இன்றியமையாதன என்க. தொல்காப்பிய முழுமுதற் றமிழ்நூற்கண் வரும் நூற்பா இவ்வுண்மையை வலியுறுத்தும்.

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே."

—தொல். பொருள்—அ௮.

கொடிநிலை - அன்பு. கந்தழி—அறிவு. வள்ளி-ஆற்றல். இம்மூன் றும் கடவுட்குரியன. ஆவியின் அன்பறிவாற்றல்கள் மூன்றும் நிகழக் காரணமாய் உள்ளன. முதலன-காரணமாயுள்ளன.* வடுநீங்கு சிறப்பு- கடவுளுக்கு வேறோர் காட்டுவேண்டாது தானே விளங்கும் தனிமுதன்மை. கண்ணிய வரும் - கருதப்பட்டுவரும். கடவுளைப் பெரும்பாலும் பண்பி யாக வாழ்த்துதல்மரபு. பண்பாக வாழ்த்துதலும் கொள்ளப்படும் என் பது இந்நூற்பாவின் கருத்தாகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழிஅடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்

---

* 'மூவர் நின்'. அ. திருக்கோவையார்-௩௩௭.

தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே."
—அ. கோயில்திரு—க.

திருவள்ளுவ நாயனாரும் கடவுள் வாழ்த்தில் க. ஆதிபகவன், உ. வாலறிவன், ங. மலர்மிசை ஏகினான், ச. வேண்டுதல் வேண்டாமையிலான், ரு. இறைவன், சு. ஐந்தவித்தான், எ. உவமையில்லாதான், அ. அந்தணன், கூ எண்குணத்தான், க0. இறைவன் முதலிய திருமொழிகளால் கடவுளைப் பண்பியாகவே ஓதியருளினர். பண்பி என்பது பண்பையுடைய பொருள். பண்பைக்குணம் எனவும் பண்பியைக் குணி எனவும் கூறுவர்.

"பொன்வாள்...... ...............வரத்து."

## சிற்றறிவே முற்றறிவாம்

ஆவியின் தன்மை சார்ந்ததன்வண்ணம். புனலின் தன்மை சார்ந்த தன் வண்ணமாதல் கண்கூடு அல்லவா? புனலின் வண்ணம் வெண்மை. அதனாலேயே அது சார்ந்ததன் வண்ணத்தைப் பற்றிக்கொள்கின்றது. அதுபோல் ஆவியின் தன்மையும் வெண்மை. அதனையே 'பளிங்கனைய சித்துநீ' (ங-ரு0.) எனப்பகருவர். நிலத்தியல்பால் நீர் திரியினும்' தேற்றாங் கொட்டையால் அந்நீரைத் தெளிவித்தால் சார்ந்தநிறம் பிரிந்துநீங்கும். நீங்கவே, நீர் தன் இயற்கைத்தன்மையாய வெண்மையாய் இருக்கும். அது போல் ஆவியும் மலத்தைச்சார்ந்து இருட்கண்போல் தெருளின்றி மருளின் வண்ணமாய் நிற்கும். தேற்றாங்கொட்டை அனைய திருவருட்சார்பால் மலம் அகன்று தன் தன்மையாய் முதல்வனைச் சார்ந்து சிற்றறிவே முற்றறிவாய் மூவாச்சாவா வற்று இன்பத்துற்று இடையறா இன்பம் துய்த்து வாழும். சார்ந்ததன் தன்மையும் வெண்மையும் வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு."
—திருக்குறள், சருஉ.

"பொன்பார் புனல்வெண்மை பொங்கும் அனல்சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்தூமம்—என்பார்
எழுத்து லவரயஅப் பாராதிக் கென்றும்
அழுத்தமதாய் நிற்கும் அது."
—உண்மைவிளக்கம், ரு.

"பாரது பொன்மை பசுமை உடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரது மாருதம் கருப்பை யுடையது
வானகம் தூமம் மறைந்துநின் றாரே."
—க0. உகசரு.

## மும்மைநிலை

ஆவி சார்பால் நான்காற் புலம்பும்ஐந் தாற்புணர்வும் ஆறுமுதல், மேல் ஐந்தும் ஆம்புணர்ப்பு மிக்கு விளங்கும். அஃதாவது ஆவியின் புலம்புநிலை நான்காம் நூற்பாவின்கண் விளக்கப்பெற்றுள்ளது. புலம்புநிலை எனினும் கேவலநிலை எனினும் ஒன்றே. ஆவியின் புணர்வுநிலை ஐந்தாம் நூற்

பாவின்கண் விளக்கப்பெற்றுள்ளது. புணர்வுநிலை எனினும் சகலநிலை எனினும் ஒன்றே. ஆவியின் புரிவுநிலை ஆறும் நூற்பாமுதல் பதினோராம் நூற்பா முடிய ஆறுநூற்பாக்களான் விளக்கப்பெற்றுள்ளது. புரிவுநிலை எனினும் சுத்தநிலை எனினும் ஒன்றே. சுத்தநிலை என்பது போக்கு அழிவு ஏதும் இல்லாத தனி உண்மைநிலை.

இந்நிலைகட்கு ஒப்பாக ஞாயிற்றையும் காற்றையும் கொண்மூவையும் ஓதியருளுகின்றனர். ஞாயிறு ஆவிக்கும், காற்று திருவருளுக்கும் கொண்மூ மலத்திற்கும் ஒப்பாகும். ஞாயிறு காலைப்போதில் முகிற் படலத்துள் மறைந்து முகிற்படலமாயே தோன்றுகின்றது. அதுபோல் ஆவியும் புல்லுமலத்தால் மறைப்புண்டு மலமாகவே தோன்றும். இதுவே ஆணவத்தோடு அத்துவிதமாதல். இதுவே புலம்புநிலை. இது "**போன்வாள்முன் கோண்மூவிற்புக்கு**" என்பதனுற் பெறப்படும். புக்கு-மறைந்து.

அம் முகிற்படலம் சிறு காற்றால் ஒருபுடை நீங்கியவழி ஞாயிற்றின் ஒளி ஒருபுடையாய் ஒடுங்கித் தோன்றும். அதுபோல் ஆவியும் திருவருளின் நடப்பாற்றலால் மாயை கன்மங்கள் கூட்டப்பெற்றுச் சுட்டறிவும் சிற்றறிவும் விளங்குவதாய ஒடுங்கியநிலையை எய்தும். இதுவே புணர்வு நிலை எனப்படும். ஒடுங்குதல் என்பது முற்றும் விளங்காது ஒருபுடை விளங்குவதாகும். ஒருபுடை ஏகதேசம். எழுத்தே அறியாத நிலை புலம்பு எனின் கண்டு கேட்டு எழுதிப்படிக்கும் நிலை புணர்வு ஆகும்.

அம்முகிற்படலம் பெருங்காற்றால் அடியுண்டு முழுவதும் விட்டு ஒழிந்தவழி ஞாயிறு எங்கணும் தன் ஒளியாய இயற்கையேயாய் விளங்கும். அதுபோல் ஆவியும் திருவருளின் வனப்பாற்றலால் மலம் மாயை கன்மங்களை முற்றும் அகற்றியவழி எப்பொழுதும் விடாது சார்ந்து நிற்கும் தற்சிவனையே பற்றி முற்றறிவு விளங்கி உற்றமெய்ந்நிலையாம் புரிவுநிலை எய்தும். புரிதல்—தேர்ந்து தெளிந்து சேர்தல். முற்றறிவாக விளங்குவது பண்டைச் சிற்றறிவேயாம். அது சாரபின் வளர்ச்சியால் சிறுபிள்ளை பெரியபிள்ளை ஆவதை ஒக்கும். மேலும் சார்பினுல் படியாத மாணவன் படித்த மாணவன் ஆவதையும் ஒக்கும். புரிவு ஓதுவிக்கு நிலை ஒக்கும்.

## இலக்கணம்

'தன்மை என்றார், கொண்மூவிற் புக்குழியும் கேடின்மையின்.' அஃதாவது தன்மை - இயல்பு; பொருளைவிட்டு நீங்காதது: மற்றவற்றோடு ஒட்டி இயங்குவது. இதனுல் ஞாயிறும் முகிற்படலமும் கொண்மூவும் என்றும அழியாதன என்பது உறுதியாமன்றே. அதுபோல் ஆவியும் திருவருளும் மலமும் என்றும் உள்ள அழிவில் பொருள்களே. வீட்டுயிரினின்றும் ஆற்றல் மடங்கி நீங்கியமலம் கட்டுயிரை மறைத்துக்கொண்டிருக்கும். ஆடரங்கில் ஆடுவோனுக்கு ஆசானை மறைத்து அரங்கையும் அவையினரையும் காட்டுவித்த எழினி ஆடுவோன் ஆசானைச் சார்ந்தவழி அவையினர்க்கு ஆடுவோனையும் அவன் வழி உணரப்படும் ஆசானையும் மறைத்துக்கொண்டுநிற்கும். எனவே எழினிக்கு என்றும் கேடின்று. ஆடுவோன் மெய்யடியானும் ஆசான் விழுமிய முழுமுதல்வனும் அவையோர் மெய்யடியார் நிலைஎய்தும் தன்மைநெறி வரும் உலகோராயும் கொள்க.

'ஏ'காரம் தேற்றம். இது 'தன்வாளே' என்பதன்கண் காணப் படுவது. அது 'புக்கும் ஒடுங்கியும் எங்குமாம்' ஒளி ஒன்றே என்பதை உணர்த்துதலால் தேற்றம்.

'பின்வந்த வாள் ஆகுபெயர்.' இது 'முன்வாள்' என்பதன்கண் காணப்படுவது. இவ்வாள் ஆவியின் அறிவைக் குறிப்பதால் ஆகுபெயர்.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. இஃது, "உள்ளம் மற்று உலகை உண்ணும்" என்பதன்கண் காணப்படுவது. இது மலத்துள் மறைந்து புலமபாய்க்கிடந்ததற்கு மாறாகப் பொறிகலன் உடல் உலகுக ளோடு கூடி உலகை உணணும் எனனும் பொருள் பயத்தலின் வினை மாற்றாயிற்று.

இது 'மலத்துஇரித்துச் செல்லும்' என்பதனோடு கூடுங்கால் "மற்று மலத்துஇரித்துச செல்லும்" என்றாகும். எனவே உலகை உண்ணும் என்பதற்கு மாறாக மலததுஇரித்து வரததுச் செல்லும் என்னும் பொருள் பயத்தலின் வினைமாற்றாயிற்று.

இலேசாற்கொள்ளுதல் என்பது, மலத்தைஇரித்து என்றிருக்க வேண்டுவது மலத்துஇரித்து என்றிருக்கிறது. இதற்கு விதி (ருகஉ) ஆம் பக்கம் காண்க.

உவமை ஞாயிறு (பொன்வாள்). பொருள் உள்ளம். உவமைவினை புக்கு, ஒடுஙகி, எங்குமாம். இவை பொருளில் சேருங்கால் உள்ளம் மலத் துள் மறைந்து உலகில் ஒடுஙகி வரத்து எஙகுமாம எனறாகும்.

ஞாயிற்றின் ஒப்பு ஒருபுடையே என்பார் உலகையுண்ணும் வரத்துச் செல்லும் என வேற்றுமைச சிறப்பும் உடன் ஓதினர்.

மலம்அகலுதல் கீழடங்குதல். இது விளக்கற்றம் பார்க்கும் இருள் போன்றது. மலத்திற்கு உவமை கொண்மூ. இவ்வுண்மை விளக்கும் திருப்பாட்டு:

"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு." —திருக்குறள், ககஅசு.

## நூற்பாவின் தொகைப்பொருள்

வீடு பேறு என்னும் சொல் மலநீக்கத்தினையும் சிவப்பேற்றினையும் குறிக்கும். சிவப்பேறு எனினும் திருவடிப்பேறு எனினும் ஒன்றே. இவ் விரண்டும் பயன் என்று சொலலப்படும். இப்பயன் இரண்டனுள் வீடா கிய பாச நீக்கம் பத்தாம் நூற்பாவின்கண் கூறப்பட்டுள்ளது. வீடெய்திய ஆவி தன்னொடு முதல்வன் புணர்ப்பாய் நின்று காட்டியும் கண்டும் வரும் தற்பயன் கருதாப் பெரும் பேருதவியை இடைவிடாது முழு அன்பால் நினைந்து, நினைந்து திருவடியாகிய சிவப்பேரின்பினை அடைதலே சிவப் பேறு. அஃது இப்பதினொராம் நூற்பாவால் கூறப்பட்டுள்ளது. இத னால முதல்வன காட்டும் உதவியே அன்றிக் காணும் உதவியும் உடங்கு செய்தருளுவன் என்பது பெறப்படும். காட்டும் உதவி வேறாநிற்கும் நிலை எனவும், காணும் உதவி உடனாநிற்கும் நிலை எனவும் காணப்பெறும். பெறவே ஒன்றாய் நிற்கும் நிலை இடமபோல் அமையும். ஒன்றாய் நிற் பது அன்பு எனவும், வேறாய் நிற்பது அறிவெனவும், உடனாய் நிற்பது

ஆற்றல் எனவும் பெறப்படும். ஒன்றாய் வேறாய் உடனாய் எனப்படும் இம்மூன்றுமே மெய்ப்புணர்ப்பாகும். மெய்ப்புணர்ப்பு எனினும் புனிதாத்துவிதம் எனினும் ஒன்றே.

மெய்ப்புணர்ப்பு நிலையில் ஆவிக்கு முழுமுதல்வன் உடனாய் நின்று உதவுவதால் முதல்வன் திரிபு எய்தான் எனவும், உடலூழாய்க்கழிவதற்கு ஐயம் இன்று எனவும் முதற்கூற்றில் வலியுறுத்தப்பட்டது. இரண்டாம் கூற்றில் அறிவு அன்பு ஆற்றல்கள் முறையே அயராமை, அன்பு, சேறல் என்னும் சொன்முறையால் ஓரிடத்து ஒருகாலத்து ஒருபொருளின்கண் ஒருங்கு நிகழும் உண்மை ஓதியருளினர். இதுவே யாண்டும் காண ஒண்ணா மாண்டபேருண்மையாம் என்க.

இத்தகைய ஒருமைநிலை உடம்பு உள்ளபொழுதே கைகூடுவது என்பதாம். ஒருமைநிலை எனினும் நிட்டை எனினும் ஒன்றே. மலம்தொன்மையவாயினும் மடங்கிக் கீழடங்கும். ஆவி மலச்சார்பகன்று நலச்சார்புறுதல் சார்ந்ததன்வண்ணமாம் தன்னியல்பின் உண்மையாகும். நலச்சார்பே திருவடிச்சார்பு. இதுவே ஆவியின் சிறப்புத்தன்மை என்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்கு வான்நலன்
குலமில ராகிலும் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே." —௪0. ௧௧ - ௬.

## கருத்து

ஓவா இன்பம் இறைஅடி உறுதல்

## முதுமொழி

காட்டிக்கா ணும்இறையே கண்ணின் உறுசார்பாம்
ஈட்டிய எச்சம் எரிவித்தாம்—கூட்டும்அருட்
"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்."* —திருக்குறள், ௩௫௯.

---

*"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் என்றமையால்
சார்புணர்தல் தானே தியானமுமாம்—சார்பு
கெடஒழுகின் நல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று." —திருக்களிற்றுப்படியார், ௩௪.

தியானம்—இடையறா நினைவு. சமாதி-பேரா இயற்கை. வினை - ஏறுவினை.

## பன்னிரண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரோடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே.

**எ - து. சூ - ம். எ - னின். அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமாறுணர்த்துதல் நுதலிற்று.**

*எ - து. க - ரை. எ - னின். சூத்திரக்கருத்துணர்த்துதல் நுதலிற்று.*

*(இ - ள்.) அயராஅன்பின் அரன்கழல்சென்ற முத்தர்க்குச் சீவன் முத்திநிலைக்கண் அவ்வறிவு இச்சை செயல்கள் ஒரோவழிப் புறத்துச் செல்லுங்கால் அவை செல்லுமிடம் இவையென்பது உணர்த்துமுகத்தான் வாக்குமனதீதமாய்ப் பத்தியினுன் மறவாதேத்த நின்றமுதல்வனை வாக்குமனக் கோசரமாம்படி தெளியக்கண்டு வழிபடுமாறுணர்த்துதல் இப்பன்னிரண்டாம் சூத்திரத்தின் கருத்து (எ - று).*

*சூத்திர இயைபும் இனிது விளங்கும்.*

*இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு: (அயரா அன்பின் அரன் கழல் அணைந்த சீவன்முத்தனுவான்) செங்கமல மலர் போல (விரிந்து விளங்கிய முதல்வனது) நோன்தாளை அணைய ஒட்டாது (அயர்த்தலைச் செய்விக்கும்) அவ்வியல்பினையுடைய மும்மல அழுக்கை (ஞானநீரால்) கழுவி (அங்ஙனம் அயரா அன்பு செய்யும்) மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி மலமயக்க நீங்குதலான் அன்புமிக்குடைய அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் முதல்வன் எனவே (கண்டு) வழிபட்டு வாழும் (எ - று).*

*எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது. சீவன்முத்தன் என்பது ஏற்புழிக்கோடலால் பெறுதும்.*

*நோன்தாள் வினைத்தொகை. நோன்றல் பொறுத்தல். "எடுத்துச் சுமப்பானை"* என்றார் புடைநூலாசிரியரும்.*

*கழீஇஎன்றது குறிப்புருவகம்.*

---

* *திருவருட்பயன், உயிர்விளக்கம். ௫. கிடைக்கத். (௫௬௧)*

மாலறநேய மலிந்தவர் என்றது அம்மலங்கழீஇ யன்பரொடு மரீஇயினாரென்னும் பொருள் தந்து சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

நேயமலிதல் கூறலே, வழிபாடும் பெறப்படும்.

தான் அசை.

அம்மலங்கழீஇ யென்றதனால் அறிவு வியாபரிக்குமிடமும், அன்பரொடு மரீஇயென்றதனால் இச்சை வியாபரிக்குமிடமும், தொழுமென்றனாற் செயல் வியாபரிக்குமிடமும் பெறப்பட்டன. படவே, சீவன்முத்தர்க்கு அறிவிச்சை செயல்கள் ஏனைவிடயங் களில் செல்லா என்பதூஉம் பெறப்பட்டது. இம்மூன்றும் பிரிப்பின்றி ஓரிடத்தொருங்கு நிகழ்வனவாகலின், விடய வேற் றுமை இன்மையும் உணர்க.

தொழுகவென்னாது தொழும் என்றமையின், இஃது அணைந்தோரது தன்மையென்பது பெற்றாம். அற்றாகலின் அன்றே இதனைச் சாதனஒத்தின் வையாது ஈண்டு வைத்தார் என்பது. இனித் தொழும் என்றதனை இரட்டுறமொழிந்து கொண்டு விகுதிப்பொருள்பட நின்ற முன்னிலை ஏவலாக்கியும் உரைத்துக்கொள்க. என்னை? செல்வப்பெருக்கம் உடையார்க்கு உணவாகிய ஆன்பால் உடம்பு நோயின்றி வளரச்செய்யும் மருந்துமாதல்போல, இவ்வழிபாடு மலவாசனை சிறிதும் தாக்குத லின்றிச் சிவானந்தம் மேன்மேல் வளரச்செய்யும் சாதனம் ஆத லும் உடைமையின். கண்ணழித்துரைபற்றி விதியாகவைத் துரைத்தலும் அதுபற்றி.

இதனுள், செம்மலர் நோன்தாள் சேரல்ஒட்டா அம்மலங் கழீஇயென்றது ஓரதிகரணம்; அன்பரொடு மரீஇயென்றது ஓரதிகரணம்; மாலறநேயம் மலிந்தவர்வேடமும் ஆலயந்தானும் அரன்எனத் தொழுமேயென்றது ஓரதிகரணம்; ஆக மூன்று அதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.

## விளக்கம்

### தெளியக்கண்டு வழிபடல்

விழுமியமுழுமுதல்வன் "மாற்றம் மனம்கழிய நின்ற மறையோன்" என்பதே வாக்கு மனாதீதமாய் நிற்கும் பதி என்பது. இதனுள் 'மனம் கழிய நின்ற மறையோன்' என்பதே 'அசிந்திதனாய் நின்ற பதி என்ப தாம். "சிந்திதனைக் கண்டு" என்பது மனம்வழியக் கண்டு என்பதாம். அன்பினால் அகததுககணடு "அயரா அன்பின் அரன்கழல்" செல்லும் ஆவி **விழுப்பேற்றுயிர்** எனப்படும். விழுப்பேற்றுயிர் என்பதைப் பரமுத்

தன் எனப்பகர்வர். விழுப்பேற்றுயிரின்நிலை பதினோராம் நூற்பாவின் கண் ஓதியருளினர். இஃது அகவழிபாடாகும். அகவழிபாடு வழிபடப் படும் பொருளுக்கும் வழிபடுவார்க்கும் புலனும் பொருவில் புலச்செய லாம். அன்பாற் காண்டலைப் 'பத்திவலையிற்படுவோன் காண்க' என் றருளினர். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"எழிலார் இராச சிங்கத்தை இராமேச்சுரத்தெம் எழிலேற்றைக்
குழலாற் கோதை வரைமார்பிற் குற்றாலத்தெம் கூத்தனை
நிழலார் சோலை நெடுங்களத்து நிலாய நித்த மணாளனை
அழலார் வண்ணத் தம்மானை அன்பில் அணைத்து வைத்தேனே."
—சு.௧௫-எ.

"பந்தித்த வல்வினைப் பற்றறப் பிறவிப்
படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச்
சந்தித் ததிற லாற்பணி பூட்டித்
தவத்தை ஈட்டிய தம்மடி யார்க்குச்
சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதம்
சிவலோ கந்திறந் தேற்றவல் லானை
வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே." —எ.சுஎ-எ.

கந்தமலர்க் கொன்றையணி..............௪சு௪. ஆம் பக்கம் காண்க.

"வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல." —திருக்குறள், ௩௪௨.

ஈண்டியற்பாலபல—'அயரா அன்பின் அரன்கழல்' செல்லல்.

## வழிப்பேற்றுயிர்

மனம்கழிய நின்ற மறையோனை அன்பால், மனம் வழியப் போற்றுமுறை மற்றன்னிப் புறத்துவழிபடுவதாகும். இவ்வழிபாடு புறத்தார்க்கும் புலனாவது எனவே இது புறவழிபாடாகும். இவ் வழிப்பேற்றுயிரை வீட்டுயிர் எனவும் சீவன்முத்தன் எனவும் கூறுப. இவ்ஆவிக்கு ஒரோவழி அறிவு அன்பு ஆற்றல்கள் புறத்துச் செல்ல நேரின் ஆண்டும் ஆண்டவன் தொடர்பே பற்றிநிற்கும். அதுவே இந் நூற்பாவின் கருத்து. மனம்வழியப் போற்றுமுறையே தெளியக்கண்டு வழிபடுதல்ஆகும்.

## தொழிற்படுதல்

ஆவியின் அறிவு அன்பு ஆற்றல்கள் தொழிற்படும்முறை அறிவால் மலம் கழுவல் அன்பால் அடியார், செறிவாற்றல் கோலம் கோவில் என்பனவாம். அஃதாவது ஆவியின் அறிவு தொழிற்படுங்கால் மலம் கழுவுதல்; அன்பு தொழிற்படுங்கால் 'அடியார் நடுவுள்இருக்கும் அருள்' பெறல்; ஆற்றல் தொழிற்படுங்கால் திருக்கோலம் திருக்கோவில் முதலிய சிவபெருமான் திருவடி நினைப்பிற்குரிய நினைப்பூட்டுக்களைத் தினைத்தனைப் பொழுதும் மறவாதுவழிபட்டு விழுப்பேறு எய்துதல். தொழிற்படுதல் எனினும் வியாபரித்தல் எனினும் ஒன்றே. இவை ஓரி டத்து ஒருகாலத்து ஒருபொருளின்கண் ஒருங்கு நிகழ்வதால் இவற்றுற் பெறுபயன் சிறப்பேயன்றி மறப்பாற்பெறும் பிறப்பு அன்றென்க.

மறப்பே பெருநலத்தை இழப்பித்துப் பெருங்கேட்டில் உழப்பிக்கும் சொல்லொணுக் கொடுமை வாய்ந்தது. அதற்கு அஞ்சிஅகல்வதே அறம். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுஉலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு." —திருக்குறள், ௫௩௩.

"துறக்கப்படாத................—எ௪. ஆம் பக்கம் காண்க."

'செம்மலர்...... .........தொழுமே.'

(பொ. மை.) செந்தாமரை அனைய மெய்யடியார்களை எடுத்துச் சுமக்கும் முழுமுதல்வனுடைய திருவடியை அணைய ஒட்டாது அயர்த்தலைச் செய்விக்கும் அவ்இயல்பினையுடைய மும்மல அழுக்கை ஆண்டானுல் அருமறை கைக்கொண்ட மெய்யுணர்வுநீரால் கழுவி அயரா அன்பு செய்யும் மெய்படியார்களோடு கலந்துகூடி மலமயக்கம் நீக்குதலான் அன்புமிக்குடைய அவரது திருக்கோலத்தையும் திருக்கோவிலையும் முதல்வன் எனவே வழிப்பேற்றுயிராகிய ஆவி கண்டு வழிபட்டு வாழும்.

**இயைபு**

"**அயரா அன்பின் அரன்கழல்**" சென்றூர்க்கு வழிப்பேற்றுநிலைக் கண் அறிவு அன்பு ஆற்றல்கள் மூன்றும் புறத்தே தொழிற்படுங்கால் ஆவியின் அறிவின்கண் ஊறிய ஊற்றே ஒழுக்கமாய்த் தொழிற்படும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து." —திருக்குறள், ௩௯௮.

"அங்கண் முன்னை அர்ச்சனையின் அளவின் தொடர்ச்சி விளையாட்டாப்
பொங்கும் அன்பால் மண்ணிமணல் புளினக் குறையில் ஆத்தியின்கீழ்ச்
செங்கண் விடையார் திருமேனி மணலால் ஆக்கிச் சிவாலயமும்
துங்க நீடு கோபுரமும் சுற்று லயமும் வகுத்தமைத்தார்."
—௧௨. சண்டேசுர - ௩௨.

"புனவளர்......... ..... ......................
௨௧. ஓர்த்தது இசைக்கும் பறைபோல்நின் நெஞ்சத்து
வேட்டதே கண்டாய் கனு." —கலித்தொகை, மருதம் - ௨௭.

அம்முறையான் ஆண்டவன் திருவடிக்கண் அழுந்தப்பற்றிய பற்றின் தொடர்பால் சிவன்அடியார்பாலும் திருக்கோலத்தின்பாலும் திருக்கோவிலின்பாலும் அன்பு செல்லும். இவ்இயைபு அவாய்நிலை பற்றியதாகும். இதனுல் அதிகரண இயைபு பெறப்படும்.

வீடுபேறெய்திய ஆவிகள் உடலோடுள்ளவரையும் புறத்தும், செல்லா வழி அகத்தும், அகமிறந்த உணர்வின்கண்ணும் அறிவு அன்பு ஆற்றல்கள் முதல்வன்பால் தொழிற்பட்டுக் கொண்டே இருக்கும். உடல் நீங்கிய காலத்து உணர்வின்கண் தொழிற்படும். இஃது ஐயம் நீக்கிய இயையபாகும். இதனுல் நூற்பா இயைபு பெறப்படும். உணர்வின் உண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"**உணர்ந்தார்க் குணர்வரி**" —௫௩0. ஆம் பக்கம் காண்க.

பதினோராம் நூற்பாவின்கண் விழுப்பேற்றுநிலையின் இயல்பு ஓதியருளினர். இதன்கண் வழிப்பேற்றுநிலை ஓதியருளுகின்றனர். இங்ஙனம் கூறுதல்முறைமை. இம்முறை இயைபால் இயல் இயைபு பெறப்பட்டது.

## இலக்கணம்

எழுவாய் பதினோராம் நூற்பாவின்கண் நின்றும் வருவிக்கப்பட்டது என்பது வழிப்பேற்றுயிர் என்பதே. வழிப்பேற்றுயிர்—சீவன்முத்தன். ஆண்டு "**அயரா அன்பின் அரன்கழல் செலும்**" என ஓதியருளியது விழுப்பேற்றுயிரை. ஈண்டுக் கொள்ளப்படுவது வழிப்பேற்றுயிரை. அங்ஙனம் கொள்ளப்படுவதை எற்புழிக்கோடல் என்ப.

"நோன்றாள்" வினைத்தொகை. வினைத்தொகை என்பது முக்காலமும் விரிக்கத்தக்க பெயரடை. இது குறிக்கும் நூற்பா வருமாறு:

"வினையின் தொகுதி காலத்து இயலும்."—தொல். சொல் - சகரு.

நோன்றல் - பொறுத்தல். முதல்வன் ஆவிகளை எடுத்துச் சுமத்தலே பொறுத்தலாம். அது வருமாறு:

"கிடைக்கத் தகுமோநற் கேண்மையார்க்கு அல்லால்
எடுத்துச சுமப்பானை இன்று." —திருஅருட்பயன், சுரு.

"இவன்உலகில் இதம்அகிதம் செய்த எல்லாம்
இதம்அகிதம் இவனுக்குச செய்தார்பால் இயையும்
அவன்இவனாய் நின்றமுறை ஏகனாகி
அரன்பணியில் நின்றிடவும் அகலும் குற்றம்
சிவனும்இவன் செய்திஎலாம் என்செய்தி என்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்தது என்றும்
பவமகல உடனாகி நின்றுகொள்வன் பரிவால்
பாதகத்தைச செய்திடினும் பணியாக்கி விடுமே."
—சித்தியார். கo - க.

'கழீஇ' என்றது குறிப்புருவகம். அஃதாவது கழீஇ - கழுவுதல். இக்குறிப்பால் எதனைக் கழுவுதல், எதைககொண்டு கழுவுதல் என்று அவாவும் பொழுது மலத்தைக் கழுவுதல என்றும், மெய்யுணர்வு நீரால் கழுவுதல் என்றும் பெறப்படும். இக்குறிப்புக்கள் அதனால் பெறப்படுதலால் குறிப்புருவகம்.

'மாலற நேயம் மலிந்தவர்' என்பதும் 'அம்மலங்கழீஇ அன்பரொடு மரீஇ'யினர் என்பதும் ஒருவரையே குறிக்கும். அதனால் அத்தொடர், சொற்பொருள் பயவாது சுட்டுப்பெயராகக் கொள்ளுதலின் சுட்டுப்பெயர் அளவாக நின்றது.

'நேய மலிதல்' என்பது நாளும் அன்பு பெருகுதல். அன்புடையார் நெஞ்சமும் வாயும் எஞ்சாக் கையும் பிறவும் நினைத்தலும் வாழ்த்தலும் தொழுதலும் "திருஅங்கமாலை"யின் படி தொண்டியற்றலும் தாமாக நிகழும் தன்மைய. எனவேநேயமலிதல் கூறவே வழிபாடும் பெறப்படும். "வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும்" என்ற திருமுறைத் திருமறையின் வண்ணம் முறையே திருவருள்காட்டாக அறிவு அன்பு ஆற்றல்கள்யாண்டும் நிகழும். விழுப்பேற்றின்கண்ணும் முழுதருள்வழி அழிவின்றி நிகழும். 'திருஅங்கமாலை.' ச. கூ. க-கஉ.

'தான்' என்பது "ஆலயந்தானும்" என்பதன்கண் காணப்படுவது. இஃது அசை.

'தொழுக' எனக்கூறியிருப்பின் அது விதிமொழியாகும். அங்ஙனம் கூறாது 'தொழும்' என ஓதியருளியதால் தன்மைமொழி ஆயிற்று. தன்மை - இயல்பு. அஃது அணைந்தோர் இயல்பு - விழுப்பேற்றாவியின் இயல்பு. இயல்பு என்றும் மாறாது தடையின்றி நிகழும் தன்மைத்து. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும்—சுடர்உருவில்
என்பறாக் கோலத்து எரியாடும் எம்மானார்க்கு
அன்பறாது என்நெஞ்சு அவர்க்கு." —௧௧. அற்புதத் - ௨.

"தொழும்" என்பதனை இரட்டுறமொழிந்தால் ஒன்று முக்காலத்துக்கும் ஒத்துஇயலும் படர்க்கைவினையாய் என்றும் தொழுங்குன்றா இயல்பினை உணர்த்தும்.

"முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழும் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்."
—தொல். சொல் - ௨௪0.

என்ற விதியின்படி செய்யும் என்னும்முற்றான் ஓதிக்கொள்ளுதல் வேண்டும்.

மற்றொன்று உம் ஈற்று முன்னிலை ஏவலாகக்கொண்டு தொழுகஎனக் கூறிக்கொள்க.

## வழிபாட்டுச்சிறப்பு

ஆன்பால் உணவுநோய் அண்டா மருந்ததுபோல், வான்வழிபாடின் பம்மல வாட்டு என வகுத்துணரின் ஆன்பால் உணவாகின்றது. அம் மட்டோ நோயின்றி உடலைவளர்க்கத் துணையாம் மருந்துமாகின்றது. இப்பால் ஒன்றேஇயல்புணவும், விதிமருந்தும் ஆவதுபோல், "அயரா அன்பின் அரன்கழல் செலும்" ஆவியின் வழிபாடு பேரின்பப் பெருவாழ்வாம்துய்ப்பும் கார்மலநீக்க மருந்தும் ஒருங்கு பயக்கும் ஒப்பில் ஒன்றாகிறது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"நிலையாய் நின்னடியே நினைந்தேன் நினைதலுமே
தலைவா நின்னினையப் பணித்தாய் சலமொழிந்தேன்
சிலையார் மாமதில்சூழ் திருமேற் றளியுறையும்
மலையே உன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே."—௭. ௨௧ - ௯.

**கூறு**

௧. **செம்மலர் நோன்தாள் சேரல்ஒட்டா அம்மலம் கழீஇ.**

௨. **அன்பரொடு மரீஇ.**

௩. **மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம்தானும் அரன் எனத் தொழும்.**

## முதல் அதிகரணம்

**ஈண்டு ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைக என்றது.**

*எ - து. மே - ள். எ - னின். சீவன்முத்தர்க்கு ஒருதலையான் முன்னர்ச் செய்யக்கடவது இதனைச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துஉரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.*

*கன்மமலமே தன் மூலத்தை நோக்கிக் கான்மியம் எனவும் படும். காமியம் எனப் பாடம்ஓதி, ஆகாமியம் காமியம் எனத் தலைக்குறை என்று உரைப்பாருமுளர்.*

**அவைதாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்துமாகலான்.**

*எ - து. ஏது எ - னின். "மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" எனப் பாசநீக்கம் மேலே பெறப்பட்டமையின், மெய் யுணர்ந்து நிட்டைகூடியபின் அவை களையக்கிடத்தல் யாங்ஙன மென்பாரை நோக்கிச் சூத்திரத்தின் உடம்பொடு புணர்த்து ஓதிய பொருளைத் தெரித்துணர்த்தி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.*

(இ - ள்.) *அம்மலங்கள் மூன்றும் மெய்யுணர்ந்து நிட்டை கூடினார் மாட்டும் யாதானுமோராற்றான் நுழைந்து தம் மெய் யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீதவுணர்வை மேற்படுத்துவனவாம் ஆகலான், அஃதவர்க்காகாமையின் ஈண்டு ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங் களைக் களைகஎன மேற்கொண்டது (எ - று).*

*உணர்த்துதல் உணர்விற்கேதுவாதல்.*

*ஈண்டு அஞ்ஞானம் என்றது விபரீதவுணர்வை.*

*புண்ணிய பாவம் பொருந்தும்இக் கான்மியமும்
மண்முதல் மாயைகாண் மாயையும்—கண்ணிய
அஞ்ஞானம் காட்டும்இவ் ஆணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு.

*எ - து. உ - ம். எ - னின். அவை அஞ்ஞானத்திற்கு ஏது வாய்வந்து நுழையுமாறும் அஃது அவர்க்கு ஆகாமையும் தெரித் துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதல் நுதலிற்று.*

(இ-ள்.) *புண்ணிய பாவம்பொருந்தும் இக்கான்மியமும்— புண்ணிய பாவப்பயனும் புண்ணியபாவ காரணமாயும் பொருந்*

* 'செங்கமலத்.' சித்தியார். கஉ-க.

துகின்ற இக்கன்மமலமும், மண் முதல் மாயை காண் (இம்) மாயையும்—நிலமுதல் மோகினிஈறுகக் காணப்படுகின்ற இம் மாயாமலமும், கண்ணிய அஞ்ஞானம் காட்டும் இவ்ஆணவமும்—சுட்டி அறிவதாகிய விபரீதஉணர்வைப் பயக்கும் இவ் ஆணவ மலமும், இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு—இமமலங் கள் மூன்றும் மெய்யுணர்வுடைய உனக்கு ஆகாமையான் அவற்றை விடுத்து ஒழிவாயாக (எ - று).

எல்லாமலங்களும் பற்றறத்துடைத்து மெய்யுணர்ந்து நிட்டைகூடினார்க்கு உடம்பு நிற்கும் அளவும் பிராரத்தவினை அவ் உடம்பைப் பற்றி நிற்றலான் அஃது அவர்க்கு ஒரோவழி வாசனைவயத்தான் இங்குளி வாங்கும் கலம்போல வந்து தாக் கும்; அவ்வழிப், *“பிற்செயாதநுபவிப்பதின்று” ஆகலின் அது சார்வாக விருப்புவெறுப்புக்கள் உளவாம்; அவை உள வாகவே, †“பரமேபார்த்திருப்பார்”க்கு நிலமுதலிய ஏகதேசப் பொருள் காட்சிப்படும்; படவே, அவற்றைச் சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாம்: இவ்வாறு இம்மூன்றும் அறிவற்றம் பார்த்து இம்முறையானே வந்து தலைப்படும் எனக் காட்டிக் கூறுவார் கன்மம் மாயை ஆணவம் என்று இம்முறையின் வைத்து அவ்வக்காரிய நிகழ்ச்சிகளை எடுத்தோதிச் சுட்டிக் கூறினார். இகரச்சுட்டு இடையினும் வந்தியையும்.

புண்ணியபாவம் என்றது உபசாரம்.

முன் வந்த மாயை முப்பத்தொராம் எண்ணு முறைமைக் கண்நின்ற தத்துவத்தை உணர்த்தி விடாத ஆகுபெயராய்த் தன்னை ஈறுகவுடைய ஏனைத் தத்துவங்களையுந் தழீஇயிற்று.

காண்மாயை செயப்படுபொருளோடு முடிந்த வினைத் தொகை.

இவை சிவபோகப் பெருவாழ்வை இழப்பித்தலின் மெய்ஞ் ஞானிக்குஆகாஆயின. மேன்மேன் முறுகுவனவாய இவற்றைத் தோன்றும்பொழுதே துடையாக்கால் ‡“களைகுநர் கைகொல் லுங் காழ்த்த விடத்து” என்னு முறைமைத்தாய் முடியுமென் பதுபற்றி விடுஎன ஈண்டும் வலியுறுத்தப்பட்டது. விடுதலாவது, அவை அம்முறையானிகழ்ந்தவழி இவ்வஞ்ஞானம் ஏகதேசக் காட்சியான் ஆயதெனவும், அக்காட்சி விருப்புவெறுப்புக்களது

* சிவஞானசித்தி, ௨-ம் சூத்திரம். ௧௧. முற்செயல்.
† சிவஞானசித்தி, ௧௧-ம் சூத்திரம், பரஞானத்தாற். (௬௫)
‡ திருக்குறள், ‘இளைதாக.’ ௲௪0.

தோற்றத்தான் ஆயதெனவும், அத்தோற்றமும் பிராரத்தவினை நுகர்ச்சிக்கட்சென்ற தற்போதத்தால் ஆயதெனவும், அறிந்து அங்ஙனஞ் செல்வதாகிய தற்போதம் முளையாதவாறு பரிகரித்துச் சிவஞானத்துள் அடங்கிச் சிவாநுபவம் சுவாநுபூதியாம்படி ஞானநிலையில் உறைத்துநிற்றல்.

மாயை கன்மங்கள் அஞ்ஞானங்காட்டுதல் ஆணவமலச் சார்வானுய செயற்கை என்பது உணர்த்துதற்கு, மூன்றற்கும் பொதுவாக ஏதுவுட்கூறிப்போந்த அதனை ஈண்டு ஆணவமாத்திரைக்கே சிறந்தெடுத்து ஓதினூர்.

## விளக்கம்

### முற்செயல் அறிவு

வழிப்பேற்று ஆவிக்குப் புறத்து முதற்கண் செய்யக்கடவது மும்மலங் களைக் களைதல். இதனுல் அறிவு புறத்துத் தொழிற்படும் முறை காணப் பெறும். மும்மலங்களா ஆவன ஆணவம் மாயை கான்மியம் என்பன. ஆணவம் என்பது மன்மறைத்தல் தொன்மைமலம் மாறு படவுணர்த்தல், அன்னபுணர்ப் பாணவமாம் அங்கு என்பதற்கு இயைய மலம் தொன்மையே தன் ஆற்றலால் ஆவிகளின் அறிவு விளங்க ஒட்டாது புலம்மூடிப் புல்லிப் புலம்புறச் செய்வது. இம்மலம் பேதைமை எனப்படும். புலம்பு - தனிமை; கேவலம். திருக்குறள்; நினைந்தவர் **புலம்பல்** காண்க.

இம்மலத்தின் ஆக்கப்பாடாகிய "யான் எனது என்னும் செருக்கு" ஆணவம் எனப்படும். இவ் ஆணவம், மாறுபாட்டுணர்வு எனவும்படும். மாறுபாட்டுணர்வினை விபரீத உணர்வு என்ப. இதுவே "நில்லாதவற்றை நிலையின என்றுணரும் புல்லறிவாண்மை." மலத்தைப் பேதைமை என்றும் மல ஆக்கத்தைப் புல்லறிவாண்மை என்றும் கூறுதல் பொருந்தும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

> "நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
> பேணுமை பேதை தொழில்." —திருக்குறள், அ௩௩.

யாதொன்றும் பேணுமை - யாதும் அறியாமை.

> "வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
> உடையம்யாம் என்னும் செருக்கு." —திருக்குறள், அசச.

வெண்மை - ஈண்டு மாறுபாட்டுணர்வு. வெண்மை - வயிரமின்மை; உறுதியின்மை. இருண்மை - மலத்தன்மை. வெண்மை - ஆணவத் தன்மை. மருண்மை - மலச்சார்பான் ஆய மாயாகாரியத் தன்மை. தெருண்மை - அருட்சார்பானுகிய தெளிவு. அருண்மை - அருள்வழி நிற்றல்; இறைபணி. பொருண்மை - திருஅடி தலைப்படுதல். இதுவே "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே." (௪சக) இவற்றை ஒருங்கு கூறின், இருண்மைவிளா வெண்மை மருண்மை தெருண்மை, அருண்மை பொருண்மையோர் ஆறு.

மலமாகிய பேதைமை பத்தாம் நூற்பாவின்கண் "மலம் மாயை தன்னெடு வல்வினை இன்றே" என ஓதியருளியதனுல் பெறப்பட்டு

மடங்கிக் கீழ்ப்பட்டமைந்தமை விளங்கிற்று. இம் மலம் இருண்மை எனப்படும். ஈண்டு "அம்மலங்கழீஇ" என்பது பதினோராம் நூற்பாவின்கண் அயர்த்தலைச் செய்யும் மலமாகிய ஆணவம் என்ப. ஆணவம்-புல்லறிவாண்மை. இப் புல்லறிவாண்மையைக் களையும் முறை ஈண்டு வலியுறுத்தப்படுகின்றது. இப் பொருண்மை தோன்றவே 'அம்மலம்' எனச் சுட்டியருளினர். அ என்னும் சுட்டு தொன்மையைக் குறியாது. என்னை? பழமலம் பத்தாம் நூற்பாவால் அகற்றப்பெற்றமையான் என்க. பதினொன்றிலுள்ள அயராமையின்கண் அயர்த்தலைச் செய்வதைக் குறிக்கும். இங்ஙனம் குறிப்பதே 'உடம்பொடு புணர்த்தல்' என்னும் உத்தி. இவ்வுண்மை "பொய்ம்மையாம் களையைவாங்கி" என்னும் திருமுறைத் திருமறையால் உணரலாம். அது வருமாறு:

"மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப்பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையும் அன்றே."

—௪. ௭௬ - ௨.

பொய்ம்மையாம் களை - ஆணவம். மெய்ம்மையாம் உழவு - வழிபாடு (௫௪௪).

மாயை - மாயாகாரியமாகிய பொறி புலன் கலன் உடல் உலகு ஊண் முதலியனவாக விளங்கும் மாயா ஆக்கம். ஆக்கம் - காரியம்.

"மாட்டினேன் மனத்தை முன்னே மறுமையை உணர மாட்டேன்
மூட்டிநான் முன்னை நாளே முதல்வனை வணங்க மாட்டேன்
பாட்டிலும் போல நின்று பற்றதாம் பாவம் தன்னை
ஈட்டினேன் களைய மாட்டேன் என்செய்வான் தோன்றினேனே."

—௪. ௭௮ - ௪.

கான்மியம் - தொன்மைக் கன்மம் ஆகிய ஊக்கத்தின் ஆக்கமாம் இருவினை. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"தன்மமோடு அதன்மம் ஆகித் தானிரு பயனும் தந்து
நன்மைதீ மையினும் இன்பத் துன்பினும் நாடிக் காண
முன்னமே ஆன்மா வின்தன் மும்மலத் தொன்ற தாகிக்
கன்மமும் மூலங் காட்டிக் கான்மிய மலமாய் நிற்கும்."

—சித்தியார். ௨. ௧ - ௩௬.

**உணர்விற்கு ஏதுவாதல்**

"ஆணவம் மாயை கான்மியம் என்னும் மூன்று மலங்களும் மெய்யுணர்ந்தார்மாட்டும் யாதானும் ஒரு நெறியான் நுழைந்து அம்மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய அப்பண்டை மாறுபாட்டு உணர்வை மேற்படுத்துவனவாம். ஆகலான், மெய்யுணர்ந்தார்க்கு அவை ஆகா ஆகலின், அவற்றைக் களைக" என ஓதியருளினர். உணர்த்துதல் உணர்விற்கு ஏதுவாதல். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

" அன்னியமா.........................."

—௨௮௬-ஆம் பக்கம் காண்க.

'புண்ணிய...... ..............விடு.'

## விருப்பு வெறுப்பு

புண்ணிய பாவமாய் அவற்றின் பயனும் இன்பத் துன்பமாய் வந்து பொருந்தும் புலனுக்கு வித்தாய் உள்ளது கன்மம். இக்கன்மம் செய்யப் படுங்கால் நன்று தீதெனப் பெயர்பெறும். இதுவே ஏறுவினை. இவை பழவினையோடு சேர்ந்து தொகையாங்கால் அறம் பாவம் எனப்படும். இதுவே எஞ்சுவினை. பயனாய் வந்து பொருந்துங்கால் இன்பத் துன்பம் எனப்படும். இதுவே ஏனறவினை. இதனையே ஊழ் என்பர். மும் மலங்களுள் இவை கன்மமலம் எனப்படும்.

## உடல் உலகு ஊண்

மண் முதல் மாயை என்று சொல்லப்படுகின்ற அருஞ் சைவர் மெய் ஆறுமூன்றும் உடல் உலகு ஊண்களாக வந்து பொருந்தும் மாயையாக்கம் மாயாமலம் எனப்படும். இதன் விரிவு பக்கம் ௩௩0-எ, வரை காண்க.

## மாறுபாட்டுணர்வு

ஆண்மைமலம் மூன்றவற்றை ஐந்தென்ப ஆசை அவா, காண் வெகுளி மாறெழுச்சிகாண் என்றபடி ஐந்துங்கூடிய இடத்து ஆண்மை மலம் என்ப. ஆண்மைமலம் எனினும் புமஃசத்துவ மலம் எனினும் ஒன்றே. இவ் ஐந்தனுள் ஆசையை அவாவின்கண்ணும் ஆங்காரத்தை மயக்கத்தின்கண்ணும் அடக்கித் திருவள்ளுவ நாயனார் 'காமம் வெகுளி மயக்கம்' என்றருளினர். அதனை ௨௩௯-ஆம் பக்கம் காண்க. மயக்கம் எனினும் அவிச்சை எனினும் ஒன்றே. இதுவே மாறுபாட்டுணர்வு. மாறுபாட்டுணர்வு என்பது அழிவுவா லாமைதுன்பம் தானன்மை நான்கும், கழிமறுதலை திரிபாம் காண் என்றபடி, அழிவுள்ளதை அழி வில்லதென்றும், வாலாமை உள்ளதை வாலியதென்றும், துன்பத்தை இன்பம் என்றும் திரியக்காணும் உணர்ச்சி திரிபுணர்ச்சி. அழிவுள்ளது - அநித்தம். வாலாமை - அசுத்தம். திரிபுணர்வை மாறுபாட்டுணர்வென வும் அவிச்சை எனவும் கூறுப. இத் திரிபுணர்ச்சி ஏற்படின் அவற்றை யான் என மதிக்கும் ஆங்காரம் ஏற்படும். அஃதேற்படவே எனக்கு இது வேண்டும் என்னும் அவா வுண்டாகும். அஃதுண்டாக அதன்கண் ஆசை மிக்கெழும். எழும் ஆசைக்கு இடையூறுவனவற்றின்கண் வெகுளி மிகும். இம்முறையே ஆண்மைமலம் நிகழும். இவ் ஆண்மைமலம் மும்மலத்தார்க்கே உண்டு. இதனையே ஆணவம் என்பர். மாயை உணர்த்துமெய், உணர்வுமெய், உடல்மெய் என (௩௩௩ - அ) மூவகைப் படும். அவற்றுள் உடல்மெய் நுகர்வு மும்மலர்க்கே உள்ளது. உடல் மெய்யினைப் பிரகிருதிமாயை என்ப. இந்நுகர்வினைப் பிரகிருதி மாயைப் போகம் என்ப. இத் திரிபுணர்ச்சியைச் சுட்டறிவு என்ப.

## உடலூழ்

ஊழ்தெற ஆம்விருப் பேவெறுப் போர்புடைசுட், டாழ்கன்மம் மாயை யாணவம் என்பதே மெய்யுணர்ந்தார் ஒரோவழி உடலூழாய்ப் படும்பாட்டிற்கு வாயில் என்ப. மெய்யுணர்ந்தார் எல்லாமலங்களும் பற்றறத்துடைத்த நற்றவத்தவர். அவர்க்கும் உடம்பு உள்ளஅளவும் என்ற வினையாகிய ஊழ் அவ்வுடம்பை ஒட்டிநிற்கும். ஆதலின், அவ்வூழ் அவர்க்கு ஒரோவழிப் பயிற்சிவயத்தான் காயம் வைத்தெடுத்த கலம்போல வந்து தெறும். காயம் - இங்கு. வாங்கும்கலம் - வைத்தெடுத்தகலம்.

காயம் வைத்தெடுத்த கலத்தில் காயத்தின்மணம் வரும். அம்மணம் வேறோர் கறிக்குக் காயம் போல் பயன் தருவதின்று. அதுபோல் நினைவு சிவன்பாலே உள்ள மெய்யடியார்கட்கு, வித்தாம்ஊழ் மண்ணே விருப்பு வெறுப் பாம்நினைவு, அத்தன்பா லேலவித் தகத்து என்பதுபோல் அவர்க் கும் ஒரோவழிப் பயிற்சிவயத்தான் ஊழ்தெறும். தெறுங்கால் அவர் பாலும் உலகியற் செயல்கள் காணப்பெறும். அச்செயலால் இறை நினைவு மாறி முறையே விருப்பு வெறுப்புத் தோன்றுவன அல்ல. தாய்க் குச் சேயின்மலத்தை அகற்றித் தூய்மைப் படுத்துங்கால் விருப்பு வெறுப்புத் தோன்றாமை இதற்கு ஒப்பாகும். விருப்பு வெறுப்பு இன்மை அன்பாகும். அன்புச் செயல் அனைத்தும "என்கடன் பணி செய்துகிடப்பதே" என்பது போன்று பணியாகும். இப்பணியொழித்த மற்றெல்லாம் கைம்மாறு கருதிச்செய்யும் கைத்தொழிலாகும். கைத்தொழிலுக்குக் கூலிகிட்டுவது போல் விருப்பு வெறுப்பால் செய்யப்படுவனவற்றிற்குப் பிறப்பு இறப்பு உண்டு. அன்பாற் செய்வனவற்றிற்கு இன்பம் பெருகு வது போல் இறை நினைவால் செய்யும் பணிக்குப் பிறப்பு இறப்பகன்று சிறப்பாம் சிவப்பேரின்பம் நிவப்புற எய்தும். விருப்பு வெறுப்பாகிய மண் இன்மையால் ஊழாகிய வித்து வயிறாகிய உடலில் அட்டமைத்த சோறு போலப் புக்குத் தெறும். எனினும் விளைவு இன்றாம். ஆயின் பிறப்பு இறப்புக்கு ஏதுவாகிய ஏறுவினை இன்று.

ஊழ்தெறலால் விருப்பு வெறுப்புத் தோன்றும். தோன்றவே பரமே பார்த்திருப்பார்க்கு நிலமுதல் மாயாமெய் ஈறாகிய சுட்டுப் பொருள் காட்சிப்படும். காட்சிப் படவே அவற்றைச் சுட்டியுணர்வதாகிய திரிபுணர்ச்சி மேற்படும். படவே மெய்யுணர்வுகீழ்ப்படும். கீழ்ப்படப் பிறவிக்குவித்தாம். இவற்றை இடையறா இறை நினைவால் வெல்லுவதே மாயப் போர் வெற்றியாகும். இவ்வுண்மை வருமாறு:

"ஞானவாள் ஏந்தும் ஐயர்"—௬௧௬-ம் பக்கம் காண்க.

ஞானவாள் - மெய்யுணர்வு; சிவயநம. நாதப்பறை - சார்புணர்வு. மானமா - ஆனேறு; அறம். மதிவெண்குடை - அருள். நீற்றுக் கவசம் - காப்பு. வானஊர் - திருவடி. மாயப்படை - பிறப்பு இறப்பு.

"தொண்டர்காள் தூசி செல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்திறல் யோகிகளே பேரணி உந்தீர்கள்
திண்திறல் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நாடு ஆள்வோம்நாம் அல்லற்படை வாராமே."

—அ, திருப்படை - ௨.

தொண்டர் - சீலத்தர். பத்தர் - நோன்பினர். யோகிகள் - செறி வினர். சித்தர்-அறிவினர். (௩௭௧) அண்டர்நாடு-திருவடி. அல்லற்படை-திரிபுணர்வு.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்."

—திருக்குறள், ௬௨0.

உப்பக்கம் காண்பர் - புறம் காண்பர், பின்பக்கம் காண்பர்; வெல்லுவர். உஞற்றுபவர் - ஈண்டுத் தவஞ் செய்பவர். "சிவத்தைப் பேணில் தவத்திற்கு அழகு" ஆதலால் அடிமை பூண்டார்க்கு ஊழ் உடலூழாகக்கழியும். இவ்வுண்மை வருமாறு:

"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்." —திருக்குறள், ௬௨௯.

விழையாதான் - விரும்பாதவன்; உணர்ச்சி அனைத்தும் இறைவன் பால் தங்கியிருப்பதால் இன்பத்துன்பம் ஆவிக்கு நுகர்ச்சியாகாது உடலூழாக்க ழியும். இஃது, அவன் என்ற வினைப்பயன் நுகருங்கால் அதன் கண் மூழ்கித் தன்னை அழிந்து இறையை மறந்து உடலினைந்து ஊழை விரும்பான் என்பதே. அவனது உள்ளம் இறை நினைவில் அழுந்தியிருப்பதால் தானழியாது தலைவனை நினைந்து தாளின்பமே நுகர்வன்.

"அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனுர்க்கு
எல்லை இல்லதோர் அடிமைபூண் டேனுக்கே." —௫. ௧ - ௪.

அடிமைபூணுதல் - திருஐந்தெழுத்தை அயராது அன்பினால் அகத்தே கணித்து அரன்கழல் சேறல். இதுவே தவம்; இதனைத் தருவது அஞ்செழுத்தே. தொந்தம் - பகை. இவ்வுண்மை வருமாறு:

"இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்
அருந்த வந்தரும் அஞ்செழுத்து ஓதினல்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்தும் ஆகுவர் மன்னுமாற் பேறரே." —௫. ௬௦ - ௪.

உடலூழ் நிகழ்வு முறையால் 'கன்மம் மாயை ஆணவம்' ஓதி யருளினர். அவை காட்சிப் புலனுமாறு காட்டுவார். அவ்வக் காரிய நிகழ்ச்சிகளை எடுத்தோதிச் சுட்டி அருளினர். அஞ்ஞானம் - ஈண்டுத் திரிபுணர்ச்சி.

## சுட்டு

'இக்கான்மியமும்', 'மாயையும்', 'இவ் ஆணவமும்', என்று காணப்படுபவனவற்றுள் இகரச்சுட்டு மாயைக்கு இன்று. பொருள் விரிக்குங்கால் இம்மாயையும் எனச் சுட்டிணைத்துப் பொருள் விரித்தல் வேண்டும்.

## ஏற்றுரை

புண்ணிய பாவத்தின் பயனுகிய இன்பத்துன்பங்களையும் புண்ணிய பாவத்தின் காரணமாகிய நல்வினை தீவினைகளையும் புண்ணிய பாவம் எனக்கூறுவது ஏற்றுரை. ஏற்றுரை - உபசாரம்.

துய்ப்பிலும் துய்ப்பிற் கேதுவாம் தொழிலிலும் விருப்பு வெறுப்பு உண்டாம். ஆதலின் புண்ணிய பாவம் பொருந்துமிக்கான்மியமும் என அருளினர். இது "பிற்செயாது அழுந்துவது (அனுபவிப்பது) இன்று; ஆகலின் அதுசார்பாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம்," என்று உரை அருளினர்.

## ஆகுபெயர்

'மாயைகாண் மாயை' என்பதன்கண் முதற்கண் உள்ள மாயை உணர்வுமெய்யின்கண் காணப்படும் ௩௧-ம் மெய்யாகிய மாயையை உணர்த்தி விடாதஆகுபெயராய் ஏனைய மெய்களையும், 'மண்முதல்' என்ற

தனால் உடல்மெய்களையும் தழீஇயிற்று. இதன் விரிவு ௬௩௦-௭-ஆம் பக்கம் காண்க. விடாத ஆகுபெயரென்பது புளியைத்தின்றான் என்றவிடத்து புளியாகிய சுவையை விடாது கனியை உணர்த்துதல். அதுபோல் மாயை தன்னையும் விடாது தன்கீழ் உள்ள ஏனைய மெய்களையும் தழீஇயிற்றலின் விடாத ஆகுபெயர் என்க. மெய் - தத்துவம். நூற்பா வருமாறு :

“முதலிற் கூறும் சினைஅறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெயர் ஒட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனையமர பினவே ஆகுபெயர்க் கிளவி.”

“அவைதாம்
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியால் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலும் காலை
வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும்.”

“அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே.”

“கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.”

—தொல். சொல்-௧௧௪-௧௧௭.

**இலக்கணம்**

‘காண்மாயை’ செயப்படு பொருளோடுமுடிந்த வினைத்தொகை என்பது காணப்படும் மாயை என்று பொருள்படுவதை. மாயை தானே காரியப்படாமல் விழுமிய முழுமுதல்வனால் ஆக்கப்பாடு எய்தும் வாய்மை காட்டப்படுகின்றது. மாயைமட்டும் அன்று ; இருவினை முதலிய அனைத்தும் அங்ஙனமே. இவ்வுண்மை தொல்லாசிரியர்களாகிய ஒல்காப்புகழ் சேர் தொல்காப்பிய முனிவரனார், திருவள்ளுவ நாயனார், சேக்கிழாரடிகள் முதலிய நூலாசிரியர்கட்கும், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பரிமே லழகியார் முதலிய உரையாசிரியர்கட்கும் உடம்பாடென்பது அவ்வவர் திருமொழிகளான் உணர்க. அவை வருமாறு:

“காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்
ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்
பால்பிரிந் திசையா உயர்திணை மேன.” —தொல். சொல் - ௫௭.

“பால்வரை தெய்வம் என்பது எல்லார்க்கும் இன்பத்துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது.” (சேனாவரையர்.)

“இச்சூத்திரத்துக் கூறியவற்றுள் உலகமும் உயிரும் உடம்பும் ஒழிந்தன எல்லாம் தெய்வத்தையே உணர்த்தின. ஆதலின் ‘தெய்வம்’ என்பதனை.

" தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும் '
—(தொல். சொல் - ௪.)

என்பதனுன் உயர்திணை என்பது பெற்ரும்.

'பால்வரைதெய்வம்' என்ரூர், இன்பத்துன்பத்திற்குக் காரண மாகிய இருவினையும் வகுத்தலின். (நச்சினர்க்கினியர்.)

" வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது." —திருக்குறள், ௩௭௭.

வகுத்தான் - முழுமுதல்வன்.

" இசைத்தலும் உரிய வேறிடத் தான " (தொல். சொல் - ௫௧.) என்பதனுன் உயர்திணையாயிற்று (பரிமேலழகியார்).

" செய்வினையும்...........உணர்ந்தறிந்தார்."

௧உ௫-ஆம் பக்கம் காண்க.

'காட்டுதல்' என்பது 'அஞ்ஞானம் காட்டும், என்பதன்கண் காணப் படுவது.

காட்டுதல் என்பது காண்பதற்கு ஏதுவாய் நிற்றல் என்பதாம். அதனுல், அஃது ஏற்றுரை. ஏற்றுரை - உபசாரம்.

## தற்போதம்

தற்போதம் சிற்றுணர்வு. சிற்றுணர்வு முனைக்கின் சுட்டுணர்வு உண்டாம். அகக்காட்சியாகிய கற்றல் கழல் தொழல் முதலிய தவநிலையில் நிற்பான் அந்நிலையகன்று புறமாகிய உலகியலில் செல்லின் உலகக்காட்சி யிலேயே மூழ்கி உழல்வன் அல்லவா? அந்நிலை மேலதனுக்கு ஒப்பாகும். சிற்றுணர்வு முனையாவண்ணம் திருவருளால் முற்றுணர்வுள் அடங்கிச் சிவநுகர்வைத் தனதாக்கிக் கொள்ளுதல் சால்பு.

மேன்மேல் முறுகுவனவாகிய இக்காட்சியைத் தோன்றும்பொழுதே துடைத்தல் வேண்டும். அங்ஙனம் துடைப்பார் நிலை பன்னுள் உழந்தார் படுதுன்பின் மிக்கழிவர், துன்னுப்போ தேவேண்டித்தொக்கு என்பதாகும். அஃதாவது தற்போதம் முனைத்ததும் அளவில்லாத காலம் தீவினையைச் செய்து துன்புற்ருர் நனிவருந்துவதனினும் மிக்குவருந்தி ஆண்டவன் பால் வேண்டிக்கொள்வர். இதுவே பழியஞ்சும் பண்புடையார் மாட்டுக் காணப்படுவது. உடனே விடவேண்டுவது பற்றி 'விடு' என ஈண்டும் வலியுறுத்துக் களையுமாறு ஓதியருளினர். முறுகவிட்டுக் களையலுறின் காழ்த்த இடத்துக் கை கொல்லும் துன்பு எய்தும். மேற்கோளில் களைக என்றதையே எடுத்துக்காட்டில் விடு என்னும் சொல்லால் வலியுறுத்தி யருளினர். இவ்வுண்மைகள் விளக்கும் திருப்பாட்டுக்கள் வருமாறு:

" இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து."—திருக்குறள், ௮௭௯.

" இந்நிலைதான் இல்லையேல் எல்லாம் ஈசன்
இடத்தினிலும் ஈசன்எல்லா இடத்தினிலும் நின்ற
அந்நிலையை அறிந்தந்தக் கரணங்கள் அடக்கி
அறிவதொரு குறிகுருவின் அருளினுல் அறிந்து

மன்னுசிவன் தனையடைந்து நின்றவன்ற னாலே
மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்
துன்னியசாக் கிரமதினில் துரியா தீதம்
தோன்றமுயல் சிவானுபவம் சுவானுபூ திகமாம்."
—சித்தியார். அ. உ-௩௪.

சிவானுபவம்—திருவடி இன்பம்; முற்றுணர்வு. சுவானுபூதிகம்—சிவனிறைவில் அழுந்துவதால் விளங்கும் முற்றுணர்வு.

"ஓங்குணர்வின் உள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்."—திருவருட்—௧௦ அணைந்—௧.

"வளர்கின்ற நின்கரு ணைக்கையில் வாங்கவும் நீங்கிஇப்பால்
மிளிர்கின்ற என்னை விடுதிகண் டாய்வெண் மதிக்கொழுந்தொன்று
ஒளிர்கின்ற நீள்முடி உத்தர கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னும்மின் னும்அன்ன தோற்றச் செழுஞ்சுடரே."
அ. நீத்தல்—௪.

## இயற்கை செயற்கை

திரிபுணர்வாக்கல் ஆணவத்தின் இயல்பு. மாயைகன்மங்களின் இயல்பு தெருள் உணர்வு ஆக்கல். மாயைகன்மங்கள் ஆணவச்சார்பினால் திரிபுணர்வு ஆக்கும். இதற்கு அஞ்சுவதே ஆணமை. இவ்வுண்மை வருமாறு:

"கோணிலா வாளி அஞ்சேன் கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்
நீணிலா அணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு
வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்த மாட்டா
ஆணலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே."
—அ. அச்சப்—௧௦.

ஆணலாதவர் - ஆளலாதவர்; அடிமை ஆகாதவர். நீள் உலகம் நீண் உலகம் என்பதுபோல், ஆளலாதவர் ஆணலாதவர் என்றாயிற்று.

"ஒம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்
தாம்பிரி விலவே தொகைவரு காலே." —தொல். சொல் - ௬௭.

இந் நூற்பாவின்படி பாதுகாக்க வேண்டுவதாகிய 'மலம்' இரண்டன் உருபால் விரித்தால் மலம் தன்னைக் கெடுக்காது அதனைப் போற்றிவா என்றாகும். மூன்றாவது விரித்தால் ஆவி இறை நிறை இன்பில் இறையும் நீங்காது உறைதற்கு ஏது மலமாதலின் மலம் ஏதுப்பொருளாம். எனவே **"இத்தை விளைவித்தல் மலம்"** (௧௧) என்பது ஏதுவாய் ஆவி தன்னைப் போற்றுவதாகிய ஆண்டான் திருவடியை அகலாமை விளக்க வாயிலாகும்.

"அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்."—திருக்குறள், ௪உஅ.

அஞ்சுவது - அஞ்சப்படுவது; பாவமும் பழியும் கேடும் முதலிய தொகுதி. அஞ்சாமை - எண்ணாது செய்துநிற்றல். எண்ணாது - இறை நினைவின்றி. அஞ்சுதல் - எண்ணித்தவிர்தல். எண்ணி - இறை திருவடியை நினைந்து.

---

## இரண்டாம் அதிகரணம்

**இனிச் சிவபத்தர்களோடு இணங்குக என்றது.**

எ - து. மே-ள். எ-னின். அம்மலங் கழீஇயினார்க்கு அதனை நிலைபெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக்கடவது இது எனச் சூத்திரத்தின் இரண்டாம்கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

ஈண்டுச் சிவபத்தர்என்றது பத்தியினால் மறவாதுஏத்தி முதல்வனது சீபாதத்தைஅணைந்த சீவன்முத்தர்மேற்று.

இணங்குதல் நட்புச்செய்தல் சிவபத்தர்களோடு இணங்குக எனவே, எதிர்மறைமுகத்தான் ஏனையரோடு இணங்கற்க வென்பதூஉம் பெறப்பட்டது.

**அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவர் ஆகலான்.**

எ - து. ஏது எ - னின். உறவும் பகையும் ஒழித்த மெய்ஞ்ஞானிகள் சிலர்மாட்டு நட்புஞ் சிலர்மாட்டு நட்பின்மையும் உடையராதல் சால்புஅன்று என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துமாறு *"தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி—முனிவி லாததோர் பொருளது கருதலும்—ஆறு கோடி மாயா சத்திகள்—வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின—ஆத்த மானார் அயலவர் கூடி—நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறினர்—சுற்றம் என்னுந் தொல்பசுக் குழாங்கள்—பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும்—விரத மேபர மாகவே தியருஞ்—சரத மாகவே சாத்திரங் காட்டினர் —சமய வாதிகள் தத்தம் மதங்களே—அமைவ தாக அரற்றி மலைந்தனர்" என்றற் றொடக்கத்துத் திருவாக்குகளானறிக. மும்மலங்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் இலக்குவாய்த்துழி ஏதுவாதன் மாத்திரையே; சிவபத்தர் அல்லாதார் அவ்வாறன்றி இலக்குவாயாதவழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பல வகை உபாயங்களானுந் தம்மோடொப்ப விபரீதஉணர்வைச் செலுத்தியே விடுவர் ஆகலான், அம்மலங்களினுங் கொடியராகிய இவரை அவற்றினும் அஞ்சி விட்டொழிதலே அறிவுடைமைக்குச் சால்பு என்பதாம்.

---

* திருவாசகம், போற்றித்திருவகவல்.

*மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பில்லார் தம்திறத்துச் சேர்வை—அறப்பித்துப்
பத்தர் இனத்தாய்ப் பரன்உணர்வி னால்உணரும்
மெய்த்தவரை மேவா வினை.

எ - து. உ - ம். எ - னின். அஞ்ஞானத்தை உணர்த்து மவரோடு இணங்காமை மாத்திரையேயமையும் சிவபத்தர்களோடு இணங்குதல் எற்றுக்கு என்பாரைநோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இல்லார் தம் திறத்துச் சேர்வை அற—(முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்து நிற்கும் அத்துவிதநிலையை மறவாது கடைப்பிடிக்கும்) தமது ஞானக்கண்ணை இழப்பித்துத் தீய நெறிக்கண் கொண்டு சென்று மலங்களான் ஆய பிறவிக் குழியில் வீழ்வித்துத் துயருறுத்துவாராகிய அன்பில்லார் கூற்றிலே தொன்றுதொட்டுப் பயின்றுவந்த சேர்ச்சிஅறும்படி, பத்தர் இனத்துப் பித்து ஆய்ப் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை—(அம்மறவியை மாற்றி ஞானக் கண்ணை உதவிப் பிறவிக்குழியினின்றும் எடுத்து நன்னெறிக்கட் செலுத்தி வாழ்விக்கும்) சிவபத்தரதுகூற்றிலே பேரன்புடையராய் (அவ்வன்பு சார்பாக விளங்குஞ்) சிவஞானக்கண்ணால் அந்நிலை கடைப்பிடித்து உணரப்பெற்ற மெய்த்தவராயினாரை, வினை மேவா—(எல்லா அநத்தங்கட்கும் மூலமாய் வந்து சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வையைப் பயப்பிக்கும்) பிராரத்தவினைகள் வாதியா (எ - று).

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பில்லார் என மேற்சொல்லிய பொருளையே அநுவதித்து விரித்தோதினார்; அதன் எதிர்மறைமுகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமை உணர்ந்துகோடற்பயன்நோக்கி.

மலம் ஆகுபெயர்.

வீழ்க்கும் என்றது உருவகங்குறித்து நிற்றலின், அவ்வாறு உரைக்கப்பட்டது.

எல்லாவற்றினும் அன்பு சிறந்தமையின் அதனைச் சிறப்பு என்றார். பித்துப்போல்தலின், அன்பு பித்தெனப்பட்டது.

ஏனைத் தவங்களெல்லாம் மெய்யாதலின்றி மலநடையாய்ப் போதலின், பரன் உணர்வினால் உணருந் தவம் ஒன்றே மெய்த்தவம் எனப்பட்டது.

* 'ஈசனுக்கன்' சித்தியார், ௧௨-௨-௩.

வினை, பால்காஅஃறிணைப்பெயர். சிவபத்தர்மாட்டு அன்பு உடையராய் மனஞ் சொற் செய்கைகளான் அவர்வழி நிற்பார்க்கு உலகியல் உணர்வுமாறிச் சிவாநுபூதி உணர்வே மேம்பட்டு நிகழும்: அது நிகழவே பௌதிக உடம்பைப்பற்றி வரும் பிராரத்தவினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின் வாதிக்கமாட்டா; மாட்டாது ஒழியவே, அவை பற்றுக்கோடாகநிகழும் சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை பற்றறக்கெடும் என்பார், 'சேர்வை— அறப்பித்துப் பத்தரினத்தாய்ப் பரனுணர்விஞல் உணரும் மெய்த்தவரைமேவா வினை'யென்றார். எனவே, வீட்டுணர்வை நிலைபெறுத்துஞ் சிவபத்தர்களோடு இணங்கினல்அன்றி வினைபற்றுக்கோடாகத் தொன்றுதொட்டுப் பயின்றுவந்த சிறப்பில்லாரது இணக்கம் அறுமையின், அவ்விணக்கம் ஒருதலையான் வேண்டும் என வலியுறுத்தவாறாயிற்று.

## விளக்கம்

### பிற்செயல் அன்பு

முதற் கூற்றில் கூறியவாறு அறிவு தொழிற்படும் வகையான் மும்மலங்களையும் களைந்த வழிப்பேற்று உயிர்க்கு அதனை நிலை பெறுத்துவதாய் அதன்பின் செய்யக்கடவது அன்பு தொழிற்படும் முறை. அன்பெனினும் இச்சை எனினும் ஒன்றே. இதுவே அவாய்நிலையாற் பெறவேண்டுவது. அதனை நிரப்புவது இக்கூறு. அவர்களது அன்பு "சிவபத்தர்களோடு இணங்கும்" இவ்இணக்கம் எய்தவே ஏற்றமாம் மக்கட் பிறப்பு என்றும் பொன்றாப் பிறவாயாக்கைப் பெரியோனும் நுதல்விழி நாட்டத்திறையோனல் அருளப்பெற்றது. இந்நிறை அன்பு பெறுதற்கே வீட்டொடும் நாட்டொடும் பயிலும் முறைஅன்பு முற்கொள்வது. இது முடிந்த தேர்வின் வெற்றிப்பொருட்டு இடைத்தேர்வுகளில் வெற்றியுறுவதை ஒக்கும். சிவபத்தர்களோடு இணங்குக எனவே, ஏனையோர்களாகிய அவ எத்தர்களோடு இணங்கற்க என்பதூஉம் பெறப்பட்டது. சிவபத்தராவார் மெய்ப்புணர்ப்பு நிலையைக் கடைப்பிடித்து ஒழுகும் அன்பானே முதல்வன் அருள்வழி நிற்கும் வழிப்பேற்றினராவர். அன்புசெய்ய அமைந்ததே ஆறறிவாயிலாம் மக்கட்பிறப்பு என்பதனை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு."—திருக்குறள், எ௩.

அறிவின்மையும் நிலையின்மையும் கட்புலன் ஆவதும் ஆகிய யாக்கையோடு அறிவுண்மையும் நிலையுண்மையும் கட்புலன் ஆகாமையும் ஆகிய ஆவி ஆண்டானல் கூட்டக் கூடியது ஆண்டான்பால் அன்பு செய்தற்கே.

"ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற்கு அன்பிலை என்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே."
—அ. திருச்சதகம்—௩௧.

"வாழ்ந்தனம் என்று தாழ்ந்தவர்க்கு உதவாது
தன்உயிர்க் கிரங்கி மன்னுயிர்க் கிரங்காது
உண்டிப் பொருட்டால் கண்டன வெஃகி
அவிஅடு நர்க்குச் சுவைபகர்ந் தேவி
ஆரா உண்டி அயின்றனர் ஆகித்
தூராக் குழியைத் தூர்த்துப் பாரா
விழுப்பமும் குலனும் ஒழுக்கமும் கல்வியும்
தன்னிற் சிறந்த நன்மூ தாளரைக்
கூஉய்முன் நின்றுதன் ஏவல் கேட்கும்
சிறுஅர்த் தொகுதியின் உறுஅப் பேசியும்
பொய்யொடு புன்மைதன் புல்லர்க்குப் புகன்றும்
மெய்யும் மானமும் மேன்மையும் ஒரீஇத்
தன்னைத் தேறி முன்னையோர் கொடுத்த
நன்மனைக் கிழத்தி ஆகிய அந்நிலைச்
சாவுழிச் சாஅந் தகைமைய ளாயினும்
மேவுழி மேவல் செல்லாது காவலொடு
கொண்டோள் ஒருத்தி உண்டிவேட் டிருப்ப
எள்ளுக்கு எண்ணெய் போலத் தள்ளாது
பொருளின் அளவைக்குப் போகம்விற் றுண்ணும்
அருள்இல் மடந்தையர் ஆகம் தோய்ந்தும்
மாற்றல் செல்லாது வேற்றோர் மனைவயின்
கற்புடை மடந்தையர் பொற்புநனி கேட்டுப்
பிழைவழி பாராது நுழைவழி நோக்கியும்
நச்சி வந்த நல்கூ.மாந்தர் தம்
விச்சையிற் படைத்த வெவ்வேறு காட்சியின்
அகமலர்ந் தீவார் போல முகமலர்ந்து
இனிது மொழிந்தாங்கு உதவுத லின்றி
நாளும் நாளும் நாள்பல குறித்தவர்
தாளின் ஆற்றலும் தவிர்த்துக் கேள்இகழ்ந்து
இகமும் பரமும் இல்லை என்று
பயமின்று ஒழுகிப் பட்டிமை பயிற்றி
மின்னின் அனையதன் செல்வத்தை விரும்பித்
தன்னையும் ஒருவ ராக உன்னும்
ஏனையோர் வாழும் வாழ்க்கையும் நனைமலர்ந்து
ஓசனை கமழும் உற்பல வாவியில்
பாசடைப் பரப்பில் பால்நிற அன்னம்
பார்ப்புடன் வெருவப் பகுவாய் வாளைகள்
போர்த்தொழில் புரியும் பொருகா விரியும்
மருதமும் சூழ்ந்த மருத வாண
சுருதியும் தொடராச் சுருதி நாயக
பத்தருக்கு எய்ப்பினில் வைப்பென உதவும்
முத்தித் தாள மூவா முதல்வநின்
திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களும் மனைவியும் ஒக்கலும் திருவும்
பொருளென நினையாது உன்அருளினை நினைந்து
இந்திரச் செல்வமும் எட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தனர் ஒதுங்கிச்
சின்னச் சீரை துன்னற் கோவணம்

அறுதற் கேளொடு பெறுவது புணர்ந்து
சிதவ லோடொன்று உதவுழி எடுத்தாங்கு
இடுவோர் உளரெனின் நிலையினின் றயின்று
படுதரைப் பாயலிற் பள்ளி மேவி ஓவாத்
தகவெனும் அரிவையைத் தழீஇ மகவெனப்
பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்த்துநின்
செல்வக் கடவுள் தொண்டர் வாழ்வும்
பற்றிப் பார்க்கின் உற்றநா யேற்குக்
குளப்படி நீரும் அளப்பரும் தன்மைப்
பிரளய சலதியும் இருவகைப் பொருளும்
ஒப்பினும் ஒவ்வாத் துப்பிற் றுதலின்
நின்சீர் அடியார் தம்சீர் அடியார்க்கு
அடிமை பூண்டு நெடுநாட் பழகி
முடலை யாக்கையொடு புடைபட்டு ஒழுகியவர்
கால்தலை ஏவல்என் நாய்த்தலை ஏற்றுக்
கண்டது காணின் அல்லதொன் று
உண்டோ மற்றெனக்கு உள்ளது பிறிதே."

—கஉ. பட்டின. திருவிடைமும் - எ.

'மறப்பித்துத்....................வினை.'

**சிறப்பிலார்**

மலங்களினும் கொடியராகிய சுட்டுணர்வை உணர்த்தும் அன்பில்லா தவரே சிறப்பிலார்; அவரே அல்லாதார். இவர் திரிபுணர்ச்சியை இல்லாத செவ்வியை உண்டாக்கிக்கொண்டு நல்லனபோலவும் நயப்பனபோலவும் வல்லவாபுகுத்தி மயக்கிடுவர். இவ்வுண்மை வருமாறு:

" நான்முகன்............ . ........................
சஉ. தெய்வம்......௫௩. மலேந்தனர். ௬௭௩-ஆம் பக்கம் காண்க.

அல்லாதார் செவ்வி வாய்ப்பச் செய்துகொண்டு காற்றுப் பறத்தலாம் காலத்துக் கைவிசிறி, காற்றெழுப்பும் வேண்டும்பொழுது என்பதுபோல் இடமில்லாக் காலத்தும் காற்றெழுப்பும் விசிறிபோன்று இடத்தை ஆக்கிக் கொண்டு சுட்டுணர்சசியிற் செலுத்துவர். இருள் விளக்கற்றம் பாாக்கும். இத் தீயோர் விளக்கற்றத்தைத் தோற்றுவித்துக்கொள்ளுவர். ஆதலால் இவரை அஞ்சி அகலுவதே அறிவுடைமையாம். இவ்வுணமை வருமாறு:

" மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு." —திருக்குறள், ௮00.

" தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை." —திருக்குறள், ௪௪௪.

" உரைத ளர்ந்துட லார்நடுங் காமுனம்
நரைவி டையுடை யானிடம் நல்லமே
பரவு மின்பணி மின்பணி வாரொடே
விரவு மின்விர வாரை விடுமினே." —௫. ௪௩ - ௫.

**ஒக்கப்பார்த்தல்**

" மகவெனப் பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்த்தலாவது அவை படும் துன்பம் கண்டுழி அதற்குப் பரிதன் மாத்திரையேயாம். 'நான்

பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்றதும் இக்கருத்து நோக்கி என்க" (பேருரை).

"நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே." —௬௦. அ௫.

மெய்யடியார் பரிவு அனைத்துயிரும் அம்மை அப்பராகிய ஆதிபகவன் திருஅடி இன்பத்தினைப் பெறுதல்வேண்டும் என்னும் திருவுள்ளத்தோடு அழுத்தமாய் நினைத்தல். அந்நினைவு ஆண்டவன் நினைவே ஆகலின் "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த, மறைமொழி" போன்று பயனைக் கண்கூடாக நண்ணுவிக்கும் என்க.

## திருவருட்கண்

திருவருட்கண் என்பதும் சிவஞானக்கண் என்பதும் ஒன்றே. திருவருட்கண் உடையார் மெய்த்தவராவர். இவர் மும்மலங்களும் நீங்கி முதல்வன் மெய்ப்புணர்ப்பாய் நின்று **காட்டியும் கண்டும்** உதவிவரும் பேரருளை மறவாது கடைப்பிடிக்கும் திருவருட்கண் உடைய மாண்பினர். அவர்தம் அருட்கண்ணை மாற்றும் தொழிலையே தம் தொழிலாகக்கொண்டு உழிதரும் பழியினர் சிறப்பில்லார். இவர்கள் மெய்த்தவர்தம் அருட்கண்ணை இழப்பிப்பர். தீநெறிக்கண் கொண்டுசென்று மலங்களாகிய பிறவிக் குழியில் வீழ்வித்துத் துயர் உறுத்துவர். இவ் அன்பிலார் திறத்து ஆவி தொன்றுதொட்டுப் பயின்றுவந்துள்ள சேர்ச்சி அறுதல் வேண்டும்.

இச் சேர்ச்சிஅற ஆண்டவன் உதவியை மறந்துள்ள மறவியை மாற்றுதல்வேண்டும். மாற்றித் திருவருட் கண்ணை விளக்கிப் பிறவிக் குழியினின்றும் எடுத்து நன்னெறிக்கட் செலுத்தி வாழ்வித்தல் வேண்டும். அங்ஙனம் வாழ்விக்கும் தகைமை வாய்ந்த விழுமியார் சிவபத்தர். அவர் கூற்றிலே பேரன்புடையராய் அவ்வன்பு சார்பாக விளங்குவதாகிய திருவருட்கண்ணால் அந்நிலை கடைப்பிடித்து ஒழுகுவர். இத்தகைய மெய்த்தவரை எல்லாப் பெருந்தீங்குகளுக்கும் மூலவித்தாய் வரும் என்ற வினையாகிய ஊழ் துன்புறுத்தா என்க.

## சிறப்பு

சிறப்பு எல்லாவற்றினும் சிறந்த பேரன்பைக் குறிக்கும். திருவள்ளுவ நாயனார் சிறப்பைத் திருவடிப் பேறு எனவும் செம்பொருளாகிய சிவம் எனவும் ஓதியருளினார். இங்கு அன்பு சிவம் எனப்படுகின்றது. "அன்பினால் இன்பம ஆர்வார்" என்னும் திருமுறைத் திருமறைப்படி அன்பின் விளைவே இனபம். எனவே அன்பே திருவடிப் பேறு. அன்பே சிவம். அன்பே ஆவி. அன்பே இன்பம். அனைத்தும் அன்பே. இவ் உண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"மாறிநின் றென்னை.............." —௫௫௨-ஆம் பக்கம் பார்க்க.

"பெருமையால் தம்மை..........." —௫௪௪ " "

"சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு."

“ பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு.”
—திருக்குறள், ௩௬, ௩௮.

“ அன்பும் சிவமும்இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.” —௧௦. உ௭௦.

அன்பு - ஆவி. சிவம்-ஆண்டான். அன்பு - செய்வான். சிவம் - செய்விப்பான். மெய்ப்புணர்ப்பால் ஆவியும் இறையும் எழுத்தறியும் மாணவரும் எழுத்தறிவிக்கும் ஆசிரியரும் போன்றிருப்பர். அன்பே சிவம் - அன்பு செய்த ஆவிக்குத் தன் திருவடிஇன்பினைச் சிவம்நல்குதலால் அன்பே இன்பம். அன்பே சிவமாய்-அன்பால் அறிந்து பற்றி அழுந்தும் அறிவு அன்பு ஆற்றல்கள் மூன்றும் ஒருங்கு ஓரிடத்து ஒருகாலத்து நிகழும் சிவ இன்பமாய். அமர்ந்திருந்தார் - விழைந்திருந்தனர். துணிவுபற்றி இறந்தகாலம் ஆயிற்று.

## அடியார்

மேற்குறித்த மெய்யன்புசேர் விழுத்தகையாரே மெய்யடியார் எனப்படுவர். அவர்தம் திருவடிக்கு மீளாஆளாய்ச் சார்ந்து அவரைவிட்டு அகலாது அவர்வழி நிற்றலே பிறவிப் பெரும்பயனும் சிறப்பும் ஆகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

தோடு.............. . .......................

௧௬. “ வேய்குலம் தில்லை எனும்இவை மூன்றும்
நாயனும் அடிமையும் நாட்டிய தாகும்.”
—திருப்பதிகக் கருத்துரை.

“ வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியா ழம்வெள்ளி
சனிபாம் பிரண்டும் உடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.” —உ.அ௫-௧.

“ குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புனல் ஆரூர் அவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி யான்திரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.”
—௪.௧௦௧-௧.

“ பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்

முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே." —௭.௩-௧௦.

பணிவார்கள்-மெய்ப்பணி செய்வார். பாடுவார்-வாய்ப்பணி செய்வார். வைத்தார்-உளப் பணி செய்வார். எனவே முதல் மூன்று வரிகளால் மன மொழி மெய்களாகிய உள்ளம் உரை உடல் என்னும் வாயில்வழியாகப் புரியும் திருப்பணி முதல்வனிடமே செல்லும் முறை ஓதியருளுகின்றனர். ஆண்டவனிடம் செல்லுதல் என்பது அவனை மறவாது ஆருயிர்க்குச் செய்யும் திருத்தொண்டின்கண் இடையறாது முயறல். ஈண்டுப் புறமிருந்து வகுத்தருளுகின்றனர். பணிதல் உடலின்செயல், பாடுதல் உரையின்செயல், வைத்தல் உள்ளத்தின் செயல்.

திருவாரூர்-இறை நினைவூட்டும் இல்லம், தொழுகைக்கூடம், திருக்கோவில், சான்றோர், மெய்யடியார் முதலியோர் உவப்பூட்ட உளமகிழ்வோடு உறையும் இடம். இவற்றைத் திருவூர் என்ப. இச்சிறப்பு ஏதும் இலாவூர் திருவிலூர். இதுபற்றியே "திருக்கோவில் இல்லாத திருவிலூர்" (௬அக) என்றருளினர். திருவூரே திருவாரூர் என விரிந்து வழங்குவதாயிற்று. ஆண்டுப்பிறந்தார். "பிறப்பின்சார்பால்" இயல்பாகவே சீலநெறி நிற்பர்.

முப்போதும்-வழிபட வகுத்த எப்போதும். அஃதாவது காலை, நண்பகல், மாலை, நள்ளிருள் எனப் பொழுது நான்கென்ப. இந்நான்கும் நானெறியினையும், நாற்பொருளினையும் முறையே குறிப்பன. நானெறி - சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்ப. நாற்பொருள் - அறம், பொருள், இன்பம், வீடு என்ப. தீண்டுவார் - சிறப்பொடு பூசனை செய்யும் நோன்பினர். இவ்விருதிறத்தாரும் புறத்தொண்டினர்.

முழுநீறு - குறைவிலா நிறைவாம் இறையுடன்கூடிய அகப்புறத் தொண்டினர் உளம் நிறை இறையுரு வளம்நிறை திருவெண்ணீறே என்னும் வாய்மை காட்டப் புறம் எங்கணும் திருவெண்ணீறு மங்காமல் அணிந்திருப்பர். இந்நிலையே முனிவர் புறநிலையாகும். இவ்வுண்மை "மெய்யெலாம் நீறுபூசி" (௧௨. மெய்ப்-௭) என்னும் திருமுறைத் திருமறையானும் உணர்க. இதுவே சமைந்தாள் அமைந்தாள் 'தலைப்பட்டாள்' (௧௪௧) என்னும் குறியாகும். முனிவர் "காமம் வெகுளி, மயக்கம் மூன்றும்" முனிந்தவர். இந்நிலை செறிவு நிலையாகும்.

அப்பாலும் - நாடு, மொழி, ஈடில் கொள்கை இவற்றால் தென்தமிழ் நாட்டுக்கு அப்பாலும், இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் காலங்கட்கு அப்பாலும் என்ப. அடிச்சார்ந்த அடியார் - முப்பொருள் உண்மைதேறி, திருவருள் வழிநின்று செம்பொருளாம் சிவத்தினைச் சார்ந்த சிறப்பினர். இந்நிலை அறிவுநிலையாகும்.

மேற்கூறியவாற்றால் மூன்று வரிகளை அடுத்துவரும் நான்கு வரிகளிலும் முறையே சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நிலைகள் நான்கும் ஓதியருளுகின்றனர். இந்நான்கும் முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவும் கூறப்படும். இவ்வுண்மைகள் குறிக்கும் திருப்பாட்டுக்கள் வருமாறு:

"மானுடப் பிறவி..............." —௬௯௯-ஆம் பக்கம் பார்க்க
"வாழ்த்த வாயும..............." —௬௯௦ ,,

“ திருக்கோவில் இல்லாத திருவில் ஊரும்
திருவெண்ணீறு அணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண்சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண்கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர்பறித்திட்டு உண்ணு ஊரும்
அவையெல்லாம் ஊர்அல்ல அடவி காடே.”

—சு. கரு - ரு.

திருக்கோவில் - படமாடுங்கோவில். திருவெண்ணீறு அணிபவர் - நடமாடும் கோவில். பத்திமையாற் பாடல் - இடமாடும் கோவில். பல தளிகள் - தொழுமிடம்; தொழுகைக்கூடம். இதனைப் பசனைக்கூடம் என்ப. இடம் - செல்வம்; திருவடிச் செல்வம். மறவாவுள்ளம் - இடமாடும்கோவில்.

“ காலையே போன்றிலங்கும்...........”

—கஉகூ-ஆம் பக்கம் காண்க.

“ காமம் வெகுளி..............” —உககூ-ஆம் பக்கம் காண்க.

“ முன்னம் அவனுடைய.........” —கசகூ-ஆம் பக்கம் காண்க.

“ சீலம் இன்றி....................” —ருஎக-ஆம் பக்கம் காண்க.

“ சிறப்பொடு பூசனை ” சிறப்பு திருவிழாவே அன்றித் திருமுறைத் திருப்பாடல்கள் பெற்ற திருஊரும், திருமுறைத் திருமாமறையால் செய்யும் வழிபாடும் ஆகும். இவ்வுண்மை வருமாறு:

“ பிறப்போடு இறப்பென்றும் இல்லா தான்காண்
பெண்ணுருவோடு ஆணுருவம் ஆயி னான்காண்
மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண்
வானவரும் அறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபம் தீபம் நல்ல
நறுஞ்சாந்தம் கொண்டேத்தி நாளும் வானோர்*
சிறப்போடு பூசிக்கும் திருவார் ஊரில்
திருமூலட் டானத்தெம் செல்வன் தானே.”

—சு. ருO - ரு.

“ மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக்கு அப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும்
நற்றொண்டா காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை
புதியமதி நதியிதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தாரும்
செப்பியஅப் பாலும்அடிச் சார்ந்தார் தாமே.”

—கஉ. அப்பாலும் - க.

“ உடையாள் உன்தன்..............” —ருகக-ஆம் பக்கம் காண்க.

---

* “ சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.” —திருக்குறள், கஎ.

உடையான் நடுவுள் உடையாள் இருக்கும் நிலை உலகினைக் கூட்டும் நிலை. உடையாள் நடுவுள் உடையான் இருக்கும் நிலை உலகினை ஆட்டும் நிலை. அடியேன் நடுவுள் இருவீரும் இருக்கும் நிலை சிறப்பும் செல்வமும் ஆவியினுக்கு ஊட்டும் நிலை. அடியார் நடுவுள் இருக்கும் நிலை நன்னெறி யின்கண் ஆவியினை நாட்டும் நிலை.

'பிறப்போடு' என்னும் திருப்பாட்டின் மெய்ப்பொருள் வானவர்க்கும் மழைவேண்டும் என்பது, என்னை? அவர்களும் இந்த மாநிலத்தே வந்து செம்பொருளைப் பூவும் புனலும்கொண்டு வழிபட்டுப் போற்றுவ ராகலான்.

## இலக்கணம்

பித்துப் போறலின் 'பித்து' என ஓதியருளினர். பித்து, தன்னைக் கொண்டாரை அவர்வழிச் செல்ல ஒட்டாது தன்வழிச் செலுத்தும் தகையது. அதுபோல் 'பத்தரினத்துப் பித்தாயினர்' தம்வழிச் செல்லாது பத்தர்வழிச் செல்லும் மெய்த்தவராவர்.

## வழிமொழிதல்

ஏதுவின்கண் "அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவர் ஆகலான்" என ஓதியருளினர். "பத்தரினத்துப் பித்தாய்" விளங்கல் வேண்டும் என்பதை வலியுறுத்த மீண்டும் அதனையே "மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் சிறப்பில்லார்" என வழிமொழிந்தனர். நோயுண்டார் மருந்துணபதன்முன் வயிற்றினைத் தூய்மைப் படுத்துதல் வேண்டும். அச்செயலோடு ஒக்கும் இது.

## ஆகுபெயர்

'மலம்' என்பது 'மலங்களின் வீழ்க்கும்' என்பதன்கண் வருவது. இது மலங்களினால் ஆகிய பிறவிக்குழியை உணர்த்துதலால் ஆகுபெயர்.

## உருவகம்

'வீழ்க்கும்' என்றது உருவகம் குறித்து நிற்கின்றது. இவ் உருவ கத்துக்கு ஏற்ப மலங்களினாலாகிய பிறவியைக் குழியாக உருவகம் செய்யப் பெறுகின்றது.

## மெய்த்தவம்

அழிவின்றி என்றும் நிலைப்பதாய பயனை நின்றுதவும் தவம் மெய்த் தவம் எனப்படும். இது கல்வி, அறிவாகிய பயனை நின்று உதவுவதை ஒக்கும். பொய்த்தவம் நிலையாப் பயனைத் தந்து தானும் அதனுடன் அழிவது. மெய்த்தவத்துக்குப் பொன்னாலாகிய உண்கலமும், பொய்த் தவத்துக்கு இலையாலாகிய உண்கலமும் ஒப்பாவன. இவ்வேறுபாடு ௩௭௪, ௫-ஆம் பக்கங்களிற் காண்க.

## பால்பகா அஃறிணைப்பெயர்

'வினை' என்பது பயனிலை ஒருமையாயின் ஒருமையாகவும், பன்மை யாயின் பன்மையாகவும் நிற்கும். இங்கு 'மேவா வினை' என்று வருத லால் 'வினை' பன்மையாகும். நூற்பா வருமாறு:

"தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே."

—தொல். சொல்-௧௭௪.

## மூன்றும் அதிகரணம்

**இனிப் பத்தராது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுகவென்றது.**

எ - து. மே - ள். எ - னின். அன்பரொடு மரீஇயினார்க்கு அம்மருவுதலை நிலைபெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக் கடவது இதுவெனச் சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்து உரைத்து மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ-டை.

காண்டல்—ஐயுறவின்றித் தெளிதல்.

காமக்கிழத்தியர் வடிவில் காணப்படும் ஆடை சாந்து அணிகலன்முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ்செய்யுமாறுபோல மெய்யுணர்வுடையாரைக் காட்சிமாத்திரையின் வசீகரித்து இன்பஞ்செய்தல்பற்றித் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையுமென்று உபசரித்தார். அது *"சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்—போலும் பொடியணி மார்பிலங்குமென்று புண்ணியர் போற்றிசைப்ப" என்னுந் திருவாக்கானுமறிக. திருவேடத்தினியல்பு †"தூய வெண்ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு—நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்—பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன் — மேயசெவ் வாயுமுடையார் புகுந்தனர் வீதியுள்ளே." ‡"சிந்தையிடை யறாவன்புந் திருமேனி தனிலசைவுங்—கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவாரப்படையும் — வந்திழிகண்ணீர் மழையும்வடிவிற்பொலி திருநீறும்—அந்தமிலாத் திருவேடத் தரசும்எதிர் வந்தணைய" "கண்டகவு ணியக்கன்றுங் கருத்திற்பரவு மெய்க் காதற் — றொண்டர்திரு வேடநேரே தோன்றியதென்று தொழுதே" என்றற்றொடக்கத்துத் திருவாக்குக்களானுமறிக.

**அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.**

எ - து. ஏது எ - னின். மெய்யுணர்வுடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் பரமேசுரனெனக் காண்டலே பொருத்தம் உடைமையானும் நின்ற திருத்தாண்டக முதலியவற்றுள் அவ்வாறோதுதலானும் திருவுருத்திரத்துட் பகுப்பின்றி உயிர்ப்பொருள் உயிரில்பொருள் எல்லாவற்றையுந் தனித்தனியெடுத்தோதி வழிபாடு கூறுதலானும் ஈண்டிவற்றை மாத்திரையே விதந்துகொண்டோதியது என்னையென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

---

* திருப்பல்லாண்டு. அ. (௬௮எ) † திருநாவுக். புராணம். கசாO.
‡ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம். உஎO, உஎக.

(இ - ள்.) அம்முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்துமாத்திரையே தயிரின்நெய்போலவிளங்கி நிலைபெற்று அல்லுழியெல்லாம் பாலின் நெய்போல வெளிப்படாது நிற்றலான் இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக என மேற்கொண்டது (எ - று).

மற்று உரையசை.

எப்பொருட்கண்ணும் இறைவன் கலந்துளனென்பது தெளிந்துகோடற்பொருட்டுத் திருவுருத்திரத்தின் அவ்வாறு ஓதப்பட்டதெனக் கொள்க.

*தன்உணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்உணரத் தன்னுள் இருத்தலால்—தன்உணரும்
நேசத்தார்† தம்பால் நிகழுந் ததிநெய்போல்
பாசத்தார்க்கு இன்றாம் பதி.

எ - து. உ - ம். எ - னின். திருவேடத்தின் இறைவன் பிரகாசமாய் நிற்குமாறு யாங்ஙனமென்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பதி—அசிந்திதனாய் நின்ற பரம்பொருளே, தன் உணரவேண்டி—(உலகத்துள்ளார்) தன்னை அறிதற்பொருட்டு, தனது உருவைத் தான் கொடுத்து—(திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய) தனது திருவடிவத்தைத் தன் அன்பர்க்குக்கொடுத்தலானும், தன் உணர—(அவ் அன்பர்) தன்னைச் சிவோகம் பாவனையால் அறியச் செய்தலானும், தன்னுள் இருத்தலால்—(அங்ஙனம் ஒரு குறியின்கண் நின்று உணரும் அவரைத்) தனது வியாபகத்துள்ளாக இருத்துதலானும், தன் உணரும் நேசத்தார் தம்பால் ததி நெய்போல் நிகழும்—(குறியும் இறந்து நின்று) தன்னை உள்ளவாறு உணருமவர்மாட்டுத் தயிரின் கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்றும், பாசத்தார்க்கு இன்று ஆம்—(அவ்வியல்பில்லாத) பாசக்கட்டுடையார் மாட்டுப் பாலின்கண்ணதாகிய நெய்போல விளங்காது நிற்கும் (எ - று).

செய்தென்பது சொல்லெச்சம்.

இருத்தல் அல்லீற்றுப் பிறவினைத்தொழிற்பெயர்.

கொடுத்துச் செய்திருத்தலான் நிகழும் என இயையும்.

---

* 'அறிவறியான்' சித்தியார், கஉ-ங. † (பாடம்) நேசத்தர்.

தன்னுணருநேசத்தாரெனப் பெயரடையானும் ஓரேதுக் கூறப்பட்டது. தன்னை என்னும் இரண்டன் உருபு விகாரத்தால் தொக்கது.

உணர்தலை மூவிடத்து ஓதுதலின் இஃது அங்ஙனம் வேறு வேறு உரைக்கப்பட்டது.

பாசத்தார்க்கு என்பது உருபுமயக்கம்.

இன்மை ஈண்டு விளங்காமை குறித்து நின்றது.

*கண்டதொரு மந்திரத்தால் காட்டத்தில் அங்கிவேறு
உண்டல்போல் நின்றங்கு உளதாமால்—கண்டஉருத்
தானதுவாய் அன்றானன் தானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணும் தவர்க்கு.

எ - து. உ - ம். எ - னின். சங்கமவடிவிற்குக் கூறிப்போந்த இயல்பில்லாத தாவரவடிவின் மந்திர சாந்நித்தியமுள்ள வழி அன்றிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படாது என்பாரை நோக்கிச் சிவாலயத்தினிடத்தும் இறைவன் பிரகாசமாய் நிற்றலை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) காட்டத்தின் அங்கி வேறு உண்டல்போல்—விறகில் தீ (கடைகோலால் கடைந்துழி) வேறாய் விளங்கும் (அல்லுழி விளங்குவதன்றானாற்) போல, கண்ட உருத் தான் அது ஆய் அன்று ஆனன்—(உயிர்கட்குப் புத்திமுத்தி யளித்தற் பொருட்டுக்) காணப்பட்ட தாவர வடிவின்கண் (கலப்பினால்) அதுவே தானாய் (அதுவன்றி) வேறு பொருளுமாம் இயல்புடைய முதல்வன், கண்டது ஒருமந்திரத்தால் நின்று அங்கு உளது ஆம்—(அதுவே தானாகக் காணாதார்க்குத்) தம்மால் அறியப் பட்டதொரு மந்திர சாந்நித்தியம் இல்வழி அவ்வடிவின்கண் விளங்காது நின்று அஃதுள்வழி விளங்கித்தோன்றும் பொருளாம், அது தான் ஆய்க் காணும்தவர்க்கு அது தான் ஆய்த் தோன்றானே—(அவ்வாறன்றி) அவ்வடிவே அவனாகக் காணப் பெறும் உண்மைத்தவம் உடையார்க்கு அப்பெற்றியனேயாய் விளங்கித் தோன்றான்கொல்லோ (எ - று).

காணாதார்க்கு என்பது சொல்லெச்சம்.

மந்திரத்தால் என்னும் பொருளடைக்கு ஏற்ப உவமையினும் வருவித்துரைக்கப்பட்டது.

* 'திருக்கோவில்' சித்தியார்-கஉ. ௩-௪.

உண்டாதல் ஈண்டு விளங்குதல்மேற்று.

ஆல் அசை. ஆனன் என்பது பெயர். ஓகாரம் எதிர்மறை. பொருண்மைபற்றி உளதெனவும் அன்றெனவும் கூறினார்.

தானதுவாய் அன்றானன் என்னும் பெயரடையான் அவ ரவர் பாவனைக்கேற்ப விளங்குதற்கேதுக்கூறியது. தானதுவாய் அன்றாதல் சங்கமவடிவிற்கும் ஒக்குமேனும், தாவரவடிவின்கண் நிகழுங் கடாவை இதனான் அன்றி நீக்கலாகாமையின் ஈண்டுக் கூறினார். இஃதீரிடத்தும் ஒக்கும் என்பது முன்னர்ப் பெறப் படும்.

## விளக்கம்

### வழிச்செயல் ஆற்றல்

இரண்டாம் கூற்றில் கூறியவாறு மெய்யுணர்வு கைவந்த தவத்தரா கிய 'சிவபத்தர்களோடு இணங்கினார்க்கு' அதன்பின் செய்யக்கடவது ஆற்றல் தொழிற்படும்முறை. ஆற்றல் எனினும் செய்கை எனினும் ஒன்றே. செய்கையைத் தொழில் எனவும் கூறுவா. 'அன்பரொடு மரீஇயினார்க்கு' அம் மருவுதலை நிலைபெறத்துவது சிவனடியார் திருக் கோலத்தையும், சிவன் திருக்கோவிலையும் சிவன் எனவே ஐயுறவின்றித் தெளிந்து வழிபடுதல்.

### காட்சிவயம்

திருக்கோலமும் திருக்கோவிலும் காட்சியளவானே மெய்யடியார் களைத் தம் வயப் படுத்துகின்றமையின் அவற்றையே விழுமியான் எனக் காண்க என்று அருளினர். இஃது ஏற்றுரை. இவை காட்சி அளவானே மாட்சி மிக்க இன்பம் செய்யும். இதற்கு ஒப்பு, காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணி முதலிய அரும்பொருள்கள். காமக் கிழத்தி—மனையறத்திற்கு உரியளாக வரைந்துகொண்ட இற்பரத்தை (தொல். பொருள் - கசஎ). தொல்காப் பியம்சொல்லும் வையத் துளதுய்ப்பு, நல்லொழுக்க ஆணைகுறள் நாடு என்பதை உன்னின் தொல் காப்பியர் பின்முறைவதுவை, காமக்கிழத்தி, காதற்பரத்தை என மூவரைத் தலைவியொடும் கூட்டி உரைப்பாராயினர். இறையனார் அகப் பொருளில் காதற்பரத்தை ஒன்றே தலைவியுடன் கூட்டி உரைக்கப் பெற்றது. ஆனால் திருக்குறளில் நாயனார் காதற்பரத்தையையும் விலக்கி வாழ்க்கைத் துணையாகிய தலைவி ஒருத்தியொடு மருவுதலையே மனையறம் என ஆணையொடும் வகுப்பாராயினர். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக் களான் உணர்க:

> "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்." —திருக்குறள், ௫௬.

தற்கொண்டாற் பேணல் - கணவனை உண்டி, உடை, உறையுள் உறை, உழைப்பு, உணர்வு, உடனுறைவு, உய்வு என்னும் நிலைகளில் நீங்காத்துணையாய் நின்று கொழுநனை நன்னெறிக்கண் செலுத்தல் உறை - மருந்து. உய்வு - திருவடி சேர்ந்தின்புறுதல்.

> "காதல் பரத்தை எல்லார்க்கும் உரித்தே." —இறையனார், ௪௦

"பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர்." —திருக்குறள், ௯௧௪.

அருட்பொருள் - திருவடி அடைதற்கு வாயிலாகிய மனையறம். பொருட் பொருளார் - புறப்பெண்டிர். புன்னலம் - இம்மை உம்மை அம்மை மூன்றற்குந் துணையாகாது பிறவிப் பெருங்குழியில் வீழ்த்தும் இழிவுக்கே துணையாகும் தாழ்வின்பம். தோயார் - உள்ளத்தும் எண்ணார்.

"ஆனதங் கேள்வர் அங்கோர் பரத்தைபால் அணைந்து நண்ணு
மானமுன் பொறாது வந்த ஊடலால் மனையின் வாழ்க்கை
ஏனைய எல்லாம் செய்தே உடனுறைவு இசையா ராகி
தேனலர் கமலப் போதில் திருவினும் உருவின் மிக்கார்."
—௧௨. திருநீல - குய - ௫.

"வரிசிலைத் தென்ன வன்தான் உய்தற்கு வளவர் கோமான்
திருவுயிர்த் தருளும் செல்வப் பாண்டிமா தேவி யாரும்
குரைகழல் அமைச்ச ரூராங் குலச்சிறை யாரு மென்னும்
இருவர்தம் பாங்கும் அன்றிச் சைவமங் கெய்தா தாக."
—௧௨. திருஞா - ௬௦௩.

உய்தற்கு - திருவடி எய்திஇன்புறுதற்கு உரிய நெறி.

"பூசுரர்சூ ளாமணியாம் புகலி வேந்தர்
போனகஞா னம்பொழிந்த புனித வாக்கால்
தேசுடைய பாடல்பெறும் தவத்தி னாரைச்
செப்புவதி யாம் என்னறிந்து தென்னர் கோமான்
மாசில்புகழ் நெடுமாறன் தனக்குச் சைவ
வழித்துணையாய் நெடுங்காலம் மன்னிப் பின்னை
ஆசில்நெறி அவரோடும் கூட ஈசர்
அடிநிழற்கீழ் அமர்ந்திருக்க அருளும் பெற்றார்."
—௧௨. மங்கையர்க் - ௨.

மாசில்புகழ் - ஒருவன் ஒருத்தியாய் மனையறம் பேணி 'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்தற்கு'ச் செந்நெறிச் செல்லும் நற்பெயர். ஆசில் நெறி - பிறவாநெறி.

"காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலஞ் செய்தருளித்
தீதகற்ற வந்தருளும் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியதன் உட்புகுவார்
போதநிலை முடிந்தவழி புக்கொன்றி உடனானார்."
—௧௨. திருஞா - ௧௨௫௩.

காதலி - அம்மையார் திருப்பெயர். கைப்பற்றிக்கொண்டு - அம்மை அப்பராய்த்திகழும் செம்பொருளாம் ஆண்டவன்போல் ஒருவன் ஒருத்தியாய் வாழ்வதே சைவ வாழ்வு எனத் தெருட்டல். புக்கு - வேறாய். ஒன்றி - ஒன்றாய். உடனானார் - உடனாய். இவற்றில் மூத்திற மெய்ப் புணர்ப்பும் காண்க.

வடிவு

"சேலும் கயலும் திளைக்கும்
கண்ணார் இளங் கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங்
குமென்று புண்ணியர் போற்றிசைப்ப

மாலும் அயனும் அறியா
நெறிதந்து வந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்துநின்
றானுக்கே பல்லாண்டு கூறுதுமே." —க. திருப் - அ.

"தூயவெண் ணீறு..........."—௬௩௨-ஆம் பக்கம் காண்க.

"சிந்தை இடையறா..........."— "

"கண்டகவு ணியக்கன்றும் கருத்திற்பரவு மெய்க்காதல்
தொண்டர்திரு வேடம்நேரே தோன்றியதென் றதொழுதே
அண்டரும்போற் றவணைந்தங் கரசுமெதிர் வந்திறைஞ்ச
மண்டியவார் வம்பெருக மதுரமொழி அருள்செய்தார்."
—கஉ. திருஞா - உஎ௬.

"முத்தமிழ் விரகர் தாமும் முதல்வர்கோ புரத்து முன்னர்ச்
சித்தநீ டுவகை யோடும் சென்றுதாழ்ந் தெழுந்து புக்குப்
பத்தராம் அடியார் சூழப் பரமர்கோ விலைச்சூழ் வந்து
நித்தனார் தம்முன் பெய்தி நிலமுறத் தொழுது வீழ்ந்தார்."
—கஉ. திருஞா - கஉ௬.

"கால்க ளாற்பய னென்—
கறைக் கண்டன் உறைகோவில்
கோலக் கோபுரக் கோகரணம்சூழாக்
கால்க ளாற்பய னென்." —ச. க - க.

கோகரணம் - மலைநாட்டுத்திருவூர்.

## பகுப்பின்றிக்காண்டல்

மெய்யுணர்வு உடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் விழுமியனாகிய பரமேசுரன் எனக்காண்டலே பொருத்தமுடைத்து. நின்ற திருத்தாண்டகத்தும் அவ்வாறே அருளுகின்றனர். ஈண்டுப் "பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக்கண்டு வழிபடுக" எனப் பிரித்துக் கூறியது என்னை எனின்? அவன் இவ்விடங்களில் மட்டும் தயிரின் நெய்போல் விளங்கித் தோன்றுகின்றனன், மற்றைய இடங்களில் பாலில் நெய்போல் வெளிப்படாது நிற்கின்றனன்; ஆதலான் என்க.

"இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி
இயமான னாயெறியும் காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாய்அட்ட மூர்த்தி ஆகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறர்உருவும் தம்உருவும் தாமே ஆகி
நெருநலையாய் இன்றாகி நாளை ஆகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே."—சு. கச - க.

இயமானன் - இயக்குந்தலைவன். அருநிலைய - வான்வெளியில் உண்டையாய்த் திருஅருள் ஆணையில் நிற்கும் அரிய நிலையை உடைய. அட்டமூர்த்தம் - எட்டுத் திருவுரு. எட்டே அட்டென்றாயிற்று. புன்சடை - கபில நிறச்சடை; புகர் நிறச்சடை. அடிகள் - சாமிகள்.

'தன்உணர.........................பதி.'

**விளக்கம்**

முதல்வன் தயிரின் நெய்போல் விளங்கித் தோன்றுவன் என்பது அறிவுக்கு அறிவாய் நிற்கின்ற அவன் மேலோங்கி நிற்றலே. இஃது அரசாணையை உடுப்பு முதலியவற்றால் தாங்கி நிற்கும் வேந்தவைப்பணியாளர்மாட்டு அவ்வேந்தன் மேலோங்கி நிற்றலை ஒக்கும். "நம்பின் எம்மை நுழையப்பணியே" (கஉ) என்பதும் இது. இறைவனை உணர்த்தும் நினைவுக்குறி திருநீறு, திருமணி, திருமுறை மூன்றுமாம். இம்மூன்றும் முறையே ஆற்றல் அன்பு அறிவு என்னும் மூன்றினையும் உணர்த்தும்.

ஆற்றல் அடையாளமாக நிற்பது **திருவெண்ணீறு**. திருவெண்ணீறு ஆக்கப்பருப்பொருளை அழிவில் நுண்பொருளாக்கி நோக்கச் செய்வது, உண்மை உணர்த்தும் உண்மை அடையாளம் 'முழுநீறு பூசுதல்' (௫எக). இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"முத்தி தருவதும் நீறு முனிவர் அணிவதும் நீறு
சத்தியம் ஆவதும் நீறு தக்கோர் புகழ்வதும் நீறு
பத்தி தருவதும் நீறு பரவ இனியதும் நீறு
சித்தி தருவதும் நீறு திருஆலவா யான்திரு நீறே."

"தினைவளம் காத்துச் சிலம்பெதிர் கூஉய்ச்சிற்றில் முற்றிழைத்துச்
சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து **தொழுதெழுவார்
வினைவளம் நீறெழ நீறணி** அம்பல வன்றன்வெற்பில்
புனைவளர் கொம்பர்அன் னாய்அன்ன காண்டும் புனமயிலே."
—அ. திருக்கோவையார் - ககஅ.

"**நீறணிந்த கோலம்** நெஞ்சம் பிணிக்கும் எழிலுடைமையான் அக்கோலம் தொழுது எழுவார் உள்ளத்து நீங்காது நிற்றலான் ஆண்டுள்ள வினை நீறும் என்னும் கருத்தான் வினைவளம் நீறெழ நீறணி அம்பலவன் என்றார்" (பேராசிரியர் உரை). எனவே திருவெண்ணீறு ஆவியின் அழுக்ககற்றும் முழுநீறு என்க.

"ஆறறி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரம் தீமடுத்துக்
கூறாமல் குறித்ததன்மேல் செல்லும் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற்று எண்கையாய் கேளினி;
௫. படுபறை பலஇயம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ
கொடுகொட்டி ஆடுங்கால் கோடுயர் அகல்குறிக்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ;
மண்டமர் பலகடந்து **மதுகையால் நீறணிந்து**
பண்டரங்கம் ஆடுங்கால பணைஎழில் அணைமென்தோள்
க0. வண்டாற்றும் கூந்தலாள் வளர்தூக்குத் தருவாளோ;
கொலைஉழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவல்புரளத்
தலைஅங்கை கொண்டுநீ காபாலம் ஆடுங்கால்
முலைஅணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ;
எனஆங்கு
க௫. பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
மாண்இழை அரிவை காப்ப
ஆணமில் பொருள்எமக்கு அமர்ந்தனை ஆடி."—கலித்தொகை-க.

பாண்டரங்கம் பண்டரங்கம் எனத் திரிந்தது.

“ஏறமர் கடவுள் மூஎயில் எய்வுழிக்
கூறுகூ றாகக் கொடியொடும் படையொடும்
வேறுவே றுருவின் விண்மிசைப் பரத்தனர்
அவ்வழி ஒளியொடும் உருவொடும் தோன்றித்
தேர்முன் நின்று திசைதலை பணிப்பச்
சுவையும் குறிப்பும் ஒழிவில தோன்றி
அவைஅவை அவ்வழி ஆடினன் ஆட
மைந்தரும் மகளிரும் தம்நிலை அழிய
மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக்
கடிய காலக் காற்றென ஏற்றவன்
படிநிலை திரியாப் பாண்டரங் கம்மே.”

—கலி. க. நச்சினார்க்கினியர் உரை மேற்கோள்.

அன்பின் அடையாளமாகிய திருமணி கடவுட் கண்மணி எனப்படும். திருவெண்ணீறு ஆற்றல்வடிவாதலால அவ்வடிவினுக்கு அணியாக விளங்குவது கண்மணியாகிய திருமணி. அஃது அந்தண்மையாகிய ஆண்டவன் திருவருளின் அடையாளம். அவ்வுண்மைக் குறிப்பு விளங்க ஆளுடைய பிள்ளையாரின் திருமணங்காண மகிழ்வொடு வந்த எண்பொருள்களுள் ஏழாவதாகிய மருந்து திருவெண்ணீறணிந்து வருகின்ற தூய அன்பர்களுடன் கண்டிபூண்டு வந்தது என்னும் வாய்மை அருளப்பெற்றுள்ளது. எண் பெரும் பொருள்களாவன :

௧. மறை, ௨. பகலோன், ௩. திசைகள், ௪. வையம், ௫. புணரி, ௬. வன்னி, ௭. மருத்து, ௮. விசும்பு என்பன. இவற்றுள் அருள்ஒப்பு மருத்தென்னும் வளிக்கே என்பது நாயனார் அருள்மொழியாலும் காண்க:

“அல்லல் அருள்ஆள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.”—திருக்குறள், ௨௪௫.

வளி - காற்று.

“சந்த மென்மலர்த் தாதணி நீறுமெய் தரித்துக்
கந்த மேவுவண் டொழுங்கெனும் கண்டிகை பூண்டு
சிந்தை தூயஅன் பர்களுடன் திருமணம் போத
மந்த சாரியின் மணங்கொணர்ந் தெழுந்தது மருந்து.”

—௧௨. திருஞா-௧௧௧௪.

கண்மணி பலவாகவும் பருமனாகவும் இருக்கவேண்டும் என்பது “வண்டொழுங்கெனும் கண்டிகை” என்னும் உவமையால் பெறப்படும். ஆற்றலாம் திருவெண்ணீற்று வடிவினுக்கு அன்பாம் திருமணி அணியாக விளங்குவதுபோல் அறிவின் அடையாளமாகிய திருமுறை அவற்றின் அகமாய்த் திகழ்வது. அகம் உள் இன்பம் உயிர் எனப் பலபொருள்படும். அத்திருமுறை விரிவு அனைத்தும் திருமறை ஐந்தெழுத்தின் தொகையினின்றும் வந்தனவே. திருநீறு திருமணி திருமறைமுதலிய திருக்கோலங்களுக்கு உயிர்க்குயிராய் இருப்பது செம்பொருளாம் சிவபெருமானே. திருநீறு திருமணியாகிய அகப்புறக்கோலத்தோடு, திருமுறைத் திருமறை பாடி வழிபடுதலே ‘தென்னாடுடைய சிவ’பெருமானின் திருவுள்ளம் என்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலான் மண்மேல் நம்மைச
சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்."—கஉ.௧௬௭-௭0.

அருச்சனை-அர்ச்சனை; எதுகை நோக்கி அற்சனை ஆயிற்று. அருச்சனை-வழிபாடு. அருத்துதல் - உவப்பித்தல். இவ்அடியாகத் தோன்றியது அருச்சனை. பாட்டு - திருமுறைத்திருப்பாட்டு. சொற்றமிழ் - புகழ்ந்து சொல்லப்படுகின்ற தமிழ்; உலகியல் வழக்கினும் புலனெறி வழக்கினும் தொன்றுதொட்டு மாசுணுது ஆசகற்றி நின்றநிலவும் நன்றுநிறை தீந்தமிழ். தூமறை - அருள்ஒலி. அஃதாவது திருமுறைத் திருப்பாட்டைப் பாடியருள உடனாய் நின்று உரையாய் உய்த்தருளும் திருவுள்ளம்.

**திருமுறைச் சிறப்பு :**

"அருமறையை..............காணே."—௬அ. ஆம்பக்கம் காண்க.

திருமுறை வழிபாடு என்பது திருமுறைத் திருமாமறை ஓதி மெய் அன்பர்கள் செம்பொருளைத் தம்கையால் வழிபடும் சிறந்த வழிபாடு. இவ் உண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு நற்கலைதெ ரிந்த அவரோடு
அந்தமில்கு ணத்தவர்கள் அருச்சனைகள் செய்யஅமர் கின்ற அரனூர்
கொந்தலர்பொ ழிற்பழன வேலிகுளிர் தண்புனல் வளம்பெ ருகவே
வெந்திறல்வி ளங்கிவளர் வேதியர்வி ரும்புபதி வீழி நகரே."—௩.அ0-௪.

"பேதைமட மங்கையொரு பங்கிடமி குத்திடபம் ஏறி அமரர்
வாதைபட வண்கடலெ ழுந்தவிடம் உண்டசிவன் வாழும் இடமாம்
மாதரோடும் ஆடவர்கள் வந்தடியி றைஞ்சிநிறை மாமலர்கள் தூஉய்க்
கோதைவரி வண்டிசைகொள் கீதமுரல் கின்றவளர் கோக ரணமே."
—௩.௭௯-௨.

"பாயிரும்...........
௭அ. ... ... ... ...யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும்அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே."—பரிபாடல், ௫.

"புலவரை...............
௪௬. தைய லவரொடும் தந்தா ரவரொடும்
கைம்மக வோடும் காத லவரொடும்
தெய்வம் பேணித் திசைதொழு தனிர் சென்மின்."
—பரிபாடல், ௧௯

"அணைய வந்துபுக் கயவந்தி மேவிய அமுதின்
துணைம லர்க்கழல் தொழுதுபூ சனைசெயத் தொடங்கி
இணைய நின்றங்கு வேண்டுவ மனைவியார் ஏந்த
உணர்வின் மிக்கவர் உயர்ந்தஅர்ச் சனைமுறை உய்த்தார்."
—கஉ. திருநீலநக்கர் - ௯.

"நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்
பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு மஞ்சனப் பணிக்குள்ளோர்
அல்லு நண்பக லுந்திரு அலகிட்டுத் திருமெழுக் கமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை எழுதுவோர் வாசிப்போர்."
—கஉ. கணநாத - ௩.

இதன்கண் எண்பெருந் தொண்டுகள் இசைக்கப்படுகின்றன. இவற்றுள் திருமுறை எழுதுதல் உடலாகவும், வாசித்தல் உளமாகவும் அதன் வழி ஆர்வமொடு வழிபடுதல் உயிராகவும், ஏனைய உறையுள் அணி ஆடை பூச்சு முதலிய பிறவாகவும் கொள்க.

திருக்கோவில் வழிபாடு தாம் தாம் அறிந்தவாறே தொன்மைத் தமிழ்ச் சான்றோர் நன்மை மிகச்செய்து போந்தனர் என்னும் உண்மை மலைவாழ் "கலை மலிந்த சீர்நம்பி கண்ணப்ப" நாயனார் திருவழிபாட்டால் உணர்க. பிற்காலத்துக் கோவிற் குருக்கண்மார் பெருமக்களின் ஏவலாளராய் அவர்தம் ஆணைபெற்று நிகழ்த்தி வருவாராயினர். அம்முறை இன்றும் மாறாது திருக்கோவில்களில் நாள்விழா சிறப்புவிழா வழிபாட்டு அருச்சனை முதலியவற்றில் உரியவர்தம் ஆணைபெற்றே செய்து போதருகின்றனர். அச்செயல் பெரும்பாலும் நம்மனோர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதற்குக் காரணம் அச்செயலுக்குரிய சொற்கள் நம் தாய்மொழியாம் தமிழாக இல்லாமையே. அச்சொற்களின் தலைப்பு 'அநுஞை' என்பது. இதன் பொருள் கட்டளை அல்லது ஆணை. அதன் சுருக்கத்தை ஒரு வெண்பாவால் காட்டுதும்:

நன்னாளாம் இந்நாளில் நம்தலைவ ராயமைந்தார்
பொன்னார் அடிபோற்றிப் பூத்தூவல்—பொன்னார்சிற்
றம்பலத்தாய் வேண்டும் அருள்புரிய வேண்டியாம்
அம்பலத்தாய் அன்பருள்க ஆங்கு.

" யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே." —௧0. உ௫உ.

பச்சிலை - கரும்பொன்னைச் செம்பொன்னாக்கும் பச்சிலையின் மாண்பு காட்டும் மரபினது.

" வன்திறல் உந்தை யோடும் மாவேட்டை யாடிப் பண்டிக்
குன்றிடை வந்தோ மாகக் குளிர்ந்தநீர் இவரை ஆட்டி
ஒன்றிய இலைப்பூச் சூட்டி ஊட்டிமுன் பறைந்தோர் பார்ப்பான்
நன்றிது செய்தான் இன்றும் அவன்செய்தது ஆகும் என்றான்."

" உண்ணிறைந் தெழுந்த தேனும் ஒழிவின்றி ஆரா அன்பின்
திண்ணனார் திருக்காளத்தி நாயனார்க் கினிய செய்கை
எண்ணிய இவைகொ லாமென் றிதுகடைப் பிடித்துக் கொண்டவ்
அண்ணலைப் பிரிய மாட்டாது அளவிலா தரவு நீட."
—௧உ. கண்ணப்பர் - ௧0௧, ௧0.

பால் காய்ச்சிப் புரைகுற்றற்குக் கலமும் கலப்புநீரும் தீயும் மோரும் பிறவும் வேண்டுவ. இவற்றின் கலப்பால் தயிராகும். ஆனதும் நெய் மேற்பட்டு விளங்கும். அதுபோல் மெய்யடியார்கட்கும் பாற்கலன் அனைய தூஉடம்பும், நீரனைய திருவருளும், தீயனைய சிவபெருமானும், மோரனைய திருஐந்தெழுத்தும், திருநீறு திருமணி திருக்கோவில் முதலிய பிறவும் ஒருங்கியைந்தவழி வெளிப்பட்டு விளங்கும் சிவம், பூமலர்ந்தவழி நாற்றம் வெளிப்படுவது போன்று. இத் தொடர்புகள் கூடாவழி, பாலில் நெய்போல் வெளிப்படாது மறைந்திருக்கும் சிவம். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"விறகில் தீயினன்......நிற்குமே" —உருo-ஆம் பக்கம் காண்க.

"மனத்தானும் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தானும்
இன்னான் எனப்படும் சொல்." —திருக்குறள், சஙரு.

உயிர்க்கிழவற்கு இனம் செம்பொருளாயின் அவன் சிறப்பினன் எனவும், மலம் மாயை கன்மங்களாயின் மறப்பினன் எனவும் அழைக்கப் படுவன். சிறந்தால் வீடுபேற்றின்பம் எய்துவன். மறந்தால் கூடுறைந் தழிதரும் வீடில் துன்பம் எய்துவன்.

**இலக்கணம்**

'மற்று' உரைஅசை. இஃது, "அவன் '**மற்று**' இவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்" என்ற இடத்துக் காணப்படுவது. இது செய்யுளின்கண் இன்றி உரை யின்கண் வந்தது. அதனால் இஃது உரையசை எனப்படும். நூற்பா வருமாறு:

"மற்றென் கிளவி வினைமாற்று அசைநிலை
அப்பால் இரண்டென மொழிமனார் புலவர்."
—தொல். சொல் - உசுஉ.

செய்யுளிலே அன்றிக் "கட்டுரையிடையும் மற்றே என அசை நிலையாய் வரும்" என்பது ஆசிரியர் சேனாவரையர் திருமொழி.

'செய்து' என்பது சொல்லெச்சம். இது வெண்பாவின் இரண் டாம் அடியில் 'தன்உணர' என்பதன்பின் சேர்த்துத் தன்உணரச்**செய்து** என்று அமைதலால் சொல்லெச்சம். நூற்பா வருமாறு:

"சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்
சொல்லளவு அல்லது எஞ்சுதல் இன்றே."
—தொல். சொல் - சசக.

சொல்லும் குறிப்பும் இசையும் ஆகிய எச்சம் மூன்றனுள் சொல் லெச்சம் ஒரு சொல்லாய்நிற்கும். குறிப்பும் இசையும் தொடர்ச்சொல் லாய்வரும்.

'இருத்தல்' அல் ஈற்றுப் பிறவினைத் தொழிற்பெயர். **இருத்துதல்** என்றாகும். இது வெண்பாவின் இரண்டாம் அடியில் 'தன்னுள் **இருத்த** லால்' என்பதன்கண் காணப்படுவது.

"தனது உருவைத் தான் **கொடுத்துத்** தன்உணரச் **செய்து**, தன்உள் **இருத்துதலால்** ததிநெய்போல் நிகழும்" என இயையும்.

'தன்உணரும் நேசத்தார்' என்பதன்கண் காணப்பெறும் 'தன்உண ரும்' என்பது 'நேசத்தார்' என்னும் பெயருக்கு அடை. இந்த அடை யானும் தன்னை உணர்தலால் என்னும் ஓர் ஏதுப் பெறப்படுகின்றது. உணர்தல் இடையறாது அவனையே உணர்விறந்து உணர்தல். உணர் விறந்து என்பது வேறெவ்வுணர்வும் இன்றி முதல்வன்றன் முற்றுணர் வாகவே நிற்றல்.

இவ் வெண்பாவின்கண் "உணர, உணர, உணரும்" என மூன்றி டங்களில் ஒரு பொருள் குறிக்கும் சொல் மூன்று காணப்படுகின்றன.

தன்னை அறி தல்லறியச் செய்தல் குறியிறந்து, மன் உணர்தல் நேசமுறும் மாண்பு என்பதற்கு இயைய, உலகினர் தன்னை அறிதற்பொருட்டு எனவும், அவ் அன்பர் ஒற்றுமையாகிய பெருங்கிழமையால் 'சிவம்நான்' என அறியச்செய்து எனவும், குறியும் இறந்துநின்று உள்ளவாறு உணரும் நேசத்தார் எனவும் வேறு வேறு பொருள் கொள்ளப்பெற்றன. சிவம் நான் என்பதே சிவோகம். இவ் எண்ணம் - பாவனை பயிற்சிக் காலத்து உளதாய்ப் பின் பயனுங்காலத்துத் தாமே நிகழ்வதாம். இது பாடம் கைவந்தபின் எண்ணம இன்றிப் பாடமாகவே படிப்போன் நிற்றலை ஒக்கும். "பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றினோர்க்கே" எனத் திருப்பாட்டு அருள்வது காண்க :

'பாவிக்கின்.................னோர்க்கே'

—௩௬௭-ஆம் பக்கம் காண்க.

ஒற்றுமையால் தாமே நிகழும் உண்மை வருமாறு :

"பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்." —திருக்குறள், ௮0௫.

'பாசத்தார்க்கு' என்பது இவ்வெண்பாவின் ஈற்றடிக்கண் காணப் படுவது. இதன்கண் உள்ள 'கு' நான்காம் வேற்றுமை உருபு. பாசத் தார்க்கும் முதல்வன் உண்டு. அது பாலினிடத்தும் நெய்யுண்டு ; ஆனால் தயிரினிடத்துப்போல் மேலெழுந்து விளங்குவது இன்று. அதுபோலப் பாசத்தார் இடத்து மேலெழுந்து விளஙகுவதில்லை என்னும் மெய்ம்மை விளக்குவதால் அந்நான்கன உருபு நிற்கும இடத்து ஏழன் உருபு நிற்றல் வேண்டும். அதனாலேயே 'பாசக்கட்டுடையார் மாட்டு' என உரை கூறு கின்றது. அதனால் உருபு மயக்கம். நூற்பா வருமாறு :

"யாதன் உருபில் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்."—தொல்.சொல்-௧0௬.

'இன்மை விளங்காமை குறித்து நின்றது' என்பதன்கண் உள்ள 'இன்மை இவ்வெண்பாவின் ஈற்றடியிலுள்ள 'இன்றாம்' என்பதில் காணப்படுவது. அஃது இல்லாமையைக் குறிக்காது விளங்காமையைக் குறிக்கின்றது.

'கண்டதொரு... ... ...தவர்க்கு.'

## விளங்கும் வாய்மை

இறைவன் இயங்குதிணையாகிய ஆவியின்கண் - எண்ணும் உயிர்கள் இயங்கும் உடலின்கண், நண்ணுவன்மே லோங்கிஇறை நாடு என்பதால் அவ்வாவிகள் பயிற்சியில் எண்ணுவதும் பயனில் அவ்வெண்ணப்படும் பொருள்தானே மேல் விளங்கி நண்ணுவதும் நானிலமும் மேனிலமும் கண்டபெருவாய்மை. அத்தகை எண்ணம் கொள்ளும் அறிவில்லாத நிலைத்திணைப்பொருள்கள் மாட்டு எண்ணு நிலைத்திணைக்கண் எம்மான் பண்டேயுளனால், எண்ணுதவத் தார்நினைக்க ஈண்டுவதும் பொருந்தும். அஃதாவது முழுமுதல்வன் நிலைத்திணைப் பொருள்கள் மாட்டுப் பண்டே கலந்துள்ள ஒன்றாம் நிலையில் நன்றாய் உளன். அவ்வுண்மை உணரும் மெய்த்தவர்கள் அவ்விடங்களைக் காண்டலும் அன்பால் நினைக்கின்றனர். அவர்தம் நினைப்பால் மேலோங்கி விளங்குவன் முதல்வன். இது கன்று,

ஈன்ற ஆனிடத்துப் பால் பருக மடுவின்மாட்டு வாய்மடுத்தலே அமையும். உடனே பால்சுரந்துவிடும். நம்மனோர் அப்பாலைக் கறத்தற்கு ஆன்கன்று வாய்மடுத்தலோடு மெல்லென நீவலும் வல்லெனக் கறத்தலும் வேண்டும்.

அவ்வுண்மை ஆளுடைய பிள்ளையார் முதலிய மெய்க்குரவன்மார் எச்செயலும்இன்றி நேரேகண்டருளியதும், அக்காட்சியினை வழியுள்ளார் கண்டுய்ய விழுமிய பழுதில் திருமுறையாகப் பாடியருளியதும், அத்திருப் பாடல்கள்பெற்ற திருவூரே திருவருள் சிறந்து மருவும் பெருவூர் எனக் கொண்டு பின்னுள்ளார் பேணி வழிபட்டுவருவதும் பேருணர்வினர்தம் பெரும்பேற்றுச் செய்கையால் உணரலாம்.

## செய்கை

இவ்வுண்மை உணராத சிலர் சிலபல மறைச்செயல்கள் செய்தூழி ஆண்டுமுதல்வன் விளங்குவன் என எண்ணுகின்றனர். அஃது அவர்தம் நிலையாதலின் அங்ஙனமே செய்தலும் ஏற்புடைத்தென்க. அவர்க்கும் ஆன்கன்றனைய திருமுறைத் திருமாமறை முன் ஓதல்வேண்டும் என்னும் இன்றிஅமையாமை பொன்றலில் வாய்மை என்க. அம் மாமறையினைப் பின்னுக்கியோ இன்றியோ செய்யும் செயல் அனைத்தும் கன்றின்றிப் பால்கறக்கும் அன்றினர்புரி நன்றியில் புன்செயலாகும்.

திருமுறைத் திருமாமறையின் சிறப்பு வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"அருமறையைச்... ... ...காணே."—௬அ. ஆம்பக்கம் காண்க.

"பாலினால் நறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினால் மணமாலை கோணர்ந் தடியார் புரிந்தேத்தச்
சேலினார் வயல்புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்
காலினாற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே." —க. ௬௧-௫.

நூலின் - திருமுறையின். மணமாலை - திருமாமறைத் திருப்பாட்டுக்கள்.

"பன்மாலைத் திரளிருக்கத் தமையு ணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பட்ச மென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானும் சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனேன் எந்நாளும் துதித்து நிற்பேன்
என்மாலை அறிந்திங்கே வாவா என்றே
எனைக்கலப்பாய் திருக்கருணை எம்பி ரானே."
—தாயுமானவர். ௧௬-௧.

"தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாள் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலும் தமிழ்கேட்கும் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்றுமோ தான்."
—,, கல்லா-௧௭.

"பெருகு வேதமு முனிவரும் துதிப்பரும் பெருமையாய் உனை அன்பால்
திருவு லாப்புறம் பாடினேன் திருச்செவி சாத்திடப் பெறவேண்டும்
மருவு பாசத்தை யகன்றிட வன்தொண்டர் கூட்டம்வைத் தாயென்ன
அருளு மீசரும் சொல்லுக என்றனர் அன்பரும் கேட்பித்தார்."
—கஉ. வெள்ளானை-௬௭.

திருவெள்ளி மலையிலும் திருநெறிய தமிழே இறைவன் திருச்செவிக் கினிய பாட்டமிழ்தாம் என்பது "அன்பரும் கேட்பித்தார்" என்னும் அருண்மொழியால் விளங்கும்.

" வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமிலம் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன உள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாமே."
—க0. கஅ௨௬.

பாட்டவி - திருநெறிய தமிழ்த் திருஅமிழ்து. இதுவே "அன்பெனும் அமுது" (௬௫௭).

" பூமாலைக் கேதுபுகழ் பொன்மாலைக் கேதுமணம்
பாமாலைக் குண்டே பயன்."
—பழம்பாடல்.

" நல்இசை ஞானசம் பந்தனும் நாவினுக்கு
அரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்ட னேன்அறி யாமை அறிந்து
கல்வி யன்மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டிஎன் களைகளை அறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே."
—எ.௬எ-௫.

ஏத்துகப்பான் - திருமுறைத் திருமாமறையின் திருப்பாட்டுக்களை வழிபடுவார் வந்தவாறு இசைத்து வாயாரப் பாடுங்கால் திருச்செவி சாய்த்துத் தானும் தன் தையலோடும் மிகமகிழ்வோன். பழம்பாட்டெனப் புறக்கணியான், என்னை? மெய்யடியார் "பொற்பமைந்த அரவாரும் புரிசடையார் தமையல்லாற், சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறித் தலைநின்ற, பெற்றியினின் " உள்ளார் ஆதலின் என்க.

மறை-மந்திரம். மந்திரசாந்நித்தியம்-மந்திரத்தால் முன்னிலைப்படுதல். இம்முறை பாட்டுடைத்தலைவன் முதுமையில் அவன் தன் பிள்ளைமைத் தன்மையைப் பாடி உவப்பூட்டும் பான்மையை ஒக்கும். இஃது ஒரு வகை எற்றுரை என்க 'நரைமுடித்து முறைசெய்ததும்' இவ்வகையதாகும். இவ்வுண்மை வரும் பாட்டுக்களான் உணர்க:

" குழவி மருங்கினும் கிழவ தாகும்."—தொல்.பொருள்-அ௬.

" உரைமுடிவு காணன் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப - நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்."
—பழமொழி. ௬.

மேலும் கண்ணின்மாட்டுக் குற்றம் இல்லாதார் கருவித்துணையின்றி உற்ற எழுத்தினை நற்றிறம்படக்காண்பர். குற்றம் உடையார் கண்ணு

டியின் துணைகொண்டு காண்பர். இத்துணைகொண்டு காணும் பெற்றியும் ஒக்கும்.

"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்
நாணாது நேடியமால் நான்முகனும் காணாநடுச்
சேணாரும் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்."
—௧௨. சாக்கிய-அ.

இத்திருப்பாட்டு மெய்த்தவம் உடையார்க்குக் காட்சிஅளவையானே காணும் ஒண்மை உண்மையாம். தழற்பிழம்பு - சிவக்கொழுந்து.

"கண்ணொடு கண்இணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல." —திருக்குறள், ௧௧00.

கண்-கருத்து. மெய்த்தவம் உடையார் கருத்தொத்த காதலர். அவர்க்குக் காட்சிஅளவானே ஆண்டான் வெளிப்பட்டு விளங்குவன். அதுவே கண்ணொடு கண்இணை நோக்கு ஒத்தல். வாய்ச்சொல்-மெய்த்தவம் உடையர் அல்லாதார் வெளிப்படச் சொல்லும் சொற்கள். அச்சொற்கள் கலப்பினால் ஒன்றாய் நிற்கும் ஆண்டவன்நிலை அறியாது பொருள்தன்மையால் வேறாய் நிற்கும் நிலையொன்றே விளங்கினார்க்கு உளம் நிறைவிற்கு உற்ற துணையாவன.

விறகில் மறைந்துநிற்கும் தீ கடைகோலாற் கடைந்துழி வெளிப்படுவதும் இதற்கு ஒப்பாகும்.

## செல்வமும் சிறப்பும் நல்கல்

விழுமிய முழுமுதல்வன் பழுதில் தொல்அடியார் வழிவரும் மெய் அன்பர்கட்கு உடம்போடு கூடி வாழ்வதாகிய செல்வத்தினையும், மடம் தபுத்துத் திடம்பெறத் தன் நற்றாளுடன் கூடி என்றும் ஒருபடித்தாய் வாழும் சிறப்பினையும் செம்பொருள் துணிவின்படி அருள்வன். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"போகியாய் இருந்து யிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியாய் யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார்
வேகியா னாற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார்
ஊகியா மூடர் எல்லாம் உம்பரின் ஒருவன் என்பர்."
—சித்தியார். ௧. ௨ - ௫0.

போகம் - செல்வம். முத்தி - சிறப்பு; பேறு.

"பந்தம்வீடிவை பண்ணினீர்படி நீர்மதிப் பிதிர்க் கண்ணியீரென்று
சிந்தைசெய் திருக்கும் செங்கையாளர் திருமிழலை
வந்துநாடகம் வானநாடியர் ஆடமாலயன் ஏத்தநாடொறும்
அந்தண் வீழிகொண்டீ ரடியேற்கும் அருளுதிரே."—எ. அஅ - ௪.

"மலைமகள்தம் கோனவனை மாநீர் முத்தை
மரகதத்தை மாமணியை மல்கு செல்வக்
கலைநிலவு கையானைக் கம்பன் தன்னைக்
காண்பினிய செழுஞ்சுடரைக் கனகக் குன்றை

*விலைபெரிய வெண்ணீற்று மேனி யானை*
**மெய்யடியார் வேண்டுவதே வேண்டு வானைச்**
*சிலைநிலவு கரத்தானைத் திருமாற் பேற்றெம்*
*செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே.''*

—சு. ௮௦ - ௩.

வேண்டுவது - எங்கும் எல்லாமும் சிவமாகக் காணுதல். காணுதல் என்பது மெய்ம்மை காணுதல். ''**அவை உடைமை ஆளாம் நாம் (௧௰௧.) அந்த**'' என்பதே அது. வேண்டுவானை - அங்ஙனமே காட்சி ஈந்து அருளுவானை.

**இலக்கணம்**

'காணுதார்க்கு' என்பது சொல்லெச்சம். 'கண்டது ஒரு மந்திரத்தால் நின்று அங்கு உளது ஆம்' என்பதன்கண் யாவர்க்கு என வினு நிகழ்வுழி அதுவே தானுகக் காணுதார்க்கு எனவரும். இது சொல்லெச்சம், (௫௧௩)

பொருள்: நிலைத்திணைப் பொருளாகிய திருக்கோவில் திருவுரு முதலன.

உவமை: காட்டம்.

திருக்கோவில் முதலிய நிலைத்திணைப் பொருளுக்கு **மந்திரத்தால் என** அடை கொடுக்கப்பட்டுள்ளது. அதனுல் உவமையாகிய காட்டத்தில் **கடைகோலால்** என்னும் அடை புணர்த்தப்பட்டுள்ளது.

'உண்டாதல்' ஈண்டு விளங்குதன்மேற்று. இஃது இவ்வெண்பாவின் இரண்டாம் அடியில் காணப்படுவது.

'ஆல்' அசை. இஃது இரண்டாம் அடியில் 'உளதாம் ஆல்' என்பதன்கண் காணப்படும்.

'ஆனுன்.' இது மூன்றும் அடியின்கண் காணப்படுவது. இது பெயர். ஆனுன் என்பது ஆனவன் என்று பொருள்படும்.

'தோன்றுனே' இதுவும் மூன்றும் அடியின்கண் காணப்படுவது. இதன்கண் உள்ள 'ஓ'காரம் எதிர்மறை. தோன்றுவன் என்பது பொருள்.

நூற்பா வருமாறு:

''பிரிநிலை வினுவே **எதிர்மறை** ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே.''—தொல். சொல் - உ௫௬.

'உளது' 'அன்று' என்பன வினையாய் நில்லாமல் பொருளின் தன்மையாய் நின்றன. பொருளின் தன்மை கலப்பினுல் தொன்மையே அதுவே தானுதலும், பொருட்டன்மையால் அதுவன்றி வேறுதலும், இயங்கு திணையாகிய மெய்யடியார் மாட்டு விளங்கித் தோன்றலும், பொய்யடியார் மாட்டு விளங்கித் தோன்றுமையும், நிலைத்திணைக்கண் மெய்யடியார்க்கு விளங்கித் தோன்றலும், பொய்யடியார்க்கு விளங்கித் தோன்று

மையும் ஆகிய இயல்புகள் என்க. மெய்யடியார் 'சிறப்பென்னும் செம்பொருள்' வழிநிற்பவர். பொய்யடியார் 'பிறப்பென்னும் பேதைமை' வழிநிற்பவர். மெய்யடியார் மெய்க்கு அடியார். பொய்யடியார் பொய்க்கு அடியார். 'பொய்யடிமை இல்லாத புலவர்' என்பதும் இப்பொருட்டு. இவ்வுண்மை வரும் திருட்பாட்டான் உணர்க:

"செய்யுள்நிகழ் சொல்தெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயனிதுவே எனத்துணிந்து விளங்கிஒளிர்
மையணியும் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்
பொய்யடிமை இல்லாத புலவரெனப் புகழ்மிக்கார்."

—கஉ. பொய்யடி க.

புலவர் - புலனடங்கிய நலவர். புலனடக்கம் புலவர்கோமானாகிய நலம் அருள் செம்பொருளால் வருவது.

'தான் அதுவாய் அன்று ஆனான்' இதன்கண் 'தான் அதுவாய் அன்று' என்பது பெயரடை. பெயர் 'ஆனான்' என்பது. இது கலப்பினால் அதுவாயும் பொருள் தன்மையால் அன்றாயும் முதல்வன் விளங்குவன். அங்ஙனம் விளங்குவதற்குக் காரணம் அவரவர் எண்ணமே. எண்ணம் - பாவனை.

ஈரிடத்தும் ஒக்கும்

முதல்வன் அதுவாதலும் அன்றாதலும் நிலைத்திணையாகிய உருவின் கண்ணும் இயங்கு திணையாகிய உயிரின் கண்ணும் கலப்பால் 'அவையேயாய்' பொருட்டன்மையால் 'தானே ஆய்' விளங்குதல் ஈரிடத்தும் ஒக்கும். இயங்குதிணையாகிய உயிரின்கண் அவ்வுயிர்கள் இறையடியையே மறவாது இடையறாது உணரும் உணர்வால் வெளிப்படுவன். நிலைத்திணையாகிய உருவின்கண் உணர்வார் உணர்வால் விளங்கும் என்பதை விளக்கி ஐயம் அகற்றப் பெறுகின்றது.

திருமுறைச் செல்வர்கள் எழுந்தருளித் திருவருளால் திருநெறிய தமிழ்மாமறை பாடியருளி வழிபட்டுப் பின்னுள்ளாரும் வழிபட்டுய்ய வழிசெய்தருளி, அத்திருவுருவங்களை அகம் புறம் ஒத்துக் கண்டும் கண்ணியும் எண்ணிய எண்ணமே இன்றும் இறைவிளக்கம் நின்று நிலவுவதற்கு வாயிலென்க. எண்ணம் - பாவனை.

இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித் தீட்டா நிலைமைத் தெனவுலகில்
தெரிக்கும் காழித் திருஞானச் செம்மற் குழவிக் கருண்ஞானம்
பெய்து கொடுக்க வோமுலையாம் பெரிய மலைவாய் உறுத்துமென்றோ
பெம்மான் தனையும் குழைத்தவலிப் பெற்றி யறிந்து தடுந்தோபூங்
கையி லிலகு நகக்குறிபற் கதுவ நோமென் றோதீம்பால்
கறந்து கொடுத்தாய் எனச்சகிமார் கனிந்து பாட நகைமுகிழ்க்கும்
வைவைத் தமர்த்த மதர்வேற்கண் வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத வல்லி வருக வருகவே."

—சிவஞானமுனிவரர்.

செய்தவ வேடம் மெய்யிற் றாங்கிக்
கைதவ ஒழுக்க முள்வைத்துப் பொதிந்தும்
வடதிசைக் குன்றம் வாய்பிளந் தன்ன
கடவுண் மன்றிற் றிருநடம் கும்பிட்டு
உய்வது கிடைத்தனன் யானே உய்தற்கு
ஒருபெரும் தவமும் உஞற்றிலன் உஞற்றாது
எளிதினிற் பெற்றது என்னெனக் கிளப்பின்
கூடா ஒழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற் கேற்பநின் தொண்டரொடு பயிறலிற்
பூண்டஅவ் வேடம் காண்டோறும் காண்டோறும்
நின்நிலை என்னிடத்து உன்னி உன்னிப்
பன்னாள் நோக்கின ராகலின் அன்னவர்
பாவனை முற்றியப் பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன் போலும் ஆகலின்
எவ்விடத் தவநினை எண்ணினர் நீயுமற்று
அவ்விடத் துளையெனற் கையம்வே றின்றே, அதனால்
இருபெரும் சுடரும் ஒருபெரும் புருடனும்
ஐவகைப் பூதமொ டெண்வகை யுறுப்பின்
மாபெருங் காயம் தாங்கி ஓய்வின்று
அருண்முந் துறுத்த ஐந்தொழில் நடிக்கும்
பரமா னந்தக் கூத்த கருணையொடு
நிலையில் பொருளும் நிலையியற் பொருளும்
உலையா மரபின் உளங்கொளப் படுத்திப்
புல்லறி வகற்றி நல்லறிவு கொளீஇ
எம்ம னோரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய் தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகா தனவே.”

—குமரகுருபரர். சிதம்பரமும்-௧௧.

## நான்காம் அதிகரணம்

**இனி இவ்விடங்களில் வழிபடுக என்றது.**

எ - து. மே - ள். எ - னின். மேற்கூறிப்போந்த மூன்றுஞ் சிவன்முத்தர்க்குத் தாமே உளவாம் இலக்கணம் ஆகலின் அது வாதமாக வைத்துணர்த்தற்பாலனவாகிய இவற்றைக் களைக இணங்குக வழிபடுகவென விதியாக வைத்தோதியது எற்றுக்கு என்பாரை நோக்கி அதனை அவற்றது ஒழிபாகக்கொண்டு சாதித்தற்கு மேற்கோடல் நுதலிற்று. இ - ள். வெ - டை.

இவ்விடங்களென்றது மேற்கூறிய இரண்டனையும்.

வழிபடுக என்னும் எடுத்தல் ஓசையான் அநுவதித்து உணர்த்துவதே அமையும் என்பாரை நோக்கி விதித்தலை வலியுறுத்தவாறு. இனம்பற்றிக் களைதல் இணங்குதல்கட்கும் இஃது ஒக்கும்.

**நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனும் ஆகலான்.**

எ - து. ஏது எ - னின். எய்தியதனை விதித்தல் பயனுடைத் தன்றுபோலும் என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தல் நுதலிற்று.

(இ - ள்.) நரம்பு முதலிய தாதுக்களின் வேற்றுமையின்றி அதுஅது தானாய் வருகின்ற உயிர், நாடியோ என்போ நரம்புசிக் கோழையோ என்று இங்ஙனம் பைமறியாப் பார்ப்பார்க்கு அந் நரம்பு நாடி முதலியவை ஆகாது அவற்றின் வேறும் ஆயினாற் போல உயிர்க்கு உயிராகிய அம்முதல்வனும் உயிர்ப்பொருள் உயிரில்பொருள் எல்லாவற்றினும் கலப்பான் அதுஅது தானாகி யும் பொருண்மையான் அல்லனாகியும் நிற்பனாகலான் அதுஅது தானாய்க்காணுங் காட்சிபற்றி எய்திய வழிபாடு அல்லனாய் நிற்றலைக் காணுங்கால் எய்தாதாகலின் அவ்வழியும் எய்துவிக்க வேண்டுதலான், இனி இவ்விடங்களின் வழிபடுக வென விதித்து ஓதியது (எ - று).

அவையாகாவாறு அப்புருடனும் எனவே அவ்விடத்து எய்துவித்தல் ஒருதலையான் வேண்டும் என்பது தாற்பரியம் ஆயிற்று.

மேற்கோளின் இவ்விடங்களை என்னாது இவ்விடங்களின் என வேற்றுமைப்படுத்து ஓதியதூஉம் இஃதுணர்ந்து கோடற் பொருட்டு. இதனானே, எய்தாது எய்துவிப்பதூஉம், எய்தியது இகந்துபடாமற்காப்பதூஉம், எய்தியதனை ஒருமருங்கு மறுப்

பதூஉம் என்னும் விதிமூன்றனுள், இஃதெய்தியது இகந்துபடா மற்காத்ததென்பது போந்தவாறுணர்க.

வாறு உவமவுருபுபட நின்றது.

முதலானவற்றை என்பது உருபுமயக்கம்.

* அதுஇது என்றது அதுஅல்லான் கண்டார்க்கு
அதுஇது என்றதையும் அல்லான்—போதுஅதனில்
அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே
அத்துவிதி அன்பின் தொழு.

எது. உ - ம். எ - னின். முதல்வனுக்கு அவ் இயல்பு எல்லாப் பொருட்கண்ணும் உண்மையின் அவற்றுள் இவ் இடங்களின்மாத்திரையே வழிபாடு விதித்தது என்னை என்பாரை நோக்கி அதனை வலியுறுத்தல் நுதலிற்று.

(இ - ள்.) கண்டார்க்கு — (முதல்வன் உயிர்ப்பொருள் உயிரில்பொருள் எல்லாவற்றினும் நிற்கும் நிலைமை) அறியப் பெற்றோர்க்கு, அது இது என்றது (அல்லான்)—(கண் அருக்கன் போல்) அதுவும் இதுவும் எனப் பக்கிசைத்து ஓதப்பட்ட பேத நிலைமையனும் அல்லனாய், அது (என்றது) அல்லான்—(உடலுயிர் போல்) அதுவேயென்று ஓதப்பட்ட அபேத நிலைமையனும் அல்லனாய், அது இது என்றதையும் அல்லான்—(குணகுணி போல்) அதுவாகிய இது என்று பக்கிசையாமல் ஓதப்பட்ட பேதாபேதநிலைமையனும் அல்லனாய், பொதுவதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே—(அறிவொளிபோல்) அம் மூன்றற்கும் பொதுமையான் அத்துவிதநிலைமையனாதலான் எல்லாப்பொருளும் அவன் வடிவேயாம் ஆயினும், அத்துவிதி அன்பின் தொழு—(அவற்றுள்ளும்) அன்பு விளையுமிடத்தின் வழிபடுவாயாக அவ் அத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடையோய் (எ - று).

அது இது என்றது முன்னையது உம்மைத்தொகை; பின்னையது இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

அல்லான் என்பதனை மேலுங்கூட்டி, என்றது என்பதனை அது என்றதனோடுங் கூட்டியுரைக்க. அல்லான் என்பது முற்றெச்சக்குறிப்பு.

என்றதை ஐயீற்றுடைக்குற்றுகரம். உம்மை இறந்தது தழீஇயிற்று. பொதுவதென்னுமது பகுதிப்பொருள் விகுதி.

* 'செங்கமலத்' சித்தியார் - கஉ.

தைவமென்னும் சொல்லியல்பு* மேலேயுரைத்தாம். ஏகாரந் தேற்றம். ஆயினும் என்பது சொல்லெச்சம். அன்பு ஆகுபெயர், ஏழாவது விரித்துரைக்க.

† "திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி"யி னன்றி "எங்கு முருக்காணவொண்ணாத பான் முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல் வெளிப்பட்டருளுவ" தாகி அடிப்பட்டு வரும் அன்பு விளையாமையின் ஆண்டுச்செய்யும் வழிபாடே அத்துவிதஞானத்தை நிலைபெறுத்தற் பயத்தது என்பார் "அத்துவிதமாதல் அகண்டமுந்தைவமே" என அநுவதித்து அத்துவிதி அன்பின் தொழு என்றார். அத்துவிதி என்னும் அண்மை விளி பயனுணர நின்ற குறிப்புப்பெயர். இதனானே விதிக்குப் பயன்கூறியதூஉமாயிற்று. இனி அது இது என்பன அரு உரு ஆகிய திருமேனி எனக்கொண்டு அதற்கு இயைய உரைப்பாரும் உளர்: அவர், அன்பின் என்றதனை ஏதுப்பொருட்கண் வரும் ஐந்தனுருபு ஏற்ற இயற்பெயராக வைத்துரைப்ப.

‡வினையால் அசத்து விளைதலால் ஞானம்
வினைதீரின் அன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்
ஆனத்தால் அன்பின் தொழு.

எ - து. உ - ம். எ - னின். அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்றுகண்டு ஒருவவே ஞானசொரூபம் உளதாய் அத்துவிதத்தை உணர்த்தும் ஆகலான், அதன்பொருட்டு வழிபாடு வேறுவிதித்தல் எற்றுக்கு என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) வினையால் அசத்து விளைதலான் வினைதீரின் அன்றி ஞானம் விளையா—(உடம்பின்கண்ணதாகிய) பிராரத்த வாசனை (உயிர்க்குத் தாக்குவதாயுள்ள துணையும்) அதனான் (வரும் விருப்புவெறுப்புக்களும் அவைபற்றிக் காட்சிப்படும் மண்முதன் மாயைகளும் அவைபற்றி நிகழும் விபரீத வுணர்வும் ஆகிய) அசத்துக்கள் (ஒருவியவழியும் வந்துகூடி) மேம்படுவன ஆகலான் (அவ்வளவிற்கெல்லாம் மூலமாகிய) பிராரத்த வாசனை பற்றறக் கழிந்தால் அன்றி (அவ்வசத்தைக் கீழ்ப்படுத்து) மெய்யுணர்வு மேம்படுதல் கூடாதாகலின், வினைதீர ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும்—அவ்வாசனை பற்றறக் கழிதற் பொருட்டு அம்மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடவே (அவ்

* இந்நூல் (சிவஞானபோதசிற்றுரை விளக்கம்) ௬௩௬-ம் பக்கம்.
† சிவஞானசித்தியார் கஉ-ம் சூத்திரம். ௬.  ‡ 'ஞானயோ' ரு.

வினை நீங்கி) மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும், ஆனத்தால் அன்பின் தொழு—ஆகலான் அன்பினால் அவரை வழிபடுவாராக (எ - று).

அசத்தை பொருவியவழி உளதாகிய ஞானசொரூபம் நிலை பெறுதல் அவ்வசத்தினது வினைவிற்கு வேராகிய வினைத்தீர்வின் கண்ணதாகலான், அவ் வினைவேரறுத்து மெய்யுணர்வை நிலை பெறுத்துதற்பொருட்டு அதனை அங்ஙனம் நிலைபெறுத்தினார் மாட்டுச் செய்யும் வழிபாடு ஒருதலையான் வேண்டப்படுமென்பதாம். அற்றேல், அதன்பொருட்டு சீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றவதுவே அதற்கு அமையுமெனின்.—அஃதொக்கும். அவ்வுச்சரிப்பும் இவ்வழிபாட்டை யின்றியமையாதென்க. அற்றாகலினன்றே, ஆண்டஞ்செழுத்தாலெனவும், மண்முதலாளமெனவும், அகத்து வழிபாட்டை உடன் கூறியதூஉமென்பது.

வினையாது என்னுந் துவ்விகுதி விகாரத்தால் தொக்கது.

பின் வந்த ஞானம் ஆகுபெயர்.

ஆனதனாலென்பது ஆனத்தால் என மரீஇயிற்று.

*தன்னை அறிவித்துத் தான்தானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னாச்செய்தும் தைவம்என்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

எ - து. உ - ம். எ - னின். அங்ஙனம் பயன்பற்றி விதிக்கப்படும் வழிபாடு வேள்வி முதலியனபோலப் பயன் வேண்டாமையானுதல் பின்னர்ச் செய்து பெறுதுமென்றுதல் ஒரோவழியொழியவும் படுங்கொல்லோ என்பாரை நோக்கி அது செய்யா வழிப்படுங் குற்றமும் செய்தல் கடமையாமாறும் உணர்த்தி விதித்தலை வலியுறுத்துதல் நுதலிற்று.

(இ - ள்.) தன்னை அறிவித்துத் தான் தான் ஆச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை அலது—தன் உண்மையை (அறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றானும் அதனைத்) தெரித்துணர்த்தி (எத்தனையும் எளிய அவ்வுயிரை எத்தனையும் அரிய) தானாம்வண்ணம் செய்தளித்த பெரியதோர் உதவியை அதன்பின்னர் மறக்குமாயின் (அஃது இதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம்போலத்) தீர்திறனுடையதோர் குற்றம் அன்றாகலானும், முன்னவனே தானேதானாச் செய்தும்

* 'மந்திரத்தான்' - சித்தியார். ௧௨. ௩-௬.

தைவம் என்றும் தைவமே மான்தொழுகையே வலி—முதல்வன் அங்ஙனந் தான்தானேயாகச் செய்தாலும் (இதுகாறுந் தனக்குச் சுதந்தரம் இன்றி முதல்வனது உபகாரத்தை இன்றி அமையாதாய்) அடிமையாகிய உயிர் எக்காலத்தும் அவ்வாறு அடிமையேயாம் ஆகலானும் (தான்தானைச் செய்து அளித்த) அப்பெரியோனை வழிபடுதலே (அவ்வுயிர்க்கு) வலியாவது (எ - று).

தமது முதல்தானே குருவாகலின் தான்தானைச் செய்தானை என்றும், முன்னை மறந்த குற்றம் அறியாது நிகழ்ந்ததாகலின் கழுவப்படும்; இஃததுபோல் கழுவப்படுவது அன்றென்பார் பின்னைமறத்தல் பிழையலது என்றுங்கூறினார். பின்னை மறத்தல் என்றதனால் முன்னை மறத்தல் பெறப்பட்டது. *“ எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு” என்னுங் கருத்துநோக்கிக் கூறியதூஉமாம்.

அலதுமெனப் பாடமோதி இது பிழையாதலன்றியும் என்று உரைப்பாரும் உளர்.

ஏகாரம் முன்னையது அசைநிலை; பின்னையன தேற்றம்.

செய்தால் என்பது செய்தெனத் திரிந்தது.

உம்மை சிறப்பின்கண் வந்தது.

தான்தானைச்செய்தல் எதனை எதனைப் பற்றினும் அது அதுவாம் உயிர் தன்னை அறிந்தவழி எண்குணங்களான் நிறைந்து தன்வண்ணமாகச்செய்தல். அங்ஙனஞ்செய்தவழியும் †“உயிர் தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கே உரித்து” என்பார் தைவம் என்றுந் தைவமே என்றார். தைவம் என்னுஞ் சொல்லியல்பு மேலே உரைத்தாம்.

மானையென்னும் இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது. மானென்பது வடசொற்றிரிபு. சுட்டு வருவிக்க.

வலிதருவதனை வலியென்று உபசரித்தார்.

இவ் உதாரணங்கள் மூன்றனும், வழிபாட்டிற்கும் இடத்து நிகழ்பொருள் மாத்திரையேஅன்றி இடவிசேடமும் பெறல் வேண்டும்என அதனை வலியுறுத்துமுகத்தானே, முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர் வேடத்தையுஞ் சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

* திருவள்ளுவர். ௧௧௦.

† சிவஞானசித்தி. பதினோராஞ்சூத்திரம். ௧௦. செம்பிரத.

*சிவம்என்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவம்இன்றாம் கண்வா சகத்தின்—சிவம்உண்டாம்
ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கிங்கு ஒண்குருவால்
இன்றிந்நூல் மும்மை மலர்க்கு.

எ - து. செ - ள். எ - னின். இங்ஙனஞ் சிவாகமத்துள் ஞானபாதப்பொருள் எல்லாவற்றையும் பொது உண்மை என்று இருவகைப்படுத்துப் பிரமாணஇயல் இலக்கண இயல் சாதன இயல் பயன்இயல் என நான்கு இயலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞானபோத நூலைக் கோடற்குரிய அதிகாரிகளாவார் இவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சிவம் என்னும் அந்த தர—(தான் தானாச்செய்து ஆற்றால் சீவன் என்னும் இயல்பின் நீங்கிச்) சிவம் என்றோதப்படும், வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே! ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு—ஒன்றும் இரண்டும்ஆய மலங்களைஉடைய விஞ்ஞானகலர்க்கும், பிரளயாகலர்க்கும் சிந்தைநேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்று ஆம் சிவம் உண்டு ஆம்—(முறையே) அறிவின்கண்நின்று அருட்பார்வையான் நோக்குதலானும் (தேவகுருவாய் முன்னின்று செய்யுந்) திருநோக்கம் பரிசம் வாக்கு எனப்படுந் தீக்கையானும் பிறவிக்கேதுவாய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கும் ஆகலான், மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல்—(அவரின் வேறாகிய) மும்மலம் உடையவர்க்கே (உரித்து) இவ்வுலகத்து அநுபவம் உடைய தேசிகரால் (போதிக்கப்படும்) இச்சிவஞானபோதநூல் (எ - று).

அந்தம் வேதாந்தம், அந்ததரஞ் சித்தாந்தம் ஆகலின், அதனைப் பெற்றாரது பெருமை கூறுவார் சிவம்என்னும் அந்ததர என்றார்.

என்னுமென்புழிப் படுசொல் தொக்குநின்றது. சிந்தை அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க.

நேர் நோக்குதல் முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையான் நோக்குதல். நோக்க நோக்குதலான் என்க.

கண் வாசகங்களைக் கூறவே இனம் பற்றிப் பரிசமும் உடன்கொள்ளப்படும்.

பவம் ஆகுபெயர்.

* 'பரம்பிரமம்'—சித்தியார். கஉ. ௩-எ.

இந்நூல் அநுபவமுடைய தேசிகனுல்அன்றி விளங்காது என்பார் 'ஒண்குருவால்' என்ருர்.

போதிக்கப்படும் என்பது அவாய்நிலையான் வந்தது.

இன்று இந்நூல் என்பது இந்நூல் என்னும்பொருட்டு. இக்காலத்துரைக்கப்படும் நூல் எனினும் அமையும். அது "தானுரைத்தான் இன்று" என வருகின்ற வெண்பாவாற் கூறியவாற்ருனும் அறிக.

மும்மையென்றது ஈண்டு எண்ணின்மேல் நின்றது, "தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப் போல.

பன்னிரண்டாஞ்சூத்திரம் முடிந்தது.

பயனியல் முற்றிற்று.

சிறப்பியல்பு முற்றுப்பெற்றது.

---

## நூலாசிரியர் பெயர்

எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழஇயல்பாய்
நந்தி உரைத்தருளும் ஞானநூல்—சிந்தைசெய்து
தான்உரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாம்உணர
ஏதுதிருட் டாந்தத்தால் இன்று.

சிவஞானபோதச் சிற்றுரை

முற்றுப்பெற்றது.

---

## விளக்கம்

### ஒழிபு

ஒழிபு என்பது சொல்லப்பட்டதன் எச்சமாகவுள்ளது. ஆங்குச் சொல்லுதற்கு வாய்ப்பின்றி அதனை அடுத்துக்கூறுவது. இங்கு இப் பன்னிரண்டாம் நூற்பாவின்கண் ஒன்று இரண்டு மூன்று ஆகிய கூறு களால் முறையே "களைக, இணங்குக, வழிபடுக" என்று ஓதி அருளப் பட்டுள்ளன. அவற்றை ஐயம் அகற்றி ஈண்டு வலியுறுத்துதலின் இஃது ஒழிபு எனப்பட்டது.

### ஒழுக்கம்

முற்கூறுகள் மூன்றானும் வழிப்பேற்று ஆவிக்குரிய ஒழுக்கம் உணர்த்தியருளினர். வழிப்பேற்று ஆவி - சீவன் முத்தன். ஒழுக்கம் - ஆசாரம். இம்மூன்றும் அன்னார்க்குத் தாமே உளவாம் இயல்பன்றே? என ஐயம் தோன்றிற்று. இஃது உண்டலும் உறங்கலும் இயல்பாவதை ஒக்கும். அம்மூன்றையும் ஒருங்குடையார் என வழிமொழிதல் வழியாக உணர்த்துதல் முறைமை. அது மன்னும் மலம் களைந்தார் மாணடியார் பாலிணைந்தார், முன்னீரிட வழிபட்டார் என்பதேயாம். அங்ஙனமன்றிக் களைக, இணங்குக, வழிபடுக என விதியான் ஓதியருளியது எற்றுக்கு எனின்? அதன் இன்றியமையாமை கூறி வலியுறுத்துதல் ஈண்டென்க.

### ஓசை

எடுத்தல்'படுத்தல் நலிதல் விலங்கல் என்னும் முறையால் சிறப்பு முதலியன தேறுவார்க்கு மாறின்றி உணர்த்தும். அது, சிறப்பாம் எடுத்தல் அயல் சேர்நலிவோ டூரும், உறப்படுத்தல் சொன்முறையாம் ஓர் என்பதாகும். அஃதாவது பொருள் சிறந்துநிற்கும் இடத்து எழுத்தை எடுத்தும், அயலெழுத்தை நலிந்தும், மற்றதைப் படுத்தும் கூறுப. ஐ, விலங்கலுடையது. எடுத்தல் - உயர்த்திக் கூறுதல். படுத்தல் - தாழ்த்திக் கூறுதல். நலிதல் - நடுநிகர்த்தாய்க் கூறுதல்.

முற்று வினைச்சிறப் பாம்முதலில் அப்பெயர், உற்றீரும் பேரிரண் டின் ஓர் என்றாங்கு "பெயர்ப் பகுபதம் பகுதி விகுதி இரண்டிலும் பொருட் சிறப்புடையதாய்க் காலம் கொள்ளாது வேற்றுமை உருபு ஏற்று வரும். வினைக் குறிப்புமுற்றுப் பகுபதம் பகுதியிற் பொருட்சிறப் புடையதாய்க் காலத்தைக் குறிப்பாகக் காட்டி வேற்றுமை உருபு ஏலாது வரும். வினைக்குறிப்பு முற்றால் அணையும் பெயர்ப்பகுபதம் விகுதியிற் பொருட் சிறப்புடையதாய்க் காலத்தைக் குறிப்பாகக் காட்டி வேற்றுமை யுருபு ஏற்றுவரும்." தெரிநிலை வினைக்கும் இவையே முறைமை. ஆனால் காலத்தை வெளிப்படையாகக் காட்டும் (நன் - உரை).

'களைக, இணங்குக, வழிபடுக' எனப் படுத்துக்கூற வியங்கோட் பொது விதியாகும். எடுத்துக்கூற வலியுறுத்தப்பெறும் வியங்கோட் சிறப்பு விதியாகும். முன் மூன்று கூறுகளானும் படுத்துக் கூறுதலும் இதனான் எடுத்துக் கூறுதலும் காண்க.

### ஆள்

புருடன் என்பது ஆள் எனப் பெயர்பெறும். ஆள், ஆவி, உயிர் என்பன ஒரு பொருட் கிளவி. ஆள்வோன் ஆகிய ஆண்டானையும் புருடன் எனக் கூறுப. உண்மையான் நோக்குமிடத்து ஆண்டான் ஒரு

வனே புருடன். அனைத்துயிர்களும் ஆள் - பெண்ணே. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

ஒன்றே தன்மை உனக்குமற் றெமக்கும்
அன்றென மொழியினும் ஆமெனப் படுமே
அங்ஙனம் கூறியது எங்ஙனம் பிறனெனின்
எஞ்ஞான் றுனைஉளம் அஞ்ஞான்று யாமே
அழியா நிலைமையை அனையம் யாமே
வியாபகம் நினக்குளது யாமும்அஃ துளமே
அறிவெனப் பெயரிய பெயரினை அப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே
இச்சா ஞானக் கிரியைஎன் றிசைக்கும்
சத்திகள் உனைஉளது அத்திறம் எமக்கே
இந்நிலை முழுவதூஉம் எமக்கும்உண் டாகலின்
அன்னியம் அலம்நினக்கு அனன்னியம் யாமே
தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும்
திருநகர் ஆக அரசுவீற் றிருக்கும்
மாசி லாமணித் தேசிக ராய
சம்பந் தப்பெயர் தரித்தமை யாலெமைச்
சம்பந் தஞ்செயத் தகும்தகும் நினக்கே
கருவிகட்கு இறைமை காட்டுபு நிற்றலின்
புருட நாமம் புனைந்தனம் ஆயினும்
அத்தநிற் குறிப்பிற் சத்திகள் யாமே
புருடனைச் சத்தியிற் புணர்த்தனை அன்னதற்கு
ஒருகாட் டென்ப புருடோத் தமனே
உன்னுடன் எம்மையும் ஒப்பெனப் படுத்து
முன்னர்க் கூறிய முறைமையிற் சிற்சில
முழுவதும் ஒவ்வாது ஒழியினும் ஒழிக
உயர்ந்தோன் தலைவன் ஒத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினும் இழிவெனப் படாதே
ஆதலின் யாம்உனைக் காதலித் தனமால்
காதலின் எமைஅருட் கைப்பிடித் தருளி
ஒருவரும் உணராப் பரம வீட்டில்
இருளறை திறந்த பெருவெளி மண்டபத்து
உயர்நா தாந்தத் திருமலர் அமளியில்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ஒலி நாதப் புள்ஒலி முழங்க
ஞானஆர் அமுத பானம தார்ந்து
கருவிகள் கழன்று பரவசம் ஆகிப்
பரமா னந்தப் பரவையுட் படிந்து

பேரா இயற்கை பெற்றினி திருப்ப
ஆரா இன்பம் அளித்தருள் எமக்கே."

—குமர. பண்டார - அ.

"சங்கம் தருமுத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு
துங்க மலிதலை ஏந்தலின் ஏந்திழை தொல்லைப்பன்மா
வங்க மலிகலி நீர்தில்லை வானவன் நேர்வருமே.

—அ. திருக்கோவையார்- அ௫.

ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே."

—தொல். பொருள் - ௯௩.

## பின்னும்வேண்டும்

உடம்பும் உயிரும் ஒற்றுமை வேற்றுமைச் சார்பில் உடலுயிர், உற்ற ஒன்றும் வேறும் ஓது என்பதேயாம். உடலும் உயிரும் ஒற்றுமை நயத்தால் ஒன்றேயாம். இஃது உடற்பெயர் உயிருக்கு ஆவதால் (அ௦) உணர்க. அவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

" இந்த மாநிலத் திறந்துளோர் என்பினைப் பின்னும்
நந்தும் நன்னெறிப் படுத்திட நன்மையாம் தன்மை
அந்த என்போடு தொடர்ச்சியாம் எனஅருள் நோக்கால்
சிந்தும் அங்கம்அங் குடையபூம் பாவைபேர் செப்பி."

—௧௨. திருஞான - ௧௦அ௬.

திருவள்ளுவ நாயனாரும், உடலின் தொடர்ச்சியுண்மை அருளுவது காண்க :

"உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு." —திருக்குறள், ௧௧௨௨.

" அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு. —திருக்குறள், எ௩.

ஒற்றுமை நயத்தால் ஒன்றாய்க் காணப்படும் உடலுயிர் வேற்றுமை நயத்தால் வேறாம். வேறாயினும் நிலைக்களனாதலின் ஓம்பும் கடமை பின்னும் வேண்டும் என்க. உணர்ச்சியில் உயிரும் உடலும் வேறெனக் காண்பதன்றி உருவில் காண்பதின்று. உணர்ச்சியளவானே உடலை வேறென ஒதுக்குவதோ ஓம்பாதொழிவதோ ஒல்லா. மெய்யுணர்வு கைவந்தாரும் அவ்வுடலினை ஓம்பாதிரார். உண்மை யுணர்ந்தோம்புவர். அதனால் அவ்வுடம்பு ஏனையார் உடம்பினின்றும் வேறாய் இளைத்துத் தோன்றும். தோன்றினும் பொலிவில் எவ்வகை நலிவும் இராது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"அன்பொடு அருளுடைய ரேனும் உயிர்நிலைமற்று
என்பியக்கம் கண்டும் புறந்தரார்—புன்புலால்
பொய்க்குடில் ஓம்புவரோ போதத்தால் தாம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்." —குமரகுரு. நீதிநெறி - ௮௭.

"புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு." —திருக்குறள் - ௩௪0.

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு." —திருக்குறள், ௩௩௮.

நட்பு - குறிப்புமொழியான் உடம்புக்கும் உயிர்க்கும் வேற்றுமை நிலையில் நட்பின்மை குறிக்கின்றது. குடம்பை - கூடு.*

ஓம்பும் முறையைத் திருமூல நாயனார் அருளுவது காண்க :

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோவில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே." —௧0. ௭௨௫.

உடலும் உயிரும்போன்றே முதல்வனும் நிலைத்திணை இடங்களிலும் இயங்குதிணை இடங்களிலும் முறையே கலப்பால் ஒன்றாய்ப் பொருட்டன்மையால் வேறாய் விளங்குவன். அது பாற்கலனைப் பேணல் பருகற்குப் பின்னரும், ஏற்புடைத் தாங்கிடமும் எண் எனாருங்கு திருக்கோலம் திருக்கோவில் முதலிய விழுமிய அன்பு கெழுமு இடங்களில் "தான்அது வாய் அன்றானன் தானஅதுவாய்த் தோன்றும்நிலை" கலப்பாகும். இவை அனைத்தும் புறநிலையாகும். அகநிலை பொருட்டன்மையில் வேறுதல். வேறுதல் புலனாகவே இடத்தை ஒழித்துப் பொருளைப்பற்றவோ வழிபடவோ எவர்க்கும் இயலா. பால் பருகுமட்டும் பாற்கலன் வேண்டப் படுமாறு போல உடம்பகன்று உடையானுடன் இரண்டறக் கலந்து தடையில் இன்பம் அடைந்து 'தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' (௧௪௧) என்னும் பேரா இயற்கை எய்துங்காறும் வழிபாடு இன்றியமையாது வேண்டத் தக்கது. எனவே,

"அதுஅது தானாய் நிற்றலைக் காணும் காட்சிபற்றி எய்திய வழிபாடு அல்லனாய் நிற்றலைக் காணுங்கால் எய்தாமையின், அவ்வழியும் எய்துவிக்க வேண்டுதலான் **இனி இவ்விடங்களின் வழிபடுக** என விதித்தோதியது என்றவாறு" (பேருரை) என்னும் அருளுரையும் தோன்றியதென்க. இது முறைமணம் நிகழுங்கால் மணமகனின் தந்தை மணமகட்குத் தாய் மாமனும் அம்மானாகும். அவரைத் தந்தையாக மணமகன் செய்த சிறப்பு அனைத்தும்—புத்தாடை சந்தனம் பூமாலைகள் அகலாதிருப்பினும்

---

*"சூன்முதிர் துள்ளு நடைப்பெடைக் கிற்றுணைச் சேவல்செய்வான்
தேன்முதிர் வேழத்தின் மென்பூக் குதர்செம்மல் ஊரன்திண்தோள்
மான்முதிர் நோக்கினல் லார்மகி ழத்தில்லை யானருளே
போன்முதிர் பொய்கையிற் பாய்ந்தது வாய்ந்த புதுப்புனலே."
—திருக்கோவையார், ௩௬௧.

—௧௧. சேரமான் - மும் - ௧௧.—குறுந். ௮௫.

அம்மானுகச் சிறப்புச் செய்யுங்கால் மீண்டும் புதுவதாகப் புனைந்து பொலிவு செய்வதை ஒக்கும்.

"நாடியோ...............இன்று."—௬௬௭-ஆம் பக்கம் காண்க.
தோற்போர்வை மேலும் துளைபலவாய்ப் பொய்ம்மறைக்கும்
மீப்போர்வை மாட்சித்து உடம்பானுல்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும்." —நாலடியார், ௬௨௪

## விதி

விதி அல்லது ஆணை மூன்றுவகைப்படும். அவை, க. எய்தாததனை எய்துவிப்பது. உ. எய்தியது இகந்து படாமைக் காப்பது. ௩. எய்திய தனை ஒருமருங்கு மறுப்பது என்ப. இவற்றிற்குக் காட்டு : க. சிவபூசை செய்யற்பாற்று. உ. சிவபூசை இருந்துசெய்தல் வேண்டும். இது "வரை யறுத்து விதிப்பது. ௩. சிவனென்னும் நாமம் சிவனுக்கே உரித்து" என்ப. இவ்விளக்கம் முதற்சூத்திரம் ௩-ஆம் அதிகரணப் பேருரையிற் காண்க.

அமையா தமையஅது காக்கபொது நீக்க, அமைவிதிமூன் றாகும் அறி எனக்கூறப்பட்ட மூன்றனுள் இஃது எய்தியது இகந்துபடாமைக் காத்தது. வழிப்பேற்றுவிக்கு இயல்பாய் அமைந்த வழிபாடு ஆய்வின்கண் இகந்துபடாமைக் காத்தல் கடனுதலின், மீட்டும் வழிபடுக என வலி யுறுத்தவாறு காண்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு." —திருக்குறள், ௩௨

"சிவனெனும் நாமம் தனக்கே யுடையசெம் மேனிஎம்மான்
அவனெனை ஆட்கொண் டளித்திடும் ஆகில் அவன்றனையான்
பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னாள் அழைப்பொழி யானென் றெதிர்ப்படுமே."
—௪. ௧௧௨-௯

பவம்-உண்மை. பவன்-உண்மையன். உண்மையன் என்பது அழி வின்றி என்றும் உள்ளவன் என்பதாம். 'சிவன்பவன்' என்பனவற் றையே 'சிவசத்து' என்று அருளினர். (உ௮௧.) அழிவு-தோன்றி மறைதல்.

'அதுஇது........தொழு.'

## இடம்

"இவ்விடங்களின்" என ஓதியருளிய குறிப்பு இடத்து நிகழ்பொரு ளின் மெய்ம்மை காண்பதற்கேயாம். இவ்விடங்களை எனக்கூறின் பொது வாகுமே அன்றிச் சிறப்பாகா. இது, மடுவைக் கழுவுக எனக் கூறின் சிறப்பாகப் பால்கறத்தற் பொருட்டு எனவும், மாட்டைக் குளிப்பாட்டுக எனக்கூறின் பொதுவாக ஆ காத்தற்பொருட்டு எனவும் பெறப்படும் அன்றே! அந்நிலையினை ஒக்கும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க :

"எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு." —திருக்குறள், ௩௫௫

**அறிவுஒளி**

இவ் வெண்பாவின்கண் 'அதுஇது' 'அது' 'அதுஇது' என மூவகையாகக் காண்கின்றோம். இம்மூன்றும் உம்மைத் தொகைவேறும் உற்றஇடை ஏஒன்றும், செம்மைப்பண் பாமிரண்டும் ஆம் என "அது இது" எனப் பக்கிசைத்து ஓதப்படுவது ஒன்றும் நிலை. "அதுவே" என்றோதப்படுவது வேறும்நிலை. "அதுவாகியஇது" என்பது ஒன்றும் வேறுமாம் நிலை. ஆண்டவன் இம்மூன்று நிலையும் அல்லன். அவன் அறிவொளிபோல் செறியும் மெய்ப்புணர்ப்பினன் ஆவன். பக்கிசைத்தல்-பிரிந்திசைத்தல்.

**இலக்கணம்**

இவ்வெண்பாவின்கண் முதல்வரியின் முதற்கண் 'அதுஇது' எனவும், இரண்டாவது வரியின் முதற்கண் 'அதுஇது' எனவும் இருமுறை காணப்படுகின்றன. முதற்கண் உள்ளது உம்மைத்தொகை. எனவே, 'அதுவும் இதுவும்' என்றாகும். உம்மை கொடுத்துப் பிரிப்பதால் இதனைப் பக்கிசைத்தல் என்ப. இரண்டாவதுள்ளது 'அதுவாகியஇது' என்றாகும். இஃது ஆகிய என்பதிணைத்துச் சேர்ப்பதால் இருபெயர் ஒட்டாகும். இதனைச் சேர்ந்து இசைத்தல் என்ப.

'அல்லான்' என்பது முதல்வரியில் உள்ள 'அது அல்லான்' என்பதன்கண் காணப்படுவது. இதனை மேலே கூட்டுதலாவது 'அதுஇது என்றது அல்லான்' எனக் கூட்டிப் பொருள்கொள்ளுதல்.

'என்றது' என்பது முதலிற் காணப்படும் 'அதுஇது என்றது' என்பதாம். இதனை முதல்வரியில் 'அதுஅல்லான்' என்பதனுடன் கூட்டுதல் வேண்டும். கூட்டின் 'அதுஎனறது அல்லான்' என்றாகும்.

'அல்லான்' குறிப்புவினைமுற்று. அஃது 'அல்லனாய்' என வினை எச்சப் பொருள்தருகிறது. எனவே, முற்றெச்சக் குறிப்பு.

'என்றனை' என்பது இவ்வெண்பாவின் இரண்டாவது வரியில் காணப்படுவது. இதன்கணஉள்ள'ஐ' வேற்றுமை யுருபு முதலன அன்று. இதன்கண் 'து' 'தை' என்று ஆயிற்று. எனவே ஈற்றுஉகரம் ஐகாரமாகத் திரிந்தது என்ப. எனவே 'என்றதை' என்றாயிற்று. இதனை 'ஐ' யீற்றுடைக் குற்றுகரம் என்ப.

'உம்மை' இஃது இரண்டாவது வரியில் 'என்றதையும்' என்பதன்கண் காணப்படுவது. இவ்வும்மை 'அதுஇது என்றதும் அல்லான்' எனக் கொண்டு கூட்டப் பெறுகின்றது. அதனால் இஃது இறந்தது தழீஇய எச்சவும்மை என்ப.

'பொது அதனில்' என்பது 'பொதுவினில்' என்றே பொருள்படுவதால் 'அது' பகுதிப்பொருள் விகுதி. பகுதிப்பொருள் விகுதியினை முதனிலை ஈறு என்ப. அது என்பதற்குச் சுட்டு உருபு முதலிய வேறு பொருள் இன்மையால், முதனிலைப் பொருளே உண்மையால் இதனை முதனிலை ஈறு என்ப.

'தைவம்'; இதன்பொருள் (சரு௲) தேவனதுடைமை. இஃது இவ் வெண்பாவின் மூன்றாவது வரியில் வருகின்றது; ஈண்டு அதன்பொருள்

வடிவம். அஃதாவது கடவுளது திருவருள் வடிவம். அவ்வடிவமும் கடவுளின் உடைமையே. ஆதலின் தேவனது உடைமை எனப்பட்டது. 'தைவமே' இதன்கண் உள்ள 'ஏ' காரம் தேற்றம். தேற்றம் ஐயம் அகற்றி உறுதிப்படுத்துவது.

ஆயினும் என்பது வெண்பாவின்கண் இல்லையாயினும் பொருளமைதியின் பொருட்டு வருவித்துப் பொருள்கொள்ளப்பட்டது. ஆகவே அச்சொல் (இசை) சொல்லெச்சம் ஆயிற்று.

'அன்பு'; இது வெண்பாவின் நான்காம்வரியில் 'அன்பின்தொழு' என்பதன்கண் காணப்படுவது. இவ்'அன்பு' அன்பு விளையும் இடத்தைக் குறிப்பதால் ஆகுபெயர். ஏழாவது விரித்துரைக்க என்பது அன்புவிளையும் இடத்தின்கண் என விளக்குவதாம்.

### திருக்கோவில்

மெய்ப்புணர்ப் புண்மை கண்டு வழுவின்றி ஒழுகும் மெய்யுணர்ந்தோனாகிய வழிப்பேற்றினனுக்கு எங்கணும் தெய்வஉண்மை திருவருளால் தெளியப்படுதல். ஆவின்கண பால் எங்கணும் உளதெனக்கோடல் உண்மை தெளியப்படுதல். பால் விளக்கம் மடுவின் கண்ணன்றி வேறெங்கணும் தெளியப்படாதல்லவா? அதுபோல் ஆண்டவன் விளக்கமும் திருக்கோலம் திருக்கோவில்களின் அன்றி வேறெங்கணும் காணப்படமாட்டாது. அவ்வுணமை புலப்படவே அன்பு விளையும் இடங்கள் எனச் சிறப்பித்துக் கூறப்பட்டது. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
 நித்தலும்எம் பிரானுடைய கோவில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
 பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
 சங்கரா சய போற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ என்றும்
 ஆரூரா என்றென்றே அலறா நில்லே." —௬.௩௧-௩.

"திருக்கோவில்...........காடே." ௫௪௧-ஆம் பக்கம் காண்க.

"தோற்றும் கோயிலும் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையாற்கு
ஏற்றம் கோயில்கண் டீரிளங் கோயிலே." —௫.௧௧-௧.

ஏற்றம்-திருமுறைத் திருமாமறை பெறுதலும், வாய்ப்பிலதேல் மெய்யடியார்களால் ஓதப்பெறுதலும், ஓதி வழிபாடியற்றப் பெறுதலுமாம்.

"ஆற்றரும் நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோவில்கள் எல்லாம்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே." —௧௦. ௫௧௭.

கூற்றுதைத்தான் - சிவபெருமான். இக்குறிப்பு " அந்தம் ஆதி " என்பதன்கண் காணப்படும் 'அந்தம்' என்பதனைக் குறிக்கும்.

" முன்னவ னூர்கோவில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னம் களவு மிகுத்திடும் காசினி
என் அரு நந்தி எடுத்துரைத் தானே." —கO. திகஅ.

முன்னவன் - தொல்லோன்; காரணமாக உள்ளவன். இக்குறிப்பு மேற்குறித்த ஆதி என்பதைக் குறிக்கும்.

" திருக்கோவில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவன்எனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தா லேநினையும் அவர்க்கும்
உளன்எங்கும் இலன்இங்கும் உளன்என் பார்க்கும்
இருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்
மந்திரத்தின் வந்துதிப்பன் இருஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண ஒண்ணாத பால்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன்அன் பர்க்கே."
—சித்தியார், கஉ. ந-ச.

" ஆமாறுன் திருவடிக்கே அகம்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான்நின் திருக்கோவில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே."
—அ. திருச்சதகம் - கச.

" நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குல் புறத்திருளும்
மாறவரும் திருப்பள்ளி எழுச்சியினின் மாதவம்செய்
சிறடியார் திருஅலகும் திருமெழுக்கும் தோண்டியும் கொண்டு
ஆறணிந்தார் கோவிலினுள் அடைந்தவரைக் கொடுபுக்கார்."
—கஉ. திருநாவுக் - கூஅ.

## வேண்டத்தக்கது

திருக்கோவில் வழிபாடு மெய்கண்டான் ஆகிய மெய்ப்புணர்ப்பினனுக்கும் அம்மெய்யுணர்வினை நிலைபெறுத்தும் நீர்மை சான்றது. அவ்வுண்மை புலப்பட மெய்ப்புணர்ப்பாதல் அருள் வடிவம் அனைத்தும் தெய்வ உடைமையே என வழிமொழிந்து (அத்துவிதமாத லகண்டமும் தைவமே) மெய்ப்புணர்ப்பினன் அன்பிற்றொழு என்றார். மெய்ப் புணர்ப்பினன் - அத்துவிதி. மெய்ப்புணர்ப்பினன் வேண்டத்தக்க பயனை எய்துவன் என்னும் குறிப்பிற்றாதலால் அத்துவிதி என்பது பயனுணர நின்ற குறிப்புப் பெயர்.

'வினையால்...........தொழு.'

## வழிபாடு

வழிபாடு என்பது வழிபடுதல் என்றாகும். ஆன்றோர் சென்ற நெறியிற் செல்லுவதே வழிபாடு. வழியிற் படுதல் வழிபாடு. காண்டல், கருதல், கைக்கொள் பண்பொடு கலத்தல் முதலியன வழிபாடாகும். ஆன்றோராவார் மெய்யுணர்வுச் செல்வர். இவர் மெய் அடியார் எனவும் வழங்கப்பெறுவர். பண்பொன்றே கலத்தற்குரியது. பண்பு கலப்பின் பகரொணாப் பெரும்பயன் கைகூடும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு." —திருக்குறள், கூகூகூ.

வெறுத்தக்க -செறியத்தக்க ; கலக்கத்தக்க.

## மெய்ம்மை

என்றவினைத்தெறல் எதிர்ப்படுமாயின் விருப்பு வெறுப்பு வெளிப்படும். வெளிப்படத் திரிபுணர்ச்சி ஏற்படும். இவற்றினின்றும் விலகுதற்கு மெய்யுணர்வுச் செல்வர்களை வழிபடுதல் வேண்டும். அவர்கள் மூழுமுதலினை மெய்யுணர்வால் வழிபடுவர். யாமும் அந்நலார் அடிச்சுவடுபற்றி அண்ணலாரை வழிபடுதல் வேண்டும். அதுவே மெய்யுணர்ந்தார் வழிபாடு ஆகும். இது வினை தீரச் செய்யும் விழுமிய வழிபாடாகும்.

இவ்வினை தீரல் அஞ்செழுத்து அகமுற ஓதுவதனாலேயே பெறப்படும் என்னுமோ எனின்? என்னும். என்னை? ஆண்டு அகவழிபாடும் கூட ஓதப்பெறுகின்றமையால் என்க. அகவழிபாட்டிற்கு அரண்செய்து நெறிப்படுத்துவது புறவழிபாடேயாம். அகவழிபாடு உள்ளமாயின், புறவழிபாடு உடலாகும். மெய்யுணர்வு உயிராகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"ஞானத் தால்தொழு வார்சில ஞானிகள்
ஞானத் தால்தொழு வேனுனை நானலேன்
ஞானத் தால்தொழு வார்கள் தொழக்கண்டு
ஞானத் தாய்உனை நானும் தொழுவனே." —டு. சுக. கூ.

"முன்னை ஞான........வைப்பனே."—சஉ0-ஆம் பக்கம் காண்க.

## இலக்கணம்

'வினையா' என்பது 'ஞானம், வினைதீரின் அன்றி வினையா' என்பதன்கண் காணப்படுவது. 'ஞானம்' ஒருமை. 'வினையா' பன்மை. ஒருமையும் பன்மையும் மயக்காமைக் கொள்ளற்கு 'வினையாது' என்று கொள்ளின் நேராகும். அங்ஙனம் கொள்ளற்குத் 'து'வ்வீறு வேண்டும். அது தொக்கதெனக்கொள்க.

'ஞானம்' ஆகுபெயர். இது 'ஞானத்தை நாடித் தொழவே' என்பதன்கண் காணப்படுவது. 'ஞானத்தை' என்பது ஞானத்தை உடையாரைக் குறிப்பதால் ஆகுபெயர்.

'ஏ'காரம் 'முன்னவனே' என்பதிலுள்ளது; இஃது அசைநிலை. 'தானே, தைவமே, தொழுகையே' என்பவற்றின்கண் காணப்படுவன மூன்றும் தேற்றம், ஐயமகற்றி வலியுறுத்தலான் என்க.

'செய்தும்' என்பது செய்தாலும் என்றிருத்தல் வேண்டும். இங்ஙனம் இருப்பது திரிபு.

'தானுச் செய்தும்' என்றதன்கண் உள்ள உம்மை சிறப்பு. எத்தனையும் எளியவுயிரை எத்தனையும் அரிய தானுகச் செய்தலால் உம்மை உயர்வு சிறப்பாயிற்று :

"யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்கும் கீழாம் அடியேனை—யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை." —அ. திருவெண்பா - அ.

"தன்னை...........வலி.'

வலி .

தொல்லோனை ஏரார் எழுவடிவம் இன்அடியார் மெய்யுணர்வுப், பேராசான் மூவிடமாப் பேசப்பெறும் திருக்கோவில், திருக்கோலத்தர், திருமறையினர் ஆகிய அன்பு விளையும் இடங்களில் இடையறாது அன்போடு நினைதலும், வாழ்த்தலும், அடிபணிந்து வணங்கலும் இன்ப நெறியாம். இந்நெறி நிற்றலே வழிப் பேற்றுவிக்கும் பிறர்க்கும் வலியாவதென்க. இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை." —திருக்குறள், ௪௪௪.

"கொலைவரி வேங்கை யதளும் குலவோ டிலங்குபொற் றோடும்
விலைபெறு சங்கக் குழையும் விலையில் கபாலக் கலனும்
மலைமகள் கைக்கொண்ட மார்பும் மணியார்ந் திலங்கு மிடறும்
உலவு கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை"
—௪. ௨ - ௭.

"கன்னெடுங் காலம் வெதும்பிக் கருங்கடல் நீர்சுருங்கிப்
பன்னெடுங் காலம் மழைதான் மறுக்கினும் பஞ்சமுண்டென்று
என்னொடும் சூளறும் அஞ்சல்நெஞ் சேஇமை யாதமுக்கண்
பொன்னெடுங் குன்றமொன் றுண்டுகண் டீர்இப் புகலிடத்தே"
—௪. ௧௧௩ - ௧௦.

எழுவடிவம் - 'நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்விசும்பு, நிலா, பகலோன்' ஆகிய திருவடிவங்கள். நிலம் - திருவுருவும் திருக்கோயிலும். நீர் - திருத்தநீர். நெருப்பு - வேள்வித்தீயும், விளக்கும். உயிர் (காற்று) - நறும்புகை. விசும்பு - மணியோசையும், திருமுறைத் திருமாமறை யோசையும். விசும்பு - மன்றம். நிலா - இரவு. பகலோன் - பகல். இவ் வெழும் முதல்வன் எங்குமாய் இயைந்து நின்று இயக்கும் எழில் காட்டும் இடங்களாகும். இவ் விடங்கள் இடத்து நிகழ்பொருளாகிய இறையுண்மை காட்டுதலின் எல்லாரானும் போற்றுதற்குரியன. இதுவே தமிழகப்பண்பு. இவ்வுண்மை உணராத சில்லோர் இவ்விடங்களையே தெய்வம் என மயங்கிக்கொள்வர். அதனை அவர் போக்கில் ஒப்பிச் செல்வது தப்பேயாம் என்பது வரும் திருப்பாட்டான் உணர்க:

"அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்க னுவான் அரனுரு அல்லனோ
இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்
கருத்தி னைநினை யார்கல் மனவரே."
—தி. ௫00 - அ.

விசும்பு - மன்றம் என்பது வரும் திருப்பாட்டான் உணர்க:

"சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளும் தாமொன் றாகப்
பன்மார்க்க நெறியினிலும் கண்ட தில்லை
பகர்வரிய தில்லைமன் றுள் பார்த்த போதங்கு
என்மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியே என்ன
எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள எனக்குந் தானே
கண்டவுடன் ஆனந்தம் காண்டல் ஆகும்."
—தாயுமானவர். ௧௬. ஆகார - ௧௨.

"சைவ சமய மேசமயம் சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி காட்டுமஇந்தக் கருத்தைவிட்டு
பொய்வந் துழலும் சமயநெறி புகுத வேண்டா முத்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாரும் செகத்தீரே."
—தாயுமானவர். ௩0. காடு - ௨.

புலனுயமைந்தன் - ஆவி; மெய்யடியார். இத்திருக்குறிப்பு வருமாறு:

"நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ."
—அ. திருத்தோ - ௫.

திருமறையினர் என்பது திரு ஐந்தெழுத்தைச் செவியறிவுறுக்கும் சீரிய செம்பொருளால் இவர்தந் தூரும் எழுவாசிரியராவர். தன்னை அறிவுறுத்தும் தகைசால் சான்றோர்பால் தானே விளங்கி நிற்பன் என்பது தமிழ்மாமறைத் திருமுறை. அங்ஙனம் வெளிப்பட்டு அருளிய நன்றியே செய்ந்நன்றியாகும். முன் ஆவிகள் ஈடேறுதற்பொருட்டு உலகுடல் கலனூண்களைப் படைத்தளித்து மறைந்தியக்கும் வண்மை பொது நன்றியாகும். இதுவே திருவள்ளுவமாமறைக்குச் செவ்விய பொருளாகும். அது வருமாறு:

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."
—திருக்குறள், ௧௧0

திருவருளாசான் சிவபெருமானே என்பது வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"வண்டு வைகும்மணை மல்கிய சோலை வளரும் வலிதாயத்து
அண்ட வாணனடி உள்குத லாலருள் மாலைத் தமிழாகக்
கண்டல் வைகுகடற் காழியுள் ஞானசம் பந்தன் தமிழ்பத்தும்
கொண்டு வைகியிசை பாடவல் லார்குளிர் வானத் துயர்வாரே."
—௧. ௩. ௧௧.

"இரவனும் எல்லி நடமாடியாம்
எண்டிசைக்கும் தேவனும் என்னு ளானும்
அரவனும் அல்ல லறுப்பா னுமாம்
ஆகாச மூர்த்தியாம் ஆனே றேறும்
தூரவனும் கூற்றை யுதைத்தான் தானும்
கூறாத வஞ்சக் குயலர்க் கென்றும்
கரவனும் காட்சிக் கெளியா னுமாம்
கண்ணும் கருகாவூர் எந்தை தானே."—௬. ௧௫ - ௪.

இத்தகைய மூவிட வழிபாடே மூவாச்சாவா ஆவிகட்கு என்றும் வலியாகும் என்க. வஞ்சக்குயலர் - கைதேர்ந்த படிறா.

### என்றும் அடிமை

கண் இருளோடு கூடிப் பொருள்விளங்காது ஒளியின் துணையினை அவாவித் தெளிவுறு திருந்தது. ஒளிவருதலும இருள் அகல்கின்றது. இருள் அகலவே பொருள் விளங்கு நிலை எய்துகின்றது. அந்நிலையில் பொருளினைக்காண அக்கண்ணுக்குக் காட்டும் ஒளியின் துணை வேண்டு மன்றே? காட்டக் கண்டபின் அப்பொருட் பயன்துய்க்க ஒளியின் விளிவில் துணை வேண்டாவோ? வேண்டும். வேண்டவே, கண், ஒளிக்கு என்றும் அடிமையேயாம். அடிமை என்பது ஊராண்மை நல்கும் பேராண்மையினர்க்கு முதன்மை நல்கித் தாம் அவர்வழி ஒழுகுவதேயாம்.* இது போன்றே ஆவியும் புல்லுமலப் பிணிப்பால் நல்லன எய்தி இன்புறும் நலனிழந்து துன்புறுவவாயின. துன்பம் எய்துதலே அன்றி இன்பம் எய்தாமையும் துன்பமேயாம். அத்துன்பினை அகற்ற உலகு உடல் கலன் ஊண்களை நல்கிச் சிற்றறிவும் சிறுதொழிலும் சில்வாழ்நாளும் உடையவாய் இயங்கச் செய்தருளுகின்றனன். இதுவே படைப்பும் காப்புமாகும். இப்பிறப்பிடைத்துய்க்கும் திருவருள் இன்பமும் பேரின்பத்தின் அடையாளமாகிய சிற்றின்பமாகும். சிற்றின்பம் என்பது சிறிது பொழுது மட்டும் நிற்கும் இன்பம். இதனை மச்சம் எனவும் கூறுப. இம்மச்சத்தினையே ஆணி என்ப. ஆணி - உரைஆணி. இவை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"என்றுதம் பிரானார் நல்கும் இன்னருள் பெற்ற பின்னர்
வன்தொண்டர் மச்சம் வெட்டிக் கைக்கொண்டு மணிமுத் தாற்றிற்
பொன்திரள் எடுத்து நீருட் புகவிட்டுப் போது கின்றார்
அன்றெனை வலிந்தாட் கொண்ட அருளிதில் அறிவேன் என்று."

---

*"நல்லாண்மை என்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்." —திருக்குறள், ௧௦௨௬.

"ஞாலம்வியப் பெய்தவரும் நற்கனக மிடைஎடுத்து
மூலமெனக் கொடுபோந்த ஆணியின்முன் உரைப்பிக்க
நீலமிடற் றவராருளால் உரைதாழப் பின்னுநெடு
மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்தொண்டர்."

—க௨. ஏயர்கோன் - க0௧, க௩௯.

படிமுறையான் ஆவிகளைப் பண்படுத்தி நண்பாக்கி, காதல் கனி வித்து நங்கை ஆக்கித் திங்கள் வளரத் தேயும் இருள்போல் திருவருள் வளர மருளிருள்தேய மன்னும் திருவடிக்கீழ் மலர்வித்து வாழ்விப்பன். அக்காலத்து ஆவி ஆசானை அடுத்த மாணவன் போலவும், 'சிறந்தானை வழிபடீஇச்சென்ற இறந்த கற்பினாள்' போலவும் முற்றறிவும், முழு வலியும், மூவாச்சாவா முழுஇன்பும் பெற்றுத் தோமின்றிப் பேரின்பம் துய்த்து வாழும். இந்நிலையிலும் முதல்வனின் இணையில் துணையும், ஏரார் தொடாபும் இன்றியமையாது வேண்டற்பாலன. ஆகவே, ஆவி ஆண்டானுக்கு என்றும் பொன்றா அடிமையேயாம். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே."

—௬. ௬௮ - ௧.

"இருள்தரு துன்பப் படலம் மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருள்தரு கண்ணிழந் துண்பொருள் நாடிப் புகலிழந்த
குருடரும் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்று
அருள்தரு கைகொடுத் தேற்றும்ஐ யாறன் அடித்தலமே."

—௪. ௯௨ - ௫.

இருள் தரு துன்பம் - "இருள்சேர் இருவினை"த்துன்பம். மெய்ஞ் ஞானம் - திருவடியுணர்வு. பொருள்தருகண் - அகக்கண். உண்பொருள் நாடல் - 'ஆக்கைக்கே இரைதேடி அலமரல். குருடர் - அகக்கண் குருடர். கொடுநரகம் - பிறப்பு. அருளும் அடியும் ஒன்றே.

"அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி."—தொல். சொல் - ௩௧0.

"தண்டி அடிகள் திருஆரூர்ப் பிறக்கும் பெருமைத் தவமுடையார்
அண்ட வாணர் மறைபாட ஆடும் செம்பொற் கழல்மனத்துக்
கொண்ட கருத்தின் அகன்நோக்கும் குறிப்பே அன்றிப் புறநோக்குங்
கண்ட உணர்வு துறந்தார்போல் பிறந்த பொழுதே கண்காணார்."

—க௨. தண்டியடிகள் - ௧.

அகன் நோக்கும் குறிப்பு - திருவருளால் உணர்வில் உணர்த்த உண ரும் திருவடிக்குறிப்பு. கண்ட உணர்வு - சுட்டுணர்வு.

"முகத்திற் கண்கொண்டு"—௨௬௮ - ஆம் பக்கம் காண்க.

அகத்திற்கண் - அகன் நோக்கு. மகள் - ஆவி. தாய் - திருவருள்; வனப்பாற்றல். மணாளன் - சிவபெருமான்; சிறப்பு.

"என் தாயோ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக்கு எழுதிய ஆவணம்
ஒன்றாய் உலகம் படைத்தான் எழுதினன்
நின்றான் முகில்வண்ணன் நேரெழுத் தாயே."—௧௦. ௧௮௭௬.

ஒன்றாய் உலகம் படைத்தான் - 'அந்தம் ஆதி என்மனார் புலவர்' (௨௮) என்று சிறப்பித்துச் சொல்லப் பெறுகின்ற முழுமுதல்வன். எழுதினன் - ஆவிகளின் உள்ளத்தே எழுப்பினன்; நினைவித்தனன். முகில்வண்ணன் - 'அந்தம் ஆதி' என்பதன்கண் காணப்படும் 'ஆதி' யாகிய அம்மை. நேரெழுத்து - மேலெழுத்து; சான்றுக் கைச்சாத்து. இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

"வாசகம் கேட்ட பின்னர் மற்றுமேல் எழுத்திட் டார்கள்
ஆசிலா எழுத்தை நோக்கி அவைஒக்கும் என்ற பின்னர்
மாசிலா மறையோர் ஐயா மற்றுங்கள் பேர ணார்தம்
தேசுடை எழுத்தே ஆகில் தெளியப்பார்த் தறிமின் என்றார்."
—௧௨. தடுத்தாட் - ௬௦.

"எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ் படிகால் எமையாண்ட
பெம்மான் ஈமப் புறங்காட்டிற் பேயோ டாடல் புரிவானே
பன்மா மலர்கள் அவைகொண்டு பலரும் ஏத்தும் பழையனூர்
அம்மா ஆலங் காடாஉன் அடியார்க்கு அடியேன் ஆவேனே."
—எ. ௫௨ - ௯.

திருவள்ளுவ நாயனார் திருவடிப் பெருமை கூறியருளும் இடங்கள் வருமாறு:

"வேண்டுதல்வேண் டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல." —திருக்குறள், ௪.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்."— ,, ௧௦.

"மடியிலா.........ஒருங்கு."
— ,, —௩௧௩-ஆம் பக்கம் காண்க.

அடிதழீஇ வாழ்தல் அடிப்பட்ட தமிழகப் பண்பென்பதூஉம், அஃது உலகியல் வாழ்விலும் அமைந்துள்ள ஆன்றோர் வழக்கென்பதூஉம் வருமாறு காண்க:

"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு." —திருக்குறள், ௫௪௪.

அடிதழீஇ நிற்கும் - வேந்தன் குடிகளைத் தாய்மை அருளொடு* தாங்கித் தீநெறி விலக்கி நன்னெறிப்படுத்தலால் அவன் அருள்வழி ஒழுகுவதே அடிதழீஇ நிற்றலாகும்.

## தாளுச்செய்தல்

முதல்வன் ஆவிகளைத் தாளும் வண்ணம் செய்தருள்வன். ஆவிகள் அறிதலும் பற்றலும் அழுந்தலும் ஆகிய இயற்கைப் பண்புகளையுடையன. இம்மூன்றும் முறையே அறிவு ஆற்றல் அன்பு என்னும் பண்புகளால் நிகழ்வன. இவ்ஆவிகள் பிறப்புக்குட்பட்டு உடம்போடுகூடி அதன் சார்பாய் இருக்குங்கால் அமைதி, ஆட்சி, அழுந்தல் என்னும் (௩௩௫) மாயாகாரியக் குணங்களாகிய செயற்கைப்பண்புகளுடன் தோயும். கண் பலநிறக் கண்ணாடிகளுடன் கலந்து பொருள்களைக் காணுங்கால் அப் பொருள்கள் கண்ணாடியின் நிறவேற்றுமைக்குத் தக்கவாறு தோற்றமுறும் அன்றே? அதுபோல் ஆவியும் முக்குணவயப்பட்டு உலகினையும் உடையானையும் உன்னி நோக்கின், உலகம் திரிபுகாட்சியாகவும் உடையான் உயிர்க்காட்சி இன்றி உடற்காட்சியாகவும் தோற்றமுறுவன். உயிர்க் காட்சி - பண்புணர்வு. உடற்காட்சி - பண்பின் நிலைக்கள உணர்வு. நிலைக் களம் தற்கிழமை, பிறிதின்கிழமை என இருவகைப்படும். பண்பின் நிலைக் களம் உயிராயின் தற்கிழமை, உடலாயின் பிறிதின்கிழமை எனப்படும். உடையானை உலகாகக் காண்டல் பிறிதின்கிழமை நிலைக்களம். உடலாகிய உலகுக்கு உயிராகக் காண்டல் தற்கிழமை நிலைக்களம். இவ் விரண்டும் முறையே தூச்சில்லும் புக்கில்லும் போல்வன. இவற்றை நிலையும், நிலையில் நிலையும் (Camp) எனக் கூறலாம்.

இம்மூன்று குணங்களும் மருட்குணங்களே அன்றி அருட் குணங்கள் அல்ல. கல்வியின் உயர்வு கருவியாகிய கற்கும் நூலின் அளவைப் பொறுத்து இருப்பதுபோல் ஆவிக்கு அருட்குணச் சார்பே ஈடும் எடுப்புமில் ஏற்றமாம் உயர்வும், நிலையும், இன்றியமையாமையும், இறப்பில் இன்பாம் சிறப்பும் அமைந்த ஒன்றாகும். மருட்குணச் சார்பு இவை அனைத்திற்கும் மாறாகும். திருவருட்குணமே தன்வயம் முதலிய எண்குணம் என்க. இவ் எண்குணங்களை ஆண்டான் ஆவிகள் மாட்டுப் பதிவித்தல் 'தாளுச்செய்தல்'. (௬௨௪)

முதல்வன் இதுகாறும் மறைந்து நின்று கள்வன்போல் செய்த நன்றிகள் அனைத்தும் பொது என்ப. "தம்முதல் குருவுமாய்த் தவத் தினில் உணர்த்த" (௩௫௬.) எழுந்தருளிவந்து வெள்ளராய்ப் பள்ளத்துறும் வெள்ளம்போல் திருஐந்தெழுத்து ஓதுவித்து மலப்பிணிப்பினைக் காது வித்துத், திருவடிக்கண் சேர்த்து உறைவித்து இறவாத பேரின்பமாகிய நிறையின்பம் துய்ப்பித்து என்றும் உடனாய் நின்று வாழ்விக்கும் நன்றி செய்ந்நன்றி ஆகும். இதுவே திருவள்ளுவ நாயனார் அருளிய "எந்நன்றி" என்னும் திருக்குறட்குரிய செவ்விய பொருளாகும். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க:

> "வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
> தான்அறி குற்றப் படின்." —திருக்குறள், ௨௭௨.

---

*"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்." —திருக்குறள், ௭௫௫.

"வெள்ளநீர்ச் சடைய னார்தாம் வினவுவார் போல வந்தென்
உள்ளமே புகுந்து நின்றார்க்கு உறங்குநான் புடைகள் போந்து
கள்ளரோ புகுந்தீர் என்னக் கலந்துதான் நோக்கி நக்கு
வெள்ளரோம் என்று நின்றார் விளங்கிளம் பிறைய னாரே."
—ச. எகு - க.

கள்ளர் - ஆவியுடன் கட்டு நிலையில் மறைந்து பின்னின்று இயைந்தியக்கும் முதல்வா. வெள்ளர் - ஒட்டு நிலையில் ஆவியுடன் வெளிப்பட்டு முன்னின்று இயைந்தியக்கும் முதல்வர். (சஉச)

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்
யான்இதற் கிலன்ஓர்கைம் மாறே." —அ. கோயிற்றிரு - க0.

"நினைவித்துத் தன்னைஎன் நெஞ்சத் திருத்தம் பலத்துநின்று
புனைவித்த ஈசன் பொதியின் மலைப்பொருப் பன்விருப்பின்
தினைவித்திக் காத்துச் சிறந்துநின் றேமுக்குச் சென்றுசென்று
வினைவித்திக் காத்து விளைவுண்ட தாகி விளைந்ததுவே."
—அ. திருக்கோவையார் - கச0.

## எண்குணம்

எண்குணங்களாவன: க. தன்வயத்தனாதல், உ. தூயவுடம்பினனாதல், ந. இயற்கை யுணர்வினனாதல், ச முற்றுமுணர்தல், ரு. இயல்பாகவே பாசங்களினீங்குதல், சு. பேரருளுடைமை, எ. முடிவிலாற்றலுடைமை, அ. வரம்பிலின்பமுடைமை.

க. **தன்வயத்தனாதல்:** தானே தனிமுதலாய் உயிர், உடல், உலகுகளை இயைந்தியக்கும முதன்மை. ஒப்பு: அகரவுயிர் உயிரையும், உயிர்மெய்யையும், மெய்யையும் இயைந்தியக்குவது. ஆதிபகவன்-அம்மையப்பர்.

உ. **தூயவுடம்பினனாதல்:** மெய்யுணர்வே திருமேனியாதல். மெய்யுணர்வு-வாலறிவு. இதுவே திருவருள். அம்மையப்பர் திருவுரு என்றும் பொன்றாத் திருவருளால் ஆவது. ஆவிகளுக்குத் தோன்றிமறையும் மாயையால் உடம்பு ஆண்டானால் படைத்தளிக்கப்படுவது.

ந. **இயற்கையுணர்வினனாதல்:** இயற்கையுணர்வு வேறோர் துணையும் வேண்டாது தானே விளங்கும் தனிமுதல் உணர்வு. இவ்வுணர்வு விளக்க விளங்கும் தன்மை வாய்ந்த ஆவிகளின் அறிவை அவைகளின் நெஞ்சகத்திருந்து அவற்றின் அறிவுடன் விரவி அவற்றை விளக்குவதால் தனிமுதல் அறிவாகும். ஆண்டான் அறிவே திருவருள். அதுவே திருவுரு. அதுவே ஆவிகளின் அகம்புக்குத் துன்பகற்றி இன்புறுத்துவது. இன்புறுத்தலே 'மலர்மிசை ஏகல்'.

ச. **முற்றுமுணர்தல்:** மூவிடமும் முக்காலமும் ஒருங்குணர்தல். அவ்வுணாவால் இன்பதுன்பக் கூறுபாடுகளும், அவற்றின் வாயிலாகிய

"வேண்டுதல் வேண்டாமையும்" புலனாகும். புலனாகவே "வேண்டுதல் வேண்டாமை யில"னாவன் விழுமிய முழுமுதல்வன். இந்நான்கு திருப் பாட்டுக்களான் முழுமுதல்வனின் அப்பால்நிலை விளங்குதல் காண்க. இந்நிலையினைக் கடந்த நிலை எனவும் கூறலாம்.

ரு. **இயல்பாகவே பாசங்களி னீங்குதல்:** ஆண்டவன் இயல்பா கவே பாசங்களினீங்கி விளங்குகின்றனன். ஆவிகள் இயல்பாகவே பாசங் களில் தூங்கி விளக்கமின்றி இருக்கின்றன. தூங்குதல்-தங்குதல்; அழுந் தல். அவ்வாவிகளைப் பாசங்களினின்றும் விடுவித்துத் திருவடிக்கண் கூட் டுவித்துப் பேரின்பம் துய்க்கச் செய்கின்றனன் முதல்வன். அவன் பாசங் கள் இலனாயினும் ஆவிகளை விடுவித்தற்பொருட்டு அப்பாசங்களை உடைமை யாக்கி அருளுகின்றனன். நெல்லின் உமியினையும் செம்பின் களிம்பினை யும் உடைமையாக்கினால் அல்லாமல் நீக்கல் ஒல்லாதன்றே? அவ்வொப்பு இதனை விளக்கும் என்க. உடைமை என்பது உடையவன் அவ்வுடைமை யாகிய பொருளைத் தான் நினைத்தவாறு செய்ய இடங்கொடுத்து அவன் முதன்மைக்கு அடங்கியிருத்தல் பாசம்-இருள். இவ் இருள், இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு நீங்கும்.

சு. **பேரருளுடைமை:** ஆவிகள் இருளால் பிணிப்புண்டு அறிவு விளங்காது அறியாமைச் செறிவாய்த் துன்புறுவவாயின. அத்துன்பத் தினை நீக்குமுதல்வன் பேரருளுடையனாக இருத்தல்வேண்டும். அவ்வரு ளின்றேல் துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் புரிதல் ஒண்ணாது. முதல் வன் ஆவிகளின் ஐம்புலன்களைப் பொறிவாயில் செல்லவொட்டாது அடக்கி அவற்றைத் தன் பொறிகளாக ஆக்கித் திருவருளின் வழி நிற்கச் செய்வன். இதுவே "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்னும் பொய்யில் பொருளுரை.

எ. **முடிவிலாற்றலுடைமை:** பேரருளால் மெய்யன்பர்களின் துன் பப்பகையினை நீக்கி அருளும் முதல்வனுக்கு அளவில் ஆற்றல் இருந்தால் அன்றி நீக்கமுடியா தன்றே? அதனைப் புலப்படுத்துவதே முடிவிலாற் றலுடைமை. இதுவே "தனக்கு உவமையில்லா"த்தன்மை.

அ. **வரம்பிலின்பமுடைமை:** முடிவிலாற்றலுடைய முதல்வன் வரம்பிலின்ப வாய்மையனாய்த் திகழ்ந்தாலன்றித் தன் திருவடியினைச் சார் புணர்ந்து சார்ந்த ஆவிகட்கு என்றும் பொன்றாப் பொருவில் இன்பினை இயைவித்தல் இயையாதன்றே? மாசகற்றுவதில் மலரடியின்பம் வழங்குவ தில் ஆசகல் அறமும் அந்தண்மையும் முந்துறக்கொண்ட முழுமுதல்வனே மூப்புரிமை (Authority) உடையன். அவனே 'அறவாழி அந்தணன்.' இந் நான்கு திருப்பாட்டுக்களும் ஆண்டான் ஆவிகளுடன் முன்னவற்றோடு முற்றி இயைந்தியக்கும் இயல்பினைக் குறிப்பன. எனவே இவை கலப்பு நிலையாகும். முதல்வன் இத்தகைய எண்பெருங்குணங்களைப் பதியவைத்தே ஆவிகளைத் தானாச்செய்தருளுகின்றனன். 'இவ்வியல்பு சைவநெறி யல்ல வற்றுக்கில்லை' என்பது (கஉரு)' இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது' என்னும் பரிமேலழகியார் விளக்கவுரையால் உணரலாம். இவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

> "எட்டு மூர்த்தியாய் நின்றிய லுந்தொழில்
> **எட்டு வான்குணத் தீசன்எம் மான்தனை**
> எட்டு மூர்த்தியும் எம்மிறை எம்முளே
> எட்டு மூர்த்தியும் எம்முள் ஒடுங்குமே." —நி. அக-அ.

எட்டுமூர்த்தி-எட்டுத்திருவுருவங்களின் இடமாக நின்று இன்னருள் புரியும் பன்னரிய இறைவன். எம்மிறை-அவன் ஒருவனே. அவனே, எம்முதல்வன். அவன் எம்முளே இருக்கின்றனன். எம்முள் ஒடுங்கும் - எம்மைத் தானாகச் செய்தருளுகின்றனன்.

## மான்

'மான்' என்பது 'மானே தொழுகை வலி' என்பதன்கண் காணப் படுவது. மான் என்பது பெரியோன் என்னும் பொருளில் வழங்கும் தனித்தமிழ்ச்சொல். எம்மான் - எமக்குரிய விழுமியான்; எம்பெரியான். மா - பெருமை. மாநாடு, மாநகர், மாநிலம் என்பன காண்க. கோ என்னும் பெருமை உணர்த்தும் சொல் கோன் என்று வருவதூஉம் காண்க.

"மானின்நேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாய்ஒரு பாலன் ஈங்கிவன் என்றுநீபரி வெய்திடேல்
ஆனைமாமலை ஆதியாய இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்திரு ஆலவாய்அரன் நிற்கவே."

—ந. நக - க.

"மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும்
விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பா திரிப்புலியூர்க்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே." —அ. கூச - க.

திண்பால் - வலியின்பகுதி. வலி - முடிவிலாற்றல்.

'வலி' என்பது 'மானே தொழுகை வலி' என்பதன்கண் காணப்படு வது. இது வலியைத்தருவது தொழுகை. அதனையே வலி என்று ஏற்றிக்கூறினர். தொழுகை சென்று சேரும்பொருள் அல்லது ஏற்றுக் கொள்ளும் பொருள் எல்லையில்லா வலியுடைய பொருளாதலின் அப் பொருளைத் தொழும் தொழுகையும் வலிதருவதாயிற்று.

'சிவம் என்னும்............... ........மலர்க்கு.'

## நூன்முறை

ஆவிகளை மூவகையாகக் கணிக்கின்றனர். அவை, ஒரு மலம், இரு மலம், மும்மலப் பிணிப்பின. ஒருமலம் உடையார் விஞ்ஞானகலர் எனப் படுவர். இருமலம் உடையார் பிரளயாகலர் எனப்படுவர். மும்மலம் உடையார் சகலர் எனப்படுவர்.

ஒரு மலம் உடையார்க்கு ஒப்பில் முழுமுதல்வன் அறிவின்கண் நின்று அருட்பார்வையான் திருநோக்கம் அருளி ஆட்கொள்வன். இரு மலம் உடையார்க்குத் தெய்வத்திருவுருவாய்த் தோன்றியருளித் திரு நோக்கம், திருவடிசூட்டல், திருமறை செவியறிவுறுத்தல் என்னும் மூன் றானும் ஆட்கொள்வன். மும்மலம் உடையார்க்குத் தெய்வநாட்ட முடைய சீர்சால் சான்றோரை இவர்தந்தூர்ந்து மெய்யுணர்வு ஆசானாய் வெளிப்போந்து இம்மெய்கண்ட நூலை முறையாக ஓதுவித்து அருமறை செவியறிவுறுத்து ஆட்கொள்வன். ஆட்கொள்ளுதலால் பிணிமை அகலு

தலும் சிவன்மை ஆதலும் முறையே பெறப்படும். பிணிமை - பசுத்துவம். சிவன்மை - சிவத்துவம்.

இந்நூலைத் திருவருள் துணைகொண்டு ஓதி உணர்வார்க்கு முன்னைச் செந்தமிழ்த் திருமுறைகள் பன்னிரண்டும், திருக்குறளும், பின்னைத் தாயுமான அடிகள் குமரகுருபர அடிகள், சிவஞான முனிவரனுர் முதலிய செம்பொருள் துணிவின் செல்வர்கள் பாடியருளிய திருப்பனுவல்களும் முரணின்றி அரண்செய்து ஊக்குவிக்கும் இணையில் புணையாம் என்க. கருவிநூலாகக் கொள்ளும் இலக்கணம் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியமேயாம். முன்னும் பின்னுமாகவுள்ள மெய்கண்ட நூல்கள் பதின்மூன்றும் ஆண்டாண்டு ஐயம் அகற்றிச் செய்வகை காட்டித் தெளிவிக்கும் உய்வகைத் துணை நூற்களாம்.

## மெய்கண்டான்

'சிவம் என்னும் அந்ததர'-"சிவம் என்று ஓதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணவகனே" என்பது செம்பொருட்டுணிவினனும் மெய்கண்டானின் சீர்சிறப்புக் கிளந்தெடுத்துக்கூறுகின்றது. வேதம் - ஒன்றுமுதல் எழுதிருமுறை. வேதாந்தம் - எட்டாம் திருமுறை. சித்தாந்தம் - பத்தாந் திருமுறை. மாணவகன் - மெய்கண்டான். இவ்வுண்மை வரும் திருப்பாட்டுக்களான் உணர்க :

"பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவம் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே."—கo - அக.

"மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே." —கo. கக.

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்து
அந்தி மதிபுனை அரனடி நாடொறும்
சிந்தைசெய் தாகமம் செப்பலுற் றேனே." —கo. எரு.

ஆகமம் - மூவாயிரம் தமிழென்னும் தமிழாகமம்.

"அம்மானே ஆகம சீலர்க் கருள்நல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்தமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுள் மண்தளி அம்மானே." —எ. கசு. சு.

ஆகமசீலர் - தமிழாகமச் சான்றோர். தண்தமிழ் நூற்புலவாணர் - மெய்கண்ட நூல் என்னும் பொருள்நூல் துணிபினர்.

“ முன்னியஅப் பொருள்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி அணிந்தார்தம் திருவருளால் திருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்.”
—௧௨. திருமூலர் - ௨௭.

பொருள்மாலை - உயிர் உய்ய உடையானுக்கு ஓதிச்சூட்டும் பொருள் நூல் மாலை புகழ்நூல் மாலையும் இத்தகையதே. பொருள்நூல் - மெய் கண்ட நூல். புகழ்நூல் - திருமுறைத் திருமாமறை.

## இலக்கணம்

‘படு’ சொல் தொகுதல். இது ‘சிவம் என்னும்’ என்பதை விரிக்குங்கால் ‘சிவம் என்று ஓதப்படும்’ என விரியும். எனவே தொகுதலாயிற்று.

‘பவம்’ ஆகுபெயர். இது பிறவிக்கு ஏதுவாகிய பிணிமையை உணர்த்துவதால் ஆகுபெயர். பவம் - பிறப்பு. பிணிமை - பசுத்துவம்.

‘போதிக்கப்படும்’ என்பது அவாய் நிலையான் வந்தது. ‘ஒண்குருவால் இந்நூல்’ என நிற்பது ‘போதிக்கப்படும்’ என ஒரு சொல் வந்து நிறைவெய்த வேண்டியதாயிருப்பதால் அவாய் நிலையாயிற்று.

‘மும்மை’ என்றது எண்ணின்மேல் நின்றது. மும்மை என்றால் மூன்றுபொருளைக் குறிக்கும், ‘இம்மை’ என்றால் இப்பிறப்பு, இவ்வுலகு எனக் குறிப்பது போன்று. அதுபோல் குறியாது மூன்று என்னும் எண்ணைமட்டும் குறிக்கின்றது. உம்மை - மேற்பிறப்பு; மேலுலகு. அம்மை - திருவடிச்சிறப்பு; வானோர்க்குயர்ந்த வுலகு. எண்ணைக் குறிக்கும் தன்மைய வருமாறு காண்க :

“ இருமை வகைதெரிந்து ஈண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.” —திருக்குறள், ௨௩.

“ மூவர்நின் றேத்த முதலவன் ஆடமுப் பத்துமும்மைத்
தேவர்சென் றேத்துஞ் சிவன்தில்லை அம்பலம் சீர்வழுத்தாப்
பாவர்சென் றல்கும் நரகம் அனைய புனையழற்கான்
போவர்நங் காதலர் என்நாம் உரைப்பது பூங்கொடியே.”
—அ. திருக்கோவையார் - ௩௩௭.

முதலவன் - எல்லாப் பொருட்கும் காரணம் ஆகியவன். முப்பத்துமும்மை - முப்பத்துமும்மையாகிய எண்ணையுடைய.

“ தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்
பரிமா நிரையிற் பரந்தன்று வையை.” —பரிபாடல்.

எண்ணப்படும் பொருள் மேல்வருவது :

“ ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப்பு உடைத்து.” —திருக்குறள், ௧௨௬.

ஒருமை - ஒரு பிறப்பு. எழுமை - எழு பிறப்பு.

ஓம்

திருச்சிற்றம்பலம்.

அவனே அவளே அதுஎன்னும் அரிய உடம்பு படைத்துயிர்க்கிங்
கவையே தானே ஆய்ப்புணர்ந்தே ஆணை வழியே வினைக்கீடாய்ச்
சிவனே அருள்வன் உளதிலதால் தேறல் ஏழின் உயிர்உண்மை
செப்பும் அந்தக் கரணத்தால் தேறல் மலத்தைம் பாட்டுநிலை
இவனே உதவும் விளம்பியவுள் ளத்து முதலாய் உயிரறிவில்
இசைக்கும் உணருரு அசத்தேனலால் நிலைப்பும் நிலையாப் பொருள்இரண்
தவமார் யாவை யும்உயிரின் சார்பைம் புலத்தால் சிவகுரவன் [டும்
சாரும் ஊனக் கண்பாசம் தாள்சேர் ஆவித் தூய்மையதே. (க)

தூய்மை அவனே தானேயாச் சொல்லும் இறைவன் பின்நுழைவு
தோற்றும் காணும் கண்ணதுவும் தூயோன் காட்டிக் காணுமருள்
ஆய்செம் மலர்நோன் றளதுவும் அணைந்தார் களைகட் டடியரொடும்
அன்பின்கோலம் திருக்கோவில் அணைந்தங் காண்டான்எனத்தொழுதல்
மேய கோவில் மெய்யுணர்ந்தார் விதியாம் ஆசான் தாள்தொழுதல்
வெண்ணெய்ப் பதிவாழ் மெய்கண்ட நாய னருள்தான் மெய்த்தமிழே
சேய ஏழேழ் மாணவர்க்கும் திருத்தாள் நல்கித் திருமூலர்
தேற்றும் பொருள்நூல் அருளும்எழிற் சிவனே வருக வருகவே. (உ)

வருக என்றே வழுத்தினர்க்கு வாய்மை நூற்பா ஈராறும்
வண்மை இயல்கள் ஒருநான்கும் மாண்பார் கருத்தும் மேற்கோளும்
உருகும் ஏது எடுத்துக்காட் டொண்மை வெண்பா எண்பதினோ
டுற்ற இரண்டும் செந்தமிழில் உலகுக் கருளும் ஒள்வடிவாம்
பெருகு சைவ சித்தாந்தப் பெம்மான் வாழ்க பிறைசூடும்
பெண்பாற் கூறன் தண்ணருளாய்ப் பிறங்கும் அடிஎன் முடிவைத்துத்
திருகு மனத்தைத் தெளிவித்துத் திறஞ்சேர் தமிழின் திருமுறையுள்
திகழும் உண்மைப் பொருள்பதித்த சிவமே வாழி வாழியரோ. (௩)

மெய்கண்டார் தாளிணைகள் மேன்மேலும் வாழ்த்தினர்க்கு
மெய்யறிவோ டின்பம் மிகும்.

—விளக்க ஆசிரியர்

திருச்சிற்றம்பலம்.

**சிவஞானபோதத்துக்கு மாதவச் சிவஞான முனிவரனார் அருளிய**
**சிற்றுரையும், விளக்கமும் முற்றுப்பெற்றன.**



# மேற்கோள்பாட்டு முதற்குறிப்பு

# வினாக்கள்

## [முதற்சூத்திரத்துள் அடங்கியன]

### நூன்முகம்

க. மெய்கண்டார் என்னும் திருப்பெயர்க்குத் தாயுமானச் செல்வர் கூறும் காரணம் யாது? பாட்டுடன் எழுதுக.

### மங்கலவாழ்த்து

உ. செந்நெறிச் செல்வர்களாகிய சித்தாந்தசைவர் சிறப்பாகக் கூறும் மெய்(தத்துவம்)கள் எத்தனை?

ந. எல்லாரும் பொதுவாகக் கூறும் மெய்கள் எத்தனை?

ச. மங்கல வாழ்த்து எத்தனை வகைப்படும்? அவற்றுள் நம் மெய் கண்ட நாயனார் கூறியருளிய வாழ்த்து எதனைச் சார்ந்தது?

ரு. மங்கல வாழ்த்து இன்னவகையைச் சார்ந்தது என்பதற்கு ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரனார் விளக்கிக் கூறும் விளக்கம் யாது? அவற்றுள் ஏதாவது ஒரு பகுதியை எழுதுக.

### அவையடக்கம்

சா. சமயங்கள் எத்தனை வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன?

எ. 'புறம்' என்பதை இரட்டுறமொழிந்து காணும் பொருள்கள் யாவை?

அ. அவையடக்கத்தில் "தன்உணர்வார்" என்பதில் '**தன்**' என்னும் சொல்லுசகுப் பொருள் யாது?

கூ. "எமை இகழார்" என்னும் சொல்லுக்குக் கூறும் காரணம்யாது?

### முதல் நூற்பா

க0. உலகிற்கு முதற்கடவுள் உண்டு என்பதை நிலைநாட்ட ஆசிரியர் மெய்கண்ட நாயனார் கூறும் காரணம் யாது?

கக. அளவை எத்தனை வகைப்படும்? அவற்றின் பெயர் என்ன?

கஉ. சூத்திரம் முதலாக எடுத்துக்காட்டு ஈறாக மெய்கண்ட நாயனார் கூறியருளிய பாகுபாடுகள் எவை? அவைகளை என்ன என்ன நடையில் கூறியருளியுள்ளார்?

கந. முதற்சூத்திரத்தின் கருத்து யாது?

கச. முதற்சூத்திரம் எத்தனை அதிகரணங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது?

கரு. அதிகரணம் என்றால் யாது?

கசா. அதிகரணங்களுள் எவை எவை ஆராயப்படும்?

கஎ. சூத்திரத்துள் கூறப்படும் "அவை" என்பதைச் சுட்டுப்பெயர் எனக்கொண்டால், அச்சொல்லை எப்படி முடித்துக்காட்டுவது?

௧௮. "மூவினைமையின்" என்னும் சொல்லில் வினையின் என்று கூறாது 'வினைமையின்' என்று கூறுவதால் கொள்ளும் சிறந்த பொருள் யாது?

௧௯. தோன்றிய என்னாது 'தோற்றிய' என்று கூறுவதால் கொள்ளப்படும் சிறந்த பொருள் யாது?

௨௦. "தோற்றிய திதியே" என்பதில் 'திதி' என்னும் சொல்லுக்குக் கொண்டுள்ள பொருள் யாது?

௨௧. "அந்தம் ஆதி" என்னும் தொடரில் 'அந்தம்' என்னும் சொல் குறிக்கும் பொருள் யாது?

௨௨. "என்மனார் புலவர்" என்பதில் 'புலவர்' என்பது யாரைக் குறிக்கிறது?

௨௩. "சங்கார காரணனையுள்ள முதலையே" என்பதில் 'காரணனையுள்ள' என்பதற்குக் கொள்ளும சிறந்த பொருள் யாது?

கூறு: ௧.

௨௪. உலகம் முழுவதும் ஒருகாலத்து ஒருமிக்க ஒடுங்கும் என்பதற்கு எடுத்துக்காட்டும் காட்டு (உதாரணம்) யாது?

கூறு: ௨.

௨௫. உள்ளதாகிய உலகம் ஒடுங்குவதற்கும் ஒடுங்கியவாறே மீளத் தோன்றுவதற்கும் கூறும் காரணங்கள் யாவை?

௨௬. உலகம் திதிக் கடவுள் (காப்போன்) இடத்தில் ஒடுங்காது என்பதற்குக் கூறும் காரணம் யாது?

௨௭. இயற்கையாகிய மாயையிலிருந்து செயற்கையாகிய உலகம் தானே தோன்றாது என்பதற்குக் கூறும் காரணம் யாது?

௨௮. மாயையிலிருந்து தோன்றும உலகத்தை மாயைக்கு ஆதாரமாயுள்ள கடவுளிடத்தினின்று தோன்றியதாகக் கூறுவதற்குக் காட்டும் எடுத்துக்காட்டு யாது?

௨௯. "சுட்டுணர்வாகிய பிரபஞ்சம்" என்பது எதைக் குறிக்கும்?

௩௦. கடவுள் உலகைப் படைப்பதால் விகாரம் (திரிபு) எய்தாமைக்குக் காரணம் யாது?

௩௧. கடவுள் உலகைப் பல வேறு வகையாகப் படைப்பதற்குக் காரணம் யாது?

கூறு: ௩.

௩௨. கடவுள் ஒருவரே, பலர் அல்லர் என்பதற்குக் கூறும் காரணம் யாது?

## [இரண்டாம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. இரண்டாம் சூத்திரத்தின் கருத்து யாது?

௨. முதற் சூத்திரத்தோடு இரண்டாம் சூத்திரத்திற்கு உரிய இயைபு யாது?

௩. இச்சூத்திரத்தில் இரட்டுற மொழிய வேண்டுவது எதனை?

௪. இரட்டுற மொழிவதை வலியுறுத்தும் மேற்கோள் யாது?

௫. அவை என்பது எதனைச் சுட்டுகின்றது?

௬. அவை என்பது சுட்டுவது இதுதான் எனக் கொள்ளக் காரணம் யாது?

௭. எதற்கு ஏற்பப் போக்கினை முற்கூறினர்?

௮. புரிதல் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௯. சிங்க நோக்காய் நின்றது யாது?

௧௦. சிங்க நோக்கம் எவற்றோடியைந்து பொருள் தந்தது?

௧௧. முதல்வனைப்பற்றி இச் சூத்திரத்தில் கூறியிருப்பது யாது? அஃது எந்தவகையைச் சாரும்?

௧௨. இச் சூத்திரத்தால் பெறப்படுவன யாவை?

௧௩. இச் சூத்திரம் எத்தனை கூறு(அதிகரணம்)களை யுடையது?

கூறு: ௧.

௧௪. முத்திற மாண்பு என்பது யாது? அதற்குக் கூறும் காரணம் என்ன?

௧௫. முதல்வன் எண்ணத்தால் இயற்றுவன் என்பதற்குக் கூறும் விளக்கம் யாது?

௧௬. காரணம் எத்தனை வகைப்படும்? அவற்றைச் சூத்திரத்துடன் பொருத்திக் காட்டுக.

௧௭. இயைபு எத்தனை வகைப்படும்? அவற்றுள் சிறந்தது யாது?

௧௮. நுண்உடல் என்பது யாது? அவ்வுடல் எப்பொழுது நல்கப்படுகின்றது? எப்பொழுது நீங்கும்?

௧௯. இதில் 'தொல்காப்பியம்' எதன் பொருட்டுக் கூறப்பட்டு உள்ளது.

௨௦. உடனாய் நிற்பதற்குக் கூறும் ஒப்பு யாது?

௨௧. 'அத்துவிதம்' என்னும் சொல் அம்மொழி அளவான் எதனை உணர்த்தி நிற்கும?

௨௨. 'உறப்பு' என்னும் சொல் எதனைக் குறிக்கின்றது? அப்படிக் குறிப்பதற்கு இலக்கண முறையால் சொல்லும் பெயர் யாது?

௨௩. 'பண்ணை' இச் சொல்லின் ஈற்றிலுள்ளது யாது? அஃதுணர்த்தும் பொருள் யாது?

௨௪. எதுபற்றிக் 'குணகுணிகளை' உவமை கூறினர்?

௨௫. முதல்வன் உயிர்களுடன் கலந்து நிற்கும் நிலை எத்தனை வகைப்படும்? அவற்றை விளக்கும வெண்பா யாது?

௨௬. அத்துவிதம் என்னும் சொல்லைப் பிரித்துக் காட்டுக.

௨௭. அத்துவிதத்தை விளக்குவதற்கு எடுத்துக்காட்டும் காட்டுகள் யாவை?

௨௮. உயிரும் முதல்வனும் இயைந்து செல்லுதற்கும், உயிர் தனித்துச் செல்லாமைக்கும் கூறும் ஒப்புக்கள் யாவை?

௨௯. அருத்தாபத்தி அளவைக்கு வேறு பெயர் யாது?

௩௦. 'கண்ணன்! யானே உலகெல்லாம் ஆயினேன்' என்று கூறுவது பொருந்தும் என்பதற்குக் காட்டும் பொருத்தம் யாது?

௧௧. கண்ணன் சிவபூசை செய்தனன் என்பதை வலியுறுத்தும் செய்யுள் யாது?

௧௨. முதற்கூற்றின் பிழிவைச் சுருக்கி எழுதுக.

௧௩. ஆவிநிலைகள் யாவை?

கூறு: ௨.

௧௪. இரண்டாம் அதிகரணம் எதனை விளக்குகின்றது?

௧௫. பாடிகாவல் என்பது யாது?

௧௬. 'உள் அடைவே' என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௧௭. 'வள்ளல்' என்னும் சொற்பொருளை விளக்குக.

௧௮. அரசன் உவமையும், உழவுதொழில் உவமையும் எவ்எவற்றைக் குறிக்கும்?

௧௯. உயிர்களுக்கு எதனை இயற்கை நோயாகவும் எதனைச் செயற்கை நோயாகவும் கூறலாம்?

௨0. உயிர்கள்பால் பிறப்பிலேயே காணப்படும் வேற்றுமைகள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

௨௧. உயிர் மீட்டும் பிறப்பதற்குக் காரணமாயுள்ள வினைக்குப் பெயர் யாது?

௨௨. வினைகள் உயிர்களைத் தாமே சாரா என்பதற்கும், உயிர்கள் வினைகளை எடுத்துக்கொள்ளா என்பதற்கும் கூறும் காரணம் யாது?

௨௩. தொடக்க மாயை என்றும் தொடக்க வினை என்றும் எவற்றைக் கூறுவது?

௨௪. மூலமலத்தின் காரியம் எத்தனை? அவற்றின் பெயர்கள் யாவை?

௨௫. இருவினையும் பெறும் நிலைகள் எத்தனை? அவற்றின் பெயர்கள் யாவை?

௨௬. வினைச் செவ்வி என்பது யாது? அதற்கு எடுத்துக்காட்டும் நாட்டு யாது?

௨௭. முன் செய்தவினை பின்னும், பின் செய்தவினை முன்னும் வருவதற்குக் காட்டும் காட்டு யாது?

௨௮. வினைப்பயன்களைத் துறக்க நிரயங்களில் துய்த்தபின்னும் இவ்வுலகில் பிறந்து துய்ப்பதற்குக் காரணம் யாது?

௨௯. வினைக்குப் பற்றுக்கோடு யாவை? எம்முறையில்? விளக்குக.

௩0. வினைக்கு முதன்மை உண்டாகாது என்பதற்குக் காரணம் யாது?

௩௧. எவ்வகை நல்வினை பிறப்பினைத்தரும்?

௩௨. பிறப்பினைத் தாராத வினைக்குப் பெயர் யாது? விளக்கமும்தருக.

௩௩. காலத்துச் செய்யவேண்டிய விதித்தவற்றைச் செய்யாமை பாவம் என்பதை விளக்கி எழுதுக.

௩௪. தொழுங்காலம் எத்தனை வகைப்படும்?

௩௫. சுமாயை உண்மைக்குக் காரணம் யாது?

௩௬. சுமாயையின் நிலைகள் யாவை? அவற்றின் பெயர்கள் என்ன?

௩௭. ஓசை எத்தனை வகைப்படும்? அவற்றின் பெயர்கள் யாவை?

௫௮. நிலைகள் (கலைகள்) எத்தனை வகைப்படும்? அவற்றின் பெயர்கள் யாவை?

௫௯. மாயை ஒன்றா? இரண்டா? என்பதைக் காரணத்துடன் கூறுக.

௬0. அசுத்தமாயையின் மெய்(தத்துவம்)கள் யாவை? அவற்றின் பெயர்கள் என்ன?

௬௧. மூலப்பகுதி என்பது யாது?

௬௨. மூலப்பகுதியில் தோன்றும் மெய்கள் எத்தனை? அவற்றின் பெயர்கள் யாவை?

௬௩. முப்பத்தொரு மெய்களையும் எத்தனை வகையாகப் பிரிக்கலாம்? விளக்கம் எழுதுக.

கூறு: ௩.

௬௪. 'மாறிப்பிறப்பது' உடலா? உயிரா? 'மாறல்' மாறுதல் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௬௫. உடல் ஐம்பருமை(பூதம்)மயம் எனக் கூறப்படுவதன் காரணம் யாது?

௬௬. அச்சுமாறித் தோன்றுவதற்கு ஒப்பு யாது?

௬௭. நுண்மை கெடாது பருமை தோன்றுவதற்கு ஒப்பு யாது?

௬௮. உயிர் செய்தவினையை மறப்பதும் மறவாததும் எவ்வெவ் இடங்களில்?

௬௯. ஐந்தொழில் செய்தல் யார்க்கு உரியது?

௭0. குடாகாயம், இதற்குரிய புணர்ச்சியும் விதியும் கூறுக.

௭௧. குடாகாய ஒப்பு எதனை உணர்த்தும்?

௭௨. மற்ற ஒப்புக்கள் எவை? அவை எவற்றை உணர்த்தும்?

கூறு: ௪.

௭௩. 'பாசங்கள்' உடைமையாமாறு எதில் கூறப்படுகின்றது?

௭௪. பசுக்கள் அடிமையாமாறு எதன்கண் கூறப்படுகிறது?

௭௫. 'அன்மை' எப்பொருளைக் குறிக்கின்றது?

௭௬. தாதான்மிய சத்தி உண்மைக்குப் பிரமாணம் எம்முகத்தாற் கூறப்பெற்றுள்ளது?

௭௭. சிவசத்தி ஒன்றுதானே பலவேறு வகைப்படுவதற்குக் காரணமும், பெயரும், உவமையுங் கூறுக.

௭௮. அறிவாற்றலும் ஐந்தொழில் புரியாமைக்குக் காரணம் யாது?

௭௯. சமவாயம் என்னும் சொற்குப் பொருள் யாது?

௮0. எக்காரணத்தால் வடமொழிச் சூத்திரங்கள் மொழி பெயர்ப்பு என்பது பெறப்படும்?

௮௧. 'நீக்கமின்றி நிற்பன்' என்பதை விளக்குக?

## [மூன்றாம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. மூன்றாம் சூத்திரத்துள் எவ்வெச் சமையங்களை மறுக்கின்றனர்?

௨. மொத்தம் மறுக்கவேண்டிய சமையங்கள் எத்தனை?

௩. வழி அளவை என்றால் என்னை?

௪. முதல் மூன்று சூத்திரங்களுக்கும் உள்ள இயைபு யாவை?

கூறு : க.

ரு. மூன்றும் சூத்திரத்து அதிகரணங்களுக்கு எவ்வெச்சொல்லால் தோற்றுவாய் செய்யப்பட்டது? விளக்கம் தருக.

௬. எதனைக்கொண்டு 'இலதென்றலின் ஆன்மா உளது' என்றதனை நிலைநாட்டுகின்றனர்.

கூறு : உ.

எ. 'இராகுவினது' தலை என்பது எவ்வகை வழக்கு? இங்குக் கூறப்படும் 'ஆன்மா' எவ்வகை வழக்கைச் சார்ந்தது? எடுத்துக்காட்டுடன் எழுதுக.

அ. கிழமை எத்தனை வகைப்படும்?

கூறு : ௩.

௯. ஐம்புலனுக்கு வேறாக ஆவி உண்டென்பதை விளக்குக.

க0. 'அன்றும் புலன்' என்பதன் பொருள் யாது?

கக. சிறப்பும் பொதுவும் ஆகிய வினைகள் எங்ஙனம் முடியும்? அதற்கு எடுத்துக்காட்டு யாது?

கூறு : ௪.

க௨. 'ஒடுக்கம் அறிதலின்' என்பதன் பொருள் யாது?

க௩. 'சித்தசாதனம்' என்றால் என்ன? எடுத்துக்காட்டுத்தருக.

கூறு : ரு.

க௪. 'பிரகிருதி' என்பதன் பொருள் யாது? அஃது ஈண்டு எதனைக் குறிக்கின்றது?

கரு. ஒருபொருட் பன்மொழி என்றால் என்ன? ஈண்டு ஒரு பொருட் பன்மொழியாய் வருவது யாது?

க௬. 'உண்டி வினை' என்பன எவற்றைக் குறிக்கின்றன?

கூறு : ௬.

கஎ. ஆவி முன் உணராது கிடத்தலை எதனால் அறியலாம்?

கஅ. 'உபதேசி' என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

க௯. அவன் (கடவுள்) எங்ஙனம் அறிவன்? ஆன்மா எங்ஙனம் அறியும்?

உ0. 'ஆன்மா அறியும் நிலையை' எடுத்துக்காட்டு வெண்பாவிலுள்ள முறைப்படி விளக்கி எழுதுக.

உக. 'உணர்த்த உணர்தல்' என்னும் ஏதுவான் விளக்கப்படுவன யாவை?

உ௨. நனவில் நிகழும் ஐந்நிலைகள் யாவை?

கூறு : எ.

உ௩. 'கலை ஆதி மண் அந்தமாக' உள்ள மாயை ஆன்மாவுக்கு எது போல் துணைபுரிகின்றது?

உ௪. மாயாகாரியமாகிய உடம்பும் ஆன்மா அல்ல என்பதற்குக் கூறும் காரணங்கள் யாவை?

உரு. இம் மூன்று சூத்திரங்களானும் கூறப்படும் தொகைப் பொருள் கள் யாவை?

உகூ. 'சமூகான்ம வாதிகள்' என்பார் யாவர்?

உஎ. அகச்சமுதாயம் எத்தனை? அவற்றின் பெயர்கள் என்ன?

உஅ. அகச்சமுதாயத்தைப்புத்தரில் ஒருசாரார் என்னென்றுகூறுவர்?

உகூ. 'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை' என்பனவற்றை வேறு எவ்வாறு கூறலாம்?

## [நான்காம் சூத்திரத்துள் அடங்கியன]

க. அளவை இயலிற் கூறிய சூத்திரங்களைத் தன்மையியலாகிய இலக்கண இயலில் எம்முறையாக விளக்கியருளுகின்றனர்? அதற்குக் கூறும் வாய்பாடு யாது?

உ. மாட்டெறிதல் என்பது யாது? இங்குள்ள மாட்டெறிதல் எந் நிலையில் உள்ளது?

ங. ஆவிக்கு நிகழும் பொதுவும் சிறப்புமாகிய அறிவுகள் எத்தகைய? எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.

ச. இச் சூத்திரத்தில் வழிமொழிதலால் பெறப்படுவது யாது?

ரு. இச் சூத்திரத்தில் ஆன்மாவை மீண்டுங் கூறியதற்குக் காரணம் யாது?

கூறு: க.

கூ. அந்தக் கரணங்கள் எத்தனை வகைப்படும்? அவற்றை விளக்கி எழுதுக.

எ. பிரகாசம் அப்பிரகாசம் என்பன என்ன என்ன பொருள்களைத் தருகின்றன? எடுத்துக்காட்டு யாது?

அ. மனம் முதலிய அகப்புறக் கலன்களால் அறியப்படுவன யாவை? ஆவி எதனை அறிகின்றது? ஈண்டும் ஒப்பால் பெறப்படுவது யாது?

கூ. அகப்புறக் கலன்கள் எம்முறையால் புலன் (பொருள்) களை உணர்கின்றன?

க0. அகப்புறக் கலன்களைச் செலுத்தும் எழுத்துக்கள் யாவை? அவற்றிற்கு மொத்தத்தில் கூறப்படும் பெயர் யாது?

கக. இவ் எழுத்துக்களைச் செலுத்தும் தெய்வங்களின் பெயர்கள் யாவை? எவ்வெத் தெய்வங்கள் எவ்வெவ் இடங்களில் உறைகின்றன?

கஉ. அகப்புறக் கலன்கள் ஆவி அன்று என்பதற்குக் கூறும் காரணங்கள் யாவை?

கங. இதனை இங்குக் கூறுவதற்குக் கூறப்படும் காரணம் யாது?

கச. எண்ணம் எண்ணுவதற்கும் மனம் பற்றுவதற்கும் கூறப்படும் ஒப்பு யாது?

கரு. அகப்புறக் கலன்களும் அறிவுடையன அல்ல என்பதற்குக் கூறும் காரணங்கள் யாவை?

ககூ. "பிறவற்றை நோக்கியும் தன்னை நோக்கியும் சித்தாகிய ஆன்மா" என்பதனை விளக்குக.

கஎ. காட்சி எத்தனை வகைப்படும்? விளக்கம் தருக.

௧௮. இறப்புமெய்யாகிய புத்திதத்துவத்தை அறியப்படும் புலன் (விடயம்) என்று கூறுவதன் காரணம் யாது?

௧௯. ஆவிக்கு இன்பத்துன்ப நுகர்வுக்குக் கருவியாகவுள்ளது யாது?

௨0. அகப்புறக் கலன்களை அமைச்சரோடு ஒப்புக் கூறுவதுபோல வினைக்கருவிகளுக்குக் கூறும் ஒப்புக்கள் யாவை?

௨௧. இயைந்தியக்கும் திருவருளாற்றலை என்ன திருப்பெயரான் வழங்குவர்?

கூறு: ௨.

௨௨. மாயையும் மலமும் எத்தன்மைய?

௨௩. அறிதலும் அறிவித்தலும் என்பதன் நுண்பொருள்யாது?

௨௪. மலத்தின் இருநிலைகள் யாவை?

௨௫. அபாவம் என்றால் என்ன? விளக்கம் தருக.

௨௬. வன்னியின் ஒப்பும் காட்டத்தின் ஒப்பும் எவ்வெவற்றிற்கு? விளக்கி எழுதுக.

௨௭. மும்மலத்தார் என்னும் பெயர்க்குக் காரணம் யாது? இன்னும் எத்தனை வகையான மலத்தார் உளர்? காரணத்தைத் தெளிய எழுதுக.

௨௮. இங்குக் கூறப்படும் அடை, தொழில், இயைபு இவற்றை விளக்கி எழுதுக.

௨௯. மலத்திற்கு எத்தனை பெயர்கள் உள்ளன? அவற்றுள் ஏதாவது மூன்றை விளக்கத்துடன் எழுதுக.

கூறு: ௩.

௩0. ஆவி ஐம்பாடு (அஞ்சவத்தை) எய்துவதற்குரிய காரணங்கள் யாவை?

௩௧. ஐந்தவத்தைகளின் பெயர்கள் யாவை? ஒவ்வொன்றிலும் நிற்கும் கருவிகள் எத்தனை?

௩௨. ஐந்தவத்தைக் குரிய இடங்கள் யாவை?

௩௩. வேறும் உள்ள ஐந்தவத்தைகள் யாவை?

௩௪. நனவிலும் ஐந்தவத்தை உண்டா? உண்டெனில் அவற்றின் பெயர்கள் என்ன?

௩௫. ஆவி ஐம்பாடு உறுவதால் அவற்றின் பரப்பிற்கு இழுக்கில்லை என்பதற்குக்கூறும் காரணங்கள் யாவை?

௩௬. 'மெய்யாதி' என்று தொடங்கியதற்குக் கூறும் காரணங்கள் யாவை?

௩௭. கீழ்நோக்கிய நனவில் தொழிற்படுங்கருவிகட்குத் துணையாக வலியைச்செய்யும் புறக்கருவிகள் எத்தனை? அவற்றின் பெயர்கள் என்ன?

௩௮. மெத்தென நிகழும் கருவிகள் யாவை?

௩௯. அவத்தைக் குரியன அல்லாக்கருவிகள் எத்தனை? அவற்றின் பெயர்கள் என்ன?

௪0. உணர்த்தும் முறை நனவு என்பது யாது?

௪௧. நனவில் நனவு முதலியவற்றிற்குக் கூறும் எடுத்துக்காட்டு யாது?

௪௨. புலம்பு, புணர்வு, புரிவு என்று சொல்லப்படும் மூன்று நிலையும் வேறு என்ன பெயரால் கூறப்படும்?

௪௩. இம் மூன்றின் விளக்கம் யாது?

௪௪. நான்காம் நூற்பாவின் தொகைப் பொருள் யாது?

## [ஐந்தாம் சூத்திரத்துள் அடங்கியன]

க. ஐந்தாம் நூற்பா எவற்றின் இலக்கணம் கூறுகின்றது?

உ. திரோதானசத்தியது இலக்கணங் கூறவே, வேறு எவற்றின் இலக்கணம் கூறியது ஆகும்? அதற்குக் காரணம் என்ன?

௩. ஐம்பொறிகளைக் கூறியதால் பெறப்படுவது யாது?

௪. தம் உணர்வின் தமி என்பது எதனது தொகை?

௫. முதல்வன் உதவி யாண்டும் வேண்டப்படும் என்பதற்குக் கூறும் காரணங்கள் யாவை?

௬. மறைப்பாற்றலுள் மாயை அடங்கும் என்பது எதனால் விளங்கும்?

௭. ஐவகை ஆற்றல்கள் யாவை? அவை செய்யும் தொழில்கள் யாவை?

கூறு: க.

௮. உணர்வென்று உபசரித்துக் கூறியது எதனை?

௯. 'ஒன்றையும் விடயியா' என்றதன்கண் உம்மை எத்தனைபொருள்களில் வந்துள்ளது?

க0. ஐம்பொறிகள் ஆவியை இன்றி உணரமாட்டாமையை எதனால் அறியலாம்?

கூறு: உ.

கக. 'தமதுமுதல்' என்பது பால்வழு ஆகாமைக்குக் கூறும்காரணம் யாது?

கஉ. 'மன்னுசிவன்' என்னும் வெண்பாவில் 'சிவன்' என்னும் சொல்லுக்குக் கூறும் அடைகள் யாவை? அவற்றால் பெறப்படும் பொருள்கள் யாவை?

க௩. 'உன்முகம் ஆதல்' என்பது யாது? விளக்கி எழுதுக?

க௪. முதல்வன் விகாரியாவான் செல்லும் எனக் கூறுபவர் யார்? அதற்கு அவர் சொல்லும் காரணம் யாது?

க௫. 'அருளுண்டாம்' என்னும் வெண்பாவில் பெறப்படும் குறிப்பெச்சம் யாது?

க௬. ஆகம அளவை கூறநேர்ந்ததன் காரணம் யாது?

க௭. ஆண்டவன் ஆவிகளுக்குப் பல்வேறு வகையாக உணர்த்துவதற்குக் காரணம் யாது?

க௮. ஆண்டவன் ஆவிகளுக்கு உணர்த்தியும் திரிபு எய்தாமைக்குக் காரணம் யாது?

க௯. 'அருள்' என்பது எத்தகையதென விளக்கப்பட்டுள்ளது?

# [ஆறாம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. ஆறாம் சூத்திரம் உண்மை அதிகாரத்திற்குத் தோற்றுவாய் ஆவது எங்ஙனம்?

௨. 'சிவசத்தாம்' என்று இசைப்பதற்குரிய காரணங்கள் யாவை?

௩. முதல்வனுக்கு ஈண்டுக் கூறும் இலக்கணம் யாது? மற்றைய இலக்கணத்தின் பெயர் யாது? அஃது எந்த நூற்பாவின்கண் கூறப்பட்டுள்ளது?

௪. ஆறாம் சூத்திரம் எத்தனை அதிகரணங்களை யுடையது?

௫. ஒழிபளவை என்றால் என்ன? இங்குக் காட்டியுள்ள ஒழிபளவையை விளக்குக.

௬. முதல்வனுக்கு உண்மை அதிகாரத்துக் கூறவேண்டிய சிறப்பியல்பைப் பொது அதிகாரத்திற் கூறியதற்குக் கூறும் அமைவு யாது?

௭. இந்நூற்பாவின்கண் தொக்கியுள்ள முற்றும்மைகள் எவை?

கூறு : ௧.

௮. 'அறிவினால் அறிந்த சுட்டுப்பொருள்' அசத்து என்பதற்குக் கூறும் காரணம் யாது?

௯. 'நீரில் எழுத்தும் நிகழ்கனவும்' என்னும் வெண்பாவினுள் 'நிகழ்' என்னும் அடையால் பெறப்படும் சிறப்புப் பொருள் யாது?

௧௦. 'நீரில் எழுத்து' முதலியவற்றால் பெறப்படும் விளக்கம் யாது? அவை எவ்வெக்குறிப்புகளை உணர்த்துகின்றன?

௧௧. இவ் வெண்பாவை இருகூறாகப் பகுத்துப் பொருள்கொள்வதற்குக் கூறும் காரணம் யாது? மேற்கோள் யாது?

௧௨. காணவும் காட்டவும் ஆகாவாய்க் கருதற்குஆம் பொருள்கள் யாவை?

௧௩. உலகம் அழிபொருள் - அசத்து அல்ல என்று எண்ணுவது எதனை ஒத்திருக்கும்?

௧௪. இரட்டுற மொழிவதற்குத் திருக்குறளில் எடுத்துக் காட்டும் காட்டு யாது?

கூறு : ௨.

௧௫. சிவம் எவ்வாறு நிற்கும்?

௧௬. நிருவசனப்பொருள் என்றால் என்ன?

௧௭. வாளா பெயராய் நின்றது எது? அதற்குக் காட்டிய எடுத்துக் காட்டு யாது?

௧௮. சத்து எதன்கண் கோசரிக்கும்?

௧௯. சிவம் பாசஞான பசு ஞானங்களால் அறியப்படும் எனக்கொண்டால் ஏற்படும் விளைவு யாது?

௨௦. பாவனை எத்தனை வகைப்படும்? அவற்றின் பெயர்கள் யாவை?

௨௧. ஒருபொருட் பன்மொழி என்று கூறியது எதனை?

௨௨. வெண்பாக்கள் ஐந்தும் முறையே எவ்வெச் சமயத்தார் கொள்கைகளை மறுக்கின்றன?

௨௩. நான்கு ஐந்து ஆறும் சூத்திரங்களில் முறையே காட்டப்படும் அவத்தைகள் யாவை?

௨௪. மனாதீதம்' என்னும் முடிபு சரியா? சரி என்றால் இலக்கண மும் எடுத்துக்காட்டும் கூறுக.

௨௫. மாயாவாதி கூறும் கூற்றுக்கள் யாவை?

௨௬. 'அரை மாத்திரையில் அடங்கும் அடி' என்பதை விரித்து எழுதுக.

௨௭. ஆவி ஆண்டானைக் காண்பது எப்படி? காரணத்துடன் விளக்குக.

௨௮. புலம்பிற் புலம்பு முதலியன எத்தனை வகைப்படும்? விளக்க முடன் எழுதுக.

௨௯. சீவன்முத்தி முதலவாகக் கூறப்படும் நிலைகள் எத்தனை? பெய ரும் விளக்கமும் தருக.

௩0. சீவன் முத்தி முதலிய நிலைகளை எவ்வெந் நூற்பாக்களால் உணரலாம்?

## [ஏழாம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. அருந்ததி நியாயத்தை விளக்கிக் கூறுக.

௨. ஏழாம் நூற்பா எந்த இயலில் காணப்படுகின்றது?

௩. 'அறிதல்' என்றதற்கு ஏற்புழிக் கோடலாற் கொள்ளும் பொருள் யாது?

௪. ஏழாஞ் சூத்திரம் எதனை விளக்குகின்றது?

௫. சிறப்பு இயல்புக்குக் கூறும் வேறு பெயர் யாது? காரணம் கூறுக.

௬. ஏழாம் நூற்பா எத்தனை அதிகரணங்களையுடையது?

கூறு: ௧.

௭. ஈண்டுச் சூனியம் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௮. முற்றுணர்வுடைய சிவத்துக்குச் சுட்டுணர்வு உண்டு என்பது இழுக்காகுமா? ஆம் எனின் காரணம் கூறிவிளக்குக.

௯. "மாணு அசத்து" சொற்பொருளும், மாணுமைக்குக் கூறும் விளக்கமும் எழுதுக.

௧0. ஆவிக்குச் சுட்டுணர்வு எந்நிலையில் இல்லை? அதற்குக் கூறும் காரணம் யாது?

கூறு: ௨.

௧௧. "இனி அசத்தினுக்கு உணர்வின் றென்றது" என்பதன்கண் காணப்படும் அசத்தென்றது எதனை?

௧௨. "பாசஞானம்" என்பது எதனைக் குறிக்கின்றது? விளக்கி எழுதுக.

௧௩. அசத்தினுக்கு உணர்வு இன்று என்பதற்குக் காட்டும் எடுத் துக்காட்டு யாது?

௧௪. 'உயிர் அறிதற்றன்மைத்து' என்பதை எவ்வாறு உணரலாம்? விளக்கி எழுதுக.

௧௫. 'இருதிறன் அறிவு' என்னும் தொகைச்சொல் எத்தனை வகை யாக விரித்துக் கூறப்படும்? விளக்கி எழுதுக.

௧௬. ஆவியின் அறியுந் தன்மைக்கு எடுத்துக்காட்டும் ஒப்பு யாது?

௧௭. அறியுந்தன்மை வாய்ந்த ஆவி தன்னை அறியுமா? அறியும் எனின், எவ்வாறு அறியும்?

௧௮. உயிர்க்கு அறியுந்தன்மை உண்டு என்பதை வலியுறுத்துவதற்கு எடுத்துக்காட்டும் காட்டு யாது?

௧௯. ஆவி சத்தும் அன்று அசத்தும் அன்று என்பதற்குக் கூறும் காரணம் யாது? விளக்கி எழுதுக.

௨௦. நோய் என்று பொதுவாகக் கூறியிருப்பவும் பசிநோயாகக் கூறவேண்டுவது என்ன காரணத்தால்?

௨௧. 'அஞ்ஞானம்' மெய்ஞ்ஞானம் ஆகிய இறையைப் பற்றாது உயிரைப் பற்றுவதற்குக் காரணம் யாது? அவற்றிற்குரிய எடுத்துக்காட்டு யாது? விளக்கி எழுதுக.

௨௨. ஆவியின் சிறப்பியல்பு எதனை ஒத்தது? காரணத்துடன் எழுதுக.

௨௩. ஆவி பளிங்கனையது என்பதை விளக்கிக் கூறும் பாட்டை எழுதுக.

௨௪. நிலையாத பொருளாகிய அழிபொருளால் அறிவு விளங்கும் போது எவ்வெவை காட்டாகின்றன? விளக்கி எழுதுக.

௨௫. நிலைத்த மெய்ப்பொருளால் அறிவு விளங்கும்போது காட்டாவது எது?

## [எட்டாம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. எட்டாம் சூத்திரம் எதனை உணர்த்துகின்றது?

௨. மேலைச் சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கப்பட்டது எதனை?

௩. புலன் ஆகுபெயராக எதனைக் குறிக்கின்றது?

௪. அன்னியமின்மை என்னும் சொற்குப் பொருள் யாது?

௫. சுட்டுப்பெயர்பட நின்றது எது?

௬. மன்னவர்க்கே உரிய சிறப்படையாளங்கள் எவை?

௭. அவ் அடையாளங்கள் ஆண்டவனோடு எங்ஙனம் பொருத்தப் பட்டுள்ளன?

௮. ஐம்புல வேடரின் வளர்ந்தயர்தல் எதனாற் பெறப்படும்?

௯. இச்சூத்திரம் எத்தனை அதிகரணங்களை யுடையது?

௧௦. ஆவியின் அறிவு இருவகையாக விளங்குவதற்குக் காரணம் யாது? அஃது எதன்கண் கூறப்பட்டுள்ளது?

௧௧. அந்தரியாமித்துவம் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௧௨. தீக்கை என்னும் சொற்குப் பொருள் யாது? விளக்கி எழுதுக.

௧௩. அனைத்துயிரும் ஆண்டவன் மக்கள் எனக் கூறுவது எதனைக் கொண்டு?

கூறு : க.

கச. தத்துவஞானத்துக்கு உரியரல்லாதார் யார்? அஃது எதனால் பெறப்பட்டது ?

கரு. நற்சார்பு துணையாதல் எதுபோன்று?

கசு. வேள்வி பெரும்பயனைத் தாராமைக்குக் காரணம் யாது ?

கள. எவற்றை இறப்பில் தவம் என்பர்?

கூறு : உ.

கஅ. மூவகை யுயிர்கட்கும் ஆண்டான் ஆசானாய் எழுந்தருளி ஆட்கொள்ளும் வகை எத்தனை ? அவற்றை விளக்கி எழுதுக.

கக. 'அறிவிக்க அன்றி' என்று தொடங்கும் வெண்பாவின்கண் கூறப்படும் நிலை யாது ? விளக்கி எழுதுக.

உ0. நீர் நிழல் ஒப்பு எதற்கு ? விளக்கி எழுதுக.

உக. ஆவேச பக்கம் என்பது எதனை ? அதனை வேறு எப்பெயரால் விளக்குவர் ?

உஉ. "முத்தியினும் மூன்று முதலும்" உண்டு என்பதனை வலியுறுத்துவது எப்படி? விளக்கி எழுதுக.

உங. மும்மலத்தார்க்கு மக்கள் உருவில் ஆசான் அருளுருவாய் எழுந்தருளுவதற்குக் காரணம் யாது ? விளக்கி எழுதுக.

உச. நூல் வேண்டுவது யார்க்கு ? அதற்குரிய காரணங்களுடன் விளக்கி எழுதுக.

உரு. 'கொள்ளார் கொள்பவர்' என்பன எவற்றைக் குறிக்கின்றன ? விளக்கி எழுதுக.

கூறு : ங.

உசு. குரு வேண்டா, ஐம்பொறிகளே அமையும் எனக்கூறுங் கொள்கையினர் பெயர் யாது ?

உஎ. அச்சமும் அன்பும் என்றும் வேண்டும் என்பதற்குரிய விளக்கம் தருக.

உஅ. 'பொய் பொய்யா மெய்கண்டான்' என்னும் அருள்மொழி விளக்குவது யாது ?

உகூ. 'மெய்ப் பொருட்குத் தைவம்' ஆதல் பெறப்படாது என்று கூறுவார் யார் ? அவர் கூறும் காரணம் யாது ?

கூறு : ச.

ங0. எவ்வகைப் பொருட்குக் காட்சி விசேடமே நீக்கமாகும் ?

ஙக. முதல்வன் திருவடியை அடைந்த உயிர் புலன்களில் மீளச் செல்லாமைக்கு ஒப்பு யாது ? கூறும் காரணம் யாது ?

ஙஉ. புலன் உணர்வும் கலப்பால் சிவமே ஆயினும் உயிர் உணர்வு போல் ஆகா என்பதற்குக் கூறும் காரணம் யாது ? எடுத்துக்காட்டு யாது ?

ஙங. புலன் உணர்வில் செல்லாத உயிர் செல்லநேரின், அங்ஙனம் செல்லாமைக்கு வழி யாது ?

ஙச. 'பசுகரணம் சிவகரணம் ஆக' என்பதன் பொருள் யாது ? விளக்கி எழுதுக.

௩௫. ஆண்டான் ஆவியினிடத்தும் மாயையினிடத்தும் ஒப்ப நிற்பி னும் ஆவியினிடத்துச் சிறப்பாக நிற்கின்றான் என்பதற்குக் காட்டும் காட்டு யாது? விளக்கி எழுதுக.

௩௬. எங்ஙனம் இருந்தால் இறைமைக்கு இழுக்காம்?

௩௭. ஆண்டானைச்சார்ந்த ஆவி மீளாமைக்கும், மீண்டால் விளையும் பயனுக்கும் காட்டும் விளக்கமும் தருக.

௩௮. ஆவி மீண்டகாலத்துத் தன்நிலை எய்துவதற்கு வாயில் யாது?

௩௯. நீங்கிய மலம் வந்து பொருந்துவதற்குக் காரணம் யாது? எடுத் துக் காட்டு யாது?

௪0. பயிற்சி தீது என்பதற்கு எடுத்துக்காட்டிய வரலாறு யாது?

## [ஒன்பதாம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. பதியை எவ்வுணர்வுகளான் அறிய முடியாது?

௨. பாசச்சயம் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௩. இச் சூத்திரம் எத்தனை அதிகரணங்களை யுடையது?

௪. 'ஆன்மசுத்தி பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று' என்று ஓது வதனால் பெறப்படும் சிறந்த பொருள் யாது?

௫. காட்சி எத்தனை வகைப்படும்? அவற்றின் பெயரும் விளக்கமும் தருக.

௬. அஞ்செழுத்தின் உள்ளுறை யாது?

கூறு: ௧.

௭. வாக்கு மனாதீத கோசரம் என்னும் தொடர்க்குப் பொருள் யாது?

௮. உடல்கலன் உறுப்புக்களில் ஆவியைத் தேடிக் காணமுடியாமைக் குக் கூறும் விளக்கம் யாது?

௯. ஆவி வீடுபேற்றுக் காலத்துத் தன்னை உணர்வது எங்ஙனம்? விளக்கம் தருக.

௧0. ஆண்டானைக் கள்வன் என்று கூறுவதற்குக் காரணம் யாது?

கூறு: ௨.

௧௧. 'நிர்க்குணன்' என்னும் சொற்குப் பொருள் யாது? விளக்கி எழுதுக.

௧௨. முதற்கூற்றின் புறனடையாக இரண்டாங் கூற்றைக் கூறுவ தற்குரிய காரணம் யாது?

௧௩. இதன்கண் கூறப்படும் உருவகம் யாது? அதனால் பெறப்படும் பொருள் யாது?

௧௪. ஆண்டவனை எவ்வெவ் அளவைகளைக்கொண்டு அறிய முடியாது? விளக்கி எழுதுக.

௧௫. 'வானே முதல்களையின்' என்பதனால் பெறப்படும் பொருள் கள் யாவை?

௧௬. 'பொய் விட்டுப்போம்' - விட்டுப்போம் என்பதனால் பெறப் படும் சிறந்த பொருள் யாது?

கஎ. எண்ணம்—பாவனையின் பண்பு யாது ? விளக்கமாய் எழுதுக.

கஅ. இப் பாவனையைப்பற்றிக் குமரகுருபர அடிகள் கூறும் விளக்கம் யாது ?

கக. அகவழிபாடு—தியானம் என்பதன் பொருள் யாது ?

உ0. மறை—மந்திரம் என்பதை விளக்கி எழுதுக.

உக. கருட தியானம் ஆவது யாது? கருடன் எத்தனை வகைப்படும்? ஒவ்வொன்றையும் விளக்கி எழுதுக.

கூறு : ந.

உஉ. மூன்றும் அதிகரணத்தின் மேற்கோள் யாது ?

உந. ஆவிக்குள்ள அறிவு--ஞானம் எத்தனை வகைப்படும் ? விளக்கமாக எழுதுக.

உச. ஆவி முழுமுதல்வனை எவ்வறிவால் உணரும் ?

உரு. 'இனி இவ்விடத்துச் சீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க' இதன் கண் கூறப்பட்டுள்ள 'இவ்விடம்' என்பது யாது ?

உசு. வீடு பேற்றிற்குரிய சீபஞ்சாக்கரம் யாது ?

உஎ. ஆவி ஆண்டானோடு நிற்கும் முறை யாது?

உஅ. மலமறைப்பாவது யாது? மல ஆற்றல் தொழிற்படல் என்பது யாது ?

நக. திருஐந்தெழுத்தை ஓதுமுறை என்பது யாது ?

ந0. 'சிவ சிவ' என்னும் திருப்பாட்டு எதன்கண் உள்ளது? அதன் சிறப்பு யாது ?

நக. திருஐந்தெழுத்தை ஓதும்—கணிக்கும்முறை எத்தனை வகைப்படும் ? அவற்றுள் சிறந்தது யாது ?

நஉ. சித்தசாதனம் என்பது யாது ? விளக்கம் தருக.

நந. வழிபாடு எத்தனை வகைப்படும் ?

நச. அகவழிபாட்டிற்குரிய மலர்கள் யாவை ?

நரு. அஞ்செழுத்தால் வழிபடும் வழிபாடு எவ்வகையில் அமையும்?

நசு. முதல்வன் திருவுருவுகளுள் எவ்வுரு திருஐந்தெழுத்தின் அமைவு காட்டுவது.

நஎ. 'தத்துவமசி' என்பதன் பொருள் யாது? விளக்கம் எழுதுக.

நஅ. 'சேடனும் அங்கு' இதன்கண் உள்ள சேடம் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது ? விளக்கம் எழுதுக.

நக. 'கரும்பாம்பு செம்பாம்பு' என்னும் இராகு கேதுக்களின் ஒப்பால் பெறப்படும் பொருள் யாது ?

ச0. ஆண்டவனை ஆவிகள் உணருமுறை எங்ஙனம் ?

சக. ஆவி ஆண்டானுக்கு அடிமையாவது என்பதன் பொருள்யாது?

சஉ. முப்பத்தாறு தத்துவங்களையும் இருக்கையாகக் கொண்டு வழிபடும் இடம் யாது ?

சந. வழிபாட்டுக்குரிய சிறந்த திருமறை யாது ?

## [பத்தாம் சூத்திரத்துள் அடங்கியன]

க. பத்தாம் சூத்திரத்தின் கருத்துரை யாது?

உ. எழு எட்டு ஒன்பது ஆகிய மூன்று நூற்பாக்களிலும் முறையே விளக்கப்படும் பொருள்கள் யாவை?

௩. பயன் எத்தனை வகைப்படும்?

௪. இறைபணி என்பது யாது? விளக்கம் தருக.

௫. 'அவனே தானே ஆகிய அந்நெறி' இதன்கண் உள்ள நெறி என்னும் சொல்லுக்குப் பொருள் யாது? 'அவனேதானே ஆகிய' என்னும் ஒப்பு எதைக் குறிக்கின்றது?

௬. ஆவியின் செயல் ஆண்டான் செயல் எனக்கருதப்படுவதன் காரணம் யாது? அஃது எப்பொழுது?

௭. ஆவியும் ஆண்டானும ஒற்றுமைப்படும் தன்மைக்கு எடுத்துக் காட்டும் ஒப்பு எத்தனை வகைப்படும்? அவைகள் யாவை? ஒவ்வொன்றும் எந்த எந்த வகையில் ஒப்பாகின்றன? அவை எல்லாம் எத்தகைய ஒப்புக்கள்? முற்றொருப்பாவது யாது?

கூறு: க.

அ. தெளிவுக்காட்சி திரிபுக்காட்சி என்பன யாவை? இக்காட்சிகளைக்கொண்டு வலியுறுத்தப்படும் பொருள் யாது?

௯. ஆவிகளைப் பிறப்பு இறப்புகட்கு உட்படுத்தும் பீடில் பொருள் யாவை? அவற்றுள் முதன்மை வாய்ந்தது எது?

க0. 'சென்று சென்றணுவாய்' என்னும் தொடர் எதன்கண் வருவது? அதன் பொருள் யாது?

கக. காணும் தன்மையும் காட்டும் தன்மையும் எவ்வெப்பொழுது முனைத்துத் தோன்றுவன? இங்கே விளக்கப்படும் தெளிவு புலன், திரிவு புலன் என்பவைகள் யாவை?

கஉ. ஆவிகள் ஒன்றனை ஒன்று காணுமாற்றிற்கு ஒப்பு யாது?

கூறு: உ.

க௩. பசை அறும் வழி யாது?

க௪. நம் உடலின்கண் காணப்படும் பொறி புலன் கலன்கள் யார் வயத்தவாய்த் தொழிற்படுகின்றன? தோன்றுகின்றன?

க௫. ஆண்டவன் அடியாரைச் சிறப்பாகத் தாங்குவது நடுவு நிலையாகுமா? விளக்கி எழுதுக.

க௬. வாசனைமலம் எனக் கூறப்படுவது யாது? அதன் பயன் யாது? அதனை விளக்கும் ஒப்பு யாது?

க௭. ஆவிகள் ஐம்புலனிற் சென்றும் தம் திறலில் நீங்காமைக்குக் காட்டும் ஒப்பு யாது?

கஅ. அருள்வழி நிற்கும் ஆவிகள் 'பாசத்தில் இதமித்தல்' செய்யாமைக்குக் காரணம் யாது?

க௯. ஆவியன் அன்பு அறிவு ஆற்றல்கள் அழியாமைக்குக் கூறுங் காரணம் யாது?

௨0. ஊழ்வினை தாக்காமையும் மூழ்வினையாகிய எறுவினை சாராமையும் உண்டா? உண்டெனில் காரணம் யாது? மூழ்வு - பற்று.

௨௧. 'உளி' என்பது எந்த வேற்றுமை யுருபுபட நின்றது? இவ்வுளி எவ்வெண்பாவின்கண் காணப்படுவது? இதன் சார்பாகத்தோன்றும் இலக்கண விதி யாது?

௨௨. சதசத்து என்பதை வேறு எவ்வாறு கூறலாம்? விளக்கி எழுதுக.

## [பதினொராம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. பதினொராம் சூத்திரத்தின் கருத்துரை யாது?

௨. முதல்வனும் ஆவியும் உடங்கு இயைந்து அறியும் அறிவின் தன்மைக்கு எடுத்துக்காட்டும் காட்டு யாது? விளக்கி எழுதுக.

௩. அறிவிச்சை செயல்களின் நிகழ்ச்சிகள் யாவை? விளக்கி எழுதுக.

௪. இந்நூற்பா எவ்வுதவியை வலியுறுத்துகின்றது?

௫. அன்பு அறிவு ஆற்றல்கள் ஒடுங்காமைக்குக் கூறும் காரணம் யாது?

கூறு: ௧.

௬. ஆவியும் ஆண்டானும் ஐம்புலன்களைக் கொள்ளுமுறை எங்ஙனம்?

௭. ஆண்டவன் ஆவிக்குப் பேரின்பமாய் (பரபோகமாய்)த் திகழ்வது எப்பொழுது? விளக்கி எழுதுக.

௮. தன்னைப் பற்றுதல் (ஆன்மாச்சிரயம்) என்னும் குற்றம் யாரைச் சாரவில்லை? அதற்குக் கூறும் காரணம் யாது?

௯. ஆவிக்குக் கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் நிகழும் இன்பங்கள் எத்தகைய? தோன்றும் பொருள்கள் யாவை? விளக்கி எழுதுக.

௧0. கண்ணொப்பால் பெறப்படுவது யாது?

௧௧. தன்னடியைச் சார்ந்த ஆவிகட்கு வரும் ஊழ்ப்பயனை முதல்வன் என்று கொள்ளுவதற்குக் காட்டும் ஒப்பு யாது?

௧௨. திருவடி இன்பத்தில் திளைக்கும் ஆவிக்கு எல்லாம் திருவடி இன்பமாகவே புலனுவதற்குக் காட்டும் ஒப்பு யாது?

௧௩. உடல் பொருள் ஆவி மூன்றும் இறைவன் உடைமை எனவும், அவை நம்பால் எம்முறையில் இருக்கின்றன எனவும் ஒப்புக்கள் உடன் விளக்கி எழுதுக.

௧௪. விழுமிய முழுமுதல்வன் ஆவிகளுடன் ஒன்ருய் வேருய் உடனாய் நின்றருளுகின்ற முறைமையை மேற்கோள்பாட்டுடன் விளக்கி எழுதுக..

கூறு: ௨.

௧௫. இச்சை மீதூர்தற்குச் சொல்லும் சொற்கள் யாவை?

௧௬. அல்லிருள் என்பதனாற் பெறப்படுவது யாது?

௧௭. திருவடிப்பேற்றின் கண்ணும் நிகழ்வது யாது? அதனால் விளைவது யாது? விளக்கி எழுதுக.

௧௮. 'அன்பு பிழம்பாய்த் திரிந்தவர்' யார்? அதனால் பெறப்படும் பொருள் யாது? விளக்கி எழுதுக.

௧௯. வேட்கை உற்றபொழுதே பெறுதற்கு விளக்கமும் எடுத்துக் காட்டும் எழுதுக.

௨0. முதல்வன் உடனிற்பினும் ஆவி உணராமலிருப்பதற்குக் காரணம் யாது? எடுத்துக்காட்டுடன் விளக்குக.

௨௧. ஆவிகள் அருளால் மாசகன்ற பின்னர் முன்னுள்ள உடம்புடன் காணப்படினும் மாசிலார் என்பதைக் காரணங்களுடன் விளக்கி எழுதுக.

௨௨. ஆவியின் மலம் அகலுதல் யார் செயலால்?

௨௩. வலித்து வசமாக்குதல் என்பதை விளக்கி எழுதுக.

௨௪. ஆவி ஆண்டான் திருவடியை எங்ஙனம் கூடும்? விளக்கி எழுதுக.

௨௫. சேடம் என்னும் சொற்பொருளை விளக்கி எழுதுக.

௨௬. வீடு பேற்றின்கண்ணும் ஆவிகளுக்கு ஆண்டான் உடைய துணை இன்றியமையாது வேண்டப்படுவதை விளக்கி எழுதுக.

௨௭. சிற்றறிவே முற்றறிவாம் என்பதை விளக்கி எழுதுக. உவமையும் காட்டுக.

௨௮. இந்நூற்பாவின்கண் உள்ள அதிகரணங்களாகிய கூறுகள் எத்தனை? அவற்றின் தொகைப் பொருள்கள் யாவை?

## [பன்னிரண்டாம் சூத்திரத்துள் அடங்கியன]

௧. பன்னிரண்டாம் நூற்பா எவற்றைப்பற்றிக் கூறுகின்றது? விளக்கி எழுதுக.

௨. தெளியக் கண்டு வழிபடல் என்பதை விளக்கி எழுதுக.

௩. வீடு பேற்றின்கண் ஆவிகளின் அறிவு அன்பு ஆற்றல்கள் எங்ஙனம் தொழிற்படும்? விளக்கி எழுதுக.

௪. பன்னிரண்டாம் நூற்பா எத்தனை கூறுகளையுடையது?

௫. ஊழ்வினை பயிற்சியான் வருங்கால் நிகழ்வன யாவை? நீக்கம் யாவை? விளக்கி எழுதுக.

கூறு: ௧.

௬. கான்மியம் மாயை ஆணவம் என்னும் மூன்றும் சிவஞானிக்காகா என்பதற்குக் காரணம் யாது? விளக்கி எழுதுக.

௭. வழிப்பேற்ற ஆவிக்குப் புறத்து முதற்கண் தொழிற்படும் பண்பு யாது?

௮. 'அஞ்ஞானத்தை உணர்த்தும்' என்பதன்கண் காணப்படும் உணர்த்தும் என்னும் சொற்குப் பொருள் யாது?

௯. மாறுபாட்டுணர்வு உண்டாகும் வகைகளை விளக்கி எழுதுக.

கூறு : ௨.

௧௦. ‘அல்லாதார் அஞ்ஞானத்தை’ உணர்த்துவது எங்ஙனம்? விளக்கி எழுதுக.

௧௧. ‘மெய்த்தவம்’ எனச் சிறப்பித்துக் கூறுவதற்குக் காரணம் யாது?

கூறு : ௩.

௧௨. ‘காண்டல்’ என்னும் சொற்குப் பொருள் யாது?

௧௩. முழுமுதல்வன் ‘நேசத்தார் தம்பால்’ எங்ஙனம் நிகழ்வன்? விளக்கி எழுதுக.

௧௪. திருக்கோவிலினிடத்து முதல்வன் யார்யார்க்கு எவ்வெவ்வகை யாக விளங்கியருள்வன்? விளக்கி எழுதுக.

௧௫. திருக்கோலம் மெய்யடியார்களை வசப்படுத்தும் முறை எங் ஙனம்? ஒப்பு யாது?

கூறு : ௪.

௧௬. ‘இனி இவ்விடங்களின் வழிபடுக’ என விதியாக அருளின மைக்குக் காரணம் யாது? விளக்கி எழுதுக.

௧௭. ‘அதுஇது’ என்னும் சொல் எத்தனைவகையாகக் கையாளப் பட்டுள்ளது? விளக்கி எழுதுக.

௧௮. ‘அன்பின்தொழு’ என்பதற்குப் பொருள் யாது?

௧௯. ‘பின்னை மறத்தல் பிழை’ என்பதன் பொருள் யாது? விளக்கி எழுதுக.

௨௦. ‘சிந்தைநேர் நோக்க’ என்பதன் பொருள் யாது? விளக்கி எழுதுக.

பொது :

௨௧. கன்மம் செய்யப்படுங்கால் பெறும் பெயர் யாது? அது பின் என்ன என்ன பெயர்களை அடையும்? பெயரும் விளக்கமும் தருக.

௨௨. மாயாமலம் என்று எதனைக் கூறுவது? விளக்கம் தருக.

௨௩. ‘பும்ஸ்சத்துவ’ மலம் என்று எதனைக் கூறுவது? விளக்கம் தருக. திருவள்ளுவநாயனார் இப்பாகுபாட்டினை எத்தனைவகையாக அடக்கியுள்ளார்? அதனை விளக்கும் திருக்குறள் யாது?

௨௪. மாறுபாட்டுணர்வு என்பது யாது? அவ்வுணர்வு தோன்றின் தொடர்ந்து என்ன என்ன நிகழும்?

௨௫. ஆணவமலத்தை வேறு எங்ஙனம் கூறுவர்?

௨௬. ஊழ்வினை பயிற்சிவயத்தான் எப்பொழுது தாக்கும்? அதற்குக் கூறும் ஒப்பு யாது?

௨௭. எம்முறையில் நிகழ்ந்தால் பிறவிக்கு வித்தாம்? அதனைவெல்லு வது எங்ஙனம்?

௨௮. மாயப்படையை வெல்லுவதற்குக் கூறும் வழிவகைகள் யாவை? அவற்றை விளக்கும் திருப்பாட்டுக்கள் யாவை?

௨௯. அடிமை பூணுதல் என்னும் சொல்லின் கருத்துப்பொருள் (தாற்பரியம்) யாது? அதற்குக் காட்டும் காட்டு யாது?

௩௦. ‘புண்ணியபாவம்’ என்று ஈண்டுச் சொல்லப்பெறுவது எதன் பூர்ச்சாரும்? அவற்றால் குறிக்கப்படும் பொருள்கள் யாவை?

௩௧. 'காண்மாயை' என்பது தொகையா? விரியா? எதன்பாற் படும்?

௩௨. 'மாயை இருவினை' முதலியன ஆண்டானால் தொழிற்படுத்தப் படுகின்றன என்பதற்குக் கூறும் காரணம் யாது? அவற்றை வலியுறுத்தும் ஆசிரியன்மார் யாவர்? அவர் கூறும் திருமொழிகள் யாவை?

௩௩. 'தற்போதம்' என்னும் 'சொல்லுக்'குப் பொருள் யாது? அதனால் என்ன என்ன விளைவுகள் உண்டாகும்?

௩௪. அஞ்சவேண்டுவது எதற்கு? எடுத்துக் காட்டுடன் எழுதுக.

௩௫. 'இணங்குதல்' என்னும் சொல்லுக்குப் பொருள் யாது? எடுத்துக் காட்டுடன் விளக்குக.

௩௬. 'அஞ்ஞானத்'தினும் மிக்க கொடுமையுள்ளது எது? எடுத்துக் காட்டுடன் விளக்கி எழுதுக.

௩௭. எல்லாவற்றினும் சிறந்தது எது? அதற்குக் காரணம் யாது?

௩௮. அல்லாதார் செவ்விவாய்ப்பச் செய்வதற்குக் காட்டும் காட்டு யாது?

௩௯. 'மகவெனப் பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப்பார்த்தல்' என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௪0. திருவருட்கண் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

௪௧. எதனை மறவாது கடைப்பிடித்தல் வேண்டும்?

௪௨. சிறப்பு என்பதற்குத் திருவள்ளுவ நாயனார் கொண்ட பொருள் யாது?

௪௩. மெய்யடியார் என்று சொல்லப்படுவார் யாவர்? பிறவிப்பெரும் பயன் எது?

௪௪. 'பத்தராய்ப்பணிவார்' என்னும் திருப்பாட்டில் என்ன என்ன பொருள்கள் வெளிப்படையாகவும்; குறிப்பாகவும் விளக்கப்பட்டுள்ளன? விரித்தெழுதுக.

௪௫. 'சிறப்பொடு பூசனைசெல்லாது' என்னும் தொடர் எதன்கண் உள்ளது? அதன் கருத்துப் பொருள் யாது? எடுத்துக் காட்டுடன் விளக்குக.

௪௬. 'மெய்த்தவம்' என்பது யாது? எடுத்துக் காட்டுடன் விளக்குக.

௪௭. 'திருவேடத்தையும் சிவாலயத்தையும்' எங்஡னம் கண்டு வழிபடுதல் வேண்டும்?

௪௮. தொல்காப்பியனாரும், திருவள்ளுவனாரும் உலகியல் முறைகளை எங்஡னம் வாய்மொழிந்தருளினர்? விளக்கம் தருக.

௪௯. உலகியலோடு ஒத்து நிகழ்தற்கண் சைவச் செந்நெறிக்கு இருக்கும் சிறப்பு யாது? விளக்கி எழுதுக.

௫0. 'நீறணிந்த கோலம் நெஞ்சம் பிணிக்கும்' என்பதன் கருத்தை விளக்கி எழுதுக.

௫௧. திருமணி எனக் கூறுவது எதனை? அதன் சிறப்பும் பிறவும் விளக்கி எழுதுக.

௫௨. திருமுறைவழிபாடு ஆற்றும்திறம் யாது? அதனைவலியுறுத்தும் திருப்பாட்டுக்கள் எவை? விளக்கி எழுதுக.

---

# அருஞ்சொற்பொருள் அகரவரிசை

**அகண்டாகாரம்** - கண்டிக்கப்படாத வடிவம்; பெருவெளி, வரம்பிலாமை.

**அங்கம்** - உறுப்பு.

**அங்கி** - முதல், உறுப்பி. ஓமித்தலும் தியானித்தலும் அங்கம். பூசித்தல் - அங்கி.

**அங்கித்தம்பனை** - தீயின் சூட்டைத் தடுத்தல்.

**அங்குரம்** - முளை.

**அசுத்தமாயை** - (தூவா மாயை) மலகன்மங்களோடு விரவி இன்பத் துன்பம் இரண்டும் பயப்பது. அசுத்த உலகிற்குக் காரணமாய் நிற்பது. சுத்தமாயையின் கீழாயடங்கி நிற்பது.

**அச்சு** - உடம்பு.

**அஞ்சனம்** - இருளாயிருப்பது.

**அஞ்ஞானம்** - விபரீத உணர்வு, அறியாமை.

**அடைவு** - முறைமை.

**அட்டபுட்பம்** - எண்வகைப் பூ. கொல்லாமை, ஐம்பொறி யடக்கல், பொறை, அறிவு, வாய்மை, தவம், அன்பு, இரக்கம் (அருள்).

**அணு** - சூக்கும உடம்பு, நுண்ணுடம்பு.

**அணுபரிணமம்** - அணு அளவு, பாஞ்சராத்திரிகள் உயிர் உடம்பிலே அணு அளவாய் நிற்கு மென்பர்.

**அணைந்தோர் தன்மை** - சீவன் முத்தர் (வீட்டுயிர், மெய்யடியார்) இயல்பு.

**அண்டம்** - உலகம்.

**அண்டன்** - சுட்டுணர்வின்றி நின்ற கடவுள்.

**அதிகரணம்** - நிலைக்களம்.

**அதிகார அவத்தை** - உலகத்தைப் படைக்கும் நிலை.

**அதிசூக்குமம்** - மிகுநுண்மை.

**அதிட்டான பக்கம்** - முதல்வன் குருவுருவை அதிட்டித்து நின்று உணர்த்துவன் எனக் கூறுதல். இதில் முதல்வன் உயிரில் பாலில் நெய்போல் மறைந்து நிற்பன்.

**அதிட்டிக்கப்படுதல்** - நிலைக்களமாகக் கொண்டு செலுத்தப்படுதல்.

**அதிட்டித்தல்** - நிலைக்களமாகக் கொண்டு செலுத்துதல்.

**அதிதீவிரம்** - மிக்க தீவிரம். மிகு விரைவு.

**அதிமார்க்கவினை**-யோகஞ் செய்தல்.

**அதீத அவத்தை** - துரியாதீதநிலை; உயிர்ப்படங்கிய நிலை பிராண வாயுவும் அடங்கியிருக்கிற நிலை.

**அதீதம்**-அப்பாற்பட்டது. கடந்தது, உயிர்ப்படங்கல்.

**அதோமாயை** - சுத்த மாயை (தூய மாயை)யின் கீழாயடங்கியுள்ள மாயை.

**அத்தன்** - இறைவன்.

**அத்தாணி மண்டபம்**-அரசிருக்கை மண்டபம்.

**அத்தியாசவாதம்** - இப்பியை வெள்ளியென்பதுபோல ஒன்றை மற்றொன்றாகக் கூறும் விபரீத வாதம்; திரிபு வழக்கு.

**அத்தியான்மிகவினை** - சிவபூசை முதலிய ஆத்மார்த்த (தன் பொருட்டாய) வழிபாடு.

**அத்துவா** - வழி.

**அத்துவிதம்** - இரண்டன்மை: வேறன்மை - வேற்றுமையின்றி நிற்றல்.

**அநத்தம்** - கேடு.

**அநிருவசனம்** - சொல்லொணாதது. அ - இன்மை, நிர்வசனம் - விசேடமாகச் சொல்லுதல்.

**அநுபலத்தி** - இல்லையென்னும் உணர்விற்கு விடய (புலன்) மாதல்.

**அநுபவம்**-நேர்விளக்கம், (நுகர்ச்சி) [Direct perception. Knowledge derived from personal observation or experiment.]

**அநுபூதி** - பிறபொருளின் உபகாரம் வேண்டாது தன்னியற்கையாற் பொருள்களை எதிருற்றுணரும் அறிவு, மெய்யறிவு.

**அநுவதித்து** - வழிமொழிந்து.

**அநுவாதம்** - வழிமொழிதல். முன்னர்ப் பெறப்பட்ட தொன்றனை மற்றொன்று விதித்தற் பொருட்டுப் பின்னரும் எடுத்தோதுதல்.

**அநேகாந்தவாதம்** - பல முடிவுகளைச் சொல்லுதல்.

**அநேகேசுரவாதி** - பல கடவுளர் உண்டென்போன்.

**அந்தகாரம்** - இருள்.

**அந்தக்கரணான்மவாதி** - உட்கருவிகளாகிய மனம் புத்தி அகங்காரங்களே உயிரெனக் கொள்பவன். மனம், அறிவு, முனைப்பு, நினைப்பு (சித்தம்).

**அந்ததரம்** - சித்தாந்தத்திற் சிறந்த ஒரு சொல்.

**அந்தப்புரம்** - அரசன் உரிமை மகளிர் உறையுமிடம்.

**அந்தரங்க வழிபாடு** - மானத வழிபாடு, உட்பூசை, அகத்து வழிபாடு.

**அந்தரம்** - வான்.

**அந்தரியாமி** - உண்ணின்று நடத்துவோன்.

**அந்நியநாத்தி** - வேறன்மை.

**அந்நியயோக வியவச்சேதம்** - பிறிதினியையு நீக்கல்.

**அபாவம்** - இன்மை; விளங்காமை.

**அபிமுகம்** - சந்நிதி, நேர்முகம்.

**அபுத்திபூருவம்** - அறியப்படாதது.

**அப்பிரமேயம்** - அளவைகளான் அளக்கப்படாமை.

**அப்பு** - தண்ணீர்.

**அயர்ச்சி** - மறதி.

**அயோகவியவச்சேதம்** - இயைபின்மை நீக்கல்.

**அரற்றி மலைந்தனர்** - சொல்லி மயங்கினர்.

**அரன்** - உயிர்களின் பாசத்தை அரிப்பவன்.

**அருக்கன்** - சூரியன்; பகலவன்.

**அருட்கேவலம்** - தத்துவங்களெல்லாம் அகன்றிட உயிர் இருளிற் பொருந்திய விழிபோல ஆணவத்தோடு நிற்றல்.

**அருத்தம்** - பொருள்.

**அருத்தாபத்தி** - பிறிதோராற்றாற் பெறப்படாமை பற்றித் துணியப்படுவது. பகலுண்ணான் ஆனால் பருத்திருப்பானொருவன் இரவிலுண்டான் என்பதிற்போல அனுமித்தல். (பொருட்பேறு.)
" பருகுவார் போலினும்
பண்பிலார் கேண்மை,
பெருகலிற் குன்ற லினிது."

**அருபசொருபம்** - அருவுடம்பாகிய தத்துவ வடிவம்.

**அருபம்**-அருவுடம்பு, உருவற்றது.

**அவசித்தாந்தம்** - தோல்வித்தானங்களுள் ஒன்று. அது தன் சித்தாந்தத்திற்குப் பொருந்தாதவைகளைச் சொல்லிச் சித்தாந்தம் நிலைநிறுத்தல்; பயனில் முடிவு.

**அவத்திதன்** - அவத்தையுற்றவன்.

**அவத்தை** - நிலை, பாடு, துன்பம்.

**அவத்தை 5**

(1) சாக்கிரம் - நனவு.
(2) சொப்பனம் - கனவு.
(3) சுழுத்தி - உறக்கம்.
(4) துரியம் - பேருறக்கம்.
(5) துரியாதீதம் - உயிர்ப்படங்கல்.

சாக்கிரத்துக்கு இடம் நுதல், இந்நிலையிற் தொழிற்படுங் கருவிகள் நடு: ஞானேந்திரியம் 5. கன்மேந்திரியம் 5. சத்தாதி 5. வசனாதி 5. வாயு 10. அந்தக்கரணம் 4. புருடன் 1.

சொப்பனத்துக்கு இடம் கழுத்து, கருவிகள் உரு: சத்தாதி 4. வசனாதி 5. வாயு 10: அந்தக்கரணம் 4. புருடன் 1.

சுழுத்திக்கு இடம் இதயம், கருவிகள் ந: புருடன் 1. பிராணன் 1. சித்தம் 1.

துரியத்துக்கு இடம் நாபி, கருவிகள் உ: புருடன் 1. பிராணன் 1.

துரியாதீதத்துக்கு இடம் மூலாதாரம், புருடன்.

**அவயவப் பதப்பு** - உறுப்பு உறுப்பாய்ப் பிரிக்கப்படுந் தன்மை,

**அவயவம்** - உறுப்பு.

**அவயவி** - அவயவம் உடையது, உறுப்பி.

**அவாந்தரகாரணம்** - இடைப்பட்ட காரணம்.

**அவாய்நிலை** - ஒரு சொல் தனக்கு எச்சொல்லின்றி வாக்கியப் பொருளுணர்ச்சி கூடாதோ அச் சொல்லை அவாவி நிற்றல்.

**அவிச்சை** - அவித்தை; அஞ்ஞானம். நில்லாதவற்றை நிலையின என்றும் அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும், தானல்லாத பொருளைத் தானென்றுங் காணும் புல்லறிவு.

**அவிச்சைக்காலம்** - அஞ்ஞானத்தை யுடைய பெத்த காலம். அறியாமையோடு கூடிய கட்டுநிலை.

**அவித்தை** - அஞ்ஞானஞ் (அறியாமை) செய்வது.

**அவிநாபாவம்** - பிரிவின்றி உடனிகழ்ச்சி, விட்டு நீங்காமை.

**அவிநாவிருத்தி** - விட்டுநீங்காத் தன்மையின் வளர்ச்சி.

**அவிப்பாகம்** - தேவருணவிற் பங்கு; வானோருணு.

**அறுவை** - வேட்டி, உடை.

**அற்புதம்** - சூனியம், பாழ்.

**அனந்ததேவர்** - அட்டவித்தியேசுரருள்ளே தலைவர்; அசுத்த மாயா தத்துவங்களைத் தோற்றுவிப்பவர். அழிவில்லாத தேவர் என்பது பொருள்; முடிவிலான்.

**அனந்தரம்** - பின். அனந்தரவாரிசு.

**அனன்னியம்** - வேற்றுமையின்மை, அத்துவிதம், அரன் கழல் சேரற்குளதாகிய இயைபு.

**அனுபவ உணர்வு** - ஆராய்ச்சி அறிவின்பின் நிகழும் நுகர்வு.

**அனுமான அளவை** - நேரே யறியப்படுவதன்றிச் சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்து நின்ற பொருளை அதனைவிட்டு நீங்காது யாண்டும் உடனாய் நிகழும் ஏதுவைக்கொண்டு கருதியுணர்தல்; புகையைக்கொண்டு தீயுண்மையை உணர்தல்போல்.

**அன்மொழித்தொகை** - வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மைத் தொகைகளோடு பிறமொழியுந் தொக்கு நிற்றல்.

"ஐந்தொகை மொழிமேற் பிற
தொகல் அன்மொழி."

**அன்றல்** - மாறுபடல்.

**ஆகந்துக மலம்** - இடையில் வந்து கூடும மாயை கன்மங்கள்.

**ஆகாமியம்** - பிராரத்தவினை நுகரும்போது வந்து சேரும் விருப்பு வெறுப்பு. இது மறு பிறவிக்கு விதையாகும். ஆகாமியவினை-நிகழ்வினை : ஏறுவினை.

**ஆசரித்தல்** - அனுட்டித்தல், பழகுதல்.

**ஆணவம்** - உயிரறிவை அணுத்தன்மைப்படுத்துவது.

**ஆதிதைவிகம்** - கருப்ப வேதனை, திரை மூப்பால் வருந்துயரம். இயமனால் வரும் மரணம் முதலியன. ஞானாமிர்தம் 19
தெய்வந்தானே காரணமாக வருவது.

"யானேதும் பிறப்பஞ்சேன்
இறப்பதனுக் கென்கடவேன்."

**ஆதிபௌதிகம்** - பூதத்தால் வரும் இன்பது துன்பம். குளிரால் வரும் நடுக்கம். மின் இடி முதலியவற்றால் வருவது.
ஞானாமிர்தம் 19
சடம் வாயிலாக வருவது.

**ஆத்தமானார்** - தோழர்.

**ஆத்தியான்மிகம்** - உடலாலுறு துயர்; மனக்கவலை முதலியன.
ஞானாமிர்தம் 19.
சடததோடுகூடிய சேதனம் வாயிலாக வருவது.

**ஆமா** - காட்டுப் பசு.

**ஆய்தல்** - நுணுகுதல், ஆராய்தல்.

**ஆய்ந்து ஆர்தல்** - நுணுகி வந்து கூடுதல்.

**ஆரவாரம்** - வெற்றொலி.

**ஆர்வலர்** அன்பு செய்யப்பட்டார்.

**ஆலய விஞ்ஞானம்** - இலயம்வரை நிற்கும ஓர் விசேட உணர்ச்சி.

**ஆவிருதி** - ஆன்மாவின் அறிவிச்சை செயல்களை மறைப்பது, இருள் மலம்.

**ஆவேசபக்கம்** - முதல்வன் சுத்தான்ம அறிவையே தனக்கு வடிவமாகக்கொண்டு தயிரில் நெய்போல் விளங்கி, குருவுருவை ஆவேசித்து நின்று, ஞானத்தை உணர்த்துவன் எனக் கூறுதல்.

**ஆவேசவாதி** - சிவன் ஆவேசித்தலால் சிவன் குணங்கள் முத்தான்மாவிடத்துத் தோன்று மென்று சொல்பவன்.

**ஆவேசித்தல்** — வெளிப்படுதல்; தெய்வம் ஏறுதல்.

**ஆறலைத்தல்** - வழிபறித்தல். ஆறு - வழி.

**ஆறுகோடி மாயா சத்திகள்** - ஆறு வகையான மாயாசத்திகள் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம். (அவா, வெகுளி, பற்றுள்ளம், மருள், செருக்கு, பொறாமை.)

**ஆறுசென்றவியர்** - வழிநடந்ததனு ஞய வியர்வை.

**ஆற்றல்**-சொற்குப் பொருளோடுள தாகிய இயைபு.

**ஆனந்தரியம்** - இவை யாராய்ந்த பின் இது கேட்கற்பாற்று என்னும் யாப்பு.

**ஆனைமை** - நீங்காமை.

**ஆன்மசுத்தி** - தன்செயல் நீங்கித் திருவருட் செயலில் அடங்கல், தன்பணியை நீத்தல்.

(சிவப்பிரகாசம்)

**ஆன்மசைதன்னியம்**-ஆன்ம அறிவு.

**ஆன்மதரிசனம்** - பாசம் நீங்க மெய் யுணாவுபற்றித் தனது சிறப்பியல்பு உணர்தல்.

'பாசமதகல ஞானம் பற்றல்'

(சிவப்பிரகாசம்)

**ஆன்மப் பிரகாசம்** - ஆன்ம விளக்கம்.

**ஆன்ம லாபம்** - இறைவன் அத்துவிதமாய் நின்று உபகரித்துவரும் பெருங் கருணையை நினைந்து நேயத்தழுந்தல்.

"தேசுற மருவும் ஆன்ம
தரிசனம் ஆன்ம சுத்தி
ஆசிலா ஆன்ம லாபம்
ஆகமூன் றாகும் மூன்றும்
பாசம தகல ஞானம்
பற்றல்தான் பணியை நீத்தல்
ஏசில் நேயத் தழுந்தல்
எனுமிவற் றடங்கு மன்றே."

**ஆன்மா** - வியாபகம்; சித்தசித்து; உயிர்.

**ஆன்மாச்சிரயம்** - தன்னைத்தான் அடுத்திருத்தல். (Abstract knowledge independent of the thing to be known.)

**ஆன்மிக கருடன்** - கருட மந்திரத்தின் இடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன்கொடுக்கும் சிவசத்தி.

**ஆன்மிகம்** - அறிவு சம்பந்தம்.

**இகலல்** - பகைத்தல்.

**இங்கு** - காயம்.

**இங்குளி** - காயம். உளி ஐந்தாம் வேற்றுமை உருபுபட நின்றது.

**இடர்ப்படுத்தல்**-ஆற்றலைக் குறைத்தல்.

**இடவழுவமைதி** - ஓரிடத்திற்குரிய சொல மற்றொரு இடத்திற்கு வருவது. வருசொல் படர்க்கையின் வருதல் இடவழுவமைதி. வருசொல் தன்மை முன்னிலைக்கே உரியது.

'மருவுவன் ஞானத்தை வந்து'
இடவழுஅமைதி.

"அவற்றுள், தருசொல் வருசொல் லாயிருகிளவியுந் தன்மை முன்னிலை யாயிரிடத்த."

**இடை**-இடமூக்கில் நிற்கும் நரம்பு.

**இதஞ்செய்தல்** - பற்றுசசெய்தல்.

**இந்தனம்** - விறகு.

**இந்திரியான்மவாதி** - ஐம்பொறிகளே உயிரெனக் கொள்பவன்.

**இரட்டுறமொழிதல்** - ஒரு வாக்கியத்தை இரண்டு பொருள்படச் சொல்லுதல். முப்பத்திரண்டு உத்திகளில் ஒருத்தி.

**இரணிய கருப்பமதம்** — பிரமாவையே பரம்பொருள் எனக் கொள்ளும் சமயம்.

**இரணிய கருப்பன்**-பிரமன்; அயன்.
**இரித்தல்** - பற்றறக் களைதல்.
**இருமடி ஆகுபெயர்** - இருமுறை ஆகுபெயராதல்.
கார் வந்தது - கார் என்னும் சிறப்பெயர் மேகத்திற்காய் - மேகததின் பெயர் அது பெய்யும் பருவத்திற் காதல்.
**இருவகை யஞ்சவத்தை** -
(1) ஆன்ம தத்துவங்கள் கூடுதலும் நீங்குதலும்பற்றி நிகழும் நிலை.
(2) விடயங்களை நுகர்வுழி பிரேரகக் கருவிகளின் தொழிற்பாடுபற்றி நிகழும நிலை.
பிரேரகம் - ஏவுதல்.
**இருவினை யொப்பாவது** - ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலின்றிப் புண்ணியபாவ மிரண்டினும் அவற்றின் பயன்களாகிய இன்பத் துன்பங்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து விடுவோனது அறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறு ஒப்ப நிகழ்தல்.
**இலக்கணம்** - இயல்பு.
**இலக்கு** - அவகாசம், ஒழிவு.
**இலயம்** - ஒடுங்குதல்.
**இலயித்தது** - ஒடுங்கியது.
**இலாடம்** - நெற்றி.
**இழை** - நூல்.
**இறந்ததுதழீஇ நிற்றல்** - முன் நிகழ்ந்ததைத தழுவிநிற்றல்.
**இறை** - விடை.
**இறைபணி**-அவனருளால் அல்லது ஒன்றையுஞ் செய்யாளுதல்; உயிர் செய்வன எல்லாம் இறைவன் அருளின்வழி நின்று செய்தல்.
**ஈசுரவவிகாரவாதி** - சித்தாகிய உயிர் முதல்வன் உபகாரத்தை நாடின், முதல்வனும் பிறிதொன்றன் உபகாரத்தை அவாவுவன். அதுபற்றி விகாரமடைவான். ஆதலின் உயிர் முதல்வனுபகாரத்தை நாடாது எனக்கொள்ளும் அகச்சமயத்தார்.
**உடம்படுப்பித்தல்** - உடம்படச் செய்தல்.
**உடம்பொடு புணர்த்தல்**- ஓர் உத்தி.
அஃது ஒரு பொருளைச் சொல்லத் தொடங்கிய தொடரிலே பின்னுமொரு பொருள் தோன்றச் சொல்லுதல். கருத்துடையடைபோல வைத்து ஒன்று கூறும்போது வேறொரு பொருளையும் அதன்பாற் புணர்த்தி வைத்தல்.
**உத்தியுத்தன்** - உன்முகமானவன்; முயன்றவன்.
**உத்தேசம்** - பெயர் மாத்திரையான் எடுத்தோதுதல்.
**உந்துதல்** - கடைதல்.
**உபசார வழக்கு** - ஒரு மொழியை அது குறிக்கும் முக்கியப் பொருளுக்கன்றி அதனோடு இயைபுடைய பொருளுக்கு வழங்குவது. (Secondary application opposite to importance.)
**உபதேசம்** - அறிவித்தல்.
**உபதேசி** - அறிவிக்க அறியுந் தன்மைத்து.
**உபராகம்** - கிரகண காலம்.
**உபலக்கணம்** - இனப்பொருளையும் இணைததுக்கொள்ளுதல்.
**உபலத்தி**-உள்ளது என்னும் உணர்விற்கு விடயமாதல்.
**உயிர்க்குச் சிறப்பிலக்கணமாவது** - சிவசத்தியினியல்பு தன்மாட்டு விளங்கச்செய்து நிரதிசய இன்பம் நுகர்தல்
**உயிர்க்குப் பக்குவமாவது** - அறிவித்தவாறே அறியுஞ் செவ்வியுடைத்தாதல்.
**உயிர்க்குப் பொது இயல்பாவது** - அந்தக்கரணங்களோடு கூடி நின்று அஞ்சவத்தைப்படுதல்.
**உயிர்த்தல்** - சுவாசித்தல், மூச்சு விடுதல்.
**உரா** - பரந்து திரிதல்.
**உராத்துனைத் தேர்** - ஊரப்படாத வேகத்தையுடைய பேய்த்தேர்.
**உருபு மயக்கம்** - ஒரு வேற்றுமை உருபு மற்றொரு வேற்றுமைப் பொருளில் வருதல்.
**உரை** — வாயினுற் சொல்லுதல் (மானதம், மந்தம், உரை).

**உரையளவை** - ஆகம அளவை; நூற்பிரமாணம்.

**உலகவினை** - கூவல், தண்ணீர்ப் பந்தல் முதலியன வைத்தல்.

**உலகாயதம்**-காட்சி வாதம்; காண்டலளவை ஒன்றே பிரமாணம். காணப்படும் நிலம் நீர் தீ வளியென நான்கே தத்துவங்கள். இவை நித்தியம். உடம்பிற்கு வேறாக உயிரில்லை. கடவுளும் பொய்; இருவினையும் பொய்; இம்மையில் மங்கையரை மணந்து உண்டுடுத்து வாழ்வதே இன்பம்; வீடுபேறுண்டென்பதும் பொய் எனக் கூறும் புறப்புறச் சமயம்.

**உலைவு** - கேடு.

**உவமேயம்** - உவமானத்தால் விளக்கப்படுவது. புகழ்பொருள்.

**உவர்ப்பு** - வெறுப்பு.

**உழவாரம்** - புற்செதுக்கி.

**உள்அடைவு** - அனுபவித்தற்கேதுவான முறை. உள்ளுதற்கேதுவான அடைவு.

**உள் அந்தக்கரணம்** - கலை, வித்தை, அராகம், காலம், நியதி. (காலம், ஊழ், கலை, நினைப்பு, விருப்பு.) புற அந்தக்கரணம் - மனம், புத்தி, சித்தம்; அகங்காரம். (மனம், அறிவு, நினைவு, முனைப்பு.)

**உள்ளத்தைக் காட்டல்** - உள்ளத்துக்குக் காட்டல். இரண்டனுருபு நான்கன் பொருளின் வந்தது.

**உற்பத்திவாதி** - சிவனுடைய குணங்கள் மூத்தான் மாவினிடத்துத் தோன்றுமென்று சொல்பவன்; மாவிரத சமயி.

**உன்மத்தர்** - அறிவு மயக்கமுடையோர்.

**உன்முகம்** - எழுச்சி.

**ஊர்த்துவமாயை** - மேல் மாயை.

**ஊறு** தொட்டாலுணரும் உணர்ச்சி.

**ஊனக்கண்** - குறையுணர்வு.

**எஞ்சாப் பொருண்மை** - மிஞ்சாமையாகிய பொருள். ஈண்டு, மை விகுதி தன்மைப்பொருள் உணர்த்தாது நின்றது.

**எஞ்சுதல்** - குறைதல்.

**எடுத்துக்காட்டுவமை** - உவமான உவமேயங்களைத் தனித்தனி வாக்கியங்களாகக் கூறி, உவம உருபின்றி இரண்டிற்குமுள்ள பொதுத்தன்மையைக் குறிப்பாலுணர்த்துவது.

**எதிரதுதழீஇ நிற்றல்** - பின்வரும் பொருளைத் தழுவிநிற்றல்.

**எதிர்மறைமுகம்** - எதிர்மறுத்தலாகிய வாயில்.

**ஏகதேச உருவகம்** - ஒரு பாகத்தை உருவகஞ்செய்து மற்றைப் பகுதியை உருவகஞ் செய்யாது விடுதல்.

**ஏகதேசப்பட்டு** - சுருங்கி.

**ஏகதேசம் × வியாபகம்.**

**ஏகாநேகம்** - ஒன்றும் வேறும்.

**ஏதம்** - குற்றம்.

**ஏய்தல்** - பொருந்துதல்.

**ஏலாமை** - பொருந்தாமை. இயையாமை.

**ஏற்புழிக்கோடல்** - ஓர் உத்தி. இடத்துறங்கேற்பப் பொருள் கூறுதல்.

**ஐக்கியவாதம்** - நீரும்நீரும் சேர்தல் போல உயிரும் சிவமும் ஒன்று சேரும் எனக்கொள்ளும் சமயம்.

**ஒட்டு** - பிறிதுமொழிதல் அணி.

'கருதிய பொருள் தொகுத்து
அது புலப்படுதற்கு
ஒத்தொன் றுரைப்பின் அஃது
ஒட்டெனமொழிப'

கவி தான் கருதிய பொருளை மறைத்து அதனை வெளிப்படுத்தற்குரிய பிறிதொன்றைச் சொலவது.

**ஒருதலை** - நிச்சயம், உறுதி.

**ஒருபொருட் பன்மொழி**-ஒருபொருளில் வருகிற பல சொற்கள். மீமிசை ஞாயிறு, குழிந்தாழ்ந்த கண் என்பனபோல.

**ஒருமைப் பன்மை மயக்கம்** - ஒருமைப்பாலிற பன்மைச்சொல் லைத் தழுவிக் கூறுதல். திருவீழிமிழலை வீற்றிருந்த, கொற்றவன் றன்னைக்கூற என் **கண்குளிர்ந்தனவே.**

**ஓரிரவெல்லாந் தூங்குமழல்வ ராம்.**

'இருநோக்கு இவளுண்கண் உள்ளது.'
**ஒருவ** - நீங்க.
**ஒழிபு** - மிச்சம்.
**ஒன்றுதல்** - மனம் ஒருங்கி ஆராய்தல், பொருந்துதல்.
**ஒத்து** - ஓதப்பட்ட விதி, இயல்.
**ஓமித்து** - ஓமஞ்செய்து, வேட்டு
**கஞ்சுகம்** - சட்டை, போர்வை.
**கஞ்சுகம்போலும் கலாதிகள்** - கலை, காலம், வித்தை, அராகம், நியதி. இவ்வைந்தும் ஆன்மாவினுடனாய்க் கஞ்சுகம்போற் பந்தித்து நிற்றலின் பஞ்ச கஞ்சுகம என்று கூறப்படும். இவை வினைக் கருவிகள் போல் அவத்தைப்படுதற் கேதுவாய்க் கூடுதலும் நீங்குதலுமில்லை.
(காலம், ஊழ், கலை, நினைப்பு, விருப்பு.)
**கடல்** - நீர்க்கு இடங்கொடுத்து நிற்கும் வெளி.
**கடவுள்** - தத்துவங்களைக் கடத்தல்; தத்துவாதீதன்.
**கடா** - வினா.
**கட்டுரை** - புனைந்துரை.
**கணித்தல்** அறிவால் எண்ணுதல்.
**கண்கூடு** - பிரத்தியக்கம், தெளிவு.
**கண்டம்** - கழுத்து, மிடறு.
**கண்ணழித்தல்** - பிரித்தல்.
**கண்ணழித்துரைத்தல்** - சூத்திரத்தின் பொருட்கூறுகளைப் பிரித்து வினாவிடைகளாக உரைக்கும் அகல உரை.
கண்ணழித்துரைக்கும் வாார்த்திகப் பொழிப்பு (Analytic Method.)
பிண்டப்பொழிப்பு - (Synthetic Method.)
**கண்ணிருள்** - கருதியுணரப்படும் அகஇருளாகிய ஆணவமலம்.
**கண்ணுதல்** - கருதுதல்.
**கண்படை** - உறக்கம்.
**கதம்** - சீற்றம்.
**கதி** 4. தேவகதி, மக்கட்கதி, விலங்கின் கதி, நரகர் கதி.
**கதி** - பிறப்புவகை.
**கந்தித்தல்** - நாறுதல், மணத்தல்.
**கப்பு** - கவர்ச்சி, பிரிவு.
**கரணம்** - கருவி.
**கருமமலம் பரிபாகமாதல்** - இருவினைகள் தத்தம் பயன்களைத் தோற்றுவித்தற்குரிய துணைக் கருவிகள் எல்லாவற்றோடுங் கூடுதல்.
**கலைகள் 5**
1. நிவிர்த்திகலை - பிருதிவி தத்துவத்தை அடக்கிநிற்பது.
2. பிரதிட்டா கலை - அப்பு தத்துவ முதல் மூலப்பகுதி யீறாகிய இருபத்துமூன்று தத்துவங்களையும் அடக்கி நிற்பது.
3. வித்தியா கலை - புருடதத்துவ முதல் அசுத்தமாயை ஈறாகிய புருடன், அராகம், நியதி, வித்தை, கலை, காலம், மாயை ஆகிய ஏழு தத்துவங்களை அடக்கி நிற்பது.
4. சாந்தி கலை - சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம் (தூய நினைவு, தலைமை, அருள்நிலை) என்னும் தூய மாயையின் கண்ணுள்ள மூன்று மெய்(தத்துவங்)களை உள்ளடக்கி நிற்பது.
5. சாந்தியதீத கலை - சத்தி, (அன்னை) சிவம் (அத்தன்) இரண்டு மெய்களை உள்ளடக்கி நிற்பது.
**கவுணியக்கன்று** - திருஞான சம்பந்தர், ஆளுடைய பிள்ளையார்.
**களைகண்** - பற்றுக்கோடு, புகல்.
**கறங்கோலை** - காற்றாடி.
**காட்டம்** - விறகு.
**காட்டாக்கின்** - விறகினின்று தீ தோன்றுமாறுபோல்.
'விறகிற்றீயினன் ..........முறுக வாங்கிக்கடைய முன்னிற்குமே.'
**காண்டல்**-ஐயுறவின்றித் தெளிதல்.
**காட்டு** - விளக்கம்.
**காமக்கிழத்தியர்** - இன்பத்திற்கு உரிமையுடையோர்.
**காமிகம்** - சைவாகமம் இருபத்தெட்டுள் ஒன்று.
**காமியப்பயன்** - விரும்பிய பேறு,
**காமுகர்** - காமமுடையவர்,

**காரணாவத்தை** - காரியத்துக்கு முற்பட்ட அருவநிலை.

**காரியப்பிரபஞ்சம்** — மாயையின் காரியமாகிய உலகம்.

**காரியாவத்தை** - உருவாக உண்டாக்கப்பட்ட நிலை.

**காலம் முதல் நிலம் ஈறாகிய தத்துவங்கள்** - அசுத்தமாயா தத்துவம்: காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை, (மூலப்பகுதி) குணதத்துவம், புத்தி, அகங்காரம், மனம், மெய், வாய், கண், மூக்கு, செவி, வாக்கு, பாதம், பாணி பாயுரு, உபத்தம், ஒளி, சுவை, ஊறு, ஓசை, நாற்றம், வான், வளி, தீ, நீர், நிலம்.

**காலாந்தரம்** - கால முடிவு.

**கான்மியம்** - மூலவினையின் காரியமாகிய புண்ணிய, பாவம்.

**கிரந்தி** - முடிச்சு.

**கிரீடாப்பிரமவாதம்**-பிரமமே நான். யான் ஒருபடித்தன்றிப் பலவேறு வகைப்பட்ட விகாரப் பொருள்களோடுகூடிப் பலவாற்றான் விளையாடுகின்றேன். இவ்வாறு அறிவதே முத்தி எனக் கொள்ளும் சமயம்.

**குடாகாய உவமை** - குடம் உடைந்தவழி, குடத்துள் வெளி, புறவெளியுடன் சேர்தல்போல் சூக்கும உடம்பு அழிந்த முத்திநிலையில் உயிர் இறைநிறைவிற் சேர்ந்தடங்கும்.

**குடாகாயம்** - குடத்துள்வெளி.

**குண்டலி** - ஒரு வாயு. குண்டலித்தானம் - நாபி. உந்தி.

**குரம்பை** - சிறுகுடில்; குச்சில்; உடம்பு.

'கால்கொடுத்திருகை யேற்றிக்
கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற்
சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத்தா அமைத்தங்
கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார்
மாமறைக் காட னாரே.'

'பொருந்திய குரம்பை தன்னுட்.
பொய்ந்நடை செலுத்துகின்றீர் !
—திருநாவுக்கரசர் தேவாரம்'

'நீக்கி முன்னெனைத்
தன்னொடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து.'
—திருவாசகம்.

**குறிப்பெச்சம்** - குறிப்பான் எஞ்சிநின்ற பொருளை உணர்த்துவது. 'இளைதாக முண்மரங்கொல்க களையுநர், கைகொல்லுங் காழ்த்த இடத்து' என்புழித் 'தீயாரைக் காலத்தாற் களைக' எனவந்த தொடர்மொழி எச்சமாய் நின்ற குறிப்புப் பொருளை வெளிப்படுத்தலாற் குறிப்பெச்சம்.
—தொல். சேனாவரையம்.

**குறிப்பேது** - ஏதுப் பொருளைக் குறிப்பாகக் காட்டி நிற்பது.

**குறுக்கல் விகாரம்** - நெட்டெழுத்தைக் குற்றெழுத்தாக மாற்றல். ஊரா - உரா.

**குறை** - இன்றியமையாப் பொருள்.

**குற்றி** - சிறுகுடுவை ; சிறுபானை.

**கூட்டரவு** - கலப்பு.

**கூவல்** - கிணறு.

**கேசரம்** - பூங்கூந்தல், பூந்தாது (பூந்துகள்) தாமரைப் பொகுட்டின் புறத்தே தொங்குமவை.

**கேவலம்** - உயிரானது அறிவு செயல்களின்றித் தனியே ஆணவ மலத்தான் மறைந்து நிற்கு நிலை. உயிரின் அறிவு, இச்சை, செயல்கள் சிறிதும் நிகழாது உயிர் மாத்திரையே உளதாதல்.

**கைக்கொள்ளுதல்** - உடன்படல் (அங்கீகரித்தல்).

**கொண்மூ** - முகில், மேகம், எழிலி.

**கொத்து** - கூட்டம்.

**கோசரிப்பது** - விளங்குவது, விடயமாதல், புலனுதல்.

**கோட்டம்** - ஒருபாற் கோடுதல், முறைவழு, அநீதி.

**கோதண்டம்** - புருவநடு.

**சகசமலம்** - காரணமின்றி அநாதியே உயிருடன் சேர்ந்துள்ள இருளாகிய ஆணவமலம், உடன்

தோன்று மலம், ஒன்றி நிற்கு மலம்.

**சகத்தவர்** - உலகத்தவர்.

**சகம்** - நிலஉலகம்.

**சகலம்** - உயிரின் அறிவு, விழைவு, (இச்சை) செயல்கள் தனுகரணாதியோடுங் கூடி ஒருபுடை விளங்கும் நிலை.

**சகலர்** - மலம், கன்மம், மாயையாகிய மூவகைப் பந்தங்களோடுங் கூடியவர். இவர்க்கு இடம் மூலப் பகுதி முதல் நிலம் முடிய. முதல்வன் இவர்களுக்குப் படர்க்கையில் குருவுருவை ஆவேசித்து நின்று ஞானத்தை உணர்த்துவன்.

ஆவேசம் - தெய்வம் ஏறல்.

**சகன்** - நிலஉலகிலுள்ள குரவன்.

**சங்கமம்** - இயங்கியற் பொருள்.

**சங்கமவடிவு** - சிவபத்தர் வடிவம்.

**சங்கற்பித்தல்** - எண்ணுதல், நினைத்தல், சங்கற்பமாவது இப்பொருள் யாதாகற்பாற்று என ஒன்றன் குணங்களைத் தூக்கிச் சிந்தித்துப் பின்னர் இது குடமாகற்பாற்று ஆடையாகற்பாற்று என,ஒன்றனை நினைக்கும் நினைவு. இஃது இவ்வாறாக என எண்ணுதல்.

**சங்காரத் தொழில்** - அழித்தல் தொழில்

**சங்கிரமித்தல்** - கலத்தல்.

**சங்கேதம்** - சொறகும் பொருட்கு முளதாய நியம ஆற்றல்.

**சச்சிதானந்தம்** - உண்மையறிவு இன்பம்.

**சஞ்சிதவினை** - முற்பிறவிகளில் ஈட்டப்பட்டுப் புத்தி தத்துவத்தும், பேரொடுக்கத்தில் மாயையிலும் கிடக்கின்ற வினை. அது தீக்கையால் எரிசேர்ந்த வித்துப்போலறும்.

**சட்ட** - செம்மை, அகர ஈற்றிடைச் சொல். சட்டம்-சட்ட என்பதன் மரூஉ.

**சதசத்து** - சத்துப் பொருளாகிய சிவத்திலும் அசத்துப் பொருளாகிய பாசத்திலும் சார்ந்த வண்ணமாய் அடங்கித் தோன்றும் உயிர்.

**சதனம்** - இலை, உறை.

அதச்சதனம் - கீழிலை.

ஊர்த்துவச்சதனம் - மேலிலை.

**சதுரப்பாடு** - வல்லமை, சாமர்த்தியம்.

**சத்தன்** - சுத்தமாயையின் காரியங்களை ஒடுக்கி யிருப்பவன்.

**சத்திகள் 3 வகை:** ஆரணி, ஜெனனி, இரோதயித்திரி.

**சத்திகள் 5 வகை:** ஈசானி, பூரணி, ஆர்சதி, வாமை, மூர்த்தி.

**சத்திகள் 8 வகை** வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வ பூததமனி.

**சத்திநிபாதம்** - அருளினது வீழ்ச்சி.

சத்தி - அருள். நி - ஏற்றமான. பாதம் - வீழ்ச்சி.

ஓர் அவைக்களத்தின் நடுவே உயரேயிருந்து ஒரு கல் வந்து வீழ்ந்தால், அவ்வீழ்ச்சி அவ்வவைக் களத்துள்ளாரை ஆண்டு நின்றும் அகல்விக்கும். அது போலச் சத்திநிபாதம் நிகழ்ந்த மாத்திரையே அஃது அவ்வுயிரை மனைவி மக்கள் முதலிய உலகத் தொடர்பின் அச்சம் நிகழ்ந்து அவ்வுலக வாழ்க்கையினின்று வெரீஇப் போந்து உண்மைக் குரவனை நாடிச் செல்லுமாறு செய்விக்கும்.

**சத்திநிபாதம் 4 வகை:** மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்.

**சத்து** - உள்பொருள்.

அசத்து - காரிய ரூபத்தில் தோன்றி விரைவிற் காரண ரூபத்தில் மறைந்து போகும் பொருள்.

சத்தியுடைய பொருள்: சத்தம். (அஃதில் பொருள் அசத்தம்.) அம்கெட்டு சத்து அசத்து என்றாயது.

**சந்நிதி** - சிவசத்தி எழுச்சியாகிய சங்கற்பம்.

**சந்நிதி மாத்திரையான்** - முன்னிற்றல் மாத்திரையான்.

**சமய தீக்கை** - சமய நுழைவைப் பயக்குந் தீக்கை.

**சமயமாவது** - நூல்களில் வரையறுத்துக் கூறப்பட்ட சிறந்த பேற்றினுக்கு அநுகூலமாகிய பொருள் நியமனமேயாம்.

சமயம் என்பது நியமித்தலும், நியமித்தற் கருவியும், நியமிக்கப் பட்டதுமாம். நியமித்தல் என்பது வரையறுத்தலும், துணிதலும், உடன்படலும், விதித்தலும், கட்டுதலுமாம்.

சம் உபசருக்கம். அய் - உணர்தல். அ என்னும் விகுதி தொழிற் பொருளும் கருவிப் பொருளும், செயப்படுபொருளுங் குறிப்பது. சமயமாவது குறித்த பொருளை அடைவிக்கும் வழி போலுதலின் மார்க்கம் என்ற பெயர் பெறும். (சைவப்பிரகாசனம்.)

**சமவாயம்** - நீக்கமின்றி நிற்றல்.

**சமவேதம்** - பிரிப்பின்றி இணைந்து நிற்றல். [Inseparably connected )

**சமாதி** - எண்வகை யோகத்தொன்று. இந்திரிய முதலிய தத்துவச் சேட்டைகட் கேதுவாய யாக்கையுணின்று அவற்றோடு கூடினும் அவற்றிற் பற்றின்றியிருக்கும் உயிர் தன்னைக் காண்டல்.

**சமுதாயம்** - கூட்டம்.

**சமுகான்மவாதி** - உடல் முதலிய எல்லாக்கருவிகளின் கூட்டமே உயிர் எனக்கொள்பவன்.

**சரதம்** - உண்மை.

**சருவ வியாபி** - எங்கும் நிறைந்தவன்; குறைவிலா நிறைவோன்.

**சர்வஞ்ஞானோத்தரம்** - எல்லா ஆகமங்களினும் சிறந்த ஆகமம்.

**சலம்** - வஞ்சனை, கோட்டம்.

**சவிகற்பம்** - ஒரு பொருளின் பெயர், இனம், தன்மை, செயல், பயன் ஆகிய ஐந்தினையும் பகுத்தறிதல்.

**சற்காரிய வாதம்** - உண்டாதற்கு முன்னுங் காரியம் காரணத்தில் உள்ளது எனக்கோடல்.

**உள்ளாக்க வழக்கு** - உள்ளது காரியப்படும் எனச் சொலவது.

**சனகம்** - காரணமாய் நின்று உடம்பு முதலியவைகளைப் பிறப்பிப்பது.

**சாக்கிரம்** - விழிப்புநிலை, நனவுநிலை, நனவு.

**சாங்கிய மதம்** - மூலப்பகுதி, நித்த வியாபகப் பொருள். ஆன்மாக்களுக்கு வேறாய் இறைவன் ஒருவன் உண்டென்பது பொய்; புத்தி தத்துவமே விடயங்களை அறியும்.

**சாதகம்** - கருவி.

**சாதனம்** - தொழிலைப் பயப்பிக்கும் முக்கிய காரணம்.

**சாதாரம்** - ஆதாரத்தோடு கூடியது.

**சாதித்தல்** - வலியுறுத்திக் கூறல்.

**சாதியொருமை** - ஒருசொல் ஒருமையீறு தோன்றியாவது தோன்றுமலாவது நின்று பன்மைப் பொருளை உணர்த்துவது; ஓரினப் பொருளை ஒருமையிற் கூறல்.

**சாந்தி கலை** - அநுபவ அறிவுபெற்ற உயிர்கட்கு விருப்பு வெறுப்புச் சங்கற்பம முதலிய எல்லாத் துன்பங்களும் சாந்தமாகச் செய்யும் சிவசத்தி. அச் சத்திக்கிடமாகிய சுத்தமாயையின் விருத்தி. சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம் என்னும் மூன்று தத்துவங்களையும் அடக்கி நிற்பது.

**சாந்தியதீதகலை** - சாந்தமாய் நின்றதும் ஒழியச்செய்யும் சிவசத்தி. அச்சத்திக் கிடமாகிய சுத்தமாயா விருத்தி.

**சாந்தியாதீத கலை** - சத்தி தத்துவம் சிவதத்துவமாகிய இரண்டு தத்துவங்களை அடக்கி நிற்பது.

**சாயாக்கிரகம்** - நிழல்.

**சார்ச்சி** - சார்தல்.

**சார்ந்ததன் வண்ணம்** - சேர்ந்த பொருளின் தன்மை.

**சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்** -

'தன்னை யடைந்தார்
வினைதீர்ப்ப தன்றோ
தலையா யவர்தங்

கடனு வதுதான்.'
—தேவாரம்.

**சாலம்பம்** - ஆதாரத்தோடு கூடியது.

**சானம்** - தியானம் என்ற மொழியின் பிராகிருதச் சிதைவு.

**சான்று** - சாட்சி; கரி.

**சிங்கநோக்கு** - முன்னும் பின்னும் பார்க்கின்ற அரிமாவின்பார்வை.

**சிதசித்து** - விளக்கம் உள்வழி விளங்குவதும் விளக்கம் இல்வழி விளங்காததுமாகிய அறிவுடைய உயிர்.

**சித்தசாதனம்** - ஓரிடத்து முடிவு கட்டற்குரிய பொருளை மற்றோரிடத்துங் கூறுதல்.
பரனுடம்பட்டதாய்ச் சித்தித்ததனை மறித்துஞ் சாதித்தல்.

**சித்தம்** - (பௌத்த நூலில்) உருவக்கந்தம். சித்தப்பகுதி வேதனை, ஞானம, குறி, வாசனை. இவ்வைந்தும் அகச் சமுதாயம். (3-ம் சூத்திரம் 7-ம் அதிகரணம்.)

**சித்தாந்த மகா வாக்கியம்** - சிவத்துவமசி.

**சித்தாந்தம்** - முடிந்த முடிபு. சித்தாந்தம் ஒன்றுதான் சித்தாந்தமாகும். அஃதாவது முடிந்த முடிபாகும். மற்றவையெல்லாம் பூர்வ பக்கங்களேயாம் சிவன் ஒருவன்தான் ஆப்தன். ஏனையோர் சிவத்தன்மை இல்லாதவர்கள் என்று கொள்ளப்பட்டிருக்கின்றனர்.
—இரத்தினத் திரயம் 11.
சிவாகமங்கள் முடிந்த முடிபாயிருத்தல்பற்றியும் சித்தாந்தமெனை இடுகுறியாய் வழங்கப்படுதல் பற்றியும் காரண இடுகுறியாகச் சித்தாந்தமென வழங்கப்பட்டன.

**சிந்திதன்** - சிந்தனைக்கு எட்டுபவன். (அசிந்திதன் - சிந்தனைக்கு எட்டாதவன்.)

**சிந்தித்தல்** - ஆசிரியன் முகமாகக் கேட்ட பொருளைச் சிந்தித்து ஐயம் நீங்க ஆராய்தல்.

**சிவசங்கிராந்த வாதி** - தனுகரண புவன போகஙகளுள் ஒன்றாகிய காரணம் பெத்தநிலையில் ஆன்ம சந்நிதியில் அசத்தை அறியும். முத்திநிலையில் சிவசந்நிதியில் கண்ணாடியின் நிழலுண்டாதல் போல அறிவினைக் கலக்கும் எனக்கொள்பவன்.

**சிவசத்து** - சித்தாகிய உள்பொருள். எவ்வாற்றானும் சத்தாகிய உள்பொருள் சிவம்.

**சிவசமவாதி** - முத்தி நிலையில் உயிர் சிவனுக்கு ஒப்பாகிச் சிவனைப்போல் ஐந்தொழில் செய்யும் எனக்கொள்ளும் சமயம்.

**சிவசைதன்னியம்** - சிவனறிவு.

**சிவஞான போதம்** - சைவாகமங்களின் பொருள் நிச்சயம் உணர்த்தும் நூல்.

**சிவதத்துவம் 5** : சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை.

**சிவபுண்ணியம் 4** :
சரியை - சீலம்.
கிரியை - நோன்பு.
யோகம் - செறிவு.
ஞானம் - அறிவு.

**சிவ பேதங்கள் 7, சத்தி பேதங்கள் 7** :
பரநாதன் - பரவாகீசுவரி.
அபரநாதன் - அபரவாகீசுவரி.
சதாசிவன் - மனோன்மணி.
மகேசன் - மகேசை.
உருத்திரன் - உமை.
மால் - திரு.
அயன் - வாணி.

**சிவாத்துவித சைவம்** - இறைவன் மாயையோடுங் கூடி உலகத்திற்கு முதற் காரணமாம் எனக் கூறும் அகச்சமயம்.

**சிவானுபவம்** - சிவனை அநுபவித்தல்.

**சிவார்ப்பணம்** - சிவனிடத்து ஒப்பித்தல்.

**சிவானந்தானுபூதி** - சிவானந்தத்தை அநுபவித்தல்; திருவடியின்பம் தலைக்கூடல்.

**சிவோகம்பாவனை** - சிவனே நான் என்று பாவித்தல்.
சிவ : + அகம் = சிவோகம்,

உயிரின் கசிந்த தொண்டினாலும் சிவன் உயிரோடு கலந்து நிற்றலாலும் நான் சிவமெனப் பாவித்தல்.

**சிறப்புத் தத்துவங்கள்** - சூக்கும தேகவடிவங்கள்: தனக்குப் போக நுகர்தற் கருவியாதலின் சிறப்பு.

**சிறப்புப்பாயிரம்** - இருவகைப் பாயிரத்துள் ஒன்று. ஒரு நூலினுக்கே உரியதாய் ஆக்கியோன் பெயர், வழி, எல்லை, நூற்பெயர், யாப்பு, நுதலிய பொருள், பயன் முதலிய எட்டினையும் கூறுவது. காலம், களன், காரணம் என்னும் மூன்றையுஞ் சேர்த்துப் பதினொன்றனையுங் கூறுவது என்பாருமுளர்.

**சிற்சத்தி** - ஞானசத்தி; அறிவாற்றல்.

**சீகண்டருத்திரன்** - பிரளயாகலருட் பக்குவமுடையோனாய்ப் பாசம் நீங்கிச் சிவனுக்குரிய பெயர் வடிவுகளைப் பெற்றுச் சைவாகமங்களை யறிவுறுக்கும் குரவன். சீ - நஞ்சு கண்டம் - கழுத்து. கறைமிடற்றன்.

**சீபஞ்சாக்கரம்** - முத்திபஞ்சாக்கரம், திருவைந்தெழுத்து.

**சீபாதம்** - திருவடி.

**சீவன்முத்தன்** - சீவிக்கும்பொழுதே பாசத்தினின்று விடுபட்டவன்.

**சீவான்மா** - உடம்பினைப் பெரிதாக கருதும் உயிர்.

**சீற்றமிக்கெரிதல்** - இணர்எரி, சுவாலித்தெரிதல், கொழுந்து விட்டு எரிதல்.

**சுகப்பிரபை** - சுகவிளக்கம், இன்ப விளக்கம்.

**சுகருபம்** - மகிழ்ச்சியாயிருக்குந் தன்மை.

**சுட்டியறிதல்** - ஏகதேசமாயறிதல். சுட்டுணர்வு - ஒன்று ஒன்றாய் ஏகதேசமாய் இது பொன் இது மண்ணென்று உயிரறிவால் குறித்தறிதல்.

**சுட்டியறியப்படுவது** - இது பொன் இது மண் என்றாற் போல உயிரறிவால் ஒவ்வொன்றாகக் குறித்தறியப்படுவது.

**சுட்டிறந்து நின்றறியப்படுதல்** - முதல்வனோடு ஒற்றித்து நின்று அருள் விளக்கங் கொண்டு வியாபகமாயறியப்படுவது.

**சுதந்திரம்** - தன்வயமுடைமை

**சுத்தசத்தை** - விசேடிக்கப்படாத உள்பொருள்வகை.

**சுத்தசைவர்** - முதல்வனைத் தலைப்பட்ட உயிர் முதல்வனோடு ஒன்றாய்ப் போதலேயன்றி முதல்வனை அறிந்து அநுபவிப்பதன்று என்று கூறுஞ் சமயம்.

**சுத்தத்தில் துரிய நிலை** - தெளிதல்.

**சுத்தத்தில் துரியாதீதநிலை** - நிட்டை.

**சுத்தமாயை** - சுத்த உலகிற்குக் காரணமாய்த் துன்பத்தோடு விரவுதலின்றி இன்ப மாத்திரையே பயப்பது - அசுத்த மாயையையும் பிரகிருதி மாயையையும் வியாபித்து நிற்பது.

**சுத்தாத்துவா** - சுத்த மாயையிற் றோன்றிய மந்திரம், பதம், வன்னம், கலை, தத்துவம், புவனம் ஆகிய ஆறு அத்துவாக்கள். (மறைமொழி, சொல், எழுத்து, கலை, பொருள், உலகம் ஆகிய ஆறு வழிகள்.)

**சுத்தாவத்தை** - பாசம் நீங்கிய நிலை. 'மலங்களெல்லாம் ஒவினபோது சுத்தனும்.'

**சுருக்கு** / **சுருவம்** } - நெய்த்துடுப்பு.

**சுருதி** - வேறொன்றனை அவாவாது தான் கருதிய பொருளைத் தானே தெரிவிப்பது.

**சுவாநுபூதி** - தனதாகக் கொண்டு அநுபவித்தல்; தன்னுகர்வு.

**சுழுத்தி** - உறக்க நிலை. அந்தக் கரணங்களுள்ளே சித்தம் மாத்திரம் கூடிய உறக்க நிலை.

**சுழுமுனை** - நடுநாடி - மூலாதாரத்திலிருந்து உச்சித் துவாரம் வரை நிற்கும் நாடி.

**சூக்கும உடம்பு** - (தன் மாத்திரை அல்லது சூக்கும பூதமயம்) தூலவுடம்பு - (ஐம்பெரும்பூத

மயம்)

தன் மாத்திரை - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

| ஓசை | ஊறு | ஒளி | சுவை | நாற்றம் |
|---|---|---|---|---|
| \| | \| | \| | \| | \| |
| வான் | வளி | தீ | நீர் | நிலம் |

தன் மாத்திரையாகிய சூக்குமபூதங்களின் காரியம் ஆகாயம் முதலிய தூலபூதங்கள். தன் மாத்திரை மயமாகிய சூக்கும உடம்பின் காரியம் தூல உடம்பு.

**சூக்தும ஐந்தொழில்** - பரமேசுவரன் சருவசங்கார காலத்தினும் அறிவிக்கத்தக்கவர்களை அறிவித்து மறைக்கத்தக்கவர்களை மறைத்து ஆன்மாக்களின் கன்மங்களைப் பக்குவப்படுத்தி மாயா சத்திகளை வெளிப்படத் தகுந்தவைகளாகச் செய்து தோன்றுதற்குரிய எல்லாப் பொருள்களையும் பார்த்துக் கொண்டிருத்தல்.

**சூக்தும ஒளி** - வியஞ்சகம் வேண்டாது விளங்கும் ஒளி.

**சூக்தும தேகம்** - காரண தன் மாத்திரைகளாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தும், மனம் புத்தி அகங்காரம் ஆகிய அந்தக்கரணம் மூன்றுமாகிய எட்டினாலும் ஆக்கப்பட்ட அரு உடம்பு.

**சூக்தும தேகான்மவாதி** - சூக்கும உடம்பே உயிரெனக் கொள்பவன்.

**சூக்தும பஞ்சாக்கரம்** - அ, உ, ம், நாதம், விந்து இவ்வெழுத்துக்கள் சேர்ந்தது பிரணவம்; ஓம்.

**சூத்திரப்பாவை** - கயிற்றிற்கட்டி ஆட்டப்படும் பொம்மை.

**சூரியகாந்தம்** - சூரியன் ஒளியில் தீக் காலும் கல்.

**சூனியம்** - பாழ்.

**சூனியான்மவாதி** - உயிரென ஒரு பொருளில்லை எனக் கொள்பவன்.

**செம்பொருள்** - வெளிப்படைப் பொருள்.

**செயற்கை** - இடையிலே தோன்றியது.

**செய்** - விளைநிலம்.

**செவியறிவுறுத்தல்** - உபதேசித்தல்.

**செவ்வெண்ணுவது** - எண்ணிடைச் சொல் தொகநிற்ப வருவது.

**செறிந்தறிதல்** - அழுந்தியறிதல்.

**சேடம்** - எஞ்சியது, மீதி, குறை.

,, யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்கும் அஃது அதற்குச் சேடம் எனப்படும்.

**சேடன்** - அடிமை.

**சேட்டித்தல்** - செயற்படுதல்; தொழிற்படுதல்.

**சேட்டிப்பித்தல்** - செயற்படுத்தல்.

**சேதனப்பிரபஞ்சம்** - அறிவுலகம்; உயிரினம்.

**சேதனம்** - அறிவுடைப்பொருள்.

**சேய்மை** - தூரம்.

**சேர்வை** - கூட்டம், சேர்தல், கூடுதல்.

**சேல், கயல்** - மீன்வகை.

**சைதன்னியம்** - மாசுதீர்ந்த உயிர் அறிவு; அறிவு.

**சையுத்த சமவாயம்** - குடமும் குடவடிவும் போன்ற ஒற்றுமை.

**சையுத்த சமவேத சமவாயம்** - குடமும் குடவடிவும் குடத்தன்மையும் போன்ற ஒற்றுமை.

**சையோகம்** - கூட்டம், சேர்க்கை, அறுவகைச் சம்பந்தங்களுள் ஒன்று. கண்ணினாற் குடத்தைக் காணுங்கால் சையோக சம்பந்தம்.

**சைவஆகமம்** - மெய்ந்நெறியாகிய சிவநெறி நூல். சத்திநிபாதமுடையார் - அருள்வீழ்ச்சி யடைந்தார் உய்தற்பொருட்டுச் செய்யப்பட்டது. அநாதி முத்தனாகிய முதல்வனால் அருளப்பட்ட முதனூல்.

**சொரூப இலக்கணம்** - சிறப்பிலக்கணம். அஃதாவது இயற்கையாயுள்ள இலக்கணம். உண்மையெனவும்படும்; எஞ்ஞான்றும் நிலைத்திருப்பது.

சொரூபம் × தடத்தம்.

சிறப்பு × பொது.

உண்மை × பொய்.

**சொல்லின் அண்மை** - சொற்கள் அடுத்து நிறறல்.

**சொல்லெச்சம்** — ஒரு சொல் குறைந்து நிற்றல்.

**சொற்பொருட் பின்வருநிலை** - ஓர் அணி. ஒரு செய்யுளில் ஒரு சொல் ஒரே பொருளில் பல முறை வருதல். சொல்லும் பொருளும் ஒன்றே மறித்து வருவது.

**சோகம்** - கூம்புதல். ச:+அகம். ச—அது. அகம் - நான். அது நான்.

**சோதகம்** - ஏவுவது.

**சோதிட்டோமம்** - ஓர் யாகம்.

**சோபான முறை** - படிப்படியாக - படிமுறை.

**ஞாதா**
**ஞாதிரு** } அறிபவன்.

**ஞானகாண்டம்**-ஞானத்தைக் கூறும் பாகம்.

**ஞானசத்தி** - அறிவு வடிவாகிய சத்தி; அறிவாற்றல்.

**ஞானதிரோதகம்** - அறிவை மறைப்பது

**ஞானநிட்டை** - சிற்றறிவு நீங்கி வியாபக அறிவு விளங்கி இறைவனுடன் சேர்ந்து நிற்பது.
'... அருள்ஞானம் நண்ணித்
தேசுறும் அதனால் முன்னைச்
சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்பரத்து
நிற்பது ஞானநிட்டை.'

**ஞானம்** - அறிவு.

**ஞேயம்** - அறியப்படும் பொருள்.

**தடத்தலக்கணம்** - இலக்கண வகையுள் ஒன்று; பிறிதொரு பொருளின் சார்புபற்றி இலக்கியப் பொருளில் இருப்பது தடத்தமாகிய இலக்கணம்.

**தடத்தம்**-அயலிடத்திருப்பது. இலக்கணம் - இயல்பு. இவ்வியல்பு பொது இயல்பு எனப்படும். இது ஆகந்துகம். இடையில் வந்து கூடிப் பின் நீங்குவது. தடத்தலக்கணம் அல்லது பொது இயல்பு· உயிர்கள் இறந்து பிறக்கும்படி சத்தியோடு நீக்கமின்றி நிற்றல் இறைவனுக்குப் பொது இயல்பு.

சொரூப இலக்கணம் அல்லது சிறப்பியல்பு பாசஞான பசுஞானங்களால் அறியப்படாதபடி சிவமாயும் பதிஞானத்தால் அறியப்படும்படி சத்தாயும் நிற்றல் இறைவனுக்குச் சிறப்பியல்பு.

**தத்துவசொரூபி** - தத்துவ வடிவினன்.

**தத்துவஞானம்** - மெய்ஞ்ஞானம், மெய்யுணர்வு.

**தத்துவமசி** - அது நீ ஆகிறாய். தத்-அது. துவம்-நீ. அசி-ஆகிறாய்.

**தத்துவம்** - உள்பொருள்.

**தத்பதம்** - அது என்னும் பொருளை உணர்த்துஞ்சொல்.

**தர்ப்பணம்** - கண்ணாடி.

**தலைக்குறை** - சொல்லின் முதல் குறைதல்.

**தலைப்படுதல்** - கூடுதல்; அடைதல்.

**தலைமைப்பாடு** - முதன்மை.

**தற்பதம்** - அது என்னும் மொழி. துவம்பதம்-நீ என்னும் மொழி. அசிபதம் - ஆகிறாய் என்னும் மொழி

**தற்கிழமை** - ஆறும் வேற்றுமைக் கிழமைப் பொருள்களுள் ஒன்று. அது தன்னோடு ஒற்றுமையுடையது.

**தற்பரம்** - தத்+பரம், அதற்குமேல். (9 சூ. 2 அ. நிர்க்குணனாய்.)

**தற்போதம்** - உயிரறிவு.

**தன்வயம்** - தானாக எல்லாஞ் செய்யுந் தனிமுதன்மை.

**தன்வேதனைக் காட்சி** - சுகதுக்க மோகவடிவாய்ப் பரிணமித்த புத்தி தத்துவத்தை இன்பத் துன்பங்கள் புருடனறிவிற்கு விடயமாம்படி உயிரறிவு தெரிவது.

**தன்னியல்பு** - சிறப்பிலக்கணம்.

**தாக்குதல்** - உறுத்தல்.

**தாடலைபோல்**-தாள்+தலை தாடலை எனப் புணர்தல்போல்.
'தாடலை போற் கூடல்'
—திருவருட்பயன்.
'தலைப்பட்டாள் நங்கை
தலைவன் தாளே'
—திருத்தாண்டகம்,

'எண் குணத்தான், தாளை
வணங்காத் தலை'

—திருக்குறள்.

**தாதமார்க்கம்** - அடிமைநெறி.

**தாதான்மியசத்தி** - எக்காலத்தும் நீக்கமின்றி நிற்குஞ்சத்தி.

**தாதான்மியம்** - அது தானாதல். முதல்வன் ஆணையாகிய சிற்சத்தி முதல்வனின் வேறன்று. ஒரு பொருள் குணகுணியால் இரு தன்மையாக வேற்றுமைப்பட்டுப் பிரிப்பின்றி நிற்றல் தாதான்மிய மாகும்.

**தாத்துவிகம்** - தத்துவத்தின் காரிய மாகிய புறக்கருவி.

**தாரகம்** - உடலுருவாய் நின்று உயிரைத் தாங்கி நிற்பது; தாங்குவது.

**தாவரம்** - நிலையியற் பொருள்.

**தாவரவடிவம்** - சிவலிங்க வடிவம்.

**தாழ்வடம்** - உருத்திராக்கக் கண்டிகை. கண்மணிமாலை.

**தாள்** - சத்தி, திருஅருள்.

**தான்பணியை நீத்தல்** - தன் செயலற்று நிற்றல். எல்லாந் திருவருட் செயல் எனக் கொள்ளல்.

'கயல்மாண்ட கண்ணிதன்
பங்கன் எனைக்கலந்
தாண்டலுமே,
அயல்மாண்டு அருவினைச்
சுற்றமும் மாண்டு
அவனியின்மேல்,
மயல்மாண்டு மற்றுள்ள
வாசக மாண்டு
என்னுடைய
செயல் மாண்ட வாபாடித்
தெள்ளேணங்
கொட்டாமோ.'

—திருவாசகம்.

**திரவியம்** - பொருள்.

**திரிந்து** - மாறி.

**திரிவுகாட்சி** - மாறுபட்ட உணர்வு.

**திரிவு** - மாறுபாடு.

**திருஉத்திரம்** - பதினொரு உருத்திராகும் வினைக் கடவுளர்க்கும் உயிரில் பொருள்களுக்கும், முழுமுதல் இறைவன் கலந்திருத்தல் பற்றி வழிபாடு கூறும் வேதப் பகுதி.

**திரோதகம்** - மறைத்துக்கொண்டு நிற்றல். மறைத்தலைச் செய்வது.

**திரோதானசத்தி** - மறைத்தற் சத்தி; மும்மலங்களையும் தொழிற்படுத்துஞ் சத்தி.

**திவ்வியம்** - தெய்வத்தன்மை.

**திறம்** - வகை.

**தீக்கை** - மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுத்தல். உயிர்க்குப் பாசத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுப்பதாகிய சிவசத்திக் கிரியையே தீக்கை.

**துணைக்காரணம்** - முதற்காரணத்துக்குத் துணையாய் அது காரியப் படுமளவும் உடனிகழ்வது. (பானை செய்வதற்குத் திரிகை போல்.)

**துதைந்த** - நெருங்க இடை வெளியினறிப் பூசிய.

**துமி** - கெடு.

**துரத்தல்** - ஓட்டல்.

**துரியம்** - பேருறக்கநிலை. (புறக்கரணங்களாகிய பொறிகளும் உட்கரணங்களாகிய மன முதலியனவும் தொழிலற்றிருக்கும் பேருறக்கநிலை.)

**துலை** - தராசு.

**துவம்பதம்** - நீயென்னும் பொருளை உணர்த்துஞ்சொல்.

**துவாதசாந்தம்** - பிரமரந்திரத்தி (உச்சித்துளை)லிருந்து பன்னிரண்டங்குலத்தின் முடிவிடம்.

**துவிதபாவனை** - இரண்டாகப் பாவித்தல்.

**துழனி** - ஆரவாரம்; வெற்றொலி.

**துனை** - அதிவேகம்; வல்விரைவு.

**துன்னல்** - செறிதல்.

**தூலஒளி** - வியஞ்சகம் உள்வழி விளங்கும் ஒளி.

**தூலாருந்ததி நியாயம்** - அருந்ததி மீனை அறியாதானுக்கு அம்மீன் மிகச் சிறியதாயும் காணற்கரிய தாயு மிருத்தலின் அதனுடன் தோன்றுவதோர் பெருமீனை இஃது அருந்ததி எனக் காட்டி,

அதனை உற்று நோக்கி உணர்ந்த பின்னர் அருந்ததி மீன் அஃதன்று; அதன் மருங்கே தோன்றுகின்றது பார் அது தான் எனக் காட்டி உணர்த்துதல் போன்ற முறைமை.

**தெளிதல்** - பொருள் துணிதல்.

**தெளிவு புலன்** - தெளிவுக் காட்சி.

**தேகான்மவாதி** - பருஉடலே உயிரெனக் கொள்பவன்.

**தைவம்** - தேவனது உடைமை; அடிமை.

**தைவருதல்** - தடவுதல், வருடல்.

**தைவிகம்** - தெய்வ சம்பந்தம். உலக கருடனுக்கு அதிதெய்வமாகிய மந்திரம்.

**தொகை உவமம்** - பொதுத் தன்மை தொக்க உவமம்.

**தொழும்பு** - அடிமை.

**தோற்றமும் ஈறும்** - (சூ. 1, அதி. 3.) உமமைகள் எண்ணும்மையல்ல. எதிரது தழீஇயன. பின்னரும் தோற்றமும் ஈறுமுள்ளன.

**நசித்தல்** - கெடுதல், அழிதல்.

**நலிதல்** - வருந்தல்.

**நவக்கோள்கள்** - ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி, கரும்பாம்பு, (இராகு) செம்பாம்பு (கேது).

**நாசோற்பத்தி** - அழிவில் தோன்றுதல்; விதை அழிய முளை தோன்றுதல் போல்.

**நாண்மீன்** - நட்சத்திரம்; உடு.

**நாத்திகம்** - கடவுளின்மை.

**நாபி** - கொப்பூழ்.

**நால்வகை வாக்கு** - சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி.

(நுண்ணோசை, நினைவோசை, மிடற்றோசை, செவியோசை.)

**நாளம்** - தண்டு.

**நாற்பாதம்** - சரியை, கிரியை, யோகம், ஞானம்.

சரியையாவது உருவத் திருமேனியே பொருளென்றுணர்ந்து காயத்தொழின் மாத்திரையான் ஆகமத்தின் விதித்தவாறு வழிபடுவது.

கிரியையாவது அருவுருவத் திருமேனியே பொருளென்றுணர்ந்து புறத்தொழிலானும் அகத்தொழிலானும் ஆகமத்தின் விதித்தவாறு வழிபடுவது.

**நிட்களம்** - கலையற்றது - அருவம்.

**நிட்டை** - மனம் வாக்குக் காயங்கள் அசைவற்றிருத்தல்.

உளப்பதைப்பற நின்று இறைவன் கழல் சூழ்ந்திடுஞ் செயல்; உண்மை ஞானம் நான்கனுள் ஒன்று; கேட்டுச் சிந்தித்துத் துணிந்த பொருளுடன் பிரிவின்றி நிற்றல் - சிவப்பேறு கூடுதல்.

**நித்திய அநித்திய உணர்வு** - இப்பொருள நிலையுள்ளது, இப்பொருள் நிலையில்லாதது என உணர்தல்.

**நிமித்த காரணம்** - வினைமுதற் காரணம். (பானை வனைதற்குக் குயவன்போல்.)

**நியதி** - அவரவர் செய்த கன்மம் அவரவரே நுகருமாறு நியமிக்கும் முறை.

**நிரதிசய இன்பம்** - மிக மேலாகிய இன்பம்.

**நிரதிசய** - ஈடும் எடுப்பும் இல் ஏற்றமான. (unscrpassed, matchless, unrivalled.)

**நிரயம்** - நரகம்; இருளுலகு.

**நிரனிறை** - நிரல் + நிறை. முறைமையாக நிறுத்துதல்.

**நிராதாரம்** - ஆதாரமில்லாதது, பற்றுக்கோடற்றது.

**நிராலம்பம்** - நிராதாரம். ஆதாரம் வேண்டாதது; பற்றுக்கோடின்மை; வெளி.

**நிருவாண தீக்கை** - முத்திபயக்குந் தீக்கை. நிருவாணம் - முத்தி, வீடு.

**நிருவிசேடம்** - விசேடிக்கப் படாதது. அடைமொழி பெறாதது.

**நிருவிகற்பம்** - ஒரு பொருளின் பெயர் குணம் முதலியவற்றைப் பிரித்தறியாது, ஒரு பொருள் தோன்றுகிறதெனப் பொருளுண்மை மாத்திரையே அறிதல்

**நிருவிகாரி** - விகாரமில்லாதவர். 'என்றும் ஓரியல்பினர்' —தேவாரம்.

**நிருபித்தல்** - ஐயந்திரிபின்றி மாசறு காட்சியான் ஆராய்தல்.

**நிர் அதிசய குணங்கள்** - முதலிற் குறைவுற்றுப் பின் புதிதாக வளர்வதன்றி குறைவிலா நிறைவாக விளங்குங் குணங்கள்.

**நிலைக்களம்** - நிற்றற்குரிய இடம்.

**நிவிர்த்திகலை** - உயிர்களைக் கட்டினின்றும் நிவிர்த்தி செய்யும் சிவசத்தி. அச்சத்திக்கிடமாகிய சுத்த மாயையின் விருத்தி.

**நீக்கம்** - இயைபின்மை நீக்கம்: சிவபூசை இருந்தே செய்தல் வேண்டும்.

நின்று செய்தல் இயைபின்மையின் இயைபின்மை நீக்கம்.

பிறிதினியைபு நீக்கம்:

சிவனெனுநாமம் சிவனுக்கே உரித்து எனை மங்கலப் பொருள்களிற் சேர்தலை நீக்கலின் பிறிதினியைபு நீக்கம்.

வியாபகப் பொருட்கு நீக்கம் உணர்ச்சிச் (விசேடம்) சிறப்பு.

**நுதலல்** - கருதல்.

**நூன்முகம்** - முகவுரை - பாயிரம் - நூலின் முன்னிடம்.

**நேயம்** - அன்பு.

**நையாயிகம்** - தருக்கசமயத்தின் ஒருவகை. நையாயிகநூல் செய்தவன் அக்கபாத முனிவன். பிரமாணம் பிரமேயம் ஐயம் முதலிய பதினாறு வகையான் விரித்துக் கூறும் நூல்.

**நோன்றாள்** - பொறுத்துக்கொள்ளும் திருவடி, தாங்குந் திருவடி. நோன்றல் - பொறுத்தல்.

**பகுதிப்பொருள் விகுதி** - பகுதிக்குரிய பொருளன்றி வேறு பொருளில்லாத விகுதி.

**பக்கம்** - துணிபொருள் இருக்குமிடம்.

**பக்கிசைத்தல்** - வேறுபடுத்திக் கூறல்.

**பங்கயம்** - சேற்றிற்பிறந்தது.

**பசாசம்** - இரும்பு.

**பசுஞானம்** - நான்பிரமம் என்னும் உணர்வு.

**பசுத்துவம்** - பசுத்தன்மை - பாசக் கட்டுடையது. பச் - கட்டு.

**பசுநிகாரம்** - உயிரைக் கீழ்ப்படுத்தித் தள்ளுதல்; உயிரறிவை மறைப்பது.

நிகார: (Humiliation, Subjugation, cast down.)

**பசுபதி** - உயிர்களுக்குத் தலைவன்.

**பஞ்சக்கிலேசம்** - அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, கோபம் - (அறியாமை, எழுச்சி, அவா, ஆசை, வெகுளி.)

**பஞ்சாக்கினிவித்தை** - உயிர் தூல உடம்பினின்று நீங்கிய வழித் துறக்கமும், மேகமண்டலமும், நிலனும், தந்தையும், தாயும் என்னும் ஐந்து நிலைக்களத்தும் வைகித் தூலஉடம்போடு நிலத்தில் மீளத் தோன்றுதல்.

இவ்வைந்திடங்களும் தீயாகவும் இவற்றின் எய்திய உயிர் ஆகுதியாகவும் தியானிப்பது ஒரு சாதகமாதலின், இது பஞ்சாக்கினி வித்தை எனப்பட்டது.

பஞ்ச, அக்கினி, வித்தை. ஆகுதி - யாகத்தீயில் இடப்படும் பொருள்.

துறக்க அநுபவத்தின்பின் சூக்கும உடம்போடு மேகமண்டலத்தினை எய்தி, ஆண்டு நின்று மழைத்தாரையோடு கூடி நிலத்தினையடைந்து நெல் முதலிய பைங்கூழின் விரவிநின்று அவை உணவாய் மாறிய வழி அவற்றோடு கூடித் தந்தை வயிற்றுட் சென்று ஆண்டுச் சுக்கிலமாக மாறி அதனோடு கூடித் தாய் வயிற்றிற்சென்று கருவாய்க் கிடந்து தூலஉடலோடு நிலத்திற் பிறக்கும்.

**பஞ்சாவத்திதன்** - ஐந்தவத்தையுடையவன், ஐம்பாட்டினன்.

**படிவழி** - படிமுறை.

**பட்டாசாரியன் மதம்** - சைமினி முனிவனுடைய மாணுக்கனாகிய

பட்டாசாரியன் மீமாஞ்சையை ஒட்டிச் செய்த மதம்.

**பதமுத்தி** - சாலோகம், சாமீபம், சாரூபம் என்பன.
(சிவனுலகு, சிவன் அண்மை, சிவவடிவம்)

**பயனிலை** - பொருண்முடிவு.

**பரஉடம்பு** - அதிசூக்கும உடம்பு, மிக நுண்ணிய உடம்பு.
குணசரீரம் - முக்குணங்களானுய உடம்பு.
கஞ்சுகசரீரம் - வித்தியாதத்துவங்களானுய உடம்பு.
காரணசரீரம் - மாயாதத்துவத்தானுய உடம்பு.
இம்மூன்றும் பரஉடம்பு.

**பரகாயம்** - வேறு சரீரம். வேற்றுடம்பு.

**பரதந்திரம்** - பிறன் வயமுற்று அவனைத் தலைவனுகக் கொண்டு நிற்றல்.

**பரபக்கம்**-பிறர் கொள்கை; பிறன் கோள்.

**பரமார்த்தம்** - மேலான பொருள்.

**பரமான்மா** - கடவுள்.

**பரம்பரை** - ஒன்றன்பின் ஒன்ருக வருதல்.

**பரிகரித்தல்** - களைதல்

**பரிக்கிரகசத்தி**-தொழிற்குக் காரணமாய் நின்று வேண்டுழி உதவும் மாயாசத்தி; மான் மோகினி விந்து எல்லாம் மருத்துவனுக்கு மருந்துபோல மலவைத்தியனுகிய அரனுக்குப் பரிக்கிரக விபூதி.
(சிவஞான சித்தியார், 2 சூ. 3 அதி.)

**பரிசம்** - தொடுதல்.

**பரிசனம்** - பரிவாரம்.

**பரிணமம்**-பால் தயிராதல் போலும், நெய் புழுவாதல் போலும் மாறுபாடு.
அசுத்தமாயா காரியம் நெய் புழுவாதல் போலும் மாறுபாடு; திரிபு. இயற்கையினின்று திரிந்து தோன்றல்.

**பரிணமவாதி** - பிரமத்தினின்று உலகந் திரிந்து தோன்றுமெனக் கொள்வோர்.

**பரிதல்** - இரங்கல்.

**பரிபாகம்** - சிறந்த பக்குவம். மலபரிபாகம் - மலம் தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்கள் எல்லாவற்ருேடுங் கூடுதல்.

**பரியாயப்பெயர்** - ஒத்த பொருளுடைய பெயர். ஒரு பொருட்கிளவி.

**பலசாங்கியம்** - பல எண்ணுடையது.

**பவம்** - சம்பவம், உண்மை, பிறவி.

**பறவாக் குளவி** - மலைப்பச்சை.

**பனுவல்** - நூல்.

**பன்னிரு படலம்** - தொல்காப்பியர் முதலிய பன்னிருவராற் பன்னிரண்டு படலமாகச் செய்யப்பட்ட ஒரு புறப்பொருளிலக்கண நூல்.

**பாகடை** - பாக்கும் வெற்றிலையும்.

**பாசதச் சிதைவு** - பிராகிருத மொழிக் கொச்சை. (Slang).

**பாகநூல்** - பாகனுக்குரிய நூல்.

**பாச அறிவு** - பாசக் கருவிகளாகிய கண் காது முதலியன வாயிலாக அறியும் அறிவு

**பாசஞானம்** - பாசத்திற்குளதாகிய ஞானம் எனப் பொருள் கொள்ளுதல் மடமை.

> ‘பாசஅறிவை உன்னறிவ
> தென்றல்
> நான் கண்டேன் நான்
> கேட்டேன் எனல்’

**பாசனம்** - கலம், பாத்திரம்.

**பாஞ்சராத்திரம்** - இருபத்தைந்தாம் தத்துவத்தின் வைகும் வாசுதேவனே பரம்பொருள்; எல்லா உலகும் வாசுதேவனது பரிணமம் எனக் கூறும் புறச்சமயம்.
அந்நூல் ஐந்திரவினுள் செய்யப்பட்டதாகலின் அப்பெயர் பெற்றது.

**பாடாணவாத சைவர்**-உயிர் அறிவு சிவனோடு கூடுமாறில்லை. முத்தியில் உயிர் கற்போல் கிடக்குமெனக் கூறுவர். பாடாணவாத சைவம் அகச்சமயம். பாடாணம்-கல்.

**பாடிகாவல்** - ஊர்க்காவல். களைகணுவா னொருவனைக் கொண்டு வேந்தன் செய்விப்பதொரு தண்டத்தொழில் விசேடம்.

**பாதஞ்சலம்**-பதஞ்சலி செய்த நூல்.

**பாயாவேங்கை** - பொன், வேங்கை மரம்.

**பாரிசேட அளவை**-ஒழிபு அளவை. மூவரிருந்த இடத்திலே ஒரு பொருளைச் சிலர் இது யார் பொருளென வினவின் இருவர் அறியோம் என்றால் ஒழிந்தவன் அறிந்தானுந் தன்மை. (ஞானமிர்தம்)

**பால்பகா அஃறிணைப் பெயர்** - ஒருமைவினையும் பன்மைவினையும்கொண்டு முடியும், ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாகிய அஃறிணைப் பெயர்.

வினைமேவா - வினைமேவாது.

**பாவகம் பாவனை** - எண்ணுதல். பாவம், பாவகம், நாடகம் என்பன ஒருபொருட்கிளவி. (சித்தியார் உரை) அருளாற் காண்டலே பாவனை.

**பாவனாதீதம்** - பாவனையைக் கடந்தது.

**பிங்கலை** - வலமூக்கில் நிற்கும் நரம்பு.

**பிடகநூல்** - பௌத்த நூல்.

**பிண்டம்** - உடல்.

**பிரகாசம்** - சித்து. அப்பிரகாசம் - அசித்து.

**பிரகாசித்த பொருள்** - காட்சி அளவையா னறியபபட்ட பொருள்.

**பிரகிருதி** - மாறுபடாது இயல்பாயிருத்தல்.

**பிரகிருதி மாயை** - அசுத்த மாயையின தூலபரிணமம்.

**பிரதிட்டாகலை** — நிவர்த்திபெற்ற உயிர்களை மீள நோக்கா வண்ணம் பிரதிட்டை செய்யுஞ் சிவசத்தி. அச்சத்திக்கிடமாகிய சுத்தமாயையின் விருத்தி.

**பிரபஞ்சம்** - உலகம் - விகச்சாரமுடையது என்னும் பொருள்.

**பிரமாணம்** - அளவைக் கருவி; அளவை.

**பிரமாதா** - அளப்பவன்.

**பிரமிதி** - அளத்தல். அளவையாலுணர்ந்த உணர்வு.

**பிரமேயம்** - அளக்கப்படுவது. (சைவப்பிரகாசனம்.) பிரமாணத்தால் அளக்கப்படும் பொருள்.

**பிரவாகநாதி** - இடையறாதோடும் நீர்ப்பெருக்குப்போலத் தொடர்ச்சியாய்த் தொன்று தொட்டு வருதல்.

**பிரவிருத்தன்** - விந்துவின் காரியங்களைத் தொடங்கினவன்.

**பிரவிருத்திரூபம்** - தொழில் வடிவம்.

**பிரளயாகலர்** - பிரளய காலத்தில் முதல்வன் தானே குருவுமாய் முன்னின் றுணர்த்துதலாற் பந்தம் நீங்கியவர் - இவர்க்கு இடம் அசுத்தமாயை முதல் அராக தத்துவம் முடிய.

**பிராணாதிவாயு 10** - பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்.

(உயிர், மலம், நிரவு, ஒலி, தொழில், தும்மல், விழி, கொட்டாவி, இமை, வீங்கற்காற்றுகள்.)

**பிராணாயாமம்** - பிராணவாயுவைத் தடுத்தல். உயிர்க்காற்றைத் தடுத்தல்.

**பிராணான்ம வாதி** பிராணவாயுவே உயிரெனக் கொள்பவன்.

**பிராந்தி ஞானம்** - மயக்க உணர்வு.

**பிராமாணியம்** - பிரமாணம் உளதாந்தன்மை.

**பிராரத்தம்** - சஞ்சித வினைக் களஞ்சியத்தினின்றும் ஒரு பிறவியில் அநுபவிப்பதற்கு எடுத்துக் கொண்டுவந்த வினைப்பகுதி.

**பிரேரகக் கருவிகள் 5** : - சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை.

**பிரேரக வவத்தை** - ஏவு நிலை: செலுத்து நிலை.

**பிறிதின் கிழமை** - ஆறும் வேற்றுமைக் கிழமைப் பொருள்களுள் ஒன்று. அது தன்னின் வேறாயது.

**புத்த மதம்** - புத்தனைத் தவிர வேறு கடவுளில்லை. ஞானமே ஆன்மா. அது தொடர்ச்சியாய்க் கணந்தோறுந் தோன்றி அழியும் எனக் கூறும் புறப் புறச்சமயம்.

**புத்திபூர்வம்** - அறியப்பட்டது; தெரிந்து செய்வது.

**புரியட்டக உடம்பு**-சூக்கும உடம்பு. காரண தன்மாத்திரைகளாகிய ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஆகிய ஐந்தும் மனம், புத்தி, அகங்காரம் என்னும் இவ்வெட்டினாலும் ஆக்கப்பட்ட உடம்பு.

**புரிதல்** - எப்பொழுதும் மேற்கோடல்.

**புள்ளு** - பறவை.

**புறனடை** - புறக்காப்பாய்ச் சொல்வது.

**புனருத்தி** - கூறியது கூறல்.

**புனருற்பத்தி** - மீளத் தோன்றுதல்.

**புனைந்துரை** - விதியை வழங்குவித்தற் பொருட்டு விதிப் பயனை உள்ளதனுனும் இல்லதனுனும் வருணித்துக் கூறுவது.

**புன்கணீர்** - அற்பமாகிய கண்ணீர்.

**பூசல்தரும்** - வெளிப்படுத்தும்.

**பூட்டுவிற் பொருள்கோள்** - நாண் பூட்டிய வில்லின் நுனியும் அடியும் நாணுற்றொடர்புடையன ஆதல்போல ஒரு செய்யுளின் முதன் மொழியும் ஈற்றுமொழியும் பொருளாற்றொடர்புடையனவாக்கோடல்.

**பூதசார உடம்பு** - தேவசரீரம் : ஐம்பூதங்களாகிய நிலம், நீர், தீ, வளி, வான் இவைகளின் சாரங்களால் ஆக்கப்பட்ட உடம்பு. இவ்வுடம்பு உயிர் துறக்கஞ் செல்லும்போது கொடுக்கப்படும். நரகம் செல்லும்போது எடுக்கும் உடம்பும் பூதசார உடம்பேயாகும். இவ்வுடம்புகள் யாதனா சரீரம் எனப்படும்.

**பூரணநிலை** - நிறைந்த நிலை.

‘வாய்ந்த சிவபூரணத்துட்
பூரணமாம் போதம் புதுமலரா’
—கந்தர் கலிவெண்பா.

**பூர்வபக்கம்** - சித்தாந்தமல்லாத ஏனைய மதக்கொள்கை; சித்தாந்த விரோதமாய்ப் பிறராற் கூறப்பட்ட பொருள்.

**பெத்தகாலம்** - கட்டுநிலை.

**பெரும்பெயர்** - மாவாக்கியம்.

சிவமாதல் - ‘சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்’ —திருவாசகம்.

பெரும்பெயர்க் கடவுளாவார்.

**பேற்றி** - தன்மை.

**பேய்த்தேர்**-பாலைநிலத்திற் காணப்படுவதாய கானல்.

‘பூத்தாரும் பொய்கைப்
புனலிதுவே எனக் கருதிப்
பேய்த்தேர் முகக்குறும்
பேதைகுண மாகாமே
காத்தாய் திகழ்தில்லை
அம்பலத்தே ஆடுகின்ற
கூத்தா உன்குரை கழலே
கூடும் வண்ணந் தோணுக்கம்’
—திருவாசகம்.

**பேராமல்** - பிறழாமல்.

**பைமறியாப் பார்த்தல்** - மறிக்கப்பட்ட பைபோலப் பார்த்தல். மறித்தல் - உட்பக்கத்தை வெளிப் பக்கமாகும்படி திருப்புதல்.

**பொதுட்டு** - காய்.

**பொதுச்சிறப்புத் தத்துவங்கள்** - தூலதேகவடிவாகிய தத்துவங்கள் தனக்குப் போகநுகர்ச்சிக்கும் சந்தனம் பூமாலைபோல மனைவி முதலியோா அநுபவித்தற்கும் கருவியாதலின் பொதுச் சிறப்பு.

**பொதுத்தத்துவங்கள்** - புவனவடிவாகிய தத்துவங்கள் எல்லாருக்கும் பயன் தருதலின் பொது.

**பொதுநீக்கல்** - ஒருவற்கே உரிமையாககல்.

**பொய்** - இடையே தோன்றி மறைவதாகிய பொது இயல்பு.

**பொருண்மை** - பொருள்தன்மை, பொருட்டன்மை.

**பொருளியல்புரைத்தல்** - வாழ்த்து, வணககம், பொருளியல்புரைத்தலாகிய மூவகை வாழ்த்துள் ஒன்று. எடுத்துக்கொண்ட நூற்பொருளுக்கேற்பக் கடவுளை

வாழ்த்துதல். ஏற்புடைக் கடவுள் வாழ்த்து.

**போகாவத்தை** - உலகத்தைப் படைக்கக் கருத்தெழுந்த (உன்முகப்பட்ட) நிலை.

**போக்கியம்** - விடயவடிவமாய் நின்று அநுபவிக்கப்படுவது.

**போக்கியரூபம்** - அநுபவிக்கப்படும் பொருள் வடிவம்

**பௌதிக கருடன்** - உலகத்திற் காணப்படுங் கருடன்.

**பௌதிகம்** - பூதசம்பந்தம்.

**மகடூஉமுன்னிலை** - பெண்ணை முன்னிலைப்படுத்திக் கூறுதல்.

**மகாகாயம்** - பெருவெளி.

**மகாருத்திரன்** - பரமசிவன்.

**மகேசுரமூர்த்தி** - மகேசுரமூர்த்தமாகிய சந்திரசேகரர் முதலிய இருபத்தைந்து வடிவம்.

**மதம்**-தன்னுமெய்தப்படும் அரிவை முதலிய மயக்கப் பொருளைத் தானே கொண்டாடிப் புகழ்ந்து மதித்தற்கேதுவாயது.

**மதுகை** - வலி.

**மந்ததாரம்** - அதிக மந்தம்.

**மந்தம்**-மெதுவான குரலில் எண்ணுதல். உபாஞ்சு - மெதுவாக மொழிதல்.

**மந்திரங்களாவன**-கடவுளை நோக்கி அழைத்தல், புகழுதல், வேண்டல், ஏவுதல், ஆராய்தல், வினவல், விடுத்தல், புலம்பல் முதலிய செயல்களைத் தனித்தனியே உடையனவாய் அறிவு செயல்களை நினைவிப்பனவாய்ப் பத்தி சுத்தி சித்திகளைப் பயப்பனவாயுள்ள வாசகங்கள்.

—சைவப்பிரகாசனம்.

நிறைமொழி மாந்தர்
ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே
மந்திரம் என்ப.

—தொல்காப்பியம்.

**மந்திரசாந்நித்தியம்** - மந்திரத்தின் அண்மை.

**மந்திரமகேசர்** - விஞ்ஞானகலருள்ளே மலபரிபாகத்திற்கேற்பச் சதாசிவ மூர்த்தியாலே மந்திரருக்குத் தலைவராக நியமிக்கப்பட்டு சுத்தாத்துவாவிலிருப்பவர்.

**மந்திரம்** - நினைப்பவனைக் காப்பது. மந் - நினைத்தல். திர-காத்தல்; மறைமொழி.

நினைக்கப்படுவது, நினைவிப்பது, உபசரிக்கப்படுவது, உபசரிப்பது.

மந் மதித்தல். திர - விகுதி.

**மந்திரவினை** - மந்திரங் கணித்தல் ஞானநூல் ஓதல் முதலியன.

**மலத்திற்குத் தன்னியல்பு (சிறப்பியல்பு)** - அறியாமையைச் செய்தல்.

**மலத்திற்குப் பொது இயல்பு** - விபரீத உணர்வைச் செய்வது.

**மலநடை** - செருக்கை வளர்க்கும் ஒழுக்கம்.

**மனு** - மந்திரம்.

**மாட்டேறிதல்**- ஒருத்தி; ஒன்றற்குச் சொல்லப்பட்ட இலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கும் மாட்டிவிடுதல்.

**மாயா** - மா - ஒடுங்குதல்.

யா - வருதல்.

எல்லாக் காரியங்களும் தன்பால் வந்து ஒடுங்குதற்கும் தன்னினின்றுந் தோன்றுதற்குங் காரணமாய் நின்றது மாயை. மாய் - மாய்தல், ஒடுங்குதல். ஆ - ஆதல், தோன்றுதல்

**மாயாவாதம்** - உலகெல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினுற் காணப்படுவனவாகலிற் பொய். மாயை. அநிருவசனம். மாயைக்கு வேருகிய பிரமரூபமே யான் என வேதாந்த ஞானத்தால் அறிவதே முத்தி எனக் கூறும் புறச்சமயம்.

**மாயேயம்** - மாயையின் காரியம்.

**மாறுகோளுரை** - முன்னுக்குப்பின் முரணும் வசனம்.

**மாறுதல்** - இறத்தல். (ஆன்மாக்கள் மாறிப் பிறந்து வரும்)

**மானதக்காட்சி** - புறப்பொருள் விடயங்களைச் சித்தத்தால் தூக்கிச் சிந்தித்து மனத்தால் நினைத்து

அகங்காரத்தால் ஒருப்பட்டெழுந்து, புத்தியால் நிச்சயிக்கும் சவிகற்ப உணர்வாய் உயிரறிவு தெரிவது.
**மானதம்** - அறிவாற் கணித்தல்.
**மிக்கு வழங்குதல்**-பரந்து நிலவுதல்.
**மிச்சிரம்** - சுத்தா சுத்தம். சுத்தமும் அசுத்தமுங் கலப்பு.
**மித்தை யுணர்வு** - பொய்யறிவு.
**மிருதி** - முனிவரால் நினைத்துச் செய்யப்பட்ட தருமசாத்திரம்; அறநூல்.
**மிருத்தியு** - மரணத்தைச் செய்வது.
**மீதூர்தல்** - மேன்மேற் பெருகுதல்.
**மீமாஞ்சகர்** - வேதத்தில் தொழிற்படுதலுஞ் சொற்களை மட்டுமே பிரமாணமெனக் கொள்பவர். உலகம் நித்தியமெனக் கூறுபவர்.
**முக்கூற்றுப் புறச்சமயம்** - புறப்புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம்.
**முடிவினை** - பிராரத்தவினை.
**முதற்காரணம்** - காரியத்தோடொற்றுமைப்பட்டு நிற்குங் காரணம், பானை வனைதற்கு மண்போல்.
**மும்மையணு** - மும்மூன்றாகச் சேர்ந்த அணு.
**முரணி** - மாறுபட்டு.
**முற்பக்கம்** - வளர்பிறை.
**முற்றேச்சக்குறிப்பு** - குறிப்பு வினைமுற்று எச்சப்பொருளில் வருவது.
**முனிகணம்** - முனிவர்குழாம்.
**மூனைத்தல்** - முற்படுதல்.
**மூர்ச்சை** - மயக்கத்தைச் செய்வது; அறிவை மயக்குவது.
**மூலப்பகுதி** - பிரகிருதிமாயை.
**மூலமலத்தின் காரியம்** - மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம். இவை முறையே மயக்கத்திற்கேதுவாதலும், மதித்தற் கேதுவாதலும், ஆசைமிகுதிக்கேதுவாதலும், கவலைப்படுதற்கேதுவாதலும், உள் வெதும்பித் தபித்தற்கேதுவாதலும், உளமும் உடம்பும் வாடுதற் கேதுவாதலும், பலவேறு வகைப் படச்சிந்தித்தற்கேதுவாதலுமாம்.
**மூன்றவத்தை** - கேவலம், சகலம், சுத்தம்.

'மூன்றவத்தை யுங்கழற்றி
முத்தருட னேயிருத்தி'
—கந்தர் கலிவெண்பா.

**மெத்தென** - மிருதுவாக, மென்மையாக.
**மெய்** - எக்காலத்தும் நிலைபெறுவதாய தன்னியல்பு.
**மேற்கோள்** - ஏது, உதாரணம் முதலியவற்றால் வலியுறுத்தப்படும் தன்மையுடைமையின் ஏனைய போலி முடிவுகளை வென்று அங்கீகாரமாய் மேற்பட்டெழுதல்.
**மோகம்** - அரிவையர் முதலிய விடயங்களில் மயக்கஞ் செய்வது.
**யாப்புறுத்தல்** - வலியுறுத்தல்.
**யோகமாவது** - அருவத் திருமேனியே பொருளென்றுணர்ந்து அகத்தொழின் மாத்திரையான் ஆகமத்தின் விதித்தவாறு வழிபடுவது.

ஞானமாவது - இறைவனுக்குச் சச்சிதானந்தப் பிழம்பே திருமேனியெனக்கொண்டு காயத்தொழில் மனத்தொழில் இரண்டினையுங் கைவிட்டுக் கேட்டல் முதலிய அறிவுத்தொழின் மாத்திரையான் வழிபடுவது.
**வசீகரித்து** - வயப்படுத்தி.
**வரம்** - சீபாதம். திருவடி. வரக்கடவது வரன். 'வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.' (குறள்)
**வரைந்து வைத்து** - முடிவுசெய்து.
**வல்லி** - மாயை.
**வன்னம்**-நிறம்; சித்திரம்; எழுத்து.
**வன்னி** - தீ.
**வாக்கியசேடம்** - ஒரு வாக்கியத்தின் பொருளை ஐயமறத் துணிதற்குத் துணையாகிய குறை வாக்கியம். வாக்கிய சேடம் வாக்கியக் குறை.

'அரி அவ்விடத்தில் வந்தனால் கண்டதேவர் உடனெழுந்து அக்கண்ணனடியில் வணங்கினர் என்புழி அரி

பதப் பொருளைப் பின் வாக்கியந் துணிவித்தது.'
—சைவப்பிரகாசனம்.

**வாக்கியம்** - அவாய்நிலை, தகுதி, அண்மை யென்னு மூன்று முடைய சொற்களின் கூட்டம்.

**வாதித்தல்** - வருத்துதல்.

**வாயிற்காட்சி** - இந்திரியக் காட்சி ஆன்ம அறிவு பொறிகளையும் பூதங்களையும், தன்மாத்திரைகளையும் அதிட்டித்துக்கொண்டு உருவம் முதலிய ஐம்புலன்களை நிருவிகற்பமாய் அறியும் அறிவு.

**வார்த்திகம்** - விருத்தி. (Explanatory.)

**வாலாமை** - அசுத்தம்.

**விகற்பமாவது** - இது குடமோ அன்றோ என்று எண்ணும் ஐய நினைவு.

**விகாரம்** - வேறுபாடு.

**விசிட்டசத்தை** - விசேடிக்கப்பட்ட உள்பொருள்.

**விசிட்டம்** - விசேடிக்கப்படுவது; மேன்மை. விசிட்டமாவது விசேடணமும் விசேடியமும் அவ்விரண்டனியையும்,

**விசுவரூபம்** - உலகமாகி நிற்றல்.

**விஞ்ஞானகலர்** - விஞ்ஞானத்தாற் கலையற்றவர். கலை=பந்தம். இவர்க்கு இடம் அசுத்த மாயைக்கும் சுத்த வித்தைக்கும் நடுவேயாகும். இவர் ஆணவமலமாத்திரமுடையவர். மாயாபந்தமும் கன்மபந்தமும் நீங்கியவர். முதல்வன் உண்ணின்றுணர்த்த விளையும் விஞ்ஞானத்தாற் பந்தம் நீங்கியவர்.

**விஞ்ஞானவாதி** - ஞானமே உள்பொருள் எனக் கொள்பவன்.

**விஞ்ஞானான்மவாதி** - பிரமமே உயிரெனக் கொள்பவன்.

**விடயஞானம்** - உலகப்பொருளிற் செல்லும் அறிவு.

**விடாத ஆகுபெயர்** - கருவியின் பெயரே கருத்தாவைக் காட்டி நிற்பது.
(உ-ம்.) குதிரையால் அவ்வூர் கொள்ளையிடப்பட்டது.

ஆகுபெயர்கள் தத்தம் பொருளை நீங்காது நின்று தம் பொருளின் வேறல்லாத பொருளோடு புணர்தல் விடாத ஆகுபெயர்.
(உ-ம்.) கடுத்தின்றான்.
—நன்னூல் விருத்தி சிவஞான சுவாமிகள் திருத்தம்.

கடுத்தின்றான் புளி தின்றான் என்புழிக் கடுவும் புளியுஞ் சுவையாகிய தத்தம் பொருளை விடாது நின்று தம் பொருளின் வேறல்லாத கடுக்காய் புளியங்காய் என்னும் பொருளை உணர்த்தலின் விடாத ஆகுபெயர்.
—ஆறுமுக நாவலர் காண்டிகை யுரை.

**விதந்தோதல்**-வேறு பிரித்தெடுத்து மிகுத்துரைத்தல்.

**விதி 3 :**

1. **எய்தாததெய்விப்பது** - அபூர்வ விதி. ஒரு கடமையை விதிப்பது.
(உ-ம்.) சிவபூசை செய்யற்பாற்று.
2. **எய்தியது இகந்துபடாமற் காப்பது** - நியமவிதி. ஒருகால் எய்தி ஒருகாலெய்தாதாகற் பாலதனை அவ்வழியும் இகந்து படாமற் காப்பது.
(உ-ம்.) சிவபூசை இருந்து செய்தல் வேண்டும். எனவரையறுத்து எய்துவிப்பது.
3. **எய்தியது ஒரு மருங்கு மறுப்பது** - பரிசங்கியாவிதி.
(உ-ம்.) சிவனென்னு நாமம் சிவனுக்கே உரித்து. சிவனென்னு நாமம் ஏனைமங்கலப் பொருள்களினுஞ் செல்லுதலை நீக்குதல்.

**வித்தியாகலை** - அநுபவ அறிவைப் பயப்பிக்குஞ் சிவசத்தி. அச்சத்திக்கிடமாகிய சுத்த மாயையின் விருத்தி.

**விநாயகன்** - தனக்குவமையின்றி மேலான தலைவன்.

**விந்து** - சுத்த மாயை.

**விந்துத்தானம்** - புருவநடு.

**விபரீத உணர்வு** - மாறுபட்ட உணர்வு. திரிபுணர்ச்சி.

**வியஞ்சகம்** - விளக்குவது ; காட்டு; விளக்கும் பொருள்.

**வியாபகம்** - நிறைவது. (fulness.)

**வியாப்பியம்** - நிறைவினுள் அடக்கப்படுவது.
(to be pervaded, filled.)

**விருத்தி** - தொழிற்பாடு ; விரிவு. வேட்டி குடிலாவதுபோல் விரிதலே சுத்த மாயையின் காரியம்.

**விவகாரம்** - வழக்கு.

**வினைச்சேடம்**-துறக்க நிரயங்களிற் சென்று அநுபவித்தொழிந்தது போக மீதம். இஃது இவ்வுலகில் மீளப்பிறத்தற்குக் காரணமாகும்.

**வினைமாற்று** - முன்சொல்கின்ற தொழிய இனி வேறொன்று.

'கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே,
எடுப்பதூஉம் எல்லா மழை.'

**வினைமுதல்** - தொழில் நிகழ்ச்சிக்குத் தலைமைப்பட்டு நிற்பவன் ; கருத்தா.

**வீசம்** - விதை.

**வீடு** விடுதலை, விடுதி.

**வீடுபேறு**-பாசவீடும் சிவப்பேறும்.

**வீதல்** - கெடுதல்.

**வேரி** - முதுகு.

**வேசறுதல்** - துக்கமடைதல்.

**வேட்டுவன்** - வேட்டைவாளி, ஒரு வகை வண்டு.

**வைதிகவினை** - வேள்வி முதலியன செய்தல்

**க்ஷயம்**-சிதைவு ; ஒடுக்கம், தேய்வு.

---

# விளக்கத்தமிழ் அருஞ்சொற்பொருள்

பக்கம்

**அகக்கலன்** - ஆள், விழைவு, உணர்வு, உழைப்பு, ஊழ், காலம், மருள். ௨௧௧

**அகப்புறக்கலன்** - எண்ணம், மனம். எழுச்சி, இறுப்பு. ௨௧௦

**அசவழிபாடு** - தியானம். ௪௪௦

**அடிசேர்ந்த ஆவிமீளா.** ௪௦௩

**அருமறை** - உபதேசம். ௭

**அறிவாற்றலும் ஐந்தொழிற் புரியாது** ௧௫௪

**அறிவுண்மை** - சிவசத்து. ௨௮௮

**ஆக்கமெய் உருவன்** - தத்துவ வன்னரூபன. ௨௩௧

**ஆக்கப்பாட்டுலது** - காரியப் பிரபஞ்சம். ௨௧௦

**ஆளாந்தன்மை** - பும்சத்துவ மலமுடையனுதல். ௨௧௧

**இத்தை விளைவித்தல் மலம்** : ஏதுப் பொருள். ௫௭௨

**இராது, கேது,** - கரும்பாம்பு, செம்பாமபு. ௪௬௦

**இருவினை ஒப்பு.** ௩௭௬

**இறப்பில் தவம் பதினறு.** ௩௭௫

**இறுப்பு, எழுச்சி, மனம், எண்ணம்**-புத்தி, ஆங்காரம், மனம், சித்தம். ௧௩௫

**உடலூழ்.** ௧௨௧

**உணரும் முறை**-வாயில், மனம், ஆவித்துய்ப்பு: வாயில், மானதம், தன்வேதனை. ௨௧௫

**உணர்த்து மெய் ஐந்து** - அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான்: சிவம், சத்தி, சதாசிவம், மகேசுரம், சுத்தவித்தை. ௧௩௩

**உணர்வு மெய்** - காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு, ஆள், மருள் : காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை. ௧௩௪

**உயிரே மாறிப் பிறக்கும்.** ௧௪௫

**உன்முகம்**-உன்னிதது நோக்குமுகம். ௨௭௨

**எட்டு நாண்மலர்.** ௪௫௭

**எழுச்சி** - உணர்வு, உழைப்பு, உலக எழுச்சி: தைசத ஆங்காரம், வைகரி ஆங்காரம், பூதாதி ஆங்காரம். ௧௩௫

**என்றும் அடிமை.** ௬௧௧

**ஏற்றுரை** - உபசாரம். ௫௬௧

**ஐங்கலைகள்** : நீக்கி, நிலைப்பி, நுகர்வி, அமைப்பி, அழுத்தி: நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை. ௧௩௧

**ஐங்குற்றம்** - பஞ்சக்கிலேசம் : திரிபுணர்வு, செருக்கு, அவா, ஆசை, வெகுளி. ௨௧௧

**ஐம்பாடு** - நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்குதல்: சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம் துரியாதீதம். ௨௩௮

**ஐவகை ஆற்றல்** - விழைவு, அறிவு, செயல், மறைப்பு, அருளல். ௨௫௭

**ஐவகைப் புரிவு: வீடு,** முதன்மை, துய்ப்பு, தூங்கல், பேறு: சீவன்முத்தி, அதிகார முத்தி, போக முத்தி, இலயமுத்தி, பரமுத்தி. ௩௨௪

**ஒன்றய், வேறய், உடனய்** - (மெய்ப்புணர்ப்பு - அத்துவிதம்.) ௧௦௧

**கருட தியானம்.** ௪௪௧

**கலப்பு, நீக்கமின்றியிருத்தல், சேர்க்கை, இயல்பு** - ஐக்கியம், சமவாயம், சையோகம், சொரூபம். ௫௨௧

**காட்சிவயம்** - ஒருவன் ஒருத்தி வாழ்க்கை. ௫௮௬

**குணம்** - அமைதி, ஆட்சி, அழுந்தல் : சாத்துவிகம், இராசதம், தாமதம். ௧௩௫

**சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்** - எஞ்சுவினை, ஏன்றவினை, ஏறுவினை. ௪௧௪

**சிவஞானம்** - முற்றுணர்வு. ௨௮௮

